ஐந்திணைப் பதிப்பகம்

# தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்

பேராசிரியர்
மது.ச.விமலானந்தம்



—ஸ்ரீதேவி

# தமிழ் இலக்கிய
# வரலாற்றுக் களஞ்சியம்

तमिऴ इलक्किय वरलाट्रुक्
कळञ्जियम्

## தொகுதி - 2

द्वितीय भाग


திறனாய்வுத் தென்றல், முத்தமிழ் ஏந்தல்

பேராசிரியர் **மது. ச. விமலானந்தம்**, எம்.ஏ.,

அரசினர் கல்லூரி, குடந்தை - 612 001

लेखक - प्रो० मधु. श. विमलानन्दम् एम. ए.
सरकारी कालिजा कुडन्दै
612001



प्रकाशक - ऐन्दिनै पदिप्पहम्
282, भारती शालै
तिरुवल्लिक्केणी
चेन्नै - 600005
(मद्रास)




**ஐந்திணைப் பதிப்பகம்**
282, பாரதி சாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005
தொலைபேசி : 84 57 12

முதல் பதிப்பு: டிசம்பர், 1987



ஐந்திணை—29

இரு தொகுதிகளும் சேர்த்து
விலை: ரூ. 350-00

TAMIZH ILAKKIYA VARALARRUK-KALANJIYAM
By
Professor Mathu. Sa. VIMALANANDAM, M.A.
First Edition: December, 1987
Pages 40 + 1930 + 40 = 2010
10pt. Letters
21 × 14 cms
Rupees Three Hundred and Fifty Only
14.2 Kg. White Printing
Calico Binding
Saalai Achaham, Madras-86

Published
By
KUZHA. KATHIRESAN

Phone : 84 57 12
AINTHINAI PATHIPPAGAM
282, (Bharathi Road) Pycrofts Road,
Triplicane,
Madras—600 005

# தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்

# உள்ளே உள்ளவை...

## இரண்டாம் தொகுதி

பக்க எண்

பக்க எண்

# இந்த நூற்றாண்டில் இன்றமிழ்

## வளர்ச்சியும் போக்கும்

இதுகாறும் 20 நூற்றாண்டுகளாக இன்றமிழ் வளர்ந்த வகையினைக் கண்டோம். இந்த இயலில் 20ஆம் நூற்றாண்டில் நந்தமிழ் வளர்ந்து வரு முறையினைக் கண்ணோடுவோம். முன் எந்த நூற்றாண்டைக் காட்டிலும் இந்த நூற்றாண்டில் தமிழ் மரம் பூத்துக் குலுங்கிப் பொற்கனிகள் மல்கிப் பொலிவதைக் காண முடிகிறது; இனி வரும் நூற்றாண்டுகளில் இன்னும் ஏற்றமும் எழிலும் பெற்றுப் பிறங்கப் போவதைக் கருதவும் முடிகிறது. இதற்கு அறிவியல் உணர்வும், மொழியியல் ஊற்றமும் பிறவும் கரணியங்களாக அமைகின்றன. தமிழர்தம் சிந்தை விரிந்து பரந்து ஆழ்ந்து அகன்று வருகின்றது. பன்னாட்டுத் தொடர்பும் பல்வகைச் சாதனங்களும் நந்தமிழை உலக அரங்கில் ஏற்றிடும் இலக்கு நோக்கிச் செலுத்துகின்றன. குறுகிய வட்டத்தினின்று (oriental outlook) பெருகிய விரிந்த உலகினுக்கு விசாலப் பார்வையுடன் (universal outlook) வெளி வந்துளோம். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உணர்வு இப்போதுதான் உண்மையிலேயே நன்மையுடன் வேலை செய்கிறது. கட்டுற்ற (crabled, cribled & confined) நிலையினின்று கட்டற்ற பறவை நிலை பெற்றுளோம். எனவே நமக்கே உரியதாக நம் வீட்டுச் சொத்தாகக் கருதி இருந்த தமிழ் உலகத் தமிழாகி வருகிறது. இதன் அறிகுறியும் அடையாளமும், வளர்ச்சியில் தளர்ச்சியின்றித் தெரிகிறது. இனிப் புரிந்து போற்றுவோம் வாரீர்!

## சங்கங்கள் :

சங்கம் வைத்து மொழி வளர்த்த நாடு தமிழ் நாடு, இவ் வுணர்வு தமிழர்தம் குருதிகளில் கலந்து நரம்பு நாளங்களி ளெல்லால் ஓடுவது கண்கூடு. ஈராயிரம் ஆண்டுகள் ஆயினும், இந்த உணர்வு இன்றும் எம்மனோர் உணர்வுகளில் ஊறி வந்தமையின், எங்கெங்கு இன்றமிழர் இருக்கின்றனரோ, எங் கெல்லாம் குடியேறுகின்றனரோ அங்கெல்லாம் சங்கம் அமைத்துச் செந்தமிழ் செழிக்கச் செய்து வருகின்ற சீர்மை செவி மடுக்கின்றோம்; கண்டு சிந்தை களிக்கின்றோம். அப்படி அமைத்து எப்படியெல்லாம் செழுந்தமிழ் சிறக்கப் பணியாற்று கின்றன என ஒரு சேரக் காண்போம். உளங் குளிர்வோம்:

**மதுரைத் தமிழ்ச் சங்கம்** : 14-9-1901. தோற்றுநர் பாண்டித் துரைத்தேவர். துணை நின்றவர் பாஸ்கர சேதுபதி. 1903 முதல் 'செந்தமிழ்' எனும் திங்களிதழ் வெளியிடுகிறது. ஆசான்கள் : ரா. ராகவையங்கார், மு. ராகவையங்கார், திரு. நாராயண ஐயங்கார். நூற் பரிசோதகர்கள் : மு. ரா. சுப்பிரமணியக் கவிராயர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர். பிரவேச, பால, பண்டிதத் தேர்வுகள் நடத்தியது ; முதன்மை பெறுவோர்க்குத் தங்கத் தோடா அளிக்கப்பெற்றது. முதன் முதல் பெற்றவர் ந. மு, வேங்கடசாமி நாட்டார்; கடைசி யாகப் பெற்றவர் நா. பார்த்தசாரதி. செந்தமிழ்க் கல்லூரி, பாண்டியன் புத்தகசாலை, நூலாய்வுத் துறை, அச்சக சாலை உள. 56ல் பொன் விழா நடந்தது. பி. டி. ராஜன், சண்முக சேதுபதி, கீ. பழனியப்பன் போன்றார் தூண்களாகத் திகழ்ந் தனர்.

பெருந்தொகை, மாறனலங்காரம், பன்னூற்றிரட்டு, கோவை கலம்பக உலா நூல்கள், சேது நாடும் செந்தமிழும், முத்தொள்ளாயிரச் செய்யுள், உவமான சங்கிரகம், அநுமான விளக்கம், அட்டாங்க யோகக் குறள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் போன்ற நூல்கள் வெளியிட்டுளது. **முகவரி** : தமிழ்ச் சங்க வீதி, மதுரை-1.

**கரந்தைத் தமிழ்ச் சங்கம்** 14-5-1911 சங்கம் நிறுவிய துங்கர் இராதாகிருட்டிணப் பிள்ளை. இவரின் உடன்பிறந்தார் தா. வே. உமாமகேசுவரனார் (1911-41) தலைவர். தொடக்க

விழாத் தலைவர் நாவலர் ந. மு. வே. நாட்டார். 12ல் கலா நிலையம் எனும் நூலகம் தோன்றியது; திறப்பாளர் வள்ளல் கோபாலசாமி ரகுநாத ராசாளியார், 14ல் பதிவு செய்யப் பட்டது. 25ல் 'தமிழ்ப் பொழில்' பிறந்தது. கரந்தைக் கவி யரசு முதல் ஆசிரியர். 31ல் ஆண்டிப்பட்டி வள்ளல் பெத் தாச்சி செட்டியார் உதவியோடு 17 ஏக்கர் நிலம் வாங்கப் பெற்றது. 16-4-38 ல் புலவர் கல்லூரி ஞானியாரடிகள் முன் னிலையில் முகிழ்த்தது; இளங்கோவடிகள் தமிழ்க் கழகம் எழுந்தது. 45 ல் தமிழிசைச் கல்லூரி தொடங்கியது; முதல்வர் நாட்டார் ஐயா, ஒரே பேராசிரியர், க.வெள்ளை வாரணனார். முதல் மாணவர் சி. கோவிந்தராசனார் (கல்வெட்டறிஞர்) 38ல் வெள்ளி விழா, 73ல் மணிவிழா.

சங்க வளர்ச்சிக்கு உதவியோர் வள்ளல் பெத்தாச்சி செட்டியார், கோனூர் சமீன்தார் சிதம்பரம் செட்டியார், அரித்துவாரமங்கலம் கோபாலசாமி ரகுநாத ராசாளியார், ஏ.கே. வேலன் (30000 செலவில் 'அருணாசல நிலையம்' கட்டித் தந்தார்), தென்னங்குடி நா சுந்தரராச நாட்டார் (22 ஏகர் 42 சென்ட் நிலம் ஈந்தவர்), சர். ஏ. டி. பன்னீர்செல்வம், முத்தமிழ் வள்ளல் ஏ. ஒய். அருளானந்தசாமி நாடார், ராவ் சாகிப் எஸ். சுயம்பிரகாசம், நீ. கந்தசாமிப்பிள்ளை, சி. வேதா சலம், அ. கணபதியா பிள்ளை, ஐ. குமாரசாமிப் பிள்ளை, திருவாவடுதுறை ஆதீனம்.

சாதனை: 37 இந்தி எதிர்ப்புப் போரில் பங்கு பெற்றது; வெள்ளை வாரணனார் ராசாசிக்கு 'வெண் கோழி விடுதூது' விடுத்தார். கரந்தை நடை என்ற ஒரு நடையைத் தோற்றிற்று; மகாராஜராஜ ஸ்ரீ — திரு. திருவாளர்; பிரசங்கம் — சொற் பொழிவு, அக்கிராசனாதிபதி - தலைவர்; காரியதரிசி - செய லாளர்; பொக்கிஷதார் - பொருளாளர்; விவாக சுப முகூர்த்தப் பத்திரிகை - திருமண அழைப்பு; உத்தரகிரியை - பிற் கடன் என்றாயின; விபுலானந்த அடிகள் கொண்டு 'யாழ் நூல்' உருவாயிற்று; தொல்காப்பிய சொல்லதிகார தெய்வச்சிலையார் உரை, தமிழரசி குறவஞ்சி, பரத சாத்திரம், கச்சிக் கலம்பகம், சுருதி வீணை, நாட்டாரின் கபிலர் நக்கீரர் வெளியாயின; கரந்தைச் செப்பேடுகள் (முதல் ராசேந்திரன் பற்றிய 57 செப்பு பட்டயங்கள்) 60 ஆண்டைய 'தமிழ்ப் பொழில்' கட்டுரைகள்.

உலக மக்களிடையே ஒண்டமிழின் பெருமை உணர்த்துவது குறிக்கோள். தொண்டு-தமிழ்-முன்னேற்றம் கொள்கையாகக்

கொண்ட இச்சங்கம் ச. இராமநாதன் தலைமையில், புலவர் கல்லூரி (முதல்வர் பி. விருதாசலம்), உமாமகேசுவரனார் மேனிலைப்பள்ளி (தலைமை ஆசிரியர். தி. கண்ணன்), இராதா கிருட்டிணர் தொடக்கப்பள்ளி (தலைமையாசிரியர் சிவ. பால சுப்பிரமணியன்) மூன்றும் கொண்டு முனைந்து முத்தமிழ்த் தொண்டாற்றி வருகிறது. **முகவரி:** கருந்திட்டைக்குடி, தஞ்சாவூர்-613002.

**சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்:** 11-6-1934 பெரும் புலவர்கள் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையும், பு. சி. புன்னை வன நாத முதலியாரும் இணைந்து உருவாக்கியது; கா. சு. பிள்ளை துணை நின்றார். தமிழ்ப் பணிகட்கெல்லாம் நிலைக் களனாக நெல்லையில் நிறுவப்பெற்றது. தலைவர் கா. சு. பிள்ளை. 34—73 வரை அமைச்சர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை. நோக்கம்: தமிழ் வளர்ச்சிக்கான பணிகள் புரிதல். பிற மொழி அறிவு நூல்களைப் பெயர்க்கும்போது தமிழ்ப் பகுதியி னின்றே கலைச் சொற்களை ஆக்க வேண்டும்.

'தமிழ்த்தாய்' எனும் முத்திங்கள் ஏட்டினை 3 ஆண்டுகள் நடத்தியது. 5 கலைச் சொல்லாக்க மாநாடுகள்; பல மாகாணத் தமிழர் மாநாடுகள், புலவர் மாநாடுகள், வேனிற்கால (குற்றால) சாரல் மாநாடுகள் கூட்டியது. முதுபெரும் புலவர் (பண்டித மணி, வெள்ளக்கால் முதலியார்), சிவக்கவிமணி (சி. கே. சுப்பிரமணிய முதலியார்), பல்கலைப் புலவர் (கா. சு. பிள்ளை), நாவலர் (நாட்டார்), தமிழ்ப் பெரும் புலவர் (கி. வா. ஜ., அ. சிதம்பரநாதன், மு. ரா. பெருமாள் முதலியார், சரவண ஆறுமுக முதலியார், ஆபிரகாம் அருளப்பன், அ. மு. பரமசிவானந்தம்) போன்ற பட்டங்கள் அளித்தது. 'கலைச் சொற்கள்', ஆங்கிலத் தமிழ் அகராதி, ஆட்சிச் சொல்லகராதி, பள்ளி கல்லூரிக் கலைச் சொற்கள் உருவாக்கி சென்னை மாகாண அரசுக்கு அளித்தது.

60இல் வெள்ளி விழாக் கண்டது. 67—73 வரை பணம் படுத்திய பாட்டால் செயல் இழந்தது. முன்னாள் சபாநாயகர் எஸ். செல்ல பாண்டியன் தலைமையில் புத்துயிர் பெற்று 'தமிழ் மாநிலத் தமிழ்ச் சங்கம்' என்ற பெயரில் இயங்குகின்றது. இ. மு. சு. தேடிவைத்த நிதி ஒரு லட்சமாக, மைய மாநில அரசின் நிதியுதவியுடன் பீடு நடை போடுகின்றது.

**கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம்** : *1941.* வடநாட்டில் தோன்றிய முதற்சங்கம். அறிவியல் அறிஞர் அமரர் கே. எஸ். கிருஷ்ணன் தோற்றியது. பொதுவாகத் தமிழ்க் கல்வி பரப்புவதும் சிறப்பாக பாரதி புகழ் பரப்புவதும் பெரு நோக்கு. கடந்த 45 ஆண்டுகளாக ஒருமைப்பாட்டுப் பணி ஆற்றுவது.

தமிழரல்லாதாருக்குத் தமிழ் வகுப்புகள்; கல்லூரி மாணவர்கட்கும், சிறுவர்கட்கும் தனியே தமிழ் வகுப்புகள், வங்கமொழி வகுப்புகள் தமிழ் சாகித்யகர்த்தாக்களைப் பிரபலப்படுத்த தமிழ் இசை வகுப்புகள். 8000 நூல்கள் கொண்ட நூலகம், 40 இதழ்கள் கொண்ட படிப்பகம், சுப்பிரமணிய பாரதி நினைவு அறக்கட்டளை, பாரதி தமிழ்ச் சங்க அறக்கட்டளைகள் வாயிலாக மாணவர்கட்கு உதவித்தொகை.

சனிதோறும் இலக்கியக் கூட்டங்கள்; தமிழ் இந்திய இலக்கிய கர்த்தாக்களின் பிறந்த நாட்கள் கொண்டாடுதல்; பிற பகுதியினின்று வரும் அறிஞர்கட்கு வரவேற்பு அளித்தல்; கருத்தரங்கம், உரையரங்கம், பட்டிமன்றம், கவியரங்கம்; திசம்பர்தோறும் பாரதி விழா, கட்டுரை, கவிதை, கதை, நாடக, இசை நாடகப் போட்டிகள், இருமுறை அனைந்திந்திய அளவில் பாரதி கவிதைகள் ஆங்கிலத்தில் பெயர்த்தல் போட்டி, திறனாய்வுக் கட்டுரைப் போட்டி நடத்தி 1000 வெண்பொற் காசுகள் பரிசளிக்கிறது.

பாரதி விழாவின்போது மலர் வெளியிடுகிறது. இதுவரை Voice of a Poet, Essays on Bharathi, (3Vols), Bharathi in English, Noopur Katha (Hindi Version of Cilapathikaram), outline of Tamil Litt. in Hindi, Sangam Age, வங்கத்தமிழ், என் தந்தை (தங்கம்மாள் பாரதி), Koel Song (Hindi), Essays on Kamban. கவிதைக் கலை (இரு பகுதி - ரா. ஸ்ரீ. தேசிகன்). 66இல் வெள்ளிவிழாக் கொண்டாடியது. **முகவரி** : 93A Rash Behari Avenue. CALCUTTA. 700 026.

கல்கத்தாவில் தமிழ் மன்றம், தமிழ் எழுத்தாளர் சங்கம், ஹவுரா திருவள்ளுவர் கலை மன்றம், எழுத்தாளர் வட்டம் எனப் பல வண்டமிழ் வளர்க்கும் நிறுவனங்கள் உள. இவற்றிலெல்லாம் இரண்டறக் கலந்து இணையறு தொண்டு புரிபவர் **கவிஞர். கா. சு. மணியன்** : *(13-10-1950).* செட்டி நாட்டு ஆத்தங்குடி. கோரைப்பட்டு உ. ப. மாணவர், இலக்கிய மன்றச் செயலர். நல்ல கவிஞர்; கவியரங்கம் பல ஏறியவர். 70இல்

கல்கத்தா போந்தார். சௌத் இந்தியா கார்ப்பரேஷன் ஏஜன்சீஸில் பணி. 'கா. சு. மணியன் கவிதைகள், வெளியிட்டுள் ளார். இவரது மூச்சும் பேச்சும் தமிழே! எழுத்தாளர் வட்டம் ஏற்படுத்தியவர். தமிழர் வாழும் Lake Roadஐ கவிபாரதி சாலை என மாற்றியவர்; விவேகானந்தர் பூங்காவில் பாரதி முழு உருவச் சிலை நிறுவ மூலகாரணர். 'சுறுசுறுப்புத் தேனீ; அற்புத மரபுக் கவிஞர்' (கண்ணதாசன்).

**பம்பாய்த் தமிழ்ச் சங்கம் ;** 1942. தமிழார்வம் மிக்க சிலர் இலக்கியச் சங்கம் நிறுவினர். இவர்களிடம் ஆர்வம் இருந்ததே தவிர, உழைப்பு இல்லை; எனவே செயலற்றுப் போயிற்று. எஸ். வெங்குசாமியின் தூண்டுதலால், எஸ். கந்தசாமி, கே. சுந்தரேசன், ஆர். பத்மநாபன், எஸ். கிருஷ்ணமூர்த்தி என்ற இளைஞர்கள் உத்வேகத்தால் உயிர்ப்புற்றது. முதல் தலைவர் டி. கே. சுப்பிரமணியம். வாரத்திற்கு ஓர் இலக்கியக் கூட்டம், தமிழ் நூல் நிலையம் - இரண்டுமே அப்போதைய நோக்கம். மாதுங்கா பயனீர் உயர்நிலைப் பள்ளியின் ஓர் அறையே நிகழிடம். டி. ஆர்.ஏ நாராயணன், ரெ.முருகையன்; எஸ். சீனிவாச ஐயர், டாக்டர். எஸ். எஸ். கிருஷ்ணன் போன் றார் துணை நின்றனர். பணி பரவிற்று.

நன்கொடை திரட்டிக் கம்பர் விழா, பாரதி விழா கொண் டாடியது. உ. வே. சா. நிதி திரட்டிக் கட்டுரைப் போட்டி, பாரதி பாட்டுப் போட்டிகள் மாணவர்கட்காக நிகழ்த்தியது. தமிழகத்திலிருந்து அறிஞர் ஒருவரை அழைத்து இவ்விழாக்கள் எடுத்தது.

சங்கம் வளர்ந்தது; நூலகம் விரிந்தது. டாக்டர் கிருஷ்ணன் தலைவர், கந்தசாமி செயலர் - கட்டட நிதிக்குழு அமைந்தது. கலைத் தொண்டிலும் கால் வைத்தது. கலைவாணர் என். எஸ். கே. எம். எஸ். சுப்புலட்சுமி, கமலா போன்றார் நிகழ்ச்சிகள் நடத்தி நிதி திரட்டித் தந்தனர். உறுப்பினர்களே நாடகம் எழுதி நடித்தனர்; பெண் உறுப்பினர்கள் பொங்கல் அன்று புதிய நாடகம் போட்டனர். கட்டடம் எழுந்தது; 56இல் காமராஜ் தம் ஆகிவந்த கையால் திறந்து வைத்தார். திருமணத்திற்கும் தமிழக அன்பர்கள் தங்குதற்கும் உரியதா கிறது.

கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி. மலர், நாடக விழா மலர்கள், 'சங்கச் செய்தி' திங்கள் இதழ் வெளியாயின. 67இல்

ஏப்ரல் 20-27 வெள்ளி விழா கொண்டாடியது. மலர், அருணோதயம், விஞ்ஞான நூல் வெளியிட்டது. பம்பாய்ப் பள்ளிகளில் தமிழில் பத்தாம் வகுப்பில் முதல் மதிப்பெண் எடுத்தவருக்கு ஆண்டுக்கான முழு உதவித் தொகை அளிக்கிறது. தமிழரல்லாதாருக்குத் தமிழ் வகுப்புகள் நடத்துகிறது. பம்பாய்ப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பிரிவு தொடங்க முனைந்தது.

ஊழியன்,அருணோதயம் நாடகப் போட்டிகள் நிகழ்ந்தன. பத்மினி ராமாயண நாட்டிய நாடகம் நிகழ்ந்தது. இலக்கிய விழா கி. வா. ஜ. குத்து விளக்கேற்ற; மு. வ தலைமை தாங்க, 'நினைவு அலைகள்' என்ற பொதுத் தலைப்பில் அறிஞர்கள் உரையாற்றினர். பட்டி மண்டபம் நடந்தது. அனைவர்க்கும் வெள்ளிக் குத்து விளக்குகள் வழங்கப் பெற்றன. அச்சாணியாக இருந்து இயக்கியவர் ஆதி. நாராயணன். சங்கத்தின் மூச்சுக் காற்று பதவி ஏதும் வகிக்காது பங்காற்றும் எஸ். கந்தசாமி. **முகவரி**: பம்பாய்-400022.

**தில்லித் தமிழ்ச் சங்கம்** : *1-1-1946*. சங்கம் நிறுவிய துங்கர்கள்: எஸ். சுப்பிரமணியம், அ.வி. குப்புசாமி,கே.சி. கமலையா, ஆர். கே. ராமநாதன், எஸ். நரசிம்மன், கணபதி ராமையர், ரா. அரங்கராாசன், ம். பாலசுப்ரமணியன், ஆ. திருமலை கோவிந்தன் போன்றார். தில்லிப் பெருந்தமிழர் ராவ்பகதூர் சி. குப்புசாமி முதலியார் தலைமையில், கவர்னர் ஜெனரல் ராசகோபாலாச்சாரியார், க. சந்தானம் வாழ்த்துரை வழங்க 13-4-46 தொடங்கப் பெற்றது.

தில்லித் தமிழர்கள் அனைவரும் ஒன்று கூடித் தமிழ்ச் சுவை மாந்த முத்தமிழ் போற்றல், தமிழரல்லாதாரிடையே தமிழ் - தமிழ்ப் பெரியார்களைப் பிரபலப்படுத்தல் - முக்கிய நோக்கம். இலக்கிய வகுப்பு, சொற்பொழிவு, இதழ், தமிழறிஞர் நாள் கொண்டாடுதல் செயல்முறைகள். தமிழருக்கு இந்தி, பிற மொழியாளர்க்குத் தமிழ் கற்பித்தல் தலைப்பணி. முதல் தலைவர் சுப்பிரமணியம், செயலர் அ. வி. குப்புசாமி.

கர்னல் ஏ. என். எஸ். மூர்த்தி முடுக்குதலால் கட்டிடம் கால் கொண்டது. டாக்டர் சுப்பராயன், தருமை ஆதீனம், கருமுத்துத் தியாகராசர்,டி. வி.எஸ். கிருஷ்ணன், பொள்ளாச்சி மகாலிங்கம் நன்கொடைகள், பத்மினி நாட்டிய நாடக 52000 வசூல், முதல்வர் பக்தவச்சலம் தமிழரசு நிதி ஒரு லட்சம்,

முதல்வர் கலைஞரின் தமிழக அரசு நன்கொடை 50,000போன்ற வற்றால் தென் தில்லிப் பகுதியில் கட்டிடம் எழுந்தது. நூலகம் பெரியதாயிற்று; எல்லா நாட்களிலும் இயங்குகிறது. சத்திய மூர்த்தி படிப்பகமும் நடக்கிறது.

பொங்கல் விழா, சித்திரைப் புத்தாண்டு விழா, பாரதி விழா. தமிழறிஞர் வரவேற்பு - வழியனுப்பு விழாக்கள், 52 முதல் சுடர் வெளியீடு, 56இல் ஒருமைப்பாட்டு விழா.ஆராய்ச்சி அரங்கம், சிந்தனைக் குழு, 71இல் வெள்ளி விழா, தமிழோடு நின்றிடாது. விடுதலை நாள், குடியரசு நாள், காந்தி, நேரு நினைவு நாள், புயல் வெள்ள நிவாரண, பாதுகாப்பு நிதியளிப் பும் செய்கின்றனர். டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் தலைவ ராக இருந்தபோது வ. வே. சு. ஐயரின் Kambaramayanam - A study; Kurai English Translation வெளியிடப்பட்டது. பின் கோ. வன்மீக நாதபிள்ளையின் திருவாசக ஆங்கில ஆக்கம் வெள்ளி விழா வெளியீடாக வந்தது.

சி. என். ரங்கநாதன், சாலைத் தம்பதிகள் சங்க வளர்ச்சி யில் ஒன்றியவர்கள். **முகவரி :** Sector 5, Ramakrishnapuram, New Delhi-110022.

**எம். எஸ். பி. சண்முகம் :** *18-7-1921.* கொத்தமங்கலம். தமிழ் நாடு துணை ஆசிரியர் 52-59; இந்திய அரசு வேளாண் அமைச்சரவை துணை ஆசிரியர் (60-83). இமயத்தின் எல்லை யில், குன்றக்குடி அடிகளார் வரலாறு. சிதம்பரம் கும்பாபிடேக மலர் இவர் பேர் சொல்வன. தலைநகருக்கு வரும் தமிழறிஞர் கலைஞர்கட்கு உறுதுணையாய் அமைபவர். வெளிநாட்ட வர்க்கு இவர்களை அறிமுகம் செய்து வைக்கும் செயற்படு சிந்தையர். தில்லி என்றதும் இவர் நினைவும் வரும்.

**பெங்களூர் தமிழ்ச் சங்கம் :** *(1950)* தண். கி. வேங்கடாசலம் புலவர் க. சுப்பிரமணியன், தி. ச ஆறுமுகம், டாக்டர் தா. ராமன், ஆ. கிருட்டிணமூர்த்தி; மா. சிவசங்கரன், வ. ரா. கோவிந்தராசன் எழுவரால் 50இல் படிப்புக் குழுவாகக் கரு வாகி, 58இல் சங்கமாக உருவாயிற்று. குறிக்கோள்: யாதும் ஊரே யாவரும் கேளிர். சின்னம்: அறிவொளி, முத்தமிழ்ச் சிறப்பு, கலைவளம், கோயிற் கோபுரம் விளங்க அமைவது. தமிழ் மொழி கலை பண்பாடு பேணிக் காக்கவும், கன்னட - தமிழர் உறவு வலுவாக்கவும், அரசியல் மொழி இன வேறு பாடின்றி இயக்குவது.

59 முதல் மாணவர்கட்குத் தமிழ்த் தேர்வு, 61 முதல் இலக்கிய வகுப்பு, 62 முதல் இலவய கன்னட வகுப்பு, 63 முதல் புலவர் தேர்வுக்குரிய வகுப்பு, அறிஞர்கட்கு விழா, தமிழ்த் திருமணம், மகிழ்வுச் செலவுகள், வள்ளுவர், பாரதி, பாவேந்தர், நாடக, இசைப் போட்டிகள், நூல் வெளியிடல், கலைவிழா, வெள்ளி விழா மலர் வெளியீடு போன்றன செயற்பாடுகள்.

தமிழ்நாடு அரசு 75000, மைய அரசு 50000, நடுவணரசு 50000, கலைஞர் கருணாநிதி 50000 நன்கொடை வழங்கியுள்ளர். 62இல் குன்றக்குடி அடிகளார் முதற்புரவலரானார். பெங்களூர் வள்ளல் காடி. செலுவராயச் செட்டியார் 2½ ஏக்கர் நிலம் தந்தார். தண். கி. வெங்கடாசலம் இல்லத்தில் இயங்கிய சங்கம், 63இல் 105 வீரப்பிள்ளை தெரு வாடகைக் குடிலுக்கு மாறியது; 69இல் சங்கத்திற்கு மாற்றப்பட்டது. 73இல் 'காவிரி' திங்கள் இதழ் வெளியாகி, 'ஊற்று' எனப் பதிவாகி வந்தது. கலைஞர் மு. கருணாநிதி அவர்கட்குத் தமிழ்க் காவலர்' என்ற பட்டம் தந்து போற்றியது. 74இல் வெள்ளி விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. சங்கத்தின் எதிரே வள்ளுவர் சிலை நிறுவ உளது. **முகவரி** : 29/1 அண்ணா சாமி முதலியார் சாலை, பெங்களூர்-560 042.

**திருப்பத்தூர் தமிழ்ச் சங்கம்** : (1967). தலைவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார். இஃதோர் ஆய்வுக் கழகம். வைகாசி விசாகத்தின்போது இலக்கியம், கலை, பண்பாடு, சமயம், அறிவியல் போன்ற துறைபற்றி ஆய்வு நிகழும், முடிவுகள் எடுக்கப்பெறும்; நூலாக வெளிவரும் 63 நாயன்மார் நினைவாகத் தமிழகத்தின் தலைசிறந்த 63 பெருஞ் சான்றோர் உறுப்பினராக உளர். திருத்தளி நாதர் திருக்கோயில்தான் தலைமையகம். வைசாக விழாவின்போது திருமுறை பற்றிய கவியரங்கம் கருத்தரங்கம், பட்டிமன்றம், சிந்தனை மேடை போன்றன நடக்கும். திருமுறைத் தொண்டு செய் பெருமகட்கு ஆண்டுதோறும் பட்டங்களும் பதக்கங்களும் வழங்கிச் சிறப்பிக்கப்படும்.

**காரைக்குடி தமிழ்ச் சங்கம்** : (1969) தலைவர் டாக்டர் வ. சுப. மாணிக்கம். நோக்கம்: இலக்கிய அறிவியல் நூல்களை மலிவு விலையில் அளித்தல், பழம் நூல்களைப் பேணிக்காத்தல், இளம் எழுத்தாளர்களை ஊக்குதல், போட்டி நடாத்திப் பரிசு வழங்கல், இளைஞர்களை — மாணாக்கர்களைத் தமிழ்ப் பணியில் ஈடுபடுத்துதல், இலக்கிய வளர்ச்சியோடு இன்றைய தேவையான அறிவியல் வளர்ச்சியில் தமிழைத் திருப்புதல்.

முறையான தமிழறிவு பெறப் பள்ளி மாணவர்கட்கு நீதி நூல்களை அளித்து ஒப்பிக்கும் போட்டி வைத்தல், தமிழை அறிவியல் ரீதியில் வளர்க்கக் கல்லூரி மாணாக்கர்க்கு பல்வேறு துறையில் அறிவியற் கட்டுரைப் போட்டி வைத்துப் பரிசு வழங்கல், சங்க இலக்கிய பாடம் நடாத்துதல், சங்க இலக்கியம் காப்பியம் பற்றிப் பேரறிஞர்கள் கொண்டு ஆய்வுரைகள் நிகழ்த்தல், சங்க இலக்கியம் பரப்பக் கவிதை-கட்டுரைப் போட்டிகள் நடத்தல், சங்கப்புலவர் விழா கொண் டாடுதல், தமிழ் படித்து வேலை பெறாப் பட்டதாரிசங்கம் நிறுவி உதவல், சங்கத் தமிழ்மலர், தமிழமுது வெளியிடல்-சாதனைகள். **முகவரி:** கல்லுப்பட்டி, வடகரை - காரைக்குடி 623001.

**திண்டுக்கல் தமிழ்ச் சங்கம் :** *(1981)* தலைவர் சி. மா. பா. மாணிக்கம் நாடார்; புரவலர் கோ. சுந்தரராசன் (எழிலரசன்) செயலர் புலவர் து. முருகையா; பொருளர் திருக்குறள் அ. அ. வெ. அண்ணாமலை. நோக்கம்: சொல்லில் உயர்ந்த சொற்றமிழுக்கு ஆக்கம் சேர்த்தல் எங்கும் எதிலும் செந்தமிழ் ஆட்சியே செழிக்கச் செய்வது, துறைதொறும் தமிழை நிறைவுற வளர்த்துச் செந்தமிழ்தன்னைச் செழுந்தமிழாகச் செய்தல், நூல்வெளியிடல், அருமைத் தமிழன் பெருமை விரித்துத் தெருவெலாம் முழக்கம் செய்வது, தமிழறிஞரைப் போற்றிப் பாராட்டல் புரத்தல், இளைஞர் எண்ணத்தைத் தமிழ்வழி ஈர்த்தல். முத்தமிழ்க்காவலர் தொடக்கி வைத்தார்.

சாதனை: இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தார்க்கு வரவேற்பு விருந்து; புலவர் குழுவுக்கு வர வேற்பு; முத்தமிழ்க் காவலர் பெயரால் சங்க கழகம்; திங்கள் தோறும் கடைசி ஞாயிறு அறிஞர் உரை; இலங்கைத் தமிழர் இன்னலுக்கிரங்கி கண்டனக் கூட்டம் உண்ணா நோன்பு, தமிழிசை நிகழ்ச்சி, மலர்வெளியூடு.

**மாணிக்க நாடார் :** குழந்தை முகம், தெய்வீகப் புன்முறுவல் எளிமை இனிமை, தமிழ்த் தொண்டினை தெய்வத் தொண் டாய் ஆற்றும் தூயர், கனிவு பணிவு துணிவு மிக்க சால்பூன்றிய தூண். **எழிலரசர் :** நயத்தகு நாகரிகர், தங்கத் தமிழுக்குதவு தண்ணளியர், ஈதல் இனிதென்னும் ஏந்தல். **திருக்குறள் அண்ணாமலையார் :** பேச்சும் மூச்சும் செயலும் எல்லாம் குறளே எனக் கொண்டு இரண்டறக் கலந்தவர். அறிவறிந்தநாள் தொட்டுச் செறிவார்ந்த குறள் மணம் பரப்பும் கோமான், வீட்டிலும் நாட்டிலும் குறளே ஒலிக்கும் உயிர்ப்பினர். குறளில்

நாளும் குளித்துத் திளைத்துப் புதுப் பொருள் புகட்டுபவர், ஒப்பிட்டுக் காட்டுநர். மானுட வாழ்வினுக்கு வழிகாட்டியாக சான்றோர் செப்பிய சால்புரைகளை குறள் உவமை காட்டி 'வாழ்வியல் விருந்து' படைத்த வளமையர். **புலவர் முருகையா :** செயல்படு சிந்தையர். காண்தரு ஆண்டகை. உரமான நெஞ்சும் ஊற்றமான பேச்சும் கொண்டவர். இவர்களின் ஓயா உழைப்பால் ஓங்கி ஒளிரும் சங்கம். **முகவரி**: 101-105. பெரியகடைத் தெரு. திண்டுக்கல்-624001

**திருச்சி தமிழ்ச் சங்கம் :** கி. ஆ. பெ. விசுவநாதம், கலை வாணன், ஐயன்பெருமாள் கோனார் போன்றார் கூடித் தொடங்கியது. இதன் கடடிடத்துக்குரிய வாகான (புறம் போக்கு) இடம் கண்டு வகையாகப் பெற்றுத்தந்த பெருமையர் முத்தமிழ்க்காவலர். 1-7-1959இல் முதல்வர் கு. காமராஜ் கால்கோள் செய்தார்; 7-5--1961இல் கட்டடம் கட்டி முடிக்கப் பெற்றுக் காமராசரே திறந்தும் வைத்தார். புதன் வெள்ளி இரு நாட்களும் சொற்பொழிவுகள் நிகழ்ந்த வண்ணமுள. திருசிர புரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பெயரால் ஆண்டு தோறும் விருது வழங்கப்பெறுகிறது. பால்மதுரம், துரைராசபிள்ளை போன்றார் பங்கு பெரிது. 56இல் கி. ஆ. பெ. வி.க்கு முத்தமிழ்க் காவலர் பட்டம், தந்தது; 58இல் அவருக்கு மணிவிழா மலர் வெளியிட்டது. ரம்போலா மாஸ் கரனேஸ், சா. பெரியசாமி போன்றோர் சங்கத்தை நடத்தி வருகின்றனர். **முகவரி**: மேலரண் சாலை, சிங்காரத் தோப்பு. திருச்சி-8.

**சேலம் தமிழ்ச் சங்கம் :** சேலத்துப்புலவர் பெருமக்கள் சேர்ந்தெடுத்தது. சின்னாண்டார் முருகு சுந்தரம் போன்றார் சிறக்கப்பணியாற்றினர். அவ்வப்போது விழாக்கள் எடுப்ப தோடு முத்தமிழ்ப் போற்றும் முனைப்பினது. சேலத்துச் செந்தமிழ்ச் செல்வர்கட்கு அவ்வப்போது பட்டம் தந்து பாராட்டுகிறது.

**தஞ்சாவூர் தமிழ்ச் சங்கம் :** 27-6-1986. தலைவர் மேஜர். அ. கிருட்டிணமூர்த்தி. துணைத் தலைவர்கள் யு. சுப்ரமணியன் (I.A.S. Retd), பேரா. சி. கோதண்டபாணி. பாவலர் ச. பால சுந்தரம், கோவை இளஞ்சேரன்; செயலர் புலவர் ஜே. ஏ. பாண்டியன்; துணைச் செயலர்கள் க. சிவசாமி, க. திருநாவுக் கரசு; பொருளர் ப. மாரிமுத்து B. R. O. (ஓய்வு). மேஜர் தலைமையில் முனைவர் வ. சு. ப. மாணிக்கனார் தொடங்கி

வைக்க, முனைவர் தமிழண்ணல் சிறப்புரையாற்ற, மதுரை திருச்சி கரந்தைத் தமிழ்ச் சங்கங்களின் சார்பில் முறையே சர்க்கரை சேர்வை, பெரியசாமி, சண்முகம் பிள்ளையும், பாரதியார் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் நா. செயராமனும் வாழ்த்துரை வழங்கினர். திங்கள் தோறும் கடைசி ஞாயிறுகளின் கூட்டம் நிகழ்கிறது. **முகவரி**: பேரா. அ. கிருட்டிணமூர்த்தி. 2ஆம் தெரு. ராஜாப்பா நகர். தஞ்சாவூர்-7

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் 9வது ஆண்டு விழா தஞ்சையில் நடந்தபோது 'தஞ்சைத் தமிழ்ச் சங்கம்' என்ற பெயரில் 1909இல் ஒரு தமிழ்ச்சங்கம் உருவாயிற்று. 'தமிழகம்' என்ற இதழும் வெளியானது. திறமான தலைமை இன்மையால் சில்லாண்டுகளில் மறைந்தது என்பது ஈண்டு எண்ணத் தக்கது.

**லண்டன் தமிழ்ச் சங்கம்**: உருவாகக் காரணம் 'ஆல்ஜி' என்றழைக்கப்பெறும் டாக்டர் அழகப்பா அழகப்பன் அவர்கள். பாரிஸ்டர். ஐக்கிய நாடுகள் அவையில் 25 ஆண்டுகளாகப் (58 - 83) பெரும் பதவியில் இருந்தவர். சங்கத்தின் செயலராகவும் இருந்துளார். 55 இல் தலைவராக இருந்தவர், மலேசிய சட்ட அமைச்சராக இருந்த டத்தோ ஆதி நாகப்பன் அவர்கள், 'லண்டன் முரசு' பதிப்பர் அரங்க முருகையன்.

**பெர்லின் தமிழ்ச் சங்கம்**: தலைவர் பி. மணிசேகரன். துணைத் தலைவர்-ஆர். மணி, செயலர் தர்மலிங்கம், பொருளர் ஆர். குணசிங்கம். 'தமிழன் குரல்' இதழ் வெளியிடுகின்றனர், அதன் பதிப்பர் செல்வி மரிய ஹெர்மன். **முகவரி** Graf. Haeseler St. 16. 1000 Berlin 51. West Germany.

**அமெரிக்காவில்** நியுயார்க் தமிழ்ச்சங்கம், நியுயார்க் பாரதி சங்கம் (தலைவர் பி. கபாலீஸ்வரன். 2 Wash SQ. Vill. Apartment I. T. NY.10012), சிகாகோ தமிழ்ச் சங்கம் திகழ்கின்றன.

உலகத் தமிழர்களின் குரலாக 84சனவரி முதல் வெளிவருவது 'வாழும் தமிழ் உலகம்' - திங்களிதழ். நாடுகள் தோறும் நம் தமிழ் மக்கள் நலமுடன் மகிழ அவர்களின் பக்கம் ஏடெனச் செல்லும் முத்தமிழ்க் கொத்து - இது. தமிழர்க்கு உயர் தனிச் சொத்து! ஆசிரியர் டாக்டர் பழனி ஜி. பெரியசாமி (அமெரிக்கா). நிர்வாக ஆசிரியர் இரா. பழனியப்பன். பதிப்பாளர் கே. பி. கணேசன் **முகவரி**: 31. போயஸ் தோட்டம்,

சென்னை-86. அமெரிக்க முகவரி 7142. River Edge Road. Columbia, Maryland 21044.

**கேரளாவில்** கொச்சி தமிழ்ச் சங்கம், எர்ணாகுளம் தமிழ்ச் சங்கம், கோட்டையம் தமிழ்ச் சங்கம்; திருவனந்தபுரம் தமிழ்ச் சங்கம், கள்ளிக் கோட்டை தமிழ்ச் சங்கம், அகில கேரள தமிழ்ச் சங்கங்களின் இணைப்பு.

**கர்நாடகத்தில்** பங்களூர், மைசூர், ஹாசன் தமிழ்ச் சங்கங்கள், **ராஜஸ்தானில்** ஜெய்ப்பூர் தமிழ்ச் சங்கம், **குஜராத்தில்** தில் பரோடா, சூரத் தமிழ்ச் சங்கங்கள். **நாகபுரி** தமிழ்ச் சங்கம் குறிப்பிடத்தக்கன. **தமிழகத்தில்** தருமபுரி தமிழ்ச் சங்கம். ஊற்றங்கரைத் தமிழ்ச் சங்கம்' தாரமங்கலம் தமிழ்ச் சங்கம், கரூர் தமிழ்ச் சங்கம் எனப் பல சங்கங்கள் தோன்றிய வண்ண முள.

**உலகத் தமிழ்ச் சங்கம். மதுரை** 1986. சங்கம் வளர்த்த மதுரையில் தமிழ்ப் புத்தாண்டு நன்னாளில் 14-4-86 இல் தொடக்கவிழா - கால்கோள் விழா நடந்தது. முன்னிருந்த சங்கங்கள் தமிழக அளவின; தமிழ் இலக்கியம் அனைத்தும் உலகினை முதன்மையாகக் கொண்டது போன்று, உலகளாவிய தமிழர்கள் அனைவர்க்கும் உரியதாக அமையுமு முதல் தமிழ்ச் சங்கம் இதுவே.

மூன்று நாள் விழா 1) 12 சனி மாலை தி. எல். மகராஜன் இசையரங்கு, சொர்ணமுகி ஆடலரங்கு. 2 ம் நாள் 13 ஞாயிறு காலை எம். பி. என். சேதுராமன் - பொன்னுசாமி நாயன நல்லிசை, புலமைப் பித்தன் தலைமையில் கவிஞர்கள் முத்து லிங்கன், காமராசன், முத்துராமலிங்கம், புத்தனேரி சுப்பிர மணியம், இளந்தேவன், அரசு மணிமேகலை, சொ. சொ. மீ. சுந்தரம் புலவர் மரியதாசு 'சங்கச் சான்றோர் நன் மொழி' எனும் பொருள் பற்றிப் பாடினர். அவ்வை நடராசர் வர வேற்பு; மாவட்ட வருவாய் அலுவலர் கி. இராசமாணிக்கம் நன்றி.

மாலை சுப்பு ஆறுமுக வில்லிசை விருந்து, சிதம்பரம் செயராமன் இன்னிசை, 'சங்கத் தமிழ்க் கலைகள்' தலைப்பில் கருத்தரங்கம் தலைமை: அமைச்சர் காளிமுத்து. தொடக்க வுரை : துணைவேந்தர் வ. அய். சுப்பிரமணியம், டாக்டர்கள் வா. செ. குழந்தைசாமி, சை. வே. சிட்டிபாபு, திருமதி ராதா

தியாகராசன், வ. சுப. மாணிக்கம், கா. பொ. இரத்தினம், சி. பாலசுப்பிரமணியம், தமிழண்ணல், ஆறு. அழகப்பன், க. ப. அறவாணன், விசயலட்சுமி நவநீத கிருட்டிணன் ஸ்ரீபால் உரையாற்றினர். சீர்காழி கோவிந்தராசன் - சிவ சிதம்பரம் இன்னிசை. கற்பூர சுந்தர பாண்டியன் வரவேற்பு, இராச ரத்தினம் நன்றி.

3 ஆம் நாள் காலை சேக் சின்ன மௌலானா நாயன நல்லிசை. சங்க கால இசைநயம் பற்றி வி. ப. கா. சுந்தரம் விரிவுரை. 'உலகளாவிய தமிழ்' கருத்தரங்கு. தலைமை: அமைச்சர் இராகவானந்தம்; தொடக்கவுரை; அமைச்சர் ச. ராமச்சந்திரன். அமைச்சர் கே. ஏ. கிருட்டிணசாமி, க. ராசாராம், எம். பழனியாண்டி (காங்கிரஸ்), அப்துல் சமது (முஸ்லீம் லீக்) வி. பி. சிந்தன், ப. மாணிக்கம் (வலது கம்யூனிஸ்ட்) ஏ. எஸ், ஏ; ஆறுமுகம் (ஜனதா), குமரி அனந்தன் (கா. கா தே. க.) திருவாரூர் தங்கராசு, (திராவிடக் கழகம்) ஆண்டித்தேவர் (பார்வர்டு பிளாக்), அழகிரிசாமி (காமராஜ் காங்கிரஸ்), செங்கம் ஜப்பார், அய்யண்ணன் அம்பலம் (தமிழ்நாடு பார்வர்டு பிளாக்), ஜோசப் பெர்னாண்டோ பேசினர். சிலம்பொலி செல்லப்பன் வரவேற்க, மதுரைச் செய்தித் துறை சாமிநாதன் நன்றி நவின்றார்.

மாலை மதுரை சோமு இன்னிசை, தொடக்கவிழா தலைமை: அமைச்சர் அரங்கநாயகம். தொடக்கவுரை: அமைச்சர் வீரப்பன். நாவலர் நெடுஞ்செழியன், ம. பொ. சி. கி. ஆ. பெ. விசுவநாதம், குன்றக்குடி அடிகளார், திருக்குறளார் வி. முனுசாமி, பி. எச், பாண்டியன், மதுரைத் தமிழ்ச் சங்கச் செயலர் முத்துமலைச்சாமி, இலங்கைத் தமிழர் தலைவர் ஏ. அமிர்தலிங்கம் வாழ்த்துரை வழங்கினர். மாவட்ட ஆட்சியர் வரதராசலு வரவேற்க, பெரியாண்டவன் நன்றி பாராட்டினார். சந்திரா தண்டாயுதபாணி ஆடலரங்கோடு விழா நிறைவெய்தியது.

முதல்வர் மாண்பமை எம். ஜி. ஆர். சங்கத்தைத் தொடங்கி வைத்தார். தல்லாக் குளத்தில் 14 ஏக்கர் பரப்பில் கட்டப்பட இருக்கும் சங்க வளாகத்திற்குக் கால்கோள் செய்தார். சங்கப் புலவர் நினைவுத் தூணை நிறுவினார். 60 ஆண்டுகள் அருந்தமிழ்ப் பணியாற்றிய பெருந் தொண்டர் கிருபானந்தவாரியாருக்குப் பொற்பூ வழங்கினார். 'ஐந்திறம்' நூலினை வெளியிட்டார்; கல்வி அமைச்சர் பெற்றார்.

அயலகத் தமிழன்பர்கள் முதல்வருக்குப் பாராட்டு செய்தனர். நாற்பத்தொன்பதின்மர் தொல்காப்பியர் முதல் பாவேந்தர் வரையான நூல்களை வழங்கினர்; சங்க நூலகத்திற்கு அளித்தார் எம். ஜி. ஆர். பழநி தேவஸ்தான தக்கார் க. பொன்னுசாமி உலகத் தமிழர் சார்பில் $3\frac{3}{4}$ லட்சம் பெறுமான தங்கத் தாமரையைப்பொன்மனச்செம்மலுக்கு அளித்தார் நான்காம் தமிழ்ச் சங்கம் கண்ட பாண்டித்துரைத் தேவர் வழியினருக்கு முதல்வர் பொன்னாடை போர்த்திப் பெருமைப் படுத்தினார்.

சங்கத்தைத் தமிழ் பேசும் மக்களுக்கு அர்ப்பணித்து, சங்கப் பணிக்கு அரசு 10 கோடி ஒதுக்கும், தேவையாயின் மேலும் ஒதுக்கும் என்றார். பிறமாநிலத் தமிழ்ச் சங்கங்களுடன் தொடர்பினை உண்டாக்கும்; உலகெங்கணும் நூற்கள் ஆசிரியர்களை அனுப்பி வெளி நாட்டவரும் தமிழ் கற்றுச் சிறக்கச் செய்து ஞாலம் முழுதும் தமிழ் பரவச் செய்யும்; 'உலகத் தமிழ்' எனும் இதழ் வெளியிடும்; பெருநூலகம் அமைத்திடும் தமிழ்க் கலை பண்பாடு பற்றிய கருத்தரங்கும் நடத்தும்; இனி உலகத் தமிழ் மாநாடுகளை இதுவே நடத்தும்; புலவோரும் ஆய்வாளரும் கூடி ஆராயும் இடமாக அமையாது, தமிழைப் பாதுகாத்துப் பரப்பும்—உலகத் தமிழர்களை ஒன்று படுத்தும் நிலையமாக நிலவும்; பல்வேறு பல்கலைக் கழகங்களின் நிறுவனங்களின் சீரிய செயற்பாடுகட்கு வழி வகுக்கும். 55 நாடுகளில வாழும் தமிழர், 33 பல்கலைக் கழகங்களின் தமிழ் ஆய்வு இவற்றை ஒருங்கிணைக்கும்.

உலகத் தமிழ்ச் சங்கம் உருவாவதையொட்டிச் சில நல்ல ஏற்பாடுகள் : தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் சங்கப் புலவோர்கள் பிறந்த இடங்களில் அவர்களின் பாடல்கள் செதுக்கப்பட்ட நினைவுத் தூண்கள் நிறுவப்படும். மங்கலதேவி கோவில் கேரள அரசின் கெடுபிடியால்) சென்று வழிபட முடியாதுள்ளமையால், எல்லையில் கம்பம் பகுதியில் கண்ணகி கோயில் கட்டப்பெறும்.

சங்கத்தின் சிறப்பு அலுவலராகப் போக்குவரத்து ஆணையர் எஸ். டி காசிராஜன் அமர்த்தப்பட்டு, அவர் சங்கம் அமைக்கும் பணிகளைக் கவனித்து வருகிறார். 14-1-87 பொங்கல் திருநாளில் முதல்வர் எம். ஜி. ஆர் சங்கச் செயற்பாடுகளை துவக்கி வைப்பார்.

## பதிப்பகங்கள்

தமிழ் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் வெளியீடுகள் உயிர்நிலை ஆகும். வெளியீடுகள் இன்றேல் வளர் தமிழ் வரண்டு போம். வாடிப் போகும். சிந்தை செயல்களாகும் விந்தை இந்த வெளியீடுகளால்தாம். இல்லாது போயின் இருண்ட நிலையும் ஒருதேக்க நிலையும் உருவாகியிருக்கும். வண்டமிழ் வளர்ச்சிகள், ஆய்வுகள் வெளியீடுகள் மூலம் கருத்துப் பரிமாற்றமும் பரவலும் எய்தும். இந்த வகையில் இந்த நூற்றாண்டின் வளர்ச்சிக்கு முதுகெலும்பாக அமையும். விற்பனை வெளியீட்டகங்களை நன்றியோடு நினைந்து போற்றுவது நம் கடன். விளைபொருட்கள் வாங்குவோர் களைச் சென்றடைய சந்தைகள் வேண்டும். அதுபோன்றே இலக்கியச் சந்தை இன்றியமையாதது! அவ்வகையில் பதிப் பகங்கள் (இலக்கியப்)பாலங்கள் ஆகின்றன!

**அலலயென்ஸ் கம்பெனி** : *1901.* கா. ஸ்ரீ. ஸ்ரீ., பி. ஸ்ரீ, ச. கு. கணபதி ஐயர், த. நா. சேனாபதி, வேழ வேந்தன், அனுத்தமா, லக்ஷ்மி, எஸ். வி. வி, கு. ப. ரா, த. நா. குமார சாமி, குமுதினி, கொனஸ்டை, எல்லார்வி, ராஜாஜி, பி. எம். கண்ணன், தி. நா. சுப்பிரமணியன், போன்றார் எழுத்தாளர் கள். தொடக்கத்தில் பக்கிம் சந்தர், சரந்சந்தர், தாகூர், காண் டேகர், பிரேம்சந்த் நூல்களை அறிமுகம் செய்து வைதத்தே இக்கம்பெனிதான். புத்தகம் விற்காத-வாங்காத காலம் அது. 30 தலைவர்கள் வாழ்வினை 4அணா விலையில் வெளியிட்டது- உலகிற்குத் தெரிய வேணும் என்று! பால ராமாயணம்-பாரதம் குழந்தை நூல்களாகக் கொணர்ந்தது. தோட்டக்கலை, காங்கிரஸ் மாநாடுகள் பற்றி நூல்கள் தந்தது. சென்னைக்கு ஒரு தலைவர் வருகிறார் என்றால் உடன் அவர்பற்றிய நூல் வெளியிடும். மணிமணியான கதைகளை வெளியிட்டது. சமய நூல்களையெல்லாம் மக்கள் திருந்த வெளிக்கொணர்ந்தது. 800 நூல் வெளியிட்டுளது.

தோற்றியவர்: **வை. குப்புசாமி** (*1880-23-8-1948*) தஞ்சை மாவட்ட மாயவரம் வட்ட கோமல். பெற்றோா வைத்தியநாத ஐயர் : பாலாம்பாள்; மனைவி லட்சுமி. வி. கே. பாலு, கே. வி. எஸ். மணி இதனையும், கே வெங்கடராமன் குருப் பப்ளிகேஷன்சையும் கவனித்து வருகின்றனர். குப்புசாமி ஐயர் விற்கவில்லை எனக்கிஞ்சிற்றும் கவலைப்படாது எல்லாத்துறை நூல்களையும் வெளியிட்டவர். தமிழுக்காக தியாகம் புரிந்தவர்.

1916இல் 'விவேக போதினி' எனும் திங்களிதழைத் தொடங்கி 20 ஆண்டுகள் நடத்தியவர். புத்தக வெளியீட்டில் முன்னோடியாகத் திகழ்ந்தவர். **முகவரி;** அ. பெட்டி 617. மயிலாப்பூர் (குளம் மேல்கரை) சென்னை-4 (71314)

**தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்** : 1921. தோற்றியவர் மறைமலையடிகளார் மருமகனார் திருவரங்கனார். அறுகுபோல் வேரோடச் செய்தவர் அரங்கனார் என்றால், ஆல்போல் தழைத்திடச் செய்தவர் வ. சுப்பையா பிள்ளை. தொல்காப்பியம், பதினென் மேல்-கீழ் கணக்குகள், காப்பியங்களையும் இலக்கணங்களையும் உரையுடன் வெளியிட்டது. சங்க இலக்கிய, சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் அமைத்ததோடு அதன் பொழிவுகளை நூல்களாக்கியும் வெளியிட்டது. வசன-சுருக்க நூல்கள், ஆராய்ச்சிகள், அறிவியல், பொருளியல், அரசியல், வரலாறு, சமய திருமுறைகள் அளித்தது. தமிழ்ப்புலவர் அகர வரிசை-குறிப்பிடத்தக்கது-பயனானது.

மறைமலையடிகளாரின் நூல்களையெல்லாம் வெளிக்கொணர்ந்ததோடு அவர் பெயரால் அரியபெரிய நூலகமும் அமைந்துள்ளது. அகராதி, நிகண்டுகள், நாடகங்கள், சிறுவர் நூல்கள், காதைகள் குறிப்பிடத்தக்கன. அரிய ஆங்கில நூல்களை அழகு தமிழில் பெயர்த்தளித்துள்ளது. சு. அ. இராமசாமிப் புலவர், பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனார், சித்தாந்தப்பண்டிதர் ப. இராமநாதம் பிள்ளை போன்ரார் கழகப் புலவர்களாய் இருந்து தத்தம் செய்தவர்கள். கு. பரமசிவன், என். கே. வேலன், க. ப. சந்தோஷம், கா. அப்பாதுரையார், இரா. இளங்குமரன், அ. க. நவனீத கிருட்டிணன், கா. கோவிந்தன், கழக ஆசிரியர்கள்.

'செந்தமிழ்ச் செல்வி' எனத் தனித்தமிழ் திங்கள் இதழும் நடத்தி வருகிறது. கழகப் பொன் விழா, கழகத்தின் 1008வது வெளியீட்டு, விழா, செந்தமிழ்ச் செல்வி பொன் விழா, மறைமலையடிகள் நூற்றாண்டு விழா. வ. வ. சு. பவளவிழா, திருவள்ளுவர் நினைவு விழா, பேராசிரியர் சுந்தரனார் நினைவு -மலர்கள் போற்றத் தக்கன. இதுவரை வெளியானவை 1820.

இன்றைய பொறுப்பாளர் வ. சு. அவர்களின் மருமகனார் திரு. **இரா. முத்துக்குமாரசாமி** (2-12-1936) பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் முதுகலை பயின்றவர். Goldsmith's Vicar of

wakefield, scott's Talisman, Dumas's Black Tulip, Stevenson's kidnapped, Martin Rattler போன்ற நூல்களைத் தமிழாக்கம் செய்துளார். முன்னம் மறைமலையடிகள் நூலகத்தின் நூலக ராக இருந்து நூலக இயல் கட்டுரைகள் தீட்டியவர். கலைச் சொல்லாக்கக் குழு, உலகத் தமிழ் மாநாடு போன்றவற்றில் பொறுப்பான பங்கு வைத்துப் போற்றத் தக்க பணியாற்றி யவர். **முகவரி** 3, மேட்டுத் தெரு. சென்னை-1

தமிழகத்தின் பெரிய வெளியீட்டகமாக விளங்கும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திருச்சி, மதுரை, குடந்தை, கோவை, நெல்லை, சேலத்திலும் கிளை பரப்பிச் சிறக்கப் பணி யாற்றி வருகிறது. திருவள்ளுவர் நாட்காட்டியும், நாட் குறிப்பும் வெளியிட்டு வீறார்ந்து விளங்குகிறது. **முகவரி**: 79. பிரகாசம் சாலை. (பிராட்வே) அ. பெ. 85. சென்னை-108 (22336)

**தி லிட்டில் பிளவர் கமபெனி** (லிப்கோ) 1929. தோற்றுநர் வி. கிருஷ்ணஸ்வாமி சர்மா, தொழில் மூலம் மக்களுக்கும் நாட்டுக்கும் இயன்றவாறு பணிபுரியும், பெரு நோக்கோடு வாழ்வினுக்கு வேண்டிய நூல்களை (விற்பனை வரி, பத்திரப் பதிவு போன்றன) வெளியிடுகின்றனர். விழா மூலம் பொது மக்களுக்கு நூல்களை அறிமுகம் செய்யும் வழக்கத்தினை 53இல் 'ரகுவம்சம்' மூலம் தொடங்கினர், 54ல் நடமாடும் புத்தக ஊர்தி உலா விட்டனர். 57ல் நான்கணா விலையில் 64 நூல்கள் வெளியிட்டனர். 59 ல் தமிழ்ச் சுருக்கெழுத்து - தட்டெழுத்து, 64 ல் தந்தி தொலைபேசி, ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், 69 ல் சைவத் திருமுறைகள், பகவத் கீதை வெளியிட்டனர்.

பெரிமேசன் துப்பறியும் புதினங்களை முதன் முதல் வெளி யிட்டவர்கள். 'நோயற்ற வாழ்வு கருதி இயற்கை தரும் இன் மருந்துகள்', பிளாஸ்டிக் அறுவை நிபுணர் டாக்டர் ஸாவா அவர்களின் 'உடல் நலம் தேடி'; 70ல் சென்னைக் காவல் துறை வரலாறு, போலீசும் பொதுமக்களும், துப்பறியும் நாய்கள், சாலை விபத்துக்களைத் தவிர்ப்போம் போன்ற பயனான பனு வல்களை வெளியிட்டனர்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தம், லிப்கோ ஆங்கில - தமிழ் அகராதி. தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி, நவக்கிரகங்கள், குறள் மணிக் கதைகள், சமைப்பது எப்படி? அபிராமி அந்தாதி, சௌந்தர்ய லஹரி, குடும்ப சோதிடம், ராசி பலன், விவாக மந்திரார்த்த போதினி, நாமக்கல் கவிஞர் பாடல்கள்.

ஆங்கில, தமிழ், வடமொழிகளில்; தோத்திரா பக்திப் பனுவல்கள், இலக்கியங்கள், கதைகள் என வெளியிடும் நிறுவனம் இது. தி. ந. ச. வரதன் சகோதரர்கள் வளர்த்து வருகின்றனர்.

முகவரி : *43*, ரெங்கநாதன் தெரு (மாம்பலம் ரயிலடி) த. பெ. *1028*. தியாகராய நகர், சென்னை-*17*. (*441538*).

**சக்தி காரியாலயம் :** *1939*. வெளியீட்டுத் துறையில் வரலாறு படைத்த பதிப்பகம். நல்ல தாளில் அழகான மேலட்டையுடன் படங்களுடன் பெங்குவின் - பெலிகன் வரிசைகள் போல் நூல்கள் வெளியிட்டது. பல்வகை தலைப்புகளில் பயனான பொருள்கள் பற்றி 250 நூல்கள் வெளிக் கொணர்ந்தது. வீர சாவர்க்கரின் 'எரிமலை'யையும் ருஷ்ய நூல்களையும் துணிச்சலுடன் தந்தது. தமிழில் வெளியாகும் எல்லா நூல்களையும் இல்லை யென்றியம்பாது உடன் கிடைக்கச் செய்தது. பாரதியார் கவிதைகள், குறள் பரிமேலழகர் உரை ரூ. $1\frac{1}{2}$ க்கும் நாவல்களை $\frac{3}{4}$ ரூபாய்க்கும் கம்பராமாயண காண்டங்கள் ரூ. 2 க்கும் வழங்கியது! அரசியல் நூல்களை அளித்தது. புதிய புதிய நூல்களைப் படைத்துத் தந்த பெருமையது. தோற்றியவர் வை. கோ (விந்தன்).

**நவயுக பிரசுராலயம் :** *1939*. அரை ரூபாய் விலையில் பிற நாட்டு அரசியல் இலக்கிய நூல்களை அதிலும் 200-250 பக்கப் பெரு நூல்களை அளித்த பெருமையது. நேருவின் 'உலக சரித்திரம்' போன்ற உயரிய நூல்களை வாசகர்கட்கு வழங்கிய அருமையது. மணிக்கொடி சீனிவாசன், தினசரி டி. எஸ். சொக்கலிங்கம் சா. கணேசன் போன்றாரால் தொடங்கப் பெற்றது. காரைக்குடி சித. சிதம்பரஞ் செட்டியாரால் தொடரப்பட்டது. கடைசியில் கட்டிக் காத்தவர்கள் டி.ஆர். அருணாசலம், ராம. அருணாசலம், சித. இராமநாதன். புத்தம் புதிய இலக்கிய வடிவங்களைத் தமிழில் தரவேண்டும் எனும் நோக்கில் எழுந்து செயலாற்றிய நிலையம். பெயருக்கேற்பப் பிரசுரத் துறையில் ஆலயமாகவே இலங்கியது என்று இயம்பலாம்.

**பழனியப்பா பிரதர்ஸ் :** *1941*. ரா. பி. சேதுப்பிள்ளை, ஐயன்பெருமாள் கோனார், மா. இராசமாணிக்கனார், கா. திரவியம், மு. நமசிவாயம், சரவண ஆறுமுக முதலியார், அ. சிதம்பரநாதச் செட்டியார், தி, ஜ. ர, துமிலன், வாண்டு மாமா, பூவண்ணன், அழ. வள்ளியப்பா, தூரன், ரேவதி,

பி. வி. கிரி, எம். வி. வெங்கட்ராம், தி. சு. கலிய பெருமாள், எஸ். மகராஜன், வி. நரசிம்மன், பா. ராமஸ்வாமி, கொத்த மங்கலம் சுப்பு, மணியன், சு. ந. சொக்கலிங்கம், கு. மதுரை முதலியார், கா. மாயாண்டி பாரதி போன்றார் படைப்புக்கள். 'நாட்டுக்கு உழைத்த நல்லவர்' வரிசை, 60, 'அறிவியல் அறிஞர் வரிசை' 20, எழுதுவது எப்படி I, II, மூன்றும் சாதனை. குழந்தைப் பதிப்பகம் என்ற பேரில் மாதம் ஒரு நூல் வெளி யிட்டு குழந்தை இலக்கியப் பணியாற்றியது.

பிரதர்ஸ் : ராயவரம் செ. மெ. பழநியப்ப செட்டியார் (15-2-20), செல்லப்பன். முன்னவர் ஏடது கைவிடாது எப் போதும் புத்தகமும் கையுமாக இளமையில் திரிந்தவர்; அதன் விளைவோ என்னவோ பெரும் புத்தக வெளியீட்டு நிறுவனம் பிறந்தது. ஆறு இடங்களில் ஆல்போல் தழைத்துளது. 1. 14. பீட்டர்ஸ் சாலை, ராயப்பேட்டை. **சென்னை**-*14 (848035)*; கிளைவ் கட்டிடம். தெப்பகுளம். **திருச்சி**-*2 (24160)*, 24அ. சிவசாமி தெரு. **சேலம்**-*1 (65711), 363*, ராஜா தெரு. **கோவை**-*1 (33704)*,23அ.மேலக் கோபுர வாயில்.**மதுரை**-*1* **(***30158***)**, 217அ. பிரெள சாலை. **ஈரோடு**-*1*.

**ஸ்டார் பிரசுரம் :** *1944*. கலா நிலையம் கே. ராஜகோபாலாச் சாரியார், டி. எஸ். ராஜகோபாலன், பி. ஸ்ரீ. ரகுநாதன் முல்லை முத்தையா, விந்தன், பண்டரிநாதன், லட்சுமி நாராயணன், சரஸ்வதி ராம்நாத், எஸ். ஏ. சூசை ராஜா, டி. எஸ். ஜனககுமாரி, அ. கி. ஜயராமன், நெ. சி. தெய்வ சிகாமணி போன்றார் படைப்பாளிகள். இலக்கணம், வைணவ இலக்கியங்கள், நிர்வாக நூல்கள், வைத்திய நூல்கள், மரங்கள், நீதிக் கதைகள், ஒப்பியல் ஆய்வுகள். உலகில் எங்கு புத்தகம் தேவையுள்ளவர்கள் இருந்தாலும் அவர்கட்குத் தேவைப்படும் நூல்களைத் தேடித் திரட்டித் தருவதும், தனிப்பட்ட சிறந்த ஆசிரியர்கள் வெளியிட்டவற்றைப் பரவும் வகை செய்வதுமான் நோக்கில் பாரத புத்தக நிறுவனம், கிளையாகத் தொடங்கி யுளர். புதுமைப் பித்தனின் வெளிவராத கவிதை, நாடகம், கதை, கடிதங்களை வெளியிடுகின்றனர்; திங்கள் தோறும் புதுமைப்பித்தன் குடும்பத்துக்குப் பொருள் தந்து வருகின்ற னர். பண்புப் புத்தக வரிசை என்றும் வெளியிடுகின்றனர்.

உரிமை **கண. இராமநாதன்** (12-5-24) மதகுப்பட்டி 64-66ல் அமைச்சன்' திங்களிதழ் நடத்தியவர். **முகவரி :** 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, த. பெ. 423, சென்னை-5, 844 740.

**தமிழ்ப் புத்தகப் பண்ணை :** 1945. நாமக்கல் கவிஞர் விளக்கேற்றி வைக்க வை. கோவிந்தன் புதுக்கணக்கு எழுத, ராஜாஜி தொடங்கி வைத்தார். முதனூல் நாமக்கல்லாரின் 'தமிழன் இதயம்' ராஜாஜி, டி. கே. சி., கல்கி, வ. ரா., தி. ஜ. ர., டி. எஸ். சொக்கலிங்கம், திரிகூட சுந்தரம் பிள்ளை, நாடோடி, ம. பொ. சி. நூல்கள். திரு. வி. க. மணி விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடிற்று. அரசியல் இலக்கிய நூல்களை வெளியிட்டு எழுத்தாளர்க்கும் தேசியவாதிகட்கும் ஏற்றம் தந்தது. 'ராயல்டி' கொடுக்கும் முறையினைப் பேணியது. அரசியல் நூல்கட்கு முதன்மை தந்தது. சின்ன அண்ணாமலை பொறுப்பர்.

வாயிலில் கரும்பலகையில் நாளும் தொடர் கதையினை எழுதி வைத்துப் படிக்கும் பழக்கம் வளர்த்தது. நூல்களின் பொன்மொழிகளை அட்டையில் எழுதிப் போட்டது. கண்கவர் படங்களுடன் வண்ணமுற நூல்களை வெளியிட்டது. பண்ணையினுள்ளேயே நூலகம் ஒன்றும் நடத்தியது. புகழ்பூத்த எழுத்தாளர்களின் படங்களைத் திரட்டிக் கண்ணாடியிட்டு வைத்தது. காந்தி சிலையினை வைத்து நூல்களைச் சுற்றிலும் வைத்தது; வாசகர்கள் வலம் வருவர். 'இன்றையப் பிரச்சினை' எனும் தொடரில் மாதம் ஒரு நூல் ஒரு ரூபாய் விலையில் வெளியிட்டது. 'தமிழ்ப் பெரியவர்கள்' என்ற சர்ச்சைக்குரிய நூலை வெளியிட்டது. இப்படி 300 நூல்கள் வெளியிட்டார். இப்போது இதனை நடத்தி வருபவர் மூத்த மகன் **கருணாநிதி.** சின்ன அண்ணாமலை 1954 ல் தோற்றிய மற்றொரு வெளியீட்டகம் **சங்கப் பலகை.** கல்கி தொடங்கி வைத்தார். இதன் பொறுப்பேற்றுள்ளவர் இரண்டாவது மகன் **இராமையா.** கீரன், குமரி அனந்தன் நூல்களை வெளியிட்டுள்ளார். **முகவரி :** 28. சாதுல்லா சாலை, சென்னை-17.

**பாரி நிலையம் :** 1946. முன்னணிப் பதிப்பகம். முற்கால-பிற்கால இலக்கியங்கள் அனைத்தும் கிடைக்கும் அருமையது. பாரதிதாசன், கவிமணி, அண்ணா, ராஜாஜி, மு. வ., கு. ர ஜ வேலு, வையாபுரிப் பிள்ளை, கி. ஆ. பெ. விசுவநாதம், மயிலை சீனி, வேங்கடசாமி, வ. சுப. மாணிக்கம், ந. சஞ்சீவி, சோமலெ சோமு போன்றார் நூல்களை வெளிட்டது. 'பாரியால் மு. வ. வும், மு. வ. வால் பாரியும்' ஏற்றம் பெற்றனர். உலக நாடுகள் மாவட்ட வரிசை, புலியூர்க் கேசிகன் மலிவு நூல்கள் போன்றன வெளிக் கொணர்ந்தது. நேர்மை நாணயம் மிக்க பதிப்பகம், திராவிட இயக்க தொடக்க காலப் பாசறை இதுவே. இதுவரை

800 சாகித்ய அகாதமி, தமிழக அரசு, யுனெஸ்கோ, முதியோர் கல்விப் பரிசுகள் பெற்றது.

உரிமையர் : **க. அ. செல்லப்பன்** *1920.* புதுக்கோட்டை மாவட்ட அரிமளம் கு. மதுரை முதலியார் மாணவர். 'நண்பன்' இதழ் நடத்தினார். புத்தக வெளியீடு பற்றிய திரைப் படத்தில் நடித்தவர். மிக இனியர். மகன் அ. செ. செல்லப்பன் (இளம் பாரி) *1939.* கவரிமான், பாப்பா கதைகள், வான் விளக்கு, குழந்தை பொம்மை சிறுவர் நூல்கள் படைத்தவர். இவரின் இன்னொரு மகன் தமிழ் எம். ஏ. பயின்று தமிழ்ப் பேராசிரியர் **முகவரி** : *184,* பிராட்வே, சென்னை-*108.* *(515561),*

**தமிழ்ப் புத்தகாலயம்**: *1946.* தற்காலப் புத்திலக்கியங்களை - புதினங்களை - ஆய்வுகளைப் பாங்காக வெளியிடும் பெற்றியது. பெயருக்கேற்ப ஆலயமே. கு, அழகிரிசாமி, அகிலன், நா. பார்த்தசாரதி, இந்திரா பார்த்தசாரதி, தண்டாயுதம், எழில் முதல்வன், ராஜம் கிருஷ்ணன், சாலை இளந்திரையன், தா. வே. வீராசாமி, கா. சிவத்தம்பி மகரிஷி நூல்களை வெளியிட்டுளது. விஞ்ஞான ரீதியிலான விமர்சன நூல்கள் வெளியிடும் முன்னோடி. ஞானபீட விருது, ராஜாசர் அண்ணா மலை செட்டியார் பரிசுகளை முதன்முதலிலும், சாகித்ய அகாதமியின் 7 பரிசுகளையும், தமிழக அரசின் 12 பரிசையும் பெற்றது. இலக்கியத்தோடு, அமெரிக்கா, ஆடற் கலை, கப்பற் கலை, ஸ்டாலின் நூல்களைத் தந்தது. 600 நூல்கள். அகிலன் நூல்களை வெளியிடுவதற்காகவே 63 இல் பாரி புத்தகப் பண்ணை தொடங்கப் பெற்றது.

உரிமையர் : **கண. முத்தையா 24-5-1914** முகவை மாவட்ட மதகுபட்டி. இந்திய தேசிய ராணுவத்தில் இரண்டாம் லெப்டினண்டாக மூன்றாண்டுகள் பணியாற்றியவர். அணிவது கதரே. கண்டிப்பும் கண்ணியமும் மிக்கவர், தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைச் செயலர் (56-58), பொருளர் (66). இந்தியிலிருந்து, வால்காவிலிருந்து கங்கை வரை' 'பொது உடைமைதான் என்ன?' இரு நூல்களைப் பெயர்த்துள்ளார். தொழிலில் கண்ணியம் காக்கும் பண்பினார். பதிப்பகப் பிதாமகர். அகிலன் சம்பந்தி; அவர் மகன் கண்ணனும் புத்தகாலயப் பொறுப்பாளர். **முகவரி** : 58. டி. பி. கோயில் தெரு, திருவல்லிக்கேணி, அஞ்சற் பெட்டி 411. சென்னை-5. *(843226)*

**இன்ப நிலையம்**: *1947.* லக்ஷ்மி, முல்லை முத்தையா, நாமக்கல் கவிஞர். ம. பொ. சி, தூரன், தூமிலன், சோமலெ. நூல்

கள். குடும்ப - வைத்திய சம்பந்தமான நூல்கள் 'எல்லோரும் இன்புற்றிருக்க இன்ப நிலையப் புத்தகங்கள்!' உரிமை ; **சோம சுவாமிநாதன்** *28-4-22* தேவகோட்டை, ம. பொ. சி. வாழ்க்கை வரலாறு; தலைவர் ம. பொ. சி. கவிஞர் கண்ட ம. பொ. சி. (தொகுப்பு) ம. பொ. சி. பக்தர் **முகவரி** : மயிலாப்பூர், சென்னை-4. *(73351)*,

**பழனி பிரசுரம்** *1948*. அகிலன், அரு. ராமநாதன், அருள் செல்வநாயகம், மு. அண்ணாமலை, மாயாவி, சுகி. சுப்பிர மணியம் நூல்கள், பாடநூல்களும் வினா விடை, பல்கலை வினாத்தாட்களும் வெளியிட்டுளர். புதுக்கோட்டையில் பிறந்து, திருச்சி சென்னையில் பரந்துளது, தோற்றியோர் பெரி. முத்துப் பழநியப்ப செட்டியார், ராங்கியம். **முகவரி**: *3*, பாரதி (பைகிராப்ட்ஸ்) சாலை. திருவல்லிக்கேணி, சென்னை-5.

**பிரேமா பிரசுரம்** ; *1950*. அரு. ராமநாதன் தொடங்கியது. சிந்தனையாளர் வரிசை, அரசியல் நூல்கள், பொன்மொழிகள் வரிசை, சோதிட நூல்கள், பிரேமரத்னம் எனும் முத்திரையில் மாதம் ஒரு நாவல் (ஒரு ரூபாய்) வெளியிட்டது. துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி, ரா. சரஸ்வதி, சிரஞ்சீவி, பி. டி. சாமி, சந்திரமோகன், மேதாவி போன்றார் ஆசிரியர்கள். புராண நூல்களைப் பரப்பிய பெருமையது. பொறுப்பு : **ஆர். எம். ரவி** **முகவரி** : *35*. ஆர்க்காடு சாலை, கோடம்பாக்கம். அஞ்சற் பெட்டி *2351*, சென்னை-*24*. *(420325)*

**பாரதி பதிப்பகம்** *1952*. 'கதைகளில் சிறந்தது, கல்கியின் கதைகள். பதிப்பகங்களில் சிறந்தது பாரதி பதிப்பகம்.' ராஜாஜி கல்கி நூல்களைக் கண்களாகக் கொண்டிலங்கி, பாரதி நூல் களைப் பரவும் வகை செய்து இடையில் சில்லாண்டுகள் ஒதுங்கி யிருந்து இதுபோது ஓங்கி வருகிறது. அண்ணா, கலைஞர், வா. செ. குழந்தைசாமி, வாரியார், மேத்தா, வைரமுத்து, திரிகூடசுந்தரம் பிள்ளை, ஏ. பி. நாகராஜன், ராஜேந்திரன் சுஜாதா . பக்தி, சிறுவர், குடும்ப சோதிட, வைத்திய நூல்கள் வெளியிட்டு வருகிறது. உரிமையர் பழ. சிதம்பரம், பொறுப்பு சித. ராஜேந்திரன். **முகவரி** : *108*, உசுமான் சாலை. தியாக ராய நகர், சென்னை - *17* *(440205)*

**அருணோதயம்** : *1953*. சிலம்பொலி செல்லப்பன், செந் துறை முத்து, ர. சண்முகம், அமுதா கணேசன், குரும்பூர் குப்புசாமி, நாஞ்சில் பி. டி. சாமி, வே. கபிலன், அரசுமணி,

க. பஞ்சாபகேசன், இ. மா. பக்தவத்சலன், இரத்தின சண் முகனார், மாரி அறவாழி, துமிலன், கனிமொழி நூல்கள் சோதிட, வைத்திய, வாழ்வு முன்னேற்ற சிறுவர் நூல்கள். ஒரே சமயத்தில் 20, 30 நூல்கள் என வெளியிடும் சாதனை. 1000 நூல்கள். 78ல் வெள்ளி விழா. '30 ஆண்டுகளில் அருணோதயம்' பதிப்பக வரலாறு பகரும், அருணனே அளித்தது.

**அருணன்** (லெ. அருணாசலம்) 22-12-24. தேவகோட்டை. ஐம்பதுகளில் இதழ்கள் நடாத்தியவர்; அறுபதுகளில் எழுதி யவர். புதுவாழ்வு (நாவல்), நாட்டியக்காரி (சிறுகதை), இல்லற இன்பம், இலக்கியப் பணிகளில் ஈடுபடுத்திக் கொள்ளும் ஏற்றத்தர். **முகவரி**: 3. கௌடியாமடம் சாலை, ராயப்பேட்டை சென்னை-14. (847553)

**வானதி பதிப்பகம்** : 1955. வாரியார், நெ. து. சுந்தர வடிவேலர், ராஜாஜி, கண்ணதாசன், பி. சி. கணேசன், சாண்டில்யன், ஜெகசிற்பியன், தே. ப. பெருமாள், உதயமூர்த்தி தென்னரசு, பி. வி. ஆர், அ. மறைமலையான், சோம. லெ, பரமகுரு, பாலகுமாரன், வாஸந்தி, ஆதித்தர், வி. என். சிதம்பரம், பூததூர் முத்து, பிலோ இருதயநாத், மு. மு. இஸ்மாயில், மகராஜன், ரா. கணபதி, சிவசங்கரி போன்றார் வானதியின் ஆசிரியர்கள். கண்ணதாசன் படைப்புக்களைப் பரப்பும் கேந்திரம். 1000க்கும் மேற்பட்ட நூல்கள் வெளி யிட்டுள புகழ்பூத்த புத்தக நிறுவனம்.

கல்கியின் 'பொன்னியின் செல்வனில்' வரும் 'வானதி' எனும் துணைப் பாத்திரம் இவர் உள்ளம் கவர்ந்தது; எனவே அப்பெயரையே பதிப்பகத்துக்கு இட்டார்; பின் பதிப்பகப் பெயரினையே 5வது பெண் குழந்தைக்கும் வைத்தார்! வான் நதி-ஆகாய கங்கை.

22-5-82இல் **வெள்ளிவிழா**. ஏ. வி. எம். ராஜேஸ்வரி மண்ட பத்தில். **காலை** மணி. கிருஷ்ணசாமி கடவுள் வாழ்த்து, பகீரதன் வரவேற்பு, என். கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமை, மு. மு. இஸ்மாயில் தொடக்கவுரை, ஏகப்ப செட்டியார், ராஜாஜி, கல்கி, ஏ. வி. மெய்யப்பன், ஜெகசிற்பியன், தமிழ்வாணன், கண்ணதாசன், வை. கோவிந்தன், சின்ன அண்ணாமலை படங் கள் திறக்கப் பெற்றன. 'வாழ்த்தும் நெஞ்சங்கள்' வெளி யிடப்பட்டது. 25 வானதி எழுத்தாளர்கட்குப் பாராட்டும் பரிசளிப்பும் நடந்தது ம. பொ. சி, வாரியார் கொண்டு, வி. ஜி. பி. சகோதரர்கள் பாராட்டுரை.

**மாலை** சீர்காழி இறைவணக்கம், திருநாவுக்கரசு வரவேற்பு, வாரியார் தொடக்கவுரை, அறநிலையை அமைச்சர் இராம. வீரப்பன் தலைமை, செட்டி நாட்டரசர் நூலாசிரியர்கட்குப் பொன்னாடை போர்த்தல், பொள்ளாச்சி மகாலிங்கம். 'தெய்வத்தின் குரல்', ம. பொ. சி, வாரியாரின் 'தவம்'; அமைச்சர் கௌசிகனின் 'வளரும் வானதி' வெளியிட்டனர். வாலிவாழ்த்துக் கவிதை வழங்கினார்.

ஜஸ்டிஸ் மோகன், நெ. து. சு, சாண்டில்யன், கி. வா. ஜ, வித்துவான் லெட்சுமணன், சௌந்தரா கைலாசம், சிவசங்கரி பாராட்டினர். எழுத்தாளர் சார்பில் கு. ராஜவேலு, பதிப்பாளர் சார்பில் பாரி செல்லப்பன், விற்பனையாளர் சார்பில் கோவை. மு. வேலாயுதம் பாராட்டும் நிகழ்ந்தது. இரவு பத்மாசுப்பிரமணியம் நாட்டியம்.

**வானதி திருநாவுக்கரசு** : *12-8-1927.* தேவகோட்டை ஏகப்ப செட்டியார் : காளியம்மை. மணம் 49இல்; மனைவி காளியம்மை. மக்கள்: ஆண் 2, பெண் 4. 7 வயதில் பர்மா சென்று படித்தார். ஜப்பான்யுத்தம் குண்டு வீச்சால் 3000 ஏக்கர் பெருங்குடும்பம் ஒருமாதம் நடந்தே இந்தியா வந்தது. தேவகோட்டையில் S. S. L. C பயின்றார்; உடன் பயின்றவர் தமிழ்வாணன். 46இல் தமிழ்ப் பண்ணையிலும், 47இல் 'தியாகி' இதழிலும், பின் 'நவயுக பிரசுராலயத்திலும், அடுத்து வை. கோவிந்தனின் 'அணில்' உதவியாசிரியர். மாம்பலத்தில் தமிழ்வாணனுடன் ஒரே அறையில் தங்கி, 'ஜில் ஜில் பதிப்பகம்' தொடங்கி 'அல்வா துண்டு, கோமாளி, சிரிக்காதே, சுட்டிப் பயல், சுட்டுத்தள்ளு, கதைகளை 4அணாவுக்கு விற்றனர். விடுதலை பெற்றபின் முதல் முறை நேரு சென்னை வந்தார், இரவோடு இரவாக 'நேரு வாழ்க்கை வரலாறு' எழுதி அச்சிட்டு 4அணாவுக்கு இருவரும் ஐலண்டு தீவுத்திடலில் விற்றனர். பின் மிட்டாய்' 'வெண்ணிலா'.

கல்கி தூண்ட, ஆச்சி நகைகளை விற்று 15000க்கு டிரடில் பிரஸ் வைத்தார். அடி. ஆர்மினியன் தெருவில் 'ஹோட்டல் செட்டிநாடு' தொடங்கினார். ஒத்து வரவில்லை. கடைசியாக வானதி பதிப்பகம் வைத்தார். வளர்ந்தார். வீறார்ந்து ஒளிர்கிறார். தோல்வி கண்டு துவளாது, ஊக்கம் முயற்சி, உழைப்பு கொண்டு போராடி, எதிர் நீச்சல் போட்டார். தோல்விகளையே வெற்றி படிகளாக்கி உயர்ந்தார். எல்லாரும் இன்புற்றிருக்க நினைக்கும் நல்லுள்ளம், தெய்வசிந்தனை, ஓயா உழைப்பால் ஓங்கி உயர்ந்தார். பதிப்பகத்துறைச் செம்மலாகச் சிறந்

தார். 'புத்தக வித்தகர்', 'சமய இலக்கியப் பிரகாசமணி', 'நூல் சிறக்கும் சிந்தனையாளர்' போன்ற பட்டங்கள் பெற்ற பேருள்ளத்தர், **முகவரி**: 13. தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை-17 (442810). கிருஷ்ணசாமி தெரு, அபிராம புரம், சென்னை-17 (74344)

**மணிமேகலைப் பிரசுரம்**: 1956. தமிழ்வாணன், லேனா தமிழ்வாணன், இராம சுப்பிரமணியன் நூல்கள். வாழ்க்கை வழிகாட்டு நூல்கள், சட்டம், விளையாட்டு, சுய முன்னேற்றம், மொழிகற்பது, தொழி செய்வது, பாலியல், நோய் பற்றியன, மருத்துவ அறிவுரை, சோதிடம், எண் சோதிடம், கைரேகை, சமையற் கலை, பெண்களுக்குரியன, துப்பறியும் நாவல்கள், அகராதி, வசியம், பிரபலமானவர்களின் முகவரி: படக்கதைகள் போன்ற பயனான நூல்கள். நிர்வாகி **ரவி தமிழ்வாணன்** அஞ்சற் பெட்டி 1447. 4. தணிகாலம் செட்டி சாலை. தியாகராய நகர், சென்னை-17 (442926)

**கலைஞன் பதிப்பகம்**: 1956. ஜெயகாந்தன், இந்துமதி, வாஸந்தி, விட்டல்ராவ், தி. சா. ராஜு, சா. கந்தசாமி, நா. காமராசன், வைரமுத்து, ஆ. மாதவன், பிரதிபா ராஜ கோபாலன், நூல்கள். 81இல் வெள்ளிவிழா. சொந்தக்காரர் **மாசிலாமணி** தஞ்சாவூர், தூய தெய்வீகத் தோற்றத்தினர். சிறந்த கலைஞர், மாசில்லாத மணி. **முகவரி**: 10. ஹென்ஸ்மன் சாலை. தியாகராய நகர். சென்னை-17 (445641)

**வள்ளுவர் பண்ணை**: 1958. நாவலர் பாரதியார், முத்து. ராசாக்கண்ணனார், புலவர். கா. கோவிந்தன், கவிஞர் வாணி தாசன், நா. பார்த்தசாரதி போன்றார் நூல்கள். கால்டுவேலர் ஒப்பிலக்கணம் குறிப்பிடத்தக்கது. சிறுவர் இலக்கியம் பல. தொடங்கியவர். **ந. பழநியப்பன்** இராமச்சந்திரபுரம். மரியாதை ராமன் கதைகள், இராயர் அப்பாஜி கதைகள், தமிழ்நாட்டு அரசர் கதைகள் என்ற மூன்று சிறுவர் நூல்கள் செய்தவர். பொறுப்பாளர் **பழ. வடுகநாதன். முகவரி**: 19. இரண்டாவது பிரதான சாலை. சி. ஐ. டி. நகர். நந்தனம். சென்னை-35 (444291)

**கிருத்துவ இலக்கிய சங்கம்**: 1958. முன்னர் 1818இல் Madras Tract and Book Society என்றிருந்ததே இப்போது சி. எல். எஸ். என நிலவுகிறது. நாவல், இலக்கியம், இலக்கிய ஆய்வு, மருத்துவம், வாழ்க்கை வரலாறு, அறிவியல், பொது அறிவு, நாடகம், பிற மாநிலம், அகராதி, தமிழ் கிருத்துவ

இலக்கியம், சிறுவர் நூல்கள், உடல் நலம், மொழிப்பயிற்சி, திருமறை வகை நூல்கள் எனும் பல்வகையில் பயனான நூல்கள் வெளியிடுகின்றது. ஏ. என். சுவாட்ஸ், பாக்கியமுத்து, டாக்டர் தயானந்தன் பிரான்சிஸ் போன்றாரின் பங்கும் பணியும் கருதத்தக்கன.

'பாதி விலையில் புத்தம் புதிய புத்தகங்கள்' என்றொரு திட்டம் வைத்து நூல்களைப் பரவும் வகை செய்கிறது. 1969 தொடங்கி **'நண்பர் வட்டம்'** நிறுவி நற்றமிழ் வளர்க்கிறது. நோக்கம்: தமிழகத்தில் உள்ள எழுத்தாளர்களையும் வாசகர்களையும் ஒருங்கு சேரச் செய்து கருத்துப் பரிமாற்றமும் இலக்கியத் திறனாய்வும் செய்து புதுப்புது நல்ல படைப்புகள் தோன்ற சூழ்நிலை உருவாக்குவதும் ஆகும். திங்கள்தோறும் ஓர் இலக்கியக் கூட்டம்; ஆண்டுதோறும் தற்கால இலக்கியம் பற்றிய கருத்தரங்கு சனவரியில் நடத்துகிறது. கருத்தரங்கப் பொருள்கள் நூலாகியுள: தமிழ்ச் சிறுகதை - தமிழ் நாவல், கதை பிறந்த கதை, இன்றைய தமிழ் இலக்கியத்தில் மனிதன், விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள், தமிழ் நாவல்களில் மனித விமோசனம், தற்கால இலக்கியத்தில் சாதி வர்க்கப் பிரதி பலிப்பு, இலக்கியத்தில் பெண்கள், தமிழ் நாவல்களில் குடும்ப சக்தி சமுதாய மாற்றம், நூறாண்டு தமிழ் நாவல் தரும் செய்தி போன்றன.

திருச்சி, கோவை, மதுரை, கோடைக்கானல், போன்ற இடங்களில் கிளைகள் கொண்ட இதன் **முகவரி:** அ. பெ. 501. பூங்கா நகர். சென்னை-3. (39,296-297)

**மணிவாசகர் நூலகம்:** 1961. வ.சுப. மாணிக்கம், சுப்பு ரெட்டியார், சேதுப்பிள்ளை, தமிழண்ணல்,சோ. ந. கந்தசாமி, ந.வீ. செயராமன், மெ. சுந்தரம், மா.சு. திருமலை, சு. சண்முக சுந்தரம், சு. சக்திவேல், இரா. சாரங்கபாணி, எழில் முதல்வன் இராம சுந்தரம், இரா. மோகன், நீதிவாணன், ஆறு. இராமநாதன், கி. கருணாகரன்-18 முனைவர்கள்; கி. வா. ஜ, ஜி. சுப்பிரமணிய பிள்ளை, சாமிநாதசர்மா, மார்க்கபந்து சர்மா, மயிலை சீனி. வேங்கடசாமி, பண்டாரத்தார், வி. எஸ். வி. ராகவன்,ப. கோதண்டராமன்,மு. அண்ணாமலை தண்டபாணி தேசிகர், அ. ச. ஞானசம்பந்தம், மது. ச. விமலானந்தம், பிலோ இருதயநாத், முல்லை முத்தையா, மு. வை. அரவிந்தன், அ. லெ. நடராசன், பி. எஸ். ராமையா, எம். வி. வெங்கட்ராம், சமுத்திரம், செந்துறைமுத்து. சோம,

இளவரசு, மு. சதாசிவம், மு. சண்முகம்பிள்ளை - இத்துணை பேரும் இந்நூலக ஆசிரியர்கள்.

உரையாசிரியர்கள், தமிழ் மொழி வரலாறு, மணிக்கொடி காலம், குறிப்பிடத்தக்கன. இலக்கியம், மொழியியல், திறனாய்வு, நாட்டுப் புறவியல், அகராதி, வரலாறு, சிறுகதை, புதினம், மானுடவியல், சுற்றுலாவியல், உணவியல், உடையியல், சிற்றிலக்கியம், திருக்கோயில் எனப் பல்வரிசை நூல்கள் வெளியிட்டு இமாலய சாதனை புரிந்துளது. சாகித்ய அகாதமி, மைய, தமிழரசுகளின் பரிசு பெற்றது. எங்கள் நூல்கள் சிந்தனையாளர்களால் எழுதப் பெற்றவை, சான்றோர்களின் போற்றுதல் பெற்றவை; தமிழியல் அறியத் துணை நிற்பவை, தமிழுக்குப் பெருமை சேர்ப்பவை; சிறப்பான அமைப்பின, சீரான விலையின' எனப் பெருமிதம் கொள்ளும் பெற்றியது: இவ் லட்சியத் தொண்டு நோக்கால் நேரும் இழப்பினை, தொழில் போக்கால் வெற்றித் துணைவன் வழி ஈடு செய்து பீடு நடை போடுகிறது. 86இல் வெள்ளி விழா.

**ச. மெய்யப்பன் :** *(20-6-1933)* இராமச்சந்திரபுரம். நல்ல தமிழறிஞர் குங்கிலியம் பழ. சண்முகம் செட்டியார்: மீனாட்சி ஆச்சி. அண்ணாமலையில் பயின்று (54-57) பி. ஏ, ஆனர்சு பெற்று அங்கேயே அருந்தமிழ்ப் பணிபுரிந்து வருகிறார். கபிலர், தாகூர் (பரிசு பெற்றது), உலகம் போற்றும் இந்திரா. தில்லைத் திருக்கோயில், மதுரை மீனாட்சி, பட்டினத்தார் பாடல்கள், புதிய ஆத்திச் சூடி (பதிப்பு), முனைவர் பட்டத் தலைப்பு: 'தமிழ் நூல் பதிப்பு முறைகள்'. தேனீ போல் உழைத்துப் பம்பரம் போல சுழன்று செயற்படும் சுறுசுறுப் பாளர். எல்லோரும் நல்ல எழுத்தாளராதல் வேண்டும் எனும் நல்லிதயமும், தக்கோரைத் தூண்டி எழுதச் செய்தும். பலரை எழுத்தாளராக அறிமுகப் படுத்தியும் செயற்படும் சிந்தையர். திறம் கண்டு ஆக்கமும் ஊக்கமும் தரும் பரந்த நெஞ்சினர். அரிய நூலகம் வைத்துளார்; வாழ்க்கை வரலாறு மட்டுமே 1000 இருக்கும். பதிப்பாளர்களிடையே ஒற்றுமை - உறவு உருவாக்கும் உழுவலன்பர். ஏனோதானோ என வெளியிடாது எல்லாம் திருந்திய செம்பதிப்புகளாக வெளியிடும் வளமையர். எனவேதான் வ. சுப. மாணிக்கனாரும் கம்பன் அடிப்பொடியும் 'இது தொழில் அல்ல, தொண்டு' என்றேத்தியுளர். **முகவரி :** 12பி, மேல சன்னதி, சிதம்பரம் (799); 89, லிங்கிச் செட்டித் தெரு, 14, சுங்குராம் தெரு. சென்னை-1. (512996);

மது. ச. விமலானந்தம்

28அ. வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-1. 93, பெரிய கடை வீதி, கோவை-1.

**வாசகர் வட்டம்** : 1965. இஃதோர் இலக்கிய வட்டம். அருமையான அச்சமைப்புடன் உயர்ந்த தாளில் சிறந்த அமைப்புடன் பெருமைப் படக்கூடிய அரிய படைப்புக்களைத் தருவது. வ. ரா. வாசகம், விஞ்ஞானத்தின் புதிய எல்லைகள், நடந்தாய் வாழி காவிரி, யாரும் கேளிர் போன்றன குறிப்பிடத் தக்கன. லா. ச. ரா, தி. ஜா. சா. கந்தசாமி, நா. பா, கு.ப.ரா, ந. பிச்சமூர்த்தி, ராஜ நாராயணன், சிட்டி நூல்கள். வெளியிட்டவை ஆண்டுக்கு இரண்டு மூன்று என்று 35 நூற்களே! 'நூலகம்' என்ற திங்கள் புத்தகப் பணியேடு வெளியிட்டது. இதனை நடத்துபவர் தீரர் சத்தியமூர்த்தி அவர்களின் மகள் **லட்சுமி கிருஷ்ணமூர்த்தி. முகவரி** : 14, தணிகாசலம் செட்டி சாலை, தியாகராய நகர். சென்னை-17.

**வைரம் பதிப்பகம்**: 1966. வை. மு. கோ, சாமி. பழநியப்பன், புலவர் வேதா, நாக சண்முகம், அம்பை சங்கரன், பூவை அமுதன், பி. எல். முத்துக்குமரன், வே. கபிலன் நூல்கள், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார் உரை நூல்கள் வெளியிடும் உரிமை பெற்றுத் தனியே குவை பப்ளிகேஷன்ஸ் என வெளியிடுகின்றனர். உரிமை தேவகோட்டை **எஸ். வடிவேலு முகவரி** : 143, பெல்ஸ் சாலை, திருவல்லிச்கேணி, சென்னை-5

**பூங்கொடி பதிப்பகம்** : 1968. ம. பொ. சி, லக்ஷ்மி, பெ. சு. மணி, சங்கரராமன், தமையந்திரன், பட்டுக்கோட்டை ராஜேந்திரன், டேவிட் சித்தையா நூல்கள். சிலம்புச் செல்வர்க்கே சிறப்பு தருவது. 200 நூல்கள். **வே. சுப்பையா** : கல்லலை அடுத்த கல்குலம்; இனியவர், நல்லவர். மகன் புகழேந்தி. **முகவரி** : 14, சித்திரகுளம் மேற்கு மயிலாப்பூர், சென்னை-4.

**பூம்புகார் பிரசுரம்** : 1975. முருக. தனுஷ்கோடி, புலியூர் கேசிகன், பரதன், பரணிதரன், பாக்கியம் ராமசாமி, புஷ்பா தங்கதுரை, துமிலன், கோ. வி. மணிசேகரன், கண்ணதாசன், குமரி அனந்தன், பாவேந்தர், முல்லை முத்தையா, பி.சி. கணேசன், பொன். பரமகுரு, சண்முக சுந்தரம், கா. திரவியம், வல்லிக்கண்ணன், சுஜாதா, சி. பி. சிற்றரசு, கவிஞர் முத்துலிங்கம், தமிழன்பன், ரெக்ஸ், நா. காமராசன், கே.ஏ. அப்பாஸ், தி. சா. ராஜு, இறையரசன், முத்துராமலிங்கன், புதுமைப்பித்தன் இத்தனை பேரும் ஆசிரியர்கள்.

குறள், பாரதி கவிதைகள் கையடக்கப் பதிப்பு குறிப்பிடத் தக்கது. முதல் நூல் 'காமராஜ் ஒரு சரித்திரம்.' நூறாவது 'நியாயத்தைச் சொல்லுகிறேன்.' நாவல், நாடகம், நாட்டுப் புறப் பாடல் கதை, ஆராய்ச்சி, வாழ்க்கைக் கலை, பயண நூல் கள், சோதிடம், கவிதை எனப் பல்வகை நூல்கள். அழகான அச்சு, அருமையானதாள், கண்கவர் கட்டமைப்பு வெளியீட்டுத் துறையில் வனப்பும் பயனும் மிக்க நூல்கள் தந்து வரலாறு படைத்திடும் நிலையம். **பரதன்** தமிழ்ப் பணியில் ஊறிய மர பினர். வெளியீட்டுத் துறையில் வளம் கண்டவர். **முகவரி :** 63, பிராட்வே, சென்னை-108. (514365)

**நர்மதா பதிப்பகம் :** 1978. அசோக மித்திரன், ஆதவன், நீல. பத்மநாபன், ஜெயந்தன், வண்ண நிலவன், மெர்வின், பி. எஸ். ஆர். ராவ், மேத்தா, ஹா. கி. வாலம், கருமயோகி. பி. எஸ். கிருஷ்ணசாமி, கமலா பத்மகிரீஸ்வரன், விட்டல்ராவ், யோகநாதன், காவலூர் ஜெகநாதன், வல்லிக்கண்ணன், நகுலன், டாமினிக் ஜீவா. நூல்கள். புதினம், மருத்துவம், சோதிடம், சுயமுன்னேற்றம், பக்தி, தொழில், தத்துவம், கவிதை போன்ற பல்துறை வெளியிடுகள். 'நல்ல புத்தகங் களுக்காக செலவிடும் தொகை, பன்மடங்கு நன்மை திரும்பத் தரும்' என்ற நம்பிக்கையில் நல்ல நூல்களை நன்முறையில் பதிப்பித்து, வணிக நோக்கு மட்டுமே கொள்ளாது, பயனுள்ள கருத்துக்கள் பரவிடச் செய்யவேணும் எனும் சீரிய நோக்கில், 'நல்ல நூல்களின் மறுபெயர் நர்மதா' என்ற போக்கில் நூற் பணி புரிபவர்கள். உரிமை **இராமலிங்கம்** தஞ்சை **முகவரி:** 10, சோமசுந்தரம் தெரு, வடக்கு உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை-17. (444237)

**திருமகள் நிலையம் :** 1979. கோவிமணிசேகரன், விக்கிரமன், லஷ்மி, சிவசங்கரி, இந்துமதி, செந்துறைமுத்து, முல்லை முத்தையா, அ. கி. ஜயராமன் (சரத்சந்திரா நூல்கள்) நாக, சண்முகம்; மருத்துவ சோதிட குழந்தை நூல்கள் வெளியிடு கின்றனர். திருக்குறளாரின் 'உலகப் பொதுமறை திருக்குறள் உரைவிளக்கம் (பக் 1141) அருஞ்சாதனை. பங்காளிகள்: வலையப்பட்டி அ. இராமநாதன், அ. ம. திருப்பதி. **முகவரி:** 55. வெங்கட் நாராயண சாலை. சென்னை-17.

**அபிராமி பப்ளிகேஷன்ஸ் :** 1979. கலைஞர் கருணாநிதி, புலவர் கோவிந்தன், பாஸ்கர தொண்டைமான், புஷ்பா தங்கதுரை, ராஜேந்திரகுமார் நூல்கள். இதுவரை 150 நூல்கள்.

தொடங்கியவர் வலையப்பட்டி **கா. பனையப்பன். முகவரி:** 307. லிங்கி செட்டி தெரு, சென்னை-

**ஐந்திணைப் பதிப்பகம்:** 1984. புதுமைப்பித்தன், ஜெயகாந்தன், தி. ஜானகிராமன், தொ. மு. சி. ரகுநாதன், மது. ச. விமலானந்தம், ஜான்சாமுவேல், க. ப. அறவாணன், லா. ச. ராமாமிருதம், டாக்டர் பொற்கோ, மகரிஷி, கு. ராஜாராம், டாக்டர். தா.ஏ. ஞானமூர்த்தி, டாக்டர். இ. சுந்தரமூர்த்தி, அ. தட்சிணாமூர்த்தி போன்றோர் ஐந்திணை ஆசிரியர்கள். தொழிலைத் தொண்டாகக் கருதிப் பணியாற்றித் தரமான தமிழ் நூல்களை வெளியிட்டுவரும். இப்பதிப்பகத்தின் சொந்தக்காரர் கவிஞர் ராயவரம் **குழ. கதிரேசன். முகவரி:** 282, பாரதி சாலை, (பைகிராப்ட்ஸ் சாலை) திருவல்லிக்கேணி. சென்னை-5 (845712)

**கனிமுத்துப் பதிப்பகம்:** 1984. திரைப்பட இயக்குநர் எஸ். முத்துராமன் போன்ற . பன்னிருவர் பங்குதாரர். 'புதிதாய் மூன்று புத்தகக் கதிர்கள் பூமியைத் 'தொடுகின்றன' என்ற அறிவிப்புடன் அனுராதா ரமணளின் 'சிறை', 'பாலகுமாரனின் விட்டில் பூச்சி', வாலியின் 'பெரிய புள்ளிகள்' முதல் வெளிமூடுகள். நிறைய நூல்கள் வெளியிட்டதுடன், நிரம்ப நூல்களின் விற்பனை உரிமை ஏற்றுப் பரவுப் வகைசெய்து வருகிறது. தமிழிலே முதன் முதல் 'போட்டோ நாவல்' என்ற புதிய உத்தியை 'ஒரு கோடி ரூபாய்க் கனவு' கமலஹாசன் (விக்ரம்) என்ற நூலினை வெளியிட்டுப் புரட்சிப் புரிந்தது. பெரும்பாலான வாசகர்கள் பயன்பெறுவான் வேண்டிப் 'புத்தகச் சீட்டு' குலுக்கல் முறையினைப் பிரகடனப்படுத்தியுள்ளது.

**சுப. வீரபாண்டியன்:** 22-4-1951. இயக்குநர் எஸ். பி. முத்துராமன் இளவல். மாநிலக்கல்லூரியில் பயிலும் போதே 'புதுத்தென்றல்' என்ற கவிதை நூல் வெளியிட்டவர். முற்போக்குச் சிந்தையர். இலக்கிய மேடைகளிலும் கவியரங்கங்களிலும் பொலிபவர். 'ஐந்தாண்டு (71-75)க் காலத்தில் தமிழ்க் கவிதை-ஓர் ஆய்வு' செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் பணியாற்றி, இதுபோது கௌரிவாக்கம் S. I. V. E. T கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர். 'தூக்கு மேடையில் தோழர் பகத்சிங்' எனும் பரபரப்பான நூலினைப் படைத்துள்ளார், கனிமுத்துப் பதிப்பகத்தின் கதிர் இவரெனலாம். இளந்தமிழ்ப் பேராசிரியருள்

எழுச்சியும் ஏற்றமும் ஊற்றமும் கொண்டவர். இளைஞர்களை ஊக்கி உயர்த்தும் உள்ளம் உடைய ஒப்புரவாளர். **முகவரி:** அம்பாள் பில்டிங், 727. அண்ணாசாலை. சென்னை-6

**அமுத நிலையம் :** கி. வா. ஜ, பி. ஸ்ரீ, க. நா. சு, ரா. அ. பத்மநாபன், எல்லார்வி, ச. கு. கணபதி ஐயர், அனுத்தமா. மாயாவி, பி. எம். கண்ணன், தி. சா. ராஜு, தூரன், மாறி, கள்ளபிரான் பிள்ளை, நூல்கள். முதுகெலும்பு கி. வா. ஜ அவர்கள். சங்க இலக்கிய விளக்கம், திருமுறை திவ்வியப் பிரபந்த மலர்கள், கந்தரலங்காரப் பொழிவு, அபிராமி அந்தாதி விளக்கம், இலக்கிய சமயக் கட்டுரைகள், பாரதி பற்றியன, நாடகம், வாழ்க்கை வரலாறு, நாட்டுப் பாடல், விஞ்ஞானம், வேளாண்மை போன்ற பல்துறை நூல்கள் வெளியிட்ட பெருமையது. 30 பைசாவுக்கு மலிவு நூல்கள் சாதனை. பொறுப்பு **மஹி. முகவரி:** 46. ராயபேட்டை நெடுஞ்சாலை. (அ. பெ. 674) சென்னை-14 (841343)

**அருணா பப்ளிகேஷன்ஸ் :** கவிஞர் கம்பதாசன், அ. வெ. நடராசன், ஔவை துரைசாமிப்பிள்ளை, புலியூர் கேசிகன், வே. கபிலன், தங்கமணி, நாகர் கோவில் கிருஷ்ணன் போன்றார் நூல்கள். ஔவை துரைசாமிப்பிள்ளையின் நற்றிணை விளக்கவுரை, கம்பதாசன் கவிதைகள், நாடகங்கள், கதைகள் குறிப்பிடத்தக்கன. **கே. கே. ஆர். எம். இராம நாதன். முகவரி:** 113. உஸ்மான் சாலை. தியாகராய நகர். சென்னை-17

**மங்கள நூலகம்:** கல்கி, தேவன், எஸ். ஏ. பி. அண்ணாமலை, த. நா. குமாரசாமி, தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், சாவி, ராஜம் கிருஷ்ணன், சோ, குயிலி ராஜேஸ்வரி, தமிழன்பன், கிருஷ்ணா, கா. ஸ்ரீ, ஸ்ரீ, நூல்கள். **முகவரி :** 51. ஜோசியர் தெரு, நுங்கம்பாக்கம். சென்னை-34. (83856)

**சேகர் பதிப்பகம் :** பி. எல். சாமி, மா. ரா. இளங்கோவன், புலவர் குப்புசாமி, ம பொ. சி. திருமலை நடராசன், க. த. திருநாவுக்கரசு, அவ்வை நடராசன், புலவர் வெங்கடேசன், அரிமதி தென்னவன், முத்து. எதிராசன், ஜெகத் ரட்சகன், கோவேந்தன், மது. ச, விமலானந்தம், அரங்க சீனிவாசன் போன்றார் எழுத்தாளர்கள். அறிவியல், வரலாறு, கல்வெட்டு, இதழியல், வாழ்க்கை வரலாறு, கல்வியியல், எழுத்துச் சீர் திருத்தம், மருத்துவம், கவிதை. கதை எனப் பல்துறை நூல்கள்,

திறமான நூல்களைத் தரமான பதிப்பாக வெளியிடும் வளமையது.

**வெள்ளையாம்பட்டு சுந்தரம்** : உழைப்பும் உறுதியும் மிக்கவர். படைப்பாளிகளை மதித்திடும் பெற்றியர். அச்சாக்குபவர்களையும் மெச்சும் மேன்மையர். தக்க நூல்களைத் தகுந்த முறையில் வெளியிடவேணும் என்ற வேணவா மிக்கவர். படைப்புகள்: தாயுமானார், ஞானியார், கல் சொல்லும் கதைகள், கல்விக் கதைகள், கல்விக் கனிகள். நெஞ்சம் உணர்ந்ததை நேர்பட மொழியும் நெஞ்சுரத்தர். கடமை உணர்வும் பொது நல வுணர்வும் மிக்கவர். உயரிய நோக்கும் பரந்த போக்கும் கொண்டவர். வாய்ப்பும் வசதியும் தரப்படுமாயின், வெளியீட்டுத் துறையில் வீறார்ந்து நிற்கும் தக்கார். **முகவரி** : 66, பெரியார் தெரு. எம். ஜி. ஆர். நகர், சென்னை-78.

**அசோகன் பதிப்பகம்** : சிறுவர் நூல்களுக்குச் சிறப்புத்தந்து வெளியிடும் நிலையம். அறிவியலை எளிய தமிழில் இளைஞர்கட்கு அறிவுறுத்தும்வண்ணம் படங்களுடன் வெளியிட்டுள்ளது. த. சலாவுத்தீன், எஸ். சுப்பிரமணியன் அறிவியல் நூல்கள், எதிரொலி விசுவநாதன் நூல்கள் வெளியிட்டுள. உரிமையர். **எஸ். நடராசன்** பேச்சால் கவர்ந்திழுக்கும் கருத்தர். தியானம் பூசனை வல்லார். விரலிடுக்கில் வைத்தே எலுமிச்சம் பழத்தை கண்ணிமைக்கும் கணத்தில் கத்தரித்துக் காட்டும் திறத்தர். **முகவரி** : 121, திருமலை நகர், பெருங்குடி, சென்னை-96. (414342)

**க்ரியா** : புத்திலக்கிய நூல்களை வெளியிடும் வளமார் நிலையம், மௌனி, சா, கந்தசாமி, சுந்தர ராமசாமி சிறு கதைகள், சி. மணி (ஒளிச்சேர்க்கை, வரும் போகும்) பசுவைய்யா (நடுநிசி நாய்கம்) தி. சோ. வேணுகோபாலன் (மீட்சி விண்ணப்பம்) கவிதைகள்; ந. முத்துசாமி (நாற்காலிக்காரர்) நாடகங்கள், நாரணோ ஜெயராமனின் நூல்கள், செல்வத்தின் 'யாப்பும் கவிதையும்' எஸ். எஸ். நாகராஜனின் நெல் சாகுபடி டாக்டர் ஈ. ச. விசுவநாதனின் ஆய்வு நெறிமுறைகள், எஸ். வி. ராஜதுரையின் எக்சிஸ் டென்ஷியலிசம் ஓர் அறிமுகம் போன்ற நூல்களை வெளியிட்டுளது **முகவரி**: Cre-A.23. RH. Staff Quarters. திருமூர்த்தி நகர், சென்னை-34. ராயப்பேட்டை நெடுஞ்சாலை, (பைலட் தியேட்டர் பக்கம்) சென்னை-14.

**நால்வர் நூலகம்** : ரமணீயன், ஜே. எம். சாலி, அண்ணா, மெர்லின், விக்கிரமன், ஹேமா ஆனந்த தீர்த்தன் நூல்கள், சிறு

தொழில் நூல்கள், தின்பண்டத் தயாரிப்பு நூல்கள் வெளியிட்டு வருகின்றனர். உடைமையாளர் **ரமணீயன்** **முகவரி**: 104. கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை. (35727).

**ராஜ்மோகன் பதிப்பகம்** : விளையாட்டுத் துறை இலக்கியத் திற்கென அமைவது. எஸ். நவராஜ் செல்லையா அவர்கள் நூல்கள், முதன்மை. பொழுதுபோக்கு விளையாட்டுக்கள், அதன் வரலாறு, அது பற்றிய அறிவு நூல்கள், உடற்பயிற்சி நூல்கள், மற்றும் கதை கவிதை நாடகங்கள். மாணவர் மாணவியற்குரிய உடற் கல்வி நூல்கள் - வகுப்பு வாரியாக வெளியிட்டுளர். பொறுப்பு **சாக்ரடீஸ்**. **முகவரி** : 10. ரெங்க நாதன் தெரு. (மாம்பலம் புகைவண்டி நிலையத் தெரு). தியாக ராய நகர், சென்னை-17. (442232)

**பாலாஜி பப்ளிகேஷன்ஸ்** : தமிழ்மட்டும் அறிந்தோர் பிற மாநிலங்களில் சென்று பணியாற்ற, அம்மக்களுடன் பழக தொடர்பு கொள்ள பிற மொழிகளை எளிதே கற்கும் வகையில் '30 நாட்களில்' என்ற பயனான வரிசை வெளியிட்டுளர். இந்திய சட்டங்களைக் கற்கவும் ஒருவரிசை வெளியிட்டுளர். எளிதே இனிதே கற்கும் பயன் நூற்கள் வெளியிடுகின்றனர், பதிப்பர் **ஜானகிராமன்** **முகவரி** : 103, பாரதி (பைகிராப்ட்ஸ் சாலை, ஜாம்பஜார். சென்னை-14 (88731)

**மாருதி பதிப்பகம்** : ஏ. எஸ். மூர்த்தி, வெங்கட்ராவ், புலியூர் கேசிகன், ரவிச்சந்திரன். தஞ்சை குஞ்சிதபாதம், கே. எஸ். லட்சுமணன் நூல்கள். மனோசக்தி, குடும்பத் திட்டம், யோகம், ஜாதகப் பொருத்தம், எண்களின் ரகசியம், இல்லற இன்பம், சாமுத்திரிகா லட்சணம், ஆண்-பெண் மனம் பற்றியன. பதிப்பு **வி. ஸ்ரீதரன்**; பொறுப்பு **வி. பார்த்திபன்**. **முகவரி** : 173, பீட்டர்ஸ் சாலை, ராயப்பேட்டை, சென்னை-14 (87453)

**இமயப் பதிப்பகம்** : தோற்றியவர் தோ. ந. வீரராகவன். இவரும் நூலாசிரியர், நல்ல எழுத்தாளர். தரமான நூல் களைத் திறமாக வெளியிடுபவர்கள். சிறுகதை, நாவல், வாழ் வியல் நூல்கள் படைத்தளிக்கின்றனர். கடலோரததில் கடை இருப்பினும், கருத்தான நூல்களையும், கண்ணியமான எழுத் தாளர் தம் படைப்புக்களையும் தமிழுலகிற்கு அளித்து வரு கிறார்கள். பிரபல நாவலாசிரியர்கள், சிறுகதையாசிரியர் களின் பாங்கான படைப்புகளையும் தந்து வருகிறார்கள்.

பொறுப்பாளர்கள்: வீ. பாரதி, வீ. ஜவஹர். **முகவரி :** 20, பெருமாள் தெற்கு வீதி, நாகப்பட்டினம்-611 001.

**மீனாட்சி புத்தக நிலையம் :** 1952. தெ. பொ. மீ. துரை யரங்கனார், அ. ச. ஞானசம்பந்தம், எஸ். ராமகிருஷ்ணன், ஜெயகாந்தன், தி. ஜானகிராமன், புதுமைப்பித்தன், ரகுநாதன், மகரிஷி, லா. ச. ரா, மது. ச. விமலானந்தம், கு. ராஜாராம், தா. ஏ. ஞானமூர்த்தி, ஹம்சா தனகோபால் நூல்கள். இலக்கியத்தரமான நூல்களே! பல்கலைக் கழகப் பாடநூல் களாக அமைந்தன பல.

உரிமையாளர் செ. செல்லப்பன் (5-8-22) அரிமளம். வி. ஆர். எம். செட்டியாருடன் ஸ்டார் பிரசுரத்தில் கூட்டாக இருந்து வெளியீட்டுத் துறையில் வளமை பெற்றவர். **முகவரி :** 60, மேலக் கோபுர வாயில், மதுரை-1. (22971)

**சர்வோதய இலக்கியப் பண்ணை :** பண்பான அறிவார்ந்த சிலர்கூடிச்சிறந்த நூல்கள் எல்லோருக்கும் கிடைக்கும் வண்ணம் உருவாக்கிய வெளியீட்டு விற்பனையகம். வாசகர்களை மதிக்கும் - வருவோரைப் போற்றும் வளமார் நிலையம். தெ. பொ. மீ. மதுரைப் பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் மா. பா. குருசாமி போன்றார் படைப்புகள் கிடைக்கும் நிறுவனம். சர்வோதய காந்திய இலக்கியங்களின் கிடைப்பகம். **முகவரி:** 32/1, மேல வெளி வீதி, மதுரை-1

**செல்வி பதிப்பகம் :** 1954. வ. சுப. மாணிக்கம், மா. ராச மாணிக்கனார், முடியரசன், அழ வள்ளியப்பா, பெரி. சிவ னடியான், தமிழண்ணல், முல்லை முத்தையா நூல்கள். எண் சோதிடக் கடல் பண்டித. முத்து வேங்கடாசலம் நூல்கள். 'படிக்கப் பயன் தரும் பயிலச் சுவை தரும் புத்தகங்கள்' வண்ண முற வெளியிட்டவர்கள். வள்ளல் அழகப்பர் குத்துவிளக் கேற்றித் தொடங்கி வைத்தது. உரிமை **வீர. சிவராமன்; முகவரி** செக்காலை சாலை, காரைக்குடி - 623 001 (424).

**அழகுப் பதிப்பகம் :** 1959. ராய. சொ, முத்து. கணேசன் நூல்கள் வெளியிட்டது. உரியவர் **பள்ளத்தூர் க. முத்து முகவரி:** அம்மன் சன்னதி, காரைக்குடி.

**மெய்யம்மை பதிப்பகம் :** 1978. அன்னை மீனாட்சி அறக் கட்டளைச் சொற்பொழிவுகளை வெளியிடவும் நல்ல நூல்

களை வெளிக்கொணரவும் தோன்றியது. தோற்றியோர் இராம. பெரிய கருப்பன் (7-9-30) **முகவரி :** திரு. வி.க. இல்லம். 49, ஆறு. ஆ. இராம. வீதி, காரைக்குடி-1.

**அன்னம்-அகரம் :** 1973. கவிஞர் மீரா நண்பர்களுடன் இணைந்து தொடங்கியது; 60க்கும் மேலான பங்குதாரர்கள் கொண்டது. ஆங்கில மொழி உலகில் பெங்குவின், பெலிகன் வெளியீடுகளைப் போன்று தமிழ் உலகில் தரமான நூல்களைத் தரவேண்டும் எனும் தலையாய நோக்கத்தது: புதிய தமிழுக்குப் புகழ் சேர்க்கும் புதுக்கவிதை, சிறுகதை, புதினம், திறனாய்வு எனும் பல்துறை நூல்கள் வெளியிடுபவர்கள். 200 நூல்கள். படைப்பாளர்களின் சரணாலயம். **முகவரி :** 2, சிவன் கோவில் தெற்குத் தெரு, சிவகங்கை 623560. கிளை: 13/3, எல். கே. எஸ். கட்டிடம், திருச்சி-8.

**விஜயா பதிப்பகம் :** 1977. முதல் நூல் மேத்தாவின் கண்ணீர்ப் பூக்கள், அடுத்தது 'ஊர்வலம்' தரமான நூல்களை மட்டும் விற்பது - வெளியிடுவது எனும் கொள்கையது. தோற்றுநர் : **மு. வேலாயுதம்.** மதுரை மேலூர். ரங்கைய கவுடர் வீதியில் பலசரக்குக்கடை விற்பனையின் போது பில்லில்- கவரில் பொன் மொழிகள் அச்சடித்தவர். மனித நேயம், எதையும் சாதிக்கும் எனும் உறுதியர். முதன் முதல் வாசகர் திருவிழா எடுத்தவர். சிற்றூர் பேரூர் தமிழகம் தாண்டிய பெருநகர்களிலும் புத்தகக் காட்சிகள் அமைத்தும், இலக்கிய விழாக்கள் எடுத்தும் சாதனை புரிபவர்.

படைப்பாளிகட்கும் பேரறிஞர்கட்கும் பெருமதிப்பு உண்டாக வேண்டும்; பிற பொருள் சேர்ப்பது போல ஒவ்வொரு வீட்டிலும் நூலகம் அமைக்கவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட வேண்டும் என வேணவா கொண்டவர். மாவட்டம்தோறும் இலக்கிய கர்த்தாக்களை மேடையில் தோன்றச் செய்து வாசகர்கட்கு அறிமுகப்படுத்திப் பிரபலப் படுத்த வேணும் என்ற விடுதலறியா விருப்புடையவர். கீழ்த் தளத்தில் புத்தகக் கடையும், நடுத்தளத்தில் கூட்டம் நிகழ்த்த வளமனையும், மேல் தளத்தில் வெளியூரினின்று வரும் எழுத்தாளர்கட்கு வாடகை இன்றித் தங்க அறைகளுமாக ஒரு மாளிகை எழுப்பும் எண்ணத்தர். உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் கொண்ட நல்லவர் வல்லவர், செயற்படு சிந்தையர் **முகவரி:** 6. ராஜ வீதி கோவை-1 (23214); கிளை: 108. அசோகா பிளாசா. டாக்டர் நஞ்சப்பா சாலை, கோவை 18

# கடிதஇலக்கியம்

எட்ட இருக்கும் போது இதய எண்ணங்களை எழுத்தில் அமைத்து அனுப்புவதே கடிதம். இதனை மடல், முடங்கல் எனவும் இயம்புகிறோம். கடிதம் எழுதுவது ஒரு கலை. செய்திகளை வறட்சியாக வரட்டுத்தனமாக, கோழி சிதைப்பது போலக் கிறுக்கித் தள்ளுவது கடிதமல்ல; எண்ணங் களை வண்ணமுற வடித்தெடுத்துத் தருவதே கடிதம். இதில் தற்சார்புக் கடிதங்கள் (Personal and Subjective Letters) ஒரு வகை: இதனால் அவ்விருவருக்கே தவிர, பிறருக்கு ஏது பயனு மில்லை! ஆனால் தற்சார்பிலாத (Objective Letters) கடிதங்கள் எல்லோர்க்கும் எக்காலத்திற்கும் பயன்படும். நாடு மொழி இனம் கல்வி இன்ன பிற பொதுப்பொருள் பற்றியன அவை. தனி ஒருவரால் எழுதப்படினும், யாவருக்கும் பயனாகும் பொதுமை நலம் சான்ற இலக்கியமாகிறது.

கட்டுரையாகக் கருத்துக்களை நேரடியாகத் தருவதைவிட அவற்றைக் கடித முறையில் கழறுவதால் ஒரு கவர்ச்சியும் சுவை யும் பெறுகிறது. எனவே இஃதோர் உத்தியாகக் கொண்டு உள்ளக் கருத்துக்களை உணர்த்திவிடலாம். அப்படி அமைந்த புகழ் பூத்த மடல்கள் சில: நேரு, மகள் பிரியதர்சினிக்கு எழுதியவை. ஆங்கிலத்தில் வில்லியம் கூப்பர், கிரே, வால் போல் செஸ்டர் பீல்டு கடிதங்கள் குறிப்பிடத்தக்கன. லத்தீனில் சிசரோ, ஜெர்மனில் ஷில்லர், பிரெஞ்சில் மதாமெதே செவிஞ் குறிப்பிடத் தக்கோர்.

பிறர் கடிதத்தைப் படிப்பது பண்பாடன்று; ஏனெனில் அவற்றில் தனித்த ரகசியங்கள் இருக்கும். ஆனால் இலக்கியக் கடிதங்கள் இலக்கிய இன்பம் தருவதோடு நாட்டின் நிலை, மொழியின் முட்டுப்பாடு, பண்பாட்டின் பாழ்நிலை போன்றன பேசப் பெறுவதால் படிக்கக் கூடியன-பயன் தருவன. தமிழில் மறைமலையடிகள்-கோகிலாம்பாள் கடிதங்கள், பாரதி-பரலி. சு. நெல்லையப்பர் மடல்கள். வ. உ. சி. கடிதங்கள், ரசிகமணி கடிதங்கள், புதுமைப்பித்தன் கடிதங்கள் எனச் சிலவுள.

சிலம்பில் வரும் மாதவி முடங்கல்கள் இங்கே நினைவு கூரத் தக்கன; காதலனுக்கு எழுதிய மடல்கள் அவன் பெற்றோர்க்கும் பொருந்துமாறு அமைந்த அருமை வேறிலக் கியங்களில் இல்லாதது! நாவலர் ந. மு. வே. நாட்டாரின் 'முடங்கல்,' பண்டிதமணியின் 'கடிதங்கள்' பற்றிய கட்டுரை

களும், இறைவனார் எழுதிய திருமுகப் பாசுரமும் இங்கே இணைத்துப் பயிலத் தக்கன. லயோலா கல்லூரி மு.சு. அருள் சாமி இரு நூல்களும், சொ. சிங்கார வேலனாரின் 'புதுமைக்கு' மடல்களும் நினைக்கத் தக்கன.

'தமிழிலக்கியத்தில் கடித இலக்கியத்திற்குக் கால்கோள் செய்தவர் மு.வ; கட்டடம் எழுப்பியவர் அண்ணா; கை வண்ணம் காட்டுபவர் கலைஞர்' (டாக்டர் மா. செல்வராசன்). இவர்கள் எண்ண ஊர்தியை வண்ண ஊர்தியாக்கியவர்கள்.

**மு.வ :** அன்னைக்கு, தம்பிக்கு, தங்கைக்கு, நண்பர்க்கு என நான்கு கடித நூல்களை அளித்துள்ளார். 'இவருடைய பிற நூல்களின் திறவுகோல் இவையே! பிற நூல்களில் மு. வ. எழுதி வழிகாட்டுகிறார்; கடித நூல்களில் எழுச்சிக்கு வழி கூட்டு கிறார். பிற இடங்களிலெல்லாம், பக்கம் பக்கமாகப் பேசி னாலும், அவர் பக்கத்தில் வந்து பேசுவது போன்ற உணர்வைத் தருவது கடித நூல்களே' (முத்து சண்முகம்). குடும்பம், மொழி, இனம், நாடு, பொருளியல், அரசியல், சாதி, சமயம் என்பன பற்றிய அவர் கருத்துக்கள் மிடைந்து வருகின்றன; நம்மைச் சிந்திக்கத் தூண்டுகின்றன. 'இலக்கிய வாழ்வு இழந்த இன்றைய தமிழனின் வாழ்வினை எண்ணிப் பார்க்கிறார். அவர் எழுதுகோல் வியர்வை சிந்துகிறது. அப்படி முத்தரும்பி யவைதாம் கடித நூல்கள் நான்கும்; அவை தமிழர் ஒவ்வொரு வரையும் நினைத்து அவர் அனுப்பிய பரிசு' (முத்துசண்முகம்). இவரின் கடித இலக்கியம் கருத்திலக்கியமாக நம்மைக் கவர்ந் திருக்கின்றது, கடித விருந்துகளாக அமைகின்றது.

**அண்ணா :** திராவிட நாட்டில் 'தம்பிக்கு' என இவர் எழுதி வந்த நூற்றுக்கணக்கான கடித வகைக் கட்டுரைகள் சிந்தனை யைத் தூண்டி நம்மைச் சிந்திக்க வைத்தன, செயற்படத் தூண்டின. பிற தலைவர்கள் செய்யாத வகையில் தம் கட்சி யினரையெல்லாம் ஒரு குடும்பத்தவராக்கி, பிறரையெல்லாம் தம்பியாக்கி, அன்பால் பிணித்து அரவணைத்து அண்ணன்-தம்பி உறவில் பின்னிப் பிணைத்துவிட்டார். அவை நம்மைக் காந்தம் போல் கவர்ந்திழுத்துவிட்டன; இரண்டறக் கலக்கச் செய்துவிட்டன. 'அண்ணாயியம்' எனக்கு. விவேகானந்தன் ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுளார்.

**கலைஞர் :** தானைத் தளபதி தலைவராக உயர்ந்து தமிழினத் தலைவராகச் சிறக்கிறார். 'உடன் பிறப்புக்கு' என் முரசொலியில் எழுதி உடன்பிறப்பு நேயத்தை உருவாக்கி

விட்டார். எனவே எல்லோர் உள்ளத்திலும் உறைகிறார். காலையில் முரசொலி ஏட்டினைத் தேடுவோர் - தொடுவோர் கலைஞரின் கடித இலக்கியத்துக்காகவே எனலாம். அவை தமிழக வரலாற்றுக் கருவூலங்கள்!

மூவரும் வளர்த்த முடங்கல் இலக்கியத்தினைக் கண்ண தாசன் தொடர்ந்தார். அவசர நிலை முடிந்ததும் இரா. செழியன் இழைத்த மடல்கள் இதயந்தொடுவன. தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஏடுகளில் மடல் இலக்கியத்தைப் பேணி வரைந்து வருகிறார். இப்படித் தனியார் கடிதங்கள் தான்மை மறந்து பொதுமை பெறும்போது இலக்கியங்களாக ஏற்றம் பெற்று விடுகின்றன. தமிழில் தனியொரு இலக்கிய வகையாக வளர்ந்தேறி வரும் கடித இலக்கியத்தை நாமும் பேணிப் போற்றிப் புரப்போமாக!

## ஆய்வியல் தமிழ்

பணியில் இருந்து கொண்டே பண்டாரகர் பட்டத்திற்குப் பதிவு செய்து கொண்டு ஆராய்ச்சி செய்யலாம் என்ற பல்கலைக் கழகங்களின் நெகிழ்ச்சி, மானியக் குழு, கல்லூரி ஆசிரியர்களாக எம். பில். ஆய்வுப் பட்டம் பெற்றாக வேண்டுமென விதித்தமை, ஆராய்ச்சிப் பட்டம் பெற்றோர்க்கு ஊக்கு ஊதியம், ஆய்வுரையினைத் தமிழிலும் தரலாம் என்பன போன்றன ஆசிரியர்களையும் மாணவர்களையும் ஆய்வில் தோயச் செய்தன. அப்படி நிறையப்பேர் முனையும்போது ஆய்வு நெறிமுறைகளை அறிவிக்கும் - ஆராய்ச்சியியலுக்கு ஆற்றுப்படுத்தும் நூல்கள் தமிழில் இன்மை இடராக இருந்தது. அதனை நிறைவு செய்யும் முறையில் நூல்கள் படைக்கப் பட்டன.

ஆ. சதாசிவம் - 'ஆராய்ச்சிக் கட்டுரை எழுதும் முறை' ஆரிய திராவிட பாஷாபிவிருத்தி சங்கம். யாழ்ப்பாணம் (1963); க.ப. அறவாணன்-'ஆராய்ச்சித் தமிழ் ஒரு முன்னுரை' (73); உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 'ஆராய்ச்சி நெறி முறைகள்' (75); ஈ.சா. விசுவநாதன்-'ஆய்வு நெறி முறைகள்' (76); முத்துச் சண்முகம், சு. வேங்கடராமன்-'ஆய்வுக் கட்டுரை எழுதும் முறை' (76); தமிழண்ணல், எம். எஸ். இலக்குமணன் 'ஆய்வியல் அறிமுகம்' (77); சி. ஞானப்பிரகாசம்-ஆராய்ச்சி முறையியல்' (79); மு. பொன்னுசாமி-'ஆராய்ச்சி முறையியல் ஓர் அறிமுகம் (79) ஆகிய எட்டு நூல்கள் எழுந்தன.

எதுபற்றி ஆராயலாம் எனக் கோடிகாட்டவும், இதுவரை ஆராயப்பட்ட தலைப்புகளைத் தெரிந்து கொள்ளவும் Disser-

tations on Tamilology என டாக்டர் அன்னிதாமஸ் உருவாக்கி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அரிய நூல் (77இல்) வெளியிட்டது. மதுரைப் பல்கலைக் கழகம் (Intensive Course in the Methelology of Research என 74 மே,75 திசம்பரில் நடத்தியது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் Inter disciplinary கருத்தரங்கு நடாத்தியது.

இதுகாறும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற தலைப்பு, ஆண்டு, ஆய்வர் போன்றன அறிய, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 77இல் வெளியிட்டுள்ள Dissertations on Tamilology உறுதுணையாகும். 70க்கு முன்-பின் பட்டம் பெற்றோர் என இரண்டாகச் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுளது. கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையின் ஆய்வு மலர் ('72), ஆய்வுத் தொகை 2'(74); டாக்டர் முருகரத்தினம் Bibliography of Dissertations on Tamilology. Journal of Tamil studies vol 1, No 2, (69), நூலக இயக்குநர் தில்லை நாயகம் A Bibliography of Doctoral dissertations accepted by Indian Varsities 1857-1970 போன்றன துணை புரியும். இவை எடுக்கப்பட்ட தலைப்புகளையும் எடுக்கக்கூடிய தலைப்புகளையும் எடுக்க வேண்டிய துறைகளையும் முறைகளையும் தெளிவுபடுத்தும்.

### சொல்லடைவு —Index

ஓர் இலக்கியத்தில் ஒரு சொல் அந்நூல் முழுதும் எந்த எந்த இடங்களில் பயின்று வருகின்றது, மொத்தம் எத்தனை வகையான சொற்கள் எத்துணை முறைகளில் என்ன பொருள் களில் ஆட்சி பெற்றுள்ளன என்பதனை வடித்தெடுத்து வகுத்தும் பகுத்தும் கூறிவிடுகின்றது. ஒருமுறை ஒருவரோ-ஒரு நிலையமோ பாடுபட்டுச் செய்துவிடுமாயின், பின்னர் எவர் பொழுதும் பாழ்படுதல் இன்றித், தேடித் தவிக்கும் இன்னல் இன்றி உடன் பார்வைக்கு உதவும்.

அங்ஙனம் எழுந்த முதல் நூல் 'திருக்குறட் சொல்லடைவு' சாமி. வேலாயுதம் பிள்ளை செய்தது. கேரளப்பல்கலைக்கழகம் சங்க இலக்கியங்களில் பெரும் பகுதிகட்குச் செய்து முடித்து விட்டது. பதினெண்கீழ்க் கணக்கில் 10க்கும் சிலம்பு, கம்ப ராமாயணம், பெரியபுராணம், முத்தொள்ளாயிரம், குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற் பள்ளு, தொ. நன்னூல், வீர சோழியம், யாப்பருங்கலக்காரிகை, இறையனார் களவியல்,

சிவஞான போதம், மீனாட்சி பிள்ளைத் தமிழ், 9, 11 ஆம் திருமுறைகளில் பெரும்பாலான, கண்ணன்பாட்டு, பரமார்த்த குரு கதை, நீதி நெறி விளக்கம், நாச்சியார் திருமொழி, பெரிய சிறிய திருமடல்கள் இத்துணைக்கும் சொல்லடைவு வந்து விட்டன. அண்ணாமலை, சென்னைப் பல்கலைக் கழகங்களும் செய்துள-ஆராய்ச்சி மாணவர்கள் வழி. இதுபோது தமிழ்ப் பல்கலைக் கழகமும் இப்பணி புரிகிறது, கணிப்பொறி துணை யுடன்.

ஆய்வாளர்கட்கு இஃதோர் வரப்பிரசாதம். இதனால் இனி இடைச் செருகலோ பாடபேதங்களோ உருவாகவும் வழி யில்லை! செய்யுள் எண்ணிக்கையில் கூடுதல் குறைதலும் நிகழாது! கட்டுக் கோப்புக் குலையாதிருக்கும்.

## நடையியல் Stylistics

செய்யுளை ஈராயிரம் ஆண்டுகளாகவும் உரைநடையினை ஒருநூறு ஆண்டுகளாகவும் பயன்படுத்தி வந்த—வரும் நாம், அதன் நடை பற்றிக் கண்ணோடினோம் இல்லை. கருத்துச் செலுத்தினோம் இல்லை. ஏனோ அத் திக்கின் பக்கம்கூட அடி எடுத்து வைத்தோமில்லை. இக்குறைபாட்டினை டாக்டர் நீதி வாணன் அவர்கள் முதன் முதலாக முறையோடு அணுகி வகை யோடு ஆராய்ந்து ஒரு நெறிநூல் நன்கமைத்துத் தந்தார் - 'நடையியல்' என்று. இவரின் முன்னம் 74ல் மு. சதாசிவம் என்பார் அண்ணாமலையில் எம். லிட். பட்டத்திற்கு Studies in stylistics எனக் கபிலரின் குறிஞ்சிக் கலியை வைத்து ஆராய்ந் துள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது. 73 ல் Stylistics and style in Pattuppattu-கார்த்திகேயினி.

டாக்டர் இ. சுந்தரமூர்த்தி 'நடையியல் அறிமுகம்' என் றொரு நூலையும், நடையியலை வைத்து ஆயும் முறையில் 'திருக்குறள் நடையியல்' 'பாரதி நடையியல்' என்ற நூற்களை யும் நமக்களித்துள்ளார். டாக்டர் ரபிசிங் அண்ணாவின் மொழி நடை, டாக்டர் இரா. மோகன் பண்டிதமணியின் நடைநயம் போன்றன படைத்து இத்துறைக்கு ஆக்கம் அளித் துளர். கருத்தரங்க உரைகளாகவும் கட்டுரைகளாவும் மு. வ., அகிலன் பற்றி வந்துள. எழில் முதல்வனின் புதிய உரை நடை ஒரு புது வரவு.

## வாழ்வியல் தமிழ்

வாழ்க்கை ஒரு கலை. அரிய மானுடவாழ்வினை வறிய வெற்று வாழ்வாக்காது, பயனுறு பெருவாழ்வு வாழ்தல் வேண்டும். இதனைத்தான் 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல்' என்றார் வள்ளுவர். 'தன்னைத்தான் உயர்த்தி நிறுத்துவானும் தன்னைத்தான் தாழ்த்துவானும் தான்' என்கிறது நாலடியார். Life is yours - Make it or Mar it என்றார் சின்மையானந்தா. சோற்று வாழ்வு சொத்தை வாழ்வு; அது விலங்கு வாழ்க்கை. வெந்த சோற்றைத் தின்று பத்தோடு பதினொன்று அத்தோடு இதுவொன்று என நொந்து மடிவதும், பாரதி பாடினானே 'தேடிச் சோறு நிதந் தின்று பல சின்னஞ் சிறு கதைகள் பேசி... வாடி மடியும் வேடிக்கை மனிதராய் மறைவதும்' உயரிய மானுடப் பிறப்பின் உறுநோக்கம் அன்று.

Every man is an infinite என்றார் விவேகானந்தர்; Oh what a fine piece of work mankind is என்றார் சேக்சுபியர்; அரிது அரிது மானிடராதல் அரிது என்பார் அவ்வை. படைப்புக்களில் மகுடமான, உயிரினங்களின் உயர் முடிமணியான மாந்தன் உன்னத வாழ்வு வாழ்தல் வேண்டும். மன்னா உலகில் தன் புகழ் நிறீஇ மாய்தல் வேண்டும். எனவேதான் தோன்றிற் புகழோடு தோன்றுக-இன்றேல் மண்ணுக்குப் பாரமாகச் சோற்றுக்குத் தண்டமாகத் தோன்றாமை நன்று என்கிறது தமிழ் மறை.

ஒருவன் எல்லோருக்குமாக வாழ்வதே வாழ்வு. மற்றது வீழ்வு. மண்ணில் நல்லவண்ணம் வாழலாம். மனிதப் பிறவியும் வேண்டும் மானிலத்தே என்றனர் சமயக் குரவர்கள். தனக்காகவும் (Self centered) தன்னலத்தோடும் (Selfish) வாழ்வது பேய் வாழ்வு! எனவே நல்வாழ்வு-உயர்வாழ்வு வாழ்வது நம் கடன். சிலர் பெருநோக்கிற்காகப் பிறப்பெடுத்தும் சோம்பியும் தூங்கியுமே (Sleeping sickness) கழிக்கின்றனர். இதற்கு இவர்கள் பிறக்காமலே இருந்திருக்கலாம்!

இவற்றையெல்லாம் நிலைபெறக்கொண்டு வாழ்வினை ஒரு கலையாக வாழ்ந்து காட்டிடச் செய்யும் வண்ணம் வழிப்படுத்தும் வளமார் நூல்கள் வண்டமிழில் விளைந்துள. இத்துறையில் முன்னோடி இசுலாமியப் பெரியார் ஜனாப் எம். ஆர். எம். **அப்துல் றகீம்**. முதன்முதல் வாழ்க்கை நூல்கள் வரைந்தவர்; இன்றும் எழுதி வருபவர்-முத்தாரத்தில். வாழ்க்

கையில் முன்னேறுவது எப்படி? வாழ்க்கை வாழ்வதற்கே, வாழ்க்கை ஒரு கலை போன்றன படைத்தவர். அதிகம் எழுதி அடுத்த இடம் பெறுபவர் **பி. சி. கணேசன்**. உன்னையே நீ அறிந்துகொள், மனிதன் எப்படி வாழ வேண்டும்? வாழ நினைத்தால் வாழலாம்; மனமே வெற்றிக்குத் திறவுகோல்; செல்வாக்கு, நினைவாற்றல், தன்னம்பிக்கை, மன அமைதி, மகிழ்ச்சி, முதன்மை-பெறுவது எப்படி? கவலை, தாழ்வு மனப் பான்மை களைவது எங்ஙனம் என்றெல்லாம் 40 நூல்கள் தீட்டியுள்ளார். **பி. எஸ். ஆர். ராவ்** (உயர்வு உன் கையில், உழைப்பு உயர்வு தரும்), **மெர்வின்** (உயர்வு உன்னிடமே, முயற்சியே முன்னேற்றம், நல்ல எண்ணம் நன்மை தரும், வாழ்க்கை உன் கையில்), **கர்மயோகி** பி. எஸ். கிருஷ்ணசாமி (சுய முன்னேற்ற வழிகள், வெற்றிக்கு வழிகள்) வை. சண்முக சுந்தரம் (நல்வாழ்வு).

**தமிழ்வாணன்** இத்துறையில் ஏற்றம் பெற்றொளிர்கிறார். 'கல்கண்டு' மூலம் கருத்துரைகள் கொட்டித் தந்த இவர் நூலாகக் கட்டித் தந்தவை பலவாம். துணிவே துணை, நமக்கு நாமே எதிரிகள், துன்பமே போ, திறமை, மகிழ்ச்சி. புகழ், ஞாபக சக்தி - பெறுவது எப்படி என்றும்; கோபம், பயம், பிரச்சனைகள் - போக்குவது எங்ஙனம் என்றும் பல பயனான நூல்கள் படைத்து நம்மை உயர்த்தி உருவாக்கியுள்ளார்.

வ.உ.சி. மனம்போல வாழ்வு, அகமும் புறமும் போன்றன படைத்துளார். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கா. அப்பாதுரையார், கு பரமசிவம் போன்றாரைக் கொண்டு, சாமுவல் ஸ்மைல்ஸ், ஜேம்ஸ் ஆலன் போன்றோரின் புகழ் நூல் களை எண்ணியவண்ணமே, ஆக்கத்தின் ஆதாரங்கள் எட்டு, வாழ்வின் வெற்றி போன்றனவாகப் பெயர்த்தளித்துளது.

இரத்தின சண்முகனார் வளமான வாழ்விற்கு, தோல்வி களை வெற்றிகளாக்குவது எப்படி, 100 ஆண்டுவாழ, முதுமை யிலும் இளமையோடு இருப்பது எப்படி? எனப் 15 நூல்கள். அரு. சோலையப்பன் (ஆனந்தமாக வாழ 1000 வழிகள்), ர. சண்முகம் (முன்னேற்ற வழிகள் 3000) போன்றன சில.

**மு. முத்துக்காளத்தி** : *16-10-1936*. பச்சையப்பனில் தமிழ் எம். ஏ., பயின்றவர். டாக்டர் மா. இராசமாணிக்க னாரின் மருகர்; டாக்டர் சிவஅரசியின் கணவர். தமிழக அரசின் செய்தித்துறை அலுவலராகச் சிறந்து இதுபோது

'தமிழரசு' இதழகத்தில் அலுவலர். பேசுவதெற்கென்றே எழுதுவதெற்கென்றே பிறந்தவர். வாழ்நாளை வளர்ப்பது எப்படி?, திருப்தியாய் இருப்பது எப்படி? சங்கடங்களைச் சமாளிப்பது எப்படி? சிரிப்பூ எனப் பல நூல்கள் படைத்தவர். 'இவர் நூலைப் பார்த்தால் எடுக்கச் சொல்லும், பிரிக்கச் சொல்லும், பிரித்துப் படிக்கச் சொல்லும்; ஒருவரி படித்தால் அடுத்தவரி படிக்கச் செய்யும்; ஒரு நூல் வாங்கினால் அடுத்த நூலை வாங்க வைக்கும். நல்ல கருத்துக்கள் நெஞ்சில் பதித்து நடந்திடச் செய்யும்.' வரிக்கு வரி உதவும் வாழ்வியல் எழுத்தாளர் என்ற வாகை சூடியவர். **முகவரி** கண்ணம்மாள் குடில்' - பதிப்பகம். 12-13 ஐயப்பன் நகர். ராஜ கீழ்ப்பாக்கம். சென்னை-73

**டாக்டர் M. S. உதய மூர்த்தி :** தஞ்சை மாவட்ட விளநகர். அண்ணாமலை எம். ஏ. வேதியியல்; சென்னை எம். எசி. 66இல் அமெரிக்க விஸ்கான்சின் பல்கலைக் கழக மருத்துவ வேதியியல் டாக்டர் பட்டம். இதுபோது விஸ்கான்சின் மாநில மவுண்ட் செனோரியோ கல்லூரி விஞ்ஞானத் தலைவர். தமிழ், தமிழர் தமிழ்நாட்டின்மீது தீராக் காதல் கொண்டவர்.

'தினமணியில் தொடர்ந்து விஞ்ஞானக் கட்டுரைகளும், விகடனில் மனோதத்துவ வாழ்வியல்சிந்தனைக்கட்டுரைககளும் வரைந்தார். இன்று இவரைப் பின்பற்றுவோர் - பயில்வோர் பலர். தமிழ் மாணவர்களும் இளைஞர்களும் இவர்பால் காண் தகு காதல் கொண்டுளர். இவர் எழுத்தால் ஈர்க்கப்பட்டு, நூல்களை நாடித் தேடி வாங்குகின்றனர். ஆயிரக்கணக்கான வாசகர்களை கொண்ட பல்துறை அறிவு மிக்கவர்.

**படைப்புகள் :** எண்ணங்கள், நெஞ்சமே அஞ்சாதேநீ, தட்டுங்கள் திறக்கப்படும், மனித உறவுகள், பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி? தலைவன் ஒரு சிந்தனை, ஆத்ம தரிசனம், நாடு எங்கே செல்கிறது? சிந்தனை தொழில் செல்வம் (சிறந்த படைப்பு, பலரைத் தூண்டித் தொழில் செய்யவைத்த பெருமையது).

'வாழ்க்கை வரைபடத்தை வரைந்து காட்டும் வளமான வாழ்வியல் எழுத்தாளர். இவரின் எழுத்து ஈரத்தில் ஈர்க்கப் படாத இதயங்களே இல்லை எனலாம். சுருங்கிப்போன இதயங் களும் சோம்பிப்போன மனிதர்களும் இவரின் எழுத்தைப் படித்தபிறகு தூரத்தே ஒரு சொர்க்கம் தம்மைத்தேடி வருவதை உணர்வர்' என்கிறார் தேனாம்பேட்டை பா. கோவிந்தசாமி. **முகவரி:** 105 Pigeon Loap. Lafayette. Lousiana 70508 U. S. A.

## கலைச் சொல்லாக்கம்

தமிழ் பயிற்றுமொழி ஆக்கப்பட்டதாலும் ஆட்சிமொழியாக ஏற்கப்பட்டதாலும் அடிப்படைக் கருவியாகக் கலைச்சொற்கள் உருவாக்கும் கட்டாயம் நேர்ந்தது. 1830 அளவிலேயே வந்த பாடநூற்களின் இறுதியில் கலைச் சொற்பட்டி ஆங்கிலச் சொற்களுடன் வெளிவந்தன. இம்முயற்சியின் முன்னோடி - வழிகாட்டி டாக்டர் சாமுவேல் கிரீன் ஆவார். இரண வைத்தியம், கெமிஸ்தம் போன்ற நூற்களையும், இரு கலைச் சொல் அகராதிகளையும் 1867-75இல் வெளியிட்டார். இவர் வகுத்த நெறிமுறைகளே இன்றும் பின்பற்றப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. 88இல் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை 'நூற்றொகை விளக்கத்தில்' 80க்குமேலான சொற்களைத் தந்துள்ளார்.

நடுநிலைப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி, பயிற்சிக் கல்லூரி எனப்படிப்படியே பயிற்று மொழியாக்கப்பட்டமையின், சொல்லாக்கமும் இப் படிநிலைகளிலேதான் பிறந்தது. சென்னை மாகாணக் கல்வி இயக்குநரகம் 1923இல் ஏ. சி. பிராண தாத்திகர ஐயர் தலைமையில் Vernacular Scientific Committee அமைத்தது. இதுவே **முதற்** கலைச் சொல்லாக்கக் குழு. **இரண்டாம்** குழு 32இல். 7500 சொற்கள் ஆங்கில சமத்கிருதமயமாக 10 துறைச் சொற்கள் வெளியிட்டது.

இதனை எதிர்த்துச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் 11-10-1934இல் குழு அமைத்துப் பணியாற்றி 20-9-1936—1-10-1936 வரை சென்னையில் மாநாடு நடத்திற்று. தலைமை விபுலானந்தர்; தொடக்கவுரை சர். சி. பி. ராமசாமி ஐயர். ராஜாஜி, வையாபுரியார், பச்சையப்பன் கல்லூரி அ. முத்தையா, எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை, அ. சீனிவாச ராகவன், தேவநேயப் பாவாணர், அருள்தங்கையா, ரா. பி. சேதுப்பிள்ளை, கோவை டி. சிதம்பரனார், குடந்தை பி. என். நாராயணசாமி ஐயர் வல்லுநர் குழுவினர். 38இல் 9 துறைக்குரிய 10000 சொற்கள் வெளியிட்டது. பள்ளிகளில் பயன்படுத்துமாறு பரிந்துரைத்தது அரசு. செயலாற்றியவர் இ. மு. சுப்பிரமணியப்பிள்ளை. ஒரு போராட்டமே நிகழ்த்தினார்!

**மூன்றாம்** குழு 40இல் கனம் சீனிவாச சாத்திரியார் தலைமையில் அமைத்தது, காங்கிரசு அரசை யடுத்து வந்து ஆலோசகர் ஆட்சி. 25-12-1940இல் பண்டிதமணி தலைமையில்

கூடிய தமிழறிஞர் மாநாடு எதிர்த்துத் தீர்மானங்கள் இயற்றியது. இதன் விளைவாக டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி புதிய தலைவராக்கப்பட்டார். 7-10-1946இல் கோகலே மண்டபத்தில் அந்நாளைய காங்கிரஸ் சூத்திரதாரியான சி. என். முத்துரங்க முதலியார் தலைமையில் ம. பொ. சி. பண்டிதை கிருஷ்ணவேணி, திரிகூட சுந்தரம்பிள்ளை, மயிலை சிவமுத்து, அருள்தங்கையா, மு. வ. போன்றார் வடமொழிக்கலப்பைச் சாடினர். பெரியாரும் விடுதலையில் 'தமிழ்க்கொலையா' 11-10-1946இல் தலையங்கம் எழுதினார். இதன் விளைவாக, இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, அ. முத்தையா, எஸ். ஜி. மணவாளராமானுஜம், புரந்தரானந்தா கூடுதல் உறுப்பினர்களாக்கப் பெற்றனர். 47 சனவரியில் வடசொற்களுக்குப் பதிலாக ஆங்கிலச் சொற்கள் மேலெனக முடிவெடுத்து ஏழுதுறைக்குரிய பட்டியல் வெளியானது.

**நான்காம்** குழு 14-4-1959இல் ஜி. ஆர். தாமோதரன் தலைமையில் கல்லூரித் தமிழ்க் குழுவாக அமைந்தது. 60இல் 12 துறைக்கான பட்டியல் வெளியிட்டது. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் 71இல் பட்ட - பட்டமேற் படிப்பு நிலையில் நூல் உருவாக உறுதுணையாகப் 13 துறைப் பட்டியல் வெளியிட்டது. 58 கோவைத் தமிழாசிரியர் மாநாடு, 63 தென்னிந்திய மொழி புத்தக நிறுவனம், 68, 73, 81, உலகத் தமிழ் மாநாடுகள், 78 மதுரை திராவிடமொழியியல் கருத்தரங்குகளில் கலைச் சொல்லாக்கம் கருதப் பெற்றது.

**கலைக்கதிரின்** பணியும் கொடையும்: 68இல் ஜி. ஆர். தாமோதரன் தலைமையில் புகுமுக, பட்டவகுப்புகட்கான வேதியியல் 3300, இயற்பியல் 3000 சொற்களும்; 77-78இல் 'அறிவுக் கதிர்' எனும் பொறியியல் சொற்தொகுதியும் வெளியிட்டது. 85இல் அடிப்படை-சமூக-பயனுறு அறிவியல் ஒவ்வொன்றிலும் 7 துறை பற்றிய பட்டியல் வெளியிட்டது. 44, 000 சொற்கள் 'கலைச் சொல் அகராதி' தலைப்பில் வெளியிட்டது. காலஞ் சென்ற டாக்டர். க. ரா. கிருட்டிணன் தனி ஒருவராக மருத்துவத் துறைச் சொற்கள் வெளியிட்டமை இங்கே நன்றியோடு நினைக்கத் தக்கது. 81இல் உருவான தமிழ்ப் பல்கலைக் கழகம் 82-84 ஆண்டுகளில் ஆற்றிய அரும் பணி அறிவோம். தோன்றியதும் முதற் செயலாக, அறிவியலில் தமிழ்ப் பயன்பாட்டிற்காக 'அறிவியல் பண்ணை'—அறிவியல் கொள்கை உருவாக்கியது.

ஒன்றை இங்கே உன்னுதல் வேண்டும். இதுவரை ஆன கலைச் சொற்கள் எல்லாம் மொழி பெயர்ப்பு நிலையே; ஆங்கிலம் போன்ற மொழிகளில் ஆக்கப்பட்ட நேர்முறையில் அன்று என்பது குறையே. எல்லாம் பட்டியல்களே தவிர அகராதிகள் அல்ல. இனி வேண்டுவது: திட்ப நுட்பம் சான்ற கலைச் சொற்களைத் தரப்படுத்திச் சீர்செய்யும் விரிவான கலைச் சொல்லகராதிகள் இல்லாக் குறையையும் நிறை செய்ய வேணும்.

'கிராம மக்களிடம் சென்று சொற்களைத் தேடுங்கள்'— நேரு.

## இலக்கணப் பார்வை

இலக்கணம் என்றால் விளக்கெண்ணெய்-இன்னல் பயப்பது என்றிருந்த மருண்ட நிலையினை மாற்றி அதனிலும் ஓர் ஈடு பாடு ஏற்படுத்தி, ஒவ்வோர் இலக்கியத்துக்கும் இலக்கணக் குறிப்புகளும் ஆராய்ந்து அலசும் நிலையும் உருவாக்கினர் டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் கேரள பல்கலைக் கழகத்தில். இதனால் எந்த இலக்கியத்தையும் அக்கு வேறு ஆணி வேறாகப் பகுத்து ஆராயும் பாங்கு பிறந்தது. 70க்கு முன்பே எல்லாச் சங்க இலக்கியங்களுக்கும் இலக்கண ஆய்வு முடிக்கப் பெற்றது.

Grammar of Nattirinai (A. Kamatchi), Kurunthogai (S.R. Krishnambal) Aingurunuru (M.Elayaperumal), Kalithogai (D. Andiappan), Ahananuru (S. V. S), Pathiruppathu (S. Agasthialingom), Pattuppattu (Rm.Sundaram), Cilappathi-karam (S.V.S), Manimehalai (N. Thanumalayaperumal), Grammatical notes on Sangam Litt. (M. Ilayaperumal), Periya-puranam (A. V. Veerasamy), Perungathai (R. Ilavarasu), Tagmemic Gram. of Thirukkural (A. Dhamotharan), Kamba-ramayanam(A.Govindan Kutty). கல்வெட்டுக்களிலும் இலக்கண ஆய்வு நிகழத்தியுள்ளனர்; The Grammar of Early Tamil Inscrip-tions (R. Panneerselvam). இவை அனைத்தும் டாக்டர் பட்டத்துக்குரியன.

Grammar of Muthollayiram(V.K. Krishnaswamy)Kalingathu parani (Florence Catherine), Neethinerivilakkam (K.P, Aravanan), Tamil Vidu Thoothu (P. Chidambaratanu).

Ratchanya yaathrikam (A. Lemual), திருவிசைப்பா திருப் பல்லாண்டு (L. Saratha). முதுகலை ஆய்வேடுகள் இவை. இத்தகு ஆய்வுகள் முதன் முதல் முழுமையாகக் கொணர்ந்த கேரளப் பல்கலைக் கழகத்தினை எத்துணைப் புகழ்ந்தாலும் தகும்.

வெறும் இலக்கிய நயப்பார்வை உணர்வை ஊட்டியது என்றால், இலக்கணப் பார்வைகள் அறிவைப் பெருக்கின. முன்னது இன்புறுத்தியது; பின்னது பயன் தந்தது. ஒரு மொழி யின் 'இலக்கியம் உடல் என்றால், இலக்கணம் குருதி' என்றார் கால்டுவேலர். அந்த வகையில் குருதியோட்டம் கண்டது இந்தப் பார்வை. இரத்தம் செத்தால் உடல் தேறுவது யாங்கனம்? எனவே உழந்தாலும் இலக்கணமே தலை என் போம். மொழி வளர்ச்சி நிலையும் வளமையும் அறியலாம் இப்பார்வையால்.

## மொழியியல் நோக்கு

மொழியியல் கல்வி முனைப்பாக வளர வளர, அதனைப் பெற ஊற்றங்கொண்டு இலக்கியங்களையும் இலக்கணங்களை யும் உற்று நோக்கும் போக்கு உருவானது. கற்றனவற்றைச் செயற்படுத்திக்காண்பதும் கடமையன்றோ? அப்போதுதானே முழுமையுறும்?

**அண்ணாமலையில் :** நற்றிணை (ஆர். நித்திய கல்யாணி), பரிபாட்டல் (சு. ந. கந்தசாமி), இறையனார் அகப்பொருளுரை (காமாட்சி சீனிவாசன்), திணைமொழி 50 (ச. மெய்யப்பன்), ஐந்திணை 70 (கே. எஸ். கமலேசுவரன்), முதுமொழிக் காஞ்சி (டி. எம். ஜெயலட்சுமி), திரிகடுகம் (பி. ஆர். சுப்பிரமணியன்), நான்மணிக் கடிகை (ஏ. அண்ணாமலைப் பிள்ளை,சீனிவாசன்), ஆசாரக் கோவை (இ.பி. திருமலை), ஏலாதி (லலிதா டேவிட்), சிறு பஞ்சமூலம் (மருதநாயகம்), இனியவை—இன்னா 40 (அழ். பழனியப்பன்), பழமொழி (சுப. திண்ணப்பன்), திருக் குறள் (ஏ. பரமேஸ்வரி), திணைமாலை 150 (கே. பழனிச்சாமி) பெரிய சிறிய திருமடல்கள் (சௌந்தரா), குற்றாலக் குறவஞ்சி (நடேசன்), முக்கூடற்பள்ளு (மல்லிகா), காரைக்காலம்மையார் நூல்கள் (எஸ். பரிமளா), பரமார்த்த குருகதை (ஜோசமீன் டோரதி),Tamil Inscriptions (S. Bagirathi, S.V. Shanmugham) A. Linguistic study of Appar Devaram (C. Singaravelan); திருச்சந்த விருத்தம் (ஏ. ஆர். பாண்டி), முதல் திருவந்தாதி

(ந. ஆடியபாதம்), 2ம் திருவந்தாதி (ஆர். தண்டபாணி; வி. மைதிலி), 3ம் திருவந்தாதி (ஆர். பரமசிவம், எம். சுசீலா); திருப்பாவை, நாச்சியார் திருமொழி (ஏ. நளினி), பெரிய திருவந்தாதி(அரங்கசாமி), பெருமாள் திருமொழி (ஆர். பன்னீர் செல்வம்), இராமநுச திருவந்தாதி (விவேகானந்தன்).

**மதுரையில் :** Language of Tolkappiam of Sangam Litt. (T. Natarajan). **சென்னையில் :** Linguistic study of Andal's works (T. Murugarethinam), Language of Inscriptions (V. Jaya kumria). கேரளாவில் : நேமிநாதம் (சி. ராஜேந்திரன்), ஞான உலா (பெல்சிசூரியா),தொன்னூல் விளக்கம் (ஏ.ஜே. காட்வின்) **ஆக்ஸ்போர்டு** பல்கலைக் கழகத்தில் Language of Chola Inscriptions (ஏ. வேலுப்பிள்ளை), **லண்டன்** பல்கலைக் கழகத்தில் கே. கணபதிப் பிள்ளை.

இதனால் இலக்கண வளமை ஏற்படும்; சொல்லாட்சி சொற்கோவை சொற்பொருள் நிலை, அக்கால மொழிவழக்கு அறிகிறோம். இனி பாடபேதமோ இடைச் செருகலோ ஏற் படாது. ஆசிரியரின் நடைநலம் மொழி ஆளுமை இலக்கணப் புலமை உணர முடியும், நமக்குக் கூறுபடுமதி உண்டாம். இலக்கண இடர்கள் நூலாசிரியன் குறைபாடுகள் புலப்படும்.

## ஆய்வடங்கல்

ஆசிரியர்-நூல்கள் பற்றிய முழுவிவரங்களைத் தொகுத்துத் தரும் ஆர்வம் மேலோங்கியுள்ளது. ஒரு நூல் அல்லது ஆசிரியர் பற்றி ஆய்வு நிகழ்த்தும் ஒருவர் முதலில் செய்ய வேண்டிய அடிப்படைப் பணி, அந்நூல் அல்லது ஆசிரியர் பற்றி வெளி வந்த நூல்கள் கட்டுரைகள் கருத்துரைகள் அனைத்தையும் தொகுப்பதே. இது கடும் உழைப்பினை உட்கொள்ளும், காலத்தைக் கரைக்கும். பெருமுயற்சியின் பிள்ளைப் பேறு இது. வந்தவை சில:

சிலப்பதிகார ஆய்வடங்கல் (ஆர். காசிராஜன், கேரளப் பல்கலைக் கழகம்), கம்பன் ஆய்வடங்கல் (சு. சிவகாமி), பாரதியார் ஆய்வடங்கல் (மது. ச. விமலானந்தம்), மு. வ., அகிலன் ஆய்வடங்கல்கள் (சு. வேங்கடராமன்), விந்தன் ஆய்வடங்கல் (வி. அரசு) ஜெயகாந்தன் ஆய்வடங்கல் (ந. அறிவழகன்), ம. பொ. சி. ஆய்வடங்கல் (ப. அன்பு),

ராஜாஜி ஆய்வடங்கல் (விமலன்), An Annotated Bibliography on Modern Tamil Grammars&Tamil Hand books (ஆ.தசரதன்), தமிழியல் நோக்கு நூல் அடைவு (பெ. மாதையன்).

ஓர் ஆசிரியர் புலவர் பற்றி ஆராயவோ ஓர் இலக்கியம் பற்றி அறியவோ மிகவும் பயன்படும். ஆய்வின் முதற்படி விவரம் திரட்டுதல்தானே! இதற்கென ஒவ்வொரு வரும் தேடித் திரிந்து திண்டாடி, பொருளையும் பொழுதையும் கழிக்கும் இடர்ப்பாடின்றி, உட்கார்ந்த இடத்தில் ஒரே பார்வையில் அலுங்காமல் குலுங்காமல் அனைத்து விவரமும் அறிய வழி உண்டாகிறது. எது எது, எங்கு, எப்போது இயற்றப்பட்டது என எளிதே இனிதே பழம் நழுவிப் பாலில் வீழ்ந்தாங்கு விளக்கம் தருகிறது. அன்றியும் நூல்களின் கட்டுரைகளின் பிழிவும் மையக் கருத்தும் தரப் பெறுகின்றன. பார்வை நூலாக மிகப் பயன் பயக்கும் பெட்டகம் எனலாம்.

## வசன வடிவங்கள்

இந்த நூற்றாண்டில் எல்லாம் உரைநடையில் எழுந்தன. உரைநடை செங்கோலோச்சும் காலமாதலாலும், செய்யுளைப் படித்தறிய முடியாதோரும், பாமரரும் படித்துணர்ந்து மகிழும் வண்ணம் கவிதை நூல்களையெல்லாம் வசனத்தில் வடித்தெடுக்கும் போக்கு வந்தது. இதில் வல்லவராகவும் வழி காட்டியாகவும் விளங்கியவர் ந.சி. கந்தையா பிள்ளை (1893-1967). பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, பரிபாடல்,அகநானூறு, கலித்தொகை, கலிங்கத்துப்பரணி, அகப்பொருள், புறப் பொருள் வசனங்கள் வரைந்துள்ளார்.

கருப்பக்கிளர் சு.அ. இராமசாமிப் புலவர் கம்பராமாயணம் வில்லிபாரதம், கந்த விநாயக அரிச்சந்திர புராணங்கள், குறுந் தொகை போன்றவற்றுக்கும், புலவர் அரசு பெரியபுராணம் திருவிளையாடற் புராணம் இரண்டுக்கும் வசன வடிவம் தந்துளர். திருக்குறளுக்கு மு. அருணாசலக் கவிராயரும் குரு சரணாலயரும் வசனம் தீட்டியுளர்.

ஆறுமுக நாவலர் பெரியபுராண கந்தபுராண திருவிளை யாடற் புராண வசனங்கள வரைந்திட்டார். சென்னை இரத்தின நாயக்கர் சன்ஸ் கம்பராமாயணம் (பூவை. கல்யாண சுந்தரர்), கந்தபுராணம் போன்றவற்றுக்குப் பெரிய எழுத்தில் பாரிய வடிவில் வசன நூல் வெளியிட்டுளது. சிலப்பதிகாரம் சிந்தாமணி பெருங் கதைகளுக்குக் கழகம் வெளியிட்டது.

ரம்போலாமாஸ்கரேனஸ் தேம்பாவணி வசனம், கேசவராம சாமி மனோன்மணீய வசனம் குறிப்பிடத்தக்கன. பாடல் களைப் படித்துப் புரிந்து கொள்ள மாட்டாதோர் அதேசமயம் அவ்விலக்கியம் கற்றறிய விழைவோர்க்கு இவ்வுரைநடை நூல் கள் பயன் தரும். மூல நூல்களைப் பயில முற்படுவோர்க்கும் கருவி நூலாகக் கைகொடுக்கும்.

## சுருக்க நூல்கள்

பெரிய நூல்களைப் பயில முடியாதபோது, நேரமில்லா நிலையில் அந்நூல்களின் சுருக்கங்களையும் குறுக்கங்களையும் பயிலும் வகையில் இவை எழுந்தன. மேலை நாடுகளிலும் இத்தகு abridged editions வெளிக் கொணர்வதைக் காணலாம். பெரு நூல்களின் சுருக்கமாயினும் மூலத்தின் முழுமை கெடாத வாறு குறுக்கப்படுகின்றன. வேண்டா-வித்தார வருணனைகள் போன்ற பகுதிகள்தாம் குறுக்கப்படுகின்றனவே தவிர, நல்ல தேவையான கருத்துக்கள் நறுக்கப்படுவதில்லை; கதையோட்டம் சிதைக்கப்படுவதில்லை.

அத்தோடு பெரியவர்கள் மூலத்தை அப்படியே முழுதும் பயில இயலும். சிறியவர்கட்கு மலைப்பும் தோன்றக் கூடாது; அதே சமயத்தில் அவற்றைப் படித்தாக வேண்டும். அதற்கு இது உதவும். மூலத்தை அப்படியே பின்னர் படித்து முடிக்க, இவை முன்னோடிகளாகவே அமைகின்றன. This is only supplimenting not subplanting one; இது உறுதுணையாக அமைகிறதே தவிர ஊறு பயக்கவில்லை என்றுணர வேணும்.

கழகம் இப்பணியினைப் பண்ணியுளது; சிலப்பதிகார மணிமேகலை சிந்தாமணி சூளாமணி வில்லிபாரத சுருக்கங்கள் வெளியிட்டது. உ. வே. சா. மகாபாரதச் சுருக்கம் ஆக்கியுள் ளார். வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார் கம்பராமாயண சாரம் வெளியிட்டார். கந்தபுராண சுருக்கம் வந்துளது. அகத்தியர் தேவாரத் திரட்டு போன்றனவும் இவ்வகையில் அமையும். சுருக்கங்கள் பெருக்கங்களின் குறுக்கங்களே! அவற்றை அடையும் படிக்கட்டுக்களே!

## சொற்பொழிவுகள்

நற்றமிழ் இலக்கியங்களையெல்லாம் சொற்பொழிவுகளாக வடிக்கச் செய்து படிப்போர்க்குப் பகுத்தும் வகுத்தும் அளித்

திடும் போக்குப் பிறந்தது. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்த நற்பணியினை நடத்தியுள்ளது. எட்டுத்தொகை (தனித்தனியே); பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு, திருவிளையாடற் புராண, பெரியபுராண, தமிழக வரலாறு, அரசியலறிவு, சிற்றிலக்கியப் பொழிவுகளை நிகழ்த்தியது. ஒவ்வொரு நூலின் பிழிவையும் சாறாக அருந்தவும், இண்டு இடுக்கு மூலை முடுக்கெலாம் நுண்ணிதின் அறிந்து தெளியவும் அருந்துணை புரிகிறது.

திருப்புகழ் மணி T.M. கிருஷ்ணசாமி ஐயரின் முருகன் பற்றிய தொடர்ப் பொழிவுகள் 'அருள் மணித்திரள்' எனத் தொகுக்கப் பெற்றுளது. கி.வா.ஜ.வின் கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் 10 நூல்களாக வந்துள. ஞானியாரடிகளின் கந்தர் சட்டிப் பொழிவுகள் நூலாகியுள்ளது. சுப. அண்ணா மலையின் திருவாசகச்சொற்பொழிவும், கவி. கா.மு. ஷெரீபின் சீறாச் சொற்பொழிவும் கவனத்துக்குரியன.

சென்னை, அண்ணாமலை, மதுரை, தமிழ்ப் பல்கலைக் கழக அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் தமிழறிஞர் கவிஞர் பற்றிய ஒரு பகுதியை வெவ்வேறு கோணத்தில் - பார்வையில் அலசி ஆராயும் பாங்கின. இவை நூலாகவும் வருகின்றன.

இவ்வகை, நூலினை-புலவரைப் படித்தவர்க்குத் தெளிவும், பயிலப் புகுவோர்க்கு வாயிலுமாக அமைந்து விடுகின்றன. அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்தறியும் பான்மையால், நூலின் நலமும் புலவர் திறமும் புரிய வருகிறது. வகைப் படுத்தித் தருவதால் நமக்கும் தேடும் முயற்சியின்றித் தானே செய்திகள் தெரியவருகின்றன. பல்வகையில் பயன்படுகின்றன இந்தப் பொழிவுகள். செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் அல்லவா?

## விளக்க நூல்கள்

கழக இலக்கியங்களையும் சமயப் பனுவல்களையும் கட்டுரைக் கற்கண்டுகளாகக் கடைந்தெடுத்துத் தந்துளார் கி.வா.ஜ. இனிய பாடல்களை எளிமைப்படுத்தி எல்லோரும் படிக்கும் வண்ணம் சுவையுடன் படைத்துள்ளார். எட்டுத் தொகை நூல்கள் ஒவ்வொன்றிலும் ரசமான கட்டங்களை எடுத்து விளக்கி வரைந்துளார்-'சங்க நூற் காட்சிகள்' எனும் தலைப்பில். அதுபோன்றே திருமுறைகள் 12க்கும் தனித்

தனியே ஆவலை மேவச் செய்து மூலத்தைப் பயிலத் தூண்டும் வண்ணம் 'திருமுறை மலர்கள்' என வழங்கியுள்ளார். பெரும் பாலோர் நெருங்க மயங்கும் சங்க - சமய இலக்கியங்களை இப்படிப் பரவும் வகை செய்த பெருமை இவரையே சாரும்.

தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை சமயக்குரவர் நால்வரின் 'தேவார திருவாசக திருக்கோவையார் ஒளி நெறிகள்' வெளியிட்டு, அடுத்து 'ஒளி நெறிக் கட்டுரைகள் தீட்டினார். இதனால், தேவையான சுவையான தேர்ந்த பகுதிகளை ரசித்து ருசிக்கவும் அவற்றைத் துய்த்துத் திளைக் கவும் திறன் பெற முடிகிறது. இளவழகனாரின் சங்க நூற் கட்டுரைகளும், பிற இலக்கிய இலக்கணங்கள் பற்றிப் பல்கிய கட்டுரைகளையும் கருத்திற் கொள்ளவேண்டும்.

## கருத்தும் காட்சியும்

தமிழ் இலக்கியச் சுரங்கங்களில் வைரங்கள் மண்டிக் கிடக் கின்றன; தமிழ்க் கடலில் முத்துக்கள் ஆழ்ந்து அமிழ்ந்துள; தமிழ்ச் சோலையில் பல வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கிய வண்ணமுள. இப்படிச் சுரங்கங்களில் அகழ்ந்தெடுத்தவரும், கடலில் மூச்சடக்கி மூழ்கி முத்தெடுத்தோரும், சோலையில் சென்று செழுமலர்களைப் பறித்து வந்தோரும், தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என எல்லோரும் படித்து இன் புற்றிருக்க நினைந்து தாம் துய்த்தவாறு தத்தமக்குரிய தனி பாணியில் வாகாக பாகாகப் படைத்தளித்தனர்: கடிய கருத்துக்களைக் கனிவான காட்சிகளாக்கி விடுகின்றனர். அறிவு நிலையினின்று மனத்திரையில் நிழலாட விடுகின்றனர்.

அறுசுவை உண்டியை அன்னை பரிந்தூட்டும்போது ஆறாம் சுவையோடு ஏழாம் சுவையாம் 'அன்பும்' கலந்து இன்புறுத்துமாப் போலே, இலக்கியங்களைத் தம் கற்பனைக் களிநடையோடு கூட்டிக் கலந்து அளித்திடும்போது அமுத மெனப் பரிமளிக்கும்-இதமளிக்கும். அந்த வகையில் நந்தமிழ் நளினங்களை அந்தமில் இன்ப ஓவியங்களாக அளித்துள்ளார் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்.

'குறளோவியம்' 'சங்கத் தமிழ்' இரண்டும் கால காலத் திற்கும் நின்று பேர் சொல்லும் கருத்தோவியங்கள். செறிவு மிகு குறளையும் சங்கப் பாக்களையும் தித்திக்கும் தெள்ளமுதாக தீஞ்சுவைப் பெட்டகமாக என்னமாய் குழைத்தளித்துக் குளிர்

விக்கிறார். குற்றால அருவிபோல் கொட்டுகிறது நற்றமிழ்; விஞ்சுதமிழ் கொஞ்சி விளையாடுகிறது. தமிழ்ப் புலவோர் படைத்திடா வகையில், தேனாகப் பாலாகத் தந்துள்ளார்!

## மருந்தும் விருந்தும்

சங்கப் பாக்கள் அந்நாளில் பழகுதமிழில் பாங்காக அமைந்து இன்புறுத்தியது; அப்போது அவை எளியன. இப்போதோ நுனிப்புல் மேயும் மேம்போக்கான மனநிலையில் அவை கடியனவாகிவிட்டன. கணிதம் பயிலும்போது விளக்கெண்ணெய் போல் கசக்கும்; கற்கடலையாக இருக்கும். ஆனால் ஈடுபாட்டுடன் முனைவோமாயின் களிப்பினை அளிக்கும், அதுபோல் கரடுமுரடானது எனத் தவறாகக் கருதும் சங்க பாடல்களைச் சரியான முறையில் அணுகிப் பயில்வோமாயின் கற்கண்டாக இனிக்கும்.

எட்ட இருந்தால் எப்படி ஒருவரைப் புரிந்து கொள்ள முடியாதோ, அப்படியேதான் நவில்தொறும் நூல் நயமும். அந்த வகையில் பயில்முறை அறியும் பாங்கில் பைந்தமிழ் இலக்கியங்களை எல்லோரும் பயின்று துய்க்குமாறு முனைவர் மு.வ. அறிமுகம் செய்துள்ளார். மருந்தென நாம் மயங்கும் அவற்றை, விருந்தாக அளித்தும் செல்வங்களாக வழங்கியும் நம் சிந்தை கவர்ந்துளார். நற்றிணை, குறுந்தொகை, நெடுந்தொகை விருந்துகள்; நற்றிணை குறுந்தொகை நெடுந்தொகைச் செல்வங்கள். கவியோகி சுத்தானந்த பாரதியார் சிலம்புச் செல்வம் செய்துள்ளார்.

## சிந்தனை வரிசை

நூல்களைப் பகுப்பதும் வகுப்பதும் பட்டியலிடுவதும் யாரும் செய்யக்கூடியது; இது அகலப் படிப்பு, எவருக்கும் இயல்வது. ஆனால் இலக்கியங்களையோ இலக்கணங்களையோ ஆழ்ந்து தோய்ந்து ஊன்றி நின்று உரத்துச் சிந்தித்தாலன்றோ புதுக் கருத்துக்கள் பொங்கும்; பிறருக்குத் தோன்றாத எண்ணங்கள பிறக்கும். சிந்தனை மேடையும் அரங்கமும் வந்தபின் அதன் செல்வாக்கு இலக்கியங்களையும் எட்டிப் பார்த்தது. சிந்தித்தாலன்றோ சிறந்த கருத்துக்கள் சீரிய முத்துக்கள் முந்தி வரும்; அப்படியின்றி அரைத்த மாவையே அரைத்தும் வார்த்த தோசையையே மீண்டும் வார்ப்பதால் ஆவது என்? ஏது மில்லை! எனவே மூளைக்கு வேலை கொடுத்து உழைத்து

வருந்தினால்தான், வற்றா ஊற்றுக்கள் கண் திறக்கும் என்ற ஆர்வம் பிறந்துளது. இதன் பயனாக சிந்தனை நூல்கள் வந்த வண்ணமுள.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் முனைவர் வ. சுப. மாணிக்கனார், கூர்த்த மதியுடை ஆறு. அழகப்பர் முனைவால் தமிழ்த்துறை ஆசிரியர்கள் கொண்டு, தொல்காப்பியச் சிந்தனைகள், திருக்குறட் சிந்தனைகள், சிலப்பதிகாரச் சிந்தனைகள், மணிமேகலைச் சிந்தனைகள், இலக்கியச் சிந்தனைகள், இலக்கணச் சிந்தனைகள் என விரைந்து செய்து முடித்துவிட்டது (exhausted) என்றே இயம்ப வேண்டும். இப் போக்கால் நுட்பங்கள் திட்பமுடன் வெளிப்பட்டுள; கருத்து வேறுபாடுகள் கிளைத்துள. பயனான படைப்புகள். மேலும் சிந்தனையைத் தூண்டுவன. அறிவுக்கு விருந்தாகும் வகையின இவை. மொழியியல் சிந்தனைகளும் முளைத்துள.

## புலவர் வரிசை

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மிகுபயன் தரும் - என்றும் இன்றியமையாத, எப்போதும் உதவும் ஓர் அரும் சாதனை புரிந்துளது. புலவர் கா. கோவிந்தனைக் கொண்டு சங்ககால அரசர் வரிசை (2) சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை (6) எழுதச் செய்தது. சங்க இலக்கியங்களை ஒவ்வொன்றாகத் தேடித் திண்டாடாது, சலித்தெடுத்து வார்த்துத் தந்து விட்டது. இதன் நற்பயன் கண்டு, சு. அ. இராமசாமிப் புலவ ரின் அருமுயற்சி பேருழைப்பின் பயனாக தமிழ்ப் புலவர் வரிசை (10 பகுதி), தமிழ்ப் புலவர் அகர வரிசை எனப் பல தொகுதிகளை அளித்துளது.

புலவர்கள் பற்றியதுதானே எனப் பொருட்படுத்தாது போய்விட முடியாது. நெடுக்கிழை போல் புலவர் பற்றி அறிந் தாலும், குறுக்கிழைகள் போல் அவ்வக்கால இலக்கிய நிலைகள், நூல்கள், சமகாலப் புலவர்கள், இலக்கிய வகைகள், பெயர்ப்புகள், ஆய்வுகள் எனப் பலப்பல பயனான செய்திகள் சிறுதுளிப் பெருவெள்ளம் போல் மண்டிக் கிடக்கின்றன. தமிழறிஞர்கட்கும் ஆராய்ச்சியாளர்க்கும் அரிய செய்திகள், புதிய உண்மைகள் புலப்படும். இந்த அரிய வரிசையை அளித்த கழகத்திற்கு முக்காலும் நன்றி பாராட்டத்தான் வேண்டும். அத்துணை அளப்பரிய கருவூலமாக-சுரங்கமாக அமைகின்றன இவ்வரிசைகள்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை ஆசிரியர்கள் தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் இரு பகுதிகள் உழைத்து உருவாக்கியுளர். மறைந்து மறந்து வரும் புலவர்கள் பற்றிய சிதறிக் கிடக்கும் அனைத்துச் செய்திகளையும் அரிதின் முயன்று தொகுத்தளித்துளர். இந்த வரிசைகள் ஒருவகையில் தமிழிலக்கிய வரலாறுகள் தாமே!

## தமிழியல் (Tamilology)

தமிழ் என்றால் இலக்கியம் இலக்கணம் இவை மட்டுமே எண்ணுகிறோம். இந்தக் குறுகிய நிலையினின்று நெகிழ்ந்து விரிந்து பரந்து தமிழ் மொழியினுள் அமையும் அனைத்தையும் தமிழோடு தொடர்புடைய எல்லாவற்றையும் தழுவி அமைவதே தமிழியல். எப்படி இந்தியவியல் (Indology) இந்தியக் குடைக்கீழ் அமையும் அனைத்தையும் கருதுகிறதோ, அப்படியே தமிழின் தலைமையில் அடங்குவன யெல்லாம் ஆராய்வதே தமிழியல். தமிழ் என்றால் பரந் துபட்ட ஒரு பெரு மொழி. இதன் ஆட்சியின்கீழ் வரலாறு, கலை, பண்பாடு, மொழி, அறிவியல், ஆட்சியியல், அருளியல் என எல்லாம் இடம் பெறும் - பெறவேண்டும். இப்படி பாரிய நிலையில் தமிழைப்படரச்செய்து, நெட்டிலிங்கம்போல் நீண்டு வளர்ந்து இலக்கியஇலக்கணம் என்ற நிலையோடு நின்றுவிடாது எல்லாம் தழிஇய ஆலமரமாக ஆக்கும் நோக்கில் அமைவது இவ்வியல்,

இதற்கெனத் தனித்துறை சென்னை மாநிலக் கல்லூரியில் 70ல் ஏற்பட்டது. டாக்டர் மெ. சு. முயற்சியால், முதல்வர் கலைஞர் கருணாநிதியார் ஆதரவால் இயக்குநராக மெ. சு, அமைந்தார். பின் நின்றுவிட்டது. (வழக்கம் போல!). உலகத் தமிழ் மாநாட்டின்போது 'தமிழியற் காட்சிகள்' கட்டுரைத் தொகுப்பினைப் புலவர் குழு வெளியிட்டது. டாக்டர் க. ப. அறவாணன் Research papers on Tamilology வெளியிட்டார். டாக்டர் ச. வே. சு. Studies in Tamilology, தமிழண்ணல் 'தமிழியல் ஆய்வு' கு. மோகனராசு தமிழியல் கட்டுரைகள், வெளியிட்டுளார். டாக்டர் பெ. மாதையன் 'தமிழியல் நோக்கு நூல் அடைவு' குறிப்பிடத்தக்கது.

இந்நெறியில் ஊன்றி உலவுவோர்: தெ. பொ. மீ. டாக்டர்கள் கா. செல்லப்பன், வை. சச்சிதானந்தம், ச. அகத்தியலிங்கம், இசுரவேல், செ. வை. சண்முகம், தமிழண்ணல், ச. வே, சுப்பிரமணியன், சக்திவேல், சீனிவாச

வர்மா, க. ப. அறவாணன், மெ. சுந்தரம், கமலேசுவரன், கருணாகரன், பொற்கோ, தி. சு. நடராசன், சந்திரசேகரன், இராம. சுந்தரம், கு. மோகனராசு, ஜெயதேவன், அறிவுடை நம்பி, சோமலெ, சிலம்பொலி செல்லப்பன், ராஜாராம் (வரலாறு), மது. ச. விமலானந்தம், முகமது உசேன்.

## தேசிய சிந்தனை

விடுதலைக்கு முன் இந்திய தேசியம் (Nationalism) தலை யோங்கி இருந்தது. ஆங்கில அன்னிய ஏகாதிபத்தியத்தை எதிர்க்க அனைவரும் வேற்றுமை மறந்து ஒன்றுபட்டு ஒருமுக மாக ஒன்றினர். விடுதலை பெற்றபின் அதன் தேவையின்மை யால் தமிழ்த் தேசியம் (Regionalism) தலையெடுத்தது. அத னால்தான் காலத் தேவை கரணியமாக பாரதியார் தேசியம் பாடினர், - தமிழ் தமிழர் இந்தியர் என்ற படி நிலையில்! (வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர் வாழிய பாரத மணித் திரு நாடு). பாரதிதாசனாரோ தமிழியம் பாடினார். இதற்குத் தன்மான இயக்கமும் திராவிடர் கழகமும் தூபமிட்டன. இரண்டாலும் இருவரும் ஏற்றமுற்றனர். இந்த இருநிலை களை - இடை நிலையினை இருவர் பாடல்களிலும் பரக்கக் காணலாம்.

ஆனால் சீன பாகிஸ்தான் படையெடுப்பு போன்றவற்றான் பழைய படி தேசீய உணர்ச்சி - இந்திய ஒருமைப் பாட்டுணர்வு ஓங்கியது. நான் எனது எனும் குறுகிய உணர்ச்சி மறைந்து, நாம் நமது எனும் பரந்த பேருணர்வு பெருகியது— பன்னாட்டுத் தொடர்பாலும் நூல்களாலும். இதன் வெளிப் பாடாகத் தமிழில் நூல்கள் வெளிவந்தன. எல்லார்க்கும் நல்லவர் இன்றமிழ் வல்லவர் கா. திரவியம் 'தேசியம் வளர்த்த தமிழ்' எனும் தலையாய நூலினைத் தந்தார். 'தமிழ் இலக் கியத்தில் தேசியம்' எனப் பலர் ஆராய முற்பட்டனர் (அ. ச. ஞா. தேசிய இலக்கியம்), படைப்பிலக்கியமும் இத் திக்கில் அடியெடுத்து வைத்து இந்த உணர்வை வளர்த்தது.

**தேசிய சிந்தனைக் கழகம்** *7-1-1979.* நம்மில் உள்ளூர இழையோடும் ஒருமை யுணர்வை ஒளிவிடச் செய்ய-நீதிபதி என். கிருட்டிணசாமி ரெட்டியார் தலைமையில் அமைந்தது. இதன் முதுகெலும்பு இராம. கோபாலன்; அமைப்பாளர் மோ. பாலசுப்ரமணியன். செயலர் பேரா. ஆர். அண்ணாமலை. மக்களிடையே ஆன்மீக தேசபக்தி உணர்வு ஓங்க, மக்க

ளிடையே உயர்பண்புகளை ஊக்க, தேசிய சிந்தனை மீண்டும் தழைத்திட எழுந்த இயக்கம் இது. அரசியலார் குறுகிய வாதங்களை வைத்துத் தங்களை முன்னேற்றிக் கொள்கின்றனர்; மக்களைத் திசை திருப்புகின்றனர்; பிரிவினைப் பிரசாரம் செய்து பயனடைகின்றனர். எனவே நாம் அவற்றுக்கு இரையாகாது 'இந்த நாடு முழுதும் நமக்குரியது; நாம் இந்த நாடு முழுமைக்கும் உரியவர்கள்' என்ற ஒருமைப் பாட்டுணர்வே கொள்ள வேண்டும். எதையும் தேசிய கண்ணோட்டத்துடன் காணவேணும்.

கருத்தரங்குகள், சொற்பொழிவுகள், சிறுவெளியிடுகள், கிராமியக் கலைகள் மூலம் தேசிய உணர்வூட்டுதல் எனப் பல் வகையில் பணியாற்றி வருகிறது. **ராசிபுரத்தில்** ஆசிரியர் **வரதராசன்** அவர்கள் செயற்பட்டு சிறந்த சிறு நூல்களையும் சீரிய கூட்டங்களையும் அமைத்து வருகிறார். தக்காரைக் கொண்டு திரு. வி. க.வும் தேசியமும், வ. உ.சியும் தேசியமும் எனப் பயனான நூல்கள் வெளியிட்டு வருகிறார். தலைமைக் கழகமும் சங்க இலக்கியத்தில் தேசிய உணர்வு, கம்பராமா யணத்தில் ஒருமைப்பாடு, பாரதியும் தேசிய சிந்தனையும் என 20 நூல்கள் வெளியிட்டுளது. **முகவரி:** பஞ்சவடி. ஸ்பர்டாங் சாலை. சேத்துப்பட்டு. சென்னை-30

இதனையும் தாண்டி சர்வ தேசியம் (Internationalism) செழித்து உலகளாவிய உணர்வு (universalism) உருவாக வேண்டும். அதற்குப் படிநிலையாக அமைவதே தேசியம். தேசியத்தால் தமிழும் தமிழால் தேசியமும் தழைக்கச் செய் வோம் - செயற்படுவோம்!

## பயண இலக்கியம் Travelogue

பிற நாடுகள் சென்று வந்தவர்கள், பல கண்டங்களைக் கண்டு மீண்டவர்கள் தங்கள் அனுபவங்களை நூலாக்கித் தந்துள்ளனர். அவை வெளிநாடு செல்பவர்கட்கு வழிகாட்டி யாகவும் செல்ல வாய்ப்பிலாதோர்க்கு விளக்க நூலாகவும் அமைகின்றன; ஒருவகையில் வரலாற்று நூலாகவும் புவியியல் பொத்தகமாகவும் உதவுகின்றன.

பத்துப்பாட்டில் வரும் ஆற்றுப்படைகள் ஐந்தும் ஒருவகை யில் வழிகாட்டு நூல்களாகவும் பயண இலக்கியமாகவும்

அமையும். தேவார திவ்வியப் பிரபந்தங்கள் தல யாத்திரை நூல்கள் தாமே!

**19 ஆம் நூற்:** 1832இல் ஏனுகுல வீராசாமி ஐயர் எழுதிய காசியாத்திரையே **முதல் பயண இலக்கியம்**. 85இல் சேலம் பகடாலு நரசிம்மலு நாயுடு, திவ்விய தேச யாத்திரையின் சரித்திரம்; 86இல் கோயிலூர் ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமிகள் ஆதீனம், தட்சணமிருந்து உத்தர யாத்திரை போய் வரும் விவரம்: 87இல் துரைசாமி மூப்பனார், கங்கா யாத்ரா ப்ரபாவம்; 1903 கொ. சண்முக சுந்தர முதலியாரின் காசி ராமேஸ்வர யாத்திரை. இவையாவும் உள் நாட்டுப்பயணங்கள். ஜனவிநோதினி, ஜநா நந்தினி, விவேக சிந்தாமணி இதழ்களில் பயணக் கட்டுரை பல வந்தன.

86இல் 'இங்கிலாந்து சென்று வந்த ஸ்ரீ சேலம் இராமசாமி முதலியார் அவர்களின் நல்வரவைக் கொண்டாடக் கூடிய மகாஜன சபையின் பிரதாப சங்கிரகம் என்பதே **வெளிநாட்டுப் பயணம் பற்றிய முதல் நூல்**. 86இல் ஜி. பரமேஸ்வரம் பிள்ளை, லண்டன் பாரீஸ் நகரங்களின் விநோத சரித்திரம்; 97இல் சுதேசமித்திரன் ஜி. சுப்பிரமணிய ஐயர், நான் இங்கிலாந்துக்குப் போனது; 98இல் டர்பன் வி. ரா. ராஜரத்தின முதலியார் தென்னாப்பிரிகாவிலிருந்து ஒரு கடிதம்; ஆர். நாராயண ஐயர், ஆர். சுவாமிநாத ஐயர், கடிதங்கள்-பயண இலக்கியம் போற்றின.

**20 ஆம் நூற்:** திரு. வி. க. வின் 'எனது இலங்கைச் செலவு' ஊற்று நிலையாகும். யாத்திரை என்பதைச் 'செலவு' என அமைத்துக்காட்டியவர். முன்னோடி: ஏ. கே. செட்டியார்; பயண இலக்கியப் பெருவேந்தர்: சோமலெ; பெருவிற்பன்னர்: மணியன். பக்தியில் பரணீதரன்.

சி. சுப்பிரமணியன் (நான் கண்ட சில நாடுகள், உலகம் சுற்றினேன்) ஆர். வேங்கடராமன் (சோசியலிச நாடுகளில், மக்கள் தலைவர்), க. ராசாராம் (தென் கிழக்கு ஆசியாவில்), கவியோகி சுத்தானந்த பாரதி (நான் கண்ட ரஷ்யா), காந்திமதி (அமெரிக்கா அழைக்கிறது), மேரிமாசிலாமணி (அமெரிக்கப் பயண நினைவு அலைகள்), அ. திருமலை முத்துசாமி (நூலகநாட்டில் 120 நாட்கள்), கலையன்பன் சுப. ராமன் (செல்வம் கொழிக்கும் சீமை, ஐரோப்பாவில் ஐந்து நாடுகள்), சோமு (அக்கரைச் சீமை), சம்பத்குமார் (கனவு உலகம்), சிவபாத சுந்தரம் (புத்தர் அடிச்சுவட்டில்)

மாணிக்கவாசகர் அடிச்சுவட்டில்), எம் ஆர். பாலகிருஷ்ணன் (புன்னகை பூத்த நாடு), தி. ஜானகிராமன் (உதய சூரியன்), சு. ந. சொக்கலிங்கம் (ஜப்பானில் நான் கண்டதும் கேட்டதும்) வி. ஜி. சந்தோஷம் (உலகம் சுற்றி வந்தோம்), செ. மாதவன் (சில நாடுகளில் சில நாட்கள்), சுவாமி அடைக்கலம் (பாலஸ்தீனப் பயணம்) மு.வ. (யான் கண்ட இலங்கை), சோலைஇருசன் (கிழக்காசிய நாடுகளில் தமிழ் மணக்கிறது), ஜி. டி. நாயுடு (நான் கண்ட ஜப்பான்), கலைஞர் மு. கருணாநிதி (இனியவை இருபது), ம. பொ. சி. (மாஸ்கோவிலிருந்து லண்டன் வரை), சாவி (நான் கண்ட நாலு நாடுகள்), அகிலன் (சோவியத் நாட்டில்), மேயர் சா. கணேசன் (முன்னேற்ற நாடுகளில் 30 நாட்கள், வால்காவிலிருந்து) சீனிவாசன் (நான் கண்ட எகிப்து), தனி நாயக அடிகள் (ஒரே உலகம்), வி. ஈஸ்வர மூர்த்தி (லண்டன் முதல் மாஸ்கோ வரை), எஸ். ஆர் சண்முகம் (அதிசய நாடு அமெரிக்கா), அருண் (பிரிட்டனில் கண்ட புதுமைகள்), தேவன் (ஐந்து நாடுகளில் அறுபது நாட்கள்) ஏ. எம். ஏ. அஜீஸ் (கிழக்கு ஆப்பிரிக்கக் காட்சிகள்), பி. எம். சுந்தரம் (எழிலார் இலங்கை), எஸ். எம். கமாலுதீன் (தாய் லாந்து), கருமுத்து. தி. மாணிக்கவாசகம் (ஜப்பான்), தருமை ஆதீனம் (நேபாளம்), பகீரதன் (வட இந்திய யாத்திரை), சண்முகம் (இமயத்தின் எல்லையில்), அ. மா. சாமி (குட்டித் தீவை எட்டிப்பார்த்தேன்), அமைச்சர் திருநாவுக்கரசு (அக்கரைச் சீமையில் ஆறு வாரங்கள்), சிவசங்கரி (அனுபவங்கள் தொடர்கின்றன), வி. என். சிதம்பரம் (புண்ணிய பூமியில் புனித யாத்திரை), க ப. அறவாணன் (பயண அனுபவங்களின் பாதை வெளிச்சங்கள்) சாலை இளந்திரையன் (எங்கள் பயணங்கள்) போல்வன குறிப்பிடத்தக்கன.

கடித வடிவில் டாக்டர் சோம. லட்சுமணன் (லண்டனில் லக்கி) இங்கிலாந்தில் வாழ்வும் நிலையும் பற்றி ஒரு வாலிபர் தன் இந்திய விருந்தாளிக்கு விளம்பும் வகையில் அற்புதமாக அமைத்துள்ளார். கண்ணதாசனும் ஆப்கானிஸ்தான், சோவியத் நாடுகளிலிருந்து எழுதிக் கண்ணதாசன் இதழில் தம் பயண அனுவங்களை வெளியிட்டார். பேரா. அ. மு. பரம சிவானந்தம் மலேயாவிலிருந்து எழுதியவையும் எண்ணத் தக்கன. திரு. வி. க., மு. வ. கட்டுரைகளும் கடித வடிவினவே.

இலங்கை பற்றி அ. மு. ப, கோவைக்கிழார், பகீரதன், சாலை-சாலினி இளந்திரையன்.

நம் மாநிலம்பற்றி தொ. மு, பாஸ்கரத் தொண்டைமான், ரா. அ. பத்மநாபன் (எட்டு நாட்களில் தமிழகம்), வித்துவான்

கன்னியப்ப நாயகர் (நான் கண்ட அதிசயக் காட்சிகள்), உதகைப் பொன்னழகன் (வளம் மிக்க நீலகிரி), கவிஞர் முருகு சுந்தரம் (குறிஞ்சி வளம்) போன்றாரும் எழுதியுளர்.

தொகுப்புகள்: வாசகர் வட்டம் (பிரயாண இலக்கியம்) கோமதி சுவாமி நாதன் (அமெரிக்கா முதல் அந்தமான் வரை).

பயணப் புதினம்: மு. வ. (அந்த நாள்), சாவி (வாஷிங் டனில் திருமணம்), ராஜம் கிருஷ்ணன் (வளைக்கரம்) லக்ஷ்மி போன்றார் படைத்துளர்.

ஜி. ஆர். தாமோதரன், திருவாசகமணி கே. எம். பால சுப்பிரமணியம், சாலை இளந்திரையன், நாஞ்சில் மனோகரன், இரா. செழியன், பேரா. அன்பழகன், வங்கத் தமிழன் போன் றாரின் பயணக் கட்டுரைகளும் கருதற்பாலன.

தலயாத்திரை: சுவாமி சித்பவானந்தா (கயிலையங்கிரி யாத்திரை), தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார் (திருக்கேதார யாத்திரை), ராகவன் (கயிலைமால் வரை), சிவானந்த விஜய லட்சுமி (பத்ரி யாத்திரை). பரணிதரன் இதில் பேரொளி வீசு கிறார். இதில் முந்தியது 'சிவஸ்தல மஞ்சரி'; பிந்தியது ராய. சொ. படைத்தது.

சரஸ்வதி ராம்நாத்தின் ஆறுகள் பற்றிய நூல்களும், தி. ஜா, சிட்டி இருவரின் நடந்தாய் வாழி காவேரியும் ஆறு போகும் வழிகளையும் வழிநெடுகக் காணப்பெறுவனவும் கழறுகின்றன. ரா. பி. சேதுப் பிள்ளையின் ஆற்றங்கரை யினிலே, கடற்கரையினிலே இரண்டும் இங்கே எண்ணலாம்.

புதிய சாதனையாக—பயணக் காவியமாக அமைவது பெருங்கவிக்கோ, வா. மு. சேதுராமன் படைத்திட்ட 'மலை நாட்டு மீதினிலே'. 'உலக உலா' (கட்டுரைகள்) ஓர் அருவியின் பயணம், கொஞ்சும் எழில் ரிஞ்சிங் தோட்டம் போன்றனவும் படைத்துளார்.

கணையாழி, குமுதம், விகடன், கல்கி போன்றன பயண இலக்கியத்தைப் பாங்குடன் பேணியுள. தென்னிந்தியப் புத்தக நிறுவனமும் சாகித்ய அகாதமியும் பல நூல்களைப் பைந் தமிழில் பெயர்த்தளித்துள. பத்திரிகையாளர், கல்வியாளர், அரசியல்வாதிகள், கவிஞர், இலக்கியவாதி, தெய்வீகர் எனப் பல்வகையோர் பயண இலக்கியத்தைப் பல்கச் செய்துளர்.

இனி, தமிழில் இத்துறையினைப் போற்றிப் புரந்து, பொன்றாப் புகழ் பெற்ற நால்வரைத் தனியே நினைவுகூர்வது நன்றியின் பாற்பட்டதாகும்.

**ஏ. கே. செட்டியார்** (அ. கருப்பன் செட்டியார்) 3-11-1911-10-9-1983. கோட்டையூர். பள்ளிப்படிப்பு திருவண்ணாமலை யில். 34இல் பர்மா சென்று நகரத்தார் சங்க இதழான 'தன வைசியன்' ஆசிரியர் ஆகி பர்மாத் தமிழரிடையே ஒரு பர பரப்பை ஏற்படுத்தினார். 35 - 36 இல் ஜப்பானில் தங்கி, போட்டோக் கலையில் தேர்ந்தார். ஆங்கில ஆட்சிக் காலத் திலேயே அண்ணல் காந்தி பற்றித் திரைப்படம் எடுத்தவர்; அவற்றுக்கு வேண்டிய செய்திகள் திரட்ட 37-39 ஐரோப்பா ஆப்பிரிக்க அமெரிக்க நாடுகட்குச் சென்றார்; 24-8-40 இல் தமிழில் தமிழ் நாட்டிலும் தெலுங்கில் ஆந்திராவிலும் திரை யிட்டார். 43இல் 'குமரி மலர்' தொடங்கினார். திங்கள் மலராகக் கொணர்ந்தார். இவரின் பின், இவர் நண்பர் எஸ். கோபாலன் 66, லஸ் சர்ச் சாலை, மயிலாப்பூரில் தொடர்கிறார்.

**நூல்கள் :** ஜப்பான் (36) முதல் பயண நூல்; உலகம்-சுற்றும் தமிழன் (வை. கோவிந்தனின் சக்தி இதழில் எழுதிய கட்டுரைகள்), பிரயாண நினைவுகள், அண்டை நாடுகள், மலேயா முதல் கனடா வரை, அமெரிக்க நாட்டில், கரிபியன் கடலும் கயானாவும், ஐரோப்பா வழியாக, குடகு; இட்டபணி, திரையும் வாழ்வும். பதிப்பு : மித்திரன் போன்ற இதழ்களிலும் பிற நூல்களிலும் தாம் சுவைத்தவற்றைத் தொகுத்து உணவு, பண்பு, கொய்த மலர்கள், புண்ணியவான் காந்தி, தமிழ்நாடு பயணக் கட்டுரைகள் (1850-1925 களில் எழுதப்பெற்ற பலரின் 140 கட்டுரைகளின் தொகுதி) என 6 நூல்களாக வெளி யிட்டார். அண்ணல் அடிச்சுவட்டில், 78 - 79இல் குமரி மலரில் இவர் வரைந்த கட்டுரைத் தொடர். மகாகவி பாரதியாரின் பயணக் கட்டுரைகளைத் தொகுத்து வெளியிடச் செய்தார்.

சோமலெ போன்றவர்களைப் பயணக் கட்டுரை தீட்டு மாறு ஊக்கியவர். காழ்ப்புக் கொள்ளாது பலரையும் தூண்டி எழுதச் செய்து பல பயண எழுத்தாளர்களை உருவாக்கி யுள்ளார்.

நேபாளம், திருவண்ணாமலை, மலைக்கோட்டை, தரங்கம் பாடி பற்றி எளிய இனிய நடையில் இனிமை பொங்க, சுவை ததும்பப்புதுமைப் பொலிவுடன் நகைச்சுவை நெளியப்பயணப் பனுவல்கள் படைத்தவர், தமிழில் பயண இலக்கியத்துக்கு

அடித்தளமிட்டவர். மக்களிடையே பயண நூற்கள் படிக்கும் பேரார்வம் உண்டாக்கியவர். பயண இலக்கியப் பாட்டை போட்டுத் தந்த பிதாமகர் எனத் தயங்காது சாற்றலாம் இந்த உலகம் சுற்றிய தமிழரை!

**சோமலெ** (சோம லெக்குமணன் செட்டியார்) 11-2-1921-3-11-86 செட்டி நாட்டு நெற்குப்பை. பி.ஏ. பயின்றவர். 48-49 லேயே உலகின் பல பகுதிகட்குச் சென்று வந்துள்ளார். 55 வாக்கில் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பொது உறவு அலுவலராக இருந்தார். 65ல் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர். P.E.N.எனும் உலக எழுத்தாளர் குழுவில் உறுப்பின ராக இருந்து Indian PEN இதழில் திங்கள்தோறும் தமிழ் இலக் கியச் செய்திகளை எழுதி வந்தார்.

நான் கண்ட வெளிநாட்டுக் காட்சிகள் (49), அமெரிக்கா வைப் பார் (50), ஆஸ்திரேலியாவில் ஒருமாதம், என் பிரயாண நினைவுகள், நமது தலைநகரம், பிரயாணம் ஒரு கலை, பிரயாண இலக்கியம், நான் கண்ட விழாக்கள், பர்மா, இமயம் முதல் குமரிவரை. இவை பயண இலக்கியக் கொடைகள்.

அமெரிக்க நாடுகள் வரிசை 12, உலக நாடுகள் வரிசை 10, மாவட்ட வரிசை 10. இவரின் உள்நாட்டு வெளிநாட்டு அனுப வங்கள் பறைசாற்றும். அமெரிக்காவை அறிந்து கொள்ளுங்கள் (Meet U.S.A) மொழிபெயர்த்தும் தந்துளார். Travelogue என்றொரு சிறு நூலும் செய்துள்ளார். தமிழக அரசின் பரிசு பல பெற்றுளார்.

இவரது சாதனை நூலாக-மணி மகுடமாக (Magnum opus) அமைவது 'செட்டிநாடும் தமிழும்'. இலக்கிய வரலாறு, வர லாற்றுக் களஞ்சியம், இலக்கியப் பெட்டகம், கருத்துக் கருவூலம், செய்திகளின் சுரங்கம்! ஒரு பெரும் பல்கலைக் கழகம் செய்து முடிக்க வேண்டிய அரும்பணியை தனி ஒருவரே அரும் பாடுபட்டு தேனீயாகத் திரட்டி உருவாக்கியுள்ளார்.

நகரத்தார் பற்றிய அரிய தகவல்களை அரிதின் சேகரித்துத் தந்துளார் (ராஜா சர் எம்.ஏ.எம் ராமசாமி). எத்தனை ஆண்டுகள் எப்படிச் சேகரித்தாரோ? எனக்கு வியப்பாகவும் மலைப்பாகவும் இருக்கிறது (அமைச்சர் இராம. வீரப்பன்). செல்வம் சேகரிப்பது போல் செய்திகளைச் சேகரித்துள்ளார். இலக்கியப் பணிக்கெல்லாம் முடிமணியாகத் திகழ்கிறது (ஔவை நடராசன்). செட்டிநாட்டுத்தகவல் களஞ்சியம் (கண.

சிற்சபேசன்), ஒரு சிறந்த ஆய்வுக் களஞ்சியம்; ஆய்வு நூல்கள் பல தோன்றுவதற்குரிய அடிப்படை நூல், அரிய நூல், வட்டார ஆய்வுகளில் பலர் ஈடுபட்டுள்ளனர்; என்றாலும் சிலரே அதன் செவ்வி தலைப்பட்டவர்; அவர்களுள் சோமலெ முதல்வர் (ச. மெய்யப்பன்).

'வளரும் தமிழ்' 19, 20ஆம் நூற்றாண்டு உரைநடை வரலாறு விளம்புவது. பிற படைப்புகள்: தமிழ் இதழ்கள், Folk Lore of Tamil Nadu, European Impact on Modern Tamil writing & Litt' Palani, Neiveli Lignite Project, Annamalai Nagar Itinery, பண்டிதமணி, ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், சர்தார் வேதரத்தினம், ஏ.வி.எம்.-வாழ்க்கை வரலாறுகள். தமிழ்நாட்டு மக்கள் மரபும் பண்பாடும், நாட்டுப் பாடல் திரட்டு, அலை கடலுக்கு அப்பாலும், நகரத்தார்களின் ஆலயப்பணிகள், ஒரு சில கதைகள் (குழந்தை இலக்கியம்), நீங்களும் தூதுவர் ஆகலாம், நெய்வேலி, பல்சுவைக் கட்டுரைகள், வேளாண் களஞ்சியம், சிதம்பரம் மூலட்டான ஈசுவரர், திருச்சிற்றம்பலம் கோயில், பதிப்புகள்: குடமுழக்கு மலர்கள் 12, பிறமலர்கள் 10, எனத் 90 நூல்கள் இவர் பெயர் சொல்கின்றன; புகழ் பேசுகின்றன.

உலகப் பயணம் உளுற்றுதல் இப்போது எளிது; ஆனால் அப்போது-40 ஆண்டின் முனம் அரிது. உலகம் சுற்றுதலைத் திருத்தலப் பயணமாக மேற்கொண்ட தமிழ் நாயனார் (மெய்யப்பன்). அரை நூற்றாண்டளவும் தமிழோடு ஐக்கியமாகி விட்ட மூத்த எழுத்தாளர்; மேதா விலாசம் மிக்க தக்கார் இவர் மறைவு தமிழுக்குப் பேரிழப்பு. பெருந்தவிப்பு!

**மணியன்** ஆனந்தவிகடன் துணை ஆசிரியராக இருந்து 68ல் கல்வி-கலை பரிமாற்றுத் திட்டத்தில் அமெரிக்கா இங்கிலாந்து சென்றார்; அங்கு செய்தித்தாள்களின் நிர்வாகம் செயல் முறைகளைக் கண்டும், ஈடுபாடுள்ள துறையாளர்களுடன் கலந்து திரும்பினார். விகடனில் 'இதயம் பேசுகிறது' என்ற மகுடமிட்டுத் தொடர் கட்டுரை கதைபோல வரைந்தார். வெளி நாட்டவர் வாழ்வினை வளமுடன் அறிய உதவியது. பின் நூலாக வந்தது. வந்த வேகத்தில் விற்றுப் போயின. அதனைத் தொடர்ந்து ஜப்பான், இந்தோசீனா எனப் பன்னாடுகளையும் கண்டுவந்து அதே தலைப்பில் I II என வரிசையாக எழுதினார். ஏறத்தாழ 12 பனுவல்கள் வெளியாயின. இப்படி வைத்த புத்தகத் தலைப்பே, அதன் பொருத்தம் ஈர்ப்பு ராசி கருதி, விகடனிலிருந்து விலகியதும் அவரது வார இதழுக்கும் பெயராக

அமையலாயிற்று. பயண இலக்கியத் துறையில் மணியனுக்கு மிகச் சிறந்த மறக்க வொண்ணா மதிப்பிடம் உண்டு. அப்படிச் சுவடு பதித்து விட்டார். கதையாசிரியராதலின் பயண அனுபவங்களைப் பக்குவமுடன் பாங்காகப் படைத்தளித்து ஒரு வரலாறு படைத்து விட்டார் என்றால் மிகையாகாது.

**நெ. து. சுந்தரவடிவேலர்:** பிரிட்டனில், சோவியத் மக்களோடு, புதிய ஜெர்மனியில், அங்கும் இங்கும், நான் கண்ட சோவியத் ஒன்றியம், இலக்கியம் கொழிக்கும் சோவியத் ஒன்றியம் எனப் பன்னூல் எழுதிப் பங்காற்றியுள்ளார்.

இங்கே கவிஞர் **அரு. சோமசுந்தரம்** உலக நாடுகள் தலைப்பில் இலங்கை, நேபாளம், மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, ஹாங்காங், பிலிப்பைன்ஸ், ஐரோப்பா என எழுதிக் குவித்திருப்பதையும் எண்ணிக்கையில் எடுத்துக் கொள்ள வேணும்.

## பாரதீய ஞானபீட விருது: 1943

இந்திய இலக்கிய தத்துவ வளர்ச்சிக்குப் பாடுபடும் பெரிய - சிறந்த நிறுவனம். புகழ் பூத்த இந்தியத் தொழிலதிபர் சாஹூ சாந்தி பிரசாத் ஜெயின் அவர்களும் அவர் துணைவியார் ரமா ஜெயினும் காசியில் நிறுவியது. இலக்கிய தத்துவ ஆராய்ச்சிகட்கு உதவுதல், பழம் பெரும் ஏட்டுச் சுவடிகளைப் பதிப்பித்தல், சிறந்த நூல்களை இந்திய மொழிகளில் வெளியிடுவது, சமண தத்துவ நூல்களை வெளிப்படுத்துவது இதன் பணிகள்.

ஆண்டுதோறும் இந்திய மொழிகளில் எழுதப் பெற்ற மிகச் சீரிய நூல்களை அலசி ஆராய்ந்து ஒரு நூலாசிரியருக்கு **ஒன்றரை லட்சம்** ரூபாய் பரிசாக அளித்துப் பெருமைப்படுத்துகிறது. இலக்கியத்துறையில் இதுவே மிகப் பெரிய பரிசாகும். அவ்வம் மொழிகளில் தகுத்த அறிஞர்கட்குச் சிறந்த நூலகளைப் பரிந்துரைக்குமாறு கேட்கப்படுகிறது. அவர்களின் பரிந்துரையினை ஒரு முழு பரிசீலிக்கிறது; அது ஒவ்வொரு மொழியிலும் ஒரு நூலைத் தெரிந்தெடுக்கிறது. அந்நூலின் சில பகுதிகள் ஆங்கிலம் இந்தியில் மொழி பெயர்க்கப்பட்டு ஆய்வுக் குழுவின் முனம் வைக்கப் பெறுகிறது. அது அத்துணை மொழி நூல்களின்ன்றும் தக்க ஒரு நூலினைத் தேர்ந்தெடுக்கிறது. அந் நூலாசிரியர் பரிசு பெறுகிறார்.

முதற்பரிசு 65ல் மலையாள 'ஓடக்குதல்' இயற்றியழ ஜி. சங்கர குருப் அவர்களுக்கு அளிக்கப் பெற்றது. தமிழில் பெற்றுத் தமிழகத்திற்குப் பெருமை தேடித்தந்தவர் **அகிலன்;**

75ல் **சித்திரப் பாவைக்குக்** கிட்டியது. தமிழனுக்கு இது தலை நிமிர்வு. வழிவழி நினைந்தும் நவின்றும் நெஞ்சம் உவக்கத்தக்க இமயச் சிறப்பு. இப்பரிசு நமக்குக் கிடைக்கப் பெரிதும் காரணம் பேரா. டாக்டர். கா. மீனாட்சிசுந்தரனார் என்பது அறியத் தக்கது. **முகவரி** Bharathiya Jnanpith, 18, Institutional Area, Lodhi Road, NEW DELHI, 110 003.

## சாகித்ய அகாதமி

*12-3-1954*: இஃதோர் தேசிய நிறுவனம். இந்திய இலக்கியங்களை வளர்க்கவும், எல்லா இந்திய மொழிகளிலும் ஓர் உயர் இலக்கிய ஆக்கம் ஏற்படுத்தவும், அவற்றின் வாயிலாக நாட்டின் ஒருமைப்பாடு உருவாக்குதலும் இதன் நோக்கம். நடுவண் அரசால் நிறுவப்பட்டதாயினும், இஃதோர் தன்னாட்சிக் கழகம்.

இதன் முதல் தலைவர் நேரு 55-64. டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் 64-68, டாக்டர் சாகீர் உசேன் 68-69, டாக்டர் சுனித்குமார் சாட்டர்ஜி 69-77; டாக்டர் கே. ஆர். சீனிவாச ஐயங்கார் 7-7-78, உமாசங்கர் ஜோஷி 78-83.

சாதனை: 1. Bibliography of Indian Litt. (20th Cen.) 5 பகுதிகள். 74ல் வெளியான நான்காம் மடலத்தில் தமிழ் பற்றி உளது. 2. Who's who of Indian writers. 3. Contemporary Indian Litt. தமிழிலும் உளது. 4. Indian Litt. since Independence (72). 5. History of Litt, 6. Makers of Indian Litt. 7. Encyclopaedia of Indian Litt. இதழ்கள்: 1. Indian Litt. 2. Samskrita Pratibha, 3. Samakaleena Bharateeya Sahitya.

**விருது**: ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு மொழியின் மிகச் சிறந்த நூலுக்கு 5,000 ரூபாய் வழங்கப் பெறுகிறது. முந்தை மூன்று ஆண்டுகளில் வந்த இலக்கியத் தரம்வாய்ந்த மிக உயர்ந்த நூலுக்கு அளிக்கப்பெறும். These awards help in recognising and honouring talent, making known all over India and abroad writers whose reputation has hitherto been confined to their own language and region. '55 முதல் அளிக்கப்பெறுகிறது. (விடுபட்ட ஆண்டுகளில் வழங்கப் பெறவில்லை). இப்போது பரிசுத்கொகை ரூ 10,000.

1955 தமிழ் இன்பம் (கட்டுரைகள்) ரா. பி. சேதுப்பிள்ளை
1956 அலை ஓசை (நாவல்) கல்கி. ரா. கிருஷ்ணமூர்த்தி
1958 சக்கரவர்த்தித் திருமகன் ராஜாஜி
1961 அகல்விளக்கு (நாவல்) டாக்டர் மு. வ.
1962 அக்கரைச் சீமையிலே (பயணம்) மீ. ப. சோமசுந்தரம்
1963 வேங்கையின் மைந்தன் (நாவல்) அகிலன்
1965 ஸ்ரீ ராமானுஜர் (வாழ்க்கை) பி. ஸ்ரீ. ஆச்சாரியா
1966 வள்ளலார்கண்ட ஒருமைப்பாடு (வாழ்க்கை ஆய்வு) ம. பொ. சி.
1967 வீரர் உலகம் (பழந் தமிழிலக்கியத்தில் வீரம்) கி. வா. ஜ.
1968 வெள்ளைப்பறவை (கவிதை) அ. சீனிவாசராகவன்
1969 பிசிராந்தையார் (நாடகம்) பாரதிதாசன்
1970 அன்பளிப்பு (சிறுகதைத் தொகுதி) கு. அழகிரிசாமி
1971 சமுதாய வீதி (நாவல்) நா. பார்த்தசாரதி
1972 சில நேரங்களில் சில மனிதர்கள் (நாவல்) ஜெயகாந்தன்
1973 வேருக்கு நீர் (நாவல்) ராஜம் கிருஷ்ணன்
1974 திருக்குறள் நீதி இலக்கியம் (திறனாய்வு) க. த. திருநாவுக்கரசு
1975 தற்காலத் தமிழ் இலக்கியம் (திறனாய்வு) இரா. தண்டாயுதம்
1977 குருதிப் புனல் (நாவல்) இந்திரா பார்த்தசாரதி
1978 புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் (திறனாய்வு) வல்லிக்கண்ணன்
1979 சக்தி வைத்தியம் (சிறுகதைத் தொகுதி) தி. ஜானகிராமன்
1980 சேரமான் காதலி (நாவல்) கண்ணதாசன்
1981 புதிய உரைநடை (திறனாய்வு) மா. இராமலிங்கம்
1982 மணிக்கொடிகாலம்-பி.எஸ். இராமையா
1983 பாரதி காலமும் கருத்தும்-ரகுநாதன்

1984 ஒரு காவிரியைப் போல
(நாவல்)—லக்ஷ்மி
1985 கம்பன் புதிய பார்வை-அ. ச. ஞானசம்பந்தம்
1986 இலக்கியத்துக்கு ஓர் இயக்கம்-க. நா.சுப்பிரமணியம்

முதல் விருது முந்தைய 7 ஆண்டுகளில் வந்த மிகச்சிறந்த நூலுக்கானது. பரிசுக்காகப் பதிப்பகத்திடமிருந்தோ ஆசிரியர்களிடமிருந்தோ நூல்கள் வரவேற்கப் பெறுவதில்லை. ஒவ்வொரு மொழியிலும் சிறந்த எழுத்தாளர் அறிஞர் ஆய்வாளர்களிடமிருந்து அந்தரங்கமாக பரிசுக்குரிய நூல்களைப் பரிந்துரைக்குமாறு கேட்கப்படும். அதைப் பட்டியலிட்டு தக்க குழுவிடம் ஒரு நூலினைச் சுட்டுமாறு கேட்கும். அது அந்த மொழியில் வல்ல மூவர் குழுவிடம் மதிப்பீட்டுக்கு வைக்கப்பெறும், பின் பரிந்துரைகளும் மதிப்பீடும் செயற்குழுவிடம் தரப் பெறும். அதுவே விருதுக்குரிய நூலினை அறிவிக்கும். தகுதியற்றதெனின் அவ்வாண்டு வழங்கப் பெறாது. மொழிபெயர்ப்போ, புதுப்பதிப்போ, டாக்டர்பட்ட ஆராய்ச்சியோ உரியதன்று. தாமரைப் பட்டையம் கொண்ட பெட்டியும் 5,000 ரூபாயுமே விருதாகும். இறந்தவர் நூலாயின் மறைந்த மூன்றாண்டுக்குள் தகுதியதாகும். ஒருவர் ஒருமுறைதான் விருது பெற முடியும். **முகவரி :** தலைமையகம் Rabindra Bhavan, 38. Ferozeshah Rd., New Delhi-110 001. சென்னைக் கிளை (59 ல் நிறுவப்பட்டது). 29. Eldams Rd., Teynampet, Madras-15. (445070).

## 25. தமிழ்க் கல்லூரிகள்:

பண்டு பைந்தமிழ் வளர்க்கும் பொறுப்பு எல்லோரிடமும் இருந்தது; அனைவரின் கடமையாகவும் அமைந்தது. சங்ககாலத்தில், அவரவர் தொழில் ஆற்றினும் அத்துணை பேரும் தமிழில் புலமையும் பற்றும் படைப்புத் திறனும் பெற்றிருந்தனர்; மருத்துவன் தாமோதரனார், கணியன் பூங்குன்றனார்,வெள்ளைக்குடி நாகனார்,கூலவணிகன் சாத்தனார், அறிவுடைநம்பி. போன்றார் சான்றாவர்.

பின், புலவர்களின் பொறுப்பாகக் குறுகியது. குறு நில மன்னரும் சமீன்தாரும் போற்றினர். ஆனால் இப்போது தமிழ் என்றால் தமிழாசிரியர் பொறுப்பு, நமக்கும் தமிழுக்கும் தொடர்பில்லை (நம் தாய் மொழி; நாம் பேசும் தமிழ் தான் என்ற நினைவு கூடஇல்லை!) என்ற நிலை உருவாகி விட்டது. தமிழுக்கு நல்லதோ கெட்டதோ அது புலவர் பணி - பாடு என ஒதுங்கி விடுகிறது உலகம்.

எனவே தமிழினைப் பேணி வளர்க்கும் கடப்பாடு தமிழாசிரியர்கள் தலையில் விழுந்தது. தமிழ் வளர்க்க தமிழாசிரியர்களை உருவாக்க, தனியே தமிழ்க் கல்லூரிகள் தோன்றின. அத்தகு கல்லூரிகள் சிலவற்றைச் சிந்திப்போம்;

**செந்தமிழ்க் கல்லூரி, மதுரை:** *1901.* மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் கீழ் அமைவது. தமிழகத்தில் தோன்றிய முதல் தமிழ்க் கல்லூரி. அரும் பெரும் தமிழ்ப் பெருந்தலைகளும் சிங்கங்களும் செந்தமிழ் வளர்த்த நிலையம். உ. வே. திரு நாராயணையங்கார் (*1861-1947*), உ.வே. திரு மாளிகை கி. இராமாநுஜையங்கார் போன்ற அறிவுப் பிழம்புகள் குறிப்பிடத் தக்கோர். இதுபோது இதன் முதல்வராக இரா. வே. நாராயணன் உள்ளார்; பச்சையப்பன் கல்லூரியில் பயின்று சிறந்தவர்.

வெ. சி. சீனிவாசன், கவிஞர் மு. உலகநாதன், கந்தசாமி, பொன். விசயன், சி. மொ. இராசேந்திரன், க. சின்னப்பா, திருமதி காந்திமதி, தனலட்சுமி, நிர்மலா மோகன், சுந்தரி போன்றார் பேராசிரியர்களாகப் பேர் சொல்லி வருகின்றனர். இங்கே அன்பு கருணையானந்தா, டாக்டர் சாம்பசிவன் போன்றார் பணியாற்றியுளர். இதன்கண் பயின்ற பல்லோர் தமிழகமெங்கும் தமிழோச்சி வருகின்றனர். **முகவரி:** தமிழ்ச் சங்க வீதி, மதுரை-*1*.

**டி. கே, இராமாநுஜையங்கார்:** *14-12-1895.* முகவை மாவட்ட சாத்தூர் வட்ட எதிர்க்கோட்டை. திருமாளிகை கிருஷ்ணையங்கார்: ருக்மிணி. தாத்தா அப்பணையங்கார், எ. ராமையங்கார் சுவாமி, மலையங்கார் திண்ணைப் பள்ளிகளிலும், மாதாமகர் ர. ஸ்ரீநிவாசையங்கார் சுவாமி, சிறிய தந்தை ரெங்கசாமி, பெரிய தந்தை திரு. நாராயண ஐயங்கார் சுவாமிகளிடமும் கல்வி கற்றவர். *1912-15.* மதுரைத் தமிழ்ச் சங்க 'செந்தமிழ்' உதவி ஆசிரியர், *1917-19* சிவகாசி இந்து நாடார் விக்டோரியா உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர், *1919-47* 'செந்தமிழ், உதவி ஆசிரியர்; *48-52* செந்தமிழ் ஆசிரியர், தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமை ஆசிரி..., *1952-55.* அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆராய்ச்சித் துணை விரிவுரையாளர், *1955-64* கம்பராமாயண பதிப்புக் குழுச் செயலர், உரை எழுதல்-பாட வேறுபாடு தொகுத்தல்.

சங்கத்துக்கு வருவோர்க்கெல்லாம் வரவேற்புக் கவிதை வழங்கியவர். திருநரையூர் நம்பி மேகவிடுதூது, திருமலைக் குற

வஞ்சி, ஆழ்வார் பிள்ளைத்தமிழ், அழகர் குறவஞ்சி என 20 நூல்கள் பதிப்பித்துள்ளார். 1944 சென்னை போர்ப் பிரசார சபைநடாத்திய நாட்டுப்பாடல் போட்டியில் ராவ்சாகிப் ராமன்மெடல் ($\frac{1}{2}$பவுன்) பெற்றவர்.

மணம் 1912ல், மனைவி கோதை நாச்சியார்; மகன் கிருஷ்ணன்; மகள் அலர்மேலு மங்கை. உ.வே - **உபய வேதாந்த** வல்லுநன். **தொடர்புக்கு** 22, நம்பர் தெரு, சோமசுந்தரம் காலனி, மதுரை-16.

**அரசர் கல்லூரி திருவையாறு:** 1881ல் மராத்திய மன்னர்களின் அறக்கட்டளையில் வடமொழிப் பாடசாலையாகத் தோன்றி, 1910ல் கீழ்த்திசைக் கல்லூரியாக வளர்ந்தது. 27ல் தமிழ் வித்து வான் வகுப்புகள் துவங்கின. இதற்கு உறுதுணையானோர்;சர். ஏ.டி. பன்னீர் செல்வம், தமிழவேள் உமாமகேசுவரனார். 65ல் இசைப் பிரிவும், 66ல் நாதசுரம், தவில் பிரிவுகளும் வந்தன. 75ல் பி.லிட்.படிப்பு துவங்கியது. 80 பரத நாட்டியம் பிறந்தது. 81ல் தமிழ் முதுகலை வந்தது.

பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, வி. கோபால ஐயர், கோ. வேங்கடாசலம், சொ. சண்முகானந்தம்-முதல்வர்கள். கரந்தைக் கவியரசு, பு.ரா. புருசோத்தம நாயுடு, இராம கோவிந்தசாமிப் பிள்ளை, சுவர்ண காளீச்சுவரன், சிவப் பிரகாச சேதுராயர், வி.அ. அரங்கசாமி; க.கலிய பெருமாள். B. இராமலிங்கம், யேசுதாசன், வெங்கட்ராமன், சண்முக சுந்தரம், நாராயணபாரதி, செல்வகணபதி, சுலோசனா, பொற்கொடி போன்றார் பேராசிரியர்கள்.

மாணாக்கர்களில் குறிப்பிடத் தக்கோர். இலக்குவனார், மேஜர் கிருஷ்ணமூர்த்தி, எஸ்.டி. சுந்தரம், மா. ரா. போ.குரு சாமி போன்றார்.

**பாரதிப் பித்தன்** (சொ.சண்முக சுந்தரம்). 9-7-1932. தஞ்சை திருவிடைமருதூர் வட்ட திருபுவனம். சொக்கலிங்கம்: அம்மாப் பொன்னூ. புலவர் எம்.ஏ.,பிஎச்.டி. (நாட்டுப் புறவியல்). நூல்கள்: ஐ.நா.சபை, நட்புறவுக் கவிமலர்கள், தேசியும் சேதி யும், இந்திய நாட்டின் எரிமலைத் தியாகிகள், ஆத்திச்சூடி இலக்கியம் (ஒப்பீட்டு ஆய்வு), பாரதியின் சொல்லாட்சி, அதி காலைச் சிலப்பு (நாவல்). 20-க்கும் மேற்பட்ட சிறுகதைகளும் படைத்துளார். பட்டிமன்ற வழக்காடு மன்றத் தலைவராக நன்கு நடத்திக் கொடுப்பதில் நலம் சான்றவர், நல்வழி நிலையம் 'பைந்தமிழ்ப் பாமணி' எனும் பட்டம் வழங்கியுளது.

**புலவர் கல்லூரி-கரந்தை** 16-4-1938. தோற்றுநர். தமிழவேள் த. வே. உமாமகேசுவரனார். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் கிளையாவது. தொடக்கி வைத்தவர் ஞானியாரடிகள். முதல்வர்கள் : ந. மு. வே. நாட்டார், பி. ஆர். மீனாட்சி சுந்தரம், கொண்டல் சு. மகாதேவன், உ. பழநி, ந. இராமநாதன், கு. சிவமணி, செ.ஆர். செயச்சந்திரன், பி. விருத்தாசலம். புகழ்சால் மாணாக்கர்கள்: ந. ரா. முருகவேள், அ. மா. பரிமணம், பாவலர் பாலசுந்தரம், பொன்னிவளவன், அறிவுடைநம்பி, க. மாயாண்டி பாரதி. முதல் விரிவுரையாளர் க. வெள்ளை வாரணனார்; கோ. சி. பெரியசாமி, கரந்தைக் கவியரசு, வி. அ. அரங்கசாமி, மு. சடகோப ராமனுசம் பிள்ளை, அடிகளாசிரியர்.

மாணாக்கர் சொல்லாற்றல் வளர்க்க 'திருவள்ளுவர் கழகம்' தோன்றியது; ஐயாற்று அரசர் கல்லூரியிலும் அதே பெயரில் கல்லூரிப் பேரவை அமைந்திருந்ததால் 'இளங்கோவடிகள் தமிழ்க் கழகம்' எனப்பட்டது. ஆண்டு விழாக்கள், கலைமகள் விழாக்கள் கண் கொள்ளாக் காட்சி, திருவிழாப் போன்று பெருவிழாவாக அமையும். தலைசிறந்த தமிழறிஞர்கள் குழுமுவர். **முகவரி** : கருந்திட்டைக்குடி. தஞ்சாவூர் 613 002.

**கணேசர் செந்தமிழ்க் கல்லூரி - மேலைச் சிவபுரி** : 1939. மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையின் உறுப்பு. இங்கு பயின்று ஏற்றம் பெற்றோர்: மு. அருணாசலம் பிள்ளை, தமிழண்ணல், மெ. சுந்தரம், முடியரசன் போன்றார். பணியாற்றியோர்களில் குறிப்பிடத் தக்கோர்: மு. அருணாசலம் பிள்ளை, நீ. கந்தசாமிப் பிள்ளை, சோழவந்தான் கந்தசாமியார். ஆ. பூவராகம் பிள்ளை. ஆயிரத்துக்கும் மேலான மாணவர்கள். வெ.சு. அழகப்பன், சி. செல்வத் தாண்டவன் போன்றார் முதல்வராக இருந்துளர். பண்டிதமணியின் தொடர்பு கொண்டது.

**செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்** 9-6-1944. தோற்றுநர்: காசிவாசி அருள்நந்தித் தம்பிரான். முதல்வர்கள் 44 ல் த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, 44-72. கா. ம. வேங்கடராமையா, 73 முதல் கு. சுந்தரமூர்த்தி, ஆசிரியர்கள் : சுந்தரேசம் பிள்ளை, ச. தண்டபாணி தேசிகர், ம. வி. கோபாலன், தா, மா, வெள்ளை வாரணம், மா. வே. பசுபதி, அர. சிவப்பிரகாசம் போன்றார். மாணாக்கர்கள் : கு. சுந்தரமூர்த்தி, பொற்கோ, மு. சிவச்சந்திரன், மா. வே. பசுபதி.

45-78 புலவர்; 75 முதல் பி. லிட்.; 80 முதல் முதுகலை; 84 முதல் எம். பில், பகுதி நேரம், 85 முதல் முழு நேரம், 13-5-85 முதல் பகுதி முழுநேர பி.எச். டி. நடக்கிறது.

**டாக்டர் கு. சுந்தரமூர்த்தி:** 14-4-1930. திருச்சி மாவட்ட முசிறி வட்டத் தோளூர்ப்பட்டி. குப்புசாமி முதலியார்: நாகரத்தின அம்மாள். 45-50 புலவர். 26-6-50—31-3-73 செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர். 1-5-73 முதல் முதல்வர். (77-78 இல் அண்ணாமலையில் மீட்டு விடுப்பில் ரீடர்) 54 இல் பண்டிதம், 68 இல் சைவப்புலவர் 72 இல் எம். ஏ', 83 ல் டாக்டர் பட்டம், 'திருவாவடுதுறை ஆதீனத்தின் சமய இலக்கியப் பணிகள்'. பட்டங்கள்: சித்தாந்த நன்மணி (மதுரை ஆதீனம்), தொல்காப்பியச் செல்வர் (தொண்டை மண்டல ஆதீனம்), தருமபுர ஆதீனப் புலவர், திருமுறைக் கலாவித்தகர் (காழிப் பேரவை), சைவ சித்தாந்த வித்தகர் (திருவண்ணாமலை ஆதீனம்), செம்பொருட் செல்வர் (அறநெறிக் கழகம்) டாக்டர் (உலகப் பல்கலைக் கழகம்)

நூல்கள் : தொல், எழுத்து-இளம், நச்சர் உரை விளக்கம்; சொல்-இளம், நச்சர், தெய்வச் சிலையார், கல்லாடர், சேனாவரையர் உரைவிளக்கம்; செய்யுளியல் நச்சர் விளக்கவுரை. பொருள்-நச்சர், பேராசிரியர் உரை விளக்கம். சேக்கிழார் பிள்ளைத் தமிழ், சீர்காழிக் கோவை, அபிராமி அந்தாதி, நீதி நெறி விளக்கம், கந்தர் கலிவெண்பா, திருக்கரந்தை - விசய ரகுநாதர்; சங்கரமூர்த்திக் கோவைகள் விளக்கக் குறிப்பு, திருக்குறள் உரைத்திறன், குறள் மணக்குடவர் உரை; சுந்தரர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்; திருவருட்பயன் வுந்தியார் சிவஞான போதம் போன்ற சாத்திரங்கட்கு விளக்கவுரைகள் வரைந்துளார். தண்டியலங்காரம் முத்துவீரியம் விளக்கவுரைகள்.

இலக்கணம் - சிறப்பாகத் தொல்காப்பியத்தை உளங்கொள்ளுமாறு ஓதும் ஒண்மையர். பேச்சிலும் நம்மை ஆழ்த்திவிடும் அரும் ஆற்றலர். பாடம் நடாத்துவதில் பக்குவம் சான்றவர். **முகவரி :** 14, தெற்குத் தெரு, திருப்பனந்தாள்-612 504.

**பல்கலைக் கல்லூரி, தருமபுரம்** 10-8-1946. தருமையாதீன ஆளுகையில் அமைவது. ஒய். மகாலிங்க சாஸ்திரி 46-55,முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் 52-56-61, கீ. இராமலிங்கனார் 55-56, சொ. சிங்காரவேலன் 54-61-63, வி. சா. குருசாமி தேசிகர் 67 முதல் முதல்வர்கள். ச. தண்டபாணி தேசிகர்;

பு. சி. புன்னைவனநாத முதலியார் 46-50; க. சேது சுப்பிர மணியப் பிள்ளை, சே. வெங்கடராம செட்டியார் 56-57, சிவ சம்பு, சபேசன், ப. நீலா. இரா, செல்வ கணபதி போல்வார் பேராசிரியர்கள்.

திருப்பனந்தாள் 1000 ரூ. பரிசு பெற்றோர்: சொ. சி. ப, லீலா; இரா. செல்வ கணபதி; 24, 25-10-72 இல் வெள்ளி விழா நிகழ்ந்தது. ஆளுநர் கே.கே. ஷா, தொடக்கவுரை ஆற்ற தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதி பேருரை நிகழ்த்தினார் குன்றக் குடிகளார் பட்டமன்றத் தலைமை ஏற்றார். மலர் வெளியிடப்பெற்றது.

**சொ. சிங்கார வேலனார்** 25-11-1933. திருச்சிற்றம்பலம். கவிதையிலும் எழுத்திலும் பேச்சிலும் எழில்சான்ற திறத்தார். மாசில் வீணை (நாவல்), திருப்பறியலூர்த் தல வரலாறு, எட்டுக்குடி முருகன் அந்தாதி, தருமையாதீனம், புதுமைக்கு, பிறர் மனை விரும்பேல், கதிரேச சதகம், கோடிக்கரைக் கந்தர் கலித்துறை யந்தாதி, மூவர் தமிழ், திருஞான சம்பந்தர் வர லாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், ஊமைக் குயில், கவிதை இன்பம், காவிரி வளம் போன்றன படைத்துளார். A Linguistic and critical study of Appar Tevaram hymns டாக்டர் பட்டத் தலைப்பு; 72, அண்ணாமலையில் 'செஞ்சொற் கொண்டல்' என்றழைக்கப் பெறுபவர், இதுபோது ஏ. வி. சி. கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.

**சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்**: 24-6-1953. நிறுவனர் தவத்திரு ஆறுமுக சுவாமிகள். பேரூர் ஆதீனத்தின் ஆதி குரு முதல்வர் பெயரில் அமைவது, ஆட்சிக்குட்பட்டது. முதல் முதல்வர் கோவைக்கிழார், கோ. ம. இராமச்சந்திரன் செட்டியார். பின் சு. நடேச முதலியார் தவத்திரு இராமசாமி அடிகள், கவிராச பண்டிதர் கு, நடேசக் கவுண்டர்; இதுபோது அவர் மகனார் முத்துக்குமாரசாமி, கோடீஸ்வரன், வையாபுரி, பூவண்ணன் போன்றார் ஆசான்கள். **முகவரி**: பேரூர் அஞ்சல், கோவை-10.

**தவத்திரு இராமசாமி அடிகள்**: 1-9-1926. கோவை அவிநாசி வட்ட காட்டம் முதலைபாளையம். மயிலம் செந்தமிழ்க் கல்லூரிப் புலவர். கல்லூரி முதல்வர்-தாளாளராக இருந்து, ஆதீனத் தலைவர். தெய்வீகப் பேரவை, மாநில அருள் மன்றத் துணைத் தலைவர். தமிழ் அருச்சனைக்குக் கால்கோள் இட்டவர்.

**சிவஞான பாலைய சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி, மயிலம் :** மயிலம் பொம்புர ஆதீன ஆளுகையில் அமைவது. துரைசாமி, சிவலிங்கனார் போன்றார் பணியாற்றிய இடம். இதுபோது கார்த்திகேயன் அவர்கள் முதல்வராக அமைகிறார். பழ. முத்தப்பன், எம். சற்குணம் போன்றார் பேராசிரியர்கள். மயிலம் முருகன் திருக்கோயில் புகழ் வாய்ந்தது; இது தமிழ்க் கோயிலாக இலங்குகின்றது.

**பழ முத்தப்பன் :** *17-5-1945.* செட்டி நாட்டுப் புதுவயல். சித்தாந்தச் செறிவு மிக்கவர். அம்மையின் அருளமுது, சிந்து இலக்கியம், திருவருட்பயனில் முப்பொருள் இயல்பு, தெய்வப் பாமாலை, நாச்சாத்தாள் உலகமாயாள் தாலாட்டு போன்றன படைத்துளார். பெற்ற பட்டங்கள்: 'பட்டிமன்ற மாமணி,' 'பைந்தமிழ்க் காவலர்'. டாக்டர் பட்ட ஆய்வு: அருள்நந்தி சிவாச்சாரியாரின் நூல்கள். **முகவரி:** மயிலம். தெ. ஆ. 604 304

**இராமசாமி தமிழ்க் கல்லூரி. காரைக்குடி :** *1967.* தோற்றுநர் இராம. பெரிய கருப்பன். புலவர் பட்டம் நல்கப் பெற்றது. 76 தொடங்கி பி. லிட் பட்டம் தரப்பெறுகிறது. இதுவரைப் பயின்று சென்றோர் 340. 78 முதல் மீனாட்சி ஆச்சி நினைவுப் பொழிவு பிப்ரவரித் திங்கள்தோறும் நிகழ்கிறது; அது நூலாக வும் வெளியிடப் பெறுகிறது. தேர்வில் முதன்மை பெறுபவர்க்கு மெய்யம்மை ஆச்சி தங்கப்பதக்கம் தரப்பெறுகிறது. அழகப்பர் நூலகமும் விடுதியும் உள. **முகவரி :** கண்டனூர்ச் சாலை, காரைக்குடி.

**திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி. சென்னை-1 :** *1944.* நக்கீரர் கழகம் நடத்தி வருகிறது. பி. லிட், தமிழ். எம்.ஏ. வகுப்புகள் இலவயமாக நடத்துகிறது. 25 தமிழாசிரியர்கள் அன்புப் பணி ஆற்றி வருகின்றனர். பழநி பாலசுந்தரனார் போன்றார் ஊன்றுகோலாய் அமைகின்றனர். பவழக்காரத் தெரு ஏ. ஆர். சி. மகளிர் பள்ளியில் மாலையில் நடைபெறுகிறது. இதன் சார்பில் 1974இல் ஒவ்வொரு திங்கள் மூன்றாம் சனிக் கிழமைகளில் கல்வெட்டியல் தொடர் சொற்பொழிவு நிகழ்ந் தது; நடன. காசிநாதன் ஆற்றினார். முடிவில் தேர்வில் முதன்மை பெறுபவருக்குத் திரு. வி. க. வெள்ளிப் பதக்கமும், தவறாது வந்தோர்க்குச் சான்றிதழும் வழங்கப் பெற்றன.

**நக்கீரர் கழகம் :** *1941*இல் தோன்றியது; திரு. வி. க. துணை நின்றார்; தமிழ்க் கல்லூரியுடன், நமச்சிவாயர் நூலகம்,

மறைமலையடிகள் ஆராய்ச்சிக்குழு, டாக்டர் தருமாம்பாள் மகளிர் இலக்கிய வட்டம் உறுப்புக்களாம். கழகப் பயிரை வளர்த்தோர். கா.ரா. கோவிந்தராஜ முதலியார், தெ.பொ.மீ, அ. சிதம்பரநாதன் செட்டியார், ந. சஞ்சீவி போன்றார். ஆண்டுதோறும் நமச்சிவாயர் நினைவுச் சொற்பொழிவுகளைப் 10 நாட்கள் மாநிலக் கல்லூரியில் நடத்தி வருவது குறிப்பிடத் தக்கது. சைவம், வைணவம் தொடர் சொற்பொழிவுகள் நடத்தியது.

**சிறுவை மோகன சுந்தரம்** : *18-11-1916*. சென்னை. வையாபுரிப் பிள்ளையிடம் உதவியாளர், தினமணி வெளி யீட்டுத் துறை அச்சகப்பணி, கலைக் களஞ்சியம் அச்சுப் படிமப் பதிப்பாசிரியர் 53-79. நூற்றுக்கணக்கான தமிழ்த் திருமணங் கள், அறுபதுக்கும் மேல் சீர்திருத்தத் திருமணங்கள் நடத்தி வைத்துள்ளார். நமச்சிவாயர், திரு. வி. க. நூற்றாண்டு விழா எடுத்துள்ளார். மயிலை சீனி வேங்கடசாமி, இளவழகனார், நெ. து. சுந்தர வடிவேலர் மூவர்க்கும் மணிவிழா எடுத்து முறையே 'ஆராய்ச்சி அறிஞர்.' 'இலக்கியச் செம்மல்,' 'கல்வி நெறிக் காவலர்'பட்டங்கள் வழங்கச் செய்து பணி ஆற்றியவர். மாணவர் மன்றம் இவர் தோற்றியதே! நூல்கள்: ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால் வாழ்க்கை வரலாறு; ஜார்ஜ் வாஷிங்டன் (மொ. பெ.). அயராது உழைக்கும் அன்பாக ஊக்கும் அருமை யர். **முகவரி**: 'தமிழகம்', 22, பிள்ளையார் கோவில் தெரு, தண்டையார் பேட்டை, சென்னை-81.

**பழநி பாலசுந்தரனார்** : *27-11-1916*. ஓய்வுபெற்ற தமிழா சிரியர். கல்லூரி முதல்வர் இலக்கணம் நடாத்துவதில் ஏற்றம் சான்றவர். இலக்கணச் செல்வர், தமிழ் மாமணி, பெரும் புலவர் எனப் பட்டங்கள் பெற்றவர். **முகவரி**: 547, திரு வொற்றியூர் நெடுஞ்சாலை, சென்னை-21.

**சுந்தரர் தமிழ்க் கல்லூரி, சென்னை-7**. மகாவித்துவான் மே. வி. வேணுகோபாலப் பிள்ளை நிறுவியது. புரசைப்பாக்கம் கங்காதரேசுவரர் கோவில் தெரு. நகராண்மை உயர்நிலைப் பள்ளியில் மாலையில் புலவர், எம். ஏ. தேர்வுகட்குச் செல்லும் மாணாக்கர்கட்கு இலவயமாக வகுப்புகள். இலக்கணத் தாத்தா. வாரந்தோறும் ஞாயிறு காலை 9 மணிக்குத் தொல் காப்பியம், மாலை 3 மணிக்கு யாப்பருங்கலம் விருத்தியுரையும் கற்பித்தார்.

இப்படி இன்னும் நாகப்பட்டினம், (நெல்லை) பாபநாசம் போன்ற இடங்களில் தனித் தமிழ்க் கல்லூரிகள் அமைந்து ஆன்ற தமிழ் வளர்த்து வருகின்றன.

## 26. இதழியல் (Journalism)

இந்த நூற்றாண்டில் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பன இதழ்களே. சங்கங்களாலும் சமயங்களாலும் வளர்க்கப்பட்ட வண்டமிழ், இன்று வெளியீடுகளாலேயே வளர்ந்தேறி வருகிறது. பத்திரிகை யுகம் என்று கூடப் பகர்ந்துவிடலாம்.

இதழியலை முதன்முதல் தொடங்கி வைத்தவர்கள் வெனிஸ் நகரத்தினர், 16ஆம் நூற்றாண்டில் அதனை யடுத்தே பிற நாடுகள் துவங்கின. வளர்த்த பெருமை ஆங்கிலேயருடையதாகும். அச்சுப் பொறிகளே அடிப்படைக் கரணியமாகும்.

இந்தியாவில் வங்காளத்தில்தான் முதன்முதல் தோன்றியது; சமாசார் தீபம், கௌமுதி. பிரவாகர் போன்றன குறிப்பிடத் தக்கன. ஐரோப்பியர்கள் தங்கள் சமயப் பிரசாரத்திற்குத் துணையாக அச்சியந்திரங்களைக் கொணர்ந்து ஏடுகள் நடாத்தினர். இது நம் நாட்டில் தாளிகைகள் தோன்றிய கதையாகும். இந்தியாவில் மொத்தம் 6873 இதழ்கள் வெளி வருகின்றன. அவற்றுள் தமிழில் வருவன 451. தமிழகத்தில் வரும் ஏடுகள் 807.

நாள், வார, திங்கள் இருமுறை, திங்கள், காலாண்டு என இதழ்கள் பல்வகையன. தனித்தமிழ், இலக்கிய, கவிதை, சமய, கலை, கட்சி, சோதிடம், மருத்துவம், இனம் எனப் பல தரத்தன. தமிழில் தோன்றிய முதல் தாளிகை: 'தமிழ்ப் பத்திரிகை', சென்னை 1831, கிருத்துவ வார இதழ். செய்திகளை வெளியிட்ட முதல் நாளேடு: 'தினவர்த்தமானி' பெர்சிவல், சி. வை. தாமோதரம் பிள்ளை, வீராசாமி செட்டியார் 1855ல் வெளியிட்டது. இந்துக்களால் நடத்தப்பட்ட இதழ்: 'தத்துவ போதினி' 1864, சென்னை. க. துரைசாமி ஐயங்கார்; பிரம்ம சமாஜம் நடத்தியது. தொடங்கியவர் சுப்பராயலு செட்டியார்; பொன்னுசாமித் தேவரின் ஆயிரம் வெண் பொற்காசு நன்கொடை பெற்றது. பெண்களுக்காக முதன்முதல் தொடங்கப் பெற்ற இதழ்: அமிர்தவசனி 1865.

முதல் அரசியல் ஏடு **சுதேசமித்திரன்:** 1882இல் வார இதழ்; 87இல் வாரம் மும்முறை, 89 முதல் நாளிதழ். தொடங்கியவர்

ஜி. சுப்பிரமணிய ஐயர் - பொறுப்பாளர் சி. வி. சுவாமிநாத ஐயர். ஜி. சு. க்குப் பிறகு 1915-28 ஏ. ரங்கசாமி ஐயங்கார், 28-62 சி. ஆர். சீனிவாசன் பொறுப்பினர். தென் ஆப்பிரிக்க இந்தியரின் அறப்போருக்கு உறுதுணையாக இருந்தது. காந்தியடிகளைத் தமிழகத்திற்கு அறிமுகம் செய்து வைத்த பெருமையது. தமிழகத் தலைவர்களும் பிறரும் எழுதிய ஏடு இது.

விடுதலை இயக்க வீறீன். ஒரு பகுதியாக மறு அலையாகவே இதழ்கள் இலங்கின. தேச சேவையே தலையாய நோக்கு. விடுதலைக்கு முன் அரசியல் எப்படி நாட்டுப்பணிக்காக அமைந்ததோ, அப்படி இதழ்களும் நாட்டுத் தொண்டாற்றின; விடுதலைக்குப் பின் எங்ஙனம் அரசியல், வணிகமாயிற்றோ அங்ஙனம் இதழ்களும் வணிகமாயின.

**மணிக்கொடி** புதுத்தமிழ் இயக்க ஏடு. ஒரு இலக்கியப் புது வெள்ளத்தை உண்டாக்கியது; எழுத்துலகில் மாபெரும் புரட்சி ஏற்படுத்தியது. தமிழிதழ் உலகில் திருப்பத்தைத் தோற்றிய ஒப்பற்ற இதழ். டி. எஸ். சொக்கலிங்கத்தின் துணையுடன், கு. ஸ்ரீநிவாசன் 33இல் தோற்றிய வார ஏடு. ஆசிரியர் வ.ரா. சிந்தனையைத் தூண்டுவது, தரமற்ற எதையும் ஏற்காது ஒதுக்குவது, கதை கட்டுரைகளில் தெளிவு தருவது; ஆற்றல் சான்ற தமிழ் நடையால் எதனையும் இனிதே உணர்த்துவது போன்ற எண்ணத்தில் எழுந்து நடந்தது. வாழ்வின் அனைத்துத் துறைகளையும் அளாவியது. பாரதியின் 'பொருள் புதிது, முறை புதிது, நடை புதிது' எனும் இலக்கணத்திற்கு இலக்கணமாய் இயன்றது. ஞாயிறு அன்று செய்திகளையும் கட்டுரைகளையும் ஏந்தி வந்தது.

மணிக்கொடி எழுத்தாளர்கள்: வ.ரா. பி. எஸ். ராமையா. புதுமைப் பித்தன், கு. ப. ரா, ந. பிச்சமூர்த்தி, லா. சா. ரா, சி சு. செல்லப்பா, சிட்டி, சிதம்பர சுப்பிரமணியன், எம். வி. வெங்கட்ராம், க. நா. சு.

ஒரு பெரும் மறுமலர்ச்சியை உருவாக்கிற்று; புதுமை எழுத்தாளர்கள் புரிந்து கலந்து ஊடாடும் சூழலை உண்டாக்கிற்று; சிதறிக்கிடந்த சீரிய எழுத்தாளர்களை ஒருங்கிணைத்தது. வாசகர்களை ரசிகர்களாக்கி அவர்களிடையே இலக்கிய எழுச்சியை ஏற்படுத்திற்று.

35இல் வ. ரா. இலங்கை சென்று வீரகேசரி ஆசிரியரான பின், பி. எஸ். ராமையா ஆசிரியரானார். சிறுகதை இதழாக்கி

னார்; சிறுகதைக்கு இலக்கணம்-வரையறை வகுத்தது. சிறு கதையின் பொற்காலத்திற்குக் கட்டியங் கூறியது. 38இல் நின்று போனது. மேலும் விவரமறிய பி. எஸ். ராமையாவின் 'மணிக் கொடி காலம்' காண்க. இதன் பொன்விழாவினை பாரதி பாசறை சிட்டி போன்ற பொன்விழாக் குழுவுடன் இணைந்து கொண்டாடியது; கருத்தரங்கு நடாத்தியது.

**கலாமோஹினி**: திருச்சியிலிருந்து 1938-42இல் வெளி வந்த திங்களிதழ்; கடைசி இரண்டு மூன்று இதழ்கள் சென்னையி னின்று வந்து பின் நின்ற முழு இலக்கிய ஏடு; இலக்கியப் பிரக்ஞையுடன் வெளியிடப்பட்ட தரமும் திறமும் மிக்க, 48 பக்க சிறந்த சீரிய ஏடு. மணிக்கொடி நின்றதும் அந்த இடம் வகித்தது. முகப்பில் 'இந்தமாத அதிதி' எனக் கு. ப. ரா. ந. பி, பாரதிதாசன் போன்றாரின் படம் போட்டு உள்ளே ஒரு பக்கம், அவர்கள் பற்றிவரும். கிரௌன் அளவு. 48 பக்கங்கள். அரசியலே இருக்காது. மேலப் புலிவார் சாலை இபுரகீம் பார்க் எதிரே பிள்ளையார் கோவிலை ஒட்டிய சித்தப்பா அரசமர வீட்டு மாடிதான் அலுவலகம். அங்கு அச்சுக் கோக்கப்பட்டு வேறு அச்சகத்தில் அடிக்கப்பட்டது. சிறுகதைக்கு வரைபடத் திற்குப் பதில் **போட்டோவே போட்ட முதல் ஏடு**. நன்றாகவே ஓடியது.

வி. ஆர். ராஜகோபால், கலைவாணன், சிரஞ்சீவி மூவரும் தலைக்கு ரூ 500 போட்டுத் தொடங்கியது. ந.பி. 'ஜம்பரும் வேட்டியும், கு. ப. ரா. 'சிறிது வெளிச்சம்' இதில்தான் வந்தன. மணிக்கொடி மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் அனைவ ருமே இதில் தொடர்ந்து எழுதி வந்தார்கள். சிறுகதைக்கு அப்பாற்பட்ட சங்கதிகளையும் தாங்கி வந்தது. கலைவாணன் கவிதைகள் ஒவ்வொரு இதழிலும் இடம் பெறும். 'டி.கே.சிக்குக் கம்பராமாயணத்தில் கை வைக்க உரிமை இல்லை' என்ற விவாதத்தை ஆணித்தரமாக எழுப்பி வந்தது. தற்கால ஐரோப் பியக் கிண்டல் சுவை ஆசிரியர்களில் முதல்வரான யரோஸ்லாவ் ஹாஸக் எனும் செக்கோஸ்லவேகிய நாவலாசிரியரின் 'நல்ல போர்வீரன் ஷ்விக்' என்ற புதினத்தைப் பெயர்த்து வெளியிட் டது. இப்படி இலக்கிய ரீதியில் ஏற்றம் சான்ற இதழாக இலங் கியது. இதன் தொகுதிகள் திருச்சி முசிறியை அடுத்த திரு நாராயணபுரம் ராமானுஜ ரெட்டியாரிடம் உள. மணிக்கொடி காலம் என மொழியுமாப் போலே 'கலா மோகினி காலம்' என மயங்காது மொழியலாம். மணிக்கொடி நின்றதும் அதன் இடத்தினை நிரப்பிய நல்லேடு எனத் தயங்காது நவிலலாம்.

**சாலி வாஹனன்:** இராமநாதபுரம் கல்லுப்பட்டியை அடுத்த விசாலயங்கோட்டை. 37-38இல் வளவர் கல்லூரியில் இன்டர் பயில வந்தவர் இதழ் துறையில் இறங்கினார். ஒரு முறை காவலர் இவரைத் தேடிக் கல்லூரிக்கு வர, முதல்வர் அழைத்து 'ஒன்று பத்திரிகை நடத்து அல்லது படி' எனச் சொல்ல, 'நான் பத்திரிகை நடத்தவே விழைகிறேன்' எனப் படிப்பை விட்டவர்! காந்தீயவாதி; நேதாஜியிடம் ஈடுபாடு மிக்கவர். அவர் பற்றித் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதி அச்சுக்கோர்த்து அமுக்கி எடுத்து யாமத்தில் கல்லூரிகளில் போட்டு விடுவர் கலைவாண ரும் இவரும். கடைசியாக ராஜாஜி துணையால் காதி போர்டில் பணியாற்றினார். சிறந்த கவிஞர். மரபுக் கவிதைகள் நிறைய எழுதியுள்ளார். நூலாக ஆக்கிப் பார்க்கும் ஆர்வம் தமிழுலகிற் கில்லை! இன்றும் சென்னையில் வாழ்கிறார். மகன் பட்டாபி ராமன்.

**பொன்னி :** தோற்றியோர் இதழின் உயிரும் உடலுமான முருகு சுப்பிரமணியம், அரு. பெரியண்ணன். 47இல் புதுக் கோட்டையிலிருந்து திங்கள் இதழாக வந்து, 50இல் திங்கள் இருமுறை ஏடாகச் சென்னையிலிருந்து போந்தது. 52இல் நின்றது. இது பாரதிதாசன் புகழ் பரவப் பிறந்தது என்று கூட இயம்பலாம். பாரதிதாசன் பரம்பரை எனக் குறிப்பிட்டுப் பல கவிஞர்களை அறிமுகப்படுத்தியது: மு. அண்ணாமலை, சாமி. பழனியப்பன், நாரா. நாச்சியப்பன், நாகமுத்தையா, முடியரசன், பெரி. சிவனடியான், குலோத்துங்கன் போன்றார் குறிப்பிடத் தக்கோர். பாவேந்தர் மணிவிழா மலர் வெளி யிட்டது. பொங்கல் மலர்கள் போற்றுமாறுள்ளன.

பாவேந்தர், கலைஞர் கருணாநிதி, திருக்குறளார் முனுசாமி, டி. கே. சீனிவாசன், கண்ணதாசன், தில்லை வில்லாளன் போன்றார் எழுதினர். முதன் முதல் பெரியார், அண்ணா, பாவேந்தரின் முழு வண்ணப்படங்கள் வெளியிட்ட பெருமையது. மொழி இன நாட்டுப்பற்று மிக்க நல்லேடாக நிலவியது. ஐந்தாண்டுகளே உலவினாலும் சுவடுபதித்துச் சாதனை புரிந்தமை குறிப்பிடத் தக்கது.

**முருகு சுப்பிரமணியம் :** 1982. கோனாப்பட்டு. புதிய எழுத்தாளர்களைப் போற்றியவர். தமிழ் இதழ் உலகில் புதுமைகள் புகுத்திப் புரட்சி கண்டவர். 44-46 குமரனில், 53இல் கோலாலம்பூர் தமிழ் நேசனில், 54-62 சிங்கப்பூர் தமிழ் முரசில், 62-76 தமிழ் நேசனில் பணியாற்றி 77-82 'புதிய

சமுதாயம்' திங்களிதழ் கோலாலம்பூரில் நடத்தியவர். மலை நாட்டில் இவர் முத்திரை பெறாத இலக்கிய சமுதாய நிகழ்ச்சிகள் ஏதுமில்லை என்னுமாறு ஏற்றம் பெற்றிருந்தவர். பரிசுக் கதைக்குப் பவுன் பரிசளித்த பெரியார். மகன்கள்: செல்வம், பாண்டியன் தொலைக்காட்சியில் பணியாற்றுகின்றனர்.

**சரஸ்வதி** : திங்களிதழ். கோவை விஜயபாஸ்கரன் போன்றார் ஆசிரியராக இருந்தனர். மணிக்கொடி, கலாமோகினி வரிசையில் வைத்து எண்ணத் தக்க ஏடு. வல்லிக்கண்ணனின் 'சரஸ்வதி காலம்' கொண்டு இதன் வரலாறும் சாதனையும் அறியலாம்.

**எழுத்து** : சி. சு. செல்லப்பா நடத்திய திங்கள் இதழ். 1958 முதல். பாரதி பாசறை இதன் வெள்ளி விழாவினைக் கொண்டாடியது. மணிக்கொடி கலாமோகினி மறைந்த பின் மறுமலர்ச்சி எழுத்தாளர்களின் படைப்புப் பீடமாகப் பிறங்கிய சிறிய-சீரிய ஏடு. அறுபதுகளில் இலக்கிய நிலையறிய உதவும் அமுத சுரபி. விமர்சனக் கலை வளர்த்த வளமான இதழ்.

**சுதந்திரச் சங்கு** : 1932-1933இல் முதலில் வாரம் இருமுறை, பின்னர் மும்முறையும் வந்த காலணாப் பத்திரிகை. காந்தீயத்தையும் தேசியத்தையும் பாமர மக்களிடம் பரப்பி, பரபரப்பான தலைப்புகள். பலமான தாக்குதலும் தொடுத்து சூடும் துடிப்பும் வேகமும் கொண்ட நடையில் நாட்டுப் பாடல்களைமிடைந்து துணிவுடன் தொண்டாற்றிய ஏடு. குரங்காட்டி மந்திரி, சோக்குப் பிள்ளை போக்கு, இந்தியாவும் இயேசுநாதரும், என்ன விநோதம்பாரு, சவுக்கடி மசோதா போன்றன சில தலைப்புகள்.

**சங்கு கணேசன்** : கும்பகோணம். தந்தை சுந்தரேச சாஸ்திரிகள். 1908 வாக்கில் கணேஷ் காபி ராம சுப்பையர் உதகையிலிருந்து தருவித்துத் தம்புச்செட்டித் தெருவில், காந்தீய சகாப்தத்திற்கு முன் திலகர் நாளில-தேசிய இயக்கத்திற்குப் பணம் தந்து லாபத்தில் நூல்கள் வெளியிடச் செய்தல். 90 வயதில் பழைய மாம்பலத்தில் இருப்பதாகக் கேள்வி: ஒரு பையன், பெண்; மனைவியும் தேசியத்தில் உதவல்.

**சங்கு சுப்ரமணியம்**: 18-11-1905. தேரழுந்தூர். இந்தி ஆங்கிலம தமிழ் வடமொழியும் அறிந்தவர். காந்தியடிகளின் ஆரோக்கிய வழி, இல்லற மகாரகசியம், ஹரிஜன சேவை மூன்றையும் பெயர்த்துளார். ஜயதேவரின் கீதகோவிந்தத்தைச்

காவியமாக ஆக்கியுள்ளார். 33 வரை சங்கில் பணியாற்றிப் பின் தினமணி துணை ஆசிரியரானார். கௌடியாமடத் தொடர்பு கொண்டவர். பஜனை பண்ணுவார். தேசியத்தில் துடித்தெழுந்தவர். தந்தை தென்னாப்பிரிக்க சுந்தரம் ஐயர்.

**ஆனந்த போதினி :** தோற்றுநர் நா. முனிசாமி முதலியார். ஆசிரியர் ஆரணி குப்புசாமி முதலியார். 40 பக்; 2 அணா. ஆண்டுச் சந்தா 1ரூ. 20000 சந்தாதார்கள் கொண்ட சிறந்த மாதிகை. மனமோகினி என்ற நாவல் மாதிகை வெளியிட்டனர். பொதுமக்கள் இதழ்களாகப் பொலிந்தன.

**லோகோபகாரி :** சென்னை. 1897இல் மாதம் மும்முறை, 98 முதல் வார இதழ், ஆசிரியர் வி. நடராச ஐயர். ஆண்டுச் சந்தா 3ரூ. பல்வேறு செய்திகள் கொண்டது. அந்நாளில் மிகுந்த முகவர் கொண்ட ஏடு இதுவாகும்; சென்னையில் 400, வெளியூரில் 1300. பின்னர் பரலி. சு. நெல்லையப்பரும், அதன்பின் சாமி சிதம்பரனாரும் நடத்தினர்.

**ஜநவிநோதினி :** திங்கள் இதழ். சென்னை. 28 பக். சென்னைக் கல்வித் துரைத்தனத்தாரால் வெளியிடப் பெற்றது. இந்தியப் பெரு நகரங்கள், பேராசிரியர்கள் வரலாறு, சிறுவர்க்கான அறிவுக் கதைகள். 1870-90 வரை நடந்தது. கா. நமச்சிவாய முதலியார் இதில் வந்த கட்டுரைகளைத் தொகுத்து 4 பகுதிகளாக வெளியிட்டார்.

**இந்தியா :** மகாகவி பாரதியார் 1906இல் தொடங்கியது. முதல் முதல் (கார்ட்டூன்) கருத்துப் படம் வெளியிட்ட சிறப்பினது. 8 பக்; வார ஏடு. ஆங்கில அடக்கு முறையால் அக். 1908 முதல் புதுவையினின்று வந்தது. 1910-மார்ச்சில் நின்றது.

**விவேகபோதினி :** திங்கள் ஏடு. 1908 சென்னை. ஆசிரியர். சி. வி. சுவாமி நாதய்யர். 32 பக். இதழ் $5\frac{1}{2}$ அணா. ஆண்டுச் சந்தா ரூ 4. ஓராண்டிதழ்கள் தொகுக்கப் பெற்று ரூ 5க்குத் தரப்பட்டது. எனவே தொடர் எண் தரப்பெற்றது. ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் பொருளடக்கம் தரப்பட்டுளது. தலையங்கங்கள், பயணக் கட்டுரைகள், சேக்சுபியர் நாடகத் தமிழாக்கம், கவிதை, சிறுவர் பெண்கள் உபாத்தியாயர் பக்கங்கள் பயனுடையவை. இந்த ஆசிரியரே 1892இல் விவேக சிந்தாமணி நடத்தியுள்ளார்.

வார ஏடுகள் : **மகரவிகட தூதன்** 1886, சென்னை. **திரிசிரபுரத் தமிழ்ச் செல்வன்**, 1890, திருச்சி. அமிர்தம் பிள்ளை. **நாகை நீலலோசனி** ஜி. சதாசிவம் பிள்ளை. **விவேக திவாகரன்** 1893. திருச்செங்கோடு. டி.ஏ. முத்துசாமிக் கோனார். **ஜன விநோதினி** 1895. தஞ்சாவூர். ஏ. பஞ்சாபகேச ஐயர். **பிரபஞ்சமித்திரன்** 1898 சென்னை. **யதார்த்தவசனி** 1986 கும்பகோணம் டி. வி. கோவிந்தசாமிப் பிள்ளை.

திங்கள் இருமுறை : **சுகுணபோதினி** 1883. **சுகசீவனி** 1887. பெங்களூர். சி. பி. சோமசுந்தர முதலியார். **ஞானாமிர்தம்** 1888 சென்னை. **விஜயத்துவஜம்** 1894. பாளையம் கோட்டை. சி. தாமோதரம் பிள்ளை. **இந்துவர்த்தமானி** 1904. திருவாரூர். டி. எஸ். ராகவாச்சாரியார். **பத்மஜோதி** சின்னையா செட்டியார் சென்னை.

திங்கள் இதழ் : **நற்போதகம்** 1848. நெல்லை கிருத்துவர். **தேகோபகாரி** 1860. நாகர்கோவில், கிருத்துவம். **கலாவர்த்தமானி** 1866, சென்னை. **தத்துவபோதினி** 1864, சென்னை துரைசாமி ஐயங்கார். **சித்தாந்த சங்கிரகம்** 1877 சென்னை. கரூர் ராமராவ், **கோயமுத்தூர் கலாநிதி** 1880. கோழி பகடால நரசிம்மலு நாயுடு. **ப்ரம்ம வித்தியா பத்திரிகை** 1886, சிதம்பரம் கு. ஸ்ரீநிவாச சாஸ்திரி. **உபாத்தியாயர்**. சென்னை 1887. **சத்திய தூதன்**, சென்னை; **மாதர் மித்திரி**. சென்னை; **ஸ்ரீலோக ரஞ்சினி**. பெல்லாரி முனுசாமி முதலியார். **பெண்மதிபோதினி** 1891 சென்னை. **மாதாந்த சட்டப் பத்திரிகை** 1893 சென்னை. வி.டி. வேங்கடராம ஐயர். **ஞானபானு** 1895. சென்னை. சுர. ஆலால சுந்தரம். **மாணவர் போதகம்**. தூத்துக்குடி. எம். பி. ஈசுவர முத்தையா. **சித்தாந்த தீபிகை** 1897. சென்னை. பி. சி. கலியாண சுந்தர நாடார். ஜெ. எம். நாகரத்தினம் பிள்ளை; **ஞான சந்திரிகை** சென்னை. வி. நடராச ஐயர்; **ஞானபோதினி** சென்னை. வி. கோ. சூ, எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை; **மாதர் மனோரஞ்சினி**. 1899, சென்னை. சி. எஸ். ராமசாமி ஐயர்.

**விநோத விசித்திரப் பத்திரிகை** 1900. **ஜனப்பிரியன்** சென்னை கே. கிருஷ்ணசாமி ஐயர். **அறிவு விளக்கம்** 1901. திருவனந்தபுரம். சோ. சிவஞான தேசிகர். **சைவபோதினி**. நெல்லை. சி. சி. குழந்தைவேலுப் பிள்ளை. **விவேகபாநு** 1902. நெல்லை. சுவாமி வள்ளி நாயகம்; **யதார்த்த பாஸ்கரன்** சென்னை. விச்சூர் முத்துக்குமாரசாமி முதலியார்; **ஞானசாகரம்** நாகை வேதாசலம் பிள்ளை. **கிராமாதிகாரி கெஜட்** 1903. சென்னை

டி. பி. பார்த்தசாரதி ஐயங்கார். **திருநாவுக்கரசு** *1904*. நெல்லை. தி. பா. சிவராம பிள்ளை, திரவியம் பிள்ளை; **பாதரிசனம்**, சென்னை; **விவசாய தீபிகை** சென்னை. என். வானமாமலைப் பிள்ளை; **ஸ்ரீவாணி விலாசினி**, திருவரங்கம். **இந்து அபிமானி** *1905* சென்னை. சி. அன்புவேலு முதலியார்; **சக்கரவர்த்தினி** *1905* சென்னை. எம். எஸ். நடேசய்யர்; **தமிழகம்**; தஞ்சாவூர். டி. ராசமையங்கார், சி, எஸ், முத்துசாமி ஐயர்; **நல்லாசிரியன்**, சென்னை. கா. ரா. நமச்சிவாய முதலியார்; **தமிழ்மாது** *1906*. சென்னை, கோ. ஸ்வப்பநேஸ்வரி அம்மாள்; **தமிழ் நாஷனல் பத்திரிகை** *1907*. நெல்லை. **ஆரோக்கிய வழி** *1908*. சென்னை. டி. ஏ. சாமி நாதையர்; **வித்யா விஹாரிணி**, சென்னை. சி. என். கிருஷ்ணசாமி ஐயர்; **ஜனாபிமானி**, சென்னை. ஜி. ஏ. வைத்திய ராமன்; **இதகாரிணி** *1909*. சென்னை. பண்டிதை விசாலாட்சி அம்மாள்; **தருமம்** புதுவை. ஆர் கிருஷ்ணசாமி ஐயர்; **பிழைக்கும் வழி** சென்னை. ஜி. ஏ. வைத்தியராமன்; **வித்தியாபாநு** மதுரை. மு. ரா. கந்தசாமிக் கவிராயர், மா. கோபாலகிருஷ்ணையர்; **ஜகன் மோகினி** வை. மு. கோதைநாயகி.

**காலாண்டு இதழ்** : **மஹாராணி** *1887*, சென்னை. **ஆரிய தூதன்** *1897*, காஞ்சிபுரம். **சந்து வர்த்தமான சாரம்** *1901*, சென்னை. திவான் பகதூர் டி. வி. கிருஷ்ணமாச்சாரியார். **கவிதை இதழ்கள்** : பாரதி தேஜோ மண்டலம் (பாரதிதாசன்), கவிதை (தெசிணி), கவியமுது, வானம்பாடி, பாரதி கவிதா மண்டலம் (எஸ். ஆர். சுப்ரமணியம்), கவியுகம், கவிப்புனல், முல்லைச்சரம். **இலக்கிய இதழ்கள்** : செந்தமிழ் (மதுரை), செந் தமிழ்ச் செல்வி. (சென்னை). தமிழ்ப் பொழில் (கரந்தை), தமிழ்ச் செல்வி (புதுவை). **சமய ஏடுகள்** : ஞானசம்பந்தம் (தருமபுரம்), குமரகுருபரன் (திருப்பனந்தாள்), மெய்கண்டார் (திருவாவடுதுறை), ஞானபூமி, கடவுள், சக்தி, தர்மசக்கரம், இராமகிருஷ்ண விஜயம், திருக்கோயில் (அற நிலையத் துறை). **அறிவியல் ஏடுகள்** : கலைக்கதிர், விஞ்ஞானச் சுடர், அணுசக்தி; களஞ்சியம். **மகளிர் இதழ்கள்** : அமிர்தவசனி, சுகுணபோதினி, பெண்மதி போதினி, மாதர் மனோரஞ்சினி, சிந்தாமணி (பாலாம்பாள்), மங்கை, மங்கையர் மலர், **சிறுவர் ஏடுகள்** : அணில், முயல், ஜில்ஜில், டமாரம், அம்புலிமாமா, கண்ணன், பாப்பாமலர், சங்கு, பூஞ்சோலை, கோகுலம்.

**ஆனந்த விகடன்** : *1926* பிப்ரவரி - தோற்றுநர் பூதூர் சா. வைத்தியநாதையர் (*1883-1942*). வாசன் - ரூ. 200 க்கு

வாங்கி 28முதல் புத்துயிர் அளித்துப் புதுமெருகோடு நடத்தல். 32 சனவரியில் மாதமிருமுறை, மே முதல் மும்முறை, நவம்பரில் வார இதழ் ஆனது. கல்கி 31 இறுதியில் பணியேற்றார் - 40 வரை. தேவன், துமிலன், ரா. அ. பத்மநாபன், றாலி, ரா. பார்த்தசாரதி, நாரதர் சீனிவாசராவ், நாடோடி, மணியன், தாமரை மணாளன், சாவி, ஆம்பூர் கேசவன், ஜே. எம். சாலி, இரா. வேலுச்சாமி, பரணிதரன், எஸ். பாலசுப்பிரமணியன் போன்றார் ஆசிரியர் குழுவினர். மாலி, சேகர், மதன், சில்பி, கோபுலு, சித்ரலேகா போன்றார் ஓவியர் குழுவினர்.

33 இல் சிறுகதை, 34-இல் நாவல், 38-இல் கதை கட்டுரை, 39-இல் 56-இல் சிறுகதைப் போட்டிகள் நிகழ்த்தியது. உ. வே. சாமிநாதையருக்கு 6-3-35 இல் அவரது 80-வது நிறைவு விழா வின்போது முகப்புக் கட்டுரை போட்டுத் ‘தமிழ்த் தாத்தா’ பட்டம் சூட்டியது. 40 புத்தாண்டு தொடங்கி 42 வரை 122 இதழ்களில் ‘என் சரித்திரம்’ வெளியானது. பி.ஸ்ரீ. ஆச்சாரியா இலக்கியச் சோலை, கம்ப சித்திரம், சித்திர விளக்கம், சிவ நேசச் செல்வர்கள், திவ்யப் பிரபந்த ஸாரம் தொடர்கள் தீட்டினார். ராஜாஜி நிறைய கதை கட்டுரை வரைந்தார். இப்படி விகடனில் எழுதாத எழுத்தாளர்களே இல்லை என லாம். ‘உண்மையில் ஒரு தமிழ் வளர்ப்பு இயக்கமாகவே இருந்து வந்துளது’ (ரா. அ. பத்மநாபன்).

ஆபாசமோ அமங்கலமோ இல்லாத ஏடு. பகுத்தறிவுப் போட்டி, தென்னாட்டுச் செல்வங்கள், ஆடல் பாடல், அப்பளக் கச்சேரி, ஏட்டிக்குப் போட்டி, வாக்கு வேட்டை (கல்கியின் முதல் கட்டுரை, சிறுகதை), மாவட்ட, மாநில மலர்கள், பரணீதரனின் தல யாத்திரை, மெரினாவின் நாட கங்கள், தீபாவளி மலர்கள், வண்ணப் படங்கள், இவர்கள் சந்தித்தால், மாணவர் திட்டம், சினிமா விமர்சனங்கள்.

பரிசுக் கதைகள் தமிழ் நாவல் - சிறுகதை இலக்கியத்துக்கு ஒரு புதிய பரிணாமத்தை ஏற்படுத்தியது. சிறுகதை - நாவல் இலக்கிய உலகில் பொற்காலத்தை உருவாக்கியது ஆனந்த விகடன்தான் (தண்டாயுதம்). எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் தமிழ்ச் சிறுகதை இலக்கிய வளர்ச்சிக்கு விகடன் முன்னோடிப் பணி புரிந்திருப்பதை யாரும் மறுக்க முடியாது (எழில் முதல்வன்). ஒரு பல்கலைக் கழகம் செய்ய வேண்டிய பணியை விகடன் செய்து வருகிறது. எந்தத் துறையைப் பற்றி ஆராய்கிறவர்களும் விகடனை அணுகியே தீரவேண்டும். விகடன் ஒரு சரித்திரப் பேரேடு; அஃதோர் பல்கலைக் கழகம் (க. த. திருநாவுக்கரசு).

பொன் விழா ஆண்டில், முன் ஓராண்டில் வந்த 52 இதழ்கள் பற்றி விமர்சனத் தொகுப்பு வல்லார்களைக் கொண்டு வரையப்பட்டது. பொன்விழா மலரும் பொன்னனையது. 'ஆனந்த விகடன் என்பது அரை நூற்றாண்டுச் சரித்திரம். நாட்டின் வரலாற்றோடு வளர்ச்சியோடு இரண்டறக் கலந்து விட்ட சரித்திரம் (மு. மு. இஸ்மாயில்). தமிழ்ப்பத்திரிகைகளில் விகடன் ஒரு முன்னோடியாக இருந்து வருகிறது. பெரியோரும் சிறியோரும் விரும்பிப் படிக்கத் தக்க குடும்பப் பத்திரிகையாகத் திகழ்கிறது (எம். ஜி, ஆர்.).

**கலைமகள் :** *1932* சனவரி. மூன்றாண்டுகள் ஆசிரியர் டி. எஸ். ராமச்சந்திரஐயர். ஒவ்வொரு துறையில் வல்ல எழுத்தாளர்கள் ஆசிரியர் குழுவில் அமைந்திருந்தனர். உ. வே. சா. தோன்றாத் துணையாக இருந்தார்; முதலில் இவர் கட்டுரையும் முடிவில் பதிப்பு நூலும் அணி செய்யும். கா. ஸ்ரீ. ஸ்ரீ. போன்றார் துணையாசிரியராக இருந்துளார். தோன்றிய நாள் தொடங்கி பெ. நா. அப்புசாமி உறுதுணை செய்தார். கி. வா. ஜகந்நாதன் பல்லாண்டுகளாக ஆசிரியர். பொன்விழா 82 இல் ஒரு வார விழாவாக நடந்தது. **முகவரி :** 87. முண்டகக் கண்ணி அம்மன் கோயில் தெரு. அ. பெ: 604, மயிலாப்பூர். சென்னை-4. (760 11,12)

**தினத்தந்தி :** *1942*. முதலில் 'தந்தி' என்றே தோன்றியது. 15-10-42 இல் மதுரையில் பதிவாகி 1-11-42 முதல் வெளியானது. பின்னரே தினத்தந்தி எனப்பட்டது. இரு நிலையிலும் முதுகெலும்பென அமைந்தவர் மேதாவி (கோ. த. சண்முக சுந்தரம்), மக்கள் தமிழில் மக்கள் ஏடாக உருவாக்கினார் ஆதித்தனார். 'பேச்சுத் தமிழைக் கொச்சை நீக்கி எழுத வேணும் என்பது அவர் Golden rule. புலவர் தமிழைக் கல்கி எளிய தமிழாக்கினார்; தந்தி மக்கள் தமிழாக்கியது என்பார் சி. பா. ஆதித்தனார். காட்டு : புள் (புலவர்), பறவை (கல்கி), குருவி (தந்தி). எளிய தமிழில் எழுதுவதற்காகவே, தமிழுக்குப் பல புதிய சொற்களை உருவாக்கித் தந்தது தந்தி. செய்திகளை மக்களுடைய கோணத்திலிருந்தே கண்டு வெளியிடவேண்டும் என்பது ஆதித்தனார் சித்தாந்தம்.

'இந்தியாவிலேயே தமிழ்ப் பத்திரிகைகள்தான் அதிகம் விற்பனை ஆகின்றன; இதற்குக் காரணம் பேச்சு வழக்கில் உள்ள மொழியையே அவர்கள் பயன்படுத்துகிறார்கள்' என்றார் பண்டித நேரு. வழிகாட்டியது தந்திதான் எனத் துணிந்து கூறலாம். தந்தியில் படிப்பது புலவர் போற்றும்

இலக்கியத் தமிழ் அல்ல; ஆனால் உயிர்த் தமிழ்-மக்கள் பேச்சு வழக்கில் உள்ள தமிழே. தந்தியின் வெற்றி வளர்ச்சிக்கு இதுவே முதன்மைக் கரணியம்.

மக்களிடம் பத்திரிகை படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்தியதே தந்தி எனத் தயங்காது சாற்றலாம். செய்தித்தாள் சிந்தையினை ஊட்டி வளர்த்தவரே ஆதித்தனார்தான்! இதழியல் உலகில் ஒரு மாற்றம், புரட்சி ஏற்படுத்தியது தினத்தந்தி என்றால் மிகையன்று. 'காலையில் தந்தி, மாலையில் முரசு' என வழக்கப்படுத்தி விட்டது.

**பெருஞ்சித்திரனார் இதழ்கள்** மூன்று; மூவகையின, முத்திறத்தன, **தென்மொழி** *1-5-59* இல் தொடங்கி 15-4-60 ல் இடைநின்று 63 பிப்பிரவரியில் நடையிடத் தொடங்கி இன்று வரை மொழி இனம் நாடு எனும் முந்நலம் கருதி வரும் கொள்கை முழக்க இதழ். தமிழ் வரலாற்றில் முழுத்தூய செந்தமிழில்முதன் முதலாக வந்த தனித்தமிழ் இலக்கியத்திங்கள். ஓர் இயக்கத்தை வடிவமைத்த தமிழுயிர்ப்பாக வரும் ஏடு. அரசியல் அறவியல் அறிவியல் இலக்கியவியல் மொழியியல் முதலான பல்துறைகளில் கடந்த 25 ஆண்டுகளாக ஆயிரக்கணக்கான கட்டுரைகளை வெளியிட்டும், புதுவகை இலக்கியங்களைப் படைத்தும், தமிழ்ப் படைப்புகளை ஆங்கிலப் பெயர்ப்பாக்கியும், பிறமொழிப் படைப்புகளைத் தமிழில் ஆக்கியும் தமிழிலக்கியத்தைச் செழுமைப்படுத்தி வருகிறது. பாட்டிலக்கியங்களோ பேராளம்.

**தமிழ்ச் சிட்டு :** 67 முதல், சிறுவர்கட்கான கலை இலக்கிய அறிவியல் திங்கள் இதழ். **தமிழ் நிலம்:** தென்மொழிக்கொள்கைகட்கு அரணாகவும், புற இயக்கத்தின் கொள்கை முரசாகவும், 82 முதல் வரும் கிழமை இதழ். உலகத்தமிழினத்தின் சிக்கல்கள், தமிழீழப் போராட்டத்திற்கான தீர்வு-உள்நாட்டுச் சிக்கல்கள் என்றின்னவாறு உணர்வூட்டும் படைப்புகளைத் தாங்கி உலா வரும் உயிரேடு. இந்த மூன்றையும் முனைப்புடன் நடாத்தி வரும் பாவலரேறு, 'தம் கொள்கையில் உறுதியுடன் நிற்கும் ஒரே பாவலர்' எனப் பாவேந்தரால் பாராட்டப் பெற்ற பெருமகனார். (காண்க பக். 568)

**சங்கொலி :** *1968*. திங்களிருமுறை ஏடு. சேலம் மாவட்ட இதழாக இலங்குகிறது. பல சிந்தனையாளர்களையும் படைப்பிலக்கியங்களையும் உருவாக்கியது. 'தலையங்கம் இல்லா ஏடு தலையில்லா முண்டம் போன்றது. சங்கொலி தலையங்கம்

ஒவ்வொன்றும் ஒவ்வொரு பனுவல்' என்கிறார், இலக்கியக் குரிசில் மலேயா மா. இராமையா. 'சங்கொலிப் பரம்பரை' ஒன்றையே உருவாக்கியுள்ளார்; இப்படை நசிவு இலக்கியத்தை வீழ்த்தி நல்லிலக்கியம் படைக்கும் ஆற்றலது. சங்கொலிக் குடும்பத்தைச் சார்ந்த எழுத்தாளர்கட்கு ஈராண்டுகட்கு ஒரு முறை ஒருநாள் முழுதும் கலைவிழா நடாத்தி, பட்டாடை போர்த்திப் பெருமைப்படுத்துவது தமிழகத்திலேயே தனிச் சிறப்பு. இலக்கியத்தோடு சமுதாயம் பொருளாதாரம் அரசியல் பற்றியும் ஆக்கபூர்வமான எழுத்தோவியங்களைத் தாங்கிவரும் தரமான இதழ். ஆலமரமாகக் கிளைபரப்பி நிற்கும் இதன் ஆணிவேராக அமைபவர் சோலை இருசன். 'கவர்ச்சியாகப் பத்திரிகைகள் நடத்திப் பிழைப்பு நடத்தும் பலர் மலிந்துள்ள இந்தத் தலைமுறையில், கொள்கைக்கு என்று பத்திரிகை நடத்துபவர்: இந்தத் தலைமுறையில் நாட்டுக்கு நல்ல பணி செய்யும் எழுத்தாளர் வரிசையில் முன் நிற்பவர்; முன்னேற்றச் சங்கை ஒலிப்பவர்' (குன்றக்குடி அடிகளார்). சோலை இருசன் சுடரும் தமிழரசன் (கவியரசு பழநி இளங்கம்பன்). சுந்தர இருசன் ஒரு சொக்கத்தங்கம் (முத்துக் காளத்தி). சோலை இருசன் சுடரறிவுச் செல்வர்-சொல்லேருழவர் சோலை (பெருங் கவிக்கோ).

**முகம்** : 1983 ஏப்ரல் முதல் வெளிவரும் சின்ன - சிங்கார ஏடு. 20 பக்கங்கள். பெயரே மிக அழகியது; அகம் கவர்வது. மலர்க்கொடியின் கதைகளும், எண்ணதாசனின் வண்ண வீச்சுக் களும் வீச்சில் விளைந்த குறுங் காவியங்களும், தாமல் கண்ண னின் அறிவியல் கதிர்களும், பெ. கி. பிரபாகரனின் இலக்கியக் கட்டுரைகள் கவிதைகளும், வெங்கடாசலபதியின் ஆங்கில மேதைகள் பற்றிய கட்டுரைகளும், இரண்டாம் நக்கீரனின் கவிகளும், நாரணதுரைக்கண்ணர், கா. அப்பாதுரையார் வாழ்க்கை வரலாறுகளும், பன்மொழிப் புலவரின் கார்ல் மார்க்ஸ் மூலதன மொழி பெயர்ப்பும், அந்தரங்கனின் மண்டோதரி மைந்தன் நாடகமும் நீடு நின்று நெடிதே பேசும் நீர்மையன.

முகப்பிலே அறிஞர் கவிஞர் எழுத்தாளர் படம் போட்டு, அகத்தே அவர்பற்றி எழுதுவதும், இலக்கிய அரங்கம், படித் தோம், கிந்தனார் பதில்கள், முகத்தில் முகம் பார்க்கலாம் போன்றனவும் போற்றற் குரியன. ஒவ்வோர் ஆண்டும் நிறைவு விழாக் கொண்டாடுகின்றது. சமுதாய உணர்வோடு செயற் படுகிறது. நாம் மறந்த தமிழ் ஒளி, விந்தன் போன்றாரை

நினைவு கூர்கிறது. அவ்வப்போது ஆற்ற வேண்டியன மறவாது தவறாது ஆற்றுகின்றது.

முகத்திற்கு அகமாக அமைகிறது இலக்கிய வட்டம்; முன்னது எழுத்துப் பணி, பின்னது பேச்சுப் பணி. இதுவரை 75 கூட்டங்கள். தலைவர் சி. என். அரங்கநாதன்; செயலர் மா. சங்கரநாராயணன்; காப்பாளர் மாமணி. கண்வழி கருத்துக்கும் செவி வழி சிந்தைக்குமாக இருவகைப் பணியாற்றி அருந்தமிழுக்குப் பெருந் தொண்டாற்றி வருகின்றனர்.

முகம் சிறு இதழ்தான் என்றாலும் சிறந்த சீரிய ஏடு. 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்ற முகப்பு உடைமைக் கேற்ப, படைப்புகள் யாவும் நெஞ்சில் நிலைக்கும் நீர்மையன. முகத்தின் எழுத்துக்கள் முழுமை சான்றவை. பால்கோவா போல கற்கண்டு போன்று கருத்துச் சுரங்கமாகவும் அறிவுப் பெட்டகமாகவும் அமைகின்றது. முதுபெரும் எழுத்தாளர் நாரணதுரைக்கண்ணர் நவின்றது போன்று பத்தாண்டின் பின் மணிக்கொடிபோல் மேவப்பெறும் என்பது உறுதி. முகம் நம் முகம், தமிழ் முகம், தமிழன்னையின் திருமுகம். ஆசிரியர் ம. புகழேந்தி. துணையாசிரியர் வெங்கடாசலபதி. சிறப் பாசிரியர் மாமணி. **முகவரி**: 18. 68 வது தெரு, 11வது செக்டார், சென்னை-78.

**வி. நடராச ஐயர்...** - 12-1-1908. குளித்தலையை அடுத்த மருதூர். தந்தை வேங்கடராம ஐயர். திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரி பி. ஏ. சென்னை சென்று 1895 இல் 'லோகோபகாரி' திங்கள் மும்முறை ஏடு தொடங்கினார்; 97ல் கிழமை இதழ் ஆக்கினார். பெண்கல்வி, வேதாந்தம், அறிவுரைகள் சுமழ்ந் தன. 99 இல் ஆண்டுத் தொகை அனுப்புவோர்க்கு 'ஞான தரிசினி' 'தத்துவதரிசினி' நூல் அன்பளிப்பு வழங்கினார். 1902-இல் சகோதரி பண்டித விசாலாட்சி அம்மையாரை உதவி யாசிரியராக அமர்த்தினார்; 1906 இல் அந்த அம்மையாருக்கே உரிமையாக்கினார். 1897 இல் 'ஞான சந்திரிகா' திங்கள் ஏடும் 1901 இல் Indian News வார ஏடும் தொடங்கி நிறுத்தினார். மனைவியர் இருவர்; மகப்பேறில்லை.

நூல்கள் : ஞானத்திரட்டு (விவேகானந்தரின் பொழிவுகள்) ஞான பூஷணி, ஞானதரிசினி, தத்துவதரிசினி, ஞானலோசனி, நீதிமாலினி, இலலிதாங்கி, சலசாட்சி, தேவிசந்திர ப்ரபா, சோதிஷ்மதி, நிர்மலா, ஆநந்த மகிளா, ஹேமாம்பரி, சரசுவதி, கௌரி, ஞானரஞ்சனி. லோகோபகாரியின் முகப்பில் நடராசப்

பெருமான் உரு அமைந்திருக்கும். இவரது செழுந்தமிழ் நடை, இவருக்கே உரியதாக அமைந்து அனைவரையும் அள்ளியது.

**பண்டித விசாலாட்சியம்மாள்**: *1884—25-10-1926*. சென்னை. இளமையிலேயே விதவை ஆனதும் கல்வி கற்றார். சிறந்த தமிழறிஞர்களிடம் இலக்கண இலக்கியம் பயின்று சிறந்து மக்களால் பண்டிதை எனக் கொண்டாடப்பெற்றார். 1902 முதல் 'லோகோபகாரி' உதவி ஆசிரியர்; பின் உரிமையர் ஆனார். அதன்பின் 'ஹித காரணி' திங்கள் வெளியீட்டைப் பல்லாண்டுகள் நடாத்தினார். புனை கதைகளும் வேதாந்தக் கட்டுரைகளும் நிரம்ப எழுதி வியத்தகு புகழ் பெற்றார். கன்னடம், வடமொழி, ஆங்கிலமும் அறிந்தவர். தமிழ்ப் பெண் மணிகளின் கண்மணியாக இலங்கிய இவரே **முதல் பெண் இதழாசிரியர்**, எழுத்தாளர். இசையிலும் சிறந்து நின்றவர். 'இலலிதாங்கி' 'சலசாட்சி' போன்ற 30க்கும் மேற்பட்ட கதைகள் திறம்படத் தீட்டியவர். இராயப்பேட்டையில் வதிந்தவர்.

**இராம. வைத்தியநாத சர்மா** :—*1948*. திருமறைக்காட்டை யடுத்த அகத்தியான் பள்ளி. தந்தை ராமசேஷப்பையர். ஆநந்த சண்முக சரணாலய சுவாமி, சிதம்பரஞ் செட்டியாரிடம் தமிழும், தக்காரிடம் வடமொழியும் பயின்று கவிபாடும் திறம் பெற்றார்; காளமேகமாகக் கவிமாரி பொழிந்தார். தேத்தாக்குடியில் தொடக்கப்பள்ளி அமைத்து கல்வி பரப்பினார். 1930 இல் 'கலாநிதி' எனும் திங்கள் ஏடு தொடங்கி 16 திங்கள் நடாத்தினார். தேவிபாகவதத்தை ஆயிரக் கணக்கான செய்யுளில் வடித்தார். ஒவிய, கோலாட்ட, சோபன, மண வாழ்த்து, சந்த, வசை, நகைச்சுவைப் பாக்கள் பாடினார். விரைந்து பாடும் வளமை எளிமை இனிமை கருதி, 'கவிச் சக்கரவர்த்தி' என்றேத்தினர் தில்லைவாழ் அந்தணர். சீட்டுக் கவிபாடிச் செல்வம் நிறையச் சேர்த்தவர்.

**டாக்டர் பி. வரதராஜலு நாயுடு** (*1887-1957*) தம் பத்திரிகைப் பாசறையில் எழுத்தாளர் பலரைப் பக்குவப்படுத்திப் பேனாப் படைவீரர்களாகப் படைத்தளித்த பெருமையர். எழுத்தின் வாயிலாக ஏகாதிபத்தியத்தை எதிர்த்து ஓர் இயக்கத்தையே உருவாக்கியவர். இந்திய நாட்டின் விடுதலைப் படைக்கலன் களாக இதழ்களைப் பயன்படுத்தியவர். துன்பத்தைச் துச்சமாக எண்ணி தேசமே பெரிதெனக்கருதித்தியாகம் செய்த தீரர். விடுதலைப் புரட்சியின் கர்த்தா. சுற்றி வளைக்காமல் சுருக் கென நேரே நெஞ்சில் தைக்குமாறு நறுக்காக எழுதும் நடை

யினை நிலவ விட்டவர். சொற்செட்டும் கருத்துச் செறிவும் அமைய, சுரீர் எனப் பாயும் வீறு நடையினை விரவச் செய்தவர். அருமையான மரபுச் சொற்களையே பயன்படுத்த வேணும் எனும் உறுதி கொண்டவர். விறுவிறுப்பான வேக நடை, கச்சிதமான கருத்து, அழுத்தமான குறிப்புகள், ஆணித் தரமான விளக்கங்கள், நேர்மையும் நலமும் மிக்க தலையங்கள் தனிச் சிறப்பின. சான்று : 'ஜின்டான் சாஸ்திரி'

1920 இல் திருப்பூரிலிருந்து 'பிரபஞ்ச மித்திரன்' வார ஏடு; பின் 21 இல் சேலத்திலிருந்து 'தமிழ் நாடு' வார இதழ், 27 முதல் நாளிதழ் நடாத்தியவர். மக்கள் ஆதரவும் அதே சமயம் ஆட்சியின் சீற்றமும் பெற்றவர். அரசு நிந்தனையான கட்டுரைக்காக 9 மாதம் சிறை சென்றார். அரசியல் முனைப்பான கருத்துக்களைத் தீட்டியது போன்றே, சமுதாய முற்போக்கான கட்டுரைகளையும் தீட்டினார். 'பொட்டு கட்டும் புன்மை'யினைச் சாடியும், சேர்மாதேவி குரு குலத்தில் பார்ப்பனர்—அல்லாதார் எனப் பிரித்து உணவு பரிமாறப் பட்டதை எதிர்த்தும் எழுதியவர். தமிழகத்தைத் தட்டி எழுப்பி மக்கள் சக்தியை மூட்டிய மாபெரும் இதழாசிரியர் என்பதை எவரே மறப்பர் - மறுப்பர்? தேசபக்தி போதிக்கும் முதல்வரிசைத் தலைவர் - குருநாதர். தமிழ்த் தலைவர்கட் கெல்லாம் தலைவர். சமூக சீர்திருத்தம், சமயப் பற்று தெய்வ நம்பிக்கை மிக்கவர். தியாகத் தழும்பேறிய பழுத்த தேசபக்தர். தென்னாட்டுத் திலகர்.

**ஏ ரங்கசாமி அய்யங்கார்** இந்து நாளிதழ், சுதேசமித்திரன் நாளிதழ் ஆசிரியர்; தமிழகத்தில் சுயராஜ்யக்கட்சியைக் கிளைத்திடச் செய்தவர். 23 இல் இந்திய சட்டசபை உறுப்பினர். ஆங்கிலத்திலும் தமிழிலும் அறிவார்ந்த சொற்பெருக்காற்றும் கட்டுரை தீட்டும் ஆற்றலர். கனமான பொருள்பற்றிக் கச்சிதமாக அழுத்தமான சொற்கள் பெய்து, அரசியல் பொருளியல் புள்ளி விவரங்கள் அடுக்கித் தெளிவாக விளக்கித் தாய்த் தமிழ் மூலம் தாய்நாட்டுப் பற்றினை மூட்டியவர்.

'குறுகிய எண்ணங்களைக் களைந்துவிட்டுச் சில்லறைத் தன்மைக்குச் சிறிதும் இடம் கொடாது பெரிய உள்ளம் படைத்தவர் ஸ்ரீமான் ரங்கசாமி ஐயங்கார்' (ராஜாஜி). 'சிக்கலான பொருளாதாரப் பிரச்சனைகளையும் சட்ட ரீதியான அரசியல் பிரச்சனைகளையும், தமிழிலே தெளிவாக விளக்கி, கனமான கருத்துக்களையும் கண்ணியத்துடன் வெளியிட்டு, தம் எழுத்தையும் பேச்சையும் நாட்டு எழுச்சிக்குக் காணிக்கை

யாக்கிய அறிஞர்களில் திரு. ரங்கசாமி அய்யங்காருக்குச் சிறப்பான இடமுண்டு' (கா. திரவியம்),

**சி. ஆர். ஸ்ரீனிவாச ஐயங்கார்** 28-11-1889. தஞ்சை மாவட்ட கண்டர மாணிக்கம். மாநிலக் கல்லூரி பி. ஏ. 1909. சுதேச மித்திரனில் 1915இல் சேர்ந்து 28இல் ஆசிரியரானவர் நூல்கள்: தராசு, தீர்க்கதரிசிகளின் சரித்திரக் கொத்து, ராமாநுசர், மத்வர், புத்தர், குருநானக், மகாவீரர், நபி, ஆழ்வார்கள் சரித்திரம், Standard and Values, A. B. C. Talks, Press and Public.

T. S. S. **ராஜன்** (தில்லை ஸ்தானம் சேஷயங்கார் **சௌந்தர** ராஜன்) தஞ்சைத் திருவையாற்றை அடுத்த தில்லைத்தானம். 1905இல் எம். பி; பி. எஸ். முதல் வகுப்பு. 1908இல் லண்டனுக்குச் செல்லல்; அங்கு வீர சாவர்க்கர் போன்றாருடன் தொடர்பினர்; மதன்லால் திங்கராவுடன் வாழ்ந்தவர். 10-14 பர்மாவில் வதிதல், வெள்ளைக்கார டாக்டரின் கீழ் பணி; ஒரு முறை அவர் ஒருவருக்கு 'இன்புலுயன்சா' என எழுத, இவர் தவறு என அடித்து விட்டு மலேரியா என எழுதிய துணிவு மிக்கவர். மனைவி மறையவே ஸ்ரீரங்கத்தில் மருத்துவத் தொழில் மேற் கொள்ளல். சென்னையில் ரெங்காச்சாரி என்றால், திருச்சியில் இவர். அறுவைச் சிகிச்சையில் நிபுணர்.

19இல் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் காந்தியடிகள் தலைமையில் சத்தியாகிரகம் பற்றிய பேச்சு வீராவேசம் மிக்கது. முதல் சத்தியாகிரகப் போரில் கோவை பாளை சிறை சென்றவர். கிராமியப் பேச்சுதான். அழகான உவமைகள், அகம் தைக்கும் சிறு கதைகள், சுடச் சுடவிழும் சொற்கள், முத்து முத்தான கருத்துக்கள், மனதை அள்ளும் கற்பனை; மொத்தத்தில் நிறைந்து பரந்து ஊடுருவி வரும் பிரளயம் என்கிறார் வ. ரா.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசி. காங்கிரசி விருந்து விலகி இருந்தார். மிகவும் முரடர், பெரும் பிடிவாதக் காரர். இவரை ஆட்டிவைக்க ஒருவரால்தான் முடியும்; அவர்தான் ராஜாஜி. அவர் அமைச்சரவையில் சுகாதார ஆலயத்துறை அமைச்சராக இருந்தார்.

அரிசன இயக்கத்தில் தீவிரம் காட்டியவர். அதனால் வைதீகர்களின் பகையும் பூரி சங்கராச்சாரியார் எதிர்ப்பும் ஏற்ற உரத்தர். விகடனில் வேகம் மிக்க சுவையான கட்டுரைகள் வரைந்தார். ஒடுக்கப்பட்ட அரிசனங்கள் உயர்த்தப்பட்டா

லொழிய உருப்படாது நாடு என்றும், தீண்டாமையெனும் தொத்து தோய் ஒழிந்தால்தான் இந்து மதம் பிழைக்கும், இன்றேல் அழிந்து போம் என்றும் ஆணித்தரமாகப் பறை சாற்றியவர். நாட்டுப் பணிக்காக மும்முறை தொழிலையே நிறுத்தியவர்.

திருச்சி மையப் பேருந்து நிலைய எதிரில் பெரிய பங்களா-கிளினிக் பெரிய காம்பவுண்டு. ஈங்கோய் மலைப் பக்கம் 100 ஏக்கர். இப்பக்கம் முதன்முதல் டிராக்டர் வைத்து ஓட்டியவர். காலையில் கேழ்வரகுக்கஞ்சி, 2 முட்டை சாப்பிடுவார்; 'சமுதை சவாரி செய்தவர். உழைப்பில் அசுரன், ஓயாத வேலை, சளைக்காத உழைப்பு, பொருளும் புகழும் வேண்டாத் தொண்டு. நல்லதுணிவு, சுயமரியாதை இரண்டுக்கும் தூண் போன்றவர். மொத்தத்தில் கர்மவீரர்' பணத்தில் கெட்டிப்பேர்வழி; இளமையில் வறுமை! (வ ரா.) இடது கை புரையோடிய போதும் விடாமுயற்சியும் உள்ள உறுதியும் மிக்கவர்.

வ. உ. சியின் சீடர்; வ. வே. சு. ஐயரின் ஆருயிர்த் தோழர். 'பொய்க் கவுரவம் பாராட்டாதவர்கள் இறுதியில் உண்மை கவுரவம் அடைகிறார்கள்' என்ற கருத்தர். அம்மைத்தழும்பு, உச்சிக் குடுமி, முகம் கடு கடு என்றிருக்கும்; சிரித்துப் பார்த்ததில்லை! இரு மகளிரே, அவர்களும் விதவை. கலைமகளில் தன் வரலாறு வந்தது. அந்தணர் குலத்தில் பிறந்த அறிஞர் குழாத்தில் சிறந்தவர். எழுத்தும் பேச்சும் இதயத்தை முறுக்கேற்றும். விளங்காத் தமிழை விட்டு, பாமரத் தமிழுக்குப் பெருமையும் பொலிவும் பலமும் உண்டு என்பதை நிலை நாட்டியவர்.

**டி. எஸ். சொக்கலிங்கம்** : *3-5-1899—1965*. தென்காசி. பழம் பெரும் பத்திரிகை ஆசிரியர். மிக நல்ல மனிதர், மிகச் சிறந்த எழுத்தாளர். முதலில் சேலம் 'தமிழ் நாடு' இதழில் உதவி ஆசிரியர்-பின் ஆசிரியர். 23-29இல் 30இல் 'காந்தி' காலணா இதழ் (சுதந்திரச் சங்குக்குப் போட்டியாக) நடத்தினார். அப்போது தேசியம் பற்றி எழுதினால் சிறை தான்! ஆதரித்து எழுதவே கூடாது. நாலுபேர் தயாராக இருப்பர்; ஒருவர் சிறை சென்றால் (6 மாதம்), மற்றவர் பொறுப்பேற்பர். துணியில் மறைத்தே இதழைக் கொடுக்க வேண்டும். துணிந்து சந்தா அனுப்பினால் உண்டு; பயந்து அனுப்பாது போனாலும் போனதுதான்! வாயிலில் காவலர் பார்சலைப் பிடுங்கக் காத்திருப்பர். எனவே மாடி வழியாக மூன்று வீடு தாண்டி

இறங்கிக் கொண்டுபோக வேண்டும். நடத்திய இன்னோர் ஏடு 'வந்தே மாதரம்'.

1932 முதல் தினமணி (முதல்) ஆசிரியர். தேசிய இயக்கம் முழுதும் இவரால்தான் பரவியது எனலாம். தெளிவான தலையங்கம் தீட்டுவார். இந்தி எதிர்ப்பின்போது 43இல் கோயாங்காவுடன் வேறுபாடு கொண்டு மனம் வெதும்பி வெளியேறினார். முல்லை முத்தையா, விலகநேர்ந்தமையை விவரித்து எழுதச் செய்து 'எனது ராஜிநாமா' என்ற பெயரில் வெளியிட்டார். 60இல் நவசக்தி ஆசிரியரானார்.

நடாத்திய ஏடு 'தினசரி', மக்கள் ஆதரவு தந்தனர். நிர்வாக ஊழல் காரணியமாக நின்றது. பலநாள் சும்மா இருந்தார். மெட்ரிக் மட்டுமே படித்தவர்; அரசியலில் ஊன்றிய பின் அறிவைப் பெருக்கிக் கொண்டார். (அப்போது மனித அறிவை வைத்தே மதிப்பிட்டனர்; இப்போதோ வெறும் பேப்பர் பட்டத்தை வைத்து மதிப்பிடுகின்றனர்!) படிப்பு பள்ளியில் இல்லை, வெளியில் உள்ளது; World is a 'Varsity'.

நண்பர்களுடன் நன்றாகப் பழகுவார். பசி எனில் பிறருக்குக் கொடுத்தே உண்பார். காசு இருப்பின் பிறருக்குக் கொடுத்து விடுவார். வெற்றிலை போட்டுப் பட்டினியாக இருப்பார். அவர் செய்த தொண்டுக்கும் தியாகத்துக்கும் உரிய ஏற்பு இல்லை. தேசாபிமானம் போய் கட்சியரசியல் வந்ததும் கடனோடு செத்தார்: யாரும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை! வறுமையில் வாடி மடிந்தார். உண்மைக்கும் உழைப்புக்கும் காலமில்லை போலும்! அன்று, 'நாடு நன்றாக இருக்கணும், நாட்டுக்காக நாம்' என்ற தூய உணர்வு; இன்றோ, 'நான் நன்றாக இருக்கணும், காசு பணம் கைக்கொள்ளணும்'! யாருக்கும் அஞ்சாதவர்; கீழ் பணியாற்றுபவர்களைக் கை விடாதவர், கவசம் போல் காப்பார்.

எச்சம் : ஒரு மகன், சக்தி. மிச்சம் : பாய் பரமானந்தன் (நாவல்), ஜவகர்லால் நேரு, சுபாஷ்போஸ் (வாழ்க்கை), அல்லி விஜயம் (சிறுகதை), எனது முதல் சந்திப்பு (கட்டுரை), டால்ஸ்டாயின் போரும் அமைதியும் (3 பகுதி)

18 வயதிலேயே சபர்மதி ஆசிரமம் சென்று சேர்ந்துவிட்டார்; உறவினர்கள், காந்தியடிகளிடம் மன்றாடித் திரும்ப அழைத்து வந்தனர். 19இல் ரௌலத் சட்ட எதிர்ப்புக் கிளர்ச்சியிலும், 20-21 ஒத்துழையாமை இயக்கத்திலும் தீவிரப்

பங்கு கொண்டார். காங்கிரசும் காந்திஜியும் இவர் மூச்சு. 'தேவிதாசன்' எனும் பெயரில் பாடல்கள் புனைந்தார் (கதர்ச் சூரியன்). அரசியல் விமர்சனங்கள், ஆணித்தரமான கட்டுரைகள், வேகமான கட்டுரைகள், விவேகமான தலையங்கங்கள், கச்சிதமான நடை - எவரே? மறப்பர் 'உண்ணல் ஊதல், உறிஞ்சல்' என அன்றாட வாழ்வினை விமர்சித்தது நையாண்டியும் நளினமும் மிக்கவை.

'ஆளும் சொக்கு, பேரும் சொக்கு
அரும்பும் புன்னகை அதனினும் சொக்கு,
சொக்கத் தமிழிற் சுடச்சுடத் தீட்டும்
பேனாச் சொக்குப் பிள்ளை வாழியவே!

—சுத்தானந்த பாரதி

தமிழ் நாளிதழ்களின் தந்தை டி. எஸ். சொ. எனத் தயங்காது கூறலாம்.

**கல்கி**: *1899-1954*. அவதாரங்களில் ஒன்று. அதற்குப் பொருந்திவருமாறு (கல் - **கல்**யாணி, **கல்**யாணசுந்தரனார்; கி. கிருஷ்ணமூர்த்தி) இரு பெயரும் பொருந்த இந்தப்பெயரினை வைத்தார். டி. சதாசிவம் அவர்கள் துணைநின்றார். 40இல் ஆனந்தவிகடனை விடுத்து வந்ததும் இதனைத் தொடங்கினார் ரா. கி. பின் மறையுமட்டும் வார இதழினைப் படித்தோரும் பாமரரும் போற்றச் சிறந்த இதழாகக் கொணர்ந்தார்.

நவசக்தியில் 23முதல் திரு. வி. க.வுக்குத் துணையாக இருந்தார். 28இல் பரலி. சு. நெல்லையப்பர் மூலம் வாசன் தொடர்பு கொண்டு விகடனில் எழுதினார். முதல் கட்டுரை 'ஏட்டிக்குப் போட்டி'. 29இல் நவசக்தியிலிருந்து விலகியதும், ராஜாஜி திருச்செங்கோடு ஆசிரமத்துக்கு அழைத்துச் செல்ல, மதுவிலக்குப் பிரசாரத்துக்காகத் தொடங்கப்பெற்ற 'விமோசனம்' இதழுக்கு உதவி ஆசிரியராக இருந்தார். 31இல் விகடனுக்கு அழைத்துக் கொண்டார் வாசன்.

இப்படி முப்பது ஆண்டுகள் இதழியல் பணியாற்றி எல்லோர் இதயத்திலும் இடம் பெற்றார். தமக்கெனத் தனிப் பாட்டைபோட்டு ஒப்பாரும் மிக்காரும் இன்றி அரசியல் செல்வாக்கும் மக்கள் பேராதரவும் பெற்று முடிசூடா மன்னராக விளங்கினார். ஓர் எழுத்தாளர் பத்திரிகையாளர் ஓகோ என உயர்ந்து 'கார்' வைக்குமளவிற்கு வளம் பெற்றுச் சிறக்க முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக இலங்கினார். படித்தோர்க்கும் பாமரருக்கும் பத்திரிகையால் பாலமிட்டார்.

இவர் எழுத்தின் உயிர் நாடி எளிமை; உயிரோட்டம் நகைச்சுவை. பழமையின் வளமையும் புதுமையின் பொலிவும் இவர் நடைக்கு வலிவூட்டின; இரண்டும் இணைந்து ஏற்றம் சான்ற எழில் நடையினை ஆற்றல் நடையினை அளித்தன. இவர் தொடாத துறையில்லை. கதைகளாலும் கட்டுரைகளாலும் உணர்வுக்கும் அறிவுக்கும் விருந்து தந்தார். 'தமிழ் வார இதழ்களின் தந்தை' வழிகாட்டி என்போம்.

எழுத்தே வாழ்வாக—வாழ்வே எழுத்தாக ஆக்கிக் கொண்டவர். ரசித்து ருசித்து எழுதினார். எனவே பிறரும் லயித்து மகிழுமாறு இவர் எழுத்து ஆனது. எண்ணத் துணிவும் எழுத்தின் கனிவும் இவரை ஏற்றம் பெறச் செய்தன. இவர் நடை சிந்தனை நடை, நம் சிந்தனையைத் தூண்டிச் செயற்பட வைத்த சீர் நடை. வழக்குத் தமிழை வைத்து வளமார் நடையுடைந்தவர். புது நடை படைத்தார் என்றே புகல வேண்டும். கா. திரவியம் அவர்கள் கருதுமாப் போலே 'கவிதைத் துறையில் பாரதியார் தோற்றுவித்த திருப்பத்தை, உரைநடை இயலில் உண்டாக்கியவர் கல்கி' என அடித்துக் கூறலாம்.

இரு கண்கள் போலே கிடைத்த விகடனையும், கல்கியையும் வைத்து இந்தத் தமிழகத்தையே சுண்டி இழுத்தவர். இரண்டையும் இரு சுடர்களாக இலங்கச் செய்து, இதழியல் துறைக்கே ஒரு கலங்கரை விளக்கமாக இலங்கினார். எழுத்தையே மூலதனமாக வைத்து எல்லோரையும் இழுத்து அணைத்தவர்-இணைத்தவர்.

இதழியல் துறையில் தம் முத்திரை பதித்து முன் மாதிரியாக அமைந்து வழி காட்டினார். தம் துறையில் எப்படியெல்லாமோ புதுமை புகுத்திப் பொதுமை பொலியச்செய்தார்; எழுத்தாளர்க் கெல்லாம் நம்பிக்கை நிலவாக உலா வந்தார்; இதழாசிரியர்கட்கெல்லாம் தென்பும் தெளிவும் தந்தார்; எழுத்தாளர்க் கெல்லாம் எழுத்தாளராக இருந்து சுவடு பதித்து மதிக்கவும் துதிக்கவுமாக மேருவென—இமயமெனக் கொடுமுடி சென்று கோமகனாகக் கொலுவிருந்தார். இப்போது தந்தைவழி தனையன் திகழ்கிறார். (கி. ராசேந்திரன்).

**எஸ் எஸ். வாசன்:** (டி. எஸ். ஸ்ரீநிவாசன்) 10-3-1903—26-8-69. தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி. சுப்பிரமணிய அய்யர்; ஆசிரியர்; ஆங்கிலத்தில் மேதை. தாய் வாலாம்பாள். எஸ் எஸ்.எல்.சி முடித்துச் சென்னைப் பச்சையப்பனில் இன்டர்மீடியேட் சேர்ந்தார். வறுமை வாட்டவே

படிப்பை நிறுத்தி வாழ்வினை நோக்கினார். காலையில் கன்னிமரா நூலகம் சென்று பயின்று மாலை திரும்புவார். கதைகள் பல புனைந்தார். மூர்மார்க்கெட் சென்று பழைய புத்தகங்களை வாங்கிப் படித்துக் கொண்டே இருப்பார். துப்பறியும் நாவல்களைத் தமிழ்ப்படுத்தி வெளிப்படுத்தினார். **'நீல மேகன்'** குறிப்பிடத்தக்கது. இன்ப நூல்களில் மக்கள் நாட்டம் இருப்பது கண்டு அத்தகு நூல்களையும் கண்ணியத்துடன் படைத்தார். அதில் ஒன்றுதான் 'இல்வாழ்வின் ரகசியங்கள்' (27இல்) மிகு புகழ் தந்தது. அப்போதே 5000 படிகள் விற்றன.

'தபால்மூலம் நீங்கள் விரும்பும் 144 பொருள்களை, ஒரே ரூபாய்க்குப் பெறலாம், என 'தனம் அண்ட் கோ' வைத்து நடத்தியவர். கிருஷ்ணா ஏஜென்சீஸ் 'விளம்பர நிறுவனம்' நடத்தினார். 'வாசன் புத்தகசாலை' எனப் புத்தக வணிகமும் செய்தார். நூல்கள் அச்சிடச் சொந்த அச்சகம் வைத்தார். மக்களிடம் புதினம் பத்திரிகை மோகம் இருப்பது கண்டு தாமே ஒரு பத்திரிகை தொடங்கினால் என்ன என்ற எண்ணம் எழுந்தது; அத்தோடு அச்சகமும் முழு நேரம் ஓட, விகடகவி புதூர் வைத்தியநாத ஐயரிடம் 300 ரூபாய்க்கு விகடனை விலைக்கு வாங்கிப் புதுமுறையில் நடத்தினார். தெலுங்கில் 'ஆனந்த வாஹினி', ஆங்கிலத்தில் 'மெர்ரி மெகசின்' சில காலம் வெளியிட்டார். உழைப்பு உறுதியால் வேகமாக வளர்ந்து உயர்ந்தார். 30இல் யாரென உலகறியா நிலை; 43லோ லட்சாதிபதி—கோடீஸ்வரர். 64-69 ராஜ்யசபா உறுப்பினர். 39இல் திரைப்பட வினியோக நிறுவனம் துவக்கி முன் மாதிரியாக விளங்கல்; தென்னிந்தியத் திரைப்பட ஸ்டூடியோ உரிமையாளர் சங்கத் தோற்றுநர், தலைவர். திரைப்படம்—பத்திரிகை இரு துறைகளில் ஏற்றம் பெற்றொளிர்ந்தவர்.

இவர் ஒரு காரியவாதி, லட்சியவாதி, முதல்தர மேதாவி; 'நட்டமடைந்த பொருளிலிருந்தே லாபம் அடைய வேணும்' எனும் பிடிவாதக்காரர். இதைச் செய்து விடுங்கள் பார்ப்போம் என்றால், உடனே அதைச் சவாலாக ஏற்பார். புன்னகை பூத்த முக விலாசம், கணீர் எனப் பேசுவார். தலைக்கனம் இல்லை; நெஞ்சு கனம் கொண்டவர். அனுபவமும் ஆவேசமும் கொண்ட மேதாவி. சந்தர்ப்பம் வரும்வரை காத்திரார், சந்தர்ப்பத்தை உண்டாக்கிக் கொண்டு செயற்படுவார். யோசனை செய்யாமல் எதையும் செய்வதில்லை; தொட்ட வேலையை இடையில் விட்டதுமில்லை. தீர்க்கமாக யோசித்தே இறங்குவார். தொழிலில் வெற்றிதான் குறியாக இருக்க வேணும் என்பார். வாழ்க்கைப் போர்க்களத்தில் அங்குலம் அங்குலமாகப் போராடி

முன்னேறியவர். தன் கையே தனக்குதவியாகக் கொண்டவர். 41இல் ஜெமினி ஸ்டுடியோ தொடங்கினார். சந்திரலேகா, அபூர்வ சகோதரர்கள், ஔவையார் (53); மோட்டார் சுந்தரம் பிள்ளை போன்றன எடுத்தார்.

அன்னையிடம் அபார பக்தி கொண்டவர். '2 வயதில் தந்தையை இழந்தேன். என் அன்னையால்தான் நான் இந்தப் பெரும் நிலைக்கு வந்தேன். அம்மா வீட்டில் இல்லையென்றால், எனக்கு வீட்டிற்குப் போக மனம் வராது. 'தாய்' சினிமாப்படம் பிடிக்க ஒரு நல்ல கதை சொல்லுங்கள்; அதை எடுத்ததும், இத் துறையிலிருந்து விலகிக் கொள்கிறேன்' என்றார் வ.ரா. விடம். அன்னை 'சீனு சீனு', எனச் செல்லமாக அழைப்பாராம்; அதில் நெகிழ்ந்து போவாராம்.

காங்கிரஸ் மாளிகை எரிந்தபோது மீண்டும் கட்டத் தமிழர் களைத் தட்டி எழுப்பி ஊக்கம் அளிக்கு முகத்தான் முதல் செக் கொடுத்தவர். 2ம் உலகத் தமிழ் மாநாட்டின்போது சென்னை நகர்முழுதும் சினிமா அதிபர்கள் துணைகொண்டு அலங்கார வளைவுகள் வழிநெடுக வைத்து முதலமைச்சர் அண்ணாவுக்கு உறுதுணை புரிந்து விழாக்கோலம் பூணச் செய்தவர். இல்லை என்னாது வாரி வழங்கிய வள்ளல், பெருந்தன்மையும் பெரும் போக்கும் மிக்கவர்.

அருமையான மனிதர், மாந்தருள் மாணிக்கம்; கடைசிவரை கதரே அணிந்தவர். எதையும் அறிவியல் ரீதியில் அணுகுவார். எதிலும் முழுமையான ஈடுபாடு கொண்டவர், கூடிக் கலந்து முடிவு எடுப்பார். தலையாய கலைஞர், சிந்தனையாளர், ஒன்றை அடைய விரும்பினால் எத்துணை ஆபத்து இருப்பினும் எப்பாடுபட்டாவது அடைந்தே தீருவார். எந்நிலையிலும் எளிமையாக வாழ்ந்தவர்.

**சி. பா. ஆதித்தனார்:** 27-9-1905—24-5-81. நெல்லை மாவட்ட காயாமொழி. தந்தை சிவந்தி ஆதித்தர் புகழ் பூத்த (ஸ்ரீவைகுண்டம்) வழக்கறிஞர், நாடார் சமூகத்தில் முதல் வழக்கறிஞர் பட்டம் பெற்றவர். தாய் கனகம் அம்மையார். ஸ்ரீவைகுண்டத்தில் அரை (பாலர்) வகுப்பு. திருச்சி வளவர் கல்லூரியில் பட்டம். நாடார் சமுதாயத்தில் முதல் எம். ஏ. சென்னை சட்டக் கல்லூரியில் பயின்றார். 28இல் லண்டன் சென்று 33இல் பாரிஸ்டர் பட்டம் பெற்று, சிங்கப்பூரில் வழக்கறிஞர் தொழில் செய்தல்; 'சிங்கப்பூர் பாரிஸ்டர்' எனச் செல்லமாக அழைக்கப்பட்டார். சோமப்பா வழக்கில் 30,000 ஈட்டியவர். லட்சக்கணக்கில் வந்த வருமானம் விடுத்து 42

ஏப்ரலில் தமிழகம் திரும்பல். 15-6-42இல் 'தமிழன்' வாரஇதழ் தொடங்கினார். தினத்தந்தி உருவாயிற்று. தமிழ் ராஜ்யக்கட்சி தொடங்கல்; அதுவே நாம் தமிழர் இயக்கமாதல். உயிர் தமிழுக்கு உடல் மண்ணுக்கு என்றவர். மாத நாவல் முன்னோடி.

47-53, 64-67 மேலவை, 57-62, 67-71 சட்டமன்ற உறுப்பினர். 17-3-67இல் சபாநாயகராதல்; 68இல் ராஜினாமா செய்தார். (அப்படிச்செய்த ஒரே சபாநாயகர் இவர் ஒருவரே!); பனைமர வரிஒழிப்பு தொடர்பாக எம். எல். ஏ. பதவியையும் விடுத்தார்! மாத்தூர் உழவர் போராட்டத்தில் கை விலங்கிடப் பட்ட ஒரே தமிழ்த் தலைவர். படஎரிப்புப் போர், இந்தி எதிர்ப்புப் போரிலும் பங்கேற்றுச் சிறை சென்றார்.

53இல் உலகப் பயணம் மேற்கொண்டார்; உலகசமாதானக் குழு-மாநாடு வியன்னாவில் பங்கேற்றல். 56இல் அமெரிக்கநாடு கட்குச் சென்று மீண்டார். கலைஞர் அமைச்சரவையில் 15-2-69—4-1-71 கூட்டுறவு அமைச்சராகவும் இருந்தார். அதுவரை, ஆங்கிலத்தில் இருந்ததைத் தமிழில் ஆக்கியவர். 'தமிழ்நாட்டுச் சட்டப்பேரவை நடைமுறை விதிகள்' என நூல் செய்தார்.

64இல் மணிவிழா; தமிழ்நாடு பொறித்த வெள்ளிக்கேடயம் கலைஞர் வழங்கினார். உழைப்பு-உறுதி-விடாமுயற்சி மூன்றும் கொண்டு முன்னேறியவர். உலகப் போரின்போது காகிதம் கிடைக்கவில்லை. வைக்கோலை ஊறப் போட்டுக் கைக் காகிதம் செய்து அச்சேற்றியவர். நாளும் நாற்றத்தைச் சகித்துக் கொண்டு அங்கேயே நிற்பார். பின் அரியநாயகிபுரத்தில் 62இல் Sun Paper Mills நிறுவல்; ஒன்றுக்கும் உதவாத விறகிலிருந்து காகிதம் செய்தல். தந்தியின் வளர்ச்சிக்கு முதல் காரணம் இவர் நேரடிப் பார்வையும், தொழிலாளியோடு தொழிலாளியாக இருந்ததுமே யாகும்.

பிறவிப் பத்திரிகையாளர்; குருதியோடு குருதியாக ஊறிப் போனது இதழ். கீழை நாடுகளிலேயே இதழியல் துறையில் தமிழகந்தான் முன்னணியில் நிற்கிறது என்றால், அதற்குக் காரணர் ஆதித்தனார்தான்! காலை முதல் நள்ளிரவு வரை அலுவலகத்தில்தான் இருப்பார். கருமமே கண்ணாயிருப்பார். போர்க்காலமாதலால் ஊரடங்கு உத்தரவு; வைகையாற்றின் தென்கரையில் உள்ள அலுவலகத்திலிருந்து சொக்கிக்குளம் வீட்டிற்கு வைகையில் நடந்து நீந்தியே திரும்புவார். எடுத்த காரியம் இனிதே முடித்திடும் ஆற்றலர். தொழிலாளி தொழில் நுட்பம் உணர்ந்தவர், தொழில் நடாத்தும் திறத்தர். எனவே

தான் ஏனையோரினும் விரைந்து முன்னேறினார்—முதன்மை யுற்றார். தந்தியின் தந்தை; தமிழ் இதழ்களின் தாதா ஆனார். சிறுக கட்டிப் பெருக வாழ்ந்தவர். சாதாரண 4 முழக்கைத் தறி வேட்டி சட்டை தான்; எளிமை மிக்கவர்; இனிமை வாய்ந்தவர். புன்னகை பூத்த இன்முகம்; காட்சிக்கு எளியர்; கடுஞ்சொல் காணாதவர். 'செயற்கரிய செய்த பெரியார் 'சி.பா.ஆ.' என்றார் ஈ. வே. ரா.

1-9-33இல் திருமணம்; மனைவி கோட்டையூர் ஓ.ராமசாமி நாடாரின் மூத்த மகள் கோவிந்தம்மாள் (ஆச்சி அம்மாள்). ஒரு மகள், இரு மகன்கள்; சிவந்தி ஆதித்தன்; இராமச்சந்திர ஆதித்தன். மாலைமுரசு, தினத்தந்தி, ராணி, தேவி தந்தை வழி நடாத்துகின்றனர்.

**ஏ. ஜி. வெங்கடாச்சாரி** : 20-8-1909. சேலம் அதிகாரிப் பட்டி (தருமபுரி). அரசியல் வரலாற்றுணர்வை உண்டாக் கியவர். தமிழைத் தாண்டிக் கொஞ்சம் சிந்திக்கச் செய்த பெரியார். 'தினமணி' துணை ஆசிரியராக இருந்தவர். 59இல் எழுத்தாளர் சங்கத் தலைவர். பி. ஏ. பட்டம் பெற்றவர். வழங்கியன: சீனா - ஜப்பான், ஹிட்லரும் மகாயுத்தமும், சோவியத் யூனியன், ஆசியாவின் எதிர்காலம்,மனித உரிமைகள். பெயர்ப்புகள்: ஜனநாயகப் பிரச்னைகள், மீண்டும் ரஷ்யா, சமாதானத்தின் புதிய பரிமாணங்கள், இன்றைய இந்திய இலக்கியம், மனித உரிமைகள், Roosevelt & the New America. உலக நாடுகள் பல கண்டவர். உயர்ந்த பத்திரிகையாளர்.

**ஏ.என். சிவராமன்** : 1904-நெல்லை மாவட்ட கீழ ஆம்பூர். நெல்லை இந்துக் கல்லூரியில் பயிலுங்காலை, விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் பங் கேற்றுச் சிறை சென்றார்; படிப்பு நின்றது. என்றாலும் காலம் முழுதும் கற்பன கசடறக் கற்று எளிய தமிழில் எழுவதிலும் எடுத்துரைப்பதிலும் ஏற்றம் சான்றவர். 'கணக்கன்' என்ற பெயரில் இவர் தினமணியில் படைத்தவை கணக்கில. மணிக் கொடி முன்னோடி.

21-29 எட்டாண்டுகள் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றி விடுதலைப் போராட்டப் பிரசாரப் பணியில் தொடர்ந்தார். 29 இல் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடுவின் 'தமிழ் நாடு' நாளிதழில் ஆசிரியர் டி. எஸ். சொக்கலிங்கம் அவர்களிடம்

துணையாசிரியராகப் பயிற்சி பெற்றார். 30-31, 31-32 இல் சிறை வேள்வி செய்தார்.

34 இல் தினமணி துவங்கப்பட்டபோது உதவி ஆசிரியரானார்; 43ல் ஆசிரியரானார். அரை நூற்றாண்டுக்கும் மேலாகத் தொடர்ந்து தொய்வு ஏதுமின்றித் தினமணியின் தரமும் திறமும் காத்து வளர்த்துத் தம் தளர்ந்த வயதிலும் தளராது தாளாற்றும் தகைமையும், அயராது அரும்பாடு பட்டுப் பேணி வளர்ப்பதும் வணங்கிப் போற்றத் தக்கன.

சென்றிட்டார் எட்டுக் திக்கும், கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்த்தார். இவர் செல்லாத நாடுகள் இல்லை; கலந்து கொள்ளாத மாநாடுகள் குறைவு. அமெரிக்கா சென்று தங்கி அதன் வேளாண்மை, கல்வி, உள்ளாட்சி முறை யாவும் கூர்ந்து நோக்கி வந்தார். ஜெர்மனியின் பொருளாதாரப் புனரமைப்பும், சுவீடன் நாட்டின் சமவுடைமைக் கொள்கையும் கண்டு வந்தார். சப்பான், சீனா கிழக்காசிய நாடுகளிலும் பயணம் மேற்கொண்டு சமுதாய, பொருளியல் வளர்ச்சிகளை நுணுக்கமுடன் அறிந்து மீண்டார்.

பன்முறை இங்கிலாந்து, ஜெர்மனி, சுவீடன், டென்மார்க், பின்லாந்து ஆகிய நாடுகட்குச் சென்று திரும்பியுள்ளார். சென்றபோதெல்லாம் செல்லும் நாடுகளிலெல்லாம் சமுதாய, பொருளியல், அரசியல் வாழ்வின் கூறுகளைக் கூர்த்த மதியுடன் ஆராய்ந்துள்ளார். இப்படித் தாம் கண்டன கேட்டன அறிந்தன உணர்ந்தனவற்றையெல்லாம் ஒன்றுவிடாதுசெய்திகளாக, கட்டுரைகளாக, நூல்களாக, குறிப்புக்களாக இந்த மண்ணும் மக்களும் அறியத் தந்துவிட்டார். எட்டுத் திக்கும் சென்ற தமிழர் எத்தனையோ பேர்; எவரும் கலைச் செல்வங்களைக் கன்னித் தமிழுக்குக் கொடுத்திடவில்லை. இவரோ அறிந்தன தந்தார்; அத்தோடு தாம் உணர்ந்தவற்றையும் அளித்தார். இதுவே இவர் மாண்பு. மெத்தப் படித்தோர்க்கெனப் படைக்காது, கடைசிக் குடிமகனும் அறிந்து பயனுற வேணும் எனக் கனிவுடன் கொடுத்தார்.

**அருளியன:** மாகாண சுயாட்சி (37), அரசியல் நிர்ணய சபை, சுதந்திர இந்திய அரசியல் அமைப்பு, பொதுவுடைமையின் போராட்டமும் வாழ்வும், ரூபாயின் மதிப்பு வீழ்ந்ததேன்?, வேட்பாளரைப் பொறுக்குவது எப்படி?—நூல்கள்.

விண்வெளிப் பயணம், இந்தியப் பொருளாதார வளர்ச்சி, சீனப் பயணம், பெட்ரோலியம், நெற்பயிரின் பொருளாதார அம்சங்கள், வங்கிகளும் கிராமப் பொருளாதாரமும் போல்வன—கட்டுரைத் தொடர்கள்.

பல்துறை வல்லாரை யெல்லாம் அவ்வத் துறைகளில் எழுத வாய்ப்பளித்து ஊக்கியவர்; வேளாண்மை, அறிவியல், அரசியல் கட்டுரைகளை யெல்லாம் தொடர்ந்து எழுதும் வல்லாளர்களை உருவாக்கி வருபவர்.

தம் வாழ்நாள் முழுமையும் இதழியல் துறைக்குத் தத்தம் செய்தவர். இதழியல் தருமம் காப்பதிலும் தாளிகையின் தகுதி பேணுவதிலும், ஆசிரியரின் தனித்துவம் நாட்டுவதிலும் இமய மென ஓங்கி நிற்கிறார். ஒப்பாரும் மிக்காருமின்றி ஒளிர்கிறார். இன்றைய இதழ் உலகில் இவரை ஒத்த அனுபவம் தொழில் நிபுணத்துவம், மலை குலையினும் நிலை குலையா உறுதியும் மிக்க ஒருவரைக் காண்டல் அரிது. இது உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை.

எண்பதாண்டு இளைஞராய் இதழ் உலகில் உலாவரும் இவரின் அறிவியல் தமிழ் ஆக்க அரும்பணிக்காக 84-க்குரிய (முதல்) விருதினை அண்ணா பல்கலைக் கழக வளர் தமிழ் மன்றம் 7-5-86இல் வழங்கியது. 'பத்திரிகையின் ஜாம்பவான்' என மதித்துத் துதிக்கத்தகும் வணக்கத்துக்குரிய பெரியாரின் **முகவரி :** தினமணி. எக்ஸ்பிரஸ் எஸ்டேட், அண்ணா சாலை, சென்னை-2. *(83151).* 3. ஜி. எஸ். காலனி, சென்னை-18. *(452928)*

**நாரண துரைக்கண்ணர் :** *1906.* அறுபது ஆண்டு இதழியல் அனுபவம் பெற்ற முதுபெரும் எழுத்தாளர். *32—65* 'ஆனந்த போதினி'யில் ஆசிரியராக இருந்தவர். 1915 தொடங்கி நடந்த திங்கள்இதழ்; இலக்கியம் சமயம் இரண்டையும் இரு கண்களாகக் கொண்டது; பெரிய நிறுவனம். 'பிரசண்ட விகடன்' ஆசிரியருமாவார். இது திங்கள் இருமுறை ஏடு; அரசியல், கலை, இலக்கியம் மூன்றும் பரப்பியது.

எழுதும் ஆற்றல் உடையவர்களை முகம் பாராமலே ஊக்கியவர். அகிலன், ரகுநாதன், மாஜினி, கே. சி. எஸ். அருணாசலம், கு. அழகிரிசாமி, கைலாசபதி, எஸ். ஏ. பி. அண்ணாமலை போன்றார் உருவாயினர். பலர் பெரும் பயன்

பெற்றும் நன்றி பாராட்டுவதில்லை! எழுத்து வேந்தராகிய இவர் எத்தனையோ பேர்களை ஏற்றமுறச் செய்துளார்.

கவிதை, கட்டுரை, சிறுகதை, நாவல், நாடகம், திறனாய்வு எனப் பல்துறையாற்றல் கொண்டு இதழியல் துறையில் சாதனை புரிந்தவர். ஜீவா, மைவண்ணன், லியோ, துலாம், வேள் எனப் பல புனை பெயர்களில் எழுதியவர். பிரசண்ட விகடன் பழந்தொகுதிகள் இவர் பத்திரிகைப் பணியினைப் பறைசாற்றும். எழுத்தாளர்களின் எழுத்தாளர், பழுத்த இத ழாசிரியர். இவரை எண்ணுதல் இதயத்திற்கு இதமளிக்கும்; இயம்புதல் நாவிற்கு நலம் பயக்கும். 'தமிழ் இதழியல் பிதா மகர்' எனத் தயங்காது கூறலாம். (காண்க. 559,958 பக்.).

**சக்திதாசன் சுப்பிரமணியன்** : 26-9-1915. தஞ்சை மாவட்ட மன்னார்குடி. பெற்றோர்: பொன்னாலை என்கிற குப்புசாமி அய்யர் : மீனாட்சி அம்மாள். முத்துப்பேட்டை கழக உயர் நிலைப் பள்ளி, தஞ்சை தூய பேதுரு உயர்நிலைப் பள்ளியில் 30 இல் பயின்று, இன்டர்மீடியட் 32 இல் தேறித் திருவையாறு அரசர் கல்லூரியில் வித்துவான் ஆதல். ஆசிரியர் கரந்தைக் கவி யரசு; உடன் பயின்றவர் மறை திருநாவுக்கரசு. 62 இல் மணம், மனைவி ஜலஜாட்சி M. A. M. Ed. (ஐயங்கார்) நந்தனம் அரசினர் உயர்நிலைப் பள்ளி ஆங்கில ஆசிரியை.

தேசிய இயக்கத் தூண்டுதலால் 35 இல் எழுத்துலகிற்கு வந்தார்; 'சுதந்திரச் சங்கு' உதவி ஆசிரியர். 36-40 'நவசக்தி' உதவி ஆசிரியர், 40-52 ஆசிரியர். 60-70 இல் 'தொழில் வளம்' (திங்கள் இருமுறை); 70-74 'வம்பு' திங்களிருமுறை. எல்லாம் சென்னையில். நூல்கள் : 'தமிழ் வெறி' நவசக்தி முதற் பக்கத் தில் வந்து தமிழ் இனத்துக்கு எழுச்சியூட்டிய கட்டுரைகள். 'பாரதி லீலை' - பாரதிபற்றி 38 இல் வெளிவந்த முதல் வாழ்க்கை வரலாறு. 'கலை வளர்ந்த கதை'—கலையின் நோக்கம் பிரச்சாரமே என்ற கருத்தினது. 'டாலர் பஞ்சம்' -முதல் பொருளாதாரத் துண்டுப் பிரசுரம். 'கலித்தொகை விளக்கம்'-புதிய முறையில் கதைபோல் எழுதப்பட்டது. 'குறுந் தொகைக் காட்சிகள்' அன்றைய தமிழனை இன்றைய தமிழ னுக்குக் கதை போலத் தருவது. 'உலகம் பிறந்த கதை' தமிழில் முதன்முதலில் வெளிவந்த விஞ்ஞானக் கட்டுரைகள். 'அம்பு முதல் அணுகுண்டு வரை' - மானிடவியல் பற்றி வந்த முதல் நூல். 'முருகன் அருள் செல்வம்' - துதிப் பாடல் தொகுப்பு. 'ஞானதீபம்' - சுவாமி விவேகானந்தர் ஆங்கிலத்தில் நிகழ்த்

திய சொற்பொழிவுகள் 9 தொகுதிகள்; ஒவ்வொன்றும் 500 பக்கங்கள்—ராமகிருஷ்ண மடத்துக்காகத் தமிழாக்கித் தந்தது. 'மகாகவி பாரதியார்' புதுமைக் கண்ணோட்டம், பாரதி நூற்றாண்டு விழா வெளியீடு. 'சிருங்கேரி ஸ்ரீசாரதாபீட வரலாறு' 'அத்வைத அருள்ஜோதி ஸ்ரீ சங்கர பகவத் பாதர்'. திரு வி.க. வாழ்வும் தொண்டும். அரசியல் நூல்கள்: செய்ததும் செய்யாததும், காங்கிரசில் பிளவு ஏன்? இன்னுயிர்த் துணைவன். 'இமயத்துப்புலி'-டென்சிங்கின் வரலாறு.

1936 முதல் திரு. வி. க. வுடன் இறுதிவரை இருந்த கடைசி சீடர். நல்ல எழுத்தாளர், சிறந்த தேசியவாதி. நேதாஜி சிந்தையர்; முற்போக்கு நோக்கினர். ஆன்மீகம், அரசியல், இலக்கியம் எழுதுபவர். இவர் எழுத்தில் அழுத்தம் ஆழம் உண்டு. துணிவாகக் கருத்துக்களைக் கூற அஞ்சாதவர். உறுதி மிக்கவர்; உள்ளமோ குழந்தை. காந்தி ஆசிரமம் பலவற்றில் காந்தியுடன் தொடர்பு கொண்டவர். இந்தி எதிர்ப்பில் பெரியாருடன் தொடர்பினர். கட்சி பேசி காசு குவிக்கும் காலத்தில், இவர் ஒரு கண்ணியம் மிக்க தூயர். **முகவரி**: 3-வது மாடி, 34. ராபர்ட்சன் சந்து, ராபர்ட்சன் பேட்டை, சென்னை-28.

**கருப்பையா** : (கே. சி. லட்சுமி நாராயணன்) 30-1-1930 மதுரை தேசிய இளைஞன் அமரன் பட்டப்பகலில் வெட்டப் பட்ட இளைஞர் காங்கிரஸ் தலைவர், தையற்காரர், கருப்பையா பாரதியின் நினைவாக இப்புனை பெயரில் எழுதத் தொடங்கினார்; அப் பெயரே நிலைத்து விட்டது. வ. ஆ. போளூர் வட்ட கேட்டவரம் பாளையம். சின்னசாமி : சீதா லட்சுமி. சென்னைப் பூங்கா நகர் சென்னை புரக்ரசிவ் யூனியன் உயர்நிலைப் பள்ளி மாணவர்; வித்துவான் ஆறுமுக ஆச்சாரி கவிதை நாடகம் புனையத் தூண்டித் துணை நின்றார். தனித்து இன்டர் தேறி, உத்கல் பல்கலைக் கழக பி. ஏ. பொருளாதாரம் 59 இல் தேர்ந்தார். 53 இல் ரயில்வேயில் சேர்ந்து 56 இல் விட்டுப், பொதுப்பணி எழுத்துத் துறையில் இறங்கினார்.

49-52 'மும்முறை', 57-58 'தேசிய முழக்கம்' 60-61 'காங்கிரஸ் செய்தி', 61-68 தேசிய அணி பிரசுரம்.- 'பேச்சுக் குறிப்புகள்' ஏடுகளின் ஆசிரியர். 68 முதல் 'தினமணி' மூத்த துணை ஆசிரியர். 50-68 தமிழ்நாடு காங்கிரஸ் வெளியீட்டுத் துறையின் ஆசிரியர்; அது இவருக்காகவே தோன்றி-மறைந்தது எனலாம்.

பள்ளிகளில் தமிழிலும் ஆங்கிலத்திலும் பேசி முதற்பரிசு கள் பெற்றவர்; முதன்மை மாணாக்கர். நாடகம் பல புனைந்து

பாடல் உரையாடல் எழுதி நடித்திருக்கிறார். தியாகக் குரல் (50), இலட்சியத் தளபதி (57), நினைச்சது ஒண்ணு நடந்தது ஒண்ணு (58), திருவள்ளுவர் கவிதை நாடகம் (61). பல வானொலி நாடகங்களில் நடித்துளார்: உடன் நடித்தவர்கள் டி. என். அனந்தநாயகி, பேரா. பு. பா. இராசராசேசுவரி.

வாழ்க்கை வரலாறுகள்: மக்கள் தலைவர் காமராஜ் (63), எம். பக்தவத்சலம் வாழ்க்கை வரலாறு (64), பாரதரத்தினம்-காமராஜ் (66), நிர்வாக மேதை-பக்தவத்சலம் (66), இளைஞர் குல திலகம்-எஸ். என். ஏ. அஜீஸ் வரலாறு (66), தேசியத் தென்றல்-ரா. கிருஷ்ணசாமி நாயுடு வாழ்க்கை (68), பக்த வத்சலம் ஐம்பதாண்டுப் பொதுப்பணி (72), எம். ராதாகிருஷ்ண பிள்ளை முப்பதாண்டு பொதுப்பணி (75), பிற; நெய்வேலி தரிசனம் கண்டேன், ஜவகரின் தத்துவம், ஜனநாயகப் பிரச்சினைகள், அளவான குடும்பம் அளவற்ற இன்பம், சோஷலிச உறவு, கர்மவீரர் காமராஜர்-இந்தி பிரசார சபை வெளியிட்ட இந்தி நூல்-காமராஜ் பற்றி இந்தியில் வெளியான முதல் நூல் இதுவே! உணவில் புலால் தேவையா?

50 முதல் புனைந்த கவிதைகள் 700 இருக்கும்; நாள் வார ஏடுகளில் வந்துள. பல கவியரங்குகளில் பாடியவை 250. உயிர்ப்பலி தடுப்பு, தேசீய உணர்வு, நாட்டுப்பற்று, தமிழ்ச் சிறப்பு. ஒருமைப்பாடு போன்றன வலியுறுத்துவன. 'ஜவகர் சரித்திரக் கவிதை' அருமை மிக்கது. 451 வரிகளில் அமைவது, அற்புதமானது.

சிந்தனையாளர் மன்றம், இந்திய சோவியத் கலாச்சாரக் கழகம், இந்திய ஜி. டி. ஆர். நட்புறவுக் கழகம், எல்லார்வி மணிவிழாக் குழு, பாரதியார் 81-வது விழாக்குழு, எம். ராதா கிருஷ்ண பிள்ளை நினைவுக்குழு போன்றவற்றில் செயலர். சென்னை பகவான் மகாவீரர் அகிம்சை பிரசார சங்கத்தின் உயிர் நாடி இவர். உலகத் தாவர உணவாளர் கழக 24-வது மாநாட்டினை நடத்தியவர்.

இவரது பணியினைப் பாராட்டி பக்தவத்சலம் தங்கக் கணையாழி; அன்பு நெறி பரப்பு எழுத்துப்பணி பாராட்டி ராஜஸ்தான் மக்கள் தங்க மோதிரம் அளித்தனர். ஊரன் அடிகள் 'ஜீவகாருண்ய மணி' என்ற பட்டமும் (77) 'இயலிசை நாடக மன்றத்தார்' 'கலைமாமணி' விருதும் (80) வழங்கினர். மணம் 6-9-61 இல். மனைவி சாந்தலட்சுமி; மகன்கள் வேங்கட நாராயணன், இராமசாமி, கிருஷ்ணசாமி.

தேசிய உணர்வும் தமிழுணர்ச்சியும் முரணல்ல என்ற கொள்கையர்; காமராஜ் விழாவில் அரசியலாளர்களைவிட இலக்கியத் துறையினரை அழைத்துச் செயல்படுத்தியவர். தந்தைக்குரிய அன்பினர். பக்தவத்சலம். ஓ. வி. அளகேசன், சி. சுப்பிரமணியம், ஆதம்பாக்கத்துக் காந்தி என்ற ராம கிருஷ்ணன் போன்றாரின் நெருக்கமானவர். சிறந்த பத்திரிகை யாளரான இவர் **முகவரி :** சென்னை-7

**சோலை இருசன்** : (சின்னதுரை). 7-8-1932 வ. ஆ, சோலையார் பேட்டையை யடுத்த மேட்டுச் சக்கரகுப்பம். கொளந்தையப்பன் : லட்சுமி அம்மாள். ஓராண்டில் தந்தை மறையவே, மலேயா சஞ்சிக் கூலியாகச் சென்று 2 ஆம் உலகப் போரில் உடன்பிறந்தவர்களை இழந்து தாயகம் திரும்பினார். 45 இல் காங்கிரஸ்; 48இல் ஜெயப் பிரகாஷ் நாராயணன் தமிழகம் போந்தபோது சோஷலிஸக் கட்சியில் சேர்ந்து, நகர மாவட்ட செயலராகி, இதுபோது, ஜனதாவில் உள்ளார். தடி யடிபட்டுப் பன்முறை சிறை சென்றவர்.

கோவை 'சமுதாயம்', சேலம் 'புதுவாழ்வு' 61-67, துணை யாசிரியர்; சோலையார்பேட்டை 'தொண்டன்' தோற்றுநர்-ஆசிரியர்; 68 முதல் 'சங்கொலி' ஆசிரியர்-நிர்வாகி. 74,77, 80 இல் கிழக்காசிய நாடுகட்குப் பயணம் சென்று இலக்கியப் பாலம் உண்மையிலேயே அமைத்து, பயண-இலக்கிய வர லாற்று நூலும் எழுதிச் சாதனை புரிந்தவர்.

படைத்தன: எரியும் திரிகள் (கவிதை), திறந்த சிறை, போதி புத்தர் (நாடகம்), கிழக்காசிய நாடுகளில் தமிழ் மணக் கிறது, பூமிதானம், பிரிவினையா? தொகுத்தன : இதயங்கள், சரவிளக்கு, தாமரைக்குளம், தேன் மலர்கள், பூமாலை, முத்துச் சரம், முல்லைக்காடு. பதிப்பித்தவை: உயிரின் காதல், கவி மஞ்சரம், மகிழம்பூ, மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு. பெற்ற பட்டங்கள்: கேடயம் (சிங்கப்பூர்), செந்தமிழ்ப் புலவர் (செந்தமிழ்க் கலா நிலையம், மலேயா). தமிழ்ச்சுடர் (சென்னை இலக்கியக் கழகம்). கவித்தென்றல் (இளங்கோ இலக்கிய மன்றம்), புரட்சி எழுத்தாளர்.

தொழிலாளர் தோழர், ஆன்ற அரசியல்வாதி, கண்ணிய மான இதழியலாளர், தூய தொண்டர், சிறந்த எழுத்தாளர், பேச்சாளர், இலட்சியவாதி, இனிய கவிஞர், ஆடம்பரமற்ற அமைதிப் பணியாளர், உதவும் ஒப்புரவாளர், தாய்மை யுள்ளத்தர், விருந்தோம்பல் வல்லார், துணிவு மிக்கவர். மன

திற்பட்டதை மறைக்காது மொழியுநர், பிறரை மதிக்கும் பண்பாளர், தன்மானத்தர்.

ஊக்கு உந்து சக்தியாக அமையும் துணைவி அன்ன லட்சுமி, அன்பு மகள் ஆனந்தி, பொன்விழா 7-8-81இல், தமிழ்ச்சுடர் இளமுருகு பொற்செல்வி பட்டாடை போர்த்த, அருட் செல்வர் பொள்ளாச்சி வள்ளல் நா. மகாலிங்கம் மலரை வெளியிட்டார். குழுத் தலைவர் பாவலர் சுமாச; செயலர் செ. சி, இளந்திரையன். புரட்சிப் பண்ணை வைத்து 35 நூல்கள் வரை வெளிவந்துளது. தாமரைக்குளம்-இந்திய மலேசிய எழுத்தாளர் பங்குகொண்ட 'முதல் உறவுநூல்.'

தமிழ்ப் பணியையே தவமாகக் கொண்டொழுகும் திண்ணியர்; பல்துறை வல்லார். தமிழ்ப் பணிக்கென எத்துணைப் பேரிழப்பு நேரினும் தயங்காது மயங்காது ஏற்கும் தீரர். தனியொருவராகவே நின்று முத்தமிழ்ப் பணிக்கு முனைப்பான சாதனைப் பணியாற்றிவரும் இவர் **முகவரி**: 34, சேட் காலனி, குமாரசாமிப் பட்டி, சேலம்-7.

**மணவை முஸ்தபா** : (முகம்மது முஸ்தாபா) 15-6-1935. திண்டுக்கல் வட்ட பிலாத்து: மீராசா ராவுத்தர் : சையத் பீவி. திருச்சி ஜமாலில் இண்டர், அண்ணாமலை பி.ஏ., சென்னைப் பச்சையப்பன் எம். ஏ., சட்டக்கல்லூரி பி. எல். பயிலும் போதே 30க்கும் மேலான பரிசுகளும், 8 மாநில முதற் பரிசுகளும் பெற்றவர். 65 முதல் தென் மொழிகளின் புத்தக நிறுவனத் தமிழ்ப் பதிப்பராகப் பணியேற்றார். இலக்கியம் சமூகம், மருத்துவம், பொறியியல், பயணம், நுண்கலை, சிறுவர் நூல்கள் எனப் பல்துறை நூல்கள் 100க்கு மேல் பதிப்பித்துள்ளார். 65-70 வரை 'புத்தக நண்பன்' மாதிகையின் ஆசிரியர்.

68 முதல் யுனெஸ்கோ கூரியரின் ஆசிரியராக மிகச் சீரிய பணியாற்றி வருகிறார். வழுவற்ற பெயர்ப்பும் வண்ணமுற வெளியிடுவதும் அமைப்பின் அழகும், உழைப்பினை உறிஞ்சும் கடும் முயற்சியும், ஆற்றல் வாய்ந்த அரும்பணியும் 70லேயே யுனெஸ்கோ பாராட்டியது. இவ்வகையில் **யுனெஸ்கோ பாராட்டுப் பெற்ற முதல் தமிழர்** இவரே! Courier என்பது பிரெஞ்சுச் சொல்; செய்தி எடுத்தியம்புபவர் (Messenger) எனும் பொருளது. இதனை ஒலி பெயர்ப்புச் சொல்லாக (Transliteration) கூரிய நுண்ணறிவுச் செய்திகளைக் கொடுப்பவர் எனப் பொருள்படுமாறு 'கூரியர்' என்ற கூர்த்த பெயரினை அமைத்துளர். இன்னும் நம் பல்கலைக் கழகங்களின் வாயிற்படி

யினையே மிதிக்காத அறிவியல் செய்திகளை வெளியிடுகிறது. புதிய அறிவியல் கலைச் சொற்களைச் சொற் செட்டும் பொருட் செறிவும் மிக அமைத்து அளிக்கிறது. உன்னத உயர் இதழாக இவ்வுலக இதழினை வழங்கி வருகிறார் முஸ்தாபா-உலகினைக் காட்டும் பலகணியாக!

படைப்பு: தென்னக இலக்கியப் போக்கு, ஆங்கிலத்தி லிருந்து மாதிரி லட்சாதிபதி(உலகச் சிறுகதைகள்), ஜெர்மானிய இந்திய இயல், அன்றும் இன்றும், பறக்கும் வகுப்பறைகள், இந்திய தேசிய ராணுவத்தின் கதை; மலையாளத்தின்று பறக்கும் பூக்கள், 12 ஓரங்க நாடகங்கள், காலம் (நாவல்); தொகுப்பாக சிறப்புச் சிறுகதைகள், சீறாப்புராண விருந்து, சிந்தைக்கினிய சீறா என 30 நூல்கள்.

இவர் ஓர் மறுமலர்ச்சித் தமிழறிஞர். தமிழ்த் தொண்டே தலையாய பணியாகக் கொண்டவர், பன்மொழிப் புலமையர், கலைச் சொல்லாக்கச் சிந்தனையாளர், அறிவியல் பேரார்வலர், அருமையான மொழி பெயர்ப்பாளர்;கருமமே கண்ணாயினார்; எளிமையே உருவான இனிமையே வடிவான தமிழ்க் கரும யோகி. செயற்படு சிந்தையர், சுற்றிச் சுழலும் தமிழ்த்தும்பி. தொண்டே துடிப்பாகக் கொண்ட தூயர். உழைப்பே உயிராக உடையவர்.

பாரிசில் நடந்த கூரியர் சர்வதேச மாநாட்டில் கலந்து கொண்டவர். இவரது தமிழ்க் கலை பண்பாட்டு விளக்கம் கேட்ட மாநாட்டினர் 18 உலக மொழிகளில் தமிழர் பண்பாடு பற்றிய சிறப்பிதழாகக் கூரியர் (79இல்) வெளியிட ஒருமனதாக ஒப்பினர்.

மேலை நாடுகள், அரபு நாடுகள், கீழை நாடுகட்கும் பயணம் செய்தவர். சீறாப் புகழ் பரப்பும் உமறுப் பேரவையின் அமைப்பர். உலகத் தமிழரை இணைக்கவும், சர்வதேச அடிப் படையில் இலக்கிய ஏடு தொடங்கவும், உலகளாவிய போட்டி கள் நிகழ்த்தவும், மறைந்து வரும் இலக்கியங்களை-குறிப்பாக இசுலாமியத் தமிழ்க் கலை வளர்ச்சி பாதுகாப்புக்கும், ஆராய்ச்சிக் கருத்தரங்குகள் நிகழ்த்தவும் தொடங்கப்பெற்ற 'மீரா ஃபௌண்டேஷன்' இயக்குநர். இவர் தொடர்பில்லா இலக்கிய நிறுவனங்களே இல்லை எனலாம். **முகவரி :** World University Service Centre Building, East Spur Tank Rd., Chetpet, Madras-31. (664817); AE 102 (Plot 2310), Anna Nagar, Madras-40. (612389)

**இதழியல் பற்றிய தமிழ் நூல்கள் :** இதழியல் தனிப்படிப்பாக அமைவதோடு, கல்லூரிப் பாடத் திட்டத்திலும் ஒரு தாளாக ஆக்கப் பெற்றதால், தமிழில் நூல்கள் ஆக்கித் தரும் அவசியம்-ஆர்வம் பிறந்தது. அதன் பயனாக அரும்பியவை:

இதழியல்-இரா. கோதண்டபாணி; பத்திரிகைத் தமிழ்-தங்கமணியன்; செய்தி உலகம்-பழநி அரங்கசாமி; செய்தி இதழ்களின் கதை-பி. வி. கிரி; இந்திய இதழ்கள்-மா. ரா. இளங்கோவன்; இந்தியப் பத்திரிகைத் தொழிலியல்-வி. நா. மருதாசலக் கவுண்டர்; நாள் தாள் எழுத்தாளர் கையேடு-சி. பா. ஆதித்தனார்; நாள் கிழமை இதழ் விளக்க வரிசை-சு. அ. இராமசாமிப் புலவர், செய்திக்குப்பின்-என். வேம்பு சாமி, தமிழிதழியல்-சதாசிவம்.

தமிழ் இதழ்கள்-சோமலெ; இதோ தமிழ் இதழ்கள்-வி. மு. ஞானப்பிரகாசம்; தமிழ்ப் பத்திரிகைகள் .குளத்தூரான்; முற்காலத் தமிழ் இதழ்கள்-மா. ரா. இளங்கோவன்.

தேசியம் வளர்த்த தமிழ்-கா. திரவியம்; விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு-ம. பொ. சி; The Vernacular Newspapers in Journalism. A. N. Sivaraman. Introduction to Journalism, History of Indian Journalism-S. P. Thiagarajan.

**க. பட்டாபிராமன் :** *10-6-1944.* தஞ்சை மாவட்ட செருவா விடுதி. பொதுப் பணித் துறையில் பணியாற்றுபவர். 60 தொடங்கித் தமிழகப் பல்வேறு பெரு நகர்களில் தமிழ்ப் பத்திரிகைக் கண்காட்சி நடத்தியவர். மறைந்த பழம் ஏடுகளின் முதல் இதழ்கள் திரட்டியுள்ளார். 'தமிழ் ஏடுகள் வழி காட்டி' நூல் 66லேயே வெளியிட்டவர். இதற்காகவே தம்மைத் தத்தம் செய்து கொண்டவரை இங்கே நினையாமல் இருப்பது நன்றி அன்றன்றோ!

**விரைந்த வளர்ச்சி :** வீடுதோறும் எழுத்து வாசனையுடைய எவர் கையிலும் ஏடுகள் தவழ்கின்றன; பட்டி தொட்டி யெங்கணும் பரவியுள்ளன. இவ்விரைந்த வளர்ச்சிக்கு அடிப் படை அச்சுப் பொறி: வழிகாலியவர்கள் கிருத்துவப் பாதிரிமார்கள், உரைநடை வளர்ச்சி, அரசியல் விழிப்பு, கட்சிப் பற்று, மாணவர் ஆர்வம், நாட்டு நடப்பு, உலகச் செய்தி, இலக்கியத் துடிப்பு இவை பிறவற்றால் இதழ்கள் பல்கிப் பெருகி வருகின்றன. அரசியல், அறிவியல், இலக்கியம்,

அறவியல், சமயம், சமுதாயம், பெண்மை, குழந்தை எனப் பன்னோக்கில் பணியாற்றுகின்றன.

**விளையும் பயன் :** நாட்டின் நாகரிகத்தை-மக்களின் மன வளத்தைக் காட்டும் கண்ணாடியாகக் காட்சியளிக்கின்றது. இருந்த இடத்திலிருந்தே நாட்டு நடப்பினை உடனுக்குடன் அறிய உதவுகிறது. அரசுக்கும் மக்களுக்கும் தொடர்பினை உண்டாக்கும் ஒரு பெருங் கருவியாக ஒளிர்கிறது. எளிய பொதுமக்களுக்கும் இனிய இலக்கியத் தொடர்பினை ஏற் படுத்துகிறது. உலகம் ஒரு குடும்பமாகச் சுருங்கி நெருங்கி வரக் கரணியமாய் அமைகிறது. பொது அறிவு பரப்புகிறது. பயனுள்ள வகையில் பொழுது கழியச் செய்கிறது. பைந் தமிழைப் பல்வகையில் செழித்திடச் செய்கிறது. அறிவியல் தமிழை அளிக்கிறது. வேளாண் மக்களுக்கு விவரம் தருகிறது. கலை செழிக்கச் செய்கிறது. Dress is a great force as well as a powerful instrument.

இத்துணை நன்மைகளோடு பெருந்தீமை ஒன்றும் பெருகி வருகிறது. காசே குறியாகக் கீழ்மை உணர்ச்சிகளைத் தூண்டிக் கெடுக்கும் தரமில்-படிக்கத் தகாத-பார்க்கவும் கூடாத நச்சிதழ் கள் பல நடமாடுகின்றன. பைந்தமிழைக் குழிதோண்டிப் புதைக்கும் வகையிலும் சில வெளிவருகின்றன. 'நியூவேவ்' எனும் போர்வையில் மக்களின் பலகீனத்தை வைத்துப் பந்தாடு வதும், விலங்குணர்வுகளை வெளிக்காட்டுவதும் வைத்து விளையாடுவதும் (expose as well as exploit) செய்கின்றன சில சிவப்பு இதழ்களும் மஞ்சள் ஏடுகளும்! சட்டத்தால் இம் மஞ்சள் ஏடுகளை மடியச் செய்வதைக் காட்டிலும், மக்களே நல்ல தீர்ப்பு வழங்குமாற்றான் இவற்றை மடியச் செய்தலே மேல். மக்கள் வாழ்வோடு இதழ்கள் இரண்டறக் கலந்து விட்டன; ஒன்றி வளர்கின்றன என்பதை எவரும் மறுக்கவோ, யாரும் மறக்கவோ முடியாது.

**இலக்கிய மலர்ச்சி :** ஏடுகள் படைப்பாளிக்கும் படிப்பாளிக் கும் தொடர்பு ஏற்படுத்தும் பாலமாகின்றன. எழுத்தாளர் களை அறிமுகம் செய் நற்சாதனங்கள், ஏற்றமும் தோற்றமும் பெறுமாறும் செய் கருவிகள். இதனால் 20ஆம் நூற்றாண்டின் ஐம்பெரும் வளர்ச்சிகளாம் கவிதை, சிறுகதை, புதினம், கட்டுரை, ஆராய்ச்சி பல்கிப் பெருகவும் மல்கி மலரவும் இதழ்கள் பெரிதும் உதவுகின்றன. இன்றேல் இன்றைய இலக்கிய மறு மலர்ச்சி ஏற்பட்டிருக்காது. புத்திலக்கியங்கள் பக்கம் மக்களின் கவனத்தைத் திருப்பி அவற்றைப் பயிலும் ஆர்வத்தையும்

பழக்கத்தையும் ஏற்படுத்தியுள்ளன. அத்தோடு புதுத்தமிழ்ப் படைப்பாளர்க்கு உந்து சக்தியாகவும் ஊக்கு முகமாகவும் அமைந்து புதிய இலக்கிய வளர்ச்சிக்கு வழிவகுத்தன. இதழ்களின் ஆக்கம் பெரிது, ஆற்றல் பெரிது. இன்றமிழை இதழ்களால் சிறக்கச் செய்தல் எல்லோர் கடனுமாகும்.

## 27. மொழியியல்

தமிழ் என்றால் பொதுவாக நம் எண்ணத்தில் தோன்றுவது இலக்கியமே! வெறும் கவிதை நயம் காண்பதும் களிப்பதுமே முழுமையான மொழித்திறம் ஆகிவிடாது; அது கவைக்குதவாது; அரைக்கிணறு தாண்டுவது போன்றது. இப்போது ஒரு மொழிப் படிப்பு என்றால், மொழி ஆய்வும் இலக்கியத் துய்ப்பும் (Language & Litt.) என்ற நிலை உருவாகிவிட்டது. வெறும் இலக்கிய ரசனை மனிதனின் ஒரு கால் போன்றது, இன்னொரு கால் மொழியியல்; இரு கால்களால் தான் மாந்தன் நடந்திட முடியும். எனவே மொழியியல் இலக்கியம் இரண்டும் இரு கண்கள்; கண்கள் இரண்டாயினும் பார்வை ஒன்றே! அதுபோல் இரண்டும் இணைந்ததே மொழி-மொழிப் படிப்பு! ஒரு காசின் இருபக்கங்கள் போலே; ஒரு பக்கம் தேய்ந்திருந்தாலும் செல்லாது. எனவே ஒன்றின்றி ஒன்றில்லை எனுமாறு மொழி இயலும்-இலக்கிய இயலும் இரண்டும் இணைந்ததே தமிழ் என்றாதல் வேண்டும். ஒருமுக அறிவு மட்டும் பெறுவது ஒற்றைக் கண் பெற்றது போலும், ஒருகால் உடைமை போன்றது. எனவே இருவிழியும் இருகாலுமாக இரண்டினையும் கற்றுணர்தல் வேண்டும். இது பயனில்லாத வேலை என்றோ, இலக்கியத்துய்ப்புக்கு இதனால் யாது பயன், ஏதுபயனுமில்லை எனப் பயனில பேசாது, மொழியியலை முனைந்து கற்றலே முறையாகும். இதனால் மொழியியலின் முக்கியத்துவம் உணரலாம்.

ஐம்பதுகளின் தொடக்கத்தில் அமெரிக்காவில் மொழியியல் முனைப்பு மேம்பட்டது. அமெரிக்க ஆய்வுலகத் தொடர்பு கரணியமாகப் பூனா தக்கணக் கல்லூரியில் மொழியியல் விற்பன்னர்கள் கோடைவகுப்புகள் நடாத்தினர். இதில் பயிற்சி பெற்ற குருதேவர் தெ. பொ. மீ. மூலம், தமிழகத்தில் விழிப்பு ஏற்பட்டது. இவரே இத்துறையின் முதல்வர், வழிகாட்டி. அவர் அண்ணாமலையில் துறையினைத் திறந்தார். கேரளத்தில் வ. அய். சுப்பிரமணியனார் வழிகோலினார். இத்துறையின்

முடிசூடா மன்னர். இரு சுடர்களும் தமிழில் கால் கொள்ளச் செய்து வேரோடித் தழைக்கச் செய்த செம்மல்கள்.

இப்படிக் கிளைத்தோரில் இருவகை. முதலில் தமிழ்ப் பேராசிரியர்கள் மொழியியல் அறிஞராக மூண்டனர். பின்பு இலக்கியப் பின்னணியில்லாது நேரே மொழியியல் எம். ஏ. ஆயினோர் பலர். இதனால் வெறும் மொழியியல் பயின் றார்க்குத் தமிழ் (இலக்கியம் இலக்கணம்) தெரியாது எனும் குற்றச்சாட்டு பரவலாகப் பேசப்பட்டது. இங்கே ஒன்று எண்ணுதல் வேண்டும்.

**மொழிநூல்-இயல்** : தொடக்கத்தில் மொழிநூலே (Philology) நுழைந்தது. மு. வ, பாவாணர், ரா. சீ. இதில் முனைந்தனர். நாளடைவில் மொழியியல் (Linguistics) மேவியது. ஆனால் இன்னும் நாம் முன்னவர்களின் நூல்களை வைத்து மொழி யியல் பயில முனைகிறோம்! பின்னதின் ஒரு கூறே முன்னது; முன்னது கிணற்றில் குளத்தில் குளிப்பது போன்றது;பின்னதோ பேராற்றில் கடலில் நீந்துவது ஆகும். இதனை உணராது அவலை நினைத்துக் கொண்டு உரலை இடித்துக் கொண்டிருக் கிறோம். இரண்டின் இயல்பும் வேறுபாடும் உணர வேணும்.

1. மொ. நூல் : சொற் பிறப்பு வேர்ச் சொல் கருதுவது, இலக்கியத்தில் இதன் வளமைகாட்டி, பிற மொழிகளில் தமிழ்ச் சொல்-மூலமொழி என்பன காண்பது. மொ. இயல் : நம் ஒரு மொழி விடுத்து, எல்லா மொழிக்கும் பொது விதிகள் கண்டு அது கொண்டு ஒருமொழியை ஆராய்வது. 2. முன்னது மொழியின் தொன்மை தன்மை மட்டும் பேசுவது; குற்றங் குறை காண்பதன்று. ஆனால் பின்னதோ குற்றம் குறையும் கூறுவது. 3. முன்னதில் மொழி வெறி-பிறமொழி வெறுப்பு மூளும்; பின்னதில் மொழி நெறி மேவும். 4. முன்னது எழுத்து இலக்கியம் மட்டும் ஆராய்வது; பேச்சு இழிவழக்கென ஒதுக்கப் பெறும். (தொல்); பின்னதோ பேச்சு எழுத்து இரண்டும் கருதப் படும், பேச்சு மொழிக்கு முதன்மை தரப்பெறும். இதனாற்றான் மொழியியல் துறை தொடங்கப் பெற்ற போது பாவாணர் தலைமை பெறாது, தெ. பொ. மீ துறைப் பொறுப்பினை ஏற்றார்! இன்னொன்றும் அறிய வேணும்;

**இலக்கணம் : மொழியியல் :** இலக்கணத்தை அப்படியே வழிபடு நிலையில் (Hero Worship) ஏற்றுப் போற்றுவது; உரை யாசிரியர்கள் மரபினை ஒட்டியே உரை எழுதினர். (சேவல் பெண்பால்-முருகன் கொடியாதலின். பேரா. மரபியல் 603

உரை). முனைவர். வ. சுப. மா. 'உரையாசிரியர்கள் நேர்திறம் செய்வார்களேயன்றி எதிர்திறம் செய்யார் என்றார். (நண்டும் தும்பியும் நான்கறிவ-தொல் 586). மூல ஆசிரியரை விட்டுக் கொடுக்காது அமைதியே கூறுவர் (என் என்பது உரிச்சொல் நீர்மைத்து-சேனா. சொல் 269).

ஆனால் மொழியியலோ இலக்கணத்தையும் சரியா தப்பா எனக் காரண காரிய முறையில் அணுகித் துணிந்து கூறும். இத்த அறிவு வந்த பின்பே பிரச்சினைகள் எடுத்துப் பேசப் பட்டன. பேச்சு மொழித் தாக்கம் காணும் நிலை உருவாயது. ஈ, தா, கொடு என்பது சமுதாய அடிப்படையில் ஆராயப் பட்டது. இப்படி இலக்கணத்துக்கும் ஒளியூட்டி, சிக்கல்களை அவிழ்த்துச் சிடுக்கெடுத்து வருகிறது. தமிழ்மொழி இலக்கண அறிவு வேறு, மொழிகளின் இலக்கண அறிவு வேறு; முன்னதால் தவறுகள் காணமுடியாது; பின்னதால் முடியும். மொழிகளின் இலக்கண நெறி கொண்டு, ஒரு மொழியில் - நந்தமிழில் பயன்படுத்திக் காண்பது பெற்றிய தாகும். இது அறிவியல் அணுகுமுறை.

தமிழகத்தில் முதன்முதலில் வித்திட்டவர் மாகறல் கார்த்திகேய முதலியார்; (1857—1916). வேரோடச் செய்தவர் கால்டு வேலர். யாழ்ப்பாண சுவாமி ஞானபிரகாசரும், பா. வே. மாணிக்கநாயக்கரும் கட்டுரைகள் வழி கவனத்தை ஈர்த்தனர். டாக்டர் பி.எஸ். சுப்பிரமணியசாஸ்திரி, பன்மொழி அறிஞர் வே. வேங்கடராஜலு ரெட்டியார் இருவரும் இதில் தோய்ந்தனர். ரா. பி. சேதுப் பிள்ளை (Words and their Significance), இலக்குவனார் (Tamil Language), அ. சிதம்பரநாத செட்டியார் மூவரும் ஓரளவு ஈடுபட்டனர். கே. என். சிவராஜ பிள்ளை 'சில தமிழ்ச் சொல் ஆராய்ச்சி' எழுதியுள்ளார்.

பாவாணர் தனிப் பெரும் அறிஞராகப் பிறங்குகிறார்; முதல் தாய் மொழி, திராவிடத் தாய், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், The Primary Classical Language of the world போன்றன படைத்துத் தமிழ் மொழியின் பெருங்காப்பாள ராகப் பிறங்கினார். பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரை யாரும் உறுதுணை புரிந்துள்ளார். மதிவாணன் அவர்கள் பாவாணர் வழி சுவடு பதிக்கிறார்; அருளி பீடு நடைபோடு கிறார்.

'நன்னெறி முருகன்' எனத் தம் பெயர் நாட்டி நற்றமிழ் ஊற்றம் மிக்கவராக டாக்டர் சுனிதி குமார் சாட்டர்ஜி உந்து சக்தியாக ஒளிர்ந்தார். வையாபுரியார் சொற்கலை விருந்து, சொற்களின் சரித்திரம், Research in Draridian Languages படைத்து வல்லமை பெற்று விளங்குகிறார்!

டாக்டர் மு. வ. மொழிநூல், மொழிவரலாறு, மொழியியற் கட்டுரைகள் தீட்டித் தொழில் பாட்டை போட்டார். எளியோர்க்கும் எளியாக்கும் வண்ணம் எழுத்து-சொல்லின் கதைகளை அளித்தார். இதனைத் தொடர்ந்து டாக்டர். ரா. சீனிவாசன் மொழியியல், மொழி ஒப்பியல், மொழி ஒப்பியலும் வரலாறும் போன்றன படைத்தார். டாக்டர் இன்னாசி எழுத்தியல் சொல்லியல் யாத்துளார். க. ப. அறவாணன் இத்துறையில் துடிப்பும் பயிற்சியும் கொண்டவர். மாநிலக் கல்லூரி ராஜலட்சுமி அம்மையார் போற்றத்தக்க பயிற்சி மிக்கவர். சென்னைப் பல்கலைக் கழகத்தைப் பொறுத்தவரை பொற்கோ மட்டும் பொலிவு பெறுகிறார்; மூத்த பல்கலைக் கழகத்தில் மொழியியற்றுறை இல்லாமை குறையே!. இனி, தமிழில் மொழியியல் ஆய்வும் தோய்வும் அறியுமுறையில், மொழியியல் அறிஞர் தம் பணிகளைப் பார்ப்போம்.

**அண்ணாமலையில் மொழியியல் துறை :** *1929*இல் உருவான அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அதன் வெள்ளி விழா (54ல்) வின்போது பல்கலைக் கழக மானியக் குழு வழங்கிய 3 லட்சம் கொண்டு மொழியியல் துறை முளைத்தது. முதலில் மொழி நூல் துறை. (Dept. of Philology) 56-58; மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் பேருரையாளர். 58-முதல் மொழியியல் துறை; 64ல் மானியக்குழு இதனை ஓர் ஆராய்ச்சி உயர்வு மையமாக உயர்த்தியது; 67ல் காமன்வெல்த் கல்விக் கூட்டுறவுத் திட்டம் கொழும்புத் திட்டம் இத்துறையில் செயலாக்கப் பெற்றது. இதனால் இம்மைய ஆசிரியர் பலர் மேலை நாடுகட்குச் சென்று பல்வேறு மொழியியல் பிரிவுகளில் சிறப்புப் பயிற்சி பெற்றுத் திரும்பினர்.

58-67 தெ. பொ. மீ. தோற்றுநர் தலைவராகத் திகழ்ந்தார். 67-30-6-85 டாக்டர் ச. அகத்திய லிங்கம் இயக்குநர், 1-7-85 தொடங்கி டாக்டர் செ. வை. சண்முகம் இயக்குநர்.

திராவிட மொழி கல்வெட்டு, மாற்றிலக்கணக் கோட்பாடு ஆய்வு, பழங்குடி மக்களின் மொழி, வரலாற்றுமொழி, சமூக

மொழியியல், சங்கமொழி, நாட்டுப்புறவியல் என பல்லாய்வுகள் பல்வேறு துறைகளில் ஆய்வு நடாத்தித் 'தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் மட்டுமின்றித் திராவிட மொழிகள் அனைத்திற்கும் ஒரு சீரிய ஆய்வு மையமாக ஒளிர்கிறது.

முதுகலைப் பட்டப்படிப்பு, டிப்ளமோ, சான்றிதழ், தமிழ் மலையாளம் தெலுங்கு, கன்னடம் வடமொழிச் சான்றிதழ், டிப்ளமோ வகுப்புகள் நடத்துகின்றது. 20க்கும் மேற்பட்ட அறிஞர்கள் பணியாற்றும் இம் மையம் கண்ட ஆய்வு நுணுக்கங்கள் பல; அரிய கண்டுபிடிப்புகள் பல. வெளியான நூல்கள் 100க்கும் மேலன. டாக்டர் பட்டம் பெற்றோர் 100. 1000க்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகள். நடாத்திய கருத்தரங்குகள் 40. கோடை வகுப்புகள் பல. 10க்கும் மேலான ஆய்வுத் திட்டங்கள். இந்தியப் பெரு நாட்டின் சிறந்த மொழியியல் மையமாக மிளிர்கிறது.

**ச. அகஸ்தியலிங்கம்** 19-8-1929. நாகர்கோவிலை அடுத்த கேசவன்புதூர். பத்து வயதிலேயே தொல்-நன். பயின்றவர். 57 இல் தமிழ் எம். ஏ. முடித்து இரண்டாண்டுகள் இந்துக் கல்லூரியில் பணியாற்றி, டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் அவர்களிடம் மொழியியல் நோக்கில் பதிற்றுப் பத்தினை ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றார். பின் அமெரிக்கா இந்தியானா பல்கலைக் கழகம் சென்று மொழியியல் பயின்றார். இயல்பான இலக்கிய இலக்கண ஆர்வத்தோடு மொழியியல் ஆர்வம் சேர்ந்து மும்முனையில் முறுக்கேற்றி மிகப் பழைய மொழிகளான லத்தீன், சீன, எகிப்திய மொழிகளுடன் ஒப்பிட்டு ஆராய்ந்து தமிழும் உயர்தனிச் செம்மொழியே எனக் கண்டார். காப்பியர் கூறும் மாத்திரை, உச்சரிப்பு அனைத்தும் மிகச் சீரிய நுண் கருவிகள் மூலம் கண்டுணர்ந்தார்; டாக்டர் பட்டம் பெற்றார்.

அண்ணாமலையில் மொழியியல் துறைப் பேராசிரியர்-தலைவரானார். இதுவரை 22 நூல்கள்: 100க்கும் மேற்பட்ட கட்டுரைகள், பதிப்புகள் 20. அரிய கொடை 'சங்கத் தமிழ் வரிசை'; 15 வரை வரும், வந்தவை 4. தொடரியல் ஆய்வினை முதன் முதல் செய்த மூலவர். செயப்பாட்டு வினை தமிழில் உண்டா? செய்வினையே செயப்பாட்டு வினையா? இரண்டும் ஒன்றல்ல, வேறு வேறுதான் என நிறுவியவர். இதுபோது தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர். (24.11-86)

உலகமொழிகள், தமிழகப் பழங்குடி மக்கள், தொல் காப்பிய மொழியியல், Language of Tamil Inscriptions, Bibiliography of Dravidian Linguistics, Generative Grammar of Tamil போன்றன குறிப்பிடத்தக்கன. நாட்டுப்புறவியலில் மிகு நாட்டம் கொண்டவர். இவ்வளவும் கொண்ட இவர், எளிமை இனிமை மிக்கவர். **முகவரி:** பொன்னகம். மாரியப்ப நகர், அணணாமலை நகர் - 608001.

**செ. வை. சண்முகம்:** 12-1-1932 திருச்சி மாவட்ட ஜெயங் கொண்டம் செங்குந்தபுரம். வைத்திலிங்கம்: அமிர்தம்மாள், அரசினர் உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 50, குடந்தை அரசினர் கல்லூரி இன்டர் 52, அண்ணாமலை தமிழ் ஆனர்சு 55. பணி: பாலக்காடு கல்லூரி 55; அண்ணாமலை தமிழ்த் துறை 55—தெ. பொ. மீ. வழி காட்ட Naccinarkkiniyars conception of phonology என 60 இல் எம். லிட். பட்டமும், Language of Tamil Inscriptions 1350—1700 என 68 இல் டாக்டர் பட்டமும் பெற்றார். சிம்லா, பூனா, டேராடூன், கோவை மொழியியல் கோடை வகுப்புகளில் பயிற்சி பெற்றார்.

இவரது தனித்துறை: தமிழ் இலக்கணத்தை மொழியியல் கண்ணோடு ஆராய்வது; சமுதாய மொழியியல்; ஒப்பியல்-வரலாற்றியல் பார்வை - திராவிடப் பெயர்கள். எழுத்துச் சீர் திருத்தம். நூல்கள்: Dravidian Nouns - a comparative study, Indonesian studies, Aspects of Linguistic development in Tamil மொழியும் எழுத்தும், எழுத்திலக்கணக் கோட்பாடு, சொல் லிலக்கணக் கோட்பாடு, சுவாமிநாதம் உரை எழுதிப் பதிப்பு. 72-73 Reading Varsity Visiting Prof. 77 - 78. Prof. of Indian Studies, Jagartha. பொறுப்புகள்: Vice President: Linguistic society of India. President: All India Tamil Linguistics Association. Editor மொழியியல், 59 இல் மணம், மனைவி தனலட்சுமி; மகன் வேலாயுதன் BE, உமா BE. 1-7-85 முதல் மொழியியல் உயர் மையத்தின் இயக்குநர்.

**க. முருகையன்:** 27-4-1935. திருவையாற்றையடுத்த புனல் வாயில். கருப்பையா: ராஜாமணியம்மாள். சீனிவாசராவ் உயர் நிலைப் பள்ளி இறுதி வகுப்பு (55); திருச்சி தேசியக் கல்லூரி இன்டர் (57), சென்னைப் பச்சையப்பன் தமிழ் எம். ஏ. (60). அண்ணாமலை மொழியியல் முதுகலை (62). அங்கேயே 62 முதல் மொழியியல் துறையில் பணி. இவரது தனித்த துறை:

ஒலி-ஒலியன் இயல்கள். ஆங்கிலத்திலும் தமிழிலும் 40க்கும் மேற்பட்ட கட்டுரைகள். நூல் பேச்சொலியியல், டாக்டர் பட்டம் The Language of Kalithokai.

மிக நுட்பமுடன் ஒலிகளை ஒலியன்களை உணர்த்தும் ஒண்மையர். இத்துறையில் தென்னகத்தில் தலைசிறந்த அறிஞராகத் திகழ்கிறார். மூர்த்தி சிறியதுதான் (குட்டை உருவினர்), ஆனால் கீர்த்தி பெரிது. கண்டிப்பும் கண்ணியமும் மிக்கவர். மாணவர்கள் அஞ்சிப் போற்றும் ஆன்ற சான்றோர். தமிழகத்தில் ஒலி-ஒலியனியல் முடிசூடா மன்னர் முருகையன் என்றால் எல்லோரும் ஒப்புவர். அத்துணைத் துல்லியமான உச்சரிப்பு நா நுனியில் நர்த்தனமாடும்.

**சுப. திண்ணப்பன்**: *19-6-1935*. தேவகோட்டை. பச்சையப்பன் கல்லூரி முதுகலைத் தமிழ் மாணவர். *64* இல் அண்ணாமலையில் Language of Pazhamozhi ஆராய்ந்து எம். லிட். பட்டமும், *78* இல் A descriptive Study of Jivakacinthamani என்ற டாக்டர் பட்டமும் பெற்றார். அண்ணாமலை மொழியியல் துறையில் பல்லாண்டுகள் இணைப் பேராசிரியராக இலங்கி, மலேயாப் பல்கலைக் கழக இந்தியத் துறையில் தமிழ் விரிவுரையாளராகச் சில்லாண்டுகள் சிறந்து, *83* முதல் சிங்கப்பூரில் சிறக்கப் பணியாற்றி வருகிறார். **முகவரி**: Dept. of Language Studies, Institute of Education, Bukit Taman Road, Singapore-1025.

ந. **குமாரசாமிராஜா**: *17-8-1934*. ராஜபாளையம் நல்லையராஜா; வேம்பம்மாள். உள்ளூரில் எஸ். எஸ், எல். சி. (*49*), சென்னை லயோலாக் கல்லூரி இன்டர் (*51*), மாநிலக் கல்லூரி தமிழ் ஆனர்ஸ் (*54*). மதுரை 'தமிழ் நாடு' துணை ஆசிரியர் (*55*), திருச்சி தேசியக் கல்லூரி விரிவுரையாளர் (*56*), அண்ணாமலை மொழியியல் துறை ஆய்வர் (*55-57*), ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் தெலுங்கு வேர்ச்சொல் அகராதி ஆய்வுத் துணைவர் (*57-61*), கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் தமிழ் கற்பித்தல்-பயிலல் (*61-64*), *65* முதல் அண்ணாமலை மொழியியல் துறை ஆசிரியர்; இடையில், *70-71* பிலடல்பியா பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்: *73-74* எடின்பரோ பல்கலைக் கழக Exchange Visitor; *8[illegible]-83* அல்ஜீரியா ஆங்கிலத்துறையில் மொழியியல் கற்பித்தல். மொழியியலில் இவரது தனித்தோய்வுக் களம் 'திராவிட ஒப்பியல் மொழியியல்'. நூல்கள்: Post Nasal Voiceless plosives in Dravidian Languages. Conversational Tamil (for

foreigners), எம். லிட். A Philological study of Kuruntokai; டாக்டர் பட்டத் தலைப்பு: Generative Grammar of Rajapalayam Telugus. கனிவுமிக்க கண்ணியர்.

**அ. காமாட்சிநாதன்** 4-8-1938. நெல்லை மாவட்ட சிவகிரி. அருணாசலத் தேவர்: செல்லம்மாள். பால விநாயகர் உயர் நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 54, மதுரைத் தியாகராசர் கல்லூரி பி. ஏ., எம். ஏ. 60, கேரளப் பல்கலைக் கழக இந்திய அரசின் ஆராய்ச்சி அறிஞர் 60-64; அங்கேயே மொழியியல் ஆய்வுத் துணைவர் 64-67. அண்ணாமலை மொழியியல் துறை விரிவுரையாளர் 67-74, பாளையம் கோட்டை தூய சவேரியர் கல்லூரி முதுகலைத் தமிழ்ப் பேராசிரியர் 74-77, அண்ணாமலை மொழியியல் துறைப் பேருரையாளர் 78 முதல்.

இவரது சிறப்புத் துறை: வரலாற்று மொழியியல், திராவிட ஒப்பியல், தமிழ் மொழி வரவாறு, சங்கப் பாக்களின் கால முறை. நூல்கள்: The Tirunelveli Tamil Dialect. 20 க்கும் மேற்பட்ட ஆங்கில-தமிழ்க் கட்டுரைகள்.

**சு. சக்திவேல்**: 15-1-1939. மதுரை ஆண்டிப்பட்டி கோத்து ஊத்து. சுப்பையா: பழநியம்மாள். சின்னமனூர் கிருஷ்ண ஐயர் உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 55 இல். விருதுநகர் செந்திற்குமார நாடார் கல்லூரி இன்டர்; அண்ணாமலை தமிழ் எம். ஏ. (61), மொழியியல் (63), A descriptive study of Toda Languages டாக்டர் பட்ட ஆய்வு (74).

64 இல் சென்னைத் தலைமைச் செயலகத்தில் மொழி நிபுணர்; 66-74 Research Associate, Anthropological Survey of India; 74 முதல் அண்ணாமலை மொழியியல் விரிவுரையாளர். இதுவரை 20 நூல்கள் படைத்துளார். தமிழ்மொழி வரலாறு (தமிழக அரசின் பரிசு 86), Phonology of Toda, Grammar of Toda, Bibiliography of Dravidian Linguistics, Mudura Dialect, Vakkaliga Dialect, Tribal Dialects of Tamil Nadu, மொழியியல் கலைச்சொல்லகராதி. 86 மொழியியற் கட்டுரைகள், நூறு ஆண்டுத் தமிழ் உரைநடை. பல்கலைக் கழக மான்யக் குழுவின் 2¼ லட்சத் கிட்டமாக A Study of Dravidian Tribal languages ஆராய்ந்து வருகிறார். ஊக்கம் மிக்கவர்; உழைப்பாளி.

**க. பாலசுப்பிரமணியன்**: 29-6-1939. திருவையாறு. கல்யாண சுந்தரம்: ராஜம்மாள். சீனிவாசராவ் உயர்நிலைப்

பள்ளி இறுதி வகுப்பு 54, அரசர் கல்லூரி வித்துவான் 58, அண்ணாமலை பி.ஓ.எல். 62, எம்.ஏ. மொழியியல் 64. அங்கேயே பணி. இவரது தனிக்களம்: பொருண்மை இயல், அகராதி இயல், மரபிலக்கண ஆய்வு. சிறப்பாய்வு தொல் காப்பியம். தொல்காப்பியம் பாணினீயம் ஒப்பீடு செய்து, தொல். பாணினீயத்தின் தழுவல் இல்லை என நிறுவியுள்ளார். 50-க்கும் மேலான ஆங்கில-தமிழ்க் கட்டுரைகள் யாத்துள்ளார். இலக்கண ஆய்வுக் கட்டுரைகள் (பதிப்பு). நான்கு திராவிட மொழிகள்-இலக்கண ஒப்பீடு. பல்கலைக் கழக மானியக் குழு வின் திட்ட ஆய்வாக மேற்கொண்டுள்ளார்.

II. **டாக்டர் வ. அய். சுப்பிரமணியம்**: *1926*. திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழக மூன்றாம் மதிப்பியல் தமிழ்ப் பேராசிரியராக 54இல் பணியேற்றார். 59இல் அது பேருரையாளர் பணியாக மாற்றமுற்றது. 66இல் மொழியியல் துறை தோன்றி அதன் முதற் பேராசிரியராக அமர்ந்தார். வையாபுரிப் பிள்ளை இருந்தபோது சங்க இலக்கியங்கள் சிலவற்றுக்குச் சொல்ல டைவுகள் அமைத்தார். அதனை மேலும் விரிவு செய்து தற் கால மொழியியல் முறையில் அவற்றிற்கு இலக்கணம் வகுக்கும் பணி மேற்கொள்ளச் செய்தார், வி.ஐ.எஸ்! எல்லாச் சங்கப் படைப்புகளும் பகுப்பாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு நூலுருப் பெறச் செய்தார். இவரின் மாணக்கர் பலர்; அகத்தியலிங்கம், ச.வே. சுப்பிரமணியம், தா.வே. வீராசாமி, இராமசுந்தரம், இரா. இளவரசு போல்வார். 'புறநானூற்றுச் சொல்லடைவு' இவரது ஆக்கம்.

தமிழ்கூறு நல்லுலகிற்கு மொழியியலை அறிமுகம் செய்து நுழைவு செய்தவர் தெ.பொ.மீ. என்றால், அதனைப் பேணி வளர்த்து, பரவிப் பெருகச் செய்த பெருமையர் வ.அய்.சு. அவர்கள். 71இல் திராவிட மொழியியலார் கழகம் திருவனந்த புரத்தில் தோற்றினார். இந்த International School of Dravidian Linguistics 5 தென் மாநிலங்களின் உதவி பெறுவது. இது ஆண்டுக்கு இருமுறை சனவரி சூன் திங்களில் இதழ் வெளியிடு கிறது; இதுவன்றி DLA News என 4 பக்க வெளியீடும் தரு கிறது இதற்கோர் கிளை புதுவையில் தோற்றினார் மொழி யியல் மாநாடுகளும் தொடர்ந்து நடாத்தியுள்ளார்.

இப்படி மொழியியலுக்காகவே தம்மைத் தத்தம் செய்து திளைத்த இவரைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்த ராகத் தெரிந்து புரிந்து எடுத்தவர் எம்.ஜி.ஆர்; துணை நின்ற வர், தலைமைச் செயலர் கா. திரவியம். புரட்சித் தலைவர்

புரிந்த அருஞ் செயல்களில் ஒரு பெரும் பணி, அரும் பெரும் பல்கலைக் கழகத்திற்கு முதல் தலைவராக எவ்வகையிலும் ஏற்றம் சான்ற தக்காராகத் தெரிவு செய்ததுதான் என எல்லோரும் ஒரு மனதாக உவந்தேத்தினர். அத்தகு தகுதி மிகுதியும் வாய்ந்த அண்ணல் இவர். எதிர்பார்த்த வண்ணமே இரு தடவை இனிய பணியாற்றி உடல்நலம் ஓம்புகரணியமாக விலகித் தாம் முன்னம் தோற்றி வளர்த்த தாய்வீட்டிற்கே திராவிட மொழியியற் கழகத்திற்கே திரும்பியுள்ளார். பல்கலைக் கழகத்தும் மொழியியல் துறையினையும் தோற்றி மொழியியல் வளர்த்துள்ளார். தம் செல்வாக்கும் சொல் வாக்கும் மொழியியல் முன்னேற்றத்துக்கே ஆக்கியவர்.

அரும்பெருஞ் சாதனை புரிந்த அன்னார் மீட்டும் தம் மூச்சனைய மொழியியலுக்கே மீண்டுளார். தமிழ் மொழி யியல் தக்கார்-இந்திய மொழியியல் ஏந்தல்-உலக மொழியியல் ஒப்புரவாளர் என உலகு புகழ் மொழியியல் அறிஞர். உலகு புகழ் மொழியியல் வல்லுநரான இவரைத் தமிழும் தமிழுலகம் பெற்றதால் பெருமையுறுகிறது. **முகவரி:** 90. DLA. Kerala Panini Buildings. Vanchiyoor, Trivandrum-1. *(2848)*

**இரா. கோதண்டராமன் :** சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் எம்.ஏ. பயின்று, அண்ணாமலையில் A Generative grammar of Modern Literary Tamil என ஆராய்ந்து மொழியியல் டாக்டர் பட்டம் பெற்றார். மதுரைக் காமராசர் பல்கலைக் கழக மொழியியல் துறையில் விரிவுரையாளராக விளங்கி, International School of Dravidian Linguistics புதுவைக் கிளையில் இரண்டாவது இயக்குநராக இலங்கி, இது போது அதன் திருவனந்தபுரம் தலைமையகத்தில் Senior Fellow வாக விளங்குகிறார். தமிழ் இலக்கணத்தில் ஊற்றம் மிக்கவர். இலக்கியம், மொழியியல் இரண்டும் வல்லவர். ஆழ்ந்து சிந்திப் பவர். தொடரியலில் (Syntax) தோய்ந்த புலமையர். **முகவரி :** DLA கேரள பாணினி கட்டிடம், வஞ்சியூர், திருவனந்தபுரம்.

**III. மதுரைப் பல்கலைக் கழகத்தில் மொழியியல் :** 66இல் தமிழ் ஆய்வுத் துறையின் ஒரு பகுதியாகத் துவங்கியது; தமிழ் முதுகலையில் மொழியியல் ஒரு பாடமாக்கப்பட்டது. 68இல் மாலை நேரச் சான்றிதழ் வகுப்பு வந்தது; 69இல் டிப்ளமோ துவக்கப் பெற்றது. 68 முதல் டாக்டர் பட்டத்திற்கு மொழி யியல் களமாயிற்று. 78இல் மொழியியல் முதுகலை பிறந்தது. இதுவரை 250 டிப்ளமோ, 100 எம்.ஏ., 11 பிஎச்.டிக்கள்

வெளிவந்துளர். 81இல்தான் தனித்துறை தோன்றியது. டாக்டர் இசுரயேல் தலைமையில் 7 பேர் பணிபுரிகின்றனர். டாக்டர் முததுச் சண்முகம் தமிழ் ஆய்வுத் துறைத் தலைவராய் இருந்து ஓய்ந்தபின், தமிழ்த்துறை, மொழியியல் துறை என இரண்டாகப் பிரிக்கப்பட்டது.

**மோ. இசரயேல் :** 24-12-1932. குமரிமாவட்ட குளச்சல். மோட்சக்கண்: மரியம்மாள். வடக்கன்குளம் கண்கார்டியா உயர்நிலைப்பள்ளி, ஆம்பூர் கண்கார்டியா பயிற்சிப் பள்ளி; கல்லூரிகளில் பயிலவில்லை. தொடக்கப்பள்ளியில் ஓராண்டு, நடுநிலைப் பள்ளியில் ஈராண்டுகள், உயர்நிலைப் பள்ளியில் 7 ஆண்டு பணியாற்றி, **61**இல் தமிழ் எம். ஏ. தேர்ந்தார். செர்மன், மானிடவியல் பயின்றார். பூனா மொழியியல் நிலையத்தில் பயின்றும், நான்கு கோடை வகுப்புகளிலும் பயிற்சி பெற்றுச் சிறந்தார். 76இல் நியூயார்க் ஸ்டேட் பல்கலைக் கழக மொழியியல் நிலையத்தில் பல பயிற்சிகள் பெற்றார்.

மொழியியலில் இவரின் தனித்துறை : Comparative Dravidian Studies, Tribal Languages, Grammatical Theories in Tamil and Lexiography. திராவிட மொழிகளில் ஒன்றான ஒரிசாவில் பேசப்படும் **குவி** மொழி பற்றி 71-73 கோடையில் களப்பணி செய்துளார்; அதுபோன்றே **குய்** பற்றியும் 78 லிருந்து ஈடு பட்டுள்ளார். கல்லூரிகளில் 3½ ஆண்டு பணியாற்றிவிட்டு, 68இல் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் இருந்து 80இல் மொழியியல் துறைக்கு வந்தார்.

இதுவரை ஆங்கிலத்தில் 2, தமிழில் 3 நூல்களும், ஆய்வுக் கட்டுரைகள் தமிழில் 100ம், ஆங்கிலத்தில் 50ம் படைத்துள் ளார். 50க்கும் மேலான பல்கலைக் கழக, அனைத்திந்திய, உலகக் கருத்தரங்கு-மாநாடுகளில் பங்குபெற்றுள்ளார். 10 மொழிகள் அறிவார். பலவேறு குழுக்களில் பங்குபற்றியுள்ளார். பல்கலைக் கழக மானியக் குழுவின் மொழியியல் வல்லுநர் வரிசையில் உறுப்பினர்.

மு.வ. வழிகாட்ட, தமிழ் இலக்கணம் பற்றி ஆய்ந்து 65இல் டாக்டர் பட்டம்; ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் பேரா. டி பர்ரோ நெறிகாட்ட திராவிட ஒப்பியல் அறிவும், அங்கேயே 73-74இல் Commonwealth Academic Staff Fellowshipம் பெற்ற பெருமையர். பாரிஸ், மெக்சிகோ, நியூயார்க், மேற்கு செர்மனி மொழியியல் நிபுணராகச் சென்று மீண்ட சிறப்பினர்.

இவரின் கீழ் 20 பேர் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றுளர். ஐவர் அளித்துளர். விளையாட்டுப்போலே மனங் கொள்ள எளிதே இனிதே மொழியியல் போதிக்கும் வன்மையர். குழைவு மிக்க கண்ணியர். மணம் 62இல், மனைவி ஹெலன் எமரால்டு; மக்கள் அருள் அரசு (முதுகலை தத்துவம்) அருள் அறம் (முதுகலை ஆங்கிலம்). பெருமைக்குரிய இம்மொழியியல் அறிஞரின் **முகவரி:** பேராசிரியர் துறைத்தலைவர். மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம். மதுரை-21.

**ஜெ. நீதிவாணன்:** 15-10-1938. பச்சையப்பன் கல்லூரி முதுகலைத் தமிழ், மதுரைக் காமராசரில் மொழியியல். டாக்டர் பட்டம் Language of Kabilar and Paranar (75இல்). தற்கால மொழியியல் வல்லார். தமிழ் ஆங்கிலத்தில் கட்டுரைகள் பல தீட்டுபவர். நடையியல் பற்றிய முதல் நூல் படைத்தவா; முன்பும் இல்லை, பின்பும் யாரும் எழுதவில்லை. அமெரிக்கா சென்று மீண்டவர். **முகவரி:** மொழியியல் துறை. ம. கா. பல்கலைக்கழகம். மதுரை-21.

IV. **இ. அண்ணாமலை:** 27-1-1938. இராமநாதபுரம் அருப்புக்கோட்டை. அண்ணாமலையில் 60 தமிழ் எம். ஏ; அங்கேயே 60-62 தமிழ் விரிவுரையாளர், 63-66 மொழியியல் விரிவுரையாளர். 64இல் எம். லிட். Development of ulas and their Place in Tamil Litt. 66-69 சிக்காகோ பல்கலைக் கழகத் தென் ஆசிய மொழித்துறை விரிவுரையாளர் 69-71 துணைப் பேராசிரியர். அங்கேயே எம். ஏ. மொழியியல், The Adjectival Clause in Tamil என ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றார். இந்த ஆய்வு மிகச் சிறந்த ஒன்று. இவரது சிறப்புக் களங்கள் தொடரியல், பொருண்மையியல். 100க்கும் மேலான கட்டுரை களும் 50க்கும் மேற்பட்ட நூல்களும். வடமாநிலங்களிலுள்ள பழங்குடி மக்களின் மொழி ஆய்வுகள் அனைத்தும் இவர் முயற்சியால்தான் சிறப்பாக நடைபெறுகின்றன.

பல்வேறு பல்கலைக்கழக மொழியியல் துறைப் பாடத் திட்டக் குழுக்களில் உறுப்பினர், அமெரிக்கப் பல்கலைக் கழக ஆராய்ச்சி மாணவர்களுக்கும் வழிகாட்டி U. P. S. C மொழி யியல் வல்லுநர். 79இல் லண்டன், கலிபோர்னியா, 81இல் செக்கோஸ்லேவேகியா சார்லஸ் பல்கலைக் கழகங்கள், 83இல் ஹவாய் கிழக்கு மேற்கு மையம் இவை அழைக்க சென்று சொற் பொழிவாற்றி வந்தவர்.

71 முதல் மைசூர் இந்திய மொழிகளின் நடுவண் நிறுவன உதவி இயக்குநர் (83-85 இயக்குநர் பொறுப்பு). இந்தியாவில்

உள்ள தலைசிறந்த மொழியியல் அறிஞருள் ஒருவர். **முகவரி:** Central Institute of Indian Languages. Manasagangotri-Mysore-570006.

**மா. சு. திருமலை :** மைசூர் இந்திய மொழிகளின் நடுவண் நிறுவன இணை இயக்குநர். மொழியியல், தமிழ் கற்பித்தல் அல்லது மொழி கற்பித்தல், Language Acquisition, Thought and Disorder, Language in Science, Linguistics and Language Learning Theories. இங்கிலாந்து அமெரிக்கா எங்கும் சென்று வந்துளார். **ஆர். பன்னீர் செல்வம்** என்பாரும் இங்குள்ளார்.

**ஆர். பெரியாழ்வார் :** 13-6-1940. கௌகாத்திப் பல்கலைக் கழக இந்தியமொழித் துறை விரிவுரையாளர். நூல்கள்: நமது மொழி, தமிழ் இணைப்புப் பயிற்சி, இருளர் வாழ்வியல்.

**ந. அருணபாரதி :** 15-6-1947. தமிழ் இலக்கியம் மொழியியல் இரண்டிலும் எம். ஏ. பட்டம் பெற்றவர். காசி இந்துப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர். நீண்ட நெடுநாள் தேவையாகிய மொழியியல் கலைச் சொற்கள் 4000 அடங்கிய அரிய அகராதியாம் Glossary of Linguistics (English-Tamil) படைத்துளார். மொழியாக்கத்திற்குப் பயன்படும் ஒரு பார்வை நூல். பிற மொழியினருக்குத் தமிழ்ப்பாட நூல் (Tamil Primer) 1986 இல் தயாரித்துள்ளார். **முகவரி:** காசி இந்துப் பல்கலைக் கழகம், வாரணாசி-5.

**V. பொற்கோ :** (பொன். கோதண்டராமன்) 9-6-1941. அண்ணாமலையிலும் லண்டன் பல்கலைக் கழகத்தும் பணியாற்றி உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இணைப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேருரையாளர், இதுபோது இலக்கியத்துறைப் பேராசிரியர். அமெரிக்காவில் நியுயார்க் மாநிலப் பல்கலைக் கழகத்திலும் இவான்ஸ்டன் வடமேற்குப் பல்கலைக் கழகத்திலும் சென்று வரும் சீர்மையர்.

தமிழக மொழியியல் அறிஞருள் குறிப்பிடத்தக்கவர். இலக்கண ஊற்றம் வாய்ந்தவர். 70இல் டாக்டர் பட்டம்; A contrastive analysis of Tamil and Kannada-A transformational approach (அண்ணாமலை), மாற்றிலக்கண மொழியியல், தமிழிலக்கணம், திராவிட மொழி ஒப்பியல்-இவர் தனிக்களங்கள்.

Studies in Tamil Linguistics, Linguistic Studies in Tamil, Modern Studies in Tamil, இலக்கண உலகில் புதிய பார்வை 1,2;

இலக்கணக் கலைக்களஞ்சியம், செந்தமிழ், The Verb in Modern Tamil, A course in Modern Tamil, A Grammar of Medern Literary Tamil, தமிழ் இலக்கணக் கோட்பாடு, கொடகு மொழியில் உயிரெழுத்துக்கள், மொழியியல் இலக்கணப் புதிய கண்டு பிடிப்புகள், தமிழ்-ஜப்பானிய மொழித்தொடர்பு, தமிழ் வளர்ச்சி, தமிழ் யாப்பு (கட்டுரைகள்), நிகழ்ச்சிவழிக் காப்பிய ஆய்வு, மொழியியல் நோக்கில் மொழிநடை ஆய்வு, புதிய முறையில் பிறமொழியாளர்க்குத் தமிழ் பயிற்றல் போன்ற 20 நூல்கள். 100க்கு மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகள். இதுவரை இவரின் கீழ் 12 பேர் பிஎச். டி; 34 பேர் எம்.பில். பட்டம் பெற்றுளர்.

**கி. கருணாகரன்** : *15-7-1942*. சேலம் மாவட்ட மரக் கோட்டை. அண்ணாமலையில் மொழியியல் துணைப் பேராசிரியர்; மலேயா பல்கலைக் கழகத்தில் பணியாற்றி 85 முதல் பாரதியார் பல்கலைக் கழக மொழியியல் துறைத் தலைவ ராகத் திகழ்கிறார். மொழியியல், சமுதாய மொழியியல், மொழித்திட்டமிடுதல், ஆக்கத் தமிழ், The Kollimalai Tamil Dialect, The Saiva Vellala Tamil Dialect, Studies in Tamil Socio linguistics, Okkaliyar Kannada (Memeo) போன்றன படைப்புகள். நிரம்பப் படித்தவர். டாக்டர் பட்டத் தலைப்பு: A Descriptive Study of the Dialect of the Kollimalai tribes. சமுதாய மொழியியலில் சீரியபுலமையர். மொழியியலை எளிதே இனிதே நடத்தும் ஏற்றத்தர். இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்சு, பெல்ஜியம், ஜப்பான், மலேசியா, சிங்கப்பூர் எல்லாம் சென்று மீண்டவர். **முகவரி** : பாரதியார் பல்கலைக் கழகம் கோவை-46 (34235-8).

VII. **கே. எஸ் கமலேஸ்வரன்**: *1937*. கோவை. பூ.சா. கோ. கலைக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். தெ.பொ. மீ. மாணவர்; Nouns in Tamil என ஆராய்ந்து 74இல் டாக்டர் பட்டம் பெற்றுளார். வரலாற்று மொழியியலில் வல்லாளர். வரலாற்றுச் சமூகவியல் கண்ணோட்டத்தில் இலக்கியங்களை ஆராய்வதில் தனித்திறத்தர். மொழியியலை அழகாக எடுத்தியம்பும் ஆற்றலர்.

VIII. **கி. அரங்கன்** : *3-9-1942*. தெ. ஆ. சின்னசேலம். கிருஷ்ணசாமி: ராஜம்மாள். கழக உயர் நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 59; அண்ணாமலை பி. ஒ. எல் 63இல், எம். ஏ. மொழி யியல் 73, தில்லிப் பல்கலைக் கழக பிஎச். டி. 73இல். அண்ணா மலையில் 65-66, தில்லிப் பல்கலைக் கழகம். 67-70; மைசூர்

இந்தியமொழிகள் நடுவண் நிறுவனம் 70-82, தமிழ்ப் பல்கலைக்கழகம் மொழியியல் துறைப்பேரா-தலைவர் 23-2-82 முதல்.

திறன் சான்ற துறை: Syntax & Semantics. நூல்கள்: Balti Phonetic Reader, Advanced Tamil Reader, Purki Grammar, Tamil Varsity Machine Translation System: Russian-Tamil. மாற்றிலக்கண மொழியியல், தொடரியல்—மாற்றிலக்கண அணுகுமுறை. 50க்கும் மேற்பட்ட ஆங்கில, தமிழ் ஆய்வுக் கட்டுரைகள். தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் 85இல் மொழியியல் முதற் கோடைப் பயிற்சி வகுப்பின் இயக்குநர். பல்வேறு கோடை மொழியியல் வகுப்புகளில் பாடம் நடாத்தியுள்ளார். அமெரிக்கா சென்று தொடரியல் ஒலியியல் புலமை பெற்று வந்துளார்.

மணம் 72இல், மனைவி கஸ்தூரி; மக்கள்: பாஸ்கர், சித்ரா. கணிப்புப்பொறி, மொழி பெயர்ப்புத் துறையிலும் போற்றத் தக்க புலமைபெற்றுள்ள இவர், நிதானமும் நெகிழ்ச்சியும் கனிவும் கடமையுணர்வும் மிக்கவர். இனிய இவரின் **முகவரி:** பேராசிரியர்கள் குடியிருப்பு, புதியவளாகம், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-5.

**ச. ஆரோக்கியநாதன்:** *13-7-1946.* புதுச்சேரி. திவ்வி சந்தன சாமி: ஜெயமரி. பாத்திமா உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 61இல், திருச்சி வளவர் கல்லூரி பி. எசி. இயற்பியல் 66இல், அண்ணாமலை எம். ஏ. மொழியியல் 68இல், 68-72 புதுவை வானொலி, 72-77 மைசூர் இந்திய மொழியியல் நடுவண் நிறுவனத்தில் டாக்டர் இ. அண்ணாமலை அவர்களின் கீழ், மணிப்பூர் மாநில தாங்குல் பழங்குடி மொழி இலக்கண நூல் எழுதல்; நாட்டுப்புறப் பாடல் தொகுத்து வெளியிடல், 77-80 அமெரிக்கா சென்று சியாட்டல் வாஷிங்டன் பல்கலைக் கழகத் தில் அயல் நாட்டு மாணவர்கட்குத் தமிழ் கற்பித்தல். டாக்டர் ஹெரால்டுசிவ்மனிடம் ஆசிய மொழியியலில் எம். ஏ. பட்டம் பெறல். 80-81 இந்திய மொழிகளின் அமெரிக்க ஆய்வு நிறுவனத்தின் மூலம் ஸ்மித்கோலியன் நிறுவனத்தின் சார்பில் 'வானொலித் தமிழ்' பற்றி மைசூரைத் தலைமை இடமாகக் கொண்டு ஆராயல். 82இல் மீண்டும் அமெரிக்கா சென்று 'வானொலியில் தமிழ்மொழிப் பயன்பாடு' பற்றி ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெறல். 83முதல் தமிழ்ப் பல்கலைக் கழக மொழியியல் இணைப் பேராசிரியர்.

இவரின் தனித்துறை: சமுதாய மொழியியல்-இருமொழி யாளரின் மொழிப்பிரச்சனை குறுக்கீடு. படைப்புகள்: Tamil Clitics (இடைச்சொல்), மொழியியல் இரட்டை வழக்கு (Diglossia), கிளைமொழியியல் (Dialectology), Tangul grammar, Tangul Folk. Litt Tangul Phonetic Reader, Tangul-English Dictionary இருமொழியம் (Bilingualism) குரு டாக்டர் இ. அண்ணாமலையிடம் பெருமதிப்பு பூண்டவர். 29-1-69இல் மணம், மனைவி வசந்தா. மகளிர் அனிதா சிலம்புச் செல்வி, அகதா தமிழமுது. இனிய இவரின் **முகவரி**: 43, வண்டிக்காரத் தெரு, முத்தியாலுப்பேட்டை, புதுவை-3.

**இராம. சுந்தரம்**: 1-4-1938. பொன் முத்துராமலிங்க மாவட்ட அலவாக் கோட்டை. இராமநாதன்: அன்னபூரணி. அண்ணாமலையில் தமிழ் முதுகலை முதன்மை 61இல், மொழியியலில் பி. எச். டி; டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் வழிகாட்ட Grammatical study of Pattuppattu எனும் தலைப்பில் கேரளப் பல்கலைக் கழகத்தில் பெறல் 67. பூனா டெக்கான் கல்லூரியில் இள ஆய்வியல் அறிவர் 64-66. மொழியியல் பட்டயம் பெறல். மலையாளத்திலும் பட்டயம் பெறல் 71. (அண்ணாமலையில்).

**பணி**: மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் 67-69; அண்ணாமலையில் மானியக்குழுவின் முதுநிலை ஆய்வர் 69-71, அங்கேயே மொழியியல் விரிவுரையாளர் 71-72; போலந்து நாட்டு வார்சா பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியர்-இந்திய இயல்துறைத் தலைவர் 72-79; அண்ணாமலையில் மொழியியல்துறைப் பேருரையாளர் 79-81. இதுபோது தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் திட்டம் வளர்ச்சித் துறை இயக்குநர்.

ஐரோப்பிய நாடுகளில் 7 ஆண்டுகள் உறைந்துளார். பிரிட்டன், ஆஸ்திரேலியா, பிரான்சு, இத்தாலி, ஸ்காண்டிநேவியன் நாடுகள் சென்று வந்துளார். 5 மொழி அறிவார். ஊற்றம் பெற்ற **துறைகள்**: தமிழ் இலக்கண இலக்கியம், ஒப்பியல்-வருணனை மொழியியல், நாட்டுப் புறவியல், மொழியாக்கம். இவைபற்றிய 60 அரிய கட்டுரைகள் படைத்துளார். **நூல்கள்**: சொல் புதிது சுவை புதிது, Tamil Reader for foreign students, திருக்குறள்-போலிஷ் ஆக்கம் (இணையாசிரியர்). தொல்-பொருளதிகாரத்தின் காலம், தமிழ் வாசகம்.

திராவிட மொழியியற் கழக, அனைத்திந்திய நாட்டுப்புறவியல் கழக, அனைத்திந்தியத் தமிழ்மொழியியற் கழக வாழ்நாள் உறுப்பினர். கூரிய மதியர், ஆய்வு மனத்தர். தமிழ் ஆராய்ச்சியில் உணர்வு குறைந்து அறிவியல் நிறைந்திருக்க வேணும் என்ற நோக்கினர். துணிவு மிக்கவர்; உண்மை உரைக்கும் உரத்தர்.

**சு. ராசாராம்:** 11-2-1942. நாகர்கோவில். சுப்பையா: செண்பகம். 64இல் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் பி. ஏ., 66இல் அண்ணாமலை மொழியியல் எம். ஏ., 76இல் A contrastive analysis of Tamil and Kannada — A transformational approach என்னும் தலைப்பில் பி. எச். டி. 70-82 வரை மைசூர் மொழியியல் நடுவண் நிறுவனத்தில் இணைப் பேராசிரியர். 13-8-82 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் அயல் நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை இணைப் பேராசிரியர்.

**தந்தவை:** மொழியும் மொழியியலும், ஒலியியல், Tamil phonetic Reader, Hindi-Tamil common vocabulary, An Intensive course in Tamil, Introductory Course in spoken Tamil. நடுவண் நிறுவனம் சமைத்த மைய அரசு பள்ளி மாணவர்கட்கான தமிழ்ப்பாடப் புத்தகங்கள் ஏழு பகுதிகள் எழுதியுள்ளார். English-Tamil padagogical Dictionary தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு. அன்னிய மொழியினருக்கு அருந்தமிழ் பயிற்றுவித்தலில் ஏற்படும் இடர் சிக்கல்களை ஆய்ந்து, உகந்த பயிற்று முறையினைக் கண்டறிவதில் முனைந்துள்ளார். அயல்மொழி அறிஞர்கட்குத் தமிழ்ப் பண்பாட்டு அறிமுக வகுப்பு நடத்துகிறார். Multimedia package course in Tamil எனும் திட்டத்தில், உச்சரிப்பு, பேச்சுத் தமிழ், எழுத்துத் தமிழ், தமிழ் எழுத்து, படித்தல் என்ற ஐந்து கூறுகளுக்கும், தனித்தனியே நூற்களும் நாடாப் பதிவுகளும் கொண்ட 300 மணி நேர அறிவுறுத்தல் அமைத்து வருகிறார்.

இங்கிலாந்து ரீடிங் பல்கலைக் கழகத்தில் மொழியியல் அறிவுத்துறையில் பயன்பாட்டு மொழியில் பயிற்சி பெற்றவர். பயிற்றும் கலையில் பக்குவம் மிக்கவர். அமைதியாக இருந்து ஊக்கமாக ஆக்கப் பணியாற்றும் அறிஞர்.

**மொழியியல் மன்றங்களும் இதழ்களும்:** திருவனந்தபுரத்தில் International School of Dravidian Linguistics உளது. அதன் சார்பில் International Journal of Dravidian Linguistics சனவரி சூன் திங்களில் வருகிறது. D L A News 4 பக்கத்தில் திங்கள் தோறும் வெளியாகிறது. ஆண்டு தோறும் மாநாடு-கருத்தரங்கு

நடத்துகிறது; 8வது 78இல் மதுரையிலும், 9வது 79இல் கள்ளிக் கோட்டையிலும், 10வது 80இல் தஞ்சையிலும் நடந்தது. அண்ணாமலையில் All India Linguistics Association அமைந்துளது; அதன் சார்பில் 'மொழியியல்' காலாண்டு இதழ் வருகிறது. மதுரையில் International Association for Dravidian studies தொடங்கி நடக்கிறது; Dravidian studies எனும் தாளிகை வெளிவருகிறது.

## 28. அறிவியல் தமிழ்

இது அறிவியல் உலகம்-யுகம். அனைத்தும் அறிவியல் மயமாகி வரும் வேளை. எனவே நம்மொழியும் அதற்கு ஈடு கொடுத்து ஏற்று இயம்பும் தகுதியும் பக்குவமும் பெற்றிடச் செய்தல் வேண்டும். மொழி என்றால் என்ன? எண்ணங்களின் வாகனம்; எனவே வளர்ந்து வரும் கருத்துக்களை வெளியிடும் வளமை நம் மொழிக்கு வந்தாக வேண்டுமல்லவா!

கால வளர்ச்சிக்கேற்ப நாகரிக நிலைக்குத் தக நாம் நம்மை மாற்றி அமைத்துக் கொள்ளுமாப் போலே, நம் மொழியையும் நலம் பெறச் செய்வது நம் கடமை. மரபுக் கவிதைக்குக் காலத் தேவைக்கேற்பக் கருத்துக்களை இயம்ப இயலாது எனப் புதுக்கவிதை படைப்பது போன்று, இத்தனை நூற்றாண்டுகளாகச் செய்யுள் மயமாக இருந்த நிலையினை விடுத்து உரை நடைக்கு வந்தது போல, நம் மொழியையும் விஞ்ஞான வாகன மாக்க வேண்டுவது உடனடித் தேவை. தேவைக்கு ஈடு கொடுத்துத் தேற்றம் பெறுவதே மொழியின் திறமாகும். நம் மொழியினை நாமும் திறன் சான்ற மொழியாக வளர்த்து உயர்வோம். அறிவியல் பேணி அருந்தமிழ் வளர்ப்போம்.

**அண்ணாப் பல்கலைக் கழக அரும் பணி:** இதன் துணை வேந்தர் வா.செ.கு. அவர்கள் அறிவியல் தமிழில் மிகு வேகமும் மேலான செயலாண்மையும் மிக்கவர். இவரின் உந்துதலால் இருசுடர்கள் எழுந்தன

1. **அறிவியல் இலக்கியக் கழகம்** (Science Literary Society) 27-1-1984இல் உருவானது. குறிக்கோள் 6: தமிழை, அறிவியல் தொழில் நுட்ப நோக்கில் வளர்க்க ஆவன செய்தல்; மக்கள் தொடர்பு சாதனங்கள் மூலம் அறிவியலைப் பரப்புதல்; அறிவியல் தமிழ்ப் படைப்புகள் உருவாக ஊக்கமளித்தல்; பொதுமக்கட்காக அறிவியல் இதழ்கள் வெளியிடல், புத்தகங்

கள் கொணர்தல்; ஊக்கும் நோக்கில் பரிசுத் திட்டம் மற்றும் தக்க நிகழ்ச்சிகள் தோற்றுதல். ஆயுள் தொகை 100; வருடச் சந்தா 12. தலைவர் துணைவேந்தர்; செயலர் இல. முனிவேலு; பொருளர் சென்னை வானொலி நிலைய அறிவியல் அலுவலர் டாக்டர் இரா. ஸ்ரீதரன். **முகவரி:** 187/1, எம். டி. எச். சாலை, வில்லிவாக்கம், சென்னை-49.

86 சூலை 28 முதல் - ஆகஸ்ட் 8 வரை இருவார 'அறிவியல் தொழில் நுட்பச் செய்திப் பரிமாற்றப் பயிலரங்கத்தினை' நடத்தியது. அமைச்சர் அரங்கநாயகம் தொடங்கிவைத்தார். இதில் வானொலி, தொலைக்காட்சி, செய்தித் துறை, தமிழ் வளர்ச்சித் துறையினைச் சார்ந்த 30 பேர் பங்கு கொண்டனர். டாக்டர் முத்து கண்ணப்பர், 'தமிழ் வழக்கில் சில தவறுகள்'; இலங்கை மேனாள் கல்வி இயக்குநர் கி. இலட்சுமணன், 'தமிழ் வழக்கில் தவறுகளும் திருத்தங்களும்'; சென்னைப் பல்கலைக் கழக டாக்டர் பொற்கோ, சந்தி, தொடர்களில் நேரும் பிழை களை நீக்க நெறிமுறைகளையும் விரிவாக விளக்கினர். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வழக்கு ஆராய்ந்து அலசப்பெற்றது.

இதனை முன்னின்று நடத்தியோர்: பதிவாளர் டாக்டர் முத்துக்குமரன், ஒருங்கிணைப்பாளர் டாக்டர் ஸ்ரீதரன், செயலர் முனிவேலு, வளர்தமிழ் மன்றச் செயலர் டாக்டர் பா. இளங்கோ. நிறைவு விழாவில் அமைச்சர் வீரப்பன் சான்றிதழ் வழங்கி, திங்கள் ஏடான 'அறிக அறிவியல்' வெளியிட்டார். குன்றக்குடி அடிகளார் 'தமிழ் வழக்கில் சில தவறுகள்' (பயிலரங்கத் தலைப்பு) மூவர் கட்டுரைத் தொகுப்பினை வெளியிட்டார்.

**2. வளர் தமிழ் மன்றம் : (Council for Tamil Development):** தலைவர் துணை வேந்தர், செயலர் டாக்டர் பா. இளங்கோ. குறிக்கோள் 4: தமிழில் அறிவியல் தொழில் நுட்பவியல் இலக்கியம் உருவாக்கல், ஊக்குதல்; மக்கள் நடுவே அறிவியல் அறிவு பரவவும் மனப்பான்மை வளரவும் உதவும் பணிகளை - அதற்கான வழிவகைகளை முயற்சிகளை ஊக்கல்; அதிவேக அறிவுத் துறை வளர்ச்சிக்கேற்பத் தமிழ் நவீனமடையச்செய்யும் பயிற்சி புலனாய்வுக்கு உதவல்; தமிழின் தகைமை, தமிழ்ப் பண்பாட்டின் தகவு போன்றவற்றைப் பிறமொழிக் குடும்பமும் அறிய ஆங்கிலத்தில் நூல்கள் வெளியிடல்—உதவல்.

பொறுப்புகள் 6: அறிவியல் இலக்கியம் வளர ஒரு காலாண்டு இதழ் வெளியிடுவது; ('களஞ்சியம்' எனும் இதழ் 86

ஆகஸ்ட் முதல் வெளியாகிறது). சொற்பொழிவு, கட்டுரை, ஆய்வுரை, ஆராய்ச்சி நூல்கள் வெளியிடல்; அறிவியல் தமிழ் ஆக்கத்திற்கு உழைக்கும் பத்திரிகையாசிரியருக்கு விருது வழங்கல், சிறந்த நூலாசிரியருக்கு - பதிப்பகத்திற்கு விருது தருதல். தொகை 10,000. 'அறிவியல் ஆக்கப்பணி விருது' ஓராண்டில் இதழாசிரியருக்கும் மறு ஆண்டில் நூலாசிரிய ருக்கும் மாறிமாறி அளிக்கப்பெறும். (முதற் பரிசளிப்பு விழா 7-5-86 இல் நிகழ்ந்தது; 84-ஆம் ஆண்டிற்கான விருது தினமணி ஏ. என். சிவராமனுக்கும், 85 ஆம் ஆண்டிற்கான விருது அமரர் ஜி. ஆர். தாமோதரனுக்கும், அமைச்சர் அரங்க நாயகம் தலைமையில் டாக்டர் ம. பொ. சி. வழங்கினார்.)

கருத்தரங்குகள், பயிலரங்குகள், மாநாடுகள் நடத்தும்-நடத்த உதவும்; முன் மாதிரியான நூல்கள் வெளியிடும் - வெளியிட உதவும்; நோக்கம் நிறைவேற அனைத்து நடவடிக்கையும் எடுக்கும். **முகவரி:** வளர் தமிழ் மன்றம், அண்ணா பல்கலைக் கழகம், சென்னை-25.

**3. வா. செ. குழந்தைசாமி:** மிகு வேகமாக வளர்ந்தேறி வரும் உலக அறிவியலோடு தமிழும் ஒன்றி விரைந்து வளர வேணும். இனி முத்தமிழ் என்றெல்லாம் முழங்கிக் கொண்டிருப்பது, மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசுவதாகும். முத்தமிழோடு நான்காம் தமிழாக 'அறிவியல் தமிழை'யும் ஒருங்கிணைத்துப் போதலே உரியது, உடனடித் தேவை. இன்றேல் பின்தங்கிப் போக நேரும் என எச்சரித்து எழுச்சியூட்டி வருகின்றார் தம் எழுத்தாலும் பேச்சாலும்.

அறிவியல் உலகம் விரிகிறது—
நிதம் அது செலும் வேகம் மிகுகிறது;
பொறியியல் கருவிகள் சமைகின்றன—
நிதம் புதுப்புதுப் புதுமைகள் புலர்கின்றன!
அந்நிய மொழிக்குலம் முன்நடக்கும்—
புது அறிவின் துறைகளை வழிநடத்தும்
என்னுடை மொழி அவண் இல்லையடா—
அது எங்கோ தேங்கி ஏங்குதடா!
நாளும் நம்மொழி பிந்துதடா—
புவி நம்மைப் பிரிந்து முந்துதடா,
ஆளுமை தருவது கல்வியடா—
நமக் கன்னைமொழித் துணை இல்லையடா!

என ஏக்கம் கொள்கிறார், ஏங்குகிறார். 1978 லேயே கலைக் கதிரில் 'அறிவியல் தமிழ், ஆக்க வழி முறைகள் எனும் பொன்

னுரை வெளியிட்டார். வழக்கம்போல ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய் இருந்தோம். எனவே,

கருத்துலகப் பூம்பொழிலின் விரிவில் கோடி
கலைமலர்தல் காணீரோ? அவைய னைத்தும்
திருத்தமிழில் தந்தீரோ? அணுயு கத்தைச்
செந்தமிழிற் பார்த்தீரோ? மொழி வளர்க்க
மருத்துவரின் பொறிவலரின், அறிவியல் நூல்
வல்லுநரின் துணைதேட வழிசெய் தீரோ?

என வினாக் கணைகள் தொடுத்து எழுச்சிகொள்ளச் செய்த தோடு, 'அறிவியல் தமிழ்' எனும் அரிய நூலினையும் உரிய வேளையில் வெளியிட்டு வீறுகொளச் செய்தார் 85ல்! ஓராண்டு கழித்து பாரதிதாசன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை 30-9-86 இல் இந் நன்னூல் பற்றிய கருத்தரங்கினை நடத்தியது. தேசியக் கல்லூரி டாக்டர் சபேசன், மண்டலப் பொறியியற் கல்லூரிப் பேரா. ச. சம்பத், அண்ணாமலை டாக்டர் செ. வை. சண்முகம், பாரதிதாசன் பல்கலைக் கழக டாக்டர் கு. வி, கிருட்டிணமூர்த்தி, தஞ்சை தலைமை ஆசிரியர் அ. கிருட்டிண மூர்த்தி ஐவரும் துணைவேந்தர் டாக்டர் அ. ஞானம் தலைமை யில், நூலாசிரியர் டாக்டர் வா. செ. கு. அவர்கள் முன்னிவை யில் ஆய்வுக் கட்டுரை வழங்கினர். மதுரைப் பல்கலைக் கழக மும் கருத்தரங்கு நடத்தியது.

இப்படித் துணைவேந்தர், அறிவியல் கழகம், வளர்தமிழ் மன்றம் என்ற மும்முனையில் - பல்வகையில் முனைப்பாக அறிவியல் தமிழுக்கு ஆன்ற பணி ஆற்றி வருகிறது அண்ணா பல்கலைக் கழகம்.

**தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் தகுபணி:** தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் தலையாய நோக்கமே பிற பல்கலைக் கழகங்கள் செய்யும் பணிகளையே மீண்டும் செய்யாது அறிவியல் போன்ற புதிய இன்றியமையாத் துறைகளில் விரிந்த உயர் ஆய்வு செய்வதே! இரு கண்களாம் பொறியியல் மருத்துவப் படிப்பிற் கான பாடநூல்களைத் தமிழில் படைக்க முனைந்தது. 13, 14-2-82 இல் பொறியாளர், 6, 7-3-82இல் மருத்துவர், 17, 18-4-82 இல் கலைச் சொல்லாக்கக் **கருத்தரங்குகள்** கூட் டியது. பங்குபெற்ற அறிஞர்கள் 13000 பொறியியல் 12000 மருத்துவச் சொற்களைத் தொகுத்தளித்தனர். 30-2-82 இல் நூலாக்கத் திட்டம் 9 திங்களில் நூல் உருவாக்க, ஒரு நூலுக்கு

ரூ. 5,000 உதவித் தொகை வழங்குவதாக அறிவிக்கப்பட்டது. 28 நூலாசிரியர்களை வல்லுநர் குழு தேர்ந்தெடுத்து, எழுதி முடிக்கப் பெற்றன. இன்னும் 30 நூல்கள் வரவுள.

பொதுமக்களையும் ஈடுபடுத்த பதிலிடு அட்டைகள் மூலம் கலைச் சொற்களை உருவாக்கித்தர வேண்டப்பட்டது. **கலைச் சொல் வங்கி** உருவானது. இதுவரை வெளியான அறிவியல் நூல்கள் கட்டுரைகள் அகராதிகட்கு நூலடைவு செய்யப் பட்டது. 12-19-6-83 இல் எட்டு நாள் அறிவியல் **கண்காட்சி,** திருச்சி சென்னை வானொலிகளோடு இணைந்து நடத்தியது. பொது மக்களிடையே அறிவியல் பிரக்ஞையைத் தூண்டுவதும் அடிப்படை அறிவியல் செய்திகளைப் பரப்புவதும் நோக்கம். இதனை ஒட்டி உருவாக்கப்பட்ட 'அறிவியல் மலர்கள்' நூல் வெளியிடப்பட்டது. பாரதிதாசன் பல்கலைக் கழகத்துடன் இணைந்து 5, 6-8-83 இல் அறிவியல் கருத்தரங்கு வைத்தது.

அறிவியல் அறிவு சிறிதுமில்லாப் பாமரருக்கும் பள்ளிச் சிறுவர்கட்கும் பயன்படுமாறு நவம்பர் 83 முதல் **'அறிவியல் பண்ணை'** தொடங்கியது. தமிழ்ச் சமூகத்தில் அறிவியல் உணர்வும் அறிவும் வளர்த்துத் தமிழர்களை மேம்படுத்தவே இதன் மேலான குறிக்கோள். அறிவியல் சொற்பொழிவுகளைக் கிராமங்கள் தோறும் ஆற்றுவது, அவற்றைச்சிறு நூலாக வெளி யிடுவது, **கலை நிகழ்ச்சிகள்** மூலம் அறிவியல் பரப்பல், அறிவியல் இதழ்களை ஆர்வலர்கட்கு அளித்து ஊக்குதல் போன்றனவும் புரிகின்றது.

'தமிழ்வழி அறிவியல்' (இராம சுந்தரம்) நூல் வெளி யிட்டது. அறிவியல் பேரரங்குகளும் அமைக்கின்றது. அறிவியற் சொல்லாக்கக் கருத்தரங்கு 4-9.6.84 லும், மருத்துவச் சொல் லாக்கக் கருத்தரங்கு 27-29.9.84 லும் நிகழ்ந்தன. 12780 சொற் கள் பண்ணித் தந்தன. கணிதம் இயற்பியல் என அறிவியல் துறைகளின் வரலாற்றை டாக்டர் கு. சீனிவாசன் உருவாக்கு கிறார். ஆண்டுதோறும் அறிவியல் நூலுக்கு 5,000 பரிசு அளிக் கிறது. அறிவியற் களஞ்சியம் உருவாகி வருகிறது, கணிப்பு மையம் இயங்கி வருகிறது. பல்துறைத் தொழில் நுட்பப் பயில கங்கட்குரிய நூற்கள் உருவாக்கவும் தமிழ் வழி கற்பிப்பதில் எழும் சிக்கல்களை அலசவும் 16-2-85 இல் கருத்தறி கூட்டம் நடந்தது. 60 முதல்வர்கள் கலந்துகொண்டு கருத்துரை தந் தனர்.

**பாரதியார் பல்கலைக் கழகம் தமிழ்த் துறை:** 25, 26-12-86 'அறிவியல் தமிழ்' பற்றிய இரு நாட் கருத்தரங்கு நடாத்தியது. பாரதியார் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர். ஆர். சுப்பையன் தலைமை. அண்ணா பல்கலைக் கழகத் துணை வேந்தர் கருத்தரங்கினைத் துவக்கிவைத்து 'அறிவியல் தமிழ்க் கோவை' (அறிவியற் கலைச் சொற் தொகுதி) வெளியிட்டார். மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி பேருரை ஆற்றினார். கலைக்கதிர் ஆசிரியர் டாக்டர். தா. பத்மநாபன், டாக்டர்கள் ஈ. அண்ணாமலை, பி. சண்முகம், கா. செ. செல்லமுத்து, எம். எஸ். திருமலை போன்றோர் பேசினர். மொழியியல் துறைப் பேராசிரியர் டாக்டர் க. கருணாகரன் வரவேற்றார்.

பங்கு பற்றி மூன்று துணைவேந்தர்களுமே, 'தமிழ் வளர்க்க முனைவோர் அறிவியல் தொழில் நுட்பம் பயிலவும் பயிற்றவும் ஏற்ற ஒரு ஆற்றல் வாய்ந்த மொழியாக ஆக்குவதில் ஆழ்ந்த முயற்சி ஆணித்தரமாக மேற்கொள்ள வேண்டும்' என வற்புறுத் தினர். வா. செ. கு. அவர்கள், தமிழ்ப் பற்றாளர்கள் தமிழைத் தற்கால மொழியாக்க மிகச் சிலவே-சிறிதே செய்துளர். பட்டி மன்றங்கள் போடுவதிலோ பிரம்மாண்ட தமிழ் எனப் புகழ் வதிலோ பயனேதும் இல்லை. நவீன அறிவியல் சொற்களை இணைப்பதன் மூலம் தமிழை முன்னேற்ற முடியும் என்றார்.

தமிழகப் பல்கலைக் கழகங்களில் துணைவேந்தர்கள் பெரிதும் அறிவியல் விற்பன்னர்களாக அமைந்துளர். P. B. சுந்தரேசன் (சென்னை), எஸ். கிருஷ்ணசாமி (மதுரை), அ. ஞானம் (பாரதிதாசன்), ஆர். சுப்பையன் (பாரதி). 'தமிழ் நாட்டில் கல்வியில் முழு முன்னேற்றம் - மாற்றம் ஏற்படத் துணைவேந்தர்களாக விஞ்ஞானிகளே வரவேண்டும் என அரசு கருதுகிறது. (சி. பொன்னையன். கல்வி அமைச்சர் 25-11-86). இனி அறிவியல் தமிழ் வளர்த்த அருந் தமிழர் சிலரைக் கருது வோம்:

**பெ. நா. அப்புஸ்வாமி:** *(1891-1986)*. அறிவியல் தமிழ் முன் னோடி. அற்புத உலகம், மின்சாரத்தின் விந்தை, விஞ்ஞானக் கதைகள், வானொலியும் ஒலிபரப்பும், எக்ஸ் கிரணங்கள். பெயர்ப்புகள்: விஞ்ஞானமும் விவேகமும் (Science and Commonsense) இன்றைய விஞ்ஞானமும் நீங்களும் (Today's science and you), கால யந்திரம் (The time Machine), ஜே. பி. மாணிக்கத்துடன் இணைந்து, வானத்தைப் பார்ப்போம்.

விஞ்ஞானம் பேசுகிறார், அணுவின் கதை. விஞ்ஞான நூற்களுக்காக சென்னைப் பல்கலைக் கழகம், யுனெஸ்கோ, பதக்கம் பரிசு பெற்றார்; குழந்தை எழுத்தாளர், தமிழ் எழுத்தாளர் சங்கக் கேடயங்கள் முறையே 61, 65 இல் பெற்றவர். 1,000க்கும் மேற்பட்ட அறிவியற் கட்டுரைகள் படைத்தவர். 'தினமணி சுடரில்' தொடர்ந்து அறிவியல் வளர்த்தவர்.

**ஜி. டி. நாயுடு :** *23-3-1893*—கோவை. தொழிலியல் அறிவியல் மேதை. பல தொழில் நுட்பக் கருவிகளைக் கண்டு பிடித்தவர். உலகம் சுற்றியவர். V. M. S. ரேடியோ, போக்குவரத்துக் கழகத் தோற்றுநர். Construction for Destruction. அழிப்பதற்காக ஆக்கப்பட்டது எனத் தாம் உண்டாக்கிய பொருட்களைக் காட்சிக்காக வைத்த கண்ணியர். தம் அறிவியற் கூர்த்தமதி கொண்டு வழிப்பான்கள் (blades), ஒட்டுச் செடிகள், குறைந்த செலவில் சிறந்த அறிவியற் பொருட்கள் படைத்த விந்தை மனிதர். சொல்லால் செயலால் அறிவியல் தமிழ் ஆக்கப் பணி புரிந்த துரைசாமி கோபால்சாமி நாயுடு அவர்களை நினைந்து போற்றுவது நன்றித் தமிழின் பாற்படும்! **விவரங்கட்கு ;** 'கோபல் பாக்' அவிநாசி சாலை, கோவை.

**ஆர். கே. விசுவநாதன் :** *5-1-1906*. மாயவரம். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புகழ்சான்ற இயற்பியல் பேராசிரியர். சங்கீத ஒலி நூல் (36), ஒளியும் ஒலியும் (42): பௌதிக நூல் (41). அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பரிசு பெற்றது; ஆலய மணி (46), அணுவில் தாண்டவம் (52), வானக்காட்சி (59), சக்தி (சென்னை அரசின் பரிசு பெற்றது). பெயர்ப்புகள் : அறிவும் அற்புதமும் (66), விஞ்ஞானத்தின் சில அம்சங்கள் (Aspects of Science by Sri. C. V. Raman).

**ஜே. பி. மாணிக்கம் :** அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அறிவியல் தமிழ் வளர்த்தவர், தெரியற் செய்கை இரு மடலங்கள் (A Manual of Science) இவர் அருங் கொடை. இதில் உயிர், புலன், விஷயம், செயல் என 4 பகுதிகள் அடங்கியுள. பிரான்சிஸ் பேகன் The true and lawful goal of Science is that human life the endowed with New powers and inventions என்பதனை மனதிற்கொண்டு இப்பெரு நூலினைப் படைத்துள்ளார் நாற்பதுகளிலேயே!

**என். கே. வேலன் :** *24-4-1907 — 30-12-1979*. சேலத்தையடுத்த பாகற்பட்டி. காவல் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். புதியது புனைந்த அறிவியல் அறிஞர், இயற்கையும்

செயற்கையும், மண்ணும் விண்ணும், அணுவின் கதை, சர்க்கஸ், உயிர்க்காட்சி சாலை; மின்சாரத்தின் கதை, இராக்கெட்டுகள் (தமிழக அரசின் பரிசு), ஆற்றின், கடலின், காற்றின், ஒளியின், ஒலியின், சூரியனின், மலையின், பூமியின், கோள்களின், உப்பின், நீரின், கல் எண்ணெயின் தாளின் ரப்பரின் நிலக்கரியின் பறவைகளின் விலங்குகளின் கதைகள். அறிவியல் வளர்ந்த கதை, ஏன்? என்ன? எப்படி? உங்களுக்குத் தெரியுமா? அறிவு வளர்ச்சி நூற்கொத்து (3 பகுதிகள்), செய்தி இதழின் கதை, இளைஞர் வானொலி, இளைஞர் தொலைக் காட்சி, அதிசய மின்னணு, விஞ்ஞான நூற்கொத்து (2 பகுதி), அம்புலிப் பயணம், தொலை உலகச் செலவு. **விவரத்திற்கு :** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 79, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை-108.

அ. சுந்தரமூர்த்தி : 1-4-1910. வ. ஆ. போளூர் வட்ட மாம்பட்டு. சென்னைப் பல்கலைக் கழக எம். ஏ. 31 இல்; நிர்வாகச் செயலர் உள்ளாட்சிக் கழகங்கள் 44-49; மாநிலத் தொழில் துணைக் கண்காணிப்பாளர் 49-65, 66 முதல் தமிழ்க் கலைக் களஞ்சியம் துணையாசிரியர். 'வான நூல்' சென்னைப் பல்கலைக் கழகப் பரிசு பெற்றது. விண்மீன்களும் மனிதரும் அணுக்களும் (மொ. பெ.) 'வாணிபம்' தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசினது. அறிவியல் தமிழ் பற்றி எழுதும் ஆர்வலர். **முகவரி :** 60, கணக்கர் தெரு, போளூர், வ. ஆ.

**ஜி. ஆர். தாமோதரன் :** 20-2-1914. கோவை பீளமேடு, டர்ஹாம் லண்டன் போன்ற இடங்களில் பொறியியல் பயின்றவர். பி. எஸ். ஜி. பொறியியற் கல்லூரி முதல்வர். சென்னைப் பல்கலைக் கழக பொறியியற் பாடத் திட்டத் தலைவர், 52-57 பாராளுமன்ற உறுப்பினர்; 58-61, 64-67 மேலவை உறுப்பினர், சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராகவும் திகழ்ந்து மறைந்தார்.

அறிவியல் தமிழ் முதல் இதழாம் 'கலைக்கதிர்' தோற்றுநர்-ஆசிரியர். அருந்தமிழ் அறிவியல் மயமாதல் வேண்டுமெனும் விடுதலையறியா விழைவினர். காலமெல்லாம் கன்னித் தமிழ் விஞ்ஞான வளமை பெற்றிட உழைத்தமை உன்னி, அண்ணா பல்கலைக் கழகத்தின் அறிவியல் தமிழ் ஆக்கப் பணி 85-ஆம் ஆண்டுக்கான விருது பெற்றார்; அதனை அன்னார் மகன் டாக்டர் தா. பத்மநாபன் பெற்றுக்கொண்டு விருதுத் தொகை ரூ. 10,000 யும் வளர்தமிழ் மன்ற அறிவியல் ஆக்கப்பணிக்கு

அளித்துவிட்டார். வானவெளிப் பயணம், ராக்கெட், அறிவியற் கலைச்சொற்கள் 3 தொகுதிகள் இவர் கொடை. **முகவரி :** 'அன்பரங்கம்', காமராசர் சாலை (Red Fields), கோவை-37.

**டாக்டர் கி. ரெங்கசாமி ஐயங்கார் :** 1-8-1915. விருத்தாசலம். அண்ணாமலையில் பி. எசி. (36 இல்), எம். எசி. (41 இல்). பிஎச்.டி (60 இல்), அங்கே செய்து காட்டுநர் 36-41; துணை விரிவுரையாளர் 41-47, இணை விரிவுரையாளர் 47-48; பேருரையாளர் 60-64, 65-75 தாவரவியல் பேராசிரியர், துறைத் தலைவர்.

டாக்டர் டி. எஸ். ராகவனுடன் இணைந்து கல்லூரிகட்கான தாவரவியல் நூல்கள் ஆங்கிலம் தமிழில் வெளியிட உறுதுணை புரிந்தார். Cytology, Taxonomy, Anatomy, Genetics வல்லவர். இவை பற்றிய ஆய்வுகள் அடிப்படைச் சிறப்பின என விதந்தோதப் படுகின்றன. நூல்: Cytoxonomy of South Indian Pumpkins, Cucumbers and Gourds.

**ம. வி. இராசேந்திரன் :** 2-11-1916. நெல்லை சாத்தான் குளம். பாளையங்கோட்டை தூய சவேரியர் கல்லூரி விலங்கியல் பேராசிரியராக விளங்கி ஓய்வு பெற்றவர். பொது விஞ்ஞானம், ஆடும் பாம்பு, இந்திய விஞ்ஞானிகள், நம் நாட்டுப் பாம்புகள், பாப்பாவும் பாம்பும், இன்றைய விலங்கினச் சூழவியல் (Recent Advances in Ecology), Outlines of Botany. பாம்புகளைப் பற்றி ஆராய்வதில் தனி ஈடுபாடு கொண்டவர். பறவைகள் பற்றிய நூல் ஒன்றினைப் பெயர்த்துள்ளார். டாக்டர் பட்டம் பெற்ற சிறந்த விலங்கியல் அறிஞரான இவரின் **முகவரி:** 31, தேவலோகத் தெரு, பாளையங்கோட்டை, நெல்லை-7.

**ந. சுப்பு ரெட்டியார் :** 1917. பி. எசி. பட்டதாரி, பின் தமிழ் எம். ஏ. 30 முதல் அறிவியல் நூல்கள் படைத்துவருகிறார். அணுவின் ஆக்கம், இளைஞர் வானொலி, அதிசய மின்னணு, இளைஞர் தொலைக்காட்சி, இராக்கெட்டுகள், நமது உடல், அறிவியல் விருந்து, அம்புலிப் பயணம், தொலை உலகச்செலவு, வாழையடி வாழை, அறிவியல் பயிற்றும் முறை எனப் 15 நூல்கள் படைத்துளார். பெயர்ப்புகள் : அணுக்கரு பௌதிகம் (Nuclear Physics W. Heisanberg), மானிட உடல் (The Science book of Human Body-Edith Sprout), Mysterious Universe-Sir James Jeens, நூலையும் பெயர்த்துளார். அறிவியல் பயிற்று மூல முதல் நூல் - யுனெஸ்கோ. பல தமிழக அரசின் பரிசும்,

சென்னைப் பல்கலைக் கழகப் பரிசுகளும் பெற்றுளார், **முகவரி :** ஏடி 13 (3354) அண்ணா நகர், சென்னை-40.

**பி ஜி.எல். சாமி : (பங்களூர் குண்டப்பா லட்சுமண சாமி.)** 1919—80. கன்னடர். சென்னை போந்தகாலை தமிழ் அறவே தெரியாதவர். பின் தாமே பயின்று தலை நின்றவர், சென்னை மாநிலக் கல்லூரித் தாவரவியல் பெரும் பேராசிரியர். அறிவியல் ஆய்வின் தோய்வு கரணியமாக முதல்வர் பதவியும் வேண்டா எனத் துறந்தவர். இந்தியாவின் தலையாய தாவர விஞ்ஞானிகளில் ஒருவர்.

தமிழும் தொல்பொருள் துறையும் இரு கண்கள்; தாவர வியல் உயிர். தொல்காப்பியத்தை எழுத்தெண்ணிக்கற்று அதன் காலத்தைக் கணித்தார்; உண்மை ஏற்காத ஒண்டமிழர், இவரைப் புடைத்து இல்லத்தை நொறுக்கினர். தமிழக வர லாற்றில் இருண்ட காலம் என்று ஒன்றில்லை என (Kalabra Interegnam) நிறுவியவர்; அதுபோன்றே கன்னித் தமிழ்க் கருவூலங்கள் கனலிலும் புனலிலும் மறைந்தன என்ற கருத்தை மறுத்தவர். சைவநாயன்மார் காலத்தை நிர்ணயித்தார். சிதம்பர ரகசியம் என்பதை விளக்கியவர். சிதம்பரம் கோயில் பண்டு சமணக் கோயில், வீர சைவர்கள் சமண சாதுக்களைக் கொன்று எரித்துக் கருவரையின் கீழே புதைத்தனர். அதன் மேலேதான் நடராசர் உரு நிற்கிறது என வரலாற்று இலக்கியச் சான்றுகளை அடுக்கியவர். Kalamughas, College Ranga (சினிமாவாக வந்தது) அவர் முதல்வராக இருந்த அனுபவம் பற்றியது; அசகுரு (green gold) தாவரவியல் அனுபவங்கள் பேசுவது. 'போதையின் பாதையிலே' வெற்றிலை, கஞ்சா போன்றவற்றின் போதை கூறுவது. 85இல் Swamyiana என்பது இவர் பற்றிய நினைவு மலர்; ஆங்கில-கன்னடக் கட்டுரைகள் கொண்டது. தமிழகத் தாவரங்களைத் திரட்டிய வர். தாவரவியலுக்கே தம்மைத் தத்தம் செய்த உத்தமர்.

**ய. லட்சுமி நாராயணன் :** 31-3-1919. அறிவியல் புதுமை கள், விஞ்ஞானக் களஞ்சியம் போன்றன படைத்துளார். பல சிறுகதைகளும் புதினங்களும் தந்துள்ளார்; அவற்றில் அறிவியல் ஊடாடும். **முகவரி:** 12, முதல் தெரு, அஜீஸ் நகர். சென்னை-24.

**வ. அருணாசலம் :** 7-6-1919. பாளையங்கோட்டை. 60 முதல் எழுதி வருகிறார், ஆசிரியர். ரேடியோ மெக்கானிசம், ரிப்பேரிங்; டிரான்சிஸ்டர் மெக்கானிசம், ரிப்பேரிங் (பரிசு) டெலிவிஷன் டெக்னிக், ஆம்பிளிஃபயர் மெக்கானிசம்,

எலக்ட்ரிகல் இஞ்சினியரிங் (பரிசு). 'ரேடியோ-டெலிவிஷன்' திங்களிதழ் நடத்தியுள்ளார். **முகவரி :** 11, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5.

**சி. இராமநாதன் :** 1919. பிறந்தது மலேயா: திரைப்பட இயக்குநராக சிங்கப்பூரில் சிறந்து விளங்கி, இதுபோது சீரிய முறையில் செந்தமிழ்ப் பணியாற்றி வருகிறார் சென்னையில். பெற்றோர் இருவர் பெயரும் சிதம்பரம். அறிவியல் நவீனம் என்ற வகையில் 'ஆண்டு 1977, விண்வெளிக்கப்பால், விண்ணிலோர் விந்தை மனிதன், ஆழ்கடலின் உள்ளே' போன்றன போற்றத்தக்க வகையில் படைத்துள்ளார். இவை அறிவியல் தமிழுக்கு இவர் ஆற்றியன.

இவையன்றி இலக்கியத்துக்கும் நாடகத்துக்கும் நற்பணியாற்றியுள்ளார். 12 திருக்குறளை ஆங்கிலத்தில் பெயர்த்து Thiruvalluvar's Maxims on Living என அமெரிக்க பென்சில்வேனியா Quinto Lingo என்ற சிறந்த இதழில் வெளியிட்டார். ஜெர்மன், ஸ்பானிஸ், பிரெஞ்சு, இதாலி மொழிகளிலும் வந்தது. Updated Tamil எனும் தலைப்பில் பாரதியின் வரலாறு, விடுதலைப் பாடல்களை ஆங்கிலப்படுத்தி வெளியிட்டுள்ளார். மிதிலையில் இராமர்-சீதை சந்திப்பினைக் கம்பனை அடியொற்றி Modern Poetry இதழில் வடித்துள்ளார். காளிதாசனின் குமார சம்பவம், ஸ்ரீரமண மகிரிஷி சரித்திரம் போன்றன அமெரிக்க ஏடுகளில் வெளிவந்துள.

சொந்தமாக 'அதிசயக் குடும்பம், எல்லாம் உனக்காக' போன்ற நாடகங்களைச் சமைத்து நடித்தும் உள்ளார். ஜோசப் ஆனந்தனின் 'மறுபக்கம்,' சென்னை வானொலி நாடகங்களில் நடித்துள்ளார். சென்னைத் தொலைக்காட்சியில் தொடக்க கால நாடகங்களை அமைத்துத் தருவதில் உறுதுணை புரிந்தவர்; அவர் வந்த நேரம், இரு கரங்கள், சீமான் போன்றவற்றில் நடித்துள்ளார்.

ஆங்கிலேயர் போன்றே ஆங்கிலம் அழகாகப் பேசும் அருமையர். ஆங்கில நாடகங்களிலும் வியத்தகு சாதனை புரிந்துள்ளார். இவரது மனைவிதான்: சென்னை வானொலி நாடகப் பிரிவில் நிலையக் கலைஞராக இருந்து நடித்தும், நாடகம் பல அமைத்தும், 'கோலக் குயிலோசை உனது குரலினிமையடி' என்றானே பாரதி, அத்தகு அற்புத தெய்வீகத் தீங்குரலினை இயல்பிலேயே பெற்று, நாளும் கீதம் இனிய குரலால்

நமையெல்லாம் கிறுகிறுக்கச் செய்த **பார்வதி ராமநாதன்** 1927-86. முகவரி: L-34/3, 25th Cross St., Besant Nagar, Madras-90.

**கு. சீனிவாசன்:** 19-10-1920. தஞ்சை மாவட்ட தென்னியக்குடி. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பல்லாண்டுகளாகத் (47-79) தாவரவியல் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்று 28-7-83 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகத் தொல் அறிவியல் துறைத் தலைவராகத் திகழ்கிறார். கணிதம், இயற்பியல், தாவரவியல், உயிரியல், புவியியல், வானவியல், வேதியியல் போன்றவற்றின் வரலாற்றைத் தொகுத்து வருகிறார். தஞ்சை அரண்மனை வளாகத்தில் உள்ள மரம் செடி கொடிகளை இனங்கண்டு பெயர்ப்பலகை வைத்துள்ளார். நூல்கள்: தாவரம் வாழ்வும் வரலாறும், இந்தியாவில் தாவரவியல் வரலாறு (மொ. பெ), சங்க இலக்கியத்தில் கண்ட மரம் செடி கொடிகளின் தாவரவியல் விளக்கம். Studies in the Mosses of South India. இராமலிங்க சுவாமிகளிடம் மிக்க ஈடுபாடு கொண்டவர். அருட்பாவை அறிவியல் முறையில் ஆய்ந்து 'சாகாக்கலை' (மரணமிலாப் பெருவாழ்வு) பற்றி அரிய நூல் படைத்துள்ளார். தமிழ்ப் பெரும் பேராசிரியர் டாக்டர் கு. திருமேனியின் தமையனார் இவர் என்பது அறியத் தக்கது.

**கே. வி. சீனிவாசன்** : 22-1-1923. செங்கை மாவட்ட பெரும் புதூர். வெற்றிக்கு வழிகள், அணுவிலே அற்புதம், விண்ணையும் வெல்லுவோம், வளர்மதி வரிசை எனும் தொடரில் சிறுவர் கலைக் களஞ்சிய நூல்கள் வெளியிட்டவர். பிற: ஜான்சி முதல் ஜவகர் வரை, பாரத நாடு பழம்பெரும் நாடு. Jansibai to Jawahargi. **முகவரி:** 13, தேரடித் தெரு, சென்னை-5.

**பி. டி. முனியப்பா** : 2-4-1923. பெரியகுளம். சென்னைப் பல்கலைக் கழக எம். ஏ., 45இல்; அமெரிக்க இல்லினாய்ஸ் பல்கலைக்கழக எம். ஏ. 55இல். அண்ணாமலையில் வேதியியல் விரிவுரையாளர் 46-47; சென்னைக் கல்விப் பணியில் 48-51, மாநிலக் கல்லூரிக் கூடுதல் பேராசிரியர் 51-58, குடந்தைக் கல்லூரி முதல்வர் 58-59; பின், கோவை, சேலம், தஞ்சை சரபோஜி கல்லூரி முதல்வராக இருந்து ஓய்வு.

**கி. கண்ணபிரான்** : 26-1-1923. பூ. சா. சோ. கலை அறிவியல் கல்லூரி வேதியியல் பேராசிரியராக விளங்கியவர். நூல்கள்: வேதியியல், கனிம (organic) வேதியியல், வேதியியல் கலைச்சொற்கள். கலைக் கதிரில் தொடர்ந்து அறிவியல் கட்டுரைகள் படைத்தவர். **முகவரி:** 2, தாமுநகர், கோவை-18.

**அ. நடராஜன்** : *15-12-1923.* திருச்சி மாவட்ட ஆலங்குடி. திருப்பதி வெங்கடேச்வரா கல்லூரி விரிவுரையாளராக இருந்தவர். அறிவு வாயில்கள் (56), வாழ்வும் விஞ்ஞானமும் (57); மாயக்குழாய்கள், விளக்கின் கதை, விஞ்ஞான வழிகாட்டி நால்வர்-சிறுவர் இலக்கியம். விஞ்ஞானமும் சமுதாயமும், The Impact of Science on Society, Betrand Russel, அணு நமது நண்பன் (The Friendly Atom), நிலம் தரும் செல்வம். (Treasures from The Earth). பெயர்ப்புகள். பகலவனின் பௌதீகம், கிரகங்களுக்குப் பிரயாணம், பொழுதுபோக்குப் பௌதீகம், பள்ளிப் பௌதிகத்தில் கணக்குகளும் கேள்விகளும், மனிதன்-புரியாத புதிர். **முகவரி**: 64 ஏ, ஜவகர்லால்தெரு, திருப்பதி-517501.

**ர. சண்முகம்** : *21-1-1925.* தஞ்சை நாகப்பட்டினம். அறிவியல் அதிசயங்கள், அறிவியல் அற்புதங்கள், வியப்பூட்டும் விஞ்ஞானக்கதைகள் (தமிழக அரசின் பரிசு), உடம்பைக் காப்பாற்று என 40 நூல்கள் படைத்தவர். **முகவரி**: 30, என். எஸ். கே. தெரு, நேரு நகர், சென்னை-32.

**கு. ராஜாராம்** : *15-4--1925.* வத்தலக் குண்டு. இளம் அறிவியல் பட்டமும் வழக்குரைஞர் பட்டமும் பெற்ற இவர், அறிவியல் தமிழ்ப் பணியில் ஆர்ந்து நிற்கிறார்-நிலைக்கிறார் முத்திறத்தில் இவர் படைப்புகள் அமைகின்றன. சிறுவர்கட்கு, பொது, மொழிபெயர்ப்பு என நீள்கிறது பட்டியல். 54 முதலே எழுதிவருகிறார். 30 ஆண்டுகளாகத் தமிழில் அறிவியல் வளர வளமான தொண்டாற்றி வருகிறார்.

விஞ்ஞானமும் நாமும், கடல், மீன், அறிவியல் இன்பம், அதிசய அண்டார்ட்டிகா, பறவைகளே பறவைகளே, பூமியைச் சுற்றும் ஆரியபட்டா, மீன் சினிமா, மழை, இந்தியாவின் ஞானச் சுடர், நல்ல நீர், மொ. பெ: காற்று வெளியினிலோ, ராக்கெட்டுகளும் விண்வெளிப்பயணமும். மழை, மீன், இரண்டும் நடுவண் அரசின் வெகுஜன இலக்கியத்திட்டத்தின் கீழ் பரிசு பெற்றவை. **முகவரி**: Legal Adviser, Laxmi Vilas Bank, Head office: Karur.

**கொண்டல். சு. மகாதேவன்** : *1-7-1925.* தமிழ்ப் பேராசிரியர்களில் அறிவியல் உணர்வு மிகுந்தவர், முதல்வர் என மொழியலாம். நால்வகையில் இவர் அறிவியல் பணி அமைகிறது. இளைஞர், முதியோர், பொது, மொழி பெயர்ப்பு என்ற நிலையில் இவர் நூல்கள் நீள்கின்றன. சென்னை அரசின் குழந்தை

இலக்கிய ஆராய்ச்சித் துறை அலுவலராக 62-66வரை இருந்தவ ராதலின் குழந்தைகட்கு நட்சத்திரங்களின் கதை, கோள்களின் கதை போன்றன படைத்துளார். முதியோர்க்கு மின்னலும் இடியும், மந்திரம் இல்லை மாயமில்லை, கேள்வி-பதில், ஆணியும் நிமிஷமும், வானம் போன்றன படைத்துளார்.

அறிவியல் பாதையில் மனிதன், எல்லாம் பிளாஸ்டிக், எழுத்தும் கருத்தும் போல்வன பொது. வகுப்பிலும் சரி வெளி யீடுகளிலும் சரி அறிவியல் சாயல் அமையும். எதையும் அறிவியல் நோக்கில் ஆராய்ந்து அரிய விளக்கங்கங்கள் தருவதில் வல்லவர். தமிழில் அறிவியல் கூறுகள் பரந்து கிடப்பதை அருமையான முறையில் அள்ளித் தருவார். எழுதிய கட்டுரைகள் ஏராளம். இதுபோது தமிழ்ப்பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதித் துறையின் அறிவியல் பிரிவில் பணியாற்றுகிறார். அறிவு வளர்க்கும் அறிவியல், மின்னியல் மேதை நிக்கோலா டெஸ்லா போல்வன பெயர்ப்புகள்.

**எம். எஸ். சுவாமிநாதன் :** 7-8-1925. கும்பகோணம் 44இல் கேரளப் பல்கலைக்கழக பி. எசி; 47இல் கோவை வேளாண் கல்லூரி பி. எசி. 52இல் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக பிஎச். டி. இந்திய வேளாண் ஆராய்ச்சிக் கழகத்தில் 55-66, 67இல் பத்மஸ்ரீ விருது. கோவைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர். 61இல் சாந்தி சுவரூப் பட்நகர் விருதுபெற்றார். உலகுபுகழ் அறிவியல் வல்லுநர்களில் ஒருவர். இது தமிழகத்துக்கும் தமிழுக்கும் பெருமை தரும்.

**பொ. திருஞானசம்பந்தம் :** 28-7-1925. தஞ்சை மாவட்ட மாயவரம் வட்ட பெருமுளை. 50 முதல் அறிவியல் தமிழ் ஆற்றி வருபவர். பௌதிகம், துகள் முடுக்கும் பொறிகள் (Practical Accelerators), ரேடியோ போன்றன படைப்புகள். அறிவியல் பற்றி அழகாகச் சொற்பெருக்காற்றுவர் அண்ணாமலையில் இயற்பியல் பேருரையாளர், கோவை. பி. எஸ். ஜி; மாநிலக் கல்லூரியில் இயற்பியல் பெரும் பேராசிரியராகச் சிறந்து கல்லூரிக் கல்வி இயக்குநராக (83-84) ஓய்வு பெற்றவர். இங்கிலாந்து, இத்தாலி, சுவிட்சர்லாந்து, போலந்து நாடு களுக்குப் போய் வந்தவர். **முகவரி:** 7, 50வது தெரு, 7வது அவென்யு, அசோக்நகர். சென்னை-83.

**பி. எல். சாமி** I. A. S. 2-10-1925. கோவை. சங்க நூல்களில் விந்தைப் பூச்சி. இலக்கியத்தில் அறிவியல், சங்க நூல்களில் மணிகள்-மீன்கள்-புள்ளின விளக்கம், தமிழ் இலக்கியத்தில்

தாய்த் தெய்வ வழிபாடு, இலக்கிய ஆய்வு (அறிவியல் நோக்கு) Common Names and Flora Fauna, சங்க இலக்கியத்தில் நவ மணிகள், தமிழ் நாட்டில் சிந்துவெளி எழுத்தோவியம் போன்றன. புதுவையில் நிர்வாகத் தனி அலுவலராக 28 ஆண்டுகள் பணியாற்றி, 25-6-83 முதல் தமிழ்ப் பல்கலைக் கழக அறிவியல் களஞ்சிய மைய முதன்மைப் பதிப்பாசிரியராக விளங்கி வருகிறார். இவரின் அறிவியற் பணி பெருமைக்குரியது-அருமை வாய்ந்தது.

**திருமதி ச. அனந்த கிருட்டிணன்** : 26-4-1929. தெ. ஆ. திருப்பாதிரிப்புலியூர். மாநிலக் கல்லூரி மாணவர். மகளிர் கிருத்துவக் கல்லூரித் தாவரவியற் பேராசிரியர். நூல் : தாவர நோய் இயல் (தமிழக அரசின் பரிசு).

**கே. ஆர். பாலச்சந்திர கணேசன்**: 6-9-1930. கோவை அவி நாசிக்கருகே கைகாட்டிப்புதூர். மாணவ நிலையிலேயே மேலான எழுத்தாளர், பேச்சாளர். ஈ. வெ. ரா. பெரியார் கல்லூரித் தாவரவியல் பேராசிரியர். பன்னூல்கள் படைத் துளார். தாவரவியல் வரலாறு (தமிழரசின் பரிசு). தாவரப் புற அமைப்பியல் (Plant Morphology), சூழ்நிலையியல் பரிணாமம்-மரபியல் (Ecology Evolution & Genetics), புதுமைப் பயிர்ப் பெருக்க முறைகள் (Modern Methods of Plant Breeding),

**ச. சம்பத்து**: சிதம்பரத்தையடுத்த புவனகிரி. அண்ணாமலை யில் பயின்றவர். 55 முதல் தஞ்சை சரபோசிக் கல்லூரியில் பணி யாற்றி, 64 முதல் திருச்சி மண்டலப் பொறியியல் கல்லூரியில் இயற்பியல் பேராசிரியர். பௌதிகம்-ஓர் அறிமுகம், மேசர் களும் லேசர்களும், ரேடார் (தமிழக அரசின் பரிசு), அடிப் படைத் திண்மநிலை இயற்பியல் (Fundamental of Solid State Physics) மொ. பெ : ஒளி நூல் (A Text book of Light - G. R. Noakes), புதுமைப் பௌதிகம் (Modern Phys. - J. B. Rajam.) தமிழ்ப் பற்று மிகுந்தவர்; தமிழிலக்கியங்களில் தோய்ந்தவர். அறிவியல் தமிழ் பற்றி அழகொழுகப் பேசும் ஆற்றலர். 70 அனைத்துலகக் கல்வியாண்டை ஒட்டி இவரது கல்விப் பணி யினைப் பாராட்டி யுனெஸ்கோ மன்றம் விருது வழங்கிப் போற்றிற்று. கலைச் சொல்லாக்கக் குழு போன்ற அறிவியல் சார்ந்த குழுக்களில் உறுப்பினர். அறிவியல் தமிழுக்காக அல்லும் பகலும் அயராது உழைப்பவர்.

**வே. கோவிந்தசாமி** : 27-5-1931. தஞ்சை மாவட்ட திருப் பூண்டி. ரேடியோ மெக்கானிசம் அண்டு ரிப்பேரிங் (தமிழக

அரசின் பரிசு), டெலிவிசன் மெக்கானிசம் அண்டு ரிப்பேரிங், டேப் ரெக்கார்டர் மெக்கானிசம் அண்டு ரிப்பேரிங் எனப் 12 நூல்கள்.

**அ. கிருட்டிணமூர்த்தி:** *10-10-1932.* பூம்புகாருக்கு அண்மைய நாகநாதன் கோவில். அருணாசலம் : ஆபூர்வத்தம்மாள். சீர்காழி சபாநாயகர் இந்து உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 48 இல்; சென்னைப் பச்சையப்பன் இடைநிலை 51 இல்; அண்ணாமலை பி. எசி 54 இல்; அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி பி. டி. 56 இல்; அண்ணாமலை அஞ்சல் வழி தமிழ் எம். ஏ. 85 இல். தேவகோட்டை பிரித்தோ உயர்நிலைப் பள்ளி 54-55, தஞ்சை தூயபேதுரு உயர்நிலைப்பள்ளி 57-76; அரசர் மேனிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் - நிர்வாகி 77 முதல். பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் அ. ஞானம் இவரின் ஒருசாலை மாணாக்கர்.

தமிழில் போதிய அறிவியல் நூல்கள் இல்லாமை போக்க வும், மாணாக்கர்கட்கு அறிவியற் கருத்துக்களைத் தெளிவாகச் சொல்லும்போது, அவற்றை ஏன் நூலாக எழுதக்கூடாது என்ற ஆர்வமும் எழுதத் தூண்டின. 58 முதல் எழுதி வரு கிறார்: முதல்நூல் 'வான்வெளி ஆராய்ச்சி' 60 இல்; எல்லோ ராலும் ஒருமுகமாகப் பாராட்டப் பெற்றது. தமிழரசின் பரிசு பெற்றது. ஏவுகணை நூல், வானவெளி வீரர்கள்; கடல்நூல் வரிசையாக இந்திய அட்லாண்டிக், அண்டார்க்டிக், ஆர்க்டிக், பசிபிக் கடல்கள் பற்றித் தனி நூல்கள், All about Lasers; மாணவர் உயிரியல், புகுமுகத் தாவரவியல். அணுக்கதிர் கலைக் கதிரில் கட்டுரைகள் பல.

ஆங்கிலம் அருந்தமிழ் இரண்டிலும் ஒத்த புலமைய ராதலின் நல்ல மொழி பெயர்ப்பாளராகவும் சிறக்கிறார். அண்ணாவின் அரும்பொழிவுகளை அழகு ஆங்கிலத்தில் 6 பட லங்களாகப் பெயர்த்துள்ளார்; மிகச்சிறந்த ஆக்கமாக அனை வராலும் ஏத்தப்பெற்றது. வல்ல கருத்தரங்காளர்; பாரதி தாசன் பல்கலைக் கழக 'அறிவியல் தமிழ்' கருத்தரங்கில் கட்டுரை படித்துப் பாராட்டப் பெற்றவர்.

மனைவி செல்லம்; மகள் அல்லி, மகன் செம்மல். 81 இல் சுழற் கழகத்தாரால் மிகச் சிறந்த தலைமையாசிரியர் பாராட்டும்; 85 இல் கல்விப் பணிக்காகக் கல்வி அமைச்சரிடம் இருந்து விருதும் பெற்ற இவர் **முகவரி:** *194,* கொத்தவால்

சாவடிச் சந்து, வடக்குப் பெருந்தெரு, தஞ்சாவூர்-9. (இல் 20139, பள்ளி: 21720)

**ராஜப்பா குருசாமி** : (என். ராமதுரை) 30-12-1932. ஈரோடு. உலகம் சுற்றும் செயற்கைக் கோள்கள், 100 விஞ்ஞான வினாக்களுக்கு விடைகள் (தமிழரசின் பரிசு) **முகவரி** : எம் 46/3 முதல் நீளச் சாலை, பெசண்ட் நகர், சென்னை-90.

**வெ. ச. இராமசாமி** : 10-2-1933. விலங்கியல் பேராசிரியர். உயிரியல் (1,000 ரூ. பரிசு) நாமும் நமது உணர்ச்சி உறுப்புக்களும், உயிரோட்டம், உயிரினங்களின் இயல்பு, **முகவரி** : பூ. சா. கோ. கலை-அறிவியல் கல்லூரி, கோவை-11.

**அ. சண்முக சுந்தரம்** : 15-2-1933. ஆரியபட்டா, நின்ற படம், லாசரின் கதை, வளரும் பொறியியற் கல்வி, வளரும் மின்னியல், மின்துறையில் காண வேண்டிய முன்னேற்றம். 64 முதல் எழுதி வருகிறார். **முகவரி** : மின்னியல் துறைப் பேராசிரியர். பூ. சா. கோ. பொறியியற் கல்லூரி, கோவை-4.

**ருத்ர துளசிதாஸ்** : 2-7-1933. நெல்லை இளையரசனேந்தல். சிவகங்கை மன்னர் கல்லூரி வேதியியல் பேராசிரியர். பொது பௌதிக வேதியியல் துணைப் பாடம், செய்முறைக் கனிம (inorganic) வேதியியல் - பண்பறி பகுப்பாய்வு (இரு பகுதி) இவை கல்லூரிப் படிப்புக்காக; பொது மக்களுக்கான அறிவியல் நூல்கள் வானத்தில் நாம், நியூட்ரான், நம்மைச் சுற்றி விஞ்ஞானம்,காலடியில் நகைப்பெட்டி, மண்ணின் வளம், உலகை மாற்றிய புதுப் புனைவுகள் (மொ. ப), விஞ்ஞானமும் வாழ்க்கை நலமும், விஞ்ஞானத்தின் கதை, விஞ்ஞானம் வளர்ந்தது எப்படி? அறிவியல் அறிஞராக அமைவதோடு, உணர்வியல் கவிஞராகவும் கதாசிரியராகவும் அமையும் தமிழறிஞராகத் திகழ்கிறார், புனை பெயர் **இளம் பாரதி**, முத்த ஏடு, சோலை நிழல், உனக்காக..., பூப்பந்தல் (கவிதை), சீதா (நாவல்), மொ. பெ : அடுத்த வீடு (தெலுங்குச் சிறுகதைகள்-மைய அரசின் 1,000 ரூ. பரிசு), மரக்குதிரை (மலையாளச் சிறு கதைகள்), அனல் காற்று (தெலுங்குக் கவிதைகள்),சரத்சந்திரர் வாழ்க்கை வரலாறு. பன்மொழி அறிந்த இவரின் **முகவரி** : 8, சிவன் கோவில் வடக்குத் தெரு, சிவ கங்கை-623560.

**ந. சந்திரசேகரன்**: 8-10-1934. அறிவியற் கேள்விகள், இரயிலின் கதை, உங்களுக்குத் தெரியுமா? விமானத்தின் கதை, 48 முதல் எழுதி வருகிறார். **முகவரி**: மொழி பெயர்ப்பாளர்.

தமிழ்நாடு சட்டத் துறை ஆட்சிமொழி ஆணையம், அரசினர் தோட்டம், சென்னை-2.

**மா. பா. குருசாமி** : 15-1-1936. இரும்பின் கதை, வெப்பத்தின் கதை, பார்க்கும் பறவைகள் (பரிசு), செயற்கரிய செய்தோர், நம்மைச் சுற்றி நாற்பது உயிர்கள். **முகவரி** : 21 பி, பழைய மாகாளிபட்டி சாலை, மதுரை-1.

**எஸ். தோதாத்ரி**: 29-10-1937. ரப்பரின் கதை (குடியரசுத் தலைவரின் பரிசு), செடியும் மனிதனும், தற்கால விலங்கினங்கள். பெயர்ப்புகள்: பூமியின் தோற்றமும் கிரகங்களின் தோற்றமும், மனித உடல், தாவரத்தின் வாழ்க்கை, உங்களுக்குத் தெரியுமா? ஆங்கிலப் பேராசிரியரான இவர் 58 முதலே அறிவியல் தமிழ் வளர்த்து வருகிறார்! **முகவரி** 39, கீழக்கிராமம், ஆழ்வார் குறிச்சி, நெல்லை மாவட்டம்.

**கொடுமுடி. சண்முகன்**: 9-3-1938. பெரியார் மாவட்டம். பொதுப்பணித்துறை பொறியியலாளராக அமைந்து, 19-10-83 முதல் 85 வரை தமிழ்ப் பல்கலைக் கழக அறிவியல் களஞ்சியப் பொதுப் பொறியியல் பதிப்பராக இருந்து விடுத்துத் தாய்ப் பணிக்கே மீண்டுளார். 'கொங்கு' இதழ் ஆசிரியர். அளக்கையியல் (Surveying), மண் விசையியல் (Soil Mechanics) மொழி பெயர்ப்பும் கலைச் சொல்லாக்கமும் வல்லவர். தமிழ் இலக்கிய ஊற்றமும் மிக்கவர். **முகவரி** : உதவிச்செயற் பொறியர், பொதுப்பணித்துறை, சென்னை-5.

**அ. நா. வாசுதேவன்**: 20-9-1938. பத்திரிகையாளர். 49முதல் எழுதி வருகிறார். அறிவியல் அற்புதங்கள், விஞ்ஞானச் சிக்கல்கள் அருமை வாய்ந்தன. சிறுகதை, நாடகம், கட்டுரையும் படைத்துளார். **முகவரி**: 41 பி, கருணீகர் தெரு, ஆதம்பாக்கம், சென்னை-88.

**பி. கே. பொன்னுசாமி**: 22-9-1938. கோவை உடுமலைப் பேட்டை பள்ளப்பாளையம். பொள்ளாச்சி நாச்சிமுத்து நினைவுக்கல்லூரி பி. எசி. (இயற்பியல்) 63; கோவை பி.எஸ்.ஜி கலைக்கல்லூரி எம். எசி 65; சென்னைப் பல்கலைக் கழக இயற்பியல் உயர் ஆய்வு மைய பி. எச். டி. 70.

71-73 நியுயார்க் இதாகா கார்னெல் பல்கலைக் கழக வேதியியல் துறை முதுமுனைவர் இணைவர்; 73-76. சென்னைப் பல்கலைக் கழக Crystallography & Biophysics

துறைப் பேருரையாளர்; 76-78, 78-82 சென்னைப் பல்கலைக் கழக முதுநிலை திருச்சி மையப் பேராசிரியர்-இயக்குநர். 82-85 பாரதிதாசன் பல்கலைக் கழகப் பேராசிரியர்; 86 முதல் அமெரிக்க மிச்சிகன் பல்கலைக் கழக முதுமுனைவர். அறிஞராக உள்ளார்.

இவரின் ஆய்வுக்களங்கள்: Molecular Biophysics: Structure, Conformation. Dynamics of Biomacromolecules, Evolution, Theoretical Biology, Forensic Sciences. தமிழில் ஒரு நூலும், 70 ஆய்வுக் கட்டுரைகளும் படைத்துளார். 5 Ph.Ds, 10 M.phils இவரின் கீழ்ப் பட்டம் பெற்றுளர்.

பெற்ற சிறப்புகள்: 78இல் இந்திய சோவியத் கலாசார பரிவர்த்தனையில் Visiting Scientist. 80இல் தானிகுச்சி நிறுவனத்தின் சப்பான் சென்றுவரும் பயண உதவி. 80-83. தில்லி சவகர்லால் பல்கலைக் கழகக் கல்விக்குழு நியமன உறுப்பினர். 84முதல் தமிழ்நாடு அறிவியல் தொழில் நுட்பக் குழும நியமன உறுப்பினர். பாரதிதாசன் பல்கலைக் கழக ஆட்சிக்குழு நியமன உறுப்பினர். 86இல் சிறந்த பல்கலைக் கழகப் பேராசிரியருக்கான தமிழக அரசு விருது.

நற்றமிழ் ஊற்றமும் இலக்கிய வளமையும் மிக்கவர். தொடக்க காலத்திலிருந்தே அறிவியல் தமிழ் பேணும் நலத்தர். அறிவியல் நுட்பங்களைத் திட்பமுடன் தமிழில் தந்திடு திறனி. நாடறிந்த வல்ல தமிழறிவியல் அறிஞர். **முகவரி:** பாரதிதாசன் பல்கலைக் கழகம், காஜாமலை, திருச்சி-23.

**கே. என். ராமச்சந்திரன்:** 5-3-1939. தஞ்சாவூர். நடேச சர்மா: குஞ்சம்மாள்: கல்யாண சுந்தரம் உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 54இல், திருச்சி தேசியக் கல்லூரி இன்டர் 56இல், அண்ணாமலைப் பல்கலைக் கழக பி. எசி. ஆனர்சு 59இல், எம். எசி. 63இல்; எம் பில் 80இல். தஞ்சை சரபோஜி கல்லூரியில் இயற்பியல் துறைத் துணைப் பேராசிரியராகப் பணி தொடங்கி திருப்பூர், முசிறியில் பணியாற்றி, இதுபோது அரியலூரில் பேராசிரியராக உள்ளார்.

63முதல் அறிவியல் கட்டுரைகள் 600க்கு மேல் வடித்து வருகிறார். சூரிய ஆற்றல், வானத்து அதிசயங்கள், வானம் காட்டும் காட்சி, பொருட் பண்பியல் (Properties of Matter), உயிரியல் இயற்பியல் (Biophysics) குறிப்பிடத்தக்கன. விண்

வெளி, பொறியியல், இயற்பியல் என விரிந்தது. நாவல்கள் 4, இந்தி ஆங்கிலம் தமிழில் சிறுகதைகள் எழுதியுள்ளார்-கலை மகள், கதிர், குங்குமம், அமுதசுரபியில். தினமணியில் இருவாரங் கட்கு ஒருமுறை அறிவியல் கட்டுரைகள் வருகின்றன. வானொலியில் அறிவியல் கருத்துரைகள் கூறிவருகிறார். அறிவியல் தமிழில் இவர் பங்கு கணிசமானது. **முகவரி:** 2220. சகரநாயக்கன் தெரு, வடக்கு வீதி, தஞ்சாவூர்-9.

**த. சலாவுத்தீன்:** 30-5-1941. திருச்சி. ஒய்வு பெற்ற மாவட்டக் கல்வி அலுவலர் குலாம் தஸ்தகீர்: ரஜியா பேகம். தாய்மொழி உருது; அறிந்தவை தமிழ் ஆங்கிலம், உருசிய மொழிகள். பி. எசி. பயின்றவர்: தனியே தமிழ் எம்.ஏ. தேர்ச்சி பெற்றுக் கோடம்பாக்கம் அரசினர் மேனிலைப் பள்ளித் தமிழாசிரியர். 62முதல் அறிவியல் தமிழ்ப்பணி ஆற்றி வருகிறார். அறிவியல் படைப்புகள்: மனிதனுக்கு முன், சிலந்தி யோ சிலந்தி, புரட்சிக்குப் புதிய பொருள் கண்டவர், அலை களின் கதை, பாலூட்டிகளின் கதை, மின்னியலின் கதை, அதிசயங்களின் ரகசியங்கள், இப்படியும் சில அற்புதங்கள், அறிவியல் அற்புதங்கள், விண்ணின் விந்தை, பூச்சிகளின் கதை, நெஞ்சை அள்ளும் கண்டுபிடிப்புகள், ஆழ்கடல் அதிசய உயிரினங்கள், மரபுரிமையின் கதை, விண்ணும் மண்ணும், பொது அறிவுக் கலைக்களஞ்சியம், ஏன்? என்ன? எப்படி?, நீ-நான்-நாம், மின்சாரம்-மின்னியல்-மனிதன் என 20 பருவம் மாறும் நேரம் (கவிதை வீச்சு), நகைச்சுவைத் துணுக்குகள். மொ. பெ: ரசூல் கம்சதோவின் 'என் தஜெஸ்தான்' (தற்கால சோவியத் கவிஞர்களின் கவிதைகள்).

82இல் சோவியத் நாட்டின் அழைப்பின் பேரில் சோவியத் நாடு சென்று சுற்றி வந்தார். 74முதல் புஷ்கின் இலக்கியப் பேரவையின் தலைவர். **முகவரி:** 15, 4வது நெடுஞ்சாலை, நங்கநல்லூர், சென்னை, 61.

**சு. கந்தசாமி:** 28-6-1943. இராமநாதபுர வடமலைக் குறிச்சி. மதுரைத் தியாகராசர் பொறியியற் கல்லூரி மாணவர். கிண்டி தொழில்நுட்பப் பயிற்சி நிலையத்தில் முன்னிலைப் பயிற்றுநர், ஈரோடு அரசினர் தொழிற்பயிற்சி நிலைய முதல்வர். இதுபோது சேலம் உருக்காலைத் திட்ட உதவிப் பயிற்சிப் பொறியாளர். தந்தவை: இயந்திரப்பணியாள், பற்ற வைப்பு நுணுக்கங்களும் முறையும் (தமிழக அரசின் பரிசு).

**கு வி கிருஷ்ணமூர்த்தி** : *11-11-1945*. குளித்தலை. விசுவ நாதன்: ருக்குமணி அம்மையார். சிந்தாதிரிப்பேட்டை உயர் நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 60இல். சென்னை மவுண்ட் சாலை அரசினர் கலைக் கல்லூரி தாவரவியல் பி.எசி. 64இல்; மாநிலக் கல்லூரி எம். எசி 66இல் மாநில முதன்மை. புகழ் சான்ற பி.ஜி.எல். சாமியின் நன்மாணவர். 'ஒரு விதையிலைத் தாவரக் கணுவிடை வளர்ச்சி' என்பது டாக்டர் பட்ட ஆய்வு 73இல். பல அரசுக் கல்லூரிகளில் பணியாற்றி, 78 முதல் பாரதிதாசன் பல்கலைக் கழகத் தாவரவியல் இணைப் பேராசிரியர். 10 ஆண்டுகள் தமிழ் வழி அறிவியல் கற்பித்த அனுபவத்தர். பல அறிவியல் வானொலிப் பேச்சுக்கள். அறிவியல் சிந்தனைகள். தமிழ்ப் பல்கலைக் கழக அறிவியல் களஞ்சியத்தில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் தீட்டியுள்ளார். தனியே 70 ஆராய்ச்சிக் கட்டுரைகள்.

நூல்கள் : மலரில் இருந்து கனிவரை, பூக்கும் தாவரங்கள், தாவிரவியல் துணைப்பாடம். 66இல் சிறந்த முது அறிவியல் மாணவர் என்பதற்காக விசய நகர மாமன்னர் பரிசு, தாவரச் சேகரிப்பில் தலைநின்றவர் என்ற முறையில் பேரா. பைசன் பரிசு; மாநில முதன்மைக்காகப் பேரா. பழனியாண்டி தங்கப் பதக்கம், டாக்டர் தோடலா ஏகாம்பரம் பரிசு; 84இல் தலை சான்ற இளம் தாவர விஞ்ஞானிப் பரிசு இந்திய அறிவியல் கழகத்தாரால் குடியரசுத் தலைவர் கையால் பெறல். தன்மை யும் திறமும் சான்ற இவரின் **தொடர்புக்கு** : *157*, மாதவன் தெரு, கலைஞர் கருணாநிதி நகர், திருச்சி-*21*.

**டாக்டர். இரா. சபேசன்** : திருச்சி தேசியக் கல்லூரி இயற் பியல் பேராசிரியர்; பொறுப்பு முதல்வர். அணுக் கருவியல் (Nuclear Phys), ஒளியியல் (Light) போன்ற பன்னூலாசிரியர் தேசிய அறிவியல் கழகம், இந்திய ஒலி இயல் கழகம், மின்னியல்-வேதியியல் மேம்பாட்டுக் கழகம் போன்ற பல்வேறு நிறுவனங் களின் சிறப்பு உறுப்பினர். ஹங்கேரி நாட்டில் 82 வேதியியல் வெப்பவியல் கருத்தரங்கில் படித்த இவரது ஆய்வுக்கட்டுரை அனைவரின் ஒருமித்த பாராட்டுக்களைப் பெற்றது. தமிழ்ப் பல்கலைக் கழகக் குறுகிய கால மானியம் பெற்று மின் அணு-மின்னியல் (Electron) கலைச்சொற் களஞ்சியம் உருவாக்கி யுள்ளார்.

**கா. வே. சுப்ரமணியன்** : பூம்புகார் மேலையூர், அண்ணா மலையில் பயின்று, மன்னன் பந்தல் ஏ.வி.சி. கல்லூரி இயற்

பியல் பேராசிரியர். பௌதிகம் துணைப்பாடம், அணு இயற்பியல், புதுமைப் பௌதிகம் போன்ற நூல்கள் படைத்துளார்.

**எஸ். சுப்பிரமணியம் :** 54 முதல் எழுதி வருகிறார். பல்வேறு இதழ்களில் நிருபர்-துணையாசிரியர். தொழிற்றுறை இதழ்கள் நடாத்துவதில் தனித்திறன். அறிவியல்-பொறியியல் துறை நூல்கள் பல எழுதிப் புகழ் ஈட்டியவர். அறிவியலைச் சிறுவர்கட்கும் புரியுமாறு எழுதுவதில் வல்லவர். சூரியனின் கதை, நிலாவின் கதை, வானத்தின் கதை, நட்சத்திரங்களின் கதை, முடிவற்ற பயணம். **முகவரி:** மே/பா. அசோகன் பதிப்பகம், பெருங்குடி, சென்னை.

**டாக்டர். ச. சரவணன்:** புவி அமைப்பியல் தலைமைப் பேராசிரியராக மாநிலக் கல்லூரியில் பிறங்கிக் கனிமவியல் துறை இயக்குநராக உள்ளார். கல்லூரிக் கல்வி இயக்குநர் நிலையினர். தமிழ் நாட்டுக் கனிமவளம் (Mineral Wealth of Tamil Nadu) போன்ற நூல்கள் படைத்துளார்.

**ஓ. ஆர். சூரியநாராயணன் :** அரசு கலைக் கல்லூரி, மாநிலக் கல்லூரிகளில் வேதியியல் பேராசிரியர்; பின் பூண்டி, ஈ.வெ.ரா கல்லூரிகளில் முதல்வராக இருந்து கல்லூரிக் கல்வி இணை இயக்குநராக இலங்கி ஓய்வு பெற்றவர். அமைதியான செயலாற்றல் மிக்க இவர், அறிமுறை வேதியியல் (Theoretical Chem), கரிம வேதியியல் (Organic Chem). திடநிலை (Solid state) பௌதிக வேதியியல் (Physical Chem), மொ. பெ: பொது வேதியியல் (B. Nekrason) போன்றன இவர் பேர்சொல்வன **முகவரி :** ஏரிக்கரை தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-34.

**கணேச கோபால கிருட்டிணன் :** தஞ்சை மாவட்டத்தவர். திருச்சி வளவர் கல்லூரியில் பயின்று சென்னை மாநிலக் கல்லூரியில் வேதியியல் பேராசிரியராகப் பணியாற்றி, வெளிநாடு சென்று மீண்டவர். தமிழிலக்கிய ஆர்வலர். சிறந்த பேச்சாளர். வளமான எழுத்தாளர். அணு அமைப்பும் வேதிப் பிணைப்பும் (Atomic Structure & Chemical Bond), அமிலங்களும் காரங்களும் (Acids and Bases), கனிம வேதியியல் (Inorganic Chem), பௌதிக வேதியியல் (Physical Chem) வெப்ப இயக்கவியல் (Thermodynamics). அழகு தமிழில் அறிவியல் தமிழினைப் போதிப்பதில் வல்லவர். தமிழிலக்கியங்களில் புதைந்து கிடக்கும் அறிவியற் கருத்துக்கட்கு அற்புத விளக்கம் அளித்திடும் தனித்துவர்.

**த. கமலக்கண்ணன் :** சென்னை. அரசுக் கல்லூரிகள், மாநிலக் கல்லூரியில் இயற்பியல் பேராசிரியர்; கரூர், மன்னார்குடி போன்ற ஊர்களில் புதுக்கல்லூரிகளைத் தோற்றி வளர்த்த பெருமையர்-குள்ளை உருவம், கொள்கைப் பிடிப்பு. உறுதியான உள்ளம், அஞ்சாத நெஞ்சம் கொண்டவர்-பாழ்பட்டு நின்ற பல கல்லூரிகளை ஏற்றுப் பண்படுத்திச் சிறக்கச் செய்த செயற்படு சிந்தையர். பெருமைக்குரிய புகழ் முதல்வர். செய்முறைப் பௌதிகம் (Practical Phys), குவான்டம் எந்திரவியல் தொடக்கப்படிகள் (ABC of Quantum Mechanics V. Rydnik) தந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வுக் கட்டுப் பாட்டாளராக இருந்து, கல்லூரிக் கல்வித் துணை இயக்குநராக விளங்கி விலகியவர். தன்மானம் மிக்கவர். **முகவரி :** 4ஆம் தெரு, தெற்குக் கோபாலபுரம், சென்னை-86.

இனி ஓரிரு நூல்கள் படைத்து அறிவியல் தமிழுக்கு ஆக்கம் தேடியோரை நினைந்து நன்றி பாராட்டுவோம்:

**கோ. சண்முகசுந்தரம்:** தஞ்சை கருந்தட்டான் குடியில் உமா மகேசுவரனார் உயர்நிலைப்பள்ளி, திருச்சி வளவர் கல்லூரி பயின்று, சரபோஜி மன்னர் கல்லூரியில் கணிதத் துறை விரிவுரையாளராக விளங்கி, திண்டுக்கல் ஜி.டி.என். கல்லூரியில் பேராசிரியராகச் சென்று சிறந்து இதுபோது முதல்வராக உள்ளார். ஐம்பதுகளிலேயே கணிதத்தைக் கன்னித் தமிழில் கனிவாக நடத்தியவர். தமிழில் கணித அழகு அருமைப்பாடுகளை எடுத்தோதும் ஆற்றலர். எழுதியும் வந்தவர். **முகவரி :** ஜி.டி.என். கல்லூரி, திண்டுக்கல்-4.

**மணவாளன் :** தஞ்சை வடகால். சிங்கப் பெருமாள் நாட்டாரின் செல்வர். பொறியியல் பயின்று பொதுப் பணித் துறையில் சிறக்கப் பணியாற்றித் தலைமைப் பொறியாளராகப் புகழ் பூத்தவர். நற்றமிழ்ப் பற்றும் அறிவியல் தமிழ் ஆர்வமும் மிக்கவர். தமிழில் அழகாகப் பேசும் அருமையர். அறிவியல் போலவே இலக்கியங்களைப் பற்றிப் பேசும் திறத்தர் தன்மான உணர்வு மிக்கவர். பெருமிதம் மிக்கவர். ஓய்வு பெற்றதும் கலைஞர், அறிவாலயம் அமைக்கும் அரும்பணியினை ஒப்படைத்துள்ளார். **முகவரி :** அண்ணாநகர், சென்னை-40.

**டாக்டர் நாகராஜன் :** தஞ்சை மாவட்ட கொரடாச்சேரி. திருச்சி வளவர் கல்லூரி எம். ஏ. அறிவியல் பயின்று தஞ்சை சரபோஜி கல்லூரியில் பணியாற்றி, கோவை அரசினர் கல்லூரி, சென்னை மாநிலக் கல்லூரிகளில் துணைப் பேராசிரியராக

விளங்கி, சென்னைப் பல்கலைக் கழக இயற்பியல் பேராசிரியராக இலங்கிவருகிறார். இவரின் தனித்துறை டாக்டர் பட்டம் பெற்றது யாவும் Nuclear Physல். மேலை நாட்டு மிகச் சிறந்த அறிவியல் ஏடுகளில் எழுதிவருபவர்; UPSC expert, இயற்பியல் துறையில் ஏற்றமும் ஊற்றமும் பெற்றொளிர்பவர். நுண்மதியர். கிண்டி அழகப்பா தொழில்நுட்பக் கல்லூரி வளாகத்தில் பணியிடம்: **முகவரி**: சாஸ்திரி நகர், சென்னை-20

பேரா. ஆர். வீரபத்திரன் (இயற்கையின் விந்தை), கமலா பத்மகிரீஸ்வரன் (ராக்கெட்டுகள் மூலம் விண்வெளியில்), வே. தமையந்திரன் (கம்ப்யூட்டர், கண் சிமிட்டும் விண் மீன்கள், அறிவியல் கதம்பம்; சிந்தனைகள், பூங்கா) இ. ரே. தன்யகுமார் (பறவைகள் பலவிதம்), ஜெயபாரதன் (ஆக்க வினைகளுக்கு அணு சக்தி), எஸ். சங்கரராமன் (அதிசயத் தாவரங்கள், கடல்வாழ் உயிரினங்கள்), அ. சு. ராமலிங்கம் (பாம்பும் மனிதனும்), பத்மா ராஜகோபால் (உலக விலங்குகள்), நித்யானந்தம் (இயற்கை இன்னலும் அறிவியலின் ஆற்றலும், வாழ்வளிக்கும் விஞ்ஞானம், மெத்த வளருது விஞ்ஞானம்), ஆ. கந்தசாமி (நிஜ ஜாலம்), எஸ். எஸ் ராமசாமிப் பிள்ளை (இரும்பும் உருக்காலையும்), ய. லட்சுமி நாராயணன் (அறிவியல் புதுமைகள்), பி. எல். ராஜேந்திரன் (அறு பெரு விஞ்ஞானிகள்), டாக்டர் எஸ். சதாசிவம் (உயிர் வேதிய மரபியல் ஓர் அறிமுகம்), செங்குட்டுவன் (அறிவியல் மனப்பான்மை, அறிவியலில் மறைக்கப்பட்ட தியாகங்கள்), பிறையணிவோன் (விமானத்தின் கதை), நா. வானமாமலை (விண்வெளி ரசாயனம்), வாசகர் வட்டம் (விஞ்ஞானத்தின் புதிய எல்லைகள்), மலையமான் (அறிவியல் பெருமணிகள், சிறு கதைகள், இந்திய விஞ்ஞானிகள்), வாண்டுமாமா (மெழுகு மாளிகை), சிரஞ்சிவி (பறக்கும்தட்டு), என். ராமகிருஷ்ணா (புகைப்படம் எடுக்கலாம்), என். காசி (டிரான்சிஸ்டர் செய்வது எப்படி? ரேடியோ வால்வுக் குறிப்புக்கள்), டி. என். ராமச்சந்திரன் (கலீலியோ), எம். நடராசன் (எரிசக்தி), டி. எம். சௌந்தரராஜன் (அன்றாட வாழ்வில் மின்சாரம், அறிவியல் அமுதம்) தி. சா. ராஜு (துப்பாக்கி உமது தோழன்), சிவபாத சுந்தரம் (ஒலிபரப்புக் கலை), கதிர் மகாதேவன் (வளரும் அறிவியல்), வி. இராமகிருட்டிணன் (Science in Ancient Tamil Litt), சாமி சிதம்பரனார் (சித்தர்கள் கண்ட விஞ்ஞான தத்துவம்), வெற்றிச் செல்வன் (உலக விஞ்ஞானிகள்), ந. வீ. செயராமன் (தமிழிலக்கியத்தில் வேளாண் அறிவியல்), துமிலன்

(வானிலை ஆராய்ச்சி). சக்திதாசன் சுப்பிரமணியம் (உலகம் பிறந்த கதை, அப்பு முதல் அணுகுண்டு வரை).

**ஈ. தா. ராஜேஸ்வரி அம்மையாரின்** தொண்டு ஈண்டு நினைக்கத்தக்கது; அறிவியல் என்றால் என்ன என்று அவ்வளவாக உணரா நாளில் உணர்த்தியவர் (பக்: 821). **பொ. திருகூட சுந்தரம் பிள்ளையும்** அறிவியல் தமிழை அந்நாளிலேயே அமைவுற வளர்த்துளார். (பக். 822).

**பெயர்ப்புகள் :** அறிவியல் கண்டுப்பிடிப்புகளின் வரலாறு ஈகான் லார்சன் (கு. ராஜாராம்), செயற்கைச் சந்திரன்களும் ராக்கெட்டுகளும், வான வெளியும்-வில்லி லி (பா. சவரிமுத்து), அணுச்சக்தி-இன்றும் நாளையும்-மார்கரெட் ஓ ஹைடு (எஸ். முத்து ஐயங்கார்), பூமி எனும் கிரகம்-ஜார்ஜ் கேமாவ் (தி. ஜானகிராமன்), அறிவின் அறுவடை (சிட்டி), இந்தியாவின் கனிமங்கள் டி. என். வாடியா (எம். எஸ். ஆனந்த்), இந்தியப் பாம்புகள்-பி. ஜே. தேவரஸ் (பி. எம். அண்ணாமலை), பறவைகளைப் பார்-ஜமால் ஆரா (பெ. தூரன்), நமது ரயில்வேக்கள், ஜக்ஜித் சிங் (டி. ஆர். பஞ்சாபகேசன்), உலகை மாற்றிய புதுப்புனைவுகள்-மீர் நஜாபத் அலி (வைத்தண்ணா), ரசாயன நூல்-Rosco's Primer of Chem (டி. பி. மாசிலாமணிப்பிள்ளை), **பம்பாய்த் தமிழ்ச் சங்கம்** தன் விஞ்ஞானத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் வழி 1967லேயே 'அணுவைப்பற்றி' பாபா அணுமின் நிலைய வல்லுநர்கள் கொண்டு எழுதச் செய்து தொகுத்து வெளியிட்டது. **தஞ்சை சரசுவதி மகால் நூலகம்** 72இல் (ஆனந்த கந்தம்' எனும் ரசவாத நூலினைப் (Eyhaustive treatise on chemiarty and Atomic Energy) பெயர்த்தளித்து அறிவியல் தமிழுக்கு ஆக்கம் பயந்துளது. இந்த இரண்டும் ஈண்டு நினைவு கூரத் தக்கன.

**அறிவியல் இதழ்கள் :** கலைக்கதிர், விஞ்ஞானச் சுடர், களஞ்சியம், அறிக அறிவியல் நான்கும் முனைப்பான பணிகள் ஆற்றி வருகின்றன. தினமணி, செந்தமிழ்ச் செல்வி, தென்மொழி, தமிழர் நேசன், தினவர்த்தமானி, அணுக் கதிர், கூரியர் போன்றன கணிசமான பங்காற்றி வருகின்றன.

56முதல் அறிவியல் தமிழ் பரப்பும் ஒருபெரும் ஒரே இதழ் **கலைக்கதிர்.** பேராசிரியர்களிடமும் படித்தவர்களிடமும் அறிவியல் விழிப்பினை உண்டாக்கி வளர்த்து வருகிறது. முப்பதாண்டுகளாக ஆயிரத்துக்கும் மேற்பட்ட அரிய கட்டுரைகளை வெளியிட்டுப் பெரிய மாற்றத்தையே தமிழுலகில்

உண்டாக்கியது உண்மை. கலைச் சொல்லாக்கத்தில் இறங்கி 50000 சொற்கள் வரை ஆக்கி அளித்துளது.

**பதிப்பகங்களும்** தங்கள் பங்கினை ஆற்றியுள. பாடநூல் நிறுவனம், சைவ சித்தாந்தக் கழகம், நியு செஞ்சுரி, மீனாட்சி, ஐந்திணை, அருணோதயம், வானதி போன்றன அரும்பணி ஆற்றியுள. இவையின்றேல், அறிவியல் எழுத்தாளர்தம் படைப்புகள் அரங்கேறுவது எங்ஙனம்?

**பழநியப்பா பிரதர்ஸ்** : அறிவியல் அறிஞர் வரிசை என 20 அறிவியலாரின் வாழ்வு சாதனை பற்றி வெளியிட்டுள்ளது. தி சு கலிய பெருமாள், எடிசன், பிராங்க்லின், லூயி பாஸ்டர், ஐன்ஸ்டீன், கியூரி, ஜென்னர், பிளெமிங், சி. வி. ராமன், ரொனால்டு ராஸ், நிக்கோலா டெஸ்லா வரலாறும்; சந்தான லக்ஷ்மி, ரைட் சகோதரர்கள், போஸ், போர்டு, ஜேம்ஸ்வாட், வாட்சன் வாட், டார்வின் வரலாறும் படைத்துளர். இப்பணி எளிதே இனிதே அறிவியற்பணியாளர் பற்றி அறியச் செய்தன. இப்பதிப்பகத்திற்கு நன்றி பாராட்ட வேண்டும்.

**கேரளத்தில்**...கேரள சாஸ்திர சாகித்ய பரிஷத் 1963 தொடங்கி 'சமூகப் புரட்சிக்கு அறிவியல்' என்ற கொள்கையின் அடியில் செயலாற்றி வருகிறது. கடந்த 23 வருடங்களாக. பட்டி தொட்டியெங்கும் தாமே சென்று சாதாரண மக்க ளிடமும் அறிவியல் உணர்வு உருவாக (நேரு நவின்ற Scientific temper way of Looking at Nature) பேசியும் நடித்தும் பாமர மக்களின் கலைகள் வழியும் தெருகூத்து மூலமும் எளிதே இனிதே நேரே நெஞ்சில் பாயும் வண்ணம் செயற்பட்டு வரு கின்றனர். அறிவியலை நாடி மக்கள் பாரார்; மக்களைத் தேடி நாமே சென்று நயந்து புரியவைக்க வேணும். தமிழக அறிவியல் ஆர்வலர் அங்ஙனம் செய்யவேணும்.

**வானொலி** வளமார் தொண்டாற்றி வருகின்றது. ''அறிவியல் அரங்கம்,'' அலைகள், பூங்கா என வாரந்தோறும் தக்காரைக் கொண்டு தெரியவைக்கிறது. மலரும் விஞ்ஞானிகள் என இளம் விஞ்ஞானிகளை அறிமுகம் செய்து அவர்தம் சாதனைகளை நாடறியச் செய்கிறது. புகழேணி மூலமும் புரிய வைக்கிறது. இவ்வகையில் வானொலியின் தொண்டு வந்தனைக் குரியது.

## 29. விரிவுரைகள்

இதிகாச புராணங்களை 'ஜனரஞ்சகமாக'க் கதைபோலே மக்கள் நடுவே அவர்கள் புரிந்து போற்றுமாறு பொழியும் போக்குப் பொலிகிறது. வடமொழி இதிகாச புராணங்களை வித்தாரமாக விவரித்துக் கூறுவோர் பலர் உளர். அதுபோல் தமிழ் இலக்கியங்களை எடுத்துரைக்கும் ஆர்வம் மேலிட்டு அத் துறையில் சக்கைப் போடு போட்டு வருகின்றனர். இவர்களின் தலைமணியாக விளங்குபவர் வாரியார்; தளபதியாகத் திகழ் பவர் கீரன். உபந்நியாசத் துறையில் ஒரு பெரும் திருப்பத்தை உருவாக்கிய வாரியாரின் வாரிசுகளாகவே ஒரு பரம்பரை-தமிழ் படித்த தக்கோர் வரிசை நீண்டு வருகிறது. இது பொற்கால விடியலுக்குப் பூபாளம் பாடுவதாக உளது.

**கிருபானந்த வாரியார்** : 5-8-1906. வ.ஆ. காட்டுப்பாடி யடுத்த காங்கேய நல்லூர். செங்குந்த வீர சைவ மரபு. சிவத் திரு மல்லையாதாஸ் பாகவதர்: கனகவல்லி அம்மையார். ஏகாதேச உருத்திரர் போல் 11பிள்ளைகள்; இவர் நான்காவது. தமையனார் மதுசூதன சிவம் (மறைஞான சிவம்).

பள்ளி சென்றால் நற்குணம் அமையாது என்று தந்தையே பாடம் பயிற்றல். வைகறையில் ஒருமணி நேரம் இசைப் பயிற்சி.7 மணிக்கு நன்னூல் போன்ற இலக்கணங்கள்; பிற்பகல் தேவாரம் திருப்புகழ் மனனம்; இரவில் வரலாறு பயிலல். 5 வயதிலேயே தாமே நூல்களைப் படித்தவர்; 9 வயதுக்குள்ளா கவே வெண்பா பாடும் வல்லமை பெற்றவர்; 12 வயதில் 19,009 பாக்கள் நெட்டுருப் பண்ணியவர்!

5 வயதில் 1911இல் திருவண்ணாமலை பாணியத்தி தேவர் மடத்தில் தீட்சை, பின் தந்தையிடம் சடாச்சர மந்திர உபதேசம்; பழநி ஈசான சிவாச்சாரியாரிடம் நிர்வாண தீட்சை, 'வாமதேவசிவம்'' என்ற தீட்சா நாம் பெறல் 19 வயதில். 25இல் சென்னை தாய்மாமன் சிவகுரு முதலியார் மகள் அமிர்த லட்சுமியை மணத்தல்; தந்தைக்குத் தெரியாமல் வீணை வாசிக்கும்போது விரிவுரை செய்யத் தொடங்கி, தந்தை திருப் பணிக்காகப் பட்ட 5,000ரூ. கடனை அடைத்தல்: திருப்புகழ் சாமியின் அருளாசி பெற்று ஆங்காங்கு திருப்புகழ் சபைகள் நிறுவி விரிவுரைப் பணி தொடர்ந்தார்.

(23 வயதில்) 33இல் கதிர்காம யாத்திரை; காங்கேய நல்லூர் கோயில் குடமுழக்கு செய்தல். 41இல் மோகனூர்

அறச்சாலை கட்டல். 41-50 வரை 9 ஆண்டுகள் இடர் பல கடந்து இன்னல் பல அடைந்து வடலூர் சத்திய ஞானசபை 24-4-50இல் குடமுழுக்கு செய்தல். 55இல் வடநாட்டுப் பயணம். 56இல் சிங்கப்பூர் செல்லல். 61இல் மலேயா மேவல். 62இல் வள்ளிமலை, 69இல் வயலூர் முருகன் கோயில் குட முழுக்குகள். 76இல் விமானத்தில் கௌரீசங்கர் குன்று தரி சித்தல், எவரெஸ்டு முடி கண்டு களித்தல். 27-7-1978இல் பாரீஸ், 1-8-1978இல் லண்டன், செப்டம்பரில் இலங்கை ஏகல். 86இல் அமெரிக்கா சென்று மீளல்.

இவருக்கு அருளுபதேசம் ஆற்றியோர்: தந்தை, மதுரைத் திருப்புகழ் சுவாமிகள், பழநி ஈசான சிவாசாரியார். கனவில் ஆறெழுத்து அருளியோர் அருணகிரியார், பாம்பன் சுவாமிகள். பாம்பன் சுவாமிகள் தரிசனத்தால்தான், சாத்திரத்தால் நிச்சய புத்தியும், இதுதான் உண்மைப் பொருள் என்ற திண்மை நலமும் கிட்டியது. டால்ஸ்டாயின் 'நாம் செய்வது என்ன?' என்ற நூலைப் படித்து 11-10-1959 முதல் பொரு ளாசை துறத்தல். லட்சத்தையும் லட்சியம் செய்யாதவர், பூமாலை சூடின் பூரித்துப் புளகித்துப் போவார்! அமைதி கிட்டிய இடம் குமார வயலூர்!

ஆற்றிய திருப்பணிகள் நூற்றுக்கும் மேலன. அருளிய நூல்கள் அறுபதுக்கும் மேல். செய்த விரிவுரைகள் ஏராளம், பண்ணிய நூல்களோ பேராளம். பெற்ற **பட்டங்கள்** பலப்பல. திருப்புகழ் ஜோதி (சிவானந்த சுவாமிகள்), சரஸ்வதி கடாக்ஷாம் ருதம் (காஞ்சித் தவமுனிவர்), ஷட்பதானந்தர் (அகோபில ஜீயர்), அமுத மொழிக் கொண்டல் (தருமை ஆதீனம்), திருப் பணிச் சக்கரவர்த்தி (பவானி திருமுறைக் கழகம்), திருப்பணிச் சரபம்; சொற்பொழிவு வள்ளல் (வேலூர் சண்முகனடியார் சங்கம்), ப்ரவசன சாம்ராட்; திருமுருக (மதுரைத் திருப்புகழ் சபை 8-4-1980இல்) இசைப் பேரறிஞர் (சென்னைத் தமிழிசை மன்றம்), கலைமாமணி (தமிழ்நாடு இயலிசை மன்றம்), டாக்டர் பட்டம் (அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 86இல்). 81வது பிறந்த நாளில் சொந்த ஊரில் வெங்கலச் சிலை திறப்பு விழா.

எழுத்துப் பணி : 1935 யுவ வருடம் தைப்பூச நன்னாளில் வடலூரில் பிள்ளையார் சுழி இடப்பட்டது. கைத்தலம் நிறை கனி...க்கு உரை வரைந்தார். தாது வருடம் சித்திரைத் திங்கள் முதல் 'திருப்புகழ் அமிர்தம்' திங்கள் இதழ் வெளிவந்தது, சார் வரி ஆண்டு பங்குனியுடன் 2ம் ஆண்டு நிறைவு; பிலவ சித்திரை

7-5-1961இல் வெள்ளிவிழா மலர். திருப்புகழ் அமிர்தம் அச்சகமும் இயங்கிற்று. உறுதுணையானோர் அண்ணார், மேலாளர் ஆர். ஜெயராம ஐயர், அச்சக அன்பர் கோதண்டபாணி, நெல்லை வீ சங்கரன் பிள்ளை போன்றார்.

சீடர்கள் சிலர்: தஞ்சை முருகன் ஆஸ்ரமம் கோவிந்தசாமி, பவானி மு. கண்ணப்பர், தஞ்சை. து ராஜராஜேஸ்வரன் பிள்ளை, எம். கிருஷ்ணன், ஐ.ஏ.எஸ், எம். வள்ளிநாயகம், ஆறுமுகம், ஐ.ஏ.எஸ், நீதிபதி கடலூர் எஸ்.கே. சௌந்தர் ராசன், கருவூர் கோவிந்தராசன். இவர் பற்றி எம்.பில். ஆய்வு செய்தவர் பேரா. ச. முருகானந்தம். வானதி நூல்களை வெளியிடும் பணியர். பாலாற்றங்கரை பயந்த பெருமகனாரின் **முகவரி:** 89, சிங்கண்ணச்செட்டித் தெரு, சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2.

**புலவர் கீரன்** : (வைத்தியநாத சுவாமி) 1935. மயிலாடுதுறை மருங்கே திருஇந்தளூர். வீரராகவ அய்யர்: அலர்மேலு அம்மாள். மயிலாடுதுறைப் பள்ளியில் இறுதி வகுப்பு; தருமபுரம் பல்கலைக் கல்லூரியில் புலவர் படிப்பு. 51இல் மயிலாடுதுறையில் ஒரு விழாவில் சில இலக்கியக் குற்றங்களை எடுத்து மொழிந்தது கண்டு, பழங்கால நக்கீரன் போல் பேசுகிறார் எனப் பாராட்டி நாகர்கோவில் ஆறுமுக நாவலர் அளித்த சிறப்புப் பெயரே 'கீரன்.'

தட்டெழுத்து சுருக்கெழுத்து முடித்து பொதுப்பணித் துறையில் பணியேற்ற இவரை முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் தமிழ்-பயிலத் தூண்டவே தமிழ் பயில வந்தார். ஆங்கிலம் கிரேக்க இலக்கியமெல்லாம் பயின்றார். தனித்த முறையில் ஊக்கியவர் ஜனார்த்தனம் பிள்ளை.

நிறையப் படித்தார், நிரம்ப மனப்பாடம் பண்ணினார். ஒப்புமைப் பகுதிகளை உற்றறிந்தார். 15 ஆண்டுகள் கம்பன் வில்லி குறள் கந்தபுராணம் முறையாகப்பயின்றார்-அயின்றார். காலையில் ஒரு மணி நேரம் பாராயணம் செய்வதன் மூலம் மனப்பாடம் செய்து கொண்டார். முன்பின் இணைப்புகளில் முனைந்தார்.

சிலம்புச் செல்வரின் தமிழரசுக் கழகப் பேச்சாளராக இருந்து, 'செங்கோல்' வார ஏட்டின் துணையாசிரியராகச் சிறந்து இலக்கியப் பேச்சாளராக உயர்ந்தார். பின் சீரிய சமயப் பொழிவாளராக ஓங்கினார்.

புகழ் பரவப் பரவ எல்லா நிகழ்ச்சிகளையும் செம்மை ஆக்கத்தோடு செய்வது, உரையாற்ற ஊக்கத்தோடு போவது, எப்போதுமே ஆயத்தங்கள் செய்தே மேடை ஏறுவது, இருந்த இடத்தில் இருந்தே இராவணன், வாலி, வீடணன், கர்ணன், துரியன் போன்றார் போன்று குரல் மாறுபாட்டால் நடித்துக் காட்டுவது, கொச்சைத் தமிழ் தவிர்த்து ஏறும் தமிழால் உரை யாற்றுவது; முதலில் கருத்தை மொழிந்து, பாடலைக் கூறிப் பின் விளக்குவது, மும்முறை சொல்வது, ஒடித்து ஒடித்து, மடித்து மடித்துச் சொல்லும், ஏற்ற இறக்கம் தந்து இயம்புவது போன்றன இவர் தனித்துவங்களாம். வாரியாரின் பொழிவுக்கு இசைப்பா ஆதார சுருதியென்றால், கீரனின் பொழிவுக்கு அவரது அபிநய நடிப்பு துடிப்பாகும்.

சிறு வயது முதல் எதிர் வீட்டில் வதிந்து இவருடன் பயின்ற பள்ளித் தலைமை ஆசிரியை செல்ல பாப்பாவைக் கலப்புமணம் செய்து கொண்டார். மகன் 2, மகள் 4. இதுவரை திருத்தவத் துறை (லால்குடி)யில் உறைந்தவர், இதுபோது சென்னையில் வாழ்கிறார். சங்கத் தமிழையும் புராணங்களையும் முறை யாகப் பயின்று பின்னிப் பிணைத்து மொழிவது இவர் தனிப் பாங்காகும். இளைஞர்களையும் சமயப் பொழிவில் ஈடுபடச் செய்யும் ஈர்ப்பாளர். பெருமிதமும் துணிவும் மிக்கவர். கர கரத்த கணீர் குரல்; மணிமணியான வாக்கு.

20 ஆண்டுகளாக சமயச் சொற் பெருக்காற்றும் இவர், எழுத்திலும் பேச்சு போலே ஏற்றமும் எழிலும் பெற்றொளிர் கிறார். நூல்கள் : இறையுணர்வு: மனிதனாகப் பிறப்பேன், வைரக்கல், சிரிப்பும் சிந்தனையும். (அல்லி நிலையம். 10. நான் காவது குறுக்குத் தெரு, யுனைட்டெட் இந்தியா காலனி, சென்னை-24.) இவரது அணுகுமுறையும் அறைந்திடும் அழகும், அனுபவிக்கச் செய்யும் லாவகமும் தனி வேகத்தோடும் விறு விறுப்புடனும் ஆணித்தரமாக விரித்துரைக்கும் வகை வளம் சான்றது. **முகவரி**: பிளாட் எண் 876. கலைஞர் கருணாநிதி நகர், M. இராமசாமி சாலை, சென்னை-78.

வீணா கானத்தோடு கிருஷ்ணகானம் பொழிந்து தேன் மழையில் திளைக்க வைத்த மறைந்த நீடாமங்கலம் கிருஷ்ண மூர்த்தி பாகவதரை நினைக்காது இருக்க முடியாது. பேரா. சொ. வன்மீகநாதன், சேலம் பகுதியில் சிறந்தொளிரும் தமிழாசிரியர்கள். ச. வேங்கடராமன், சௌந்தரராஜன் போன் றாரின் விரிவுரைச் சாதனை குறிப்பிடத்தக்கது.

**சொர்ண காளீசுவரன் :** 1927. காளையார்கோவில் திருவையாறு அரசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். திருவண்ணாமலை ஆதீனப் புலவர். சமயச் சொற்பொழிவாற்றுவதில் சதுரர். பழம் பனுவல்கள் பலவற்றைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்காகப் பதிப்பித்துள்ளார். எழுதிய நூல்கள் ஏராளம், பெற்ற பட்டங்களும் பேராளம். தொடருரைத் தோன்றல், ஆழ்ந்த புலமையர். அருமை அன்பினர். **முகவரி :** திருவையாறு.

**அரு. சோமசுந்தரன்** 14-8-1936. புதுவயல், சுவிகாரம் சென்றது தேவகோட்டை. கவிதைத் துறையில் கொடுமுடி கண்டு முடிமணியாக அமைபவர். 70 நூல்கள் யாத்தவர். உலகு முழுதும் பயணம் புரிந்தவர். வாரியாரால் வேட்கை மீதூர்ந்து விரிவுரையில் இறங்கியவர். மகாபாரதம் அற்புதக் கதை அமைப்பும் அரிய நீதிகளும் கொண்டது. எனவே இவரை ஈர்த்துக்கொண்டது. இராமாயணம், பாகவதம், விநாயக புராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணங்களோடு, தமிழாசிரியர் ஆதலினால், சிலப்பதிகாரத்தையும் இணைத்துக் கொண்டார் தம் தொடருரைப் பட்டியலில். கவிஞர்கோ, பொற்கிழிக் கவிஞர், பல்துறைச் செந்நாப் பாவலர், காசிஸ்ரீ எனப் பல பட்டங்கள் பெற்ற இவர், 83-இல் ராமேசுவரம் முதல் காசிவரை நடைப்பயணம் செய்தவர். எம். ஏ. பி. டி. பயின்ற தமிழாசிரியர் தலைமையாசிரியர். **முகவரி:** பொன் முடிப் பதிப்பகம். 123, முத்துப்பட்டணம் 3-ஆம் தெரு, காரைக்குடி.

**தமிழ்ச்சேரனார்** தமிழாசிரியராகத் திகழ்ந்து விரிவுரைத் துறைக்கே வந்துவிட்டவர். இலக்கியத் தோய்வும் சமய இலக்கியத் திளைப்பும் மிக்கவர். ஆதலினால் தெவிட்டாத தெள்ளமுதாகத் தந்திடும் புகழ் மிக்கவர். **முகவரி** அம்மாப்பேட்டை, தஞ்சை மாவட்டம்.

**தண்டமிழ்க் கொண்டல் :** 20 ஆண்டுகளாகத் தமிழகமெங்கணும் விரிவுரை பொழியும் மேகம்! இலக்கியமும் பக்தியும் இவர்க்கு இரு விழிகள். கந்தபுராணம் சொல்வதில் கசிந்துருகிக் கண்ணீர் மல்குவார். கம்பன் வில்லி சேக்கிழார் பரஞ்சோதியார் படைப்புக்களையும் இரு செவி குளிர இழைத்தளிக்கும் ஏந்தல். (பார்க்க 676)

**சொ. சொ. மீ. சுந்தரம்** வித்தியாசமான முறையில் விரிவுரை நிகழ்த்தும் வலவர். இத்துறையில் உய்த்தவர், சிவநெறிச்

செல்வர். மதுரை நீ. சீனிவாசம்பிள்ளை. கதையுரையாக இன்றி, திருவாசகம் திருமந்திரம் போன்றன பிலிற்றும் ஞானவுரையாக, பாடல் விளக்கும் கருத்துரையாக்கி அளிப்பவர். இதிகாசம் புராணம் அன்றித் திருவெம்பாவை குற்றாலக் குறவஞ்சியும் குற்றால அருவிபோல் கொட்டுபவர். வாரந்தோறும் மதுரைப் பன்னிரு திருமுறை மன்றில், செவ்வாய்தோறும் தெற்காடி வீதியில் திருமந்திரம்; வடக்கு மாசி வீதி தருமையாதீன மடத்தில் திருவாசகம்; பழநி இலக்கிய மன்றில் முதல் சனி- இப்படிக் குறை மாந்தர் உள்ளங்களிலெல்லாம் இறையுணர்வை நிறைத்து வருகிறார். விரிவுரை வித்தகர், திருமந்திரச் சொல் மணி, சொல்லோவியர் என்ற பட்டங்கள். முதல் உரை: மதுரைப் பன்னிரு திருமுறை மன்றில் 68-இல் (காண்க 621).

**துரை நமச்சிவாயம்** சமயப் பணியும் செந்தமிழ்த் தொண்டும் சிறக்க ஆற்றுபவர். முத்தமிழ்க் காவலர் முதல் உரையினைத் தொடக்கிவைத்து ஆசி வழங்கினார். பெரிய புராணப் பேருரைக்கே தம்மை ஒப்படைத்துள்ளார். நற்றமிழ் நாயகர் (மலேயா ராமதாசர்), பெரியபுராணப் பெருநாவலர் - பட்டங்கள், **முகவரி**: முதுநிலை ஆசிரியர். அரசினர் மேனிலைப் பள்ளி, மண்ணச்சநல்லூர். திருச்சி மாவட்டம்.

**பழ. மணிவண்ணன்** ''உய்தற் பொருட்டு செய்தற்கரிய தொண்டாற்றி எய்தற்கரிய இறையருளை மக்கள் துய்த்து மன அமைதி பெறவேண்டும்'' எனும் விடுதலறியா விருப்பினை நிலை பெறக் கொண்டது இவர் விரிவுரை. ராமாயணம், பாரதம், பெரிய, திருவிளையாடற் புராணங்களோடு சிலம்பும் பெருங் கதையும் தொடர் சொற்பொழிவாக்கிச் சொக்க வைக்கிறார். சுகமளிக்கும் வண்ணம் சொற்களைக் கொட்டும் சொல்லருவி. **முகவரி**: பேரூர் ஆதீனம், கோவை-10.

**கோ. சாரங்கபாணி** 100 க்கும் மேலான தொடர் உரைகள் நோற்றவர். வில்லி கம்பன் சேக்கிழாரில் விளையாடுபவர். இலக்கியச் சுவையோடு இசை, நகை, உவகைச் சுவைகள் ஊடாடி வர நம்மையெல்லாம் ஆடாது அசையாது அமர்த்திடும் சமர்த்தர். கவிதைக் கொற்றத்தில் கொலுவிருக்கும் இவர் உரைநடையிலும் பவனி வரும் ஒண்மை கண்டு களிக்கலாம், அருட்கதை நம்பி, இயலிசைச் செல்வர், விரிவுரை வேந்தர், முத்தமிழ் வித்தகர், நடிப்பியல் புலவர், நகைச்சுவை அரசு, உபந்யாசச் சிரோன்மணி என்பன விருதுகள். இந்தியத் தமிழ் மாநிலங்களில் எல்லாம் உரைப்பறை ஒச்சி வருபவர். 'தவத்திரு அடிகளார் அரவணைப்பும் தமிழ்த்திரு வாரியார் ஆதரிப்பும்

தம்மை வளர்க்கும் பராமரிப்பு' என்று இயம்பும் இவர் **முகவரி** காரைக்கால். என்ன தயங்குகிறீர்களா? நாடறிந்தவர்! இது போதும்.

**இரா. செல்வகணபதி** *10-1-1939.* நூற்றுக்கும் மேலான தொடர்ப் பொழிவுகள் சுவையும் பயனும் சொட்ட ஆற்றியவர். சமய இலக்கிய ஆழ அகலங் கண்டவர். மாற்றுக் குறையாது மாத்தமிழ் உரைத்திடும் மேலவர். வேறுபாடு கடந்து மனித நேயம் கற்பிப்பதால் பெரிய புராணப் பிரியர். அ. ஞானசம்பந் தரின் பெரிய புராணப் பொழிவு கேட்டுக் கிளர்ந்தெழுந்தவர். சைவம் ஓர் அறிமுகம், தமிழகக் கலைகளும் பண்பாடும் போன் றன படைத்துளார். அடுக்கடுக்காகக் கருத்துக்கள் அடுக்கிவர மிடுக்குடன் பேசும் மென்மையர். சொல்லும் கருத்தும் நான் முந்தி நீ முந்தி என உவந்து உவப்பளிக்கும். இலங்கைக்கும் சென்று சமயம் பரப்பியவர். சைவச் செங்கதிர், முத்தமிழ் அரசு, செந்தமிழ் வாரிதி, சைவத் தமிழ்மணி எனப் போற்றப் பெற்றுப் பொலிபவர். முனைவர் பட்டம் பெற்றவர். தருமை யாதீனத் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர். தருமை தந்த தமிழ்க் கதிராம் இவர் **முகவரி** *:* 6. டபீர் தெரு, மயிலாடுதுறை 609 001.

**சுகி சிவம்** சுகி சுப்பிரமணியனின் செல்வர். வாரியாரின் பக்தர், புலவர் கீரனின் பரம ரசிகர். காஞ்சித் தவமுனிவரின் ஆசி, குன்றக்குடி தமிழ் முனிவரின் அன்பு, சிதம்பரம் சுவாமி நாதனிடம் பெற்ற ஊற்றம், இரா. இராதா கிருட்டிணனின் தூண்டல் இவற்றால் ஏற்றமுற்று வருவதாக எண்ணுபவர். பாரதி இளைஞர் சங்கமும் இராமலிங்கர் பணி மன்றமும் ஊக்கம் தந்தன. கி. வா. ஜ. பொழிவு கேட்டுக் கிளர்ந்தவர். முன்னம் பேச்சாளர்; 75 இல் வழக்குரைஞர் ஆனதும் முழுக்க முழுக்க விரிவுரையே தொழிலாகவும் தொண்டாகவும் ஆக்கிக் கொண்டவர். ஒய்வு ஒழிவின்றி மாநிலமெங்கணும் பிற தமிழ் வழங்கு பகுதிகளிலும் சக்கைப் போடுபோட்டு வருபவர். 'ஓர் ஆன்மாவுக்குக் கந்தபுராணம், ஒவ்வொரு மனிதனுக்கும் பெரிய புராணம், ஒவ்வொரு குடும்பத்துக்கும் கம்பராமாயணம், ஒவ் வொரு நாட்டுக்கும் மகாபாரதம்' என வகைப்படுத்தும் இவர் அபிராமி அந்தாதியில் ஆழ்ந்து தோய்ந்தவர். உருகி உரைப் பார்; உருக வைப்பார். ஒருமுறை 78 வயது பெரியவர் கேட்டுப் பரவசமுற்றுப் பாதந்தொட்டு வணங்கினார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! **முகவரி** : 5. காளப்பக் கவுண்டர் தெரு, காட்டூர், கோவை-9.

**கல்யாணராமன் :** 12-6 59. திருச்சி திருவரங்கம். கைலாசம்-அனந்த லட்சுமி அம்மாள்.தேசியக்கல்லூரியில் பி.எசி. கணிதம். முதல் பொழிவு புத்தூர் பெருமாள் கோயிலில் 79 இல்; 7 ஆண்டுகளாகக் கம்பராமாயணம், வில்லிபாரதம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம் எல்லா வயதினரும் கேட்டுக் கிறுகிறுக்குமாறு விறுவிறுப்பாக விரிவுரையாற்றி வருகிறார். 27 வயதிலேயே என்னமாய் வெளுத்துக் கட்டு கிறார். Exponent of Epics என்போம். வாகீச கலாநிதி, சொற் புயல், வில்லிபாரத கேசரி, கம்பராமாயணச் செம்மல் - பட் டங்கள். தருமையாதீனம் பொன்னாடை போர்த்திச் சிறப் பித்தது. **முகவரி :** ஸ்ரீரங்கம், திருச்சி-6.

**நாகை முகுந்தன் :** வங்கியில் வேலை பார்த்துக்கொண்டு விரிவுரைத் தொண்டாற்றுபவர். அறிவாற்றல், கவித்துவம், நயமுணர்த்தல், நடிப்புத்திறன் அனைத்தும் பொருந்த, ராமாயணம், பாரதம், அபிராமி அந்தாதி மூன்றும் பொழிந்து முறுக்கேற்றுவார். காஞ்சிப் பெரியவர் தாமரை மணிமாலை அளித்து அருளினார். **முகவரி :** கரூர் வைசியர் வங்கி, தாம்பரம்.

ஆண்களோடு பெண்களும் அனைத்து வகையிலும் போட்டி யிடும் இந்த நூற்றாண்டில், விரிவுரையிலும் வெளுத்துக் கட்டும் வீராங்கனைகளின் வரிசையில் வருபவர்கள் வருமாறு:

**சாயிமாதா சிவ பிருந்தா தேவி :** பல்லாண்டுகளாக, சமயத் தமிழ் வளர்த்துப் புரந்து வரும் தெய்வத்திருவினார். நல்ல தமிழில் ''அலைமகளும் கலைமகளும்'' ''புராணமும் புதுமை யும்'' ''மெய்ஞ்ஞான ரகசியம், ''மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ்''என்றெல்லாம் தமிழ் வளமையும் வனப்பும் மிக விரிவுரை யாற்றும் பரிவினார். வெளிநாடுகளுக்கும் சென்று சைவத்தின் செழுமையும் செந்தமிழ் இலக்கியச் சீர்மையும் பரப்பி வருபவர். ஆண்களில் தெய்வீகம் சான்ற சமயப் பணி யாளர் பலர் உளர்; ஆனால் மகளிரில் தெய்வீகம் திகழச் சமயப் பணியாற்றுவோர் குறைவு, மிக மிகக் குறைவு. அத்தி பூத்தது போல் அருந்தமிழில் அமைபவர் இவர். விரிவுரை வீறும் வாகான வாக்கு வளமும், திருநெறிய தமிழ் நலமும் தெய்வீக மும் சிறந்த வணக்கத்துக்குரிய சிவத்திருவினார். நாடறிந்த - நல்லோர் போற்றும்-மதிப்புக்கும் துதிப்புக்கும் உரிய இவர், திலகவதியார் திருவருளாதீனம் தோற்றி தெய்வத்தமிழ் புரந்து வருகிறார். தற்காலத் திலகவதியாராகவே திகழ்ந்திடும் தாயின் திருக்கோயில் திகழுமிடம் புதுகை. **முகவரி :** திலகவதியார் திருவருளாதீனம். மஞ்சுவாடி. புதுக்கோட்டை 622001. (2342)

**சரசுவதி ராமநாதன்:** *19-11-1939.* தேவகோட்டை. பள்ளத்தூர் சீதாலட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர். தொடர் உரைகளை-விரிவுரைகளை இசையுடன் கூட்டிக் குழைத்தளித்துத் தரும் 'வாணி'. முதல் பொழிவு 72இல் பொன் விஜயராகவப் பெருமாள் கோயில் ராமாயண உரை. பன்னூலாசிரியர், பன்மொழிப் புலமையர். 'கம்பன் அடிப்பொடியின் கடைப்பொடி, தமிழ்க் கடலின் (ராய. சொ) ஒரு துளி' எனத் தம்மைக் கருதும் இவர் இரா. இராதா கிருட்டிணனின் தூண்டுதலால் இத்துறையில் ஊன்றியவர். இலங்கை மலேசியா சிங்கப்பூர் இந்திய மாநிலங்களில் இசைப் பொழிவாற்றி வாகைசூடி வருபவர். பாரதம், கந்த-பெரிய புராணங்கள், திருவெம்பாவை விரிவுரைகள் செய்பவர்; மிகுந்த ஈடுபாடு கம்பராமாயணத்தில். கணீரெனும் மணிக்குரல், கனிந்த ஞானக் குழைவு. ஞானப்பனுவல்களோடு தேம்பாவணியையும் தேர்ந்தெடுத்துத் தொடருரையாற்றுகிறார்.

பேச்சோடு எழுத்திலும் பேர் சொல்லி வருகிறார். திருவெம்பாவை எளியவுரை, நாடு போற்றும் நங்கை நல்லாள், கம்பன் கலைக் கோயிலுக்கோர் கைவிளக்கு, கம்பன் அன்றும் இன்றும் என்றும், புகழொடும் ஓங்கி நிற்பான், கம்பனின் வண்ணங்கள். பட்டங்கள்: செந்தமிழ்த் திலகம், காவியக் கலை மாமணி, சொல்லின் செல்வி, இன்னிசைச் செல்வி, கம்ப ராமாயண நவரசத்திலகம். 'கம்பராமாயணத்திலும் கந்த புராணத்திலும் அவல வீரர்கள்' என்றாய்ந்து 80இல் டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். செட்டிநாட்டின் அமுதத் தமிழிசை யருவி, செந்தமிழ்க் கலைவாணி என்றேத்தப் பெறும் இவரின் இனிய கணவர் ராமநாதரும் ஒரு புகழ் பூத்த நகைச்சுவைப் பொழிவாளர். **முகவரி:** பள்ளத்தூர்- *623 107.*

**இளம்பிறை மணிமாறன்:** தலைசிறந்த தமிழ்ப் பொழிவாளர். உரமான குரல், ஊற்றமான ஆய்வு. முதல் விரிவுரை சிவகாசியில். இராமாயணம், கந்தபுராணம், ஸ்ரீமத் பாகவதம், சிலம்பில் உரையாற்றும் ஒண்மையர். இலங்கை மலேசியா சிங்கப்பூரிலும் விரிவுரை செய்து வாகை சூடியவர். மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் தொடர்ந்து 24 மணி நேரம் உரையாற்றி உலக சாதனை புரிந்தவர். சொல்லின் செல்வி (புதுக்கோட்டை புவனேசுவரி அதிட்டானம்), சிலம்புச் செல்வி (ம. பொ. சி.), நாவுக்கரசி, நாநலம் மிக்க நற்றமிழ்ச் செல்வி, தமிழ் மழை என்றெல்லாம் ஏத்தப் பெறும் இவர் ஓர் ஆங்கிலப் பேராசிரியை! 'இந்தியாவில் பெண் எழுத்தாளர்களின் ஆங்கில

நாவல்கள்' டாக்டர் பட்டத் தலைப்பு. **முகவரி** மகளிர் கல்லூரி, தூத்துக்குடி, வ. உ. சி. மாவட்டம்.

**குருவம்மாள்:** காந்திகிராமம் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியை. கந்தபுராணம், மகாபாரதம், கம்பராமாயணம், பெரிய புராணம், தேவி பாகவதம், சிலம்புபற்றிச் சிறக்க உரையாற்றும் சீர்மையர். உள்ளார்ந்த தெளிவுடன் உணர்த்தும் உரத்தர். திரைப்படக் கலை நாடகக் கலைப் பயிற்சியும் பெற்றவராதலின், பாத்திரங்களே பேசுவது போன்ற பிரம்மை தோன்றும்; கண்ணகி வழக்குரையின்போது கண்ணகியாகவே ஆகிவிடுவார். முதல் தொடர் பாலக்காட்டில். ஆன்மீகவுணர்வுகளை அனாயாசமாக முகில் போல் பொழிவார். பெருமைக்குரிய பெண்ணரசி; தெள்ளுதமிழ்க் கலைவாணி. **முகவரி:** சின்னாளப்பட்டி (வழி) திண்டுக்கல், அண்ணா மாவட்டம்.

**இரா. ருக்மணி:** கடந்த 20 ஆண்டுகளாக விரிவுரை நிகழ்த்தி வருபவர். முதல் தொடர் திருவண்ணாமலையில்-கந்தபுராணப் பொழிவு. அன்னை தமிழின் மேன்மையும் ஆன்மீக உணர்வின் செழுமையும் அணைந்து வரும், உணர்வும் உருக்கமும் மிடைந்து வரும் இவர் பொழிவில். வற்றா அருவி போல் சொற்கள் வந்து விழும். சொற் செல்வி, சொற்பொழிவுச் சுடரொளி எனப் பட்டம் பல சூடப்பெற்ற இவர் பணியாற்றுவது: துணைத் தலைமையாசிரியை, அரசினர் மகளிர் மேனிலைப்பள்ளி, சேலம்.

இரா. காந்திமதி, சீதாலட்சுமி, இந்திரா சோமசுந்தரம், இராஜேசுவரி நடராசன், ஜெயகுமாரி பாஸ்கரன், திருமதி. ப. நீலா போன்றார் விரிவுரைகள் வல்ல மகளிர் வரிசையில் வீறு நடை போடுகின்றனர்,

மெத்த தமிழ்ப் படித்து மேனிலையில் உள்ளோரின் மேலான பணிகளைவிட, பள்ளி கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்களின் போதனை பேச்சுக்களைக் காட்டிலும், எளிதே இனிதே பாமரரும் புரிந்து போற்றும் வண்ணம் சமய அறிவும் இலக்கிய உணர்வும் அளித்து வருகின்றனர். பக்தி இலக்கியத்தைப் பொது மக்களிடம் கொண்டு சென்று கொடுத்த பெருமை இவர்களையே சாரும். சமயமும் தமிழும் பரப்பும் பரவும் செம்மல்களாக இவர்களே அமைகின்றனர். அரைமணி நேரம் ஆசிரியர்களின் பேச்சைக் கேட்காது 'போர்' எனப் புகலும் மாணவரும் பிறரும், மூன்றுமணி நேரம் சொன்னாலும் அலுப்பு சலிப்பின்றிக் கேட்டு மகிழ்கின்றனரே! ஒருமணி நேரப் பொழிவில் அறுபது நூல்கள் பயின்ற அறிவு பெறுகின்றனரே! அத்தனையும் அமுத வெள்ளமன்றோ!

## 30. அகராதிக் கலை

தமிழ் அகராதிக் கலையின் **தந்தை** வீரமாமுனிவர்; தற்காலத் தமிழ் அகராதியின் **முன்னோடி** அவரது சதுரகராதியே (1819). தமிழ் அகராதியியலின் தக்கார் மூவர்: 'தமிழ் அகராதிக் **கலை**' தந்த **சுந்தர சண்முகனார்** (பக் 792); முப்ப தாண்டுகளாகத் தமிழகராதிக்கே தம்மை அர்ப்பணித்த ஈரோடு **சதாசிவம்**; தமிழ் அகராதி **இயல்**, அளித்த **ஜெயதேவன்.**

ச. வே. சுப்பிரமணியம் Papers on Tamil Studies என்ற நூலில் எழுதிய கட்டுரையும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக மணிவிழா மலரில் (82) மு. ச. சிவம் எழுதிய தமிழில் அகராதிகள் கட்டுரையும் குறிப்பிடத்தக்கன. அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறை டாக்டர் க. பாலசுப்பிர மணியம் அவர்களும் இத்துறையில் ஆக்கப்பணி ஆற்றி வரு கிறார்.

வகைகள் : ஒரு மொழி அகராதி (தமிழ்-தமிழ்), இரு மொழி அகராதி (தமிழ்-ஆங்கிலம். தமிழ்-தமிழ்-ஆங்கிலம்) ஒரு பொருட் பன்மொழி அகராதி (Synonyms), எதிர்ப்பத அகராதி (Antonyms) இலக்கிய அகராதி, புலவர் அகராதி, அடுக்கு மொழி அகராதி, பழமொழி அகராதி, உவமை அகராதி, சிலேடை அகராதி, எதுகை அகராதி, கலைச் சொல் அகராதி, ஆட்சிச் சொல் அகராதி. சட்ட அகராதி, அறிவியல் அகராதி, மருத்துவ அகராதி, சிறப்புப் பெயரகராதி, மூலிகை அகராதி, வட்டாரச் சொல் அகராதி, தொகை அகராதி எனப் பல்வகையன.

இதுவரை ஏறத்தாழ இரு நூறு அகராதிகள் தமிழில் எழுந் துள. யாழ்ப்பாண சந்திரசேகர பண்டிதர் தொகுத்த 'யாழ்ப் பாண அகராதி'யே (1938) தமிழில் தோன்றிய **முதல் பேரகராதி; 58500** சொற்கள் கொண்டது; மானுவல் தமிழ் அகராதி, மனிப்பாய் அகராதி என்றும் அழைக்கப் பெறும்.

**சொல்லடைவுகள் (Index)** எல்லாம் சிறு அகராதிகளே-குட்டி அகராதிகள்தாம். இதில் முதன்மை வைப்பவர் உ.வே.சா; ஒவ்வொரு நூலின் இறுதியிலும் 'அரும்பொருள் அகராதி' அமைத்துளார் (காண்க சொல்லடைவு). கழகமும் தம் நூல் கட்குத் தவறாமல் தந்துளது.

**ந. சி. கந்தையா பிள்ளை** தமிழ், தமிழகத்தின் பெருமையை எடுத்துணர்த்தியது போன்றே, தமிழ் இலக்கிய அகராதி, தமிழ்ப்புலவர் அகராதி, காலக் குறிப்பகராதி மூன்றும் மும் மணிகள்-முக்கனிகள். தந்த காலத்தைக் கருத்தில் கொண்டு போற்றல் வேண்டும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் **கழகம்** கணிசமான அகராதிப் பணி ஆற்றி முதன்மை பெறுகிறது. கழகத் தமிழ்க் கையகராதி, கழகத் தமிழ் அகராதி, தொகையகராதி, சிறப்புப் பெயரக ராதி; தமிழ்ப் பாதுகாப்புக் கழக வெளியீடாக ஆட்சிச் சொல் அகரவரிசை, உவமை யகர வரிசை. பழமொழி அகரவரிசை, மரபுத் தொடர் அகர வரிசை, மக்கட்பெயர் அகரவரிசை, சிலேடை அகரவரிசை, வடசொற்றமிழ் அகரவரிசை, இல்லப் பெயர் அகரவரிசை புலவர் இரா இளங்குமரனின் உரையாசிரி யர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்க அகராதி.

பாலூர் கண்ணப்ப முதலியாரும், மு. சண்முகம் பிள்ளை யும் இலக்கியம் பற்றிய அகராதிகள் தொகுத்துளர். கி. ராஜ நாராயணனின் வட்டார வழக்குச் சொல்லகராதி; மு. மு. உவைசின் தமிழிலக்கிய அறபுச் சொல்லகராதி; மு கோவிந்த சாமியின் திருக்குறள் பொருளடைவு.

கார்த்திகேயினி புதுமுறை அகராதி (1949) ன-ண, ர-ற, ல-ள-ழ மூன்று இன எழுத்துக்களின் வேறுபாடுகளை விளக்கி அமையும் அரிய அகராதி. தொகுப்பர் எஸ். நடராசன். 17ஆம் நூற்றாண்டில் பிறந்த ‘அகராதி மோனைக்கு அகராதி எதுகை’ இங்கே குறிப்பிடத்தக்கது.

**சில அகராதிகள் :** மேனாட்டவர் - பாதிரியார்கள் தாம் இதில் மிகு நாட்டம் செலுத்தி மிகுதியும் படைத்துளர். தமிழ்-ஆங், தமிழ்-லத்தீன், தமிழ்-ஜெர்மன், தமிழ்-பிரெஞ்சு, தமிழ் போர்ச்சுகீஸ், தமிழ்-உருசியன் போன்றன எண்ணுக. இதனை அடியொற்றித் தமிழ்-இந்தி, தமிழ்-சிங்களம். தமிழ்-மலாய், தமிழ்-வடமொழி, தமிழ்-இந்திய மொழிகள் உருவா யின. பிளின் தொகுத்த பிரெஞ்சு-தமிழ் அகராதி (1831), டுபிஸ் மொசெ திரட்டிய லத்தீன்-தமிழ் அகராதி (1846).

நா. கதிரைவேற் பிள்ளையின் **‘தமிழ்** மொழி அகராதி’, **The Coronation Tamil Dictionary**, ஆனந்த விகடன் அகராதி (1935), அனவரத விநாயகம் பிள்ளையின் மாணவர் தமிழ் அகராதி (1921), மதுரைத் தமிழ்ப் பேரகராதி (1910), செந்

தமிழ் அகராதி, லிப்கோ மாணவர் தமிழ் அகராதி, பவானந்தம் பிள்ளையின் தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி (1925), கோனார் தமிழ்க் கையகராதி, பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேரகராதி (Lexicon) 1936; விசாகப் பெருமாள் ஐயரின் சில சொற் பலபொருள் விளக்கம் (1840).

விசுவநாதபிள்ளை **தமிழ் ஆங்கில** அகராதி (1870), பெப்ரீஷியஸ் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி (1719), ராட்லா தமிழ்-ஆங் அகராதி (1834).

பெர்சீவல் (பாதிரி) **ஆங்கில-தமிழ்** அகராதி (1869), சுவாமி நாதையர் ஆங்-ஆங்-தமிழ் அகராதி, சங்கர் ஆங்-ஆங்-தமிழ் அகராதி, ஸ்ரீமகள் ஆங்-தமிழ் அகராதி, கே. வி. சுப்பையர் ஆங்-தமிழ் அகராதி, கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி. லிப் கோவின் ஆங்-ஆங்-தமிழ், தமிழ்-தமிழ்-ஆங் அகராதிகள்; சென்னைப் பல்கலைக் கழக அ. சிதம்பரநாதரின் ஆங்-தமிழ் அகராதி, எம். வின்சுலோ தமிழ்-ஆங், ஆங்-தமிழ் அகராதி, (1852) The Elite Eng-Eng-Tamil Dictionary.

**தமிழ் X ஆங் அகராதிகள்** 1) தமிழ் அகராதிகளில் பெயர் வினை மட்டுமே பெரும்பாலும் தரப்பெறும்; அதன் தொடர்பான பெயரெச்சம் வினையெச்ச வடிவமோ தொடரோ தரப் பெறுவதில்லை. ஆனால் ஆங்கில அகராதிகளில் அவை கொடுக்கப் பெறுகின்றன; அத்தொடு பெயரே வினையாகவும் வரும் வடிவங்களும் (Water, watering; garden, gardening) தரப்படுகின்றன. 2) நம் அகராதிகளில் இலக்கியச் சொற்கள் மட்டுமே இடம் பெறும். மேனாட்டார் அகராதிகளில் பேச்சுச் சொற்களும் இடம் பெறுகின்றன. 3) நம்மதில் மரபுச் சொற்களோ சொற்றொடர்களோ இடம் பெறுவதில்லை; மேனாட்டவருடையதில் அவை இடம் பெறுகின்றன. பிற நாட்டவர், மொழியினர் தமிழ் கற்க வேண்டுமெனில் மரபுச் சொற்களும் பேச்சு வழக்குகளும் கட்டாயம் வேண்டுமே? (நாம்தாம், நாமும் கற்கமாட்டோம், பிற மொழியாளர்களும் கற்க விடமாட்டோமே!) ஒரு சொல்லின் எல்லா உருவங்களும் காட்டப் பெறவேணடும். 4) தமிழில் எந்த நூலில் எடுத்தாளப் படுகிறது என்பதைக் காட்டுவது கிடையாது. மேலை மொழிகளில் usage கண்டிப்பாகக் குறிக்கப் பெறும். மேற்கோள் கொண்டுதான் உறுதிப்படுத்த ஒல்லும்; எக்காலத்தில் எப்பொருளில் எடுத்தாளப்பட்டது என்ற காலவுணர்வும் காண முடியும். (நமக்குத்தான் காலவுணர்வு பற்றிய சிந்தனை கிஞ்

சிற்றும் கிடையாதே! பின் எப்படி நம் தொகுப்பில் இடம் பெறும்-ஏறும்?) 5) சொற்களுக்கு மட்டும் முக்கியத்துவம் தரு கிறோம், சொற்றொடர்களைப் (idioms) பற்றிச் சற்றும் நினைப்பதில்லை. பிறமொழியாளர் இதற்கு முக்கியம் தரு கின்றனர்.

**நம் குறைகள்:** இப்போதுள்ள தமிழகராதிகள் அனைத்தும் நிகண்டுகளின் ஒரு சிறு பகுதியாக அமையும் ஒரு **சொல்** பல் **பொருட்** பெயர்த் தொகுதிகள்தாம்! தொகை அகராதிகளே! நிகண்டுகள் தாய் எனில், அவற்றின் சேய்களே அகராதிகள்! நிகண்டுகள் (32) யாவும் ஒரு **பொருட்** பன்**மொழி**கட்கே முதன்மை தந்துள. அப்படி இருக்க, சதுரகராதிக்குப் பின், ஒரு முழுமையான ஒரு பொருட் பன்மொழியகராதி உருவாவாதது ஒரு பெருங் குறையே! அதுவன்றோ தமிழின் சொல்வளத்தைக் (Vocabulary) காட்டும்; சொற்கள் நிறைய அறிய அதன் வழி கருத்து வளர்ச்சி நிரம்பப் பெற முடியும்?

உயிர் மெய் எழுத்தெனின் முதலில் மெய்யை உச்சரித்தே உயிருக்கு வருகிறோம். எனவே வரிசைப்படுத்தும்போது மெய் யெழுத்தின் பின்பே உயிரெழுத்தை அடுக்கி வர வேணும். அகராதித் துறை, மொழியியலின் ஒரு பகுதியாகக் கருதப்பெறு கிறது. எனவே மொழியியலின் வளர்ந்த நிலையில் இனி அதன் அடிப்படையில்தான் அகராதி தொகுக்க வேணும். சொற்களை யெல்லாம் ஒலி, ஒலியன், உருபு உருபன்களாக உடைத்தபின், முன்னிருந்த பழம் போக்கை மாற்றிப் புதுக்கி வர வேணும். சொற்களை விளக்க சொற்களே தருகிறோம்; சொற்றொடர் கள் மேற்கோள்கள் மூலமும் விளக்கிட வேணும்.

அறிவியல் தமிழ் வளருதல் வேண்டும்; அதற்கேற்ப அறிவியற் பொருளை விளக்கும் சொற்கள், வாழ்வின் தேவை யனைத்தையும் ஈடுகட்டும் வகையில் இணைத்தல் வேண்டும்.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத் தமிழ் என்கிறோம், இந்த நீண்ட நெடிய வரலாறு படைத்த வண்டமிழுக்கு ஒரு பெரும் வரலாற்றகராதி வேண்டும். (கேரள பல்கலைக் கழகம் A Historical Dictionary of Tamil Language உருவாக்கியுளது.) இது கடும் உழைப்பினால் உருவாகக் கூடியது. நூற்றாண்டு வாரியாக சொற்களைத் தொகுத்து மேற்செல்ல வேணும் பல்லாண்டின் முன்னம் தெ. பொ. மீ. தமிழக அரசினைப் பல இலக்கம் உருபாக்கள் ஒதுக்க வேண்டியுள்ளார்.

ஒரே அகராதியில் வாழ்வின் அனைத்துத் துறைச் சொற்களையும் இணைக்க வேண்டுவது போன்றே, ஒவ்வொரு துறையின் சிறு பிரிவு பொருளுக்கெல்லாம் அகராதி தனித்தனியே தொகுத்தல் வேண்டும். அதுபோல் ஒவ்வொரு இன்றியமையா உலக—இந்திய மொழிகளின் அகராதிகளும் தமிழில் பெயர்க்கப்படல் வேண்டும்; இது பிறமொழி நூல்களைப் பெயர்க்கப் பெரிதும் உதவும்.

வரவர அகராதி நோக்கும் ஆர்வம் குறைந்து வருகிறது; அதனைப் பயன்படுத்தும் முறையும் மறைந்துவருகிறது. எப்படி அகராதியைப் பயன்படுத்தி அறிவு பெறுவது என்பதே பலருக்கும் - மாணவர்கட்கும் தெரியாது போகிறது. இப்போது தான் எதற்கெடுத்தாலும் உரை நூல்களும் 'நோட்சும்' வருவதால், அகராதியைத் தொடவேண்டிய தேவையே இல்லாது போகிறது. இன்னும் கொஞ்ச நாளில் அகராதி என்றால் என்ன? ஏன்? எனக் கேட்கும் காலம் வந்தாலும் வரும்!

ஒரு மொழியின் சொல் வளம், பொருள் நலம், பண்பாட்டின் பாங்கு, அவ்வினத்தின் பழக்கவழக்கம் அனைத்தையும் ஒருங்கே தொகுத்து ஒருமுகப்படுத்தி உணர்த்துவதே அகராதி தான்! ஒரு மொழியின் திறத்தையே அளவிட்டறியும் அளவுகோலே அகரமுதலிதான்! ஒருவர் சொல்வளமும் அறிவு நலமும் பெற அடிப்படையாவதும் அகராதியே! தமிழகத்தின் பல்கலைக் கழகங்களிலெல்லாம் **அகராதித் துறை அமைதல் வேண்டும்;** உருசிய நாட்டில் ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் தனியே அகராதித் துறைகள் உள. அகராதியாளர்க்கு பன்மொழிப் புலமையும் மொழியியல் அறிவும் அகத்தியம் வேண்டும்.

**மு. ச. சிவம்:** 20-7-1936. சேலம் திருச்செங்கோடு வட்ட உஞ்சனைக் கவுண்டம்பாளையம். முருகேசன்: பொன்னம்மாள். திருச்செங்கோடு உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 52இல். ஊக்கியவர் தமிழாசிரியர் ஆ. பொன்னுசாமி பிள்ளை, க.ப. கண்ணன். சென்னை லயோலா கல்லூரி இண்டர் கணிதம் 54; அண்ணாமலை தமிழ் ஆனர்சு 57. உடன் பயின்றோர் சிற்பி, ச. மெய்யப்பன், சோ. ந. கந்தசாமி; பல பரிசுகளும் தங்கப் பதக்கங்களும் பெற்றார். குமரி அனந்தன், வீரமணி, கலிவரதன் ஒரு சாலை மாணாக்கர்கள். ஆங்கிலப் பேராசிரியர் எம். வி. சீதாராமனின் சீடராகி ஆங்கிலப் புலமை பெற்றார்.

57-58 கோவை அரசினர் கலைக்கல்லூரிப் பயிற்றுநர்; 58-59 சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலக எழுத்தர்; 59-63 சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பாசிரியர்; 63-65 அண்ணாமலையில் எம். லிட். ஆய்வு, 65-67 பழநியாண்டவர் கலைக் கல்லூரி, 1-7-1967 முதல் ஈரோடு வாசவி கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.

இதுவரை 150 நூல்கள் தொகுத்துப் படைத்துள்ளார். முதல் நூல் A Short Account of Sangam Litt. பெயர்ப்புகள்: மருத்துவர் மகள் (Surgeon's daughter by Walter Scott), சைலசு மார்னர் (George Eliot), எதிர்காலக் கனவுகள் (Great Expectations by Dickens), எண்டிசையும் சுற்றிவர 80 நாள் (Jules Verne).

திருக்குறள் பற்றி 20, கம்பன் 6, பாரதி 3, பிற ஆய்வுகள் 15. இறை பற்றிய நூற்கள் 22. எம்: லிட் தலைப்பு: Studies in Stylistics. பிஎச்.டி. தலைப்பு 'சென்ற நூற்றாண்டில் தமிழ்ச் சொற்களின் வளர்ச்சி' (சென்னை ப.க.).

இவரது வாழ்வின் தலைப் பணி அகராதிப் படைப்பே. அகராதிக்காகவே தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். 84 அகராதிகள் இயற்றியுள்ளார். 'தமிழ் அகராதி ஆராய்ச்சிக் கழகம்' நிறுவியுள்ளார்.

அடுக்குமொழி (alliterative, மோனை), எதுகை, ஒலிக் குறிப்பு (onomato Poetic), செந்தமிழ்ச் செல்வம் (Synonyms), ஐம்பொறி (Five senses), கருத்து, பலபொருள் ஒரு சொல் (Hononyms), காரணப் பெயர், பெண்மைச் செல்வம், பெண்ணோவியம், எதுகை இன்பம், அழகுத் தொடர், நய மொழி, அகப்பொருள், இலக்கியச் சொல், சொற்றொடர், உவமை (Similies), உருவம் (Metaphors), தொடர் (Phrases), அடைமொழி((Epithets), மரபுத்தொடர் (idioms), எதிர்ப்பதம் (Antonyms), சிலேடை (Pun), யாப்பியல் (Prosody), இலக்கண இரு பெயரொட்டு (duals), விகுதி (Suffixes), பெண்ணின் பெயர்கள், பெண்ணுருவகம், திராவிட மொழி, வடசொற் றமிழ், வட்டார வழக்கு (dialect), பேச்சுவழக்குச் சொல் (Colloquial), இருபதாம் நூற். தமிழ்ச் சொல், தமிழில் வழங்கு பிறமொழிச் சொல், இலக்கியப் பழமொழி, வசைமொழி (Abusive), குழுஉக்குறி (Slang), ஆண்மைச் செல்வம், பரத்தையர், திருக்குறள் பொருளடைவு, சொற்பொருட்

களஞ்சியம், கலைக் களஞ்சியம், திருக்குறள் ஆங்கில அகராதி, பாரதி கலைக் களஞ்சியம், மேற்கோள், சிற்றிலக்கிய அறிவுரை, உபதேச நீதிமொழி, கற்பனைக் களஞ்சியம், திறனாய்வு, உருவகக் காட்சி (Imageries), புராணம்; தமிழ் ஆங்கில அகர வரிசை 7; ஆங்கில தமிழ் அகரவரிசை 9, ஆங்கில அகராதிகள் 3. வியப்பினையும் மலைப்பினையும் அளிக்கவில்லையா? We have to appreciate admire and adore Sivam's Himalayan endeavours and Herculean Tasks!

உலகிலேயே மிகுதியான அகராதிகள் முடைந்தவர் இவரே எனலாம் - இப்படி 83 செப். இங்கிலாந்து உலக அகராதி மாநாட்டில் உவந்தேத்தப் பெற்றார். செக்நாட்டுத் தமிழறிஞர் கமில் சுவலபில் இவரை வியந்து போற்றியுள்ளார்; I regard you as one of the most well informed and reliable informants; the list of your books is staggeringly impressive. How do you find time and energy for all this?

'மு. சதாசிவம் தண்டமிழ்க் கடலில் மூழ்கி அரிய பெரிய ஆணிமுத்துக்களை யெடுத்துப் பல நூல்களை எழுதியுள்ளார். இவருடைய அயர்ச்சியில்லா முயற்சி உயர்ச்சியுடையது. தமிழ் உலகுக்கு இவருடைய நூல்கள் கழிபேருவகை தருகின்றன' (வாரியார்) நீங்கள் கருதுவதூம் புரிவதும் அருமையானவை, பயன் தருபவை (கம்பன் அடிப்பொடி).

ஒரு பெரும் பல்கலைக் கழகம், அரும்பெரும் நிறுவனம், நூறு பேர் கூடிச் செய்ய வேண்டிய செழும் பணியினை, தமிழராகவே கடந்த 30 ஆண்டுகளாக இடர்கண்டு துவண்டு விடாது, இன்னல் பல கடந்து இத்தொண்டு ஆற்றி வருகிறார். 59இல் இவர் கை பிடித்துக் காரியம் யாவினும் கை கொடுத்து, வறுமையிலும் வாடலிலும் உரமான உறுதுணையாக அமைந்து வரும் பெண்ணரசி திருவாட்டி இராதாமணிக்கு என்றும் தமிழுலகு கடப்பாடு உடைத்து. அவரை ஆசிரியராகக் கொண்டு 85 முதல் வெளிவரும் திங்களிதழ் 'வளரும் தமிழ்'. வணக்கத்துக்குரிய வண்டமிழ்த் தொண்டாற்றும் சிவனார் **முகவரி:** டி-121, சம்பத்து நகர், ஈரோடு.

**வ. ஜெயதேவன்** : 10-5-1947. திருச்சி மாவட்ட உப்பிலியபுரம். வரதராசு: சரோஜா. திருச்சி ஈ. ஆர். உயர்நிலைப் பள்ளியிற் பயின்று, அண்ணாமலையில் பி.எசி. (தாவரவியல்) 69இல், முதுகலை தமிழ் முதல் வகுப்பு 71இல்; சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் சேர்ந்து 79இல் டாக்டர்

பட்டம் (தமிழ் அகராதியியல் வளர்ச்சி) பெற்று இதுபோது மொழித்துறை இணைப் பேராசிரியராக இலங்குகிறார்.

கூர்த்த மதியும் எதனையும் ஈடுபாட்டுடன் திட்பநுட்பத்துடன் அணுகும் வளமையும், ஒதுங்கியிருந்து உண்மைப் பணியாற்றும் ஒண்மையும் கொண்டவர். வருங்காலப் பெருந்தமிழ்த் தொண்டராக விளங்கும் வகையில் உழைப்பும் ஊக்கமும் மிக்கவர். ஈடுபாடுள்ள துறைகள் : அகராதியியல், மொழிபெயர்ப்பியல், இலக்கியத் திறனாய்வு.

தந்தவை: தமிழ் அகராதியியல், தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு. பெயர்த்தவை: திராவிட இலக்கணக் கொள்கை உரையாடல், வினாவங்கிக் கையேடு, தமிழ் நாட்டில் திராவிட இயக்கமும் அதன் பாரம்பரியமும்.

**உலகிலேயே முதன்முதல் அகராதி தோன்றியது தமிழில்தான்**—அண்டம் டி புரொயன்கா வெளியிட்ட தமிழ் - போர்ச்சுகீசிய அகராதி (1679)என அறிஞர்கள் ஆய்ந்து முடிவு மொழிந்துளர். தமிழின் சொற்பொருட் செல்வங்களின் சேமிப்பு வைப்பகம் அவை. இதன் ஏற்றம் உணராதுள்ளோம். இனியேனும் இதனை ஓர் இலக்கிய வடிவமாக ஏற்று, பிற இலக்கியம் உணரும் கருவியாக அதே சமயம் அதுவே இலக்கியமாகவும் அமையும் பெற்றிய அகராதிக் கலையினைக் காப்போம், போற்றுவோம்.

**தமிழ்ப் பல்கலைக் கழகம்** *19-8-1983* தொடங்கி பேரகராதி தொகுத்து வருகிறது, வழக்குச் சொல்லையும் பிற மொழிச் சொற்களையும் இணைப்பதா என்பதில் கருத்து வேறுபாடுளது; முத்தமிழ்க் காவலர் வழக்கே தொடுக்கிறார். அகராதிப் பயிற்சிப் பட்டறை 85, 86இல் நடத்தியது. **அகர முதலி:** தமிழக அரசு இத்திட்டத்தைத் தொடங்கி இதற்கெனப் பிறந்த பாவாணரிடம் ஒப்படைத்தது. அவர் மறைவின்போது முதல் படலம் வந்தது. மதிவாணர் மேற்கொண்டு தொடர்கிறார்.

**சொல்லாய்வறிஞர் ப. அருளி** (பக்தவத்சலம்): *1951.* புதுவை தமிழூர் (திலாசுப் பேட்டை) தேவராய பழனிச்சாமி: பார்வதி. தாகூர் கலைக் கல்லுரி பி.காம்; முதுகலை ஆங்கிலம், சென்னை சட்டக் கல்லூரிப் பட்டம் வழக்குரைஞராக விளங்கி, இக்கால் (25-1-1985 முதல்) விருந்து தகைமையாளர், முதன்மைப் பதிப்பாசிரியர்: தூய தமிழ் கலைச் சொல்லாக்கு அகரமுதலிகள், தமிழ்ப் பல்கலைக் கழகம்,

அருளியன: தகுதி (ஒரு சொல் ஆய்வு நூல்), நிறைந்தேன் (பாத் தொகுதி), சிங்கள அமர்க்களம், இந்திய அரசே! இன்னுமா உறக்கம்? இவை தமிழல்ல...! (தமிழில் வந்து விரவிக் கலந்த 26 மொழிகளைச் சேர்ந்த 2060 சொற்களை இனங் காட்ட வந்த முதல் நூல்), மொழியியல் உரைகள் 5 தொகுதி கள் (சென்னை தமிழ் சமற்கிருதம் மற்றும் பிற இந்திய மொழி களின் ஆராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்த்திய தாரம், தூரம் போன்ற 100 சொற்களின் மொழியியல் ஆய்வு-இவ் வகையில் வெளிப்போந்த முதல் நூல்); தூய தமிழ் அகரமுதலி (5 மடலங் கள்), கலைச் சொல்லாக்க அகரமுதலி (3 மடலங்கள்.)

சின்னஞ்சிறிய வயதிலேயே பென்னம் பெரிய பேராற்றல். சொற்களைத் துருவி ஆய்ந்து திட்ப நுட்பமுடன் தெளிவு படுத்தும் தனித் திறத்தர். பாவாணர் கதிர் என்றால், இவர் கதிரவன் எனலாம். தாய் எட்டடி பாயின், குட்டி பதினாறடி பாயுமன்றோ? மொழிஞாயிறின் முதல் வாரிசு எனின் முழு உண்மையாம்.

## 31. தமிழ் இலக்கிய வரலாறு

மொழி ஒருவருக்கு விழி போன்றது; நம் தமிழ் நம் உயி ரனையது. உயிரனைய தமிழின் உயர் வரலாற்றை ஒவ்வொரு தமிழனும் உணர்ந்திருக்க வேண்டியது தலையாய கடமை யாகும். தன் தாய் மொழியின் தன்மை தொன்மை, வாழ்வு வளர்ச்சி, அருமை பெருமை அறியாது, பிற என்ன அறிந்து யாது பயன்? அது 'மாதா வயிறு எரிய, மகேசுவரிக்குப் பூசை செய்வது' போல்வது!

நபிகள் நாயகத்திடம் 'சுவர்க்கம் எங்கே இருக்கிறது?' எனக் கேட்டார் ஒருவர்; அதற்குப் பெருமானார் 'உன் தாயின் திருவடியில்' என்றார் (at the feet of your mother). இந்த ஊனுடம்பைத் தந்தவரின் காலடியே சுவர்க்கம் என்றால், நாம் பேசும் தாயினும் சிறந்த மூச்சாம் தமிழைத் தமிழனாகப் பிறந்த ஒவ்வொருவனும் அறிய வேண்டாவா? அஃதன்றி வேறென்ன வேண்டிக் கிடக்கிறது? அறிய வேண்டியது அறியாது பிற எல்லாம் அறிந்தும் பெருமை ஏது? உயிரில்லாப் பிணத்திற் கன்றோ ஒப்பு! தமிழ் வாழ்க! வெல்க! என முழங்குவதாலோ, எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்பதாலோ, உடல் மண்ணுக்கு உயிர் தமிழுக்கு என ஓங்கிப் பேசுவதாலோ ஒரு பயனுமில்லை.

அவை யாவும் ஆகுல நீர பிறவே! போலிமையின் பொலிவே யன்றி வேறன்று.

பேசிக்கொண்டிருப்பதால் பெருமை தெரியவில்லை; பேசா ஊமையாய் இருந்தால்தான் அருமை புரியும். அப்படிப் பேசும் தமிழின் பெற்றி உற்றறிவதும் கற்றுணர்வதும் உயிரனையது. இந்த ஒரு பெருங் கடமை உன்னி, நம் அருந்தமிழின் பெருவரலாற்றினைத் தமிழரனைவரும் ஓதி உணர, கடும் உழைப்பின் கரணியமாகத் தம்மைத் தேய்த்துத் தாய்த் தமிழின் தனிப் பெருங் கதையினைத் தந்துளர்:

முதன்முதல் இதற்குப் பிள்ளையார் சுழி போட்டவர் பல்கலைச் செல்வர் கா. சு. பிள்ளை அவர்கள்; இரு பகுதிகளாக கே. எஸ். சீனிவாசம் பிள்ளையின் 'தமிழ் வரலாறு', ரா. ராகவையங்காரின் 'தமிழ் வரலாறு', க. பொ. இரத்தினத்தின் 'நூற்றாண்டுகளில் தமிழ்' வி. செல்வ நாயகத்தின் 'தமிழ் இலக்கிய வரலாறு', மேயர் இராமசாமி நாயுடுவின் 'தமிழ் இலக்கியம்' போன்றன முழுப் பார்வையன.

மு. ராகவையங்காரின் 'ஆழ்வார்கள் கால நிலை', சோமசுந்தர தேசிகரின் 16, 17 நூற். புலவர்கள், மயிலை சீனி. வேங்கடசாமியின் 19-ஆம் நூற். வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடுகளான க. வெள்ளை வாரணனாரின் 'தொல்காப்பியர் காலம்', அவ்வை துரைசாமிப் பிள்ளையின் 'சைவ இலக்கிய வரலாறு', இ. எஸ். வரதராச அய்யரின் 'பௌத்த சமண வைணவ இலக்கிய வரலாறு', பண்டாரத்தாரின் 250-600 காலகட்ட, 13, 14, 15 நூற். வரலாறு, ஏ. வி. சுப்பிரமணிய அய்யரின் தற்காலத் தமிழ் வரலாறு போன்றன ஒரு காலகட்ட உற்றுநோக்குகள்.

சுண்ணாகம் குமாரசாமிப் புலவர் 'தமிழ்ப் புலவர் சரித்திரம்'; கா. அப்பாதுரையார் 'சங்ககாலப் புலவர்'; ந. சஞ்சீவி 'சங்க காலச் சான்றோர்'; கார்மேகக் கோனார் 'நல்லிசைப் புலவர்கள்'; கா. கோவிந்தன் 'சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை'; கா. ர கோவிந்தராச முதலியார் 'ஆழ்வார்கள் வரலாறு'; கா. சு. பிள்ளை 'சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், சேக்கிழார், தாயுமானவர், குமரகுருபரர் வாழ்வும் நூலாராய்ச்சியும்; வையாபுரிப் பிள்ளையின் 'தமிழ்ச் சுடர் மணிகள், 'இலக்கிய தீபம்'; மு. வை. அரவிந்தன், 'உரையாசிரியர்கள்', அண்ணாமலை தமிழ்த் துறையினர் 'தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம்'; சுத்தானந்த பாரதி 'நாவலர் பெருமான்', கா. மாயாண்டி பாரதி 'தமிழவேள்', உ. வே. சா.

'மகாவித்துவான், தியாகராச செட்டியார்'; மறைமலையடிகள் 'சோமசுந்தர நாயக்கர்'; அருணாசலக் கவுண்டர். 'எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளை'; ரா. தேசிகம் பிள்ளை 'ஆனந்த ரங்கம் பிள்ளை'; ந. சுப்பிர மணியன் 'பரிதிமாற் கலைஞர்'; ரா. பி. சேதுப்பிள்ளை 'கால்டுவெல் ஐயர்'; பாஸ்கரத் தொண்டைமான் 'ரசிகமணி டி.கே.சி, தமிழறிஞர் முதலியார்'; வ. ரா. 'மகாகவி பாரதியார்'; சோமலெ 'பண்டிதமணி'; ரம் போலா 'வீரமா முனிவர்'; அ. க. நவனீத கிருட்டிணன்' ரா. பி. சேதுப்பிள்ளை'; ஊரன் அடிகள் 'இராமலிங்க அடிகள்'; மது. ச. விமலானந்தம் 'தாயகம் தந்த நாயகம், செந்தமிழ்ச் செல் வர்கள்'; சு. அ. இராமசாமிப் புலவரின் 'தமிழ்ப் புலவர் வரிசை', உ. வே. சா. 'பிற்காலப் புலவர்கள் (597 பேர்)'. அண்ணாமலை அறக் கட்டளைச் சொற்பொழிவுகளான கம்பர் சாத்தனார், திருத்தக்கத்தேவர், தாயுமானவர், பரிமேலழகர், இளம்பூரணர் போன்றன தனிப் புலவர் வரலாறுகள்.

எஸ். ராம கிருஷ்ணன் 'தமிழ் இலக்கியம் ஓர் அறிமுகம்'; சோமலெ 'வளரும் தமிழ்'; பம்மல் சம்பந்த முதலியார் 'தமி ழன்னை பிறந்து வளர்ந்த கதை'; மா. இராசமாணிக்கனார் 'தமிழ் மொழி இலக்கிய வரலாறு'; பாலூர் கண்ணப்ப முதலியார் 'தமிழ் நூல் வரலாறு'; கோவிந்தசாமி 'இலக்கியத் தோற்றம்'; தமிழண்ணல் 'புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு' குறிப்பிடத் தக்கவை.

பிறநாட்டார் பைந்தமிழின் பெற்றி அறியும் வாயிலாக **ஆங்கிலத்தில்** எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை, எஸ். வையா புரிப் பிள்ளை, சி. ஜேசுதாசன் - ஹெப்சிபா, தெ. பொ. மீ, மு. அருணாசலம், ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை படைத் துளர். மு. வ. எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு சாகித்ய அகாதமியின் வெளியீடாக வெளி மாநிலத்தவரும் வண்டமிழ் அறிய வைத்துளது. கா. மீனாட்சி சுந்தரனாரின் European contribution, உவைசின் Muslim contribution சமயத் தமிழ் சாற்றும்.

மயிலை சீனி வேங்கடசாமியின் பௌத்தமும் தமிழும், சமணமும் தமிழும், கிருத்துவமும் தமிழும், அறவாணனின் சைனரின் தமிழிலக்கண நன்கொடை, தெ. பொ. மீ.யின் சமணத் தமிழ், அப்துற் றகீமின் முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள், மு. மு. உவைஸின் இஸ்லாம் வளர்த்த தமிழ், செ. சதாசிவத் தின் சேரநாடும் தமிழும், சோமலெயின் செட்டி நாடும் தமிழும், சு. தில்லைவனத்தின் புதுவை மாநிலத் தமிழ்

வளர்ச்சி, ராகவையங்காரின் சேது நாடும் தமிழும், மற்றும் இலங்கையும் தமிழும், மலேயாவும் தமிழும், கொங்கு நாடும் தமிழும் போல்வன பகுதிப் பார்வைகள்.

பட்டப்படிப்பு, முதுகலை வகுப்புகட்குப் பாடமாக வைக்கப்பட்டதும், மாணவர்கட்கேற்ற வகையில் மளமள வென வரலாறுகள் மண்டின: சி. பாலசுப்பிரமணியன், மு. அடைக்கலசாமி, சு. சாமிமுத்து, ஸ்ரீ சந்திரன், சோமசுந்தரம்-பூவண்ணன், க. திருமாறன், கா. மாயாண்டி பாரதி, ரா. சீனி வாசன், ஆ. செபரத்தினம், இரா. பொன்னரசு, மு. சு. அருள் சாமி, ப. இராமன், மது. ச. விமலானந்தம், பா. வளனரசு, சோம. இளவரசு, ரபீசிங், மு. மாணிக்கம், ப. ச. ஏசுதாசன், க. வெ. சீனிவாசன், அரசு. ஆறுமுகம், மு. ரா. சாமி, இறை யரசன் போன்றார் எழுதியுள்ளனர்.

வெளிவந்துள்ள வரலாறுகளில் மது. ச. வி. யின் 1400 பக்க வரலாறு செறிவாலும் செய்திச் சுரங்கத்தாலும் மணிமுடியாக மிளிர்கிறது. அறிஞர் மு. அருணாசலம் மாபெரும் சாதனை புரிந்துளார். ஒரு பெரும் பல்கலைக் கழகம் ஆற்ற வேண்டிய அரும் பணியைத் தனி ஒருவராகவே செய்துள்ளார். நூற் றாண்டு வாரியாக 9—16 நூற்றாண்டு 8 தொகுதிகள் வித்தார மாக வரைந்துள்ளார். வழிபடத்தக்க பணி. இந்த இமாலய சாதனை ஒன்றுக்கே, இந்த எழுபதாண்டு இளைஞர்க்குத் தமிழகப் பல்கலைக் கழகம் ஏதேனும் ஒன்று முந்திக்கொண்டு இலக்கிய முது முனைவர் (D. Litt) பட்டம் தந்து பெருமைப் படுத்தியிருக்க வேணும். அதுவே செய்தக்க செய்தமையாகும்! மேலை நாடெனில், இந்நேரம் வழங்கியிருக்கும்! நந்தமிழ் நாடு செத்தபின் சிந்து பாடும் செந்தமிழ் நாடு! இருக்கும்போதே ஏதும் புரிந்து போற்றினன்றோ காலமெல்லாம் உழைத்தவர்க்கு மதிப்பளித்ததாகும்; மனமும் மகிழும்; தமிழகமும் பயன் படுத்திக் கொள்ளும். 'முன்னுள்ளுவோனைப் பின்னுள்ளி னேனே' என்றாவது உடன் புரியுமாக! தமிழக அரசும் உடன் கவனிக்குமாக. காலத்தாற் செய்த நன்றி, ஞாலத்தின் மாணப் பெரிது!

## 32. பதிப்புத் தமிழ்

மேலை நாட்டவர் தொடர்பால் அச்சு இயந்திரம் எழுது பொருள்கள் கிட்டின; இதனால் ஏட்டுச் சுவடியில் இருந்த தமிழ் புத்தக உருப்பெற்றது; பழம் நூல்கள் பல பதிப்புகள்

கண்டன. பதிப்பு, பண்டிதர் தமிழைப் பாமரர் தமிழாக்கியது; மக்களிடம் சென்றடைய வைத்தது. ஒரு நூல் பலரையும் சென்றடைய ஒரு நூற்றாண்டானது; இப்போது அடுத்த கணமே ஆயிரமாயிரம் ஆர்வலர் கைகளில் தவழ்கின்றது. ஓர் ஏட்டினை ஏடு பெயர்க்க எத்துணை இன்னல்; இடைச் செருகல்கள் (interpolation), பாடபேதங்கள் (emendations) எத்தனை எத்தனை? அத்துணை இடர்களையும் போக்கியது பதிப்புக் களே!

இதன் முன்னோடி சி. வை. தாமோதரம் பிள்ளை; முதன்மையாளர் முன்னணியர் தமிழ்த் தாத்தா உ. வே. சா. (707 பக்). நாமெல்லாம் இன்புற்று உற்றார் உறவினருடன் உவந்திருந்தபோது, கவலையற்று உறங்கிக் கொண்டிருந்த போது, தமிழக மூலை முடுக்குகளெல்லாம் சென்று, பசி நோக்காது கண் துஞ்சாது கடினம் பாராது காத்திருந்து கெஞ்சியும் காலமெல்லாம் இதிலேயே கழித்தும் சங்கத் தமிழையெல்லாம் அவர் வெளிக் கொணரவில்லையேல், இப்போது நாம் துய்த்துப் பிழைக்கும் பெருவாழ்க்கை எங்கே? அவர் போட்ட பிச்சையன்றோ நம் பிழைப்பின் புகழின் மூலதனம்! அப்பணியைத் தொடர்கிறது திருவான்மியூர் உ. வே. சா. நூலகம்.

இந்த இருவரை எண்ணும் நாம் இன்னொருவரையும் இணைத்தே எண்ணவேணும்; ஏனோ அவரை மறந்தோம். தாம் ஈட்டிய செல்வம், செல்வாக்கு அனைத்தையும் பதிப்புப் பணிக்கே அர்ப்பணித்து-வாழ்நாள் முழுதும் (மணமாகாது) தமிழ்ப் பணியே செய்து-கழகம் நிறுவி 147 நூல்கள் வெளியிட்டவர். அவர்தான் திவான்பகதூர் சரவண பவானந்தம் பிள்ளை! ஆங்கில நூற்கட்டுடன் பொன்னெழுத்துக்கள் பொறித்தும் பதிப்பித்தவர். அவற்றைக் காண்பதே கண்ணுக்கு உவப்பளிக்கும். அத்துணை அழகின - அருமையன! ஆறுமுக நாவலர் சென்னையில் ஓர் அச்சகமே நிறுவி நூல் பல வெளியிட்டார்.

வையாபுரிப் பிள்ளை புறத்திரட்டு, நிகண்டுகள், பிரபந்தங்கள் என 20க்கும் மேல் பதிப்பித்துள்ளார்; அதில் வரும் ஆராய்ச்சி முன்னுரைகள் அரும் கருவூலங்கள். சைவ சித்தாந்த சமாஜம் சங்க இலக்கியம், சீவக சிந்தாமணி, திருமந்திரம், தேவாரம், திவ்வியப் பிரபந்தம், சிவஞானபோதம், சித்தியார் எத்துணைத் துல்லியமாக மலிவாக அற்புதமாகப் பதிப்பித்தது;

இன்றும் கட்டுக்குலையாமல் கட்டளைக் கற்களாகவன்றோ உள்ளன! இதற்கு மா. பாலசுப்பிரமணிய முதலியாரின் தொண்டினை எத்துணைப் போற்றினாலும் தகும்.

மதுரைத் தமிழ்ச் சங்கம் செந்தமிழ் வாயிலாக நிகண்டுகள், உலா, கலம்பகம், கோவைகள், முத்தொள்ளாயிரம் எனப் பல வற்றைப் பதிப்பித்தது. கரந்தைத் தமிழ்ச் சங்கமும் தெய்வச் சிலையார் உரை போன்றன வெளிக் கொணர்ந்தது. தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம் பல இலக்கிய மருத்துவ நூல் களைப் பதிப்பித்த வண்ணம் உளது; நாலடியார் உரைவளம், மலையருவி குறிப்பிடத்தக்கன. சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் பலவற்றை ஓலையினின்று தாளுக்குக் கொணர்ந் துளது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பணி கணிச மானது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சுவடியியல் படிப் பினை நல்குவதோடு பலவற்றைப் பதிப்பித்தும் வருகிறது. இப்போது தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம் கிடைத்தற்கரிய பல நூல்களை உயர்வான முறையில் நிழற்படப் பதிப்புகள் வெளியிட்டு வருகிறது. வ. உ. சி., அ. கோபாலையர், வை. மு. கோ., மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பணி பாராட்டுக் குரியது.

பதிப்புக்கலை பற்றிய பனுவல்கள் பலர் எழுதி வருவது இதமாக இருக்கிறது. மணிவாசகர் நூலக மெய்யப்பன் மேலான நூல்களை மேன்மையான முறையில் பதிப்பிப்பதோடு தம் பட்டறிவின் பெருநோக்கின் ஆய்வின் பிழிவாகப் 'பதிப்புக் கலை' என்ற நூலையும் தந்துளார். டாக்டர் அ. விநாயக மூர்த்தி பதிப்புக்கலை, பதிப்புப் பார்வைகள், மூல பாட ஆய் வியல் என மும்மணிகளை வழங்கியுள்ளார். மா. சு. சம்பந்தம் (தொடர்பன்) பல்லாண்டுகளின் முன்பே அச்சுக்கலை அச்சும், பதிப்பும், எழுத்தும் அச்சும் என மும்முத்துக்களைத் தந்துளார். பதிப்புக்குத் துணையாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பல் வகையில் சிறக்கப் பணியாற்றுவது போன்றே இத்துறையிலும் ஆய்வு நிகழ்த்துகிறது. உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் (குளோறியா சுந்தரமதி), உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் (இரா. காசிராஜன்), உ. வே. சா. இலக்கணப் பதிப்புகள் (கி. நாச்சிமுத்து) மூன்றும் உ. வே. சா. அறக்கட்டளைச் சொற் பொழிவுகள்.

தமிழக வெளியீட்டகங்கள் சில (நர்மதா, ஐந்திணை, பூம்புகார், சேகர், மணிவாசகர் போல்வன) இப் பதிப்புப் பணி யினைக் கலையாக ஆற்றி வருகின்றன.

## 33. ஆட்சி மொழி

ஆளுகைக்குரியதாக அரியணையில் கொலுவீற்றிருந்த அழகுதமிழ் அன்னிய ஆட்சியால் தன்னிலை இழந்து தவித்தது. அன்னை மொழி அயலவர் ஆட்சியால் ஆங்கில வருகையால் ஆட்சி அகன்றது. அரசியல் ஆட்சியை ஒட்டியே மொழி உயர்வு பெறும். அந்நாளில் முடியாட்சி, எனவே மன்னரை ஒட்டி மொழி முதன்மை பெற்றது; இந்நாளில் குடியாட்சி, ஆகலின் இந்நாட்டு மன்னர்களாம் மக்களின் .மாட்சி ஒட்டியே மொழி முடிசூடும்.

தொல் பழங்காலத்திலே அன்னிய ஆட்சிக்கே இடமில்லாத மிகு பழங்காலத்தில் மூவேந்தர் ஆட்சியில் முத்தமிழ் முடி சூடியது. பாஞ்சாலியின் சுயவரத்தில் தமிழர்கள் கலந்து கொண்டதாகக் கூறும் வியாசபாரதம் (கி.மு. 3067 இல் எழுதப் பெற்றது.) தயரதன் அத்தாணி மண்டபத்தில் இடம்பெற்ற தாக இயம்பும் வால்மீகி ராமாயணம் (கி. மு. 4430) இரண்டுக்கும் முன்பே ஒரு குடையில் உலகாண்டது ஒண்டமிழ்.

பின் களப்பிரர், பல்லவர் ஆட்சியின்போது பாலியும் வட மொழியும் செல்வாக்கு பெற்ற காலை தமிழ் தளர்ந்தது. பிற் காலப் பாண்டியர் சோழர் பேராட்சியின்போது பழையபடி தமிழ் தலைநின்றது. அடுத்து இசுலாமியப்படையெடுப்பு-நாயக்கர் ஆட்சியின் போதும் சிறிது முதன்மை இழந்தது. பின் வந்த ஆங்கிலேய ஆட்சியால் தமிழ் Vernacular மொழியாகி இரண்டாம் நிலை அடைந்தது. முன்னவர் தொடர்பால் உருது அராபிச்சொற்கள் கலந்தன.பின்னவர் ஆதிக்கத்தால் ஆங்கிலம் ஊடுருவியது;ஆட்சிமன்றிலும் அறங்கூறு அவைகளிலும் ஆங்கிலம் ஓங்கியது. 47இல் ஆங்கிலேயர் அகன்றும், ஆழப் பதிந்ததால் ஆங்கிலம் அகன்றபாடில்லை, முடியவும் கூடுவ தில்லை!

300 ஆண்டு அடிமையுற்றதால் முன்னம் முடிந்த தமிழுக்கு இப்போது முடியாது என்ற எண்ணம் நமக்கு ஏற்பட்டு விட்டது. அறிவியலைத் தமிழில் ஆக்கும் வக்கு நமக்கு, நம் மொழிக்கில்லை என்ற அசைக்கமுடியா உறுதி உருவாகி விட்டது. நம் நாட்டை நாம் நம் மொழியில்தானே ஆள வேண்டும்; நம் கல்வியை நம் தாய்மொழியில்தானே பெற வேணும் என்று இன்னும் உறைக்கவில்லை.

பிறமொழிகளிலேயே தீர்ப்பு கூறிவந்த இங்கிலாந்து நீதி மன்றங்களில் மானவுணர்வு மேலிட்டு 1731இல் பாராளு மன்றத்தில் உறுதி எடுக்கப்பெற்று, ஆங்கிலத்தில் இயற்றா விடில் அத்தவறுதல் ஒவ்வொன்றுக்கும் 50 பவுன் ஒறுப்பு என்றறிவித்ததும் நீதிமன்ற மொழியாகி விட்டது, ஆங்கிலம்! இந்த உணர்வு நமக்கு வந்தால் பின் நமக்கேது குறை!

50இல் இந்திய அரசியல் அமைப்பு, இந்திய ஆட்சி மொழி எது என்றும், மாநில ஆளுகை மொழிகள் இவை எனவும் சட்ட மியற்றியது; 15 ஆண்டுக்குள் மாநிலங்கள் தங்கள் ஆட்சி மொழி இது என சட்டம் செய்து கொள்ளவேணும், தவறின் இந்தியே ஆட்சி மொழியாம் என்றது. கஜபதி நாயக்கர் 'நம் மாநில மொழி நந்தமிழே' என சட்டவரைவு கொண்டுவந்தார்; ஆளுநர் இசைவு பெறாது போயிற்று. 56இல் அரசே சட்ட மாக்கியது. 58இல் தமிழர் திருநாளில் தமிழே ஆட்சி மொழி ஆகும் என அறிவித்தது. இதனைச் செயற்படுத்த, இடர் களைய, குறைபோக்கி நெறிப்படுத்த ஆட்சிமொழித் தனி அலு வராக ஆட்சி மொழிக் காவலர் கீ.இராமலிங்கனார் அவர்களை அமர்த்தியது. ஆட்சி மொழிக்குழுவின் தலைவர் சு. வெங்கடேசுவரன், ஐ. சி. எஸ்; அனந்தநாராயணன் ஐ. சி. எஸ், தி. க. சங்கர வடிவேலு, ஐ. ஏ. எஸ். போன்றோர் உறுப்பினர். 30 ஆண்டுகள் ஆகியும் இன்னும் முழுமையாக ஆட்சிசெய்ய வில்லை. மரத்துப் போய்விட்ட நமக்கும் தன்மான உணர்வு-தமிழுணர்வு நரம்பு நாளங்களில் ஏறவில்லை!

**கீ. இராமலிங்கனார்** : (1899-1986). ஆட்சித் தமிழின் அச்சாணி, ஆழி. நகராட்சி ஆணையராக இருந்த நாள் தொட்டு சிந்தை செயல் அனைத்தும் தமிழ் ஆட்சி-மாட்சி பற்றியே அமைந்தார்-இரண்டறக் கலந்தார் (பார்க்க : 845). இவரது தன் வரலாறாம் 'என் வரலாறு' தமிழ் ஆட்சி வரலாறாகும்! அடுத்து நம் சிந்தை கவர்பவர் **கோ. முத்துப் பிள்ளை** 15-9-1919. தஞ்சை கருந்திட்டைக்குடி. அரசு இணைச் செயலராக இருந்து ஓய்வு பெற்றவர். தமிழ்ப்பற்றாளர். அரியணையில் அழகு தமிழ் அரிய படைப்பாகும். **முத்துசாமிப் பிள்ளை**, ஐ. ஏ. எஸ். அவர்கள் குறிப்பிடத்தக்கவர்.

## 34. உலகத் தமிழ் மாநாடுகள்

அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம் (International Association of Tamil Research) உலகத் தமிழறிஞர்களை

ஆராய்ச்சியாளர்களை ஒருங்கிணைத்து ஒண்டமிழுக்குத் தொண்டு செய்ய 7-1-1964இல் உருவாயது. இது 3 ஆண்டு கட்கு ஒருமுறை உலகத் தமிழ் மாநாடு நடத்துகிறது. டாக்டர் ஜீன் பிலியோசா (பிரெஞ்சு நாட்டவர்) தலைவர். பொதுச் செயலர் மறைத்திரு சேவியர் தனிநாயக அடிகள்.

தவத்திரு தனிநாயக அடிகளின் தாளாண்மையாலும் மலேசிய அரசின் பேராதரவாலும் 66 ஏப்ரலில் கோலாலம்பூரில் **முதல் மாநாடு** நடந்தது. தமிழகத்தின் சார்பில் முதல்வர் எம். பக்தவத்சலம் தலைமையில் தூதுக்குழு சென்றது; கருத்திருமன், ம. பொ. சி., தெ. பொ. மீ, மு. வ, நாவலர் நெடுஞ்செழியன், சா. கணேசன், பி. டி. ராஜன், கே. கே. பிள்ளை, இரா. நாகசாமி உடன் சென்றனர். அடுத்த மாநாட்டினைத் தமிழகத்தில் நடத்தலாம் என முதல்வர் அழைப்பு விடுத்தார்; ஏற்றுக் கொள்ளப்பட்டது. உலகெங்கணுமிருந்து 22 நாட்டினின்று 130 அறிஞர் பிரதிநிதிகள் கூடினர்; கட்டுரை படித்தனர்; கலந்துரையாடினர். ஆகுல நீர பிற அங்கில்லை! அறிவு பூர்வமாக அமைந்திருந்தது. பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் தொடக்கி வைத்தார். காலை மாலை கருத்தரங்கு; இரவு கலை நிகழ்ச்சி.

கருத்தரங்கின் நோக்கினைத் தனிநாயகர் தந்தவாறு: 'கருத்தரங்க அமைப்பாளர்கள், இக் கருத்தரங்கு உயர் தகுதி மிக்க ஆராய்ச்சி வல்லுநர்கள் கலந்து கொள்ளும் ஆய்வுக் கருத்தரங்காக மட்டுமே இருக்கவேண்டும் என்பதற்காகத்தான், இதற்கு Conference Seminar எனப் பெயரிட்டார்களே தவிர, Congress (பொதுக்கூடம்) எனக் குறிப்பிட்டார்கள் இல்லை' எனத் திட்டவட்டமாகச் சாற்றியது இங்கே நினைவுகூரத் தக்கது.

66இல் அழைத்தது காங்கிரஸ் ஆட்சி; 67 ஆட்சி மாறியது; தி. மு. க. பதவிக்கு வந்தது. 68 சனவரியில் சென்னையில் **இரண்டாவது மாநாடு** கூடியது. Then we have to enact 'Hamlet' without the Prince of Denmark! அரசு இதனை மக்கள் மாநாடாக விரித்துப் பாரிய அளவில் நடத்த விழைந்தது-நடத்தியது. முதல்வர் அறிஞர் அண்ணா மொழிந்த விளக்கம்: 'ஒரு கருத்தரங்கிற்கும் மாநாட்டிற்கும் வேறுபாடு உண்டு; தமிழ் மக்களுக்குத் தம்மொழி மீது மிகுந்த பற்றும் பாசமும் உண்டு. அந்த மக்களும் தமிழாராய்ச்சி பற்றித்தெரிந்து மகிழவேண்டும்.

அவர்கள் தமிழார்வம் மிக்க பிற நாட்டாரைப் பார்க்கவும் பேசவும் கை குலுக்கவும் விழைகின்றனர். 'நான் பிரான்சிலிருந்து வந்த அறிஞரைக் கண்டேன், ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த ஒருவரைப் பார்த்தேன்' என்றெல்லாம் தங்கள் தங்கள் ஊர்களில் செப்புவர்-உவப்பர். இப்படித் தமிழ் மக்கள் தமிழகத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் சென்று சொல்லும்போது, ஆயிரம் ஆயிரம் தமிழ் மக்கள் எவ்வளவு இறும்பூது எய்துவர்? இதற்காகத்தான் உள்ளே கருத்தரங்கு நடைபெறும்போது, வெளியே ஒரு பொது நிகழ்ச்சியும் ஏற்பாடு செய்யப்படுகிறது.'

இதனால் வாமன வடிவாய் இருந்த மாநாடு, விசுவரூபம் எடுத்தது. கருத்தரங்கு பின்னுக்குப் போனது; மாநாடு முன்னணிக்கு வந்தது! அறிவு அறிவாராய்ச்சி குன்ற உணர்வு மகிழ்வுகள் ஓங்கின!

குடியரசுத்தலைவர் சாகீர் உசேன் தொடங்கி வைத்தார். 41 நாடுகளைச் சேர்ந்த 190 தெரிவாளர்கள் குழுமினர். முற்பகல் நிகழ்ச்சி பொது அரங்குக் கூட்டங்களில் இரண்டிரண்டு கட்டுரைகளாக 12 கட்டுரைகள் படிக்கப் பெற்றன. பிற்பகல் நிகழ்ச்சிகள் பல குழுக்களாகப் பிரிந்து குறிப்பிட்ட துறைக் கட்டுரைகளாக 140 கட்டுரைகள் படிக்கப்பட்டன. மொழியியல் 38, இலக்கிய ஆராய்ச்சி 24, வரலாறு சமூகவியல் 26, நாட்டுப்புறவியல் 5 கட்டுரைகள் அடங்கும். வெளியே வாண வேடிக்கைகள், 300 வளைவுகள்; பட்டிமன்றம், கவியரங்கம் இன்ன பிற மக்களைக் கவர்ந்தன. மாநாடு முடிந்ததும் பேராளர்கள் தமிழகமெங்கும் சுற்றி வந்தனர். 3-1-68இல் பல்கலைக் கழகத் தேர்வு மண்டபத்தில் கண்காட்சி; துணை வேந்தர் ஆ. இலக்குமணசாமி முதலியார் தலைமையில் ராஜாஜி திறந்து வைத்தார். 'மாநாட்டு மலரை' அண்ணா வெளியிட்டார். 'கையேடு' வெளியானது; சா.கணேசன் சமைத்தது. மாபெரும் ஊர்வலம் தீவுத்திடலிலிருந்து புறப்பட்டு அண்ணா சாலை வழியே பவனி வந்தது. கலைக் கல்லூரி எதிரே ஜாகீர் உசேன் கண்டு களித்தார். 27 அலங்கார வண்டிகள்! படமாக்கப் பட்டது; கலைஞரின் கனி தமிழ் கொஞ்சும் வருணனையுடன் வெளிவந்தது.

மாநாட்டினை ஒட்டி 2.1.68இல் கடற்கரை நெடுக வீரமா முனிவர், அவ்வை, பாரதிதாசன், கண்ணகி, வள்ளுவர், கம்பர், பாரதி, வ.உ.சி. போப், கால்டுவெல் எனப் பதின்மர்க்குச் சிலைகள் நிறுவப்பெற்றன. முறையே ஆர்ச்பிஷப் அருளப்பர்,

வாசன், மு.வ. ம.பொ.சி. கி.ஆ.பெ.வி. பக்தவத்சலம், நாமக்கல் கவிஞர், பி.டி.ராஜன், பிஷப் நியூ பிகின், கா.அப்பா துரையார் திறந்து வைத்தனர். வீரமாமுனிவர் சிலை அருளப்ப ராலும்; போப், கால்டுவெல் சிலைகள் தென்னிந்திய திருச்சபை யாலும்; வள்ளுவர் சிலை சிவாஜி கணேசாலும்; கண்ணகி சிலை தமிழக ஆசிரியர்கள் மாணவர்களாலும்; பாவேந்தர் கம்பர்,பாரதி, வ.உ.சி.சிலைகள் மாநகராட்சியாலும் அளிக்கப் பெற்றன. நகரின் நடுவே 11 அடி உயர மேடை, 9 அடி உயர அண்ணாசிலையினை எம்.ஜி.ஆர். அருளினார். சர்.ஆ.ராம சாமி முதலியார் 1-1-68இல் திறந்து வைத்தார்.

**மூன்றாவது மாநாடு** 70இல் பாரிசில் நடந்தது; தமிழகத்தின் சார்பில் அமைச்சர் மதியழகன் தலைமையில் ம.பொ.சி.கம்பன் அடிப்பொடி சா. கணேசன் சென்று வந்தனர். இந்த மாநாட்டின் வாயிலாக தமிழின் பெருமை ஐரோப்பிய நாடு களில் பரவிற்று. முதல் மாநாடு போன்றே எவ்வித ஆரவாரமு மின்றி அறையில் ஆராய்ச்சிக் கருத்தரங்காக நடந்தது!

**நான்காவது மாநாடு** இலங்கை யாழ்ப்பாணத்தில் 3-9-1974ல் நடந்தது. 20 நாடுகளினின்று 175 பேராளர்கள் கலந்து கொள்ள இருந்தனர். விசா உரிய காலத்தில் வழங்கப் பெறாமை யால்100 கட்டுரைகளே படிக்கப் பெற்றன. தனிநாயக அடிகள் தொடங்கி வைத்தார். மாநாட்டுக் குழுவின் தலைவர் பேரா.சு. வித்தியானந்தன்; செயலர் தனிநாயகம். ஏழு நாள் விழா மாபெரும் ஊர்வலத்துடன் எழுச்சிமிகு சொற்பெருக்குடன் முடிந்தது. 10-1-74இல் மாநாட்டை ஒட்டி நடந்த பொதுக் கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது, கலகம் மூண்டது; கண்ணீர்ப்புகை, தடியடி. மின்சாரம் தாக்கி 7 பேரும் மிதிபட்டு 3 பேரும் மொத்தம் பதின்மர் மாண்டனர். 'இலங்கையின் ஜாலியன் வாலாபாக்' என்றனர் அரசியலாளரும் ஏடுகளும்: அடுத்த மாநாடு மதுரையில் நடத்த அழைப்பு விடுத்தார் பேரா. சண்முகம் பிள்ளை.

**ஐந்தாவது மாநாடு** மதுரையில் 81 சனவரியில் நிகழ்ந்தது. நடத்தியது அ.தி.மு.க. ஆட்சி. மாநாட்டால் மதுரை நலம் பெற்றது. தமிழன்னை சிலை நிறுவப்பெற்றது; முது தமிழறிஞர் சிறப்பிக்கப் பெற்றனர். பெருமலர் வெளியிடப் பெற்றது. கருத்தரங்குச் செலவு 25 லட்சம்; மாநாட்டுச் செலவு 11 கோடி. இரண்டாம் மாநாட்டிற்கு எவ்வகையிலும் குறையா வகையில் வண்டிகள் வளைவுகள் வாண வேடிக்கைகள்!

தமிழகமே விழாக் கோலம் பூண்டது. வெளி நாட்டவர் வியந்தனர்.

**ஆறாவது மாநாடு** 87இல் கோலாலம்பூரில் நடக்க இருக்கிறது. 'உலகத் தமிழ் வளர்ச்சி வங்கி' ஒன்று அமைய இருக்கிறது. தமிழ் வளர்ச்சிக்கு உலகளாவிய உதவி செய்வது இதன் நோக்கம்.

ஒன்றை நன்றாக உணர வேணும்: சென்ற நூற்றாண்டு இறுதி வரை தமிழின் அருமை ஆராய்ச்சியெல்லாம் தமிழகத்தினுள்ளேயே முடங்கி நுடங்கிக் கிடந்தன. தமிழர் திறம் வெளி நாட்டவர் அறியவும், அயலவர் ஆராய்ச்சிகளைத் தமிழர் உணரவும் வாய்ப்பு நேராதிருந்தது; வாயில் திறவாதிருந்தது. இந்த உலகத் தமிழ் மாநாடுகள் அந்த அரிய வாய்ப்பினை ஏற்படுத்தியது கருத்தரங்கம் மூலமாக; பெருமை புரிய வைத்தன தி.மு.க; அ.தி.மு.க. இரண்டும் எடுத்த - தமிழகத்தில் நடந்த இரு மாநாடுகளும்!

2வது மாநாடு பற்றி நா. வானமாமலையும், நான்காவது பற்றி அரு. சோமசுந்தரமும்; தமிழக மாநாடுகள் பற்றி பெங்களூர் இலக்கு—கலாசார இயக்கமும் கருத்துரை நூல்கள் வெளியிட்டனர். 2 வது, 4 வது, 5 வது மாநாடுகள் பற்றி சாலை இளந்திரையன் முறையே உலகத் தமிழ், தமிழ் மாநாடு, அய்ந்தாவது தமிழ் மாநாடு ஆகிய நூல்களை எழுதியுள்ளார். நான்காம் மாநாட்டில் ஈழம் எரியத் தொடங்கியதனை 'எனது யாழ்ப்பாணமே' என நூலாக்கித் தந்துளார் க. சச்சிதானந்தன்; காந்தளக வெளியீடு.

## 35. கொள்கையும் கோட்பாடும்

இது இருவகையில் அடங்கும். ஒன்று பொதுவாக அறிஞர்களால் ஆராய்ச்சியாளர்களால் வரையறுக்கப்பட்ட கொள்கைகளையும் கோட்பாடுகளையும் (Principles & Policies) விளக்கி, இலக்கியங்களும் இலக்கணங்களும் இவ்வாறு இருத்தல் வேண்டும் எனத் துவக்கி அவற்றை இலக்கண இலக்கியங்களில் பாய்ச்சி எந்த அளவுக்கு அவை அமைந்துள-பொருந்திவந்துள என ஆராய்வது. வெளி வரையறைகளை வைத்து அளப்பது (Inductive method). இவற்றை முதுகலை அளவில் பாடத்

திட்டத்தில் இணைத்து ஒரு வினாத்தாளாகவும் பல்கலைக் கழகங்கள் Literary theories as applied to Litt. என்றவாறு வைத்துள.

மற்றொன்று அவ்வவ் இலக்கிய இலக்கணங்களை, ஆசிரியர்களை முழுவதுமாகப் பயின்று, அந்த இலக்கிய இலக்கணங்களில் அந் நூலாசிரியர்களும் கவிஞர்களும் தமக்கென என்ன கொள்கைளைக் கொண்டுள்ளார்கள், எந்த எந்தக் கோட்பாடுகளை நிலைபெறக் கொண்டு நூல்யாத்துளர் எனத் தேடித் திரட்டுவது. இது (deductive method) சாறு பிழிந்தும் சலித்தெடுத்தும் காண்பது.

முன்னது வெளியே இருந்து உள்ளே சென்று பொது அளவைகளை, அளவு கோல்களை வைத்துக் காண்பது; பின்னது உள்ளே மூழ்கி அவரவர்கள், அந்த அந்த நூல்கள் எந்த வகையில் என்ன முறையில் இயன்றுளர் என ஆராய்ந்து வெளிப்படுத்துவது. முன்னது பொது நிலை; பின்னது சிறப்புத் தனி நிலை. முன்னது (Voyage without) புறமுக நோக்கு; பின்னது (Voyage within) அகமுக நுழைவு. முன்னது முன்னமே உள்ள கருத்துக்களை, சட்டங்களை எந்த அளவுக்குப் பின்னவர்கள் பின்பற்றியுளர் எனப் பார்ப்பது; பின்னது தமக்கெனத் தனிக் கொள்கைகளாக எவற்றை வைத்து இழைத்துளர், அவற்றுக்கும் இதுகாறும் இருந்தவற்றுக்கும் என்ன வேறுபாடு, எந்த வகையில் விலகிச் செல்கிறார் (deviation), என்ன முறையில் இணைந்து போகிறார் என நுணுகி நோக்குவது.

இந்த அரும்பணியை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 75 தொடங்கி வியாழன் கருத்தரங்கில்-இலக்கியக் கொள்கைக் கருத்தரங்கில் பண்டு தொட்டு இன்று வரையிலான எல்லா நூல்கட்கும் கண்டு கணித்து முடித்துவிட்டது (exhausted) என்றே இயம்பலாம். அவ்வத்துறையில் வல்ல அறிஞர்களைக் கொண்டு, கட்டுரை படிக்கச் செய்து கலந்துரையாடல் வைத்து 150 கட்டுரைகளை வடித்துக் கொடுத்து விட்டது. காற்றோடு போகாமல் அவற்றைத் தொகுதிகளாக்கித் (10) தந்து விட்டது, 'தமிழ் இலக்கியக் கொள்கை' எனத் தலைப்பு இட்டு. இது ஆய்வாளர்கட்கு ஓர் அரும்பெட்டகம். தேடித் திண்டாடாது, படித்து வடிக்கும் தேவையின்றிப் பார்த்ததும் தெரிந்து கொள்ளும் வகையில் சாறு (Juice) போலே தந்துள்ளமை எக்காலும் போற்றலாம்; முக்காலும் பயன் நல்கும்.

இந்தப் போக்கின் பயனாய் திருமந்திரக் கோட்பாடு (ப. அருணாசலம்), தொல் எழுத்து-சொல்லிலக்கணக் கோட்பாடுகள் (செ. வை. சண்முகம்), திராவிட இலக்கணக் கொள்கை (வ. ஜெயதேவன்), தமிழ் இலக்கியக் கோட்பாடுகள் (முத்துச் சண்முகம்), பண்டைத் தமிழ் இலக்கியக் கொள்கைகள் (தி. ரா. தாமோதரன்), திரு.வி.க.வும் காந்தீயக் கோட்பாடுகளும் (ப. மகாலிங்கம்), கலையும் கலைக் கோட்பாடுகளும் (ஜான் சாமுவேல்), பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள் (ச.வே.சு.), இலக்கிய உரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடுகள் (ஆ. தசரதன்), தமிழ் இலக்கியத்தில் அகப் பொருள் கொள்கைகள் (நா. வள்ளியம்மாள்) முதலியன முகிழ்த்தன.

## 36. வினா-விடை

இந்த நூற்றாண்டில் இன்னொரு போக்கும் நோக்கத் தக்கது. இயன்றவற்றுக்கெல்லாம் வினா-விடை இயற்றி யளித்தல். இருவகையில் இவை அமையும். ஒன்று முதலி லிருந்து முடிவு வரை மொன்னத்தனமாகப் படித்து ஒன்றும் உள்ளுக்குள் வாங்காது போவதை விடப் பிரித்து வரையறுத்துப் பயில்வது. இதில் இன்றியமையாப் பகுதிகளில் ஊன்றி நிற்க முடியும்; ஐயப்பகுதிகள் அலசப் பெறும், விளக்கமுறும்; அறிந்த பகுதிகள் புரியவரும், தெரிந்த இடங்களில் தெளிவு தோன்றும். எல்லாவற்றையும் படிப்பதைவிட இன்றியமையாச் சிறப்பின மட்டும் செரிப்பது நன்று.

மற்றொன்று தேர்வு நோக்கில் தயார் செய்து கொள்ள, என்ன கேட்கப்படும் எப்படி பதிலிறுக்கலாம் என்றறிய உதவு மாறு முக்கிய பகுதிகளில் மட்டும் முனைந்து நிற்பது. குறைந்த முயற்சியில் நிறைந்த பயன் பெறுவது, தேவையானவற்றை மட்டும் தேர்வது இதன் நோக்கம். பத்திரிகைகளில் கூட வினா விடை, கேள்வி பதில் என்ற பகுதி இன்றியமையாது இடம் பெறுகிறதே! Question & Answer என்ற நிலை பெரிதும் இலக்கணங்கட்கே இடம்பெறுகிறது.

திருப்பனந்தாள் தா. மா. வெள்ளை வாரணனார் நன்னூல், தண்டி, காரிகை, தொல்காப்பியம் போன்ற வற்றுக்குப் படைத்துள்ளார். கல்வெட்டுக்களுக்குக் கூட வினா விடை வந்துளது; பெரியகுளம் புலவர் அருளாளன், வித்துவான் வ. தங்கையா போன்றார்வடித்துளர்.

சமயம், தமிழ் பற்றியும் வினாவிடைகள் உள. முன்னதற்கு எடுத்துக்காட்டாக, காரப்பங்காடு வேங்கடாசாரியாரின் வைணவ, மறை-திருநாவுக்கரசின் சைவமத வினா விடை, நாகர்கோவில் கே. ஆறுமுக நாவலரின் இந்துமத பாலபாடம், யாழ்ப்பாண ஆறுமுக நாவலரின் பாலபாடம் நூல்கள் அமைகின்றன. ந. சி. கந்தையா பிள்ளையின் தமிழ் மொழி, தமிழர் பற்றிய சில நூல்கள், திருக்குறள் நொடி வினா விடை (மு. ச. சிவம்) போன்றன பின்னதற்குச் சான்றாம்.

## 37. கதைகள் வரிசை

பேரிலக்கியங்களைக் கதைகளாக்கித் தருவதும், அறநூற் கருத்துகளை அறிந்த கதைகள் கொண்டு விளக்கிக் காட்டுவதும் கற்பிதக் கதைகள் வைத்து மொழிவதும் இந்நாளைய போக்காக இருக்கிறது. பெருங்காப்பியங்களைப் பதம்பிரித்தும் பொருள் அறிந்தும் பயிலும் இன்னல் போக்கி, அருங்கதைகளை அறியட்டும் என வடித்துத் தந்துளர். இவை அப்பெரு நூல்களை ஒரே பார்வையில் முழுதும் அறியவும் முனைந்து மேலும் கற்கத் தூண்டுவதாகவும் அமைகின்றன. தொடக்க நிலையினருக்கு அறிமுக நூற்களாக அமைகின்றன.

கசப்பான உண்மைகளை கடினக் கருத்துக்களை எளிதே இனிதே கற்கண்டு போல் புரிய, கதைகளாக விளையாட்டுப் போல் தெரிந்து கொண்டுவிடச் செய்துளர். அரிய கருத்துக்களை விரிந்து பரந்த இலக்கிய இதிகாசங்களிலுள்ளகதைகள் கொண்டு தெள்ளிதின் துல்லியமாகத் துய்த்து மகிழ இவை இனிப்பு மருந்துகளாகப் (Sugar Coated Pills) பயன்படுகின்றன. இந்த வகையில் வந்தவை அறநூல்கட்கும், சங்க நூற்கும், காப்பியங்களுக்குமே எனலாம். குழந்தைகள், சிறுவர்கள் அறிய வேணும் எனும் பெரிய நோக்குடன் பிறந்தவைகளே இவை. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இதில் தலை நிற்கிறது. அருணோதயம் அடுத்து அமைகிறது.

திருக்குறள் விளக்கக் கதைகள், நீதிக் கதைக் கொத்து, நீதி நூல் விளக்கக் கொத்து, இலக்கியச் சிறு கதைக் கொத்து, சங்க நூற்கதைக் கொத்து (அ. நடராசபிள்ளை), காப்பியக் கதைக் கொத்து (புலவர் அரசு), இளைஞர்க்கான...கதை, சேக்சுபியர் கதைக் கொத்து (கா. அப்பாதுரையார்), இலக்கியச் சிறு கதைக் கொத்து போன்றன குறிப்பிடத்தக்கன.

விளக்கக் கதைகளாக : ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், மூதுரை, உலக நீதி, நல்வழி, நன்னெறி, வெற்றிவேற்கை, நீதி நெறி-விளக்கக் கதைகள்; திருக்குறள், நாலடி, பழமொழி, அற நெறிச்சாரம், நீதிவெண்பா-விளக்கக் கதைகள் வெளிவந்துள.

செங்கை சிவநேசனின் தமிழறிஞர் வரலாற்றுக் கதைகள், தமிழ் வளர்த்த முனிவர்- பெரியோர் கதைகள்; செந்துறை முத்துவின் மகாபாரதக் கதைகள், நற்றிணை, குறுந்தொகை அகநானூறு, கலி, புறநானூற்றுக் கதைகள், வீர இலக்கியக் கதைகள்; வசந்தா ராமநாதனின் ஆத்திச்சூடி கொன்றை வேந்தன் நீதிக் கதைகள், மூதுரை நன்னெறி வெற்றிவேற்கைக் கதைகள்; புலவர் அரசு மணியின் சிலப்பதிகாரக் கதைகள் அருணோதயம் அளித்தவை.

இவ்வாறு செறிவுமிகு செந்தமிழ்ப் பனுவல்களின் அறிவு மிகு கருத்துக்களைக் கதைகளாகக் காண்பதன் மூலம், கருத்தும் புரிகிறது; கடின இடங்களும் தெளிவாகின்றன. இளைஞர்கள் பேரிலக்கியங்களை இன்னலின்றிக் கன்னல்போல் சுவைத்து அறியவும், பிற்றைநாளில் பெருங்காப்பியங்களைப் படித் தறியத் தூண்டுகோலாகவும் விளங்குகின்றன. வருங்காலமும் இளைய தலைமுறையும் பண்டையோர் நமக்களித்தப் பெருஞ் சொத்துக்களைப் படித்தறிய வேணும் என்ற நோக்கில் எளிமைப் படுத்திக் கொடுத்த கொடைகளாகும் இவை. கதைகள் தாமே என ஒதுக்க முடியா அளவுக்குக் கணிசமான பயன்தந்து நிற்கும் கருவூலங்களாகக் கருதிப் போற்றுதல் கண்ணியமாகும்.

## 38. மேற்கோள் நூல்கள்

பன்னூற்றாண்டைய பைந்தமிழில் - எண்ணரிய பொன்னூல்கள் பொலியும் நந்தமிழில், - ஆன்றோரும் சான் றோரும் தோன்றிய தொன்தமிழில் மேற்கோள் நூல்கள் (Book of Quotations, Quotable Quotes) போதிய அளவில் போற்றத்தக்க வகையில் தோன்றவில்லை. இது பெருங்குறை- இழுக்கும் ஆகும். நமக்கும் பிந்தை மொழிகளில் எல்லாம் பெரிய பெரிய மேற்கோள் நூல்கள் பிறந்த வண்ணமுள. பல நூல்கள், ஆசிரியர்கள், கவிஞர்களினின்றும் பொறுக்கு மணிகள் பொன்னென மணியெனத் தொகுக்கப் பெற்றுள; சேக்சு பியர் போன்ற தனிக் கவிஞர்களின் தகவுரைகளைப் பல்வேறு தலைப்புகளில் தொகுத்தளித்துளர். அந்தக் கவிஞர் நூல் களையோ வேறெந்த அறிஞர் நூல்களையோ தேடித்

திண்டாட வேண்டா; சுளையென, சொக்கத் தங்கமென எல்லார்க்கும் எப்போதும் பயன்படும்வண்ணம் பொற்குவை போல் சிறந்தனவற்றைத் திரட்டி உருட்டித் தந்துளர். அது போல் அருந்தமிழில் பெருநூல்கள் சாறெனவடித்துத் தரப் பட வேண்டாமா?

இவை வழிகாட்டும் ஒளிவிளக்குகள் அல்லவா? வித்துப் போல் விழுதுகள் போல் வாழையடி வாழையென வருங்காலத் தலைமுறை வைத்துப் போற்றும் முத்துக்கள் அன்றோ அவை? காலாகாலத்திற்கும் கருத்தூட்டும் கருத்துப் பெட்டகங்கள் ஆகுமே! இத்தகு பொற் சுரங்கங்கள் நற்றமிழில் தோற்றமுறல் மிகு தேவையாம். டாக்டர் மா. செல்வராசன், ஏ. கே. செட்டியார் (கொய்த மலர்கள்), தாயம்மாள் அறவாணன், கழகத்தார், லிப்கோ, பிரேமா பிரசுரத்தார் போல்வார் சிறிய அளவில் செய்துளர். மு. ச. சிவம் மேற்கொள் அகராதி, இணைமேற்கொள் அகராதி படைத்து வழி கோலுகிறார். ஆர். மதிவாணன் Quotation on Tamil and Tamil Culture வடித்துள்ளார். பொன்மொழிகள் எனச் சின்னூல்கள் சில வந்துள. அனைத்து வகையிலும் பயன்படும் பாரிய மேற்கோள் நூல்கள் அரும்ப வேண்டுவது மிகவும் இன்றியமையாதது.

## 39. பொருளடைவு

சொல்லடைவுகள் போலே பொருளடைவுகள் படைத்திடும் போக்கு உளது. இது பொருளாய்வு (Semantics) செய்ய மிகவும் உதவும். இன்றியமையாததும் கூட. அண்ணாமலை மு. கோவிந்தசாமி திருக்குறள் பொருளடைவு செய்துள்ளார். மு. ச. சிவம் திருக்குறள் பொருளடைவு, திருக்குறள் சொற் பொருட் களஞ்சியம் தந்துளார். திவ்வியப்பிரபந்தச் சொற் பொருட் தொகுதி மூன்றும், கம்பராமாயணத்திற்கு நான்கும் வந்துள.

திருவாவடுதுறை ஆதீனம் 'சங்க இலக்கியச் சொற்களஞ்சியம்,' பிரெஞ்சுப் பண்பாட்டுக் கழகம் 'பழந்தமிழ் நூற் சொல்லடைவு' (சங்க, கீழ்க்கணக்கு), மர்ரே கம்பெனி 'பாட்டும் தொகையும் சொற்பொருள்' போன்றவற்றால் இன்ன பொருள் இன்ன சொல்லால் (இப்பொருள் இச் சொல்லால்) இயன்று வந்துள என அறியலாம்.

உ. வே. சா. பதிப்பித்த ஒவ்வொரு நூலிலும் 'அரும் பொருளகராதி' தொடக்க காலத்திலேயே, தந்து பாட்டை போட்டுத் தந்தார்; இந்த வகையிலும் அவர் முன்னோடி என்னலாம். இச்சொற்பொருள் அடைவுகள் குறு அகராதிகளாகின்றன; பெரும் அகராதிகளின் சிறு கூறு களைக் கொண்டிருக்கின்றன; இவை அகராதிக்கு இட்டுச் செல்லும் அருமையன. சொற்கூறுகளைக் கண்டறிந்தது போன்றே பொருட் கூறுகளையும் பகுத்தாயும் போக்கு இந்த நூற்றாண்டில் எழுந்தமை, தமிழ்ச் செழுமைக்கு நாற்றங்கால் இட்டதாகும். கேரளப் பல்கலைக் கழகம், பலவற்றில் முதற் பணி புரிந்தமை போன்றே, அடைவுத் துறையிலும் ஆக்கப் பணி ஆற்றியுளது.

## 40. தமிழ் வளர்ச்சிக் கழகம்

தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார் கல்வி அமைச்சராக இருந்த காலை அவரது அருமுயற்சியால் 17-12-1946இல் தொடங்கப்பெற்றது. நோக்கம்: பண்டைப் பெருமைகளோடு, இற்றைநாள் தேவைக்குரிய பிற பண்புகளும் பெற்றுப் பைந்தமிழ் சிறந்திடத் தொண்டாற்றுதல். முக்கிய பணிகள் மூன்று : 1. கலைக் களஞ்சியம் வெளியிடுவது; 2. ஆண்டு தோறும் தமிழ் வழங்கு பெருநகர்களில் தமிழ் விழா எடுத்தல்; 3. பல்துறை நூல்கட்குப் பரிசு வழங்கிப் போற்றுதல்.

**கலைக்களஞ்சியம் :** 24-8-1947இல் பணி தொடங்கியது. முதற்றொகுதி 54லும், பத்தாம் தொகுதி 68லும் முற்றுப் பெற்றது. பல்துறை அறிவுச் செல்வங்களையெல்லாம் பைந் தமிழில் தருவதற்கான பெரும் முயற்சி ம. ப. பெரியசாமித் தூரனிடம் ஒப்படைக்கப் பெற்றது. அவரே தலைமைப் பதிப்பர்; பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, ராஜு முதலியார், கு. மதுரைமுதலியார், சிறுவை மோகனசுந்தரம் போன்றார் துணைவர்கள். குழந்தைக் கலைக் களஞ்சியமும் தொகுக்கப் பெற்றது. மறுபதிப்புக் கொணர ந. சுப்பு ரெட்டியார் நியமிக்கப்பட்டார். பின் களஞ்சியப் பணி மூடப் பெற்றது.

**தமிழ்விழா :** முதல்விழா மதுரையிலும் அடுத்து திருவாரூர், கோவை, யாழ்ப்பாணம், சென்னை, தில்லியிலும் நடந்தன. விழாவின்போது இலக்கியச் சொற்பொழிவோடு அறிவியற் பொழிவுகளும் அமைத்தமை தனிச்சிறப்பு; அந்நாளிலேயே அறிவியல் தமிழுக்குச் சிறப்புத் தந்தமை சாலச்சிறப்பு

வாய்ந்தது. பின் பிற ஊர்களில் விழா எடுப்பது நின்றது; சென்னையிலேயே பரிசளிப்பு நிகழ்ச்சி மட்டும் நிகழ்கிறது.

**பரிசளிப்பு :** தொடக்கத்தில் 12 பகுதிகளாகப் பிரிக்கப் பட்டு ஓராண்டில் முதல் ஆறுக்கும் அடுத்த ஆண்டில் மறு ஆறுக்கும் பரிசு வழங்கப்பெற்றது. இரண்டு ஆண்டுகளில் வெளியாகும் நூல்கள் பரிசுக்குரியன. 57இல் 20 பகுதியாக விரிக்கப் பெற்றது. முதலில் 500ரூ. தான் பரிசுத் தொகை. 47 முதல் 60 வரை கழகம் வழங்கியது. 61முதல் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் ஏற்று, ஆண்டிற்குப் 10 தலைப்புகள் வீதம் பரிசளித்தது.முதற் பரிசு ரூ,1000, இரண்டாம் பரிசு சான்றிதழ். 71 முதல் இரண்டாம் பரிசு ரூ,500-தரப்பட்டது. 72 தொடங்கி முதற் பரிசு 2000. இரண்டாம் பரிசு 1000 என உயர்த்தப் பெற்றது. உயர்த்தியவர் முதல்வர் மு. கருணாநிதி. ஆண்டு தோறும் 21 தலைப்புகள் என நீண்டது.

நடுவில் வழங்காது நின்றிருந்தது; 66-70க்குரிய பரிசுகள் 7-4-73இல் சேர்த்து வழங்கல் பெற்றன. 71-72க்கு 21-11-75 லும் 75-80க்கு 15-1-82லும், 80-81க்கு 6-6-81லும்,81-82க்கு 16-1-84லும் 83க்கு 15-1-85லும், 84-85க்கு 15-1-86லும் வழங்கப் பெற்றது: 75 தொடங்கி தமிழ் வளர்ச்சித் துறை இத்திட்டத்தை ஏற்று நடாத்துகிறது, இக்கழகம் மூடப்பட்ட தால்.

முறை: தகுதியுடைய நூல்களை அனுப்புமாறு நாளிதழ் களில் வேண்டப்படும். அச்சடித்த நூல்கள் மட்டுமே ஏற்கப் பெறும்; பிறமொழி பெயர்ப்பு நூல்கள் ஏற்கப்படமாட்டா. மன்ற உறுப்பினர் மூவர் போட்டி நடத்தும் நிலைக்குழு உறுப் பினர்களாக நியமிக்கப் பெறுவர். இக்குழு ஒவ்வொரு தலைப்பு நூல்களைக் கூர்ந்தாய்ந்து மதிப்பிடத் தனித்தனி மூன்று நடுவணர்களை நியமிக்கும். இவர்கள் அளித்த மதிப்பெண் கூட்டி முதலிரு மதிப்பெண்கட்குப் பரிசளிக்கப்படும். பரிசாளர் கள் சென்னை வந்து செல்ல முதல் வகுப்பு ரயில் கட்டணமும் பயணப்படியும் வழங்கப்பெறும். வெளிநாட்டாசிரியருக்குச் சான்றிதழ் மட்டுமே அளிக்கப்படும்!

80 தொடங்கிச் சிறந்த நூல்களை வெளியிட 1000 படிகட்கு ஆகும் செலவில் 50 விழுக்காடு நிதியுதவி ரூ. 5000 மேலளவாக வழங்கப்படுகிறது. கதை, நாடகம், சமய நூல்கட்கும், வெளி யீட்டாளர்க்கும் இல்லை. அச்சிடும் எண்ணிக்கையில் ¼ நூல்கள் அரசுக்குத் தரவேண்டும். அச்சகச் சான்றளித்துப் பாதித்

தொகையும், அடித்து முடிந்துப் படிகள் அளித்த பின் மீதித் தொகையும் பெறலாம்.

சிறந்த வரைவுகள், குறிப்புக்கள் எழுதும் அரசுப் பணியாளர்க்கு 500, 300, 200 என மூன்று பரிசுகளும், சிறந்த முறையில் தமிழ் ஆளும் துறைத் தலைமை அலுவலகம், மாவட்டத் தலைமையலுவலகம் தகுதிச் சான்றிதழ் பெறும். 'செந்தமிழில் புதுப்புது நூல் விளைதற்குச் செல்வத்தைச் செலவு செய்தால், நந் தமிழ் நாடு உயராதோ? நலிவெல்லாம் தீராதோ?- பாவேந்தர்.

## 41. தமிழ் வளர்ச்சித் துறை

'சென்னை அரசாங்கம்' கல்வி அமைச்சர் சி. சுப்பிரமணியம் கருணையால் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக் கழகம் ஒன்றை நிறுவியது. இது தமிழை வளம் பெறச் செய்யும் தனி நிலையமாக இயங்கியது. பணிகள்: 1. 58 ஆட்சி மொழிச் சட்டக் குழுவின் செயற்பாடு பற்றி ஆராய்வது, 2. தமிழக வரலாற்றுத் தொன்மை கண்டு இந்தியத் தொல்பொருட் துறையுடன் இணைத்தல், 3. இந்திய அரசின் கல்வெட்டுச் சாசனப்பணிக்கு உதவும் வகையில் கோயிற் கல்வெட்டுக்களை வெளியிடுவது, 4. வெளிவராத அரும் நூல்களைப் பதிப்புத் துறையுடன் இணைந்து வெளிவரச் செய்தல், 5. நாடோடி இலக்கிய ஆராய்வினை ஊக்குவது, 6. கிராம நூலகத் திட்டத்தோடு குழந்தை இலக்கியத்தையும் வளர்த்தல், 7. நூல்கள் பயிலும் வழக்கத்தை ஊக்க வெளியீட்டு நிலையங்களைப் போற்றுவது, 8. கையெழுத்துப் படிகளைப் படியெடுப்பது, அகராதி, கலைக் களஞ்சியம், மேற்கோள் நூல்கள் வெளியிட உதவுதல், 9. பல் துறையிலும் பைந்தமிழ் பரவிப் பயன்பட ஆவன செய்வது.

இந்த 9 நோக்கம் கொண்ட மன்றின் முதற் செயலாரக வே. கன்னையன் விளங்கினார். பின் அ. ச. ஞானசம்பந்தம், மு. ரா. பெருமாள் முதலியார், வே. கார்த்திகேயன் போன்றார் பிறங்கினர். காங்கிரசு ஆட்சியில் கிளைத்த இம் மன்றினை, தி.மு.க அரசு 'தமிழ் வளர்ச்சித் துறை' என்றமைத்துப் பணிகளை விரித்தது. பேரா. முத்து ராசாக் கண்ணனார், கொண்டல் சு. மகாதேவன், மா. நன்னன் இயக்குநர்களாக இலங்கினர். இப்போதைய இயக்குநர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள். செங்கைப் பொதுவன், ஆ. பன்னீர்ச் செல்வம் துணைவர். குறளகத்தில் இயக்குநரகம்; தமிழசு

மாவட்டங்களில் துணை இயக்குநர்கள் செயற்பட்டு வருகின்றனர். மேல்சபை மறைந்தபின், தமிழ் வளர்ச்சித் தாளாளராக ம.பொ.சி. அமர்த்தப்பட்டுள்ளார்.

ஆண்டுதோறும் சனவரியில் தைத்திங்கள் 2ஆம் நாள் **வள்ளுவர் விழா** எடுக்கிறது. தமிழக முதல்வரால் விருதுகளும் பரிசுகளும் முதுதமிழறிஞர்கட்கு உதவித் தொகையும் வழங்கப் பெறுகிறது. மார்ச்சுத் திங்கள்தோறும் தேரழுந்தூரில் **கம்பர் விழா** நடத்துகிறது. முப்பெரும் விருதுகள் வழங்கி வருகிறது.

**பாவேந்தர் பாரதிதாசன் விருது**: ஒவ்வோர் ஆண்டும் (ஏப்ரல் 29) பிறந்த நாளில் சிறந்த கவிஞர் ஒருவருக்கு விருது வழங்கப்பட்டு வருகிறது. ரூ 10,000 பரிசுத் தொகையும், 4 சவரன் எடையிலான பொற் பதக்கமும் பெறுவர். விருது பெற்றோர் வருமாறு:

1978 கவிஞர் சுரதா
1979 மறைந்த கவிஞர் எஸ். டி. சுந்தரம்
,, ,, கவிஞர் வாணிதாசன்
1980 கவிஞர் முத்துலிங்கம்
1981 மறைந்த கவிஞர் பட்டுக்கோட்டை கலியாண சுந்தரம்
1982 கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம்
1983 மறைந்த கவிஞர் திண்டிவனம் வகாப்
காணிக்கை விருதாகத் திங்கள்தோறும் ரூ. 500 புதுவைக் கவிஞர் சிவப்பிரகாசம பெறுகிறார்
1984 கவிஞர் நா. காமராசன்
1985 கவிஞர் ஐ. உலகநாதன்
1986 கவிஞர் மு. மேத்தா.

**தமிழ்ப் பெரியார் திரு.வி.க. விருது**: தமிழ்த் தென்றல் கலியாண சுந்தரனாரின் நினைவைப் போற்றும் வகையில் ஆண்டுதோறும் சிறந்த எழுத்தாளர்க்கு விருது வழங்கல்.

விருதுக்குரியவர் ரூ. 10,000 பெறுகிறார்.

1979 ஜெகசிற்பியன்
1980 நாரண துரைக்கண்ணன்
1981 அ. கி. பரந்தாமனார்
1982 திருக்குறளார் வி. முனிசாமி
1983 பன்மொழிப் புலவர். கா. அப்பாதுரையார்

1984 கோவி. மணிசேகரன்
1985 க. த. திருநாவுக்கரசு
1986 கி. ஆ. பெ. விசுவநாதம்

**அண்ணா விருது :** அறிஞர் அண்ணாவின் கொள்கை குறிக்கோள் கோட்பாடுகளின் நெறி நிற்பவர், நிலை நிறுத்துபவர், பரப்புநர், அவை பற்றி ஆய்வு செய்யும் ஆய்வாளர் என்னும் நான்கு வகையாலும் தகுதி பெறுவோரே இவ்விருதினைப் பெறுதற்குரியவராவர். தங்கப்பதக்கம் அணிவிக்கப்பெறும்.

1985 தமிழக முதல்வர்
மாண்பமை எம்.ஜி.ஆர்.

## 42. தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம்

10-8-1955, மைய அரசின் (16-10-54) தில்லி சங்கீத நாடக அகாதமியின் குறிக்கோள்களை நிறைவேற்றும் மாநிலக் கிளையாக அமைவது. 55 மே. நிறுவப் பெற்று, ஆகஸ்டு முதல் இயங்குவது. முதலில் 'சென்னை மாகாண சங்கீத நாடக சங்கம்' என்றுதான் வழங்கியது. தி. மு. க. அரசின் போதே இப்பெயர் ஏற்றது; இயலையும் இணைத்தது.

தலைவர்கள் : 55-58 ருக்மிணி தேவி; 58-63 எஸ். வெங்கடேசுவரன், ஐ.சி.எஸ்; 63-64 நீதிபதி மா. அனந்தநாராயணன், ஐ. சி. எஸ்; 64-68 நீதிபதி கே. எஸ்.வெங்கடராமன், ஐ.சி.எஸ், 68-70 கே. சுப்பிரமணியம்; 70-71 எஸ். ஜி. மணவாள ராமானுஜம்; 71-85 ஜஸ்டிஸ் பு. ரா. கோகுல கிருட்டிணன்' 86 முதல் **கவிஞர் வாலி**.

செயலர்கள் : 55-65 ஈ. கிருஷ்ணையர், 65 ஆர். சுந்தரராசன், 65-77, எஸ். டி. சுந்தரம், 77-79 கே. ஆர். ராமசாமி 81 முதல் டி. வி. நாராயணசாமி.

முத்தமிழுக்கு, சிறப்பாக இசை நாடக மேம்பாட்டுக்கு ஆவன செய்து வருகிறது. முத்தமிழ்த் துறையின் வித்தகர்களை ஆண்டுதோறும் ஏற்றுப் போற்றும் வகையில் 'கலைமாமணி' விருது - தங்கப் பதக்கம் தந்து பெருமைப்படுத்தி வருகின்றது, 61-62 முதல் இசை நாடக ஏந்தல்கட்கும்; 75-76 முதல் இயற்றமிழ் அறிஞர்கட்கும் வழங்கப்பட்டு வருகின்றது.

இயலுக்கு :

1976 ம. பொ. சிவஞானம்
1977 மே. வீ. வேணுகோபால பிள்ளை
1978 கி. ஆ. பெ. விசுவநாதம்
1979 தெ. பொ. மீ.
1980 அவ்வை சு. துரைசாமிப் பிள்ளை
1981 கா. அப்பாதுரையார்
1982 புரிசை முருகேச முதலியார்
1983 கி. வா. ஜகந்நாதன்
1984 திருக்குறள் வீ. முனிசாமி
1985 க. வெள்ளை வாரணனார்
1986 அ. ச. ஞானசம்பந்தம்
1987 நா. பாண்டுரங்கன், பழனி இளங்கம்பன்

இசைக்கு :

1962 பாபநாசம் சிவன்
1963 மதுரை மாரியப்ப சுவாமிகள்
1967 கீவளூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை
1968 கவியோகி சுத்தானந்த பாரதியார்
1969 ம. ப. பெரியசாமி தூரன்
1970 சுவாமி சரவண பவானந்தர்
1971 என். எஸ். ராமச்சந்திரன்
1972 திருச்சி தியாகராஜன்
1973 சிதம்பரம் சுவர்ண வெங்கடேச தீட்சிதர்
1974 சுத்தசத்துவானந்தா (என். எஸ். சிதம்பரம்)
1975 உளுந்தூர்பேட்டை சண்முகம்
1976 ஆ. சு. முத்துக்குமாரசாமி
1977 தருமபுரம் சவாமிநாதன்
1978 குருவாயூர் பொன்னம்மாள்
1979 லால்குடி சுவாமிநாதன்
1980 கே. வீரமணி
1981 ஆர். ஜெயலட்சுமி, ஆர். ராஜலட்சுமி
1982 பித்துக்குளி முருகதாஸ்
1983 எஸ். நமச்சிவாய ஓதுவார்
1984 சோ. முத்துக்கந்தசாமி தேசிகர்
1985 சுவாமிநாத ஐயர்
1986 நாகர்கோயில் கே. மகாதேவன்

நாடகத்துக்கு :

1962 பி. எஸ். ராமையா
1963 ரா. வேங்கடசாலம்
1964 நாரண துரைக் கண்ணர்
1965 எஸ். டி. சுந்தரம்
1966 கு. சா. கிருட்டிணமூர்த்தி
1967 அரு. ராமநாதன்
1968 தி. ஜானகிராமன்
1969 சலகை ப. கண்ணன்
1970 ஏ. எஸ். ஏ. சாமி
1971 மதுரை திருமாறன்
1973 திருவாரூர் தங்கராசு
1974 இரா. பழநிச்சாமி
1975 தோட்டக்கார விசுவநாதன்
1976 திலகம் நாராயணசாமி
1977 கோமல் சுவாமிநாதன்
1978 சி. எம். வி. ரமணன்
1979 டி. என். சுகி சுப்பிரமணியன்
1980 குடியேற்றம் ஈ. நாகராஜன்
1981 குடியேற்றம் அடியார்
1982 மனசை ப. கீரன்
1983 திருச்சி பாரதன்
1984 ஏ. எஸ். முத்துச்சாமி
1985 டாக்டர் வாசவன்

73 முதல் மறைந்த கலைமேதைகளின் திருவுருவப் படங்கள் மன்றத்தில் திறந்து வைக்கப் பெறுகின்றன. 75 முதல் பழம் கலைஞர்கட்குப் பொற்கிழி வழங்கி வருகிறது. 67 ல் தியாகையரின், 76 ல் முத்துசாமி தீட்சிதரின் 2வது நூற்றாண்டு; 76 ல் அருணகிரியாரின் 6 வது நூற்றாண்டு விழாக்கள் கொண்டாடியது. 79 முதல் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் நினைவுநாள் கொண்டாடுகிறது. 78 ல் பத்து நாட்கள் கிராமியக் கலைவிழா எடுத்தது. ஏ. எம். சின்னசாமி முதலியாரின் Oriental Music in European Notations முன்னுரை, ச. து. சு. யோகியாரின் கூத்தநூல் போன்றன வெளியிட்டது. 10-17.8.80 இல் வெள்ளி விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. மலரும் வெளியிடப்பெற்றது. ஆண்டு மலர்களும் வெளி வருகின்றன. **முகவரி** : 'தென்றல்' கிரீன்வேஸ் சாலை, சென்னை-28.

**கவிஞர் வாலி:** (ரெங்கப்பா). திருவரங்கம். அன்னை பொன்னம்மாள். தொடக்கத்தில் நாடக நடிகர்; இயக்கியும் இருக்கிறார். வானொலியில் ஒப்பந்தக் கலைஞர். கண்ணதாசன் காலத்திலேயே, இணையாகக் கவிதை எழுதிப் புகழ் பெற்ற பெருமையர்.

இசைத்தமிழ்த் (திரைக்) கவிஞரான இவர், இயற்றமிழ்க் கவிகளும் பாடியுள்ளார். மரபில் 'அம்மா' (76); புதுசில் 'பொய்க் கால் குதிரை' (82), பெரிய புள்ளிகள் (84) மூன்றும் முக் கனிகள். பிராந்தி, பாவாடை, அனுமார் கோயில் மணி ஓசை சிறு கதைகளில் சில. பெரியவர்கள் பலரின் அறிமுகம் ஆரம்ப கால முதல் இவருக்குக் கிட்டிவருவது பேறாகும்; இதனை எண்ணிக் களிக்கிறார் இவர்.

**சில துளிகள்:** 'எங்கள் இந்திராவே! எழுந்து நடந்த இந்தியாவே! நீ இருந்த வரையில் இந்திரா காந்தி, இறந்த வகையில் இன்னொரு காந்தி. 48ஐத் திருப்பிப் பார்த்தால் - 84 என்றே ஆகும், வருடம் திரும்பி யிருப்பது போல்-வன்முறையும் திரும்பி யிருக்கிறது; ஆம்! தேசப்பிதாவிற்கு வழங்கிய மாதிரியே -தேச மாதாவிற்கும் வழங்கி யிருக்கிறார்கள். ம்!என்ன சொல்லி என்ன? நீ தேசத்திற்காக அழுதாய், இன்று - தேசம் உனக்காக அழுகிறது!

பாரதத்தின் புதிய தலைவனே! பைஜாமா ஜிப்பாவில் பவனிவரும் இந்திராவே! நாற்பது வயது நேருவே! (ராஜீவ்). எத்துணையோ நடிகர்களைப் பார்த்திருக்கிறேன், நடிகர்களில் நான் பார்த்த முதல் மனிதன் நீதான்! (எம். ஜி ஆர்). சட்டை வேட்டி - அணிந்து நடக்கும் சங்கத் தமிழே! நீ மூவேந்தர்களின் மொத்த வடிவம்! சோழன்-திருவாரூரில் தேரை ஓட்டியதால்! பாண்டியன்-பைந்தமிழைப் பேணி வளர்த்ததால்! சேரன் சிலம்பினை மீண்டும் திரையில் இசைத்ததால்! (கலைஞர்). ஓ! உன் சிம்மக்குரல் எங்கள் செவிகளில் விழுந்தபின்பே-எங்களுக்குத் தமிழின் தித்திப்பு தெரிய வந்தது. (சிவாஜி கணேசன்).

நாகூரில் பிறந்த தாகூர்! நபிகளை வணங்கும் நாவுக்கரசர்! இவன்-எக்காலத்தும் கம்பனுக்கு வக்காலத்து வாங்கும் வக்கீல்! எம்மதத்தவரும் இவனை எம்மைச் சார்ந்தவன் எம்மைச் சார்ந்தவன் என்பதால் தானோ என்னவோ...இவன் இன்ஷியலே-எம். எம். என்று அமைந்தது போலும்! (ஜஸ்டிஸ் இஸ்மாயில்). கர்நாடக சங்கீதத்தின் கற்பு இன்னமும் இவனால்தான்

காப்பாற்றப்பட்டு வருகிறது! ஒரு பயில்வான்-சங்கீதம் பயில் வான் என்பதற்கு...இவன் சரீரமும் சாரீரமும் சாட்சி (மதுரை சோமு). இந்த **மேத்தா** விலாசம் எல்லோருக்கும் தெரியாமல் இருக்கலாம்; இவனது மேதா விலாசம் மக்களுக்கெல்லாம் தெரியும்! இலக்கணத்தை மீறிய புதுக் கவிதைக்கு-இவன்தான் இலக்கணம்! (கவிஞர் மு. மேத்தா). அய்யா! நீ-கம்பனுக்குக் கிடைத்த இரண்டாவது சடையப்பன்; உன்னுடைய இறப்பில்-கம்பன்...இரண்டாவது முறையாக இறந்து போனான்! (கம்பன் அடிப்பொடி சா. கணேசன்)

மேகம்—மலையப்பன் தலைக்கேற்ற முண்டாசுத் துண்டு
மழையைக் கருத்தரிக்கும் நிறைமாதப் பெண்டு.

மழை— உப்புக் கடல் நீரை உண்ட மேகம் துப்பிய எச்சில்

பனி — இருட்டுத் தேவன் திருட்டுத்தனமாய்ச்
சுருட்டுப் பிடித்த புகையோ?
இரவும் உலகும் உறவு நடத்த
இறைவன் போட்ட திரையோ?

நிலவு— முகிலாம் பட்டுத் துகிலை நீக்கி
முலைப்பா லூட்டுங் குடும்பத் தலைவி!
அகிலம் அவளது மகவைப் போலே
ஆடியிருக்கும் பாலைப் பருகி!

தாய்— நனைந்தாய் மழையில், காய்ந்தாய் வெயிலில்
நடந்தாய்; குடும்பத் தேரிழுத் தாய்!

'இவைகள் அனைத்தும் கொற்கை முத்துக்கள்; தென்றல் தழுவ மலர்ந்த தேன் மலர்கள். (முல்லை சக்தி). வாலியின் கவிதைகள் தமிழுக்கு ஒரு புதுக் காலம்; கவிதைக்கு ஒரு புதுக் கோலம் இந் நாள் தமிழக மக்கள் இதயத்தில் நிலையான கலையான மலை யான இடத்தில் இருந்து வருபவர். கவிதைச் சோலையில் புத்தம் புதிய பூக்களைப் படைக்கும் திறமும் உரமும் பெற்றுள்ளார்' (நா. பாண்டுரங்கன்).

70இல் சிறந்த கவிஞருக்கான வெள்ளி யாழும் 3000 வெண் பொற்காசுகளும் தமிழரசு வழங்கியது 72இல் கலைமாமணி; 74இல் திருப்பனந்தாள் புலவர் மன்றம் புலவர் கீரன் தலைமை யில் 'திரைக்கவித் தென்றல்' பட்டம் தந்தது; சினிமா ரசிகர்கள் சங்கம் நான்கு முறை சிறந்த கவிஞர் என்ற விருதை வழங்கி யுளது. 3000 பாக்கள் பாடியுள்ளார்: கவியரசு கண்ணதாசன் இவரைத் தம் வாரிசு எனக் கூறிப் பெருமிதப்பட்டதும், 'கடல்

மேல் தவிக்கவிட்டான்...(படகோட்டி) பாட்டு கேட்டுப் பாராட்டி வணங்கியதும் நினைவுகொள்ளத் தக்கன. இந்த மனிதன் எதற்கும் அழுகின்றான் என்ற பாடலில் தத்துவம் ததும்புகிறது:

கருவறையில் இவன் அழுதானா?—இல்லை
கல்லறையில்தான் அழுவானா?
வருவதை யெண்ணியும் அழுகின்றான்!—இவன்
வந்ததை யெண்ணியும் அழுகின்றான்!

எத்தால் இவனைத் தேற்றுவது?—அட
எவர்தான் இவனை மாற்றுவது?—இவன்
செத்தால் அழுகை நிற்கிறது!—உடன்
மற்றவர் அழுகை கேட்கிறது!!

அழகிய வருணனைகள், புதுமையான உருவக உவமைகள், தெளிந்த நடை, அலுப்புத் தட்டாமல் அல்வாத் துண்டு போன்ற கச்சிதக் கருத்துக்கள்—இவர் கவிதைக்குக் கவர்ச்சி யளிக்கின்றன (கி. வா. ஜ). இத்தகு பெருமைக்குரிய பெருங் கவிஞரின் **முகவரி** 69. B. லேடி மாதவன் நாயர் சாலை. மகாலிங்கபுரம். சென்னை 34; 12. கற்பகம் காலனி முதல் தெரு. ராஜா அண்ணாமலைபுரம். சென்னை 28 (41 61 66)

## 43. தமிழக வரலாறும் வரலாற்றாசிரியர்களும்

இந்திய வரலாற்றின் முந்தைய மூலமே தமிழகத்தில்தான் உள்ளது. இன்னும் சொல்லப் போனால் ஒருகாலத்தில் வரலாற்றின் வாயிலாக விளங்கிய தமிழகம், இன்று இந்திய வரலாற்றில் வாலாக வைக்கப்பட்டுளது. இந்திய வரலாற்றில் தமிழகத்துக்கு முக்கியத்துவம் தரப்படவில்லை, தரப்படுவதுமில்லை. எனவே தமிழகத்துக்கு முதன்மை—தென்னகத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படும் வகையில் வரலாறுகள் வரையும் வீறு விளைந்தது. தமிழகம் பற்றிய தனி ஆய்வுகள் தலையெடுத்தன புதிய கண்டுபிடிப்புகள் கொண்டு புதுவதாகத் தமிழக வரலாற்றைச் செப்பம் செய்யும் முயற்சி மேற்கொள்ளப் பெற்றது.

முன்னம் வரலாற்றாசிரியர்கள் மட்டும் தமிழக வரலாறு படைத்தனர்; இப்போது தமிழ், வரலாறு இரண்டும் வல்ல விற்பன்னர்கள் படைத்து வருகின்றனர். இத்துறையின்

முதல்வர் பண்டாரத்தார்; மா. இராசமாணிக்கனார். துடிசைக் கிழார் சிதம்பரனார் (சேரர் வரலாறு); எல். உலகநாத பிள்ளை (கரிகாலன், முதலாம் ராசராசன்); மயிலை சீனிவேங்கடசாமி மேம்பட்டு நிற்கின்றனர். ந.சி. கந்தையா பிள்ளை தமிழர் சரித்திரம், மு, ராகவையங்கார் சேரன் செங்குட்டுவன்; அ. மு. பரமசிவானந்தம் தமிழக வரலாறு Tamil Nad through Ages; புலவர் குழந்தை கொங்கு நாடு; அ. கி. பரந்தாமனார் மதுரை நாயக்கர் வரலாறு; கா. அப்பாதுரையார் கடல் கொண்ட தென்னாடு, தென்னாட்டுப் போர்க்களங்கள்; செந்துறைமுத்து சோழர், பாண்டியர், சேரர் கலைச் செல்வங்கள் குறிப்பிடத் தக்கன.

**து. அ. கோபிநாதராயர்** : *1919.* மகாராட்டிர மாத்துவ அந்தணர். துறையூரிலிருந்து திருவரங்கம் வந்த குடும்பம். திருச்சி வளவர் கல்லூரி பி. ஏ, ரசாயன எம். ஏ; தமிழ் தெலுங்கு, மலையாளம், கன்னடம், வடமொழி வல்லவர். ஓவியம் வல்லவர். சாசனம்-கல்வெட்டு ஆய்வும் தோய்ந்தவர். கைப்பொருள் செலவிட்டு நாடுமுழுதும் சென்று கல்வெட்டு செப்புப் பட்டயங்கள் கண்டு பிடித்து, வரலாற்று நுட்பங் களுடன் ஆங்கில-தமிழ் ஏடுகளில் எழுதினார்: புதியன பல கண்டுபிடித்தார், 1902 முதல் திருவனந்தபுரம் அரசு சாசன இலாகா தலைவரானார். ஆங்கிலத்தில் 'திருவாங்கூர் சாசனத் தொடர்' எனப் பல ஆய்வுகள் எழுதினார். தமிழ் எழுத்துக்கள் காலந்தோறும் வேறுபட்டு வழங்கிவந்துள்ளமை விவரப்படங் களுடன் வெளியிட்டார். மலையாளத்தில் தமிழ் மொழியே நாட்டு மொழியாக இருந்தது; காலப்போக்கில்தான் தமிழி லிருந்து மாறுபாடுகளுடன் மலையாளம் தோன்றியது. மக்களும் தலைவரும் தமிழரே என்பன போன்ற உண்மைகள் வெளியிட்டார். சிற்பங்களை ஆய்ந்து உலகம் போற்றும் 'விக்கிரகதத்துவம்' வெளியிட்டார். வைணவ சமய வரலாறு வரைந்தவர்.

சோழ வம்ச சரித்திரச் சுருக்கம் பாண்டித் துரைத் தேவர் வேண்டுதலால் எழுதினார். அருங்கலை விநோதரான இவர் திரட்டிய நூல்கள் சாசன இலாகாவிடம் உள. Elements of Icon Hindugraphy (14), பல்லவர் வரலாறு. இவர் நூல்கள் தனித்தபயனான முன்னோடிச் சிறப்பின. திருவனந்தபுரம் தொல்லியல் துறை இயக்குநராக இருந்தவர். சிலை பற்றிய நூல் படைத்து முன்னோடியாகத் திகழ்கிறார்; மிக இன்றியமையாத அரிய நூல்; பலருக்கு ஊற்றாக தூண்டுதலாகத் திகழ்வது.

**பி. டி. சீனிவாச ஐயங்கார்** ; தஞ்சை எஸ். பி. ஜி. கல்லூரியில் பயின்று திருச்சி வளவர் கல்லூரியில் பணியாற்றியவர். இவர் எழுதிய History of the Tamils என்ற அருநூலே-முதற் படைப்பே, தமிழரின் வரலாறு பற்றி அறியவும் எழுதவும் பின் வந்தோரைத் தூண்டியது.

**கே. ஜி. சேஷ ஐயர்** : முதன் முதலில் அசோகர் கல்வெட்டில் குறிக்கப் பெற்ற 'சத்திய புத்திர' என்பது அதியமான் அரசர்களே என அறிந்தவர். பின்னர் கண்டுபிடிக்கப் பெற்ற ஜம்பை (திருவண்ணாமலை) கல்வெட்டால் இது உண்மையென உணரப்பட்டது. அரியநூல் Chera Kings of Sangam Period.

**வி. கனகசபைப் பிள்ளை**: 1855-1906. யாழ்ப்பாண மல்லாகம். தந்தை விசுவநாதப் பிள்ளை; வின்சுலோ தமிழகராதி உருவாக உதவியவர். பி.ஏ. பட்டம் பெற்று சென்னை அஞ்சலகத் துறையில் கண்காணிப்பாளராகச் சிறந்தவர். இவரது அருங்கொடை The Tamils Eighteen hundred years ago. 1800 ஆண்டுகட்கு முற்பட்ட பழந்தமிழகத்தை அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டி நம் முந்தையர் வாழ்ந்து முடிந்த கதையினைத் தெளிவுபடுத்தியுள்ளார். அத்தோடு களவழி நாற்பது, கலிங்கத்துப் பரணி (1890), விக்கிரம சோழன் உலா போன்ற பனுவல்களை ஆங்கிலத்தில் பெயர்த்து Indian Antiquary இதழில் வெளியிட்டு வேற்றவரும் வண்டமிழ் வளமை அறியச் செய்துளார்.

**டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்** : 15-4-1871-1947. குடந்தையை யடுத்த சாக்கோட்டை. பெங்களூர் மையக் கல்லூரியில் இயற்பியல் பி.எசி. கணிதத்தில் எம்.ஏ. பெற முயன்றார்; முடியாது போகவே விஞ்ஞான ஆசிரியராகவே வேலை பார்த்துக்கொண்டே 1899இல் வரலாற்றில் எம்.ஏ., பட்டம் பெற்றார். பெங்களூர் உயர்நிலைப் பள்ளி, மையக் கல்லூரிகளில் பணியாற்றி சென்னைப் பல்கலைக் கழக வரலாற்று ஆராய்ச்சித் துறையின் **முதல்** பேராசிரியாக 1914 இல் அமர்ந்து '29 வரை பணிபுரிந்தார். 1921இல் தொல்பொருளியல் சர்வே செயலர்களில் ஒருவராக இருந்தார். 1931இல் பம்பாயில் கூடிய **முதல்** இந்திய வரலாற்றுக் காங்கிரசுக்குத் தலைமை ஏற்றார். **தென்னக வரலாற்று வித்தகர்.** அதனை முறையாக எழுதிய மூலவர்—உண்மை பல கண்ட முதல்வர்; பல்லவர், விசயநகர வரலாற்றுக்குப் புத்தொளி

ஊட்டியவர். Manimekalai in its historical settings (27), South India and her Muslim Invaders (23), Vakatakas, Further Sources of Vijayanagar Empire (24), Beginning of Indian History, South Indian Epigraphy till 1923 (32), History of Vijaya Nagar, Hindu Administrative Institutions in South India (30) என்ற எட்டுபெரிய நூல்கள் படைத்துத் தென்னிந்திய வரலாற்றுத் தீரராகத் திகழ்கிறார். சேரன் வஞ்சியைச் சிறப்புறப்படைத்தவர்.

**கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி** : *12-8-1892*—நெல்லை கல்லிடைக் குறிச்சி. தெலுங்கு நியோகி அந்தணர். இந்து கல்லூரி இன்டர், சென்னைக் கிருத்துவக் கல்லூரி பி. ஏ., மாநிலக் கல்லூரி எம்.ஏ. (*1913*). உடன் பயின்றோர்: வி. சாரநாதன், வையாபுரிப் பிள்ளை, பெ. நா. அப்புசாமி. *13-18* இந்து கல்லூரி, *18-20* காசி இநது பல்கலைக் கழகம், *20-29* மீனாட்சி கல்லூரி-பல்கலைக் கல்லூரி முதல்வர், *29* திருச்சி தேசிய கல்லூரி, *29-47* சென்னைப் பல்கலைக் கழகம். (ஜாதுநாத் சர்க்காரும், ஹீராஸ் பாதிரியாரும் முதன்மை தந்து பரிந்துரைத்த பெருமையர்). *52-56*. மைசூர் இந்தியவியல் பேராசிரியர். மலேயாப் பல்கலைக் கழகத்தில் இந்தியத் துறையினை இவரே அமைத்துத் தந்தவர்.

57இல் Institute of Traditional culture of South East Asia வின் இயக்குநர், 58இல் பத்மபூஷன், 59இல் சிகாகோ விருந்துப் பேராசிரியர். *22* நூல்களும் *160* கட்டுரைகளும் படைத்துளார். The Cholas (2 vols), Studies in Chola Administration; The Pandiyan Kingdom, Foreign Notices of South India, Sri Vijaya Kingdom, History of South India. *46*இல் பாட்நா இந்திய வரலாற்றுக் காங்கிரசின் உயர்தலைவர்; 51இல் All India Oriental Conference பொதுத்தலைவர். Fellow of Royal Asiatic Society. இந்திய வரலாற்றாசிரியருள் சிறந்தவர்.

**வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர்** : *1896-1953* Pre. historic Tamils, origin and spread of the Tamils என்ற இரு அரு நூல்கள் அளித்தவர். முதல் தமிழ் வரலாற்றுக் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தை ஆங்கிலத்தில் அமைத்துத் தந்தார். மூன்றாம் குலோத்துங்கன் முழுமையானது. **எம். சீனிவாச ஐயங்கார்** Tamil Studies, **எம். எஸ்; பூரணலிங்கம்** பிள்ளை Tamil India குறிப்பிடத்தக்கது.

**ஆர். சத்தியநாத ஐயர்:** சீர்காழி. அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பெரும் பேராசிரியர். மராத்தியர் வரலாற்றில் விற்பன்னர். Studies in the Ancient History of Thondaimandalam, History of the Nayaks of Madurai, Tamilagam in the 17th Century, History of India (3. vols). இந்திய வரலாற்றாசிரியர்களில் புகழ் மிக்கவர்.

அண்ணாமலைக்கு நேரு வந்தபோது இவரைக் காண விழைந்தார்; வரவழைப்பதாக விளம்பினர். உடன் நேரு, அந்த வரலாற்று மேதையை நானே அவர் வீடு தேடிச் சென்று காணவேணும், அதுவே முறையென மொழிந்து சென்று கண்டாராம்! வீடு, வேலை இரண்டும் தவிர வேறறியாவாறு வரலாற்றியலுக்குத் தம்மையே தத்தம் செய்து கொண்டவர். ஒன்று துறையில் காணலாம், இல்லையெனில் இல்லத்தில் காணலாம், மற்றபடி வேறெங்கும் காண இயலாது; அப்படி போதிப்பதும் எழுதுவதுமாக உழைத்த உத்தமர். உலக வரலாற்றாசிரியர் ஜி. எம். டிரவெல்யான் World civilisation எனும் பெருநூல் யாக்க சத்தியநாதையரின் இந்திய வரலாறு மிகவும் துணை புரிந்தது எனப் போற்றியுள்ளார்.

**மு. ஆரோக்கியசுவாமி:** *1911-68.* கோவை மாவட்ட சோமனூர். திருச்சி வளவர் கல்லூரி மாணவர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரி வரலாற்றுப் பேராசிரியராகப் பிறங்கி, சென்னைப் பல்கலைக் கழக இந்திய வரலாற்றுத் துறைப் பேருரையாளராக விளங்கியவர். 'நாமிருக்கும் நாடு', The classical Age of Tamils, Early history of the Vellar basin, The Kongu country, The Gangas in the Tamil country, தமிழ் நாட்டு வரலாறு, ஐரோப்பிய வரலாறு, பன்னாட்டு வாணிபம் போன்றன இவர் படைப்புகள்.

**கே. வி. சுப்பிரமணியன்:** தென்னிந்திய வரலாற்றை **முதன் முதல்** எழுதியவர்; Historical Sketches of Ancient Deccan என்ற நூலே தென்னிந்திய வரலாற்றினை மேலும் ஆராய, விரிவாக எழுத வழிகோலிற்று. இவர் மகள் **கே எஸ்: வைத்தியநாதன்** கொங்கு நாட்டு வரலாற்று முன்னோடி என்னலாம். The Ancient Geography of the Kongu country. ஆழ்ந்த கல்வெட்டு அறிஞரும் ஆற்றல் சான்ற வரலாற்றாசிரியருமான இவர் History of Puli Nadu, The Geography of Ancient Puli Nadu, Puravi Nadu, Mala Nadu, Meiypagai Nadu என நுண்ணிதின் ஆய்ந்தெழுதியவர். சங்க இலக்கியங்களை ஆழ்ந்து கலை நோக்குடன் கற்றவர்.

**டாக்டர் அ. கிருஷ்ணசாமி**: தென்னக வரலாற்றில் தீரர். The Tamil country under Vijayanagar (59) என்பது பி. எச். டி. பட்டத் தலைப்பு. குமார கம்பண்ணனால் தோற்கடிக்கப் பெற்ற மதுரை சுல்தானிய அரசன் யார்? எந்த ஆண்டு அவன் மதுரையைக் கைப்பற்றினான்? என்ற சிக்கலை அவிழ்த்த பெருமையர். அரசன் முபாரக் ஷா; ஆண்டு 1371- பெயர் ஐயம் தருவதாயினும் இவர் ஒரு படையாட்சி! விஜயநகரப் பேரரசின் வரலாறு (1565 வரை), தென்னிந்திய வரலாறு (900-1565), தற்கால இந்திய வரலாறு (1707—). **முகவரி**: சிவகாமி அச்சகம் அருகில். தெற்கிருப்பு. அண்ணாமலை நகர்-608002.

**எம். எஸ். கோவிந்தசாமி** அண்ணாமலைப் பேராசிரியர். அசோகரும் அவர் காலமும், The Role of Feudatories in Pallava History (M. Litt.) The Role of Feudatories in Later Chola History (Ph. D.).

**வை. விருத்தகிரீசன்**: அண்ணாமலையில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். The Histoty of the Nayaks of Tanjore சிறந்த படைப்பு. ஆங்கில அரசியலமைப்பின் வரலாறு (Taswell), ஐரோப்பா - கடந்த ஐந்து நூற்றாண்டுக்கால சரித்திரம் (A. J. Grant) பெயர்ப்புகள்.

**டி. வி. மகாலிங்கம்**: சென்னைப் பல்கலைக் கழகத்தை அணி செய்த அரும் பேராசிரியர். விசயநகர வரலாற்றில் விற்பன்னர். கொடைகள்: South Indian Polity, Kanchipuram in Early South Indian History, Early History and culture of South East Asia; The Sources of Vijayanagar History, Administration and Social Life under Vijaya Nagar (2 Vols). Economic Life in the Vijaya Nagar Empire, தென்னகக் கல்வெட்டுக்களை ஊர்வாரியாகத் தொகுக்கும் தொகுதிகளின் பதிப்பராகப் பணியாற்றினார், South Indian Paliography நல்ல வழிகாட்டி. மேலும் **அறிய**: 7. நான்காவது குறுக்குச் சாலை, இராமகிருஷ்ண நகர், ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28.

**டி. கே. வேங்கடராமன்**: 6-11-1899— தஞ்சை. சென்னைப் பச்சையப்பனில் பேராசிரியராகப் பேர் சொல்லியவர். **என்** மனைவி (சிறுகதைத் தொகுப்பு), நமது பாரதம் (வரலாற்றுக் கட்டுரைகள்); Cultural History of India, of the World; History of Greece, Rome, Europe, India, Britain படைத்தவர். Observations on the Methodology in History பயனான நூல். **தொடர்புக்கு** 14, ஜோஸ்யர் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-34,

**தி.லெ. சொக்கப்பா** : 7-9-1909. தஞ்சை மாவட்ட திருமீயச்சூர்-புத்தகரம். சேலம் கல்லூரியில் சிறக்கப் பணியாற்றியவர். நூல்கள் : பண்டைத் தமிழர், அரபு மக்களின் வரலாறு, ஐரோப்பிய வரலாறு (476-1453). முகவரி : 'தமிழ்க் குடில்' கான்வென்ட் சாலை, அளகாபுரம், சேலம்-4,

**கே. கே. பிள்ளை** : 3-4-1905—1981 குமரி மாவட்ட ஆளூர். சென்னைப் பல்கலைக் கழக இந்திய வரலாறு தொல்பொருட்டுறைத் தலைவராகத் திகழ்ந்தவர், தமிழக வரலாறும் பண்பாடும், சோழர் வரவாறு, இந்திய வரலாறு (2 பகுதி) இங்கிலாந்து வரலாறு (1603 வரை), History of Local Self Government of the Madras Presidency, A Social History of the Tamils, A History of Nanchinad, The Suchindram Temple (Ph. D.) தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவின் தலைவராக 79-82 இல் திகழ்ந்தார். D. Litt, D. Phil பட்டம் பெற்றவர் என்பது கருதத் தக்கது.

**ந. சுப்ரமணியன்** : 1-1-1916. சிதம்பரம். அண்ணாமலையிலும் பின் மதுரைப் பல்கலைக் கழகத்திலும் வரலாற்றுத் துறைப் பெரும் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். வி. கே. சூரிய நாராயண சாஸ்திரியார் வரலாறு எழுதியவர்; 'ஆனந்தரங்கன் கோவை' செய்யுள் நூலினை உரையுடன் பதிப்பித்தவர். தமிழக வரலாறு (2 பகுதி), இந்திய அரசியல் அமைப்பு வரலாறு, இந்தியர் பண்பாட்டு வரலாறு, ஆப்ரிக்கா; Sangam Polity, History of Tamil Nad, An Introduction to Tamil Litt, Self Immolation in Tamil Society, Tamil Epigraphy, Concordance of Thirukkural, History of the Indian Freedom Movement; Historiography, Historical Research Methology; History of Vijayanagar, U. S. A., Russia, International Relations இவர் படைத்தன. தமிழக வரலாற்றுக்கு நிரம்பச் செய்துள்ளமை போற்றத் தக்கது இவர் மகன் ந. ஜெகதீசனும் வரலாற்றுப் பேராசிரியரே; 'வரலாற்று வரைவியல்' வழங்கியுள்ளார். தந்தைக்குப் பாராட்டு மலராக 40 அரிய கட்டுரை கொண்ட Homage to a Historian தொகுத்துளார், **முகவரி** : 96, டாக்டர் ராதா கிருட்டிணன் தெரு, என். ஜி. ஓ. குடியிருப்பு, நாகமலைப் புதுக்கோட்டை, மதுரை-19.

**கே. ஆர். அநுமந்தன்** : 25-7-1922. நாமக்கல் கவிஞரின் மருமகன். சென்னை மாநிலக் கல்லூரி, மதுரைப் பல்கலைக் கழகங்களில் பணியாற்றி இதுபோது தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவின் பொறுப்பாளர். பண்டைய கிரேக்க வரலாறு, உலக

நாகரிகத்தின் வரலாறு, பிரிட்டன் வரலாறு, இந்திய வரலாறு (3 பகுதி), மௌரியர் வரலாறு; பெயர்ப்பு: இந்திய ஆட்சி அமைப்பு முறை வளர்ச்சி (H. N. Sinha), அரசியலமைப்புச் சட்ட ஆய்வுக்கு ஓர் அறிமுகம் (A. V. Dicey), **முகவரி:** 41, சீதம்மா காலனி, ஆழ்வார்பேட்டை சென்னை-18.

**டி. என். வாசுதேவராவ்** அரசு கலைக் கல்லூரிகளிலும் மாநிலக் கல்லூரியிலும் பேராசிரியராக இருந்து முதல்வராக அமைந்தவர். இவரது எம். லிட். ஆய்வு 'தமிழ்நாட்டு வரலாற்றில் புத்த சமயம்'. ஐரோப்பிய வரலாறு, இங்கிலாந்து அரசியலமைப்பின் வரலாறும் படைத்துளார்.

**சி. ஈ. இராமச்சந்திரன்** : பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியராகப் பிறங்கி, சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேருரையாளராகி, துறைத் தலைவராக உயர்ந்தவர். சங்க கால வரலாறு. பெயர்ப்பு ஜி. எம். டிரவெல்யானின் ஆங்கிலேயரின் சமுதாய வரலாறு I, II ; இவரது எம். லிட். தலைப்பு Akananuru in its historical setting (63 ல்).

**டாக்டர் கே. ராஜையன்:** 1929. கேரள பல்கலைக் கழகத்தில் பயின்று திருப்பத்தூர், திருப்பதி போன்ற இடங்களில் பணியாற்றி, 68இல் சென்னை மாநிலக் கல்லூரியில் தலைமைப் பேராசிரியராக இருந்து இதுபோது மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் தற்கால வரலாற்றுத் துறை தலைவராகத் திகழ்கிறார். Historay of Madurai (1736-1801), A History of British Diplomacy in Tanjore, Rise and Fall of Poligars of Tamil Nadu, South Indian Rebellion-the first war of Independence, Indian struggle against American expansion, Administration and Society in the Carnaho. தற்கால வரலாற்றில் தக்கவராகத் திகழ்கிறார்.

**கு. நம்பி ஆரூரன்:** 7-4-1942. தஞ்சை மாவட்ட வடவேற்குடி. மறைமலையடிகள் வழியினர். சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகப் பேருரையாளர், 1.4.82-85 தமிழ்ப் பல்கலைக் கழக வளர்தமிழ்ப் புல அயல் நாட்டுத் தமிழ்க் கல்வித் துறைத் தலைவர். 83 நவம்பரில் லண்டன் சென்று தென்னாப்பிரிக்கா பற்றிய செய்தி திரட்டி வந்தார். 'தென்னாப்பிரிக்கத் தமிழர் வாழ்வு' ஆப்பிரிக்க நாடுகள்-கையேடு, படைத்துத் தந்து உடல் நலமின்மையால் விடுத்து சென்னை சென்று விட்டார்.

இவரது எம். லிட். ஆய்வு Culture of the Tamils as revealed by the Periyapuranam; டாக்டர் பட்டம் லண்டனில் பெற்றார். அமெரிக்க நாட்டின் வரலாறு போன்றன எழுதியுள்ளார். இவர் துணைவியார் தமிழ்ப் பேராசிரியை சாரதா நம்பி யாரூரன் என்பதும் அண்ணார் கு. ஆளுடைய பிள்ளை. ஐ. ஏ. எஸ், என்பதும் குறிப்பிடத் தக்கன.

**இர. ஆலால சுந்தரம்** 25-3-1934. தெ. ஆ. திருக்கோவலூர் வட்டம் கண்டாச்சிபுரம். இரத்தின சபாபதி: பச்சையம்மாள். விழுப்புரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 51இல் கிருத்துவக் கல்லூரி இடைநிலை 54இல்; பச்சையப்பன் கல்லூரி பி. ஏ. ஆனர்சு 57இல். 58 முதல் சென்னை, சேலம் அரசு கலைக் கல்லூரிகளில் பேராசிரியராக இருந்து, தருமபுரி, திருவண்ணா மலையில் 82 முதல் முதல்வராகச் சிறந்து 6-3-85 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகப் பதிவாளராக அமர்ந்துளார். இந்திய வரலாறு I, II; வட இந்திய வரலாறு, உரோமாபுரி வரலாறு (கி. பி. 3 வரை). கிழக்காசிய வரலாறுகள். தமிழக வரலாறு தமிழிலும் ஆங்கிலத்திலும் படைத்துளார். மார்க்ஸ், லெனின் போன்றார் நூல்கள் தமிழாக்கப் பெற்று மாஸ்கோவில் வெளி யாகியுள. ஜி. எம். டிரவெலியானின் 'ஆங்கிலேயரின் சமுதாய வரலாறு II, III பெயர்த்துள்ளார். மணம் 54இல், துணைவி யமுனா. கனிவான இக்கண்ணியரின் **முகவரி:** புதிய வளாகம், தமிழ்ப் பல்கலைக் கழகம், திருச்சி சாலை, தஞ்சாவூர்-7. கண்டாச்சிபுரம் S. O. விழுப்புரம் வழி.

**பா. மாணிக்கவேலு :** நந்தனம்; கரூர் போன்ற கல்லூரி களில் பேராசிரியராகவும் 84 முதல் முதல்வராகவும் விளங்கி இது போது திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகப் பதிவாள ராகவுள்ளார். தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்திற்காகப் பல நூல்களைப் பெயர்த்துத் தந்துள்ளார். அரசியல் அமைப் பின் வரலாறு III, IV (Taswell Langmead), இங்கிலாந்து வரலாறு I (Sir Keith Feiling), இந்தியாவில் முகலாயரின் ஆட்சி I (Edwards+Garret), முகலாயப் பேரரசு II (A. L. Srivatsava, தனிநூல் இந்திய தேசிய இயக்கத்தின் வரலாறு. இனிய இவரின் **முகவரி:** பாரதிதாசன் பல்கலைக் கழகம், சூரயூர் சீனூர் சாலை, திருச்சி-24.

**கோ. தங்வேலு :** தமிழறிவும் பேச்சாற்றாலும் மிக்கவர். நந்தனம் கல்லூரி. தமிழ் நாட்டு வரலாற்றுக்குழு பதிப்பர் பணி யாற்றி இதுபோது மாநிலக்கல்லூரித் தலைமைப் பேராசிரியர்,

இவரது 'தமிழ் நில வரலாறு' தடை செய்யப்பட்ட நூல்; உண்மைகளைப் புட்டுவைத்த புரட்சிப் படைப்பு. பிற: இந்தியக் கலை வரலாறு (3 பகுதி), ஜப்பானிய வரலாறு.

**டாக்டர் ஏ. சுவாமிநாதன்** : கரூர் கலைக்கல்லூரியில் ஒரு நாட் பெருங்கரத்தரங்கம் நிகழ்த்தியவர். இதுபோது சென்னை நந்தனம் கலைக் கல்லூரிப் பேராசிரியர். தொடர்ந்து நூல்கள் தந்து கணிசமான பங்காற்றி வருகிறார். தமிழக வரலாறும் பண்பாடும் (2 பகுதி), சங்ககால வரலாறு, பல்லவர்கால வரலாறு, சோழர்கால வரலாறு, தமிழ் நாட்டுச் சமுதாய பண் பாட்டு வரலாறு; Sangam Age, History of TamilNadu (2 Vols) Social and Cultural History of Tamil Nadu; மௌரியர் வரலாறு, சீன வரலாறு, கிழக்காசிய வரலாறு, நாகரிக வரலாறு போன்றன படைத்துப் போற்றத்தக்க பணியாற்றும் இவர் **முகவரி**: தீபா பதிப்பகம், 45, லாசரஸ் சர்ச் சாலை, சென்னை-28.

V. T. **செல்வம்**: திருச்சி ஈ. வே. ரா. கல்லூரி வரலாற்றுப் பேராசிரியர். தமிழகம் வரலாறும் பண்பாடும் புகழ் தந்த பொத்தகம். பிற: தமிழ் நாட்டு வரலாறு, சுருக்கம்; New Lights on the Early History of Tamil Nadu. அரேபியர் வரலாறு. திராவிட மொழியியல் கலைக் களஞ்சியத்திற்குப் பல கட்டுரை கள் பயந்துள்ளார்.

**தி. வெ. குப்புசாமி**: பூண்டி புஷ்பம் கல்லூரியில் வரலாற்றுப் பேராசிரியராக விளங்கி ஓய்வு பெற்றவர். வரலாறு, அரசியல், பொருளாதாரம் மூன்றிலும் பட்டம் பெற்றவர். நல்ல கலா ரசிகர். இசையில் மன்னர். பேச்சில் சதுரர். மொழி பெயர்ப் பில் வல்லுநர். ஆக்ஸ்போர்டு இந்திய வரலாறு (Vincent, A. Smith), இந்தியச் சிறப்பு வரலாறு (R.C. Majumdar), இந்திய அரசியலமைப்புத் திட்டம் (M.V. Pylee) பெயர்த்துளார்.

**இரா. அண்ணாமலை**: 5-6.1926. சேலம் ராசிபுரம். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் 58-83 வரை பேராசிரிய ராக இருந்து, 3-12-83—86 வரை தமிழ்ப் பல்கலைக் கழக களஞ்சிய மையத்தில் வரலாற்றுப் பதிப்பராக இருந்து இது போது சென்னையில் வதிகிறார். தேசிய சிந்தனை இயக்கத் தின் செயலராகப் பணியாற்றியவர். படைத்தன: புவியியல் நூல், பிரிட்டனின் வரலாறு (1602 வரை); பெயர்ப்பு: இங்கிலாந்து வரலாறு (Sir Keith Feiling). ஆங்கில அரசிய லமைப்பின் வரலாறு (Taswell Langmead).

**க. வெங்கடேசன்** : 4-3-1933. சீர்காழி. கணபதி: தையல் நாயகி. சபாநாயகர் உயர்நிலைப் பள்ளி; அண்ணாமலை பி.ஏ., எம்.ஏ. புதுதில்லி Indian Institute of Public Administrationஇல் M.D.P.A. குஜராத் சர்தார் பட்டேல் பல்கலைக் கழகத்தில் Ph. D. 57-77 துணைப் பேராசிரியர், பேராசிரியர், முதல்வர். ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலயா கலைக் கல்லூரி, கோவை. 77முதல் ராஜபாளையம் ராஜுக்கள் கல்லூரி முதல்வர்.

முதல் கட்டுரை 'கிராம சபைகள்-புதிய பஞ்சாயத்து ஆட்சியின் அடித்தளம், 'கிராம ராஜ்யம்' 63இல். நூல்கள்: அக்பர், Modern Political Analysis, Local Govt. in India, History of Freedom Struggle in India (1800-1947), History of U.S.A. Public Administration in India, Our Freedom Fighters, இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு, சுதந்திரப் போராட்டமும் தமிழகமும். பொதுமக்களிடையே குறிப்பாக கிராம மக்களிடையே வரலாற்றையும் வரலாற்று நாயகர்களையும் அறிமுகப் படுத்தும் ஆர்வலர். பேரா. ஆர். சத்தியநாதையரின் மாணவர். இதே கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் **ஏ. சுப்ரமணியன்** வளமை மிக்கவர்; கூரிய மதியினர். திருமறைக்காட்டுக் கோயில் போன்றன படைத்துளர். அதே துறையினைச் சார்ந்த **பி. கோமதி நாயகம்** இந்திய வரலாறு, தென்னிந்திய வரலாறு போன்றன படைத்துளார்; புதினம் புதுக் கவிதையும் படைத்துளார். **முகவரி**: 626117.

**ந. க. மங்களமுருகேசன்**: 15-6-1943. தமிழ் நாட்டு வரலாறு (2 பகுதி), தமிழ்ச் சமுதாய பண்பாட்டு வரலாறு, சோழர் கால அரசியல், பாண்டியர் கால அரசியல், Self Respect Movement in Tamil Nadu (M. Litt. Thesis), மௌரியர் பேரரசு; இந்தியச் சமுதாய வரலாறு, இந்திய வரலாறு (3 பகுதி), ஹர்ஷர் காலத்தில் வட இந்தியா, இந்திய ஆட்சி அமைப்பு வளர்ச்சி வரலாறு (1707 வரை) பண்டை இந்தியச் சமுதாய பொருளாதார விளக்கம் (மொ. பெ.). நற்றமிழ்ப் பற்றும் பேச்சாற்றலும் மிக்கவர். மாநிலக் கல்லூரிப் பேராசிரியர். **முகவரி**: 13/3 பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்பு, சென்னை-14.

**ம. இராசசேகர தங்கமணி**: 10-10-1939. திருச்சி மாவட்டம், திருமழபாடி, புதுக்கோட்டை கிராமம். 'கங்கை கொண்ட சோழன்' ஆசிரியர் புலவர் மருதமுத்து: கலுவாயி அம்மாள்,

திருமழபாடி கழக உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 55, சமால் முகமது கல்லூரி இன்டர் 57, தேசிய கல்லூரி பி.ஏ. 59, திருச்சி மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளிகளில் ஆசிரியர் 60-70; தனித்து வரலாற்று எம்.ஏ. 66 கரூர் அரசு கலைக் கல்லூரி வரலாற்றுத் துறைப் பேராசிரியர் 70 முதல்.

தந்தவை: முதலாம் இராசேந்திரன், பாண்டியர் வரலாறு I, தமிழக வரலாற்றில் புதிய ஒளி, முத்தரையர் வரலாறு, வேட்டுவர் வரலாறு, திருமலை நாயக்கர், கருவூரும் கன்னித் தமிழும், கருவூரார் வரலாறு ஓர் ஆய்வு, ரஷ்ய வரலாறு, 50க்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகள். தமிழ்ப் பல்கலைக் கழக வாழ்வியல் களஞ்சியத்திற்கு மட்டும் 100 கட்டுரைகள் வரைந்துளார். இந்திய வரலாற்றுப் பேரவை, தென்னிந்திய வரலாற்றுப் பேரவை, இந்திய கல்வெட்டியல் கழகம் போன்றவற்றில் உறுப்பினர்; தலைவர் கருவூர் வரலாற்றுப் பேரவை, கரூர் பெருமாள் கோயில் கற்றூண் கல் வெட்டு கண்டுபிடித்தவர். உழைப்பும் ஊக்கமும் ஊடாடிப் பழகும் இயல்பும் மிக்கவர். கல்லூரி வரலாற்றுப் பேராசிரியர் களில் நாடறிந்த வல்லவர். **முகவரி**: ஆண்டான் கோவில் சாலை, கரூர்-2.

**நா. ஜெயபால்** : தெ. ஆ. செஞ்சி வட்ட மழவந்தாங்கல். நாராயணக் கவுண்டர்: உண்ணாமலை அம்மாள். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் 56-62இல் பயின்று எம். ஏ. பட்டம் பெற்றவர். இதுபோது கரூர் கலைக் கல்லூரி வரலாற்றுப் பேராசிரியர். இதுவரை 45 நூல்கள் பயந்தவர். தமிழ் நாட்டு வரலாறு, தமிழக வரலாறும் பண்பாடும், சீன, ஜப்பானிய, உலக, ஐரோப்பிய, அமெரிக்க, அரேபிய, ருஷ்ய, கிழக்காசிய, இந்திய, முகலாயர், வரலாறுகளை வரைந்துள்ளார். அரசியல் நூல்களும் படைத்துளார். சென்னை பைகிராட்ஸ் சாலை மோகன், மதுரை மேல மாசிவீதி பண்ணைப் பதிப்பகங்களில் கிடைக்கும். **முகவரி**: 16F, தெற்குத் தெரு, அண்ணாநகர், கரூர்-2.

**மா. பாலசுப்பிரமணியன்** : தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரிப் பேராசிரியர். சோழர்களின் அரசியல் கலாச்சார வரலாறு (இரு பகுதிகள்) நன்கு படைத்துள்ளார்.

**பெண் வரலாற்றாசிரியர்கள்** சிலரைக் குறிப்பிட வேண்டும். **டாக்டர். ஆர். செண்பகலஷ்மி** : சென்னைப் பல்கலைக் கழகத் தொல்பொருள் துறையில் பணியாற்றி இதுபோது தில்லி

ஜவகர்லால் நேரு பல்கலைக் கழகத்தில் உள்ளார். புகழ் மிக்க இசை இரட்டையர் ராதா ஜெயலட்சுமியின் சகோதரி என்பது குறிப்பிடத்தக்கது. Vaishnava Iconography in South India என்பதே இவரது டாக்டர் பட்டத் தலைப்பு. Jainism in South India எம். லிட். ஆய்வு. Kurandi Thirukkattamapalli-An Ancient Jaina Monastry of Tamil Nadu (அருப்புக்கோட்டை) மிகச் சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரை. **டாக்டர். சி. மீனாட்சி:** பல்லவ வரலாற்றுக்குப் பெருந்துணையாக அமைவது இவரின் அருநூல். 31-34இல் ஆராயப்பட்ட Administration and Social Life under the Pallavas இவரது டாக்டர் பட்டத் தலைப்பு. The Historical Sculptures of the Vaikuntha Perumal Temple, Kanchi. **டாக்டர். தேவகுஞ்சரி:** Madurai through Ages பயனான பொத்தகம். **டாக்டர். வி. பாலம்பாள்.** 22-4-1938. சென்னைப் பல்கலைக்கழக இந்திய வரலாற்றுத் துறைப் பேருரையாளர். Feudatories in the History of South India (Ph. D), பழு வேட்டரையர்கள்; Great Women of Chola Dynasty அருமையான கட்டுரை. **முகவரி;** 1/59. 94வது தெரு, செக்டர் 15: கே. கே. நகர், சென்னை-78. **டாக்டர். ஆர். ராஜலட்சுமி:** திருச்சி சீதாலட்சுமி ராமசாமி கல்லூரி, Tamil Poilty என்ற நூல் படைத்துளார். **டாக்டர் திலகவதி ஜகதீசன்:** நாமக்கல் மகளிர் கல்லூரி முதல்வர். பல நாடுகளில் கருத்தரங்கங்களில் ஆய்வுக் கட்டுரை வழங்கியுள்ளார். ஐரோப்பிய வரலாறு (1815-).

**எஸ். பத்மநாபன்** 31-3-1924. இந்திய அரசு வங்கியில் பணியாற்றியவர். தென்னகத் திருக்கோயில்கள், குமரி மாவட்டக் கோயில்கள், கன்னியாகுமரி-உள்ளும்புறமும், நாகராஜர் ஆலயம், இராமேஸ்வரம், தென்குமரியின் புதைந்த வரலாறு 48 முதல் எழுதி வருகிறார். **முகவரி:** 20, இந்திய அரசு வங்கிக் குடியிருப்பு. இராமவர்மபுரம், நாகர் கோயில்-1.

**சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் :** 1888-1970. கோவை. கோவைக்கிழார் என்றழைக்கப் பெறுபவர். நாற்பதுகளில் இந்து அறநிலையத்துறை ஆணையராக இலங்கியவர். சைவசித்தாந்த 30வது மாநாட்டில் தலை தாங்கியவர். சைவமும் தமிழும் வரலாறும் வல்லவர். இராவ்பகதூர் விருது பெற்றவர், 'கொங்கு நாட்டு வரலாறு' இவர் பெருங்கொடை. கோவை மாவட்ட Gazette உருவாக்கியவர். சிறுகதைத்திரள் (38இல்) எனச் சிறுகதைத் துறைக்கும் சிறந்த தொண்டாற்றியவர்.

**மயிலை சீனி. வேங்கடசாமி :** 16-12-1900—8-5-80. மயிலாப்பூர். தமிழறிஞரான இவர் தமிழக வரலாறு-கல்வெட்டுத் துறைக்கும் வாகான பணி ஆற்றியுள்ளார். இவரின் சீரிய

தொண்டுக்கேற்ப இவர் பாராட்டப் பெறவில்லை என்பது உண்மை. வழங்கியவை: சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள், சேரன் செங்குட்டுவன், பழந்தமிழர் வணிகம், சங்க காலத்தில் எழுத்துக்கள், மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன், மூன்றாம் நந்திவர்மன், சாசனச் செய்யுள் மஞ்சரி, களப்பிரர் ஆட்சியில் தமிழகம், துளு நாட்டு வரலாறு, கொங்கு நாட்டு வரலாறு, நுண்கலைகள், தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், மகாபலிபுரத்துச் ஜைன சிற்பம். எனப் 15. அமைதியாக இருந்து அடக்கமே உருவாக அமைந்து அரும் பணியாற்றிய இவர் பதித்த சுவடு என்றும் மறையாது. இவர் தொண்டு தலை மேற் கொள்ளத் தக்கது (பக் 830)

**கே. எம். வெங்கட ராமையா :** 4-4-1911 செங்கற்பட்டு மாவட்ட சைதாப்பேட்டை வட்ட காரம்பாக்கம். கிருஷ்ணையர்: வேங்கடசுப்பம்மாள். பூவிருந்தவல்லி மாவட்ட உயர் நிலைப்பள்ளி, லயோலா கல்லூரி இன்டர்; பி. ஏ. 32 ல் வித்து வான் 37 இல்; தனிப்படிப்பு தமிழ் எம். ஏ. 40 இல். செங்கற் பட்டு கொலம்பியா உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் 38-45; திருப்பனந்தாள் செந்தமிழ்க் ல்கலூரி முதல்வர் 46 - 72 மேலாளர் 72-74, சென்னை தமிழ் சமத்கிருத ஆராய்ச்சி நிறுவன ஆய்வாளர் 74 - 78, அண்ணாமலை திருக்குறள் இருக்கை 78-82, 82 முதல் தமிழ்ப் பல்கலைக் கழக அரிய கையெழுத்துச் சுவடித் துறைத் தலைவர்-புல முதன்மையர்.

வழங்கியவை : இலக்கியக் கேணி, சோழர் கால அரசியல் தலைவர்கள், கல்லெழுத்துக்களில், கல்வெட்டில் தேவார மூவர், அறத்துப்பால் பொழிப்புரை, ஆய்வுப் பேழை I, சிவனருள் திரட்டு பொழிப்புரை ஆங்கில ஆக்கத்துடன், நீத்தார் வழிபாடு திருமுருகாற்றுப்படை உரைக் கொத்து; The Story of Saiva Saints; ஆங்கிலத்தில் மேல்மருவத்தூரில் அற்புதம், கோயில் புராணம்.

அண்ணாமலையில் ஆற்றியன: பரிப் பெருமாள் உரை -ஓர் ஆய்வு, நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் திருக்குறளும், பெரிய புராணக் கதைகளும் திருக்குறள் மேல்வைப்பு வெண் பாக்களும், பெரிய புராணமும் திருக்குறளும். தமிழ்ப் பல்கலைக் கழகப் பணி: தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும், தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு- மெக்கன்சி சுவடி வரலாற்றுக் குறிப்புகளுடன். மராட்டிய மன்னருடைய மோடி ஆவணங்களின் தமிழாக்கம் வரலாற்றுக் குறிப்புரைகளுடன் (12 தொகுதிகள்).

தமிழ் இலக்கண இலக்கிய ஊற்றத்துடன், தமிழக வரலாறு கல்வெட்டுக்களில் தோய்வும் உடையவர். எனவேதான் காஞ்சி தொண்டை மண்டல ஆதீனம் 'கல்வெட்டாராய்ச்சிப் புலவர்' என்றேத்தியது. மதுரை ஆதீனம் 'சிவநெறிச் செல்வர்' எனச் சிறப்பித்தது.

30 இல் மணம்; மனைவி அன்னபூரணி. மகளிர் நால்வர். மகன்கள் ஐவரும் தமிழ் - வரலாற்றுப் பணியிலேயே பின்பற்றியுள்ளனர். கா. மா. கிருஷ்ணமூர்த்தி ஆவடி அரசு உயர் பள்ளித் தமிழாசிரியர்; கா. ம. கண்ணப்பன், தருமபுரம் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்; கவிஞர் ம. வே. பசுபதி, திருப்பனந்தாள் கல்லூரிப் பேராசிரியர்; புலவர் வே. மகாதேவன், ஆடுதுறை குமரகுருபர சுவாமிகள் மேனிலைப் பள்ளித் தமிழாசான், ம. வே. சுவாமிநாதன் சிதம்பரம் அன்னபூர்ணா பதிப்பகம். அரை நூற்றாண்டு அருந்தமிழ்ப் பணியாற்றிய - மக்களையும் மாத்தமிழ் மேவவைத்த மேன்மையர் கா. ம. வே. அவர்கள்.

**சி. கோவிந்தராசனார்:** 1-7-1920. குடந்தை. சின்னையாப் பாண்டியர்: அமிர்தத்தம்மாள். சிறிய மலர் உயர்நிலைப் பள்ளி மாணவர். கரந்தை புலவர் கல்லூரி முதல் மாணவர். உடன் பயின்றோர். மா. ரா. போ. குருசாமி, தணிகை உலகநாதன். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் தலை மாணாக்கர், பட்டீச்சுரம் ரங்கசாமி செட்டியாரிடம் தமிழ்க் கல்வியும் (கம்பன் திறம்); அருணாசல ஆசாரியாரிடம் கோயிற் கலை நுட்பத்தையும், குடந்தைக் குப்புசாமி ஐயரிடம் ஓவிய நுண்மையும்; பாடகச்சேரி ராமலிங்க சுவாமிகளிடம் சித்த வைத்தியமும் அறிந்தார்.

தமிழ்ச்சங்கத்தில் 43இல் ஓவிய ஆசிரியராகவும், 47இல் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியராகவும் 50 இல் வித்துவானாகி, 52 இல் புலவர் கல்லூரியில் விரிவுரையாளர் ஆதல். தென்னிந்தியாவுக்கு வரலாறு இல்லை எனும் குறை களைய, தமிழகப் புதியவரலாறு காணமுற்பட்டார். பண்டாரத்தார் துணையுடன் தஞ்சைப் பெரிய கோவில் கல்வெட்டுகளில் தற்பயிற்சி பெற்றார். இவர் திறம் கண்ட ரா. ராகவையங்கார் பாராட்டி ஊக்கல்.

46இல் கொல்லிமலை (பாவை) ஆய்வு, 47இல் பூம்புகார் கடல் அகழ் வாய்வு, 17-11-1962இல் கண்ணகி கோட்டம் கண்டு

பிடிப்பு, (16 ஆண்டு முயற்சி), இப்படி 47 முதல் 63 வரை புகார்முதல் வஞ்சி வரை தொடர் ஆய்வு செய்ததில் பல கண்டு பிடித்தல். மதுராந்தகம் ஸ்ரீ புராந்தகன் சிற்பம் கண்டு பிடித்தார்.

80இல் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழியற் துறையில் கல்வெட்டுத் துறைச் சிறப்பாய்வாளர். புலவர்குழு உறுப்பினர். பெற்ற பட்டங்கள்: தொல்பொருள் அறிஞர் (பாண்டித் துறைத் தேவர் பைந்தமிழ்ப் பேரவை), தமிழக வரலாற்றறிஞர் (கோவை), கல்வெட்டுப் பேரறிஞர் (குன்றக் குடி அடிகளார்), ஓவியப்புலவர்.

மதுரைப் பல்கலைக்கழகத்தில் செப்பேடுகள், கல்வெட்டுக் கலைச் சொல் அகராதி, கல்வெட்டுக்களில் தமிழ்கச் சமுதாய வியல், 'கண்ணியார் அடிச்சுவட்டில்' பற்றிப் பணியாற்றி னார். வெளியீடுகள்: வளரும் கலைகள், சோழமன்னர் வரலாறு A Flash light on a hidden fact, a lady who gave eyes, தமிழக வரலாற்றுச் செய்திகள், அறிவன் கோயில், ஓவிய நூல்; சகா தேவ நிமித்த சூடாமணி, சதாசிவத் தியானம், சினேந்திர மாலை (பதிப்பு). கம்பளி மூட்டை (கதை), பாப்பாமலர் (குழந்தைக் கவிதைகள்). ஏ. கே. வேலனின் 'எரிமலை'யில் பணியாற்றியுள்ளார்.

குடந்தையில் நாடகக்கம்பெனி நடத்தியுள்ளார்; 37-38இல் வேல்நாயர், பாபநாசம் சிவன் தொடர்பு. தந்திரக்காட்சிகள்- பாம்பு, ஆந்தை-போன்றன தத்ரூபமாக அமைத்து வியப்பில் ஆழ்த்துவார். உமாமகேசுவரனார் சிலை, சென்னையில் உருவானபோது உடனிருந்து செப்பம் செய்துளார். குடந்தை கலைப் பள்ளியில் அலெக்சாண்டர் சிலை, முத்துராமலிங்கர் சிலை வடிக்கப்பட்டபோது திருத்தம் செய்துதவினார். பல் சாதனை புரிந்த இவரின் **முகவரி:** 994. அரிக்காரத் தெரு, கரந்தை, தஞ்சாவூர்-613002.

**பாகூர். புலவர். சு. குப்புசாமி :** 25-4-1939—2-10-1986. புதுவை மாநிலக் கல்வெட்டாராய்ச்சி அறிஞர். சுந்தரேச வாண்டையாரின் மாணவர். தூக்கணாம்பாக்கம் அரசு உயர் நிலைப் பள்ளித் தமிழாசிரியர். சுப்புராய செட்டியாரின் மகன். தமிழக வரலாற்றில் திளைத்தவர். தந்தவை: பல்லவனும் பராந்தகனும், வரலாற்றுக் களஞ்சியம், வரலாற்று வண்ணம், புதுவை மாநிலக் கல்வெட்டுக்கள். சென்னை சேகர் பதிப்பக

ஆசிரியர். **தொடர்புக்கு** கிழக்கு மாடவீதி.பாகூர். (வழி) கடலூர் N. T. புதுவை மாநிலம்.

**புலவர் ந.. வெங்கடேசன் :** வரலாற்றுச் சின்னங்கள், வரலாற்றில் வில்லியனூர் போன்றன படைத்துளார். **முகவரி:** சேடர் தெரு, கணுவாய்ப் பேட்டை. வில்லியனூர் அஞ்சல்; (வழி) புதுவை.

**தாமரைக் கண்ணன் :** (வீ. இராசமாணிக்கம்) 1-7-1934. தமிழாசிரியர். அறுசுவை, ஏழு நாள் தங்கத் தாமரை, மனக் காற்றாடி, மூன்றாவது துருவம், கொன்றைப்பூ போன்ற சிறு கதைகளும்; மருது பாண்டியர், கிள்ளிவளவன், அலெக்சாண்டர் வெண்ணிலா, சாணக்கியன் சாம்ராஜ்யம் முதலிய 7 நாடகங் களும் படைத்த இவர், கருணைக்கடல், திருநாவுக்கரசர், ஆட்சிசுவரர் திருக்கோயில் போன்ற வரலாற்று நூல்களும் படைத்துளார். கல்வெட்டு தொல்லியல் ஈடுபாடும் கொண்ட செயல்படு சிறுகதைச் செம்மல். **முகவரி:** முதல் தெரு, காந்தி நகர், அச்சிறுபாக்கம் அஞ்சல். 603301.

**பொது. போ. வெங்கடராமன்:** புலவர், தமிழ் எம். ஏ; பள்ளித் தலைமையாசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். தமிழகத் தொல்லியல் வரலாறு, கல்வெட்டு பற்றிய செய்திகள் நிறைய தந்தவர். தருமபுரி மாவட்டம் கடத்தூரில் பழங்கால நடுகல் கண்டுபிடித்தவர். போசலர் தலைநகர் குந்தாணி பற்றிக் கட்டுரைகள் வரைந்தவர்.

**வி. இராமமூர்த்தி:** (வியாரெம்) திருச்சி பிஷப் ஹீபர் மேனிலைப் பள்ளித் தமிழாசிரியர். 'கொங்கு நாட்டுக் கவுண்டர் கள்' என்ற அரிய நூலினைப் படைத்துளார். அறிஞர் கே. ஆர். சீனிவாசனுக்கு உதவியாளராக அமைபவர்.

**ம. பசுவலிங்கம்:** 1-1-1945. நீலகிரி மாவட்டம் கோத்தகிரி வட்டம், தூனேரி. ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற்று 71 முதல் ஊட்டி அரசினர் கலைக் கல்லூரியில் பேராசிரியராக உள்ளார். 'ஆங்கிலம் என் நாவில் உள்ளது. தமிழோ என் இதயத்தில் இருக்கிறது' என்கிறார். 'சங்க கால வஞ்சி' இவரது கொடை. சங்ககாலச் சேரர் தலைநகர் வஞ்சி, அக்கால முசிறிக்கு அருகில்—இன்றைய கேரள சிராங்கனூர் பக்கம் இருந்தது. சேர வரலாற்றுப் பெட்டகமான பதிற்றுப் பத்தில் கருவூர் பெயரே இல்லை! இன்றைய திருச்சி மாவட்ட

கருவூர், முசிறி இரண்டும் பழம்பெயர் சூட்டப் பெற்ற பிற்கால ஊர்கள்! என நிறுவுகிறார்.

**கருவூர் புலவர். பெ. இராமலிங்கம்:** (கருவூரே வஞ்சி; பரணர் பாடிய பெருமக்கள்), புலவர் **உடுமலை இளங்கண்ணன்** (திருச் செந்திற் பாவை); **ரா. வெங்கட்ராமன்** தென்னிந்திய வரலாறு, கோவில் கட்டட வரலாறு); தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரி **மா. பாலசுப்பிரமணியன்** (சோழர்களின் அரசியல் கலாசார வரலாறு).

**வே. மகாதேவன்:** 15-2-1950. பனசை செந்தமிழ்க் கல்லூரி வித்துவான். பி. லிட்; எம். ஏ. தனிப்படிப்பு. தொல்பொருள் துறை கல்வெட்டியல் சான்றிதழ். ஆடுதுறை குமரகுருபர சுவாமிகள் மேனிலைப் பள்ளி முதுநிலைத் தமிழாசிரியர். **களப் பணி:** 1. திருலோக்கி கைலாச நாதர் கோயிலில் இராசேந்திர சோழனுடைய கங்கைப் படையெடுப்பின்போது கொண்டு வரப்பட்ட சாளுக்கிய நுளம்பசி சிற்பங்கள் இருத்தல் கண்டறிந்து, 76இல் தொல்லியல்துறை மூலம் வரலாற்றுலகுக்கு அறிவித்தமை. 2. திருச்சத்தி முற்றத்துத் திருக்கோயிற்கருகில் சோழ அரச குருமார்கட்குரிய 'திருஞான சம்பந்தன் திரு மடம்' இடிந்த நிலையினதாக இருத்தலை 'கல் வெட்டிதழ்' கட்டுரை மூலம் 78இல் வெளிப்படுத்தியமை.

**நூற்பணி:** 1. பாடப்பகுதியான '30 கல்வெட்டுக்கள்' விளக்கவுரை. 2. கல்வெட்டுத் தேன் துளிகள். 3. வரலாற்றுப் போக்கில் பழையாறை மாநகர், சிவபாத சேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள். 4. இருக்கு வேளிர் வரலாறு. 5. சரசுவதி மகால் ஆவணங்கள் காட்டும் ஸ்ரீ காமகோடி பீட வரலாறு. தமிழக வரலாற்றுப் பேரவைச் செயலராக 1979இல் குடந்தை யில் மாபெரும் மாநாடு கண்டமை. தமிழ்ப் பல்கலைக் கழக அகராதித் துறையில் பகுதி நேர ஆய்வராக, 'கல்வெட்டுச் சொற்கள்' தொகுத்துதவல். குடந்தைக் கல்லூரியில் எம். பில். 'ஸ்ரீ காமகோடி பீடத்தின் அருள் வரலாறும் சமய சமுதாய தமிழ்ப் பணிகளும்' எனும் தலைப்பில் இயற்றிவருகிறார்.

**தமிழ் நாட்டு வரலாற்றுக் குழுமம்:** 1970. அதிகாரபூர்வமான தமிழக வரலாறு எழுதும் அரசின் குழு. தொல் பழங்காலம்; சங்க காலம் அரசியல்—வாழ்வியல்; பல்லவர் பாண்டியர் காலம்; சோழப் பெரு வேந்தர் காலம்; பிற்காலத் தமிழகம்; தற்காலத் தமிழகம் என்ற 6 தொகுதிகள் வெளிப்படுத்தும். தலைவர்கள்: மு.வ. (70-74), அவ்வை. சு. துரைசாமிப்பிள்ளை

(75-79), கே. கே. பிள்ளை (79-82), பின் க. த. திருநாவுக்கரசு. பொறுப்பு, சி.ஈ இராமச்சந்திரன். குழு கலைக்கப் பெற்று இது போது அனுமந்த, நம்பி ஆரூரன் கவனிப்பில் உளது.

உறுப்பினர்கள்: மயிலை சீனி வேங்கடசாமி, சாத்தன்குளம் ராகவன், கா. அப்பாதுரையார், க. த. தி, சி. ஈ. ராமச்சந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர்கள் கொண்டல். சு. மகாதேவன், பின் நன்னன். முதலிரு தொகுதிகள் வந்துள. கட்டுரையாளர்கள் டாக்டர் சரவணன், சுப்பராயலு, க.த.தி, சி.ஈ.ரா, சாத்தன்குளம் ராகவன், நாகசாமி, செங்கைப் பொதுவன்; கா.மீ, கோ. தங்கவேலு, பண்ணரராய்ச்சி சுந்தரேசன், கொடுமுடி சண்முகம்; மயிலை சீனி, அ. கிருஷ்ணசாமி, ராஜசேகர தங்கமணி, நடன காசிநாதன்.

**தமிழக வரலாற்றுப் பேரவை:** தமிழக அரசு தொல்பொருள் துறையின் துணையுடன் தமிழகமெங்கும் 72ல் அமைக்கப் பெற்றது. நடன காசிநாதனை அமைப்பாளர் - செயலாளராகக் கொண்டு இயங்கியது. ஈரோடு, கரூர், தருமபுரி, கோவை, கடலூர் போன்ற ஊர்களில் கிளைகள் அமைந்தன. நாகசாமி, சேதுராமன், இராசு, கொடுமுடி சண்முகம், குழந்தை வேலன் போன்றார் இருந்தனர். திருச்சி, கோவை, செங்கற்பட்டில் மாவட்ட மாநாடுகளும், சென்னையில் மாநிலமாநாடும் நடந்தன. தலைமையகம் சென்னையில். 76 க்குப் பின் இது இயங்கவில்லை. என்றாலும் மாவட்டங்களில் எப்போதேனும் கூடுகின்றன. பல இளைஞர்கள் இதனால் ஊக்கம் பெற்றனர். வரலாற்றுணர்வு எழுந்தது. இதன் விவரங்கள் 'கொங்கு' இதழில் முறையாக வெளியிடப் பெற்றன. கருத்தரங்குகள் பல நிகழ்ந்தன. South Indian Studies, Madurai through Ages போன்றன வெளியாயின.

**புதுவை வரலாற்றுச் சங்கம்:** அறிஞர் மூ. வே துப்ராய் தொடங்கி வைத்துப் பின் செயலாற்றாது நலிந்தது. புத்துயிர் ஊட்டிப் பொலியச் செய்தவர் பல்கலை அறிஞர் பண்பாளர் அமரர் திருமுடி. சேதுராமன் செட்டியார். கல்வெட்டுக்களில் புதுவைப் பகுதிகள் (பாகூர் குப்புசாமி), வரலாற்றில் புதுவை (ரா. தேசிகம் பிள்ளை) போன்றன வெளியிடப்பட்டன. அவரின் பின் ஏற்று இயக்குவாரிலாமல் தூங்குகிறது.

**தென்னிந்திய வரலாற்றுப் பேரவை** (Society of South Indian History) 30-6-80. வரலாற்று ஆராய்ச்சிக்கும் வெளியீடுகட்குமான அனைத்திந்திய அமைப்பு. நோக்கம்: பல்வேறு இடங்

களில் கிட்டும் வரலாற்றுச் செய்திகளைத் திரட்டுதல், கருத்தரங்கு மாநாடு நடத்துதல், கட்டுரை இதழ் நூல்கள் வெளியிடல், ஆராய்ச்சியாளர்களை உதவி ஊக்குதல், வரலாற்று ஆராய்ச்சி மையம் அமைத்தல். குறிக்கோள்: மொழி-வரலாற்று அறிஞர்களை ஒருங்கிணைத்தல். இதுவரை 4 கருத்தரங்குகள் நடத்தியுளது; ஈரோடு, கோவை, மதுரை, சேலம். இரு கட்டுரைத் தொகுதிகள் வெளியிட்டுளது. புலவர் செ. இராசு, வேலா. ராசமாணிக்கம், இராமகிருட்டிணன், முனியப்பன், ராஜசேகர தங்கமணி போன்றார் முயற்சியால் தொடங்கப் பெற்றது. முன்னாள் தலைவர் புலவர் ராசு, பின் கோபி அரங்கசாமி. செயலராக இருந்து சுழல்பவர் டி.பி. ஜெகந்நாதன். **முகவரி**: தலைமையகம், 3, மண்டபம் தெரு, ஈ.ரோடு - 1; செயலகம்: 3D/2 Byepass Rd. Velur (Salem) 638 182.

South Indian History Congress: 80 முதல் இயங்கிய வருகிறது. தென்னக வரலாற்றுக்கு முதன்மை தரும் முனைப்பினது. SIHC ஆண்டு தோறும் மாநாடு நடத்துகிறது. வரலாற்றில், அரசியல் சமுதாய பொருளியல் வரலாறு, பண்பாடு வரலாறு என்ற பாங்கில் கூடி ஆய்கிறது, இதன் செயலராக அமைபவர் மதுரைப் பல்கலைக்கழக டாக்டர் கே. ரா. ஜெயன். 300 பக்க மலரும் வெளியிடுகிறது.

**கொங்கு ஆய்வகம்**: (Institute of Kongu Studies) 1979. தோற்றுநர் டாக்டர் புஸ்நாகி ராஜண்ணன். கொங்கு நாடு புற்றிய வரலாற்றுப் பண்பாட்டுக் கருவூலங்களைத் தொகுத்தும் வகுத்தும், படித்தும் பரவும் வகை செய்யும் பெரு நோக்கினது. கொங்கின் அறிவும் பண்பாடும் கலையும் பிறரறியா நிலையில் உள; அவற்றைப் பாரறியச் செய்வது, இது பற்றி ஆய்வோருக்கு உறுதுணை புரிந்து உந்து சக்தியாக அமைவது. இவ்வகையில் ஒரு நூலகம், காட்சியகம், கொங்கு நாடு இதழ், பயிலகம் வெளியீடுகளை ஊக்குதல் என்னும் திட்டத்தது. இத்திறம் கொண்ட தனியார் - நிறுவனங்களின் கொடையாலும் மானியத்தாலும் வளர்ந்தேறி வருகிறது. Preserving the Past for the Future...To Preserve and Transmit என்னும் குறிக்கோளினது.

வரலாற்று மூலங்களான கல்வெட்டுகள், ஓலைச் சுவடிகள், முன்னோர் நாட்குறிப்புகள், கலை, கைவினைப் பொருட்கள், நாட்டுப் பாடல்கள் போல்வனவற்றைத் திரட்டி வருகிறது. வரலாற்றுக் கலன்களைப் பாதுகாக்கவும் வெளிக் கொணரவும் பயிற்சி அளித்துச் சான்றிதழ் தந்துளது. கொங்கு நாட்டு எழுத்

தாளர் - நூல்கள் சேலம் மாவட்ட பத்திரிக்கைகள் பட்டியல் உருவாக்கியுளது. அவ்வப்போது கொங்கச் செய்திகள் தாங்கிய IKS மடலங்கள் வெளியிடுகிறது.

கொங்கு மாவட்டங்களில் கருத்தரங்குகள் நிகழ்த்தி வருகிறது. சேலம் மாவட்ட சமூக பண்பாட்டு வரலாறு பற்றி சேலத்தில் 12-6-82 லும், 24, 25-4-83ல் தருமபுரியிலும்; நீலகிரி மாவட்டம் பற்றி 16, 17-6-84 இல் ஊட்டியிலும், பின் பெரியார் மாவட்டம் பற்றியும் நிகழ்ந்துள; கருத்தரங்கக் கையேடும் வெளியாகியுள. இதன் இயககுநர் டாக்டர் ராஜண்ணன்; தலைவர் பேரா. தி. கோவிந்தன் செயலர் கவிஞர் தமிழ்நாடன்.

**டாக்டர் புஸ்நாகி ராஜண்ணன்** : 1929. இராசிபுரம். மதுரை சேலம் மாவட்ட நூலகராக மிளிர்ந்தவர். 61 இல் அமெரிக்க அரசின் அழைப்பின் பேரில் Multi-national Librarians Programme இல் கலந்துகொண்ட ஒரே இந்தியர். அங்கோய M. A. M. S, M. Phil, Ph. D. போன்ற நூலகப் பட்டங்கள் பெற்றார் British Council பேருதவி கொண்டு அதன் அருங்காட்சியகத்தில் Dravidian Bibliiographyக்குரிய ஆராய்ச்சிகளைச் செய்து, இத்தாலி, பிரான்ஸ், ஜெர்மனி போன்ற ஐரோப்பிய நாடுகளிலும் தொடர்ந்தார். இரண்டாண்டுகள் பால்டிமோர் Enoch Pratt Free Library இல் பணியாற்றித் தாயகம் திரும்பினார்.

67-72 வரை ஐதராபாத்தில் புதுவதாகத் தொடங்கப் பெற்ற American Studies Research centre இல் பணிபுரிந்தார். 72 இல் Fulbright Scholarship கிடைக்கவே முனைவர் பட்டம் பெற கான்சாஸ் (அமெரிக்கா) சென்றார். ஆய்வு முடிந்ததும் Newyork State Varsity of Baffallo வில் ஆலோசகராகப் பணியாற்றி 79 சனவரியில் தமிழகம் போந்தார். வந்ததும் கொங்கு ஆய்வகம் நிறுவினார்.

இவர் ஓர் அறிவுச்சுடர். பொதுவாக தமிழாய்விலும் சிறப்பாகக் கொங்கு பற்றிய ஆராய்ச்சியிலும் ஈடுபடுவார்க்கு ஒப்பரிய ஊற்றாக ஒளிர்கிறார். Dravidian Languages and Litt, திராவிட மொழிகளினின்று பெயர்க்கப்பட்டதும் அம்மொழிகள் பற்றியும் ஆங்கிலம் மற்றும் ஐரோப்பிய மொழிகளில் உள்ள நூல்களின் நூற்பட்டி-மதுரைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுளது. மொழியியல் அறிஞர், கலை-பண்பியல் ஆர்வலர் வரலாற்று விற்பன்னர். ஆய்வுத் தோய்வும் கள ஆய்வில் ஈடு

பாடும் கொண்டு உழைத்து வரும் இவர், தமிழக வரலாற்றுப் பண்பாய்வாளர்க்கு ஒரு கொழுகொம்பு விரல் நுனியில் விவரம் வைத்திருக்கும் விற்பன்னர். இவரைப் போற்றிப் பயனுறுவது நம் பண்பான கடமையாகும். **முகவரி:** 74 A, Gugai Line Road, Salem-636 006.

## 44. தொல்லியலும் கல்வெட்டும்

இந்நாளில் பல்லோர் பேரார்வம் கொண்டு இத்துறையில் உழைக்கும் நிலை உருவாகியுளது. இதற்குப் பெரிதும் காரணம்: தமிழகத் தொல்பொருள் துறை ஆண்டுதோறும் கோடைப் பயிற்சி வகுப்புகள் நடாத்திப் பயிற்சி அளித்தமையே! தேனீ போல் உழைத்துப் பம்பரம் போல் சுழன்று பணியாற்றும் பல்கலைச் செல்வர் இரா. நாகசாமி பணி பராட்டுதற்குரியது.

வெள்ளையாம்பட்டு சுந்தரம் கல்வெட்டு ஓர் அறிமுகம், கல்வெட்டியல், கல்சொல்லும் கதைகள்; நடன காசிநாதன் கர்லச் சுவடுகள், தொல்லியல் முறைகள், ஆ. வேலுப் பிள்ளை சாசனமும் தமிழும்-போன்றோர் பணிபோற்றுதற்குரியது.

இத்துறையில் பண்டாரத்தார், சுந்தரேச வாண்டையார், இராசமாணிக்கனார் - மும்மணிகளாக முறுவலிக்கின்றனர் தொல்பொருள் துறையினர் செங்கம் நடுகற்கள், தஞ்சைப் பெருவுடையார் கோயில்-கன்னியாகுமரி கோயில் கல்வெட்டுக் கள் பதித்துள்ளனர். புலவர் ராசு பொலிகிறார். வி. சா. குரு சாமி தேசிகர், மதுரை சாம்பசிவன் பதிப்பித்துள்ளனர்.

அண்மைக்காலக் கல்வெட்டுக் கண்டுபிடிப்புகளால், தமிழக தமிழிலக்கிய வரலாற்றில் சில காலங்கள் அறுதியிட உறுதியாக உதவுகின்றன. புதிய கல்வெட்டுகள் புது ஒளிபாய்ச்சித் தமிழக வரலாற்றில் சில திருப்பங்களை ஏற்படுத்தியுள்ளன. இங்ஙனம் கல்வெட்டு கன்னித் தமிழ் இலக்கியத்தோடு கைகோர்த்துத் தமிழக வரலாற்றுச் செம்மைக்கு வழிகோலுகிறது. இத்துறை ஏந்தல்கள் சிலரை எண்ணுவோம்.

**தி. நா. சுப்பிரமணியன் :** 19-4-1904. தஞ்சாவூர். தமிழ் நாட்டுத் தொல்லியல் கல்வெட்டியல் முன்னோடி. முதன் முதல் கட்டபொம்மு, கங்கை கொண்ட சோழன் பற்றி எழுதியவர். பண்டைத்தமிழ் எழுத்துக்கள் பயனான நூல். தென்னிந்திய கோயிற் கல்வெட்டுக்கள் (3 பகுதி), பல்லவர் செப்பேடுகள்

முப்பது, பாண்டியர் செப்பேடுகள் பத்து போன்றன பதிப்பித்துள்ளார். ஹைதர் காலம், காட்டு மல்லிகை (சிறுகதை), ராஜ சுந்தரி, மாயூரன் (நாடகம்) படைத்துள்ளார். **தொடர்புக்கு :** நியூ காலனி, பஜனை கோயில் பின்புறம், சூளைமேடு, சென்னை-94.

**தி. நா. இராமச்சந்திரன்:** தமிழ்நாட்டுத் தொல்லியல் முன்னோடி. தமிழ்நாடு தொல்பொருள் துறையினைத் தோற்றியவர்.

**கே. ஜி. கிருஷ்ணன் :** தஞ்சாவூர். அண்ணாமலையில் கா. சு. பிள்ளையின் மாணவர். இந்தியாவின் புகழ்மிகு கல்வெட்டாய்வாளர். இந்தியக் கல்வெட்டுத்துறையின் தென்னகக் கிளையின் தலைமைக் கல்வெட்டறிஞர். **கொடைகள் :** Studies in South Indian History and Epigraphy, Mutharayas, Jain Manuments of Tamil Nad, Architectual terms in South Indian Inscriptions, South Indian Inscriptions (2 Vols), Annual Report on Indian Epigraphy. Epigraphica India (6 vols) **முகவரி:** Old Varsity Buildings. Mysore - 5.

**ஐராவதம் மகாதேவன்** I. A S. : ஆறு நாட்டான் மலைக் கல்வெட்டினை முதன்முதல் படித்து விளக்கியவர். தமிழ் நாட்டில் பிராமி எழுத்தின் தோற்றம் வளர்ச்சி பற்றி Carpus of Tamil Brahmi Inscriptions என நூல் படைத்தவர். Origin and Development of Tamil scriptபற்றி ஆராய்ந்தவர். நேரு Fellowship ஆய்வூதியம் பெற்றவர். பல வரலாற்றுக் கருத்தரங்குகளில் கலந்து அரிய கருத்துக்கள் அளிப்பவர். Indian Express, Hindu வில் கட்டுரைகள் வரைபவர். **முகவரி :** 'வைஜயந்தி' 112. சேமியர்ஸ் சாலை, நந்தனம். சென்னை-35.

**கே. வி. ராமன்:** சென்னைப் பல்கலைக் கழகத் தொல்லியல் துறைத் தலைவர். Dy Superentending Archaelogist, Archaelogical Survey of India (Madras) ஆக இருந்தவர். பல தொல்லியல் ஆய்வுகள் நிகழ்த்தியுள்ளார். எம். லிட் 56 இல். The Early History of the Madras region upto 1650 AD. டாக்டர் பட்டம் 68 இல் Sri Varadarajaswami temple, Kancheepuram. பாண்டியர் வரலாறு, தொல்லியல் ஆய்வுகள்; The chieftains of Maladu, Some aspects of Pandiyan History in the light of recent discoveries போல்வன இவர் தந்தவை.

**இரா. நாகசாமி :** 10-8-1930. பெரியார் மாவட்ட ஊஞ்சலூர் (பூர்வீகம் தந்தை திருக்காட்டுப் பள்ளி; தாய் திருவை

யாறு). சென்னைப் பல்கலைக் கழக வடமொழி எம்.ஏ., தமிழ் வடமொழி ஆங்கிலம் மும்மொழி விற்பன்னர். 59-62 சென்னை அருங்காட்சியகக் காப்பாளர். புதுதில்லி தொல் பொருளியல் பள்ளியில் பயிற்சி பெற்றார். 62-55 வரை மாநிலத் தொல் பொருள் துறையில் பணி. 66 முதல் தமிழகத் தொல்பொருள் துறையின் (முதல்) இயக்குநர். 75இல் பூனா பல்கலைக் கழகத் தினின்று Tantric Cult in Tamil Nadu என்ற ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றார்.

Institute of Epigraphy தோற்றுவித்து அதன் தலைவராகத் திகழ்கிறார். இங்கிலாந்து, அமெரிக்கா, ருஷ்யா, இதாலி, கிரீஸ், பிரான்சு, டென்மார்க், மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகட்குப் பரந்துபட்ட பயனான பயணம் செய்தவர். 'கல் வெட்டு' காலாண்டு இதழின் ஆசிரியர். International Council. of Monuments and Sites, உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழக உறுப்பினர். S ociety of Archaelogical Historical and Epigraphical Researchன் தலைவர். மயிலை குப்புசாமி சாஸ்திரி வட மொழி ஆராய்ச்சி நிலையத் துணைத் தலைவர்; உ.வே.சா. நூலகத் தலைவர் எனப் பல் பொறுப்புகளில் பாங்காகப் பணி யாற்றியவர். கொற்கை, பல்லவமேடு, கங்கை கொண்ட சோழபுரம்; வசவ சமுத்திரம், கருவூர் போன்ற இடங்களில் அகழ்வாராய்ச்சி நிகழ்த்தியவர்.

ஆங்கிலத்தும் தமிழிலுமாக 100க்கும் மேலான உயர் கட்டுரைகள் வடித்துளார்; தென்னகச் செப்புத் திருமேனிகள், கல்வெட்டு, வரலாறு, கோயில் பற்றியன New light on Mamallapuram and செப்புமேனிகள் பற்றியன குறிப்பிடத் தக்கன. மாமல்லபுரம் பற்றிய பழம் கருத்துக்களைத் தவிடு பொடியாக்கித் தகர்த்துப் புதிய திருப்பம் தந்துளார்; மல்லைச் சிற்பங்கள் மகேந்திரன் நரசிம்ம பல்லவன் பயந்தவை என்ற கருத்தை உடைத்தெறிந்து, ராஜசிம்ம பல்லவனுடையது என்பதை நிறுவியுள்ளார்; உலக அறிஞர்கள் ஏற்றுப் போற்றி யுள்ளனர். இங்கிலாந்து அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் பாராட்டியுள. 'ராஜராஜேசுர விஜயம்' என்றொரு நாடகம் நடிக்கப்பட்டதாக செய்தி மட்டும் உளது; நூல் இல்லை. அக் குறை போக்க, கல்வெட்டு செப்பேடு வரலாற்று நிகழ்வுகளை நிலைபெறக் கொண்டு கல்வெட்டுத் தமிழிலேயே அழகான கவிதையில் அற்புதமாக வடித்துத் தந்துளார். 85 சதய விழா வில் அரங்கேற்றப்பட்டது. நல்லறிஞர் வியந்து பாராட்டினர். தமிழகத் தொல் பொருள் வல்லுநர்களில் இருவரே இந்திய

தொல்லெழுத்துக்களை அறிந்தவர்கள். ஒருவர் கலாம்பூர் சிவராமமூர்த்தி. மற்றொருவர் இவர். தொல் பொருளியலுடன் தொடர்புடைய பல்வேறு களங்களிலும் வல்லவர். உண்மையில் ஒரு மேதை.

தமிழ்க் கல்லெழுத்துக்கள் மற்றும் கிரந்த எழுத்துக்களைப் பள்ளி மாணவர்களும் ஆசிரியர்களும் எளிதே படித்துப் பொருள் கூறும் அளவுக்குப் பயிற்சி வகுப்புகள் 70 முதல் நடத்தித் தமிழகத்தில் தொல்பொருளியலைப் பிரபலப்படுத்தியவர்; முதுகலையில் கல்வெட்டு தொல்பொருளைப் பாடமாக்கியவர். எனவே இவர் 'மக்களின் தொல்பொருள் வல்லுநர்' என்றேத்தப் பெறுகிறார்.

**அளித்தவை:** தமிழகம், ஓவியப் பாவை, கல்லும் சொல்லும், கலைச் செல்வங்கள், மாமல்லை, கங்கை கொண்ட சோழபுரம். ராஜராஜன்; Studies in Ancient Law & Society, Tamil Coins, Art of Tamil Nadu, South Indian Studies, சிவசக்தி (அப்பர் பற்றிய அரிய ஆய்வு), Damilica Editor. கல்வெட்டியல்-இணை ஆசிரியர். கன்னியாகுமரி, செங்கம், திருத்துறைப்பூண்டி, தஞ்சைக் கோயிற் கல்வெட்டுக்கள் பதிப்பர். தக்காரை ஊக்கும் உள்ளத்தர், உயர்த்தும் ஒப்புரவாளர். அளவளாவும் அரை மணி நேரத்தில் 6 மாதச் செய்திகளை உதிர்ப்பார்; அரிய கருத்துக்கள் கொட்டுவார். **முகவரி:** தொல் பொருள் துறை. தெற்குக் கரை. சென்னை-28. இ 38ஏ. 22வது குறுக்குத் தெரு. பெசன்ட் நகர். சென்னை-90.

**பூங்குன்றன்:** (அ. இராசேந்திரன்) 1948. சேலம் செந்தாரப்பட்டி. அய்யாக்கண்ணு: சம்பூரணம். கேரள பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. தமிழ் 73இல், மதுரைப் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. வரலாறு. தமிழ் நாடு தொல் பொருள் துறையன் கல்வெட்டாய்வர். 100க்கும் மேலான ஆய்வுக் கட்டுரைகளும், 25க்கும் மேற்பட்ட ஆய்வு நூல்களை எழுதியும் பதிப்பித்தும் உள்ளார். சேலம் மாவட்டக் கோயில்கள், வஞ்சிப் பூக்கள், போகரின் பயணக் குறிப்புகள், அங்க லட்சண அகராதி, மருத்துவத்தில் துளசி.

பதிப்பு: கீழ்வேளூர் உலா, அனுபவ தமிழ் மருந்துகள், தொல்லியல் கருத்தரங்கு, பாளையப்பட்டுகளின் வம்சாவளி, Bibliography of ஐங்குறுநூறு, கலித்தொகை; இதழ்கள்: இளவேனில், கல்வெட்டு, கோகயம், கண்டுபிடிப்புகள்: பராந்தகன் காலத்து சிவகாமி அம்மன் சிலை-(கல்வெட்டுடன்-

கரை வீரத்தில்). 2. வட்டெழுத்து தமிழ்க் கல்லெழுத்துக் களுடன் சங்குகள்-திருவிடை வாசலில். 3. சீனர் பயன்படுத்திய 9ஆம் நூற். பீங்கான் குடுவை 2-செம்போடைப் பகுதியில். நாட்டுப்புறவியலிலும் நாட்டங் கொண்டு பெருநாட்டு வேளாளர், பாண்டி நாட்டுத் தாலாட்டு (பழஞ்சுவடி) பதிப்பு கொணர்ந்துளார். **முகவரி:** தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை-28.

**புலவர். செ. இராசு:** 2-1-1938. பெரியார் மாவட்ட வெள்ளமுத்துக் கவுண்டன் வலசு. சென்னியப்ப கவுண்டர்: நல்லம்மாள். திருப்பனந்தாள் தமிழ்க் கல்லூரி மாணவர், பொற்கோவின் உடன் மாணாக்கர். 59-63 ஈரோடு செங்குந்தர் உயர் நிலைப்பள்ளி, 63-80 சி.எஸ்.ஐ. மேனிலைப் பள்ளி, 80-82 தொல் பொருள் துறை, 1-2-1982 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டுத் துறை விரிவுரையாளர், இணைப் பேராசிரியர்.

புலவர் பயிலும் போதே படைத்தது சூரியனார் கோயில் சிவாக்கிரயோகிகள் ஆதீன வரலாறு; கண்ணகி கோட்டம், தங்கம்மன் வரலாறு, கலைமகள் கல்விக் கூடம். திருமந்திரம் 100 குறிப்பு, கம்பர் வாழி, எங்கள் பவானி, கலைமகள் கலைக் கூடக் கையேடு; கொடு மணல் இலக்கியம், பூர்வ சக்ரவர்த்தி நாடகம் - சுவடிப் பதிப்புகள். தஞ்சை மராட்டியர் செப்பேடு கள், மராட்டியர் கல்வெட்டுக்கள். (மிகச் சிறந்த மராட்டிய வரலாற்று ஆவணம்) 'செந்தமிழ் வேளிர் எம்.ஜி.ஆர்-ஒரு வரலாற்று ஆய்வு; தமிழக முதல்வரின் முன்னோர் பெரியார் மாவட்டம் காங்கேயம் வட்டம் சங்கரண்டாம் பாளையத்தி லிருந்து கேரளம் சென்ற கொங்கு வேளாள கவுண்டர்களே என்று ஆய்ந்து முடிவு செய்துள்ளார். 26-11-1986இல் சென்னையில் வெளியிடப்பட்டது.

திருப்பனந்தாள் (23), தருமபுரம் (13), திருவாவடுதுறை (70) ஆதீனச் செப்பேடுகள் அனைத்தையும் படி எடுத்து வந்து ளார்; வெளிவரும். இது சிறப்புமிக்க-வரலாற்றுத் துறையில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். தமிழ் வளர்ச்சித் துறைக்காக 'விசயமங்கலம்' என்ற நூலினை எழுதி வருகிறார். கொங்கு நாட்டு வரலாறு வெளிப்பட ஆவன செய்து வருகிறார்:

செப்பேடு ஓலை காகிதங்களில் உள்ள 20 வரலாற்றுப் பட்டயங்களைப் பதிப்பித்துள்ளார்; 25 தொகுத்துளார். 500 கல்வெட்டுகள் படி எடுத்துள்ளார்; 50க்கு மேல் வெளியிட்டுள்

ளார் (புதியவை). காலிங்கராயன் கால்வாய், கொங்குநாடும் சமணமும், கொங்குத் தமிழ், ஓலைப் பட்டயங்கள், கருத் தரங்கக் கட்டுரைகள் வெளிவரவுள. எழுத இருப்பன: கல் வெட்டும் தமிழர் பண்பாடும், எண்ணும் எழுத்தும், தொல் பொருள் கையேடு, பாடல் கல்வெட்டுக்கள் (தொகுப்பு) 'கொங்கு' ஆசிரியர்; கொங்குமலர் சிறப்பாசிரியர்.

மறைந்து போன மறைந்து வரும் கல்வெட்டுச் செய்திகளை வெளிக் கொணர்தல், அதன் மூலம் அக்காலத்திய வரலாற்றை அறிவித்தல். வரலாறு, வெறும் அரசுகள் அவர்கள் குடும்பம் பற்றியே உள: மக்கள் வாலாறு தொகுக்க உதவுதல்-இது இவரின் வரலாற்றாய்வுக் கோட்பாடு. மத சகிப்புத் தன்மை, பொதுமை உண்மை உழைப்பு நடுநிலைமை பணிவு, மறைந்த தமிழர் தம் தொன்மைச் சிறப்பை ஒல்லும் வகையான் வெளிப் படுத்துவது-இது வாழ்வியல் கொள்கை. கல்வெட்டுப் படித்து வரலாறு படைப்பதில் வல்லவர்.

**கண்டு பிடிப்புகள்**: அறச்சலூர் தமிழ் பிராமி இசைக் கல் வெட்டு, பழமங்கலம் பாடல் நடுகல், இராசகேசரிப் பெருவழி, கொடுமணல் (பதிற்றுப் பத்துக் கொடுமணம்) தொல்பொருள், எண்ணற்ற (40) ஓலைப் பட்டயங்கள், பெருங்கதைக் கல் வெட்டு-விசயமங்கலம், பவணந்தி முனிவர் சிலை.

பெற்ற சிறப்புகள்: பசுமைப் பணிமன்றமும் கவுண்டம் பாளையம் இராசாக் கவுண்டரும் தனித்தனியே 10,000 ஆய்வு உதவிக்காகப் பரிசளித்துள்ளனர். கலைமகள் கல்விக் கூடம் ரூ 500ம், ஒரு பவுன் மோதிரமும் பரிசளித்தது. சென்னை மறைமலையடிகள் மன்றம், பெரியார் மாவட்டத் தமிழாசிரியர் கழகம் ஈரோடு உலகத் தமிழ்க் கழகம், ஆசிரிய ஐக்கிய சங்கம், நவரசம் நற்பணி மன்றம் பொன்னாடை போர்த்திப் பாராட் டின. கல்வெட்டறிஞர், பேரூர் ஆதினப் புலவர், செந்தமிழ்க் காவலர் போன்றன பட்டங்கள்.

மணம் 66இல், மனைவி கௌரி; மூன்று ஆண் மக்கள். இத்தனைக்கும் திக்கு வாயராக இருந்து முயன்று வென்றவர். மிகவும் ஏழ்மையில் பிறந்து உழைப்பே இறைவன் என மதித்து ஏற்றம் பெற்றவர்.

**குடந்தை என். சேதுராமன்**: ஒரு செல்வந்தர். அதிலும் பொறியியல் துறையில் (ராமன் & ராமன்) பொழுது கழித்திடும் பெருமகன், கல்வெட்டிலும் கால ஆய்விலும் தமிழக வரலாற்

றிலும் ஈடுபட நேர்ந்தது நம்க்கெல்லாம் ஒரு பெரும் பேறு. 'இங்கிவனை யான் பெறவே என்ன தவம் செய்துவிட்டேன்' எனத் தமிழன்னையே பெருமிதம் கொள்ளும் பெருமகன். தொழில் முறையல்லாத இவர், வரலாற்றிலும் கல்வெட்டிலும் திளைக்கும் பொறுப்பாளர்களைக் காட்டிலும் அரும்பணி யாற்றியுள்ளமை வியந்து போற்றத்தக்கது.

அருளியன : அருளுடைச் சோழ மண்டலம், The Cholas, The Early Cholas, The Imperial Pandyas, Medieval Pandyas. இந்தியக் கல்வெட்டியல் கழகம், தென்னிந்திய வரலாற்றுக் கழகம், தமிழ்ப் பல்கலைக் கழகம் போன்றன நடாத்திய பெரும் கருத்தரங்குகளில் அரிய கட்டுரைகள் படித்துள்ளார்; புதிய கருத்துக்களும் கண்டுபிடிப்புகளும் அவற்றில் வைரமென மின்னுகின்றன.

பரகேசரிவர்மன் உத்தமசோழன், ஜடிலவர்மன் அரிகேசரி தேவ பராக்கிரம பாண்டியனும் தென்காசி விசுவநாத ஆலய காலமும், இடைக்காலப் பாண்டியர் சிலரின் காலமும் அவர்கள் கோயில்களும் 2-ம் ஜாடவர்மன் குலசேகர பாண்டியன், முதலாம் மாறமர்மன் விக்ரம பாண்டியன், இரண்டு ஜாடவர்ம விக்கிரம பாண்டியர்கள், தென்காசி பராக்கிரம பாண்டியனும் அவனை அடுத்து வந்தோரும், இரண்டு ஜாடவர்ம சுந்தர பாண்டியர்கள், 14-ஆம் நூற். ஐந்து பாண்டியர்கள், பாண்டி மண்டில ஹொய்சலர்கள், கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறும் கோயில் தேர்கள், பஞ்சவன் பாண்டியன். சோழ பாண்டியர் வரலாறு பற்றிய அண்மை ஆய்வுகள், ராஜராஜன் பிறந்த- முடி சூடிய நாட்கள் என ஆய்வுக் கட்டுரைகள்.

தருமையாதீன 'ஞான சம்பந்தம்' இதழில் சமய நூல்களின் காலங்களைக் கணித்துத் தந்துள்ளார். கல்வெட்டு கொண்டு கணிதமுறையில் அறிவியல் அணுகலோடு அமைத்திடும் அருமை பெருமைப் படுமாறுளது. ராஜராஜசோழன் பிறந்தது 947, ஐப்பசி சதயத்தில், அரசுக்கு வந்தது 985 ஆடிப் புனர்வசு, பெருவுடையார் திருக்கோயில் குடமுழுக்கு 1010 சித்திரை சனிக்கிழமை புனர்வசு. ஆட்சி முடிவு 1014 எனத் தெள்ளத் தெளிய அறுதியிட்டுள்ளார். ஆயிரமாண்டு 84 ஆடி 27-7-84 ல். 1001ஆம் விழா 14-7-85 இல் என நிறுவியவர்.

இந்திய அரசு கல்வெட்டியல் இயக்குநரின் பாராட்டினைப் பாருங்கள்: 'I have had occasion to mention N. Sethuraman's

commendable work in the field of historical chronology of Tamilnadu. Proceeding on the incontrovertible assumption that all calculations of the dates of Indian inscriptions must be done on the basis of the Indian Calendar system, he has either unequivocally fixed the dates of accession and conclusion of reigns or considerable reduced the gap between the extremes of the dates in the case of many Chola and Pandya Kings' Scholars of Andhra and Karnataka would do well to take their clue from Shri Sethuraman

தம்மை ஒரு இரண்டாம் ராஜராஜனாகவே கருதும் இத்தக் காரின் **முகவரி** : Director, Raman & Raman. Nageswaran North Street *(20975)*, Sri Nagar Colony (20375). Kumbakonam-612001.

**வெ. இரா. துரைசாமி** : *5-4-1942* சேலம் நாமகிரிப்பேட்டை வெள்ளைக் கல்பட்டி. திருப்பனந்தாள் கல்லூரியில் புலவர் பட்டம் பெற்று நாமகிரிப்பேட்டை மேனிலைப் பள்ளித் தமிழாசிரியர். பின் பி. லிட்; எம். ஏ. தனித்துப் பயின்றார், ஓய்வு நாட்களில் வீட்டில் தங்காமல் கல்வெட்டு, பட்டயம், தாழி தேடிச் செல்வார். கல்வெட்டு ஆய்வே மூச்சாகக் கொண்டவர்.

சேலம் மாவட்டத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட கல்வெட்டு களைக் கண்டறிந்து வெளிப்படுத்தியவர். கொங்கு நாடு, கொல்லிமலை, சேலம் பற்றிய வரலாற்றாய்வு செய்து கொண்டே இருக்கிறார் சளைக்காமல்! பல அறிஞர்கட்கும் ஆய்வாளர்கட்கும் புதிய கல்வெட்டுக்களைக் கொடுத்து உதவு கிறார். மைய கல்வெட்டுத் துறையினரின் பாராட்டு பெற்றவர். வரலாற்றுத் துறையினர் தொல் பொருள் துறையினர் நடாத்தும் கருத்தரங்குகளில் பங்கேற்றுப் பயனான கட்டுரைகள் படிக்கிறார். இரா. நாகசாமியின் பாராட்டுக் குரியவர்.

சில கட்டுரைகள் : உலகளந்தான் சதுர்வேதி மங்கலம், சேந்தமங்கலம் பாளையக்காரன் இராமச்சந்திர நாயக்கன், நாமக்கல் அருகே சோழர்காலப் புதிய நடுகல், சேலம் மாவட்ட தேவார வைப்புத் தலங்கள்; பராந்தக ஈச்வரம், செய்து கொண்டிருப்பது 'கொல்லிமலை வரலாறு' அடககம் மிக்க இவரின் **முகவரி** : வெள்ளக்கல்பட்டி - நாமகிரிப்பேட்டை வழி. சேலம் 637406.

## கலை : கோயிற் கலை

தமிழகக் கோயிற்கலை சிற்பம் பற்றி ஆராய்ந்து, தம் வருவாய்த்துறை அலுவற்கிடையே ஓயாது செல்லுமிடங்களி லெல்லாம் தொண்டாற்றியவர். தொ. மு. **பாசுகரத் தொண்டை மான்** அவர்கள். சிறந்த கற்படிமங்களையும் சிற்பங்களையும் ஒருங்கு திரட்டித் தஞ்சையில் கலைக்கூடம் அமைத்தவர். இத் துறையில் தொண்டைமான் தொண்டு போற்றற்குரியது. **கே. எம். சோமசுந்தரம் பிள்ளையின்** தொண்டு சாலச் சிறந்தது **(பக். 822)**

**கே. ஆர் சீனிவாசன்** : Dy Director General of Archaelogy ஆகப் பெரும் பதவி வகித்து ஓய்வு பெற்றவர். தமிழகக் கலை கட்டிடம் சிற்பங்களில் வல்லுநர். Encyclopaedia of Indian Architecture இல் பல்லவர் காலம் பற்றி எழுதியவர். Studies in Temple Architecture, Cave Temples of Pallavas, South Indian Art, South Indlan Ethos-Ancient Tamil Nad, Vimana in the South Indian Temples. Temples of South India. இவரது பாராட்டு மலர் 550 ரூ. இவரின் உடன் பிறந்தவர்தாம் புதுக் கோட்டை வரலாறு, Manual, Inscriptions of Pudukkottai Vol I & II படைத்த கே. ஆர். வெங்கடராமன் என்பது குறிப்பிடத் தக்கது. **முகவரி** : 'இராமகிருட்டிண பவனம். 3, வரதராசப் பெருமாள் கோயில் தெரு திருச்சி-8.

**எஸ். ஆர். பாலசுப்பிரமணியம்**: 4-1893. தஞ்சையடுத்த திருக் காட்டுப்பள்ளி. உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியராகப் பன்னெடுங்காலம் பணியாற்றியவர். அரிய நூல்கள் அளித் துள்ளார் : Four Chola Temples, Early Chola Temples, Medieval Chola Temples, Later Chola Temples, Chola Queens கோப்பெருஞ்சிங்கன். சோழர் கலைப் பாணி, முற்காலச் சோழர் கலையும் சிற்பமும். இத்துறையில் விற்பன்னராக விளங்கினார். இவர் மகன் வெங்கடராமன் IAS, உள்துறைச் செயலராகச் சிறந்தவர். **தொடர்புக்கு** : 'சந்திரபாகா' 28. ஸ்டெர்லிங் சாலை, சென்னை-34.

**அ. இராகவன்**: நெல்லை சாத்தான்குளம். இலக்கியங் கலந்த வரலாறு வரைபவர். கொடுத்தவை: வரலாற்றுக்கு முற்பட்ட இந்தியா, தமிழர் பண்பாட்டு வரலாறு, கோநகர் கொற்கை, தமிழர் பண்பாட்டில் தாமரை; தமிழ் நாட்டுத் திருவிளக்குகள்; தமிழ்நாட்டுக் காசுகள்; தமிழ் நாட்டு ஓவியம் நாட்டியம் படிமங்கள் கட்டிடக்கலை; அணிகள் ஆடைகள் இசைக் கருவிகள்

ஆயுதங்கள் சங்குகள், மூலிகைகள்; பறவைகள் மலர்கள் மருத்துவம், பாம்புகள் யானைகள். தமிழ்நாட்டுக் கப்பற்கலை; படைக்கலங்கள், வரலாற்று வழியில் வளர்ச்சிபெற்ற இசை யும் யாழும், தமிழக சாவகத் தொடர்புகள், இறைவனின் எண் வகை வடிவம். நுண்கலைச் செல்வர் என நுவலப்படும் இவர் தமிழ் வளர்ச்சிக் கழகம், தமிழ் நாட்டு வரலாற்றுக் குழு உறுப் பினராக இருந்தவர். மறைந்த இந்த மேதைபற்றி **மேலும் அறிய:** 7/8, சொக்கலிங்கசாமி கோயில் தெரு, பாளையம்கோட்டை, நெல்லை-7.

**மே. சு. ராமசாமித் தேவர்:** குற்றவியல் நடுவராக இருந்து ஓய்வு பெற்றவர். தொழிலாற்றியது நீதித் துறையாயினும் தொண்டாற்றியது கலைத்துறைக்காகும். தமிழ் நாட்டுச் செப்புத் திருமேனிகள், இந்திய ஓவியங்கள் (கே. சிவராம் மூர்த்தியின் நூல் தமிழாக்கம்).

**இரா. கலைக்கோவன்:** *21-4-1948*. சென்னை. டாக்டர் மா. இராசமாணிக்கனார்: கண்ணம்மாள். முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு. லயோலா கல்லூரி புகுமுக வகுப்பு, சென்னை மருத்துவக் கல்லூரி, எம். பி; பி. எஸ். 72 இல்; கண்மருத்துவப் படிப்பு 75இல் முடித்து, திருச்சியில் கண் மருத்துவமனை வைத்துப் பணி யாற்றி வருகிறார். மனைவி டாக்டர் ரெங்கநாதன் மகள், ஒரு கண் மருத்துவர்.

மருத்துவம், கல்வெட்டுக் கோயிற்கலை-இவரின் இரு கண்கள். பி. லிட் பயின்று வருகிறார்; வடமொழிக் கற்றுக் கொள்கிறார். இதுவரை கோயிற்கலை பற்றிய கட்டுரைகள் 100 இருக்கும். வானொலிச் சொற்சித்திரங்கள் பல. நூல்: 'கலை வளர்த்த திருக் கோயில்கள்' தமிழக அரசின் பரிசு பெற்றது. இந்தியன் எக்ஸ்பிரசிலும் ஆங்கிலக் கட்டுரைகள் எழுதி வருகிறார். 82 முதல் எழுத்துப் பணி.

*23-10-83* முதல் மருத்துவச் சொற்பொழிவுகள் ஆற்றி வரு கிறார். தக்காரைக் கொண்டு திங்கள் தோறும் தவறாது நடத்திவருகிறார். மருத்துவத்தை மக்களிடம் கொணர்கிறார். தமிழகத்திலேயே **முதன்முறையாக** 'மருத்துவ வழக்காடு மன்றம்' (*29-1-84*); பட்டி மன்றமும் (*24-6-84*), நான்கு வழக்கறிஞர் கள்-மூன்று நடுவர்கள் கொண்ட புதுமையான வழக்காடு மன்றம் (*23-6-85*) அமைத்தவர். 'நல்வழி' என்ற மருத்துவக்

குறிப்பேடு பதிப்பித்தார்; 1000 படிகளும் ஒரே திங்களில் விற்றுத் தீர்ந்தன. ஒரு படியின் விலை 76ரூ! தமிழகக் கண் மருத்துவர் மன்ற இதழின் ஆசிரியராகவும் இருந்துளார்.

பள்ளி கல்லூரி நாட்களிலேயே கவிதை, நாடகம், பேச்சு போட்டிகளில் பல பரிசுகள் பெற்றுளார். சென்னை மருத்துவக் கல்லூரியில் பல்லாண்டின் பின் தமிழ் மன்றம் தொடங்கியவர்; பொங்கல் விழா நடாத்தியவர். நாடகம் பல இயற்றி நடித்துள் ளார். மேடைப் பேச்சிலும் வல்லவர், பல கல்லூரிகளில் கோயில் களில் ஆய்வுப் பொழிவுகள் ஆற்றி வருகிறார்.

பல புதிய கல்வெட்டுக்களைக் கண்டுபிடித்துத் தமிழக வரலாற்றுக்கு வழங்கி வருகிறார். மறைந்து சிதைந்து கிடக்கும் கோயில்களை வெளிக்கொணர்கிறார். முள்ளிக் கரும்பீசர் திருக்கோயில், பனமங்கலம் வாரணபுரீசுவரர் கோயிலையும் மீண்டும் வழிபாட்டுக்குக் கொணர்ந்த பெருமையர்.

50க்கும் மேற்பட்ட சிறுகதை தீட்டியுள்ளார்; சுதேசமித்திரன், மாலை முரசு, வானொலியில் வெளியாகியுள. 'அவள் ஒரு குழந்தை' குறு நாவல். வெளி வர இருப்பன: கோச் செங்கணானின் மாடக் கோயில்கள்', 'சிவ தாண்டவங்கள்' போல்வன.

எழுத்து பேச்சு, இலக்கியம் சமயம், கோயிற் கலை கல் வெட்டு, சிறுகதை நாடகம் எனப் பன்முகப் பேராற்றல் பொதுளும் வைரமாக விளங்கும் இவரது சிறு வயதுச் சாதனை களைப் பாராட்டித் தமிழக ஜேசீஸ் 84ஆம் யாண்டில் பெருமைக்குரிய இளைஞராகத் தெரிந்தெடுத்துப் போற்றியது. புகழ் பூத்துப் பொலியும் இவரால் தமிழ் கூறு நல்லுலகும் சமயவுலகும் மருத்துவத் துறையும் மேன்மையுறும் என்பதுறுதி. **முகவரி** : 10வது கிராஸ், தில்லை நகர், திருச்சி.

**குடவாயில் பாலசுப்ரமணியன்** : 15-6-1948. தஞ்சை மாவட்ட குடவாயில் வட்ட பெருமங்கலம். முனுசாமி சோழகர்: அபயாம்பாள். சரபோஜியில் புகுமுக வகுப்பு. குடந்தைக் கல்லூரி விலங்கியல் பி. எசி. 70; அஞ்சல் வழி அண்ணாமலை எம். ஏ. வரலாறு 87இல். 79முதல் சரசுவதிமகால் நூலக நுண் படப் பிரிவுக் காப்பாளர். 70முதல் கோயிற்கலை, தொல் பொருள், ஓலைச்சுவடி, பழந்தமிழ் நாடகங்கள் பற்றி தினமணி Indian Expressல் தமிழ் (100) ஆங்கிலக் (25) கட்டுரைகள் தீட்டி வருகிறார். **நூல்கள்:** குடவாயிற் கோட்டம், கருணாகரத்

தொண்டைமான், திருவாரூர் திருக்கோயில், கோனேரிராயன், சோழமண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்கள்-ஓவியங்கள், குடமுழா.

**சாதனை :** 1) சங்ககாலச் சோழர் காசு-கரிகாலன் புலி பொறித்த செப்புக்காசு-குடவாயிற் கோட்டத்தில் கண்டு பிடிப்பு 2) 'உரக' என்ற பொறிப்புள்ள ராசராசனின் தங்கக் காசு; ஈழத்து வெற்றிக்காக வெளியிட்ட காசு எனச் சதய மலரில் காட்டல். 3) தமிழக வரலாற்றில் கவனிக்காது விடப்பட்ட 'கோனேரிராயன்' என்ற காசினை ஆய்வு செய்து, 15ஆம் நூற்றாண்டில் 25 ஆண்டுகள் சோழ மண்டலத்தை ஆட்சி செய்த வரலாற்றினை முதன்முதல் ஒளியூட்டல். 4) 72இல் அகர ஓசையில் சோழர் காலச் செப்புத் திருமேனிகள் மூன்றினை பூமியினின்று வெளிக்கொணர்ந்தமை. 5) அதே இடத்தில் ராஜேந்திரன் காலத்து முந்நிலை மாடக் கோயில் இருந்து அழிந்து போன தடயங்களை வெளிப்படுத்தினார். தொல் பொருள் துறையினர் ஆய்வு தொடரச் செய்தல். 6) 'உரகபுரம்' திருப்பாம்புரம் என்ற ஆய்வு. இவ்வூரில் கி. மு. 2,3 ஆம் நூற். புத்த பள்ளி இருந்த தடயங்கள் வெளிப்படுத்தல். உழைப்பும் முயற்சியும் மிக்க இவரின் **முகவரி:** பிளாட் 107. (வேர் ஹவுஸ் எதிர்ப்புறம்), வல்லம் சாலை, தஞ்சாவூர்-613 007.

**கோ. தெய்வ நாயகம் :** 5-5-1952. தஞ்சை. சி. கோவிந்த ராசனார் : முத்துலட்சுமி. அண்ணாமலையில் பி. எசி. (தாவர வியல்) 72இல்; எம். ஏ. (தமிழ்) 74இல், எம். பில் (கரந்தைச் செப்பேடுகள்-ஓர் ஆய்வு) 78இல்; பி எச். டி.(பிற்காலச் சோழர் காலத்தில் பௌத்தத்தின் தாக்கமும் தஞ்சைப் பெரிய கோயிலின் ஆக்கமும்) 84இல். கரந்தைப் புலவர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகப் 13 ஆண்டுகள் பணியாற்றி, 86முதல் தமிழ்ப் பல்கலைக் கழக சிற்பத்துறை இணைப் பேராசிரியராக உள்ளார். 15 ஆண்டுகளாகக் கல்வெட்டு, கட்டிட சிற்பக்கலையில் தந்தையாருடன் கல் ஆய்வுத் தேர்ச்சி பெற்றுளார். பிரதமர் ராஜீவ் காந்தி தலையில் திகழும் Indian National Trust for Art & Cultural Heritage) INTACHல் வல்லுநர் உறுப்பினராக உள்ள பெருமையர்.

தந்தவை: கரந்தைச் செப்பேட்டுத் தொகுதி-ஆய்வுரை, சித்தர் சிந்தனைகள், கான் சாயபு சண்டை, சரசுவதி மகாலுக்காகப் பதிப்பித்தவை: மயனூல் சாத்திரம், வீராகமம், சில்ப சார சுருக்க சிந்தாமணி, பல ஜாதிகம்-விகடம், பதார்த்த

சாரம்; தருமையாதீனப் பட்டயங்கள். தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்காக, தஞ்சைக் கோயில் வாகனங்கள்' 50க்கும்மேலான கருத்தரங்கக் கட்டுரைகள். கவிஞருமான இவர் 'செந்தமிழ் வித்தகர்' பட்டம் பெற்றவர். ராஜராஜன் சதயவிழாவில் பெரிய கோயில் பற்றி டாக்டர் பட்ட ஆய்வு செய்தமை பாராட்டித் தஞ்சைக் கலைத் தட்டு பரிசளிக்கப் பெற்றார். எதிர்காலத்தில் ஏற்றம் பெற்றொளிர இருக்கும் ஊக்கம் மிக்க இவரின் **முகவரி:** *3/1032*, நாராயண கொத்தன் தெரு, கரந்தை, தஞ்சாவூர்-2.

## 46. அரசியல் தமிழ்

300 ஆண்டுகள் வேற்றவர் ஆட்சியில் வீழ்ந்து வருந்திப் பின் விடுதலை பெற்ற நாட்டில்-தமிழகத்தில், அரசியல் தமிழ் எவ்வளவோ தோன்றியிருக்க வேண்டும்; ஆனால் அவ்வளவு தோன்றவில்லை என்பது வியப்பே அளிக்கிறது. இலக்கியத்தை விட்டு அப்புறம் செல்லாது, அதனுள்ளேயே நாம் இயங்கியிருக் கிறோம் என்பதனை இது காட்டுகிறது. பெரியார், ராஜாஜி, ம. பொ. சி. (விடுதலைப் போரில் தமிழகத்தின் பங்கு, எனது போராட்டம்), தினமணி சிவராமன், வெ. சாமி நாத சர்மா. க. சந்தானம், எம். பக்தவத்சலம் (குடியரசும் மக்களும்), கொடுமுடி ராசகோபாலன், டாக்டர் பா. நடராசன் (பொதுத் துறை ஆட்சியியல்), கா. அப்பாத்துரையார் (குடியாட்சி), வி. கண்ணையன் (ஆங்கிலேயப் பாராளுமன்றம், இந்திய அரசியலமைப்பு, உரோமானிய ஆட்சிமுறை, பிரிட்டனின் அரசாங்கமும் அரசியலும்; பொதுத்துறை ஆட்சியியல், இந்திய ஆட்சி அமைப்பு முறை வளர்ச்சி), எஸ். எஸ். மாரிசாமி (சர்ச்சில், அயர்லாந்து, அமெரிக்கா, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ்), பி. எஸ். நடராச பிள்ளை (சட்டமன்ற நடைமுறை, அரசியல் விளக்கம்), நல். முருகேச முதலியார் (அமைச்சரவை ஆட்சியியல்), ஜே. ராமச்சந்திரன் (அரசியல் அமைப்புகள்), அண்ணா, நெடுஞ்செழியன், தா. செல்லப்பா. முரசொலி மாறன் (மாநில சுயாட்சி), கீ. இராமலிங்கனார் (நகராட்சி முறை), (ஆட்சித் துறைத் தமிழ்), லட்சுமிரதன் பாரதி (இறை மாட்சி அல்லது அரசியல்) சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் (அரசியல் தலைவர்கள், கோகலே, குடியரசுத் தலைவர், ராஜ பாளையம் ராஜுக்கள் கல்லூரி பி. கோமதி நாயகம், (இந்திய அரசாங்கங்கள், தற்கால அரசியல் ஆராய்ச்சி, கொள்கைகள் அரசியல் அறிமுகம்) (அரசியலறிவுச் சொற்பொழிவுகள்)

போன்றார் அரசியல் தமிழுக்கு ஆக்கம் செய்துளர். முனைந்து நின்ற சிலர்.

**க. சந்தானம்:** *12-7'1895*—தஞ்சை மாவட்டம் கும்மட்டித்திடல் இந்தி வடமொழி, ஆங்கிலமும் வல்லவர். பொய்யும் மெய்யும், செங்கோலும் ஜனநாயகமும், மக்கள் ஆட்சி, India's Road to Socialism, cry to distress, Planning and Plain thinking. இலக்கிய ஈடுபாட்டின் கரணியமாக காளிதாசரின் சாகுந்தலம், மேகதூதம்; பவ பூதியின் உத்தர ராம சரிதம் தமிழ்ப் படுத்தியுள்ளார். காந்திஜியின் அனாசக்தி யோகம் தமிழாக்கம் செய்துள்ளார். **தொடர்புக்கு:** 58, கிழக்கு அபிராமபுரம், சென்னை-4.

**வெ. சாமிநாத சர்மா:** *17-9-1895—7-1-1978.* வ.ஆ. வெங்களத்தூர். பன்மொழி வல்ல பேரறிஞர். தேசபக்தன், நவசக்தி, சுயராஜ்யா துணை ஆசிரியர். ஜோதி (ரங்கூன்) குமரி மலர் ஆசிரியர். அரசியல் நூல்களை **அறிமுகம் செய்த** பெருமையர். பிளேடோவின் அரசியல், சமுதாய ஒப்பந்தம் (ரூசோ), மானிட ஜாதியின் சுதந்திரம் (இங்கர்சால்), சமுதாய சிற்பிகள், கிரீஸ் வாழ்ந்த வரலாறு, ஸன்யாட்சென், புராதான இந்தியாவில் அரசியல் போன்றன பெயர்ப்புக்கள். கௌரிமணி (கதை) அபிமன்யு (நாடகம்) காந்தியார் (கட்டுரை), அவர் பிரிவு (வாழ்க்கை) சீனாவின் வரலாறு போன்ற 90 நூல்கள் படைத்துத் தொண்டு செய்தவர். தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் (58இல்). எழுத்தாளர் சங்க, பாரதி சங்கக் கேடயங்கள் பெற்றவர். தியாகமூர்த்தி பண்டித மோதிலால் நேரு, ஜவகர்லால் நேரு, பாலகங்காதர திலகர், தாதாபாய் நௌரோஜி, சித்தரஞ்சன தாஸ் என முப்பதுகளிலேயே அறிமுகம் செய்த முன்னோடி.

**தினமணி சிவராமன்:** *1904.* மாகாண சுயாட்சி, அரசியல் நிர்ணய சபைகள், சுதந்திர இந்திய அரசியல் அமைப்பு என அரசியல் ஆவணங்கள் தந்தது போலவே, ஒத்துழையாமைப் போராட்டத்திலும் விடுதலைப் போரிலும் பங்கு கொண்டவர். தினமணியில் எண்ணரிய அரசியல் நுணுக்கக் கட்டுரைகள் தீட்டியவர். கணக்கன் கணிப்புகளும் கருத்துரைகளும் கச்சிதமாக இருக்கும்.

**கொடுமுடி ராஜகோபாலன்:** *11-11-1913—1979.* திருச்சி மாவட்ட புலியூர். 32-44 வரையான விடுதலைப் போராட்டத்தில் கலந்துகொண்டு சிறை சென்றவர். 62இல் தமிழ்

எழுத்தாளர் சங்கச் செயலர். புரட்சித் தலைவர் ஜெயப் பிரகாஷ் நாராயணன். சாணக்கியன் ஆட்சிக் கலை, மாக்கிய வல்லியின் ஆட்சிக் கலை, ஹாப்சின் ஆட்சிக் கலை, லாக்கின் ஆட்சிக் கலை, இராஜாங்க முறைகள் போன்றன படைத்தவர், ஆரம்பக் கல்வி, சம்யுக்தா (நாடகம்) அகண்ட இந்தியா (கே.எம். முன்ஷி) என்பனவும் தந்துள்ளார்.

## 47. பொருளியல் தமிழ்

பொருளாதாரம் (Economics) பற்றிப் பைந்தமிழில் நடத்தியும் எழுதியும் வந்தோர்: ஜே. எஸ். பொன்னையா (பொருளாதாரம்), டாக்டர் பா. நடராசன். இந்தியப் பொருளியல் நிபுணர் (இந்தியப் பொருளியல்), ஐ டி சிதம்பரம் (கிராமப் பொருளாதாரம்), சர்.ஆர்.கே. சண்முகம் செட்டியார், கவிஞர் தெசிணி (அமெரிக்க மக்களின் பொருளாதாரம்), கழகம் (பொருளியலின் கதை, பொருளாதார அமைப்புகள் ஆங்கிலேயர் ஆட்சிக்கு முந்திய இந்தியப் பொருளாதாரம். ஆங்கிலேய ஆட்சியில் இந்தியப் பொருளாதாரம், பணத்தின் கதை.)

**கே. எஸ். சோணாசலம்:** அண்ணாமலைப் பல்கலைக் கழகப் புகழ் பூத்த பொருளியல் பேராசிரியர். பொருளாதார சிந்தனை வரலாறு, விலைக் கோட்பாடும் அதன் பயன்களும் (Donald S. Watson).

**சி. வேலாயுதம்:** மாநிலக் கல்லூரியில் பெரும் பேராசிரிய ராக இருந்தவர். அறுபதுகளிலேயே தமிழில் பேசி எழுதியவர். உயர்நிலை நுண்ணினப் பொருளாதார இயல், நுண்ணினப் பொருளாதாரம் (Micro), பணவியலும் பாங்கியலும், பொரு ளாதாரம் போன்றன படைத்தவர்.

**அர. சேஷாசலம்:** திருச்சி வளவர் கல்லூரியில் பயின்று தஞ்சை சரபோஜி கல்லூரியில் 55-78 வரையில் பணியாற்றி யவர். தமிழில் பொருளியல் நடத்தவும் பேசவும் எழுதவும் எளிதே கை வந்தவர், அரசாங்க நிதியியல் (Public Finance), அரசிறைப் பொருளியல் (Fiscal); அரசாங்க நிதியியலின் பொருளாதாரம் (Econ. of Public Finance-Taylor), பன்னாட்டுப் பொருளாதாரம் (International Econ.-Gunnar Myrdal). முதல வராக உயர்ந்து மறைந்த பல்முக அறிவினார்.

**தி. சி. மோகன் :** பட்டுக்கோட்டை. அண்ணாமலைப் பெரும் பேராசிரியர், கலைத்துறை டீன். தொழில் நிர்வாகம், பன்னாட்டுப் பொருளாதாரம் (Gunnar Myrdol), பொருளா தாரம் ஓர் அறிமுகம் (Alec Cairncross) அமெரிக்கா வின் நவீனப் பொருளாதாரம் (K. A. Joseph) போன்றன படைத்துளார். தமிழ் ஊற்றமும் பொருளியல் ஆழமும் வாய்ந்தவர்.

**தா. செல்லப்பா:** வேலூர் கண்டர் கல்லூரி முதுகலைப் பேராசிரியர். வளமார் தமிழில் வீறார்ந்து பேச வல்லவர். தமிழில் வகுப்பெடுப்பது தண்ணீர் பட்டபாடு. தந்தவை: சோவியத் பொருளாதாரம்; அரசியலுக்கு ஓர் அறிமுகம் (Roger H. Saltan), பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறி முகம் (Leonard D. White) போன்றன. கம்யூனிஸ்ட் கட்சி தா. பாண்டியனின் உடன்பிறந்தவர் இவர்.

**எம். ஏ. அபூர்வசாமி :** குடந்தை கல்லூரிப் பேராசிரியராக இருந்து, திருச்சி, ஈ. வெ. ரா. வில் சிறந்து, இராமநாதபுரம், முசிறி, கரூரில் முதல்வராக இருந்து இதுபோது திருவெறும்பூர் கல்லூரியில் திகழ்பவர். சுறுசுறுப்பும் விருவிருப்பும் மிக்க சூட்டிகையானவர். கூடி மகிழ்ந்து உறவாடும் ஒண்மையர். அடிக்கொருதரம் குறள் கூறவும், நொடிக்கொருதரம் தமிழ் இலக்கிய மேற்கோள் காட்டவும் வல்லவர். அற்புதமாக வகுப் பெடுக்கும் ஆற்றலர். அளித்தவை: அமெரிக்க ஐக்கிய நாட்டுப் பொருளாதார வளர்ச்சி, வாணிபச் சுழற் கோட்பாடுகள்; இந்தியத் தொழில் துறையில் தொழிலாளர் பிரச்சினைகள் V. V. Giri), பொருளாதாரம் ஓர் அறிமுகம் (Alec Cairncross).

**எம். எஸ். சீனிவாசன் :** மாயவரம். மாநிலக்கல்லூரி, நந்தனம் கலைக் கல்லூரிகளில் பேராசிரியராக இருந்து, கடலூர், சென்னையில் முதல்வராகத் திகழ்ந்து, சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வுக் கட்டுப்பாட்டாளர், பதிவாளராக வதிந்து மாரடைப்பால் மறைந்தவர். பந்தெனச் சுழன்று முதல்வர்கட்குப் பக்கபலமாய் இருந்து உழைத்த பெருமகனார். தமிழ்ப் பற்றும் பான்மையும் மிக்கவர். தந்தது பேரியல் (Macro) பொருளாதாரம் போலவன.

**ஏ. முத்தையா:** பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர். பொரு ளியல் தமிழ் வல்லவர். கலைச் சொல்லாக்கக் குழு உறுப்பினர். இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு, கடன் நிவாரணம்,

இந்திய விவசாயிகளின் கடன், கிராம சீர்திருத்தம், அயல் நாடுகளில் கடன் ஒழிப்பு போல்வன. **முகவரி** : 'குருவிலாசம்' சிங்கார முதலியார் தெரு, சென்னை-17.

**மா. பா. குருசாமி** , *15-1-1936*. இராமநாதபுரம் பாறைப்பட்டி.மதுரை தே. கல்லுப்பட்டி காந்திநிகேதன்,திருச்செந்தூர் ஆதித்தனார் கல்லூரியில் பணியாற்றி இதுபோது மதுரைப் பல்கலைக் கழக காந்தி படிப்பு. ராமலிங்கர் தத்துவத்துறை நெறியாளர்.வங்கியியல், இந்தியப் பொருளாதாரம், காந்தியடிகளும் கார்ல்மார்க்சும், கிராமப் பொருளாதாரம், வள்ளலார் ஓர் அறிமுகம் போன்றன படைத்தவர். தமிழ்நாடு வாசகர் பேரவையின் செயலர், கவிஞர், நாவல் நாடக ஆசிரியர். **ஜே. சி. குமரப்பா** காந்தீய கபாருளாதாரம் பற்றி நிரம்ப எழுதியுள்ளார். **ச. சந்தானம்** செல்வம் (சென்னை அரசின் பரிசு, பொது மக்களும் பொருளாதாரமும், செல்வமும் சுதந்திரமும் போன்றன படைத்துளார்.

குடந்தைக் கல்லூரிப் பொருளியல் பேராசிரியர் வி. சிவப்பிரகாசம் வருங்காலப் பொருளியல் நிபுணராக விளங்குதற்குரிய வீறும் வளமையும் சான்றவராக விளங்குகிறார். கூறுபடு மதியும் அலசி ஆயும் கதியும் கொண்டிலங்குகிறார். குடந்தைக் கல்லூரி மாணவர் தியாகராசன் கார்ல்மார்க்சின் Das Capital ஐ 'மூலதனம்' எனச் சிறப்பாக மொழி பெயர்த்துள்ளார்.

## 48. நூலகத் தமிழ்

தமிழ் வளர்க்கும் அறிவாலயங்கள்; பைந்தமிழ் வார்க்கும் பட்டறைகள். படைப்புக்களின் பரப்பு மையங்கள். அறிவுப் பசிக்கு-தமிழ்த் துடிப்புக்குத் தீனி போடும் காமதேனு, உணர்வுக்கு ஊட்டம் தரும் விருந்திடம். நம் நம்பிக்கைக்குரிய நல்ல நண்பர்கள் அங்கேதான் இருக்கின்றனர். நம் நண்பர்களெல்லாம் (Ever failing friends) நட்டாற்றில் கைவிடும் அன்பர்கள்; ஆனால் நூல்களோ நம் (Never failing friends) என்றும் கைவிடாக் கற்பகங்கள். அதனாற்றான் ராபர்ட் சதே என்பார் நூற்களின் நடுவே இருந்துகொண்டு Awong my Friends எனக் கவிதை புனைந்து களித்தான்.

நூல்களை 5 வகையாகத் **தரம்** பிரிக்கலாம்; தொடக்க நிலையின (Elementary), அறிக்கை அமைப்பின (Reporting),

விளக்கம் தருபவை (expositary). கருமூலம் (Seminal), ஆய்வுப் பொருளின (Research), உள்ளடக்கத்தால் மூவகையின: தகவல் தருவன (informative), புத்துயிர் பொதுளியவை (recreative), உயிர்ப்புடையன (inspirative).

நூற்களையெல்லாம் ஒருசேர ஒரே இடத்தில் குவித்து வகுத்தும் பிரித்தும், எடுத்தும் படித்தும் பயன்படுமாறு அமையும் கருவூலங்களே - கோயில்களே நூலகங்கள்.

சில நூலகங்கள் : **பம்பாய்** நூலகம் 1830 லும் **சென்னை** கன்னிமரா நூலகம் 5-12-1896 லும், **கல்கத்தா** இம்பீரியல் நூலகம் 1903-லும் தொடங்கப் பெற்றன. 2 ஆம் சரபோசி (1798-1833)மன்னரால் 1820 இல் **தஞ்சையில்** தொடங்கப்பெற்றது. ஆய்வாளர்களின் அமுதசுரபிகளாக இவை அமைகின்றன.

1948 இல் சென்னைப் பொது நூலகச் சட்டம் வந்தது. 54 இல் பொது நூலகங்கட்கு நூற்கள் ஒப்படைக்கும் சட்டம் பிறந்தது. இதன்படி நூல் வெளியிடுவோர் தேசிய நூலகங்கட்கு உடனுக்குடன் நூற்படி அனுப்பிவிட வேண்டும். உரிமைப் பதிவுச் சட்டம் 57ல் உருவாயிற்று.

**டாக்டர். சாமுவேல் ரெங்கநாதன்** : (12-8-1892) இவர்களை இங்கு நினைவு கூர வேண்டுவது நம் நன்றியும் கடமையுமாகும். நூலகத் துறையில் ஒரு பெரும் புரட்சி உண்டாக்கி உலகு முழுதும் ஒரு புதிய அலையைப் பரவச் செய்த மேதை. இப் பெருமகனாரை உலகிற்களித்து வான்புகழ் கொண்ட நாடு தமிழ் நாடு, மாவட்டம் தஞ்சை, ஊர்சீர்காழி. சென்னையில் கணித விரிவுரையாளர், 17-23; சென்னைப் பல்கலைக் கழக நூலகர் 24-45. காசி இந்து பல்கலைக்கழகம் 45-47; தில்லி பல்கலைக் கழகம் 47-55; இந்திய நூலகக் கழகத் தலைவர் 44-53; சென்னை நூலக சங்கத் தலைவர் 58-72; தேசிய நூலக ஆய்வுப் பேராசிரியர். **நூல்கள் 60:** Colon classification, Classified Catalogue Code, Education for Leisure, Library Administration, 5 Laws of Lib. Sc. கோலன் முறையினைக் கொடுத்த கோமான். இந்திய அரசு பத்மஸ்ரீ பட்டம் தந்தது; 48லேயே தில்லி பல்கலைக்கழகம் டி. லிட். அளித்தது.

தமிழகப் பல்கலைக் கழகங்கள் கல்லூரி பள்ளிகளில் நூலகங்கள் அமைவதோடு பொது நூல்கங்கள், மாவட்ட நூலகங்கள், கிளை நூலகங்கள் கிளைத்துள. சில சிறந்த நூலகர்களையும் இங்கே நினைந்து போற்றல் நன்றாகும்:

**வே. தில்லைநாயகம்** : *15-7-1925.* மதுரை மாவட்ட சின்னமனூர். கன்னிமாரா நூலகராகப் 10 ஆண்டுகள் பணியாற்றி, தமிழ் நாடு பொது நூலக இயக்குநராக இருந்து பணியாற்றி ஒய்வு பெற்றார். நேர்மையும் தூய்மையும் மிக்கவர். தமிழகத்தில் நூல் நாட்டமும் நூலக வுணர்வும் உருவாக்கியவர். 'ஆளுக்கொரு நூல், நூலுக்கோர் ஆள்' என்ற நூலக நன்மொழி நோற்றவர். 'நாங்கள் குனிந்து நூலை நோக்குவோமே தவிர, நிமிர்ந்து ஆளைப் பார்ப்பதில்லை' என்ற கொள்கை கொண்டு ஆளைப் பார்த்து நூற்களை வாங்காது. நூலின் தகுதி கண்டு தெரிந்தெடுத்தவர். 'எழுத்தாளர் முகத்தைப் பார்த்து வாங்குவதில்லை, நூலின் அகத்தைப் பார்த்தே ஆர்டர் போடுகிறோம்' என்ற தூய நெஞ்சர்; நெஞ்சம் உணர்ந்ததை நேர்பட மொழியும் நலத்தர். கவிதையாகவே பொழிவார், வல்ல திறனி. செய்யும் தொழிலே தெய்வமாகக் கருதி சேவை செய்தவர். பல நூலகர்கள் படிப்பறியார், பார்க்கும் தொழிலுக்குப் பிராண சம்பந்தமுமில்லாதவர்களாக இருக்கும் போது, இவர் அதில் ஈடுபாடு மிக்கவராக இருந்து ஒன்றி உஞன்றவர். தமிழரசின் இயக்குநர்களில் தேனியாகத் திகழ்ந்து சிறக்கப் பணியாற்றியவர்களில் ஒருவர். நூலகத் துறைக்கேடு களைந்த கண்ணியர்.

ஆங்கிலம் இந்தி பிரெஞ்சு செர்மன் போன்ற மொழியறிந்தவர். 45முதலே எழுதி வருபவர். அரசரும் புலவரும் (சிறுவர்), பொங்கல் (முதியோர்),குறிப்பேடு (பொது அறிவு), வள்ளல்கள் வரலாறு போன்றன படைத்தவர், தம் துறைப் பனுவல்களாக நூலகப்பணி, நூலக உணர்வு (தமிழக அரசின் பரிசு) நல்கியுள்ளார். தமிழ் நாட்டுக் குழந்தை நூற்றொகை, தமிழ் நாட்டு நூற்றொகை பதிப்பர்; நூலகவியல் நிலையப் பொறுப்பர். பொதுமக்களுக்கும் பொது நூலகத்திற்கும் பாலம் சமைத்து நூற்படிக்கும் பழக்கத்தை வளர்த்த பெருமகனாரின் **முகவரி:** *27-24.* அண்ணா நகர். சென்னை *-40 (612644)*

**அ. திருமலை முத்து சுவாமி** : *28-1-1928—4-1981.* நெல்லை மாவட்ட தென்காசி எட்டையபுர சமஸ்தானக் கவி முத்து சாமிக் கவிஞரின் பேரர். கோவிற்பட்டி கல்லூரிப் பேரா. அ. சங்கர வள்ளிநாயகம் அவர்களின் அண்ணன்; பேரா. இ. சு. முத்துசாமியின் தந்தை வழி அண்ணன். பெற்றோர் இ. மு. அருணாசலம் பிள்ளை: பேச்சியம்மை என்கிற மங்கையர்க்கரசி. சென்னைப் பல்கலைக் கழக நூலகராக இருந்து, மதுரைப் பல்கலைக்கழக நூலகத்துறைத் தலைவராகத்

திகழ்ந்தபோது மஞ்சள் காமாலையால் மறைந்தவர். நல்ல தமிழ்ப் பற்றாளர், சொற்பொழிவாளர், எழுத்தாளர்; 'பரணி இலக்கியம்' பற்றி ஆய்ந்து எம். லிட். பட்டம் பெற்றவர், 'தமிழ் உரை நடை வளர்ச்சி' டாக்டர் பட்டத் தலைப்பு.

தந்தவை: உரிமைப் போர் (வில்லுப்பாட்டு) மறுமலர்ச்சிக் கவிஞர்கள், இலக்கிய மலர்கள், இலக்கியத்தில் விலங்குகளும் பறவைகளும், அறிவியற் சோலை, தமிழ் நாடும் மொழியும், சைவ நன்னெறி, முதலுதவி. அமெரிக்க அரசின் கல்வி பண் பாட்டுத் திட்டத்தில் 65இல் அமெரிக்க ஐரோப்பா சென்று நூலகங்கள் பற்றி அறிந்து வந்தவர்; 'நூலக நாட்டில் 120 நாட்கள்' என்ற பயண நூலும் படைத்தவர். நூலகம் பற்றிய நூல்கள்: உயர்நிலைப் பள்ளி நூலகம், நூலக ஆட்சி, நூலக அமைப்பியல், நூல் நிலையம், நூலக இயல் ஓர் அறிமுகம், A B C of Library Science, நூலக இயல் சிந்தனைகள், தமிழ் நூலக வளர்ச்சிக்கு ஒரு மாதிரித் திட்டம்.

**இராம. சுப்பிரமணியன்** : 20-7-1035. சென்னை சட்டக் கல்லூரி நூலகர். இடையில் 1-2-84—31-10-85 தமிழ்ப் பல் கலைக் கழக வாழ்வியல் கலைக் களஞ்சியம் மையத்தில் சட்டத் தத்துவப் பதிப்பராகப் பணியாற்றினார். நல்ல தமிழ்ப் பற் றாளர். நூல்கள்: புரட்சிக்கவி உள்ளம், பணமே நீ சொல்; நூலகவாயில், நூலும் நூலகமும் போல்வன. டாக்டர் பட்டத் துக்கும் ஆய்ந்துளார்.

**கே. சுப்பிரமணியம்** : 1928. தஞ்சை சரபோசி மன்னர் கல்லூரியில் அது தோன்றிய நாள் தொட்டு, நூலகத்தை உருவாக்கிக் கண்ணை இமையிரண்டும் காப்பது போல் வண்ண முறக் காத்த கண்ணியர். இவரே ஒரு நடமாடும் நூலகம். தான் ஏற்ற பணிக்கு மாசு நேராது தேசுடன் பணி புரிந்த தூயர். நூலகத்தை எப்படி வைத்திருக்க வேண்டும் எப்படிப் பேணிப் பெருக்கி வளர்த்திட வேணும் என்பதற்கு எடுத்துக் காட்டானவர். யார் எப்போதும் சென்று என்ன கேட்டாலும் உடனுக்குடன் நூற்களை எடுத்தளிக்கும் இனியர். விவரங்களை விரல் நுனியில் வைத்திருக்கும் வளமையர். நாம் ஒன்றுதான் கேட்போம், அது இது என்ன ஒரு நூறு சொல்வார்; அங்கிருக் கிறது இங்குளது என மூலங்களை மொழிந்து வியந்திடச் செய்வார்; நம் அறிவினை விசாலப் படுத்துவார்; நோக்கத்தை விரிவு படுத்திவிடுவார். ஆராய்ச்சி மூலங்களை அள்ளித் தரும் வள்ளியர்.

பலர் பேருக்கு நூலகராய் இருந்து யாருக்கும் பயனின்றி வைக்கோல் போர் மாடு போல் இருப்பர்-இடத்தை அடைத்துக் கொண்டு! நூல் பயிலும் துடிப்பையும் நூலகம் நாடும் நற் பழக்கத்தையும் வற்றச் செய்து விடுவர்—மாணாக்கர்க்கும் சரி ஆசியர்கட்கும் சரி! ஆனால் இவரோ ஓர் அறிவு ஜீவி. தம் அறி வினை இன்று வரை வளர்த்துப் பிறருக்கெல்லாம் ஊருணியாக இருப்பவர், ஊக்குவார். உருவாக்குவார். இவரைப் போல் எல்லா நூலகரும் இருந்து விட்டால்! **முகவரி:** பாவா மடம் சந்து, வடக்குப் பெருந்தெரு, தஞ்சாவூர்-9

## 49. மருந்தறிவியல்

நந்தமிழ் இலக்கியத்தில் நல்ல பல மருந்தியற் செய்திகள் மண்டிக் கிடக்கின்றன. சங்க இலக்கியத்தில் காணப்பெறும் தாவரங்களை (கருப்பொருட்களை) ஐந்திணை அடிப்படையில் தொகுத்துப் படித்தாலே பல அரிய செய்திகள் தெரிய வரும். அடைமொழிகளே செடி கொடி மரங்களின் பஞ்சாங்கச் செய்தி கள் பல அறிவிக்கும். வள்ளுவத்திலே மருத்துவச் செய்திகள் வள முடன் காணப்படுகின்றன; 'மருந்து' என்றே தனி அதிகாரம் திகழ்கிறது. பதிற்றுப்பத்து கூட மருந்தியற் செய்திகள் பகர் கின்றது. இரட்டைக் காப்பியங்கள் எண்ணற்ற செய்திகள் கொண்டுள, ஏலாதி, சிறு பஞ்சமூலம், திரிகடுகம் போன்ற கீழ்க் கணக்கு நூற்கள் பெயர்களிலேயே மருந்தியல் மணம் வீசு கின்றன. தேவாரத்தில் கருப்பொருளாகவும் கருத்துப் பொரு ளாகவும் தாவரங்கள் திகழ்கின்றன. பெரிய புராணம், கம்ப ராமாயணம், பிற்காலச் சிற்றிலக்கியம் போன்றன எத்த னையோ குறிப்புக்களை எடுத்தளிக்கின்றன. அறுவை முறை யால் உடல் நோய் தீர்த்தமைக்குக் கண்ணப்பர்கதை போன்றன கட்டியம் கூறுகின்றனவே!

பதினெண் சித்தர் பாடல்கள் இத்துறையில் பட்டொளி வீசுகின்றன. அகத்தியர் பஞ்சகாவிய நிகண்டு, தேரையரின் மருந்து தயாரிக்கும் முறைகள் குறிப்பிடத் தக்கன. இராமலிங்க அடிகள் எண்ணறு மருந்துகள் இயம்புகின்றாரே! போகர் முறை போற்றத் தகுந்ததாயிற்றே! இவற்றையெல்லாம் இந் நோக்கில் தனித்தனியே தொகுத்துப் பகுத்து ஆய்ந்தால், மருந் தியலுக்கும் இலக்கியத்துக்கும் உள்ள ஒட்டுறவு-உயிர்த் தொடர்பு உணரலாம். இலக்கிய மருந்தறிவியலின் இன்றியமை யாமை தெளியலாம். இலக்கிய மருந்தறிவியலின் தோற்றம்

வளர்ச்சி வரலாறு என்றே தனியொரு நூல் திரட்டி விடலாம். இலக்கியம் மருந்தியல் இரண்டும் அறிந்தோர்-அல்லது இலக்கிய வியலார் மருந்தியலார் இருவரும் இணைந்து இயற்றலாம். சார்புத் துறைகளான புவிஇயல், வரலாறு, வணிக, தொல் லியல், கல்வெட்டு மானிடவியல் போன்றனவற்றின் துணை கொள்ளலாம்; தெளிவும் துணிவும், விளக்கமும் விரிவும் பெற லாம்.

தமிழ் இலக்கியத்தை நயனுக்காக மட்டுமன்றிப் பயனுக் காகவும் மருந்தியல் முறையில் நோக்கி ஆயின், மருந்தறிவியல் துறைக்கே அது விளக்கம் அளிக்கும், புத்தொளியூட்டும்.

இனி இத்துறையில் புலமையும் அதே சமயம் தமிழ் வளமை யும் ஒரு சேரப் பெற்று இருவழியிலும் பெருஞ்சாதனை புரி வோர் சிலரின் அருமை போற்றுவோம். மருந்தியலை அருந் தமிழில் எழுதிடும்-இலக்கியத்தினுட் புகுந்து மருந்தறிவு வெளிப் படுத்தும் அத்தக்கார் தம் தொண்டு பரவுதல் நன்றிபாராட்டும் நீர்மையதாகும். மருததுவத்தில் வல்லார் பலர் உளர். அவர்களில் சிலரே தமிழ் ஊற்றம் பெற்றவராக ஒளிர்கின்றனர்; தமிழ் வளமையுற்றார் பலர் உள்ளனர், ஆனால் அத்துணை பேருக்கும் மருத்துவ ஆர்வம் தோய்வு உண்டென உரைக்குமாறில்லை. எனவே இருமையும் சான்ற அந்தப் பெருமையாளர் பணி பகர்வாம்:

**டாக்டர். தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை :** நெல்லை. மருத்துவம் தொழில், தமிழும் சைவமும் தொண்டெனக் கொண் டவர். வள்ளுவரின் மருந்து அதிகாரத்தை மருந்தியல் முறை யில் ஆய்ந்து நுண்ணிதின் விளக்கி 'திருவள்ளுவர் மருந்து' என நூல் வரைந்தவர். பக்தி முதிர்வால் முருகப் பெருமான் பற்றிய முனைப்பும் முழு நாட்டமும் கூடியவர்-சமயக்குறிப்புகட்கும் விஞ்ஞான, கணித, சோதிட, வானநூற் கலைகளுக்கும் தொடர்பு காட்டித் தொன்னெறி பரப்பிய நன்னெறியர். முருக வணக்கம் 5000 ஆண்டு பழமையது என நாட்டி 'முருகப் பெருமானும் வைகாசி விசாகமும்' என்றொரு நூல் படைத் தார். அதே போல் ஆராய்ந்து 'பழந்தமிழரும் முருகன் முக் கண்ணன் வணக்கமும்' என்றொரு நூல் புனைந்தார்.

சித்தாந்த சைவப்புலவர், இராவ் சாகிப் பட்டங்கள் பெற்றவர். சென்னை ஸ்டான்லி மருத்துவப் பள்ளி, மருத்துவ மனையில் Pathology பேராசிரியராகப் பிறங்கியவர். இவரைப்

Pathology Specialist என்றே அழைத்து மகிழ்வர். 'முருகாழ் வார்' என்றேத்தப்பட்டவர். ஐம்பது அறுபதுகளில் புகழ் பூத்துப் பொலிந்தவர். **தொடர்புக்கு:** பெருமாள்புரம். பாளையங் கோட்டை, நெல்லை-2

**டாக்டர் கோ. வெங்கடசாமி :** 1-10-1918. நெல்லை மாவட்ட வடமலைபுரம். வழங்கியன: கர்ப்ப ஸ்திரிகளுக்கு சில யோசனைகள்(சென்னை அரசின் பரிசு), நீரழவு, கண்நோய்கள். **முகவரி:** 41, H.A. Khan Road, Madurai.

**டாக்டர் த. திருஞானம் :** 15-2-1919. மதுரை. அரசு மருத்துவமனையில் பத்தாண்டுகள் பணியாற்றி, 30 ஆண்டு களாகத் தனியே மருத்துவமனை வைத்துத் தொண்டாற்றி வருகிறார். இதழ்கட்கு மருந்தியல் கட்டுரைகள் பல வரைந் துள்ளார். குழந்தை மருத்துவத்தில் வல்லவர். தம் பட்டறிவு கொண்டு குழந்தை வளர்ப்பு, உடல் மூளை குண வளர்ச்சி, சத்துணவு தரும் முறை, தொற்று நோய்களின்று காக்கும் முறை விளக்கும் 'குழந்தையும் வளர்ப்பு முறையும்' என்ற அருமையான நூல் படைத்துளார், தமிழக அரசின் பரிசு பெற்றது. கைராசியும் கனிவும் மிக்க இவர் **முகவரி :** சித்ரா தனி மருத்துவமனை. 191, கிழக்கு வெளித் தெரு, மதுரை.

**டாக்டர் கா. நடராசன் :** 10-6-1922. வ.ஆ. திருவத்திபுரம். மருத்துவ மாணவர்கட்கும் ஏன்?...தமிழில் மருத்துவம் புகட்டும் பேராசிரியர்கட்கும் பயன்படு முறையில் மருந்தியல் நூல்கள் பல வரைந்துள்ளார். நோயறிதல் (தமிழக அரசின் பரிசு), தொத்துநோய்கள், பால் உணர்வு மருத்துவம் போன்றன சில. **முகவரி:** 55, நான்காவது நிழற் சாலை, அசோக் நகர். சென்னை-83.

**டாக்டர் விசாலாட்சி நெடுஞ்செழியன்:** 23-8-1924. சேலம். குடும்பக் கட்டுப்பாடு கைப்புத்தகம், தாய்மையும் குழந்தை நலமும், குழந்தை வளர்ப்பு (Baby and Child Care by Benjamin Spoch). நாவலர் நெடுஞ்செழியன் துணைவியார்; முகவரியும் அதே.

**டாக்டர் அ. கதிரேசன்:** 5-10-1926. சென்னைக் காசநோய் மருத்துவமனைக் கண்காணிப்பாளர், கீழ்ப்பாக்கம் மருத்துவ மனைக் காசநோய்ப் பிரிவுப் பேராசிரியர், மருத்துவக் கல்வித் துறை இணை இயக்குநராக இலங்கி ஓய்வு பெற்றவர். தமிழால்

முடியும் என்ற முனைப்போடு மருந்தியல் நூல்களைத் தமிழில் ஆக்கித் தரும் அரும்பணியாளர். எலும்புருக்கி நோயில் ஏற்றம் சான்றவர். மனைவி சாரதாவும் ஒரு மருத்துவரே.

சயநோயும் நீரழிவும், சயநோயும் தடுப்பு முறைகளும் (தமிழக அரசின் பரிசு), மாரடைப்பு நோய், உங்கள் இருதயம், மார்பு நோய்கள், காசநோய், மருத்துவக் கட்டுரைகள்-படைப்புகள்.

செல்லிலிருந்து சோதனைக் குழாய் வரை, புற்றுநோய், என்புருக்கி நோய், மூளையை நம்பலாமா? உடற்கூற்று இயலும் உடல் இயங்கு இயலும், அனைவருக்குமான உடல் இயங்கு இயல், காது மூக்கு தொண்டை நோய்கள், விபத்துக்கள் முதல் உதவி, செவிலியர்க்கான கையேடு, மகப்பேறு மருத்துவம், உங்கள் குழந்தை (சோவியத் நாடு நேரு விருது).

இவரது அயரா உழைப்பு அரும்பணி பாராட்டி 14-1-1986 திருவள்ளுவர் திருநாளில் முதல்வர் எம்.ஜி.ஆர். பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள். **முகவரி:** 24, கோவில் தெரு, அழகப்பா நகர், சென்னை-10. (612212)

**லலிதா காமேசுவரன்:** 27-7-1930. மதுரை. நாவலர் சோம சுந்தர பாரதியார்: வசுமதியம்மாள். பள்ளிப்படிப்பு மதுரை புனித ஜோசப் மகளிர் உயர்நிலைப் பள்ளி, 42-45; இடைநிலை: அமெரிக்கன் கல்லூரி 45-47; மருத்துவப் படிப்பு ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி 47-52. டாக்டர் பட்டம் லண்டன் பல்கலைக் கழக மருந்தியல் கல்லூரி 60-62.

மணம் 15-9-1952இல். கணவர் டாக்டர் எஸ். காமேசு வரன், காது மூக்கு தொண்டை அறுவை, கல்வி இயக்குநர் நிபுணர். தற்போது ஓய்வு பெற்று சென்னைப் பல்கலைக் கழக அடிப்படை மருத்துவ பட்டமேற்படிப்பு நிலைய மதிப் பியல் இயக்குநர். மகன் டாக்டர் மோகன்-காது மூக்கு தொண்டை அறுவை சிகிச்சை நிபுணர். மகள் திருமதி சித்திரா சங்கரன்.

சென்னை அரசு பொது மருத்துவமனை உதவி மருத்துவர் 53-55, மதுரை மருத்துவக் கல்லூரியில் 56-66 படிப்படியே மேற்படிப்புப் பேராசிரியர்; சென்னை மருத்துவக் கல்லூரித் துணை முதல்வர் 68-82, தமிழக மருத்துவக் கல்வி இயக்குநர்

83 முதல். இருபதுக்கும் மேற்பட்ட பல்கலைக் கழக ஆய்வுக் குழுவின் தலைமை, ஆட்சி மன்ற உறுப்பினர், தேர்வுக்குழு தலைவர், அகில இந்திய-உலக 15 மருத்துவ இயக்கங்களின் உறுப்பினர். தமிழ்ப் புலமை, நாட்டுப்பற்று, மகளிர் முன்னேற்றம், சமூக சேவை போன்றவற்றால் 84 இயக்கங்களின் உறுப்பினர்-செயலர்-தலைவர். இந்திய மருத்துவக் கழகம், இந்திய பல் மருத்துவ மன்றத்திலும் பல பதவி வகிக்கிறார்.

இவரது ஆய்வுக்களங்கள்: நோய்த் தடுப்பு மருந்தியல், ஒவ்வாமை மற்றும் நோய்த் தடுப்பு, மருந்தியல் சார்ந்த வேதியியல், இந்திய மருத்துவ மூலிகைகள், நாளமில்லா சுரப்பிகள் உடன்பட்ட மருந்தியல். அகில இந்திய-உலகக் கருத்தரங்குகளில், அறிவியல் ஏடுகளில் கட்டுரைகள் படித்துள்ளார்-படைத்து வருகிறார். தமிழில் மருத்துவக் கட்டுரைகள் பல வடித்துள்ளார்; பள்ளி கல்லூரிப் பாட நூல்களில் இடம் பெற்றுள. 5000 மருத்துவக் கலைச் சொற்கள் 2000 சொற்றொடர்கள் தமிழாக்கம் செய்துள்ளார்.

78இல் டாக்டர் அன்சாரி பரிசு, 79இல் அரிஓம் அலம்பிக் ஆராய்ச்சி விருது, டாக்டர் நாகேந்திர நாத் தத்தா பரிசு; 82இல் டாக்டர் முகர்ஜி விருது, 83இல் டாக்டர் பி. சி. ராய் பரிசு பெற்றுளார். தமிழக விஞ்ஞான விற்பன்னர் கழக, இந்திய மருத்துவ விற்பன்னர் குழு, அகில உலக மருத்துவ விற்பன்னர் குழு உறுப்பினர். தமிழக விஞ்ஞானக் கழகத்தின் 'தமிழ் இதழ்' பதிப்பர். பெருந்தமிழ்ப் பேராசிரியரின் மகளாரான இவரின் அறிவியல் தமிழ்ப் பணி அளப்பரிது. **முகவரி : 458, மூன்றாம் அவென்யு, இந்திரா நகர், சென்னை-20. (416575).**

**டாக்டர் பி எம். ரெக்ஸ்:** 2-10-1934. சிதம்பரனார் மாவட்டம் தூத்துக்குடி. மருத்துவத்தில் பல பட்டங்கள் பெற்றவர். சென்னை மாநகர ஷெரீப் ஆகப் பணியாற்றியுள்ளார். பல இதழ்களிலும் சமய ஏடுகளிலும் எழுதி வரும் உயரிய எழுத்தாளர். பொதுநலப் பணிகளில் உவந்து பங்காற்றும் பண்பினர். சிறைச்சாலை எங்களை என்ன செய்யும், நுரையீரல் நோய்கள், மாரடைப்பு நோய் வராமல் தடுப்பது எப்படி? (தமிழரசின் முதற் பரிசு) போன்றன படைத்துள்ளார். **முகவரி: 111, பிடாரியார் கோவில் தெரு, 15, ஜோன்ஸ் தெரு, சென்னை-1**

இதுவரை ஆங்கில மருத்துவம் வல்லாரின் அருந்தமிழ்ப் பணி இயம்பினோம்; இனி தமிழ் மருத்துவம் வல்லாரின் வளமை விளம்புவோம்.

**எஸ். ஏ சூசைராஜா**: 22-4-1908. காரைக்குடி. வீட்டு வைத்தியம், பூச்சிக்கடி வைத்தியம், அற்ப வியாதியும் அனுபவ சிகிச்சையும், நோய் தீர்க்கும் காய்கறி கீரைகள், கிழங்குகள், பூண்டு மிளகு சுக்கு சீரக வைத்தியம், பச்சிலை வைத்தியம், பாட்டி சொன்ன வீட்டு வைத்தியம், குழந்தைகள் நோயும் குணப்படுத்தும் முறையும், கீரைகளும் பழங்களும். **முகவரி**: 22, சுப்பிரமணி கோயில் தெரு, வியாசர்பாடி, சென்னை-39.

**வி. பலராமையா**: 4-9-1910. வ. ஆ. வந்தவாசி வட்டம், எறும்பூர். விஜயராகவலு: தாயாரம்மாள். வந்தவாசி உயர் நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 27இல், சென்னைப் பச்சையப்பன் கல்லூரி பி.ஏ. 33இல், சட்டக்கல்லூரி பி.எல். 39இல். 40-43 வழக்குரைஞர், 46 முதல் ஸ்ரீ வைகுண்டத்தில் நடுவராகப் பதவி ஏற்பு, 48 திருவள்ளூர், 50 சைதாப்பேட்டைக் குற்றவியல் நடுவர், 51-53 பூவிருந்தவல்லி, 54 கரூர், 55 குடந்தையில் சப் ஜட்ஜ், திண்டுக்கல், 56இல் மாவட்டக் குற்றவியல் நீதிபதி நெல்லை, 56-60 கடலூர், 60 மாவட்ட செஷன்ஸ் கோவை நீதிபதி, 61 ராமநாதபுரம், 62 நெல்லை, 63 மாகாண தலைமை நடுவர், சென்னை, 68, State Transport Appellate Trilunal, 69இல் ஓய்வு.

பத்து வயது முதலே அன்னை பச்சிலை மருந்துகொண்டு குழந்தை மருத்துவம் செய்வதைக் கூர்ந்து நோக்கிவந்து, 15 வயது முதல் மூலிகை பற்றி ஆராய முற்படல். 20 வயது தொடங்கிச் சித்தர் நூல் பலவற்றைப் படித்து வந்தார். 'பிணி களைப் போக்குவது ஒரு பெரும் சேவை' எனத் தெளிந்து அதிலேயே முனைதல் தமிழக அரசும் இவரது மருத்துவப் பணி யினைப் பாராட்டி 'நடுவராக இருந்து கொண்டே மருத்துவப் பணி மேவலாம்' என 56இல் ஆணை பிறப்பித்து அனுமதித் தது; இவரது 'உங்கள் வீட்டில் சித்தர் மருந்து' என்ற நூலினை இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது அச்சிட்டு இலவய மாக மக்களுக்கு வழங்கியது.

**படைப்புகள்**: சித்தர் கைகண்ட மருந்து, சித்தர் மருந்து செய் பெருமுறைகள், நீடூழி வாழ வழி, வாத வைத்தியத்துக்காதி,

சித்தர் மெய்ப்பொருள், அமுத கலசம், முப்புகுரு, சித்த மருத்துவத்தின் பெருமை, சாகாக் கலை, பதார்த்த குணபோதினி, பொன்மொழிகள் ஆயிரம், அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி, அனுபவ சித்த மருந்து செய் முறைகள், அகத்தியர் பன்னீராயிரம் தொகுப்பு, ஆன்மீக ஆய்வு. பதினாறு நூல்களும் அருள்ஜோதி பதிப்பக (ஜட்ஜ் பங்களா, சஞ்சீவி நகர், அரும்பாக்கம், சென்னை-106) வெளியீடுகள்.

இவர் தொழிலாற்றிய துறை நீதித்துறை, தொண்டாற்றும் துறையோ மருத்துவம். செல்வாக்குள்ள பெரு நிலையில் இருந்ததால் சித்த மருத்துவம் சிறப்புற்றது. 'சில புலவர்கள் நம் தாய் மருந்தைப்பற்றிச் சரிவர ஆராயாமல் தாறுமாறாக எழுதி நூல் வெளியிடுகிறார்கள். என்ன பாவம்?' என்ற ஆதங்கப் படுகிறார்.

கண்ணியத்துடன் கடனாற்றி, கண்டிப்புடன் கடமை யாற்றும் இவர் ஒரு ஞானி. நெறியோடு வாழும் நீர்மையர். ஒவ்வொரு திங்களும் முதல் வாரத்தில் வெள்ளி சனி ஞாயிறு திங்களில் சென்னையில் செயலாற்றுகிறார். மற்ற நாட்களில் சொந்த ஊரிலேயே. 36இல் முதல் மணம்; ஒரே மகன் அமெரிக்காவில் பெரிய கம்பெனி ஒன்றில் 25 ஆண்டுகளாகப் பணி யாற்றுகிறார். 39இல் இரண்டாம் மணம். 3 மகளிர்; பேரன் 3, பேத்தி 2. 62இல் மதுரை சித்த வைத்திய மாநாட்டில் 'வைத்திய ரத்தினம்' பட்டம் வழங்கினார் ஜி.டி. நாயுடு. 69இல் ஆந்திர மாநில ஆயுர்வேதக் கல்லூரியில் மருத்துவராகப் பதிவு செய்துளார். **முகவரி**: ஜட்ஜ் தோட்டம், எறும்பூர், வந்தவாசி வட்டம், வ.ஆ.-604 404. (கீழ் கொவளைவேடு தொ.பே. எண் 1).

**டாக்டர். ஆர். தியாகராசன்**: 12-4-1915. இந்திய மருத்துவத் துறைக் கல்லூரிகளில் விரிவுரையாளர். உதவிப் பேராசிரிய ராகப் பணியாற்றி, அரும்பாக்கம் சித்த மருத்துவ மத்திய ஆராய்ச்சி நிலைய மதிப்புறு ஆலோசகராக உள்ளார். 'மருத்துவப் பொழில்' எனும் சித்த மருத்துவத் திங்கள் இதழின் துணை ஆசிரியராக இருந்துளார். சித்த மருத்துவ முறையில் குடற்புண் புற்றுநோய் மஞ்சட் காமாலை நோய்களைத் துருவி ஆராய்ந்து தக்க மருத்துவ முறைகளைக் கண்டறிந்துள்ளார். உடற் கூறுகள், தட்சிணாயனர் வைத்திய அட்டவணை போன்ற மருந்தியல் நூல்கள் படைத்துளார். தேரையரின் நூல்கள் பலவற்றை உரையுடன் பதிப்பித்துள்ளார். அதில் ஒன்று தேரையர் மகாகரிசல், தமிழக அரசின் பரிசு பெற்றது. தமிழ்ப் பல்கலைக் கழகத் சித்த மருத்துவத்துறைப் பாடத்திட்டக்குழு

உறுப்பினர்; அறிவியல் புலக்குழு நியமன உறுப்பினராக உள்ளார். **முகவரி**: *38*, அய்யாவு நாயுடு தெரு, செனாய் நகர், சென்னை-30.

**இரத்தின சண்முகனார்**: *21-1-1925*. நாகப்பட்டினம். சித்த வைத்திய குடும்பத்தைச் சார்ந்தவர். மருத்துவ நூல்களோடு சிறுகதை புதினம் போன்றனவும் படைத்துள்ளார்; 100க்கு மேல் நூல்கள். எளிய வைத்திய முறைகள், அதிர்ச்சி தரும் நோய்களும் அதை நீக்கும் வழிகளும், கண் பாதுகாப்பும் மருத்துவமும், நரம்புத் தளர்ச்சியும் நீக்கும் வழிகளும்; வீட்டுக்கு உதவும் நாட்டு மருத்துவம், உடம்பைக் காப்பாற்று (தமிழரசின் பரிசு); மலர்கள் காய்கள் - கனிகள் வேர் பட்டை - பால் தேன் மருத்துவம், மன நோயும் நீக்கும் வழிகளும், மனித பலவீனங்களும் நீக்கும் வழிகளும், வலிமையூட்டும் லேகியங்கள், போன்றன குறிப்பிடத்தக்கன. 'சித்த சரப' பட்டம் பெற்றவர். **முகவரி**:*30*, என்.எஸ்.கே. தெரு, நேரு நகர், சென்னை-32.

**சுப. சதாசிவம்**: *9-12-1930*. அறந்தாங்கி. சுப்பையா: காளியம்மாள். R.A.P. West Bengal *1964*; R.I.M.P. *1967*, கவிராஜ் (பாசிம் பங்கா ஆயுர்வேத பரிஷத்) போன்ற மருத்துவத் தகுதிகள் பெற்றவர். சித்த வைத்திய உலகில் தனியிடம் வகிப்பர்; உணவு, உடற்பயிற்சி, பாலியல் சர்மநோய் மேக நோய் போன்ற பல்துறைகளிலும் புலமையாளர். மூலிகைகள் சித்த மருத்துவத்தின் விஞ்ஞானபூர்வமான பயன்களை மக்களிடத்தில் முதன்முதல் அறிமுகப்படுத்தி வழிகாட்டியவர். இவரது மருத்துவப் புலமையும் அரிய கட்டுரைகளும் மருந்தியல் உலகிற்கும் தமிழகத்திற்கும் தனி சிறப்புத் தருவன. ஒதுக்கப்பட்ட பாலியல், பாலுறவு, மேக நோய், சித்த மருத்துவத்தின் அறிவியல் பயன்களை முதன்முறை தமிழகத்திற்குத் தந்தார்; பலரையும் பின்பற்றச் செய்தார்.

கடந்த 16 ஆண்டுகளாக தினமணி, சுடர், கதிர், ஆரோக்கியம், சித்தர் செயல், தினமலர், சிங்கப்பூர் தமிழ் முரசு, மலேயா தமிழ்நேசன், இலங்கை தினகரன் போன்றவற்றில் பயனான கட்டுரைகள் எழுதி வருகிறார்; மருத்துவ நூல்கட்கு மதிப்புரையும் தீட்டி வருகிறார். நூல்கள்: மூலிகை மருந்துகள், விஞ்ஞான நோக்கில் நோய் நீக்கும் மூலிகைகள், நோய் நீக்கும் சித்த மருந்துகள், புற்றுநோய், இரைப்பு இருமல், நரை நீக்கல்.

83இல் மலேசியா சிங்கப்பூர் பயணம் புரிந்து சீன மருத்துவர்களுடன் கலந்து ஆராய்ச்சி மேற்கொண்டார்; கொரிய

நாட்டு ஜின்செங் மூலிகை மருத்துவ முறை பற்றியும் ஆராய்ந்துள்ளார். சர்மமேக நோய்கள் நிவாரணம், காமினி கல்பம், வீரியசித்தி, வாத நோய்கட்கு வகையான மருந்துகள் கண்டுளார். முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களால் 'நாடி நிபுணர்' எனப் போற்றப் பெற்றார். 79இல் சென்னை சித்த மருத்துவக் கண்காட்சியில் நெ.து. சுந்தரவடிவேலராலும் 83இல் பாண்டிச்சேரி அகத்தியர் விழாவிலும் பொன்னாடை போர்த்தப் பெற்றார். 85இல் சேலம் மருத்துவ சங்கம் 'சித்த மருத்துவக் சுடர்' என்ற பட்டம் தந்தது. தமிழ்நாடு கிராம மருத்துவர் சங்கத் தலைவர், புதுக்கோட்டை மாவட்ட சித்த மருத்துவர் சங்கத் தலைவர் என்ற பல பொறுப்பினார்.

60இல் மணம்; மனைவி கனகவல்லியும் ஒரு மருத்துவர். மகள் மல்லிகா, கணவர் டாக்டர் ஜே. சதாசிவம் செங்கிப்பட்டி சானடோரிய மருத்துவ அலுவலர். மகன்கள்: இளமாறன், சிவகுமார். பிரான்சு முதல் பி ஜி வரை உலகின் பல்வேறு பகுதிகளினின்றும் நூற்றுக்கணக்கானோர் தொடர்பு கொண்டும் நேரில் சிகிச்சை பெற்றும் சிறந்துளர். மல்லிகா மருத்துவமனை (47, காந்தி பூங்கா சாலை) வைத்து மருத்துவம் செய்தும், ஒவ்வொரு திங்களும் திருச்சியில் 3 கோவை 4 சேலம் 5 சென்னையில் 6, 7 தேதிகளில் உலா வருகிறார். பிற நாட்களில் உள்ளூரிலேயே. **முகவரி:** 23, கோட்டை 7ம் தெரு, அறந்தாங்கி-614 616.

**சி. சிதம்பரதாணுப் பிள்ளை :** 3-4-1931. குமரி மாவட்ட நெய்யூர் வினாயகர் காலனி. சென்னைத் துறைமுகப் பொறுப்புக் கழக அலுவலர் - பண்டக துணைக் கட்டுப்பாட்டாளர். வழக்கறிஞர். அகால மரண நூல், எந்தை மருத்துவம், மாதர் மருத்துவம், படுவர் தொடுவர் மத திரட்டு, வர்ம சூட்சம் கருவின் லீலைகள், கொங்கையின் ரகசியம் - நோய்கள், நீர்ப் பாய்ச்சல் நோயும் மருந்தும், விக்கல் காமாலை நோயும் மருந்தும், மஞ்சளின் மருத்துவ மகிமை, பசு தரும் ஆரோக்கியம், ஐம்பொறி விளக்கம் என 25 நூல்கள். வைத்யரத்னா பண்டித ரத்னா எனப்படுவர். இவர் மாணவர்களில் குறிப்பிடத்தக்கவர் ஆ. சுப்பிரமணிய பிள்ளை; சித்தர் குறுநூல் படைத்துளார், **முகவரி:** ஈ 32. அண்ணாநகர், சென்னை-40.

**மூலிகைதாசன் :** (பீ. ஜே. ஜான்) 20-6-1934. மூலிகை மஞ்சரி, தேள் கடிக்கு 100 மருந்துகள், சித்த ஜீவ வர்க்கம், உலோக சிந்தாமணி; நவரத்தின சுருக்கமாலை (பதிப்பு),

சித்த மருத்துவத்தில் சீர்சான்றவர். **முகவரி:** 121, 4வது தெரு, அபிராமபுரம், சென்னை-18.

**டி.எஸ். ஜனக குமாரி:** தஞ்சை மாவட்ட திருவிடை மருதூர். நிறைய நூல்கள் எழுதி 'வைத்திய விசாரதை' என்ற பெயரும் பெற்றவர். சுலப மருந்துகள், நாட்டு மருந்துகள் தமிழ் மருந்துகள், சுலபமுறை, காய கற்பம்,குழந்தைக்குக்குடும்ப மருந்துகள், குடும்பக் கட்டுப்பாட்டுக்குத் தமிழ் மருந்துகள், கொடிய நோய்கள் குணப்பட அனுபவ மருந்துகள், பல நோய்க்குப் பலவித அனுபவ மருந்துகள், ஆஸ்துமா நோய்க்கு அனுபவ மருந்துகள், ஜலதோஷம் குணப்பட அனுபவ மருந்துகள், தலைவலிக்குத் தன்னிகரற்ற மருந்துகள், மலரே மருந்து, கூந்தலைப் பாதுகாருங்கள் என 30க்கும் மேலன. திருவிடைமருதூரில் ஜய ஜோதி பிரசுரம் வைத்துத் தமிழில் மருத்துவ நூல்கள் வெளியிட்டவர்.

**டாக்டர். ஆர். ஏ. ஆர். கண்ணப்பர்:** படைப்புகள்: நம் நாட்டு மூலிகைகள் 7 படலங்கள், நோயும் மருந்தும் 4 படலங்கள், விஷ ஜந்துக்களும் மூலிகைகளும், புகழ் பெற்ற மூலிகைகள், மனித உறுப்புக்களும் மூலிகையின் குணாதியங்களும், பயன் தரும் பத்து கீரைகள், குழந்தைப் பிள்ளைகளும் மூலிகை மருத்துவமும், மூலிகை மணி, மூலிகையின் தந்தை என்றேத்தப் பட்டவர், புகழ் பொலிந்தவர்.முன்னை **முகவரி:** 33/1, தென்னை மரத் தெரு, வேலூர்.

**மூலிகைமணி. க. வெங்கடேசன், எம்.ஏ.,** சித்த மருத்துவத்தைப் புதிய பார்வையில் புரியவைப்பவர்; 'ஆய்வு நோக்கில் நாட்டுப்புற மருத்துவம், அரிய நூல். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையில் ஆராய்ச்சியாளராக அமைந்தவர். **முகவரி:** 'சித்தர் கோட்டம், 19அ, அருளாம்பாள் தெரு, தி. நகர். சென்னை-17 (24, 6வது மேற்குத் தெரு, காந்தி நகர், வேலூர்-6.)

**மூலிகைமணி கண்ணப்பர் பாபு:** கண்ணப்பரின் மைந்தர். தந்தையின் பணி தொடர்கிறார். **முகவரி:** அ. பெ. 1406. 22, 2வது பாலாஜி அவன்யு, திருமலைப் பிள்ளை சாலை, சென்னை-17. (447946)

**பண்டித எஸ். எஸ். ஆனந்தம்.** சித்தமருத்துவத்தில் தலைசிறந்த நிபுணர். சேராங்கொட்டையிலிருந்து மருந்து உண்டாக்கி புற்றுநோயைப் போக்கியவர். இவரது மகனாரே டாக்டர் ஆனந்தகுமார்; நடுவண் அரசின் சித்த மருத்துவ

மனையில் தந்தையின் மருந்து கொண்டு புற்று நோய் சிகிச்சை செய்து வருகிறார். சேராங்கொட்டையில் விளைந்த மருந்துகள் 'வல்லாதி' எனப்படும். Semicarpus Ana Cardium Fort என வட நாட்டில் வழங்குகிறது.

**சாம்பசிவம் பிள்ளை :** தஞ்சை மாவட்ட அம்மாப்பேட்டை. அரும்பெரும் முயற்சி மேற்கொண்டு தனி ஒருவராகவே 'மருத்துவ அகராதி' ஒன்று உருவாக்கியுள்ளார். மூன்று பெரும் பகுதிகளில் அமைவது. இச் சீரிய புதையலை வழக்கம் போலே தமிழகம் பேணிப் போற்றாமல் கைவிட்டது கழிவிரக்கம் கொள்ளத்தக்கதாகும்.

**மூலிகைமணி டி. வி. சாம்பசிவம்பிள்ளை :** சித்த மருத்துவத்தின் கருப்பொருள் என்ற அருமையான நூல் படைத்தவர். ஆங்கிலத்திலும் வந்துளது. **முகவரி:** 59, மாசிலாமணி முதலி தெரு, வேலூர்-1

**சிற்சபை :** 'சித்த மருத்துவம்' என்ற இதழினை நடாத்தி வருகிறார்; அதன்மூலம் தமிழ் மருத்துவத்தின் தகவினை வெளிப்படுத்தி வருகிறார். தமிழ் அறிவோடு சித்த மருத்துவம் செழிக்க சிகிச்சை செய்வதோடு எழுதியும் வருகிறார். **முகவரி:** காஞ்சிபுரம், 152, ரங்கராஜபுரம், சென்னை-24.

**எம். எஸ். திருமலை நடராசன்:** வாத நோய்க்கு வகையான மருந்து, பாலும் அதன் மருத்துவ குணங்களும், எலும்பிச்சம் பழம், கீரைகள், மலர்கள், பழங்கள் போன்றவற்றின் மருத்துவப் பயன்களைப் பன்னூல்களாகப் படைத்துள்ளார். **முகவரி :** 6/6, தெற்கு சிவன்கோயில் தெரு, வடபழநி, சென்னை-26.

**சிறுமணவூர் முனிசாமி முதலியார்:** (பார்வதி பரணியம் எனும் விஷ வைத்திய சிந்தாமணி, மூலிகை மர்மம்), **வைத்திய வித்வமணி சி. கண்ணுசாமிபிள்ளை** (வைத்திய சிந்தாமணி, சிகிச்சா ரத்ந தீபம்), கும்பகோணம் சர்வரோக நிவாரண வைத்திய சாலை தலைவர் ஆயுர்வேத **கே.எஸ். துரைசாமி பண்டிதர்** (சுகாதார ஜீவரக்ஷாமிர்தம்), **ம.கி பாண்டுரங்கனார்** (மனிதனை மேன்மைப்படுத்தும் உணவு, நோயின்றி வாழ முடியாதா?), **ஈ:வே.சோ.** (இயற்கை மருத்துவ அடிப்படை), **எஸ். சங்கரராமன்** (தொற்று நோய்கள்), **வே.ஸ்ரீ பாலகிருஷ்ண முதலியார்** (செய்முறை பாக்கெட் வைத்தியம்), வைத்திய சிகாமணி புலவர் **கா.ர. தமிழேந்திய சேகர்** (புற்று நோயும் மருந்துகளும்),

**எஸ்.கல்யாணி** (பெண்களும் ஆரோக்கியமும்), **லக்ஷ்மி** (குழந்தை வைத்தியம்), **தமிழ்வாணன்** (பன்னூல்கள்), **இரா. குமாரசாமி** (அழகண்ணியும் ஆஸ்துமாவும், மூலிகைகள், புற்று நோய், அனிச்சம் ஒரு அருமருந்து), **தே. ஆண்டியப்பன்** (சித்த மருத்துவம்).

**தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சித்த மருத்துவத் துறை**: தனியே திகழ்கிறது. வெளியீடுகள்: மருந்தியல் (டாக்டர் துளசிமணி, ஆதித்தன்); அகத்தியர் குழம்பு, போகர் வைத்தியம் 700 (பிரேமா, நாகராசன்), காசநோய் (அ. கதிரேசன்), குடற் புண்ணைக் குணப்படுத்தலாம் (நரேந்திரன்), அறுவை சிகிச்சை நோய் நாடல் (சிவராமன்), பொது அறுவை மருத்துவம் (நரேந்திரன்). **உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்** கண் மருத்துவம், வர்ம சூத்திரம், தன்வந்திரி குழந்தை வாகடம், மருந்து செய் முறைகள் போன்ற நூல்கள் வெளியிட்டதோடு, Heritage of the Tamils - Siddha Medicine என்ற முதன் முறையான கருத்தரங்கு வைத்து 44 கட்டுரைகளை வெளியிட்டுளது. **மதுரைப் பல்கலைக் கழகம்** யூகி முனிவர் பிடிவாதம் 1000 (ந.சேது ரகுநாதன்) வெளியிட்டுளது.

கலைவேந்தன் **சரபோஜி** இத்துறையில் ஆய்வறிஞர்களை அமர்த்தி 18 சுவடிகளில் மருத்துவச் செய்திகளை வடித்தெடுத்தார். சரபேந்திர வைத்திய முறைகள், ரத்னாவளி போன்றன குறிப்பிடத்தக்கன. சென்னைக் **கீழ்த்திசைச் சுவடி நிலையத்தில்** 200க்கும் மேற்பட்ட சுவடிகள் உள. **தமிழக அரசும்** 'தமிழ்நாடு மூலிகைப் பண்ணைக் கார்ப்பரேசன் (Tampco) நிறுவி தமிழ் மூலிகைகளைப் பேணிப் போற்றுகிறது. அரும்பாக்கத்தில் சித்த மருத்துவப் பெருமனை வைத்தும், ஊர்கள்தோறும் சித்த மருத்துவ மருந்தகம் அமைத்தும் புரப்பதோடு, தமிழ் மருத்துவத்தைப் பல்வகையில் பரவும்வகை செய்து வருகிறது.

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'; 'நோயற்ற வாழ்வில் நான் வாழ வேண்டும்' என்றார் வள்ளலார். 'மாந்தனின் மதிப்பு 4½ கோடிக்குச் சமம்' என்கிறது அறிவியல்; நோயற்றபோதுதான் நல்வாழ்வு; அதற்குத் துணையாவது மருந்தியல். வாதம் பித்தம் சிலேத்துமம் (வளி, தீ, நீர்) மூன்றும் கூடாது குறையாது இருப்பின், நோயே உண்டாகா; ஒன்று கூடினும் குறையினும்-நிலை பிறழ்ச்சி நோயினை உண்டாக்கும். எல்லாம் உணவாலே அமையும். 'உணவே மருந்து, மருந்தே உணவு' உணவுப்பழக்கமே புற்றுநோய்க்குக்

காரணம்; உண்டபின் ஒரு மைல் நட, மீதூண் விரும்பேல், அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாகும் என்பன கருதுக.

'கீரைத் தோட்டம் நமது மருந்துப் பெட்டி' (டால்ஸ்டாப்). நன்னாரி விரும்பப் பொன்னாகும் மேனி. பொன்னாம் காண் நீ, கரிசிலாம் காண் நீ=பொன்னாங்கண்ணி, கரிசிலாங்கண்ணி கீரைகள் சிறந்தவை. நாளும் கீரை யுண்ண வேணும்.

இரவில் தயிர், கீரை கூடா. வாழைத்தண்டு ஒன்றே கல்லைக் கரைக்கும். பாகற்காய் தவறாது சேர்க்கவேணும். வெண்டை மூளைக்குப் பலம் அளிக்கும்; காரட் கண்ணுக்கு நல்லது; அகத்தி, முட்டைக்கோஸ் வாய் வயிற்றுப் புண் ஆற்றும்.

ஒருபோது உண்பான் **யோகி,** இருபோது உண்பான் **போகி,** முப்போது உண்பான் **ரோகி;** ஆற்றுநீர் வாதம் போக்கும், அருவிநீர் பித்தம் போக்கும், சோற்று நீர் இரண்டும் போக்கும். ரேலம் பட்டை பித்தம் போக்கும், ஆலம்பட்டை மேகம் போக்கும். நாள் இரண்டு, வாரம் இரண்டு; மாதம் இரண்டு, வருடம் இரண்டு. இவை நோயில்லா நெறி நவிலும் பழமொழிகள்.

தேனும் இஞ்சியும் **திரைமூப்பு** நீக்கும்; வல்லாரை வலிமை அளிக்கும். பேரீச்சம்பழம் உணவும் மருந்துமாம், கொம்பரக்கு நுரையீரலுக்கு நல்லது, வால்மிளகு இருமலை அகற்றும்; மூன்றும் இணைய **ஆஸ்துமா** அகலும். இந்துப்பு திப்பிலி பீத ரோகிணி மூன்றையும் நந்தியாவட்டைப் பூச்சாற்றில் அரைத்து இட்டால் **கண் நோய்** நீங்கும். பயத்தம் பருப்பை வேக வைத்து, தேங்காய்த் துருவலுடன் உண்டால் **கண்வலி** போம். மாதுளை தென்னம்பிஞ்சு மாவிலைக் கொழுந்துடன் அரைத்துண்டால் **வயிற்றுப்போக்கு** நிற்கும். தேங்காய் துருவலுடன் பற்பாடகம் (மூலிகை) சேர்த்து வேக வைத்துண்ணின் **வயிற்று வலி** விலகும். அத்தி, கோவைப்பிஞ்சு, மரப்பட்டை, செருப்படி நான்கையும் வாழைப்பூச் சாற்றுடன் அரைத்துண்டால் **சீத-இரத்த பேதி** நிற்கும்.

மிளகு தவனம் (பச்சிலை) சாறு **கக்குவான்**களையும். மூட்டு வலிக்கு முடக்கத்தான், நகச்சுற்றுக்கு எலுமிச்சம்பழம், கொசு ஒழிய நொச்சிலைப் புகை, காமாலை நோய்க்குக் கீழாநெல்லி, மஞ்சள் கரிசிலாங்கண்ணி; வயிற்றுப்பூச்சிக்கு வேப்பிலை,

தொண்டைக் கட்டுக்குக் குப்பைமேனி; தலைவலிக்குச் சுக்கும் பெருங்காயமும் பாலில் பற்றுப் போடவேணும்.

கொலஸ்ட்ராலை அழிக்கும் ஆற்றலது தயிர். அமுக்காங் கிழங்கு இளம்பிள்ளை வாதம் போக்கும். செங்கழுநீர் வழுக்கை நீக்கும். சீரகம் செரிக்க வைக்கும். வெப்பம் தணிக்கும். அழு கண்ணி (Drosero) யின் பிளம்பகோன் நஞ்சு முறிக்கும்; நாப் தாக்குயினோன், தங்கத்தைப் பொடியாக்கும். நித்திய கல்யாணி புண் ஆற்றும். சோம வல்லியிலிருந்து ஆஸ்துமாவுக் குரிய எஃவிடிரின்; சர்பகந்தியிலிருந்து குருதி யழுத்தத்துக்குரிய சர்பாசில்ப், கீழாநெல்லியினின்று காமாலைக்குரிய Liver 52 தயாரிக்கின்றனர்! அருகம்புல்சாறு ஆஸ்துமாவுக்கு நல்லது. துளசி ஒரு மாமருந்து.

தாய்ப்பால் குளிர்காலத்தில் வெப்பமுடனும், கோடை காலத்தில் குளிர்ந்தும் தட்பவெப்ப நிலைக்கேற்ப தாமே மாறிக் கொள்ளும் மாண்பினது; எனவே தாய்ப்பால் தட்டாது பிள்ளைக்குத் தருதல் வேண்டும்; நோய்களை எதிர்க்கும் சக்தி யது. சிறியா பெரியா நங்கைவேர்கள் பாம்புக்கடிக்கு ஏற்றது; அதை வைத்துக்கொண்டு படமெடுக்கும் பாம்பிடம் கைநீட்ட லாம், நாகம் திரும்பிக் கொள்ளும். பாம்பு நடமாடும் பகுதி களில் கொளுத்தின், பாம்புகளே தலைகாட்டா! வாகைப் பட்டை தேள் பாம்பு நஞ்சு முறிக்கும்.

திறந்த வெளியில் மொட்டை மாடியில் படுத்தல் கூடாது. வடக்கு - தெற்கு வாட்டத்தில் துயிலக்கூடாது, கையூன்றி உணவருந்தலாகாது. ஆசாரக் கோவை நோய் அணுகாமுறை (Preventive) உணர்த்தும். 80 சொட்டு ரத்தம் சேர்ந்து உரு வாவது ஒரு சொட்டு விந்து; 'விந்து போனதோ நொந்து போனதோ!'

நாடியை நிலைபெறக் கொண்டது சித்த மருத்துவம்; இதில் சுத்தி முறை முக்கியமானது; இதனின்றும் கிளைத்ததே வர்ம நூல்கள். பாஷாணம் 64 வகைப்படும். கற்ப மூலிகைகள் 108. பின் விளைவற்ற இனிய மருந்துகள் கொண்டது. நம் உடலில் 72000 நரம்புகள் உள; நம் உடலில் உள்ள 'யங்' எனும் ஆண் தத்துவமும், 'யின்' என்ற பெண் தத்துவமும் நிலைமாறும் போது நோய் உண்டாகிறது என்பது சீன மருத்துவர் கருத்து.

அனிச்சமலர் (Anagallis Awensis) ஒரு Sensitive Hydio-nastic plant; ஓர் அற்புத மருந்து. இப்படி நமக்கே உரிய நல்

மருத்துவத்தை எப்படி நாம் மறப்பது; அப்படி மறப்பின் தமிழர் ஆவோமோ?

**வானொலி:** தமிழக வானொலி நிலையங்களின் தமிழ்ப் பணி (நடுவணரசின் ஆளுகைக்குட்பட்ட அளவில்) கணிச மானது என்றே இயம்பவேண்டும். தமிழின் ஒவ்வொரு பிரிவுக்கும் பரிவுகொண்டு பங்காற்றி வருகிறது. முத்தமிழும் முறையாகப் பேணி வளர்க்கிறது. புத்தாண்டு பொங்கல் கவியரங்கங்கள், கவிமுகில், கவிச்சொல் எனக் கவித்துவம் போற்றுகிறது; இளங் கவிஞர்களை வெளிப்படுத்துகிறது. மழலை அமுதம், சிறுவர் சோலை அரங்கம் எனக் குழந்தை இலக்கியம் புரக்கிறது. 'வானொலி அண்ணா' வளர்தமிழ் வளர்க்கிறார்.

அரிவையர் அரங்கம் பூவையர் பூங்கா மங்கையர் மலர் எனப் பெண்மைக்குரியன பேணப்படுகின்றன. அறிவியல் அரங்கம் - சோலை - அமுதம் என 'அறிவியல் தமிழ்' மேவப் பெறுகிறது; இளம் விஞ்ஞானிகள் அறிமுகமாகின்றனர். கிராமியக் கலை, கிராமம் போவோம், கிராமீயக் கலை மணம் என நாட்டுப்புறவியல் நாடப்பெறுகிறது; மறைந்து வரும் பொம்மலாட்டம் லாவணி போன்றன காக்கப்படுகின்றன. புகழ் ஏணி என நற்றமிழ் அறிஞர்கள் பெரியோர்கள் பற்றிப் பேரளவு அறிகிறோம்.

வாரம் 3 நாட்கள் தமிழிசையாளர்களின் சாகித்யங்கள் தனியே பாடப்படுகின்றன. இசைவாணர் பாட்டரங்கம், நாத சுரக்கலை அடிக்கடியும், ஓதுவார் திறம் அவ்வப்போதும் செவி மடுக்கிறோம். மேடை நாடகங்கள், ஞாயிறு அன்று ஓரங்க நாடகங்கள், பிற்பகல் முழுநேர நாடகங்கள்; மேடை நாடகப் பாடல்கள் என நாடகத்தமிழ் நலம்பெறுகிறது.

சிறுகதைகள் வாசிக்கப் பெறுகின்றன; சித்தனைகளாக வள்ளுவம் போன்றன வார்த்தெடுக்கப் பெறுகின்றன. இலக்கியச் சோலை, இளைய பாரதம் என்ற பல்வேறு உத்தி களில் பைந்தமிழ் போற்றப் பெறுகிறது. சுருங்கச் சொன்னால் முத்தமிழ் முறையாக வளர்க்கப்படுகிறது. இப்படி வானொலி யின் தமிழ்ப்பணி வாழ்த்துமாறுளது. கணிசமான அளவுக்கு எல்லையில் நின்று இனிதே எளிதே வளர்க்கிறது என இதயமார் நன்றி பாராட்டுவோம். வானொலி வல்லாளர் சிலரை நினைந்து போற்றுவோம்.

**கு. விசுவநாதன்:** 18-5-1912. திருச்சி. வித்துவான் பட்டம் பெற்றவர், பி. ஏ. பட்டதாரி. திருச்சி புதுவை வானொலி நிலையங்களில் பணியாற்றியவர். நூல்: பணமே நீ சொல்.

**மாறன்** (கே. பி. கணபதி): 12-6-1912. எட்டையபுரம். 34 இல் பாளையங்கோட்டை தூய சவேரியர் கல்லூரி மாணவர். 42இல் திருச்சி வானொலியில் சொற்பொழிவுத் துறை அமைப்பாளர். மனப்பின்னல், வளர்பிறை (நாவல்), அபூர்வபிறவிகள் (நகைச்சுவைச் சிறுகதைகள்) சிற்பியின் கனவு (சிறுகதை), மகாத்மா விதுரர் (நாடகம்), வீரனின் இருதயம், பச்சைக் கிளி, முயல் வாத்தியார் (சிறுவர் நாடகம்), திசை மாற்றம் (நகைச்சுவை), மனமும் மனித வாழ்க்கையும் (உள வியல்), 61 இல் ஓய்வு பெற்று வேளாண்மை செய்து வருகிறார். **முகவரி:** 84, இளங்கோ அடிகள் தெரு, கொக்கிரகுளம். திருநெல்வேலி-4.

**என். ராகவன்:** 25-6-1918. நெல்லை மாவட்ட நாங்குனேரி. செங்கரும்பு (கவிதை); பணம் பத்திரம், நமது திருப்பணி (நாடகம்).

**எம். எஸ். கோபால்:** 18-6-1920. சென்னை வானொலி நிலைய இயக்குநராக இருந்து ஓய்வு பெற்றவர். கவிதை நாடகம் இரண்டும் வல்லார். மலேசியா, சிங்கப்பூர், ஹாங்காங், ஜப்பான், ஆஸ்திரேலியா போன்ற நாடுகட்கு போந்தவர். காற்றிலே மிதந்த கவிதைகள்; காற்றிலே மிதந்த நாடகங்கள், விளம்பரப்புலி. **முகவரி:** 41, 3ஆவது கிழக்குத் தெரு, திருவான்மியூர், சென்னை-41.

துறைவன், சுகி. சுப்பிரமணியம், தென்னூர் கிருஷ்ண மூர்த்தி, டி. வி. கிருஷ்ணமூர்த்தி, T. M. கமலா, வெள்ளையம் மாள், எஸ். எஸ். பரமசிவன் பிள்ளை போன்றார் குறிப்பிடத் தக்கவர்கள்.

**கோ. செல்வம்:** 20-12-1930. ஆர்க்காடு. சென்னை வானொலியில் பணியாற்றி இதுபோது கோவை வானொலி நிலைய இயக்குநர். நாடகத்தில் நிலைபேறுடையவர். வாழப் பிறந்தவர்கள், அரும்பும் வியர்வை (சென்னை அரசின் பரிசு), புகழ்க் கோபுரம், கிளியோபாட்ரா, பெருங்காப்பியப் பெண்டிர் போன்றன குறிப்பிடத்தக்கன.

**வி. திருவேங்கடம்:** 23-11-1937. தெ. ஆ. கடலூர் புது நகர். திருச்சி கோவை நிலையங்களில் பணியாற்றி இதுபோது

நெல்லை நிலைய இயக்குநராக இலங்குகிறார். சிறுகதை, நாவல், கட்டுரை, திறனாய்வு வல்லார். புனைபெயர் நெடியோன்.

நெல்லை சுப்பிரமணியம், நரிப்பாடி ராஜா, துகிலி சுப்பிரமணியம் போன்றாரின் தொண்டு போற்றுதற்குரியது.

**லோக சிகாமணி** : (ஞால முதல்வன்) 7-10-1941. தெ.ஆ. மரக்காணம். தெய்வசிகாமணி: செல்வநாயகி. 59 தஞ்சை பிளேக் உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு, 63 சரபோஜி மன்னர் கல்லூரி பி.ஏ. (பொருளியல்), 64-67 சென்னை ஜெயின் கல்லூரி தேசிய மாணவர் படை, 67 பின்னி கம்பெனி உதவியாளர், 68-77 சென்னை வானொலி ஒலிபரப்புச் செயல் அலுவலர், 77-79 நெல்லை வானொலி, 79-81 சென்னை வானொலி, 81 முதல் திருச்சி வானொலி நிலைய நாடக, இசை நிகழ்ச்சிப் பொறுப்பாளர்.

பள்ளி கல்லூரி நாட்களிலேயே தமிழ் ஆங்கிலப் பேச்சுப் போட்டிகளில் பல பரிசு பெற்றவர். மெல்லிசை நடிப்பு மேன்மையர். கலைபயில் தெளிவும் கட்டுரை வன்மையும் கொண்டவர். நல்ல கவிஞர், இவர் பாடல்கள் பல மெல்லிசையில் மிதந்து வரக் கேட்கலாம். சரபோஜியில் தமிழில் முதன் மாணவராகத் திகழ்ந்து Art Gallery Gold Medal பெற்றவர். நடித்தும் நாடகம் புனைந்தும் இயக்கியும் வருகிறார். கல்வி நாட்களில் தேசிய மாணவர் படையில் திறமுடன் Under Officer ஆகச் சிறந்தவர். விளையும் பெயர் முளையிலே என்னுமாப் போலே பிற்றை நாள் பெரும் புகழுக்குரிய பெற்றியராகப் பயிலு நாளிலேயே பேர் சொன்னவர். கதா காலட்சேபம் செய்வதில் சூரர். கல்வி நிலையங்கட்கும் ஆசிரியருக்கும் பெருமிதம் தோன்றச் செய்த-பெற்றோரும் இங்கிவனை யாம் பெறவே என்ன தவம் செய்து விட்டோம் என உவக்குமாறு பிறந்த தோன்றல்.

**இளசை எஸ். சுந்தரம்**: 1-6-1946. எட்டையபுரம். சீனிவாசன்: சீனியம்மாள். தூத்துக்குடி சுப்பையா வித்யாலய ஆண்கள் உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு. 66; வ.உ.சி. கல்லூரி பி.ஏ., 70; பி.எட். 71; மதுரைப் பல்கலைக் கழக அஞ்சல் வழி எம்.ஏ., 83; எட்டையபுரம் ராஜா உயர்நிலைப் பள்ளி வரலாற்றாசிரியர் 72-76; சென்னை வானொலி கல்வி ஒலி பரப்பு 76-82, திருச்சி வானொலி நிகழ்ச்சி அமைப்பாளர் 82 முதல்.

சிறுகதை, கவிதை, நாடகம், பேச்சு, பட்டிமன்றம், பேட்டி எனப் பன்முகப் பேரறிவாளர். பல சிறுகதைப் போட்டிகளில் பரிசு பெற்றுள்ளார், இதுவரை 70க்கும் மேல் சிறுகதைகள் செய்துள்ளார். கவியரங்கம் பல கண்டவர், பல மெல்லிசைப் பாடல்கள் காற்றிலே பறந்து இன்புறுத்துகின்றன. 'வானொலி அண்ணா'வாக விளங்கி, திருக்குறள் புதையல் நிகழ்ச்சிகள் தித்திக்க தித்திக்க தேனாக தந்து வருகிறார். புகழேணி நேர் முகம் கண்டு அவர்களது அனுபவங்களை வெளிப்படுத்தி யுள்ளார். நூல்: சாதகப் பறவை (சிறுகதைத் தொகுப்பு).

இந்தியாவெங்கும் கருத்தரங்கில் கலந்துகொண்டு உரை யாற்றியதோடு, 82இல் கோலாலம்பூர் ஒலிபரப்பு மேம்பாட்டுக் கருத்தரங்கில் இந்தியாவின் ஏகப் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். பெற்ற விருதுகள்: 'சிறுவர் இலக்கியச் செம்மல்' (கோனாப்பட்டு குழந்தை இலக்கியச் சங்கம்); 'குழந்தை இலக்கியத் தென்றல்' (தஞ்சை வளரும் இசைக் கலைஞர் மன்றம்); 'கலைச் செல்வர்' (குன்றக்குடி அடிகளார்). 86க் கான இலக்கியத்துறை சிறந்த இளைஞர்க்கான மாநில விருது ஈரோட்டு தமிழ்நாடு ஜேசீக்கள் மாநில மாநாட்டில் வழங்கப் பெற்றார். நடிப்பிலும் வல்லார், வானொலி நாடகங்களிலும் (கண்ணீரில் எழுதாதே), திரைப்படத்திலும் நடித்துள்ளார். வாஞ்சையுடன் பழகும் வளமையர்.

**வடிவேல் இராவணன் :** (வடிவேலன்) 5-4-1952. மதுரை மாவட்டம் பெரியகுளம் வட்ட கோட்டூர். சண்முகவேலு: பொன்னம்மாள். திருப்பூர் கலைக் கல்லூரியில் கலை இளவல்; சென்னை தொல்லியல் துறையில் கலை முதுவல்; மதுரைப் பல்கலைக் கழக சட்டவியல், சமற்கிருதத்தில் பட்டயம். திருச்சி வானொலியில் செய்தி அறிவிப்பாளர்.

வழங்கியன: தென்மொழி தமிழ் நிலம் ஏடுகளில் கட்டுரை கள். வானொலியில்: குழந்தைகள் மாணவர்கட்கான நிகழ்ச்சி களில் பழந்தமிழ் இலக்கியங்களை நாடக வடிவில் அறிமுகம் செய்கிறார். தமிழினத்தை அரிக்கும் சாதியத்தின் கீழ்மை யினையும் பொருளியற் சுரண்டல் கொடுமையினையும் அரசியல் ஏமாற்றினையும் விளக்கித் தீர்வும் தந்த நாடகம் 'விடியலை நோக்கி'. தமிழ்ப் பாட்டிசை கருவியிசை இவற்றின் தோற்ற வரலாறு. வளர்ச்சி நிலைகள் குறித்த விரிவான இசையோவியம். 'மண்ணிலே பிறந்த இசை'.

இலெமுரியா குமரி நாகரிகத்திற்கும் சிந்துவெளி நாகரிகத்துக்கும் இணைப்புப் பாலமாக இலங்கும் 'ஆதித்த நல்லூர்' பற்றிய வரலாற்றாய்வுச் சித்திரம் 'பொருநைக் கரையில் புதையுண்ட நாகரிகம்'. இந்தியாவிலேயே முதன் முதலாக அயலவரால் அகழ்வாய்வு தொடங்கப் பெற்றுத் தொடரப் பெறாது இடைநின்ற செய்தியினை உலகுக்குணர்த்திய புத்தோவியம். இது போன்றே மேற்குமலைத் தொடரின் தென் பகுதியின் மலைமுகடான பொதிகையின் வரலாற்று வளமை இயற்கை வளம் இன்றியமையாச் சிறப்புக்களை எடுத்தோதும் எழிலோவியம் 'பொதிகைப் புதையல்'. டார்வின் இங்கர்சால் அம்பேத்கார் பெரியார் போன்றாரின் வாழ்க்கை-சிந்தனைகளை வழங்கியது 'இவரைத் தெரிந்து கொள்வோம்'. தொழிலகங்கள், துறைமுகம், பைஞ்சுதை (சிமெண்ட்)த் தொழிலகம், வானொலி நிலையம், பணிமனைகளைக் குழந்தைகளுக்குக் காட்டும் 'சென்று பார்ப்போம்.'

இவை தவிர அறிவியல் கலையியல் நிகழ்ச்சிகள் எழுதி வழங்குவதும், இலக்கிய நிகழ்ச்சிகளை ஏற்றமிகு இணைப்புரையுடன் ஒலிபரப்புவதும் அனைத்தும் தூய தமிழில் அமைப்பதும் குறிப்பிடத்தக்கவை.

**பிச்சினிக்காடு இளங்கோ :** 15-7-1952. தஞ்சை மாவட்டம் பட்டுக்கோட்டை வட்டம் மதுக்கூர் அத்திரவட்டியடுத்த பிச்சினிக்காடு (குக்கிராமம்) ஆறுமுகம்: இலக்குமி அம்மாள். 70இல் பட்டுக்கோட்டை அரசினர் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி, 71இல் அதிராம்பட்டினம் காதர் முகைதீன் கல்லூரிப் புகுமுக வகுப்பு, 76இல் கோவை வேளாண் கல்லூரி பி.எசி, 77-83 வேளாண் அலுவலர், 83 முதல் திருச்சி வானொலி பண்ணை இல்லச் செய்தியாளர். ஒவ்வொரு வியாழனும் காலையில் 'கொட்டும் முரசு, மனிதர்களே கவனியுங்கள், விடியும் பொழுது' எனக் கேட்டிருக்கலாமே, கேட்காமல் இருக்க முடியாதே! வேளாண் கருத்துக்களைக் கதையாக-கவிதையாக-நாடகமாக-உரையாடல்களாக-மெல்லிசைப் பாடலாகப் படைத்து வருகிறார். நடிக்கிறார், படிக்கிறார், கதா காலட்சேபமும் பண்ணுகிறார்.

7 வது படிக்கும் போதிருந்தே ஏராளமாகக் கவிதை எழுதிக் குவித்துள்ளார். 500க்கு மேல் இருக்கும், தொகுப்பு வரப் போகிறது. 'எல்லாம் என்னால் எனக்குப் பின்னால், ஆவதே நோக்கம் அது என் ஏக்கம்' - கங்கை அமரன் இசையமைக்க தீபன் சக்கரவர்த்தி பாடியது. 'உழவர் செல்வம்' 'புதிய

பார்வை' இதழ்களின் ஆசிரியராகவும் இருந்திருக்கிறார். கால் பந்து விளையாட்டில் வீரர்; பல்கலைக் கழக ஆட்டக்காரர். துடிப்பானவர்.

**மன்னர் மன்னன் :** (கோபதி) 3-11-1928. புதுச்சேரி. பாவேந்தர் பாரதிதாசன்: பழநி அம்மா. பிரெஞ்சுக் கல்லூரியில் இளங்கலை பிரஞ்சு (இரண்டாம் மொழி ஆங்கிலம்,விருப்பபாடம் தமிழ்) பயின்று கொண்டிருந்தபோது 47 கிளர்ச்சியில் பங்கேற்றுப் படிப்பை விட்டார்.

தமிழ் பொற்பணி: 65 இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் 49 நாள் சிறையில் உறைந்தார். 44இல் 'முரசு' கையெழுத்து இதழ் நடாத்தி பிரெஞ்சு அரசால் நீதிமன்றில் நிறுத்தப்பட்டார். 47இல் பாவேந்தர் 'குயில்' கவிதை இதழ் பொறுப்பு, பாரதிதாசன் பதிப்பகம், பழநியம்மா அச்சக நிறுவன அமைச்சர். 56இல் 'தமிழ் முரசு' துணை ஆசிரியர்; 58இல் வானம்பாடி சிறுவர் இதழ் ஆசிரியர்; 60இல் 'வழிகாட்டி' (சமுதாய சீர் திருத்த இதழ்) ஆசிரியர். 66இல் 'பாரதிதாசன் குயில்' வெளியீட்டாளர்.

நாட்டு நற்பணி : 49இல் அண்ணா தொடங்கிய தி. மு. க. கிளை புதுவையில் நிறுவி ஆட்சிக்குழு உறுப்பினர். 54இல் புதுவை தனிமாநிலக் கோரிக்கைப் பேரியக்கத்தில் பங்கேற்றார்.

படைத்தன : புதுச்சேரியைப் பாருங்கள், புதுவைப் புகழ் மணிகள், குயில் கூவிக்கொண்டிருக்கிறது, ஒளிப் பூக்கள் (கவிதைத் தொகுதி), வானொலி நாடகத் தொகுதிகள், நாடக விருந்து, வறுமை சிரிக்கிறது, இந்த மண்ணின் மைந்தர்கள், கறுப்புக்குயிலின் நெருப்புக் குரல் (பாவேந்தரின் வாழ்க்கை வரலாறு), பாவேந்தர் வாழ்க்கை நினைவுகள்.

68-84 புதுவை வானொலித் துணை ஆசிரியர்; 84 சூன் முதல் சென்னை வானொலி நாடகத் துறை, தமிழ்ப் பேச்சுத் துறை உதவி ஆசிரியர். ஆண்டுதோறும் வானொலி நாடகங்கள் எழுதியும் அமைததும் பல்லாயிரவர் பாராட்டு பெற்றவர். 11 ஆண்டுகள் தமிழ் உரைப் பகுதியிலும், 8 ஆண்டுகள் சிறுவர் நிகழ்ச்சி அமைப்பிலும் இருந்து போற்றத்தக்க சாதனை புரிந்துளார். 'சர்க்கரைப் பந்தல்' 'கிள்ளைகளே கேளுங்கள்' குறிப்பிடத் தக்தன. காந்தி பாரதி நூற்றாண்டுச் சிறப்பு நிகழ்ச்சிகள் அமைத்துள்ளார்.

மறுமலர்ச்சிக் கவிஞர், இலக்கியப் பொழிவாளர் நாடகாசிரியர், நடிகர், இதழாசிரியர், பதிப்பர், சிறுகதை ஆசிரியர், முற்போக்கு இலக்கியச் சிந்தனையாளர், பகுத்தறிவுத் தொண்டர் என பல்திறம் சான்றவர். 76இல் தமிழ்க் கவிஞர் மன்றக் கேடயம், 82இல் பாரதி நூற்றாண்டு விழாப் பட்டயம்; 84இல் 'இயற்றமிழ்ச் செல்வர், 86இல் கவிதைக் காவலர் பட்டங்கள்; 85இல் வி. ஜி. பி. விருது பெற்றவர்.

வணக்கத்துக்குரிய பாவேந்தரின் ஒரே மகன், தகுதி மிகுதி படைத்த படைப்பாளர் எனப் பெருமிதப்படுகிறோம். மணம் 26-5-55இல், துணைவியார் சாவித்திரி. மக்கட்பேறு: கோ. செல்வம், பி. காம்; புதுவை வானொலி ஒலி பரப்பு அலுவலர். கோ.தென்னவன் (அச்சகப்பொறுப்பு), கோ. பாரதி, பி. ஏ; கோ.அமுதவல்லி. **புதுவை முகவரி:** 89, பெருமாள் கோயில் தெரு, புதுச்சேரி-605 001. **சென்னை முகவரி:** 23, கோபதி நாராயணசாமி தெரு, மயிலை, சென்னை-4.

**சக்தி சீனிவாசன்** : 16-10-1942. திருச்சி மாவட்டம் உடையார்பாளையம் வட்டம் உட்கோட்டை. கோவிந்தசாமி: தையல் நாயகி. எஸ். எஸ். எல். சி. ஆடுதுறை குமர குருபர சுவாமிகள் உயர் நிலைப்பள்ளி, புகுமுக வகுப்பு திருச்சி ஜமால்; இளங்கலை தமிழ் 65 அண்ணாமலையில். 66-68 தமிழ்நாடு காந்தி நினைவு நிதி- தத்துவப் பிரசாரகர் (திருச்சி தஞ்சைப் பகுதிக்கு), 68-74 திருச்சி காந்தி அமைதி நிறுவன செயலர்; 75 முதல் சென்னை வானொலியில் பணி.

திருச்சி தஞ்சை மாவட்டங்களில் காந்திய நெறி, காந்தியடிகளின் வாழ்வும் வாக்கும் பற்றிச்சொற்பொழிவு செய்துள்ளார்; கருத்தரங்கம், கவியரங்கம், கண்காட்சி சிந்தனைக் குழு, சர்வோதய பயிற்சி முகாம் நடாத்தி காந்தியம் பரப்பியுள்ளார். லங்கா ஜாதிக சர்வோதய சங்கமயா அழைப்பின்பேரில் இந்தியாவினின்று சென்ற ஐவர் குழுவில் ஒருவராக இலங்கை சென்று இருவார சுற்றுப் பயணம் செய்து சர்வோதய ஆக்கப் பணிகளை அறிந்துவந்தார்.

பாவேந்தரின் குயில் இதழ் ஆர்வத்தைத் தூண்ட தமிழ் பயில முனைந்தார். முதலில் கவிதை பின் சிறுகதை (முதல் கதை-இறுதிப் பரிசு); கட்டுரை படைத்துள்ளார். நூல்கள்: ஏன்? எப்படி?, சிந்தனை (சுயமுன்னேற்ற நூல்கள்); பாலபாரதி; வாழ்வளிக்கும் கல்வி, வளமூட்டும் செல்வம், கலையும்

கைத்தொழிலும் (முதியோர் கல்வி); தரிசனம் (சிறுகதை) இலக்கிய சிந்தனை பரிசு பெற்றது. 'என்னுடைய எழுத்து சமுதாய அநீதிகளை எதிர்த்துக் குரல் கொடுக்கும்; உயர்தரமான கலைவளர்ச்சிக்குக் கை கொடுக்கும்; மானுடத்தின் உயர்வுக்குப் பாடுபடும்' என்கிறார்.

வானொலியில் 'காந்தி அஞ்சலி' பாரதி வாக்கு, புதிய ஆத்தி சூடி, பிழையறப் பேசுதல், பாரதி பாதையில் போன்றன செய்துள்ளார். அடக்கமான ஆக்கப்பணி செய்து வரும் இவரின் **முகவரி:** 5, M. T. H. சாலை, திருமுல்லைவாயில், சென்னை-62.

**என். முருகன் :** (சேயோன்) எம். ஏ; பி. எட். பயின்று, மூன்றாண்டுகள் மேல்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணியாற்றியபின், திருச்சி வானொலி நிலையத்தில் ஒலிபரப்புப் பொறுப்பாளராக மூன்றாண்டுகளாகச் செயலாற்றிப் பதவி உயர்வு பெற்று இதுபோது சென்னை வானொலி நிலைய இளைய பாரத நிகழ்ச்சிப் பொறுப்பாளராகப் பணியாற்றி வருகிறார்.

உரைச்சித்திரம், கட்டுரை, நாடகம் போன்றன வல்லார். இலக்கியக் கட்டுரைகள் எழுதுவதில் ஏற்றம் சான்றவர். 'என் எண்ணத்தை எழுதுகிறேன்-கண்ணதாசன்' மாநில அளவிலான பரிசுபெற்று ஜெமினி சினிமாவில் வந்தது. 'தாலாட்ட மறந்த தமிழ்க் கவிஞன்' கட்டுரைத் தொகுப்பு இவர் கொடை. எழுத்து போன்றே, பேச்சிலும் பாங்கானவர்;. திருப்புகழ் தேவாரம் திருவாசகம் தற்கால இலக்கியம் பற்றி இனிக்க இனிக்க இலக்கியப் பொழிவாற்றி வருகிறார். நம்பிக்கை மிக்க நல்லிளைஞரான இவரின் **முகவரி:** 36, காரணீஸ்வரர் கோயில் தெரு, மைலாப்பூர், சென்னை-4. (76679).

**க. ஜெயங்கொண்டான் :** 14-1-1939. புதுக்கோட்டை மாவட்ட மேலைச் சிவபுரி. திரைப்படத்திலும் நிறைய நடித்து வருகிறார். கணீர் என்ற தொண்டைவளம் கம்பீரமாக அமைந்துளது. வெள்ளிமணி, பிள்ளையார்சுழி (சிறுவர் நாடகங்கள்) போன்றன படைப்புகள். **முகவரி:** Palace Road, Santhome, Madras-4.

**து. சந்திரன் :** திருச்சி வானொலி நிலையப் பேச்சு அமைப்பாளராக இனிதே பிறங்கி இதுபோது நாகர்கோவில்

நிலையத்தில் நற்பணியாற்றி வருகிறார். கணீர் என்ற குரலினர். கவிதைச் சிற்பி; கவியரங்குகளில் களை தட்டப்பாடுபவர். அதுபோல் பேச்சிலும் பட்டிமன்றத்திலும் பளிச்சிடுவார். திறமையைப் பாராட்டிப் போற்றும் திறனி.

## 51. தொலைக்காட்சி

தமிழகத்தில் கால்கொண்டு 12 ஆண்டுகள் ஆகின்றன. தொடக்க நிலையில் இருப்பினும், போதிய அளவு போற்றத் தக்க வகையில் தமிழுக்குப் பல்லாற்றான் பணியாற்று கின்றது; முத்தமிழ் வளர்ச்சியில் முனைந்து வருகிறது. இதற் கெனக் கட்டுப்பாடுகள் வரையறைகள் இருப்பதால், அமைந்த எல்லையில் ஆவன செய்து வருகிறது. ஒலியையே கேட்டு வந்த நமக்கு, ஒளியில் கண்டு வருவதும் ஒரு தனி அனுபவமே! இன்னும் செல்லவேண்டிய தொலைவு நிறையவுள்ளது. இந் நிலையில் இங்குப் பணியேற்றுப் பைந்தமிழ்ப் பங்காற்றும் சிலரது செந்தமிழ்ப் பணி சிந்தித்தல் நன்று.

**வெ. நல்லதம்பி** : 1-6-1936. திருச்சி மாவட்ட செட்டிய பட்டி. வெள்ளையன்: நாயகத்தம்மாள். 52இல் எஸ். எஸ். எல். சி, 55இல் டி. இ. எல். சி; 54-61 மணப்பாறை தொடக்கப் பள்ளி ஆசிரியர். பணியாற்றிக்கொண்டே தாமே பயின்று 59இல் மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர், 61இல் சென்னைப் பல் கலைக் கழக வித்துவான், 60இல் புகுமுக வகுப்பு (தமிழில் மாநில முதன்மை), 61-63 மணப்பாறை கழக உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர். 63 நவம்பர் தொடங்கி வானொலியில் சேர்த்தல்: 65செப் வரை நெல்லை வானொலி அறிவிப்பாளர், அக் முதல் 67 ஏப் வரை திருச்சி நிலையம்; பின் 69 பிப் வரை சென்னை நிலைய நாடக ஆசிரியர். 69 மார்ச் - 70 சூன் அமெரிக்கா சென்று Voice of America மொழிபெயர்ப்பாளர் அறிவிப்பாளர்; இடையே இங்கிலாந்து சென்று பி. பி. சி. யில் பேட்டி நிகழ்ச்சிகள் புரிதல். 70 சூலை—75 மார்ச் சென்னை வானொலி. என்றும் மாணவராக இலங்கும் இவர் பச்சையப்பன் மாலை நேரக் கல்லூரியில் பயின்று 74இல் தமிழில் முதுகலை பெற்றார். தொலைக்காட்சி நிலையம் தோன்றிய காலம் 75 ஏப்ரல் தொடங்கி தயாரிப்பாளராகத் திகழ்கிறார். அண்ணா மலை அஞ்சல் வழி 81 இல் பி. எட். பட்டமும் பெற்றவர். முனைவர் பட்டம் பெறவும் முனைந்துள்ளார்.

84 இல் இத்தாலி சுவிட்சர்லாந்து பிரான்சு மேற்கு ஜெர்மனி நாடுகட்குச் சுற்றுப் பயணம் செய்தார். 63இல் சிறுவர் இலக்கியப் பண்ணையில் பயிற்சி பெற்றவர். குழந்தை இலக்கியப் பணியாற்றியுள்ளார். அழகு நிலா (மழலையர் பாடல்கள்), சிறுவர்க்கேற்ற சிறுகதைகள், புதுமைக் கதைகள், புதையல், கண்ணே பாப்பா (கணிப் பொறி முதலான புதுப் பாக்கள்), அனந்தனின் ஆசை (விஞ்ஞானக் கருத்துக்கள் விரவிய புதினம்-தமிழக அரசின் முதற் பரிசு).

வாஷிங்டனில் வதிந்தபோது The American University இல் தொலைக் காட்சி நுட்பக் கல்வி கற்றார். எனவே தாம் பெற்ற அனுபவத்தையும் வைத்திழைத்து 'டி. வி. நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவது எப்படி?' என்ற மக்கள் போற்றும் நூல் படைத்தார். 'தொலைக்காட்சிக் கலை' தமிழக அரசின் பரிசினது. 74ஆம் ஆண்டுக்கான Wisdom கேடயமும், 85க்கான வி. ஜி. பி. இலக்கிய விருதும் பெற்றார். டி. வி. சார்பில் தமிழகத் திட்டக் குழு தெரிவாளர்; இந்தோ ஜெர்மன் தொலைக்காட்சிப் பணி மனையில் பங்கு பற்றியுள்ளார்.

இங்ஙனம் கதை கவிதை கட்டுரை நாடகம் நடிப்பு பேச்சு எனப் பல்துறைப் பெற்றியர்; முப்போதும் படிப்பதும் எப்போதும் எழுதுவதுமாக இருக்கும் இவர் இயல்பு ஏற்றுப் போற்றத் தக்கது. மணம் 58, மனைவி தனவதி; மும்மணிகள் அதியமான், செல்வன், திருவள்ளுவன்.

**எம். எஸ். பெருமாள்** : *11-7-1945.* திருநெல்வேலி. சுகி, சுப்ரமணியம். கோமதி சுப்ரமணியம். சென்னை வானொலி நிலைய நாடகப் பிரிவில் பணியாற்றி இதுபோது தொலைக் காட்சியில் பணிபுரிகிறார். ராணி சிறுகதைப் போட்டியிலும். கல்கி வெள்ளி விழாச் சிறுகதைப் போட்டியிலும் பரிசு பெற்றவர். பல்கலைக் கழக மாணவர்கட்கென அனைத்திந்திய வானொலியினர் நடாத்திய நாடகப் போட்டியில் முதற் பரிசு பெற்றவர். பாரதீய வித்தியா பவன் நடாத்திய கல்லூரி மேடை நாடகப் போட்டியில் முதற் பரிசு பெற்றது 'மானம் பொதுச் சொத்து'. யாரைக் கேட்டு வந்தாய் (நாவல்). இவரது கதை திரைப்படமாகவும் வந்துளது.

**தஞ்சைவாணன்** : தொலைக்காட்சியில் தொழிலாற்று கிறார். இவர்பற்றிக் கவிஞர் வரிசையில் கண்டறிக.

## 52. காப்பிய மணம்

18 நூற்றாண்டுகளாக எல்லாம் செய்யுளாகவே இருந்த நிலை; சிலம்பு தொடங்கிக் காப்பியமயமாகவே வரும் நிலையினை இலக்கிய வரலாறு காட்டி வருகின்றது. 19 தொடங்கி எல்லாம் உரைநடை மயமாக மாறி வந்திருப்பினும், விட்ட குறை தொட்ட குறையாக இந்த நூற்றாண்டிலும் காப்பியம் யாக்கும் துடிப்பு நீடித்து வருகிறது. ஆங்கில இலக்கியத்தில் காப்பியம் இயற்றும் நினைவு அடியோடு மடிந்து விட்டது என்றே கூறவேணும். பழமையில் பற்றுமிகக் கொண்ட (Conservative mindedness) அவர்களிடம் காப்பியமே வற்றி விட்ட போதும், நம்மிடம் காலமின்மை எனும் கடுநிலையிலும் காப்பியம் கட்டும் நினைவு இன்னும் இருக்கவே செய்கிறது.

இராவண காவியம் (புலவர் குழந்தை), மேகநாதம் (எஸ். கே. ராமராசன்), வள்ளல் வினோபாவின் வரலாற்றுக் காவியம் (சொ. அரியநாயகம்), பார்த்தனை வளர்த்த பாட்டன் (புரசை முருகேச முதலியார்), யூசுப் சுலைகா (சாரண பாஸ்கரன்), உதயம் (கலைவாணன்), காந்தி காதை (அரங்க சீனிவாசன்), மகாத்மா காந்தி மாகாவியம் (டி.கே. ராமனுஜ கவிராயர்), காந்தீயம்(வே. சந்திரசேகரன்), காமராஜ் காவியம் (மனசை சீரன்), கண்ணகி காவியம், பாஞ்சாலங் குறிச்சி வீர காவியம் (ஜெகவீரபாண்டியனார்) பாரத சக்தி மகாகாவியம் (சுத்தானந்த பாரதியார்), பூங்கொடி, வீரகாவியம்(முடியரசன் அண்ணா காவியம் (கருணானந்தம்), பெரியார் பெருங் காவியம் (பாரி).

இப்படித் தாமே காவியம் இயற்றியமை ஒரு புறமிருக்க, பிற மொழிக் காவியங்களைத் தமிழில் பெயர்த்துக் காப்பிய வகைக்குக் கணிசமான தொண்டு செய்யும் போக்கும் பிறந்துளது; அந்த அளவுக்குக் காப்பிய மோகம் இருந்து வருகிறது.

வெள்ள கால் சுப்பிரமணிய முதலியார் மில்டனின் Paradise Lostயும், கிருத்துவக் கம்பர் ஜான் பன்யனின் Pilgrims Progressயும் அ.கு. ஆதித்தர் ஹோமரின் Illiad, Odesseyயையும் தமிழில் பெயர்த்துள்ளமை நினைவு கூரத் தக்கது. இன்னணம் காப்பிய வாசனை இன்னும் நம்மைக் கடுமையாகப் பீடித்திருக்கும் போக்கினைக் கருதாமல் இருக்க முடியவில்லை!

## 53. சிற்றிலக்கியச் சாயல்

மூன்று நூற்றாண்டின் முன்னம் புற்றீசல்கள்போல் பொல பொலவெனப் பிரபந்தங்கள் புறப்பட்டன; புதர்களாக மண்டின. எல்லாம் ஒன்றே போல் இருந்தன; வார்த்தெடுத்தது போல் அமைந்தன; பெயரும் இடமும் புதுவனவே தவிர, பிற யாவும் அப்படியே மாற்றமின்றி அமைந்தன. வகைக்கு ஒன்றிரண்டே நின்றன; பிறயாவும் மறைந்தன, மறக்கப் பட்டன. அப்படி அறவே ஒதுக்கப்பெற்ற அச்சிற்றிலக்கிய போக்கும் மீண்டும் இந்த நூற்றாண்டில் பெருங்காயம் இருந்த பாண்டம்போல் தலைக்காட்டுவது சுட்டிக் காட்டவே வேண்டியுளது.

வள்ளற் பெருமான் **பிள்ளைத் தமிழ்** (அருட்கவி மா. க. காமாட்சி நாதன்), பெரியார் பிள்ளைத் தமிழ் (புலமைப் பித்தன்), எம். ஜி. ஆர். பிள்ளைத் தமிழ் (முத்துலிங்கம், புலவர் வேதா), கலைஞர் பிள்ளைத் தமிழ் (புலவர் வேதா), காமராஜ் பிள்ளைத் தமிழ், ம. பொ. சி. பிள்ளைத் தமிழ் (அமிர்தலிங்கன்), தமிழன் **உலா** (இராசை கி. அரங்க சாமி), பெரியார் உலா (இரா. செந்தாமரை), தமிழ்ச் செல்வி உலா, காமராசர் உலா (அ.கு. ஆதித்தர்). அண்ணா **கோவை** (புலவர் இரா. மணியன்), அண்ணாதுரைக் கோவை (அ.கு. ஆதித்தர்), கரந்தைக் கோவை (பாவலர் பாலசுந்தரம்), திராவிடப் **பரணி** (ராசை. கி. அரங்கசாமி), வங்கத்துப் பரணி (அரங்க சீனிவாசன்), இந்திப்பரணி (இளந்தேவன்), மாணாக்கர் **ஆற்றுப்படை** (சி. இலக்குவனார்), காக்கை விடு **தூது** (க. வெள்ளை வாரணனார்), கூட்டுறவுக் **குறவஞ்சி** (தஞ்சைவாணன் துரை சீனிவாசன்) இப்படி இன்று வரை சிற்றிலக்கியங்கள் சாகாமல் பிறந்து வருகின்றன!

## 54. புராணப் போக்கு

பெருங் காப்பியங்களும் சிறு காப்பியங்களும் தான் சிறுத்துப் போயினும் செத்துப் போகாமல் செந்தமிழில் இன்றும் தலைக் காட்டுகின்றன என்றால், புராணங்களும் புறப்பட்ட வண்ணம் இருக்கின்றன! புராணங்கள் என்றாலே பலகாத தூரம் ஓடும் நிலை; பகுத்தறிவு நாளில் வெறுத்து ஒதுக்கப்படும் இக்கட்டான சூழலிலும் புராணங்களும் தாம் பொன்றி விடவில்லை எனக் கட்டியங் கூறுவதைக் காணலாம்.

காந்தி புராணம், திலகர் புராணம், (அசலாம்பிகை அம்மையார்) இதற்கேற்ற காட்டுகளாக அமைகின்றன. காலம் மாறினும், புத்திலக்கியங்கள் பொலியினும், அவற்றினூடேயும் புராண வாடை அடிப்பதனை நம் இலக்கிய வரலாற்றில் காண முடிகிறது!

## 55. இலக்கிய இணைகள்

தமிழ்ப் பயின்ற இருவர் இலக்கிய தம்பதிகளாக இணையும் போக்கு காணப் பெறுகிறது; காதல் மணமும் கலப்புத் திருமணமுமாகப் பல அமைவது இலக்கியப் பணியோடு சமுதாய சீர்திருத்தப் பணியாகவும் அமைந்து விடுகிறது. ஒருவருக்கொருவர் ஆசிரியப் பணியிலும் தமிழ்த் தொண்டிலும் உறுதுணையாகவும் உரைகல்லாகவும் ஊக்குமுகமாகவும் உந்து சக்தியாகவும் அமைந்து தமிழுக்குப் பெரும் பயனாக விலங்கக் காண்கிறோம். தொழிலிலும் தொண்டிலும் துணைநின்று இணைந்து இன்றமிழ்ப் பணியாற்றக் காண்பது காண்தகு காட்சியாக, கனிவுதரு மாட்சியாக அமைந்து நந்தமிழுக்குப் பேறாகப் பிறங்குகின்றனர்.

| | | |
|---|---|---|
| 1. | ந. சஞ்சீவி 14-6-1953 | கிருஷ்ணா (கலப்பு மணம்) |
| 2. | சாலை | சாலினி (கலப்பு) |
| 3. | கு. திருமேனி 25-5-1953 | கமலா |
| 4. | விஜய வேணுகோபால் 65 | சரசுவதி (காதல்) |
| 5. | விரிசை அருளிளங்குமரன் | இந்திரா |
| 6. | சொல்விளங்கும் பெருமாள் | சக்தி பெருமாள் (காதல்) |
| 7. | நெடுஞ்செழியன் | சக்குபாய் (கலப்பு) |
| 8. | இராமசாமி (த.ப.க.) | சண்பகம் |
| 9. | நூர் மைதீன் (ஜமால்) | பானு (S.R.C.) |
| 10. | எம். மாரப்பன் | சந்திரோதயம் (கலப்பு) |
| 11. | க.ப. அறவாணன் 21-4-69 | தாயம்மாள் |
| 12. | இரா. இளவரசு | வேலம்மாள் (காதல்) |
| 13. | இரா. மோகன் 76 | நிர்மலா (காதல்) |
| 14. | நாராயணன் | |
| 15. | வைரமுத்து | பொன்மணி (காதல்) |
| 16. | மு. அப்துல்கறீம் | |
| 17. | தி. முருகரத்னம் 68 | மீனாட்சி |
| 18. | ப. அன்பு | (கலப்பு) |
| 19. | செயப்பிரகாசம் | |

| | |
|---|---|
| 20. வளவன் | மைதிலி |
| 21. இராம. சுந்தரம் | வசந்தகுமாரி (காதல்) |
| 22. சங்கர் | கலாராணி |
| 23. து. மூர்த்தி | சத்தியம் (காதல்) |
| 24. வீ. ராசமாணிக்கம் | (கலப்பு) |
| 25. பாஸ்கரதாஸ் | தரணி |

கணவன் மனைவியர் தமிழ் இலக்கியம் அயின்றவர் என்பதன்றி, ஒருவர் தமிழ் மற்றொருவர் ஆங்கிலம் என ஈரிலக்கிய இயைபினராகவும் இலங்கக் காண்கிறோம். திருவனந்தபுரம் **சி. ஜேசுதாசன்:** நாவலாசிரியை **ஹெப்ஷிபா** குறிப்பிடத்தக்கோர். முன்னவர் தமிழும் பின்னவர் ஆங்கிலமும் இரு மொழி இலக்கியப் பரிவர்த்தனைக்கு வழிகோலின. கணவர் ஆங்கிலக் கவிவாணர் தம் கவிகளைப் பெயர்த்தார்; மனைவி குயிற்பாட்டு போன்றனவற்றை ஆங்கிலப்படுத்தியுள்ளார். இருவரும் சேர்ந்து ஆங்கிலத்தில் அருமையான History of Tamil Litt. நூலினைப் படைத்துளர். சேலம் சாரதா கல்லூரி திருமதி பாரிஜாதம் தமிழ், கணவர் ஆங்கிலம். பாரதியாரின் பேத்தி **விஜய பாரதி** தமிழ், கணவர் **சுந்தரராசன்** ஆங்கிலம்.

இப்படி இலக்கிய இணைகள் அமைந்து நந்தமிழுக்கு நலம் பல நல்கியுள்ளனர்; வளம் பல சேர்த்துள்ளனர். இந்த இலக்கியத் தம்பதிகட்கு இன்றமிழ் உலகம் என்றும் நன்றி பாராட்டும் கடப்பாடுடைத்து.

## 56. சமுதாயப் பார்வை

எல்லாவற்றையும் அழகுக்காக நயத்துக்காகத் **துய்த்து** வந்த நிலை மாறி, எதனையும் குமுகாய நோக்குடன் **பார்க்கும்** போக்கு மேலோங்கி வருகிறது. இந்தப் படைப்பால் சமுதாயத்துக்கு என்ன பயன்? சமூகத்துக்குப் பயன்படாதவை கவைக்குதவாதவை எனக் கருதும் போக்கு கூடிவருகிறது. இவ்வகையில் பலர் இலைமறைக் காய் போல் இருந்து வருகின்றனர்; சிலர் துணிந்து எழுதியும் பேசியும் வருகின்றனர். இலக்கியத்தில் இந்தக் குமுகாய அணுகுமுறை (Socialogical approach) மிகு பயன் விளைத்து வருகிறது. படைப்பிலக்கியம் பாங்கு பெறுகிறது, புதிய பரிணாமம் எய்துகிறது; திறனாய்வும் புதுமை பெற்று வருகிறது. இத்துறையில் சிலரை எண்ணுதல் இன்றியமையாததாகும்,

**முகம்மது உசேன்** : 21-11-47. திருவிடைமருதூர். அப்துல் கறீம் : ஜெயினப் பீவி 64 இல் திருவாவடுதுறை ஆதீன உயர் நிலைப் பள்ளி இறுதி வகுப்பு; 71இல் குடந்தைக் கல்லூரித் தமிழ் இளங்கலை; 73இல் சென்னை மாநிலக் கல்லூரி முதுகலை. 73-75 திருச்சி ஜமால், 75-81 குடந்தை, 81-84 மன்னை, 85 முதல் குடந்தைக் கல்லூரி. இளவட்டத்தில் திறமான ஆசான், தீர்க்கமான திறனி, தற்கால இலக்கியத்தில் ஊற்றம் சான்றவர். புதுமை முற்போக்கு எண்ணத்தர். நூல்கள்: கருணைக் கடல் ஹாஜா நாயகம், முருகன் ஓர் உழவன், ஜெய ஜெய சங்கர ஆய்வுக் கட்டுரைகள். புதுமைப்பித்தன் கவிதைகள், தி. ஜா. பெண் பாத்திரங்கள். 'தஞ்சை வட்டார நாவல்கள்' 87இல் டாக்டர் பட்டம். 'உரையாசிரியர்கள்: உரை நூல்கள்-நூலடைவு' ஒரு சாதனை. வருங்காலப் பெருந் தொண்டராகப் பிறங்கும் புத்தொளியினர்.

**அ. மார்க்ஸ்** : 2-10-1949. பாப்பா நாடு. அந்தோணிசாமி. அமலோற்பவமேரி. 64 ஒரத்தநாடு அரசு உயர் நிலைப்பள்ளி இறுதி வகுப்பு, 68 சரபோஜி மன்னர் அரசு கல்லூரி பி. எசி. (இயற்பியல்) 70 மாநிலக் கல்லூரி எம். எசி. 71-72 பொன்னேரி, 72-78 சரபோஜி, 86-குடியேற்றம் கல்லூரி. 79 முதல் எழுதி வருகிறார். நோக்கம்: 'இன்றைய இந்தியச் சமுதாயத்தில் ஒரு சனநாயகப் புரட்சியை உருவாக்கும் நோக்குடன், தற்கால அரசியற் சமூகப் பண்பாட்டுப் பிரச்சினைகளை ஆராய்வதும், இன்றைய சமூக அசைவியக்கத்திற்கு (Solid Mobility) அடிப் படையாக அமைந்துள்ள நமது பண்பாடு மரபு ஆகியவற்றை வரலாற்றுப் பின்னணியில் சமூகவியல் நோக்கில் விளக்க முயற் சிப்பதும்'.

படைப்புகள் : பாரதி ஒரு சமூகவியற் பார்வை, சிற்றிலக் கியங்கள் சில குறிப்புகள், பாரதி மறைவு முதல் மகாகவிவரை, எது கவிதை?, நமது கல்விப் பிரச்சினைகள், படைப்பாளி வாழ்க்கை இலக்கியம், நமது மருத்துவ நலப் பிரச்சினைகள், பண்பாடும் புரட்சியும், பாசிசமும் புதிய கல்விக் கொள்கையும். மொழியாக்கம்: மார்க்சீய இலக்கியக் கொள்கை, பாரதி பாடல் களுக்குத் தடை. கட்டுரைகள்: நலிவாரும் மெலிவாரும் சேக்கிழாரும், மணிக்கொடியின் பரிணாமம்

**தி. சு. நடராசன்** : மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைப் பேராசிரியர். ஒப்பியல் நோக்கும் மார்க்சீயப் போக்கும் மிக்கவர். புகழ்சான்றவை: தி. ஜா. வின் நாவல்கள், இந்திரா

பார்த்தசாரதியின் நாவல்கள். தெரசா மகளிர் பல்கலைக் கழகப் பெருநூலில் 'தமிழ் நாவல்களில் சமூகப்பார்வை'. நாட்டுப்புற வியலையும் குமுகாய நோக்கில்அணுகும் ஆர்வலர்.

## 57. பொருள்முதல்வாதப் போக்கு

'பொருளாதார சமூக இயக்கங்களுக்கும் இலக்கிய ஆக்கத் திற்குமுள்ள நுண்ணிய உறவு, இலக்கிய வரலாற்று ஆய்வு நூல் களில் ஆராயப்படுவதில்லை. இலக்கியங்கள் எழுந்த காலப் பகுதிக்கும் அவ்விலக்கியங்களின் உள்ளடக்கம் உருவம் பண்பு மாற்றம் முதலிய வற்றுக்கும் உள்ள உயிரியக்கவியலான பிணைப்பு உன்னிப்பாக நோக்கப்படுவதில்லை. சடப் பொருளி லிருந்து உணர்வுக்கும், பின்னர் உணர்விலிருந்து சடப் பொருளுக்கும் உள்ள இடைநிகழ்வுகள் அறிவு நிலை உணர்த்தும் இந்த வகையில் ஆராய்வதே சிறப்பானது' (கைலாசபதி). அந்தவகையில் கைலாசபதி, சிவத்தம்பி, மௌனகுரு, சித்திர லேகா, கேசவன், மார்கஸ், எஸ் தோத்தாதிரி, ஆ. சிவ சுப்பிர மணியன் போன்றோர் முன்னணியில் முனைந்து நிற்கின்றனர்.

**கோ. கேசவன்** : *19-3-1945*. மதுரை. சேதுபதி உயர் நிலைப்பள்ளி 62; தியாகராசர் கல்லூரித் தமிழ் எம். ஏ, 68; அரசுக் கல்லூரிகள் பலவற்றில் பணியாற்றி இதுபோது ஈ. வெ. ரா. கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பிறங்கு கிறார். 'சி. சுப்பிரமணிய பாரதியாரின் படைப்புகளின் அரசியல் பின்னணி' (85) என்பது டாக்டர் பட்டத் தலைப்பு.

தந்தவை : மண்ணும் மனித உறவும், பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை, இயக்கமும் இலக்கியப் போக்குகளும், இலக்கிய விமர்சனம் ஒரு மார்க்சீயப் பார்வை, கதைப் பாடல் களும் சமூகமும், இந்திய தேசியத்தின் தோற்றம், நாட்டுப்புற வியல் ஒரு விளக்கம், சோசியலிசக் கருத்துக்களும்பார தியாரும், மார்க்சீயத் திறனாய்வுச் சிக்கல்கள்.

'தமிழிலக்கிய ஆய்வுலகில் வைரம் பாய்ந்த மார்க்சீய விமர்சாகராகத் திகழ்கிறார். கருத்துணர்வுகட்கு மூலாதாரமா யுள்ள பொருளாதார அடிப்படைகளையும் அவற்றின் அடி யாகத் தோன்றும் வர்க்க நிலைகளையும் நுணுகிக் கண்டறிந்து, இயக்கங்களுக்கும் இலக்கியத்துக்கும் உள்ள இலக்கிய ரீதியான தொடர்புகளை வெளிப்படுத்தும் அதிமுக்கியமான ஆய்வுப்

பணியை ஆற்றி வருபவர். ஆய்வு முறைமூலம் அவரது ஆய்வுகள் அகலம் பெற்றுவருகின்றன. விஞ்ஞான பூர்வமாக விளக்குபவர்' (கைலாசபதி) **முகவரி**: 9/4 வாணியர் தெரு, உறையூர், திருச்சி-3.

பொருள்முதல்வாதக் கண்ணோட்டத்துடன் தமிழிலக்கியத்தை நோக்குவதால் இலக்கியத்துக்கும் வாழ்வுக்கும் உள்ள நெருக்கம் தொடர்பு நன்கறிய முடிகிறது. வித்தியாசமான திறனாய்வுக்கு வழிவகுக்கிறது. இப்புதிய திறனாய்வு முறை (New Criticism) 1919இல் அரும்பியது.

**மாத்தமிழ் வளர்க்கும் மன்றங்கள்** ; கேள்வி வாயிலாகக் கன்னித் தமிழ் வளர்க்க ஊர்கள் தோறும், பட்டி தொட்டியெங்கணும் கழகங்கள் கிளைத்துள. அன்னை தமிழுக்குத் தம் மாலான பணிகளைச் செய்து பைந்தமிழ் காத்திட மன்றங்கள் பிறந்த வண்ணமுள. தங்களைத் தலைவர் செயலர் என முன்னிறுத்தித் தோன்றினாலும்; முத்தமிழ் முன்னேற்றத்துக்கு முனைந்து தொண்டாற்றுகின்றனர். பல தம்மைச் சுற்றி இயங்கினும், சில செந்தமிழ் சிறக்க சீரிய பணியாற்றி வருகின்றன. மன்றங்களால் முந்துதமிழ் தமிழ் கூறு நல்லுலகில் தழைத்து வருவதும், மக்களிடையே தமிழ் உணர்வினை ஊட்டி வருவதும் காணமுடிகிறது. தலைநாட் போன்றே ஊக்கம் குன்றாது - உழைப்பு குறையாது வியத்தகு முறையில் சேவை செய்து வருவது வந்தனைக்குரியது. அத்தகு பெருமன்றங்களின் அரும்பணிகளை - அரிய சாதனைகளை எண்ணுவதும் ஏத்துவதும் இன்றியமையாததாகும். வாழ்விக்க வாழ்த்துவமே!

**வட்டத் தொட்டி** : 1924. ரசிகமணி டி. கே. சி.யின் வண்ணார்பேட்டை வீட்டின் முன்கட்டு ஓர் அகன்ற கூடம்; அதன் நடுவே வான வெளியுள்ள வட்டவடிவத் தொட்டிக் கட்டு; குறுக்களவு 20 அடிதான். அதனுள்ளே ஞாயிறு மாலை 5 மணிக்கெல்லாம் கூடுவர். சென்னைப் பல்கலைக் கழகப் பட்டதாரிகள் தான் உறுப்பினர்கள். இருபது வயது இளைஞர் முதல் எண்பது வயது இளைஞர்கள் குழுமுவர். தலைவர் டி. கே. சி. கம்பன் காவியம் முறையாகப் படிக்கப் பெறும்.

உறுப்பினர்கள் : எஸ். வையாபுரிப் பிள்ளை, அவருடன் பிறந்த எஸ். சங்கரலிங்கம் பிள்ளை; பி. ஸ்ரீ. ஆச்சார்யா, அவர் சகோதரர் ஏ. என். மகரபூஷணம் அய்யங்கார், வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார், திவான் பகதூர் பி. ஆவுடையப்ப

பிள்ளை, ஆண்டியப்ப பிள்ளை, ரா. பி. சேதுப் பிள்ளை, ஏ. வி. முத்தையா பிள்ளை, அ. சீனிவாச ராகவன், ஆ. முத்து சிவன், கு. அருணாசலக் கவுண்டர், தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், ஜஸ்டிஸ் மகராஜன், எம். ஆர். எம். சுந்தரம், மீ. ப. சோமு, எம். எஸ். சுப்பையாமுதலியார், ஆ. கு. அதித்தர். ராஜாஜி, கல்கி, பெ. ந. அப்புசாமி, கே. பாலசுப்பிர மணிய அய்யர், வி. வி. ஸ்ரீனிவாச அய்யங்கார் அவ்வப்போது வருகை தருவர்.

குற்றாலத்தில் சாரல் பருவம் தொடங்கியதும் உடல் நலம் பெறத் தமிழன்பர் அங்கே கூடுவர். கம்பன் மணம் கமழும். தொழில் வேறுபாடும் அரசியல் மாறுபாடும் கொண்டவர்கள் தாம் என்றாலும் தமிழ்க் கவித் திளைப்பும் கம்பக்கவி நினைப்பும் பேதம் மறந்து ஒன்றச் செய்யும். இடையிடையே ரசிகமணி வீட்டுச் சிற்றுண்டி - சிறப்பாக தோசை செவிக்குண வில்லாதபோது வழங்கப் பெறும்.

டி. கே. சி. கம்பனை அணுகுமுறையும் அனுபவிக்கும் வகையும் - பிறரை அனுபவிக்கச் செய்யும் பாங்கும் தனி. தேனுண்ணும் வண்டாவர். டி. கே. சி. படிக்கும் போதே அப் பாட்டுக்கு ஒரு துடிப்பு உண்டாகும்; உணர்ச்சி ஓங்கும். அவரது எடுப்பும் தொடுப்பும் முடிப்பும் தனியானது.

கம்பன் திருநாள் கொண்டாடினார்; டி. கே. சி. சென்னை சென்றார். பின் 35இல் வந்ததும் பட்டதாரிகளே உறுப்பினர் என்ற கடுமை தளர்த்தப் பெற்றது. பள்ளி மாணவரும் பங்கு பற்றினர். சென்னையில் வதிந்தபோது பெ. ந. அப்புசாமி வீட்டில் வட்டத்தொட்டி நிகழ்ந்தது ரசிகமணியின் மறைவின் பின் திருமதி ராஜேஸ்வரி நடராசன் அவர்கள் சென்னையில் தடுமையாதீனப் பிரசார நிலையத்தில் நடாத்தி வந்தார். ஜஸ்டிஸ் மகராஜன் தலைவராகத் திகழ்ந்தார். தமிழிலக்கிய வரலாற்றில் கம்பன் காவிய வாழ்வில் வட்டத்தொட்டி ஓர் வற்றா ஊற்று!

**தென்காசி திருவள்ளுவர் கழகம்** *(1927).* திருப்பதிசாரம் திருக்குறள் அட்டாவதானி தி. ப. சுப்பிரமணியதாசர் தூண்டு தலின் பேரில், டி. எஸ். குத்தாலிங்கம் பிள்ளை, வழக்கறிஞர் ஆ. சி சண்முக நயினார் பிள்ளை, டி. ஆர். மீனாட்சி சுந்தரம் பிள்ளை, கொழும்பு ஆ சங்கரன் பிள்ளை, கானுகோ நமசிவாயம் பிள்ளை, வி. எஸ். சண்முகநாத முதலியார் போன்றார் துணையுடன் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்

பிள்ளை தலைமையில் தோன்றியது. நோக்கம் : திருக்குறளைப் பரப்புவதும் வாழ்வில் கடைப்பிடிப்பதும்.

அனைத்துச் சமயத்தினரும் அரசியல்வாதிகளும் பங்கு கொள்ளும் சமரச மன்றமாகத் திகழ்கிறது. ஆண்டுதோறும் வைகாசி அனுச நாள் தொடங்கி திருக்குறள் விழா நடாத்துகிறது. நாளும்கூடி சமயம்-தமிழ் தொடர்பாக அளவளாவுகின்றனர். ஞாயிற்றுக் கிழமைகளில் வள்ளுவர் பற்றிப் பேசி வண்டமிழ் உணர்வினை வளர்க்கின்றனர்.

குறளை இசையோடு சொல்லி வருவதோடு, தேவாரப் பாடசாலை மூலம் தமிழிசை வளர்த்து வருகிறது. இதற்கு வைப்புநிதி ஏதுமில்லை; மக்களின் நன்கொடையே. கழகம் வளர்த்தோர் : தலைவர்கள் வி. எம். சோமசுந்தரம் பிள்ளை, டி. எஸ். சங்கரநாராயண பிள்ளை, அ. மகராசபிள்ளை, பி. யு. மாணிக்கவாசகம் பிள்ளை, டி. கே. தீர்த்தாரப்ப முதலியார், ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை, கிருஷ்ணாபுரம் மிட்டாதார் வி. எஸ். மணி. செயலர்கள்: தெ. முத்துக்குமாரசாமிப் பிள்ளை, ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை, ரா. சி. ஆவுடையப்ப பிள்ளை, கி. பால சுப்பிரமணிய பிள்ளை, அ. கிருஷ்ணசாமி நாயுடு, எஸ். அருணாசலம்பிள்ளை, எஸ். செண்பகம் பிள்ளை, சொ. சுப்பிரமணிய பிள்ளை, ப. குருசாமிப் பிள்ளை, ந. குத்தாலிங்கம். 45 முதல் கழக வளர்ச்சியே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றும் திருக்குறள் செல்வர் **தெ. கணபதியப்பன்**, தேனி எனச் சுழன்று செயற்படும் செயலர் அருட்செல்வர் ஆ. சிவராமகிருஷ்ணன் இருவரும் குறிப்பிடத் தக்கோர்.

52 இல் **வெள்ளிவிழா**. மலர் வெளியானது. தமிழவேள் பி. டி. ராசன், ஏ. சி. பால் நாடார், ரா. பி. சே, கம்பன் அடிப்பொடி, குன்றக்குடி அடிகளார் கலந்து கொண்டனர். 69 இல் **வள்ளுவர் ஈராயிரம் ஆண்டு விழா**. கோ. சுப்பிரமணிய பிள்ளை, திருக்குறளார், தமிழண்ணல், பொள்ளாச்சி மகாலிங்கம், குன்றக்குடி அடிகளார் பங்கேற்றனர்; முப்பால் மலர் வெளியானது. 77 இல் **பொன்விழா**. முத்தமிழ்க் காவலர், அடிகளார், திருக்குறளார், மதுரை எஸ். சோமசுந்தரம் சிறப்பித்தனர்; பொற்குவியல் மலராகப் புதுமணம் பரப்பியது. பிற வெளியீடுகள்; திருக்குறள் சுவடி, வள்ளுவர் வாக்கு (பல்கலைக் கழகப் பாட நூலானது). 87 இல் மணிவிழா.

தேசமெல்லாம் திருக்குறள் பரவும் வகை செய்த குறளோடு செந்தமிழும் வளர்த்த-புதிய திருக்குறள் யுகம் பிறக்கச் செய்த-தமிழுக்கு ஊறு நேர்ந்த போதெல்லாம் புயலென எழுந்து எரிமலையெனக் குமுறி அரசுக்குக் கண்டனத் தீர்மானங்கள் தொடுத்த - திருக்கோயில்களில் தமிழ் வழிபாட்டிற்கு உதவிய திருக்குறள் நாட்டில் பரவியமைக்கு **முதற் காரண**மாய் அமைந்த **தாய்க்கழகம்** - ஒரு பல்கலைக் கழகம்.

**கம்பன் கழகம், காரைக்குடி** : *4-4-1939*. நிறுவனர் **சா. கணேசன்**. பங்குனி மகம், பூரம், உத்திரம் மூன்று நாட்களில் கம்பன் திருநாள் கொண்டாடுகிறது. ஒழுங்கும் கட்டுக் கோப்பும் விருந்து புரத்தலும் நாடறிந்தவை. கருத்தரங்கம், கவியரங்கம்; பட்டி மண்டபம், மேல் முறையீடு, நற்றமிழ் முற்றம், இவர்கள் சந்தித்தால் போன்ற பல்வேறு பயனான நிகழ்ச்சிகள். 41 ஆண்டுப் பணியால் பல்லாயிரவர் கம்பராமாயணத்தைப் பயின்று தோயத் தலைப்பட்டனர். கம்பத் திறம் பேச - எழுத ஒரு பெரும் படையே உருவாகிவிட்டது. சமயக் காப்பியமாகக் கருதாது, இலக்கியமாக எச்சமயத்தாரும் ஏற்றுப் போற்றச் செய்துவிட்டது. கம்பன் பாடல்கள் மட்டுமே கொண்டு நாட்டிய நிகழ்ச்சி நிகழ்த்தியது. கம்பனுக்கு மணி மண்டபம் கட்டியது. கோவை தொழிலதிபர் ஜி. கே. சுந்தரம், ராம. குழந்தையன் செட்டியார், பழ. பழநியப்பன் (கம்பன் அடிசூடி) போன்றார் தூண்களாவர். **முகவரி** : காரைக்குடி-623 002.

**மதுரைத் திருவள்ளுவர் கழகம்** : *20-5-1941*. தோற்றுவித்தவர் தென்காசி திருக்குறள் அட்டாவதானி தி. ப. சுப்பிரமணியதாஸ். மதுரைக்கு அழைத்துத் தோற்றுவிக்கத் தோன்றாத் துணையாக இருந்தவர் கி. பழநியப்பன் (ப. நெடுமாறன் தந்தை). தமிழவேள் பி. டி. ராசன் தலைமையில் தொடங்கப் பெற்றது. மீனாட்சி கோயில் உள்ளேயே இது இயங்கி வருகிறது. கழக ஆசிரியராக அமைந்தவர் திரு. மீ. கந்தசாமிப் புலவர். திருக்குறள் வகுப்புகள்-கருத்தரங்குகள், இலக்கிய மாநாடுகள், நூல் வெளியீடுகள் எனப் பல்வேறு பணிகள் இயற்றி வருகிறது. இலக்கியப் போட்டிகள் - கருத்தரங்குகள் தமிழ் விழாக்கள், திருக்குறள் தேர்வுகள் ஆண்டுதோறும் நடத்துகின்றது. இக்கழகத்தில் பேசாத பெருமக்களே இல்லை எனலாம். 67 சூலைத் திங்கள் 5-10 நாட்களில் **வெள்ளி விழா**வினை ஆறுநாட் பெருவிழாவாகக் கொண்டாடியது. அழகர் சாமி, செல்வ கணபதி, சுப. ராமச்சந்திரன், சண்முகவேலன் குறிப்பிடத்தக்கோர்.

**கி. பழநியப்பர் :** 1908 நீண்ட ஆண்டுகள் இதன் தலைவராகத் திகழ்ந்து பின் புரவலராக அமைந்துளார். மதுரைத் தமிழ்ச் சங்கச் செயலராகவும் சிறந்துளார். விவேகானந்த அச்சக உரிமையர். சைவமும் தமிழும் இரு கண்கள் எனக் கொண்டவர். குறள்நெறி போற்றும் அறநெறியாளர், விருந்தோம்பும் வளமையர், இனியவர், சான்றாண்மை மிக்க சால்பர். 'அறநெறி அண்ணல், சைவ சமய சேவாமணி' என்றேத்தப் பெறுபவர், 'உலக சமயங்கள்' எனச் செந்தமிழில் இவர் எழுதிய கட்டுரைத் தொடர்கள் மிகு சிறப்பின. 68 இல் மணிவிழாவும் 83 இல் பவள விழாவும் நிகழ்ந்தன. இத்தகு மீமாந்தரைத் தந்தையாகப் பெற்ற **ப. நெடுமாறன்** நெடுமாறரே!

**ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றம் சென்னை :** 20-1-1945 ஒய். எம். சி. ஏ. கிளையின் தமிழ்ப் பிரிவாக அமைவது. அமைப்பாளரில் ஒருவர் அன்புப் பழம் நீ. சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை 'பட்டிமன்றம்' எனப் பெயர் சூட்டி நிறுவினார். வாரந்தோறும் செவி விருந்தளிக்கும் செழுந்தமிழ் மன்றம் என்ற சிறப்பினை பெற்ற கீர்த்தி மிக்கது. மேடைத் தமிழின் மேன்மைக்குத் தொடர்ந்து தொண்டாற்றி வரும் தகுதியது.

வாரக் கூட்டங்கள், தொடர் சொற்பொழிவுகள்; வேத நாயகர், திரு. வி. க, பாரதி, நினைவு நாட்கள்; முத்தமிழ்க் காவலர் கி ஆ. பெ. வி. பிறந்தநாட்கள், முத்தமிழ் மாநாடு நூல் வெளியீடுகள், கருத்தரங்கம் எழுத்துரைகள் போன்றன இயற்றி வருகிறது. கடந்த 40 ஆண்டுகளாக - உயர்நீதி மன்றம் எதிரே.

**அன்புப் பழம் நீ :** (சிர. பழநியாண்டி) 13-12-1924 சிதம்பரம். தமிழரிடையே அன்புப் போர், பேச்சுக்கலை, காண்டேகர் மணி மொழிகள், அண்ணாவின் சொற்செல்வம், கடிதக் கலை இவர் கொடைகள். மயிலை சீனி வேங்கடசாமி, சிலம்பொலி செல்லப்பன், அவ்வை நடராசன், மர. சண்முக சுப்பிரமணியம் போன்றார் அருந்தொண்டு அருமை. **முகவரி :** 93. திருப் பள்ளித் தெரு, சென்னை - 79 (519424).

**ஊ. ஜயராமன் :** 11-10-1929. பயந்தவை : மயிலை சீனி வேங்கடசாமி வரலாறு. இந்தியக் கதைகள். இளைஞர் அறிவுக் கதைகள், திருக்குறள் வழங்கும் செய்தி (அ. சக்கரவர்த்தி நயினார்), தமிழ் எழுத்தாளர் சங்கச் செயலர் பொருளராக இருந்தவர். **முகவரி :** 233. லிங்கச்செட்டி தெரு, சென்னை-1.

**கெ. பக்தவத்சலம்** (*12-12-39*) அவர்களின் செயற்றிறம் அயரா உழைப்பு, குழைவும் கனிவும் மிக்க பணி பாராட்டிப் போற்றற்குரியது, செங்கை மாவட்ட கெருகம் பாக்கத்தில் தோன்றிய இவர் சென்னை மாநகராட்சியில் மேற்பார்வை யாளர். வேதநாயகர் என்ற நூல் வரைந்துளார். இனியவர். செயலாளர் என்ற சிறப்புக்குரியவர். **முகவரி** 29, நம்மாழ்வார் தெரு, சென்னை-1.

**நடராஜர் கல்விக் கழகம்**: *1946*, திருவல்லிக்கேணியில் திகழ்வது. நாற்பது ஆண்டுகளாக நற்றமிழ்ப் பணி நன்காற்றி வருகிறது. அழகிய படிப்பகம் அருமையான நூலகம் நடாத்து கிறது. ஆண்டுதோறும் விழாக்கள். புலவர்கட்கு விழா எடுத்துப் பெருமை புரிகிறது. என். எஸ். கிருஷ்ணனுக்குக் 'கலைவாணர்', ஆர். எஸ், மனோகருக்கு 'கலைமணி' பட்டங்கள் வழங்கிப் பெரும்பணி ஆற்றுகின்றது. கழகம் சிறக்கப் பணியாற்றிய ர. நடராசன் தொண்டு பாராட்டுக் குரியது. **முகவரி** : தானப்ப முதலித் தெரு, சென்னை-5.

**பாரதி கலைக் கழகம்**: *1951* அக்டோபர். சுராஜ், பஞ்ச நதீஸ்வரன் போன்ற பதின்மர் கூடித் தொடங்கியது. அரசியல் கலப்பற்ற கலை இலக்கியப் பணி புரிவது; பாரதிபால் பக்தி பூர்வமான ஆர்வம் காட்டுவோரே உறுப்பினர். வாரம் ஒரு நாள் தொடர் பொழிவாகக் கம்பராமாயணம் நாலடியார் முருகாற்றுப்படை இலக்கிய வகுப்புகளும்; குயிற்பாட்டு பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு விளக்க வகுப்பும், திங்கள் ஒரு கூட்டமும் நிகழ்த்திற்று.

*67* திசம்பர் தொடங்கி ஒவ்வொரு திங்களும் ஒவ்வொருவர் வீட்டில் கவியரங்கம்(Poet's meet); விருப்பம் போல தலைப்பில் பாடலாம். மாலையில் சிற்றுண்டியுடன் கூடினர்; பின் இரவு விருந்துடன் நிகழ்கிறது. ஒவ்வோர் உறுப்பினர் தம் பொறுப் பில் செலவினை ஏற்பர். இதுவரை 225 கவியரங்குகள் நிகழ்ந் துள. சிற்சிலபோது தங்கள் வீட்டுத் திருமணம்-சிறப்பு நிகழ்ச்சிகளோடு இணைத்தும் நடாத்துகின்றனர். கவியரங்கு வெள்ளிவிழா 70லும், பொன் விழா 72லும் நிகழ்ந்தன. இன்று 50க்கும் மேற்கட்ட கவிஞர்கள் உளர். கவிமலர் கவிதைத் தொகுதிகளும் வெளியிடுகின்றனர்.

ஆண்டு விழா *3* நாள் நடக்கும். முதல் நாளில் (உறுப் பினர்) கவிஞரில் சிறந்தார்க்குக் **கவிமாமணி** எனும் விருது

வழங்குகின்றனர். அவரை ஊர்வலமாக அழைத்து வந்து பூரணகும்ப மதிப்புடன் வரவேற்றுப் பெருமைப்படுத்து கின்றனர். தமிழழகன், ரா. பு. தங்கராஜன், நா. சீ. வரத ராஜன், மஹி, ஐயாறப்பன், இலந்தை த. இராமசாமி, சிதம்பரம் சுவாமிநாதன், சிறுவயல் செல்லப்பன், இளையவன், மதிவண்ணன், இளந்தேவன், போன்றார் கலைக் கழகக் கவிமாமணிகள்.

76இல் வெள்ளி விழா நடைபெற்றது. பாரதியின் முருகன் பாட்டு பொறித்த கல்லினை, சிவ சுப்பிரமணிய ஆலயத்தில் பதித்தது ஒரு சாதனை; ஆண்டு மலர்களும் சின்னஞ்சிறு வெளி யீடுகளும் அவ்வப்போது வெளியிடுகின்றனர்.

77 இல் கிளை முயற்சியாக **பாரதி சிந்தனை** கிளைத்துளது. திங்கள்தோறும் மூல நாளில் பாரதி கவிதை-கட்டுரைகளைக் கூடிப் படித்துச் சிந்திக்கின்றனர். பாரதி நூற்றாண்டினை யொட்டி சின்னஞ்சிறு சீரிய 8 பக்க வெளியீடுகளையும் வழங் கினர். பாரதி புகழ் பாடிய பாரதி பக்தர்கட்கு-பித்தர்கட்கு 'பாரதி அன்பர்' எனும் பட்டயம் தந்து பெருமைப்படுத்தினர்- பாரதி நூற்றாண்டின்போது.

பாரதியின் பாஞ்சாலி சபதத்தைக் கலைக் கழக உறுப்பினர் கள் நாடகமாக்கி நடித்து நற்சாதனை புரிந்துளர்; அற்புதமாக அமைத்து அனாயாசமாக நடித்து பாரதிக் கனல் மூட்டினர். வானொலியும் தொலைக் காட்சியும் ஒலி-ஒளி பரப்பின. உறுப்பினர் அனைவரும் மணிகள்; பாரதி புகழ் பாடுவதும்-பரப்புவதுமே தங்கள் ஒரே உயிர்-உயர் நோக்கமாகக் கொண்டு உழைக்கின்றனர். கட்டுக் கோப்பும் கண்ணியமும் தன்னலம் மறந்த பாரதித் தொண்டும் ஆற்று வருகின்றனர். இவற்றுக் கெல்லாம் முதுகெலும்பாக-கொழு கொம்பாக அமைபவர் இருவர்.

**சுராஜ்:** (செளந்தரராஜன்) தஞ்சை மாவட்ட முள்ளூர். வைணவமும் பாரதியும் இரு கண்கள். சமயமும் செழுந் தமிழும் வல்ல அறிஞர். கம்பனில் கரை கண்டவர். பல்கலைச் செல்வர், பெருகிய ஆர்வத்தர். 'சொல்லின் செல்வர் சுராஜ்' எனச் செல்லமாக அழைப்பர்; உணர்வினைச் சுண்டி இருக்கும் சொல்வல்லார். சார்பதிவாளராகப் பணிபுரியும் சால்பர். உறுதியும் கண்டிப்பும் மிக்கவர். பாரதி 'புதிய ஆத்திச் சூடி விளக்கம்' இவரது அருங்கொடை. பாரதியாரைத் தவிர வேறு

பின்வந்த எவரையும் மகாகவி என ஒப்பா பாரதி நெறியினர். தினமணியில் நூல் மதிப்புரையும் கட்டுரையும் தீட்டுவார். கலைக் கழகத் தேரினை இயக்கும் வலவர்-வல்லவர். தலைவர். **முகவரி**: 50, மசூதித் தெரு, சைதாப்பேட்டை, சென்னை-15 செயலர்: ஐயாறப்பர் (பஞ்சநதீசன்) பார்க்க 676.

**பாரதி இளைஞர் சங்கம்**: 2-10-1953. அண்ணல் காந்தி பிறந்த நாளில் திருவல்லிக்கேணி அக்பர் சாயபு தெருவில் தொடங்கப் பெற்றது, தோற்றுநர் வி.எஸ். மணி. மகாகவி யின் புகழை-கவிதை உணர்ச்சியை-தேசீயத்தை அனைவர் உள்ளத்திலேயும் ஊடுருவச் செய்யும் நோக்கினது.

54இல் பிரஞ்சிந்திய விடுதலைப் போரை ஆதரித்தது. கல்கி மறைவுக்கு இரங்கற் கூட்டம் நடாத்தி அவர் பெயரால் நூலகம் தொடங்கிற்று. 55-57 வட தென் எல்லைப் போராட்டம், வேங்கட மீட்சிப் போர், தமிழ்நாடு பெயர் மாற்றக் கிளர்ச்சிகளில் பெரும் பங்கு கொண்டது; ம.பொ.சி.க்குத் துணை நின்றது. 61 வரை பாரதி நினைவு நாளைக் கொண்டாடி, அமரத்துவம் அடைந்த நாளினைக் கொண்டாடுவதைக் காட்டிலும், பிறந்த நாளினைப் போற்று தலே ஏற்றது என்றுணர்ந்து அவ்வழக்கத்தினை முதன்முதல் ஏற்படுத்தி 62 தொடங்கி கொண்டாடி வருகிறது. 111க்கு மேற்பட்ட எழுத்தாளர்களிடம் கையொப்பம் பெற்று அரசுக்கு அனுப்பி ஆற்றுப்படுத்தியது. 2 ஆம் உலகத் தமிழ் மாநாட்டின் போது பாரதி சிலை நிறுவப்பட்டதிலிருந்து சிலைக்கு மாலை யிடும் வழக்கத்தை முதன்முதல் இச்சங்கம் ஏற்படுத்தியது; பாரதியார் உறைந்த இல்லத்திலிருந்து ஊர்வலமாகச் சென்று கடற்கரை பாரதி சிலைக்கு மாலை அணிவித்து வருகின்றது. 69 இல் காந்தி நூற்றாண்டு விழா கொண்டாடியது. சீன ஆக்கிரமிப்பின்போழ்து பாரதி பிறந்த நாளினை தேசிய ஒருமைப்பாட்டு விழாவாகக் கொண்டாடிற்று.

'வீட்டுக்கு வீடு பாரதி' எனும் திட்டத்தின்கீழ் 64இல் ஆளுநர் மாளிகை உட்பட 1121 இல்லங்களில் பாரதி படம் திறக்கச் செய்தது. 65இல் பாரதி வதிந்த வீட்டில் 'பாரதி வாழ்ந்த இல்லம்' எனும் சலவைக்கல் பதித்து பாரதி படத்தைத் திறந்தது. அதே யாண்டில் தேசபக்தர் நினைவுச் சொற்பொழிவு நிகழ்த்தி, எப்போது கேட்பினும் 100 தேசச் செம்மல்கள் பற்றிப் பேச 50 இளைஞர்கட்குப் பயிற்சியளித்தது. 68 முதல்

மகாகவிக்கு 11 நாள் விழா தொடர்ந்து கொண்டாடும் வழக்கத்தை உருவாக்கிற்று; இதனைப் பாராட்டி கு. அழகிரி சாமி 'பாரதியும் பதினொன்றும்' எனச் சிறப்புக் கட்டுரை மித்திரனில் வெளியிட்டார். 70இல் 'மாதமொரு பட்டி மண்டபம்' எனும் இயக்கம் தொடங்கி 112க்கும் மேலான பட்டி மண்டபங்கள் நடாத்தித் தனியே 'பட்டி மண்டபக் கலைக் கழகம்' தோற்றுவித்தது. 71 இல் பட்டி மண்டபத்திற் கென மாநாடு நடத்திய பெருமை இச் சங்கத்திற்கே உண்டு; இதுவரை 5 மாநாடுகள் நடந்துள; 73இல் ஒருவார பட்டி மண்டபம் நிகழ்த்திற்று.

71இல் பாரதியின் 50 ஆவது நினைவு நாளை பாரதியின் அமர வாழ்வு பொன்விழாவாக எடுத்து, முதன்முதலாக ஒரே சமயத்தில் 50 கவிஞர்கள் 50 தலைப்பில் கவியரங்கம் காணச் செய்தது. 78 இல் 'இன்னரு நீர் கங்கையாறெங்கள் ஆறே, இங்கிதன் மாண்பிற்கு எதிரது வேறே' என்ற பாரதியின் வாசகத்தை வாரணாசியில் கங்கைக் கரையில் பதித்தது-பாரதி உட்கார்ந்த இடத்தில்! 79இல் நீலகிரி தொட்டபெட்டா சிகரத் தில் 'காக்கை குருவி எங்கள் ஜாதி நீள்மலையும் எங்கள் கூட்டம், நோக்கிய திசையெலாம் களியாட்டம்' எனும் வாசகம் பொறித்த கல்லைத் தமிழக அரசின் இசைவோடு பதித்தது. 79இல் பாரதி இசைவிழா 5 நாள் நடத்திற்று. திருச்சி உச்சிப் பிள்ளையார் கோவிலில் விநாயகர் நான்மணிப் பாடல்கள் சிலவும், பம்பாய் மகாலட்சுமி கோயிலில் இலக்குமி பாடல்களும் பொறிக்கப்பட்டன.

இச்சங்கம் அறிமுகப்படுத்திய பேச்சாளர்கள் பலர்; பட்டம் அளித்துப் போற்றிய பெருமக்கள் பலர். பாரதி முழு நாள் விழா என்றேற்படுத்தி ஒரே நாளில் 115க்கும் மேற்பட்ட கவிஞர் அறிஞர்களைப் பங்கு கொள்ளச் செய்தது. 78இல் 'பாரதி ஆராய்ச்சி மண்டம்' தொடங்கி இதுவரை 30மண்டபங் கள் கண்டது. மலர்கள் பல வெளியிட்டுளது. 56லேயே பொங்கல் நாளினைத் தமிழர் திருநாளாகக் கொண்டாடிக் காட்டிற்று. 66முதல் பாரதி பேச்சு பாட்டு கவிதை கட்டுரைப் போட்டிகள் நடாத்திப் பரிசளிக்கின்றது. இப்படி 34 ஆண்டுக ளாகச் சலியாது பாடுபட்டுப் பாரதிக்குப் பெரும் பணி ஆற்று பவர்கள் 'பாரதி இரட்டையர்கள்':

**பாரதி காவலர் கே. ராமமூர்த்தி** : 6-1-1937. நெல்லை கல்லிடைக்குறிச்சி. 58 முதல் பாரதி இளைஞர் சங்கத் தலைவர்.

படைப்பு : தமிழ்நாடு டைரக்டரி யார் யார்?, பாரதி பிறக்கட்டும், கவிஞர் நெஞ்சில் நேரு, சித்திர காந்தி, பாரதி நிலா போன்றன. உரியர்கட்கு உடனுக்குடன் விழா பாராட்டு எடுப்பதில் முதன்மையர். செயல்படு சிந்தையர். ஒருங்கிணைப்பில் வல்லவர். கவிஞர், எழுத்தாளர், பேச்சாளர், மொழிபெயர்ப்பாளர், இதழாசிரியர் (காந்தி வட்டம்-முழுக்க காந்தியடிகள் கொள்கைகளை வற்புறுத்திய ஏடு). இவரது பாரதி பணியினைப் பாராட்டி பாரிசு பாரதி நூற்றாண்டு விழாக் குழு பெருமைப்படுத்திற்று. அமெரிக்கப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' பட்டம் வழங்கிற்று. வடக்கே பாரதி மன்றங்கள் அழைத்துப் போற்றின. பிற பட்டங்கள்: சேவாரத்னம், பாரதீய செல்வர், கவி மௌகதிகம் (வாரணாசி), கவி சம்ரட்சக் (வாரணாசி), இதயபாரதி (இந்து சமய மன்றம்).

இவரது துணைவியார் கங்கா ராமமூர்த்தியும் எழுத்தாளர். பாரதி வாழ்வில் 100 சுவையான நிகழ்ச்சிகள்; இந்திரா காந்தி போன்றன படைத்துளார். **முகவரி**- 18. கிருஷ்ணசாமி தெரு, அபிராமபுரம், சென்னை-18.

**பாரதி அடிப்பொடி வி. எஸ். மணி**: 7-11-1937 பிறந்தது தஞ்சை மாவட்ட மாயவரம். சொந்த ஊர் பாபநாசம் வட்டம் ஊத்துக்காடு. சங்கத்தை நிறுவி 56 வரை தலைவர்; 56 முதல் செயலர். எழுத்தாளர், உணர்ச்சிப் பேச்சாளர், உபந்யாசகர். நூல்கள்: மக்கள் தலைவர் ம. பொ. சி, எழுத்து வேந்தர்க்கு எழுபது. கம்பராமாயணம், பெரிய புராணம், முருகன் பெருமை, ஆஞ்சநேயர் பெருமை பற்றி உரையாற்றி உயர் இடம் பெற்றுள்ளார். பெற்ற பட்டங்கள் : சேவாரத்னம், தேசியச் செல்வர். பாரதிய செல்வர், அருள்மொழிப் புலவர், சேவைச் செம்மல், அனுமன் அருட் செல்வர், அசாத்ய சாதகர், இலக்கிய ஆன்மீக சொல்வேந்தர். இவரது பொன்விழா 8-11-86 இல் நடந்தது. மனைவி கல்யாணி; மக்கள் சுவாமி நாதன், ஹரிசங்கம் பம்பரம்போல் சுழன்று பாரதிக்கு உழைக்கும் பெருமகன். **முகவரி** : பொன்னம்பலம் சாலை, சென்னை-78.

**நல்வழி நிலையம்**: 1952. குற்றாலத்தில் கவிமணி ரசிகமணி கல்கி முன்னிலையில் ரா.பி. சேதுப்பிள்ளை தொடங்கி வைத்தது. கன்னித் தமிழ் காக்க-கல்வி கலை இலக்கியம் பண்பாடு பரவ, அரசியலுக்கு அப்பாற்பட்டு இயங்குவது. 'திங்கள் தோறும் திருநாள்' திட்டத்தில், தமிழ்ப் புலவர்கள் பெரியார் கள் விழாவும், 'தேசியத் திருநாள்' வரிசையில் விடுதலை

குடியரசு போன்ற திருநாட்களும் தவறாது கொண்டாடு கிறது. உட்கழகமாகப் 'பொதிகைத் தமிழ் மாணவர் மன்ற மும்', 'உலகத் தமிழிசைப் பெருமன்றமும்' உலவி வருகின்றன.

வள்ளுவர் விழாவில் பாராட்டு-பட்டம் வழங்கும் முறை யினை வகுத்தது. 'ஓராண்டுக் காலம் நூற்றாண்டு விழா' எனும் அடிப்படையில் கம்பலோட்டிய தமிழருக்கு 72இல் பெரு விழா எடுத்தது. தமிழகம் போந்த உலகத் தலைவர்கட்கெல் லாம் வரவேற்பிதழ் வழங்கியுளது. வள்ளலார் வரலாற்று நாடகம், பாரதி பைந்தமிழ் இசைப் பெருவிழா-சாதனைகள். கவிமணி நூற்றாண்டு விழா, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை விழாக்களைக் கொண்டாடியது. ஆண்டு தோறும் தமிழ்த் தாத்தா உ.வே.சா. அவர்கட்கு விழா நடாத்து வது இந்நிலையம் ஒன்றே!

'நல்வழி நிலையம் நல்லார்க்கும் வல்லார்க்கும் பட்டம் வழங்கு நிலையம்' என்றே நாவார நவின்றிடலாம். இன்கலை இமயம் (சிவாஜிகணேசன்), மக்கள் மதிவாணர் (எம்.ஜி.ஆர்.), குறள்நெறிக் காவலர் (நாவலர் நெடுஞ்செழியன்), செந்தமிழ் தேசிய மாமணி (ம.பொ.சி.), அருளிசை அறிஞர் (சீர்காழி கோவிந்தராசன்), அருளியல் அறிஞர் (வாரியார்), தேசியவேள் (சி. சுப்பிரமணியம்), என 400க்கு மேல் நற்பட்டங்கள் வழங்கி யுளது. மதுவிலக்கு, தீண்டாமை, போன்ற சமூக நலத் தொண்டும், மகளிர் திருநாள் குழந்தைகள் திருநாள் போன்றன வும் கொண்டாடி வருகின்றது. இத்தனைக்கும் சூத்திரதாரி யார் தெரியுமா?

**நெல்லை ராசானந்தம்** : *25-11-1925*. இருக்கபுரம். வேலாயுதம் பிள்ளை: பொன்னம்மாள். 42 முதல் முழுக்க முழுக்க முழு நேரப் பல்துறைப் பெருந் தொண்டராகப் பிறங்கு கிறார். தலைநகரில் இவரைத் தெரியாதார் இரார். இலக்கிய விழா பொதுப்பணி எவற்றிலும் இவர் ஊடாடி ஒளிர்வார். சேவை செய்வதில் சிந்தை மகிழ்பவர்; சீரிய செயல் மறவர்; உயர்ந்த எண்ணத்தர்; பரந்த மனத்தவர். எல்லோரும் இன் புற்றிருக்க நினைப்பதல்லால் வேறொன்றறியார். இவரே ஒரு பல்கலைக் கழகம் செய்ய வேண்டிய பணியினைத் தனி ஒருவ ராக இருந்து தளராது தாளாற்றி வருகிறார்.

பலருக்கு விழா எடுத்த இவருக்குப் பொன்விழாவும் இவர் கண்ட நல்வழி நிலையத்திற்கு வெள்ளி விழாவும் நிகழ்ந்தன.

அண்மையில் மணி விழாவும் கண்டார். பட்டம் பல வழங்கும் இவருக்குச் 'செந்தமிழ் செம்மல்' 'பொன்மனச் செல்வர்' 'விழா எடுக்கும் வள்ளல்' எனப் பட்டம் சூட்டியுளர். இவரும் இவரது நிலையமும் ஏற்றமுற வாழ்த்துவம் இன்னும் பல தொண்டு புரிய! **முகவரி:** 25, நாட்டு வீராச்சி தெரு, மயிலாப்பூர், சென்னை-4.

**திருக்குறள் கழகம், புதுக்கோட்டை:** தோற்றுநர்: **அண்ணல் பு. அ. சுப்பிரமணியனார்.** 18-4-1954 முதல் 21-2-1982 வரை நடந்தது. வாரம் ஒரு பொழிவு நகர்மன்றில் குறித்த நேரத்தில் குறிப்பிட்ட நேரத்தில் முடிவுறும். கால ஒழுங்குக் கண்டிப்புடன் கடைப்பிடிக்கப்பட்டது. உரையாளர் ஒரு மணித்துளி கழித்து வரினும், வேறொருவர் பேசிக் கொண்டிருப்பார்; அவர் உரை அவ்வளவே! காலக் கட்டுப்பாட்டினைக் காமராசரே விதந்தோதியுள்ளார் பல இடங்களில். பேசுவோர்க்கு அன்பளிப்பு ரூ 50 வழங்கப்பெற்றது. தமிழக அறிஞர்கள் அனைவரும் இடம் பெற்றுளார்; ஐயாற்று தியாகையர் விழாவில் இசையாளர் பங்கு பெறுவது பேறாகப் பாவித்தது போன்று, இக் கழகம் ஏறிப் பேசுவதனைப் பெருமையாகக் கருதினர் தமிழறிஞர்கள்! கூட்டம் எப்படி நடத்த வேண்டும், பேசுவோர் இப்படித்தான் பேச வேண்டும் என்பதற்கு இலக்கணமாக இலங்கிய கழகம் இது!

**மணிமேகலை மன்றம், ராஜபாளையம்:** 14-4-'59. தமிழகத்தின் தலையாய மன்றங்களில் ஒன்று. **நிறுவனத் தலைவர்** பன்மொழிப் புலவர் மு. கு. ஜகந்நாத ராஜா. **நோக்கு:** 'மானுடகுல இதயங்களை இணைவிப்பதற்கு இலக்கியம் ஒரு பாலமாக அமைந்துளது. அதன்மூலம் மனித சமுதாயம் நன்னெறியில் வாழ்ந்து சுதந்திரம் சமத்துவம் சசோதரத்துவம் எனும் லட்சியங்களைக் கடைப்பிடித்து, மானுட நேயமும் உலகு தழுவிய விரிந்த கண்ணோட்டமும் கொண்டு தேசீய ஒருமைப்பாட்டுணர்வோடு இந்திய நாடு முன்னேற வேண்டும்.' **பணி:** 'உலகின் பசிப்பிணி நீங்க வேண்டும் என்ற லட்சியத்தை மையப்படுத்தி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு இயற்றப்பட்ட மணிமேகலை நூலின் அறச் செய்திகளைத் தமிழகமும் இந்திய நாடும் நன்குணரப் பாடுபடுவதும், தமிழ் இலக்கியங்கள் பிற மொழிகளிலும் பிறமொழி இலக்கியங்கள் தமிழிலும் பெயர்க்கப்பட்டு நூல் வெளியீடுகள் செய்து இலக்கிய உறவுகளை வளர்ப்பது.' நம் இலக்கியச் சூழலினைக் காத்தும், மரபிலக்கியத்தின் மாண்பினைப் புரிந்து கொண்டும், புத்திலக்கியப் போக்குகட்கு வர

வேற்பளித்தும் நல்லிலக்கியச் சூழலை வளர்ப்பது. கருத்துச் சுதந்திரமுடன் முரண்பட்ட கருத்தோட்டங்களை அறிமுகப் படுத்தும் களனாகவும் இலக்கிய-தத்துவக் கருத்தோட்டங்களை மக்கள் மன்றம் சுவைத்தின்புறவும், வாழ்நெறியில் கடைப் பிடிக்கவும் தூண்டுதலாக அமைவது.

**சாதனை:** காந்தீய-சங்க இலக்கிய, இந்தியத் தத்துவ ஞானத் தொடர் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுளது. இதிகாசப் பேரவை, பட்டிமன்றம், வழக்காடு மன்றம், அன்னதான விழா, கருத்தரங்கம், கவியரங்கம், ஆய்வரங்கம், நூல் வெளியீட்டு விழாக்கள், பாராட்டு விழாக்கள், தென்மொழிகளில் இலக்கிய உறவுக் கருத்தரங்கம், பன்மொழிக் கவியரங்கம், நாவல் வளாகம்,மொழி பெயர்ப்பு வளாகம்போன்ற நிகழ்த்தியுள்ளது.

வெளியீடுகள் : திருக்குறள் மூலம், இரு சூத்திர விளக்கம், குறள் ஆய்வுரை, வான் கலந்த வாசகங்கள். வெள்ளிவிழா **14—17-12-83** நான்கு நாட்கள் பெரு விழாவாக நிகழ்ந்தது; பூ. அ. துரைராஜா, கொ. மா. கோதண்டம், கொ. ச. பல ராமன், குன்றக்குடி பெரிய பெருமாள் போன்றார் துணை நிற் கிறார்கள். இயக்கி இனிதே ஆற்றுபவர் செயற்படுமனத்த ராகிய மு. கு. ஜகந்நாத ராஜா. இம் மன்றில் பங்கேற்றுப் பேசாத அறிஞர்களே இல்லையெனலாம். பெருமைக்குரிய பெரு மன்றம் எனப் பீடுடன் பகரலாம்.

**தனித்தமிழ் இலக்கியக் கழகம், நெல்லை:** *1-10-1960.* நல்ல தமிழ் நாளும் தழைத்தோங்க விழைந்து அன்பர் பதினைவர் பொருநையாற்றங்கரையில் அரங்கராசன் தலைமையில் கூடி உருவாக்கியது. அமைப்புச் செயலர் நெல்லை ந. சொக்கலிங்கம். **20-6-65** இல் கூட்டிய கூட்டத்தில் கழகம் வலிவும் பொலிவும் பெற்றது. 68 இல் பதிவு செய்யப்பட்டது.

நோக்கம் : பிறமொழி கலவாது எளிய இனிய தமிழில் பேசுவதற்கும் எழுதுவதற்கும் தூண்டுவது. தமிழ் இலக்கியங் களை மக்களிடையே பரப்புவது. கட்சி அரசியல் கலப்பற்ற முறையில்; தமிழின் ஆக்கங் கருதி ஆவன செய்தல், அனைவரும் சுவைக்கும் வண்ணம் தமிழிலக்கியங்களைத் தரும் பணி மேற் கொள்ளல், கழகக் கருத்துக்கள் தாங்கிய இதழ் வெளியிடுவது.

செயல் : பாவேந்தர் மொழிந்தவாறு பழைய நலத்தையும் புதிய புலமை வளத்தையும் கொண்டு தமிழுக்குத் துறை தோறும் தொண்டு புரிகிறது, மாணவர்கள் எழுத்துரத்தையும்

பேச்சுத் திறத்தையும் பல்லாற்றானும் வளர்த்திடும் வகையில் போட்டிகள் நடத்துகிறது. மாலை நேரத்தில் புலவர் கல்லூரி நடத்துகிறது. திங்கள்தோறும் திறனாய்வுக் கூட்டம், கலந்துரையாடல்; தக்க நூல்களைப் பதிப்பிப்பது. புலவர் பெருமக்கள் திருவிழா நடாத்துதல். கா. மாயாண்டி பாரதியின் மணிவிழா 20 ஆம் ஆண்டு விழாவுடன் சேர்த்து நடத்தியது. வழக்காடு மன்றம், வில்லிசை நிகழ்ச்சிகளும் நிகழ்த்துகிறது. வீரமாமுனிவர் விழா வீறுடன் கொண்டாடுகிறது; மூன்றாவது நூற்றாண்டு விழாவினை ஒட்டி வளன் அரசு அவர்கள் திங்கள் தோறும் அவரின் 36 ஏடுகள் குறித்துத் தொடர் அறிமுகப் பொழிவுகள் நிகழ்த்தினார். அவரே இக்கழகத்தின் **முதுகெலும்பு.**

நெல்லை - குமரி மாவட்ட மாணவர்கட்காகப் பேச்சுப் போட்டி. தமிழகம் தழுவிய கல்லூரி மாணாக்கர் கட்டுரைப் போட்டி நடத்துகிறது. முதற்பரிசு தங்கப் பதக்கம். 1967 முதல் இருபதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கிய வளர்ச்சி (ஆ. செகந்நாதன்), பாரதிதாசன் பாடல்களில் மரபும் புதுமையும் (நெல்லை ந. சொக்கலிங்கம்) வள்ளுவச் செல்வம் (ஆ. செகநந்நாதன்), நிலவுக்குச் செல்வோம் (கி. தமிழ்வென்றி) சங்க இலக்கியத்தில் அறிவியல் (வ. தேனப்பன்), பாவேந்தருக்குப் பின் பாட்டுலகு (மலை. இராமசாமி), பேச்சுக் கலையும் தமிழ் வளர்ச்சி நிலையும் (மலை. இராமசாமி), நாடகக் கலையும் நற்றமிழ் வளர்ச்சி நிலையும் (தே. சா. இளம்பரிதி), அறிஞர் அண்ணாவும் அருந்தமிழ்ப் பணியும் (சந்தான கோபால கிருஷ்ணன்), புதுமைப்பித்தன் கதைகள் (பொதிய வெற்பன்), மேதை வேதநாயகரின் தமிழ்ப்பணி (வே. இராமசாமி), உலகப் பெரும் புலவர் கம்பன் (வே. இராமசாமி), மறைமலை அடிகளாரின் தமிழ்ப் பணி (சு. சுசாதா), தந்தை பெரியாரும் தமிழ் இலக்கியமும் (சு. சுசாதா), வீரமாமுனிவர் வளர்த்த வண்டமிழ் (உ. முருகன்), பாரதியார் வளர்த்த தமிழ் (இரா. சாமிநாதன்) திரு. வி. க. தமிழ்த்தொண்டு (நா. இராசேந்திரன்), வ. உ. சி. வளர்த்த தமிழ் (நா. இராசேந்திரன்), தேவநேய பாவாணர் தமிழ்த் தொண்டு (மணி மிடற்றன்) என 19 கட்டுரைகள் நூலாகியுள்ளன.

‘தொண்டு செய்வாய் தமிழுக்குத் துறைதோறும், துறை தோறும் துடித்தெழுந்தே’ - என்ற பாவேந்தரின் பாடலைக் குறிக்கோளாகக் கொண்ட இக் கழக **முகவரி :** டாக்டர் பா. வளன் அரசு, அ. நெல்லை நாயனார் தெரு, பாளையங்கோட்டை, நெல்லை-627002.

**திருவள்ளுவர் மன்றம், ராஜபாளையம்:** 62 இல் தமிழ்ப் பாது காப்புக் கழகமாக துவங்கப் பெற்று 65 இல் திருவள்ளுவர் திருப்பெயரால் அமைந்தது. 'தமிழால் உலகாள்வோம்' எனும் கொள்கையது. எண்ணம்: தாய்த்தமிழின் இலக்கியத் தனிச் சிறப்புக்களைத் துய்த்தலும் புகட்டலும். எழுச்சி; குறள் நெறி பரப்பலும் போற்றலும். செயல்: துறைதோறும் தனித்தமிழின் நலம் காத்தல். நூலகம் உளது, புலவர் வகுப்பு நடத்துகிறது; பெரும் புலவர்க்கு விழா எடுக்கின்றது.

**தமிழ்க் 'கா. சு.' நினைவு இலக்கியக் குழு:** 1965. முதன் முதல் தமிழ் இலக்கிய வரலாறு படைத்தவரும், முதலில் எம். எல். பயின்றவரும், தாகூர் சட்ட விரிவுரையாளர் என்னும் பெருமைக்குரியவருமான பல்கலைப் புலவர் சுப்பிரமணிய பிள்ளையின் பெயரால் அவர் அன்புக்குரிய மாணவர் சீடர் இளமுருகு தோற்றியது. பிள்ளை என்பதனைக் குறியாது அதற்குப் பதில் 'தமிழ்' என முன் இணைத்துத் தமிழுக்கே காசுவாக விளங்கியவர் எனப் போற்றுமாறு அவர் பிறந்த நவம்பர்-கார்த்திகையில் விழா எடுத்து வருகிறார். தொடக்க விழாவில் குன்றக்குடி அடிகளார், சத்தியசீலன், அ.வெ.ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார், கா. மாயாண்டி போன்றார் குழுமினர்.

ஆண்டுதோறும் குழித்தலை நகரே கோலத் தமிழ் கொள்ளு மாறு பெருவிழா எடுத்து வருகிறார் கடந்த 22 ஆண்டுகளாக. பட்டி மண்டபம், வழக்குரை மன்றம், பாட்டரங்கு, கருத் தரங்கம் ஆய்வரங்கம், சிந்தனை மேடை, பாராட்டு நன் மங்கலம், பாராட்டுப் பட்டயம், நூல் வெளியீடு, கலையரங்கு, உணர்வு உரையாடல், நூல் ஆய்வரங்கு எனப் பன்முக நிகழ்ச்சிகள் பாங்காக நடைபெறும். வேளா வேளைக்கு உணவும் சிற்றுண்டியும் சுவைநீரும் நன்கமைந்திருக்கும்.

இதில் ஒரு சிறப்பு யாதெனின் விழாவிற்காக நன்கொடை அளித்ததெல்லாம் விடாது பற்றுச் சீட்டு எண்ணுடன் குறிப் பிட்டு வரவு-செலவு காட்டும் வண்ணம் ஆண்டறிக்கையுடன் முன் விழாவுக்கான வரவு-செலவு துல்லியமாக அச்சிட்டு அளித் திடுதல் வேறு எங்கும் காணாத அருஞ்செயல். பங்கேற்போர் பேசி முடியுமட்டும் கழுத்தில் போடப்பெற்ற சரிகை ரிப்பன் மாலையைக் கழற்றக் கூடாது. ஆண்டுதோறும் கா.சு. பிள்ளை உருவம், பாரதி உரு, விநாயகர் சிலை, இப்படி ஒவ்வொன்று நினைவுப் பொருளாக வழங்கப்பெற்று வருவதும் குறிப்பிடத் தக்கது.

69இல் வள்ளுவர் ஈராயிரம் ஆண்டாகக் கொண்டாடப் பெற்றது. ஒவ்வொரு காரியிலும் தக்காரைக் கொண்டு தொடர் சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றது. ஏப்ரல் 84 தொடங்கி 'வாழ்வியல் கருத்தரங்கு' ஒவ்வொரு திங்கள் மூன்றாம் ஞாயிறு நிகழ்த்தப்பெறுகிறது; கடைசியில் கலந் துரையாடலும் ஐயம் தெளிதலும் அமைகிறது. இதனால் இலக்கிய ஆர்வம் தூண்டப்படுகிறது, மொழி உணர்வு மேலிடு கிறது. 77 முதல் வி.ஜி.பி. சகோதரர்கள், அண்ணல் சுப்பிர மணியனார், நினைவுக் கலையேந்தல் இராமையா, வானதி திருநாவுக்கரசு, அம்புஜத்தம்மாள், டி. என். இராமச்சந்திரன், ச. தண்டபாணி தேசிகர், நரம்பியல் நிபுணர் இராமமூர்த்தி போன்றாருக்குப் பட்டயம் தரப்பெற்றது. இவ் விழாக்களில் பங்கு கொள்ளாத நல்லறிஞர்களே இல்லையெனலாம். ஒரு புலவர்க்கென மன்று அமைதது விழா விடாது எடுப்பது வேறு எவர்க்கும் எங்கும் இல்லாத் தனிச் சிறப்பு.

**மூலவர் : மீ. சு. இளமுருகு :** 13-5-1917. பெரியகுளம். சுப்பையா: ஈசுவர வடிவு. விக்டோரிய நினைவு உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 34இல். அண்ணாமலையில் கா.சு. பிள்ளையிடம் ஒரு திங்கள் பயின்று விட்டு வருதல். மறை. திருநாவுக்கரசு மொழி கேட்டு இந்தி எதிர்ப்பில் இறங்குதல்; ஒரு வாரம் சிறை. 45-46இல் 'தமிழ்ச் சுடர்' மாதம் ஒரு புத்தகம் நடத்தல். முகப்பில் கா.சு; பாரதி, பசும்பொன் தேவர் போட்டுவரல். திருச்சி 50-53 'மக்களாட்சி' அரசியல் இருமுறை ஏடு, தி.மு.க. இதழில் கார்ட்டூன் போட்ட முதல் இதழ் இதுவே. 53 தொடங்கி 'காதல்' இதழில் கட்டுரை எழுதிவரல். எழுதினாலும் எழுதாவிட்டாலும் திங்கள் 500, எட்டு மாதம் உதவல். 70இல் சென்னை செல்லல்.

மெய்யே மெய் (நாடகம்), கருணாநிதியார் (வரலாறு), அவள் (கதை), காதல் மணம் (வரலாறு) திருவள்ளுவர் புரட்சிக்காரரே, திருக்குறள் பொல்லாத நூல், முருகனின் கதை கள் போன்றன படைப்புகள், 77 மணிவிழாவில் அடிகளார் பொன்னாடை போர்த்தி 'செயல் வல்லார்' என்றழைத்தல். 79இல் அமெரிக்கப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' பட்டம் தந்தது. மது. ச. விமலானந்தம் 'குழித்தலைப் பெரியார்' என்றேத்துவார். குழித்தலைச் செல்வர், குழித்தலை குணாளர் என்றும் அன்போடு அழைக்கப் பெறும் ஆன்றோர். உணர் ஊட்டி உயர்த்திய அன்னையிடம் உயிரையே வைத்திருப்பவர். 'ஈசுவர வடிவு அகம் நூலகம் ஒரு தமிழ்க் கோயில்!

கலைஞர் கருணாநிதியிடம் காண்தகு காதல் கொண்டவர். அவரைக் கொள்கைக் கவசமாய்க் கொண்டவர். 69 தொடங்கி ஆண்டுதோறும் அவருக்கு வண்ணமலர் வெளியிட்டு வருபவர். 76 'மீசா'வின்போது உறுதுணையாய் இருந்த ஒரு சிலருள் இவர் ஒருவர்! மணிவிழா மலர் அணி திகழ் அழகுடன் கொணர்ந்தவர். விடுதலறியா விருப்பின் கரணியமாக அன்னை அஞ்சுகம் அச்சகம் அமைத்தவர்: அண்ணா, கலைஞரைப் பற்றி என்ன கருதினார் என உலகிற்கு வெளிப் படுத்தியவர்-கலைஞர்க்கு விழா எடுத்து. பேராசிரியரிடம் பற்றும், அன்பிலிடம் அன்பும் கொண்டவர்.

கல்வி அறக்கட்டளை நிறுவி 75 முதல் பள்ளி மாணவ மாணவியர்க்குப் பல்வேறு போட்டிகள் வைத்துப் பரிசு வழங்கி வருகிறார். திரு. ஜெகந்நாதன் உதவியபின் உயர்வு கிட்டு கிறது. பரிசளிப்புப் பணியில் மணமேடு குருநாதன் ஈடுபாடு காட்டி வருகிறார். 86 ஆசிரியர் போராட்டத்தின்போது முதல்வர், இந்தியப் பிரதமருக்கெல்லாம் தந்தி விடுத்து வேண் டினார். தமிழ் ஆட்சி மொழி மாநாட்டினைத் தரணியே வியந்து போற்றக் குழித்தலையில் நடத்திக் காட்டிய செயல் வீரர்.

இவர் ஒரு குணக்கடல். கொள்கைக் குன்று. குறள்நெறி இவர் நெறி, குளிர்தமிழ் இவர் குறி. 'இன்முகம் காட்டி, இன் சொல் பேசி, இடையறாது இன்றமிழ்த் தொண்டாற்றி வரும் இளமுருகு'-இது கலைஞர் கணிப்பு. கருத்து வேறுபாட்டினை மனவேறுபாடாகக் கொள்ளாத கண்ணியர். மாற்றாரையும் மதித்திடும் மாண்பினர். கட்சி வெறி காட்டாதவர். பிறர் உணர்ச்சியை மதித்திடும் பெற்றியர். மொத்தத்தில் சால் பூன்றிய தூண்.

48இல் கலப்புத் திருமணம்; துறையூர் சைமன் ராமசாமி அவர்களின் தங்கை **பொற்செல்வி** நற்றுணை. பெற்றோர் சஞ்சீவி: நாகம்மை. 39இல் எஸ். எஸ். எல். சி.-மெதாடிஸ்டு மிஷன் பள்ளி மாணவி. 40 ஆண்டுகளாக ஆசிரியை; தொட் டியம் மணப்பாறை, குழித்தலையில் பணியாற்றி இதுபோது தலைமை ஆசிரியை. காதல் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுக்கும் இல்லறத் துணைவி, நல்ல பகுத்தறிவு மனைவி. இருவரும் இலக்கிய இணைகள். பணிவு கனிவு துணிவு மிக்கத் துணைகள். ஒரு காசின் இரு பக்கம் போலே அரும்பணியாற்றும் பெருந்தமிழ்த் தொண்டர்கள்.

அண்ணன் பணிக்கு அச்சாணியாக அமைபவர் **அருட் செல்வர் சு. நடராசர்.** 15-1-1938. திண்டுக்கல்லை அடுத்த சித்தையன் கோட்டை. 44 முதல் அத்தை வீட்டில் வளர்தல். 53இல் எஸ். எஸ். எல். சி. தொடக்க முதல் தமிழ் கா.சு வில் தோன்றாத் துணை. ஒழுக்கம் மிக்கவர், தெய்வீகம் தேர்ந்தவர்; தேசீயம் திளைப்பவர். ஏற்ற பொறுப்பினைச் செம்மையாகச் செய்யும் இனியர். கா.சு. மாணவரின் மாணவர். அருள் யோகி சண்முக சுந்தரப் புலவர் அடிச்சுவட்டில் சென்று ஆன்மீகத்தில் அனுபூதி நிலையில் நிலவுபவர்.

இப்படி அண்ணன்-அண்ணி-தம்பி மூவரும் இலக்கியக் குழுவின் முக்கண்களாக-முத்தூண்களாக முறுவலிக்கின்றனர். வருகிற ஆண்டு குழுவின் 23 ஆம்யாண்டு, கா.சு. பிள்ளையின் நூற்றாண்டு. ஆன்ற தோற்றுநரும் அன்பு அமைப்பாளரும் தோன்றாத் துணையாய பொற்செல்வியாரின் நற்றுணையுடன் பாரிய பெருவிழா எடுத்துச் சிறக்க இன்றுணை புரிவோம். **முகவரி:** அன்னை அஞ்சுகம், கடம்பர் கோயில், குழித்தலை-639101.

**தமிழ் வட்டம்:** 1966. I.A.S. அலுவலர்களும் தமிழஞர்கள் ந. சஞ்சீவி, அ. ச. ஞானசம்பந்தம், கு. ராஜவேலு போன்றார் குழுமி தமிழின்பத்தில் திளைக்கத் தோற்றிய உயர்வட்டம். இதன் இயக்குநர் வி.கே.சி. நடராசன், I.A.S. அவர்கள். தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களின் மருகர்; ராஜேஸ்வரி அவர்களின் கணவர். இவர் இருக்குமட்டும் இயங்கியது. Institutions depends upon Individuals. எத்தனையோ பேர் இருப்பினும் எடுத்து நடத்துவார் 'ஒரு சிலரே-ஒருவரே! எனவே இவர் மறைந்ததும் வட்டம் சுழல்வதும் நின்றது. என்றாலும் இருந்த ஈராண்டுகளில் நன்றாகவே நாடறிய செயற்பட்டது; நற்றமிழுக்கு உற்றன செய்து, சாதனை புரிந்து சுவடு பதித்தது திங்கள்தோறும் கூடினர். அரசு உயர்நிலை அலுவலர்கள் ஆதலின் எண்ணிய முடிக்கும்-நினைத்தது சாதிக்கும் செல்வாக்கும் சொல்வாக்கும் கொண்டு இயக்கினர். முதலாண்டில் (67) அருமையான பெருமலர் ஒன்று மணம் பரப்பிற்று; ஒரு கட்டுரைக் கருவூலம் அது. இன்றும் என்றும் பயன்பிலிற்றுவது. தலைவர் தி.சி. ராமலிங்கம். துணைத் தலைவர் வி.எஸ். சுப்பையா I.A.S. செயலர். வி.கே.சி. நடராசன். உசிலம்பட்டி மறவர் தோன்றல். கலகலப்பானவர், திறந்த மனத்தர். உரத்தப் பேசும் ஒண்மையர். நீந்திக் குளிக்கச் சென்றவர் உயரத்திலிருந்து குதித்தபோது ஆழ

மின்றிப் பாறையில் தலை மோதி மாண்டு போனார். இருந் திருந்தால் அருஞ்சாதனை புரிந்திருப்பார். இருந்தமிழுக்குப் பெரும் இழப்பே! தமிழ் வட்டம் தவழ்ந்த இடம்: 'பாஸ்கர நிலையம், B-94, சாஸ்திரி நகர், சென்னை-20.

**தெய்வீகப் பேரவை** : *(1966-76)*. முதற்பெருந்தலைமை தருமையாதீனக் குருமுதல்வர். இந்து சமய மக்கள் தங்கள் சமயப் பெருமை உணரவும், பழமைமிக்க இந்து சமய நூல் களில் கூறப்பட்டுள்ள அருள் அறநெறிகளின்படித் தங்கள் வாழ்வினை அமைத்துச் செயற்படவும் துணைபுரியும் பொருட்டுத் தமிழகத் திருமடங்களின் தலைவர்கள் கூடி அமைத்தது. பள்ளிப் பிள்ளைகளின் பிஞ்சு நெஞ்சில் நல்லொழுக்கம் நிறைய சமய இலக்கியங்களினின்றும் நற்பகுதி களைத் திரட்டிச் சிறுசிறு வெளியீடுகள் 20க்கு மேல் வெளி யிட்டது. பெரியவர்கள் சைவ சமய உணர்வு பெற சாத்திர நூல்கள் போதிக்கப் பெற்றன. சொற்பொழிவுகளும் வகுப்பு களும் நிகழ்த்தப்பட்டன. பல்வேறு மடங்கள் ஒருமித்துச் செயற் படப் பேரவை மையமாகத் திகழ்ந்தது. குன்றக்குடி அடிக ளாரின் பங்கும் பணியும் மிகுதி. **முகவரி**: 6, மகாராஜ சூரியராவ் சாலை, ஆழ்வார்ப் பேட்டை, சென்னை-18.

**தெய்வத் தமிழ் மன்றம், மயிலாடுதுறை** : *1970* தோற்றுநர் தலைவர் இராசசேகரன் வழக்குரைஞர்கள் ஏதேனும் இலக் கியப் பணியாற்றி இதயம் மகிழ வேணும் என்ற விழைவின் விளைவு. நோக்கம்: இலக்கியத்தைக் கூடி அமர்ந்து படித்துத் துய்த்தல். ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை 'சிவஞான போதம்' 15 நாள் பாடம் சொன்னார். கு. சுந்தரமூர்த்தி சிலம்பு பாடம் செப்பல்; குடந்தை ப. சுந்தரேசன் தமிழிசை, சிலம்பிசை; சொ. சிங்காரவேலனார் 'அப்பர் அருள்விருந்து' இப்படி நீண்டது. கானல் வரியினை அதே புகார் கடற் கரையில் சித்திரையில் இசைக் கருவிகளுடன் பாடம் கேட்டமை குறிப் பிடத்தக்கது.

சைவசித்தாந்த சாத்திர வரலாறு எழுத அ. ச. ஞா. தலை மையில் ச. தண்டபாணி தேசிகர், க. வெள்ளைவாரணனார், கு. சுந்தர மூர்த்தி, சொ. சிங்காரவேலனார், தி. வ. காந்திமதி நாதன் குழு அமைக்கப்பெற்றது. ஒவ்வொருவரும் என்ன என்ன எழுத வேணும் என இருதிங்கள் ஆராய்ந்து வரையறை செய்யப்பட்டது. சைவத் திருக்கூட்டம் நடந்தது. சிறுகதைப் பற்றி இரா. இராமலிங்கமும், நாவல் பற்றி இராம. சுந்தரமும் அடிக்கடி உரையாற்றினர்.

சாதனைகள் : **நாவல் நூற்றாண்டு விழா** சிட்டி சிவபாத சுந்தர இரட்டையர் வந்திருந்து அமைத்துத் தரல். இதுவரை வந்த சிறந்த 50 நாவல்கள் பற்றி 52 திறனாய்வாளர் ஆய்ந்த 'தமிழ் நாவல் 50 பார்வை' எனும் அரிய நூல் வெளியிடப் பெற்றது. இத்தகு முதன் முயற்சி இதுவே. 3 நாள் விழா. 4 அமர்வுகள் 8 பேர் வீதம் 32 பேர் இடம் பெற்றனர். காலையில் கருத்தரங்கம், மாலையில் படைப்பாளிகள் பேச்சு; லா. சா. ரா. வின் பொழிவு அருமையிலும் அருமை. அகிலன், ராஜம் கிருஷ்ணன், நீலபத்மநாபன், லா. சா. ரா, சி. சு. செல்லப்பா, சாண்டில்யன், நா. பார்த்தசாரதி போன்ற படைப்பாளிகள் பெருமைப்படுத்தப் பெற்றனர். திறனாய்வாளர்கள் தி. க. சி, செந்தில் நாதன், மதுரை வெங்கடராமன், பாலா போன்றார் போற்றத்தக்க கருத்துரை வழங்கினர்.

**சிறுகதை நூற். விழா** : வ. வே. சு. ஐயர், போற்றி நினைவு கூரப்பெற்றார். அசோக மித்திரன், சுஜாதா, பாலகுமார் போன்ற படைப்பாளிகளும் 16 திறனிகளும் பங்கேற்றனர். பாரதி நூற்றாண்டில் அவ்வை நடராசர், கவிஞர் வைரமுத்து போன்றோர் வருகை புரிந்தனர். சைவ சமய மன்றங்களின் ஒருங்கிணைப்பு -'உழவாரம்' முதல் மாநாடு இருநாட்கள் இயன்றது; அ. ச. ஞா. இயக்கினார். அடிக்கடிக. நா. சு. நீல பத்மநாபன் போன்றார் அளவளாவல்கள் நடைபெறுகின்றன. தமிழிசை வல்ல எஸ். ராமநாதன் அவர்களின் தமிழிசை விளக்கம் நடந்தது. சிலப்பதிகார விழாகளும் நடைபெறு கின்றன. பொதுக்குழு, செயற்குழு உளது; தலைவர் செயலர் பொருளர் உளர். கட்டுக்கோப்புடன் நெறிமுறையுடன் சிறக்கப் பணியாற்றி வரும் சீரிய சிறந்த செழுந்தமிழ் மன்றம்.

**ஆர். இராசசேகரன்** : லால்குடி. திருக்குறள் வேள் ஜி. வரதராசப் பிள்ளையின் மகன். பூம்புகார் மேலையர் தாசில் பண்ணைக்குத் தத்துப் பிள்ளையாகச் சென்றவர். மன்னன் பந்தல் அ. வ. அறக்கட்டளைக் கல்லூரி ஆட்சிக் குழு உறுப்பினர். நல்ல தமிழ் பற்றும் நற்றமிழ் ஊற்றமும் நிறைந் தவர். சைவ நெறி செழுந்தமிழ் வளமையும் கொண்டவர், சமயத்திற்காகவும் தமிழுக்காகவும் தொண்டாற்றுவதில் இன்பம் காண்பவர். செயற்றிறம் மிக்க இவரைச் 'செந்தமிழ்ப் புலவர்' என்றேத்துகின்றனர். கோலாலம்பூரில் நடந்த இரண் டாவது உலக சைவ சித்தாந்த மாநாடு—கருத்தரங்கிற்குச் சென்று அப்படியே நாடு பல கண்டு வந்தவர், இவரது தமிழ்

சைவப்பணி தலைவணங்குதற்குரியது. **முகவரி:** தாசில் பண்ணை, மேலையூர், பூம்புகார்-609 107.

**ஆர். இராமலிங்கம்:** அண்ணாமலையில் தமிழ் முதுகலை முடித்து சென்னை அரசினர் கலைக் கல்லூரி போன்றவற்றில் பணியாற்றி இதுபோது குடந்தை அரசினர் கல்லூரியில் பேராசிரியராகப் பிறங்குபவர். தற்காலத் தமிழ் இலக்கியத்தில் திளைத்துத் திறமிகுந்தவர் - உயர் நெறி ஒழுகலும் உருவான உருப்படியான கருத்து வளமும் கொண்டவர். நுட்ப மதியினார், நுண்ணிதின் ஆய்ந்து கூறலும், ஆழ்ந்து சிந்தித்து வினாவலும் வல்லவர். இவர் வந்த வேகத்தில் வளமார் நூல்கள் பல படைப்பார் எனத் தமிழ் உலகம் நம்பி எதிர் நோக்கியது. துணைவியார் திறம் சான்ற மருத்துவர் என்ற முறையில் ஓய்வின்றி உளுற்றுவதால், தமிழுக்குரிய வரவின்றிப் போவது தமிழுக்கு இழப்பே! கவரிமான் அன்ன கண்ணியமும் தும்பி போன்ற திறனாய்வுத்திறமும் சான்ற இவர் தெய்வத் தமிழ் மன்றத்தின் தூண். இப்போதைய (ஐந்தாவது) தலைவர். தருமையாதீனத் தொடர்பு மிக்கவர்; 2 வது சைவசித்தாந்தக் கருத்தரங்கிற்குக் கோலாலம்பூர் சென்று வந்தார். தமிழ் கூறு நல்லுலகில் துடிப்பு மிக்க தகுதி மிகுதி வாய்ந்தவர், **முகவரி:** 134. பட்டமங்கலத் தெரு, மயிலாடுதுறை.

**இலக்கியச் சிந்தனை:** 28-2-70. நோக்கம்: இலக்கியத்தையும் திறனாய்வையும் மதிப்பிட்டுப் போற்றுவது. ஒவ்வொரு திங்கள் இறுதிச் சனிக்கிழமை அன்று கூட்டம் நடக்கிறது. அத்திங்களில் இதழ்களில் வெளியான சிறந்த சிறுகதை ஒன்றினை ஆய்வர் ஒருவர் தேர்ந்தெடுத்துத் தருகிறார்; இலக்கிய அன்பர் ஒருவர் சிறப்புரை ஆற்றுகிறார்; சிறுகதை ஆசிரியருக்குப் பரிசளிக்கப்படுகிறது.

இப்படித் தெரிவு செய்யப் பெற்ற 12 கதைகளும் தொகுக்கப்பெற்று நூலாக்கப் பெறுகிறது; வானதி இந்தப் பணியை ஏற்று ஆற்றுகிறது. பின்னணி, கனவுக்கதை, நாங்கள் ஆயிரம், ஒரு பழைய கிழவர், ஒரு புதிய உலகம், தனிமை. ஓஸகம், போதும் உங்க உபகாரம், தீர்வு, பசி, அற்ப ஜீவிகள், சின்னம்மிணி, அவள், பிரும்மம், விடிவதற்குள். குருத்து என 14. ஆண்டின் சிறந்த சிறுகதையினைப் பிரபல சிறுகதை யாசிரியர் தெரிந்தெடுக்கிறார். பரிசு 500ரூ.

ஆண்டுதோறும் சிறந்த படைப்புக்கு 5000 பரிசளிக்கப் பெறுகிறது; கையெழுத்துப் படிகளும் இதழ்களில் வந்தனவும் இடம்பெறுகின்றன. இதுவரை 15. போக்கிடம்; 18 அட்சரக் கோடு,- கடல்புரத்தில், நினைக்கப்படும் - பிஞ்சுகள், கரிப்பு மணிகள் - பிறகு- தண்ணீர் தண்ணீர், மெர்க்குரிப் பூக்கள், பாரதி காலமும் கருத்தும், சேற்றில் மனிதர்கள், நளபாகம், மூன்று பார்வைகள் - நஜ்ருல் என்றொரு மானிடன், சங்கம்.

ஆண்டு விழாக்களில் பிற மாநில இலக்கியப் பெருந்தகைகள் பங்கேற்றுப் பேருரை ஆற்றுகின்றனர். ஆண்டு விழாவின் போது பயனான சிறுகதைகள் இலவயமாக அளிக்கின்றனர். சென்னை ராஜேஸ்வரி திருமணமண்டபத்தில் புத்தாண்டின்போது பெரு விழாவாகக் கொண்டாடப்படுகிறது. தோற்றியோர்: **ப. லட்சுமணண்** *(1-3-1938)* **ப. சிதம்பரம்.** இவ்விருவரையும் ஈன்றெடுத்த தெய்வங்கள் கண்டனூர் லெ. சித. பழ. பழனியப்பச் செட்டியார்: லெட்சுமி ஆச்சி (செட்டி நாட்டரசர் அண்ணாமலை செட்டியாரின் மகள்)-பின்னவர் வழக்குரைஞர் ஜஸ்டிஸ் கைலாசம், செளந்தரா கைலாசம் மருமகன். இது போது மைய அரசின் இணை அமைச்சர். தற்காலத் தமிழிலக்கிய வளர்ச்சிக்கு இலக்கியச் சிந்தனையின் பணி தலையாயது. **முகவரி:** 5 அ. சித்தரஞ்சன் சாலை, சென்னை-18.

**இலக்கிய வீதி:** 10-7.1977 திங்கள்தோறும் 2ஆம் ஞாயிறு கூடி (உலக), இதழாசிரியர்கள் எழுத்தாளர்கள் திறனாய் வாளர்களை அழைத்துப் பேசவைத்துக் கலந்துரையாடுகின் றனர். ஒவ்வொரு கூட்டத்திலும் நாவல் திறனாயப்படுகிறது. நாவலாசிரியர் பதிலளிக்கிறார். அப்படியே கவிஞரும். சிறு கதைப் போட்டி வைத்துச் சிறந்த ஒன்றுக்குப் பரிசும் அளிக் கிறார்கள். ஆண்டிறுதியில் தொகுக்கப்பெற்று வெளியிடுகின் றனர் கதாசிரியர் படங்களுடன் விவரக் குறிப்புகளுடன்!

மீண்டும் மீண்டும், எல்லாம், எல்லாம் மனசுக்குள்ளே, சில ஆதாரங்கள், விடியும்-வெளிச்சம் வரும், விதை நெருப்பு, தீவு களாகும் உறவுகள், புதிய விழுதுகள். அப்படியே நாவல் திறனாய்வினையும் வெளியிடின் நலமாகும்.

22 வது உலா (14-5-79) இங்கிருந்து 55 பேர் புது டில்லி சென்று நடாத்தினர்; தமிழகத்தினின்றும் ஓர் இலக்கிய அமைப்பு தலைநகர் சென்று கூட்டம் நடத்தியது இதுவே முதன்முறை! ஆண்டுதோறும் தொடக்க விழா மலரும் வெளி யிடுகின்றனர்:

தமிழறிஞர்கள் திறனாய்வர், கவிஞர் கலைஞர், எழுத்தாளர் இதழாசிரியர்கள், படைப்பாளர் பதிப்பகத்தார்-இவர் கட்கிடையே ஓர் இணைப்புப் பாலமாக இலங்குகிறது. புதிய எழுத்தாளர் பலர் புறப்பட்டுளர்; மது. ராஜேந்திரன், வெங்கடேசரவி, தாராபாரதி, மது கணேஷ், எம். வி. குமார், எஸ். குமார் போன்றார் குறிப்பிடத்தக்கோர். இப்படிப் புதிய எழுத்தாளர்களை இனங் கண்டு ஊக்கி, ஓர் இளந் தலைமுறை எழுத்தாளர் சமுதாயத்தை உருவாக்கும் பாசறையாகப் பிறங்குகிறது.

'விமர்சனக் கலை வளரப் பாடுபடும் குறிப்பிடத்தக்க அமைப்பு (தீபம்); தரமான இலக்கியம் வளர இது உதவும் (அமுதசுரபி); வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயம் உளது. அங்கே இன்னொரு சரணாலயமும் - இலக்கியச் சரணாலயமும் உள்ளது (கல்கி); இந்த வீதி ஓர் அனைத்து நாட்டு வீதியானாலும் ஆச்சரியப்படுதற்கு இல்லை (ராணி முத்து), வாசகர் விமர்சகர் படைப்பாளி மூவருக்குமே உதவுவது (வல்லிக் கண்ணன்);இலக்கியத் தரத்தையும் திறனாய்வையும் உயர்த்திச் செம்மைப்படுத்தி இருக்கிறார்கள் (சு. சமுத்திரம்); தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு ஆக்கபூர்வமாகத் தொண்டாற்றி வருகிறது; தமிழ் நெஞ்சங்களின் பாராட்டை மேன்மேலும் பெற்று வருகிறது. (தி. க. சிவசங்கரன்); மழைமேகம் கண்டால்தான், பயிர் மகிழ்கிறது; வான் ஒளியைப் பார்த்தால்தான், மலர்கள் விரிந்து மகிழ்கின்றன; இலக்கிய வீதியைக் கண்டுதான், எழுத்தாளர்கள் எழுச்சியும் மகிழ்ச்சியும் பெறுகிறார்கள் (பகீரதன்).

நல்ல இலக்கியத்தைக் கண்டெடுப்பதிலும் தரம் பிரித்துப் போற்றுவதிலும், நல்லிலக்கியம் படைப்போரைப் பாராட்டுவதிலுமாகச் செய்துவரும் அரும்பணியால் - இந்த இயந்திர யுகத்தின் காகிதப் புயலில் நல்லவர்கள் ஒண்டிக்கொள்ள வசதியளித்துப் பாதுகாப்பு நல்கும் நல்ல நிறுவனம் (வி. ராமமூர்த்தி ஐ. ஏ. எஸ்.). மூன்றாண்டுகளில் முப்பதாண்டுப் புகழைப் பெற்று விட்டது (பூவண்ணன்). மொழி வெறியின்றி அரசியல் சார்பின்றி சுத்த சுயம்பிரகாசமான ஓர் இலக்கிய தாகத்துடன் செயல்படும் இந்த அமைப்பு, தமிழனுக்குக் கிடைத்த ஒரு வரப் பிரசாதம் (நா. சீ. வரதராஜன்). வெறுமனே கூட்டம் போட்டு கலைந்து போய் விடுகிற ஒரு வெற்று அமைப்பல்ல; புதிய இளம் படைப்பாளிகளைத் தமிழகத்துக்குத் தந்துளது. இதுதான் இ. வீ. யில் என்க்கு மிகப் பிடித்த அம்சம் (வண்ண நிலவன்) எழுதும் இனத்தில் எவ்விதப் பாகுபாடுமின்றி இலக்கியம்-

இலக்கிய எழுத்து-எழுதும் இனம் என்பவை Property of mass என்ற விதத்தில் பரந்த மனத்தோடு இயங்கி வருவதால் பெரும் பாராட்டைப் பெறுகிறது (விட்டல்ராவ்).

வெளியூர்ப் பறவையெல்லாம் ஒரே இடத்தில் கூடினால் அதற்குப் பெயர் வேடந்தாங்கல்; வேடந்தாங்கலே பறந்து சென்று வெவ்வேறு ஊர்களில் முகாமிட்டால் அதற்குப் பெயர் இலக்கியவீதி (தணிகைச் செல்வன்) தமிழ் நெஞ்சங்கள் இறும்பூ தடையும் வகையில் எழிச்சியுடன் பணியாற்றும் இலக்கிய வீதியை, அகன்ற நெடுஞ்சாலை என்று அழைக்கலாம் (நாவலர் நெடுஞ்செழியன்). குடத்து விளக்குகளைக் குன்றின் மேல் ஏற்றி வைக்கும் இலக்கிய வீதி (வெங்கடேச ரவி).

செங்கற்பட்டு மாவட்ட முக்கிய நகரங்களுக்கெல்லாம் சுழல் உலா சென்று வந்துளது. பூதலூர் முத்து வேண்டியவாறு புதுவை உலா நிகழ்ந்தது. 81 இல் 'பாரதி ஒரு பார்வை' எனத் திங்கள் தோறும் பாரதி வேள்வி நிகழ்ந்தது. 84 இல் நினைவுக் கலை ஏந்தல் திருக்குறள் தசாவதானி பெ. இராமையா அவர்களை அருங்குறள் அவதானி என்கிற பட்டத்தோடு அரசின் கவனத்திற்குக் கொணர்ந்து அரசுக் கலைஞராகவும் செய்தது. 20-5-84 இல் தென்னிந்தியாவின் மான்செஸ்டர் கோவையில் பெருவிழா நடத்தியது. பட்டு நகரில் பட்டு நூல் (நல்லி குப்புசாமி எழுதிய வெற்றியின் வரலாறு) 'வாழ்வுக்கு வழிகாட்டும் அறிவு நூல்களும் ஆராய வேண்டியவையே' என்ற வகையில் வெளியிட்டு ஆராய்ந்தது. 10-1-85 இல் தேவகோட்டையில் திருவிழா எடுத்தது. 26-5-85 இல் நாட்டுப்புறக் கலைவிழா நடாத்தி கொல்லங்குடி கருப்பாயியை நாடறியச் செய்தது.

எழுத்தாளர்களை ஏத்துவதோடு தமிழறிஞர்களைப் பெருமைப் படுத்துகிறது; பழங்கலைகளையும் போற்றுகிறது. தனி எழுத்தாளர்தம் படைப்புகளை ஒட்டு மொத்தமாகத் திறனாய்கிறது. மொத்தத்தில் முத்தமிழையும் முனைந்து போற்றிவருகிறது.

இத்தனைக்கும் இயக்கு சக்தியாக இலங்குபவர் **இனியவன்** (வீ. லட்சுமிபதி). 20. 4. 1942. 16 வயது முதலே எழுதி வருபவர்; குழந்தை எழுத்தாளராக அறிமுகமானவர்; 9 ஆம் வகுப்பில் பயிலும் போதே சிறுவர் இதழ் நடாத்திய சிறுகதைப் போட்டியில் முதற்பரிசு பெற்றவர். கண்ணன் நாவல் போட்டி,

விகடன் முத்திரைக் கதை, (செங்கற்பட்டு) மாவட்ட சிறுகதைப் போட்டியில் 1000 ரூ; கல்கி நினைவு நாவல் போட்டி முதற் பரிசுகள் பெற்றவர். 10க்கும் மேற்பட்ட புதினங்களும் நூறுக் கும் மேலான சிறுகதைகளும் படைத்தவர்.

பொன்மனம், புனித நெஞ்சம், முள்கிரீடம், தியாகக் கோட்டை போல்வன சிறுவர் நூல்கள். விதியின் கை, காவியக் கனவு, நெஞ்சங்கள், நெருப்பு மலர், ஒருத்தி இன்னொருத்தி, ஆசைகள் தூங்கட்டும், இலட்சியங்கள் தோற்பதில்லை, கல்யாண ராகங்கள், தனிப் பறவை, இலட்சியப் பெண் போல் வன பெரியோர்க்குரியன. 'வேடந்தாங்கல்' பறவை இயல் + பயண நூல்.

பெயருக்கேற்பப் பழகுதற்கு இனியவர்; கனிவும் பணிவும் மிக்கவர்; பாசமும் நேயமும் நிறைந்தவர்; நட்பு நெஞ்சம் கொண்டவர். இலக்கிய வீதியை ஓர் இயக்கமாகக் கண்ணை இமையிரண்டும் காப்பது போல் வண்ணமுறக் காத்திடும் அமைப்பாளர். நல்லோர் எல்லோரையும் அரவணைத்துப் போகும் பண்பினார்; 'இங்கிவனை யான் பெறவே என்னதவம் செய்து விட்டேன்' என்கிறாள் இன்றமிழன்னை! **முகவரி** விநாயக நல்லூர், வேடந்தாங்கல், மதுராந்தகம் வட்டம், செங்கற்பட்டு மாவட்டம் - 603314.

**புஷ்கின் இலக்கியப் பேரவை** : 1972. சோவியத் நாட்டின் மகாகவி அலெக்சாண்டர் புஷ்கின் நினைவாகச் சோவியத் பண் பாட்டு மையத்தில் தொடங்கப்பெற்றது. இந்திய - சோவியத் நட்புறவை வலுப்படுத்தும் முற்போக்கு இலக்கியக் கருத்துக் கள் முழு அளவில் மக்களிடம் சென்று சேரச் செய்யும் நோக்கினது.

பேரவையின் பாதுகாவலர் - ஆலோசகர்கள்: ந. சஞ்சீவி, த. கோவேந்தன், கே. சி. எஸ். அருணாசலம், ஈரோடு தமிழன்பன், பொன்னடியான், குருவிக்கரம்பை சண்முகம், எம். எஸ். தியாகராஜன், நா. முகம்மது செரிபு, நீலகண்டன், இரா. இளவரசு. **தலைவர் சலாவுத்தீன்.**

செயல் திறனிகள்: காதல்மதி, பழநிபாரதி, அறிவுமதி, அறிவுமணி, இமாநுத்தீன், சிவகுமார், அப்துல்சலீம், ஆனந்த், நீலமேகம், காசிம், குழ. கதிரேசன், இளங்கோவன், புகழேந்தி, சீதையின் மைந்தன், சம்பத் குமார் போன்ற எழுச்சிக் கவிஞர் களும் இலக்கியத் தாரகைகளும்.

சாதனைகள்: திங்கள் தோறும் கருத்தரங்கம், கவியரங்கம், இசை நிகழ்ச்சி, நேருக்கு நேர், புத்தக வெளியீடுகள், இலக்கிய ஒப்பாய்வு, யாப்பு வகுப்பு, பட்டிமன்றம், இலக்கியப் போட்டிகள், மாணவர்கட்குக் கவிதை கட்டுரை பேச்சுப் போட்டிகள். மூன்று திங்கட்கு ஒரு முறை சிறப்பு மலர். மொழிபெயர்க்கின்றன: சோவியத் கவிதைகள் தமிழிலும், தமிழ்க் கவிதைகள் ஆங்கிலத்திலும். கோவேந்தன் (சோவியத் கவிஞர் நூற்றுவர்), சலாவுத்தீன் (வாழும் கவிஞர் ரசூல் கம்சதோவின் 'என் தாஜெஸ்தான்'), இமாநுத்தீன், காதல்மதி, பழநி பாரதி போன்றார் ஆற்றுகின்றனர். தமிழகம் வரும் சோவியத் அறிஞர் கலைஞர்களுடன் கலந்துரையாடல்கள். 86 முதல் நாடகப் பிரிவு. ஆனந்த் தலைமையில் நிலவுகிறது. இளைஞர்கட்கு வாய்ப்பளிக்கிறது. தனி நடிப்பாளர் தனி நாடகாசிரியர்களையும் இணைத்தும் செயற்படுகிறது. **முகவரி:** 27, கஸ்தூரி ரங்கன் சாலை, சென்னை - 18.

**திருக்குறள் பேரவை :** *11-6-1973.* தொடக்குநர் தவத்திரு **குன்றக்குடி அடிகளார்.** குறளுக்குப் பதவுரை பொழிப்புரை கூறிக்கொண்டிருப்பது அல்ல நோக்கம்; வள்ளுவரின் சிந்தனைகள் செயல் வடிவம் கொள்ளவேண்டும், வள்ளுவர் காட்டும் சமூக, சமய அரசியல் பொருளியல் நெறிகள் மலரவேண்டும், இந்நெறி பரவின் உலகு உய்யும். இந்நெறி ஒரு சார்பு ஒரு நாட்டுக்கு காலத்துக்கு உரியதன்று; எந்நாட்டுக்கும் எக்காலத்துக்கும் எல்லோர்க்கும் பொது நெறி. எனவே குறளினை உலகப் பொது மறையாகக் கொள்ள வேணும் என்பது நோக்கம்.

அனைத்துச் சமயத்தாரும் சமயமில்லாப் பகுத்தறிவாளரும் உறுப்பினராகலாம். எல்லா மாவட்டங்களிலும், கிளைகள் உண்டு. சமயக் காழ்ப்பு இன்றி இயங்குதல் இதன் கருத்து. இராமநாதபுரம் நாகர் கோவில் சமயக் கலவரங்களின் போது பேரவையின் வள்ளுவர் வழி நின்று ஆற்றிய தொண்டு போற்றுதற்குரியது.

'செய்க பொருளை' என்பது வள்ளுவர்வழி. இதற்கிணங்கப் பல்வேறு கருத்தரங்குகள் நிகழ்ந்தன. விளைவு: குன்றக்குடியில் தழைத்துள்ள தொழிற் கூடங்கள். வேலையில்லாத ஒரு வீடு கூட அங்கில்லை. வறுமை அகன்றது. இவை ஒரு புறமிருக்க, மற்றொரு பக்கம் வள்ளுவர் சிந்தனையை ஒட்டி அடிகளார் குறளுக்கு உரை வரைந்து வருகிறார்.

பேரவையின் **செயலர்** ஒரு தொழிலாளி! படித்துப் பட்டம் பெற்றவரல்லர். பெயர் ந. சண்முகம். குறட்சிந்தனை

கூடியவர். பொறுப்பாளர்களில் போற்றுதற்குரியர்: தஞ்சை புலவர் பழநிமாணிக்கம், கோவை இளங்கீரன், சேலம் சின்னாண்டார், நாகை இராசு, குடந்தை ஆதீன மிளகி, பேரா. சாமி தியாகராசன். **முகவரி:** அடிகளார். குன்றக்குடி.

**இலக்கிய வளர்ச்சிக் கழகம். :நீடாமங்கலம் :** 6-2-1980. நிறுவனத்தலைவர் மருத்துவர் மறையரசன். திங்கள் ஒரு கூட்டமாக இலக்கிய ஆய்வு, படைப்பாளிகளின் அறிமுகம், படைப்புக்களின் அரங்கேற்றம், பட்டிமன்றம், பாட்டரங்கம், வழக்காடு மன்றம், கருத்தாய்வு எனப் பல்வகையில் பைந்தமிழ் பரவுகிறது. எழுத்தாளர்கள், பாவலர்கள், வானொலி நாடகாசிரியர்கள், பேச்சாளர்கள் எனப் பலரை ஊக்கி உருவாக்கி வருகிறது. முல்லைக்கரை கணேசன், சித்தமல்லி செகந்நாதன் குறிப்பிடத்தக்கோர். ஒவ்வொரு வியாழனும் பாவேந்தர் பாடல்களை நடத்தி இலக்கிய அறிவூட்டம் பெறச் செய்கிறது. 23-9-1984இல் எழுத்தாளர் மன்றம், பாவலர் மன்றம், சிறுவர் மன்றம் எனப் பல தனிமன்றங்கள் கிளைத்திடச் செய்துளது. ஈழத்தமிழ்ப் பிரச்சினைக்குக் கணிசமாகக் கைகொடுத்துளது. ஈழத்துயர்காட்டும் வெளியீடுகளும், ஈழத் தமிழ்க் கவிஞர்களை அழைத்து அவர்கள் வேட்கையினைப் பேசச் செய்தும் பங்காற்றியுளது. **முகவரி :** நீடாமங்கலம் 614404.

**பன்னாட்டுத் தமிழுறவு மன்றம்** நிறுவநர்: **பெருங்கவிக்கோ** வா. மு. சேதுராமன். **நோக்கம்:** தமிழ் தமிழின உயர்வு, பன்னாட்டு உறவு, பொதுப் பயன்தரு ஆக்கம், தன்னல மறுப்பு. **கொள்கை:** உண்மை உறுதி உழைப்பு துணிவு அறுவடை எனும் ஐம்பெரும் ஆற்றல்களை உலகத் தமிழர்க்கு உணர்த்தலும் ஊட்டுதலும். **குறிக்கோள்:** அயல்நாடுகளில் தாய்த் தமிழை மறவாது காக்க — ஆசிரியப் பெருமக்களை அனுப்பிக் காப்பது. வெளிநாட்டுத் தமிழர்களை நெஞ்சார வரவேற்றுப் போற்றுவது. புத்தகம் போன்றன திரட்டி அனுப்பல். உலக அரங்கில் உயர் தனிச் செம்மொழியாம் தமிழினை நிலை நாட்டல், படித்தவர்களிடம் அடிமை மனப்பான்மைகளைக் களைந்து துணிவைத் தோற்றுவிப்பது. உலகத் தமிழறிஞர் களைக் ஒன்று படுத்துவது. தமிழறிஞர்களைக் கொண்டும் கொடுத்தும் தொடர்பு ஏற்படுத்துவது. இது அரசியல் சார் பற்றது. உலகெங்கணும் உள்ள (32) பன்னாட்டுத் தமிழர்களின் இணைப்புப் பாலமாக அமையும் இதன் **முகவரி:** 12. சாயி நகர் இணைப்பு, ஐயப்பா நகர், சென்னை-111 (423375).

**பாரதி பாசறை** : 11-1-1982இல் தோற்றியோர் ஜே. சஞ்சீவி ராவ், கா. இ. இராமானுஜம், ப. நா. நடராஜன். இளைய நம்பி தலைமையில் கவிஞர் வானம்பாடி தொடங்கி வைக்க, கவிஞர் கு. சா. கி. வாழ்த்துரை வழங்கினார். கோ. கலிவரதன், பரந்தாமன், துமிலன் மூவரும் முறையே பாரதி ராஜாஜி கல்கி படங்களைத் திறந்தனர். குருவாயூர் பொன்னம் மாள் பாரதி பாடல்களைப்பாடினார். பாரதி நூற்றாண்டுத் தொடக்கத்தில் பிறந்ததால் இப்பெயர் ஏற்றது பாரதி இலக்கியங்களைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து கூறும் நிலைக்களமாவதும் அவர் அடிச்சுவட்டில் வந்த அறிஞர்கள் பற்றி மக்கட்கு எடுத்துக் கூற வாய்ப்பளிப்பதும் கடமையாகப் கொண்டது.

திங்கள் தோறும் கூட்டம் நிகழ்த்துகிறது. பாரதி கருத் தரங்குகள் பல; பேச்சு கட்டுரைப் போட்டிகள் பல.மறுமலர்ச்சி தமிழின் முதல்வர் வ. ரா. பிறந்த நாள் கருத்தரங்கு, எழுத்துலக மேதை தி. ஜானகிராமன் நினைவுப் பொழிவு, பி. எஸ். ராமையா நினைவு சிறுகதைப் போட்டி, மணிக்கொடி பொன்விழா கருத்தரங்கு, எழுத்து வெள்ளிவிழா, தீபம் 20 ஆண்டுப் பணிப்பாராட்டுவிழா, ராஜாஜி கட்டுரைப் போட்டி எனப் பயனான பாங்கான பணிகளை ஆற்றி வருகிறது. துணை நிற்போர் இலக்கிய இரட்டையர் சிட்டி சிவபாதசுந்தரம், நா. பார்த்தசாரதி. ஆண்டு விழாக்களையும் அழகாக நடத்து கிறது.

நான்காண்டுகளாக நற்பணியாற்றி வரும் தூய இலக்கிய ரசிகர்குழு இது. அரசியல் வாடையே அடிக்காத தமிழ் ஆர்வம் தூண்டும் ஒப்பற்ற பாசறை இது. **முகவரி:** 13, நல்லப்பன் தெரு, மயிலாப்பூர், சென்னை-4; மாடி. 24-தேவநாதன் தெரு, சென்னை-28

**தெய்வத் தமிழ் மன்றம். சென்னை** (1983) நிறுவனத் தலைவர் **பி. வெங்டேசன்.** தெய்வ நம்பிக்கையில் இயங்கி, சமுதாய நலனுக்குச் செயலாற்றும் சீரிய நிலையம். ‘தொண்டு செய்- செய்து கொண்டே இரு’ இது மன்றத்தின் மா **மந்திரம்.** சிவப்பிடை மஞ்சள் நிறம் துளங்க சேர் மஞ்சள் நடுவே ஓம் விளங்கும் கொடி. சிவப்பு தியாகம், மஞ்சள் தியாகத்தில் தோற்றும் அருள் நிலை, ஓங்காரம் அருள் ஒலி குறிக்கும். கொள்கைகள் 11. கடவுள் ஒருவரே, எண்ணம் - செயல், அற - அருள் நோக்கொடு அமையவேண்டும். மக்கள் துயர் துடைப்

பது, தமிழுக்கு முதலிடம், ஆன்மீக இலக்கியச் சமுதாயத் தொண்டு, தாய்மொழி-மதம்-நாடு உயிர்ப்பாதல் அனைவரிடமும் சம நடப்பு, காலை மாலை இறைவணக்கம், தெய்வத் தமிழ் நூல் ஓதல், ஒழுக்கநெறி நிற்றல், எழுத்துபேச்சு இசை மக்கட்கே, திரிகரண சுத்தி. மன்றின் முதன்மை **நூல்கள்** திருக்குறளும் திருவருட்பாவும்.

ஒவ்வொரு திங்கள் முதல் ஞாயிறு காலை ஆன்மீக இலக்கியக் கருத்தரங்கு, திருக்குறள் - திருவருட்பா வகுப்புகள், மார்கழி இசை விழா, திருவள்ளுவர் திருநாள் ஒருவாரம், பெரியபுராண வகுப்பு, திருக்குறள் திருவருட்பா திருநெறித் திருவுலா, திருக்குறள் இசைநாட்டிய நாடகம், திருக்குறள் நாடகம், மருத்துவ முகாம், இலங்கைத் தமிழர் நல இசை, அஞ்சலி, சிறைச்சாலை நல்லொழுக்க நல்லுரை, அறுத்துப் பால், ஆண்டுமலர் வெளியீடு, பட்டங்கள் அளித்தல் போன்றன மூன்றாண்டின் சாதனை.

தமிழ்ப் பண்பாட்டு இயக்கமாக - தேசிய ஒருமைப்பாட்டு நிலையமாக நிலவுகிறது வித்துவான் ஆ. இரா. சுலோச்சனா பி. லிட் செயலராகச் சிறக்கிறார். மன்றத்தின் பணிகள் மேன்மையன. திருக்குறள், திருவருட்பா, மார்கழி இசைவிழா அறக்கட்டளைகளுக்கு முறையே கே. ஆறுமுகசாமி, டாக்டர் வி. எஸ். நாகராஜன், திரு அழ. சுப. அழகப்பன் தலைவர்களாகத் திகழ்கின்றனர். மன்றின் **முகவரி:** அஞ்சல் பெட்டி 1190. 573, டி. எச். சாலை, வண்ணையம்பதி, சென்னை 21.

**தேவசபை:** கவிஞர் திருலோக சீதாராமன் கண்டது. திங்கள் ஒரு முறை கூடி இலக்கிய சர்ச்சை-கலந்துரையாடல் நிகழ்த்தும் சபை இது. கரிச்சான்குஞ்சு, டி. என். ராமச்சந்திரன், ஆங்கிலப் பேராசிரியர் கே. ஜி. சேஷாதிரி, தி. சா. ராஜு, போல்வார் கூடித்திறம் பேணுவர். ஆங்கில - தமிழ் இலக்கிய ஈடுபரிவர்த்தனை நிகழும். சிறந்த இலக்கியப்பகுதிகள் தமிழ் ஆங்கில ஆக்கம் பெறும். காலை உணவும் பிற்பகல் சிற்றுண்டியும் நடக்கும். சிற்சில போது ஒவ்வொருவர் வீட்டில் பிறர் கூடுவர். கவிஞர் மறைந்த பின்பும் கே. ஜி. எஸ் போன்றார் இதனை அவ்வப்போது கூட்டுகின்றனர். தேவை சபை என்றால் தெய்வீக சபைதான்! இலக்கியம் இதிகாசம் போன்றன இரண்டறக் கலக்கும்; தமிழும் ஆங்கிலமும் சங்கமமாகும்; இலக்கிய வரலாற்றில் இச் சபையின் சாதனை ஒரு மைல் கல் என்னலாம்.

**நெய்வேலி இலக்கிய மன்றம்**: இதற்குத் தலைவர் செயலர் பொருளாளர் இல்லை. மூத்த செயல்திறம் மிக்க உறுப்பினர் ஒருவர் பொறுப் பேற்று நடத்துவார். இதனால் போட்டி பொறாமை பிரிவு என்ற புன்மை இன்றி, உண்மையான இலக்கிய மலர்ச்சியும் வளர்ச்சியும் விளைகின்றன. முதன் முதல் தமிழகத்தில் கோடை வகுப்புகள் நடாத்திய பெருமையது; நான்கு நாட்கள் நடந்தது. புதுமைப் பித்தன் திறனாய்வு போன்றன பொருளாக அமைந்தன. நடப்புகள் பெரும்பாலும் சமுதாயத் தொடர்பாக - பொதுவுடைமைப் போக்கினதாக அமையும்.

ஒவ்வோராண்டும் படைப்பாளி - எழுத்தாளர் என எடுத்துக் கொண்டு ஒவ்வொருவர் வீட்டில் தொடர்ச்சியாகக் காலை உணவு, மதிய உணவு-மாலை சிற்றுண்டிக்கிடையே கூடி உணவருந்திக்கொண்டே அளவளாவுதல் கலந்துரையாடுதல் வழக்கமாகக் கொண்டுளர். சுற்றுலா இடங்கட்குச் சென்று அங்குக் கூடி விளையாட்டாக இலக்கிய உலா நிகழ்த்துகின் றனர்; வருகை தந்த விருந்தினரை ஒவ்வொருவரும் தம் சுற்றத் தவரினும் பெரிது உரிமை கொண்டாடி உறவாடி சாமி மத பேதமின்றிப் பேணிப் போற்றுகின்றனர் - தத்தம் வீட்டில் விருந்தினராக.

இவ்வகையில் முன்னணியில் நிற்போர் வங்கத் தமிழன், ராமச்சந்திரபாபு, ஈசுவரன், கேசவன் நாயர்; பிரியதர்சினி, லலிதா கணேசன் போன்றார். நிலக்கரி நகரில் இலக்கிய மணம் கமழச் செய்யும் இம் மன்றத்தின் மாட்சி பெரிது; மனங்கனிந்து போற்றத்தக்கது. உவகைக்குரிய ஒன்று.

## 58. வேளாண் தமிழ்

நாட்டின் பொருளாதாரமே பட்டிக்காட்டில்தான் நிலவு கிறது. நிலைபெறுகிறது. அதனாற்றான அண்ணல் காந்தி, கிராமத்திற்கு முக்கியம் தந்தார். வள்ளுவரும் 'உழவு' என்றோர் அதிகாரம் அமைத்து, 'சுழன்றும்' ஏர்ப்பின்னது உலகம், அதனால் உழந்தும் 'உழவே தலை' என்றார். அவ்வையும் மேழிச் செல்வம் கோழைப்படாது என்றார். கம்பரும் 'ஏரெழுபது' எழுதினார். கடவுள் என்னும் முதலாளி கண்டெடுத்த தொழிலாளி விவசாயி.

இதுபற்றிப் பேசுவது வேளாண் தமிழ். தமிழில் வேளாண்மையும், வேளாண்மையில் வண்டமிழையும் கண்டவன் தமிழன். 'வெள்ளைக்குடி நாகனார்' என்ற வேளாண் புலவரே சங்க காலத்தில் இருந்துள்ளார். அந்த மரபு கெடாது இன்றும் தமிழ் பயின்றோர் வேளாண் கல்லூரிகளில் விளங்குகின்றனர். பி.ஆர். மீனாட்சி சுந்தரம், ஜி. சங்கரராசு போல்வார் முன்னம் பொலிந்தனர். வேளாண்மைப் பயின்றோர் பலர் தமிழ்ப் பற்றும் பாண்டியத்துவமும் உடையவர்களாக ஒளிர்கின்றனர். வேளாண்மை பற்றி வளமுடன் பேசவும் எழுதவும் செய்கின்றனர். எனவே வேளாண்மைத் தமிழினை அறிந்து மகிழ்வதில் ஒரு சுகம் உண்டு

**வி. டி. சுப்பையா முதலியார்:** *27-12-1897.* நெல்லை வெள்ள கால் கோவை வேளாண் கல்லூரியில் பேராசிரியராகப் பிறங்கியவர். கால்நடை நிர்வாகமும் பால்பண்ணையும், தென்னிந்தியப் பயிர்கள் (சென்னை அரசின் பரிசு), இயற்கைப் பாடமும் தோட்டத் தொழிலும், விவசாயத் துணைத் தொழில்கள். விவசாய மூலம், விவசாய சாஸ்திரம்; Principles of Agrono my, Hand book of Animal Husbandry & Dairying, Field crops of South India. **தொடர்புக்கு** *290,* மேலப்பாளையம் கீழத்தெரு, அம்பாசமுத்திரம்.

**சி யு. நஞ்சப்பா:** *5-5-1900.* தொழில் வேளாண்மை; அனுபவ அறிவை *41* முதல் எழுதி வருகிறார்: அனுபவ விவசாய நூல், புகையிலை பயிர் செய்தல்; வாழ்க்கை அனுபவம், உலக அனுபவம், மனோதத்துவ ஆராய்ச்சி. **முகவரி** சிக்காரம்பாளையம் அஞ்சல், காரமடை (வழி), கோவை மா.வ

**ச. கு. கணபதி:** *25-9-1900.* சொந்த ஊர் ஈரோட்டை அடுத்த சமய சங்கிலி பிறந்த ஊர் தாய்வழிப்பாட்டனார் ஊர் சேலம் மாவட்ட சேந்தமங்கலம். குருசாமி சாஸ்திரிகள்: பர்வத வர்த்தினி. ஈரோடு மகாஜன உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 22இல் முடித்துப் பள்ளி ஆசிரியராக வாழ்வினைத் தொடங்கினார். வேலூர் இந்து பள்ளியில் தமிழாசிரியராகத் திகழ்ந்தார். 32இல் சென்னை வந்து ரெங்காசாரி சென்னை தோற்றோரியல் கல்லூரியில் விரிவுரையாளர்; சேவாசதன் உயர்நிலைப் பள்ளியில் *33-40* பணியாற்றி, *41-42*இல் சென்னை மகளிர் கிருத்துவக் கல்லூரி விரிவுரையாளராக விளங்கி, *43-50* உ. வே. சா. நூல் நிலையத்தில் பணியாற்றினார். 50-65 கலைமகள் காரியாலயத்தில் நூல் வெளியீட்டுத் துறை ஆசிரியராக

இருந்தார். அதன்பின் இந்த 20 ஆண்டுகளாக நூல் எழுதியும் எம். ஏ. பயில்வோர்க்குப் பாடம் நடாத்தியும் வருகிறார்.

மாணவ நிலையிலேயே தனியே தமிழ் பயின்று வித்துவான், பி. ஓ. எல், (40) எம்.ஏ. (51) பட்டங்கள் பெற்றார். உ.வே.சா. திருவடி நிழலில் தமிழையும் பதிப்பு முறையினையும் திருந்தக் கற்றார். முதல் மாணவர் எனும் பெருமையர். கருங்கல் பாளையத்தில் பாரதியைக் கண்டவர்; ச. து. சு. யோகியின் நண்பர். புரட்சியுள்ளம் படைத்தவர். எதையும் அறிவியல் அணுகு முறையினர். சாதி மத பேதம் கடந்தவர். ஆரிய பிரம சமாஜத் தொடர்பும் அடையாறு பிரம ஞான சங்க நெருக்கமும் மிக்கவர். ஆங்கிலமும் கற்றுத்துறை போயவர். 16இல் மணம் வெங்கலட்சுமி. 40இல் மூத்த மகனும் மனைவியும் மறையவே, துயர் திருப்ப நாட்டு நற்பணியிலும் தமிழ்ப் பொற்பணியிலும் மூழ்கினார்; ஆற்றுப்படுத்தியவர் இ. லே. சோமசுந்தரனார். கிராம சேவை, வேளாண்மை நூற்கள் படைத்தலில் முனைந்தார். தோட்டக்கலையியலில் தோன்றாத் துணையானார். ‘கிராமஜோதி நூலகம்’ எனப் பதிப்பகம் வைத்துப் பின் அமுத நிலையத்தோடு இணைத்தார். மறுமணம் 42இல், மகராட்டிரப் பெண் பத்மாவதி. மகன் சுவாமிநாதன் சேலத்தில் பள்ளித் தமிழாசிரியர்; ஜாகீர் அம்மாபாளையத்தில் வசிக்கிறார்.

நூல்கள்: தோட்டக்கலை, பழத்தோட்டம், வீட்டுத் தோட்டம், பண்ணை வாழ்க்கை, காய்கறிப் பயிர்முறை, கீரையோ கீரை, தக்காளி, தென்னை வளர்ப்பு, தென்னாட்டுப் பழங்கள், மலருலகின் விந்தை; கோழிப்பண்ணை, கறவை மாடு, ஆடு வளர்ப்பு, தேனீ வளர்ப்பு, பத்தே கோழிகள், மீன் செல்வம் என 40 நூல்கள் படைத்தார். அதனோடேயே வில்லி பாரதத் திறவுகோல், தமிழின் கதை, பாதாளப் பேச்சு, நெருப்பிலே தோன்றிய நேரிழை; வில்லாசிரியர், தியாக வீரர், கொடை வீரன், வீர இளைஞன், காரிகை உரை, கும்பேசர் குற வஞ்சி, நவநீதப் பாட்டியல், பரத சேனாபதீயம் என 30 இலக்கிய நூற்கள் எழுதினார்—பதிப்பித்தார். சர்க்கரை நோயுடன் சகஜ வாழ்வு, சூலை நோயுடன் சுமுக வாழ்வு, குமரிக்கண்டத்தமிழர், சந்தப்பாவில் தமிழர் சரிதம், யாப்பருங்கல விளக்கம், விருத்தித் திறனாய்வு. நீரிழிவு நோயும் நிவாரணமும், பாரத கலாசாரத்தில் உடல் நலமும் மருத்துவமும், முதுமையில் நல்வாழ்வு போன்றன அண்மை வெளியீடுகள். பல நூல்கள் மைய மாநிலப் பரிசுகள் பெற்றன.

குடும்பத்தைக் கவனிப்பதுகூடத் தமிழ்ப் பணிக்குப் பின்பே என்ற பேருணர்வால் வாழ்நாள் முழுதும் வண்டமிழ்த் தொண்டாற்றி வரும் இத்தக்காரைத் தமிழுலகம் புரிந்து போற்றாது போனது. வெளியுலகின் பகட்டை விரும்பாது அடக்கமாக வாழ்பவர். ஆதலால் இவர் அருமை பெருமை ஆரவார உலகு அறியாது போனது.

கண்ட கருத்துக்கள் சில: 'சிவபெருமான் தமிழர் கண்ட தெய்வம்; சிவ வழிபாடு தெற்கே இருந்தே பல இடங்களுக்கும் பரவியது. நாகரிகம் முதலில் தமிழ்நாட்டிலேதான் தோன்றியது; குமரி பஃறுளியாற்றுப் படுகையிலேயே மிகப் பழைய நாகரிகம் பிறந்தது. அன்னைக்கு இறைவனிலும் ஏற்றம் கொடுத்தவர் தமிழரே. அன்னை வழிபாடு, தமிழ் நாட்டிலிருந்தே வேதங்களில் புகுந்தது. கால்டுவெல் சொல்லுவது போல் திராவிடம் என்று தனிமொழி ஒன்று என்றும் இல்லை; தமிழே மிகப் பழைய மொழி. கிராம நகராட்சி இரண்டும் தமிழ்நாட்டில் தோன்றி வேறிடங்களில் பரவியது. **முகவரி** 15- ஏ. சாரங்கபாணி தெரு, கிருஷ்ணபுரம், அம்பத்தூர், சென்னை-53.

**கு. சங்கர நாராயணன்:** *16-9-1916.* காமராசர் மாவட்ட ஸ்ரீ வில்லிபுத்தூர் வட்ட அ. இராமலிங்கபுரம். குருசாமி நாயக்கர்: ராமலட்சுமி. சி. எம். எஸ். உயர்நிலைப்பள்ளி. திருவையாறு அரசர் கல்லூரி வித்துவான் 39இல். 39-41 ஆரம்பப் பள்ளி ஆசிரியர், 41-43 'பாரதி' நிருவாகி, 44-47 விருதுநகர் முகவை மாவட்ட காங்கிரஸ் கமிட்டி அலுவலக நிர்வாகி, 47-72 கிராம சேவக்-ஓய்வு. நூல்கள்: ஆடு வளர்ப்பு, கோழிச் செல்வம், நமது இலைக் கறிகள், நமக்கேற்ற வைத்தியம், இன்றைய இந்தியா, விவசாயப் பழமொழிகள். கீரையின் மாண்பு, ஆண்டாள் வரலாறு.

'பாரதி' இதழாசிரியர் தேவாரம் ரா. நாராயணசாமி செட்டியாரும், தமிழ்வேள் உமாமகேசுவரம் பிள்ளையும் இரு கண்கள் இவருக்கு. மணம் 45இல், மனைவி வெங்கட்டம்மாள், ஆசிரியை. மக்கள்: பாமதி, புனிதவதி; கண்ணன், நவசக்தி, திருஞானம், **முகவரி:** 4. நம்பி நாயுடு தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர் 626 125.

**இராம. ஜெயராஜா** (வெற்றி வேந்தன்) **26-1-1927—22-6-80** தஞ்சை மாவட்ட மன்னார்குடி வட்ட ஆவிக் கோட்டை,

இராமசாமி மண்கொண்டார்: காசியம்மாள். 44இல் பின்லே உயர்நிலைப்பள்ளி இறுதி, 43இல் அண்ணாமலைப் பல்கலைக் கழக இன்டர், 49இல் கோவை வேளாண் கல்லூரி பி. எசி, 30இல் தஞ்சையில் பயிர்ப் பாதுகாப்பு அலுவலர், 64இல் மாவட்ட வேளாண் அலுவலர், 72இல் துணை இயக்குநர், 78இல் இணை இயக்குநர் 6 ஆண்டுப் பணி இருக்கும்போதே மாண்டார்!

50 தொடங்கி தமிழில் வேளாண்மை பற்றி அழகொழுகத் தெளிவாகப் பேசியும், வேளாண் கல்லூரித் திங்களிதழ் 'மேழிச் செல்வத்தில்' தொடர்ந்து நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் தீட்டியும் வந்தார். தமிழிலக்கியங்களில் தோய்ந்து திளைத்தவர். தமிழையும் வேளாண்மையையும் இணைத்து எழுதுவதும் பேசுவதும் இவருக்கும் கைவந்த கலை. வாரம் தவறாது கூட்டம்தான்! சோதிடக் கலையிலும் வல்லவர். எப்போதும் படித்துக்கொண்டே இருப்பார்; நூற்கள் வாங்கிக் குவிப்பதில் மன்னர். 4000 நூல்கள் உள. வேளாண் தமிழ் பரவி விரவி வந்த தொடக்கக் காலத் தொண்டர்.

மணம் 1-6-52. மனைவி திலகவதி; மக்கள் 3+4 ஜெயராமன், ஜெயக்குமார், ஜெயமார்த்தாண்டன். அறிவையும் மனத்தையும் கவனித்தவர், உடல்நலம் ஓம்பாது கூம்பினார்! வேளாண் துறையில் பெருமைக்குரிய அருமையர். **தொடர்புக்கு** 412 இடையர் தெரு, தஞ்சாவூர்-613001.

**அரு. சோலையப்பன் 6-9-1940.** தேவகோட்டை. வேளாண் அறிவியல் பட்டம் பெற்றவர். கதை, கவிதை, கரும்பு மூன்றிலும்கைதேர்ந்தவர். கரும்புப் பூச்சிகளை உயிரியல் முறையில் கட்டுப்படுத்துவது பற்றி ஆங்கிலத்திலும் தமிழிலுமாக 50 ஆராய்ச்சிக் கட்டுரைகள் படைத்தவர். மருந்தடித்துக் கரும்புப் பூச்சிகளைக் காப்பதை விட, எதிரிப் பூச்சிகளை ஏராளமாக வளர்த்து அதன் மூலம் கட்டுப்படுத்தலாம் எனச் செயற்படுத்திக் காட்டி, உலக விஞ்ஞானிகளின் உளம் கவர்ந்தவர். நூல்கள்: விந்தைமிகு வேளாண்மை, பணம் தரும் காய்கறிகள், தென்னை வளர்ப்பு, கரும்பின் கதை, இறவைப் பயிருக்குப் பயிர் பாதுகாப்பு, மானாவாரிப் பயிருக்குப் பயிர் பாதுகாப்பு, கரும்பிற்குப் பயிர் பாதுகாப்பு. விவசாயக் களஞ்சியம். மதுராந்தகம் கூட்டுறவு சர்க்கரை ஆலையின் 'மதுரக் கரும்பு' இதழின் பொறுப்பாசிரியாக இருந்துளார். இலக்கிய வீதியின் உறுதுணையாளர்களில் ஒருவர்,

கவியரங்கம் பல ஏறியவர், சிறுகதைத் தொகுதி 'ஒரு தாய் மக்கள்'; இலக்கிய வீதிப் பரிசுபெற்றது 'ஏமாற்றங்கள்'. மிதவைகள் (நாவல்) படிப்பினைக் கதைகள், முதுமொழிக் கதைகள் (சிறுவர் நூல்கள்). அறிவுக்கு விருந்தாகும் 1000 நீதிகள், ஆனந்த வாழ்விற்கு 1000 வழிகள், இனியவை 20, 200; பொன்மொழிப் புதையல்—அறிவு நூல்கள், **முகவரி** 2 பி. இராசேசுவரி வேதாசலம் சாலை, (கலைக்கல்லூரி எதிரில்), செங்கற்பட்டு-603 001.

**எஸ். எஸ். நாகராஜன்:** தினமணியில் திங்கள் தவறாமல் வேளாண் தமிழ் வரைந்துவரும் வள்ளல். ஜே. பண்ணையின் தலைமை வேளாண் பொருளியல் நிபுணர். உழவியல் நுணுக்கங்களை உளங் கொள்ளுமாறு திட்ப நுட்பமுடன் எழுதுவதில் வல்லவர். 'நெல் சாகுபடி' போன்ற பல நூல்களும் படைத்துள்ளார்.

தந்தையின் பெயர் சுப்ரமண்ய அயயர்; வேளாண்மையில் எம். எசி. பயின்று, கசடறக் கற்றனவற்றை உழவர் உலகிற்கு வற்றா ஊற்றாக வரைந்து வருவதோடு, சுடச்சுட உடனுக்குடன் புதியன கண்டும் புதுவன படைத்தும் வருபவர். ஜே. பண்ணையின் சாதனைகளை வெளியுலகு அறியவும், புதியரக நெற்களின் நீர்மைகளை நன்கு தெளிவாக்கியும் மக்களுக்கு வேளாண் தமிழ் அறிவு செலுத்தி வருபவர். ஜே. பண்ணையின் தோற்றுநர் விவசாய விஞ்ஞானி அனந்தராமகிருஷ்ணன்; தலைவர் அ. சிவசைலம்; தளபதி எஸ். எஸ். என். இந்திய வேளாண் வரலாற்றில் சாதனையாளராகச் சிறந்தொளிரும் இவரின் **முகவரி:** ஜே. பண்ணை. புதுப்பாக்கம். கேளம்பாக்கம் அஞ்சல்-செங்கை மாவட்டம்-603 103.

**இல. செ. கந்தசாமி:** 24-12-1939. சேலம் மாவட்டம் தந்த செழுந்தமிழ்ச் செல்வர். புலவர் மன்றத் தேர்வில் மாநில முதன்மை பெற்று ராசிபுரம் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகத் திகழ்ந்து, தனித்துத் தமிழ் எம். ஏ. எழுதி மாநிலத்திலேயே முதன்மை பெற்றுத் தங்கப் பதக்கங்கள் பல ஏற்றார். 71 முதல் தமிழ்நாடு வேளாண் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகப் பிறங்கி வருகிறார். 'தமிழர் வேளாண்மை மரபுகள்' என ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றார். பலரை ஊக்கித் தமிழ் பயிலச் செய்து சிறந்திடச் செய்துளார்.

**65 முதல் எழுதி வருகிறார்.** சங்க இலக்கியம் முதல் புதுக் கவிதை ஈறாக-வேளாண் தமிழ் வளர்க்கும் வகையில் 45 நூல்கள்

வரை படைத்துளார். பல்கலைக் கழகங்கள் பலவற்றில் பல பாட நூலாகப் பட்டொளி வீசுகின்றன.

நாவல்கள்: ஓ...அன்றில் பறவைகளே! சித்திரைக் கனி, கிராமத்து ஓவியங்கள், போர்வைகள். புதுக் கவிதை: ஒரு பார்வை, புதுக் கவிதையில் பெண்கள், வேளாண் இலக்கி யங்கள்: இலக்கியத்தில்-சங்க இலக்கியத்தில்-திருக்குறளில்-பழமொழிகளில்-நாட்டுப் பாடல்களில் வேளாண்மை; தமிழில் வேளாண்மை நூல்கள், இதழ்கள்! வேளாண்மைக் கலைச் சொற்கள், வேளாண்மையும் பண்பாடும், வேளாண்மைப் பழமொழிகள், இலக்கியத்தில் கால்நடை வளம்-நீர்வள நிர்வாகம், இந்த மண்ணின் மக்கள். வேளாண் அறிவியல் நூல்கள்: கால்நடை, தோட், மீன்வளம்; வேளாண் பொறிவியல். சமுதாயம் சார்ந்தவை: இதுவோ நாகரிகம், மறைவாக நமக்குள்ளே, காலச் சுவடுகள் சிந்தனை மலடுகள், சலனங்கள் சபலங்கள், கிராமங்களை நோக்கி, கிராமங்களுக்குள்ளே......இன்றைய வேளாண் தமிழின்-தமிழ் வேளாண்மை இலக்கியத்தின் முதல்வர்-முன்னவர் என இவரை ஏத்தலாம். 'வளரும் வேளாண்மை' திங்களிதழின் ஆசிரியர். சாகித்ய அகாதமி உறுப்பினர். கண்ணியம் மிக்கவர். தமிழறிஞர்களில் பெருமிதம் மிக்கவர். வாழ்வாங்கு வாழும் வளமையர். இங்கிவரை யான் பெறவே என்ன தவம் செய்துவிட்டேன் என இன்றமிழ் அன்னையே பெருமையுறும் பெற்றிய இவர் **முகவரி:** 15, லால்பகதூர் சாஸ்திரி தெரு, பாப்பா நாயக்கன் புதூர், கோவை - 641041.

**ந. வீ செயராமன்** : 3-4-1684. மாயவரம் வட்ட மாப்படுகை. அண்ணாமலையில் தமிழ் பயின்று அங்கேயே விரிவுரையாளராக விளங்கி 'சிலப்பதிகாரத்தில் யாப்பு' என்றாய்ந்து 75இல் டாக்டர் பட்டம் பெற்றார். பின் மதுரை வேளாண் கல்லூரியில் தமிழ்க் கட்டிலை அலங்கரிக்கச் சென்றார். சிற்றிலக்கியங்களில் சிந்தை செலுத்தி சதக-தூது-உலா-பள்ளு இலக்கியம், தமிழும் சிற்றிலக்கியமும், சிற்றிலக்கியச் செல்வம் என நூல்கள் வரைந்தார். பாட்டியல் திறனாய்வு, யாப்பியல் திறனாய்வு படைத்தார். வேளாண் தமிழில் ஊன்றியதும் வேளாண்மை அறிவியல் போன்றன படைத்து வருகிறார். **முகவரி:** வேளாண் கல்லூரி, ஆனைமலை. மதுரை.

வேளாண் வட்டாரத்தில் சு. சடையப்பன். உ. இராமநாத பிள்ளை போன்றார் கவிஞர்களாகக் கதிக்கின்றனர். வேளாண்

தமிழ் வளர்த்து வருபவர்களில் குறிப்பிடத்தக்கோர்: எஸ். முத்துசாமி, (தோட்டக்கலை) ஆர். கே. சிவனப்பன் (நீர் நுட்பவியல்) வி. ராஜசேகரன் (சக்தித்துறை), வீரண்ணா (பழத்துறை), பி. சந்திரசேகரன் (தீவனத்துறை), க. சுப்பிர மணியன் (வாழை ஆராய்ச்சி), அ. முகம்மது அலி (உழவியல்), பா. குமாரசாமி (பயிர்ப்பாதுகாப்பு), பு. சி. சந்திரபாபு (பூச்சியியல்), எப். ஆர். ஷெரிப் (கோழி ஆராய்ச்சி), ஆர். கருணாநிதி (பண்ணை எந்திரத்துறை), மே. த. கு. குந்தா லிங்கம் (மீன்வளக்கல்லூரி), டி. ராமநாதன் (தென்னை ஆராய்ச்சி), செல்லையா (ஆடுதுறை நெல்லாராய்ச்சி) போன்றார் போற்றத்தக்க பணி புரிந்துவருகின்றனர்.

கல்லூரியாக இருந்த காலை **'மேழிச் செல்வம்'** என்ற மாதிகை வந்தது. பல்கலைக் கழகமானதும் **'வளரும் வேளாண்மை'** 75 முதல் வெளிவருகிறது. ஆசிரியர் இல. செ. கந்தசாமி. 'உழுவோம், உழைப்போம், உயர்வோம்' என்ற குறிக்கோளினது.

**கால் நடைக் கதிர்** என்ற காலாண்டிதழ் (ரூ. 1) ச. செயராசு நந்தானியல் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவருகிறது. பூவை கோதண்டராமன் (முதன்மையர்) சிவமோகன் பங்காற்றி வருகின்றனர். **பால் மாடு** (Mil cow) இரு மொழி இதழ். ஆசிரியர் D H I A. விசுவேஸ்வரபுரம், சென்னை-18. ஈனியல் துறை டாக்டர்கள் து. கதிரேசன், அ. அசோகன், சையது அப்துல் கயூம் போன்றாரும், டாக்டர்கள் ஆர். செயக்குமார், கே. எஸ். இராமன், பி. எஸ். கிருஷ்ண மூர்த்தி, எஸ். வெங்கட சுப்ரமணியன், இர. பிரபாகரன், சே. நா. சிவசெல்வமும் எழுதி வருகின்றனர்.

சாலை இளந்திரையன் **'உழவுத் தமிழ்'** என வேளாண் சொற்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பயன்பட்டவாறு திரட்டினார். சோமலெ, **'வேளாண் தமிழ்** எனும் களஞ் சியத்தைப் படைத்துள்ளார்.

## 58. சட்டத் தமிழ்

'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்றவாறு நீதிமன்றத் திலும், தமிழ் நிலவ வேண்டும் எனப் படிப்படியே தமிழ் வழி வழக்காடுதலும், தீர்ப்புகள் வழங்குதலும் வந்துளது. எளிய தமிழ் மகனுக்கு அவனறியா ஆங்கிலத்தில்

வழக்காடுதலும் தீர்ப்பு தருதலும் தகாது எனக் கருதி அவனறிய அவன் தாய்மொழியில் தரப்பெற வேணும் எனபதே முறை. எனவே வழக்குகள் சட்டங்கள் பற்றித் தமிழில் நூல்கள் படைத்திடும் துடிப்பு தோன்றியுளது. வழக்காடு மன்றங்களில் வளமார் தமிழ் விளையாடுகின்றது.

இதனை ஊக்குமுகமாக **தமிழ்ப் பல்கலைக் கழகம்** 8, 9-7-1983இல் 'நீதிமன்றத்தில் தமிழ்' எனும் கருத்தரங்கினை நீதிபதி மோகன் தலைமையில் நடத்தியது. 40 வழக்கறிஞர்கள் நடுவர்கள் பங்கேற்றனர். இதன் பரிந்துரைகளும் ஆய்வுரைகளும் வெளியிடப்பட்டுள்ளன. தமிழில் சட்டங்கள் தொடர்பாக வெளிப்போந்துள்ள நூல்கள் கட்டுரைகளின் பட்டியல் தொகுத்துளது. இந்து திருமணச் சட்டம், உரிமையியல் நடைமுறைச் சட்டம், (Civil Procedure Code,) இந்தியச் சான்றியல் சட்டம் (Indian Evidence Act) வழக்கு விளக்கங்களுடன் பெயர்க்கும் பணியில் உளது.

சென்னை பாலாஜி பப்ளிகேஷன்ஸ் இந்திய சட்ட நூல்களைத் தமிழில் பெயர்த்து வருகிறது: இந்திய தண்டனைச் சட்டம் (I P C), குற்ற விசாரணை முறைச்சட்டம் (Criminal Procedure Code) இந்திய சாட்சியச் சட்டம் (Evidence Act) வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டுச் சட்டம் (Rent control Act) போன்றவற்றை வெளியிட்டுளது.

இத்துறையில் மிகுந்த ஈடுபாட்டுடன் சட்டவியலைச் செழுந்தமிழில் கொணரப் பாடுபடும் சிலரைச் சிந்தித்தல் வந்தனைக்குரியது. எனவே சில சட்டச் சான்றோரை எண்ணுவாம்:

**அ. பழனிசாமி :** *15-4-1925—10-8-1978.* ஈரோடு மாவட்ட செட்டிப்பாளையம். 60 இல் சென்னை சட்டக் கல்லூரிப் பேராசிரியர், 70இல் சட்டக்கல்வி இயக்குநர்-கல்லூரி முதல்வர், 77இல் தமிழ் நாடு தேர்வுப்பணிக்குழு உறுப்பினர். பார்வைக்கு ஒல்லி உருவம், மெல்லிய குரல்.' ஆனால் பண்பிலே தூய்மை துணிவு உறுதி மிக்கவர். கடமை கண்ணியம் கட்டுப்பாடு மூன்றின் மொத்த உருவம். கண்டிப்பு கனிவு, மென்மையில் வன்மை கொண்டவர். முன்னியது முடித்துக்காட்டும் திண்ணியர். மாணாக்கரிடம் தாயன்பும் தந்தை கண்டிப்பும் கொண்ட நல்லாசிரியர்.

தமிழ்ப்பற்றும் தமிழின உணர்வும் மிக்க தகவினர். இந்தி எதிர்ப்பின் போது மாணவர்கள் பாசறையே இவர் அறை

தான்! சட்டக் கல்வியைத் தமிழில் நடத்திட இயலும் என நிலை நாட்டியவர். ஆசிரியர்களை ஊக்கி சட்டத்தமிழ் ஏடுகள் பல எழுதச்செய்தவர். இவர் காலத்தில்தான் தமிழில் ஏராள மான சட்டப் பாட நூல்கள் வெளிவந்தன! ஏற்ற பதவிகட்கு எழிலும் புகழும் சேர்த்த திறனி. மனிதாபிமானம் மிக்கவர். சட்டக்கல்லூரி வளாகத்தை விரிவடையச் செய்த சாதனை யாளர்; இரண்டடுக்கு கட்டிடமும், கலையரங்கும் இவர் புகழ் பேசும். வகுப்பில் மிகுந்த கட்டுப்பாடும் அமைதியும் நிலவும்; திறமான ஆசான், தேற்றப் பொலிவில் ஒரு வலிமை ஈர்ப்பு இருக்கும். சொல்லாற்றலும் செயற்றிறனும் மிக்கவர். நேர்மைத்திறத்தாலும் நல்லுழைப்பாலும் புகழேணியில் பொலிந்த புண்ணியர்.

தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைத் தலைவர், சென்னை அரசின் சட்டச்சொல் அகராதிக்குழுச் செயலர், கல்லூரி பல்கலைக் கழக ஆசிரியர்கள் மன்றத் தலைவர். படைத்தவை, சர்வதேச சட்டம் (தமிழ் நாடு அரசின் பரிசு) International Law (war) of the Ancient Tamils, Law of the Tamils. **தொடர்புக்கு.** 1. முதல் முதன்மைச்சாலை. இராமகிருஷ்ணா நகர் சென்னை-28.

**மா. சண்முக சுப்பிரமணியம்** : 28-6-1921. நெல்லை அம்பா சமுத்திரம். சட்டமன்றத்துறைச் செயலராக இருந்து ஓய்வு பெற்று 6-5- 1982—12-10-1984 வரை தமிழ்ப் பல்கலைக் கழக மொழிபெயர்ப்புத் துறை, புலத்தலைவராகத் திகழ்ந்து சட்ட இயல் நூல், சட்டத் தமிழ் அகராதி (15000 சொற்கள்) தீங்கியல் சட்டம் மூன்றும் சமைத்துத் தந்தார். பிற; குற்ற இயல் சட்டம், குற்றமும் தண்டனையும், (இந்திய அரசின் முதியோர் இலக்கியப் பரிசு), குறள் கூறும் சட்ட நெறி, சட்டத் தமிழ் போல்வன.

சட்டம் பற்றியல்லாது ஆல்பர்ட் சுவைட்சர், லால்பகதூர், நேரு மாமா (சென்னை அரசின் குழந்தை இலக்கியப் பரிசு), அண்ணல் நேருவின் அமுத மொழிகள்: **முகவரி**: 3084. அண்ணா நகர், சென்னை-40.

**அ. ச. நடராஜன்**: 23-10-1929. வழக்கறிஞர். இந்தியக் குற்றவியல் சட்டம், உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டம், விபசாரத் தடைச் சட்டம், மாவட்டக் காவல் சட்டம், விசித்திரமான வழக்குகள், விஷ ஊசி கொலை வழக்கு போன்றன சட்டவியல் சம்பந்தப்பட்டவை. பிற: தனித்து

வாழும் சிறிய நாடுகள், புரட்சியை உண்டாக்கிய புத்தகங்கள். **முகவரி:** *1.* ஷெனாய் சாலை, நுங்கம்பாக்கம், சென்னை-*34*.

**என். கிருஷ்ணசாமி ரெட்டியார் :** ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நீதிபதி. 'மக்கள் நீதிபதி' என மனமார அழைக்கப் பெறும் மாண்பினார். வைணவம் வல்லவர். நல்ல வல்ல பேச்சாளர். சென்னையில் இவரில்லா இலக்கியக் கூட்டங்கள் இரா. தேசீய சிந்தனைக் கழகத் தலைவர். நடுவராக இருந்த போது இரு கட்சியினரையும் அழைத்து வழக்காடி வாழ்விழக் காது சந்து செய்து வைக்கும் சால்பினர். பசும்பொன் முத்து ராமலிங்க தேவரிடம் மதிப்புமிக்கவர். முதுகளத்தூர் கலவரத் தின் போது விசாரணை செய்த வல்லாளர்.

கணீர் என்ற குரலில் கம்பீரமாகப் பேசும் கண்ணியர், பாரதி மாட்டு பற்றுமிகக் கொண்டவர்; பாரதி கலைக் கழகம் இளைஞர் சங்க நிரந்தர விழாத் தலைவர். நற்றமிழ்ப் பற்று மிக்க நீதிபதி.

**பு ரா. கோகுல கிருஷ்ணன்:** தஞ்சை மாவட்ட பேரளம். சென்னை மாநிலக் கல்லூரி மாணவர். சென்னை உயர்நீதி மன்ற நடுவர், தலைமை நீதிபதி பொறுப்பு வைத்து, இது போது குஜராத் மாநில உயர்நீதி மன்றத் தலைமை நடுவராக நிலவுபவர். தமிழின்பால் தணியா வேட்கை மிக்கவர்; உணர் வுடன் பேசும் தமிழ்ப் பொழிவாளர். தமிழ்நாடு இயலிசை நாடக மன்றத் தலைவராகப் பல்லாண்டுகள் திகழ்ந்தவர். சட்ட நுணுக்கங்களைப் பல்வேறு கோணங்களில் நோக்கி அலசி ஆய்ந்து அருமையான தீர்ப்புகளை அளிக்கும் அறிஞர்.

'சட்டங்கள் நம்முடைய தாய்மொழியிலேயே இயற்றப் படும் காரணத்தினால், சமுதாயம் சட்டத்தை ஓரளவு உணர முடிகிறது; ஆனால், அத்தகைய சட்டங்கள் அரசாங்கப் பதிப் பில் உலவிக் கொண்டிருந்தால், ஒரு சேர அவைகளினுடைய முக்கியத்துவத்தை உணர முடியாது. சட்டத்தின் ஆட்சி வேண்டுமென்றால், சமுதாயம் சட்டத்தை உணர்ந்திருக்க வேண்டும்!' 'சட்டம் அச்சப்படத் தக்கதல்ல; மதிக்கப்பட வேண்டிய ஒன்று.' பெரியார் அண்ணாவிடம் பற்றுமிகுந்த இவர் **முகவரி:** *11*, அண்ணா அவென்யு, பக்தவச்சலம் நகர், சென்னை-*20*. *(413503)*

**ச. மோகன்:** *11-2-1930*. கோவை மாவட்ட உடுமலைப் பேட்டை. சென்னை மாநிலக் கல்லூரி பட்டதாரி (50இல்);

சட்டக் கல்லூரிப் பல்கலைக் கழக முதன்மை (52இல்) லட்சுமி நரச ரெட்டி தங்கப் பதக்கம் பெற்றார். 54இல் எம்.எல்; சர்.டி. முத்துசாமி அய்யர் தகுதி பெற்றார். 54-66 சட்டக் கல்லூரிப் பகுதி நேர விரிவுரையாளர். 69இல் அரசு வழக் கறிஞர். தமிழக அட்வகேட் ஜெனரல் 74 முதல் உயர்நீதி மன்ற நீதிபதி.

72இல் அமெரிக்கா, 76இல் தூரக் கிழக்கு நாடுகள் சென்று வந்தார். 81இல் சான்பிரான்சிஸ்கோ 5வது உலகக் கவிஞர் மாநாட்டில் சிறப்புச் சொற்பொழிவு ஆற்றினார். சீனக் குடியரசின் தாய்பெ நகரில் உள்ள உலகக் கலை மற்றும் கலாச் சாரக் கழகம் 'டாக்டர்' பட்டம் வழங்கிப் பெருமைப் படுத்திற்று.

*நூல்கள்:* சிந்தனை மலர்கள், நீதியின் தேரோட்டம் Justice Triumphs, Genisis, ஆங்கிலத்திலும் தமிழிலும் அருங் கவிஞர். ஒரு *துளி:* Law is an ass, the comment is fair; But the kick of an ass is a nasty affair சிறந்த எழுத்தாளர், சீரிய பேச்சாளர். கலைஞர். தொலைக்காட்சியில் எளியோரும் உணரும் வண்ணம் சட்டத் தமிழ் சாற்றும் சால்பினர். உயர் நீதி மன்ற வழக்குகளை முடிக்கும் வளமையும், தீர்ப்பு வழங்கும் திறனும் போற்றத் தக்கன. பெருமைக்குரிய நீதிபதியாகப் பிறங்கும் இவர் **முகவரி:** 41 வெங்கட கிருஷ்ணய்யர் சாலை, ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28. (76529)

**ஜஸ்டிஸ் எஸ் சாமிக்கண்ணு:** சென்னை உயர்நீதி மன்ற நடுவர். தெய்வ பக்தி மிகுந்தவர். எளிமையும் கனிவும் மிக்க வர். நல்ல தமிழ்ப் பற்றும் இலக்கிய சமய அறிவும் கூடியவர். இனிமையாகப் பேசும் இயல்பினர். சட்டத் தமிழ் சாற்றும் சான்றோர். **முகவரி:** 25, ஆலந்தூர் சாலை, சைதாப்பேட்டை சென்னை-15.

**ரத்தின வேல்பாண்டியன்:** தமிழ்ப் பற்றும் இன உணர்வும் மிக்கவர். நீதிமன்றத் தமிழில் நலஞ் சான்றவர். தென்பாண்டிச் சீமையில் நீதி யோச்சி இதுபோது உயர்நீதி மன்ற நடுவராக ஒளிர்பவர். திறமான பேச்சாளர். திடமான தீர்ப்பாளர். கனிவும் ஒப்புரவறிதலும் கொண்டவர். **முகவரி:** 4835, அண்ணா நகர், சென்னை-40 (611368)

**புலமை பி. வெங்கடாசலம்:** 20-6-1949. தஞ்சை மாவட்ட ஒரத்த நாடு வட்ட புள்ளவராயன் குடிக்காடு. எம்.ஏ.பி.எல்.

பயின்று தஞ்சையில் வழக்குரைஞராக விளங்கி 25-11-83 முதல் தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் மொழி பெயர்ப்புத் துறையில் சிறப்பு ஆய்வாளராக வதிகிறார். வளமான சொற் பெருக்காற்றும் வல்லாளர்; நலமான கவிஞர்.

சட்டத் தமிழ் அகரமுதலி தொகுப்பதில் துணைநின்று குற்றவியல் வழக்குச் சொல் அகராதி, வாழ்க்கைப் பொருளுதவி (ஜீவனாம்சம்) போன்றன படைத்து வருகிறார்.

## 60. நாட்டுப் புறவியல் (Folk lore)

இது பற்றிய தனியார்வம் தோன்றி ஊன்றி வருகிறது. முப்பதாண்டுகளின் முன்னர் மதியா நிலை இருந்தது. சென்னைப் பல்கலைக்கழக முதுகலை வகுப்பிற்கு விருப்பப் பாடமாக—தனிப் பாடமாக வைக்க பேரா. அ. மு. ப. முயன்றபோது, பல்கலைக் கழக மட்டத்திலும் பேராசிரியர்களிடமிருந்தும் எதிர்ப்பு வந்தது. முன்னம் நாடகத்தையும் நாட்டியத்தையும் இழிவாகக் கருதியது போன்று, இதனையும் மட்டமாக எண்ணிய நிலை, மாறி இப்போது பெருமைக்குரியதாகக் கருதப் பெறுகிறது! மதுரைப் பல்கலைக் கழகம் 78 மே திங்களில் கோடை வகுப்பே நடத்திற்று.

Folk lore என்ற சொல்லை அமைத்துத் தந்தவர் W. J. Thomas. இதனை 'நாடோடிப் பாடல்' எனல் தவறு; நாட்டுப் பாடல் என்பதே முறை. Folk=the masses of the people of the lower culture; loka in skt. lore=a thing which may be learned or studied.

இலக்கியத்தைப் படைத்தோர் பாமர மக்களே, வளர்ப்போர் வாழ்விப்போர் பள்ளர் பறையர் போன்றாரே; எண்ணிலடங்காப் பகுதிகளைக் கொண்ட இவ்விலக்கியத்தை வகைப்படுத்தி வரையறுக்க இயலாது. என்றாலும் இரு பிரிவுகளில் அடக்கலாம்: 1. நாட்டுப்புற **இலக்கியம்**: கதைகள், பாடல்கள், கூத்து, விடுகதை, பழமொழி, கதைப்பாட்டு, இதிகாச புராணங்கள். 2. நாட்டுப்புறக் **கலைகள்:** ஆடல்கள், கைவினைகள், நம்பிக்கை, தெய்வங்கள், விளையாட்டுகள். இவை ஒவ்வொன்றும் பல்வகைப்படும்.

இதன் அருமையை (வழக்கம் போல) அறிந்து நமக்குக் காட்டியவர்கள் மேலைநாட்டவரே! Charles E. Gover- 'The Folk songs of South India' (1871) E. Thurston-'Omens and Superstitions, Ethnographic notes of South India' (1906), H. White head-'The Village Gods of South India (1921) E. J. Robinson-'Tales and poems of S. I. (1885), Herman Jensen'-Classified collection of Tamil proverbs (1887), Lazarus A Dictionary of proverbs (1894), Percival-Tamil proverbs with their English Translation (1874), William Taylor-Collection of proverbs with Eng Translations. M. B Emeneau-Studies in the Folk tales of India-Todas, Kotas, Elvin-The songs of the Forest. Sathyarthi-Meet my people.

பாடல்களில் முதலது மு. அருணாசலத்தின் 'காற்றிலே மிதந்த கவிதை' (1943). கதைப் பாட்டில் முன்னது கருணானந்த சுவாமிகளின் 'பவளக்கொடி மாலை' (1863). கதைகளில் முதலில் வந்தது வீராசாமி நாயகரின் 'மயில் வாகனன்' (1887), பழமொழிகளில், லாரி வெளியிட்ட 'பழமொழிகள்' (1870) விடுகதையில் அருணாசல முதலியாரின் 'இரு சொல் அலங்காரம்' (1877).

**தொகுப்பர்:** அன்னகாமு (ஏட்டில் எழுதாக் கவிதைகள் 1966), கி.வா.ஜ (நாடோடி இலக்கியம், கஞ்சியிலும் இன்பம், குழந்தை உலகம், மச்சு வீடு, மலையருவி), நா. வானமாமலை (வீரபாண்டிய கட்டபொம்மு கதைப்பாடல், காத்தவராயன் கதைப் பாடல், முத்துப்பட்டன் கதை, கட்டபொம்மு கூத்து, கான்சாகிபு சண்டை, ஐவர் ராசாக்கள் கதை, தமிழர் நாட்டுப் பாடல்கள்). மூவரும் மும்மணிகள். தமிழண்ணல் (தாலாட்டு) ஆறு. அழகப்பன் (தாலாட்டுகள் ஐநூறு), ஏ. அய்யாசாமி (குழந்தைகளுக்கு நாடோடிப் பாடல்கள்), அழ. வள்ளியப்பா (பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள்), டி. என். சுப்பிர மணியம் (காட்டு மல்லிகை), தூரன் (காற்றிலே வந்த கவிதை), ச.வே சுப்பிரமணியம் (தமிழில் விடுகதைகள்), மெ. சுந்தரம் (நாட்டுப்புறப் பாடல்கள்), மா. வரதராஜன் (தமிழக நாட்டுப் பாடல்கள்) வி.எஸ். நாதன் (மலைநாட்டார் பாடல்கள்)...

**ஆய்வர்:** பா.ரா. சுப்பிரமணியம் Folk lore of Tamil Nadu (72), என். சியாமளா (Folk music and dance of Tamil Nadu (60), கே.பி.எஸ் ஹமீது Folk lore of Nanchil nad (61), ஆறு. அழகப்பன் A critical study of Folksongs in Tamil in Tamil

nad(65), சாலை இளந்திரையன் Tamil Proverbs and society(70) வி. சரசுவதி நாட்டுப்புறப் பாடல்கள்-சமூக ஒப்பாய்வு (83) மு. இராமசாமி-தோற்பாவை நிழற்கூத்து (83) ஜி. சாந்தி Linguistic analysis of Folk songs in Tamil போல்வன எம். லிட், பிஎச்.டி. ஆய்வுகள்.

தொல்காப்பியர் **வழக்கும்** செய்யுளும் வாய்மொழி, பிசி (விடுகதை) முதுசொல், பண்ணத்தி, என இவற்றைக் குறிக்கிறார். 'நாட்டுப்புற இயல், மனித சமுதாயம் எதை அனுபவித்ததோ, எவற்றைக் கற்றதோ, எதில் பயிற்சி பெற்றதோ அவற்றைக் குவித்து வைத்திருக்கும் சேமிப்புக் களஞ்சியம் (எசிபினோசா). 'பழங்கால தற்கால மக்களின் மரபு வழி வந்த படைப்புத் தொகுதிகளைக் கொண்டிருக்கிறது; நம்பிக்கை பழக்க வழக்கம் நடனம் கூத்துக்களை கொண்டிலங்குவது (Jonas Balys)

**கதைப் பாடல்கள்:** (ballads) 'வரலாறுகள் அல்ல, வீர காவியங்கள். இடையிடையே மனிதப் பண்பின் உயர்ந்த அம்சங்களைப் போற்றுபவை; சமூகக் கேடுகளைக் கேலி செய்பவை இவற்றைக் கற்பனையால் உருவான நாட்டார் பாடல் என்றே சொல்ல வேண்டும்; ஆனால் அக் கற்பனைகள் ஆகாசக் கோட்டைகள் அல்ல' (நா வானமாமலை). கதைகட்கு ஆதாரமாகவும் சிலேடைச் செய்யுட்கட்கு உயிராகவும் **விடுகதைகள்** நிலைகொண்டிருக்கின்றன. (ர. அய்யாசாமி)

ஒரு நாட்டின் கலாசாரப் பாரம்பரியத்தின் முக்கிய அம்சம் நாட்டுப் பாடல்களே! மட்டிலா மகிழ்ச்சியை அளிக்கும் இவை, கிராம மக்களின் அன்றாட உள்ளுணர்வுகளின் பிரதிபலிப்பே (பேரா. சாம்பமூர்த்தி). உலகம் முழுவதிலும் நாட்டுப் பாடல்களிடையே விளக்கிக் கூறமுடியாத ஓர் ஒற்றுமை நிலவுகிறது. அவற்றின் மொழிகள் வேறாக இருப்பினும், அவைகள் எடுத்துக் கொள்ளும் பொருளில்-சொல்லும் பாணியில்-கருத்தில் கூட ஒற்றுமை காணப்படுகிறது (W.P.Her). நாட்டுப்புறப் பாடல் என்ற மண்ணிலிருந்து தோன்றிய செடியே இலக்கியம் (Thomas Moan). வீட்டுப் பாடலின் வெளிப்பாடே நாட்டுப் பாடல்; தமிழ் இலக்கியத்தின் மூல ஊற்றே அது, தாய்மொழி இலக்கியங்களின் தலைக் காவிரியே வாய்மொழி இலக்கியங்கள் (மெ. சுந்தரம்)

தமிழகப் பல்கலைக் கழகங்களில் முதுகலையில் விருப்பப் பாடமாக விளங்குகிறது. மைசூர் கௌகத்தி பல்கலைக்

கழகங்களில் தனித்துறையாகத் திகழ்கிறது; பிஎச்.டி ஆய்வு வரை செல்கிறது. மைசூர் இந்திய மொழிகளின் மைய நிறுவனத்தில் தனித் துறையாக இயங்கி வருகிறது. கல்கத்தாவி லிருந்து Folklore, மைசூரிலிருந்து Journal of Indian Folkloristics வெளிவருகின்றன.

**'இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம்:** (1982) இந்தியத் தமிழரசிரியர் மன்ற திண்டுக்கல் கருத்தரங்கின் போது உருவானது. தலைவர்: முனைவர் ச. அகத்தியலிங்கம். மே 87 இல் த. ப. கழகத்தில் கருத்தரங்கம் நடைபெறுகிறது. இயக்குநர் முனைவர் தேக்கமலை; அமைப்பாளர் முனைவர் ஆறு. இராமநாதன். 'நாட்டுப்புறவியல்' இதழ் வெளியிடுகிறது.

**தமிழக நாட்டுப்புறவியல் ஆய்வுக் கழகம். மதுரை:** *(1981).* தலைவர் என். எம். செல்லம். துணைத் தலைவர்கள் தமிழண்ணல், சரசுவதி வேணுகோபால். செயலர் துளசி ராமசாமி. பொருளர் மா. வண்ணமுத்து. நோக்கம்: கள ஆய்வு செய்தல், ஆய்வரங்கு அமைத்தல், பாடல்களை ஒலி-ஒளிப்பதிவு செய்தல், நூலகம் அமைத்தல், ஆய்விதழ் நடத்தல், அருங்காட்சியகம் அமைத்தல், ஆண்டுதோறும் கலைஞர்களை, ஆராய்ச்சியாளர்களைச் சிறப்பித்தல், ஊக்குவித்தல். 17-1-86 முதல் செய்தி மடல் 'நாட்டுப்புறவியல்' என வருகிறது. 9,10-8-86இல் நாட்டுப்புறக் கலை விழா நடத்திற்று. **முகவரி:** 19. ஸ்டேட் பாங்கு முதல் காலனி, பைபாஸ் சாலை, மதுரை-16.

அ. மு. பரமசிவானந்தம் (வாய்மொழி இலக்கியம்), மு. வை. அரவிந்தன் (தமிழக நாட்டுப் பாடல்கள்), மெ. சுந்தரம் (நாட்டுப் பாடல் திறன்), ஆறு. அழகப்பன் (நாட்டுப்புறப் பாடல்கள்-திறனாய்வு), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் (நாட்டுப்புற இயல் ஆய்வு). வனவாசி புலவர் இரா. சுரேந்திரன் (நாட்டுப்புற இலக்கியம்), சோமலெ (Folklore of Tamil Nad). Natesa Sastri (Folklore of S.I; Indian Folktales, Dravidian Nights). நா. வானமாமலை (Studies in Folk Litt, women in Tamil folklore) K. Subramaniam (Women in the folk sayings of Tamil Nadu.) தி.சி. கோமதி நாயகம் (தமிழ் வில்லுப் பாட்டுக்கள்) கு. சின்னப்ப பாரதி (கொங்கு நாட்டுப் பாமரர் பாடல்கள்), ச. அகத்தியலிங்கம் Folk songs of Tamil, மு.வ. The Influence of folklore on Tamil Litt, பூர்ணிமா சகோதரிகள் (தமிழ் நாட்டு விடுகதைகள்). வீரபாகு

அ. சாந்தா, நிர்மலாபாய், போன்றார் குறிப்பிடத் தக்கோர். கோலார் தங்கவியல் பேரா. வ. பெருமாள் 'பழமொழி' பற்றிப் பன்முக ஆய்வு செய்து, இனி ஆராய ஒன்றும் இல்லை என்னு மாறு முடித்துவிட்டார்; நூல்களும் கட்டுரைகளும் படைத்து விட்டார்.

வானொலியும் கிராமம் போவோமே, கிராமீயக் கலை, கிராமியக் கலைமணம் கிராமத்துக் குயில் என நாட்டுப்புறக் கலைகளைக் காத்துப் போற்றி வருகிறது. உலகத் தமிழா ராய்ச்சி நிறுவன முனைவர் துளசி. இராமசாமி (நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள்), மதுரை திருமலை நாயக்கர் கல்லூரிப் பேரா. ராஜு, கே. ஏ. குணசேகரன், இ. முத்தையா, அ. அறிவு நம்பி, காந்தி கிராமம் ம. வேலுச் சாமி, மா. கோதண்டராமன், கோ. கேசவன் (பள்ளுப் பாடல் கள்) நா. வேலுசாமி (கரக ஆட்டக் கலை) குருவிக்கரம்பை சண்முகம், தே. லூர்து (நாட்டார் வழக்காற்றியல்), தூத்துக்குடி ஆ. சிவசுப்பிரமணியம் (மீனவர் பாடல்கள்), ஏ. என். பெருமாள் போன்றார் குறிப்பிடத்தக்கோர்.

**சிறப்பு ;** 1. உணர்ச்சி வெள்ளம் 2. என்றாலும் சங்கிலித் தொடர்போலே கருத்துக்கள் கதித்துவரும். 3. வீட்டு வரலாறு 4. குடும்பக் கதை 5. புறப்பொருள் மரபுகள் பொலிந்து வருகின்றன. 6. வரலாற்றுக் கருவூலம் 7. வாழ்க்கை வார்ப்புகள். 8. நாகரிக நல்லோவியம் 9. பண்பாட்டுப் பெட்டகம். 10. மக்கள் இலக்கியம். 11. முத்தமிழ்க் கொத்து. 12. நாட்டு நடப்பினைத் தீட்டிக்காட்டும் பாட்டிலக்கியம். பொய்யோ புனைந்துரையோ கற்பனையோ கலவாத ஆடை சூடப்படாத உண்மைப் படங்கள். 13. வாழ்க்கை-இலக்கிய-வரலாற்று ஏடு. 14. சுவையின் சுரங்கம் 15. மூவாத்தமிழின் சாவாச் செல்வங்கள். 16. மக்கள் தங்கள் இன்பதுன்பங்களைத் தாங்களே நேரே பாடுவது-புலவர் பாடுவதன்று. 17. மறுமலர்ச்சி இலக்கியத்தின் மூலநிலை. 18. பட்டி தொட்டி கொண்ட கிராமங்களின் இதயம்-பேரின்ப நிலையம். 19. பெண் குலத்தின் பொன்னோட்டம் - தாய்மார்களின் வாய்மொழி - காரிகை களின் பேரிகை. 20. நாட்டுப் புறத்தின் பாட்டுத் திறம். 21. இயற்கையின் எழிற் கோலங்கள் 22. எளிமை துள்ளி வருகுது, இனிமை அள்ளி வருகுது. 23. பாமர மக்களின் படைப்பு. 24. ஆழங்காண வியலா அமுதக் கடல். 25 செய்திகளின் சுரங்கம். 26. கதைகளின் புதையல்—கருத்து விதைகள் 27. காலங்களின் கோலங்கள் 28. உயர்ந்த தத்துவங்கள் உயரிய

கருத்துக்கள் கூட எளிய சந்தத்தில் இனிய பழகுதமிழில் அமைந்துள. 29. என்று பிறந்தது என்றறியா இயல்பும் தொன்மையும் சான்றது. 30. ஏட்டிலக்கியத்தின் தாய் இதுவே.

**ஓம் பெரியசாமி :** *10-4-1933...* நிலக்கோட்டை வட்ட பள்ளப்பட்டி. பழனியா பிள்ளை: பேச்சியம்மாள். 8ஆவது குழந்தை முதலில் தையல் வேலை: பின் கிராமியக் கலையில் ஈடுபட்டுச் சோதனைகள் பலவென்று சாதனையில் நின்றார். 48 விடுதலை நாள் முதல் ஆடி வருகிறார். 30 ஆண்டுகளாக கிராமிய நடனத்தொண்டு. குருநாதர்கள்: ராஜா பிள்ளை, ராம வேளார், சிவகெங்கை சுந்தர ராஜு நாயுடு. 66இல் இசை வேந்தர் ரத்தின பத்திரன் ஓம் என்ற சொல்லை உறுதிப்படுத்த, காஞ்சித் தவமுனிவர் 'ஓம் பெரியசாமி' எனப் பெயர் சூட்டல்.

காவடியாட்டத்தில் ஜலாந்தர் சாகசம், அருள் கோர்த்து ஆடும் சாகசம்; கரகாட்டத்தில் வளையம் சுற்று நடனம், 9 தட்டு கரகம், சூரசம்ஹாரம், அக்கினி சாகசம், மதுரை வீரன் கழுத்தில் வாழைக்காய் - ஆப்பிளை வாளால் ஒரே வீச்சில் வெட்டுதல், கழுத்தில் காவடி தானாகவே நடமாடும் மாட்சி, பொய்க்கால் குதிரையாட்டத்தில் மதுரை வீரன் குதிரை போன்றன குறிப்பிடத்தக்கன.

45 பட்டதாரி மாணவர்கட்குக் கற்றுக் கொடுத்துள்ளார். 5 வெளிநாட்டுப் பெண்மணிகள்; அமெரிக்க விஸ்கான்சின் பல்கலைக் கழக மாணவி மீனாட்சி என்ற செல்வி பெபட் லைட்னர் குறிப்பிடத் தக்கவர். 78இல் காஞ்சி பெரியவாள்முன் அரங்கேறினார். பட்டறிவின்பிழிவு "கரகக்கலை கற்பது எப்படி?"

பெற்ற பட்டங்கள்: கரகக்கலைப் பேராசிரியர் (80), கலைமாமணி, கரகக்கலை வேந்தர் (72), நடன சக்கரவர்த்தி (75), காவடிக்கலைச் செம்மல் (78-வாரியார்) தங்கப்பதக்கம், வெள்ளிக்கேடயம், பொன்னாடைகள் பல பெற்றுளார். தில்லியில் குடியரசு தினக் கொண்டாட்டங்களில் பங்குபெற்றுள்ளார்.

59, 62இல் கிராமியக் கலைஞர்கள் மாநாட்டினைக் கூட்டியுள்ளார். கிராமியக் கலைஞர்கட்கு ஓய்வூதியம் பெற வகை செய்துள்ளார். 50 பேர் பெற்றுவருகின்றனர். தமிழ் நாட்டு அரசு - காவடிக் கலைஞர்கள் நிறுவனம் அமைத்தார். 71 இல்

புராதான கிராமிய நடனக்கலைப் பள்ளி தோற்றி ஆடலைப் பலருக்குக் கற்பித்து வரப்படுகிறது. கிராமியக் கலைக் கல்லூரி சாமநத்தத்தில் தோன்ற முயன்றுளார். சத்திய மங்கலத்தில் 100 கலைஞர்கட்கு வீட்டு மனைப் பட்டா பெற வகை செய்தார்.

இந்தியப் புகழ் பெற்ற இவரின் மனைவி சரசுவதியம்மாள். மக்கள்! மதுரை வீரன். பி. லிட்; சேனாதிபதி, செல்வி லீலா மூவரும் தந்தையின் பணிக்கு உறுதுணை. **முகவரி:** ஓம் இல்லம். 104 பாண்டிய வேளாளர் தெரு, மதுரை-625001

**சா. வளவன் :** 15-7-1949. சாம்பசிவம் : செயலட்சுமி. சென்னைப் பச்சையப்பனில் முதுகலை முடித்து அங்கேயே ஆசிரியராக அமைந்துள்ளார். கடிதை, நாடகம், நாட்டுப்புற வியலில் நாட்டம் மிக்கவர். எம். லிட், பி எச். டி. பட்டம் பெற்றுளார். வழங்கியன: கள்ளோ காவியமோ—திறனாய்வு, பொது மொழியியல்; நாட்டுப்புறவியல் கட்டுரைகள். துணைவியார் மைதிலியும் தமிழ்ப் பேராசிரியை. **முகவரி** 60, சீனுவாசாச்சாரி தெரு, பெரம்பூர், சென்னை 11.

**சு. சண்முக சுந்தரம் :** 30-12-1949. நெல்லை மாவட்ட கால்கரை. சுடலை முத்து: இசக்கி அம்மாள். 71இல் பாளை தூய சவேரியர் கல்லூரி பி. ஏ; 73இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி முதுகலை. சென்னைக் கழகத்தில் டாக்டர் ந. சஞ்சீவி மேற்பார்வையில் 'திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள் ஒரு சமுதாயப் பார்வை' டாக்டர் பட்டம். கவிதை: பகல் கனவுகள், நாவல்: கன்னடியார் மகள்.

இவர் தனித்துத் திகழ்வது நாட்டுப்புறவியயில்; கணிசமான பங்காற்றி வருகிறார். அதன் பல்வேறு துறை பற்றியெல்லாம் தனி நூல்கள் தந்துளார். நாட்டுப்புற இயல் ஓர் அறிமுகம், நாட்டுப்புற இலக்கிய வரலாறு, சிந்தனைகள், செல்வாக்கு; தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள், தமிழக நாட்டுப்புறப் பாடல்கள், திருமணப் பாடல்கள், தாலாட்டுப் பாடல்கள்; நாட்டுப்புறக் கதைகள், கர்ண பரம்பரைக் கதைகள், தேசிங்கு ராஜன் கதை, பழையனூர் நீலி, ஈனமுத்துப் பாண்டியன் கதை, மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை எனப் 16. **முகவரி:** தமிழ்த் துறைத் தலைவர். தூய ஜோசப் கல்லூரி. பங்களூர் 560 001.

**ஜே. ஆர். சுரேந்திரன்:** பாளையம்கோட்டை. ராஜாராம்: ராஜம்மாள். நாகர்கோவில் இந்துக் கல்லூரியில் தமிழ் எம். ஏ. தேறி, காந்திய சிந்தனை, இந்தியக் கலாச்சாரம் தேர்ந்துளார். ஓராண்டு தமிழாசிரியர் பணி, ஈராண்டு தினமலர் நிருபர், இது போது இந்திய குடும்ப நலச் சங்க இணைப்பாளர். நூல்கள்; தமிழகக் கிராமிய நடனங்கள், ஸ்ரீ ஆயிரத்தம்மன் ஆற்றுப் படை, அஷ்டகம், நையாண்டி மேளாம். 'தமிழகப் புராதான கிராமியக் கலைகள் புதுப் பொலிவு பெற வேணும், மக்கள் புரிந்து போற்ற வேண்டும், ஓம் பெரியசாமியின் கலைத் தொண்டினை உலகறியச் செய்ய வேணும்' என்ற துடிப்பு மிகக் கொண்டவர். அதன் வெளிப்பாடே 'தமிழகக்கிராமிய நடனங்கள்' நூல் **முகவரி** 'சௌந்தரி இல்லம். 36. டி. சித்தி விநாயகர் முனியாண்டி கோவில் தெரு. சோலை அழகுபுரம். மதுரை-625 011.

## 61. மொழிபெயர்ப்பியல்

மொழிபெயர்ப்பு என்பது ஓர் அருஞ்செயல், அரிய பணி, அருங்கலை (நியடோர் சேவரி). இது ஒருபோலச் செய்யும் கலையும் (Imitative art), அன்று; படைப்புக் கலையும் (Creative art) ஆகாது என்கிறார் ஹார்ஸ்ட் ஃபிரான்ஸ். எனவே இதனை இருவேறு மொழி உலகங்களை ஒரு பெரும் படைப்பு ஒருமைக் குள், அடக்கிடும் அடைத்திடும் அரும் கருவி என்னலாம்.

'மொழியாக்கம் எளிதான வேலையல்ல, மூலபாடம் எழுத வல்ல ஆற்றல் உள்ளவர்களே, இதில் இறங்க முடியும், வேண்டும், (கவிமணி); சான்றாக ஒரு கவிதையை மொழி பெயர்ப் பவர்க்குக் கொஞ்சமாவது கவிதை புனையும் ஆற்றல் இருக்க வேண்டும்; அப்போதுதான் கவிதையின் ஆழ்பொருளைப் புரிந்து கொள்ள முடியும். ஏனெனில் Translating a poem is often considered or ends up in Transcreation.

பெயர்ப்பு என்பது இருப்பதைப் புரிந்து கொள்வதும், புகலுவதும் என இரு நிலையின. மூலமொழியின் (Source Language) பாடப் பகுதியை அப்படியே மொழி பெயர்ப்பு மொழிக்கு (Target Language) இடம் பெயர்ப்பது என்கிறார் **கேட்போர்டு.** இரு மொழியும் அறிந்த ஒருவர் மூலத்தின் செய்தியை வாங்கி, (decoding) உரிய வடிவில் மற்றொரு மொழியில் தருவதே (encoding) பெயர்ப்பு என்கிறார் **நைடா.**

ஆக்கம் என்பது ஒருவகை சமரசம் (Compromise) எனலாம். பெயர்ப்போன், ஆசிரியனின் நெருங்கிய நண்பனாகவும், பெயர்க்கும் பகுதியிடத்துப் பரிவும் பற்றும் கொண்டிருத்தல் வேண்டும். பெயர்ப்புப் பணியின்போது இரு மொழிகள் நெருங்கி வருகின்றன. பெயர்ப்பு வழி-வாயிலாக இணைந்து கலந்து புது வடிவம் பெறுகிறது. புதிய அவதாரம் எடுக்கிறது.

ஒருவர் எத்துணை விழிப்போடும் வல்லமையோடும் மொழி பெயர்த்தாலும் மூலத்தை அப்படியே-அதுபோன்றே பெயர்த்திடவே முடியாது. கிட்டத்தட்ட நெருங்கியதாக இருக்க முடியுமே தவிர, நூற்றுக்கு நூறு பெயர்த்திட இயலாது. ஏனெனில் Translation is always an approximation. மொழி பெயர்ப்பு என்பது ஒரு பெண்; ஒன்று அவள் அழகாக இருக்கலாம், அல்லது நம்பிக்கைக்குரியவளாக அமையலாம்; இரண்டும் இணைந்திருக்க இயலாது. ஏனென்றால் No two Languages are never Sufficiently similar (Lefevere) மொழி, பண்பாடு, முருகியல், நடை என மொழிக்கு மொழி வேறுபட்டும், மாறு பட்டும் அமைவதால் கருத்தைப் பெயர்க்கலாம், அதனோடு ஒன்றிய இவற்றை எங்ஙனம் பெயர்க்க இயலும்? ஓவியம் தீட்டினால் ஒரு மலரின் அமைப்பினை - அழகினைக் கொணரலாம், அதன் மணத்தினை பெயர்க்க முடியுமா?' பல சமயம் பொருள் இழப்பு நேரும்; அதுவே நல்ல மொழி பெயர்ப்பின் நற்குண மாகி விடுகிறது.

மூலத்தைப் (Matter) பெயர்க்கலாம், முறையினைப் (Manner) பெயர்க்க முடியுமா? உள்ளதை (Sense) உரைக்க ல்ாம், உணர்வினை (Spirit) உணர்த்த முடியுமா? புல் நுனியில் பனித்துளி, காலை வேளையில் அச்சிறுதிவலை அண்ட சராசரங்களையும் அடக்கிக் காட்டுகிறது; தாமரையில் தண்ணீர்! பாதரசம் போல் உருள்கிறது; நீர்க்குமிழிகள் தோன்றுகின்றன, வண்ணங்கள் காட்டுகின்றன. கண்டு மகிழலாம், தொட்டாலோ பொட்டெனப் பொன்றிவிடுகின்றன, அதுபோல்தான் மூலத்தின் சொற்கள், நவில்தொறும் நயன் விளைக்கின்றன; ஆனால் அவற்றைப் பெயர்த்திட முனையும் போது மருள்கின்றன. மாயமாய் மறைகின்றன. சிக்க மறுக்கின்றன!

மொழியாக்கம் என்பது சிந்தையை வருத்தும் ஓர் அரு முயற்சி—பெரும் பயிற்சி; இன்னலும் இடரும் மிக்க கடும் பணி. எப்படி Art என்பது Imitation of imitations ஆகுமோ,

அப்படியே மொழிபெயர்ப்பு என்பது பெயர்ப்பின பெயர்ப்பாகும் என்று கூறலாம்.

மொழிபெயர்ப்பின் முக்கிய மூன்று பண்புகள்: எளிமை, தெளிவு, கற்பு; இந்த மூன்றும் எய்திடின், மொழிபெயர்ப்புக் கலை மோனக் கலையாகிவிடும். ஏனெனில் மொழியாக்கம் என்பது ஒரு தவம், மொழி வேள்வி; தூய துணிவான பணி.

பெயர்ப்பு என்பது ஓர் அழகிய கலைப்பணியாதலின் மூலத்தின் அழகையும் பொருளையும் அழியாது காத்தலில் மிகவும் விழிப்பாக இருத்தல் வேண்டும். சொல்லுக்குச் சொல் ஆக்கம், மூலத்தின் அழகினை மூளியாக்கும், வரிக்கு வரி பெயர்ப்பு சரியன்று. மொத்தத்தின் முழுப்பொருளை விழுப்பொருளை மொழிவதே மெத்த மேன்மையதாகும். (Marion Ayton). பெயர்ப்பாளரின் கடமை. மூலப்பகுதி வெளியான போது வாசகர்களிடம் எத்தகு விளைவினை ஏற்படுத்தியதோ, அத்தகு பயனை பெயர்க்கும்போது அப்படியே உண்டாக்கினால் போதுமானது (Tancock)

மொழிபெயர்ப்பு என்பது கூடுதல் ஆக்கமாகவோ (over translation), குறையுடையதாகவோ(under), தப்பானதாகவோ (mis) கெட்டதாகவோ (bad) இல்லாது, நேர் (equi) ஆக்கமாக அமையின் அதுபோதும். ஏனெனில் A badly written book is only a blunder; A bad translation of a good work is a crime (Gilbert Highet).

கவிதையை யாப்பில்தான் பெயர்க்க வேண்டும். (Morris Langton) அதே யாப்பாக இருக்க வேண்டும் என்பதில்லை. ஏனெனில் translating poetry into prose is to betray the poem (Miss Millay). இப்படி ஒரு கருத்து; மாறாக உரைநடையிலும் பெயர்க்கலாம்; மூலத்தோடு பொருந்தவும் அதன் பொருளை வாங்கி வழங்கவும் ஏற்றது இனியது என்ற கருத்தும் உளது. ஒரு கவிதையின் உரைநடைப் பெயர்ப்பு, மிகுந்த கவிதை நயம் உடையதாக இருக்கமுடியும் (மேத் யு ஆர்னால்டு) அவரவர் வசதிக்கும் வளமைக்கும் ஏற்ப செய்யுளாகவோ உரைநடையாகவோ பெயர்க்கலாம்.

**பயன்:** 1. பிறமொழியின் கலைச் செல்வங்களை நமக்கு அறிமுகப்படுத்துகிறது. 2. மொழியின் சொல் வன்மையையும் பொருள் வளமையையும் விரிவுபடுத்துகிறது. 3. மொழிக்குப்

புது வளமும் புதிய ஆற்றலும் அளிக்கிறது. 4. மூலப் பகுதியின் தரத்தையும் திறத்தையும் புலப்படுத்துகிறது 5. மூலப் பாடத்துக்கும் மொழியாக்கப் பகுதிக்கும் உள்ள அமைப்பின் மாறுபாட்டினைப் புரிய வைக்கிறது. 6. மொழிகளின் ஒற்றுமை வேற்றுமைகளை உணர்த்துகிறது. 7. பிறமொழிப் பயிற்சியின் மூலம், மொழிவதில் புதிய முறைகளைப் பின்பற்றலாம், அம்மொழியில் உள்ள நலங்கள் கொண்டு நம் மொழியினை வளப்படுத்தி வளர்ச்சி பெறச் செய்யலாம். 8. இன்னொரு மொழியின் அழகையும் அருமையினையும் நம்மொழியில் கொணர உதவுகிறது. 9. திறனாய்வுத் துடிப்பினை வளர்க்கிறது—வளப்படுத்துகிறது. 10. இரு மொழிகளின் நிறைகுறைகள் தெரியவருகின்றன. 11. மொழி வேறுபாடு மாய்த்து ஒருலகம் எனும் ஒருமைப்பாடு உருவாக்கும். 12. நமது சொற்கோவையைப் (Vacebulary) பெருக்கும். 13. மொழி பெயர்ப்பின் மூலம் மொழிகள் நெகிழ்ச்சி அடைகின்றன. 14. இதன் மூலம் மட்டுமே மாறுபட்ட உலகமொழி இலக்கியங்கள் எல்லாம் எல்லோர்க்கும் உரிய இலக்கியப் பொதுச் சொத்தாக (literary common wealth) மலர்கின்றன; உலக இலக்கியமாக மாறுகின்றன. 15. புத்திலக்கியத்திற்கு வழிகாட்டும்-கூட்டும். 16. ஒப்பிலக்கியத்திற் கொண்டு போய்விடும்.

மொழி பெயர்ப்பாளன் 1) இரு மொழியிலும் வல்லவனாதல் வேண்டும். 'அவரது அன்னிய மொழியறிவு திறனாய்வுச் சார்பானதாகவும், தாய் மொழியறிவு நடைமுறைச் சார்பினதாகவும் இருத்தல் வேண்டும்' (டாக்டர் சச்சிதானந்தம்). 2) இருமொழிச் சொற்கோவையிலும் தோய்ந்து தெளிந்திருக்க வேண்டும்-நிறைய சொற்கள் அறிந்தவராதல் இன்றியமையாதது. 3) அம்மொழிகளின் சமுதாய பண்பாட்டு மொழியியல் திறம் உணர்ந்திருத்தல் அவசியம். 4) பெயர்ப்பது என்பது விளையாட்டுக்குரிய செயலன்று, கடுமையான இடும்பை தரும் அரும்பணி என்றுணர வேணும். 5) வெற்றுப் பொருளையும் வறட்டுச் செய்தியுமாகப் பெயர்க்காது, எண்ணத்தை வண்ணத்துடனும் கருத்தைப் பொருத்தமுடனும் ஆக்கம் செய்ய வேண்டும்.

தொல்காப்பியர் 'மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தல்' (மரபியல்) என்றார். 'அதர்ப்படவென்பது, நெறிப்பட-கிடந்தவாற்றானே-பொருள் பிறழாது செய்யப்படுவது' என விளக்கம் அளிக்கிறார் பேராசிரியர். அறிஞர் வெ. சாமிநாத சர்மா இலக்கணம் வகுக்கிறார்: 1) சாதாரண மக்களுக்கும்

புரியக் கூடியதாய் இருக்க வேண்டும்; 2) மூல நூலாசிரியனின் வார்த்தையைக் காட்டிலும், அவன் எந்த பாவத்துடன் அதனைக் கைபாண்டுள்ளான் என்று கவனிக்க வேணும். 3) மூலத்தின் நடை, எளிமை, இனிமை, கம்பீரம், பொருட் செறிவு ஆகியவை, கூடியமட்டில் பெயர்ப்பிலும் இருத்தல் வேண்டும். இம் முந்நெறிகள் நல்ல பெயர்ப்பின் நன்னெறிகள் பொன்னெறிகளாம். இன்றேல் Translators are Traitors: Translation is a Blasfomin என்ற நிலைதான் நேரும்.

தமிழிலிருந்து பிறமொழிகட்கும் (730) சிறப்பாக ஆங்கிலத்தும், பிறமொழிகளின்று தமிழுக்கும் (4234) பெயர்க்கப்பட்ட பெருவிவரம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தால் அருமுயற்சியுடன் தொகுப்பாக வெளியிடப்பட்டுள்ளது. அது அனைத்து விவரமும் தரும் Bibliography on Translations. (83)

மொழி பெயர்ப்பியல் பற்றி அறிய அக்கலை வல்ல தமிழறிஞர்கள் பெ. நா. அப்புசாமி, டி. என். ராமச்சந்திரன், கா. செல்லப்பன், கே. ஜி. சேஷாதிரி, கே. ஆர். சீனிவாச ஜயங்கார், அ. அ. மணவாளன், பிரேம நந்தகுமார் போன்றாரின் விரவிய கருத்துக்கள் விளக்கம் அளிக்கும். பள்ளியகரம் நீ. கந்தசாமிப் பிள்ளையின் கல்லறைக் கவிதை பெயர்ப்பு நூலில் தனிக்கட்டுரை கட்டளைக் கல்லாகக் கதிரொளி வீசுகிறது. 'மொழிபெயர்ப்பியல்' என்றே மொழி பெயர்ப்பின் விளக்கம் வகை நோக்கம் பயன் சிக்கல் தோற்றம் வளர்ச்சி வரலாறு விளம்பும் முறையில் ச. வே. சுப்பிரமணியனாரின் மகன் சண்முக வேலாயுதம் தனி நூல் தந்துளார். உ. த. ஆ. நிலைய வெளியீடு. தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கு 274, மலையாளத்திற்கு 94, தெலுங்கிற்கு 60, கன்னடத்திற்கு 37, வடமொழிக்கு 37, இந்திக்கு 5. ஆங்கிலத்திலிருந்து 1303, வடமொழியினின்று 786, உருசியனிலிருந்து 280, பெங்காலியிலிருந்து 210, பிரெஞ்சிலிருந்து 81, மராத்தியினின்று 74, தெலுங்கிலிருந்து 71, மலையாளத்திலிருந்து 67 நூல்கள். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். 79 முதல் மொழி பெயர்ப்பியல் பட்ட மேற்படிப்பு தொடங்கியுளது. பல்கலைக் கழகங்களில் பாடமாக ஆக்கப் பெற்றுளது. இனி இக்கலையில் வல்லார் சிலரின் வகையான பணியும் வாகான கொடைகளும் எண்ணுவது பயனும் பண்புமாகும்.

**கே. ஆர். ஸ்ரீனிவாச அய்யங்கார்:** *17.4.1908.* இராமநாதபுர மாவட்ட சாத்தூர். ஆந்திரப் பல்கலைக் கழக வால்டேரில் ஆங்கிலப் பேராசிரியராக இருந்து அதன் துணை வேந்தராகச்

சிறந்தவர். சாகித்ய அகாதமியின் துணைத் தலைவராகத் திகழ்ந்தவர். ஆங்கில அறிவால் அருந்தமிழ்ப் பேணியவர். தந்தவை: மாக்பெத், Indian contribution to English Litt. Sri Arabindo, On the Mother.

**கே. ஜி. சேஷாதிரி** 2.9. 1928. நெல்லை கடையம். கணபதி: மீனாட்சியம்மாள். கோவில்பட்டி கழக உயர்நிலைப்பள்ளி, நெல்லை மதுரை திரவியம் தாயுமானவர் இந்து கல்லூரி எஸ். எஸ். எல். சி. 43; கல்லூரி பி. ஏ.(கணிதம்) 47, ஆங்கிலம் தமிழில் இரண்டாம் வகுப்பு, முதல்வர் பெருமைமிகு அலெக்சாண்டர் ஞானமுத்து ஆங்கில பயிற்றுநராக 47—48 நியமித்தல்; 48இல் சில திங்கள் முதல்வர் பி. மகாதேவன் தலைமையில் மதுரைக் கல்லூரிப் பயிற்றுநர். 48 செப். முதல் அரசுப்பணி. சென்னை மவுண்ட் சாலை கலைக் கல்லூரி முதல்வர் கே. சுவாமிநாதன் தலைமையில் பயிற்றுநர். 53ல் எம். ஏ. ஆங்கிலம் நாக்பூர் பல்கலைக்கழக முதன்மை 3.9.53—14. 1. 54. வரை பாலக்காடு விக்டோரியா கல்லூரி உதவி விரிவுரையாளர், 54—64 கோவை கலைக் கல்லூரியில் முதல்வர் பி. எம். திரு நாரணன், துறைத்தலைவர் ரமாரமண உன்னி தலைமையில், 64 ஏப்—செப் புதுக்கோட்டை. மன்னர் கல்லூரி. 64 செப்—அக். சென்னை மாநிலக்கல்லூரி, புகழ்சான்ற பேரா. எஸ். ராமசாமியின் கீழ், ரா. ஸ்ரீ. தேசிகனுடன். 64—77 குடந்தைக் கல்லூரிப் பேராசிரியர் - துணை முதல்வர், 77-80 மன்னை கல்லூரி முதல்வர், 80—82 கரூர் கல்லூரி, 82—86 தஞ்சை சரபோஜி கல்லூரி - ஓய்வு, 11. 6. 86 முதல் ஒப்பந்த முறையில் 'சங்க இலக்கிய பொருட் களஞ்சிய' ஆங்கில ஆக்கச் சிறப்பு நிலைப் பேராசிரியர். 40 ஆண்டு நற்பணி.

சேக்ஸ்பியரில் சிறந்தவர். Selections from Charles Lamb Selected Modern Short Stories - Mec millan; கவிஞர் திருலோக சீதாராமனின் 'இலக்கியப்படகு; மகா பாரதியின் சக்தி பாடல்கள், வசன கவிதைகள் வளமான ஆங்கிலத்தில் வாகாக வார்த்துள்ளார்; 'சிவாஜி' இரு மொழித்திங்களிதழில் கவிதை, கட்டுரை, மதிப்புரைகள் வரைந்துள்ளார். 81—82க் கான சிறந்த கல்லூரி ஆசிரியருக்கான தமிழக அரசின் விருது பெற்றுள்ளார்.

14-6-54இல் மணம், மனைவி சரஸ்வதி; மக்கள்: மீனாட்சி M.Sc, B.Ed; லக்ஷ்மி M.A. B.Ed; சாவித்திரி B.Sc. B. Tech; கணேசன் B.E, உயர்ந்த ஆங்கிலப் பேராசிரியர், சிறந்த முதல்வர். திறம் சான்ற மொழிபெயர்ப்பாளரான இவரின்

மணிவிழா 88இல்; இவரின் முகவரி: 130. 6வது தெரு, சுந்தரம் நகர், மருத்துவக் கல்லூரிச் சாலை, தஞ்சாவூர்-7.

**ஏ. கே. ராமானுஜம்:** 1929. மைசூர். அத்திப்பட்டு கிருஷ்ண சாமி, பானுமையா உயர்நிலைப்பள்ளி, மகாராஜா, கல்லூரி மாணவர். கொல்லம், பெல்காம், பரோடாவில் ஆங்கில விரிவுரையாளர் 58-59 Poona Deccan Callege Fellow, 60-62 Fulbright Scholar at Indiana 'Varsity, 62 முதல் சிகாகோ பல்கலைக் கழகத்தில் Prof of Dravidian Studies, இதுபோது South Asian Languages and Civilisations. 69இல் தமிழ் எழுத்தாளர் சங்கத் தங்கப்பதக்கம், 76இல் 'பத்மஸ்ரீ', 83இல் Mac Arther Fellowship. 13 நூல்கள் படைத்துளார். ஆங்கிலக் கவிஞர், அருமையான மொழிபெயர்ப்பாளர்.

தமிழுக்கு இவர் ஆற்றிய அரும்பணி; 15 Tamil Poems (65), The Interior Landscape (76 குறுந்தொகைப்பாக்கள்), Hyms for the Drowning (நம்மாழ்வார் பாசுரங்கள்); Poems on Love and War (ஐங்குறு 57, நற் 8, அகம் 12, குறுந் 24 பாடல்கள்), Speaking of Siva (written by AKR). பிற The Striders, No Lotus in the Harvil, The Relations, Samskara, A Trans of U. R. Ananthamoorty's Kannada Novel, Selected Poems. கால் நூற்றாண்டாக அமெரிக்காவில் வதிகிறார். 'வைகை' பற்றிய River எனும் பாடல் வளம் சான்றது. இவரது புறவாழ்வினைப் பொலியச் செய்தவை மானிடவியல் மொழி யியல், ஆங்கிலம்; அகவாழ்வினை சிறக்கச் செய்தவை கன்னடமும் தமிழும் என்கிறார்.

**டி. என். ராமச்சந்திரன்:** மொழி பெயர்ப்பில் முதன்மை பெற்று நிற்கிறார். அதன் திட்பநுட்ப நளினங்களையெல்லாம் நன்குணர்ந்தவர். பெரியபுராணத்தைப் பெயர்த்து முடித் துள்ளார். இந்நாளைய மொழிபெயர்ப்பு வித்தகராக (doyen of Translation) விளங்கி வருகிறார். (பக். 860)

**கே. எஸ். ராமமூர்த்தி:** திருச்சி. தந்தை தேசிய கல்லூரி முன்னாள் முதல்வர் பேரா. கே. சீதாராமன். தாய் மீனாட்சி யம்மாள். வாணியம்பாடி இதலாமிய உயர்நிலைப்பள்ளி கல்லூரிகளில் பட்டம் பெற்று, 54இல் சென்னை மாநிலக் கல்லூரியில் முதுகலை ஆங்கிலம் முடித்து, 11 ஆண்டுகள் பழனி யாண்டவர் கலைக் கல்லூரியில் பேராசிரியர் துறைத் தலைவ ராகத் திகழ்ந்து, மதுரைப் பல்கலைக் கழகத்தில் 'The Rise of

the Indian Novel in English என ஆய்ந்து 75இல் டாக்டர் பட்டம் பெற்றார். இவ்வகையில் இது முதலது, குறிப்பிடத் தக்க கொடை. இவரது தனிக்களம் Indian writing in English & Commonwealth Litt. புனைபெயர் மதுரம் ராமமூர்த்தி.

தமிழ்க் கொடை: சிறந்த தமிழ்ப் படைப்பாளர். கலை மகளில் சத்யபலம், பூப்பூவா பறந்து போகும், புதிய யுகம், பதினெட்டாம்படி, விழிப்பு, கதவுகள், (கதைகள்), மலரும் மனமும், பாஞ்சாலி சபதம், (குறுநாவல்கள்), வழித்துணை (நாராயண சுவாமி ஐயர் 2ஆம் பரிசு). விகடனில் பச்சை விளக்கு (சிறுகதை). வானொலி நாடகங்கள்: சூடிக் கொடுத் தவள், கதவுகள், பொம்மைகள். அரிய கட்டுரைகள் சில: The Love Theme in Tamil Litt, Bharathi Tomorrow, The Rise of the Tamil Novel. தம் கீழ் டாக்டர் பட்டத்துக்கு The Novels of Somerset Mangham & Akilan, Jane Austen & Rajam Krishnan, The Plays of Bernard Shaw & Mu. Va-A Compara -tive study என ஆய்வு செய்வோரை நெறிப்படுத்தியும் வரு கிறார். **முகவரி**: ஆங்கிலப் பேராசிரியர், பாரதிதாசன் பல்கலைக் கழகம். திருச்சி-26.

**கா. செல்லப்பன்**: *11-4-1936*. பசும்பொன் முத்துராம லிங்க மாவட்ட பாகநேரி. காசி விசுவநாதன்: சௌந்தரம் அம்மாள். கல்லல் முருகப்பா உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 53, அழகப்பா கலைக் கல்லூரி இன்டர் 55, அண்ணா மலையில் ஆங்கில இலக்கிய ஆனர்சு 58, 58-61 புதுக்கோட்டை மன்னர் கல்லூரி ஆங்கில விரிவுரையாளர், 62-64 சென்னையில் ஆங்கில மொழிப் பயிற்சி; 66-69 ஈ.வெ.ரா. கல்லூரி, 69-76 மதுரைப் பல்கலைக் கழக ஆங்கிலத் துறைத் துணைப் பேராசிரியர். Shakespeare and Ilango as Tragedians என ஆராய்ந்து 75இல் டாக்டர் பட்டம்; தெ.பொ மீ. வழிகாட்டி.

ஆங்கிலத்திலும் அருந்தமிழிலும் அருமையாகப் பேசும் ஆற்றலர். இருமொழி இலக்கிய வல்லவராதலின் ஒப்பு நோக்கில் இவர் பொழிவுகளின் போக்கு அமையும், அள்ளும் வாகான கருத்துக்களை வக்கணையுடன் வார்த்திடும் வளமை யர். இவரது தமிழுக்கு உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் சுப்பிரமணியம், வ.சுப.மா, இரா. சாரங்கபாணி, தேசிகன், முத்துசிவன், அ. சிதம்பரநாதன் செட்டியார், வெள்ளை வாரணனார், முத்து சண்முகம் பிள்ளை, தெ.பொ.மீ:

ஆங்கிலத்துக்குப் பேரா. எம்.எஸ். துரைசாமி போன்றார் ஊற்றமும் உரமுமானவர்கள் என நன்றி பாராட்டுகின்றார்.

நூல்கள்: எங்கெங்குக் காணினும் சக்தி (ஒப்பியல் கட்டுரைகள்), Bharathi the Visionary Humanist. மொழிபெயர்ப்பு, ஒப்பியல் இரண்டும் இவர் இரு கண்கள், தோய்ந்து தேர்ந்த களங்கள். ம.பொ.சி.யின் விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு, வ.சுப.மா.வின் வள்ளுவம் இரண்டையும் என்னமாய் ஆங்கிலப்படுத்தியுள்ளார். உக்ரேனியன் கவி சிவ்சங்கிகா, டாகிஸ்தான் கவி ரசூல் கம்ஸதவ் ரஷ்யக் கவிதைகள் 10+10 மொழி பெயர்த்துள்ளார். அதுபோலவே ஒப்புமையாக்கம் என்பது இவர் உடலோடு பிறந்தது. எப்போது எதைப் படித்தாலும் அப்போதே ஆங்கில-தமிழ் இலக்கியத்தோடு தன்னையும் அறியாது ஒப்பிட்டு உணர்ந்திடும் உள்ளம் வாய்ந்தவர். முதற்பொழிவு 'ஒரு வானில் இரு நிலவு' கண்ணகி மாதவி, Architectonics of Silapathiharam, பழம்பொருள் புதுக்கனவு (மு.வ. அறக்கட்டளைப் பொழிவு) போன்றன குறிப்பிடலாம்.

மொழியாக்கத்தை முதுகலைப் பாடத் திட்டத்தில் கொணர்ந்தவர். 81இல் பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் 10 நாள் கருத்தரங்கு நிகழ்த்தினார். 64 ஆகஸ்டு-65 சூலைவரை இங்கிலாந்து சென்று முதுகலை ஆங்கிலம் நடாத்தும் திறம் அறிந்து வந்தார். 79, 82,85இல் சிங்கப்பூர் மலேயா RELC சென்று வந்தார். 85இல் இங்கிலாந்து பிரான்சு ஒப்பிலக்கியக் கருத்தரங்கிற்கும், 86இல் பெர்லின் ரஷ்யா சென்று மொழிக் கொள்கை—திட்டம்பற்றி உரையாடி வந்தார். உலக சேக்ஸ்பியர் காங்கிரசில் கலந்து கொண்டார். 76 முதல் பாரதிதாசன் பல்கலைக் கழக ஆங்கிலப் பேருரையாளர், 78 முதல் பேராசிரியர் துறைத்தலைவர். உடல் வளமின்மை கருதி மணமே செய்து கொள்ளாது வாழ்வு முழுதையும் இரு மொழி இலக்கியப் பணிக்கே அர்ப்பணித்துப் பெருமைக்குரிய அருமை இலக்கிய வாழ்வு வாழந்து வருகிறார். **முகவரி:** பாரதிதாசன் பல்கலைக்கழக வளாகம், காஜாமலை, திருச்சி-23.

**பெ சந்திரபோஸ்:** 14-12-1951. மதுரை திருமங்கலம். பெருமாள்: சிவகாமி அம்மாள். 67இல் தேனி நாடார் சரசுவதி உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு, 71இல் மதுரை சரசுவதி நாராயணன் கல்லூரி பி ஏ. முதல் மாணவர், 73 மதுரைப் பல்கலைக் கழக எம் ஏ. 81இல் ஐதராபாத் ஆங்கிலம் மற்றும் அந்நிய மொழிகட்கான மைய நிறுவன

Dip in Teaching English, டாக்டர் பட்டத் தலைப்பு: சங்க இலக்கிய அகப்பாடல்களை ஆங்கிலத்தில் பெயர்க்கையில் ஏற் படும் சிக்கல்கள் பற்றிய ஆய்வு. வழிகாட்டி: டாக்டர் கா. செல்லப்பன்.

பல்வேறு கருத்தரங்குகள்-பட்டறைகளில் மொழிபெயர்ப் பியல் பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் படைத்துளார்; ஆங்கில 20 ஆம் நூற் கட்டுரை கவிதைகள் மொழிபெயர்த்துள்ளார். த.ப. கழகத்தில் கணிப்பொறி பற்றிய சான்றிதழ் பயிற்சி வகுப்பு, ம.ப கழகத்தில் ஒப்பிலக்கியக் கோடை வகுப்பு.

73 முதல் குடந்தை அரசினர் கல்லூரி ஆங்கிலப் பேராசிரி யர். 27-3-77இல் மணம், மனைவி அமுதா; மக்கள் ரதி சிவகாமி, தீபா சிவகாமி. துறுதுறுப்பும் தளரா ஊக்கமும் தயங்கா உழைப்பும் மிக்க நம்பிக்கை நட்சத்திரம். பல்கலைக் கழக மானியக் குழுவினின்று ரூ 10000 ஆய்வுக்காகப் பெற்றவர். நல்லதற்குதவும் நாட்டமும் நல்லெண்ணமும் கொண்டவர். வருங்காலப் பெரும் புகழினார்.

## 62. ஒப்பிலக்கியம் (Comparative Litt)

தமிழில் புதிய துறை. ஒப்பிடு முறை தமிழில் தொன்று தொட்டே அமையினும், ஒத்த புலவர்களையும் ஒப்புடைப் படைப்புக்களையும் காலக் கட்டங்களையும் கருத்து மூட்டங் களையும் ஒப்ப வைத்து ஆராயும் நெறி. மேனாடு தந்த- அங்கிருந்து வந்த அருநெறி எனலாம். ஒப்பிலக்கிய ஆய்வு உலக மெங்கணும் நடைபெறுகிறது; மேனாடுகளில் இது முனைந்து வளர்ந்துள்ளமை போல, இந்தியாவில் சிறப்பாகத் தமிழகத்தில் முன்னேறவில்லை என உரைக்கத்தான்-ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

இனி மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்-பெருமைகள் பேசுவதிலோர் மகிமை இல்லை; திறமான புலமையெனில் வெளி நாட்டார் அதை வணக்கஞ் செய்தல் வேண்டும். ஒன்றை மற்ற வற்றோடு ஒப்பிட்டு உயர்வு காண்பதும் தேடுவதுமே இனிச் செய்ய வேண்டுவதாகும்.

**சொல்லாட்சி:** Comparative என்ற சொல்லை முதன் முதல் எடுத்தாண்டவர் சேக்சுபியர் IV ஹென்றி என்ற நாடகத்தில். ஒப்பு நோக்கல் என்ற பொருளில் பயன்படுத்தியோர் பிரான்சிஸ்

மேர்ஸ், வில்லியம் புல்பேக், ஜான் கிரகரி, சார்லஸ் திப்பின். Comparative Litt என இணைத்து இயம்பியவர் மாத்யூ ஆர்னால்டு 1848இல் தங்கைக்கு எழுதிய மடலில். 1866இல் ஒப்பிலக்கியம் என்று நூலின் மகுடமாக்கி, இதனைப் பொருள் பொதி தொடராக்கியவர் பேரா. பாசுனெட். இதன் முன்பே பிரெஞ்சில் 1829இல் ஏபல் வில்லமெயின், சாந்திபூவு Literature Comparee என்றும்; செர்மானிய மொழியில் ஒப்புமை இலக்கியத் துறை Vergleichenda Literaturgeschichta என்றும் தொடராட்சி செய்தனர்.

**விளக்கம்:** ‘பல்வேறு இலக்கியங்களிலேயே அமையும் உறவு களை ஆராய்வதே ஒப்பிலக்கியத்தின் நோக்கம் (வான் தீகெம்). பன்னாட்டு இலக்கியங்களின் உறவுகள் பற்றிய வரலாறு (கையார்டு). பல்வேறு இலக்கியங்களைப் பிணைக்கும் உயிர்ப் புடை உறவு நிலைகள் பற்றிய ஓர் ஆய்வு (கேம்ப்பெல்). பல்வேறு தேசிய இலக்கியங்களிடையே பரிணமிக்கும் செல்வாக்குகள் பற்றியது (ஜெரார்டு). பல்வேறு இலக்கியங்கள் ஒன்றற்கொன்று செய்து கொள்ளும் செல்வாக்குகள் தொடர் பான பிரச்சனையின் ஆய்வினை மையமாகக் கொண்ட ஒரு தற்கால அறிவியல் (அன்னா ரெவினாஸ்). பல இலக்கியங் களைச் சேர்ந்த எழுத்தாளர் வாழ்வு, உணர்வுகள், ஆன்மீக தேசீய உறவுகளை ஆராய்வது (ஜீன் மேரி கார்)

இஃதோர் இலக்கிய வகை அன்று; இலக்கியத்தைத் திறனாய்வு செய்யும் ஓர் ஆய்வு முறை. இலக்கியங்களிடையே காணப் பெறும் உறவு நிலைகளைக் கண்டு விளக்கம் தரும் ஓர் அறிவியல் முறை. இதன் தோற்றத்திற்குக் காரணமே சமூக விஞ்ஞான சிந்தனையே எனலாம்.

**பண்பும் பயனும்:** உலக இலக்கியம் அனைத்தும் ஒன்றே என்ற ஒரு முழுமை நினைவை (Totality of Litt) உண்டாக்குகிறது.[1] பல்வேறு மொழி இலக்கியங்களிடையே காணக் கிடக்கும் பொதுப் பண்புக்ளையும், ஒரு மொழிக்கே உரிய தனிச் சிறப்புக் களையும் இனங்கண்டு மகிழவும் மகிழ்விக்கவும் செய்கிறது. ஒப்பிட்டுப் பார்த்தால்தான் ஓர் இலக்கியத்தின் உண்மைத் தன்மையும் உயர்வும் நன்கு புலனாகும். இலக்கிய ஆய்வு நெறி கூட்டுத் தலைமை நிலை வகிக்கிறது. மாநில தேசிய குறு

1. Yet Litt is one, as art and humanity are one - Rane Wellek & Austin warren. Theory of Litt. P. 50.

எண்ணங்களையெல்லாம் தகர்த்துத் தவிடு பொடியாக்கி நாட்டெல்லை பிரிவினை பேதங்களையெல்லாம் தாண்டச் செய்து உலக ஒருமை நோக்கி உய்க்கிறது. அதே சமயம் அவ்வந் நாட்டு மரபுகளையும் மதிக்கச் செய்கிறது.[2] முன் போல் உணர்ச்சி வசப்படாது-கண் மூடிப் பற்று காட்டாது, காய்தல் உவத்தல் இன்றி அறிவியல் முறையில் இலக்கிய ஆய்வினை மேற்கொள்ளச் செய்கிறது. உலக இலக்கிய அரங்கில் நம் இலக்கிய நிலை என்ன? நாம் எங்கே இருக்கிறோம். இலட்சியத்தை எட்ட எவ்வளவு தொலைவு உளது, அதனை எட்ட என்ன செய்ய வேண்டும் எனத் தெளிவுபடுத்துகிறது. இந்த ஞானம் வந்தபின் நந்தம் தாய்மொழி இலக்கியத்தை உலக அரங்கில் உயர்த்தவேணும் என்ற உத்வேகம் பிறக்கும். கல்தோன்றி மண் தோன்றா...என்பன போன்ற தற்பெருமை மறைந்து, தன்னிலை யுணரச் செய்கிறது; தருக்கு அடங்கு கிறது.

நம் இலக்கியத்தை எப்படியெல்லாம் ஏற்றமுறச் செய்ய லாம், எழில் பெற என்னவெல்லாம் இயற்றலாம். புதியன புகுத்தலாம், அணிகள் புனையலாம் எனத் தோன்றும். நம் மூடிய கண்கள் திறக்கும், குறுகிய மனம் விரியும், பரந்த நோக்கும் விசால பார்வையும் வரும். உலகில் மொழிகள் தான் பலவே தவிர, இலக்கியம் ஒன்றே-பொதுவே என்ற உண்மை உணர்வோம்.

இதுவரை இருந்த என் மொழி, என் இலக்கியம் என்ற கூனிக் குறுகிய (Crucked) பார்வை போய், நம் மொழி நம் இலக்கியம் என்ற பெரு நோக்கு பிறக்கும். தேசிய ஒருமைப் பாட்டையும் தாண்டி உலக ஒருமைப்பாடு உண்டாம்.

உண்மையான ஒப்பிலக்கியம் வளரப் பன்மொழி இலக்கிய அறிவு இன்றியமையாது வேண்டும். இனி ஒரு மொழி வைத்துக் கொண்டு ஒன்றும் செய்ய ஒண்ணாது, ஒப்பிட்டுக் காட்டினால் தான் உலகம் ஒப்பும்!

**தமிழில்... :** தமிழில் ஒப்பீடு, இலக்கணம் சமயம் என்ற இரு துறைகளில் இயன்று, இன்று இலக்கியத்திற்கு வந்திருக்

---

2. C. L. Surely wants to overcome national prejudices and provincialisms but does not therefore ignore or minimise the existence and vitality of the different national traditions - Ibid P. 36.

கிறது. தொல்காப்பியரும் உரையாசிரியர்களும் தொட்டுக் காட்டியுள்ளர்.

சென்ற நூற்றாண்டில் ஜி.யு. போப், எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், சித்தாந்தா போன்றார், சங்கப்பாக்கள் கிரேக்க-வீரயுகப் பாக்களுடன் ஒப்பிடலாம் எனக் குறிப்பிட்டுக் கால் கோள் செய்தனர். கால்டுவேலர் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என மொழியில் நோக்கினார். வ.வே.சு. அய்யர், பேரா. வையாபுரிப் பிள்ளை, மறைமலையடிகள், பண்டிதமணி, மு.வ., வ.சுப. மாணிக்கம், தெ.பொ.மீ., தனி நாயக அடிகள், எஸ். ராமகிருஷ்ணன், சிதம்பர ரகுநாதன், வி. சச்சிதானந்தம், சீனிவாச ராகவன், வ.அய். சுப்பிரமணியம் எஸ். சிங்காரவேலு, கா. செல்லப்பன, அ.அ. மணவாளன் எம்.எஸ். நாடார், கைலாசபதி, ஜான் சாமுவேல் முன்னோடி களாக முறுவலிக்கின்றனர்.

தெ.பெ.மீ, கா. அப்பாதுரையார், ஜஸ்டிஸ் மகாராஜன், ந. சஞ்சீவி, ச.வே. சுப்பிரமணியம், மு. அருணாசலம், க.சி. கமலையா, கே. எஸ். நாகராஜன், மு கு. ஜகந்நாத ராஜா, மது. ச. விமலானந்தம், இ சு. முத்துசாமி, போல்வார் முனைந்து வருகின்றனர்.

மொழி ஞாயிறு பாவாணர் ஒப்பியல் மொழி நூல் என வெளிப்படுத்தினார். 'ஒப்பிலக்கியம்' என டாக்டர் க. கைலாசபதி அவர்கள்தான் 'ஒப்பியல் இலக்கியம்' என்ற நூலின் மூலம் **முதன் முதல்** தமிழ் உலகிற்கு அறிமுகப்படுத்தினர். வளர்ந்து விரிவடைந்த நிலையில் ஒப்பியல் என்பதை விட ஒப்பி லக்கியம் என்ற செறிவுடைச் சொல் ஆட்சிக்கு வந்தது. டாக்டர் தமிழண்ணல் 'ஒப்பிலக்கிய அறிமுகம்' எனக் கொள்கை விளக்கம் ஆய்வுப் பரப்பை மட்டுமே வரலாற்று முறையில் காட்டும் அரிய நூலினை 73இல் வெளியிட்டார். டாக்டர் வ.சுப. மாணிக்கனார் 'ஒப்பியல் நோக்கு' என்ற நூலினைத் தந்தார்.

மேலை நாட்டுத் தமிழறிஞர்களான ஜான்மார். கமில் சுவலபில், ஜார்ஜ். எல். ஹார்த், கெலி ஷெவ் போன்றோர் தமிழிலக்கிய ஒப்பியலுக்கு வழிகோலியுள்ளனர்.

'ஒப்பியல் ஆய்வே உயர்ந்த ஆய்வு. இதற்கு **வித்திட்ட முதல்வர்களுள்** ஒருவர் செருமானிய நாட்டுப் பேரறிஞர் **மாக்சு முல்லர்** எனலாம். 'ஒப்பீட்டாலேயே எல்லா உயரறிவும் பெறப்

படுவதோடு நிலை நிறுத்தவும் படுகிறது' என்பது மாக்சு முல்லரின் மணிமொழிகளில் ஒன்று-டாக்டர் ந. சஞ்சீவி.

**இலக்கிய ஒப்பாய்வுக் கழகம்:** (Academy of Comparative Litt). ஜான் சாமுவேல் ஆர். சண்முகம் இருவரும் ஒப்பாய்வர்களை ஒருங்கிணைக்கவும் ஒப்பாய்வினை உந்தவும் இக் கழகத்தை ஏற்படுத்தினர். 79 செப்டம்பரில் தொடங்கி வைத்தவர் டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன். திங்கள்தோறும் கருத்தரங்கினை நிகழ்த்தினர். கட்டுரைகள் கொண்டே இரு நூல்கள் ஓராண்டில் கொணர்வது, காலாண்டு இதழ் நடாத்துவது என்ற கருத்தினர். கோடை வகுப்புகள் நடத்துவது, ஒப்பியல் ஆய்வு மூலம் தமிழின் அழகும் புகழும் உலகிற்குணர்த்துவது. போன்ற நன்னோக்கினது. **முகவரி:** B/3. Govt Employee's Quarters, Ramakrishna Nagar. Madres-28.

**இந்திய ஒப்பிலக்கியம்:** (செய்தியிதழ்). 86 சனவரி முதல் வெளிவருவது. சிறப்பாசிரியர்: காந்திகிராமம் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் பிச்சை அவர்கள். உறுப்பினர் கட்டணம் உருபா 10. இந்திய இலக்கியம், தேசிய இலக்கியம், சிந்தனைக்கு, இந்திய இலக்கியச் சிற்பி, நூல் அறிமுகம், செய்திச் சுரங்கம், கங்கையும் காவிரியும் போன்ற பயனான பகுதிகளைப் பாங்காகக் கொண்ட 4 பக்க ஏடு. ஒப்பிலக்கிய வளர்ச்சிக்கோர் உறுதுணையான ஒப்பரிய இதழ். **முகவரி:** பி. கமலம், கபிலன் பதிப்பகம், பாண்டியன் நகர் அஞ்சல், அம்பாத்துரை R.S. 624 309.

ஒப்பிலக்கிய நோக்கினை உணர்த்தும்-உருவாக்கும் சில தலைப்புகளை நோக்குவாம்:

| | |
|---|---|
| Valluvar & Bible | Antony Azhakaiya |
| Ramalingar & Hopkins | J. Dhanarajan |
| Byron & Barathidasan | M.D. Jayapalan |
| Burns & Bharathidasan | M. Elamaran |
| Whitman & Bharathi | V. Satchidanandam |
| Vallathol & Bharathi | S. Dhason |
| Robert Frost & Bharathi | N. Subramanian |
| Bharathi & Yeats | R. Rajagopalan |
| Shelley & Bharathi | A. Paul Ranji |
| ,, ,, | Gnana Sambandan |
| Pharathi. Keats & Shelley | M. S. Vimalanandam |

| | |
|---|---|
| Ahilan & Vasudevan Nair | G. Devadasan |
| Jayakanthan & John Updike | A Shanmugakani |
| D.H. Lawrence & Jayakanthan | Regina Papa |
| Love in Sanjam Litt & Hindi Riti Litt | T.S. Kuppusamy |
| Religious poetry in Eng & Tamil | M. Vedapureeswaran |
| Impact of western thought on Kavimani | B. Devandran |
| Short stories in Tamii & Malayalam | K. Rajaseharan |
| Mu. Va and Shaw | M. Thayyal Nayaki |
| Samerset Maugham & Mu. Va | Jeeva Nagarathinam |

A Comparative study of Commentators with spl ref to Adiyarku Nallar. (C Ravindran), of Krishna Bhakta poets of Hindi & Alwars of Tamil (Malik Md), of Kamba Ramayanam & Tulasi Ramayan (S. Shahker Raju Naidu), of Tolkappiyam Uvamaviyal & Tantiyalankara uvamai Ani. (Nataraja Sarma) of Two dialicts of Xcan Nadar and Xcan Vellala, Padayachi S.A. Dt & Trichy Dt, Kaunder & Mudaliar of Salem Dt.

பாரதி பாரதிதாசன் (சி. கனகசபாபதி), கவிதை கிழக்கும் மேற்கும் (க.ப. அறவாணன்), சிலம்பும் சிந்தாமணியும் (ச. வே. சு), கம்பனும் மில்டனும், இராமாயணமும் சொர்க்க நீக்கமும் (எஸ். ராமகிருஷ்ணன்), பாரதியும் ஷெல்லியும் (ரகுநாதன்) திருநாவுக்கரசரும் மாணிக்கவாசகரும் (ஜி. சுப்பிர மணிய பிள்ளை). இளங்கோவும் சேக்சுபியரும் (செல்லப்பன்) மகான்களை ஒப்புநோக்கி எழுதியுள்ள பி ஸ்ரீ. படைப்புகள் ஏற்றம் சான்றன. காந்தியும் லெனினும், பாரதியும் தாகூரும், வள்ளுவரும் சாக்ரடீசும், கபீரும் தாயுமானாரும், மணி வாசகரும் நம்மாழ்வாரும்.

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக் கோவைகளில் ஒப்பிலக்கியக் கட்டுரைகள் இடம்பெற்றுள. மாணவர்கட்கேற்ப 'ஒப்பிலக்கிய நோக்கில் தமிழிலக்கியம்' என்ற நூலினைத் தந்துளார் அய்யாற்று அரசர் கல்லூரிப் பேராசிரியர் எஸ். செல்வ கணபதி: மதுரைப் பல்கலைக் கழக ஆங்கிலப் பேருரையாளர் ஜீவரெத்தினம் **'ஆங்கிலம்-தமிழ்: இலக்கியத் தொடர்புகள்-ஓர்** இலக்கியத் திறனாய்வுப் பட்டியல்' நூல் படைத்துளார்.

ஒப்பிலக்கிய ஒட்பம் அறிஞர்களின் கருத்துருவோடு கலந்து, ஒப்புமை செய்வது (Comparing), ஒப்பிலக்கிய நெறியோடு கலந்து மயங்கி வேறுபாடின்றிப் போய்விட்டது. வருந்தத்தக்கது. இத் தவறான போக்கினைப் போக்க, உமிபோக்கி நெல்மணி காட்டுமாறு ஆங்கில - தமிழ் இலக்கியத் தொடர்புகள் ஓர் இலக்கியத் திறனாய்வுப் பட்டியல் (86) உருவாக்கியுள்ளனர்.

**புத்ததேவ போஸ்** : (1908-74). வங்கமொழியின் புகழ் பூத்த கவிஞர், நாவலாசிரியர், இலக்கியத் திறனி. இந்தியாவில் முதன்முதல் ஒப்பிலக்கியத் துறையினை ஜாதவ்பூர் பல்கலைக் கழகத்தில் 56இல் தோற்றியவர். ஒப்பிலக்கியத்திற்கென ஓர் இதழ் உருவாக்கினார். பிரெஞ்சு ஜெர்மன் தற்காலப் பாடல்களை வங்காளத்தில் பெயர்த்துள்ளார்; அவை பெங்காலிக் கவிதையில் மிகுதாக்கத்தைத் தோற்றியது. கவிதா எனும் வங்காளக் கவிதை இதழின் ஆசிரியர். 150 நூல்கள் வங்காளத்தில் படைத்துளார்.

**தெ பொ மீ.** தமிழகத்தில் ஒப்பிலக்கிய உணர்வினை வித்திட்டவர் 52இல் அண்ணாமலையில்! பன்னூல்கள் பல கட்டுரைகள் மூலம் பரவும் வகை செய்தார்.

**க. கைலாசபதி** : (1934-83). மிகு புகழ் வாய்ந்த தமிழ்ப் பெரும் பணியாளர். ஒப்பிலக்கிய உள்ளம் வாய்ந்தவர். தமிழ் வீரயூகப்பாடல் நூல்மூலம் கணிசமான ஒப்பாய்வுக்கு வழி கோலியவர். ஒப்பிலக்கியச் சொல்லையும் நூலையும் அதன் ஆய்வுகளையும் (அடியும் முடியும்) அருளியவர். மார்ச்சீய சமுதாயப் பார்வையர். 'தமிழ்-மேலை இலக்கிய உறவு' எனும் பேருரை மதுரைப்பல்கலைக் கழகத்தில் நிகழ்த்தியது-மறைவுக்குபின் வெளியாகியுளது.

இவ்வகையில் தமிழில் **ஒப்பிலக்கியத் தந்தை** வ. வே. சு ஐயர் என்றும் **ஒப்பிலக்கிய ஓட்டுநர்** தெ. பொ. மீ. எனவும்; **ஒப்பிலக்கிய ஒண்மையர்** தனிநாயக அடிகள் என்றும், **ஒப்பிலக்கிய வழிகோலி** கைலாசபதி எனவும் **ஒப்பிலக்கிய ஒள்ளியர்** வை. சச்சிதானந்தம் என்றும் **ஒப்பிலக்கியத் தளபதி** ஜான்சாமுவேல் எனவும் கூறி மகிழலாம். இச்சால்பூன்றிய நற்றூண்களாம் அறுவரையும் ஏற்றுப்போற்றுவோம்.

இரண்டுக்கும் மேற்பட்ட தேசிய இலக்கியங்களை முறையாக ஒப்பிடுவது; இலக்கியத்தை இலக்கியமல்லாத மானுட

வியல் அறிவியல் போன்ற துறைகளுடன் ஒப்பிடுவது என இரு வகையில் ஒப்பிலக்கியம் அமையும். ஒரே கவிஞரின் இரு நூல்களை ஒப்பிடுவது என்பதைவிட ஒருமொழி இரு இலக்கியங்களை-புலவர்களை ஒப்புமை காண்பதைக் காட்டிலும், இரு வேறு மொழி இலக்கியம்-புலவர்களை ஒப்பிட்டு மதிப்பிடுவது ஒண்மையது—உயர்வாகும்.

இனி தமிழில் சில சிறந்த ஒப்பிலக்கிய வல்லாளர்களைப் பற்றி அறிந்து மகிழ்வோம்:

**வை சச்சிதானந்தம்** : அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆங்கில எம். ஏ. (49), ஒப்பிலக்கியத்துறை எம். லிட் (62), டாக்டர் பட்டம் (68). 49-69 அண்ணாமலை விரிவுரையாளர். 69-72 மதுரைக் காமராசர் பல்கலைக் கழகப் பேருரையாளர், 72 முதல் ஆங்கில-ஒப்பிலக்கியத்துறைத் தலைவர். 63-64இல் அமெரிக்கா இந்தியானா பல்கலைக் கழகத்தில் Full bright Professor.

இந்திய, உலக உயர் ஏடுகளில் எண்ணற்ற ஆராய்ச்சிக் கட்டுரைகள் தீட்டியுள்ளார். நூல்கள் : The Impact of western thought on Bharati (M. Litt) Whitman and Bharati - A comparative Study (Ph. D) ஒப்பிலக்கியம் - ஓர் அறிமுகம். இலக்கியக் கலைச்சொல் விளக்கம், ஒப்பிலக்கியக் கட்டுரைகள் : Comparative Litt. Scope & Method; comparative Litt: Defenition, scope & Method, The influence of Bernard Shaw on M. Varadarajan- A case study; Dr. M. Varadarajan and Somerset mangharm as Novelists A sample study; H. G. Wells - The Invisible Man and Mu. Varadarajan's Mankuticai a thematic comparison, ஒப்பிலக்கியம் என்றால் என்ன? (செந்தமிழ் 74:4. 1980 திசம்பர்).

அமெரிக்க இலக்கியத்தில் வல்லவர் முதன்மையர். ஒப்பிலக்கியம் பற்றி பல்கலைக்கழக மானியத்துடன் 78, 82இல் ஒப்பிலக்கியக் கோடை வகுப்பு நடத்தியவர்.

**அ. அ. மணவாளன்** Epic Heroism in Milton and Kamban, The Exordiums of Ranayanam & Milton's Paradise Lost. Wordsworth & Bharathidasan. **கா. செல்லப்பன்** Shakespeare and Ilango as Tragedians. The Problem of Evil in King Lear and Silappathiharam. எங்கெங்கு காணினும் சக்தி.

**எம். எஸ் நாடார்** : (சுப்பையா) முகவை மாவட்ட கல்லல். அண்ணாமலையில் ஆங்கில இலக்கியம் பயின்று திருச்சி

தோற்றோரியல் கல்லூரியில் மாணவர்களைத் தம் அழகு ஆங்கிலத்தால் கிறங்கச் செய்து பின் தாமே தனித்தோற்றோரியல் கல்லூரித் தோற்றி பல்லாயிர மாணவர்களை அந்நிய மொழியாம் ஆங்கிலத்தும் பிறவற்றிலும் கடைத் தேற்றும் கைங்கரியம் ஆற்றிவருகிறார்.

பட்டிமன்றம் தனிப்பேச்சு இரண்டிலும் வல்லார்; இரு மொழியிலும் ஒப்புமையால் ஆற்றி அசத்துவார். இவரது ஆங்கிலத் தனி உச்சரிப்பில் மாணவர்களும் மற்றவரும் மயங்குவர். தமிழ் இலக்கிய அருமையினை ஆங்கில இலக்கிய ஒப்புமை உரையால் பெருமையுறச் செய்யும் பேராற்றலர். அவற்றை எழுத்தில் வடித்துத்தரின். நிலையான ஒப்பிலக்கியப் பரப்புக்கு ஒரு பெருங்கொடையாக அமையும். இந்நாளில் தமிழ்+ஆங். ஒப்பிலக்கியப்பணியில் இவர் பங்கு கணிசமானது. **முகவரி:** குமரி தோற்றோரியல் கல்லூரி. 3 Fort Station Rd. Thiruchy 2.

**ஜி. ஜான்சாமுவேல் ;** *2-4-1948.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முதுநிலை ஆராய்ச்சியாளராக இருந்து இது போது Institute of Asian Studies தலைமைப் பதிப்பராக உள்ளார். எம்.ஏ. ஆங்கிலத்திலும் தமிழிலும் பெற்றவர் மொழியியலிலும் பட்டயம் பெற்றவர். ஒப்பிலக்கியமே உயிர் மூச்சாகக் கொண்டவர்; ஒப்பிலக்கியக் கழகம் உருவாக்கியவர். திறனாய்வில் தேர் திறனி. மொழி-இலக்கியம் இரண்டிலும் ஒப்பாய்வு செய்பவர்-தூண்டுபவர்.

தந்தவை: திராவிட மொழிகளின் ஒப்பாய்வு ஓர் அறிமுகம். ஷெல்லியும் பாரதியும்-ஒரு புதிய பார்வை. Studies in Comparative Litt, Comparative Litt vol I, Studies in Tamil Poetry, Collected Papers on Tamil Litt. இலக்கியத் திறனாய்வு, திறனாய்வுச் சிந்தனைகள்; இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள், இலக்கியத்தில் சமுதாயப் பார்வை.

ஒப்பிலக்கியத்தில் உயர்ந்து ஒளிர்கிறார். தமக்கென ஒரு தனி இடம் தோற்றி அதில் வல்லாராக விளங்குகிறார். அது போல் திறனாய்விலும் தெளிந்து திகழ்கிறார். இரண்டிலும் இலக்கண நூல்களையும், அவற்றைச் செயற்படுத்தும் இலக்கிய நூல்களும் படைத்து இருவகையில் தொண்டாற்றி வருகிறார். **முகவரி:** *21*வது கிழக்குத் தெரு, திருவான்மியூர், சென்னை-41 *(416728)*

இனி ஓர் இலக்கியத்தை மட்டுமே தனியே உருட்டிக் கொண்டு மருட்டிக்கொண்டிருக்கலாம் என மனப்பால் குடிக்கும் காலம் மலையேறிவிட்டது. ஒப்பிட்டு ஆயும் உணர்வு ஒப்பீட்டு நோக்கு ஓங்கி வருகிறது என்றுணரவேணும். அதற்கேற்ப நம்மையும் நம் இலக்கியத்தையும் ஏற்புடைத்தாக்கிக் கொள்வது இன்றியமையா முதற் கடமையாகும். காலத்தோடு வளர்ந்தேறி வருவது கண்ணியம். காலத்தேவைக்கேற்ப நம்மை சமைத்துக்கொள்வது கடமை.

## 63. தனித்தமிழ் இயக்கம்

தனித்தமிழ் என்றதும் இஃதொரு தனிமொழி எண்ணிவிட லாகாது. வடமொழி, ஆங்கிலம், இந்தி போன்ற எந்த மொழிச் சொற்களும் தமிழில் கலவாது க்லக்கவிடாது காப்பதே குறிக்கோளாகக் கொண்டது. அம்மாமித் தமிழ் அரபுத்தமிழ், பாதிரித்தமிழ், கலப்புத்தமிழினின்று வேறு பிரித்துக் காட்டவே இத்தூய தமிழ்த் துடிப்பு. அப்படிக் கலப்பதால் தமிழ் இனிமை இழப்பதோடு, வண்டமிழ்ச் சொற்கள் பல வழக்கொழிந்து போகின்றன. இது பிறமொழி வெறுப்பியக்கமோ எதிர்ப்பியக்கமோ-வகுப்புவாதமோ அன்று; தன்மொழியின் தூய்மை காக்கும் தாய்மை உணர்வே!

தொல்காப்பியர் தொடங்கியே பிறமொழிக் எதிர்க்கப் பட்டு வந்துளது. அதனாற்றான் 'வடசொற்கிளவி வடவெழுத் தொரீஇ' என வகுத்தார். இம்முயற்சி 19ஆம் நூற். தொடக்கத் திலேயே தொடங்கிற்று. சாமிநாத தேசிகர் (17நூற்) 'இலக்கணக்கொத்தில்', 'அன்றியும் தமிழ் நூற்களவில; அவற்றுள் ஒன்றையாயினும் தனித்தமிழ் உண்டோ?' என்றெழுப்பிய வினா, விழிப்பினை ஏற்படுத்திற்று. கால்டுவேலர் போன்ற மேலை நாட்டுப் பாதிரிமார் 'தமிழ் உயர்தனிச் செம்மொழி, தனித்தியங்க வல்ல திறத்தது' என எழுச்சியூட்டினர். மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை ஆரியத்தைவிடத் தமிழ் உயர்ந்தது என்ற உணர்வூட்டினார். பாம்பன் சுவாமிகள் சேந்தன் தமிழ் எனும் செழுந்தமிழ்ப் பனுவலைத் தனித்தமிழில் யாத்துத் தம் எதிர்ப்பினை மூட்டி னார். அயோத்திதாசப் பண்டிதர் (1856-1919) தருக்கநூலும் தமிழன் தாளிகையும் தந்து தமிழுணர்வை முடுக்கினார். தமிழின் தனிமாண்பு நாட்டினார் விருதைச் சிவஞான யோகிகள்.

பா.வே. மாணிக்க நாயக்கர் (1871-1971) 'பிறமொழிக் கலப்பில்லாமல் தமிழ் அறிவியற் சொற்களையும் அமைத்துக் கொள்ளலாம் எல்லா அறிவியற் சொற்களையும் தூய தமிழில் ஆக்கலாம். இரவல் பெறுமாறு வறுமையுடைய மொழியன்று நமது உயர் மொழியாகிய தமிழ் மொழி, அறிவு வளர வளர மொழி வளரும். இரவலால் வளராது' என்று 1927லேயே அறிவுறுத்தினார்.

19ஆம் நூற். இறுதியில் ஒரு திருப்பம் வி. கோ சூ தம் பெயரை பரிதிமாற்கலைஞர் எனத் தூய தமிழில் பெயர்த்தார். இவரே தனித்தமிழ் உணர்வுக்கு **வித்திட்டார்.** 1916இல் பல்லாவரத்தில் சுவாமி வேதாசலம்-மகள் நீலாம்பிகையும் அளவளாவிக் கொண்டிருந்தபோது, 'பெற்ற தாய்தனை' எனும் வடலூரார் பாடலைப் பாடிவரும்போது, இரண்டாம் அடியில் 'உற்ற **தேகத்தை** உயிர் மறந்தாலும்' என்ற பகுதியில், தேகத்துக்குப் பதில் **யாக்கையை** எனத் தமிழ்ச் சொல்பெய் திருந்தால் மேலும் சிறந்திருக்கும் என்று கூறினார். மகளும் மாற்றத்திற்கு மகிழ்ந்து 'இனி நாமும் வடசொற் களைந்து பேசுவோம்' என, 'இனி அவ்வாறே தனித் தமிழையே பேணு வோம்' என உறுதி பூண்டு, எழுத்திலும் பேச்சிலும் முனைந் தனர். சுவாமி வேதாசலம், மறைமலையடிகள் ஆனார்; சமரச சன்மார்க்க நிலையம் பொதுநிலைக் கழகம் ஆயிற்று; ஞான சாகரம், அறிவுக்கடல் ஆகியது. தனித்தமிழ் இயக்கத்திற்குக் கால்கோள் இடப்பட்டது.

தமிழவேள் உமாமகேசுவரனார், திரு. வி. க., நாவலர் பாரதியார், பண்டிதமணி, நாட்டார், அரசஞ் சண்முகனார், கா. நமச்சிவாயர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கு வனார் போன்றார் துணை நின்றனர். மாகறல் கார்த்திகேய முதலியாரின் 'மொழிநூல்' தமிழ், ஆரியத்துக்கு முந்தியது, குமரிக்கண்ட உண்மை, தமிழ் உலகு முழுதும் பரவியிருந்தது போன்ற விளக்கம் தந்தது. மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் **பாவாணர்**, இவ்வியக்கத்திற்கு ஊற்றம் தந்தார்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பல்வேறு நூல்களின் மூலம் தூயதமிழுணர்வினைப் பரவும் வகை செய்தது. புதுவை சுந்தர சண்முகனார் 'தனித்தமிழ்க் கிளர்ச்சி' (1947) தந்தார். பாவேந்தர் 'தமிழியக்கம்' படைத்தார். இந்தித் திணிப்பு-திராவிடர்க்கழகக் கணிப்பு போன்றன தமிழ்ப் பற்றினை மூட்டின. புலவர் பொன்னம்பனார் தனித்தமிழுக்கு அரும்பாடு பட்டார்.

பெருஞ்சித்திரனார் தம் தென்மொழி இயக்க வழி 59முதல் அரும்பணியாற்றி மாணவர்களிடத்தும் இளைஞர்களிடத்தும் தனித்தமிழ் வீறு ஊட்டி வருகிறார். இவருக்கு உறுதுணையாக அண்ணல்தங்கோ, மறை நித்தலின்பனார், உறந்தை ராயன் குடிக்காடு நக்கீரர், பட்டணம் பாவை நடவரசர், திருவாரூர் சரவணத் தமிழன். தமிழ் நிலவன், மருத்துவர் மறையரசன், வடிவேல் ராவணன், கடலூர் மணிமாறன், இரா. இளங்குமரன், அருளி, மதிவாணன் போல்வார் உளர்.

பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், வாடாத் தமிழ் வண்ணப் பூமேல் நடந்த வண்ணத் திருக்குமரன், மா. நன்னன், சாலை இளந்திரையன் இணைகள், ஆனைமுத்து, பொற்கோ, இளவரசு, அரசக்கண்ணன், கோவை இளஞ்சேரன், எழிலரசு, தமிழ்க் குடிமகன் போன்றார் பாடுபட்டமை நினைவு கூரத் தக்கது. ஈரோடு மு. ச. சிவம் பணி போற்றத்தக்கது. அறிவியக்கப் பேரவை பெருந்துணை புரிகிறது.

மறைமலையடிகட்குக் கிடைக்காத ஒத்துழைப்பும் வழித் தோன்றல்களும், பாவாணருக்கும் பெருஞ்சித்திரனாருக்கும் கிட்டின. அன்றைவிட விழிப்பு கூடியுளது. தமிழ்ப் பாது காப்புக் கழகம் கேடயமாக விளங்குகிறது.

கடந்த அரை நூற்றாண்டாக ஆற்றிய தனித்தமிழியக்க முயற்சியால் அரசு நிலையிலும் சமுதாயத்திலும் ஓரளவு நல்ல தமிழ் நிலவுகிறது. என்றாலும் ஆல்போல் தழைத்து அருகு போல் வேரோடாமைக்கு, மாத்தமிழனின் மரத்துப்போன உணர்ச்சியற்ற தன்மையும்; தாய்த்தமிழினை உயிர் மூச்சாகக் கருதாப் பலர் தமிழர் எனப் பேரளவில் இருப்பதும் கரணியங் களாகும்.

மணிப்பிரவாள நடையினை மறுத்து மாற்றிய நாம், புதுக்கவிதை வழி கலப்புத் தமிழ் கனன்று வருவதைக் (கவிஞர்களே) கருதாமையும் வருந்துமாறுளது. ஒரு பக்கம் தூயதமிழ் உன்னும் இவர்கள், புதுக்கவிதையில் வடமொழியை இடையில் புகச் செய்கிறோமே என எண்ணுவதில்லை! ஒவ்வொருவருக்கும் குருதியோடு கலந்து தாய்மொழித் தூய்மை தோன்று நாளே, தூயதமிழ் ஊன்று நாள் எனலாம். மறந்த தூயதமிழ்த் தொண்டர் சிலரை நினைவு கூர்வோம்:

**மு. அண்ணல்தங்கோ :** *12-4-1904.* முகவை மாவட்ட கண்டவிராயன்பட்டி. பாவாணர், அண்ணாமலையிலிருந்து

விலகித் தத்தளித்தபோது தாங்கிப் போற்றிய தாளாளர். நூல்கள்: அறிவுப்பா, முத்தமிழ் ரத்தினம், மும்மூர்த்திகள் உண்மை தெரியுமா? அண்ணல் முத்தம்மாள் பாட்டு, தமிழ் மக்கள் தந்த செய்தி அல்லது சிறையில் யான் கண்ட கனவு நாட்டுத் தொண்டுக்காக 5 முறை சிறை சென்றவர்! 'தமிழ் நிலம்' கிழமை இதழ் (20-36) நடாத்தியவர். 'தூய தமிழ்க் காவலர்' பட்டம் பெற்றவர். **முகவரி**: காட்டுப்பாடி விரிவு, வேலூர். வ. ஆ.

**பா. சு. மணியம் (சுப்பிரமணியம்)** : மறைமலையடிகளின் வாரிசு எனலாம். அவர் போன்றே (வெள்ளாடையால்) முக்காடிட்டு, திருநீறும் சந்தனப் பொட்டும் இட்டுக் கல்லூரிக்கு வருவார். மிகச் சிறந்த புலமையாளர், தலைசிறந்த ஆசான். திராவிட இயக்கம் தலைநின்ற காலக்கட்டத்தில் குடந்தை அரசினர் கல்லூரியில் பணியாற்றி, அத்தனை மாணவர்களின் மதிப்புக்கும் துதிப்புக்கும் உரிய பெரியவராகப் பிறங்கினார். பண்டிதப் பாண்டித்தியமும், தனித்தமிழ்த்தகவும் மிகவாய்ந்தவர். அகத்தும் புறத்தும் அப்பழுக்கற்ற தூய்மை தமிழ் கூறு நல்லுலகம் வணங்கிப் போற்றும், மாணவருலகம் மதித்துப் போற்றிய மாண்பினார் தமிழ்ப்பல்கலைக் கழக ஆட்சிக்குழு- ஆட்சிப்பேரவை உறுப்பினராக உள்ளார். **முகவரி**: 28/739, லாலி சாலை, சுப்பிரமணிய புரம், கோவை-641 010.

**இறையரசன்**: 15-3-1948: திருவையாறு. பாலசுப்பிரமணியன்: அலர்மேலு மங்கையம்மாள். 64 மதுக்கூர் அரசினர் உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு; பூண்டிபுட்பம் கல்லூரி இளங்கலை-(தமிழ்); சென்னை மாநிலக் கல்லூரி முதுகலை- 75 முதல் பூண்டி புட்பம் கல்லூரித் தமிழ்த்துறை. 84இல் எம்.பில்; 'தெ. ஆ. மாவட்டக் கல்வெட்டுக்களில் பெயர்கள்' முனைவர் பட்டத் தலைப்பு 'பாரதியாரின் இதழியல் பணி.'

தனித்தமிழ்ப் பற்றாளர், உண்மையான தனித்தமிழ் விரும் செயற்றிறமும் கொண்டவர். எழுத்துச்சீர் திருத்தத் திண்ணியர். தஞ்சாவூர் தமிழ்ப் பேரவை அமைப்புச் செயலர், தமிழ் நாடு தனித்தமிழ் எழுத்தாளர் நூற்பதிப்புக் கழக அமைப்பர். அரசரின் அளிப்புகள்: குழந்தைக்குத் தமிழ்ப் பெயர்கள், தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ் நாட்டு வரலாறு; தமிழ் எழுத்துச் சீர் திருத்தம், 'வாசிப்பது' சரியா? மணம் 5-7-71. மனையாட்டி கமலம்; மக்கட்பேறு அறிவுடைச் செந்தில்; அங்கயற் கண்ணி, கார்குழலி. போலிமை கண்டு பொங்கும் தூய நற்றமிழ்த்

தொண்டராம் இவரின் குடியிருப்பு 'அன்னை நிலையம்' அஞ்சல் குடியிருப்பு, தஞ்சாவூர்-613006.

## 64. எழுத்துச் சீர்திருத்தம்

மேலை மொழிகளில் மிகக் குறைந்த எழுத்துக்களே இருப்பதால், தட்டெழுத்தும் அச்செழுத்தும், சுருக்கமும் தெளிவும் பெற்றொளிர்கின்றன. விரைந்த முன்னேற்றத்திற்கு வாய்ப்பு உளது; ஒரே சீரான முறை, குழந்தைகட்கும் கற்கக் குழப்பமின்றி அமைகிறது. இந்நிலை தமிழில் இல்லை. 247 எழுத்துகள்! தேவையற்ற வீணான வரிவடிவங்கள், வேண்டாத முரண்பாடான குறிகள் அமைந்து முட்டுக்கட்டையாகி விடுகின்றன. இதனை எல்லோரும் உணர்கின்றனர்.

23-12-33இல் சென்னையில் கூடிய 'தமிழன்பர் மாநாடு', எழுத்துச் சீர்திருத்தத்தின் இன்றியமையாமையை உணர்ந்து தீர்மானம் போட்டுக் குழுவும் அமைத்தது. செட்டி நாட்டரசர், சேதுபதி மன்னர், உ.வே.சா, மு. இராகவையங்கார், பெ.நா. அப்புசாமி முதலியோர் குழுமினர். தீர்மானத்தைத் தந்தை பெரியார் மட்டுமே 35இல் நடைமுறைக்குக் கொணர்ந்தார்; குடியரசு, விடுதலை ஏடுகளில் செயற்படுத்தினார்!

19-1-41 மதுரைத் 'தமிழ் இலக்கிய மாநாடும்', 14-2-48 சென்னை 'அகிலத் தமிழர் மாநாடும்' தீர்மானம் நிறைவேற்றிக் குழுவும் அமைத்தன. இதற்கிடையில் கா. நமச்சிவாய முதலியார், சில அயலெழுத்தாக்கத் தமிழ் எழுத்துக்களை ஆக்கிக் காட்டினார். இதனை ஆராய ஓமாந்தூரார் அமைச்சரவையின் போது கல்வி அமைச்சர் அவிநாசிலிங்கம் செட்டியார் ஒரு குழு அமைத்தார். கே. சுவாமிநாதன், டி.எஸ். சொக்கலிங்கம், தெ.பொ.மீ. போன்றார் இடம் பெற்றனர். உடனடியாகச் செயற்படுத்த வேண்டும் என்றுரைத்தனர்.

இந்த மாற்றங்களை ஏற்பதால், பெரியாரின் கொள்கையையே ஏற்பதாகப் பொதுமக்கள் கருதி, பெருமை அனைத்தும் பெரியாருக்கே போய்விடுமோ என்றஞ்சியோ என்னவோ, பெரியார் பகர்ந்ததைப் பின்பற்றுவதா என்ற புழுக்கத்தாலோ என்னவோ கைவிடப்பட்டது.

பெரியார் காட்டிய வழி; 27 எழுத்து கொண்டே சமாளித்து விடலாம். தேவையாயின் புது எழுத்துக்களைப் படைத்துக் கொள்ளலாம் என்றார். வந்த நூல்கள்:

1. எழுத்துச் சீர்திருத்தம் — ஈ.வெ.ரா. பெரியார் (1948)
2. எழுத்தும் கருத்தும் — கொண்டல். சு. மகாதேவன்
3. தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் — புலவர் குழந்தை (1968)
4. ,, ,, — மு. உலகநாதன் மதுரை (1978)
5. தமிழ் எழுத்துச் சீரமைப்பு — வா.செ. குழந்தைசாமி (,,)
6. எழுத்துச் சீர்திருத்தம் — செ.வை. சண்முகம் (,,)
7. மொழியியல் — எழுத்துச் சீர்திருத்த மலர். (1979)
8. தமிழ் எழுத்துகள் ஒரு புதிய பார்வை — கொடுமுடி சண்முகம் (1977)
9. எழுத்துச் சீர்மை — வெள்ளையாம்பட்டு சுந்தரம் (தொகுப்பர்)
10. தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் — பேரா. இரா. பாலசுந்தரம் (நேரு நினைவுக் கல்லூரி, புத்தனாம்பட்டி)
11. தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் — குடந்தை வீ.ரா. இராச கோபாலன்
12. ,, ,, — கிருட்டிணமூர்த்தி (ஆசிரியர், தினமலர்)
13. ,, ,, — தஞ்சைவாணன் துரை சீனிவாசன்
14. எழுத்துத் திருத்தங்கள் — நீதிவாணன்
15. தமிழ் எழுத்துச் சுருக்கம் — சி. ராமரத்னசபாபதி (1985)
16. The Tamil Script reform — தெ.பொ.மீ.
17. Reform in Tamil Alphabets — குற்றாலம்.

பெரியார் நூற்றாண்டினையொட்டித் தமிழ்நாடு அரசு, பகுத்தறிவுப் பகலவனைப் பெருமைப்படுத்து மாற்றான். தக்க செயலைத் தகுந்த நேரத்தில் தயங்காது துணிந்து செய்தது; அவரது எழுத்துச் சீர்திருத்தத்தை நடைமுறைக்குக் கொணர ஆணை 1875/19-10-1978இல் பிறப்பித்தது. முதல்வர் எம்.ஜி.ஆர். அவர்கட்குத் தமிழுலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுளது. அறிஞர்கள் ஐ,ஔ மாற்றங்களை மறுக்

கவே, 79 சூன் திங்களில் இவ்விரண்டு எழுத்துக்களையும் அப்படியே வைத்துக் கொள்ளலாம் என அறிக்கை வெளியிட்டது. பின் அய். அவ் என்பன செயலுக்கு வந்தன.

28-2-79இல் மதுரைப் பல்கலைக் கழகம் கருத்தரங்கம் நடாத்தி 3 நூல்கள் வெளியிட்டது. பதிப்பாளர் யாருமே செய்யாத வகையில், சேகர் பதிப்பக வெள்ளையாம்பட்டு சுந்தரனார், இது பற்றிய அறிஞர் கருத்துக்களைத் தொகுத்து 'எழுத்துச் சீர்மை', 'புதிய தமிழ் வடிவம்' என்ற இரு நூல்கள் வெளியிட்டு விளக்கமும் தெளிவும் ஏற்படுத்தினார். 20-5-79 இல் அறிவியக்கப் பேரவை சென்னையில் மாநாடு நடத்தி நலம் விளைத்தது; சாலை இளந்திரையனாரின் சாதனை பெரிது. 63 தொடங்கிக் 'கொங்கு' இதழில் எழுத்துச் சீர்மை பற்றிய சிந்தனைகளைத் தொடர்ந்து வெளியிட்ட பொறியர் கொடுமுடி சண்முகனாரையும் நினைவு கூரத்தான் வேண்டும்

1930லேயே முதன்முதல் காரைக்குடி 'குமரன்', ா,ை, குறிகள் இட்டு வழிகாட்டியது. 48இல் சுதேசமித்திரன் (லண்டன் மோனாவார்) சீர்திருத்தத்தைப் பின்பற்றியது.

எழுத்துச் சீர்திருத்தத்தை **எதிர்த்தோர்** கா.சு. பிள்ளை, த.வே. உமாமகேசுவரனார் போன்றோர். கழறிய கரணியங்கள்: 1. அச்சில் உள்ள பல்லாயிரக்கணக்கான நூல்கள், படிக்க முடியாமற் போய்விடும். 2. இப்போதைய நடைமுறை வாழ்வில் படிக்கவும் குழப்பம் நேரும். 3. கருவிகளில் மாற்றம் கொணர வேண்டுமே தவிர, எழுத்துக்களில் ஏன் மாற்றம்.

தஞ்சாவூர் **சால்பகம்** சார்பில் பூண்டி கல்லூரித் தமிழ்ப் பேரா. பா. இறையரசனின் 'எழுத்துச் சீர்திருத்தம்' பற்றிய 10 பக்க உருளச்சுக் கட்டுரையும் கருத்தறி வினாத்தாளும் அறிஞர் பெருமக்கட்கு அனுப்பப்பட்டு விடைகள் பெறப்பட்டன. தஞ்சாவூர் தமிழ்ப் பேரவையின் 40வது கூட்டம் எழுத்துச் சீர்திருத்தக் கருத்தரங்கமாக 27-7-86இல் நிகழ்ந்தது. தட்டச்சில் உள்ள 62, அச்சுக் கூடத்தில் அமையும் 161 வடிவங்களை, 34 ஆகக் குறைக்கும் திருத்தம் பற்றி விவாதிக்கக் குழுமினர்.

தலைமை: பாவலர் பாலசுந்தரம், வரவேற்பு: உ. சுப்பிரமணியன் இ.ஆ.ப. (ஓய்வு) தமிழ்க்குடிமகன், வளன்அரசு, பாரதிப்பித்தன், இரா. சுப்பராயலு, புலவர் செ. இராசு, மருத்துவர் மறையரசன்; சீர்திருத்த நூலாளர்கள் சென்னை ராமரத்ன சபாபதி, புத்தனாம்பட்டி பாலசுந்தரம், கொண்டல்

சு. மகாதேவன், தஞ்சைவாணன் போன்றார் குழுமி ஆராய்ந்தனர்-முதல் நிலை இரண்டாம் நிலை எனப் படிப்படியே திருத்தம் கொணர நேர்ந்தனர்

இறுதியாக ஒன்று கூறுவது பொருந்தும். எழுத்துச் சீர்திருத்தம் என்ற இந்த முக்கிய எரியும் பிரச்சனைக்குச் சரியான தீர்வு கூறாது-உள்ளதை வைத்து நல்லதைச் செய்யாது, சிலர் தம் கைத்திறம் காட்டுவதும், இதற்குத் தம் பங்கு இருக்க வேணும் என்ற முனைப்பில் ஒரு நல்ல முடிவினை எட்டாது, மறுத்தும் சாடியும் தம் திறம் காட்டும் நினைப்பில் கட்டுரை வரைவதும், நூல் எழுதிடுவதுமான ஒரு நலமற்ற போக்கு நிலவுகிறது. தமிழன்னை தனக்கேற்ற மாற்றங்களைச் செய்து சிறப்பாளாக!

## 65. பகுத்தறிவு இயக்கம்

1926இல் சுயமரியாதை—தன்மான இயக்கம் Self Respect Movement—44இல் திராவிடர் கழகம் எனப் படிப்படியே வளர்ந்த மக்கள் இயக்கம். தோற்றுநர் ஈ. வெ. ரா. பெரியார். அரசியல் நோக்கோ அழிவுப் புரட்சிப் போக்கோ இல்லாதது; முழுக்க முழுக்க சமுதாயத்தைச் சீர்திருத்தி அமைக்கும். அடிப்படைக் கொள்கை: 'இன்றைய சமுதாய அமைப்பினை முழுமையாக மாற்றி, சாதி சமய பேதங்களுக்கு அப்பாற்பட்ட ஒரு புதிய ஒன்றுபட்ட சமுதாயத்தை நிர்மாணிப்பது.'[1]

இவ்வியக்கத்தின் தாக்கம் இந்த நூற்றாண்டிலக்கியங்களில் வேரோடி, உள்ளோட்டமாகவும் வெள்ளோட்டமாகவும் ஒளிர்வதைக் கண்கூடாகக் காணலாம். தமிழின உணர்வு தலை தூக்கவும் தாழ்வு மனப்பான்மை போக்கித் தன்னம்பிக்கை பூக்கவும் செய்தது. இவ்வுணர்வின் விளைவாக இதுகாறும் இருந்த பார்ப்பன அடிவருடும் அடிமை மனப்பான்மையும் வழிபடும் இழிநிலையும், மூட நம்பிக்கையும் போய், பார்ப்பனரல்லாதார் என்ற ஓர் உணர்வு ஓங்கிற்று, ஒருமையுணர்வு உருவாயிற்று. சமுதாய மாற்றத்தால் கலை இலக்கிய உலகிலும் மாற்றம் விளைந்தது; எடுப்பான இலக்கியங்கள் எழுந்தன; மூட நூல்கள் முடங்கின.

1. To turn the present social system topsy - turoy and establish a living bond of union among all people-irrespec -tive of class or creed.

பேச்சாலும் எழுத்தாலும் கருத்துப் புரட்சி உண்டாக்கிய தால், தமிழ்ப் பேச்சிலும் எழுத்திலக்கியத்திலும் போதிய மாற்றங்கள் போற்றத்தக்க தோற்றங்கள் நேர்ந்தன.

50 ஆண்டுகளாகப் பெரியாரும் அவர்தம் வழியினராகிய அண்ணாவும் கலைஞரும், நாவலரும் பேராசிரியரும் தளபதி வீரமணியும் நூற்றுக்கணக்கான பேச்சாளரும், மேடைக்கு மிடுக்கும் மெருகும் ஏற்றினர். மேடைத்தமிழில் மாற்றம் விளைத்துப் புதுத் தோற்றம் பெற்றிடச் செய்தனர். பேச்சுக்கே ஒரு தனி பாணி பிறப்பித்தனர். நல்ல தமிழ்ச் சொற்கள் அரியணை ஏறின. வெல்லத் தமிழ் விளையாடியது. தமிழக மெங்கும் தென்றல் தவழ்ந்தது. கொண்டல்கள் முழங்கின. பட்டுக்கோட்டை அழகிரிசாமி, அணைக்காடு டேவீஸ், அதிரை என். எஸ். இளங்கோ, டார்பிடோ ஏ. பி. சனார்த்தனம், ஈ. வெ. கி. சம்பத், குத்தூசி குருசாமி, டி. கே. சீனிவாசன், திருவாரூர் தங்கராசு இப்படிப் பெரும்படை புறப்பட்டது.

எழுத்துலகில் என்றாலோ, எண்ணி முடியாது; இயம்பி மாளாது. இவர்கள் எழுதிக் குவித்தன மலை அளவாகும். மலைக்கவே தோணும். கவிதையில் பாவேந்தர், சுரதா, கண்ணதாசன், சாலை இளந்திரையன், கோவை இளஞ்சேரன், முடியரசன், வாணிதாசன், பொன்னிவளவன், புலவர் குழந்தை, கருணானந்தம், புலமைப்பித்தன், உடுமலை நாராயணகவி போல்வார். காப்பியங்கள் 15, கவிதைத் தொகுதிகள் 95, நாவல்கள் 54, சிறுகதைத் தொகுப்புகள் 38, நாடகங்கள் 50, கட்டுரை நூல்கள் 152, இதழ்கள் 118, ஆய்வு கள்: இயக்கம் பற்றி 15, பெரியாரியம் பற்றி 18, அண்ணா பற்றி 14, கலைஞர் பற்றி 12, பாரதிதாசன் பற்றி 16=ஆக 75ஐ எட்டுகிறது.

அண்ணா, கலைஞர், பேராசிரியர், ஏ.வி.பி. ஆசைத்தம்பி, மதியழகன், டி. கே. சீனிவாசன், தில்லை வில்லாளன், இராதா மணாளன், தென்னரசு, பி. சி. கணேசன், நா. பாண்டுரங்கன், போல்வார் கதை இலக்கியம் கண்டனர்.

நாடகத் தமிழ் பகுத்தறிவு இயக்கத்தாலேயே பெருகியது, பெருமை பெற்றது என்றால் கூட மிகையாகாது. பொலிவும் வலிவும் பெற்றது; பகுத்தறிவு மணம் பரப்பியது. அண்ணா, கலைஞர், பாரதிதாசன், சி. பி. சிற்றரசு, புலவர் குழந்தை, திருவாரூர் தங்கராசு புனைந்தும் நடித்தும் புதுமை சேர்த்தனர்.

அதுபோல இதழ் உலகம் ஏற்றமுற்றது என்றால் எவரும் ஒப்புவர், எவரே மறுப்பர்? நாளேடுகள் கிழமை இதழ்கள் திங்கள் இதழ்கள் என எழுத்து நடையில் எழுது முறையில் மாறுதலை ஏற்படுத்தினர். திரையுலகிலும் கதை வசனத்தால் திருப்பம் விளைத்தனர். எம். ஆர். ராதா, கே. ஆர். ராமசாமி, எஸ். எஸ். ஆர், டி. வி. நாராயணசாமி, முஸ்தாபா, எம். ஜி. ஆர்., கழக நடிகர்கள்.

இன்று நலம் கருதும் எழுத்துச் சீர்திருத்தத்திற்கு வழி காட்டியவர் பெரியார் தாமே! அறிவியல் அணுகு முறையில் அவர்கள் கடைக்காலிட்ட சீர்திருத்தத்தின் இமாலயப் பயனை வருங்காலம் உணர்ந்து உவந்தேத்தத்தான் போகிறது.

இப்படி மேடை, நாடகம், இதழ், எழுத்துச் சீர்மை, எழுத்துலகம், திரைத்தமிழ் என்ற வகையில் பெரியாரின் பகுத்தறிவு இயக்கம் பாரிய பயன்களையும் பெரிய விளைவுகளையும் கண்டு எல்லா வகையில் தமிழ் வளர்ச்சியும் மலர்சசியும் பெறச் செய்துளது. எனவே தமிழ் வளர்ச்சியில் தன்மான இயக்கத்தின் பங்கும் பாங்கும் மாணப் பெரிது என மொழியலாம்.

**தந்தை ஈ. வெ ராமசாமிப் பெரியார்:** *17-9-1879—24-12-1973.* ஈரோடு. வெங்கட்டப்ப நாயக்கர்: சின்னத் தாயம்மை எனும் முத்தம்மாள். 98இல் நாகம்மையாரை மணத்தல், 1917 ஈரோடு நகர் மன்றத் தலைவர், 24 வைக்கம் போராட்டம், 13-12-'31 அய்ரோப்பா பயணம், 32 உருசியா எகிப்து பயணம், 33 மனைவி மறைவு, 38, தமிழ்நாடு தமிழருக்கே—இந்தி எதிர்ப்பில் சிறை செல்லல், 40—வட நாட்டுப் பயணம். 42 திராவிட நாடு பிரிவினை, 49 மணியம்மையை மணத்தல், 52, குலக் கல்வித் திட்ட எதிர்ப்பு, 53, பிள்ளையார் உடைப்பு, 55 தேசியக்கொடி எரிப்பு, 56 இராமர் பட எரிப்பு, 57 சட்ட எரிப்பு, 67 தேசப்பட எரிப்பு, 68 தனித் தமிழ்நாடு, 73 இழிவு ஒழிப்பு மாநாடு.

38இல் பெத்து நாயக்கன் பேட்டையில் மகளிர் கழகம் நடாத்திய இந்தி எதிர்ப்பு-பெண்கள் மாநாட்டில் வீராங்கனை எஸ். தருமாம்பாள் **பெரியார்** என்ற பட்டம் சூட்டினார். **வைக்கம் வீரர்** என்றழைத்தவர் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. பெரியார் நூற்றாண்டு விழா 17-9-1978இல் ஈரோட்டில் அஞ்சல் தலை (25 பை) வெளியிடப் பெற்றது.

ஒரு சகாப்தம் (அண்ணா), ஒரு மகத்தான தத்துவம் (எம். ஜி. ஆர்), தலைசிறந்த சீர்திருத்தவாதி (ம. பொ. சி,)

தமிழ்ப் பெரியார் (வ. ரா). பகுத்தறிவுப் பனிமலை (நெ.து.சு), உலகப் பெரியார் (சிவகாமி சிதம்பரனார்), உலகச் சிந்தனையாளார் (ஏ. பி. சனார்த்தனம்), தேசீயச் செம்மல் (கண்ணதாசன்), காலத்தை மாற்றிய கர்ம வீரர் (கே. ஏ. கே), தமிழகத்தின் விடிவெள்ளி (இராம வீரப்பன்), பழுத்த பகுத்தறிவு வாதி (நாவலர்), தனிப்பெரும் தலைவர் (சுலோசனா சம்பத்), நம்பிக்கைக் குன்றம் (சாலை இளந்திரையன்), ஜாதி ஒழிப்பு, ஜாம்பவான் (கே. பாலதண்டாயுதம்), இருபதாம் நூற். இணையற்ற சாதனையாளர் (பி. சி. கணேசன்), தமிழர் தந்தை (தஞ்சைவாணன்), பகுத்தறிவுப் பகலவன் (பலர்).

இயக்கம் பற்றி எழுந்த நூல்கள்: The Dravidian Movement -R. L. Hardgrave. Bombay (65), Politics & Social Conflict in South India: The Non-Brahmin movement and Tamil Separation-Irschick Engine. Oxford (69), The Politics of South India-John Baker Christopher (76). மேற்கு ஜெர்மனி ஹைடல்பர்க் பல்கலைக்கழக மாணவி சுயமரியாதை இயக்கம் பற்றி 3 ஆண்டுகள் ஆய்ந்து இதுபோது தி. க—தி. மு. க பற்றி டாக்டர் பட்டத்துக்கு ஆராய்கிறார்! இது கொண்டு உலகப் பேரறிவாளர்களின் கவனத்தைப் பெரியாரின் பேரியக்கம் எந்த அளவுக்குக் கவர்ந்துளது என்றறியலாம்.

Social protest, its impact in Tamil Nadu with special reference to self respect movement-P. S. Chandrababu; Tamil Ranaisance & Dravidian Nationalism - Dr. K. Nambi Aruran போன்றன டாக்டர் பட்டத் தலைப்புகள்.

## 66. பெரியாரிசம்

தந்தை பெரியாரின் தலையாய உணர்வு கடவுள் மறுப்புக் கொள்கை. கடவுள் மூட நம்பிக்கையால் தமிழினம் திசை திருப்பப் படுவதும், தலையெடுக்க விடாது அமிழ்த்தப்படுவதும் கண்டு, சீறிச் சினந்து பகுத்தறிவுக் கண்ணைத் திறந்து வைத்தார். 'கடவுள் இல்லை, இல்லவே இல்லை; கடவுளைப் படைத்தவன் முட்டாள்; வழிபடுப்வன் காட்டுமிரண்டி' என்பது மூலமுழக்கம். இந்தப் பகுத்தறிவுத் தாக்கத்தால்—கடவுள் எதிர்ப்புணர்வு எதிரொலியால்-தமிழிலக்கியங்கள் திசை திரும்பின.

கம்பராமாயணம் பெரியபுராணம் போன்றன கொளுத்தப் பட்டன; எரிப்புப் போராட்டங்கள் எழுந்தன. சிலப்பதிகாரம் கூட ஆரியக் 'கலப்பதிகாரம்' எனப்பட்டது. அண்ணா 'கம்பரசம்', 'தீ பரவட்டும்' தீட்டினார். கம்பராமாயணம் பற்றிய காரசாரமான பட்டி மன்றங்கள் நடந்தன. அண்ணா வாதிட்டார்; ரா.பி. சேதுப்பிள்ளை, நாவலர் பாரதியார் மறுத்தனர் இலக்கிய வரலாற்றில் இஃதோர் காலக்கட்டம். கம்பராமாயணத்திற்கெதிராகக் கீமாயணம் கிளைத்தது.

ஈழத்தடிகள், சிங்காரவேலர், குத்தூசி குருசாமி, இலக்கு வனார், பட்டுக்கோட்டை அழகிரிசாமி, கி. வீரமணி, சி, வெள்ளையன், பாவாணர், சாமி சிதம்பரனார், ஏ.பி. சனார்த்தனம், கே. எஸ். மகாதேவன், டி.கே. சீனிவாசன் போன்றாரும் கழகத் தொண்டர்களும் எழுதியும் பேசியும் வந்தனர். குடியரசுப் பதிப்பகம் இராவணப் பெரியார், இரணியன் இணையற்ற வீரன், சோதிட ஆராய்ச்சி (கே.எஸ். மகாதேவன்), அகத்தியர் ஆராய்ச்சி (கா. நமச்சிவாய முதலியார்), இராமாயணப் பாத்திரங்கள், கடவுள் ஒரு கற்பனையே, புராண ஆபாசங்கள், சோதிடப் புரட்டு, பகுத் தறிவு அல்லது மரணசாசனம் போன்றன வெளியிட்டது.

பெரியார் மட்டும் 120 சிறு நூல்கள் வெளியிட்டார். 'பெரியார் பேரிலக்கியம்' என்றே தனி இலக்கியம் உருவாகி விட்டது; 3 பெரும் பகுதிகளாக வந்துள. அரிய அறிவுக் களஞ்சியம்; பகுத்தறிவுப் பெட்டகம்.

கலைவாணர் என்.எஸ். கிருட்டிணன் கிந்தனார், நீல கண்டர், சந்திரஹரி போன்றவை பகுத்தறிவுப் பாங்குடன் படைத்து நடித்து அறிவு கொளுத்தினார்

பெரியாரியத்தைப் பாரெலாம் பரப்பப் பெரியார் பேருரை யாளர்களாக மா நன்னன், ந. இராமநாதன் போன்றார் அமர்த்தப்பட்டுளர். பெரியார் பெருவரலாற்றைச் சாமி. சிதம்பரனார் வரைந்தார். கவிஞர் கருணானந்தம், கவிஞர் பாரி பெரியார் பெருங்காப்பியம் படைத்துளர். தமிழரசு 16-9-79இல் **'பெரியார் பரணி'** வெளியானது. வாழ்த்து-தமிழ்ப் பித்தன், கடைத்திறப்பு-மதுரைவாணன், பாரம்பரியம்-வைர முத்து, பேய் முறைப்பாடு-முத்துராமலிங்கம், அவதாரம்-இல. இராசேந்திரன், போர் பாடியது-புலமைப்பித்தன். பெரியார் பிள்ளைத் தமிழ் புலமைப்பித்தன் பாடியுள்ளார்.

ஆய்வேடுகள்: Socio Economic thoughts of E.V.R.- சாந்தி நாகநாதன், எதிராஜ் கல்லூரி (77); Self respect Movement in Tamil Nadu with special ref to EVR-மங்கள முருகேசன் (77); The Political career of Periyar EVR-ஈசா. விசுவநாதன் (73); Legal Analysis of the Socl̇al & Atheistic Principal of Thanthai Periyar-V. Seshachalam (75), Leadership in Madras State-A comparative study of Periyar&Kamaraj-Baskaran(63).

இவ்வண்ணம் கடவுள் மறுப்புக் கொள்கை தமிழ் இலக்கியத்தில் உந்தி வந்துள்ளமையும், பெரியார் கருத்துக்கள் தூவப் பற்றுள்ளமையும், அவர் பற்றி எழுந்த இலக்கியம்-ஆய்வுகளும் காணமுடிகிறது. தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்கக் காலக் கட்டம்!

## 67. பார்ப்பனப் பகையுணர்வு

இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் பார்ப்பனர் பார்ப்பனரல்லாதார் Brahmin-Non brahmin உணர்வு ஓங்கியது. 1. தென்னகத்தில் பிராமணர் செல்வாக்கு-அல்லாதார் முன்னேற்றத் தடை. 2. சாதிபேதம், புண்ணிய பாவம், விதி கர்மவினை கற்பிதம், 3. அரசியலிலும் (காங்கிரசிலும்) அரசுப் பணியிலும் அவர்கள் ஆதிக்கம், 4. 'ஆரிய நாகரிகமே இந்திய நாகரிகம்' என வெளிநாட்டவர் கருத நேர்ந்தமை-திராவிடரின் தனிப்பெரும் நாகரிகம் பாரறிய செய்தல் போன்ற கரணியங்களால், வெள்ளுடைவேந்தர் சர் தியாகராய செட்டியார், டி.எம். நாயர், டாக்டர் சி. நடேச முதலியார், பனகல் அரசர், நாகை வி. பக்கிரிசாமி, சர். ஏ. ராமசாமி முதலியார் போல்வார் 1916இல் 'தென்னிந்திய நலஉரிமைச் சங்கம்' தோற்றினர், சமூக-பொருளியல்-அரசியலில் திராவிடர் முன்னேற வேணும் என்ற முனைப்பு மூண்டது. கொள்கை பரப்ப Justice நாளிதழ் தோன்றியது; திராவிடர்கட்கு நீதி வழங்கப் பாடுபட்டதால், அதன் பெயராலேயே கட்சியும் Justice Party எனப்பட்டது. சர் ஏ.டி. பன்னீர்ச் செல்வம், தமிழவேள் உமா மகேசுவரனார் போன்றார் பங்கு வகித்தனர். இது வெள்ளையனின் அடிவருடும் மிட்டா மிராசுக் கட்சியாதல் கண்டு, பெரியார் 26இல் பிரிந்து சுயமரியாதை இயக்கம் கண்டார்.

சமுதாய முன்னேற்றம் கருதிய தன்மான இயக்கம், வர்ணாசிரம வேறுபாட்டை வெட்டி வீழ்த்தியது; திராவிடர்

'சூத்திரர்' என நாலாஞ்சாதியாக்கப் பெற்ற இழிவு அகற்றப் போராடினார். அக்கிரஹாரம் வழியே சூத்திரன் செல்லலாகாது, தோளில் துண்டணிந்து போகக் கூடாது, செருப்பினை கையில் எடுத்துச் செல்ல வேண்டும், பிராமணாள் காபி கடைகள், ஆலயங்களில் அரிசனங்கள் நுழையலாகாது, சூத்திரன் தீண்டத் தகாதானாகக் க்ருதப்பட்டு ஒதுங்கிச் சென்றமை, அருந்திய குவளையைத் தண்ணீர் தெளித்து எடுத்தமை, குடந்தைக் கல்லூரியில் பிராமணர்கட்குத் தனி தண்ணீர்ப் பானை குவளை வேறுபாடு போன்ற மாறுபாடுகள், தமிழனின் தன்மானத்தைத் துளைத்தன-தூண்டின.

பெரியார் பார்ப்பானையும் பாம்பையும் பார்த்தால், பாம்பை விட்டுவிடு, முதலில் பார்ப்பானைப் புடை' 'ஆறுகெட நாணல் இடு, ஊருகெடப் பூணூல் இடு' என வன்மையாகச் சாடினார். தளபதி அண்ணாவும் 'வர்ணாஸ்ரமம்' தீண்டாமை', 'ஆரியமாயை' எழுதினார்; பின்னது தடை செய்யப்பட்டது.

ஆரியர்-திராவிடர் பேராட்டம்-வடவர் தென்னவர் பேராட்டமே இராமாயணம் (நேருவும் Discovery of Indiaவில் எழுதினார்); இராவணன் திராவிடன் என்ற உணர்வுகள் ஓங்கின. விளைவு 'இராவண காவியம்' உருவானது, அரசு தடை செய்தது.

நாடகங்களிலும் பார்ப்பனச் சாடல் பங்கு பற்றியது, மேடைப் பேச்சிலும் இந்த வீச்சு வீசியது. திராவிடர் கழகம் தீவிரமாகப் பார்ப்பனீயத்தைத் தாக்கியது. இதன் செல்வாக்கு இலக்கியங்களில் இலைமறை காய்களாக இழையோடியது; வெளிப்படையாகவும் வெறுக்கப்பட்டது. ந. சி. கந்தையா பிள்ளை போன்றார் 'ஆரிய—திராவிடக் கலப்பு' என்றெல்லாம் எழுதினர். பேரா. சி. ஏ. பெருமாள் The Non Brahmin Movement in Tamil Nadu (76) ஆய்வு செய்தார்.

பாவேந்தர் 'தொந்தி சுமக்கும் புரோகிதர்', சுயமரியாதை கொள் தோழா! உயர்வென்று பார்ப்பனன் சொன்னால், உலகினில் மக்கள்எலாம் சமம் என்பாய், அடியை நத்திப் பிழைத்த பார்ப்பான், பார்ப்பான் என்ற கொடு நரி உலவும், 'ஆரியர் மிலேச்சர் ஆதலால் ஆரியத்து வேரினர் பார்ப்பனர்' வேறினத்தவர் ஆதலால், அவரின் வேத மந்திரம் தீது பயப்பன! 'சூழ்ச்சியன்றி ஏதுங்கெட்ட பாப்புக்கிங்கென்ன வேலை?, 'பார்ப்பனர்க்குத் தரகன்', ஒரு மகளை இவர் உவக்கும்

வடக்கர்', என்றெல்லாம் வெறும்பினை அருவெறுப்போடு வார்ப்பது காண்க. இங்கு கவுண்டர் சமுதாயம் எவ்வகையிலும் இயல்பாகவே பார்ப்பனரின்றிச் சடங்குகள் ஆற்றுவது கருதத் தக்கது.

கழகக் கவிஞர்கள் எழுத்தாளர்கள் பற்றாளர்கள் தொண்டர்கள் இன்றளவும் உள்ளத்தினுள்ளே பார்ப்பன வெறுப்பும் மறுப்பும் கொண்டுள்ளமை அறியலாம். இதனால் கடந்த அரை நூற்றாண்டைய இலக்கியங்களில் இதன் வேகம்-நெடி உணரமுடிகிறது. தி.மு.க. தோன்றி வளர்ந்ததும் இவ்வுணர்வு ஓய்ந்தது. நாமக்கல்லார் போன்றார், வி.கோ.சு, உ.வே.சா, பாரதி போன்றார் தொண்டு போற்றிப், பார்ப்பனச் சூழ்ச்சியா?' என்றெல்லாம் எழுதினர்!

## 68. வடமொழி வெறுப்பு (Sanskrit Aversion)

வடவர் வெறுப்பு—ஆரிய மறுப்பு, அவர் தம் மொழியான வடமொழி வெறுப்பிலும் கொண்டு போய்விட்டது. வடமொழி, கோயில் போன்றவற்றில் ஆதிக்கம், தமிழின் வாய்ப்பு வளர்ச்சி மலர்ச்சியை அழுத்தி அமுக்குதல் போன்ற கரணியங்களால் வடமொழி, வெறுப்புக்கு உள்ளாகியது.

மறைமலையடிகளார் கூட 'நான் நாளும் வைகறையில் வடமொழி வேதங்களை ஓதி வந்தேன்; சின்னாளில் இரத்த வாந்தி எடுத்தேன். மருத்துவரிடம் கலந்ததில், 'வடமொழிப் பயில்வே அதற்குக் காரணம் அதனை நிறுத்தித் தமிழ்ப் பாசுரங்களைப் பாடி வருக' என்றதால், அதுமுதல் வடமொழியை நிறுத்தித் தென் தமிழ்ப் பாடல்களைப் பாடி வருகிறேன், 'ஆரியம் இரத்த மொழி' என்றார். பாவாணரிடம், வடமொழி வெறுப்பு தமிழ் வெறியினையே விளைத்தது.

மக்களிடமும், வடமொழிப் பற்றாளரையும் வெறுத்து ஒதுக்கும் நிலை உருவானது. பேரா. வையாபுரிப் பிள்ளை, பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், தமிழில் வடமொழி செல்வாக்கு, வடமொழி வளமை விளம்பியமையால், அவர்களை **வடமொழி வருடிகள்—தமிழ்த் துரோகிகள்** என விலக்கவும் முற்பட்டனர்.

அத்துடன் அல்லாது 'பார்ப்பானை ஐயன் என்ற காலமும் போச்சே' எனப் பாடிய பாரதியையும் அவரின் ஒபந்தமிழ்ப்

பெரும்பணியும் கருதாது ஒதுக்கி, பாவேந்தரை முனைந்து போற்ற முற்பட்டனர். அதுமட்டுமன்று, ஆரியத் தமிழ்த் தொண்டர்களைப் போற்றுவோரையும் அவர்கள் நூல்களைப் பாராட்டுவோரையும் சாடும் நிலை வளர்ந்தது.

பாரதியின் நூல்களைத் திறனாய்ந்த மது ச.விமலானந்தம் போன்றார், தாக்கி எழுதப் பெற்றனர்; மதிப்புரைகளில், ஐயரைப் புகழ்ந்து போற்றுவதா என்றும் குறித்தனர். அரசு (இறை) தமிழ் வாழ்த்தாக அமைத்த 'நீராரும் கடலுடுத்த... பாடல் பற்றிய விமர்சனமாக **'மனோன்மணீயத்தில் மறு'** என, வாழ்த்தில் வீழ்த்து கூடாது, ஒரு மொழியை வாழ்த்தும்போது மற்றொரு மொழியை வீழ்த்த வேண்டியதில்லை. அதனால் வாழ்த்து தூய்மை இழக்கிறது என எழுதினார். நோக்கினை உணரக்கூட மனம் ஒருப்படாது, ஏதோ வடமொழி விருப்பாகக் கருதி-வக்காலத்தாக எண்ணி, 'இவர் என்ன செத்த மொழிக்குச் சித்தப்பாவா?' என ஏடுகளில் எழுதினர். ஆராய்ச்சி என்றால் விருப்பு வெறுப்பின்றி அலசுவதுதானே! 'பெரியோரை வியத்தலுமிலமே' எனக் கணியன் பூங்குன்றனார் வழிகாட்டியும், சுந்தரனார் வாழ்த்தில் குறை சுட்டியமையால், இன்னலுக்கு ஆளானார். இப்படி வடமொழி வெறுப்பு அதனைச் சுட்டுவோரையும் வெறுக்கும்—மறுக்கும் வெறியாக உருவெடுத்தது. அத்தகு வேகம்! பட்டுக்கோட்டை அழகிரிசாமி, பாரதி, ஒரு பார்ப்பான்; தாசன், வடசொல், அன்றியும் பார்ப்பானுக்குத் தாசன் ஆவதா? எனப் பாவேந்தரையே சாடினார்!

பரிமேலழகம் வள்ளுவத்துக்குச் சிறந்த தலையாய உரையேயாயினும், அவரது வடநூற் பயிற்சி விளக்கத்தாலேயே, அவர் உரையை அடியோடு மறுக்கும்—அவரையே வெறுக்கும் நிலை இன்றும் உளது. அதனால் அவரைச் சாடி அவர் உரையை மூடிப் பல்லுரைகள் பிறந்தன. புலவர் குழந்தை உரை போன்றன உன்னத்தக்கன. இதற்கிடையில் பெ. திருஞான சம்பந்தம், பச்சையப்பன் சண்முக சுந்தர முதலியார் போன்றார் வடமொழி பயின்று பேராசிரியர்களாகச் சிறந்து வல்லுநர்களாக விளங்கியமை கருதத்தக்கது.

கோயில்களில் 'தமிழ் வழிபாடு', தமிழரும் அர்ச்சகராகும் நிலைக்குப் பெரியார் போராடினார். இப்படி வடமொழி வெறுப்பு இலக்கியத்திலும் ஊடாடி வருகின்றமை உன்னத்தக்கது.

## 69. இந்தி எதிர்ப்புப் போராட்டம்

காலந்தோறும் கன்னித்தமிழ், அன்னியர் படையெடுப்பாலும் ஆட்சி மாற்றத்தாலும் இடர் பல அடைந்து—இன்னல் பல எய்தி வந்துளது; என்றாலும் தாக்குப் பிடித்து உயிர்ப்புடன் ஊடாடி வந்துளது. இவற்றினும் வேறாக மொழிப் படையெடுப்பு அரை நூற்றாண்டாக வெந்த புண்ணிலே வேல் பாய்ச்சி நைந்து நலியச் செய்து வருகிறது.

முதற் போர் 38-39, இரண்டாம் போர் 1964, மூன்றாம் போராட்டம் 1965; நான்காம் போர் 1967, ஐந்தாம் எதிர்ப்பு 1971, ஆறாவது போராட்டம் 1986. இப்படி அரை நூற்றாண்டளவு நீடித்து வருகிறது.

இந்த நீண்ட நெடிய போரினை வீர வரலாற்றுக் காரியமாக வடித்தெடுத்துள்ளார் கவிஞர் தஞ்சை வாணன் துரை சீனிவாசன். தாய்மொழிப் போராட்ட வரலாற்றினைப் புரிந்து கொள்ள அப்பாவியத்தைத் தமிழர் அனைவரும் கலைக் கருவூலமாக இல்லத்திலும் உள்ளத்தும் வைத்துப் போற்ற வேணும். அப்போதுதான் வருங்காலச் சந்ததியினர், முன்னோரின் மொழிப் போரினை முற்றும் புரிந்து மொழியுணர்வு கொள்ள முடியும். அந்த நூலின் பெயர் 'தமிழ்த் தாயின் ஆணை'; கிடைக்குமிடம்: கவிஞர். மேலநத்தம் அஞ்சல், மன்னார்குடி (வழி), தஞ்சை மாவட்டம். This is Written & to be be preserved for Posterity.

இதில் 65 போராட்டம் தமிழக வரலாற்றில் ஒரு திருப்பு முனை; போராடிய தி.மு.க. 67இல் ஆட்சியைப் பிடிக்க முக்கிய கரணியமானது. சனவரி 25—மார்ச்சு 15 வரை 50 நாட்கள் நடைபெற்ற இப்போராட்ட வரலாற்றினை அதில் பங்கேற்ற மதுரைக் கல்லூரி மாணவர் அ. இராமசாமி (வரலாற்றுப் பேராசிரியர், முசிறி கல்லூரி) 'இரத்தத்தில் ஐம்பது நாட்கள்' என்ற 200 பக்க உரைநடை வரலாறு படைத்தளித்துள்ளார். கவிஞர் இளந்தேவன் 'இந்திப் பரணி'' யாத்தார்.

மறைமலையடிகள் Can Hindi be the Lingua Franka of India? இந்தி பொது மொழியா? என்றொரு நூல் அன்றே எழுதினார். மா.கி. தசரதன் 'இந்தி திணிப்புக்கு எங்கும் எதிர்ப்பு' என்றெழுதினார். பாவாணரும் நூல் படைத்துள்ளார்.

தமிழகக் கவிஞர்கள் அனைவரும் இந்தியை வெறுத்தும் மறுத்தும் கவிதைகள் யாத்தனர். பாடாத பாவலர்கள் எவரும் இலர் என்றே இயம்ப வேண்டும். புலவர் புலமைப் பித்தனின் 'புரட்சித் தீ' முழுக்க முழுக்க இந்தி எதிர்ப்புக் கணைகள் கொண்டது.

இந்தி எதிர்ப்பு இயக்கம் உணர்வுப் போராட்டம். இந்த நூற்றாண்டு இலக்கியங்களில் பொதுவாகவும், கவிதைகளில் சிறப்பாகவும் காணக் கிடக்கின்றன.

## 70. வாழ்க்கை வரலாற்றிலக்கியம்

ஆங்கில நாட்டில் 18 ஆம் நூற். பிற்பகுதியில் அரும்பி, 19ஆம் நூற். நிறைவாக வளர்ந்த நல்லிலக்கியம். 'தனி மனிதன் வாழ்வு நிகழ்வுகளை நிரல்படச் செறிவு பெறக் கோர்த்து அவரது பண்பு நலன் பளிச்சிடக் கலைநலம் பொருந்த யாக்கப் பெறுவதே வாழ்க்கை வரலாறு' (Encyclopaedia Britannica vol III 636) மாந்தன் வாழ்ந்த வாழ்வினை மீண்டும் உயிர்ப்பித்துக் காட்டுவது; (John A. Garraty). 'பல் வகையில் புகழ்பூத்த பெருமக்களுடன் நாமும் சிந்நேரமாகிலும் ஒன்றி வாழ்ந்து உவப்பதாக உணர்வு உண்டாகிறது; அந்த வகையில் சாதாரண வரலாற்றினைவிட, வாழ்க்கை வரலாறு கள் சாலச் சிறந்தனவாக விளங்குகின்றன' (கவிஞர் **கதே**). வாழ்க்கை வரலாறுகளில் விவரிக்கப் பெறும் நிகழ்ச்சிகளும் நல்லுணர்வுகளும், நம் அனுபவத்தோடு அணுக்கமானவை யாகவும் நெருக்கமானவையாகவும் நிலவுவதால், நம் கவனத்தை ஈர்த்துக் கவனத்தைக் கவர்ந்து வழிகாட்டும் ஒளி விளக்கங்களாக ஒளிர்கின்றன; இந்த வகையில் இதற்கு இணை யான இலக்கியம் எதுவுமே இல்லை எனலாம் (இலக்கிய மேதை டாக்டர் **ஜான்சன்**). இதனை 'மாந்தனின் மண்ணக யாத்திரை' எனக் **கார்லைலும்**; 'மண்ணகத்தில் பயணம் மேற்கொள்ளும் ஆன்மாவின் அழகோவியம்' என **எட்மண்ட் கூசும்** இயம்பு கின்றனர்.

எண்ணற்ற தனிமனித வாழ்க்கை வரலாறுகளின் வடித் தெடுத்த சாறே நாட்டு வரலாறு எனலாம். வரலாற்றாசிரியன், மனித குலத்தை **எட்டப்** பார்வையில் ஏறெடுத்துப் பார்க்கிறான், வாழ்க்கை வரலாற்றாசிரியனோ, **கிட்டப்** பார்வையில் தனி மனிதனை பூதக் கண்ணாடி வழியே காண்கிறான். (Sir

Sidney Lee. எனவே பொது வரலாற்றினைப் புலி என்றால், தனிமனித வரலாற்றினைப் பூனை (Miniature of a Tiger) எனச் சாற்றலாம். தனிமனித வரலாறும் சமுதாய வரலாறும் ஒரு காசின் இருபக்கமாகும்.

**பயன்:** எதற்குமே எடுத்துக்காட்டும் முன்மாதிரியும் இருக்கவேண்டும்-இருப்பது நன்று. First of all we must follow an example, then only we can be able to set an example. First we must imitate and then emulate. வா.வ, வழிகாட்டியாக அமைந்து எழுச்சியூட்டுகிறது; உந்து சக்தியாக ஊக்குமுகமாக அமைகிறது. காலவரலாறும் புரிய வருகிறது. வாழ்வின் வரலாறு, வாழ்வியல் விமர்சனம் என்ற இரு நன்மையும் எய்துகிறோம். பிறர் பற்றி அறியும் தணியா ஆர்வம். தலை வெடித்துவிடும் துடிப்பு எந்த மாந்தனுக்கும் உண்டு. அதற்குத் தீனி போடுவது இது எனவே சுவையும் கவர்ச்சியும் உடையது. 'ஒரு கலைஞனுக்குக் குழப்பம் ஏற்படும்போது, அதனின்றும் தெளிய, சிறந்த சீரிய முறை யாதெனின், வாழ்விலக்கியத்தைப் பயிலும் பழக்கத்திற்குத் திரும்புவதுதான்' (**டூமாஸ்மெலோன்**). எடுத்தோதும் இலக்கிய வகையுள் மிகவும் தேடி நாடிப் படிக்கப் பெறுவதும், வாழ்வின் நோக்கிற்கு மெத்தவும் பயன் படுத்தப் பெறுவதும் வாழ்க்கை வரலாறுகளே' (**சாமுவேல் ஜான்சன்**).

**வகை:** தன் வரலாறு (autobiography), பிறன் வரலாறு (biography) என இரு வகைப்படும். முன்னது ஒருவர் தன் வரலாற்றைத் தானே எழுதுவது; பின்னது ஒருவர் வரலாற்றை வேறொருவர் வரைவது. இரண்டுக்கும் உள்ள வேறுபாடு வரலாற்றுக்கும் நாவலுக்கும் உள்ள வேறுபாடு ஒக்கும். முன்னது தான்மை நோக்கினது (Subjective approach); பின்னது பிறன்மைப் போக்குடையது (Objective approach).

**தன் வரலாறுகள்:** பாரதியும் வ.உ.சியும் 'சுயசரிதை' எனக் கவிதையில் யாத்துளர். திரு.வி.க. 'வாழ்க்கைக் குறிப்புகள்'; உ.வே சா. 'என் சரித்திரம்'; நாமக்கல் கவிஞர் 'என் கதை'; டி.எஸ்.எஸ். ராஜன் 'நினைவு அலைகள்'; கோவை அய்யாமுத்து 'எனது நினைவுகள்' 'சுதந்திரத்திற்கு முன்னும் பின்னும்'; ஏ.வி. மெய்யப்பச் செட்டியார் 'எனது வாழ்க்கை அனுபவங்கள்'; கலைஞர் கருணாநிதி 'நெஞ்சுக்கு நீதி', ம.பொ.சி 'எனது போராட்டம்', அவ்வை டி.கே. சண்முகம் எனது நாடக வாழ்க்கை', 'நாடகச் சிந்தனைகள்!; கண்ண, தாசன் 'வனவாசம்' 'மனவாசம்'; நெ.து. சுந்தரவடிவேலர்

'நினைவு அலைகள்'; யோகி சுத்தானந்த பாரதியார் 'ஆத்ம சோதனை' எம்.ஜி.ஆர், 'ஏன் பிறந்தேன்'; அமைச்சர் காளி முத்து 'என் இளமையிலே'. சீ. இராமலிங்கனார் 'என் வரலாறு' 28 வயதில் தன் வரலாறு எழுதியவர் கவிஞர் வைரமுத்து 'இதுவரை நான்'.

ஆங்கிலத்தில் பெஞ்சமின் பிராங்கிலின் வரலாறு தலை சிறந்தது. மொழி பெயர்ப்பில் அண்ணல் காந்தியின் 'சத்திய சோதனை,' நேருவின் 'சுய சரிதை' குறிப்பிடத்தக்கன. புகழ் மிகு வரலாற்றாசிரியன் கிப்பன், வெல்ஸ், சர்ச்சில் லாயிட் ஜார்ஜ் போன்றாரின் வரலாறுகள் புகழ் சான்றவை.

'அந்தரங்கச் செய்திகளை அழகாகத் தாங்கி, தற்புகழ்ச்சி யின்றி வாழ்க்கை அனுபவங்களைப் புகைப்படம்போல் படம் பிடித்துக் காட்டவேண்டும். ஓவியமாகவும் அமையவேணும். இதனாற்றான் வில் ராஜர்ஸ் 'நீங்கள் செய்யத் தவறிய நல்ல காரியங்க்ளைச் செய்ததாக எழுதிவிட்டு, செய்த கெட்ட காரியங்களைப் பற்றி மூச்சு விடாமல் இருங்கள்; அதற்குப் பெயர் சுயசரிதம்' எனச் சாடுகிறார்.

**பிறன் வரலாறுகள்:** இதனைக் கண்டதும் எவருக்கும் நினைவுக்கு வருவது உலகுபுகழ் Boswel's Life of Johnson. இயம்பு முறையில் புதுமை முறை புகுத்தியவர் லிட்டன் ஸ்டிரெச்சே (விக்டோரியா), போற்றி வணங்காயல் உள்ளதை உள்ளவாறே வெளிப்படையாகக் கூறியுள்ளார். எண்ணங் களை வேகமாகவும் அழகாகவும் அப்படியே எழுதிக் காட்டும் நடை, வரலாற்றாய்வில் கவனம், அவரவர்கட்குள்ள சிறப் பியல்புகளை நுண்ணிதின் கண்டு நயமாக நாட்டும் நல்லியம்பு கள் கொண்டது.

மீனாட்சி சுந்தரம் பிள்ளை, தியாகராச செட்டியார் (உ.வே.சா). சோமசுந்தர நாயக்கர் (மறைமலையடிகள்), ரசிகமணி டி.கே.சி, தமிழறிஞர் முதலியார் (தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்), கப்பலோட்டிய தமிழன், வீரபாண்டிய கட்டபொம்மன் (ம.பொ.சி); பண்டிதமணி, ஓமாந்தூரார்; சர்தார் வேதரத்தின பிள்ளை (சோமலெ); டாக்டர் ரங்காச் சாரி (ராஜம் கிருஷ்ணன்), மறைமலையடிகள் (மறை திருநாவுக்கரசு), நாவலர் பெருமான் வீர விளக்கு வ.வே.சு. ஐயர் (சுத்தானந்த பாரதி), சித்திரபாரதி (ரா.அ பத்ம நாபன்), வடலூர் வள்ளலார் (ஊரன் அடிகள்), மகாகவி

பாரதியார் (வ.ரா), வ.வே.சு. ஐயர் (டி.எஸ்.எஸ். ராஜன்), புதுமைப்பித்தன் வரலாறு (சிதம்பர ரகுநாதன்), சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி), மருதிருவர் (ந. சஞ்சீவி), புலித் தேவன் (தமிழ்வாணன்); எல்.டி. சாமிக்கண்ணிப் பிள்ளை, நீதிபதி வேதநாயகர் (கு. அருணாசலக் கவுண்டர்), ஆனந்த ரங்கம் பிள்ளை (ரா. தேசிகம் பிள்ளை), பரிதிமாற் கலைஞர் (ந. சுப்பிரமணியன்), போப் ஐயர் (அருள்தங்கையா), கால்டு வெல் (ரா.பி. சேதுப் பிள்ளை), வீரமாமுனிவர் (ரம்போலா மாஸ்கரேனஸ்), வேதநாயக சாஸ்திரியார் (தேவநேசன்), எச்.ஏ. கிருஷ்ண பிள்ளை (தங்கராசனார்), உ.வே.சா (கே. சுந்தரராகவன்), பாரதியார் சரித்திரம் (செல்லம்மாள் பாரதி), எந்தையும் தாயும் (தங்கம்மாள் பாரதி), பேரறிஞர் அண்ணா வின் பெருவாழவு (அ. மறைமலையான்), அண்ணாமலை அரசர் (மு. அருணாசலம் பிள்ளை), அறவிளக்கு அரசர் முத்தையா (ஆறு. அழகப்பன்); காந்தியண்ணல், கவிஞர் தாகூர், அறிஞர் பெர்னாட்ஷா, திரு.வி.க (மு.வ), நபிகள் நாயகம் (அப்துற்றகீம்), கவிமணி (செ. சதாசிவம்), பெருந்தகை மு.வ. (சி.பா), ஸ்ரீராமகிருஷ்ணர் (இராம சுப்பிரமணிய நாவலர்), திருச்சி விசுவநாதம் (மா.சு. சம்பந்தம்), அண்ணா மலை அரசர் (லெ.ப. கரு. ராமநாதன் செட்டியார்), குத்தூசி குருசாமி (குருவிக்கரம்பை வேலு), ஞானியாரடிகள் (வெள்ளை யாம்பட்டு சுந்தரம்), அம்பேத்கார் (வை. பாலசுந்தரம்), ரா.பி. சேதுப்பிள்ளை (அ.க. நவநீத கிருட்டிணன்); தாயகம் தந்த நாயகம், இலக்கிய ஜோதி தேவர் திருமகன் (மது.ச. விமலானந்தம்), தமிழவேள் (கா. மாயாண்டி பாரதி), நாவலர் பாரதியார் (சதாசிவன்); திருப்பூர் குமரன், திருவள்ளுவர், பாரதியார் (செந்துரை முத்து), ஜெயப்பிரகாஷ் நாராயணன் (எஸ். நடராஜன்); ராஜாஜி, டாக்டர் ராதாகிருஷ்ணன் (கௌசிகன்), மாவீரன் நெப்போலியன் (பூவை அருதன்), ஸ்ரீ ஜெயேந்திர விஜயம் (பு.மா. ஜய செந்தில்நாதன்), சிலம்புச் செல்வர் வாழ்க்கையிலே (நஜன்), காமராசர் ஒரு சரித்திரம் (முருக தனுஷ்கோடி), வாஞ்சிநாதன், கணிதமேதை ராமாநுஜம் தீரர் சத்தியமூர்த்தி (ரகமி);

வரலாற்று நாயகர் புரட்சித் தலைவர் (கரு, கருப்பையா, தேவிப்பிரியன்) புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். (நாகை தருமன்), மக்கள் திலகம் (வே. லட்சுமணன்) எட்டையபுரத்துத் தங்கம் (ஆர். பொன்னம்மாள்), கவிஞர் கண்ணதாசன் (கண்ணப்பன்), இ. மு. சுப்பிரமணிய பிள்ளை (இ. சு. முத்து சாமி)

இவையே அன்றி, 'அறிஞர்களின் வாழ்விலே (தே. ப. பெருமாள்), பெரியோர் வாழ்க்கையில் (பி. சி. கணேசன்) என்பன போன்றனவும் உண்டு. இங்கே வெ. சாமிநாத சர்மா, எதிரொலி விசுவநாதன் போன்றாரின் பொறுப்பான பணியும் அணிகளும் எண்ணத்தக்கன.

முதல் வாழ்க்கை வரலாறு அச்சுதானந்த சுவாமிகள் வரலாறு; சோமசுந்தர அடியவர் 1868 இல் வரைந்தது. வாழ்க்கை வரலாற்று இலக்கியம் பற்றி நூல் வரைந்தோர் மூவர்: சாலினி இளந்திரையன், வாழ்க்கை வரலாற்று இலக்கியம் மது. ச. விமலானந்தம் 'வாழ்க்கை இலக்கியம்' (81); ச. சிவகாமி 'தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம்' (86).

கழக வெளியீடு சு. அ. இராமசாமிப் புலவரின் 'தமிழ்ப் புலவர் வரிசை; சாகித்ய அகாதமியின் 'இந்திய இலக்கியச் சிற்பிகள்; பழநியப்பா பிரதர்சின் 'நாட்டுக்குழைத்த நல்லவர்' அறிவியல் அறிஞர்கள்; பிரேமா பிரசுரத்தின் 'சிந்தனையாளர் வரிசை' மது. ச. விமலானந்தத்தின் 'செந்தமிழ்ச் செல்வர்கள், 'கன்னித் தமிழ்க் கவிஞர்கள், 'வாழும் கதைஞர்கள்' போன்றன குறிப்பிடத்தக்கன. இனிச் சில சாதனையாளர்கள்.

**அ. லெ நடராஜன்:** *9-6-1909*. காரைக்குடி. 43 முதல் எழுதி வருபவர். எழுத்தாளர்-பதிப்பாளர் என்ற இருதுறையில் ஏற்றம் சான்று ஊற்றமுடன் முத்திரை பதித்தவர். அரபுக் கதைகள், மகாபாரதம், இராமாயணம், ஈசாப் கதைகள், பஞ்ச தந்திரம்; காந்தியடிகளின் மாணவர்க்கு, பெண்களுக்கு, நமது மொழிப் பிரச்சினை, பிரிட்டிஷாருக்கு எனது வேண்டு கோள் போன்றன பெயர்ப்புகள். வினோபா பாவே, முல்க்ராஜ் ஆனந்த், லின்யுடாங் நூல்களையும் தமிழில் தந்துளார். மாம்பழக் கூடை (சிறுவர் கதை), தமிழிசைப் பாடல்கள் 60.

41 இல் காரைக்குடியில் 'புதுமைப் பதிப்பகம்' தோற்றி கவிமணி, டி. கே. சி., ராஜாஜி, கல்கி நூல்களை வெளியிட்டுப் பரப்பியவர். வாழ்க்கை வரலாறு படைப்பதில் வல்லவர்-வளம் சான்றவர், இத்துறையில் ஈடு இணையற்று ஓங்கி நிற்கிறார். பல் சமயத் தலைவர்கள் பற்றியெல்லாம் நூல்கள் படைத்தமை யும், வேற்று மதத்தினரெல்லாம் தங்கள் அருளாளர் பற்றி வரலாறு வரைந்து தருமாறு செய்வதும், இவரை 'வாழ்க்கை வரலாற்றுச் செல்வர்' என அழைக்கத் தூண்டுகிறது. அப்படி அளவாலும் அருமையாலும் வரலாறுகள் படைத்துளார். நபிகள் நாயகம், இயேசு நாதர், புத்தர், மகாவீரர், நானக்,

விவேகானந்தர், வள்ளலார், ஏழை பங்காளன் லெனின் (இதற்காக சோவியத் லாண்டின் நேரு விருது பெற்றார், உருசிய நாட்டில் உலாவரும் வாய்ப்பும் பெற்றார்.)

இவரின் முன்னோர்கள் தமிழிற் சிறந்து நின்றோர் என்பது குறிப்பிடத்தக்கது. நிறைய நூல்கள் எழுதியவர், இப்போதும் எப்போதும் எழுதிக் கொண்டிருப்பவர் என்பதும் போற்றற் குரியது. **முகவரி :** 7. மூன்றாவது தெரு, பாரதி நகர், வடக்கு உசுமான் சாலை, சென்னை-17.

**மு. நமச்சிவாயம்:** *15-10-1924.* வ.ஆ. மாமந்தூர். காமராஜ் என்றதும் இவர் பெயரே நினைவுக்கு வரும்; அதுபோல இவர் பெயரைக் கேட்டதும் காமராஜ் நினைவு வரும். அப்படிக் காமராசர் வாழ்வினைக் கனிவுடன் தந்தவர். காமராஜ் வரலாறு, சிவகாமியின் செல்வன்; காமராஜ் உவமைகள், கருத்துக் குவியல்கள்; காசிமுதல் தாஷ்கண்ட் வரை. **முகவரி :** 17/6 பீட்டர்ஸ் காலனி, சென்னை-14.

**நாக. சண்முகம் :** *28-11-1930.* வேகுபட்டி. புலவர் பட்டம் பெற்று 5-3-58 மேலைச் சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் ஆசான். 57 இல் இவர் தலைமையில் வள்ளுவர் மன்றம் தொடங்கப் பெற்று வெள்ளி விழாவும் கொண்டாடிச் சிறக்கப் பணியாற்றி வருகிறது. சென்னையிலிருந்து 'நகரத்தார்' இதழ் ஆசிரியராக வெளியிட்டார்.

வாழைமரம், மனக்கோயில், நிறைகுடம், மஞ்சி விரட்டு, மனக்கதவு - நாவல்கள் தியாகவல்லி (வரலாற்றுத் தொடர்), அன்புக்கயிறு (நாடகம்). திரைப்படங்களுக்குக் கதை வசனமும் தீட்டியுள்ளார். கம்பர் கதை, மகாத்மா காந்தி, காமராஜ், அறிஞர் அண்ணாதுரை எனப் பன்னிருவர் வரலாறு படைத்துள்ளார். நல்ல பதிப்பர். **முகவரி:** 36/3, சரோஜினி தெரு, சென்னை-17.

## 71. துணுக்கு இலக்கியம்

'அண்ணன் என்னடா, தம்பி என்னடா அவசரமான உலகத்திலே' என்றான் ஒரு கவிஞன். வயிற்றுப் பாட்டிற்காக ஓயாது உழுற்றுகின்றான் மாந்தன்; இந்த உலகில் வாழ்வே ஒரு பாரமாகவும் பிரச்சினையுமாக ஆகிவிட்ட காலக்கட்டத்தில், நேரமில்லை, ஓய்வும் இல்லை. இதனாற்றான் பெருங்

காவியங்கள் பிறக்கவில்லை! இப்படி நெருக்கடியான காலக் கட்டத்தில் இதழ்களை கூடப் படித்தறிய முடியா நிலை. அதற் கேற்ற பொறுமையும் இல்லை.

இதனால் மேலோட்டமாகப் பார்ப்போர் கூட, துணுக்கு களை நகைச்சுவை நறுக்குகளை மட்டுமேனும் படித்து விடுகின் றனர். இதில் பொழுது போக்கு மட்டுமில்லை, பயனும் உளது. அரிய செய்திகள் அறிவுக்கு விருந்தாக அமைகின்றன. கண்டன, கேட்டன, படித்தனவற்றிலிருந்து இந்த நறுக்குகளை எழுது கின்றனர். காணாதோறும் கேளாதோறும் அந்த நூலை இதழைப் பயிலாதோறும் அறிந்து மகிழ முடிகிறது. இஃதோர் சிறிய செறிவானமஞ்சரி, Reader's Digest எனலாம். படித்தற்கு எளிமை, இனிமை; எவரும் விரும்புவது, எனவே எல்லா இதழ் களுமே இதனைத் தருகின்றன. சில பக்கத்துக்குப் பக்கம் தரு கின்றன. துணுக்குப் போட்டி நடாத்தித் துணுக்கு எழுத்தாள ரைப் போற்றுகிறது. விகடன் போன்றன 'துணுக்குச் சிறப் பிதழ்' நடாத்தின. தமிழில் துணுக்குத் தொகையாளர் சங்கரி புத்திரன், டாக்டர் மோகன் 100 திரட்டி நூலாக்கியுள்ளார். (துணுக்கு இலக்கியம்) மூர்த்தி சிறிதேயாயினும் கீர்த்தி பெரிது.

## 72. காந்தீயச் செல்வாக்கு

அண்ணல் காந்தி (1869-1948) தமிழின் பெருமை புரிந் தவர். தமிழ்ப் பண்பாட்டின் பெட்டகமான திருக்குறளை அறிந்தவர்; அது உண்மை அன்பு கருணை போதிப்பது எனத் தெளிந்தவர். தமிழில் தம் கையொப்பம் இடத் தெரிந்தவர். தமிழக மதுரையில்தான் ஆடையில்லா மனிதர்களாய் இந்தியர் இருக்கும்வரை தாம் முழு ஆடை அணிவதில்லை என முண்டும் துண்டும் கொண்டார். தமிழ்ப் பெண் தில்லையாடி வள்ளி யம்மையே தென்னாப்பிரிக்காவில் அவர் உயிர் காத்தவர்!

'உண்மையே கடவுள்' என்றவர். உண்மையும் அகிம்சை யுமே அவரது இரு கண்கள். தரும சிந்தனை தன் கட்டுப்பாடு மூலமே உண்மையைக் காணமுடியும். சமுதாய அரசியல் பிரச் சினைகளை அறநெறியுடன் அணுகுவதும் தீர்வு காண்பதுமே அவர் காட்டிய நெறி. உண்ணாவிரதம் ஒத்துழையாமை சத்தியாகிரகம், சுதேசியம், கடையனுக்கும் வாழ்வு (unto this last), தருமகர்த்தா கொள்கை, நூல் நூற்பு, இந்து முஸ்லீம் ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு, பெண்மை போற்றல், அரிசன முன்னேற்றம், கிராமப் பொருளாதாரம், குடிசைத் தொழில்,

நாடு முழுதும் ஒரு பொதுத் தேசீயக் கல்வி, கதர் போன்றன இவர் கொள்கைகள், தேசீயத்தில் தெய்வீகத்தைக் கலந்தவர்-கலக்கச் செய்தவர்.

இந்த நூற்றாண்டின் முதல் அறுபதாண்டுகள் இந்திய இலக்கியங்கள் இவர் தத்துவங்களின் தாக்கம் பெற்றன. விடுதலைப் போராட்டக் காலத்தில் தமிழக நாடக மேடைகளில்—புராண நாடகங்களினூடே கூட காந்தி பற்றிய பாடல்கள் முழங்கின. சபா. அருணாசலம் போன்றார் தமிழிலக்கியத்தில் காந்தீயத்தின் தாக்கம் பற்றி ஆராய்ந்துள்ளனர்.

காந்தியுகம் பிறந்தது, அவரே இந்திய மக்களின் காப்பராக, விடுதலை மீட்பராகக் கருதப்பட்டார். எனவே எழுத்திலும் பேச்சிலும் காந்தி புகழ் பேசப் பெற்றது; கருத்துக்கள் மிடைந்து வந்தன. **பாரதியாரின்** காந்தி பாட்டு புகழ் பூத்தது; பாழ்பட்டு நின்றதாமோர் பாரத தேசந்தன்னை வாழ்விக்க வந்த காந்தி நீ எம்மான் வாழ்க! வாழ்க! என வாழ்த்தினார். இவரைக் கண்ட அண்ணல் 'இவர் நாட்டின் சொத்து, பேணிக் காக்க' என ராஜாஜியிடம் கூறியுள்ளார். பாரதி பாடல்களில் ஓர் ஆன்மீக அன்பு ஊடுருவ காந்தீயம் கரணியமானது. 'பகைவனுக்கருள்வாய் நன்னெஞ்சே', பூமியில் எவர்க்குமினி அடிமை செய்யோம், பரிபூரணுக்கே அடிமை செய்து வாழ்வோம்' போன்றன சான்றாம்.

**திரு.வி.க.:** தமிழில் காந்தீயம் துலக்க வந்தவர், விளக்கும் வாயில் எனலாம். 'காந்தி எம் எஜமான்' மாபெரும் படைப்பு' காந்தியுடன் சுற்றி அவர் பேச்சுக்களையெல்லாம் பெயர்த்தார். காந்தியின் சத்தியாக்கிரகம், அப்பரின் 'நாமார்க்கும் குடியல்லோம்! நமனை அஞ்சோம்' என்பதன் செயற்பாடே என்றார். காந்தீய நெறியில் வாழ்ந்தார், எழுதினார் பேசினார்.

மேடைத்தமிழ் மேன்மையுறக் காரணர் காந்தியே என்று கூட இயம்பலாம். உண்மையும் தெய்வீகமும் ஊடாடி வந்தன. தேசீயமும் தெய்வீகமும் திரு.வி.க., கல்கி, ம.பொ.சி. ராஜாஜி பேச்சுக்களில் ஒளி வீசின. எளிய கதைகள் இனிய நீதிகள் நிறைந்தன.

**கவிமணி:** காந்தியக் கருத்துக்களை வாங்கிக் கனிதமிழில் தந்தார். சாதி, பெண்மை, தீண்டாமை பற்றிய கவிதைகள்

இத்தாக்கம் காட்டும். **நாமக்கல்லார்** காந்தியக் கவிஞர். அண்ணல் பற்றியும் அவர் கருத்துக்கள் பற்றியும் பாடியுள்ளார்.

**தெ. பொ. கிருஷ்ணசாமிப் பாவலரின்** கதரின் வெற்றி, பதி பக்தி, தேசியக் கொடி, கவர்னர்ஸ் கப் போன்றன காந்தீய நிர்மாணத் திட்டம் விடுதலைப் போர் பற்றி வீர மூட்டியன. மூதறிஞர் **ராஜாஜி** காந்தீய போதகராகவே பொலிந்தவர். எளியோரும் அறிய காந்தீயக் கருத்துக்களை எழுதியவர், பேசியவர்.

நாவல் சிறுகதைகளில் காந்தீயச் செல்வாக்குகணிசமானது. **புதுமைப்பித்தன்,** காந்தியடிகளின் தீண்டாமை, வறுமை, போன்றவற்றைக் கதைகளில் வைத்துக் கடைந்தவர். கு. ராஜ வேலுவின் 1942 வெள்ளையனே வெளியேறு போராட்டத்தை நிலைபெறக் கொண்டது. ந. சிதம்பர சுப்ரமணியத்தின் 'மண்ணில் தெரியுது வானம்' அகிலனின் 'எங்கே போகிறோம்' நா பா. வின் 'ஆத்மாவின் ராகங்கள்', நல்லபெருமாளின் 'கல்லுக்குள் ஈரம்' மு வ. நாவல்கள் காந்தீயம் பேசுகின்றன. 'மு.வ.வின் நாவல் இலக்கியக் கொள்கையே காந்தியவாதம் எனல் மிகையாகாது' (ந. பிச்சமுத்து). கல்கியின் 'அலை யோசை', 'மகுடபதி' கணிசமான காந்தியக் கதை இலக் கியங்கள்.

இந்நாளைய இழிநிலைகளைச் சாடும் புதுக்கவிதைகளில் கூட காந்தி இழுக்கப்படுகிறார். இந்நாளைய எண்ணங்களே, காந்தியச் சிந்தனைகளாக இருப்பதால், இந்தத் தலைமுறைப படைப்புக்களில் தவிர்க்கொண்ணாத வகையில் காந்தியச் செல்வாக்கு தற்காலத் தமிழ் இலக்கியங்களில் இடம்பெறு கின்றன; அதற்கேற்ப நிறம் பெறுகின்றன எனலாம்.

## 73. பெயராய்வு (Onomastics)

நூற்களுக்குப் பெயரிடுவதில் ஒரு புதுமையும் வித்தியாச மான போக்கும் மேவி வருகிறது. நூலினுட் புகுந்து அதன அருமை பெருமை உணருமுன்பே, அதனைக் கண்டவுடனேயே அகம் அள்ளும் வகையில் பெயர் அமைய வேணும் என்ற ஆர்வம் பெருகி வருகிறது. நேரே பெயரிடுவதைக் காட்டிலும், முரண்பட்ட வகையில் மாறுபட்ட முறையில் தலைப்பிடுவதில் தனிக் கவனம் செலுத்துகின்றனர்.

பெயரிடுவதில் உலகப் பெரும் நாடகக் கலைஞரான சேக்சுபியருக்கு ஈடுபாடு கிடையாதாம். ரோஜாவை **Rose**

என்று அழைத்தாலும் வேறு பெயரிட்டு அழைப்பினும் ரோஜா ரோஜாதான்; பெயரில் என்ன பெருமை இருக்கிறது? பண்டம் நன்றாய் இருந்தால் போதும் என்பாராம். அதனால்தான் அவர் நாடகங்களுக்கு As you like it என்பன போன்ற பெயரிட்டுள்ளாராம். Justification of the Title என ஆய்வதும் ஈண்டு எண்ணத்தக்கது.

இப்படிப் பெயரிடுவது பற்றியே தனி ஆய்வு மேலை நாடுகளில் தழைத்துளது. பெயரின் மூலமே மானுடவியல் பண்பாட்டியல் கூறுகள் கண்டறிய முடியும் எனக் கருதி அவ்வாய்வுக்குப் பெயராய்வு (Onomastics) எனப் பெயரிட்டுள்ளனர். அதனையும் ஆள்/பெயராய்வு (Anthroponomy), இடப்பெயராய்வு (Toponomy) என வகைப்படுத்தியுள்ளனர். இதற்கெனத் தனித் துறையே அமைத்துளர். இதன் வளர்ச்சியாக இன்று நூற்பெயர் ஆய்வு என்ற ஒன்று முனைந்து வருகிறது.

மக்களுக்குப் பெயரிடுவதில் இரு வேறு கருத்து உளது. தமிழனாகப் பிறந்தவன் தனித்தமிழ்ப் பெயரே இடவேண்டும், அதுவே தன்மானம், தாய்மொழிப்பற்று. மற்றொன்று: பெற்ற பிள்ளைக்கு உலகியலோடு ஒட்டி மனம் உவக்கும் நளினப் பெயர்கள் நல்கவேண்டும், இதில் போய் தமிழ்ப் பற்றினைக் காட்டக் கூடாது.

முன்னதன் முறுவலால் சூரிய நாராயண சாஸ்திரி, பரிதி மாற் கலைஞரானார்; சுவாமி வேதாசலம், மறைமலையடிகள் ஆனார். நாராயணசாமி, சோமசுந்தரம், ராமையா முறையே நெடுஞ்செழியன், மதியழகன், அன்பழகன் எனப் பெயர் மாற்ற முற்றனர்.

இடப்பெயர்களில் வடமொழி வாடை வீசியதால் வேதாரண்யம், மாயவரம். போல்வன, திருமறைக்காடு, மயிலாடுதுறை ஆயின. இறைவர் பெயர்களும் பிரகதீஸ்வரர், பிரஹன்நாயகி போன்றன, பெருவுடையார், பெரியநாயகி என மாற்றம் பெற்றுள்ளன.

நூற் பெயர் காரணம் காட்டி நன்னூலார் நூற்பா வகுத்துள்ளார். இது இன்றும் பொருந்தி வருகிறது. காலத்தின் தேவை கருதி நூற் பெயர்க்குரிய நெறிமுறைகளை வகுத்தல் வேண்டும். இதனால் புதிய செய்திகள் புலப்படும்.

ரா.பி. சேதுப் பிள்ளையின் 'ஊரும் பேரும்' ஓர் அரிய துவக்கம். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் தஞ்சை

மாவட்ட செங்கை மாவட்ட, இலக்கியத்தில், ஊர்ப் பெயர்கள் என இவ்வகையில் நூல்கள் பல அளித்துள. கழகத்தாரும், இறையரசரும் ஆட்பெயரிடுவது பற்றி நூல்கள் படைத்துளார்

புதுக்கவிதை நூல்களின் பெயர்களில் புதுமை பொங்கி வருகிறது. சிற்சிலபோது மரபு மீறிய வகையிலும் பெயரிட்டு விடுகின்றனர். 'கோழிக் குட்டிகளும் பன்றிக் குஞ்சுகளும்' (கொ. மா. கோதண்டம்)

வலம்புரி ஜான் பெயர் வைப்பதில் நலம் சான்றவராக நிலவுகிறார்: பற்றி எரிகிற பனிநதிகள், மண்ணில் விழுந்த மகரந்தங்கள், ஒரு நதி குளிக்கப் போகிறது, நியாயங்களின் பயணங்கள், நான் கழுதையானபோது என்பன எண்ணுக. புதுக்கவிதை நூல்கள் யாவும் புதுமைப் பெயர் தாங்கியே உலா வருகின்றன: நெருப்புப் பார்வைகள், அக்கினிச் சாரல்' போல்வன கருதுக.

இலக்கிய நுகர்வுக்குப் பெயரும் பெரிதும் உரியது, அதிலும் இலக்கிய மணம் கமழ்கிறது என்பன போன்ற கரணியங்களால் நூற் பெயராய்வில் நாம் கவனம் செலுத்திக் தளங்கள் கண்டு, தளங்கள் கோலி வழிமுறைகள் விதிகள் வகுக்க வேண்டும்.

## 74. பாட்டரங்கம்

பள்ளி கல்லூரி, தமிழ்ப்பேரவை, முத்தமிழ் விழா, மாநாடு; சமய-கோயில் விழாக்கள், அலுவலக ஆண்டுவிழாக்கள் எது வாயினும், பாட்டரங்கம் கட்டாயம் இடம் பெறுகின்றது, கேட்டு மகிழக் கூட்டமும் கூடுகின்றது.

தலைமை தாங்கும் தகுதியர்: பாரதிதாசன், நாமக்கல்லார்; கி. வா. ஜ, அ. சீனிவாசராகவன், கண்ணதாசன்; சுரதா, கலைஞர் மு. கருணாநிதி, பொன்னடியான், வா. மு. சேது ராமன், கே. சி. எஸ். அருணாசலம், ச, பாலசுந்தரம், எஸ். கே. ராமராசன், முருகு சுந்தரம், முடியரசன், பழனி இளங்கம்பன், பொன்னி வளவன், வேழவேந்தன், மெ. சுந்தரம், அப்துல் ரகுமான், தமிழண்ணல், கருணானந்தம், நா. காமராசன்' மு. மேத்தா, வைரமுத்து, கலைவாணன், எஸ். டி. சுந்தரம், யோகி சுத்தானந்த பாரதி, கு. மா. பாலசுப்பிரமணியன், சாலை இளந்திரையன், கொத்தமங்கலம் சுப்பு, சொ. சொ. மீ. சுந்தரம், அக்னிபுத்திரன், சிற்பி, குருவிக்கரம்பை சண்முகம், புலமைப் பித்தன்.

கவியரங்கக் கவிஞர்கள் : எத்தனையோ பேர் கவிஞர் எனத் தவழ்கின்றனர்; ஆனால் அத்துணைபேரும் கவியரங்கில் எடுபடுவதில்லை, சிலரே சிறக்கின்றனர்-சிறந்தொளிர் கின்றனர் அப்துல் ரகுமான், மீரா, சிற்பி, ஈரோடு தமிழன்பன் பொன்னிவளவன், முத்துலிங்கம் முத்துராமலிங்கம், இளந் தேவன், பொன்னடியான். முடியரசன், மின்னூர் சீனிவாசன், தி. கு. நடராசன், கே. சி. எஸ். அருணாசலம், சொ. சிங்கார வேலன், அர. சிங்கார வடிவேலன், ம கண்ணப்பன், குருவிக் கரம்பை சண்முகம், ம. வே. பசுபதி, புலமைப் பித்தன், மேத்தா, வைரமுத்து, பொன்மணி, சௌதரா கைலாசம், அரசு மணிமேகலை, புத்தனேரி சுப்பிரமணியன், சாலை இளந் திரையன், தொல்காப்பியன், மேகநாதன், எழில்முதல்வன், ஆலந்தூர் மோகனரங்கன், பூங்குன்றன், மனசை ப. கீரன், தாரமங்கலம் வேலு, து. சந்திரன், தங்க அன்பு வல்லி, இளசை சுந்தரம், மரியதாஸ், கதி. சுந்தரம், பொன் முத்தையன், ஞான சேகரன், கோவை இளஞ்சேரன், ரம்போலா மாஸ்கரேனஸ்.

'கவியரங்கக் கவிதைகள்' என்றே பலரின் தொகுப்புகள் வந்துள. வானொலி நிலையங்கள் ஆண்டுதோறும் தமிழ்ப் புத்தாண்டு பொங்கல் நாளன்று சிறந்த கவியரங்குகளைச் சீரிய முறையில் நிகழ்த்துகின்றன.

## 75. பட்டி மன்றம்

சமய விழாவாயினும் அரசியல் சமுதாயக் கொண் டாட்டமாயினும், கல்லூரி இலக்கிய விழா-முத்தமிழ் விழா எதுவாயினும், அங்கே பட்டிமனறம் கட்டாயம் இடம் பெறு கின்றது. பொதுமக்கள் இதனை நாடி வருகின்றனர், விரும்பி வரவேற்கின்றனர். பருப்பில்லாக் கல்யாணமா என்பதுபோலப் பட்டிமன்றமில்லா விழாவா? என்னும் நிலை ஏற்பட்டு விட்டது.

பண்டு சமயவாதிகள் தங்கள் தங்கள் சமயக் கொள்கை களை நிலை நாட்ட இதனை அமைத்தனர். சான்றுகள்:

பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண்டபமும்
(சிலம்பு5 : 102)

ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின் (மணி 1:60-61)

பட்டி மண்டப மேற்றினை யேற்றினை
எட்டி னோடிரண் டறியே னையே (திருவா. சதகம் 46)

பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம் (கம்ப. நகர 62)

சொற்புலவோர் வாதப் போரும் (க. பரணி 276)

பள்ளு இலக்கியத்தில் வரும் சைவ வைணவப் பள்ளியர் ஏசல், இந்த நூற்றாண்டு இடைவரை இருந்த சைவ வைணவச் சாடல்கள், காமன் எரிந்த-எரியாக் கதைபேசும் லாவணி போல்வன பட்டிமன்ற வளர்ச்சி நிலைகளின் கூறுகளே எனக் கூறலாம்.

நூல்கள்: பட்டி மன்றம் - தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; பட்டி மன்ற விவாதங்கள் - பொ. ம. ராசாமணி; பட்டிமன்றம் - சொல்விளங்கு பெருமாள்.

இரண்டு அல்லது மூன்று அணியினர் வாதிடுவர்; ஒவ்வோர் அணியிலும் தலைவரின்பின்னே மூவரோ நால்வரோ அமைவர். மூன்றில் ஓரணி ஒரு சுற்றின்பின்னே வலுவின்மையால் தள்ளப் படும்; பின் இரண்டே வாதிடும். காரைக்குடி கம்பன் கழகமே இதனைப் பிரபலப்படுத்தியது. தென்காசி திருவள்ளுவர் கழகம் ராஜபாளையம் மணிமேகலை மன்றம், குழித்தலை தமிழ் கா. சு. நிறுவனம் போன்றன போற்றி வளர்த்தன. சென்னையில் ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றம் இதற்கென்றே உருவாகி உலையாது உஞற்றி வருகிறது.

குறள், சிலம்பு, கம்பராமாயணம், பாரதம், கந்த, பெரிய புராணங்கள் தலைப்புக்குரியனவாக அமைகின்றன. வள்ளுவர், பாரதியும் பாரதிதாசனும் வாதத்துக்குரியர்களாக அமைகின்றனர். குன்றக்குடி அடிகளார், கி.வா.ஜ, நீதிபதி இஸ்மாயில், திருக்குறளார் முனுசாமி, சொ.சத்தியசீலன், அவ்வை நடராசர், சிலம்பொலி செல்லப்பன், பாரதிப்பித்தன், பா. நமச்சிவாயம், சாலமன் பாப்பையா, மெ. சுந்தரம் போன்றார் தலைவர்களாகத் திகழ்ந்து நல்ல முறையில் நடத்திக் கொடுக்கின்றனர். சா.கணேசன், இரா. இராதாகிருட்டிணன் இருவரும் இரு சுடர்களாக இலங்கினர்.

ஒட்டியும் வெட்டியும் பேசுவதில் வல்லாராக ஆ. வ. இராசகோபாலன், அறிவொளி, கணேச கோபாலகிருட்டிணன், தொல்காப்பியன், இரா. இளவரசு, சோம. இளவரசு, தி. கு. நடராசன், கோ. வேங்கடாசலம், கு. சிவஞாம், இரா. செல்வகணபதி, ருக்மணி, காந்திமதி, மல்ல சமுத்திரம் வேங்கடாசலம், ராசை சோமசுந்தரம், வேங்கடராமன், மனம் சந்திரசேகரன்,

சொல்விளங்கு—சக்தி பெருமாள், சரசுவதி ராமநாதன், பழநி அரங்கசாமி, எஸ். ராமகிருஷ்ணன், தா. பாண்டியன், கோ. சாரங்கபாணி, உமையாள் முத்து, அ. அருணகிரி, வே. காத்தையன், அ. தட்சிணாமூர்த்தி, க. கு. கோதாண்ட ராமன், சேலம் ப.ராமசாமி, நல்லதம்பி; முத்து சண்முகம், ராமு, இ. மறைமலை, க. ப. அறவாணன், குமாரவேலன்,குமரி அனந்தன், மு. கணபதி; காந்திமதி நாதன், சு. விசுவநாதன், அ கலியபெருமாள், தெ. ஞானசுந்தரம், மு. வள்ளியம்மை, செல்வி மணிமேகலை, மா. முத்தையா, அரு. நாகப்பன், க. தியாகராசன், நா. சுப்பிரமணியன், சொ. சொ. மீ. சுந்தரம், பெரி சிவனடியான், கணசிற்சபேசன், மா. கண்ணப்பன், இராகவன்முத்து, இராம. இராமநாதன், சவகர்லால், தேனப்பன், பழ. முத்தப்பன், கதி. சுந்தரம், சுப. கதிரேசன், சாமி. தியாகராசன், அழகு. பன்னீர்செல்வம், புனிதா ஏகாம்பரம், இளம்பிறை மணிமாறன், கு. வே. பாலசுப்பிர மணியன், புனிதா ஏகாம்பரம்.

சில சமயங்களில் இது 'பாட்டி மன்றங்களாகி விடுவதும்' உண்டு. கதையும் சரடும் அதிகமாகி, அரைத்த மாவையே அரைத்து, கீறல் விழுந்த கிராமபோன் தட்டுக்களாவதும் உண்டு. கவிதையிலேயே பட்டிமன்றங்கள் நிகழும் அளவிற்கு வளர்ந்துளது. உடனுக்குடன் கவிதையிலேயே வாதிடும் வளமையது. இதில் வீறார்ந்து நிற்பவர் மதிவண்ணன் போன்றார்.

## 76. வழக்காடு மன்றம்

அண்மையில் அரும்பியது. பட்டிமன்றத்திலிருந்து பரிண மித்தது இருவரே தனி நின்று வழக்காடுவர்—வாதி பிரதிவாதி போலே. துணையாக யாரும் வாதிடார். வேண்டுமெனில் கருத்துக்களை எடுத்துக் கொடுக்கலாம், நினைவுபடுத்தலாம்.

சில வழக்குகள்: தயரதன் குறையுடையவனே! கோவலன் குற்றவாளியே! இராமன் வாலியை மறைத்திருந்து கொன்றது தவறு, மனுநீதி சோழன் தன் மகனைத் தேரிலிட்டுக் கொன்றது மாபெரும் தவறு. இதில் ஏற்றமும் எடுப்பும் பெற்றொளிர் வோர்: இரா.ருக்மணி, இரா.காந்திமதி, இரா.செல்வ கணபதி, தி.கு.நடராசன், ஆ.வ.இராச கோபாலன், ஆ.செகந்நாதன், அறிவொளி, குருவம்மாள், சொ. சத்தியசீலன், அ. ச. ஞான

சம்பந்தன், க.கு கோதண்டராமன், சுகி.சிவம், அழகு பன்னீர் செல்வம்.

தலைவர்களாக தவத்திரு அடிகளார், மு. மு. இசுமாயீல், திருக்குறளார், பாரதிப்பித்தன், சொ. சத்தியசீலன், பா. நமச்சிவாயம் முதலியோர் திகழ்கின்றனர். இனிப் பட்டிமன்றம் வழக்காடு மன்றங்களில் சிறந்தொளிர்வோர் சிலரைச் செப்புவோம்:

**இரா. இராதாகிருஷ்ணன்:** *1926.* 84. கும்பகோணம். திருச்சி தேசியக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்து மறைந்தவர். கம்பனைத் தனக்குரிய தனி நூலாகத் தேர்ந்து கடைந்தெடுத்து கம்ப அமுதம் வழங்கியவர். கம்பன் விழாக்களில் இவர் பேச்சு இல்லாமல் இராது. கடைசிக்காலத்தில் கம்ப ராமாயண விரிவுரைகள் தமிழகமெங்கணும் நிகழ்த்தி கம்பன் தமிழை மக்களிடம் அள்ளித் தந்தார். பட்டிமன்றம் பரவத் தொடங்கிய காலந்தொட்டுப் பட்டிமன்றங்களில் பட்டொளி வீசி வந்தார் வாதிடுவது விடுத்துத் தலைமையேற்றுப் பலரைப் பட்டிமன்றப் பாங்காளர்களாக்கினார். தமக்கென ஒரு குழு அமையவே, தமிழக மூலை முடுக்குகளிலெல்லாம் தம் வாரிசுகளை விளையாடவிட்டு ஊக்கினார். கம்பனும் பட்டிமன்றமும் இரு கண்களாகப் பாவித்துப் போற்றித் தமக்கென ஒரு பாணியும் அமைத்து உலையா இடம் பெற்றுவிட்டார். இவர் மறைவு பேரிழப்பாகும். இவரின் வாரிசுகளாக விளங்குவோர் சொ.சத்தியசீலன், ஆ. வ. ராசகோபாலன், சுகி. சிவம் போல்வார்.

**சொ. சத்தியசீலன்:** திருச்சி ஈ. ஆர். மேனிலைப் பள்ளித் தமிழாசிரியராக இருந்து உயர்ந்து தேசியக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளராக விளங்கி இதுபோது உருமு தனலட்சுமி கல்லூரி முதல்வர். கருநிறத்துக் காந்தர்; புன்முறுவல் தவழ் பொலிவு முகம், வரைந்த சித்திரத்தன்ன வடிவழகர். தமிழ்ப் பேச்சாளர்களில் முன்னணியாக முறுவலிப்பவர். மாதத்தில் 20 நாட்கள் பேச்சுப் பயணம்தான்! பட்டிமன்ற வழக்காடு மன்றத் தலைவராகத் திகழ்பவர். கனிவான கதைகள், கருத்தான நிகழ்வுகளைத் தோதான இடங்களில் தொகுத்துக் காது குளிரக் கேட்கச் செய்யும் கலை கைவந்தவர். மெதுவாகத் தொடங்கி, மெல்ல மெல்ல மேலோங்கி உச்ச நிலைக்கு இட்டுச் செல்லும் விரகு வாய்ந்தவர். உடே நகைச்சுவை நெளிந்து உவமை தரும்.

வாதங்களை வாகாக வைத்து வக்கணையுடன் வழக்குத் தொடுப்பார். வெட்டியும், ஒட்டியும் வாதிடுவதில் வல்லவர்.

தலைவராகத் திகழுங் காலை, வாதிப் பிரதிவாதிகளைச் சீண்டியும் சிண்டு முடிந்து விட்டும் வேகமூட்டுவார். இறுதியில் அணியினரின் வாதங்களையும் சான்றுகளையும் அலசி ஆய்ந்து அவை ஒப்பும் முடிவுகளை வழங்குவர், தீர்ப்பு திறமானதாகவே அமையும்.

இத்துறையில் இவரின் குரு அமரர் இரா. இராதாகிருட்டிணன் அவர்களே. இளமையில் நிறைய பேச்சுக்களைக் கேட்டுப் பேசும் திறமும் பாங்கும் உணர்ந்ததாக உரைத்துள்ளார். சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும்; ஆதலின் நிறைய நெட்டுருசெய்து மன அறையில் போட்டு வைக்க வேணும் என்கிறார். தம் திறத்துக்கு இளமை முதல் ஏராளம் மனனம் செய்து வைத்தமையே ஏது என்கிறார்.

பேரவையின் நாடி நன்குணரக் கூடியவர். அவைக்கேற்ப ஆர்வமூட்டிப் பேசும் அருமை தெரிந்தவர். இளைஞர் மாணவர் பெரியவர் தொழிலாளர் எல்லோரும் ஏத்தும் புகழ் பூத்தவர்.

**அ. வ. இராசகோபாலன் :** புத்தனம்பட்டி நேரு நினைவுக் கல்லூரிப் பேராசிரியர். பெரிய உருவினர், என்றாலும் மழலை மொழியினர். பட்டிமன்றுக்கெனவே பிறந்தவரோ? கனம் நீதிபதி அவர்களே! என அடிக்கடி விளித்து கைகளைத் தொடையில் தட்டி அக்கம்பக்கம் திரும்பி அரிய கருத்துக்களை உரியமுறையில் அழகாக வைக்கும் போது அகம் உவக்கும். குழந்தை முகம், கொஞ்சு தமிழ், நளின நடை, நலஞ்சேர் பாணி இவரின் பட்டிமன்றப் பாங்கிற்குக் கட்டியங் கூறும்.

எந்தப் பட்டி மன்றமாயினும் அங்கே இவர் இருப்பார், அத்துணை முக்கியர். பட்டிமன்ற பவனி வரும் இராசர். வழக்காடு கோபாலர். கனிவாகப் பேசுபவர். இவரும் சத்திய சீலரும் இரட்டையர்கள்—பட்டிமன்ற அரட்டையர்கள் என்றால் மிகையன்று. இருவரும் இத்துறையின் இரு சுடர்கள்.

**அ. அறிவொளி;** உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்து உயர்ந்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைக்கு அணி செய்தவர். உரிமைப் போராட்டம் செய்து விலகியவர். நல்ல நளினப் பேச்சாளர். இடமறிந்து எடுப்பாகப் பேசும் கடனறிந்தவர். சொற்களைச் சுவையுடன் ஆண்டு கற்கண்டுபோல் கனிதமிழ் கொட்டி முழக்குவார். பாரதி தாசனில் பதிந்தவர், பேச்சால் பாவேந்தரிடம் பிணிப்பவர்—பிணைப்பவர்.

சிவந்த மேனி, ஒல்லி உருவம் கண்ணுக்கு இனிமை; பாகுப் பேச்சு, பட்டு தெரித்தது போன்ற சொற் செட்டு - செவிக்கு இன்பம். இப்போதெல்லாம் 'இருவரோடு மூவரானோம்' எண்ணுமாறு சொ. ச.. ஆ. வ. ரா., இருவரோடு இணைந்து மூவேந்தர்களாக விளங்கி வருகிறார். மூவரும் பட்டிமன்ற மும்மணிகள், வழக்காடு மன்ற நன்மணிகள். மூவர் பேச்சும் முக்கனிப் பேச்சு. இந்த மூவரிடமும் நந்தமிழ் நடமாடுகின்றது,

அறிவொளி என்ற பெயருக்கேற்ப அறிவு ஒளிவீசும். வாதிடுவதில் வாகும் வக்கணையும் புரிந்தவர். வாதங்கள் கேட்டோர் வந்தனை புரிவர்; அப்படி அழகொழுகப் பட்டி மன்றப் பாங்கறிந்து பேசிடும் பெற்றியர். நூல்கள்: காஞ்சி காமாட்சி, திருவாரூர், திருச்சி கோயில்கள், குடந்தைக் கோயில் கள், சென்னைக் கோயில்கள், காசி, இராமேஸ்வரம், பழநி, பஞ்சபூதத் தலங்கள், அட்டவீரட்டத் தலங்கள், எனத் திருக்கோயில் வரிசை நூல்கள் வழங்கியுள்ளார். பாரதிதாசன் பாடல் திறம் சிறந்தது. பாவேந்தர் புகழ் பரப்பிப்போரில் இவரும் ஒருவர்.

**நா. பாலுசாமி:** *10-7-1923.* வேடநத்தம். மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்து, தேவகோட்டை சேவுகன் அண்ணாமலைக் கல்லூரி முதல்வ ராகச் சிறந்து, அண்ணாமலையில் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து இதுபோது தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் 4-4-84 முதல் வாழ்வியல் களஞ்சிய முதன்மைப் பதிப்பாசிரிய ராகத் திகழ்கிறார். 'பட்டிமன்றம் பாலுசாமி' என்றே மதுரைப் பக்கம் அழைக்கப் பெற்றவர். அத்துணை அழுத்தம் திருத்தமாக வாதிடுபவர், 'செஞ்சொற் கண்ட மாருதம்' எனப் படுபவர்.

தமிழக வேந்தர், இயந்திரப் புரட்சி, வாழ்க்கைச் சோலை, வினைசெயல் வகை, அறச்செல்வி, மணிமேகலை ஆராய்ச்சிக் கட்டுரைகள் போன்றன படைத்துளார். Studies in Mani - mehalai (M. Litt)60. உறுதியும் செயற் பாட்டுத் திறமும் மிக்கவர். உறுதி மிக்கவர். சாதனை புரிவதில் சமர்த்தர். இளைஞர்களை உரிமையுடன் உயர்த்தி ஊக்கும் உயர் வுள்ளத்தார்.

**பா. நமசிவாயம்:** *1932.* புளியறை. பச்சையப்பன் கல்லூரி மாணவர். திருப்பத்தூர் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர். பட்டிமன்றத் தலைமைக்

கெனவே பிறந்தவர், அதனையே தம் தனிப்பெருந் துறையாக்கித் தன்னிகரற்றுத் திகழ்கிறார். 'பட்டிமன்றமா? போடு நமச்சிவாயத்தை' என்ற அளவுக்குக் கொடிகட்டிப் பரப்பவர். கடுமையான கருத்தையும் கனிவாக்கித் தருவதில் கைதேர்ந்தவர். தமக்கே உரிய நகைச்சுவையால் பல்லாயிரவர் கொண்ட பேரவையினைச் சிரிப்பில் ஆழ்த்தும் சதுரர். பட்டிமன்றம்களை தட்டும், கிளுகிளுப்பூட்டும் கலையில் கைதேர்ந்தவர். சட்டென மின்வெட்டென வார்த்தை வீச்சுக்கள் வந்துவிழும். அத்துணை வாகாக விரகுடன் விளையாடும் வளமையர். பெரிய புராணத்தில் பெரும் ஈடுபாடு கொண்டவர். மல்லிகை மலர் போன்றன நூல்கள். **முகவரி** 2, கல்லூரிக் குடியிருப்பு. திருப்பத்தூர். பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டம்.

**கவிஞர் முகிலன்** (கிருஷ்ணமூர்த்தி): 1-7-1932. தஞ்சை மாவட்ட நன்னிலம் வட்ட சன்னா நல்லூர். சிவவடிவேல் பிள்ளை: சாரதாம்பாள். நன்னிலம் கழக உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 51 ல். குடந்தை சிறிய மலர் மேனிலைப் பள்ளி ஆசிரியர் 54 முதல். 66 முதல் பட்டிமன்றம் வழக்காடு மன்றத்தில் பட்டொளி வீசி பவனி வருகிறார். தஞ்சை மாவட்டத்தில் தலைசிறந்து திகழ்பவர்; தமிழகமெங்கணும் சென்று சுழன்று வென்று வருபவர். உணர்ச்சியுடனும் உத்வேகத்துடனும் கருத்துக்களை வைத்து வாதிடுவதில் படுசூரர். இவ்வகையில் இவர் முடிசூடா மன்னராக இலங்குகிறார். பிறரிடம் காண முடியாத பெருந்தன்மை—பெரும் போக்கு இவரிடம் ஒன்றுண்டு: இளைஞர்களிடம் சிறு திறமை தென்பட்டாலும் அவர்களை மேடையேற்றி மேன்மைப்படுத்தும் மேலான குணம் கொண்டவர். ஒப்புரவறிதல் வல்லவர், அதில் உவகை அடைபவர். பட்டிமன்ற வழக்காடு மன்றங்களில் தலைமை வீற்றுத் தனித்துத் திகழ்பவர்.

கவியரங்கத்திலும் அப்படித்தான். 15 வயது முதலே பா புனைந்து வருகிறார். இதுவரை 1000 கவிதைகள் பாடியுள்ளார்; சாகித்தியங்களையும் (தியாகையர்) தமிழ்ப்படுத்தியுள்ளார். புதுக் கவிதையை மதிப்பவர்; மரபைத் துதிப்பவர். சதுர்கவி சங்கரரிடமும், திருவாவடுதுறை வித்துவான் த. சா. மீனாட்சிசுந்தரனாரிடமும் பாடம் கேட்டவர். சித்திரகவியில் சதுரர். கவித்துளி: சீதை வேடமிட்டு சிலுக்கு நடித்தால்தான், சீதைக்கே சிறப்பு என்கிறான்; ஆண்டாள் வேடமிட்டு அனுராதா நடித்தால்தான், ஆண்டாளுக்கே மதிப்பு என்கிறான்; இந்தக் கவர்ச்சிக்குக் கால எல்லை உண்டு, நேற்றைய சீதை. ஆண்டாள் இன்று வாழ்கின்றனர். ஆனால் நேற்றைய

சிலுக்கு—அனுராதா இன்று காணவில்லை! பல கோவில்களில் ஆண்டவன் சிறிதாகிவிட்டான், காரணம் அங்கு அறங்காவலர் பெயர்ப் பலகை பெரிதாகி விட்டதால்!

11-9-59 இல் மணம், மனைவி சரோஜா, கண்ணகி, மணிமேகலை, லட்சுமி, **தமிழ்ச் செல்வன்**+2 பயின்றவர். தந்தைக்கேற்ற தனையன். நாளும் பாராயணம் செய்வதன் மூலம் பல் நூறு பாடல்கள் அறிந்தவர். பெரிய புராணம் கம்ப ராமாயணத்தில் ஈடுபாடு மிகுதி. 500 கவிதைக்குமேல் புனைந்துள்ளார். நல்ல சொல்லோட்டம் உள்ளவை; கருத்துச் செறிவு கொண்டவை. பட்டிமன்றத்திலும் பொரிந்து தள்ளுகிறார். கூர்த்த மதியால் வாதிடுவதில் வல்லவர். சிந்தனை முத்துக்கள் சிந்துகிறார். கவிதையிலும் சரி பேச்சிலும் சரி தத்துவம் ததும்புகிறது. வைகறையில் திருமுருகாற்றுப் படை வந்திக்கும் வளமையர். பெருமைக்குரிய தமிழ் மகன். நல்ல முகிலனுக்கு அமைந்த வல்ல பிள்ளை **முகவரி**. 10, கர்ண கொல்லை அக்ரகாரம், பெசண்ட் சாலை, கும்பகோணம்.

**சாலமன் பாப்பையா:** 22. 2. 1936. மதுரை. சுந்தரம்: பாக்கியம். 53ல் அமெரிக்கன் கல்லூரி உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு. 57ல் கல்லூரி இளங்கலை பொருளாதாரம். 60ல் தியாகராசர் கல்லூரி தமிழ்முதுகலை. 60 - 61 வேலூர் ஊரீசுக் கல்லூரியில் பணியாற்றி 61முதல் அமெரிக்கன் கல்லூரியில் தமிழோச்சி வருகிறார். படைப்புகள்: பட்டுக்கேட்டை கல்யாண சுந்தரம் - ஒரு பார்வை, நல்ல குடும்பம். பட்டங்கள்: இரட்சணியயாத்திரிக அருட் செல்வர் (தமிழ் நாடு இறையியல் கல்லூரி); தமிழிறிஞர் (கோவை நன்னெறிக் கழகம்).

பேச்சே இவர் மூச்சு. சொற்பெருக்கு, பட்டி மன்றம்: வழக்காடு மன்றம். 'பட்டிமன்றப் பாப்பையா' என்றேத்தப் பெறுபவர்; அதற்கெனவே பிறந்தவர். தமிழகம் முழுதும் வடக்கே கல்கத்தா பம்பாய் வரை சென்று வாகை சூடி வருபவர். பேச்சில் எள்ளல் துள்ளும்; நகைச் சுவை நெளிந்தோடும். கருதது வீச்சுக்கள் மின்னல் வெட்டுப் போல் தெறிக்கும். மலேசிய நாட்டிலும் தம் பேச்சால் மயக்கி மெய் மறக்கச் செய்து வந்தவர்.

சமயத் தமிழாய் இலக்கியத் தமிழாய் அரசியல் தமிழாய் மட்டுமே இருந்த தமிழைப் பட்டிமன்றங்களின் வழியே சமுதாயத் தமிழாய்க் கிராமங்களுக்கும் கொண்டு சென்றவர்;

பட்டிதொட்டி யெங்கும் பரவும் வகை செய்தவர். இவர் பேச்சினைக் கேட்டுக் கிறுகிறுக்காதவர் இவர். சிறந்த பேராசிரியரான இவரின் மணம் 63ல், மனைவி ஜெயபாய்; மக்கள் விமலா, தியாகமூர்த்தி, பட்டிமன்றக் கலைக்குப் பெருமை சேர்த்து அருந்தமிழ் மாணிக்கமாய் அமையும் இவர் **முகவரி** 1. விசுவாசபுரி தெரு 4, மதுரை. 16

**பூ. சொல்விளங்கும் பெருமாள்** 23.3. 1937. குமரி மாவட்ட சாமிதோப்பு மதுரை வெள்ளச்சாமி நாடார் கல்லூரித் தமிழ்ப் போராசிரியர். புறநானூற்றுச் சிந்தனைகள் போன்றன படைத்துளார். துணைவியார்: **சக்திபெருமாள்** 1937. மனோன்மணி, தமிழ் நாடக வரலாறு போல்வன தந்துளார். இருவரும் பேச்சில் புலிகள். பட்டிமன்றத்தில் எதிரணியில் வாதிடும்போது கண்ணுக்கும் காதுக்கும் விருந்தாக அமையும். ஒருவருக்கொருவர் களைத்தவரில்லை. இருபெருமாள் வாயிலும் என்னமாய்க் கருத்துக்கள் உருண்டோடி வருகின்றன! கருத்து மோதல்கள் காரசாரமாய் இருக்கும். இருவரும் பேசுவதற்கே பிறந்தவர்கள் - பிணைந்தவர்கள் என்றே எண்ணி இன்புற வேண்டியுளது. **முகவரி**: 9, அண்ணா நகர், மதுரை 18.

**சாமி.தியாகராசன்**: 11. 8. 1939. தஞ்சை கருந்தட்டான்குடி. சாமி நாதன்: இராசம்மாள். உமாகேசுவர் உயர்நிலைப்பள்ளி, இறுதி வகுப்பு 55; கரந்தைப்புலவர் கல்லூரி மாணவர் 60. அண்ணாமலை பி. ஓ. எல் 62, பி. எட் 65, எம். ஏ. 74ல். கழக உயர் நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியர் 62 - 66, கரந்தைப் புலவர் கல்லூரி விரிவுரையாளர் 66 - 68; அரசு கலைக்கல்லூரிகளில் 68 முதல் பணியாற்றி இதுபோது குடந்தைக்கல்லூரியில் கோலோச்சுகிறார். தலைசிறந்த ஆசான், இலக்கணத்தில் மன்னன். '20 ஆம். குறள் உரைகள்' டாக்டர் பட்டத் தலைப்பு. நூல் 'சிலம்பும் சிந்தனையும்'.

இவரின் இலக்கிய இலக்கண ஆசான்கள் B. இராமநாதன், ச. பாலசுந்தரம்; பொதுவாழ்வுக்கு அடிகளார், சைவத்துக்கு முரு. பழ. இரத்தினம் செட்டியார். கூர்த்த மதி நலமும் சீர்த்த செந்நா நலமும் மிக்க இவர், தஞ்சை மாவட்டத்தின் தலைசிறந்த பேச்சாளர், பட்டி மன்றம் வழக்காடு மன்றம் மேடைப் பொழிவு மூன்றிலும் முதன்மையுடன் முறுவலிப்பவர். பேச்சால் அவையினைப் பிணிக்கும் கலை கைவந்தவர். வழக்காடு பட்டிமன்ற வல்லாளர். எதனை எப்படி எப்போது செப்பி அவையினைச் சுண்டி இழுக்கலாம் என்ற விரகு அறிந்தவர். **முகவரி**: 28, திருவள்ளுவர் நகர், டாக்டர் மூர்த்தி சாலை, கும்பகோணம்.

**கு. வெ. பாலசுப்பிரமணியன்:** *6. 4. 1943.* கும்பகோணம் நாச்சியார் கோயில். வேங்கடாசலம்: செல்லம்மாள். எஸ். எஸ். எல். சி 59, குடந்தைக் கல்லூரி இளங்கலை தமிழ் 64, ப. சு. மணியம் அவர்களின் பிரிய மாணவர்; காரைக்குடி அழகப்பா முதுகலை 66; வ. சுப. மா. மாணவர். எம். பில். 'சங்க இலக்கியத்தில் வாகை' 79; பி. எச். டி. 'சங்க இலக்கியத்தில் புறப்பொருள்' 85; இதுபோது முதுமுனைவர் (D. Litt) ஆய்வு: தலைப்பு 'தமிழ் இலக்கியத்தில் புறம்'. 66 - 68 பூண்டி புஷ்பம், 68 - 70 வேலூர் ஊரிசு, பின் அரசுக் கல்லூரிப் பணியேற்று இதுபோது புதுக்கோட்டை மன்னர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர். ஏடது கைவிடாத ஏந்தல். சிந்திக்கும் சீர்மையர்.

பாடம் நடாத்துவதில் படுசூரர், அதற்கெனப் பிறந்தவர், அதனைக் கலையாகக் கருதி படித்துச் சமைத்து அளிக்கும் பெற்றியர். நல்ல கவிஞர், நூல் 'நெருப்புப் பொறிகள்'. சொற்பொழிவு பட்டி - வழக்காடு மன்றம் மூன்றிலும் வல்லவர். மதி நுட்பத்தால் மயக்கிவிடுவார், கருத்துவளத்தால் கவர்ந்திழுப்பார். முத்தன்ன கையெழுத்து கொண்ட இவர் **முகவரி:** திருவள்ளுவர் நகர், டாக்டர் மூர்த்தி சாலை, கும்பகோணம்.

**ஆ. செகநாதன்:** *15. 7. 1946.* ஆறுமுகம்: துளசி. சேலம் வேலூர் கண்டர் கல்லூரியில் இளங்கலை பயின்று சென்னைப் பச்சையப்பனில் முதுகலை முடித்து, பூம்புகார் பண்பாட்டுக் கல்லூரியில் 69 - 84 சிறக்கப்பணியாற்றி, 85 முதல் திருச்சி தேசியக் கல்லூரியில் பணியபுரிபவர். அழுத்தமான கருத்துக்களையும் ஆணித்தரமான வாதங்களையும் வைத்து வழக்காடுவதில் வல்லவர்; பட்டிமன்றத்துக்கு உணர்ச்சியூட்டும் பாங்கும் அறிந்தவர். பயிலும் போதே பாளையங்கோட்டை தனித்தமிழ் இலக்கியமன்றின் கட்டுரைப் போட்டியில் ஈராண்டுகள் வெற்றி பெற்றவர்; தங்கப்பதக்கம் ஏந்தியவர். நூல்கள்: இருபதாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வளர்ச்சி, வள்ளுவச் செல்வம், கண்ணதாசன் கவிதைகள் ஒரு திறனாய்வு, கண்ணதாசன் ஒரு கண்ணோட்டம், கண்ணதாசன் காவியங்கள்; புதுக்கவிதை ஒரு திறனாய்வு, புதிய கவிதைகளில் மார்க்சீயம், பாரதி என்னும் புயல்; உயிர்ப்புறா (கவிதை), நூறு பூக்கள் (தொகுப்பு), எம். பில். முடித்து, டாக்டர் பட்டமும் பெற இருக்கிறார். போன்றன. காலாண்டு ஆய்விதழ் ஒன்றும் முழக்கம் நடத்தியவர். ஊக்கம் மிக்க நம்பிக்கைக்குரிய நற்றமிழ் ஊற்றத்தர். **முகவரி:** 16 அ. ராமகிருஷ்ண நகர், திருச்சி-20.

## 77. கருத்தரங்கம் (Seminar)

ஓர் இலக்கியம் பற்றிய கருத்துக்களைப் பலர் அரங்கின் முன் வைத்தல்; சிலர் சில இலக்கியம் பற்றித் தத்தம் கருத்துக் களை விளக்குதல். இலக்கிய, விவசாய, குடும்பநல, மாணவர் கருத்தரங்குகள் எனப் பல்வகையின. இஃது இடம் பெறாத நிகழ்ச்சிகளே இல்லை எனலாம்.

ஒருவர் தம் கருத்துக்களை எடுத்தோதியதும், அது பற்றி அவையோர் அறியாவினா, ஐயவினா எழுப்புவர். அத்துணைக் கும் கருத்தாளர் பதிலிறுக்கவேணும், விளக்கியுரைக்க வேண் டும். இதனால் கருத்திற்குத் தெளிவு பிறக்கும், தவறு எனின் திருத்திக்கொள்ளப் பெறும்.

சொற்பொழிவு எனின் ஒருமுக வார்ப்பே. கருத்தரங்கி னால், கிளத்துவோர்—கேட்போர் பரிமாற்றம்—பரிவர்த் தனை நிகழ்கிறது. கருத்து உரைகல், உரசல் அலசல்கட்கு, அப்போதைக்கப்போது எதிர்ப்பு இசைவுகட்கு வாய்ப்பு நேர் கிறது. இதனால் ஒருவர் கருத்தின் வன்மை மென்மை, வலிவும் மெலிவும் உடனுக்குடன் காண முடிகிறது. இதனால் அவையோரின் ஈடுபாடு (involvement), கலத்தலுக்கு வாய்ப் புண்டாகிறது.

ஒரு திட்டத்தைச் செயற்படுத்து முன்பு, ஒரு கருத்தை உலாவிடுதற்கு முன்னம் செப்பம் செய்துகொள்ள முடிகிறது. 'நாட்டைக் கெடுத்த நால்வர்' (சங்கராச்சாரி, அருணகிரி, சேக்கிழார், கம்பர்) எனப் புதுமையான கருத்தரங்கும் நடை பெறுகிறது. இதனால் இதற்கு வரவேற்பும் விளைவும் மிகுதி.

## 78. ஆய்வரங்கம்

தனி நூல், கவிஞன், படைப்பு பற்றி ஆராய்வது. ஒருவர் தொடங்க அதனைத் தொடர்ந்து பலர் தம் கருத்துக்களைத் தருதலும், கலந்துரையாடி முடிவெடுத்தலுமாக அமைவது. ஒருவருக்குத் தோன்றாதது இன்னொருவருக்குத் தோன்றலாம். கருத்துக்களின் வன்மை மென்மைகள் நேருக்குநேர் உடனுக் குடன் ஆராயப் பெறுவதால், முடிவெடுக்க ஏதுவாகிறது. கூட்டு முயற்சியால் நற்பயன் விளைக்கிறது; சிக்கல்கள் தீர்கின்றன; சர்ச்சைகள் முடிவுக்கு வருகின்றன. தனியொருவர்

தனது வசதிக்கும் வாய்ப்புக்கும் ஏற்ப ஒருபால் கோடியும் ஒரு சார்பாக ஊடியும் எடுக்கும் தவறான எண்ணங்கள் - தப்பான கருத்துக்கள் பரவி பாழ்படுத்தும் நிலை ஏற்படாது, சிலர் அல்லது பலரின் பல்வேறு கருத்துக்களின் கலப்பாலும் மோதல்களாலும், நல்லதும் கெட்டதும் நவிலப்பட்டு இறுதியில் நல்ல முடிவுகள் எடுக்க இது மிகவும் உதவுகிறது.

## 79. சிந்தனை மேடை

அஃகி அகன்ற அறிவுடைய சிந்திக்கும் திறனிகள் ஏழு எட்டு பேர்கள் மேடையில் அமர, தலைவர் ஒருவர் ஏதேனும் ஒரு பயனான பொருள் பற்றித் தம் கருத்துககளைக் கூறி, அது பற்றிய உங்கள் சிந்தனை என்ன? இயம்புங்கள் என அழைக்க, அவர்கள் கூறுவார். ஒருவர் விட்ட இடத்தில் இன்னொருவர் தொட்டுத் தொடர அழைக்கப் பெறுவார். இப்படித் தொடர் சங்கிலி போல மாறிமாறிச் சிந்தித்துச் செப்புவர். முன்கூட்டியே ஆய்வரங்கம்போலே திட்டவட்டமான கருத்துக்கள் ஒருவர் கூறி அமரார். சுடச் சுட ஒவ்வொருவர் சிந்திப்புக்கும் சந்திப்பு நிகழும். கலந்துரையாடல் எப்படிப் போகும் என யாருக்கும் தெரியாது. தலைவர் தடம் புரளாது அதனைக் கொண்டு செலுத்துவார். கேட்டுக் கொண்டிருக்கும் அவையோர் உடனுக்குடன் தங்கள் சிந்தனைக் கதிர்களையும் செப்பலாம். இப்படி மாறிமாறிச் சிந்தனைச் சுடர்கள் ஒளி வீச—மின்ன எண்ணங்கள் பல தோன்றத் தோன்றப் பகரப்படும். தலைவர் தூண்டிவிடுவார், கிளறிக் கொடுப்பார்—சிந்தனை நெருப்பினை ஊதிவிடுவார். கேட்பதற்கும் ஏன் பார்ப்பதற்குக் கூட ஒரு கிளுகிளுப்பும் கலகலப்பும் உண்டாம். இறுதியில் தலைவர் ஒருங்கிணைப்பாளராகத் தொகுத்துத் தருவார். தவத்திரு அடிகளார் இதில் தனிப்பெருந் தலைவர்.

## 80. இவர்கள் சந்தித்தால்...!

பண்டைச் சான்றோர்களையும் அண்மை ஆன்றோரையும் மீண்டும் உயிர்ப்பித்துச் சந்திக்கச் செய்து பேசவிடின் என்ன பேசுவர், எப்படியெல்லாம் உரையாடக்கூடும், எதுபற்றியெல்லாம் ஆதங்கமுறுவர் அகமகிழ்வார் எனக் காணவும்-கேட்கவும் செய்வது. அவர்கள் வாழ்ந்தபோது சந்திக்க

முடியாத வெவ்வேறு நூற்றாண்டைய விற்பன்னர்களைக் கூட ஒரே மேடையில் கண்டுகொள்ள—அதனை நம்மையெல்லாம் காணச் செய்யும் கண்கொள்ளாக் காட்சி! கற்பனைக் கிளர்ச்சியும் அறிவுத் தூண்டுதலுமாக அமையும் மாட்சி!

பண்டு தொண்டு செய்து மறைந்தவர்களை மீண்டும் உயிர்ப்பித்து இந் நாளைய மாறான சூழலில், அவர்கள் இன்றைய நிலைகெட்ட நிலை கண்டு நெஞ்சு பொறுக்காது பொருமுவதும், தம் காலத்தைவிட முன்னேறிய நிலை கண்டு நெஞ்சம் மகிழ்வதும் காட்டும்.

சான்றாக **வள்ளுவர் வருவார்**; இளங்கோ கம்பர் சேக்கிழார் பாரதி போல்வார் கூடுவர், வள்ளுவரை வரவேற்றுப் போற்றுவர்-வழிபடுவர். வள்ளுவர் தம் கருத்துக்கள் எப்படியெல்லாம் வளர்ந்தன-வாழ்வு பெறுகின்றன; எங்ஙனமெல்லாம் தவறாகக் கொள்ளப்பட்டன, எவ்வாறெல்லாம் தள்ளப்பட்டுள்ளன என அவரையே நேரில் அறியச் செய்யும் உத்தி இது. தம் கருத்து எவ்வகையில் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டுத் தப்பான முறையில் பின்பற்றப்படுகின்றன எனக் கண்டு கொள்வார். தாம் எண்ணியது ஒன்று, உரையாசிரியர்கள் தவறுபட எடுத்துக்கொண்டது வேறாக மாறாக இருப்பதனை அவர் வாயாலேயே நாம் தெளிய முடிகிறது.

பிற புலவர்கள் வள்ளுவத்தை எப்படியெல்லாம் போற்றியுள்ளோம்—எடுத்தாண்டுள்ளோம் என அவரிடமே கழறுவர். அவரின் ஒரு குறளுக்கு இவர்கள் பெரு விளக்கமாகக் கதையும் காப்பியமும் செய்துளர் என அவரிடமே இயம்புவர். அவர்கட்கு நன்றி தெரிவித்தும், தவறு இருப்பின் திருத்தமும் தருவார்.

மற்றொரு சான்றாக **பாரதியார் தோன்றுவார்**; கவிமணி, நாமக்கல்லார், பாரதிதாசன், கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் போன்ற மறைந்த கவிஞர்கள் மீண்டும் உரு எடுப்பர். இவர்களின் உரையாடல்கள் உணர்வூட்டும். தாம் விடுதலைக்கு முன் பிறந்து பாட்டுத் திறத்தாலே வையத்தைப்—பாலித்திடச் செய்து மறைந்ததும், தாம் கனவு கண்ட விடுதலை நாட்டில் தமிழர்—இந்தியர் நிலை கண்டு நெகிழ்வதும் மகிழ்வதும் புழுங்குவதும் அவர் வாய்மொழியாலேயே கேட்போம். இவர்கள் நினைத்ததும் நாம் நடந்ததும்; இவர்கள் உள்ளமும் நாம் உணர்ந்ததும் காண முடிகிறது.

இவர்களாக மேடையில் தோன்றுவோர், இவர்கள் படைப்புகளில் இண்டு இடுக்கெலாம் துல்லியமாக அறிந்தோரும், அதே சமயம் தோன்றும் தலைமை—மையப் பாத்திரத்தின் நூல்களை நுண்ணிதின் உணர்ந்தோராகவும் இருக்க வேணும். நிரம்பிய நூலின்றிக் கோட்டிக் கொள்ள முடியாது. ஏனெனில் அந்த அந்த நூலாசிரியர்கள் நேரே உள்ளனர்; தவறாகக் கூறின் அவர்கள் கேலி செய்வர்—சாடிவிடுவர்.

இலக்கிய உலகில், கவிஞருலகில் (பூங்காவில் பொருட்காட்சியில் உலா வருவது போலே) ஓர் இலக்கியப் பயணம் செய்யச் செய்வது இம்முறை நிகழ்ச்சி. தோற்றத்தில் ஆ. வ. ராசகோபாலரும் சத்திய சீலரும், நமச்சிவாயமாகவும் அமையினும், அதனை மறந்து வள்ளுவர் இளங்கோ கம்பர் காலத்திற்கு ஒரே சமயத்தில் நம்மை இட்டுச் செல்லும். கண்டிராத கவிஞர்களையும் சான்றோர்களையும் காணவும், கற்றறிந்திலமாயினும் கேட்கவும் முடிகிறது.

இப்படிக் கண்ணுக்கும் செவிக்கும்—அறிவுக்கும் உணர்வுக்கும் ஒருங்கே அருவிருந்து பயந்து, அந்தக் காலக் கட்டத்துக்கே நம்மை அழைத்துச் சென்று அளப்பரிய இன்பம் பயக்கிறது. படித்தறியா பாமரர்களையும் காட்சியாலும் கருத்து மாட்சியாலும் இலக்கிய அறிவு பெறச் செய்கிறது, கவிதை உணர்வு கொள்ள வைக்கிறது. சிற்சிலபோது சிறுவர்களை ஒப்பனை செய்து அவரவர்களாகவே வேடம் தரித்து மேடையில் காணச் செய்கின்றபோது கிளர்ச்சியும் உணர்ச்சியும் பெறுகிறோம்!

## 81. இலக்கிய இயக்கங்கள் (Literary Movements)

படைப்பாளிகளின் படைப்பார்வம், அவற்றை அணுகி அனுபவிப்போரின் பார்வை இவற்றுக்கேற்ப இலக்கிய உலகில் இயக்கங்கள் மலர்கின்றன. கரு, உரு பற்றிய கருத்துக்கள் இலக்கியவாதியால் உருவாகி, அவற்றின் தரம் திறத்திற்கேற்ப பின் வந்தோரால் பின்பற்றப்படும்போது (பழக்கம் வழக்கமாவது போல), சில வரையறைகளைப் பெற்று ஓர் இயக்கமாகவே வளர்ந்து விடுகிறது. இது பின்பற்றுவோரையும் போற்றுவோரையும் பொருத்து வலுப்பெறுகிறது. கவிஞர் கலைஞர் தம் இயல்பான போக்கும் நோக்கும் இலக்கிய உலகில் பெறும் பெருமைக்கேற்ப தனியொரு கருத்து பலரும் ஏத்தும் நிலைபெறுவதால் பொதுமை பெற்று விடுகிறது.

இரு நூற்றாண்டுகளாக மேலைநாடுகளில் தோன்றி வளர்ந்து தேட்டைபோட்டுத் தமிழிலக்கிய உலகில் பாட்டை களாக அமைந்து விட்டன. குறிக்கோளியல் (Idealism), நடப்பியல் (Realism), இயற்கையியல் (Naturalism), புனைவியல் (Romanticism), முன்மையியல் (Classicism), பொருள் முதலியல் (Materialism), முருகியல் (Aestheticism), வடிவவியல் (Formalism), பயன்பாட்டியல் (Pragmatism), படிமவியல் (Imagism), குறியீட்டியல் (Symbolism), வெளிப்பாட்டியல் (Expressionism) இருப்பியல் (Existentialism), மீமெய்ம்மையியல் (Surrealism), எண்ணவியல் (Impressionism), பிராய்டிசம் (Freudism) போன்ற இயக்கங்கள் பல்கியுள.

ஒருவகையில் படைப்பிலக்கியப் போக்காகவும், மற்றொரு வகையில் திறனாய்வுப் பாங்காகவும் இரு வகையில் அமைகின் றன. ஒரு காசின் தலைப்பக்கமாகவும், பூப் பகுதியாகவும், படைப்பின் முன்பும் பின்பும் இரு நிலையில் பயன்படுகின்றன. இதனை அறிவதால், படைப்பின் படிநிலையுணரவும், படைப்பின் திறன் தெளியவும் கூடும். இத்தகு இன்றியமையா இயக்கம் நயனும் பயனும் தந்து இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் வகிக்கின்றது. புதுக்கவிதையின் புறப்பாடு, இந்த இயக்கங்களை நிலைபெறக் கொண்டே நடைபெறுகிறது என்பது நினைவு கொள்ளத்தக்கது.

**தா. ஏ. ஞானமூர்த்தி:** அவர்கள் தம் 'இலக்கியத் திறனாய்வு, நூலின் இறுதியில் இந்த இயக்கம் பற்றி ஓரளவு விளக்கி யுள்ளார். டாக்டர் **ந. பிச்சமுத்து** 'இலக்கிய இயக்கங்கள்' என்றே தனி நூல் (80இல்) தந்தார். டாக்டர் **சு. பாலச்சந்திரன்** 'இலக்கிய இயக்கங்களும் திறனாய்வும்' என இணைத்துப் படைத்தார்.

சர்ரீயலிசம் என **பாலாவும்**, சிம்பாலிசம் என **அகரமுதல்வனும்** எக்ஸிஸ்டென்சியலிசம் என **எஸ் வி. ராஜதுரையும்** தனித்தனியே விரிவாக ஆராய்ந்து தமிழிலக்கியத்தில் வைத்துழைத்துள்ளனர்.

ஆங்கிலத்தில் இவை பற்றித் தனித்தனியே சிறு நூல்கள், கருத்தும் சான்றுமாகப் படைத்துள்ளனர். அவைபோல தமிழ் இலக்கிய வயல்களில் இவ்வியக்க நீர் பாய்ச்சி, பொருந்த நூல் படைப்பின் சிறப்பான பணியாக அமையும். தக்கவர்கள் தகுந்த முறையில் இத் துறையில் இறங்கி ஊன்றி உணர்ந்து நூற்கள் படைப்பின், தமிழன்னைக்கு அணிகலன்கள் பூட்டியோராவர்.

## 82. ஓதுவார்களின் ஒண்டீந்தமிழ்

பழந்தமிழிசையை இன்றுவரைப் பாதுகாத்துப் பேணி வருவோர் ஓதுவா மூர்த்திகளே; பண்டைப் பண்களை முறையோடு பாடிக்காத்து வழிவழி கொணர்ந்து தருவோர் இவர்களே. இவர்களின்றேல் பண்டை இசையும் மறைந்து போயிருக்கும்; பண்முறையும் மறந்து போயிருக்கும். இப்படி மறவாது மறையாது காத்து வந்து தமிழரிடம் தற்காலம் வரை தந்து வந்த இவர்கட்கு நாம் என்றும் கடப்பாடுடையோம்.

இன்று பிரபல்யமாக இருக்கும் கர்நாடக சங்கீதத்தின் அடிப்படை பண்களே என நிறுவியவர் பேரா. சாம்பமூர்த்தி. தேவாரப் பண்ணிசையே, இன்றைய கருநாடக இசையின் அடித்தளம் என்கிறார் பேரா எஸ். ராமநாதன். அத்தகு இசையை வேற்றவர் படையெடுப்பு, வடமொழித்தாக்கம் இவற்றினூடே காத்துக் கொடுத்தவர்கள் தேவார இசைக் கலைஞர்களே.

ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் - தங்களையே தேய்த்துத் தமிழிசை வளர்க்கும் இவர்களின் சமுதாய நிலை பொருளியல் நிலை போற்றுமாறில்லை. முன்பிருந்த மதிப்பும் துதிப்பும் இன்றில்லை! திருமுறை வாணர்களை மதித்துப் போற்றி அரசு ஊழியர்களைப்போல் அனைத்து உரிமை வசதி தந்து பேணிப் புரந்திட வேண்டும். அப்போதுதான், வீறுடன் விளங்கி வண்டமிழ் பாடல் பாடுமுறையும் பண்வகையும் பாங்குற வளர்ப்பர். மரம் நன்றாயிருந்தாலன்றோ பூக்கும் காய்க்கும். இசைகாக்கும் இவர்களை நாம் காக்க வேண்டமா? அறநிலையத்துறை வழி அரசு ஆவன உடன் செய்து உய்விக்க வேண்டும்! நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஏந்தல்கள் இவர்கள்.

தருமை திருவாவடுதுறை திருப்பனந்தாள் மடங்களில் நாளும் வழிபாட்டின் போழ்து இசைவாணர் பலர் மாறி மாறிப் பாடும்போது கண்ணுக்கும் காதுக்கும் விருந்தாகும். 87 மார்ச்சு சிதம்பரம் கோயிற் கும்பாபிசேடத்தின் போழ்து ஓதுவார்களும் ஒப்ப தீட்சிதர்களுடன் அம்பலத்தே இருந்து பாடும் உரிமை அளிக்கப்பெற்றது தனிச்சிறப்பு.

ஓதுவார்கள் சந்நிதியில் பாடும்போது ஆண்டவனுக்கு அர்ப்பணம் என்ற ஆகிருதியுடனும், மன்றில் பாடும்போது

பக்திப் பரவசத்துடன், எந்தத் தெய்வத்தைப் பற்றியதோ அத்தெய்வ சிந்தனையோடு சுறுசுறுப்புடன் ஒன்றியும் உயிர்ப்புடன் பாடவேணும்; அப்போதுதான் கேட்போர் மனம் கசிவர். பாடும்போது சொல்-பொருள்-பக்தி மூன்றும் முந்த வேண்டும் பண்மாறாது உள்ளத்தையே அழகுபடுத்திப் பாட வேண்டும் அப்போதுதான் உள்ளம் அள்ளும்; நெஞ்சம் நெக்குருகும் இப்படிப்பட்ட தம்மை மறந்து நம்மை இன்புறுத்தும் தேவார இசைக் கலைஞர்களில் சிலரைக் கருதுவோம்:

**தி. சா. சுந்தரமூர்த்தி ஓதுவார்** : 8-9-1852—4-6-1942. நெல்லை. தமிழிசை வாணர், தமிழிசைமணி, தமிழிசை மன்னர் என்றெல்லாம் ஏத்தப் பட்டவர். இசையாய் இன்றமிழாய் இலங்கியவர். 81இல் சுந்தரமூர்த்திகள் நினைவு மலர் வெளியிடப் பெற்றது. இவர் பெயரில் நினைவு மன்றம் நிலவுகிறது நெல்லையில்; ஆண்டுதோறும் இசைவிழாவும் நடைபெறுகிறது. இவர் மகன் தி. சு. செந்தில் ஆறுமுகம். பெயரன் செ. மூர்த்தி. **முகவரி**: 66. பசுபதி முதலியார் தெரு, உடுமலைப்பேட்டை-642126.

**சைதை நடராசன்** : 1924. தனகோடி : குப்பம்மாள். 12 வயது முதல் நாதசுரக் கலைஞர் முனுசாமி பண்டிதர், காஞ்சிபுரம் விநாயக முதலியார், நெல்லை சுந்தரமூர்த்தி ஓதுவாரிடம் இசை முறையாகப் பயிலல். பின் தேவார இசை கற்றல். கதை. கட்டுரை, கவிதை மூன்றிலும் ஈடுபாடு. கதாகாலட்சேபம், வில்லுப்பாட்டு, மேடைநாடகத்திலும் முனைந்தவர். கதிர்காமம் சென்று மீண்டுளார். 26-1-1979இல் ‘கலைமாமணி’, ‘திருநெறிச் செல்வர்’ பட்டம் பெற்றுளார்.

**தருமபுரம் பி. சுவாமிநாதன்** : தருமபுர சென்னைப் பிரசார நிலையத்தில் நீண்ட ஆண்டுகளாக தேவார இசைப்பணி ஆற்றிப் புகழ் பூத்தவர். தாம் பயின்றதோடு தம் பாணியாக சில வகுத்துக்கொண்டு தனித்துத் திகழ்கிறார். தேவார இசையினைத் தெளிவுபடுத்தி பண்முறையினை எளிமைப் படுத்தி, பாமரரும் பைந்தமிழ் இசையில் ஈர்ப்புற்று குழுமுமாறு தேவார இசைக் கச்சேரிகள் நிகழ்த்தி சாதனை புரிந்துள்ளார்; தொழிலில் சக்கைபோடு போட்டு வருகிறார். 75இல் ‘கலைமாமணி’ விருது பெற்றவர். பண்ணாராய்ச்சி மாநாடுகளில் கலந்து கருத்துரை வழங்கும் வளமையர். **முகவரி**: வேளாளர் தெரு, மலையம்பாக்கம், நாசரெத் பேட்டை (வழி) பூவிருந்த வல்லி சென்னை-54

**லால்குடி சுவாமிநாதன்:** 27-11-1928. முருகையயன் செட்டியார்: ஜானகி அம்மாள். ஆரம்பப்பள்ளி 5ஆம் வகுப்பு. பழனி சென்று 7 வயதில் தேவார இசையினை சம்பந்தம் பிள்ளையிடமும், கர்நாடக இசையை மகாதேவய்யரிடமும் 10 ஆண்டுகள் பயிலல். 16 வயதில் 20 ரூ ஊதியத்தில் தண்டாயுதபாணி சுவாமி ஆலயத்தில் ஓதுவார். போதிய ஆதரவின்மையால் சொந்த ஊர் வந்து சவுளி வணிகம் செய்து ஏழையாதல். 59-62 அண்ணாமலைப் பல்கலைக் கழக இசைக் கல்லூரியில் பயின்று 'சங்கீத பூஷணம்' பெறல் திருமுருகக் கிருபானந்த வாரியார் துணையால் மயிலை கபாலீச்சுரத்தில் ஓதுவாரதல். 63 தொடங்கி 25 ஆண்டுகளாகப் பணியாற்றல். 81இல் 'கலைமாமணி' விருதும், 'இறையருட் பாடகர்' என்ற பட்டமும் பெற்றவர். செயற்றிறமும் இளமை மாறாத இனிய தோற்றமும், வளமார் கணீர் குரலும் கொண்டவர்.

**சீர்காழி திருஞான சம்பந்தன்:** 1939 சித்திரை 10. விருதாசலம் திருமுறை இசைவாணர் சுவாமிநாத முதலியார்: மீனாட்சி அண்ணி. திருவிடைமருதூர் நடராஜ தேசிகரிடம் 4 ஆண்டுகள் தேவாரம் பயின்று, 48இல் தருமையாதீனத் தேவாரப் பாட சாலையில் 5 ஆண்டுகள் கற்று 'தேவார இசை மணி' பட்டம் பெறல். குருநாதர் வேலாயுத முதலியார். 53 முதல் திருபுவனம் திருக்கோயிலிலும், 57 முதல் சீர்காழி தேவஸ்தானத்திலும் ஓதுவாராதல்.

சென்னை, தில்லி, கல்கத்தா தமிழ்ச் சங்கங்களிலும் தேவார குழுவுடன் பாடியுள்ளார். பேடைக் கச்சேரி பல புரிந்துளார். காஞ்சி காமகோடி 'இன்னிசை மாமணி', சுவாமி சிவானந்தர் 'சங்கீர்த்தனா ரெத்தினம்' பட்டம் சூட்டியுளர். 35 இசைத் தட்டுகளும், எல்.பி. பதிவுகளும் புரிந்துளார். 62,81இல் இலங்கை சென்று கொழும்பு விவேகானந்த சபைகளில் பாடியுள்ளார். 86இல் 'திருமுறைக் கலாநிதி' பட்டம் தருமையாதீனம் வழங்கிற்று. 4 மணி நேரக் கச்சேரி செய்கிறார்; பக்க வாத்தியங்களுடன் தேவார திருவாசக முருகன் அம்மைப்பாடல்கள் பாடிப் பரவசப்படுத்துகிறார். 300க்கும் மேற்பட்ட குழந்தைகளைப் பயிற்றுவித்துள்ளார்.

**திருப்பனந்தாள் சொ. முத்துக் கந்தசாமி:** தருமையாதீனத் திருமுறைக் கல்லூரியில் 5 ஆண்டுகள் பயின்றவர். காலையில் விளக்கெண்ணெய் ஒரு தேக்கரண்டி உண்டு, 'அசுர சாதகம்'

பண்ணியவர். காலையில் பாடற் பொருள் அறிதல், மாலையில் இசையோடு பாடிப் பழக்கம் பண்ணல். 2000 பாடல்கள் தெரியும். சிவபுராணத்தை 20 நிமிட ராகமாலிகையாகப் பாடியுள்ளார். 27 முறை இலங்கை சென்று தேவாரம் பாடி மகிழ்வித்து மீண்டவர். 85இல் 'கலைமாமணி' விருது. இது போது மலைக்கோட்டை மௌன மடத்தில் பணிபுரிகிறார்.

காஞ்சிபுரம் விநாயக முதலியார், சிதம்பரம் கனகசபை ஓதுவார்; திருவாவடுதுறை D. சோமசுந்தர தேசிகர், விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்; தருமபுரம் வேலாயுத ஓதுவார், மயிலை பொன்வேலு ஓதுவார், கபாலி ஓதுவார், இ.மு. வேதாசலம்; திருச்செந்தூர் நமச்சிவாய ஓதுவார்; திருவிடைமருதூர் சம்பந்த தேசிகர், குமார வயலூர் திருஞான சம்பந்த தேசிகர், குழிபிறை சோமசுந்தர தேசிகர்; வடபழநி என். ஆறுமுக ஓதுவார், குமாரசாமி தேசிகர் போன்றார் குறிப்பிடத் தக்கோர்.

மறைந்தோரில் திருக்களர் சுந்தரேச தேசிகர், நெல்லை சுந்தர ஓதுவார், தருமை சாமி ஐயா தேசிகர், எம்.எம். தண்டபாணி தேசிகர் போன்றார் போற்றத் தகுந்தோர்.

தருமை ஆதீனம் திருமுலைப்பால் திருவிழாவில் '66 தொடங்கி 'திருமுறைக் கலாநிதி' பட்டம் வழங்கி வருகிறது. 1000 வெண்பொற்காசு வழங்குகிறது. ஆண்டுவாரியாக இது வரை பெருமை பெற்றோர்: தண்டபாணி தேசிகர், ஆச்சாள் புரம் எம். சுப்பிரமணிய முதலியார், காஞ்சிபுரம் சாரங்கபாணி செட்டியார், ஆச்சாள்புரம் காசிநாத தேசிகர்; தருமை ஆர். வேலாயுத ஓதுவார், சு. சம்பந்த ஓதுவார்; திருக்களர் தி. சுப்பைய தேசிகர், தேவகோட்டை பெ. தியாகராசப் பிள்ளை, திருப்பனந்தாள் எம். சுப்பிரமணிய முதலியார், குடந்தை ப. சுந்தரேசன், திருப்பனந்தாள் ஆர். கணேசம் பிள்ளை, திருச்சி தி. சுப்பிரமணிய தேசிகர், எம் ஏ, வேலூர், க. சொக்கலிங்க ஓதுவார், திருவாவடுதுறை டி எம். விசுவலிங்கம், பாகனேரி ஆர். சம்பந்தம் பிள்ளை, தருமபுரம் எஸ். திருநாவுக்கரசு தேசிகர், மதுரை வ. ஈஸ்வர ஓதுவார், திருவாரூர் மு. திருஞான சம்பந்த தேசிகர், புதுக்கோட்டை எஸ். சுப்பிரமணிய தேசிகர், சிக்கல் வை. கல்யாண சுந்தர தேசிகர், சீகாழி எஸ். திருஞான சம்பந்தன். ஓதுவார்தம் பெருமை ஓதவும் பெறுமோ?

## 83. சைவத் தமிழ்

அண்மைக் காலமாக சைவ சமய மேம்பாட்டில் அக்கறையும் ஆர்வமும் பெருகி வருகிறது. ஒதுங்கி வாழ்ந்த சைவ மடங்களும் சமுதாய சிந்தையோடு மக்களை நெருங்கி வந்து பணியாற்றுகின்றன. 'இந்து முன்னணி' எழுந்து சமய மரபு பேணிக் காக்கிறது. திருவாவடுதுறை ஆதீனம் திருமுறை மாநாடுகள் ஐந்தினைத் தொடர்ந்து நடத்தியது. தருமையாதீனம் அனைத்துலக சைவ சித்தாந்த முதல் கரத்தரங்கினைப் பாரிய அளவில் எடுத்தது. ஆதீனத் தலைவர்கள் எல்லாம் இணைந்து மாபெரும் ஊர்வலம் நடாத்தி ஒருமையுணர்வு காட்டினர். தெய்வீகப் பேரவை தோன்றி சைவத்தமிழ் தழைக்கச் செய்தது. இலங்கையில் 82இல் அனைத்துலக இந்து சமய மாநாடு நடந்தது.

அங்கங்கு மதமாற்றங்களும் ஈர்ப்புகளும் இருப்பதும், திராவிடர் கழகம் போன்றன கடவுள் மறுப்பு போதிப்பதுமான சூழலில், மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி, மூகாம்பிகை ஆட்சி மாட்சி பெருகுகின்றன. கே.எஸ். கோபாலகிருட்டிணன், வேல்மணி, ஏ.பி. நாகராசன் போன்றார் இறையுணர்வு தூண்டும் திரைப்படங்களை எடுத்தனர். மாணவரிடத்தும் இளைஞரிடத்தும் இறையுணர்வு மேலிடுகின்றது. அமைச்சர் (சௌந்தரராஜன்)களும் ஆசிரியர்களும்கூட சைவ விரிவுரைகள் புரிய முன்வந்துளர்.

இப்படி விழிப்பும் எழுச்சியும் ஏற்பட்டுச் சைவத்தமிழ் சிறக்கும் போக்கு பரவி வருகிறது. தருமையும் திருவாவடுதுறையும் முறையே ஆண்டுதோறும் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும், மகரத் தலைநாள் குருபூசை விழாவும் பத்து நாட்கள் எடுக்கின்றன. ஞானசம்பந்தம், மெய்கண்டார், குமரகுருபரன்; கடவுள், ஞானபூமி, சக்தி என இதழ்களும் நடமாடுகின்றன. இந்த வகையில் சிறக்கப் பணியாற்றும் சிலரையும் நிகழ்வுகளையும் நினைவு கூர்வோம்:

**முதல் கருத்தரங்கம்:** தருமை ஆதீனமும் பாரதிதாசன் பல்கலைக் கழகமும் இணைந்து 11, 12, 13-3-1984இல் தருமபுரத்தில் நடத்தியது. வேதம் ஆகமம், புராணம் இதிகாசம் திருமுறை சித்தாந்த சாத்திரங்கள் ஆகிய ஆறு [illegible] வேதாகம தேவார பாராயண நாதசுர இசையோடு ஊர்வல

மாக வந்தன. திருமுறைப் பண்ணிசையரங்கு நடந்தது. ஆதீனச் சார்பில் காசிமடத்தலைவர் தமிழிலும், பல்கலைக் கழகச் சார்பில் துணைவேந்தர் மணிசுந்தரம் ஆங்கிலத்திலும் வரவேற்றனர். சந்நிதானம் சிறப்பு விருந்தினர்கட்குப் பொன்னாடை அணிவித்துக் கருத்தரங்கின் நோக்கம் விளக்கி அருளாசி வழங்கினார். குன்றங்குடி அடிகளார் தலைமை. கேரள ஆளுநர் மேதகு பா. இராமச்சந்திரன் வராததால் அவர் உரை படிக்கப்பெற்றது. மேனாள் குடியரசு துணைத்தலைவர் பி. டி. ஜாட்டி தொடங்கிவைத்தார். முதற் பேருரையை டாக்டர் வ. ஆ. தேவ சேனாபதி வழங்க, கவியோகி சுத்தானந்த பாரதி சிறப்புரை ஆற்றினார். விழாமலரைப் பொள்ளாச்சி மகாலிங்கமும், திருவருட் செய்தி 2ஆம் தொகுதியை பெங்களூர் எம். வி. ஜெயராமனும் வெளியிட்ட னர். இராமலிங்கத் தம்பிரான் நன்றி நவின்றார்.

மகாமண்டபத்தை அறநிலைய அமைச்சர் இராம வீரப்பனும், கலைக் காட்சியை ஆணையர் கு. ஆளுடைப் பிள்ளையும் திறந்து வைத்தனர். 10 அமர்வுகளில் அறிஞர்கள் ஆய்வுரை வழங்கினார். பொதுப் பேரவைகள் நடந்தன: கருத்தரங்கத் தனி அமர்வுகளும் நிகழ்ந்தன. உலக அளவில் சைவ சித்தாந்தம் பரவுதற்குரிய வழிமுறைகள் குரு முதல்வர் திருமுன் ஆய்வரங்கமாக இயன்றது. 14 தீர்மானங்கள் நிறை வேறின. நிறைவு விழா சட்டப் பேரவை தலைவர் க. இராசா ராம் தலைமை ஏற்று நிறைவுரை வழங்கி ஆய்வு மையத்தைத் தொடங்கி வைத்தார். சந்நிதானம் டாக்டர்கள் கே. லட்சுமணன், ஆர். பாலசுப்பிரமணியம், என். ஆர். பட், சொ. ந. கந்தசாமி, இரா. தண்டாயுதம்; திருமதியர் கொப் பேட் ரேயர், இரத்தினாமா நவரத்தினம், வி. கே. பாலசுந்தரம் எண்மருக்கும் ‘சைவ சித்தாந்தக் கலாநிதி’; ஏ. வி. ஜெயச் சந்திரனுக்கு ‘திருக்கோயில் கலாநிதி’ பட்டம் பொறித்த வெண் பொற் பதக்கங்கள் அணிவித்துப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். தமிழரசு பண்பாட்டுத் துறைச் செயலராகச் சிறந்த அவ்வை நடராசர்க்கும், நூல்வெளியீட்டுப் பணி சிறக்க ஆற்றிய டி என். இராமச்சந்திரனுக்கும் பொன்னாடை போர்த்திப் போற்றினார். முதல்வர் வி. சா, குருசாமி தேசிகர் நன்றி நவில, கணநாதர் வள்ளியம்மைத் திருமண பொம்மலாட்டத்துடன் விழா நிறைவுற்றது.

வெளியான நூல்கள்: சிவஞான போதச் சிற்றுரை விளக்கம், Saiva Siddantham, திருமூலர் கருதும் சைவ

சித்தாந்த முடிவுகள், சதமணிக்கோவை, திருமந்திரம் 4,5,6, தந்திரங்கள். கருத்தரங்க விவரம் அறிய ஞானசம்பந்தம் மலர் 48, இதழ் 8 (10-7-84) காண்க.

**இரண்டாம் கருத்தரங்கம்:** மலைநாட்டுத் தலைநகர் கோலாலம்பூரில் 14, 15, 16-11-1986ல். குன்றக்குடி அடிகளார் தொடங்கிவைத்தார். தொண்டை மண்டல, பேரூர் ஆதீனத் தலைவர்கள் ஆசியுரை. 6 அமர்வுகளில் ஆய்வுக்கட்டுரைகள் ஆங்கிலம் தமிழில் படிக்கப் பெற்றன. தமிழகத்தினின்று பேராளர்களும் பார்வையாளர்களும் போந்தனர். நிறைவுக்குப் பின் 5 நாள் சுற்றுலா சிங்கப்பூர் பாங்காக் போன்ற இடங்கட்குச் சென்று வந்தது.

நிறுவன சார்பில் கிரணாகமம் (ஞான பாதம்), சைவ சமயக் கல்வி II, பாசக் கொள்கைகள், Muthralachanam, விழா மலர் - ஐந்தும்; மலேயா நண்பர்கள் சைவ சித்தாந்தத்தில் மாயை, 36 தத்துவங்கள், உண்மை விளக்கமும் திருவருட் பயனும்; ஆங்கிலத்தில் சைவ சமயத்தின் திறன், ஆறுமுக நாவலரின் வினா விடை ஐந்தும் வெளியான நூல்கள்.

**வ. ஆ. தேவ சேனாபதி:** 25. 7. 1914. சென்னை, பச்சையப்பன் கல்லூரியில் தத்துவத் துறையில் பணியாற்றினார். 48ல் Saiva Siddhanta as expounded in Sivagnam Siddhiyar and its six Commentaries என ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றார். பின் சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத் துறையில் பேருரையாளர், பேராசிரியர் இயக்குநராக இலங்கி 1.6.83 - 31.5 84 வரை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் காஞ்சிபுர தத்துவ மைய இயக்குநராக இலங்கினார்.

தந்தவை: சைவசித்தாந்தத்தின் அடிப்படைகள், The Ethics of Tirukkural, of the Human bondage and Devine Grace. 73இல் அமெரிக்காவில் ஹார்ட் வர்டு போன்ற பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்தம் பற்றிய விரிவுரை நிகழ்த்தினார். 83ல் ஆஸ்டிரியாவில் கருத்தரங்க உரை நிகழ்த்தினார்; Modling near Vienna. 76ல் All India Philosophy Congress பொதுத் தலைவர். பிற நூல்கள் சுரைக்காய்ச் சாமியார் வரலாறு; மெய்யடியார்கள் (by Dr. T. M. P. Mahadevan). மிகவும் மென்மையும் இனிமையும் சான்றவர். **முகவரி:** 40, முத்தியாலு செட்டித் தெரு வேப்பேரி, சென்னை-7.

**ஜி. வஞ்சிர வேலு முதலியார்:** காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர். பயின்றது கணிதம். நாளடைவில் சைவ சித்தாந்தத்தில் சிறந்து விளங்கி மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தத்துவத்துறை தலைவராகத் திகழ்ந்தார். அறிவியல் கணித அறிவு, அறிவியல் நோக்கில் சைவ சித்தாந்தத்தை நுண்ணிதின் உணரச் செய்தது. தமிழக முழுதும் சித்தாத்தச் சொற்பொழிவுகள் ஆற்றிய தோடு, சித்தாந்த வகுப்புகளும் நடாத்தினார். தருமையாதீனப் புலவராகத் திகழ்ந்துவந்தார். இவரைப் போல் சித்தாந்த சாத்திரங்களை விரல் நுனியில் வைத்து தெள்ளிதின் துல்லிய மாக விளக்குவோர் மிகச் சிலரே. வணக்கத்துக்குரிய இவரின் **முகவரி:** காஞ்சிபுரம்.

**எஸ். அருணை வடிவேலு முதலியார்:** *13-7-1909*. காஞ்சிபுரம். சென்னைப் பல்கலைக்கழக வித்துவான். தருமபுரம் பல்கலைக் கல்லூரியில் பல்லாண்டுகள் பணியாற்றி அண்ணாமலையில் திருக்குறள் துறையில் 78 முதல் தொண்டாற்றி, *1-6-83* முதல் தமிழ்ப் பல்கலைக் கழகத் தத்துவ மையத்தில் (காஞ்சிபுரம்) சிறப்பு ஆய்வாளராக இலங்குகிறார். இலக்கியம் சமயம் தத்துவம் மூன்றிலும் முழுப் புலமையர். சங்க இலக்கியத்தைக் கரைத்துக் குடித்தவர். செய்திச் சுரங்கம்; தமிழறிந்தார் பற்றிய 70 ஆண்டுச் செய்திகள் தெரிந்தவர். கருத்துக் களஞ்சியம். தலைசிறந்த சித்தாந்தச் செல்வர். 'சித்தாந்தத் தெளிவியல்', 'வினா விடை' இரண்டும் பண்டார சாத்திரங் களின் பிழிவு. இவை இரண்டையும் ஒருவர் தெளிந்துவிடின், சைவசித்தாந்தம் முற்றும் புரிந்தவராவர். வெளிப் பகட்டின்றி விளங்கும் உண்மைச் சான்றோர். மகாவித்துவான் மகன் பாலறாவாயன் சென்னை லயோலா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் **முகவரி**. 2, செட்டித் தெரு, காஞ்சிபுரம்.

**ச. சச்சிதானந்தம் பிள்ளை:** *28-7-1888*. சென்னை மாவட்ட கல்வி அலுவலராகச் சிறந்து அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிவாளராகப் பிறங்கியவர். சைவம் வல்ல சான்றோர். இவரது பெருமுயற்சியால் திரு. வி. க. மணிமண்டபம் தோன்றியது. நூல்கள்: சைவ சமயம், வார வழியாட்டுப் பாயாலை, முருகனடியார்கள். Saiva Scriptures, Talks on Saiva Siddhanta. இவர் மகன்கள் சிவகுமார், திருநாவுக்கரசு. **முகவரி**, *188*, லாயிட்ஸ் சாலை. சென்னை *14*.

**கயல்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார்:** *26-3-1876*. ஆங்கிலம் வடமொழி அறிந்தவர். சைவசமயச் சொற்பெருக்காற்றுவதில்

வல்லவர். நூல்கள்: பஞ்சபூதத் தலங்களும் திருமுறைப் பாடல்களும், சிவபுராணம், நவராத்திரி வரலாறும் தேவி தோத்திரப் பாடல்களும், பஞ்சபுராணத்திரட்டு, சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர் பற்றிய சுருக்க நூல்கள்.

**முரு. பழ இரத்தினஞ் செட்டியார்:** 18-8-1921. புதுக்கோட்டை மாவட்ட விரயாச்சிலை பழநியப்ப செட்டியார்: நாகம்மை ஆச்சி. தாய்வழித் தாத்தன் ஆண்டியப்பசெட்டியார், 86 ஆண்டு வாழ்ந்தவர்; ராமாயண பாரதக் கதைகள் முழுவதும் மொழியும் ஆற்றலர். தந்தைவழிப் பாட்டன் சபாபதி செட்டியார் 81 ஆண்டு வதிந்தவர், மூவர் தேவாரத்தைப் பலமுறை படனம் செய்தவர்.

திண்ணைப் பள்ளி இரண்டாம் வகுப்பே பயின்றார். 11 வயது வரை பாட்டனார்களிடம் தமிழறிவு பெற்றார். பின் 32 ல் மலேயா பத்துப்ப காட்டிற்குச் சென்றார். அரசு உயர்நிலைப்பள்ளியில் சீனியர் கேம்பிரிஜ் பயின்று 40ல் தேறினார். தந்தையிடம் தமிழ் கற்றார், தாமே கம்பனையும் இளங்கோவையும் குறளையும் கரைத்துக் குடித்தார். இந்தியா போந்து மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வுக்கு இலக்கண இலக்கியங்களை நுண்ணதின் பயின்றார். வேதாந்த நூல்கள் கீதை, பிரம்ம சூத்திரம், கைவல்ய நவநீதம், சித்தாந்த சாத்திரங்கள் கற்றார். பின் மலேயா செல்வதும் மீள்வதுமாக இருந்தவர் 68 இல். பத்துப்ப காட்டில் சொந்தக்கடை வைத்தார். 73 இல் புதுக்கோட்டையில் குடியேறினார்.

**புலமை:** சைவ உலகில் இவரைப்போல் சிவஞான மாபாடியத்தை எழுத்தெண்ணிப் படித்தவர் எவருமிலர்; பாராமலே பகர்வார்;'சித்தாந்தத் துறையில் ஆழமாகக்கரைகண்டவிற்பன்னர்களில் ஒருவர் என்னும் முதன்மை இடம்பெற்றவர். முருகு-சுப்பிரமணியம். உலக சமயங்கள் பற்றிய தெளிந்த ஞானம் நிறைந்தவர். சித்தாந்தக் கொள்கைகளில் எழும் சிக்கல்களை தீர்ப்பதில் தீரர். யாரும் அணுக முடியாத பொருள்களையெல்லாம் அழகாக அணுகி அருமையான தீர்வு கண்டவர். மறுப்பு தருவதில் மன்னர். 'தெளிந்த இலக்கிய இலக்கண அறிவும், தேர்ந்த சமய ஞானமும் நிரம்பிய பெருமகன்' (கம்பன் அடிப்பொடி). 'மதிநுட்பம்' நூலோடு உடைய தக்கோர் எனப் பாராட்டல் பொருத்தம் (க வச்சிரவேல் முதலியார்).

'திருக்குறள் பிற சமயங்களின் உண்மைகளை ஏற்றுப் போற்றினும் அது சிவநெறியடிப்படை சார்ந்ததே. கோ.

முத்தையா பிள்ளையின் சிவஞான போதச் சிற்றுரை விளக்கம், சித்தியார் சுபக்க உரை இரண்டே உயர்ந்த சித்தாந்த உரை நூல்கள்' 'ஒழுக்கக் குறைவு உடையவர்கள், சமயப் பிரசாரம் செய்யத் தகுதியற்றவர்கள்' போன்ற கருத்தினர்.

**பேச்சு:** இவரது கன்னிப் பேச்சு 51ல் மணக்காலில் நிகழ்ந்தது. தலைப்பு 'அப்பரடிகள்'. சமயம். இலக்கியம் இரண்டும் பற்றிக் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் வளமையர். சொற்களைக் கையாளும் முறையே அலாதி, அற்புதம். எண்ணங்களை எடுத்தியம்பும் இனிமை-பாணி எவருக்கும் இல்லாத ஏற்றத்தது. ஒவ்வொரு பேச்சிலும் புதுமை புது விளக்கம் பொலியும் கேட்டோர் கிறுகிறுத்துப் போவர்; வியந்து மூக்கின்மேல் கை வைக்கச் செய்யும்; இவரையே வலம்வரச் செய்யும்; குழப்பம் போக்கித் தெளி பிறக்கச் செய்யும்.

மலேயாவின் மூலை முடுக்கெலாம் உரையாற்றி மலாய்த் தமிழரின் உள்ளத்தில் ஒளிமிக்க உயரிடம் பெற்றொளிகிறார். 'எந்த மேடையில் ஏறினாலும் தமது பேச்சை வந்திருப்போர் உள்ளத்தைக் காந்தம்போல் ஈர்க்கத்தக்க கவர்ச்சியும் கருத்தும் நிறைந்த பேச்சாக அமைத்துக் கொள்ளும் வல்லமை வாய்த்தவர்' (முருகு சுப்பிரமணியம்). பேச்சில் விறுவிறுப்பும் வெடிச் சிரிப்பும் விளையாடும் 'கருத்தைக் கோவைப்படுத்தி, கதைகளை இடையிடையே புகுத்தி மிகமிக எளிமையாக வெகு இனிமையாக விளாசுவார்.' (மது ச. வி). 'இளமை கொஞ்சும் எளிய நடை, இனிமை கொழிக்கும் தேனைப் பழிக்கும் தெள்ளிய நடை. கேட்டார்ப் பிணிக்கும் சொல் நயம்: சித்தாந்தக் கருத்துக்களை இப்படியும் செப்பலாம் என்பதற்கு இவர் கடைப்பிடித்த முறை கவர்ந்திருப்பது. இரும்புக் கடலையைப் பொரி கடலையாக்கி தந்த திறத்தை என் சொல்லிப் புகழ்வேன்? என்னே அவர் ஏற்றம்' (தலை மாணாக்கர் கு. வைத்தியநாதன்). தர்க்க ரீதியில் காரண காரியத் தொடர்புடன் அறிவுக்குப் பொருந்த விருந்தாக அமையும். ஐயங்களைத் தாமே எழுப்பி அரிய விளக்கம் அளிப்பார். அலுத்துப் போன சான்றுகள் உலுத்துப் போகும் உதாரணங்களையும் உரைக்காது, கண்டது கேட்டது கொண்டு காட்டுகள் கூறி நகை நெளிய உயிர்த் துடிப்புடன் உரையாற்று வார். சொல்லின் செல்வர்-சொற்கலை வேந்தர்.

**எழுத்து:** 'சித்தாந்தம் மலர் 32 இதழ் 7-ல் (59ல்) வீடு பேற்றில் மலம் உண்டா?' என்பதே முதல் கட்டுரை; சித்தாந்திக

ளிடையே சிந்தனையைக் கிளறியது. மறுத்து இதுவரை எவரும் எழுதவில்லை! 'தமிழ் நேசனில்' பல்லாண்டுகளாக எழுதிவரும் விளக்கம் ஒரு வரப் பிரசாதம்; போற்றிப் பாது காத்து வரும் பெற்றியது.

இவரை வெளிச்சம் போட்டுக் காட்டியவர்கள் புன்செய் புளியம்பட்டி மறைமலையடிகள் மன்றம்-தலைவர் ஆறுமுகம். 'தடை விடைகள்; புலால் தின்பது தீவினையா?', 'கடவுளால் முடியாத செயல்கள்' இரண்டும் வெளியிட்டு இவர் புகழ் பரப்பியது. 'சிவநெறி யுண்மைகளை இவர்போல் அழுத்த மாகவும் தெளிவாகவும் எளிமையாகவும் விளக்க வல்லவர் எவருமிலர். மெய்ப்பொருளாய்வுக்குக் கிடைத்த ஒரு முழு மாணிக்கம்' (டாக்டர் தமிழண்ணல்). தீராத ஐயங்களைத் தீர்த்து வைக்கும் தெள்ளிய நீரோடை இவர் கட்டுரை. பிற படைப்பு: வாலி வதம் சரியா!

**பட்டங்கள்:** அருள்நெறிச் செல்வர் (அடிகளார்), புலவர் மணி (மலேசியா தமிழ்ச் சங்கங்கள்), சித்தாந்த வித்தகர் (கா. இராமநாதன் செட்டியார்); வித்யா ரத்னா, செந்தமிழ்ச் செம்மல் (புதுக்கோட்டைத் தமிழ்ச் சங்கம்), புலவர் மாமணி.

மணம் 45ல், மனைவி மீனாட்சி ஆச்சி; ஒரு மகன், 4 மகளிர். உடல் மண்ணுக்கு, உயிர் தமிழுக்கும் சைவசித்தாந்தம் பரப்புதற்கும் என வாழும் இவர் மதியால் வித்தகர், மனத்தால் வித்தகர். **முகவரி**, 4281, கீழ 2 ஆம் வீதி. புதுக்கோட்டை-1.

**ஆதி முருகவேள்:** 1912. நெல்லை மாவட்ட புளியங்குடி. புலவர் மரபு ஆதிநாராயண பிள்ளை: கடையநல்லூர் காந்தி மதியம்மையார். தூத்துக்குடி கால்டுவெல் உயர்நிலைப்பள்ளி நான்காம் படிவம் 36இல். பின்னர் ஆசிரியர் முறையில் தனி முயற்சியில் வித்துவான், எம்.ஏ. பெறல். 40 முதல் காருகுறிச்சி வீரவநல்லூர் தூத்துக்குடி திருச்சியில் பள்ளி ஆசிரியர். 54-57 தூத்துக்குடியில் 'முருகவேள் தமிழ்க் கல்லூரி' நிறுவி முதல்வ ராய் இருந்து புலவர் முதுகலை தேர்வுகட்கு மாணாக்கர்களை உருவாக்கல். 58-60 உத்தமபாளையம் ஹாஜி கருத்த ராவுத்தர் ஹவுதியாக் கல்லூரி விரிவுரையாளர். 65-81 திருச்சி ஜமால் முகமது கல்லூரித் துணைப் பேராசிரியர்-ஓய்வு.

சமயப் பணி: 47இல் நெல்லையில் அறநிலையத் துறையின ரால் நடத்தப்பெற்ற சைவ வைணவ சமய விரிவுரையாளர்

கல்லூரி இறுதித் தேர்வில் முதல் வகுப்பில் முதல் நிலையினராக ரா, பி. சேதுப்பிள்ளையவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார். தூத்துக்குடி சைவசித்தாந்தப் பேராசிரியர் ந. சிவகுருநாத பிள்ளை, பழநி சித்தாந்த சரபம் ஈசான சிவாச்சாரியார் போன்றார் ஆசியுடன் சைவ சிந்தாந்தியானவர். திருச்சியில் பல்லாண்டுகளாகச் சித்தாந்த வகுப்புகள் நடத்தி வருகிறார். திருச்சி தூய சின்னப்பர் இறையியற் கல்லூரியில் 10 ஆண்டுக ளாகப் பொதுவாக இந்தியச் சமயக் கோட்பாடுகளும் சிறப் பாகச் சைவசித்தாந்தமும் நடத்தி வருகிறார். சென்னை சாந்தோம் ஐக்கிய ஆலயத்தில் தமிழர் சமயப் பாடங்கள் போதித்துள்ளார். 45 ஆண்டுகளின் மேலாகத் தமிழகப் பகுதி களில் சாத்திர விரிவுரைகள் ஆற்றி வருகிறார். இவரிடம் சைவ சித்தாந்தம் பற்றிக் கலந்துரையாடி உவந்தவர்கள் டி. எம். நாராயணசாமிப் பிள்ளை, கோ. வன்மீகநாதபிள்ளை, திருத்தவத்துறை ஜி. வரதராசப்பிள்ளை போன்றார். 15 வயது முதலே சைவத் திருமுறை சித்தாந்த சாத்திரங்களில் ஈடுபாடு கொண்டு, அவற்றில் ஆராய்ந்து தோய்ந்து மேனாட்டுச் சமய தத்துவங்களோடு ஒப்பு நோக்கி எழுதியும் வருகிறார். சிறிது காலம் அறநிலையத் துறையில் சமய விரிவுரையாளராக விளங்கியுள்ளார்.

திருவாவடுதுறை ஆதீன 23ஆவது குருமுதல்வர் சீர்வளர்சீர் சிவப்பிரகாசப் பண்டார சந்நிதியவர்களின் அருளாசி பெற்று 83 முதல் ஆதீனப் புலவராய் அமர்ந்துளார். உலகிலேயே முதன் முதலாக அங்குத் தொடங்கப் பெற்ற சைவசித்தாந்த அஞ்சல்வழிக் கல்வித் துறையின் இயக்குநரா இலங்கி, மிக எளிமையாகச் சாத்திரப் பாடங்களைச் செப்புவர் என உல கெங்கணுமிருந்து பாராட்டும் வரவேற்பும் பெற்று வருபவர். 85 தொடங்கி திருச்சியிலிருந்து தனது உரிமையில் **நமச்சிவாய** சைவசித்தாந்த அஞ்சல்வழிக் கல்வியின் மூலமும், 86 முதல் தமிழர் நெறியாம் சிவநெறியினைத் தமிழ் நூல்கள் கொண்டு விளக்கிக் காட்டு மாற்றான் **'சிவநெறி'** திங்கள் வெளியீட்டின் வாயிலாகவும் சைவ நெறி பரப்பி வருகிறார்.

படைப்புகள்: 'உண்மை என்ன? (சிவஞான போத- சிவஞான முனிவர் பொழிப்புரை விளக்கம்), போற்றித் திருமுறை, தொண்டர்தம் பெருமை; திருக்கருவைப் பதிற்றுப் பத்தாந்தி உரை; தமிழ்க் கவிப்பூந்துணர் (கவிதை); தொல் காப்பியச் சொல்லடைவு, இறையனார் களவியல் சொல் லடைவு; தொல்காப்பியச் சிந்தனை, தொல்காப்பியத்துள் தமிழர் சமயநெறியும் மெய்ப்பொருள் கொள்கையும்; சித்தாந்த

மரபுச் சொற்பொருள் விளக்கம். சிவஞான முனிவரின் சைவ சித்தாந்தம்; திருக்குறளில் தமிழர் இறையியல், மேனாட்டுச் சமய தத்துவங்களும் சைவசித்தாந்தமும் இலக்கண இலக்கியம், சமய சாத்திரங்களில் வல்ல இவர் **முகவரி:** காந்திமதி நிலையம், 35, காசாமலை, திருச்சி-23.

## 84. மேடைத் தமிழ்

தமிழ் வளர்ச்சியின் ஒரு பகுதியாகத் திகழ்கிறது. விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்! அரசியல் ஆதரவுக்கும் சமயச் சிறப்புக்கும் பேச்சு வன்மையே அச்சாக அமைகிறது. பேச்சு பிறரைப் பிணிப்பது, புகழ் பரப்புவது. எல்லோரும் பேச்சாளர் ஆகிவிட முடியாது 'ஆர்த்த சபை நூற்றொருவர், ஆயிரத்தொன்றாம் புலவர், வார்த்தை பதினாயிரத் தொருவர்' என்றார் அவ்வை.

அறையில் பேசும் அனைவருமே அம்பலத்தில் பேச்சாளர் ஆகிவிட முடியாது. Lecture வேறு, Oration வேறு. நாளும் பாடம் நடாத்தும் ஆசிரியர்கள் தாம்; மேடையில் ஏற்றி விட்டாலே திணறுவர் திக்குமுக்காடுவர்; வியர்த்து விதிர் விதிப்பர். 'சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப் பழக்கம்... என்னுமாப் போலே பேசப்பேச நாத் தழும்பேறும்; பண்படும். First follow an examble, then set an example என்ற வாறு தக்காரை வழிகாட்டியாகக் கொண்டு பின்பற்றி மேலோங்குதல் (imitate and emulate) வேண்டும்.

மேடைக் கலை பற்றிய **நூல்கள்** பல தமிழில் மேவியுள. தலையாயது பேச்சுக்கலை போதிக்கும் பெற்றியது **'நீங்களும் பேச்சாளராகலாம்'** (77) இலக்கியச் செல்வர் குமரி அனந்தன் பட்டறிவின் பிழிவாக அமைவது. கலைஞர் கருணாநிதியின் **'மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்று'; பேசும் கலை வளர்ப்போம்** (81), இலக்கணம் இயம்பாவிடினும் பேச்சாளர் பலரின் பாங்கினை முறையினை வகையாக விவரிக்கும்.

டி. எம். தெய்வசிகாமணி ஆசாரியாரின் **'மேடைத் தமிழ்'** (49) பெருநூல்; உலகப் பெரும் பேச்சாளர் இந்திய தமிழ் நாவலர்கள் பற்றியும், இலக்கணமும் எடுத்துக் காட்டும்' ஆங்கில அரும்பத விளக்க அகராதியும் கொண்டது. முதல் நூல் **'மேடைக் கலை'** (47) ஆ. முத்துசிவன் மிடைந்தது. **சொற் பொழிவுத் துணைவன்** (53) எம். சி. கண்ணபிரான் முதலியார்

செய்தது. அ. கி. பரந்தாமனார் **பேச்சாளராக** ஆக்கும் பெற்றியது.

டி. எம். காளியப்பா **மேடையில் பேசுவது எப்படி?;** இராம சுப்பிரமணியன் **பேச்சாளராவது எப்படி?** *79)*; பி. சி. கணேசன் **நீங்களும் பேச்சாளர் ஆகலாம்** *(81)*; அன்புப்பழம் நீ **அன்புப் போர்,** வீரராகவன் **பேச்சுக்கலை;** திருவாணன் **கூட்டத்தில் பேசுவது எப்படி?;** மு. முத்துக் காளத்தி **பேசுவது எப்படி? மேடை மின்னல்,** தொடர்பன் **சிறந்த பேச்சாளர்கள்;** வி. ம. தாசன் **'பேச்சு'**

**கட்டுரைகள்:** 2 ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலரில் (பக்கம் 35-37) கே. சொக்கலிங்கத்தின் 'மேடைத் தமிழ்'; 5 ஆம் உ. த. மா. மலரில் (பக்கம் 42-44) க. இராசாராமின் 'மேடைத் தமிழ்'; வித்துவான் அ. நாராயணசாமி 'தீரர் சத்தியமூர்த்தி' நூலில் தன் மகளுக்கு அவர் எழுதிய கடிதத்தில்; தினமணிச் சுடரில் (2-9-79) நஜன் தீட்டிய பிரசங்கக் கலை; டி. எம். தெய்வசிகாமணி ஆசாரியாரின் மேடைத் தமிழ் திரு. வி. க. அணிந்துரை; பெரிய புராணப் பதிப்பில் ஆறுமுக நாவலரின் சூசனப் பகுதி (சொற்பொழிவில் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்கு முறைகள்.)

**பேச்சுத் தொகுப்புகள் :** அண்ணாவின் நூல்கள், சத்திய மூர்த்தி பேசுகிறார், ம. பொ. சி. பேசுகிறார், திரு. வி. க. வின் தமிழ்த் தென்றல், இளமை விருந்து, உள்ளொளி; சம்பத், ஞானியாரின் கந்தர் சஷ்டி சொற்பொழிவுகள்; கவிமணியின் உரைமணிகள், உ. வே. சா. சங்க காலத் தமிழும் பிற்காலத் தமிழும்; ரா. பி. சேதுப்பிள்ளையின் ஆற்றங் கரையினிலே, கடற்கரையிலே;

**பேச்சாளராக :** 1. சட்டியில் இருந்தால் அகப்பையில் தானே வரும், எனவே நிறைய படிக்கவேணும், நிரம்ப கேட்க வேண்டும், சிறந்தனவற்றைக் குறித்து வைத்தல் மிகத் தேவை. 'நல்ல இலக்கியங்களை ஆய்ந்தெடுத்து மூழ்கித் தோய்ந்து படியுங்கள், அப்பொழுது அழுத்தமான அலங்கார வார்த்தைகள் உங்கள் பேச்சுக்கு நிச்சயம் கிடைக்கும்' (ஹெரால்டு ஹோ). 'நீங்கள் வார்த்தைகளுக்காக அலைய வேண்டா; பேசும் செய்திகளையும் கருத்துகளையும் தேடிப்பார்; பின் நீ தேடாமலே வார்த்தை அலைகள் உன்னிடமிருந்து வெளிப் படும்' (ஹோரஸ்).

முதலில் கூச்சம் போக்க வேண்டும், அவை நடுக்கம் நீக்க வேணும். இதற்கு அரையில் ஆடி அம்பலத்தாட வேண்டும். பெரும்பாலும் பெரும் பேச்சாளர்கள் முதற் பேச்சில் மூச்சு முட்டி நாக்கு பின்னிக் குழறி வியர்த்து நடுங்கி நின்றவர்களே! 'நான் ஒரு யுத்த வீரன் என்பது மெய்தான், என்றாலும் முதல் தடவை பேச எத்தனித்தபோது என் முழங்கால்கள் உதறி ஒன்றோடொன்று மோதிக் கொண்டன' (வில்லியம் பிரையான்) நான் முதற்கண் பேச எழுந்து நின்றபோது, என் வாயில் பஞ்சைத் திணித்து அடைத்தது போலிருந்தது; என்னுடைய நாடிகள் பந்தயக் குதிரையோட்டம் போல் படபடவெனத் துடித்தன' (மார்க் டுவைன்). ஆங்கில அறிவாளர் அடிசன் I conceive, conceive, conceive, என்று மும்முறை மூச்சுத் திணறி நின்றார். இச் சொல்லுக்கு 'நினைக்கிறேன்' என்று பொருள்; கருவுற்றிருக்கிறேன் என்றும் பொருள். இப்படி தடுமாறி நின்றபோது எதிரே இருந்தவர் எழுந்து 'அடிசன் மூன்று முறை கருவுற்றார்! ஆனால் குழந்தை ஏதும் பெற வில்லை!!' என்றாரே பார்க்கலாம். ஆங்கில பெரும் பேச்சாளர் டிஸ்ரேலி 'நான் படைக்குத் தலைமை யேற்றுப் போர்க்களம் நோக்கிச்செல்லக்கூட அஞ்ச மாட்டேன்; ஆனால் முதன் முதல் பாராளுமன்றத்தில் பேசத் தொடங்கிட நான் பெரிதும் நடுங்கினேன்' என்று கூறியுள்ளார். எனவே கடும் உழைப்பும் தொடர் பயிற்சியும் ஒத்திகையும் கொண்டு கூச்சம் நடுக்கம் போக்கலாம். 'அச்சம் இல்லாதவன் அம்பலம் ஏறுவான்'!

சொற்கள் தெரிந்திருப்பதே பேச்சாளராக்கி விடாது; அவற்றை ஆள வேண்டும். தக்க சொற்களைத் தகுந்த இடத்தில் பயன்படுத்துவதே பேச்சு - எழுத்துக் கலையின் சூட்சுமம். நிறைய சொற்கள் தெரிந்திருந்தால்தான் - நாமே ஓர் அகராதியாக ஆனால்தான், அவை தானாக வந்து விழும்.

கவி மில்டன் 8000 சொற்களை எடுத்தாண்டுளார்; சேக்சுபியர் 15000 பதங்களைக் கையாண்டுள்ளார்; சர்ச்சில் 25000 வார்த்தைகள் கையாளக்கூடியவர்; ரூசவெல்ட் 30000 வார்த்தைகளைப் பயன்படுத்த வல்லார். கனம் சீனிவாச சாஸ்திரியார் இந்த அளவுக்குத் தேர்ந்து தொடுக்கும் திறன் சான்றவர். எனவே சொற்களை நிரம்ப அறிந்து வைத்திருத் தல் வேண்டும். சொற்பஞ்சம் இருப்பின் சோர்வே!

உள்ளத்திற்கும் உச்சரிக்கும் சொல்லுக்கும் உறவு இருக்க வேண்டும். அப்போதுதான் உணர்ச்சியுடன் உரைக்க முடியும். 'உணர்ச்சி பாவமே சொற்சுவைக்கு அடிப்படை. ஒருவன் கண்களைக் காட்டிலும், செவிகள் மிகக் கூரியன' (சேக்சுபியர்)

நீண்ட நேரம் பேசக்கூடாது, அட! முடித்து விட்டாரே, இன்னும் கொஞ்சம் பேசியிருக்கக் கூடாதா என்று எங்கும் நிலையில், உச்சகட்டத்தில் உடனே நிறுத்திவிடுதல் நல்லது. 20 நிமிடங்களே அவையோர் பொறுமைக்கு அளவுகோல். 'நீங்கள் எதைப் பேசவேண்டும் என்று எண்ணுகின்றீர்களோ அதை அப்படியே ஆஸ்திரேலியாவுக்கு உங்கள் செலவில் (சொல் ஒன்றுக்கு ஐந்து ரூபாய்) அனுப்புவதாகக் கருதிக் கொள்ளுங்கள். எப்படி எவ்வளவு சுருக்கமாக அனுப்புவீர்களோ, அதுவே நீங்கள் பேசத் தக்கது' (ஸ்மீட்).

உச்சரிப்பு (Pronunciation) மிக மிக முக்கியம். 'ல''ள', 'ன''ண' வேறுபாடு உணர்ந்து உச்சரிக்க வேணும். கவனம் மிக வேண்டும். இன்றேல் கேலிக்கு ஆளாக நேரும். உருட்சி திரட்சியுடன் அழுத்தம் திருத்தமாக உரிய ஒலிப்புடன் உச்சரித்துப் பழக வேணும்.

பாடகனுக்குக் குரல் எப்படி முக்கியமோ அப்படியே பேச்சாளனுக்கும் மிக முக்கியம். இனிய எடுப்பான கம்பீரக் கனிவான குரல் வேண்டும். கேட்போர் காது குளிர வேண்டு மல்லவா? நாரசம் புகுந்ததுபோல் இருந்தால் எப்படிக் கேட்க முடியும்? வால்மிளகு, கற்கண்டு போன்றன பயன்படுத்தலாம். குரலே முதல், எனவே காத்துப் போற்றிப் பேணவேணும்.

பேசப்போகும் பொருள்பற்றி ஒரு முறைக்குப் பலமுறை நன்கு சிந்தித்துக் கருத்துக்களை வரிசைப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் துணிவு பிறக்கும். 'ஒரு சிறு தவறும் நேராதவாறு பேசவேண்டிய செய்தியை நன்கு, தயாரித்துக் கொண்டால், அதுவே ஒருவர் தன்னம்பிக்கை பெறும் தக்க வழியாம்' (தார்ப்). 'முட்டைமீது' கோழி சதா அடைகாத்தல் போல, பேச எடுத்துக்கொண்ட பொருளைச் சிந்தித்துக்கொண்டே இருக்க வேண்டும். விளைவு, அருமையான கருத்துக்கள் எனும் குஞ்சுகள் துள்ளி வரும் (பிரௌன்). பேசுவதற்கு ஏதேனும் நல்ல சரக்கை ஒருவர் கைவசம் வைத்திருக்க வேணும் (பிரைஸ்). கருத்துக்களை மனிதின்கண் திரட்டி வைத்தல், வெற்றி காணும் வழியாம் (ஜீன் ஜாரஸ்).

எடுத்தல் தொகுத்தல் முடித்தல் மூன்றும் முக்கியம். முழு கவனம் செலுத்த வேண்டும். 'உன் பேச்சின் எடுத்தலையும் முடித்தலையும் நன்கு கவனி; (தொகுத்தல்) இடைப்பகுதியை எவ்வாறாயினும் புகுத்திச் சரிப்படுத்தி விடலாம்' (மர்டாக்). 'மூன்று நிமிடங்களில் தண்ணீர் காணாவிடில், பேச்சுக் கிணறு

தோண்டுவதைக் கைவிடு' என்பது கருத்துரை. தொடங்கிய ஒரு சில மணித்துளிக்குள்ளாகவே அவையோரைத் தம் பக்கம் இழுத்திட வேண்டும். (Pre oration must be an arresting-attractive one). என்ன சொல்லப் போகிறோம் என்பதற்கு வாயிலாக-ஆர்வத் தூண்டலாக அமையவேணும். தொடுத்தல் விளக்கமாக-தெளிவாக-கோர்வையாக சங்கிலி போல் இருக்க வேண்டும்.

முடிப்புரை (Peroration) மனதை ஒரு முகப்படுத்தி ஊக்கப் படுத்துவதாக இருக்கவேண்டும், (Conclusion must be a collective one). இதுவரை என்ன பேசினோம் என்பதைத் தொகுத்துத் தருதல் நல்லது.

மேடைக்குத் தோற்றம் மிக முக்கியம்; எடுப்பாக மிடுக்குடன் தோன்ற வேணும். கண்ணுக்கு ரம்மியமாகக் காட்சியளித்தாலன்றோ, கேட்கவேணும் என்ற ஆர்வம் பிறக்கும். 'செட்டிமிடுக்கோ சரக்கு முறுக்கோ'. இதற்குக் கண்கவர் உடை அணிந்து செல்லுதல் வேண்டும். Mannerism தவிர்க்க வேணும். அங்க சேட்டைகள் அறவே கூடாது, அருவெறுப்பைத் தரும். ஆடாது அசையாது அக்கம்பக்கம் திரும்பாது ஒரே இடத்தில் செல்லரித்திடவும் நிற்கக்கூடாது, அளவுக்கு மீறிய ஆரவாரம் அலட்டலும் ஆகாது. பருந்தும் நிழலும் போல, பேச்சு முறைக்கேற்ப செயல்கள் உடனித்தல் ஒல்லும்.

அவை முழுவதையும் ஆலவட்டம் போடுதல் வேண்டும். ஒரே பக்கம் திரும்பி ஒருவரையே பார்த்துக்கொண்டே பேசுவதோ, எவரையும் ஏறெடுத்துப் பாராது மோட்டுவளையையும் பார்த்துப் பேசுதலும் தகாது.

நமக்குத் தெரிந்ததை-ஒரு சிலவற்றை உளமுருக்கும் வண்ணம் பதியுமாறு பேசுதல் வேண்டும். தெரிந்ததையெல்லாம் கொட்டுதல் கூடாது. பயனில சொல் பாராட்டாது நயனுடைய சிலவற்றைச் சிந்தை கொள்ளுமாறு மொழிய வேணும்.

தனக்கென அமையும் இயல்பான முறையில் பேசுதல் வேண்டும்; அதுவே அவர் பாணியாகும். அதை விடுத்துக் கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழியாகவோ புலியைப் பார்த்துச் சூடு போட்டுக் கொண்ட பூனையாகவோ ஆகக் கூடாது. இன்னொருவர் முறையைப் பின்பற்றி இடையில் முறிந்து படக்கூடாது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்று எளிது!

அவையின் திறம் தரம் வாங்கும் சக்தி அறிந்து பேச வேணும்; இன்றேல் விழலுக்கு இறைத்த நீராகவே முடியும். casting pearls before swine என்பதாகும். அதுபோல் குறிப் பறிந்து பேசுதல் இன்றியமையாதது. மக்கள் முகத்தைப் படித்தறிதல் முக்கியம். 'பேசுங்கால் ஒருபோதும் ஊக்கம் இழக்காதே' (பர்க்).

'சொல்லும் கருத்துக்கள் தெளிவாக அழகான சொற்களில் தர்க்க முறைக்கு மாறுபடாது அனுபவத்துடன் எடுத்துக் காட்டுக்களோடு கேட்பவர் உள்ளத்தில் ஊடுருவுமாறு உணர்ச்சி தோன்ற உண்மைதான் சொல்வது என்று கேட்பவர் உணரும்படி பேச்சு அமையவேண்டும். இப்படி இருப்பது தான் சிறந்த பேச்சு, இதுதான் பேச்சின் இலக்கணமுமாகும்' (அ.கி. பரந்தாமனார்).பேச்சுக்கலையின் நோக்கம் உண்மையை எடுத்துக்கூறுவது மட்டுமல்ல-மக்களை இணங்க வைப்பதும் முக்கிய நோக்கமாகும் (மெக்காலே). புலியின் சீற்றத்தையும் புயபலமிக்க வீரனின் சினத்தையும் தணிக்கக் கூடிய ஆற்றல் பேச்சுக் கலைக்கு இருக்க வேண்டும் (ஷெல்லி). மெருகோடும் கச்சிதமாகவும் பேச விரும்புவோர் சிறந்த பேச்சாளர்களின் பொழிவுகளை அடிக்கடி கேட்க வேண்டும்; நிறைய நூல்களைப் படிக்க வேண்டும் (செஸ்டர்பீல்டு).

'பிள்ளைத் திறத்தைப் பேசவிட்டுப் பார்' என்பது பொது மொழி, 'பானை ஓட்டையா என்ன என்பதைத் தட்டிப் பார்த்து அதன் ஒலிகொண்டு அறிவதுபோலே, மனிதன் அறிவாளியா அல்லவா என்பதை அவன் பேச்சிலிருந்து புரிந்து கொள்ளலாம்' (டெமாஸ்தனீஸ்). எல்லோரும் ஏற்குமாறு எழிலுறப் பேசும் திறம் பெறுவதைவிட, ஒருவர் பெறும் அரிய செல்வம் உலகில் வேறு இல்லை (டெப்யூ). நான் கோடி கோடி யாகப் பணம் சம்பாதித்தும் என்? பெரிய முதலாளி எனப்படுவ தினும் நான் ஒரு பெரிய பேச்சாளி என்ற பெயர் பெற்றால் போதுமே! (ஆர்மர்). பேச்சினால் உலகினைக் கட்டுப்படுத்தும் காலம் இன்றுபோல் என்றும் இருந்ததில்லை; ஒருவருக்கு அஃது இன்றியமையா அருஞ் செல்வம், புகழுக்குரிய தெய்வீக சக்தி, மிகவும் பயனான கருவி என உலகெங்கணும் மதிக்கப்படுவ தாகும் (லார்டு கர்சான்).

மேடைப் பேச்சு ஒரு வெறும் வித்தை, கற்றதைக் காட்டல். நாவன்மையோ, சொன்மாரி, வார்த்தைச் சித்திரம்; அருங்கலை, அருட்பேறு, செல்வத்திற்கெல்லாம் சிறந்த சீரிய தலையாய செல்வம் (தமிழவேள் உமாமகேசுவரனார்). பேச்சு என்பது ஒரு

பெருங்கலை, பேராற்றல் வாய்ந்தது; முத்தொழில் புரியும் வல்லமை வாய்ந்தது. பேச்சைக் கலையாக்குவது அறிவுடைமை. மேடைப்பேச்சு நாட்டை வளப்படுத்தும்; வாக்காளரைப் பண் படுத்தும்; சட்டசபையைச் சீர் செய்யும், நல்லமைச்சு அமைக்கும் (திரு. வி. க.).

**அறிஞர் அண்ணா:** *15-9-1909—69* காஞ்சிபுரம். 'அறிஞர் அண்ணா' என அனைவராலும் அழைக்கப்பெறும் அருந்தமிழ்ப் பெருநிதியம். பச்சையப்பன் கல்லூரியில் இண்டர் 27—29, பின் வரலாற்று எம் ஏ. பயின்றுபட்டம் பெற்றார். பயிலும்போதே கல்லூரி நூலகம், கன்னிமரா நூலகம் நூற்களை விடாது பயின்று புலமை பெற்றார். சில ஆண்டுகள் வேலையில்லாது இருந்தபோதும் பன்னூல்கள் பயின்று பேரறிவு படைத்தார். ஒரு முறை குமாஸ்தா வேலைக்காக ஓர் அரசியல்வாதியிடம் பரிந்துரை மடல் பெற்று அரசுப் பேரலுவலர் ஒருவரைக் கண்டார். அவர் இசைந்து பணியில் சேர்ப்பதாகக் கூறி விடை பெறும்போது 'ஒரு சின்ன உதவி, எனக்குப் பதவி உயர்வு வர வேண்டும், அதைத் தங்கட்குக் கடிதம் தந்த அரசியல் பெரு மகனாரிடம் பரிந்துரை செய்து பதவி உயர்வு பெற வழி செய்தால் உதவியாகும்' என்றார். 'இந்த எழுத்தர் வேலைக்கு இவர்களையெல்லாம் தேடித் திண்டாடுவதைவிட இவர்களெல் லாருமே நாடும் அரசியல்வாதி ஆவது மேல்' என அண்ணா வுக்குப் பளிச்சிட்டது. அரசியலில் இறங்கினார்!

தூங்கிக் கிடந்த தமிழகத்தைத் தமிழின உணர்வைத் தூண்டி விட்டுப் பேச்சால் பெரும் புரட்சி செய்த பெருமகன். பேச்சையே மூலதனமாகக் கொண்டு ஆட்சியைப் பிடித்த அண்ணல். அடுக்குச் சொல்லால் அனைவர் உள்ளத்தையும் ஆண்டவர், அண்ணன் ஆனவர். பாராளுமன்றில் முதற்பேச்சினைக் கேட்டுச் சாப்பாட்டு நேரம் கடந்தும் அத்துணை பேரும் சித்திரப் பாவைபோல் மகுடி கேட்டு மயங்குமாப் போல் இவர் தேனார் தமிழைக் கேட்டிருந்தனர்! பேச்சுக்கெனவே பிறந்த பேரரசர். அண்ணன் இலக்கிய மன்னன். மேடைத் தமிழைத் தோற்றுவித்து மெருகேற்றிய சொற்கலை வேந்தர். பேச்சாளர் பரம்பரையையே தோற்றுவித்த பேரூற்று நாவலர் பாரதி. சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை யாவரும் இவரிடம் வாதிட முடியாது போனமை வரலாறு!

எழுத்து வேந்தராகவும் இலங்கி எண்ணற்ற பொன்னூல் கள் படைத்துக் கொடுத்துள்ளார். நாடும் ஏடும், நிலையும் நினைப்பும், ஏ, தாழ்ந்த தமிழகமே! தமிழரின் மறுமலர்ச்சி,

ரோமாபுரி ராணிகள், ஆரிய மாயை, கம்பரசம், தீ பரவட்டும், கபோதிபுரக் காதல், கலிங்கராணி.

நாடகம்: நீதிதேவன் மயக்கம், சந்திர மோகன் (சிவாஜி கண்ட இந்து சாம்ராஜ்யம்), ஓர் இரவு, வேலைக்காரி, சொர்க்க வாசல், சந்திரோதயம், இன்ப ஒளி, கண்ணாயிரத்தின் உலகம்.

நாவல்கள்: ரங்கோன் ராதா, பிடி சாம்பல், இரும்பு முள் வேலி, இரு பாரம், வெள்ளை மாளிகையில், சிறு கதைகள்: செவ்வாழை, பித்தளையல்ல பொன்னேதான், இரு பரம்பரைகள், கோமளத்தின் கோபம், கன்னி விதவையான கதை, வண்டிக்காரன் மகன், கவிதைகளும் புனைந்துள்ளார்; தொகுப்பு வந்துளது. கடித இலக்கியமாக விளங்குவது தம்பிக்கு; 'திராவிட நாடு' ஏடு நடாத்தி இதழியல் வளர்த்துளார். இன்றமிழுக்கு என்ன செய்யவில்லை. எல்லா வகையிலும் நந்தமிழுக்கு நற்பணியாற்றியுள்ளார்.

நிரந்தினது சொல்லி ஞாலத்தை விரைந்து தொழில் கேட்கச் செய்தவர். பகுத்தறிவுப் பகலவனிடமிருந்து பிரிந்தாலும் அவரே நம் தலைவர் எனத் தம் கட்சிக்குத் தலைவர் இல்லாது தாம் பொதுச் செயலாளராகவே இருந்து அதனையும் 'தம்பி! தலைமை ஏற்க வா' என அழைத்து நாவலரிடம் தந்த நல்லவர். ஆட்சி ஏறியதும் மாற்றாரிடம் சென்று நல்லாசி பெற்ற கண்ணியம் மிக்கவர். பேச்சால் கிறங்க வைத்து எழுத்தால் மயங்க வைத்த ஏந்தல். புகழின் உச்சியில் இருக்கும்போதே போய்ச் சேர்ந்த புண்ணியர். இந் நல்லவர் வல்லவரின் நல்ல தமிழ்ப் பணிக்குத் தலை வணங்கி நாளும் நினைந்து போற்றுவோம்.

**நாவலர் நெடுஞ்செழியன் :** (நாராயணசாமி) 11-7-1920. தஞ்சை மாவட்ட நன்னிலம் வட்ட திருக்கண்ணபுரம். இராசகோபால் : மீனாட்சி சுந்தரம். பட்டுக்கோட்டை கழக உயர் நிலைப் பள்ளியில் பயின்று, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் முதுகலை பட்டம் (44இல்) பெற்றார். 48இல் 'மன்றம்' ஏடு தொடங்கினார். 49இல் தி. மு. க. தோன்றியபோது துணைப் பொதுச் செயலர் ஆனார். 50 சேலத்தில் திருமணம். டாக்டர் விசாலாட்சி 55ல் பொதுச் செயலரானார். 62ல் திருவல்லிக்கேணி தொகுதியில் வென்று சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர். 67ல் அல்லிக்கேணி தொகுதியில் வென்று கல்வி தொழிலமைச்சர், 68ல் 2ம் உலகத் தமிழ் மாநாட்டுத் துணைத்தலைவர், 71ல் அல்லிக்கேணியில் வென்று

கல்வி அமைச்சர். 72ல் மதுரைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கல், கலைஞரிடமிருந்து விலகி மக்கள் தி. மு.க. அமைத்தல் அ. தி. மு. கவுடன் இணைதல், 78ல் பெரியார் நூற்றாண்டு விழாத் தலைவர். 79ல் அ. தி. மு. க. பொதுச் செயலர், 80ல் நெல்லைத் தொகுதியில் வென்று நிதியமைச்சர், 84ல் திண்டுக்கல் ஆத்தூர் தொகுதியில் நின்று வென்று நிதி யமைச்சராதல்.

பாவேந்தர் பாடல்களைத் தம் ஒவ்வொரு சொற்பொழி வின் முடிவிலும் கம்பீரமாக எடுத்தோதி மக்களிடம் அறிமுகம் செய்தவர்-பரப்பியவர். தமக்கென ஒரு தனி பாணி அமைத்துக் கொண்டு 40 ஆண்டுகளாக நா வீறுடன் பேசும் நாவலர். 'நடமாடும் பல்கலைக் கழகம்' என அண்ணாவால் கொண் டாடப்பட்ட பெரிய தம்பி. அரசியல் சூழலில், இவரின் ஏற்ற மிகு எழுத்து நம் கவனத்திலிருந்து கழன்று விட்டது. படைத் தவை: நற்றிணைக் காட்சிகள், இதயம் பெறும் இன்பம், சிந்தனை மலர்கள், புறநானூற்றுப் புதையல், கலித்தொகை தரும் காதல் காட்சிகள், பாண்டிய கிறக்கம், கண்ணீரும் செந் நீரும் வளர்த்த தமிழகம், புதிய பாதை, சமுதாய விடுதலை, எழுச்சி முரசு, மூட நம்பிக்கை, மொழிப் போராட்டம் போல்வன. நீடு தோன்றினியர், உள்ளத்தாலும் உயர்ந்தவரே, அண்ணாவோடு வாழ்ந்த அந்தச் சிறை வாசம் 80இல் மணி விழா நடந்தது. ஒரே மகன் மதிவாணன்.

**பேரா. க. அன்பழகன் :** *(ராமையா) 14-12-1922*—தஞ்சை மாவட்ட மன்னை வட்ட காட்டூர். மாயவரம் நகராட்சி உயர் நிலைப்பள்ளி, அண்ணாமலையில் பயின்று 44இல் முதுகலை பட்டம் பெற்றுப் பச்சையப்பன் கல்லூரியில் பல்லாண்டுகள் பணியாற்றி 57ல் தேர்தலில் இறங்கினார். 57-62 எம். எல். ஏ; 62-67 எம். எல். சி 67இல் அமைச்சராதல். பின் பாராளுமன்ற உறுப்பினர், கலைஞருடனேயே பிரியாதுள்ளார். நாவல ருடன் ஒன்றாகப் பயின்று இரட்டையர்கள் என இலங்கியவர், பெரியார் பகுத்தறிவுப் பாசறையில் 47வரை உறைந்தவர். கருஞ்சட்டைப் படையில் சிறந்தவர். சிறந்த பேச்சாளர்களில் ஒருவர். அவைக்கேற்பப் பேசும் பண்பாளர். கட்சி மேடை தவிர பிற கல்வி நிலையங்களில் இச்சிற்றும் அரசியல் கலவாது அருந் தமிழ் பேசும் பெருந்தகவினார். அருவிபோல் சொற்கள் அழ காக உருண்டோடி வரும்; சொல்லும் பொருளும் கட்டிப் புரண்டு குற்றேவல் செய்யும் மடைத்திறந்தன்ன கடகடவென பேச்சு வெள்ளம்போல் வந்த வண்ணம் இருக்கும், எழுத்திலும் அப்படியே. அழகரசி (நாவல்), வகுப்புரிமைப் போராட்டம்,

விடுதலைக்கவிஞர், அறிவும் சிந்தனையும், உரிமைவாழ்வு, அலைஓசை கலையும் வாழ்வும், தொண்டா? துவேஷமா? **முகவரி:** 74. ஆஸ்பிரான் கார்டன் இணைப்பு, கார்ப்ரேஷன் காலனி, சென்னை-10 (612940)

**கலைஞர் கருணாநிதி:** 3-6-1924. திருவாரூரை யடுத்த திருக்குவளை முத்து வேலர்: அஞ்சுகம். தம் மாத்தமிழ்ப் பேச்சால் தமிழகத்தில் மாபெரும் மாற்றத்தையே தோற்றுவித்த மேடைத் தமிழ் மன்னர். கலைஞர் பேச்சு என்றால், கரும்பு மொய்க்கும் எறும்பென, அலைகடலெனக் கூட்டம் கூடும். வேகமான விரைந்த பேச்சோ, மூச்சுவிடாது முழங்கும் போக்கோ இவரிடமிராது; நாட்டுப் புறத்தவரும் கேட்டு நலம் பெறும் வகையது; இளைஞர்கள் மாந்தி மனங் கொள்ளும் தகையது. எனவேதான் பிற சொற்பொழிவாளரைவிட இவரின் சொற்பொருட் பொழிவில் கற்றோரும் மற்றோரும் சொக்கி விடுகின்றனர். இதன் மையம் யாதெனில் நறுக்குத் தெரித்தாற்போல் நவில்வார், காதில் சொற்களை வாங்கி அதன் வழி கருத்தினை மனங்கொள்ள இவர் பேச்சில் தான் முடிகிறது.

'இன்று மாலை, திலகர் திடலில், சிந்தனைச் சிற்பி, சி. பி. சிற்றரசு' இப்படி இரண்டிரண்டு சொற்களாக இணைத்து இயம்பி துண்டாடிப் பேசும் பாங்கும் கொண்டாடுமாறுளது. கிராமத்தாரும் பாமரரும் பேச்சின் கருத்தை செவி வாயாக சிந்தை களனாக வாங்கிப்போட்டுச் சீரணித்தறியுமாறு அமைவது இவர் பேச்சுப் பாணி.

எந்தப் பொருளையும் எடுத்துக்காட்டு கொடுத்து இதயத்தில பதிய வைப்பதில் இணையற்றவர். இவர் பேச்சு வெறும் பேச்சன்று, தமிழ் மணம் கமழும் கரும்புப் பேச்சு; இடமறிந்து பேசுவதில் இவருக்கு இணை இவரே தான். எத்துணைபேர் பேசினும் அத்தனைப்பேச்சிற்கும் இணைப்பு தந்து தம் தனித்திறத்தால் தமிழ் உரத்தால் இவர் பேச்சே முடிமணி - மகுடமாவது' என்னுமாறு பேசிடும் ஏந்தல்.

எல்லோரும் கருத்தை இயம்புவர். என்ன சொல்கிறோம் என்பதல்ல பேச்சு எப்படிப் பேசுகிறோம் என்பதில்தான் பேச்சின் பெற்றியும் வெற்றியும் உளது. எந்த அரிய செய்தியும் அழகாக, ஆகா! அற்புதம் என்னுமாறு தந்திடும் தனி பாணியே, கலைஞரின் கொடுமுடிப் பேச்சின் குருதி யாகும். கதை கூறிக் கருத்தை விளக்குவார். இவர்போலே கதை கூறிக்

கழுதையானோரும் உண்டு கான மயிலாடி கண்டிருந்த வான் கோழி போல!

அகல கை விரித்து உயர்த்தி, மறு கையில் மேலாடை தவழ்ந்து துவள வாயசைக்கும்போது, இந்த வையமே தலை யசைத்துத் தண்டனிடும். தம் அனுபவங்களையெல்லாம் நூலாகத் தந்துள்ளார்; பேசும் கலை வளர்ப்போம் என்ற அந்த பட்டறிவுப் பெட்டகத்தைப் படித்தால், கலைஞரின் கனி தமிழ்ப் பேச்சின் களம் தளம், முறை நிறை, வெற்றிக்கண் யாவும் விளங்கும். பேச்சு வேந்தர் அண்ணாவே 'கலைஞரின் பேச்சிலே, கலை மிளிர்கிறது' எனக் கட்டியம் கூறியபின் அட்டி ஏது?

பொது மேடை, இலக்கிய மேடை, கல்விக் கூடம் கட்சிக் கூட்டம் எந்தப் பேச்சாயினும், இறுதிப் பேச்சாளர் இவரே யாக வேண்டும்; இன்றேல் எல்லோரும் கலைந்து போய் விடுவர். அப்படி நண்பகலாயினும் நள்ளிரவாயினும், பனி யெனப் பாராது, வெயில் என வருந்தாது காத்துக் கிடந்து கேட்டு மகிழ்ந்த பின்பே கலையும் கூட்டம்! அப்படிப்பட்ட அருமையது கலைஞரின் கன்னல் தமிழ். கலைஞர் ஒரு பேச்சுக் கவிஞர்.

ஈ. **வெ. கி. சம்பத்:** தந்தை பெரியாரின் அண்ணன் கிருட்டிணசாமியின் மகன். இவர் துணைவியாரே சுலோசனா சம்பத். மகனே இனியன் சம்பத். இளமை முதல் அறிஞர் அண்ணாவுடன் நெருங்கிப் பழகி பழகி நா நலம் பெற்றவர். 'சொல்லின் செல்வர்' என்ற சிறப்புக்குரியவர். மென்மை மேவ கன்னல் தமிழில் கலகலவெனப் பேசும் கனிவுப் பேச்சாளர். பலர் கருத்தின்றி வெறும் சொற்களை விளாசுவர்; இன்னும் பலர் சொல்லின்றிக் கருத்தைக் கூற முடியாது தவிப்பர். சம்பத் அவர்கள் கருத்தும் சொல்லும் ஒன்றை ஒன்று முந்தி வரக் கருத்து மழை-சொன்மாரி பொழியும் சுந்தரர். மளமள வென மடைதிறந்த வெள்ளம்போல் கருத்தும் சொல்லும் கட்டிப் புரண்டு வரும். செவிக்கு இனிமையாக இருக்கும், சிந்தைக்கு விருந்தாக அமையும். சிறிது மூக்கொலி (Nosal Sound) சிறந்து வரும். ஒரே இடத்தில் நிலைத்திராது திராவிடர் கழகம், தமிழ் தேசியக் கட்சி, காங்கிரஸ் என மாறி மாறிப் போய் மனதில் நிலைக்காது மறதிக்குரியவரானார், கேட்க கேட்க இன்னும் கேட்கவேணும் என்ற கிறுகிறுப்பைத் தரும் பண்புப் பேச்சாளர் என்பதை எவரும் ஒப்புவர்.

**ஏ. பி. ஜனார்த்தனம்:** *1929—1-4-87*. சென்னை பகுத்தறிவு இயக்கப் பெரும் பேச்சாளர்; 'டார்ப்பிடோ' என்ற அடை மொழி பெற்றவர். அப்படி இருக்கும் இவரது அனற்பேச்சு. தி. மு க. பின் அ. தி. மு. க. வில் இருந்தார். 62-74 மேலவை உறுப்பினர்; 77-82 பாராளுமன்ற உறுப்பினராக ஒளிர்ந்தவர். புள்ளி விவரத்துடன் காரசாரமாக இவர் பேசும்போது அவையே அவர் பக்கம் இருக்கும். அத்தனைத் துல்லியமாக சான்றுகள் காட்டி வக்கணையுடன் விளக்கிப் பேசுவார். **தொடர்புக்கு** : *32/2*, முருகப்ப முதலித் தெரு, புரசைவாக்கம், சென்னை-7 *(666357)*

**டி. கே சீனிவாசன்:** இவர் பேசுவதைப் பார்க்காது பேச்சைக் கேட்பாராகில் அண்ணாதான் பேசுகிறார் என்றே நினைக்குமாறு-நம்பிடுமாறு நலமுடன் பேசும் வளம் சான்ற வர். அண்ணா போன்றே முக்கொலி - பொடி போடும் மூக்கொலி அப்படியே அமைந்திருக்கும். அண்ணா பாணி அப்படியே விளைந்து வரும். கையை உயர்த்தி ஆனாயாச மாகப் பேசுவதைக் காண்போர் அண்ணாவின் மாறு உரு-அச்சு என்றே இயம்பிவிடலாம். எனவேதான் '**சின்ன அண்ணாதுரை**' என்றேத்தம் பெறுகிறார். அண்ணாபோல் குட்டை உருவம்தான்!

சிந்தனைகள் வந்தனை செய்து முந்திவரும் புதிய புதிய சிந்தனைகள், புதுமையான கருத்துக்கள் உந்தி வரும். எனவே தான் இவரைத் 'தத்துவ மேதை' எனத் தயங்காது சாற்றுவர். பேசி வரும்போதே அவையோரையும் அங்கங்கே கூட அழைத்துச் சென்று உள்ளத்தை அள்ளிச் சென்று கருத்துலா புரிந்து கடைசியில் கொண்டுவந்து விட்டுவிடுவார்; அத்தகு சொன்னலமும் முத்தனைய கருத்து வளமும் இணைந்து வரப் பேசும் இணையற்ற ஏற்றமிகு எழிற் பேச்சாளர். தஞ்சை தந்த கொஞ்சுதமிழ் கோமான். பேச்சுப் போலே எழுத்திலும் மன்னர். அப்படிச் சொற்கலை விருந்து படைக்கும் நற்கலை நாவரசு. தருக்க முறையில் மறுக்கவொண்ணா வகையில் வாதங்களை வைத்திழைத்து வாகாக-பாகாகப் பேசிடும் வளமையர்-வன்மையர். **முகவரி:** B-*3*, லாயிட்ஸ் காலனி, சென்னை-*14*.

**ஏ. வி. பி ஆசைத்தம்பி** : அன்புப்பழம் நீ அவர்களின் மேடைத் தமிழ்ப் பாசறையில் பயிற்சி பெற்றவர். கலைஞர் கழறும்மாப் போலே 'கட்டிளம் காளையாக மேடையேறிக் கனல் தெறிக்கும் சொற்களால் மக்களைக் கவர்ந்து கடினமான

விஷயங்களையும் பெரியார் பாணியில் மிக விரிவாக எடுத்துரைத்து, 'வாலிபப் பெரியார்' என்றே அழைக்கப்பட்ட வசீகரமிகு பேச்சழகர்.

**நாஞ்சில் கி. மனோகரன்** : படிகட்டுகளெல்லாம் பைந்தமிழ் பாடும் பச்சையப்பன் கல்லூரியில் பயின்றவர். பாராளு மன்ற உறுப்பினராகவும், தமிழக நிதி அமைச்சராகவும் இருந்தவர். நியாயத்தைச் சொல்லுகிறேன் போன்றன நூல்கள். 'சொலல் வல்லார். மின்வெட்டுப் போன்ற மிடுக்கான பேச்சுக்கு எடுத்துக் காட்டாக இருக்கிறவர்' (கலைஞர்).

**கி. வீரமணி** (சாரங்கபாணி): 14-7-1934. கடலூர். தந்தை கிருட்டிணசாமி (தையற்காரர்). பள்ளி இறுதி வகுப்பு முடித்து பட்ட-பட்ட மேற்படிப்பு அண்ணாமலை; பொருளியலில் மிக உயர்ந்த தேர்ச்சி பெற்றமைக்காகத் தங்கப்பதக்கம் பெற்றார். சென்னை சட்டக் கல்லூரியில் பயின்று வழக்குரைஞர் தொழில் மேற்கொள்ளல். கல்லூரி நாட்கள் பேச்சுப் போட்டியில் இவர் பெற்ற பரிசுகள் ஏராளம்.

தமிழின மானம் குறித்தும் தமிழர் உயர்வு கருதியும் பகுத்தறிவு நோக்கியும், ஈழத்தமிழர் ஏற்றம் எண்ணியும் இவர் பேசி வருகிறார். சிந்தனைக் கதிர்களென செந்தமிழ் வந்துதிரும் இவர் வாயினின்று, அறிவார்ந்த அறிவுப் பேச்சு ஆற்றுபவர். தருக்க முறையில் உருக்கமாகப் பேசும் பெற்றியர். புள்ளி விவரங்கள் பொழிவதில்-மேற்கோள்கள் தருவதில் மன்னர்.

எதனையும் அலசி ஆராய்ந்து அறிவுக்கு ஒவ்வும் வகையில் உணர்த்தும் உரத்தர். ஆணித்தரமான வாதங்களை வைத்து அடுக்கிச் செல்லும் அழகு அருமை. காரசாரமாகவும் கடுமையாகவும் இருப்பினும், கண்ணியத்துடன் கருத்துரைக்கும் பண்பாளர். பேச்சில் நாகரிகம் பளிச்சிடும். நயனும் பயனும் உடைய நல்ல பேச்சாளர் - உணர்ச்சிக்கு இடம் தந்து கேட்டோரைக் காட்டுமிராண்டியாக்காது, அறிவுக்கு முதன்மை தந்து கருத்துக்கு வேகமூட்டிக் கேட்போரைச் சிந்திக்கச் செய்திடும் சிந்தனைப் பேச்சாளர். இவரது பேச்சுக்கலை பற்றி எம். பில். ஆய்வு செய்பவர் **வலங்கைமான் நம். சீனிவாசன்** என்ற சீர்சால் சொற்பொழிவாளர். தளபதி வீரமணியின் தரமான பேச்சுக்களைக் கேட்கவேண்டும்; அவருடைய பேச்சுத் தொகுப்புகளைப் படிக்கவேண்டும். பின்பற்றுதற்குரிய நல்ல பேச்சாளரின் **முகவரி**: 13. முதல் நெடுஞ்சாலை, கஸ்தூரிபா நகர், அடையாறு, சென்னை-20 (413495)

**குமரி அனந்தன்** : 'நீ பேசும்போதெல்லாம் தமிழ் புதுப்பிக்கப்படுகிறது, உடனே இலக்கியத்தில் பதிப்பிக்கப்படுகிறது. எங்கள் தமிழ்மொழி ஈரமுள்ள மொழியாக இருப்பதற்குக் காரணம், நித்த நித்தம் அது உன் நாக்கு நதியில் நீராடிக் கொண்டிருப்பதால்தான்!' (வாலி). அண்ணாமலையின் அருந்தமிழ்வாணர். இலக்கியத்தை ரசித்து ருசித்துக் கேட்டோரும் கிளர்ந்தெழுமாறு பேசும் கனிவினர். இவர் பேச்சில் இக்காலப் புதுக்கவிதையும் புதுமணம்பெறும். இதில் என்ன இருக்கிறது என நினைக்கும் இரு வரிகளில், இவ்வளவு அருமைப்பாடு இருக்கிறதா என வியக்கும் வண்ணம் விளக்கம் தந்து வீறார்ந்து நிற்பார்.

'இலக்கியச் செல்வர்' என எல்லோரானும் ஒருமிக்க ஒப்புக் கொள்ளப்பெற்ற இவரின் அரசியல் பேச்சும் இலக்கிய மணம் கமழும், தரம்கொண்டு திகழும். பேச்சின் அருமை பெருமை புரிந்தவராகையால் பாரதி நூற்றாண்டு விழாவின்போது 'சிந்தனைப் பண்ணையில் பாரதி' என வாரந்தோறும் தக்க பேச்சாளர் கொண்டு (ரூ. 50 தந்து) 52 வாரமும் பாரதிபற்றிப் பேசச் செய்து 4 பகுதிகளாக வெளியிட்டவர். இந்த விரிமனம் யாருக்கு வரும்?

பேச்சு மன்னராகப் பிறங்கும் இவர், 77 இல் 'நீங்களும் பேச்சாளராகலாம்' என்ற அருநூலை அளித்துள்ளார். மேடைக்கலை பற்றி அறிந்து உயர அறிவியல் அணுகுமுறை. அரும் பெட்டகம். பெயருக்கேற்ப இதனை ஓதி உணர்ந்தோர் உண்மையிலேயே ஒரு பெரும் பேச்சாளராவது உறுதி தமிழில் வந்துள்ள மேடை நூல்களில் தலையாயது. கருமவீரர் வழி இயங்கும் அவரின் வாரிசாக விளங்கும்—காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் அமைப்பாளரான இவரின் **முகவரி** : 5, ஆறாவது ஏரிக்கரைப் பகுதி, நுங்கம்பாக்கம், சென்னை - 34; 40. வெங்கட் நாராயண சாலை, சென்னை-17 (447407).

**சிலம்பொலி செல்லப்பன்**: 22-12-1929. உச்ச ஸ்தாயியில் ஒரே சீராக நேராகப் பேசும் ஒண்மையர். சங்கம் பனுவல் முதல் தற்காலப் புதுக்கவிதை-நாட்டுப் புறப்பாடல் வரை மேற்கோள்கள் மிடைந்துவரப் பேசும் மேன்மையர். எக் கூட்டமாயினும் எதுபற்றிப் பேசினும் நன்கு சிந்தித்து படித்து வந்தே துடிப்புடன் பேசும் பெற்றியர். எந்த நூலையும் எழுத் தெண்ணி அக்கு வேறு ஆணி வேறாக அலசி ஆய்ந்தபின்பே பேச வருவார். இப்படி நிரம்பிய நூலுடன் கோட்டி

கொள்ளும் சான்றோர் தமிழுலகில் சிலரே! அழைத்தோரை மதித்து அவையோரைத் துதித்துக் கதித்துப் பேசும் கண்ணியர் என்ற ஒருமித்த அருமைக்குரிய பெருமையர்.

விரல் நுனியில் விவரங்கள் வைத்திருப்பார். தக்க தருணத்தில் தகுந்த மேற்கோளைப் பொருத்தமாக உதிர்ப்பார். இவரின் ஒரு பொழிவில் அறுபது நூல்களை அயின்ற நிறைவு ஏற்படும்; சிறந்த விருந்துண்ட மகிழ்வு உண்டாகும். நுனிப்புல் மேயாது ஆழ்ந்தும் அகன்றும் தோய்ந்த தெளிவு பிறக்கும். பேச்சுக் கலைக்கு ஒரு முன்மாதிரியாகக் கொள்ளத்தக்க-பின் பற்ற ஏற்ற சிறந்த சால்புநிறை பேச்சாளர் என்று அறுதியிட்டு உறுதி கூறலாம். **முகவரி:** எல்.ஐ.ஜி 1, சீனிவாச அவென்யு, ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28(414011).

**அவ்வை நடராசர்:** 24-4-1936. வ.ஆ. திருவத்திபுரம். ஔவை சு. துரைசாமிப் பிள்ளையின் தலை மகன். இளங்கலை மதுரை தியாகராசர் கல்லூரி, 58இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி முதுகலை. தஞ்சை சரபோஜி கல்லூரி, தில்லி வானொலி நிலையம், மதுரைத் தியாகராசர் கல்லூரி, இராமலிங்கர் பணிமன்றச் செயலர், தமிழரசு மொழி பெயர்ப்புத்துறை இணை-இயக்குநர், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைச் செயலர். தமிழ் பயின்ற ஒருவர் அரசுத் துறைச் செயலரானமை இதுவே முதன் முறை. தமிழரசின் தமிழ் மூலவர். அரசு விழாக்களின் அமைப்பர்; குழுக்களின் குருதியோட்டம்.

சென்னைக் கல்லூரிகள் தமிழ் மன்றத் தலைவராய் இருந்தவர். பேச்சுக்காகச் சென்னை அரசின் பொற்பதக்கம் பெற்றவர். குற்றால அருவிபோல் குளிர் தமிழ் பேசும் கோமான். நாடு போற்றும் நற்றமிழ் நாவரசர். பொன்விழா புரியும் நன்மகன். 'தமிழ் உட்கார...தன் நாக்கையே நாற்காலியாகத் தந்தவன்; இவன் விரல் நுனியில் இலக்கணம் இருக்கிறது, குரல் நுனியில் இலக்கியம் இருக்கிறது. வளரும் கவிஞர்களுக்கு இவன் தாய்ப்பால் போன்றவன்; இன்றைய கவிஞர்களுக்கு இவன் தான் ரசிகமணி டி.கே.சி' (வாலி).

வாழ்விக்க வந்த வள்ளல், கம்பர் காட்சி, சொல்லரசர் அண்ணா போன்றன படைப்புகள்; நுட்பமதியினராய இவர் பன்னூல் படைத்திட வேண்டும். எம்.லிட்: Studies in

Tirukkovaiyar (*1964*); டாக்டர் பட்டம் The Women Poets of Tamil Nadu Sangam Age (*1973*). அந்நாளில் அண்ணாபோல் இந்நாளில் நடராசர் நிலவி வருகிறார். தேர்ந்த சொல்லை ஓர்ந்து பெய்து தேனென, தென்றலென மெல்லிய பூங்காற்றுப் போல் மேவவிடுவார். அவையறிந்து பேசி அத்துணை பேரையும் அள்ளி விடுவார் அள்ளி! பெருமைக்குரிய தந்தையின் அருமைத் தமிழ் மகனாக அமையும் இவரின் துணைவியார் ஒரு மருத்துவர்; **தாரா** எனும் பெயரினர். **முகவரி:** 'தாரகை' மனை எண் 349 (3497),3வது முதன்மைச் சாலை,சென்னை-40 (612534)

**கா. காளிமுத்து:** 65 இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போது மதுரைத் தியாகராயர் கல்லூரியில் இளங்கலை தமிழ் பயின்று; தமிழ் மன்றச் செயலராகச் சிறந்தவர். அரசியல் சட்டத்தைக் கொளுத்திச் சிறை சென்றவர். அன்று முதல் புகழ் பூத்துப் பொலிந்த பேச்சாளர்.

ஆடாது அசையாது அலட்டிக் கொள்ளாமல் எளிதே இனிதே பேசும் இயல்பினர். அரசியற் பேச்சாளர்களில் இலக்கியப் பேச்சாளர் குறைவு-மிகமிகக் குறைவு; இலக்கியம் பயின்றவராதலால் இலக்கியம் மிடைந்துவர, கொஞ்சு தமிழ் மிஞ்சி வர, கடகடவெனப் பேசிடும் பேராற்றலர். இலக்கியச் சுவைப் பகுதிகளை நன்கு நெட்டுருச்செய்து குருதியோடு கலந்து கரைந்திடச் செய்தவர். ஆதலால், பேச்சினூடே மூச்சுப்போல் முழங்கிவரும். காட்டாகக் கூறவேண்டுமெனில், ஒவ்வொரு பேச்சினூடே கேட்போர் மூச்சுத் திணறுமாறு ஒரு பத்து நிமிடம் மேற்கோளைக் கொட்டுவார். மலர்கள் பற்றித் தமிழில் எத்தனைச் சொற்கள் உண்டோ அத்தனைச் சொற்களையும் தட்டுத் தடங்கலின்றி மடமடவென மொழியும் போது, அவையோர் வியந்து மயங்கி மகிழ்ச்சி ஆரவாரம் செய்வர். குறிஞ்சிப்பாட்டில் வரும் 96 மலர்களையும் மிடுக்காக அடுக்கிக் கூறும்போது, அவையே அதிருமாறு கையொலி செய்யும். குற்றாலக் குறவஞ்சியில் பந்தடிக்கும் காட்சியைப் பாங்காக முழங்கும்போது குற்றாலத் தமிழ் கொஞ்சி வரும்' முத்து முத்தான கருத்துக்கள் சத்தான செழுந்தமிழில் முந்தி வரச் சொற்பொருட் பொழிவாற்றும் தமிழ் முத்து நம் காளிமுத்து! **முகவரி:** 8, அண்ணா தெரு, மதுரை-6.

**வலம்புரி ஜான்:** 'இவன் தமிழ் நடையில்' அழகு தரிசனம் தருகிறது; ஒவ்வொரு மாலை நேரத்திலும் மேகமாக மாறு

கிறான், தமிழ் மழையை எத்திசையிலாவது கொட்டிவிட்டுத் தான் குடியிருப்புக்குத் திரும்புகிறான்' (வாலி). சொல்லின் செல்வர்-சொற்கலை வேந்தர். சிந்தனை வளம் மிக்க செழுந் தமிழ்ப் பேச்சாளர் வளமான சொற்கள் வாகாக வந்து பாகாக ஓடும், தேனாக விளையாடும், தென்றலென ஊடாடும்.

சொற் சித்தர்: சித்திரச் சொற்கள் நர்த்தனமாடும் இவர் நாவில். பலரது பேச்சில் வெற்றுச் சொற்கள் வேகமாக வந்து விழும்; இவரின் பேச்சு சொற்பொருட் பொழிவு. சிந்தனைக் கதிர்கள் வந்தனை புரியும். வார்த்தைச் சித்தர்; வாயிலிருந்து வார்த்தைகள் மத்தாப்புப் பொறிகளாக முத்தாய்ப்பு வைத்து வரும். கேட்டோர், சொல்லுக்கு இத்துணைச் சுவையும் சூடும் இருக்கிறதா என வியப்பார்; சொல்லில் என்ன இருக்கிறது சொல்பவர்கள் சொன்னால்தானே சொல்லுக்கும் உயிர் வருகிறது? அப்படி உயிர்ப்பான சொற்களை உயிரான தமிழில் ஒய்யாரமாகக் கொட்டிடும் உரைவேந்தர். செவியாரக் கேட்டு இன்புற்றுணர வேண்டிய சிங்காரப் பேச்சு. இப் புது நடை தந்த புயற்பறவையின் பேச்சுத் தொகுப்பு 'மழை வருகிறது'.

பாளை சேவியரில் பயிலும் போதும் சரி, பின்னர் சட்டக் கல்லூரியில் கற்கும்போதும் சரி, எண்ணரிய பரிசும் கோப்பையும் பதக்கமும் பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகச் சிறந்த பேச்சாளர் (73), யுனெஸ்கோ பரிசு எனப் பன்னூறு பெற்றவர். பேச்சுக்கெனவே-பேசப் பிறந்தவர். **முகவரி** 'தாய்' 34, நெல்சன் மாணிக்கம் சாலை சென்னை-29. (427 969)

**மு. தமிழ்க்குடிமகன்:** 15-9-1938. பறம்புக்குடி. மதுரை யாதவர் கல்லூரி விரிவுரையாளர், தமிழ்ப் பேராசிரியராக இருந்து முதல்வராகச் சிறந்துள்ளவர். ஆணித்தரமாக உணர்ச்சி கொப்பளிக்கப் பேசுவதில் ஒப்பற்றவர். முற்போக்குச் சிந்தனையும், பகுத்தறிவுப் பாங்கும் இவர் பேச்சில் பளிச்சிடும். படைப்புகள் கண்ணீர், ஈழப் பிரச்சினை பற்றிய எடுப்பான நூல் ஒன்றும் செய்துள்ளார். தி. மு. க. பற்றாளர்.

**பா. வளன் அரசு:** வெங்கலக் குரலில் ஒலி பெருக்கிக்கே தேவையின்றிப் பேசும் திண் குரலோன் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் கட்டறுத்துப் பேசும் கண்ணியர் தனித்தமிழ்ப் போக்கும் தமிழ் முனைப்பும் தொண்டுப் பாங்கும் கொண்டது இவர் பேச்சு. தென் சீமையில் தலையாய பேச்சாளர்; கிருத்துவத் தொண்டர்களில் துடிப்பானவர். தங்கப்பாளம் போல் சொற்கள் வந்து விழும். தேர்ந்தெண்ணிய திறமான

கருத்துக்கள் குற்றால அருவி போலக் கடகட எனக் கொட்டும். முத்துமுத்தான செய்திகள் முந்தி வரும். இளைய தலைமுறையின் தலையாய பொழிவாளர். **முகவரி:** யோவான் கல்லூரி. பாளையங்கோட்டை.

**வே. காத்தையன் :** 15-5-1945. தஞ்சை மாவட்ட பாபநாசம் வட்ட கோடுகிழி. வேங்கடசாமி, ஆயிபொன்னு அம்மாள். பாபநாசம் கழக உயர்நிலைப்பள்ளி (53), அண்ணாமலை பி. ஓ. எல். (57), எம். ஓ எல். (58). கீழ்க்கலைத் துறை இலக்கிய மன்றச்செயலர், ராசா சர் அண்ணாமலைச் செட்டியார் நினைவுப் பரிசு பெற்றவர். 60இல் பூண்டி புஷ்பம் கல்லூரியில் விரிவுரையாளராகச் சேர்ந்து 84 சூன் முதல் துறைத் தலைவர். 'இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் இயற்கைப் புனைவு-சிறப்பாக பாரதிதாசன் வாணிதாசன்' என்றாய்ந்து 82இல் டாக்டர் பட்டம். நூல்: 'கல்லூரி இலக்கணமும் கட்டுரைப் பயிற்சியும், பல கட்டுரைகள்.

பேசுவதில் பிரியர், பாகெனப் பேசுவார். அருவியில் உருண்டுவரு கற்கள் போல் சொற்கள் சுருண்டு வரும். தங்கு தடையின்றி வெள்ளம்போல் வார்த்தைகள் விளையாடி வரும். சரளமான நடை, எதுகையும் மோனையும் இழைந்து வரும். கேட்போரைத் தம் பேச்சில் கவர்ந்து கலந்திடச் செய்வார். மொத்தத்தில் நாநலம்மிக்க **நாவலர்** எனத் தயங்காது கூறலாம்

**இரா இளவரசு :** 12-6-1939. கேரளப் பல்கலைக் கழக மாணவர். Descriptive grammar of Perum Kathai என ஆராய்ச்சி செய்து 74இல் டாக்டர் பட்டம் பெற்றவர். தஞ்சை சரபோசி மன்னர் கல்லூரியில் பணியாற்றி இதுபோது சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர். நல்ல கூர்த்த மதியர். ஆய்வு மனத்தர். கரகர கம்பீரக்குரலில் கலகலப்பாகப் பேசும் பெற்றியர். காரண காரியத் தொடர்புடன் கணீரென இருக்கும். இளைஞர்களும் மாணவர்களும் பின்பற்றும் பெற்றியதாக அமையும் இவர் பொழிவு தமிழ்ப் பேராசிரியர்களில் குறிப்பிடத்தக்க மேடை வல்லார். கவிஞரும்கூட; 'விடுதலை' (தொகுப்பு). துணைவியாரும் தமிழ்ப் பேராசிரியரே, வேலம்மாள். **முகவரி:** ஆர் என் 5, பட்டினப்பாக்கம், சென்னை-28.

**எஸ். பி. அண்ணாமலை :** 1924. குமுதம் ஆசிரியர். எழுத்தி ஏற்றமுற்றொளிர்தல் போன்றே நிரந்தினிது சொல்லு...

வல்ல நல்ல பேச்சாளர். 50களில் அரும் பேச்சாளர். ஒய். எம். சி. ஏ. பேச்சுப் போட்டியில் முதற் பரிசும், ராஜா சர் அண்ணாமலை செட்டியார் கோப்பையும் வென்றவர். 6, ஹன்டர்ஸ் சாலை, வேப்பேரி, சென்னை-7 (682836)

**சுப. அருணாசலம் :** 4-10-1922. பள்ளத்தூர். பி. காம் பயின்றவர். 52 முதல் கருவூரில் உறைகிறார். நடை உடை பாவனை அனைத்திலும் கம்பன் அடிப்பொடி கணேசனாரே! பள்ளத்தூரில் முத்தப்பா நூல் நிலையம் நிறுவியவர்; உடுமலைப்பேட்டையில் உறைந்த காலை பாரதி கழகம், தமிழ்ச் சங்கங்களைச் சுழற்றியவர். கருவூரில் கம்பன் கழகம், தமிழ் எழுத்தாளர் சங்கம், திருப்புகழ்க் கழகம் போன்றன தோற்றித் தொடர்கிறார். நல்ல நடிகர், பரிசு பல பெற்றுளார்; காந்திய வாதி, கதரே அணிவார். பன்முறை சிறையில் உறைந்துளார்!

பேச்சே இவர் மூச்சு. கணீர்க் குரலில் கருத்துச் செறிவுடன் முறையும் செறிவும் கொண்டு நிறைவாகப் பேசும் நலத்தர். வானொலியில் தேனொலி வார்த்திடும் வல்லாளர். இலக்கியம், சமயம் இரண்டிலும் சதுரர். மேலை இலக்கியங்களை மேற்கோள் காட்டி மேடைத் தமிழுக்கு மெருகேற்றும் மிடுக்கு மிக்கவர். வள்ளலாரைப் புதிய கோணத்தில் விளக்கிடும் வளமையர். நிரம்பப் பயின்றவர், அயின்றதை நயமுடன் நவின்றிடும் நா வீறு படைத்தவர். 'முத்தமிழ்ச் செல்வர்', 'கற்கண்டுச் சொற்கோ', 'தமிழ்க் கொண்டல்', 'வீர விவேகானந்தர்' போன்ற பட்டங்கள் சூட்டப் பெற்றவர். படைப்பு: தமிழன் கண்ட மதம், நேப்பாளம் — அமர்நாத் பற்றிய பயணக் கட்டுரைகள். கண்டிப்பும் தறுகண்மையும் மிக்க இவர் **முகவரி:** ராஜாஜி சாலை, திண்ணப்பா திரையரங்கம். கருவூர்-639001.

**மெ. சுந்தரம்:** 21-11-1925. புதுக்கோட்டை வேந்தன் பட்டி. மேலைச் சிவபுரி செந்தமிழ்க் கல்லூரி மாணவர். கோனாப்பட்டு உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்து, அண்ணாமலையில் பி.ஓ.எல். பயின்று அங்கேயே விரிவுரையாளராக விளங்கி, மதுரைத் தியாகராசர் கல்லூரியில் துணைப் பேராசிரியராகத் திகழ்ந்து, மாநிலக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராகப் பிறங்கி 84இல் ஓய்வு பெற்றார். செட்டி நாடு, தமிழ்ப்பாவை இதழாசிரியராகவும் விளங்கியுள்ளார். அண்ணாமலையில் Studies in Kalladam ...ல் எம்.லிட்; சென்னைப் பல்கலைக் கழகத்தில் Historical

material in Sankam Litt 62இல் டாக்டர் பட்டமும் பெற்றவர். கபடறியாதவர், குழந்தையுள்ளத்தர், நூல்கள்: கட்டுரை மாலை, கலைஞரின் கவிதைச் சிற்பம், சங்ககாலத் தமிழரின் கடற்செலவு; நாட்டுப்புறப் பாடல்கள் (பெருந்தொகுப்பு), நாட்டுப் பாடல் திறன்.

பேச்சிலே இன்பம் காண்பவர். வார்த்தைகள் வற்றா ஊற்றென வந்து விழுந்து கொண்டே இருக்கும்; இடையிடையே சில பாடல்களும் ஆலாபனைகளும் இருக்கும். பகுத்தறிவுப் போக்கும் முன்னேற்றக் கழக முனைப்பும் கனைத்து வரும். 60, 84இல் மலேசியா சிங்கப்பூர் சென்று இலக்கியப் பொழிவுகள் நிகழ்த்தித் திரும்பியுள்ளார். கலைஞர் கருணாநிதியிடம் காண்தகு காதல் கொண்டவர், அதனால் இன்னல்பட்ட வரும்கூட! நா நலம் மிக்கவர். நாட்டுப்புறவியலில் 30 ஆண்டுகள் உழைத்துச் சேகரித்தும் ஆராய்ந்தும் வருபவர். 'விளக்கு மாற்றால் விளக்குக' என வினாக் குறித்து பரபரப்பு உண்டாக்கியவர்!

**கண. சிற்சபேசன்:** *15-4-1934.* தேவகோட்டை. மாநிலக் கல்லூரி தமிழ் முதுகலை 57 ல் பயின்று மதுரைத் தியாகராசர் சரசுவதி நாராயணன் கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியராகப் பிறங்கி இதுபோது சக்தி பைனான்ஸ் மேலாளராக விளங்குகிறார். தித்திக்க தித்திக்கப் பேசும் சிந்தையாளர். சிரிக்கச் சிரிக்கப் பேசும் சொல்விற்பன்னர். பேசத் தொடங்கிய சில நொடிகளிலேயே அவையோரைத் தம் வயம் இழுத்துப் பிணித்திடும் பேராற்றலர். தமிழை ஆழ்ந்து கற்றவர். பட்டி மன்றப் பாங்காளர்; மதுரைப் பக்கல் கொடி நாட்டியவர். திருவடிப் பதிகம் வைத்துக் கண்கொடுத்தவர் (சிறுகதை), பூம்புகார் முதல் இமயம் வரை (சிலம்பின் ஆய்வு) போன்றன படைத் தளித்தவர். **முகவரி:** 24, சேக்கப்ப செட்டியார் தெரு, தேவகோட்டை; 6, எட்டாவது டிரஸ்ட் குறுக்குத் தெரு, மந்தைவெளி, சென்னை-28.

மேடைத் தமிழ், தமிழ் வளர்ச்சியின் ஒரு பகுதியாக அமைவது. நீண்டநேரம் பேசி மகிழச் செய்யும் ஆற்றலர் ஆறுமுக நாவலர். ஞானியாரடிகள். நாகர்கோவில் ஆறுமுக நாவலர், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர். இதனைக் கலையாகவே வளர்த்தவர்கள் தமிழ்த் தென்றல் திரு.வி.க.வும் தமிழ்... மலையாம் மறைமலையடிகளும், சத்தியமூர்த்தி, பெரியார், ம. பொ. சி., குன்றக்குடி அடிகளாரும். முன்னேற்ற

கழகத்தின் மூலதனமே பேச்சுக் கலைதான். கழகப் பேச்சாளரே மேடைக்கு மிடுக்கும், பேச்சுக்கு மெருகும் ஏற்றியவர்கள்!

அழகு தமிழில் எதுகை மோனை இழைந்தோட அருந் தமிழ் வளர்த்த பெருந்தமிழ்ப் பேச்சாளர் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை. பெருஞ்சொல் விளக்கனார் அ. மு. சரவண முதலியார், தமிழ்க் கடல் ராய. சொக்கலிங்கம் இரு சுடர்கள். முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் நறுக்காக வெட்டென அடித்துப் பேசும் ஆன்றோர். கி. வா. ஜகந்நாதன் கொஞ்சு தமிழில் கோத்துப் பேசும் அரிய பெரியார். தெ. பொ. மீ. பல்கலைப் பேராறு-கருத்து வெள்ளம். மு. வ. அமைதி ஓடை, மேடையிலே வீசும் மென் காற்று.

டாக்டர் அ. சிதம்பரநாதன் குளுமையும் குழைவும் கனிவும் நிறை குளிர்தென்றல்; ப. ஜீவானந்தம், வீறு தோன்றப் பேசிடும் சூறாவளி. ம. பொ. சி. மேடைப் பேச்சு மன்னர், புதிய சிந்தனை புதுமைக் கருத்துக்கள் புதிய பார்வையில்-பாங்கில் பளிச்சிட உணர்வூட்டிப் பேசும் ஒப்பரிய தமிழமுதம்.

எம். ஜி. ஆர். நாடகத் துறையில் நாநலம் பெற்றவர். நெஞ்சம் உவக்கக் கொஞ்சிப் பேசுவார், அந்நாளில். இராம. வீரப்பன் சிந்தனை சிலிர்க்கும் கருத்துக்கள் மிளிரும் கட்டான பேச்சாளர். தா. பாண்டியன், கோ. கலிவரதன், டி. செங்கல்வ ராயன், இலக்கியத் தென்றல் அடியார், க. இராசாராம், எல் கணேசன், துரைமுருகன், ரகுமான்கான், வை. கோபால சாமி, புலவர் அறிவுடைநம்பி, இரா. ஜனார்த்தனம், அ. இராமமூர்த்தி, திண்டிவனம் ராமமூர்த்தி, துறவி இளங்கோ வன், முரசொலி மாறன், டி. ராஜேந்திரன் முதலியோர் போற்றத்தக்க பெருமைமிகு பேச்சாளர்கள்.

சிலம்பொலியாரும் அவ்வையும் இற்றைநாள் இரட்டையர். கிரிதாரி பிரசாத் அயராது விறுவிறுப்புடன் கொட்டிடும் அடைமழை. திருக்குறளார் வயிறு வலிக்க, சிரிக்க வைத்துப் பின் சிந்திக்க வைக்கும் நகைச்சுவை நாயகர். அடிகளார் சிந்தனைக் கதிர்கள் வீச அளவை நூன் முறையில் ஆர்வ மூட்டிப் பேசித் தொகுப்புரையானும் அவையோரைக் கவரும் காந்தர். அவ்வை துரைசாமிப் பிள்ளை பண்டிதர் மரபில் பாங்காகப் புதுமை கதுவப் பேசும் புலமையர். வெள்ளை வாரணனார் மரபில் காலூன்றிக் கொஞ்சு தமிழ் கொஞ்சப் பேசும் நெஞ்சர்.

பேரா. க. கோவிந்தராசனார் (பி. யு. சின்னப்பாபோல்) இசையுடன் முழங்கும் எடுப்பான இலக்கியப் பேச்சாளர். கா. மீனாட்சிசுந்தரம் அமைதி தவழ அகவய நூன் முறையில் அகங் கொள்ளுமாறு உரையாற்றும் ஒண்மையர். நா. பார்த்த சாரதி மென் குரலில் மிடுக்குடன் பேசுவார். ஜெயகாந்தன் சிந்தனை முழங்கி வரத் துணிவுடன் ஆணித்தரமாக அடித்துப் பேசும் அடலேறு.

புலவர் க. முருகையன் இசை பொங்க நடிப்பு ஓங்கப் பேசும் அருமையர். புலவர் ந. இராமநாதன் சிரிக்கச் சிரிக்கப் பேசி வாழைப்பழத்தில் ஊசி நுழைப்பது போல் நெஞ்சிற் கருத்தைப பதிப்பார் கோ. வேங்கடாசலம் சிரிக்க வைத்துச் சிந்திக்கச் செய்யும் சிறப்பினர். தமிழண்ணல் சிந்திக்க வைத்துச் சிரிக்க வைக்கும் சீர்மையர். சுப. அண்ணாமலை 'இற்றை நாள் நற்றமிழ் ஞானசம்பந்தர்'; கன்னல் சுவை கனிய மென்மையுடன் பேசும் மேன்மையர்.

நெ. து. சுந்தர வடிவேலர் உணர்வு பொங்க அறிவு பூர்வ மாகப் பேசும் ஆற்றலர். மா. நன்னன் விழிப்புடன் வீரம் பொங்க, சிந்தனைகள் மின்ன மிடுக்குடன் அடுக்குவார். ந. சஞ்சீவி வெட்டு ஒன்று துண்டு இரண்டெனக் கட்டறுத்துக் சருத்துக்களை வைப்பார். அறிவழகும் ஆய்வுநெறியும் தோயப் பீடுடன் பேசும் பெற்றியர். சி பா. விரைவும் விறுவிறுப்பும் விரவிவரக் கலகலப்புடன் நிரல்படப் பேசும் நா நலத்தர். பொற் கோவும் மா. செல்வராசரும் அறிவுத் திறமும் முறபோக்கு முனைப்பும் முகிழ்க்க முறையாகப் பேசுவர்.

அ. ச. ஞானசம்பந்தனார் வேகமும் விவேகமும் வர அனா யாசமாக அலட்டிக் கொள்ளாமல் கருத்தைக் குழைத்துத் தருவார். தமிழ் அகத்தியர், துணிவு மிகுந்தவர். கண்ணதாசன் மளமளவென மலையருவியெனக் கருத்துப் புனலெனக் கொட்டு வார். சொ. சிங்கார வேலனார் சுந்தரத் தமிழில் சொன்மாரி பொழிவார் தி. வ. காந்திமதி நாதன் சிந்தித்துச் சீர்மையுடன் செப்பும் செம்மையர். இரா. செல்வ கணபதி கருத்து முத்துக் கள் உருண்டுவரக் கனிதமிழும் புரண்டுவரப் பேசும் காந்தப் பேச்சாளர்.

சாலையார் வரையறுத்து வக்கணையுடன் விளாசுவார்; சாலினியாரோ உணர்வு உந்தக் கருத்துக் கச்சிதத்துடன் மழை யெனக் கொட்டுவார். செ. சொ. ராசன் இனிய

சொற்றிறத்தர். ஆறு. அழகப்பன் புதிய சிந்தனை பிலிற்றப் பொங்கு தமிழில் பொழிவார். ஜி. ஆர். கிருட்டிணமூர்த்தி நகையுடன் நளினமாக வளமுடன் பேசி வசீகரித்து விடுவார்.

பூண்டி துளசி ஐயா வாண்டையார் தத்துவம் தவழக் காரண காரியத் தொடர்புடன் கழறுவார். ந. மெய்ப்பொருள் உணர்ச்சி கொப்பளிக்க உத்வேகத்துடன் உரிய கருத்துக்களைக் குழைத்துக் கொடுப்பார். பாவாணர் பெருஞ்சித்திரனார் பேச்சு தனித்தமிழ்த் திராணியும் தன்மான வுணர்வும் பொங்கி வரும். பி. விருத்தாசலம் உருவிற்கேற்ற உரத்த கரத்த குரலில் தங்குதடையின்றிச் சொற்பொழிவார். எஸ். கே. காமராசன் பேச்சில் தமிழின் ஆழ அகலம் காணலாம். தெ. ஞானசுந்தரம், ஆ ஜெகந்நாதன், சா. அமீது, ஈரோடு தமிழன்பன், கு. சிவ ஞானம், க. திருமாறன், புலவர் மருதவாணன், பழநி இளங்கம்பன், பழநி அரங்கசாமி, ராசிபுரம் வேங்கடராமன், மு. ராமசாமி ரெட்டியார், சோமசுந்தரம், மல்லசமுத்திரம் வேங்கடாசலம், மனம் சந்திரசேகரன், மு. மு. இஸ்மாயில், எஸ். மகராஜன், என். கிருட்டிணசாமி ரெட்டியார், பு. ரா. கோகுல கிருஷ்ணன், எஸ் எஸ். ராஜேந்திரன், கணேசகோபால கிருட்டிணன் இப்படிப் பட்டியல் நீளும்.

மகளிரில் சிவகாமசுந்தரி, அரசு. மணிமேகலை, சரசுவதி ராமநாதன், காந்திமதி, ருக்மணி, இளம்பிறை மணிமாறன், நிர்மலா சுரேஷ், புனிதா ஏகாம்பரம், தாயம்மாள் அறவாணன், செளந்தரா கைலசசம், டி. என். அனந்தநாயகி, சக்தி பெருமாள் நல்ல வல்ல பேச்சாளர்கள். பேச்சே மூச்சு; பேச்சைக் கலையாக்குவோம்.

## 85. இலக்கணத் தமிழ்

இலக்கியம் தாய் என்றால், இலக்கணம் சேய் எனலாம். முன்னது எள், பின்னது எண்ணெய். பேரகத்திய மேற்கோள் பாட்டு இதனைத் தெளிவுபடுத்துகிறது:

இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே,
எள்ளின் றாகில் எண்ணெயும் இன்றே;
எள்ளினுள் எண்ணெய் எடுப்பது போல
இலக்கியத் தினின்று எடுபடும் இலக்கணம்.

இலக்கியம் பல்கிப் பெருகிய காலத்தில், மொழியினை ஒழுங்கு படுத்த முனைந்த மூதறிவாளர் கண்டமுறையே இலக்கணம்,

'இலக்கியம் உடல் என்றால் இலக்கணம் குருதி' என்றார் கால்டுவேலர்.[1]

இலக்கணம், 'லக்ஷணம்' எனும் வட சொல்லின் தமிழ் வடிவன்று. இலக்கு + அணம் = இலக்கணம். இச்சொல்லை முதலில் ஆண்டவர் தொல்காப்பியரே. புலம், இயல் என்பன வும் இதே பொருளின. வடமொழியில் வியாகரணம் என்பர்.

**ஏற்றம்:** 'பிழையறப் பேசவும் எழுதவும் உதவுவது' (ஆறுமுக நாவலர்). எழுத்தையும் பேச்சையும் ஒழுங்குபடுத்தும் உயர் கருவி. 2. ஒரு மொழியின் கட்டுக்கோப்பு மாறாது கட்டிக் காத்துச் செம்மை செய்கிறது. 3. நூற்களை நன்கு படித்துணர உதவும். 4. பொருளினை நன்கு புரிந்துகொள்ளச் செய்யும். 5. செய்யுள் வழக்கோடு பேச்சு வழக்கிற்கும் மிகு இன்றியமையாதது.

இலக்கணம் மொழியின் பிழிவே தவிரச் சட்டமன்று. இதைக் கண்டு அஞ்சவேண்டியதோ அகல வேண்டியதோ இல்லை. இஃதோர் அறிவியல் நெறி. சிலர் இதற்கு அடிமை யாகி எழுதவும் முடியாது பேசவும் இயலாது போகின்றனர். அதில் உயிர் இல்லை. வடிவம் இருக்குமே தவிர வண்ணம் இராது இவர்கள் இலக்கணத்தை விளக்கெண்ணெய் ஆக்கி விடுகின்றனர்; வெறுப்பை விளைத்து விடுகின்றனர்.

இன்னும் சிலர் இலக்கணம் வேண்டா, வேண்டவே வேண்டா, தேவையும் இல்லை என்கின்றனர். ஆற்றின் கரை போல்வது, கரை வேண்டா என்பார் உண்டா? இலக்கணம் இன்றியமையாதது, மிகமிக இன்றியமையாதது.

மாந்தன் வளர்வது போன்றே மாற்ற முறுவது போலவே, மொழியும் வளரும் மாறும். எனவேதான், பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல, கால வகையினானே என்கிறது நன்னூல்.

இலக்கண நூல்கள் மிகுந்த மொழி நம்மொழி. தமிழில் கிடைக்கும் பழம் நூல்கள் யாவும் இலக்கணங்களாகவே உள்ளமை உன்னவேணும். பொதுவாகச் சமயங்களே நிரம்ப நூல்கள் செய்துள; சிறப்பாகச் சமணத்தின் கொடையே மிகுதி எனலாம். இருக்கும் நூல்கள் 32, மறைந்த நூல்களோ 53!

---

1. Literature is the body of a Language, Grammar is the blood of the Language - Dr. Caldwel.

இத்துணை நூல்கள் வந்தும் இன்னும் இக்காலத்திற் கேற்ப இந்நாள் வரையிலான இலக்கணம் எழுதப் பெற வில்லை. இது பெருங்குறை, மாபெறும் குறை. தொல், நன்- இரண்டையும் வைத்துக்கொண்டு இந்நாளையத் தமிழுக்கு மேல் வரிச் சட்டமிடுவது பொருந்துவதன்று காலங்கள் மாறி விட்டன. கருத்துக்கள் ஊறிவிட்டன, புதியன புகுந்து விட்டன. அப்படியிருக்க, பழம் அளவுகோல் கொண்டு பைந் தமிழினை இன்று அளப்பது எங்ஙனம் ஆகும்? எதையும் இன்று வரையிலானதாக்க (upto date) வேண்டாவா? பிற்கால- தற்காலப் போக்கினைப் பிரதிபலிக்கும் இலக்கணங்கள் எழுதப் பெற வேண்டுமே.

காலுக்கேற்பக் காலணியே தவிர, தலைக்குத்தான் தொப்பியே தவிர, மாற்று நிலையன்று. பழம் சட்டை பயன் படுமா? சகரம் மொழிக்கு முதல் வராது என்றால், இன்று வருகிறதே! காலத்திற்கேற்பக் கோலம் புனைந்து வந்துளது கன்னித் தமிழ். அந்தக் கோலத்தின் அளவுகோல் அமைக்க வேண்டாவா, இந்தத் தேவையான பணிக்குத் தம் பங்கினைத் துணிந்து ஆற்றியுள்ளார் திருவாரூர் **சரவணத் தமிழன்.**

புதுக்கவிதைக்கும் திரைத்தமிழுக்கும்கூட இலக்கணம் இயம்பி விட்டார். முதியவர்க்கும் பிள்ளைத் தமிழ் என்றால், பாதியில் மறைந்தவர்க்கு முதுவைத் தமிழ் வேண்டுமே என வரைவு செய்தார். இதற்கு மருத்துவர் மறையரசன் பட்டுக் கோட்டையார் முதுமைத் தமிழ் வரைந்தார்.

அண்ணாமலை தமிழ்த் துறை இலக்கணக் கருத்தரங்கம் நிகழ்த்திப் புது இலக்கணப் பனுவல்கள் வரையில் ஆய்ந்து வரு கிறது. இலக்கணச் சிந்தனை என நூல்களும் வெளியிடுகிறது. சோம 'இளவரசு' இலக்கணத்துக்கே வரலாறு வரைந்து விட்டார்.

இலக்கணத்தை எளிமைப்படுத்திக் காட்டுவதும், புத்துரை காண்பதுமான முயற்சிகள் முனைந்து நடக்கின்றன. சிக்கல்கள் சிந்திக்கப் பெறுகின்றன, தீர்வுகள் தரப்படுகின்றன. வினா விடைகள், விளக்கங்கள் வரையப்படுகின்றன. இத்துறையில் ஈடுபட்டு உழைத்த சிலரை எண்ண வேணும்.

பாயிர விருத்தி படைத்தார் இலக்கணக் கடல் சோழ வந்தான் அரசஞ் சணமுகனார். மறைமலையடிகள், திருமயிலை சண்முகம் பிள்ளை, சோமசுந்தரம் பிள்ளை,

சுன்னாகம் குமாரசாமிப் பிள்ளை போல்வார் இலக்கணக் கட்டுரைகள் எழுதியுள்ளனர். செந்தமிழ், தமிழ்ப் பொழில், செந்தமிழ்ச் செல்வி, ஆய்வுக் கோவைகளில் கட்டுரைகள் வந்துள. மொழியியல் ஒளியில் இலக்கணத்தையும் அலசும் நன்னிலை உருவாகி வருகிறது.

தொடத் தயங்கும் தொல்காப்பியத்தை மிக எளிமைப் படுத்தி இரு நூல்கள்-பயப்படாதீர்கள், வாழும் தமிழ் எழுதி யுள்ளார்.கி.வா.ஜ. அவற்றைப் படித்துவிடின்,தொல்காப்பியம் செல்லக் குழந்தை ஆகிவிடும். ச.வே. சுப்பிரமணியனாரின் தமிழிலக்கண ஒப்பாய்வான 'இலக்கணத்தொகை' தலையாயது நிலையானது.

ஆ. பூவராகம் பிள்ளை, இலக்கண நிறைகடல் அ. கந்த சாமிப் பிள்ளை, பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, நாவலர் பாரதியார், தேவநேயப் பாவாணர், லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார், ஆபிரகாம் அருளப்பன், வ.சுப. மாணிக்கம், ஆ.கு. ஆதித்தர், தொல்காப்பியச் செல்வர் கு. சுந்தரமூர்த்தி, தா.ம. வெள்ளைவாரணம், மதுரை கு மா. திருநாவுக்கரசு, பண்டித ச.சாம்பசிவன்,மோசசு பொன்னையா,சிவலிங்கனார், நடேச நாயக்கர் போன்றார் இலக்கணத்தை எளிமைப் படுத்தியும், சுவைப்படுத்தியும்,தெளிவுடையதாக்கித் தந்துளர். ஆ. சிவலிங்கனாரும், கு. சுந்தரமூர்த்தியும் உரைவகுத்து முடித் துளர். மதுரைப் பல்கலைக் கழகமும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் கருதத்தக்கன.

கலாநிலையம் கே. இராஜ கோபாலாச்சாரியாரின் இலக்கண விளக்க நூல்கள் சிறந்தவை. மே.வி. வேணு கோபால பிள்ளை ஒப்பாரும் மிக்காருமின்றி ஒளிர்ந்தார், இலக்கணத் தாத்தா என்றேத்தப் பெற்றார். இதுபோது வ சுப. மாணிக்கனார் தொல்காப்பியத் தகவினராகத் திகழ் கிறார். அதனை இலக்கியமாக விளையாட்டாக விளம்புதலில் வல்லவர். தொல்காப்பியத்தைக் கண்டு அஞ்சாது திகைக் காது நெருங்கலாம் என்ற நினைப்பினை இன்றும் நிலை நிறுத்தி வருபவர்.

வரவர இலக்கணம் இனிதே நடத்துவோர் அருகிவரு கின்றனர். எதற்கு என விலக்குவோரே பெருகி வருகின்றனர். கல்லூரிகளில் இந்நாளில் இலக்கணம் நடாத்துவோர் இல்லாகி வருகின்றனர்! இப்போதும் இலக்கணத்தை நாடித் தேடி நடத்துவோர் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருப்பது

தமிழன்னையின் தவப்பேறே! சாமி. தியாகராசன், சீ. சுந்தரேசன், கு.வெ. பாலசுப்பிரமணியன், போன்றாரை நன்றியுடன் நினைந்து போற்ற வேணும். இலக்கியத்தையே இலக்கண மாதிரி ஆக்குவோரிடையே, இலக்கணத்தையும் இலக்கியமாக நடாத்துவோரை நினைக்கத் தானே வேண்டும்?

## 86. திரைத்தமிழ்

தமிழின் இருபெருங் கால்களான உரைநடை செய்யுள் இரண்டும் ஆன்றோரும் சான்றோரும் சென்ற 19 நூற்றாண்டு களாக வளர்த்தனர். எழுத்தாலும் பேச்சாலும் பரவப் பெற்றன. இது ஒரு நிலையோடு நின்றுவிட்டது; மக்களிடம் முழுதும் சென்று அடைந்தது என்று இயம்பிட முடியாது. இந்த நூற்றாண்டின் மிகச் சிறந்த Mass media திரைப்படம், மக்களைப் பெரிதும் முக்கால்வாசி கவர்ந்திழுத்திருப்பது. இந்தக் காந்தத்தின் மூலம் கன்னித் தமிழ் வளர்த்திடுவது எளிமை. மிகு பயன் மண்டும். முன்னம் கே. பாலச்சந்தர் ஒரு திருப்பம் தந்தது போல், இன்று பாரதிராஜாவும் பாக்கிய ராஜும் புரட்சி செய்து எளிமையாக்கி இனிய புதுமை செய்து விட்டனர். இளையராஜா சொல்லவே வேண்டியதில்லை. தம் மேதமையால் தனியுகம் படைத்து விட்டார்.

இந்த மக்கள் வாயிலாக அமையும் மாபெரும் சக்தியால், பட்டிதொட்டி யெங்கும் பைந்தமிழ் புழங்க, கடைமாந்தனி டமும் கன்னித் தமிழ் சென்றடைய முடிகிறது. பாடல் உரை யாடல் மூலம் தமிழ் தழைக்கிறது; முன்னதன் மூலம் கவிதையும் பின்னதன் வாயிலாக உரைநடையும் இரு முனைகளாகக் கிளைக்கின்றன.

கவிதை பாபநாசம் சிவன், உடுமலை நாராயண கவி, சுந்தரவாத்தியார், தஞ்சை ராமையாதாஸ், அ. மருதகாசி, கம்பதாசன், கு. சா. கிருஷ்ணமூர்த்தி, கு. மா. பாலசுப்பிர மணியம், சுரதா, கொத்தமங்கலம் சுப்பு, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், தஞ்சைவாணன், கே. டி. சந்தானம், ஆலங் குடி சோமு, கண்ணதாசன், பஞ்சு அருணாசலம், திருச்சி தியாகராசன், கா. மு. ஷெரீப், முகவை ராசமாணிக்கம், வாலி புலமைப்பித்தன், பூவை செங்குட்டுவன், முத்துலிங்கம்; ஈரோடு தமிழன்பன், வைரமுத்து, மேத்தா, இளையராஜா, கங்கை அமரன், ஏர்வாடி ராதா கிருட்டிணன், குருவிக்கரம்பை சண்முகம் போன்றார் போற்றி வளர்க்கின்றனர். (விவரம் கவிஞர்கள் தலைப்பில் காணலாம்).

இளங்கோவன், அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, ஸ்ரீதர், சோ, கே. பாலச்சந்தர், கே. எஸ். கோபாலகிருஷ்ணன், ஏ. பி. நாகராசன், டி. ராஜேந்தர், பாரதிராஜா, பாக்கியராஜ் போன்றார் உரையாடல் மூலம் உரைநடை வளர்த்து வருகின்றனர்.

இந்த இரு வகையில் தமிழ் முழுவதுமாக வளர்வதைத் 'திரை வளர்த்திடும் தமிழ்' என்றே ஆய்ந்து பெருநூல்கள் படைத்து விடலாம், தனிக் கூறுகளையும் துருவி ஆராயலாம்.

**இளங்கோவன்** (தணிகாசலம்) வசனம் வரைவதில் வல்லவர். முன்னோடியாக விளங்கியவர். எல்லாப் படங்களிலும் இவரே வசனகர்த்தா. 'திரை வசனத் தந்தை' 'வசன வழி காட்டி' என்றே விளம்பி விடலாம். அப்படிக் கொடிகட்டிப் பறந்தவர். கண்ணகி, அசோக்குமார், மகாமாயா எனப் பல படங்கள். அந்நாளில் இவரே வசனகர்த்தா.

வசனம் கேட்டு ரசிக்கவும், கைதட்டவும் செய்தனர்; கச்சிதமான வசனம் (dialogue) வரைந்து திரையுலகில் புகழ் பெற்று ஒளிர்ந்தார். எந்த அளவுக்கு வளம் பெற்றுக் கொடு முடியில் விளங்கினாரோ, அந்த அளவுக்கு வறுமையில் வாடி வதங்கினார். இளங்கோவன், கம்பதாசனுக்கு வந்த வறுமை போல, யாருக்கும் வரக்கூடாது. 'அன்று ரேஸ் குதிரை ஓடியது, இன்று சட்கா வண்டி கூட ஓட மாட்டேன்கிறதே' எனக் கலங்கியவர்.

பெரிய உருவம் நன்றாகச் சாப்பிடுவார். உப்பு கூடாது. அல்வா, ஜிலேபி, குலோப்ஜான் என அன்று 5 ரூபாய்க்குத் தின்பார். சிகரெட் ஊதிக்கொண்டே இருப்பார். இழுத்து விட்டு விடுவார். உள்ளே வாங்கமாட்டார். நிறையப் படிப்பார். பின் 50 ரூபாய்ப் புத்தகத்தை 5 ரூபாய்க்கெல்லாம் விற்று வாழ்க்கையைத் தள்ளினார். பெரிய குடும்பி, இரு மனைவியர். ஏழு எட்டுக் குழந்தைகள். கடைசியில் மேற்கு மாம்பலத்தில் ஒரு சந்தில் ஓர் அறையில் வாழும் நிலை.

ஒரு முறை டாக்டர் மு. வ. வுடன் முதல் வகுப்பில் ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தபோது, 'திரையுலகம் தனி-மது மங்கையில் முடிந்து விடுகிறது. இனி என்னால் திருத்திக் கொள்ள முடியாது' என நொந்து கொண்டாராம். வாழ்வின் உச்சாணிக் கொம்பில் வதிந்தவர், அதல தளத்திலும் வீழ்ந்து வறுமையில் சிக்கி மக்கி மடிந்து போனார்!

**டி. கே. சுந்தர வாத்தியார்:** 1900-64. தஞ்சை கன்னையா. கருப்பாயி அம்மாள் (நடிகை), பள்ளியே செல்லவில்லை, தாமே தமிழ் இலக்கியம் பயின்றவர். கருப்பாயி அம்மாள் நாடகக் கம்பெனி. ஆர்மோனியத்தில் நல்ல பயிற்சி. அந்தக் காலத்தி லேயே 1 லட்சம் வாங்கி கே. பி. சுந்தராம்பாள் நடித்த 'நந்தனார்' படத்துக்குப் பாடல்கள் பாடினார், ஆர்மோனிய மும் வாசித்தார். இதுவே திரையுலக நுழைவு.

பிழைக்கும் வழி, பாண்டுரங்கா, கம்பர் - கதை வசனம் பாடல். உத்தமபுத்திரன் (காத்திருப்பான் கமலக் கண்ணன் அங்கே), பானை பிடித்தவள் பாக்கியசாலி (புருஷன் வீட்டில் வாழப் போகும் பெண்ணே), களத்தூர் கண்ணம்மா (அம்மா வும் நீயே, அப்பாவும் நீயே), 60 படங்களுக்கு 500 பாடல்கள் பாடியிருப்பார்.

ஜாதகம், சபாபதி, என் மனைவி அனைத்துப் பாடல்களும் பக்திரசக் கீர்த்தனைகள்; பாடாத பெரிய நடிகர்களே இல்லை. கண்டிராஜன நாடகத்தில் 12 பாடல்கள்; டி. எஸ். துரைராஜுக்குக் 'கலியுகம்' நாடகம் எழுதித் தந்தார். 'தேயிலைத் தோட்டத்திலே... வெள்ளையருக்கு எதிராக எழுதிய பாட்டு; மிகு புகழானது. தடை செய்யப்பட்டது.

கலையுலகில் அடக்கமும் ஒழுக்கமும் உடைய ஒருவர் என்ற மதிப்புப் பெற்றவர். குடும்பம் பெரிது. மனைவி கோவிந் தம்மாள். மக்கள் பதின்மர். **சுந்தரக்கண்ணன்** (1929) கவிஞர். அன்பே தெய்வம், மர்மவீரன், யானை வளர்த்த வானம்பாடி, யார் மணமகன் பாடல்கள்; உதவி இயக்குநர் ORWO Films **முகவரி:** 21, சீனிவாசப் பெருமாள் சந்நிதி, 3 ஆம் தெரு, ராயப்பேட்டை, சென்னை - 14. (அலு: 83424. வீடு 87403) இராமராஜ், ஏ. வி. எம். ஸ்டுடியோ துணை மேலாளர்.

**கே. டி. சந்தானம்:** 16-8-1917. குறிஞ்சிப்பாடி. தந்தை தனபால் நாயுடு. படிப்பு 8ஆம் வகுப்பே. நாடக முதல் ஆசான் குள்ளஞ்சாவடி சீனிவாச ஐயங்கார். சகலகலா வல்லவர், மகா மேதை; அடுத்த நிலையில் மோகூர் கந்தசாமி முதலியார். முதலில் நடிகர், பின் நாடகப் பாடலாசிரியர், பிறகு சினிமா நடிப்பும் பாட்டும். வேதாள உலகம் பாடல்கள், பாம்பாட்டி நாட்டியம் (லலிதா பத்மினி), மர்மயோகியில் 'மனதுக்கிசைந்த ராசா...' அறிஞர் அண்ணா கேட்டு ரசித்து 'நீண்ட காலத் திற்குப் பிறகு கேட்கிறேன், சினிமாவில் அரிது.'

அகத்தியர், நடந்தாய் வாழி காவேரி... இசையாய் தமிழாய் இருப்பவனே, தலைவா! தமிழ் முதல்வா... 'இந்த ஆண்டில் கேட்ட நல்ல பாட்டு (ரா. வே) அம்பிகாபதியில் -சிற்றின்பமே வரலாகாது, பேரின்பம்-பக்தி தொடர்பாகவே இருக்குமாறு 'சிந்தனை செய் மனமே... வடிவேலும் மயிலும் துணை' ஒரே மூச்சில் 4 ஆவர்த்தனம் நிரம்ப திருப்புகழ் மாதிரி அமைந்தது. புகழ்வாய்ந்த பாடல்கள்: கல்லெல்லாம் சிலை செஞ்சான் பல்லவ ராஜா, தனிமையிலே இனிமை காண முடியுமா?

இவர் பாடல்கள் படித்தோரால் பாராட்டுமாறு அமைந்து விட்டது ஞானமுள்ள கவிஞர் எனப் பெயர் எடுத்தவர். இசை ஞானம் ஓசை ஞானம் உள்ளவர். படத்தில் நடிகராக அறிமுகம் செய்தவர் ப. நீலகண்டன். 'இழந்த காதல்' நொண்டி - பண்டாரப் பாட்டு சுக வாழ்வு துன்பம் யாவும் என்றும் சதமெனலாமோ? அப்பாவாக 'கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி'. கடைசியாக நடித்தது 'அழைத்தால் வருவேன்'. கடைசியாகப் பாடல் எழுதிய படம் 'கிருஷ்ண லீலா'

44இல் மணம். தனலட்சுமி. 3 மகன் 2 பெண். வழிபடு கடவுள் முருகன். வெள்ளி மௌன விரதம். பரம்பரை வைணவர் **முகவரி:** பொன்னம்பலம் சாலை. சென்னை-78.

**அ. மருதகாசி:** 13-2-1920. தஞ்சை மாவட்ட சோழபுர கொள்ளிட வடகரையில் உள்ள குடிக்காடு. அய்யம் பெருமாள் **உடையார்:** மிளகாயி அம்மாள். 1-3 பாரங்கள் பாணாதுறை, 4-6 பாரங்கள் விட்டில் பிளவர் உயர்நிலைப்பள்ளி. சதாசிவப் பண்டாரத்தாரிடமும் (பாபநாசம் சிவனின் சகோதரர், வி. என். ஜானகியின் தந்தை) ராஜ கோபால ஐயரிடமும் பயின்ற பெருமையர். 38-40இல் குடந்தைக் கல்லூரி இன்டர். கலைமகள் உறைந்திடும் கலாசாலை... பாடிக் கொடுத்தது. பேரா. கே. சுவாமிநாதன் 'கட்டை வண்டி' Opera வுக்கும் பாடல் புனைந்து தந்தார்.

13 வது வயதிலேயே முதற்பாட்டு 'காமன் பண்டிகை'; 'அம்பரம் வாழ் தேவர்களும் உம்பர்பதி வானவரும்' என்ற 40 வரி வழிநடைப் பாட்டு. 42 இல் லட்சுமி பால கான சபா (எம். ஆர். ராதா), 47 இல் தேவி நாடக சபா, ஏ. கே. வேலன் 'சூறாவளி', கலைஞரின் 'ஒரே முத்தம்' நாடகப்பாடல். திருச்சி லோகநாதன் மூலம் மாடர்ன் தியேட்டர்ஸ் தொடர்பு. முதற் படம் 'மாயவதி' (49). பாகவதர் அழைக்க சென்னை செல்லல். இதுவரை 300 படம், 3000 பாடல்கள்.

சிறந்த பாடல்கள்: மணப்பாறை மாடுகட்டி, நீலவண்ண கண்ணா, ஏர்முனைக்கு நேர் இங்கே எதுவுமே இல்லே வண்ணத்தமிழ் பெண்ணொருத்தி, உலவும் தென்றல், வாராய் நீ வாராய், சத்தியமே லட்சியமாய், சமரசம் உலாவும் இடமே, ஆத்திலே தண்ணி வர, வசந்தமுல்லை போலே. முல்லை மலர் மேலே, கடவுள் எனும் முதலாளி, சம்பூர்ண ராமாயணப் பாடல்கள், 'ஜெகம் புகழும்... 53 வரிகளில் இராமாயணத்தையே சுருக்கித் தருகிறார். கண்ணதாசனுக்கு எவ்வகையிலும் சளைக்காத பெருங் கவிஞர். அதிகப்படியான பாடல் புனைந்தவர்.

படித்த நூல்கள்: கம்பராமாயணம், குற்றாலக் குறவஞ்சி, பாரதியார் பாடல்கள். 18 முறை பொன்னியின் செல்வனைப் படித்துளார். மணம் 40 சூன். மனைவி தனக்கோடி. 6 மகன்கள் 3 மகள்கள்.

கிராமீயம், தெம்மாங்கு, தாலாட்டு, காதலர் டூயட். பொதுவுடமை, தத்துவம் என்ற வகையில் அமைவன. 68 இல் 'கலைமாமணி' விருது. 69 இல் சிறந்த பாடலாசிரியர் (துணைவன்) தமிழரசு பரிசு. நல்லவர், நல்ல ரசிகர், புத்திசாலி, எல்லோரும் நன்றாக இருக்கவேணும் என நினைப்பவர். மாடர்ன் தியேட்டர்சில் இவரும் கா. மு. ஷெரிபும் இரட்டைக் கவிஞர்கள். இவரது பாடல் தொகுப்பு வெளிவந்துளது.

**முகவரி:** பிளாட் 123, சின்மயாநகர் (49, கம்பர் தெரு). Postal Audit Colony, சென்னை-93. (425623)

**டி. ராஜேந்தர்:** மயிலாடுதுறை. ஏ. வி. சி. கல்லூரியிற் பயின்று அண்ணாமலையில் முதுகலை முடித்தவர். சொந்த வாழ்வில் காதல் தோல்வி; இவர்தம் பல்துறை ஆற்றல்கள் பரிகசிக்கப் பெற்றன. அதனையே ஒரு சவாலாக ஏற்று, கதை வசனம் பாடல் இசை, இயக்கம் எனும் ஐந்து துறைகளிலும் தம் முத்திரை பதித்து வருகிறார்; பாடல் உரையாடல் இரண்டிலும் சக்கை போடு போட்டு வருகிறார்; இருவகையிலும் இனியதமிழ் வளர்க்கிறார். ஒருதலை ராகம் ஓடியதே உளம் தொடும் பாடல்களால்தானே! உறவைக் காத்த கிளி, மைதிலி என்னைக் காதலி, ஒரு தாயின் சபதம் என ஒவ்வொன்றிலும் பாட்டு எதுகை மோனை வசனத்தால் படுபோடு போடுகிறார். கலைஞரின் அன்றைய நிலையினை நோக்கி பீடுநடை போடு

கிறார். இந்த வகையில் வாரிசாகவும் விளங்குகிறார். அரங்கம் அலை மோதுகிறது. உறுதுணையாக இருப்பவர் மனைவி உஷா; பிள்ளையும் சிலம்பரசு படுசுட்டி, மைதிலி என்னைக் காதலியில் நடித்தது நெஞ்சம் கவர்ந்தது. **முகவரி** : 114, கங்கா அபார்ட்மெண்ட்ஸ், சென்னை-4.(71098, 75707)

**ப. நீலகண்டன்** : 2-10-1916. விழுப்புரம். திரைப்பட இயக்குநர். 'குமரன்' வார ஏட்டின் துணை ஆசிரியர்; இந்திரா, விஜயன், ஜீவமணி ஆசிரியர்; கலைவாணி இதழின் ஆசிரியர் உரிமையர். நூல்கள் : இன்பப்பொழில், கோசலைச் செல்வன், நாம் இருவர். மல்லிகைத் தோட்டம். மிதிலைச் செல்வி, நாடகங்கள்: நாம் இருவர், முள்ளில் ரோஜா. இவரது அனுபவ வார்ப்பு - பட்டறிவுப் பெட்டகம் - உலகத் திரைப் படங்களின் திறனாய்வு : வண்ணப் பூக்கள் I, II, III திரைத் தமிழுக்கு இவர் அளித்த பெருங் கொடை, **முகவரி** : 7 கோவர்தன் சிங் தெரு, சென்னை-14 (85393)

**அறந்தை நாராயணன்** : 20-6-1937. தஞ்சை மாவட்டத்திலிருந்த அறந்தாங்கி. 53 முதல் எழுதுபவர். 'கல்பனா' கலை இலக்கிய இதழ் ஓராண்டு நடத்தியவர். 'ஜனசக்தி' துணையாசிரியராக இருந்தவர். தமிழ் சினிமாவின் கதை, நட்சத்திரத் தேடல் (தினமணி கதிர்) என்ற இரு திரைத்தமிழ் அருங் கருவூலம் அருளியுள்ளார்.

மாவீரன் பகத்சிங், புரட்சிக் கவிஞர், சிவந்த விடியல், பாலன்-வரலாறு. இன்குலாப் ஜிந்தாபாத், மூர்மார்க்கெட் - நாடகம். கன்னியம்மன் கோயில், சமூக சேவகி, ரத்த சாட்சிகள் ஜிந்தாபாத், வாரந்தோறும் வயசாகிறது, ஜக்கா - நாவல். நிஜங்கள் (கட்டுரை) சிவப்புச் சிந்தனை மிகுந்தவர். இந்திய மக்கள் நாடகமன்றத்தின் மாநிலத் துணைச் செயலர், ஜனாதிபதி பரிசு பெற்ற பிரபல திரைப்பட ஆய்வரான இவர் **முகவரி** : 19/14, பீட்டர்ஸ் காலனி, சென்னை-14.

## 87. சுவடித் தமிழ் இயல்

1875 வரை தமிழ் நூல்கள் பெரும்பாலும் ஓலைகளில் தாம் எழுதப் பெற்றன. எல்லாம் செய்யுள் அமைப்பிலேயே இருந்தன- உரைகள்கூட மனனம் செய்தற்கேற்ற முறையில் தான் அமைந்துள. அச்சு வசதி இல்லாக் காலமாதலால் மனப்

பாடம் செய்ய செய்யுளை ஏற்றது என்பதே இந்த அமைப்புக்கு ஏது எனலாம்.

ஏடு எழுதும்போதும், படிகள் எடுக்கும்போதும் ஆசிரியர் அல்லது ஒருவர் சொல்ல மூன்று நான்கு பேர் எழுதுவர்; இவர்கள் 'கற்றுச் சொல்லிகள்' எனப்படுவர். 'படித்தவன் பாட்டைக் கெடுத்தான், எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான்' எனும் மொழி எழுமாறு, எழுதியோர் வல்லின மெல்லினம் சந்தி புரியாது படி எடுப்பர். கிடைக்கும் சுவடிகளும் மூலச் சுவடி என மொழிய முடியாது. படிகளின் படியாகவோ, படிகளின் படியின் படிகளாகக் கூட இருக்கலாம், எனவே பிழைகள் மலிந்திருக்கும். மண்டியிருக்கும்!

அண்மைக் காலமாக அச்சில் வாரா நூல்களை அச்சேற்றும் பணி அரசாலும் பிற நிறுவனங்களாலும் மேற்கொள்ளப் பட்டுள்ளது. இப்போது ஏடு படித்தறியோர் மிகச் சிலரே. மு. அருணாசலம், மு. சண்முகம் பிள்ளை, மு. கோ. ராமன் இப்படி ஒரு சிலரே. அத்தோடு குறில்நெடில், கொம்புகால், மெய் உயிர்மெய், சந்தி அறிய யாப்பியல் பாட்டியல் புலமை, பன்னூற் பயிற்சி இன்றியமையாதது.

பாட பேதங்கள் (Emendation) இடைச் செருகல்கள் (Interpolation) உணர வேணும். குறியீடுகள் எதுவும் இரா; சங்கிலித் தொடர்போல நீண்டு செல்லும், புள்ளிகளே இரா. குறில் நெடில், கொம்பு சுழி வேறுபாடு இருக்காது. இந்த இன்னல் இடர்க் கடல் கடந்து ஏடு படித்துப் பதிப்போர் இனி இல்லாமற் போய்விடுவர் என்ற அச்சம் உளது! இக்குறை போக்க உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1979 இல் 'சுவடி இயல்' எனும் பிரிவினைத் தொடங்கி ஆண்டுதோறும் சில மாணவர்கட்குப் பயிற்சி அளித்து வருகிறது தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழக ஐந்து புலங்களில் சுவடிப்புலம் ஒன்றாக அமைக்கப் பெற்றது.

சுவடி படிப்பதில் உள்ள இன்னல்கள் பற்றி உ.வே.சா.வும், சி.வை. தாமோதரம் பிள்ளையும் உரைக்கின்றனர்: 'இது கொம்பு இது சுழி என்று வேறு பிரித்து அறிய முடியாது. மெய் எழுத்துக்குப் புள்ளியே இராது; ரகரத்துக்கும் காலுக்கும் வேற்றுமை தெரியாது. சாபம் சரபமாகத் தோற்றும், சரபம் சாபமாகத் தோற்றும். ஓரிடத்தில சரடு என வந்திருந்த வார்த்தையை நான் சாடு என்றே பலகாலம் எண்ணி வந்தேன். இடையின ரகரத்துக்கும் வல்லின றகரகத்துக்கும் பேதம் தெரி

யாது மயங்கிய இடங்கள் பல' (என் சரிதம் பக் 353). ஏட்டுச் சுவடிகள் படிக்கும்போது நான் பட்ட கஷ்டங்களைக் கூறி உணர்த்த இயலாது. இந்த அனுபவங்களுக்கு எனக்கு ஐயரவர் களும், அவர்களுக்கு நானுமே சாட்சி' (சி.வை.தா).

இத்துறைக்கு முன்னோடியாக **மு. கோ. ராமன்** (பக் 527) சுவடி இயல்-பயிற்சிக் **கையேடு** வெளியிட்டுள்ளார். படி எடுக்கும் போதும் பதிப்பிக்கும் போதும் பிறக்கும் 150 குறை களை 10 தலைகளில் உரிய எடுத்துக்காட்டுக்களுடன் அமையும் அருமையது. செல்வி இரா. நிர்மலாதேவி திருவனந்தபுர 1091 சுவடிகள் பற்றிய விவரங்களைத் **'தமிழ்ச் சுவடிகள் அட்டவணை'** என வெளிப்படுத்தியுள்ளார். தமிழ்ப் பல்கலைக் கழகம் கணிப்பொறி கொண்டு 'அனைத்துலகத் தமிழ் ஓலைச் சுவடிகளின் பட்டியல்' உருவாக்கியுளது. உ.வே.சா. நூலகம் 'அச்சில் வாராத நூல் அறிமுகம்' எனத் திங்கள்தோறும் கடைசி ஞாயிறு நிகழ்த்துகிறது.

பல்லாயிரம் சுவடிகள் இன்னும் பதிப்பிக்கப் பெறாமலே மறையும் நிலையில் உள. முன்னமே பதினெட்டாம் பெருக்கில் போனவை பல. செல்லுக்கும் கரையானுக்கும் இரையாயின பல. ஐரோப்பாவில் 87 நூலகங்களில் உள்ள தமிழ்ச் சுவடிகள் பற்றி கிரிகரி ஜேம்ஸ் வெளிப்படுத்தியுள்ளார். இந்தச் சுவடி கள் எல்லாம் எப்போது தொகுப்பது? எப்படிப் பட்டிய லிடுவது, எங்ஙனம் வெளியிடுவது. இதற்கே ஒரு நூற்றாண் டாகலாம்.

இவ் விமாலய சாதனை நிகழ்த்த சுவடி அறிவுடையோர் களை முதலில் உருவாக்குதல் வேண்டும். இதற்குத் தமிழ்ப் பல்கலைக் கழகம் சுவடிப் பயிற்சிக்கெனக் கோடை வகுப்புகள் உடன் தொடர்ந்து நடாத்துதல் வேண்டும். இளைஞர்களில் இந்நாட்டமும் பொறுமையும் உடையோரையும், பணியி லிருந்து ஓய்வு பெற்றோர்-பெற இருப்போரையுமே இத்துறை யில் ஆற்றுப்படுத்த வேணும். உடனடியாக உஞற்றவேண்டிய ஒரு பெரும் கடமையாகும். காலத்தாற் செய்யும் ஞாலப் பணி யாகும். த.ப.க. கவனிக்குமாக! இத் துறையில் விடுதலறியா விருப்பு மிகக் கொண்ட ஒருவரை இங்கே எண்ணுவோம்:

**சு. சௌந்தர பாண்டியன்:** 15-6-1950. காரைக்குடி. சுந்தர ராசு ஆசாரி: சந்தனத்தம்மாள். மீ.சு. உயர்நிலைப்பள்ளி, அழகப்பர் கல்லூரி பி.எசி. வேதியியல், எம்.ஏ. தமிழ் (73இல்),

ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி பி.எட். பம்பாய் மலநில மாதரான் தூய சேவியர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர். தமிழுணர்வு ஆய்வு கரணியமாக விடுத்து சென்னை வந்து 79 முதல் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகன் நூலகத்தில் சுவடி ஆயும் தமிழ்ப் புலவராக உள்ளார். ஆங்கிலத்தில் எம்.ஏ., இந்தி வடமொழி சான்றிதழ்: தெலுங்கு கன்னடம் மலையாளம் மராட்டி மொழி அறிவு பெற்றுளார். கீழ்த்திசைச் சுவடி நூலகக் கிறித்துவத் தமிழ் இலக்கியச் சுவடிகள்-டாக்டர் பட்டத் தலைப்பு.

ஆங்கிலத்தும் தமிழிலும் அரிய கட்டுரைகள் வரைந்துள்ள இவரின் கொடைகள்: தமிழில் கீர்த்தனை இலக்கியம்; திருக்குறள் வீரமாமுனிவர் உரை, சுசீல வள்ளல் அம்மானை, தமிழ் இலக்கிய வளர்ச்சி; சொல்லாராய்ச்சி இன்பம், இலக்கியத் தில் கண், சொல்லாய்வு நாட்டியம்.

கண்டுபிடிப்புகள்: **முதன்முதலில்** 1. ஓலையில் புள்ளி யிட்டால் ஓலை கிழிந்துவிடும் என்ற கருத்து தவறானது எனக் காட்டினார். 2. குறளுக்கு வீரமாமுனிவர் உரை வரைந் துள்ளார் என்பதனை உலகிற்குணர்த்திப் பதிப்பித்தார். 3. நாட்டுப் பாடல்-புதிய இலக்கணம் வகுத்தார். 4. குமரகுருபரர் ஒரு மருத்துவர் என அறிந்து அறிவித்தார். 5. தமிழ்க் கல் வெட்டுகட்கும் சாணக்கியரின் அர்த்தசாத்திரத்திற்கும் உறவு உள்ளமை உரைத்தார். 6. பல்லவி, அனுபல்லவி, சரணம்-தூய தமிழ்ச் சொற்களே என நிலை நாட்டினார். 7. குன்றக்குடிக் குமரன் கீர்த்தனை நூலில், ஆயிரக்கணக்கான கீர்த்தனம் பாடிய வர் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரே எனக் கண்டார். Tamii Civilisation, Folklore; Mukkudai, Journal of Asian Studiesஇல் ஆங்கிலத்தில் அரியன எழுதி வருகிறார், இவர் பணி பெரிது, பயனானது. **முகவரி:** 26. சூரப்ப முதலித் தெரு, சென்னை-5.

சுவடிப் படிப்பு பதிப்பினை ஒட்டி இரண்டினை நலம் இன்றியமையாது தெரிந்தாக வேண்டும். அவை: 1. **பாட பேதம்** Emendation. ஏடு எழுதியோரும் பெயர்த்தோரும் சந்திப்புணர்வு, யாப்பு நெறி போன்றன அறியாது மாற்றி எழுதி விடுவர். தவறாகக் கேட்டும் தப்பாகக் கண்டும் தெரி யாது எழுதி விடுவர். இது மூல நூலாசிரியர் மொழிந்ததோடு முரண்படும்; பாட்டில் பொருள் பேதலிக்கச் செய்யும். குழப்பத்தை விளைக்கும். இது ஆங்கில இலக்கிய சேக்ஸ்பியர் நாடகச் சுவடிகளிலும் ஏற்பட்டுளது. Middleton's emendation

என்பர். இதனால் Verity, Clarenden edition எனச் செம்பதிப்புகள் சிலிர்த்தன, தமிழிலும் அடிக்குறிப்பாகப் பாட வேறுபாடுகள் பதிவு செய்தனர். சரியான பாடம் காண்பதற்குள் போதும் போதும் என்றாகி விடும். அச்சுக்கலை வந்ததும் ஓரளவு அருகியுளது.

**2. இடைச் செருகல்:** Interpolation என்பர் ஆங்கிலத்தில். முன்னோர் செய்யுளைப் போல் தாமும் எழுத வேண்டும் என்ற வேணவா, தம் கருத்தைப் புகுத்தும் துடிப்பு, இந்த இடத்தில் இப்படி-இதுவும் இருந்தால் இன்னும் நன்றாக இருக்கும் என்ற எண்ணம் இஃது ஏற்படக் கரணியங்களாம். தனிச் செய்யுட்களாகப் பிரிந்தும் பிறவற்றோடு கலந்தும் இருப்பன, இந்த நூலைச் சேர்ந்ததாகலாம் எனப் பிற்காலத்தே ஒருவரால் கருதப் பெற்று ஏட்டுச் சுவடியில் தவறியிருக்கலாம்-விடுபட்டிருக்கலாம் எனச் சேர்க்கப் பெறும் எனவே உண்மைப் பாக்கள் உதிரியாகி இடைச் செருகல் என்றும்; போலிப்பாக்கள் ஒட்டிக்கொண்டு உண்மைப் பாக்களே எனவும் மயங்கச் செய்யும் வாய்ப்பும் உளது.

தமிழிலக்கியத்தில் இந்த நற்செயலை செய்தோர் இருவர்; கந்தியார் என்பாரும் வெள்ளியம்பலத் தம்பிரான் என்பாரும்; இதனால் அப்பாக்கள் கந்தியார் பாடல், வெள்ளிப் பாடல் என வழங்குகின்றன.

முன்னும் பின்னும் உள்ள பாக்களுடன் பொருளால் பொருந்தாமை; பொருந்தினும் வேண்டாமை-தேவையின்மை; நடையால் வேறுபாடும், செய்யுள் அமைப்பால் மாறுபாடும் கொண்டு இடைச் செருகல் எனக் கணிக்கின்றனர்.

**வெள்ளிப்பாடல்:** பொன்னை ஒத்த திருமுறைப் பாக்களோடு சொல் நடையாலும் பொருள் நலத்தால் வெள்ளிப் பாக்களாக-பொன்னிடையே வெள்ளிபோல் விளங்குவதால் இப்பெயர் பெற்றது. இப்பாடல்களை இயற்றிய வெள்ளியம்பலத் தம்பிரான் பெயர் கொண்டு இப்பெயர் வந்தது என்றும் இயம்பலாம்.

தேவாரம் பெரியபுராணம் முதலியவற்றுள் பொருட்செறிவோ நடைச் சிறப்போ இல்லாது கலந்துள சில பாடல்கள். இவற்றை தருமை யாதீனக்கமலை **வெள்ளியம்பலவாணத் தம்பிரான்** எழுதி இணைத்ததாக வழிவழி செவிவழிச் செய்தி

யாக வழங்கி வருகிறது. இவர் தருமையாதீன ஐந்தாம் குரு முதல்வர் திருஞானசம்பந்த தேசிகரிடம் ஞானோபதேசம் பெற்றவர். காசியில் குமரகுருபர அடிகளிடம் தென்-வட மொழிகளைக் கற்றார். இவர் சிந்து பூந்துறை மடத்தில் இருந்தகாலை, துறைமங்கலம் சிவப்பிரகாசர் இவரிடம் தொல் காப்பியம் பாடம் கேட்டுளார்.

இவர் பிறப்பகம் திருவாரூர். இயற்றியன: ஞானசம்பந்தர் சமூகமாலை. உரைகள்: முத்தி நிச்சயம் பேருரை, சிவஞான சித்தியார்க்கு ஞானாவரண விளக்கம். இவர் திருமுறை யாசிரியர்களிடத்து அளவற்ற அன்பும் அச்சமும் கொண்டவர்; அப்படிப்பட்டவர் தம் செய்யுட்களைத் தேவாரப் பாசுரங்க ளோடு இணைத்திருப்பாரா? என்ற தயக்கமும் தோற்றுகிறது. இவர் காலம் 17ஆம் நூற். பிற்பகுதி.

தாம் பாடிய பாடல்களை ஆன்றோர் கவிகளுடன் சேர்த்துத் தம் கவித்திறம் காட்டிய இவர் 'வெள்ளியம்பலத் தம்பிரான்' என்றும் அழைக்கப் பெறுவார்.

**கந்தியார் பாடல்:** முன்னோர் நூல்களில் தம் பாடல்களை நுழைத்தவர் சமணப் பெண் துறவி என்கிறது பெருந்தொகைக் குறிப்பு. பரிபாடலிலும் கவிகளைக் கலந்துளார். அந்நூல் சமண நூல் அன்று. எனவே சமணத் துறவிதாமோ என்ற ஐயமும் உளது. சீவக சிந்தாமணியில் தேவர் பாடல்கட்குப் போலியாய்ச் செருகப்பட்டுளது. 'மிகைபடு பொருளை நகை படு புன்சொலில் தந்திடைமடுத்த கந்திதன் பிழைப்பும்' எனப் பரிபாடல் உரைப்பாயிரம் உணர்த்துகிறது. பண்டையோர் நூல்களில் தம் பாக்களைக் கலந்தவர் கந்தியார் என்ற வழக்கு உளது.

சமண சமயத்தில் மணமாகாது துறவு பூண்ட பெண்ணுக்கு வழங்கிய பெயர். சிலம்பில் கவுந்தி வருகிறார். தவப்பள்ளி யில் தவக்கோலம் பூண்டவர் கந்தி-கவுந்தி. சிந்தாமணி உரையுள் நச்சினார்க்கினியர் கந்தியார் பற்றிக் குறிப்பிட்டுள் ளார். பரிபாடல் உரையுள் பரிமேலழகர் கந்தியார் பற்றிக் குறிக்கிறார். இத்தகு கந்தியார் காலந்தோறும் இருந்திருக் கிறார்கள். பாரிய பெருங்கதையைச் சுருக்கிச் சிறு நூலாக ஆக்கியுள்ளார். உதயணகுமார காவியமும் இவர்கள் செய்தது என்பர்.

சேக்சுபியர் நாடகங்களில் பகரகக் குறிப்பினுள் போட்டு இப்பகுதி இவ்வரி சேக்சுபியரால் எழுதப்பட்டதன்று, எழுதப்

பட்டிருக்க முடியாது. இது யாரோ செய்த கைங்கர்யம் எனக் குறிக்கும் வழக்கம் இங்கே எண்ணத்தக்கது.

## 88. புத்துரைகளின் புறப்பாடு

இத்துறை இலைமறை காய்போல் சிறந்து வருகிறது; இன்னும் மக்களின் முழு கவனத்தையும் கவருமாறு முனைந்து வரவேணும்.

சென்ற நூற்றாண்டில்: சரவண பெருமாளையர் நாலடியார், நன்னூல், திருவள்ளுவ மாலை, திருவெங்கைக் கோவை, ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், நன்னெறி, மூதுரை நறுந்தொகை, ஆறுமுக நாவலர் நன்னூற் காண்டிகை உரை. திருமுறுகாற்றப்படை, நீதிவெண்பா, மருதூர், திருச்செந்தில் நீரோட்டக யமக அந்தாதிகள், சிவதருமோத்தாம்; சைவ சமய நெறி, பெரிய புராண சூசனம், சந்திரசேகர பண்டிதர் நன்னூல், காரிகை, தண்டியலங்காரம், மாங்காடு வடிவேல் முதலியார் திருப்புகழ், ஔவைகுறள், நெஞ்சறி விளக்கம், பட்டினத்தார் பாடல்கள், மஸ்தான் சாகிப் பாடல்கள், சாதக அலங்காரம், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, நாலடியார், திருவாய்மொழி, நளவெண்பா; அட்டாவதானம் சபாபதி முதலியார் கந்தர் அனுபூதி, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், காஞ்சிபுரம் சபாபதி முதலியார் பெரிய திருவிளையாடற் புராணங்கள், மருதண்ண ராவுத்தர் விவேக சிந்தாமணி, காதிரசனா மரைக்காயர் சீறாப்புராணத்துக்கும் உரைகள் யாத்துளர்.

இந்த நூற்றாண்டில்: திருமயிலை சண்முகம் பிள்ளை திருக்கைலாய ஞான உலா, திருவாரூர் மும்மணிக் கோவை, பொன் வண்ணத்தந்தாதி, அயோத்தியா காண்டம், பூவை. கலியாண சுந்தர முதலியார் தாயுமானார் பட்டினத்தார் பாடல் திரட்டுகள், பொன்னம்பல சுவாமிகள் கைவல்ய நவநீதம், வேதாந்த சூடாமணி, வை. குப்புசாமி ராசு சிவ ஞான போதம், ஞான வசிட்டம், ஆலால சுந்தரம் பிள்ளை பெரிய காஞ்சி புராணங்கள். சிவஞான போதம் திருவுந்தியார், திருப்போரூர்ச் சந்நிதி முறை, வேலுப் பிள்ளை அபிராமி யந்தாதி, புலியூர் அந்தாதி, வாதவூர்ப் புராணம், பானுகவி யடிகள் கந்த திருவிளையாடற் புராணங்கள், மகாராசா துறவு; கந்தசாமிக் கவிராயர் ஆரண்யா காண்டம், மாலை மாற்று மாலை போன்றவற்றுக்கு யாத்துளர்.

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் நற்றிணைக்கும், அரசஞ் சண்முகனார் தொல். பாயிர (சண்முக) விருத்தியும், திருக்குறள் உரை விளக்கமும், கோ. வடிவேலு செட்டியார் பரிமேலழகர் உரை விளக்கம், கைவல்ய விளக்கவுரையும், உ. வே. சா. குறுந்தொகை, மணிமேகலை, குமரகுருபரர் நூல்கள், பெருங்கதை குறிப்புரையும், ந. மு. வே. நாட்டார் அகநானூறு சிலம்பு மேகலை, திருவிளையாடற் புராணம், நானாற்பது, நீதிநூல்கள் சிலவற்றுக்கும் செவ்விய உரையும், திரு. வி. க. திருக்குறள் முதல் நூறுக்கு விளக்க விரிவுரை, பெரிய புராணக் குறிப்புரை, பட்டினத்தார் பாடல் பத்திர கிரியார் புலம்பல் விருத்தியுரையும், வரைந்துளர். கா. சு. பிள்ளை திருவாசகத் தெளிவுரை, மறைமலையடிகள் திருவாசக முல்லைப் பாட்டு பட்டினப் பாலை விரிவுரை, டி. என். சேஷா சல ஐயர் கம்பராமாயண சூளாமணி நளவெண்பாவுரை, சி. கே. சுப்பிரமணிய முதலியார், பெரிய புராணப் பேருரை, சேக்கிழார் பிள்ளைத் தமிழ் உரை, ந. சேதுரகுநாதன் முக் கூடற் பள்ளு, முத்தொள்ளாயிர உரை; பண்டிதமணி திருவாசகக் கதிர்மணி விளக்கம், ஔவை துரைசாமிப்பிள்ளை நற்றிணை, புறம், ஐங்குறுநூறு, திருவருட்பா, யசோதர காப் பியம் உரை, ஐயன்பெருமாள் கோனார் நால்வர் நான் மணிமாலை, திருவிளையாடற் புராணம், திருப்பூவண நாதர் உலா. ஆ. வி. கன்னையா நாயுடு கலிங்கத்துப் பரணி உரை, ந. சி. கோபால கிருஷ்ணன் கார் களவழி நாற்பதுகள் ஐந் திணை ஐம்பது எழுபது உரை மனங் கொளத் தக்கவை.

ஜி. வரதராஜ பிள்ளையின் திருக்குறள் திருமந்திர திரு வாசக உரைகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் கம்ப ராமாயண ஆராய்ச்சி உரைகள், சித்பவானந்தரின் கீதைப் பேருரை, ரம்போலா மாஸ்கரனேசின் திருக்காவலூர் கலம்பக உரை, வ. சு. செங்கல்வராய பிள்ளையின் தேவார ஒளி நெறிகள், வாரியார் கிவாஜ கந்தரலங்கார அனுபூதி திருப் புகழ் உரைகள், சோம இளவரசின் திருவருணைக் கலம்பக உரை.

நாவலர் பாரதியாரின் தொல் அகபுறத்திணை புத்துரை கள், ஆ. பூவராகம் பிள்ளையின் சேனாவரைய விளக்கம், பி. எஸ். சுப்பிரமணிய சாத்திரியாரின் நுட்பக் குறிப்புரைகள், அ. கு. ஆதித்தரின் சொல்லதிகார உரிச் சொல்லதிகார விளக்கம்; ஆபிரகாம் அருளப்பரின் தொல் உரைப்பிழை. கு. மா. திருநாவுக்கரசின் சேனாவரைய விளக்கம்.

மதுரைப் பல்கலைக் கழகத்தின் தொல்காப்பிய (பொருள்) உரைவளம் (மு. அருணாசலம், க. வெள்ளை வாரணம்); உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தொல் (முழு) உரை வளம் (ஆ. சிவலிங்கனார்) இரண்டும் ஏத்துதற்குரிய இரு பெருஞ் சாதனைகள். இனி தனி மனிதர்களாக திருப்பனந் தாள் கு. சுந்தரமூர்த்தியும், கரந்தை ச. பாலசுந்தரமும் தொல் காப்பியம் முழுமைக்கும் புதிய விளக்கம் அமைத்துத் தந் துள்ளமை தலைமேற் கொள்ளத்தக்கன.

திருக்குறளுக்கு உரைவளம்(தண்டபாணி தேசிகர்), உரைக் கொத்து (பட்டுசாமி ஓதுவார், கே. எம். வேங்கட ராமையா) குறட்களஞ்சியமாகும். ஒப்பீட்டு ஆய்வுக்கு உடன் உதவுவது. கி வா. ஜ. வின் திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்புரை ராம கிருட்டிண வித்தியாலயத்தது. திருக்குறளார் வீ. முனுசாமி யின் உரைவிளக்கம் உயரியது. இனி, இளவழகனார் ஜி. வரத ராஜன், அப்பாதுரையார், புலவர் குழந்தை, பாரதிதாசன், பாவாணர், நாமக்கல்லார், இலக்குவனார், கோனார், எம். இ. வீரபாகு, மு வ., ஞா. மாணிக்கவாசகன், சோ. சங்கரராஜு போன்றார் புத்துரை பயந்துளர். இந்த நூற்றாண்டில் தொல்—குறள் இரண்டுக்கும் மேலும் உரைகள் வரைய வேணும் என்ற எழுச்சி உண்டானமை குறிப்பிடத்தக்கது.

சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் கழகப் புலவர்களாம் ப. இராமநாதம் பிள்ளை, பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரம் கொண்டு பத்துப்பாட்டு, குறுந்தொகை, அகம், கலி, ஐங்குறு நூறு, பரிபாடல், சிலம்பு, மேகலை, பெருங்கதை, கீழ்க்கணக்கு, நீதி நூல்கள், தேவார திருவாசகம், போன்ற பலவற்றுக்குப் புதுவதாக உரை கண்டமை குறிப்பிடத்தக்கது.

இங்கே ஒன்று எண்ணுதல் வேண்டும். பழைய உரை இருக்க புதிய உரைகள் புறப்படுவானேன்? உள்ள உரைகள் போதாவா? புத்துரைகள் பிறப்பதேன்? 1, பல நூல்கள் அச்சில் வாரா முன்னம் சுவடி நிலையில் வந்த உரைகளின் வளதியை விடப் பன்னூல்கள் பதிப்பில் வந்தபின் அந்தப் புலமை கொண்டும் அதன் புத்தொளி பாய்ச்சியும் முன்பைவிட நல்லுரை காணவேணும் - முடியும் என்ற ஆர்வம். 2) ஆசிரி யரின் உள்ளக்கிடக்கை உணர மாட்டாது நேரிய பொருள் இருக்க வலிய உரைகள் (farfetched) கண்டு வெகுண்டு உண்மை உரை உரைக்கவேணும் என்ற உணர்வு 3) பரிமேலழகர் போன்றார் வடமொழிக் கருத்துக்களைத் திணித்துத் தமிழ்

மரபுக்கு மாறான உரைகள் எழுதியமை கண்டித்துத் தமிழுரை காணும் தாகம். 4) நம் நுண்மாண் நுழை புலத்தைக் காட்டி நம் பங்காக உரைகள் இருக்கட்டுமே என்ற தான்மை. 5) உரை இல்லா நூல்கட்கு உரை வரைய வேணும், புரியா இடங்களை மழுப்பி விட்டுவிடும் நிலை, தெரியா தெரிய வேண்டிய சொற்களுக்கு ஏதும் உரை தராது விட்டுப் போதல் இவற்றை நிறை செய்யும் நாட்டம். 6) பார்ப்பன பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்களை மறுக்கவேணும் என வேட்கை இன்னபிற காரணங்களால் உரைகள் பல்கின!

இப்படி இந்த நூற்றாண்டுகளில் வந்த உரைகளின் பட்டியலை டாக்டர் உசேன் (குடந்தைக் கல்லூரி) தொகுத்துளார். இப்படி வந்த உரைகள் பொருள் அறியச் செய்வதோடு, ஆராய்ச்சியாகவும் திறனாய்வாகவும் அமைந்து விடுகின்றன. இங்கே பழம் நூல்கட்கெல்லாம் எளியவுரை எழுதி மலிவுப் பதிப்பு வரச் செய்து எங்கும் புகழ் பரப்பிய ஒருவரை எண்ணுவது நன்றாம். அவர்தாம்.

**புலியூர் கேசிகன்**; (க. சொக்கலிங்கம்). தொல், எட்டுத்தொகை நூல்கள், சிலம்பு, மேகலை, நளவெண்பா, கலிங்கத்துப் பரணி, முக்கூடற் பள்ளு, குற்றாலக் குறவஞ்சி, புறப்பொருள் வெண்பாமாலை, ஔவையார் - காளமேகம் பாடல்கள் போன்றவற்றுக்கு ஜனரஞ்சகமாக உரை வரைந்து, பழம் இலக்கிய இலக்கணங்களை மக்கள் நெருங்கச் செய்தார். இலக்கியப் பரவலுக்கு (accessibility) இது பேருதவி புரிந்தது. கடின உரைகட்கு இது வாயிலாகவும், இனிதே புரிந்து கொள்ளச் செய் (made easy) கருவியாகவும் அமைந்து மிகு பயன் விளைத்தது.

இப்பணியோடு, திருக்குறளும், நட்புக் கலையும், அறிவுத் திறனும், பெண்மை, அறிவாற்றல், சிலம்பும் வாழ்வும் போன்ற திறனாய்வுகளும், வாழ்வுக்குகந்த சோதிட எண்கலை பற்றியும் நூல்கள் தந்து வருகிறார். முழுநேர எழுத்தாளர் (Freelance writer). சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக சுப்பையா பிள்ளையின் உறவின் முறையினர். நெல்லை மாவட்டத்தைச் சார்ந்தவர், நடமாடும் செய்திக் களஞ்சியமாக நிலவும் இவர் **வதியும் இடம்**: 10-ஏ, திலக் தெரு (பிரசாத் ஸ்டுடியோ எதிரில்), சாலிகிராமம், சென்னை-93.

## 89. புதிய உரைநடையின் புதுமை வரைவு

இக்காலம் உரைநடையின் பொற்காலம் — நற்காலம். இலக்கியத்தை மக்கள் இலக்கியமாக்கியதே இந்த உரைநடைதான்; அறிவுச் சுரங்கத்தின் வாயிலாகவும் கருத்துலகின் திறவு கோலாகவும் திகழ்கிறது. (இதன் வரலாற்றை 693-707 கண்டோம்.)

உரைநடை வரலாற்றில் ஒரு மாற்றம் ஒரு திருப்பம். ஒரு புதுமை இந்த நூற்றாண்டில் ஏற்பட்டு வருகிறது. ஆங்கிலக் கல்விச் சாளரத்தின் வழியே நாம் பெற்ற அறிவு, அம்மொழி வழி நாம் அடைந்த அறிவின் விரிவு, உண்டான அறிவியல் உணர்வு போன்றவற்றால் சிந்தை விரிந்தது நம் குறை புரிந்தது.

அறிஞர் கெல்லெட் 'படித்தோர்க்கு மட்டுமே புரியக்கூடிய முறையில் கரடுமுரடு நடையில் எழுதுவதும், இயற்கையாக எழுதாமல் செயற்கையாக எழுதுவதும், பழைய பத்தாம் பசலிப் பழைய பண்டித வரம்புக்குள்ளேயே முண்டிக் கொண்டு முடங்கிப் போவதும், ஒரே மாதிரி அச்சடித்ததுபோல் அலுத்துச் சலித்துப் போகுமாறு படைப்பதும் தமிழைப் பீடித்திருக்கும் பிணிகள். இக்குறை போக்கி எளிமை தெளிவு இனிமை ஈர்ப்பு கொண்ட புதிய நடையில் புரியுமாறு எழுதுவதே ஏற்றது' என்று 1901இல் கிருத்துவக் கல்லூரி மலரில் குறிப்பிட்டார்.

இதற்கும் 19ஆம் நூற்றாண்டிலேயே பதியன் போடப்பட்டது. அதன் பலன் இந்த நூற்றாண்டில் விளைவாகியது. பாரதி போன்றார் பாட்டைகள் போட்டனர். இதழ்கள் இந்த வகையில் முக்காலே மூன்று வீசம் பணியாற்றியுளது என்பதை யாரும் மறுக்கவோ, எவரும் மறக்கவோ முடியாது. இதில் எளிமை இனிமைத் தமிழன் **மூலவராகக் கல்கி** ஏற்றமுறுகிறார். பண்டிதரும் பாமரரும் விரும்பிப் படிக்கும் நடையினைப் படைத்தார். அதில் தெளிவும் சுவையும் தவழ்ந்தன; அழகும் ஆற்றலும் திகழ்ந்தன. நகைவாகை சூடி நெஞ்சை ஈர்த்தது. இந்த நூற்றாண்டில் உரை நடை வளர்த்த பெருமை இவர்க்கே உரித்து.

மறுமலர்ச்சி நடையின் தோற்றம் ஊற்றம் யாவற்றுக்கும் (வ. ரா, கு. ப. ரா, புதுமைப்பித்தன்) மணிக்கொடி ஆசிரியர்களே காரணர் என்றால் மிகையாகாது. வ. ரா. தமிழ் எழுதப்

படிக்கத் தெரிந்தோரும் புரிந்து போற்றும் வகையில் பழகு தமிழ்ச் சில சொற்கள் கொண்டு, சின்னஞ்சிறு சொல்லியங் களால் அரிய கருத்துக்களையும் எழுதியவர். நடைச்சித்திரம் கட்டுரை இரண்டிலும் பீடு நடை போட்டார்.

**புதுமைப் பித்தன்** முன் எவரும் எழுதாத புதுமை நடையினை வெள்ளோட்டம் விட்டார். சில சொற்களில் சீரிய கருத்து களைச் செப்பிடும் செப்படி வித்தை இவரது. மின்வெட்டுச் சொற்களில் கூறும் தனி முறையால் புதுநடை புகுத்தினார்.

வ. ரா. சிந்தனைச் சுரங்கம் எனின், கல்கி புதுமைப்பித்தன் இருவரும் கற்பனைச் சுரங்கம் எனலாம். எனவே இவர்கள் எழுத்து நடை ஏற்றமுற்றன.

உரைநடை என்றதும் அது எழுத்தில்தான் வளர்கிறது என்று எண்ணி விடலாகாது; பேச்சிலும் பரிணமிக்கிறது. அண்ணாவும் கருணாநிதியும் மேடைத் தமிழுக்குத் தனி மிடுக்கும் ஒரு பெருமிதமும் தந்தனர். கழகக் கண்மணிகள் யாவருமே பேச்சு நடைக்குப் பெருமை சேர்த்தனர், பாணி வகுத்தனர். பேச்சு மூலம் உரைநடை உயர்நடை அளித்தவர்கள் அவர்கள்தாம் என அடித்துக் கூறலாம்.

இங்கே ஒன்றை நாம் மறந்துவிடக் கூடாது. 19 நூற்றாண்டுகளாக எல்லாம் செய்யுள் மயமாக இருந்தது. இப்போது எங்கும் உரைநடை எதிலும் உரைநடையென உரை நடை ஆட்சி செய்கிறது; உரைநடை ஊழி உருவாகிவிட்டது.

முன்னம் செய்யுளில் கவித்துவம் ஏற்றிக் காட்டினர், இப்போது உரைநடையில் கவித்துவம் மூட்டிக் காட்டுகின்றனர். செய்யுளுக்கு எழுத்து அசை சீர் தளை அடி போன்றன உறுப்பு கள். உரைநடைக்கும் உறுப்புகள் உண்டு; அவைதாம் எழுத்து சொல், சொல்லியம் (Sentence), பத்தி-இவை புற உறுப்புக்கள்.

செய்யுள் (Verse) உரைநடை (Prose) இரண்டுக்கும் அப்பாற்பட்ட பொதுவான கவிதை (Poetry) கவித்துவம் உணர்ச்சி (Emotion) கற்பனை (Imagination) ஒலிநயம் (Rhyme) இழும் (Rhythm) அணி நலம் (Phetoric) போன்ற. அகப்பண்புகளால் ஆவது (காண்க பக் 509-13) முந்தைய நூற்றாண்டுகளில், இவை செய்யுளில் ஏற்றப்பட்டு (செய்யுள் + உணர்ச்சி, கற்பனை, ஒலிநயம், அணியழகு போன்றன = கவிதை) இதயங்கவரச் செய்தனர். இந்த நூற்றாண்டில்

உரைநடையில் ஏற்றி (உரைநடை + உணர்ச்சி, கற்பனை, ஒலிநயம், அணியழகு = கவிதை) உள்ளம் அள்ளுகின்றனர்.

உரைநடை வரலாற்றில் இப்போது புதுமை நடை உருவாகி வருவதின் உள்ளோட்டம் இதுதான். உரைநடை கவிதையாகி வருகிறது. (Prose becoming poetic) ஊன்றிநோக்கின் உணரலாம்; கவனித்துக் காணின் உரைநடை வாகனத்தில் கவிதை பவனி வரக்காணலாம். எனவேதான் எல்லோரும் உரை எழுதினாலும் சிலர் நடையே உயர் நடையாகிறது, மிகச் சிலரின் நடையே உள்ளம் அள்ளும் நடையாகிறது.

இதற்குக் காரணம்: எழுதப்படுவது எழுத்து, பேசப்படுவது பேச்சு. எல்லோரும் பொதுவாக எழுதுகின்றனர், பொதுவாகவே பேசுகின்றனர். தம் கருத்தை உணர்த்த! இது பொது நடை. சிலரே எழுத்தைக் கலையாக்குகின்றனர், சிலராலேயே பேச்சைக் கலையாக்க முடிகிறது. இது தனி நடை பொதுவுக்கும் தனிக்கும் வேறுபாடு உண்டுதானே!

பொதுவாக உரைநடை, செய்யுளைப் பார்க்க உப்பு சப்பற்றுதான் இருக்கும் (Prose is dull). எண்ணத்தை இயம்புதல் (Vehicle of thought) என்பதோடு சரி. வெறும் கருத்தை மட்டும் விளம்பின் அங்கு அருமை எப்படித் தோன்றும்? வெறுமையும் வெறுப்பும் அலுப்புமே விளையும்! கருத்தைக் கலையழகோடு கூறின், அங்கே உரைநடை கவிதை ஊற்றம் பெற்று உயர்ந்து விடுகிறது.

சிலர் இதனைச் செய்கின்றனர், உரைநடை வேந்தர்களாக ஒளிர்கின்றனர்; பலர் இதனை இயற்றுவதில்லை, முற்படுவது மில்லை; எனவே பத்தோடு பதினொன்று அத்தோடு இது வொன்றாகப் போய்விடுகின்றனர். சொல்லின் செல்வர் **சேதுப்பிள்ளை** எதுகை மோனை இழைந்துவர எழுதினார் பேசினார்; எனவே செந்தமிழ்க் கிள்ளை சேதுப்பிள்ளை ஆனார். **செகவீரபாண்டியனார்** நடை எதுகை மோனை இன்ப நடம்புரியும் கவிநடை; அவரே ஒரு கவிராஜ பண்டிதர்! நாவலர் **சோமசுந்தர பாரதியார்** உரைநடையைத் துண்டாடி அடுக்கின், மிடுக்கான கவிதை வடிவம் பெற்று விடும்; அவர் 'மாரிவாயில்' மிடைந்தவராயிற்றே! **அண்ணா**வின் உரைநடையில் கற்பனை உணர்ச்சி ஒலிநயம் அணிநலம் யாவும் இயலுமே! **கலைஞ**ரின் நடை கவிநடை கலைநடை.

இவர்கள் நடை தனிநடை. விளக்க முடியா இதனை **எழில் முதல்வர்** துலக்குகிறார்: 'செவிக்கின்பம் தரும் ஒழுங்குபட்ட ஒலிநயம், கையாளும் சொற்களில் ஒருவகையான தேர் வாற்றல்-தெரியாற்றல், வேறெவரிடமும் எளிதில் காண முடியாத அரிய தொடர் ஆக்கங்கள், நுவல் பொருளுக்கும் உணர்ச்சி நிலைக்கும் ஏற்ற வண்ணம் அமைந்த தொனி, முத்திரை பதித்தாற் போன்ற வாக்கிய அமைப்பு முதலியன தனி நடையின் பண்புகள் ஆகும்' (புதிய உரைநடை பக் 61).

**வலம்புரியின் உரைநடை வரலாறு:**

இப்படி உரைநடைக்கு ஒப்பனை செய்து உயிர்ப்பூட்டி வரலாறு படைப்போர் ஒரு சிலரே. அவர்களில் இளந் தலை முறையின் தலைமகனாய், இளைஞர்களின் உந்து சக்தியாய் ஒளிரும் இளைஞர் திலகம் வலம்புரி ஜான் அவர்கள், உரை நடை வரலாற்றில் ஒரு பெரும் வரலாறு படைத்து வருகிறார். நாற்பதுக்குள் ஐம்பது நூற்கள் படைத்து மேடையில் மந்திரத் தமிழ் முழங்கும் சுந்தரர். இதனாற்றான் 'அறிஞர் அண்ணா விற்குப் பிறகு எங்களுக்குக் கிடைத்த மாபெரும் இலக்கியவாதி வலம்புரிஜான்தான்' என்கிறார் ஆர்.எம்.வீ. 'எழுத்து நடை யில் ஏர்மிகும் பேச்சாற்றலில் 'புதிய அண்ணா' (கவிஞர் **தமிழ் மாறன்)** படிப்பவரைப் பாராட்ட வைத்திடும் எழுத்தாற்றல், கேட்பவரைக் கிறங்க வைக்கும் நாவாற்றல்-இரண்டாலும் உரைநடையில் ஒரு சகாப்தத்தை உருவாக்கிக் கொண்டிருக் கிறார், உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை.

'புதிய உரைநடைக்குப் பிதாமகர் மாதாமகர் எல்லாம் ஒருவரே! அவரே வலம்புரியார். வலம்புரியார் வரலாறு தொடங்குகிற இடத்திலிருந்துதான், புதிய வசனத்தின் வரலாறும் தொடங்குகிறது. இப்படி ஓர் இலக்கிய சகாப்தம், நம் கண்ணுக்கு முன்னாலே உருவாக்கப்பட்டு வருவதைக் காணமுடிந்தவர் கண்டு கொள்க. என் பார்வை எத்தனை கூர்மையானது என்பதை அடுத்த நூற்றாண்டு அங்கீகரிக்கும்! இந்த நூற்றாண்டு கொஞ்சம் வக்கரிக்கும்!' என்ற கவியரசர் **(இளந்தேவன்)** வாக்கு பொய்க்காது; நடந்தே தீரும்.

'கந்தர்வ அழகோடு நுரைத்துச் சிரிக்கிற எனது நுங்கு நடை' என வலம்புரியாரே விளம்புகிறார். 'வலம்புரியாரின் உரைநடை' பொங்கும்! பூரிக்கும்! புதுவெள்ளமாகும், குதிக்கும்! கொதிக்கும்! குளிர் தென்றலாகும்' **(இளந்தேவன்)**

தமிழ் உரைநடையில் ஒரு புதுமைச் சோதனை புரிந்து புதிய சாதனை செய்து வருகிறார். பொது உரைநடைக்கு ஒரு புதுத் தோற்றத்தைத் தந்துளார் 'இவருடைய புதிய நடை, வாசகர்களிடையே ஒரு பரபரப்பையும், எழுத்தாளர்கிடையே ஒரு கிறுகிறுப்பையும், மொழியினிலே ஒரு விறுவிறுப்பையும் ஏற்படுத்தியுள்ளது. சிந்தனையோடு எழுத்தைச் சிங்காரிக்கும் இவரது சந்தனநடை தமிழுக்குச் சாதனை வரவாகும். எதிரிகளையும் அங்கீகரிக்க வைக்கும் எழுத்து நடை' (**எதிரொலி விசுவநாதன்**).

வலம்புரி ஜான் வசனநடை கைவந்த வல்லாளர், அத்தோடு புதுக் கவிதையிலும் புதுமை புரிபவர்; எனவே இவர் எழுத்திலும் பேச்சிலும் கவித்துவம் கொப்பளிக்கிறது. இவர் ஓர் வார்த்தைச் சித்தர். வார்த்தைகள் குற்றேவல் செய்ய ஏங்கிக் காத்து நிற்கின்றன இவரிடம். எதுகை மோனை ஏவல் செய்கின்றன; மணி மணியான சொற்கள் அணி செய்து நிற்கின்றன-பணி செய்ய! 'பழக்கமான சொற்கள் இவர் உரைநடையில் பாதரசப் பளபளப்பைப் பெறுகின்றன' (**எதிரொலியார்**). பாரதி வேண்டிய மந்திரச் சொற்கள் சுந்தரச் சொற்கள், சித்திரச் சொற்கள்மிடைந்து வருகின்றன இவரிடம். சொல்லுக்குள்ளே சொர்க்கத்தை உருவாக்குகிறார். சொல்லிலே சூடேற்றுகிறார், குளிரூட்டுகிறார். வார்த்தைகள் வைரமணிகள் போல் வந்து விழுகின்றன: எழுதுகோலன், கவிதாயினி (பெண் கவிஞர்), மனதிற்குள் மழை (மகிழ்ச்சி). வாடகை மனிதர் (அடியாள்), ஆதிநாள் அப்பா (குரங்கு) மத மனிதர் (சமயவெறியர்), எச்சில் படாத ஈரப் பழங்கள் (வார்த்தை), தழல்மொட்டு (சுடர்).

**சொல்லாக்கம்** சொக்க வைக்கிறது: இறுக்கமான இருட்டு, அப்பளப்பூ கொப்புளம், வறுத்தெடுத்த வருத்தம், வேப்பங்காய் வெறுப்பு, விழுதுகளாகப் போகிற விதைகள், வெளிச்சப் புள்ளிகள், இருட்டுத் தேமல் இப்படி 'வார்த்தை தமிழுக்கு வழங்கிய வள்ளலாக விளங்குகிறார். 'கொடியில் பூ பூப்பது எத்தனை இயல்பு! அத்தனை இயல்பு வலம்புரியிடத்திலே வார்த்தை பூப்பது' (இளந்தேவன்)

படித்தவுடன் பாடமாகும் **பரவச வரிகள்;** அந்தக இரவில் சந்தன மின்னல், சுயாட்சி என்பது சுதந்திரம் இல்லை சுயாட்சி இன்றேல் சுத்திரம் இல்லை, குளிக்கப் போகும் நதி, பற்றி எரிகிற பனிநதிகள், புதுவை தந்த போதை (பாரதி தாசன்), கணக்கு மூளையைச் சோதிக்கிறது; கவிதை இதயத்தை வருடுகிறது.

ஒருவரின் தகவு அவரது எச்சத்தில் இருக்கிறது; உயர்வு மிச்சத்தில் மிளிர்கிறது. அப்படிச் சில தத்துவ முத்துக்களை உண்மைகளை உதிர்த்துப் போகிறார் போகிற போக்கில். 'உயர்ந்து கொண்டே போகிற மரத்திற்கு வேர்கள் ஆழமாக இருக்கவேண்டும்; முன்னேறிக் கொண்டே போகிற மனித னுக்கு அடிப்படைகள் பலமாக இருக்கவேண்டும். நாம் மௌன மாக இருக்கிற போதுதான் வலிமையாகச் செயல்படுகிறோம்; வார்த்தைகளில் நமது வல்லமை வடிந்து போகிறது, மௌனம் இறுக்கத்தைத் தருகிறது - இறுதி வெற்றிக்கு உதவுகிறது. சந்தர்ப்பங்களைச் சாதகங்களாக்கிக் கொள்கிறவர்கள் சாதா ரணர்கள், பாதகங்களைச் சாதகங்களாக்கிக் கொள்கிறவர்கள் சரித்திர மனிதர்கள். முழுவதும் எழுதப்பட்ட ஒரு தாளைவிட, ஒரே ஒரு வார்த்தை மாத்திரம் எழுதப்பட்ட வெள்ளைத் தாள் அதிகமாகப்பேசுகிறது. வாழ்க்கை என்பது, மரணம் வரைக்கும் திருத்தப்பட்டு, மரணத்திற்குப் பிறகு மற்றவர்களால் படிக்கப் படுகிற ஒரு மௌனமான கவிதையாகும். வாழ்க்கை என்பது ஒரு வளையம்; ஒருவரைப் பார்க்காவிட்டால் - பேசாவிட்டால்கூட வாழ்க்கை வளையத்தில் துண்டு விழுந்து விடும். முன்னேறி விட்டவர்களை முறைத்துப் பார்க்கிறோமே தவிர, அதற்காக அவர்கள் விழித்திருந்த இரவுகள் - விட்ட பெருமூச்சுக்கள் இவற்றை மறந்து விடுகிறோம். மனிதர்கள் அவர்கள் நினைப் பதைவிட அதிக ஆற்றல் உள்ளவர்கள்; இந்த உண்மை எப் போதும் வெளிப்படாது, எப்போதோ வெளிப்படும். மனிதர் கள் காற்றைச் சுவாசிப்பதால் வாழ்வதில்லை; நம்பிக்கைகளைச் சுவாசிப்பதால் மாத்திரமே வாழ்கிறார்கள். காலில் முள் குத்து வதற்காகவெல்லாம் நாம் செல்கிற பாதைகளை மாற்றிக் கொள்வது எவ்வகையிலும் அறிவின்பாற் பட்டதாகாது. மரபு, சந்தத்தில் வாழ்கிறது; புதுக்கவிதை சங்கதியில் வாழ் கிறது. அரைத்தபின்தான் மருதாணி சிவக்கும், அசைந்தாலே மனம் சிவந்துவிடும். வாழ்க்கை முடிந்ததும், வரலாறு ஆவது சாதாரணம்; வாழ்கிறபோது, வரலாறு ஆவதே அதிசயம். பூக்களை ஆரமாக்குகிறவன் வியாபாரி, ஆராதிக்க விடுகிறவன் அர்ச்சகன், புலம்ப வைக்கிறவன் கவிஞன். பாரதியிடத்தில் தமிழின் **பாதை** தெரிந்தது, பாரதிதாசனிடத்தில் தமிழின் **மேதை** தெரிந்தது, கண்ணதாசனிடத்தில் தமிழின் **போதை** புரிந்தது.

எடுத்தோது (Narrative), வருணனை (Descriptive), விளக்க (Expositary), தருக்க (Argumentative), சிந்தனை (con-

templative), ஓவிய (Pictorial) நூதன (Novel) எளிய (simple) அணி (Decorative) கவிதை (Poetic) எனப் பல்வகை நடையிடையும் பாங்கு இவரிடம் பயின்று வருகிறது. இவர் நடை (style) ஆராதனைக்குரிய அழகுநடை, சொக்கவைக்கும் சுந்தர நடை, கவர்ந்திழுக்கும் காந்த நடை, கந்தர்வ நடை என உறக்க உரைக்கலாம் போலிருக்கிறது. இதனாற்றான் சௌந்தரா கைலாசம் 'தோன்றும் கருத்தழகு, சொல்லும் முறையழகு, ஆன்ற தமிழோ அழகழகு' என வியந்து போற்றுகிறார். இளந்தேவனும் 'என்றுமுள தென் தமிழுக்கு என்றைக்குமில்லாத நடை அளித்தவர்' என்றேத்துகிறார்.

'உவமைகளில் புதுமை! உருவகங்களில் கவர்ச்சி! வார்த்தைகளில் வெளிச்சம்! அவைகளை வடிப்பதிலே ஒரு நவீனம்! ஆழ எழுதுவது அழுத்தமாகச் சொல்வது! கற்பனை வீணைகளில் பிறந்த கதம்பராகங்களைப் புது வண்ணப்பூக்களால் புனைந்து காட்டும் புதுமை' (**அவ்வை நடராசர்**) வர்ணமடித்து வரும் வார்த்தைகளும் சொக்கவைக்கும் சொற்றொடர்களும் காற்புள்ளியைக்கூட ஒரு வார்த்தையாகப் பேச வைத்துவிடும் பெட்பும் இவர் படைப்புகளின் பரிணாமத்திற்கு ஒரு பரிணாமம் சேர்க்கின்றன. இவர் மேலெழுந்த வாரியாகச் சொன்னதெல்லாம்கூட, இன்று மேற்கோளாகிவிட்டது. அங்கங்கே அறிவின் ஆழத்தில் அமிழ்ந்து நான் மூச்சுத் திணறிப் போகிறேன் (**வைரமுத்து**), இவருடைய எழுத்துக்கள் வாசிக்கப்பட வேண்டியவை மட்டுமல்ல, நெஞ்சார நேசிக்கப்பட வேண்டியவை; நினைவுக் கோவிலில் வைத்துப் பூசிக்கப்பட வேண்டியவை. காரணம், இவருடைய வாக்கியங்களைவிட வலிவும் பொலிவும் மிக்க வண்ண ஆபரணங்களை, அருந்தமிழ் அன்னைக்கு யாரும் இதுகாறும் சூட்டவில்லை (**வாலி**). சொற்களின் சுகங்களுக்குள் மூழ்கிப் போகிறவர்களுக்குப் பெரும்பாலும் சிந்தனை என்ற அகன்ற வானத்தின் அறிமுகம் இருப்பதில்லை. நேர்த்தி மிகுந்த வார்த்தைகளுக்குள் நீந்தி வரும் இந்த எழுத்துப் பறவைக்கோ சிந்தனை என்கிற வானத்தையே தன் சிறகுகளால் அளவெடுக்கும் வல்லமை உண்டு (**மேத்தா**). கந்தகமும் கனிச்சாறும் கலந்து வெளிப்படும் பேச்சு; மின்னலை விழுங்கி மின்சாரத்தைக் கொப்பளிக்கும் சொல்வீச்சு (**தமிழ் மாறன்**).

தமிழ் என்றாலே இனிமை என்று பொருள். அந்த இனிமைக்கு இலக்கணம் வகுக்கிறார். இவருடைய எழுத்தில் அருவியின் சலசலக்கும் சலங்கை ஒலியும் கேட்கும், காட்

டாற்றின் ஆவேச கர்ஜனையும் கேட்கும்; அது இனிமையான இசையாகவும் இருக்கும். எழுச்சி முரசாகவும் ஒலிக்கும். (**இராம. வீரப்பன்**) ஆழமான சிந்தனையாளர், அற்புதமான எழுத்தாளர், ஈடு இணையற்ற சொற்பொழிவாளர் (**ஜெயலலிதா**), இருபதாம் நூற்றாண்டு தமிழ் உரைநடையை எழுதுகோலின் தோடி ராகமாக ஆக்கத் தோன்றியவர்; எப்படி இவர் எழுதுகிறார் என்று வியக்க வைக்கும் வித்தகம், இவர் விரலில் நகம் முளைக்கும் முன்னாலேயே விளைந்திருக்கிறது (**இளந்தேவன்**) நண்பன் வலம்புரி ஜானின் மிகப் பெரிய விசிறி நான் (**இயக்குநர் கே. பாலச்சந்தர்**). தோழர் வலம்புரி ஜான் எனக்கு கிடைத்த பச்சிலை (**கலைஞர் கருணாநிதி**).

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம் இவரின் தமிழாற்றலுக்கு! அப்படி செப்படி வித்தை செய்து செந்தமிழ் உரை நடையினை செழுந்தமிழ் உரைநடையாக்கி வருகிறார். எதிரொலி விசுவநாதனின் 'வளரும் தமிழில் வலம்புரிஜான்' நூல் கொண்டு மேலும் விளக்கம் பெறுக.

இவ்வண்ணம் இந்த நூற்றாண்டில் எண்ணற்றோர் - இற்றை இளைஞரும், உரைநடை ஓம்பி வருகின்றனர். இவற்றையெல்லாம் V. S. Chengalvaraya Mudaliar - History of Tamii Prose Litt (1928); **வி. செல்வநாயகம்** - தமிழ் உரை நடை வரலாறு (57); **அ. மு பரமசிவானந்தம்** - தமிழ் உரை நடை (59), 19ஆம் நூற்றாண்டின் தமிழ் உரை நடை வளர்ச்சி (66); டாக்டர் **மா. இராசமாணிக்கனார்** 20 ஆம் நூற்றாண்டு தமிழ் உரைநடை வளர்ச்சி; **மா. இராமலிங்கம்** - புதிய உரை நடை (78), **மு. அருணாசலம்** - இன்றைய தமிழ் வசன நடை (45), போன்றன கொண்டு முழுமையாக உணரலாம்.

உரைநடை வரலாறு ஒருபெரும் பேராறு. இத்துறையில் இறங்கி விரிவான ஆய்வு செய்ய வேணும்; ஆய்வு மாணவர்கள் முனைய வேண்டும்; ஆயிரக்கணக்காருக்கும் ஒரு நூற்றாண்டளவுக்குரிய பணி உளது. ஒவ்வொரு பகுதியாக, துறையாக, உரைநடையாளராக எடுத்துக்கொண்டு ஆய்வு செய்யலாம். பணிசெய்ய வாரீர்!

## 90. பட்டம் பரிசு பாராட்டு

பாரதீய ஞான பீடமும், தமிழ்ப் பல்கலைக் கழக ராஜ ராஜன் பரிசு ஒரு லட்சம் கொண்ட பெரும் பரிசு. இராசா சர்

அண்ணாமலை செட்டியார் பரிசு 20000 ரூ. சாகித்ய அகாதமி 10000. இலக்கியச் சிந்தனை ரூ 5000, 500. தமிழ் வளர்ச்சிக் கழகம் ரூ. 2000, 1000, வி ஜி பி 5000, 1000. மைய இந்தி இயக்குநரகம் 2000, 1000, மூர்த்திதேதி இலக்கியப் பரிசு 11000; மானுட நேயம் அகிம்சை அமைதி போன்ற சமண தத்துவம் விளக்கும் இலக்கிய நூலுக்கு அளிக்கப்படுகிறது.

**புவன வாணி அறக்கட்டளை** உத்திரபிரதேச லக்னோவில் பத்மஸ்ரீ நந்தகுமார் அவஸ்தி நிறுவியது. பிறமொழி இலக்கியங்களைத் தேவநாகரி லிபியில் வெளியிடுகிறது. திருக்குறள், கம்பராமாயணம், பாரதி கவிதைகளை வெளியிட்டுளது; சேஷாத்ரி பெயர்த்துளார் - புவனவாணி மந்திர் : இங்கு எல்லா மொழி நெடுங்கணக்கும் சலவைக் கல்லில் பொறிக்கப் பட்டுளது; நடுவே கலைமகள் உருவம், இந்நற்பணிக்கு இலக்கிய ஆர்வலர்கள் நன்கொடை நல்கலாம். இதன் நுழை வாயிலில் எல்லா மொழி அகரங்களும் (முதல் எழுத்து) பொறிக்கப்பட்டுளது. மகுடமாக 'அகரமுதல எழுத் தெல்லாம்... முதற் குறளின் இந்தி ஆதிக்கம் பொறித்துளர். பிறமொழி உச்சரிப்பினைத் தமிழில் தரமுடியாமையால், கிரந்த எழுத்துக்களைப் பயன்படுத்துவது தவறன்று, அது பிற மொழிப் பயிற்சிக்கும் உதவும் என்பது இவரது கருத்து. தேசீய ஒருமைப்பாட்டுக்கு இலக்கியத்தின் மூலம் பணியாற்றும் இதன் முயற்சி போற்றத்தக்கது. **முகவரி:** Bhuvan Vani Trust., Mousam Bagh (Stapur Rd) Lucknow-226020.

**பாரதீய வித்யாபவன் :** குலபதி கே. எம். முன்ஷி பம்பாயில் நிறுவியது. பாரதப் பண்பாடு, ஞானச் செல்வங்கள் அறிய-பாரதக்கல்வியின் மேம்பாடு உணர உதவுவது நோக்கம். வடமொழி, வேத பாடசாலை, கீதா வித்யாலயம் போன்றன நடாத்துகின்றது பதிப்பக வாயிலாகப் பன்னூல்கள் வெளியிடுகிறது. ராஜாஜி பெயரில் சிறந்த இலக்கியப் படைப்புக்கு 10000 பரிசளிக்கிறது. **முகவரி:** K. M. Munshi Marg Bombay-400007;35-36 கிழக்கு மாடவீதி, மயிலை, சென்னை-4.

**ஆதர்ஸ் கில்டு ஆப் இந்தியா :** இந்தி நாட்டின் நூலாசிரியர்கள் கழகம் 3 நூல்கள் வெளியிட்ட எழுத்தாளர் எவரும் உறுப்பினராகலாம். நுழைவுக் கட்டணம் ரூ 200, ஆண்டுக் கட்டணம் ரூ 50. புதிதாகச் சேர உறுப்பினர் ஒருவர் பரிந்துரைக்க வேணும். பன் மொழி ஆசிரியர்களும் ஒன்று கூடிக் கலந்துறவாட இந்திய அரசு மானியம் தருகிறது

பதிப்புரிமை, எழுத்தூதியம் போன்றவற்றில் தாவா ஏற்படின், இது பதிப்பாளருடன் கலந்து தீர்வு ஏற்பட வழிசெய்கிறது.

ஆண்டுதோறும் ஆண்டு மாநாடு நடக்கிறது; ஓராண்டு தில்லியிலும் அடுத்த ஆண்டு மாநிலத் தலைநகர்களிலும் நடக்கும். உறுப்பினர்கள் போக வர இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணமும், மூன்று நாட்களுக்குரிய தினப்படியும் தருகிறது. **முகவரி**: Ramayana Vidyapith, 15, Institutional Area, Lodi Rd., New Delhi- 110 003. எஸ். வி. எஸ். செயலர். ராஜாஜி நூற். நூலகம். 36. வெங்கட நாராயண சாலை. தி. நகர். சென்னை-17.

**சென்ரல் இந்தி இயக்குநரகம்** : தம் தாய்மொழியில் அல்லாது பிற இந்திய 'மொழியில் நூல் எழுதும் ஆசிரியர்கட்கு, ஒவ்வொரு மொழிக்கும்' ஓரிரு நூல்கட்கு இந்திய அரசு பரிசளிக்கிறது. மூல நூலுக்கு ரூ. 2000, மொழிபெயர்ப்புக்கு ரூ 1000 அளிக்கிறது. ஆங்கிலத்தில் எழுதுதற்கு இல்லை. முந்தைய 5 ஆண்டுகளில் வெளியிடப்பட்ட, 100 பக்கங்கட்குக் குறையாத நூல்கட்கே உரியது. 5 படிகள், ஆகஸ்டு இறுதிக்குள், நுழைவுக்கட்டணம் ரூ ஐந்துடன் உரிய படிவம் நிறைவு செய்து, கெசடெட் அலுவலர் உறுதிமொழியுடன் அனுப்ப வேணும். **முகவரி**: The Asst. Directorate (Extention)., Ministry of Education & Culture, West Block VII, R.K. Puram, New Delhi-110 066.

**தேசீய நூற் கழகம்** : 1957. இந்திய அரசால் ஏற்படுத்தப் பட்டது. புத்திலக்கியம், பொது அறிவு, பிறமொழி இலக்கியப் பெயர்ப்புகள், வாழ்க்கை வரலாறுகள், குழந்தை இலக்கியம் போன்றன வெளியிடுகிறது. நாடும் மக்களும் வரிசை (மக்கள், வரலாறு பறவை, விலங்கு, மரம், செடி) குறிப்பிடத்தக்கது. அகில உலகப் புத்தகக் கண்காட்சி, நூல்வெளியீடு பற்றிய கருத்தரங்குகள், எழுத்தாளர்க்கான பயிற்சிப் பட்டறை போன்றன புரிகிறது. **தென் மொழிப் புத்தகக் கழகம்** தென்னிந்திய 4 மொழிகளிலும் குறைந்த விலையில் நல்ல நூல்களை வெளியிடுவது விற்பனை செய்வது, புத்தக உணர்வை இயக்கமாக வளர்ப்பது, எளிய விஞ்ஞானம், உலகின் சிறந்த நூல்களை வெளியிடுவது. **முகவரி**: National Book Trust of India, A-5, Green Park., New Delhi - 16; World University Service (WUS) Spurtank Rd., Madras-30

**ராசா சர் அண்ணாமலைச் செட்டியார் பரிசு** : 1975. படைப்பிலக்கியம் (சிறந்த புதினம், மிகச்சிறந்த சிறுகதை கவிதைத் தொகுப்பு, நாடகம். காவியம்), தமிழ் நாடு பண்பாடு நுண் கலை பற்றிய ஆய்வு போன்றவற்றில் ஏதேனும் ஒன்றில் சிறந்த படைப்புக்கு மாறி மாறி ஆண்டு தோறும் அளிக்கப்படுகிறது. முதலில் 10000மும், '83 தொடங்கி 20000மும் பரிசு முதலில் பெற்றவர் அகிலன் 76இல் கூத்த நூல், யாழ் நூல், பஞ்சமரபு, கருணாமிர்தசாகரம் நான்கிற்கும் அளிக்கப்பெற்றது. நீலபத்மநாபன், தூரன், கோவிமணிசேகரன், கணபதிஸ்தபதி, நா. பார்த்தசாரதி, கி. வா. ஜ, மீ ப. சோமு பெற்றனர். ஒவ்வோராண்டும் சனவரி பிறந்ததும் விவரம் அறியலாம். 7 படிகள் அனுப்ப வேண்டும், பாடநூற்கள், பெயர்ப்புக்கள் கூடா. 200 பக்கங்கட்கு மேல் இருக்கவேணும்.

இதனை ஏற்படுத்தியவர்கள் மு. அ. சிதம்பரம் (அண்ணாமலை அரசரின் மூன்றாம் மகன்), அவர் மகன் ஏ. சி. முத்தையா. எம். ஏ. சி அறக்கொடை நிறுவி அதன் வாயிலாக அளித்து வருகின்றனர். **முகவரி**: 36-40, அரண் மனைக்காரத் தெரு, சென்னை-1

**வி. ஜி .பி** (வி. ஜி பன்னீர்தாஸ்) மூன்றெழுத்து மோகன நிறுவனம்; இதன் மூல மந்திரம் : எலலோரும் எல்லாமும் பெற வேண்டுப்; சிந்தாந்தம்: எல்லோரும் ஓர்குலம், எல்லோரும் ஓர் இனம் அறுபதுகளில் சுலபத் தவணைத் திட்டமாகத் தொடங்கிய சிறு நிலையம். வி. ஜி. பி. வீடு கட்டும்திட்டம், விவசாய பண்ணை, வீடியோ விஷன், தங்கக் கடற்கரை, கல்சுரல் அகாதமி, விந்தை உலகம் எனத் தழைத்து 20 கிளை நிறுவனங் களின் மகுடமாக விளங்குகிறது. V. G. P. World Wide Family என ஆல்போல் தழைத்து அருகுபோல் வோரோடி உலகப் பெருஞ் சாதனை நிலையமாக ஓங்கி ஒளிர்கிறது. தவணை முறைத் திட்டத்தை இந்தியாவிலேயே முதன் முறையாகத் தொடங்கியதாயிற்றே! இதற்கெல்லாம் அடிப்படை இவர்களின் தாய்ப்பாசம் பற்று; அன்னையின் நல்லாசி-கைராசி!

நெல்லை மாவட்டம் வள்ளியூர் வழி அழகப்ப புரம். ஞான திரவிய நாடார் : சந்தனம்மாள். பன்னீர்தாஸ், மரியம்மாள், சந்தோஷம், பானு, புஷ்பா, செல்வராஜ் அறுவர்.

**பன்னீர்தாஸ்** : 4- 8- 32. பெரிய மகன், புன்னகை மன்னன். பனிமாதாவின் தாசன் எனும் பொருளில் பனித்தாசன் என்றே

பெயரிட்டனர்; முதல் வகுப்பு ஆசிரியர் செல்லையா பன்னீர்தாஸ் என மாற்றினார். ரேஷன் கடையில் பணி யாற்றிய போது எதிர் வீட்டிலிருந்த காஞ்சீபுர ஐயங்கார் வகுப்பை சேர்ந்த பாரிஜாதம் அவர்களைக் காதலித்து 3- 8- 50 பதிவுமணம் புரிந்து கொண்டார். மக்கள் ரவிதாஸ், ராஜாதாஸ், பாபுதாஸ், பிரசாத் தாஸ், மர்பிதாஸ்: சாந்தி, ஜெயந்தி, உஷா எண்மர். எப்போதும் தூய்மை எந்நாளும் உழைப்பு, தனித்த செயல்திறம், பெரியோர் நட்பு பேணுதல், சினமறியாமை, பொறுமையின் சிகரம், கருணையின் வடிவம்; படிப்பு 4ஆம் வகுப்பே!

**சந்தோஷம்**: சின்ன மகன் செல்ல மகன். மணம் 12- 9- 57, மனைவி பிலோமினா, மக்கள்: ராணி, லதா, ராஜேஷ், அமுதா, செல்வி. சகோதர ஒற்றுமை, தாயிக்குப் பின் தாரம் என அண்ணியின் கால்களில் வணங்கி ஆசிபெறுதல், நட்பில் நெகிழ்பவர், தொண்டுளம் கொண்டவர், மற்றவர்கள் எதைச் செய்கிறார்களோ அதை மேலும் சிறப்பாகச் செய்யும் ஆர்வலர், கிருத்துவ இதழ்கட்கு எழுதுபவர். இவர் நூலினை வானதி வெளியிட்டுளது. பம்பாய் சண்முகானந்த சபையில் 'நட்புத் திலகம்' என நடிகர் அசோகன் பட்டம் வழங்கினார்.

இருவரும் **இரட்டையர்** போல் எங்கும் எதிலும் ஒரே வித சூட்கோட் அணிந்து இரு கண்களென வந்து இரு சுடர் களென இலங்குவர். தமிழ்ச் செல்வர்களாய்த் திகழ்வர், புகழ்ச் செல்வர்களாய்ப் பொலிவர்.

**செல்வராஜ்** கொஞ்சம் கூச்சமும் ஒதுங்கி வாழம் இயல்பினர். அண்ணன் இருவரின் பின்னே அடி எடுத்து வைப்பவர். துணைவி: வத்சலா, மக்கள் ஷோபா, செல்வி.

மூன்று மகன்களும் மும் மணிகள் முக்கனிகள். மூவரும். ஒருவீராக ஒரு மனதாக ஒரு பெரும் சக்தியாக ஒளிர்கின்றனர். தலைமகனே வீட்டிலும் வெளியிலும் தலைமை.

**சந்தன மரியம்மா** (4- 2- 84). வறுமையில் உறுதியும். செம்மையும் கொண்டு, பிள்ளைகள் முன்னேற்றத்துக்காகவே பிறங்கியவர். வறுமையிலும் சரி வளமையிலும் சரி இவரே இயக்க சக்தி. அன்பின் வடிவம், கருணைத் தெய்வம், பாசத்தின் பிறப்பிடம், மாதர்குல மாணிக்கம், வாழ்வின் பொன் விளக்கு, தவச் செல்வம், பெறுதற்கரிய அருந்தாய்,

நந்தா விளக்கு, குழந்தை உள்ளம், செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் மகராசி. வீட்டுக்கு யார் வந்தாலும் ஏழை பணக்காரர் என்ற வேறுபாடு காட்டாது முகமலர்ந்து வரவேற்று விருந்து தந்து மகிழ அனுப்புவார். குறைந்தது ஐந்து ரூபாயாவது கொடுத்தனுப்புவார். பெற்றவர் களிடம் எப்படியோ, அப்படியே மற்றவர்களிடம் பாசம் பாராட்டுவார். தொட்டது துலங்கும், விளம்பியது வெற்றி தரும். ஆலமரம், விடுகதையும் பழமொழியும் நாவில் விளை யாடும். நாளும் டைரி எழுதுவார். பாடல் புனைவார், வைகறையிலேயே எழுந்து விடுவார் மகாலட்சுமி. இவர்கள் நினைவாலே தமிழ் பரிசு வழங்கப்பெறுகிறது பரிசோடு இவர் நல்லாசியும் பெறுவோர்க்கு வந்தெய்தும் பிள்ளைகள் எங்கு சென்றாலும், இத்தெய்வத் தாயின் திருவடி வணங்கியே செல்வர். (தாயின் திருவடியில்தான் சொர்க்கம் இருக்கிறது-நபிகள் நாயகம்)

**வி. ஜி. பி.** பரிசு ஆண்டுதோறும் இலக்கியப் படைப் பாளர்க்கு பரிசளிக்கிறது. பத்திரிகையாளர், எழுத்தாளர், கவிஞர், ஓவியர், புகைப்படக் கலைஞர் என நாற்பதின்மர்க்கு தலா 1, 000ரூ வீதம் சிறந்த இலக்கிய நூலுக்கும் உயர்ந்த தொழில் நுட்ப நூலுக்கும் தனியே 5, 000 அளிக்கிறது. புத்தக வெளியீட்டாளர்க்குக் கேடயம் தருகிறது.

விழா, தங்கக் கடற்கரையிலுள்ள சோழ மண்டலத்தில் நடக்கிறது. 5 மணிக்கு தேனீர் விருந்து, 6 மணிக்குப் பரிசளிப்பு விழா; இரவு விருந்து. அண்ணா சாலை வி. ஜி. பி. அலுவலகத் திலிருந்து போக வர பேருந்து வசதியும் செய்து தருகின்றனர். ஒவ்வோராண்டும் பிப்ரவரி இறுதிக்குள் நூற்கள் அனுப்பி விடுதல் வேண்டும்: **முகவரி:** வி. ஜி. பி. அறக்கட்டளை, 21, தருமராஜா கோவில் தெரு, சைதை, சென்னை- 15.

அடையாறு ஆரோக்கிய ஆசிரமம் முன்பு பட்டம் தந்து வந்தது. தருமை ஆதீனம் ஆண்டுதோறும் ஆவணி மூல நாளில் பட்டங்கள் சூட்டுகிறது. ரா. பி. சேதுப்பிள்ளை-சொல்லின் செலவர், அ. சி. செட்டியார். செந்தமிழ்க் காவலர், லெ. ப. கரு இராமநாதன் செட்டியார் - முத்தமிழ் வித்தகர். பாரதி இளைஞர் சங்கம், பாரதி கலைக் கழகம், நல்வழி நிலையம், தமிழ் வளர்ச்சி மன்றம், குழித்தலை தமிழ் கா சு, போல்வன பட்டம் தந்து ஊக்குகின்றன. திருச்சி தமிழ்ச் சங்கம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரனார் நினைவுப் பரிசு

முதுபெரும் அறிஞர்கட்கு ஆண்டுதோறும் 1000 வெண்பொற் காசு வழங்குகிறது. இவற்றையெல்லாம் பயன்படுத்தித் தமிழ் கூறு நல்லுலகம் ஏற்றம் பெறுமாக!

## 91. பக்தி சமயப் பனுவல்கள் படைப்பு

கற்றதனால் ஆய பயன் என் கொல் எனின் வாலறிவன் நற்றாள் தொழுவதன்றோ? வாழ்வின் முடிவே வள்ளல் அடியினை அடைவது என்றுதானே பல் சமயங்கள் பேசுகின்றன. கலைகள் மனதைப் பக்குவப்படுத்தலாம்; அறிவியல் நூல்கள் அறிவுக்கு உணவாகலாம். ஆனால் ஆன்ம அமைதி அளிப்பன இறைமை நூல்கள் தாமே. அதனாற்றானே பயனுண்டு பக்தியினாலே என்றார் பாரதியார். அப்படிப் பக்தி நூல்கள் படைத்தவர்களை மறவாது போற்றுவதும் மாண்பே. இந்த நூற்றாண்டில் இந்த நோக்கில் இன்றமிழ் வளர்த்தோரை எண்ணுவதும், வளர்ந்தமை கருதுவதும் வேண்டுவதே! அப்படிச் சிலரின் சேவை செப்புவாம்.

**வரகவி. வே. செ. சொக்கலிங்கனார்:** *14-11-1896.* திருச்சி துறையூரையடுத்த தேனூர். செல்லப்பர்: மீனாட்சி. சென்ன கிருஷ்ணரிடம் தமிழ் கற்றார். 1917இல் மலேயா சென்று ஆங்கிலேயர் எஸ்டேட் ஒன்றில் கணக்கராக இருந்து, கூடவே தமிழ் நூல்கள் கற்று வந்தார். 23இல் இந்தியா வந்து மணம் புரிந்தார். 24இல் மீண்டும் மலேயா, 26இல் சூலை நோய் கண்டது. பெரியப்பா பிள்ளை சீகாழிப் பிள்ளை தேனூர் தேவிக்குச் சந்தனக் காப்பிட்டு விபூதி குங்குமப் பிரசாதம் அனுப்பினார். பாலில் இட்டு உண்டு 3 நாளில் குணமடைந்தார். கூடவே பாடல் பாடும் ஆற்றலும் பெற்றார். தேனூர்ப் புராணம், தேனூர் அம்பிகை மாலை பாடினார். 34இல் துறையூர் வந்து வணிகத்தில் இறங்கினார்.

39இல் முருகூர்ச் சிவ தோத்திரத் திரட்டு, 40இல் ஓமந்தூர் காமாட்சியம்மன் தோத்திர மஞ்சரி, 41இல் சுந்தரர் உலா, 41இல் சேய்த் தொண்டத் தொகை. பிற: திருத்தொண்டர் போற்றிக் கலிவெண்பா, சமயக்குரவர் நால்வர் அந்தாதி, சேய்த் தொண்டர் போற்றிக் கலிவெண்பா சேய்த் தொண்டர் திருவந்தாதி, தேசீய சமர கீதம்.

துறையூர் வர்த்தக சபையின் தலைவர், ஸ்ரீராம விலாஸ் மில்ஸ் நடாத்தினார். வழிபடு மூர்த்தி மணிவாசப் பெருமான்,

திருவாசகமும் திருவிளையாடற் புராணமும் இரு கண்கள். தேவியின் திருவருள் பெற்ற வரகவி, வில்லிபுத்தூரார் போன்ற வாக்கு வளமையர். இவர்க்கு 41இல் ஒரு மகன் பிறந்தார். பெயர் நமச்சிவாயம்.

அறுவகைச் சமயங்களுள் முருக வழிபாட்டுக்குரியது. சைவத்துக்குப் பன்னிரு திருமுறைகள் போலே, முருக வேளுக்குப் பன்னிரு திருமுறைகளை வகுத்தார் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை. அருணகிரியின் திருப்புகழை ஏழு திருமுறைகளாகவும், கந்தர் அலங்காரம் அந்தாதி இரண்டையும் (திருவாசகம் திருக்கோவையார் போலே) எட்டாம் திருமுறையாகவும், திருவகுப்பு ஒன்பதாம் திருமுறையாகவும், கந்தரனுபூதி பத்தாம் திருமுறையாகவும், நக்கீரர் பரிபாடல் ஆசிரியர்கள் கல்லாடர் முதலியோர் பாடல்கள் பதினோராம் திருமுறையாகவும் தொகுத்தார். சிவனடியார் வரலாறு செப்பும் பெரிய புராணம் போலே, முருகன் அடியார்களின் வரலாற்றை ஓதும் செய்யுட் புராணம் இல்லையே எனக் கவன்றார். இக்குறை போக்க சேய்த் தொண்டர் புராணம் பாடி கொடுத்தார், மேற்குறித்த சொக்கலிங்கனர். அதுவே முருகவேள் பன்னிரு திருமுறையின் 12ஆம் திருமுறையானது. இது 66 தனி அடியார்கள், 12 தொகை அடியார்கள் பற்றி விளக்குகிறது. சேக்கிழார் 'உலகெலாம்' என முதலிலும் முடிவிலும் அமைத்திருப்பது போல, 'நிலம்' எனும் சொல் அமையப் பெற்றிருக்கிறது. 2 காண்டம், 12 சருக்கம் 3333 பாடல்கள் கொண்டது.

**மீ. இராமநாதக் கவிராயர்**: 2-6-1908. அங்கையற்கண்ணி, இசைமணி மாலை. 32 தெற்குக் கிருஷ்ணன் கோவில் 3ஆவது சந்து-மதுரை 1. **அருட்கவி சுப. மாணிக்கம் செட்டியார்** 31-8-1910. கந்தன் கதம்பக் கனி மாலை, பழனிச் சிறப்பு, ஸ்ரீ ஐயப்பன் மாலை. கண்டவராயன்பட்டி. திருப்புத்தூர். முத்து ராமலிங்க மாவட்டம். **இளம்பூரணன்** (சி. து. கன்னிசாமி) 23-5-1917. அபிராமியம்மை இரட்டை மணிமாலை, திருவருட் செயல், குருபழனி ஆண்டவன் நான் மணிமாலை, முருகவேள் துதிமாலை, பாலசுந்தர வினாயகர் பதிகம், திருக்குறள் செம் மணிமாலை. சித்திராங்கதை (நா), கண்டறச்சேரி, புது மாம்பாக்கம் அஞ்சல் மதுராந்தகம் வழி, செங்கற்பட்டு.

**அருட்கவி சேதுராமன்**: 1937. தஞ்சை மாவட்ட நாடாகுடி. தந்தை ஓய்வு பெற்ற அரசு அலுவலர். உடன் பிறந்தவர்

எஸ். வி. சுப்பிரமணியம். பிள்ளமையிலேயே திருப்புகழ் பரப்பும் வள்ளிமலை சுவாமிகள் சச்சிதானந்தா அவர்களால் ஆட் கொள்ளப் பெற்றவர். 57இல் பள்ளி இறுதி பயிலும் போழ்து அந்த நல்லவேளை வந்தது. ஒருநாள் மாலை திருப்போரூர் திருக்கோயிலில் அறுமுகனை வழிபட்டார்; அப்போது கருவறை யிலிருந்து ஒரு பெரியவர் வெளிவந்து, மடித்த சிறு தாளினைத் தந்து சென்னையில் சேதுராமன் வீடு வரை உடன்வந்து மறைந் தார். தாளைத் திறந்து பார்க்கும் போது, 'அரோகர கும்மி' என்று தலைப்பிட்டுத் தன் கையெழுத்துப் போலவே சில பாடல் கள் இருந்தன. அந்தப் பெருவேளை முதல் இவர் வாயினின்று அருட்பாக்கள் பெருக்கெடுத்து வந்தன.

ஆழ்வார்கள் நாயன்மார்கள் போலே ஆலயங்கட்குச் சென்று ஆண்டவனை வணங்கிக் கண்ணை மூடித் தம்மை மறப்பார். இறைவன் புகழைத் தேவார யாப்பில் திருப்புகழ் சந்தத்தில் மடை திறந்த வெள்ளம் போல் பாடுவார். முதலில் அருமை புரியாதிருந்தனர். பின் இவர் சகோதரர் மணி இவரின் தெய்வீகம் தனித்துவம் கண்டு அமுதப்பாக்களை வரிவடிவில் வடித்தெடுத்தார். 10,000 பாடல்கள். சிலவே வெளியாகியுள.

செங்கல்வராய பிள்ளையின் இல்லத்தில் பூசை அறையில் ஆயிரத்துக்கும் மேலான பாக்களும், ஜஸ்டிஸ் சதாசிவம் அவர் களின் வழிபாட்டறையிலும் கபாலிச்சுரர் போன்ற பல கோயில்களிலும் பாடியுள்ளார். சுந்தகோட்டத்தில் முன்னாள் மைய அமைச்சர்கள் சி. சுப்பிரமணியம், ஓ. வி. அளகேசன் முன், கைத்தாளமுடன் பாடியது கேட்டுப் பரவசமுற்றுளர்.

சமயக்குரவர் நால்வர் போலே சிவனையும், ஆழ்வார்கள் பன்னிருவர் போன்று திருமாலையும், அருணகிரி போல் முருகனையும், அபிராமி பட்டர் போல் அம்பிகையையும், பாரதி போல பராசக்தியையும் பாடியுள்ளார். சேக்கிழார் பலரைப் பாடியது போன்று சுரைக்காய், வள்ளிமலை சுவாமி களும் இவர் கவியில் ஏத்தப் பெற்றுளர்.

இவர் உட்கார்ந்து சிந்தித்து எழுதி அடித்துத் திருத்துவ தில்லை கண் மூடி தியானத்தில் ஒன்றியதும் இசையும் பாட்டும் இணைகின்றன; யாப்பும் சொற்களும் ஓடோடி வருகின்றன. இற்றை நாள் தெய்வக் கவிஞர் இவர். இத்தனைக்கும் சென்னை நகர அலுவலகம் ஒன்றில் எழுத்தர்.

**பரணிதரன் (மெரீனா):** கலாநிலையம் டி. என். சேஷாசல ஐயரின மகன். ஆனந்த விகடனில் துணை ஆசிரியராக இருந்

தவர். மெரினா பெயரில் நகைச்சுவை நாடகங்களும், பரணிதரன் பெயரில் சமயப் பயண நூல்களும் படைத்தவர். தலமகிமைகளை இவர்போல் தந்தவர் இலர். நேரிற் சென்று கண்டு குறிப்பெடுத்து நூற்றுக்கணக்கான தலம் பற்றி எழுதியவர்.

**ரா. கணபதி:** 1-9-1935. கடலூர். கல்கி சுயராஜ்யா துணை ஆசிரியர் ஜயஜய சங்கர (63), சுவாமி விவேகானந்தர் (64), அறிவுக்கனலே அருட்புனலே (65), நவராத்திரி நாயகி, காமாக்ஷி கடாக்ஷி, அன்பு வேணுமா அன்பு, (சிறுகதை) தெய்வத்தின் குரல் I, II, III. இப்படி எண்ணற்றன படைத்துத் தெய்வத் தமிழ் வழங்கியவருள் குறிப்பிடத்தக்கவர். **முகவரி:** 37, பிரதிவாக்கம், அம்பத்தூர், சென்னை-53.

**ஸ்ரீதேவி கருமாரிதாசர்** 11-5-1930. ஸ்ரீதேவி கருமாரி அம்மன் புராணம், ஸ்ரீ அருணகிரிநாதர் பிள்ளைத் தமிழ், கலி நரசப் பரணி என 30 நூல்கள். 41 முதல் எழுதி வருகிறார். திருவேற்காடு திருக்கோயிலில் திருப்பணியாற்றியுள்ளார். **முகவரி:** 21, மீனாட்சி தெரு, பெரம்பூர், சென்னை-11.

**இரா. சிவசுப்பிரமணியம்:** 10-8-1930. இரேணுகாம்பாள். பாமாலை, கங்கையம்மன் பாமாலை, சபரி அமுதம், ஐயப்பன் சுவாமி பாமாலை, திருமுருகன் பாமாலை. 22, பெரிய கடை வீதி, ஆரணி. **கலை முகில்** (முத்து கிருட்டிணன்) 10-11-1934. அழகு மலர்கள், குன்றும் குமரனும், திருமுருகன் விருத்தம், முருகன் இசைப்பாடல்கள்; கவிதைவனம், குறளமுதம். ஆசிரியர் கொங்கணாபுரம் 637102. **முத்துசண்முகன்** 15.1-1935. அருள் செய்வாயே, பக்திப் பாடல்கள், பத்திரகாளி போற்றி, பூங்குன்ற நாயகியே போற்றி, தமிழாசிரியர், 20, 6வது வார்டு, 5வது தெரு, மேலூர். **இறையரசன்** 7-1-1935. இதயநிழல், இசையமுதம், இசைமலர், முத்தமிழ் முருகன். 8. நகராண்மைக் கழகக் குடியிருப்பு, கோடம்பாக்கம், சென்னை-24, **அருளொளி** (பி. வேலுசாமி) 13-4-1936. முருகன் இசைத்தமிழ், முருகன் இசைமாலை, முருகன் இசைத்துதி, முருகன் இசைப்பாடல்கள். 202, செட்டித் தெரு, இடைப்பாடி, சேலம். **முருகமணி** 30-8-1938. சுந்தவேள் பதிகம், முருகன் தலம் முப்பது, முருக மணி மாலை, முருகன் பிள்ளைத் தமிழ், பஞ்ச சேஷ்டி உமையம்மை பதிகம். முதுநிலை எழுத்தர். சென்னைத் துறைமுகப் பொறுப்புக் கழகம், சென்னை-1. **இரா. செல்லையா** 30-1-1940. திருக்கச்சி திருவேகம்பம் பாமாலைகள், திருச்செந்தில் பணி

மாலை, திருமுகம்-வங்கி எழுத்தர். 7, பிரசன்ன விநாயகர் கோவில் தெரு, பாளையம்கோட்டை. **ஆராமுதக் கவிராயர்** 5-6-1941. அங்கம்மாள் மான்மியம், ஆராமுதன் கவிதைகள், கோவிந்தநாயகி பொன்னூசல், மதுமகா காவியம், வள்ளுவர் வழி நடப்போம் கல்லைக் கம்பன் எனப்படும் ஆசிரியர். கல்லக் குறிச்சி-606 202. **தணிகைக்கவி** முருகன் பக்திப் பாடல்கள், முருகன் பாமாலை, முருகன் புகழ்மாலை, முருகன் இசை மாலை, கோட்டத்துக் குமரனும் குன்றாடும் முருகனும். டாக்டர் இராதாகிருஷ்ணன் நூலகம், சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில், திருத்தணி.

**பி. சி. கணேசன் :** திருவாரூரில் தலைமை ஆசிரியராக இருந்து இதழ் நடாத்தி இதுபோது சென்னையில் சீரிய எழுத் தாளராகச் செழிப்பவர். 100க்கும் மேலாக எழுதி சாதனை படைப்பவர். வழிகாட்டும் கீதை, பிரார்த்தனை எனும் பேராற்றல், நம்பினால் நடக்கும், அருளியலும் அறிவியலும், உலகப் பெரும் தீர்க்கதரிசிகள், இந்துமதம் பற்றிய நூல்கள் போன்றன பக்தித் தமிழுக்கு இவர் படைத்தவை. **முகவரி :** 24, மேற்கு சி. ஐ. டி. நகர், சென்னை-35.

**கண்ணதாசன் :** அர்த்தமுள்ள இந்துமதம் வரிசை ஒன்று போதும் இவரின் இறைமைத் தமிழ்ப்பணிக்கு. ஞானமாலிகா, ராகமாலிகா, புஷ்பமாலிகா, பொன்மழை, பகவத்கீதை விளக்கம், கிருஷ்ணகானம் போன்றன காலமெல்லாம் தெய்வத் தமிழ் பேசும் திவ்விய நூல்களாகத் திகழும்.

வாலம் அம்மையார், அ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் இருவரும் வடமொழியினின்று இறைமை நூல் களை இனிய தமிழில் வடித்துக் கொடுத்துள்ள வளமார் நூல்கள் நின்று நிலவும் நீர்மையன. வானதி பதிப்பகம் காஞ்சித் தவமுனிவரின் பொன் மொழிகளைத் தொகுத்தும், வாரியார் சுவாமிகள் வழங்கியவற்றை வகுத்தும் தந்துள்ளமை இங்கே நினைந்து நெகிழத்தக்கன.

## 92. தமிழகப் புலவர் குழு, 1959

ஊருணி, உள்ளூர்ப் பழுமரம், பயன்தரு மருந்து மரம் போல்வது ஒப்புரவாளரின் உயரிய செல்வம். செல்வத்துப் பயனே ஈதல், ஈதல் இசைபட வாழ்தல், ஈத்து உவக்கும் இன்பம் அறிந்த சால்புடைச் சான்றாளர், முத்தமிழ்க் காவலர், கி. ஆ. பெ. விசுவநாதம் தம் அறுபானாண்டு நிறைவிழா

திருச்சி தேவர் மன்றத்தில் 11-11-1958இல் நடைபெற்றபோது, தமிழகப் புலவர்களைக் கொண்டு குழு ஒன்று அமைக்க இருக்கும் அருமையான திட்டம் அறிவிக்கப் பெற்றது. எவரும் மேற்கொள்ளாத செயற்கரிய செயல்கண்டு, தமிழுலகம் வியந்து போற்றியது. அடுத்து மதுரையில் நாவலர் சோம சுந்தர பாரதியார் இல்லத்தில் அவர் தலைமையில் புலவர் பெருமக்கள் பலர் முன்னிலையில் புலவர் குழு அமைப்பு குறித்த ஆய்வு நடந்தது.

கடைச் சங்கப் புலவர்தம் எண்ணிக்கையான 49 என்ற தொகையே குழுவின் உறுப்பினராக அமைந்தது. முனைவர் கள் எழுவர், பல்கலைக் கலைஞர் எழுவர், தமிழ் முதுகலை எழுவர், வித்துவான்கள் எழுவர், மரபுவழிப் புலவர் எழுவர், பண்டிதர் எழுவர், புலவர் கல்லூரிச் சார்பாளர் எழுவர் என ($7 \times 7 = 49$) நாற்பத்தொன்பதின்மர் அமைந்தனர். முதுமைக்கு முதன்மை தரப்பெற்றது. அனைவர்க்கும் ஒத்த உரிமை வழங்கப்பெற்றது. பொங்கற் பெருநாள், புத்தாண்டு வருடப் பிறப்பு, புரட்டாசிக் கலைமகள் நாள் என ஆண்டுக்கு மும் முறை குழு கூடுகிறது.

15-1-1959 முதற் தொடக்கக் கூட்டம் திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தில் டாக்டர் எ. பால்மதுரம் தொடங்கிவைக்க, சதாசிவப் பண்டாரத்தார் தலைமையில் நடைபெற்றது. தமிழக நகர்களில் ஆண்டுக்கு மும்முறையாக மாறிமாறி நடை பெறுகின்றது. 20-10-63 இல் புதுவை; 23, 24-5-64 இல் பங்களூர்; 20-9-64 திருப்பதி; 20-5-67 இல் பம்பாய்; 22, 23-4-72 தில்லியிலும் கூடியது. உறுப்பினர் போக்குவரத்துச் செலவு அப்போதைக்கப்போது வழங்கப் பெறுகிறது.

திருச்சி கடைத்தெரு அருள்மிகு வரதராசப் பெருமாள் கோயிலின் பின்புறமுள்ள கட்டிடம் 65000க்கு வாங்கப் பெற்றது 5 நூலறைகளுடன் 1500 நூல்கள் கொண்ட நூலகம் முத்தமிழ்க் காவலரால் வழங்கப்பெற்றது.

உலகத் தமிழ் மாநாட்டினை ஒட்டித் 'தமிழியல்' எனும் கட்டுரைத் தொகுப்பும் முக்தமிழ்க் காவலரின் முத்து-வைர விழா மலர்கள் வெளியிட்டது.

தமிழக நல்வாழ்விற்குத் தமிழின் வளர்ச்சிக்குப் புலவர் குழு வழிகாட்டும்-கோலும் என்ற நம்பிக்கை தோன்றியுளது. புலவர் குழுவின் முடிவுகள்-ஆலோசனைகள் அரசாலும் தமிழக

மக்களாலும் ஏற்றுப் போற்றப்பெறுகின்றன. அமைப்பாளர் கி. ஆ. பெ. வி. **முகவரி :** 8, வரதராசப் பெருமாள் கோயில் தெரு, பெரிய கடைத் தெரு, திருச்சி-8.

## 93. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டினை ஒட்டி உருவானது. பூனா தக்கண மேற்பட்ட ஆய்வக இயக்குநர் டாக்டர் எஸ். எம். காத்ரே இதன் வரைவினை முன்வைத்தார். முதலமைச்சர் அண்ணாதுரை 'தமிழ்க் கழகம்-இந்தியக் கழகமாக உருவாகுமாறு பிரெஞ்சு அகாதமியை அடியொற்றி அமைத்திடுக' என உறுதுணை புரிந்தார். கல்வி அமைச்சர் தலைமையிலான குழு, இதன் அமைப்பு முறையினை வரையறுத்து யுனெஸ்கோ முன்வைத்தது. 21-11-70இல் பதிவு செய்யப்பெற்றது.

தலைமை நோக்கம் : விரிவான தமிழ்ப் பயில்வின் பல்வேறு பகுதிகளும் தொடர்புடைய உட்களங்களோடும் ஒருங்கிணைந்த ஒரு பெரும் உலகளாவிய ஆய்வு தமிழியலில் மிகு ஆர்வம் கொண்ட அனைத்துலக அறிஞர்களின் ஒத்துழைப்போடு உருவாக்குவது. இந்த உயர்நோக்கு நிறைவேற, நிறுவனம் ஆய்வுச் சூழலை அமைத்துக் கொடுக்கும். இதற்காக அறிஞர்கட்குப் பயிற்சி தரும். உலகெங்கணும் உள்ள தமிழியல் தக்காரை நெருக்கமுறச் செய்து, அவர்களின் அறிவினை ஒருங்கிணைத்து வெளிப்படுத்தும். பிற தனி, அரசு, தேசிய, சர்வதேசிய நிறுவனங்கள், நல்லறிஞர்களுடன் கலந்து கடமை ஆற்றும். தமிழக அரசே அரும்பியது முதல் அனைத்துச் செலவினையும் ஏற்கிறது.

அங்கங்கு அறிஞரும் பிறரும் தமிழியல் தொடர்பாக என்ன செய்துளர், என்ன முடிவுகள் கண்டுளர் என்பனவற்றைத் திரட்டி ஒருமுகப்படுத்தி உலகறியச் செய்வது முதற் கடமை ஆகிறது. இதற்காகத் தமிழரின் பல்வேறு மரபுகளை ஆய்ந்தறிந்து நூல்களாக வெளியிடுவது; வரலாறு, இலக்கியம், இலக்கணம், பண்பாடு, நாட்டுப்புறவியல்-இவற்றிடையே இழையோடும் ஒருமையை இனக்கண்டு இயம்புவது போன்ற பணிகளைச் செய்யும் தமிழறிய விழையும் தமிழரல்லாதார்க்கும் வெளிநாட்டறிஞர்கட்கும் தமிழை அறிவுறுத்த பயிற்றுமுறை கருவி கலன்களைத் கண்டுளது.

பணிகள் : பல்வேறு கருத்தரங்குகளைப் பாங்குடன் நிகழ்த்தி வருகிறது. 75இல் ஆய்வியல் முறை, 77இல் நாட்டுப் புறவியல், 78இல் பண்பாட்டுப் பாரம்பரியம், இலக்கிய மரபியல், 79இல் மொழி இலக்கண வழி வழி, 80இல் கலை தொல்பொருளியல், 81இல் வரலாற்று வழி கருத்தரங்குகளில் தக்கார் கலந்து தகுவுரைகள் தந்தனர்; அவை நூல்களாகவும் வந்துள.

ஆண்டுதோறும் 3 திங்கட்கு International Visiting Senior Fellowships வழங்குகிறது. ஆ. வேலுப்பிள்ளை (இலங்கை) கமில் சுவலபில் (நெதர்லாந்து), ஆர். ஈ ஆஷர் (எடின்பரோ), போன்றார் போந்து பேருரை ஆற்றினர்; அவை புத்தகங் களாகியுள. ஈராண்டு முதுமுனைவர் ஆய்வராக ஐவர் அமர்த்தப்பட்டுளர். டாக்டர் பட்ட ஆய்வும் 70-80 பேர் புரிந்து வருகின்றனர்.

Journal of Tamil Studies என்ற ஆய்விதழும் நடத்தி வருகிறது. தமிழில் என்னென்ன வகையில் முறையில் துறையில் நூல்கள் வெளிவர வேண்டுமோ அப்படி அரிய பயனான நூல் களை மளமள வென வெளியிட்டுவருகிறது. இதுவரை 150 அரும் நூல்கள்! இலக்கியக் கொள்கை, தொல்காப்பிய உரை வளம், நாட்டுப்புறவியல், தமிழர் வாழ்வியல், சமயம், தத்துவம் சித்த மருத்துவம், சுவடி அச்சேற்றல், ஆண்டுவாரியாக (எண்பதில் எண்பத்தொன்றில்) தமிழ் - இப்படி ஒப்பரிய நூல்கள். **செயலில் இருப்பன** : உலக எண்ணம் பண்பாட்டுக்குத் தமிழரின் கொடை, தமிழ் இலக்கியத்தில் மேலைத் தாக்கம், இந்திய இலக்கிய ஒப்பாய்வு, வரலாற்று அகராதி, சுவடிப் பதிப்பு, தமிழரல்லாதார்க்குத் தமிழ் வாசகங்கள், 19, 20 ஆம் நூற். இலக்கிய வரலாறு, தொல்காப்பிய செம்பதிப்பு, இலக்கியத்திறனாய்வு, மொழிபெயர்ப்பியல் கையேடு.

முதலில் நிர்வாக அலுவலராக அமைந்தவர் டாக்டர் க. மீனாட்சி சுந்தரனார். முதல் இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம்; இவர் உழைப்பும் சுறுசுறுப்பும் நிறுவனத்தை நிமிரச் செய்தது. அசுர சாதனை புரிந்தார். இப்போதைய இயக்குநர் டாக்டர் ஏ. என். பெருமாள். தமிழின் - தமிழியலின் தலைமைத் திருக்கோயிலாகத் திகழும் International Institute of Tamil Studies (I I T S) முகவரி: சென்னை-113. (412992)

**க. த. திருநாவுக்கரசு:** *20-11-1931.* செங்கற்பட்டு மாவட்டக் கருங்குழி. பச்சையப்பன் கல்லூரி தமிழ் முதுகலை மாணவர்.

வரலாற்றிலும் எம்.ஏ. பட்டம் பெற்றவர். அண்ணாமலையில் 'பழந்தமிழ் இலக்கியத்தில் அறம்' தலைப்பில் ஆய்ந்து எம்.லிட். மு.வ.வின் படைப்பிலக்கியங்களை ஆராய்ந்து டாக்டர் பட்டம். புதுக்கோட்டை மன்னர் கல்லூரி, சென்னை மாநிலக் கல்லூரித் துணைத் தமிழ்ப் பேராசிரியர், மணவி தமிழ்க் கல்லூரி முதல்வர், சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆராய்ச்சித் துறைத் தலைவர். இதுபோது உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இணைப் பேராசிரியர்.

புலமையாளர் எப்போது எது பற்றிக் கேட்டாலும் அருவியெனக் கருத்துக்கள் சொட்டும். கருவி நூல்கள் பற்றித் துருவித் துருவித் தருவார். செறிந்த அறிவர். தமிழாய்வில் பழமைக்கும் புதுமைக்கும் பாலம். புதிய நூல்களைத் தேடிப் படித்துத் தம் அறிவினைப் புதுக்கிடும் (upto date) பெற்றியர். பயிலா நாளெல்லாம் பயனிலா நாளெனக் கருதித் துயிலாது பயிலும் பாங்கினர். 'நடமாடும் நூலகம்' எனத் தயங்காது சாற்றலாம். அறிவுப் பசியும் நூலகத் தாகமும் மிக்கவர்.

சிலர் சங்க இலக்கியத்தை விட்டுக் கீழிறங்கார்; பலர் தற்கால இலக்கியத்திற்கு முன் செல்லார். இவர் அப்படிக் குறுக்கக் கொள்ளாது தமிழோடு வரலாறு, கல்வெட்டு, மொழியியல், சமுகவியல், மானிடவியல், தத்துவம் எனப் பல்துறையில் புலமை பெற்றுப் பிறங்குபவர்.

சிந்துவெளி தரும் ஒளி, வாழ்வும் வரலாறும், வரலாற்று வஞ்சி, இனமரபு வரலாறு, முதலாம் ராசராசன், இலங்கையின் தமிழ்ப் பண்பாடு, வரலாற்றுச் சுடர், சிந்துவெளி எழுத்து வடிவங்கள், தமிழக நாகரிக வரலாறு படைத்ததோடு, இங்கிலாந்து வரலாற்றைத் தமிழில் பெயர்த்துள்ளார். தமிழறிஞரில் இவர் ஓர் வரலாற்று வித்தகர். தமிழ் அறிந்த வரலாற்றறிஞர் என்ற வகையில் தமிழ் நாட்டு வரலாற்றுக் குழுவின் தலைவராக அரசு அமர்த்தியது.

கொடைகள்: வரலாறு 9, திறனாய்வு 8, உரையும் பதிப்பும் 3, தொகுப்பு-பதிப்பு 2, படைப்பிலக்கிய நாடகம் 2, பெயர்ப்பு 5. இப்படி 30 நூற்கள் படைத்தவர். திருக்குறள் நீதி இலக்கியம் (74இல் சாகித்திய அகாதமி விருது), திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும், திருக்குறளும் இந்திய அற நூல்களும், சான்றோர் கண்ட திருவள்ளுவர், ஒளி விளக்கு,

குறட்கொடைகள். தொல்காப்பியத்துக்கும் திருக்குறளுக்கும் நூலடைவு படைத்துள்ளார். வல்ல மொழிபெயர்ப்பாளர்; சாகித்ய அகாதமிக்காக ராஜாராம் மோகனராய், லட்சுமிநாத பெஸ்பருவா, ஜீவானந்ததாஸ் போன்றன மொழியாக்கம் செய்துளார். தனிப்பாடல் திரட்டிற்கு உரை எழுதிப் பதிப் பித்துள்ளார், பிற: வாழ்வும் இலக்கியமும், அடிமை விலங்கு, பொற்கொடி, தமிழ் நிலவு, அறிஞர் அறவாழி (மு.வ. பற்றியது) தொல்காப்பியரின் மொழிநூற் புலமை.

திருக்குறள் பரப்பும் தொண்டில் தலை நிற்பவர். 55 தொடங்கி புதுகை, சென்னையில் குறள் வகுப்பு நடாத்தி யுள்ளார்; திருவள்ளுவரும் இந்தியச் சிந்தனையாளரும் என 25 தொடர் சொற்பொழிவுகள் ஆற்றியவர். வள்ளுவர் நற் செய்தி பரப்பும் பேருரையாளராக வட மாநிலங்களில் குறட் பொழிவுகள் ஆற்ற அனுப்பியது சாகித்ய அகாதமி 'திருக்குறள் மணி' எனப் பட்டம் தந்து போற்றியது தமிழுலகு. இற்றைத் தலைமுறை ஊற்றமான தமிழறிந்த இவர் **முகவரி:** மணியம் பப்ளிகேஷன்ஸ் 3, இரண்டாம் பெருஞ்சாலை, கோட்டூர்த் தோட்டம், சென்னை-85.

## 94. தமிழ்ப் பல்கலைக் கழகம்

அய்ந்தாம் உலகத் தமிழ் மாநாட்டிலே, 'இந்தியத் தமிழரும் மறுநாட்டுத் தமிழரும் ஆய்வறிஞர்களும் பயன் பெறும் பொருட்டு, தமிழ்ப் பல்கலைக்கழகம் ஒன்று அமைக்கப் பெறும்' என முதல்வர் எம். ஜி. ஆர். அறிவித்தார். துணை வேந்தர் வ. சுப. மாணிக்கனார் தலைமையில் கி. ஆ. பெ. விசுவநாதம், ம. பொ. சி., வி. சி. குழந்தைசாமி, தமிழ் வளர்ச்சி இயக்குநர் மா. நன்னன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் ச. வே. சுப்பிரமணியம், சாலை இளந்திரையன், கல்வித் துறை உதவிச் செயலர் ஆர். மீனாட்சி சுந்தரம் ஆகியோரைக் கொண்ட வல்லுநர் குழு விரிவான அறிக்கை வடித்துத் தந்தது.

1. ஒரே இடத்தில் அமைய வேணும்; தங்கிப் பயிலும் ஆய்வகமாக அமைய வேண்டும்; பிற மாவட்ட—நாடுகளில் மையங்கள் அமைக்கலாம். 2. ஆய்வு பல்துறை சார்ந்த விரிவின தாக ஆசிய ஆப்பிரிக்கத் தமிழர்க்கும் உதவுவதாக இருத்தல் வேண்டும். 3. ஆய்வுக்கு ஆதார சுருதியான ஓலை கையெழுத்துச் சுவடிகள், கல்வெட்டுக்களைத் தேடித் திரட்டிப் பாதுகாக்க

வேணும். 4. அனைத்து வகை அறிவுத் துறைகளிலும் தமிழை வளர்த்துப் பல்துறைப் பயிற்று மொழியாக மலர்விக்க வேண்டும். 5. பழமை போற்றிப் பயன்படுத்தி வருங்காலத்தில் வளர் தமிழுக்குரிய வழிவகை காண்பது; தொடக்கச் செலவாக 7.40 கோடியும், தொடர் செலவுக்காக ஆண்டுதோறும் 24 லட்சமும் ஒதுக்கியது 13-9-81இல் சட்டம் இயற்றப்பெற்றது.

தஞ்சாவூரில் 15-9-81 (மாலை 5 மணி) **தொடக்க விழா.** அண்ணா பிறந்த நாளில் விளையாட்டரங்கில் நிகழ்ந்தது. முதலமைச்சர் எம். ஜி. ஆர். தலைமையில் தமிழக ஆளுநர் மேதகு சாதிக் அலி தொடங்கி வைத்தார். நூலகக் கட்டிடத்திற்கு நடுவண் அரசு வேளாண் துறை இணை அமைச்சர் ஆர். வி. சாமிநாதன் அடிக்கல் நாட்டினார். வ. சுப. மாணிக்கனார் சங்க இலக்கியம், ம. பொ. சி. சமய இலக்கியம், கி. ஆ. பெ விசுவநாதம் காப்பிய இலக்கியம், சாலை இளந்திரையன் வளர்தமிழ் இலக்கியம் பற்றிச் சிறப்புரை ஆற்றினர். அண்ணா படத்தினை நிதி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் திறந்து வைத்து வாழ்த்துரை வழங்கினார். எம் ஜி. ஆர். பல்கலைக் கழகத்தின் கட்டிடங்களுக்கான அடிக்கல் நாட்டி உரையாற்றினார். 'இப் பல்கலைக் கழகம் அரசியல் மத வகுப்புவாத வேற்றுமைகள் நுழைவதற்கு இடம் அளிக்காது; பொறியியல் தொழில் நுட்பம்,மருத்துவம் முதலான நவீன அறிவியல்களைத் தமிழிலேயே கற்பிக்க வழி செய்யும்' என்றார். 'தமிழுக்குப் பெருமையும் தமிழர்க்குச் சிறப்பும் தேடித் தரும், என்று அன்று அப்போது பதவியேற்ற துணை வேந்தர் வ. அய். சுப்பிரமணியம் நன்றி நவின்றார். முதலில் கல்வி அமைச்சர் செ. அரங்க நாயகம் வரவேற்புரை நிகழ்த்தினார். இரவு திருமலை குறவஞ்சி நாட்டிய நாடகம் நல்வாழ்வுத் துறை அமைச்சர் எச். வி. ஹண்டே முன்னிலையில் நிகழ்ந்தது.

19-9-81 காலை கல்வி அமைச்சர் தலைமையில், நீர்ப்பாசன அமைச்சர் கே. ராஜா முகமது கலைப்புலத்துக்கு அடிக்கல் நாட்டிதுவக்க உரை புரிந்தார். திட்டக்குழுத் துணைத் தலைவர் டி. கே. சீனிவாசன் சிறப்புரை ஆற்றினார். **சுவடிப்** புலத்தைக் கருநாடகக் கல்வி அமைச்சர் ஜி. பி. சங்கர்ராவ் அடிக்கல் இட்டுத் துவக்கினார். சு. வே சுப்பிரமணியம் சிறப்புரை. **மொழிப்** புலம் உள்ளாட்சி அமைச்சரால் அடிக்கல் நாட்டி துவங்கப் பெற்றது, மா. நன்னன் சிறப்புரை. புதுவை கல்வி அமைச்சர் ரேணுகா அப்பாத்துரை **அறிவியற்** புலத்திற்கு அடிக்கல் அமைத்துத் துவக்கம்; வ. செ. குழந்தைசாமி சிறப்புரை. **வளர்தமிழ்ப்** புலம் ஆந்திரக் கல்வி அமைச்சர்

பி. வெங்கட்ராம் ரெட்டி அடிக்கல் நாட்டத் தொடங்கப் பெற்றது. வேளாண் அமைச்சர் சிறப்புரை. அவ்வை நடராசர் நன்றியுரை. ஆதிதிராவிட அமைச்சர் எம். விஜயசாரதி முன்னிலையில் சூலமங்கலம் சகோதரிகள் இன்னிசை, வள்ளித் திருமணம் நாட்டிய நாடகம் நிகழ்ந்தது.

**17-9-81**இல் காலை சுரதா தலைமையில் 'அண்ணா ஒரு பல்கலைக் கழகம்' எனக் **கவியரங்கம்**; தொடக்கக் கவி: மேலவைத் துணைத் தலைவர் புலமைப்பித்தன். நாடக ஆசிரியர், உரைநடையாசிரியர், நிர்வாக நிபுணர், அரசியல் அறிஞர், பண்பின் சிகரம், சீர்திருத்தச் செம்மல், அறிஞர் என முறையே தங்க அன்புவல்லி, தமிழன்பன், பொன்னடியான், கண்ணப்பன், ச. பாலசுந்தரம், அறிவுமதி, கங்கை மணிமாறன் கவி பாடினர்.

அடுத்து **வழக்காடு மன்றம்**: தலைமை மின்துறை அமைச்சர் ச. இராமச்சந்திரன். தலைப்பு: 'பெரியார் பெரிதும் வற்புறுத்தியது இன நலமா! பகுத்தறிவா?' முறையே திருவாரூர் தங்கராசு, தமிழ்க்குடிமகன் வாதிட்டனர்.

மாலை **நிறைவு விழா**. வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. சோமசுந்தரம் வரவேற்பு. தலைமை சட்டப்பேரவைத் தலைவர் க. இராசாராம், கே. ஏ. கிருட்டிணசாமி, இராம வீரப்பன், சி. பொன்னையன், எஸ். இராகவானந்தம், எஸ். முத்துசாமி, எஸ். என். இராசேந்திரன் போன்ற அமைச்சர்களும்; ப. உ. சண்முகம், ஹாஜா ஷெரிப், க. முத்தையா, தா. பாண்டியன், குமரி அனந்தன், ப. நெடுமாறன், ஆண்டித்தேவர், சட்டநாத கரையாளர், முகமது இஸ்மாயில், ஜீ. மூர்த்தி போன்ற கட்சித் தலைவர்களும் வாழ்த்துரை வழங்கினர். பெரியார் படத்தைத் திறந்து வைத்து விழாப் பேருரை ஆற்றினார் எம். ஜி. ஆர். அமைச்சர் அரங்கநாயகம் நன்றி பாராட்டினார். அமைச்சர் திருநாவுக்கரசு முன்னிலையில் 'குடவாயில் கோட்டம்' என்ற வரலாற்று இலக்கிய நாடகம் நடந்தது.

இது, தமிழக ஈழ மலேயாப் பல்கலைக் கழகங்கள் ஆற்றும் பணிகளைச் செய்யாமல், புதுத்துறைகளில் விரிந்த ஆய்வு மேற்கொள்ளும். இதில் ஆய்வராகச் சேர, குறைந்த அளவு பிஎச்.டி. அல்லது அதற்கு ஈடான ஆய்வு அனுபவம் பெற்றிருக்க வேணும்; டி. லிட். பட்டமே வழங்கப் பெறும். பல்கலைக் கழகத்தின் பயிற்று—ஆய்வறிக்கை மொழி தமிழே!

இந்தியாவிலேயே மாநில **மொழிக்கென அமைந்த முதல் பல்கலைக் கழகம்** இதுவே; இதனை முன்மாதிரியாகக் கொண்டு தெலுங்கு மொழிப் பல்கலைக் கழகம் அமைந்தது.

I. **மொழிப்புலம்:** 1. **இலக்கியத்துறை**: 18-5-82. நோக்கம்: உயர்தர நெறிகளை வளர்ப்பது, படைப்புகளை உரியமுறையில் உலகிற்கு அறிமுகம் செய்வது, தமிழ்ச் சமுதாய வளர்ச்சிக்கு ஆய்வுகளை உய்ப்பது. பணி: **சைவசித்தாந்த சாத்திர வரலாறு:** முதற்றொகுதி தமிழ் நூல்களில் காணக்கிடக்கும் சித்தாந்தக் கூறுகளும், இரண்டாம் தொகுதி 14 மெய்கண்ட சாத்திரங்களின் வரலாறும் பற்றியன. சித்தாந்த நெறியின் தோற்ற வளர்ச்சி முறைமையினை முழுமையாக வரலாற்று நோக்கில் விளக்கும் இதனை வழங்கியவர் புல-துறைத் தலைவர் (21-6-82—1-10-84) க. வெள்ளைவாரணனார். **சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்** (2 தொகுதி): தந்தவர் துறைத்தலைவர் இரா. சாரங்கபாணி (18-5-82—86). சங்க இலக்கிய வாழ்வியல் கூறுகள் அனைத்தையும் விளக்குவது, முதற்றொகுதி 1300 பொருள் பற்றியது. **தமிழில் காப்பியக் கொள்கை:** ஆக்கம் இணைப் பேரா து. சீனிச்சாமி. இந்த நூற்றாண்டு வரையான காப்பியங்களின் பின்னணி, வளர்ச்சி, மாற்றம் கண்டு மேனாட்டுக் கொள்கையோடு ஒப்பிடுவது. முதற்றொகுதி சிலம்பு, மேகலை, சிந்தாமணி, பெருங்கதை, சூளாமணி ஐந்தையும் அடியாகக் கொண்டது. பிற பற்றிய ஆய்வு 2ஆம் தொகுதியில். **தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்:** தொல்காப்பியத் தகைஞர் வ.சுப.மா. **தொல். எழுத்து புத்துரை.**

பண்டைத் தமிழ் இலக்கியங்களைக் கிரேக்கம் சீனம் பாலி பிராகிருதம் வடமொழி இலக்கியங்களோடு ஒப்பிடல்; தமிழ்க் காப்பியங்களை ஒப்பீடு செய்தல், பக்திப் பனுவல்களைப் பிற திராவிட மொழிகளோடும், இக்காலப் புத்திலக்கியங்களைப் பிற எல்லா மொழியிலும் இணைத்துப் பார்த்தல்; தொல், குறள் பொருட் களஞ்சியம் சமைத்தல்; உரையாசிரியர்களின் திறனாய்வுக் கொள்கைகளை ஒப்பிடுதல்; நடையியற் கொள்கைகளைத் திறனாய்தல்; ஆங்கில வடமொழி, சமூக உளவியல் மானுடவியல் சிறப்பு நூல்களைப் பெயர்த்தல்-எதிர்காலத் திட்டம்.

2. **மொழி இயல் துறை**: 23-2-1982. நோக்கம்: கோட்பாட்டு நூற்கள் படைத்தல், தமிழின் அமைப்பினை மாற்றிலக்கணக் கோட்பாடு கொண்டு விளக்குதல், வட்டார வழக்குகளை ஆய்வது, மரபிலக்கணத்தைத் தற்கால மொழியியல் கோட்

பாட்டுப் பின்னணியில் ஆராய்வது, குழந்தை மொழி கற்பது, பள்ளிகளில் தமிழ் முதன் மொழியாகக் கற்பிக்கப்படுதல், பிற துறைகளோடு இணைந்து ஆய்வது. பணி: தொடரியல், மாற்றிலக்கண அணுகுமுறை-துறைத்தலைவர் அரங்கன். அளிப்பு: Bibliography on Computational Linguistics. இணைப் பேராசிரியர் ச. ஆரோக்கியநாதன், வட்டார மொழி வேறுபாடு-தமிழக மாவட்டங்களில் அரிசன வாழ்க்கை பற்றி ஆய்வு மேற்கொண்டுளார். பிற **எப் பல்கலைக் கழகமும் முனையாத முயற்சி!** சத்ய சோசப்—A Pilot study of Kinship in a Village (Vallam), A Bibliography of the study of Kinship. க. பாலசுப்பிரமணியன் (23-6-1983—26-6-1985) Index of Tolkappiam. க. வெள்ளைவாரணனார் விலகியபின், அரங்கர் புலத்தலைவர்.

3. **காஞ்சிபுரம் தத்துவ மையம்:** 1-6-1983. இந்தியாவின் பல்வேறு தத்துவங்களையும் ஆய்வு செய்து அவற்றின் பெருமைகளை விளக்கும் நோக்கினது. சைவம், வைணவம், வேத இந்து மதம் மூன்றை உள்ளடக்கியது பணி: வைணவம்-சமயம் இலக்கியம் தத்துவக் கொள்கை-இயக்குநர் வைணவத் துறைத் தலைவர் கூ ரா. நஞ்சுண்டன் நல்கியது. பன்னிரு திருமுறை ஆய்வுக்கட்டில் சிறப்பு நிலைப் பேராசிரியர் அ.ச ஞான சம்பந்தன் 'பெரியபுராணத்தில்' காப்பிய அமைப்பு. சைவத் துறை சிறப்பு நிலைப் பேரா மகாவித்துவான் சி. அருணை வடிவேலு முதலியார் 'சிவஞானபோத மாபாடிய பொருள் நிலை விளக்கம்'. வேத இந்துமதத் துறை இணைப் பேரா ஜி.வி. சரோஜா 'வேத இந்துமத தெய்வம் இந்திரன், வருணன், செ. அரங்கசாமி பாகவத புராணத்தில் பக்தி நெறியில் ஆன்ம உணர்வு, தத்துவம். கோ. முத்துசாமிப் பிள்ளை கோயிற் களஞ்சியம்.

9-5-1984 தொடங்கி 3 வார சைவசித்தாந்தப் பயிற்சி வகுப்பு நடாத்தியது; 86 மே. தர்க்கமும் மொழியியலும் பயிற்சி வகுப்பு. 8—10-3-85இல் சைவக் கருத்தரங்கு; 4, 5-1-85 இல் வைணவக் கருத்தரங்கு; 24, 25-1-86இல் கிறித்துவக் கருத்தரங்கு நடந்தது. சென் சான். பௌத்த கருத்தரங்கும் நிகழ்ந்தது. கிறித்துவத் துறைக்கு சங். எஸ். ராஜமாணிக்கம் நியமிக்கப்பெற்றுளார். பிற சமயத் துறைகளும் அமையும்.

4. **மலையின மக்கள் ஆய்வு மையம், உதகை:** 30-11-1983. தமிழ் நாட்டில் 36 பழங்குடி இனத்தவர் உளர்; தமிழக மக்கள் -தொகையில் 5.2%. பிற மாநிலங்களில் ஆய்வு மையங்கள்

உள; தமிழகத்தில் இல்லை. இக் குறைபோக்க, இது 30 ஏக்கர் பரப்பில் பாலாடாவில் அமைந்துளது. தமிழ்ப் பண்பாட்டை ஆராயும் பல்கலைக் கழகத்திற்கு இவர்களின் பண்பையும் ஆராய வேண்டிய மிகு கடமை உளது. நோக்கம்: வாழ்க்கை முறை குறித்து ஆய்தல், தற்காலச் சூழலில் இவர்களிடம் ஏற்பட்டுள்ள மாற்றங்கள், பாடல் கதை சேகரித்தல், பேச்சு வழக்கினை ஆராய்தல், பணி: நீலகிரி மாவட்ட மலையின மக்கள் உறைவிடங்கள்-டி. எஸ். நடராஜன். இருளரின் பிறப்பு இறப்பு நோய் புள்ளி விவரம் - கே. நிர்மலானந்த ரெட்டி. சேலம் கல்ராயன் குன்றுகளில் பட்டுப்பூச்சி வளர்ப்பு-வ. ஆ. ஜவ்வாது மலையினர் நலத்திட்டங்கள்-பாஸ்கரன் ஆனந்த பானு. திருச்சி பச்சைமலை மலையினத்தவர் பொருட்கள்-பி. என். கலியபெருமாள்.

II. **சுவடிப்புலம்**: 1. **ஓலைச் சுவடித் துறை**: 2-1-1982. நோக்கம்: இதுவரை வெளிவராத நூல்களைப் பதிப்பிப்பது; முன்னம் வெளிவந்தவற்றுள் மிகச் சிலவற்றை மீண்டும் சுவடி ஒப்பீடு செய்து செம்பதிப்பு கொணர்தல், பணி: குறுந்தொகை பாட நுண் பதிப்பு, கலியுகப் பெருங்காவியம் (3010 விருத்தங்களில் கட்டபொம்மன் வரலாறு),—துறைத் தலைவர் மு. சண்முகம் பிள்ளை. தொல் செய்யுளியல், சொல் பொருள் இளம்பூரணர் உரை-அடிகளாசிரியர். தண்டபாணி சுவாமிகளின் 'அறுவகை இலக்கண உரை'—ப.வெ. நாகராசன். நற்றிணைப் பதிப்பு-த.கோ. பரமசிவம். ரா ராகவையங்காரின் ஆத்திச் சூடியுரை, சீவேந்திரர் சரிதம் அம்மானை. Union Catalogue of Tamil Palmleaf MSS in Tamil Varsity. செழிதரையன் பிரபந்தங்கள், கீதைத் தாழிசை; திருமண பவனி—வருங்காலத் திட்டம்.

சுவடி நூலகத்தில் தமிழ்ச் சுவடிகள் 1420, வடமொழி 783, தெலுங்கு 42 மலையாளம் 9 = 2254 உள. சில நுண்படம் எடுக்கப் பெற்றுள. கோடைப்பள்ளி, ஓராண்டு பட்டயப் படிப்பும் அளிக்கத் திட்டமிட்டுளது.

2. **அரிய கையெழுத்துச் சுவடித் துறை**: 25-1-1982. நோக்கம்: அரிய கையெழுத்துப் படிகளைத் தேடிப் பெறுதல், அச்சிடுதல், பிற இடங்களில் உள்ள மோடி ஆவணங்களினின்று மராட்டிய மன்னர் காலச் செய்திகளைத் திரட்டித் தருதல். பணி: தஞ்சை மாராட்டிய மன்னர்கால அரசியலும் சமுதாய வாழ்வும்-துறைப் புலத்தலைவர் கே. எம். வேங்கடராமையா. திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி-பெரியவாச்சான் பிள்ளை மணிப்

பிரவாள உரையில் 200 பாக்களுக்குத் தமிழாக்கம்-தெ. ஞான சுந்தரம் (24-6-82—22-6-84). மராத்தியர் நுண்கலைக்கு ஆற்றிய தொண்டு, தஞ்சை மராட்டியர் காலப் பன்மொழி இலக்கியங்கள்-ம.சா. அறிவுடை நம்பி. மோடி ஆவணங்கள் மொழி பெயர்க்கப்படுகின்றன.

**3. கல்வெட்டுத்துறை :** கல்வெட்டியல் பிரிவு 1-2-82, தொல்லியல் பிரிவு 21-7-83. நோக்கம்: படி எடுக்கப் பெறாத கல்வெட்டு செப்பேடுகளைப் படி எடுத்தல், தொன்மை இடங்களில் அகழாய்வு செய்து கண்டுபிடிப்பு கொண்டு தமிழக வரலாற்றில் விடுபட்டுப் போன பகுதிகளை நிறைவு செய்தல், பழந் தமிழர் நாகரிகத்தைப் பாரறியச் செய்தல். தஞ்சை மராத்தியர் செப்பேடுகள் 50, கல்வெட்டுக்கள் 130-இணைப் பேராசிரியர் புலவர் செ. இராசு. வல்லம், கொடுமணல் அகழாய்வுகள் - புரிந்தவர் தலைவர் ஒய். சுப்பராயலு.

**4. நீரகழாய்வு மையம்-மண்டபம்:** 16-6-84. **இந்தியாவிலேயே முதல் முயற்சி.** அறிவியல் உலகம் ஏற்கும் தெளிவுகள் வழி நம் பண்டை வரலாற்றை உறுதி செய்வது பல்கலைக் கழகத்தின் நோக்கம்; பண்டை மரக்கல வகை, கடற் பயண வழி போன்றவற்றை ஊகித்தறிந்து தென்னாட்டு வரலாற்றில் விட்டுப் போன பகுதிகளை ஓட்டுப்போட உதவும் சான்றுகள் நீரக ஆய்வின் மூலம் கிட்டும் என்பதுறுதி தோணித்துறை, தொண்டி, பெரிய பட்டண அகழாய்வில் பழைய நங்கூரம், சீன பீங்கான் துண்டுகள், மட்பாண்ட ஓடுகள் என 112 அரும் பொருட்கள் கிட்டின.

**III கலைப்புலம் 1. இசைத்துறை:** 82 மே நம் பண்டை இசை மரபு, கோயில்களில் பயன்படுத்தப்பட்ட இசைக்கருவி பண் பற்றிய உண்மை ஆய்தல், புதிய ஆய்வு மேற்கொள்ளல்-நோக்கம். பணி: து. ஆ. தனபாண்டியன்-ஆபிரகாம் பண்டிதர் வகுத்த வழி 72 மேளகர்த்தா ராகங்களின் ஜண்ய ராகங்களில் காணப்பெறாத 32 புது ராகங்களை உருவாக்கி பாவலர் பால சுந்தரனார் பாடல் அமைக்க 'புதிய ராகங்கள்' நூல் வெளியிடல். ஞானா குலேந்திரன் 'கோயில்களில் இசை'; ஜான் பிரிட்டோ—கீர்த்தனை இயலும் இசையும், சிந்தாமணியில் இசை, இசையின் தாள இலக்கணம், இசைத் தமிழ் வரலாறு, அருகி வரும் சில இசை நாட்டிய மரபுகள், இசைத் தமிழும் தமிழக மன்னரும் போன்றன.

முதலமைச்சர் பெயரில் ஆண்டுதோறும் தேவார இசைப் போட்டி நடத்தி இசைக்கருவி பரிசளித்தல். கருணாமிர்த

சாகரம் பஞ்சமரபு பற்றி ஆய்வு 13, 14-12-84 லும்; 85ல் தேவார திவ்வியப் பிரபந்த திருப்புகழ் பாட்டரங்கமும் நடந்தன. புலத் தலைவர் து. ஆ. தனபாண்டியன்.

2. **நாடகத்துறை:** 7-4-82. நாடகக் கலை மலர உந்து சக்தியாக ஒளிர்வதே நோக்கம். பணி: என். வி. இராம நரசன்— 19, 20 ஆம் நூற். தமிழ் நாடகம். செ. இராமாநுசம்-தமிழ் நாடக இயக்க நுணுக்க நூல். மு. இராமசாமி - தெருக்கூத்து நடிப்புப்பாணி- பெர்டோல்டு பிரக்டின் நாடகக்கலை (ஜான் மில்லட்) தோற்பாவை நிழற்கூத்து ராஜா சர் முத்தையா செட்டியார் பரிசினது. இரா. இராசு - அம்மன் வழிபாட்டுச் சடங்குகளில் நாடகக் கூறுகள், கு. முருகேசன் - கரகாட்டம் பொய்க்கால் குதிரை. சீ மா. ரவிச்சந்திரன்-பொம்மலாட்டம்; க. ரவீந்திரன். மாற்றுநிலைக் காலக் கட்டத்தில் தமிழ் நாடக மேடை. 85 ல் நாட்டுப்புறக் கலைவிழா நிகழ்ந்தது. 85, 86ல் நாடகப் பயிற்சிப் பட்டறை நடத்தியது. கள ஆய்வும் கலந்துரையாடல்களும் அடிக்கடி நிகழ்த்தி, தொகுப்புகளும் வெளியிடுகிறது.

3. **சிற்பத் துறை:** 83 சனவரி. நோக்கம்: இந்தியக் கலை வரலாற்றில் தமிழகத்தின் பங்கினைக் கணித்தல், முற்கால இடைக்காலப் படிமங்களைத் தொகுப்பாய்வு செய்தல், கோயில் கதவு தேர் மரச் சிற்ப நுணுக்கங்களை ஆய்தல்; புதிய அணுகுமுறை புகுத்தல்; கோயில் கட்டிட, படிமக் கலையின் தாக்கம் அறிதல், சக்தி வழிபாடு, தற்காலச் சிற்பப் பின்னணி ஆராய்ச்சி.

பணி: சோ. மை. தத்தா—'தமிழகத் தேர்கள்' தமிழக சிற்பப் படக் களஞ்சியம், தமிழ்நாட்டுச் சிற்ப விளக்கவுரை, சிற்ப அருங் காட்சியம் (மறுதோன்றிகளுடன்) அமைத்தல். இரா. சு. காளிதாசு—தென்னிந்தியப் படிமக்கலை. மா. குணசேகரன் - தாராபுரம் கோயில். டி. ஏ. கோபிநாத ராவின் Elements of Hindu Iconography தமிழாக்கம், சிற்ப வழிகாட்டி நூல், An Indian Iconographical Glossory, தமிழகச் செப்புத் திருமேனிகள், சுதைச் சிற்பக்கலை, படிமக்கலைச் சொல் லகராதி எதிர் காலத் திட்டங்கள். கலைஞர் முகாமும் கருத்தரங்கமும் நிகழ்த்தியது.

4. **ஓவியத்துறை:** 22-7-82. நோக்கம்: தமிழக ஓவியங்களைத் திரட்டல் பாதுகாத்தல் ஆய்தல், அ. சீ. ராமன் துறைத் தலைவர் (22-7-1982—10-10-1984) தஞ்சைப் பெரிய கோயில்

சித்தன்ன வாசல் ஓவியங்களைப் படியெடுத்துள்ளார் கள ஆய்வு, செய்தி திரட்டல், அறிஞர்களுடன் விவாதித்தல் மூன்று நிலைகளில் முனைந்தார். 8-17-6-8ல் பத்து நாள் கலைஞர் களின் பாசறை நடந்தது. சென்னை பெங்களூரில் ஓவியக் காட்சி நடத்தியது, இத்துறை தக்காரிலாமையால் இயங்கா துளது.

IV. **அறிவியற் புலம்: 1. சித்த மருத்துவத் துறை.** 82 மார்ச்சு. நோக்கம்: சித்த மருந்துகளின் குணங்களை விஞ்ஞான முறை யில் கண்டறிதல், செய் முறைகளில் சிறந்தனவற்றை மக்கள் நலனுக்காக வெளியிடல். துறைத் தலைவர் ஜ. சாதிக். சீல் வாயு, மஞ்சள் காமாலை, புற்றுநோய், தோல் வியாதிகள், நீரிழிவு போன்றவற்றுக்குரிய மருந்துகள் சோதனை முறையில் கண்டுபிடிக்கப்பட்டு வருகிறது. சில செய்திகள்: அருகம்புல் தைலம், கொம்பரக்கு புண் ஆற்றும் பெற்றியன: சேரங் கொட்டை வடிச்சாறு நல்ல பாம்பு நஞ்சுக்கு நல்ல மாற்று; பருத்தி விதைப் பால் நீரிழிவுக்கு ஏற்றது கீழ்க்காய் நெல்லிச் சாறு கொண்டு செய்த சங்கு பற்பம் வயிற்றுப் புண் ஆற்றும்.

400 மூலிகைகள் கொண்ட 30 ஏக்கர் மூலிகைப் பண்ணை, 10 ஏக்கர் விதைப் பண்ணை, கண்ணாடி அறைகள், விலங்கு வளை அமைத்துளது. இணைப் பேராசிரியர் சே. பிரேமா— போகர் வைத்திய உரை, சித்த மருத்துவத் தொகை அகராதி.

**2. தொல் அறிவியல் துறை**: 28-7-83 கணிதம் தாவரம் போன்ற பல்வேறு அறிவியல் துறைகளைப் பண்டைத் தமிழிலக்கிய அடிப்படையில் நுண்ணாய்வு செய்து உண்மை வெளியிடும் நோக்கினது. துறைத்தலைவர் கு. சீனிவாசன்-தென் னிந்தியத் தாவரங்கள் பற்றிய நூலோதி, சங்க இலக்கியத்தில் மரம் செடி கொடிகள் (182), தமிழக மீன்கள் (231), விவரங் களுடனும் அறிவியல் இரட்டைப் பெயர்களுடன் நூலுரு பெற்றுள 4—9-6-84இல் அறிவியற் சொல்லாக்கக் கருத்தரங்கு நடாத்தி12780 சொற்கள் தொகுத்தது.

**3. தொல் தொழில் துறை**: 26-2-82 புலத்தலைவர் ஆ. சுப்பிரமணியன்-சோழர் காலக் கப்பல் கட்டும் கலை; ச. பழனி-பழந்தமிழ் உலோகத் தொழில்கள். செங்கல் ஓடு மரத் தொழில்கள். நூல்கள்: பண்டைப் போர்க் கருவிகளும் போர் முறைகளும், பண்டைக் கட்டிடங்களும் கட்டிடக் கலையும், பண்டை உலோகத் தொழிலும் அதன் தொழில் நுட்பமும், பண்டை நெசவுத் தொழில். சங்க இலக்கியத்தில் அணு.

V. **வளர்தமிழ்ப் புலம் : 1. அயல் நாட்டுத் தமிழ்க் கல்வித் துறை**: 82 ஏப்ரல். நோக்கம்: வெளிநாடுகளில் வாழ் தமிழருடன் தொடர்பு கொண்டு அவர்கள் தம் மொழி பண்பாடு தனித் தன்மை காத்தல்; உலகெங்கணும் தமிழர் குடியேற்றம் பற்றி ஆய்தல். கு. நம்பி ஆரூரன்-Indians in South Africa; ஆபிரிக்க நாடுகள் பற்றிய செய்திக் கையேடு ஆபிரிக்காவில் பொதுவாக இந்தியர் சிறப்பாகத் தமிழர் பற்றி ஆய 'ஆபிரிக்க இயல் மையம்' தொடங்கவுளது இந்திர பாலா-தென்கிழக்காசியா பற்றிய நூல். எஸ். இராசாராம். பிறமொழியாளர்க்குத் தமிழ் கற்பித்தற்குரிய பாட நூற்கள் துணை உத்திகள் உருவாக்கும் பணி. 'ஆங்கிலம்-தமிழ் பயிற்று அகராதி, தமிழாய்வர்க்கு இந்தியமொழி கற்பித்தல்.

**2. மொழிபெயர்ப்புத் துறை** : 6-5-82. நோக்கம்: உலகெங் கணும் வளர்ந்து வரும் கலை அறிவு தொழில் இயல் நூல் களைப் பெயர்த்தலும் அவைபற்றிய ஆராய்ச்சி செய்தலும். மா. சண்முகசுப்பிரமணியம் புலத்தலைவர் (6-5-82-12-10-84). தமிழில் சட்டவியல், சட்டத்தமிழ் அகரமுதலி (15000), தமிழில் சட்ட நூற்பட்டி, இந்து திருமணச்சட்டம்.

இப்போதைய தலைவர் கா. செல்லமுத்து கணிப்புமையப் பொறுப்பாளரும் கூட. பிறமொழி அறிவுச் செல்வங்கள் தமிழில் இடம்பெற, கணிப்பொறி வழி மொழி பெயர்ப்புப் பணி மேற்கொள்ளப்பட்டுளது. மாணாக்கர்க்கு முழுநேர, ஆசிரியர்கட்குக் கோடை வகுப்புகளும் நிகழ்ந்து வருகின்றன.

**3. தொகுப்பியல் துறை** : 17-12-82. நோக்கம்: தொகுப் பியல் கலை உயர் ஆய்வு கொண்டு தமிழ் ஆய்வுக் கொள்கை பற்றிய கல்வி வளர்த்தல், மாணவர் ஆசிரியர்களிடம் பரப்புதல்; பிறமொழி ஆய்வேடுகளைப் பெயர்த்தல், இது பற்றிய கையெழுத்தேடுகளைக் காத்தல். துறைத்தலைவர் சுந்தர சண்முகனார் (22-2-82—2-6-83)—மரஇனப் பெயர் அகராதி. தா. வே வீராசாமி-பெரிய புராணச் சிறப்புப் பெயரகராதி, சுகுஸ்தாவின் அகராதிக் கலைக் கையேடு பெயர்ப்பு. எதிர் காலத்தில் தமிழ் நுண்கலைச் சொல்லகராதி, காப்பியச் சிறப்புப் பெயரகராதி, தேவார திருவாசக திவ்வியப் பிரபந்த அகராதி, தமிழ்ப் பழங்கதைத் தொகுப்பு. து. மூர்த்தி-இலக்கியக் கலைச் சொல் தொகுப்பு.

**4 சமூகவியல் துறை** : 83 சூலை. நோக்கம்: கிராமப்புற. சமூகப் பொருளியல் பிரச்சினைகளை ஆராய்தல், கிராமியப்

பண்புகளைப் போற்றி வளர்த்தல், கிராமத்தினருக்கு அபிவிருத்தித் திட்டத்தில் பயிற்சி அளித்தல், அரசுக்கும் ஆய்வாளர்க்கும் உறுதுணை புரிதல். துறைத்தலைவர் தேக்க மலை-சமூகவியல் கலைச் சொல் அகராதி, கிராம சமுதாயத்தில் மாறிவரும் குடும்ப மற்றும் திருமண அமைப்பு முறைகள். ஆ. இராமநாதன்-சின்னண்ணன்-சின்னத்தம்பி கதைப்பாடல் பற்றிய வரலாற்று நிலவியல் ஆய்வு. நூல்கள்: களப்பணியும் செய்திக் கூறுகளைச் சேகரித்தலும், இந்திய நாட்டுச் சூழ் நிலையில் நேர்முகப் பேட்டி காணுதலும். தமிழ் நாட்டு கிராமப்புறச் சந்தைகள், நாட்டார் வாழ்க்கைப் பண்பாட்டில் சிறு தெய்வ வழிபாடு, மாறிவரும் உறவுமுறைகள்-கிராம சமுதாயத்தில் ஓர் ஆழ்நிலை ஆய்வு, கிராம ஆய்வு மற்றும் வளர்ச்சி நூலோதி. எதிர்காலத்திட்டம்: விவசாயத்தில் மகளிரின் பங்கு, அரிசனங்களின் சமூக முன்னேற்றமும் அவர்களின் ஏமாற்ற உணர்வுகளும்.

**களஞ்சியம் :** *15-6-83*—ஒரு மொழியின் உயிர்ப்பு துடிப்பு ஓட்பம் ஓட்டம் போன்றவற்றைத் தெளிவாக்குவது; எந்தச் செய்தியையும் விரைந்து விளக்குவது; உலகின் அறிவுச் செல்வத்தையெல்லாம் கொண்டு காட்டும் சாளரம். இந்திய மொழிகளில் முதலில் தமிழில்தான் கலைக்களஞ்சியம் தோன்றியது வென்றாலும், அது தோன்றி 35 ஆண்டுகள் ஆயின. அதன்பின் எத்தனையோ வளர்ச்சி, எவ்வளவு மாற்றங்கள்! புதுச் செய்திகள் புதிய கண்டுபிடிப்புகள்! வாழ்வியல் அறிவியலில் விரைந்த வேக வளர்ச்சிகளைப் பாமரரும் அறியும் வண்ணம் களஞ்சியம் பல உருவாதல் வேண்டும். ஆங்கிலத்தில் மட்டும் 90 களஞ்சியங்கள் உள! நம்மொழியில் ஒன்றே! சென்னையில் இருந்த மையம் 20-8-84 முதல் தஞ்சையில்.

**வாழ்வியல் :** *9* துறைபற்றிய *14* தொகுதிகள். *15-6-83*—*5-3-84*. முதன்மைப் பதிப்பாசிரியர் ஏ. வி. சுப்பிரமணியம். *4-4-84* முதல் நா. பாலுசாமி. உளவியல் சமூகவியல், பொருள் வணிகவியல், வரலாறு அகழாய்வு மொழி மொழியியல், மாணிடவியல், கல்வி, தத்துவம், சட்டம், அரசியல் ஆகியவற்றுக்கு அ. மா. பரிமணம் போன்றார் அமர்ந்துளர்.

**அறிவியல் :** 10 துறை 20 தொகுதிகள். பி எல். சாமி முதன்மைப் பதிப்பாசிரியர். கணக்கியல், இயற்பியல், வேதியியல், தாவரவியல், கடலியல், மருந்தியல், மின் எந்திரவியல், எரிசக்தியியல், பொறியியல், அறுவை மருத்துவம் ஆகிய

வற்றுக்குப் பங்கஜம் கணேசன், கொண்டல் சு. மகாதேவன், சுப. சண்முகநாதன், போன்றார் உளர்.

இரண்டுக்கும் எடுத்துக் காட்டுப் படிவம் அறிஞர்கட்கு அனுப்பி கருத்தறியப்பட்டது. வல்லுநர் குழு அறிவுரை வழங்கு கிறது. நான்காண்டுகளில் நிறைவுறும்.

**பேரகராதி** 19-8-83—சென்னைப் பல்கலைக் கழகம் 26 இல் லெக்சிகன் 6 தொகுதி வெளியிட்டது. அதன்பின் பெரும் அகராதி ஏதும் பிறக்கவில்லை. எனவே அதன்பின் தோன்றிய நூல்கள் மொழியியல் முன்னேற்றம் சொல்லடைவுகள், நிகழ்ந்த மாற்றங்கள் கொண்டு 10 தொகுதிகளில் தமிழ்ப் பெருஞ் சொல்லகராதி 4 ஆண்டுகளில் உருவாக்கும் நோக்கம். சொல் பொருள் காலவரையறையுடன் கூடிய எடுத்துக் காட் டுக்கள் தருவது என்ற முறையுடன் அமையும்.

26 பக்க முன் வரைவுப்படி அறிஞர்கள், கல்லூரி ஆசிரியர் சுட்கு அனுப்பப்பட்டு கருத்தறியப்பட்டது. சொற்தொகுப்பில் தேர்ந்த சிலர் அழைக்கப் பெற்று சொற்கள் தொகுக்கப் பெற்றன. 26, 27-4-84 இல் கருத்தரங்கு நடந்தது. அகராதி முறைகளை அறிந்துவர பூனா வடமொழிப் பேரகராதித் துறைக்குத் துறை அன்பர் சிலர் ஒரு வாரம் 85 சூனில் சென்று வந்தனர்.

ஒரு சிக்கல்: வெறும் இலக்கிய அகராதியாக மட்டும் அமைப்பதா? வழக்கில் உள்ள கொச்சைச் சொற்களையும் இணைப்பதா? என்ற பெரும் வினா எழுந்தது. முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ விசுவநாதம், முன்னாள் அறநிலையத் துறை ஆணையர் உ. சுப்பிரமணியம் போன்றார் போர்க் கொடி உயர்த்தினர். தூய இலக்கிய அகராதியாக மட்டுமே அமைய வேணும் என்று!

முதன்மைப் பதிப்பாசிரியராக அறிஞர் மு. அருணாசலம் இருந்து விலகவே, தா. வே. வீராசாமி பொறுப்பு வகிக்கிறார். கம்பராமன் எஸ். கே. ராமராசன், பா. ரா. சுப்பிரமணியன், கொ. லட்சுமணசாமி பதிப்பாசிரியர்கள். பா. ரா. கந்தசாமி, அ. வைத்தியநாதன் சொற்தொகுதி கண்காணிப்பாளர்; செய்தி திரட்டுநர் சிலர் உளர். முதற்றொகுதி அ ஆ கொண்டது.

**தூய தமிழ் - சொல்லாக்க அகர முதலி:** 25-7-85—நோக்கம்: தமிழன் சிதர்வுறும் அடிப்படை நிலையை மீட்டல் - நிலை

பெறுத்தல், முறை: தூய செழுந்தமிழ்ச் சொற்கள் மட்டுமே இடம்பெறும். தமிழின் தொன்மை தனித்தன்மை விளக்க முறும். அயன்மொழிச் சொல்லெனத் தவறாகக் கருதிய சொற்களும், இலக்கியத்துள் ஆளப் பெறா - வழக்குச் சொற்களும் வாழ்வு பெறும். தனித்தமிழ் அறிஞர் ஆக்கிப் புதுச் சொற்களும், சொற்பிறப்பியல் நெறியும், உலக மொழிகளோடு ஒப்பாயும் நிலையும் அமையும். கலை அறிவியல் பொருட்கு வழங்கு பல பெயர்ப்புச் சொற்கள் ஆயப்பெற்று ஒரே ஒற்றைச் சொல் மட்டுமே பதிக்கைப் பெறும். மூன்று மடலங்களில் 2 ஆண்டு அளவில் வெளிவரும்.

முதல் மடலம் இரு பகுதியது. 1. தமிழாக்கக் கலைச் சொல் - ஆங்கிலச் சொல். 2. அதுவே ஆங் - தமிழ் என்றவாறு அமையும். இரண்டாம் மடலம் முதற் பகுதி புதிய கலைச் சொல்லாக்க உருவங்களும், தவறான ஆக்கங்களின் திருத்த வடிவமும் கொண்டிருக்கும்; பிற்பகுதியில் அவையே ஆங்-தமிழ் என முறை மாற்றம்பெறும். மூன்றாம் மடலம், கருச் சொற்களுடன் நான்வகை ஈற்று நிலை, முன்னொட்டுக்களை எவ்வாறு இணைத்துத் தமிழ்மை சான்ற கலையாக்கம் செய்வது என்ற விளக்கமும் நெறி முறைகளும் வரையறுக்கப்பெறும்.

கருத்தறி கூட்டம் 8-8-85 லும், தூய தமிழ், கலைச் சொல், களைச் சொல்லாக அகர முதலிகள் மூனறுக்கும் எடுத்துக் காட்டுப் படியும், நெறிமுறை தொடக்கக் குறிப்பேடும் சமைக்கப்பெற்று அறிஞர் குழுமுன் வைக்கப்பெற்றது. இதன் பொருத்தமான பதிப்பர் ப. அருளி.

**அருங்காட்சியகம்**: 4-11-82—3 பிரிவுகள், பண்பாடு காட்டும் பல்வகைப் பொருட்கள் சேகரிக்கப்பட்டுள. இதுவரை ரூ. 3½ லட்சம் பெறுமான 2870 பொருட்கள் திரட்டப்பட்டுள. ஒவ்வொரு மாவட்டமாகக் களப்பணி மேற்கொண்டு அரிய பொருட்களைத் தொகுக்கின்றனர். ஒவ்வொரு வெள்ளிக் கிழமைதோறும் காலை 10½க்கு கிராமிய தொழில் நுட்ப இலக்கிய ஆய்வுப் படங்கள் காட்டப் பெறுகின்றன. பள்ளி கல்லூரி மாணாக்கர்களுக்கு வேண்டுதலின்பேரில், பிறநாளிலும் காண்பிக்கப்படுகின்றன. பொறுப்பாளர் இரா. பவுன்ராஜ்.

**நூலகம்**: 15-9-82-பல்கலைக் கழகத்தின் இதயம் போல்வது. பல்வேறு துறைகள் மையங்களுக்குரிய தேவையான செய்திகள் நூல்கள் இதழ்கள் சேகரித்து உடனுக்குடன் உதவும் இயக்கமாக இலங்குவது. ஆற்றும் பணிகள்: ஆய்வாளர்கட்குத் தலைப்புக்

கேற்ற தகவல் தேர்ந்தறிவுப் பணி, நகலாக்கப் பணி என அனைத்து அறிவுப் பணியும் ஆற்றுகிறது. புதிய நூல் கட்டுரை பற்றி வல்லாளரின் பதிப்புரைகள் 'புலப்பாடு' என்ற பெயரில் வெளியிடப் பெறுகிறது. கனகசுந்தரம் பிள்ளை, பாவாணர், டி. வி. மகாலிங்கம், சாமி சிதம்பரனார் நூலகங்கள் பெற்றுத் தனியே பேணப்படுகின்றன.

14-4-87 தமிழ்ப் புத்தாண்டன்று, தில்லி பாராளுமன்ற பாணியில் அமைந்த பல்வேறு வளதிகளுடன் கட்டப்பெற்ற பெரும் நூலகக் கட்டிடத்தை முதல்வர் எம். ஜி. ஆர். திறந்து வைத்தார். 58 க்கு முன்னைய தமிழ் நூல் விவர அட்டவணை, முதல் நடமாடும் நூலகமான இரட்டை மாட்டு வண்டி நூலகத்தை அதே வடிவில் அதே நூல்கள் வைத்து நூலக வரலாற்று அருங்காட்சி அமைத்தல் போன்ற அரும்பணி ஆற்றுகிறது. இதன் இணை இயக்குநர் த. பத்மநாபன்.

**திட்டம் தமிழ் வளர்ச்சி இயக்கம்**: 5-11-81. நோக்கம்: பொது மக்கட்கு அறிவியல் பரப்புதல், பொறியியல் மருத்துவப் பாடல் நூல் உருவாக்குதல் (பக்கம் 1324-25) 87 மே யில் குன்றக்குடி அடிகளாரின் 'சுதேசிய அறிவியல் இயக்கத்'துடன் இணைந்து இந்தியா தழுவிய அறிவியலாளர் கருத்தரங்கு நடாத்தியது. New Book of Popular Science தமிழாக்கம் பெறுகிறது. அறிவியல் தமிழ் வெளியீடுகள் நூலடைவு போன்றன வெளி யிடுகிறது. இயக்குநர்: இராம. சுந்தரம்.

**பதிப்புத் துறை** 4-1-82-பதிப்பு, அச்சக. விற்பனைப் பிரிவு கொண்டது. அரிய கிடைத்தற்கரிய நூல்கள் மறுபதிப்பு, மருத்துவ பொறியியல் நூல்கள், பல்வேறு துறைகளின் ஆய்வு களை மொழிச் செம்மையுடன் பதிப்பது பணி.

திங்கள் இதழ் **செய்தி மலர்**, News Bulletin; முத்திங்கள் ஆய்விதழ் **தமிழ்க்கலை**, Tamil civilisation வெளியிடுகிறது.

முதல் வெளியீடு 'மராத்தியச் செப்பேடுகள் 50'. பாரதி யாரின் செய்யுள், சிறுகதை, கட்டுரை - காலமுறைப்படி, பாட பேதங்களுடன் செம்மதிப்பு 15-20.1.85இல் 19 பதிப்பக நூற் காட்சிக்கு வகை செய்தது. பதிப்பாக்கம் பற்றி 19-5-84 இல்; விற்பனை பெருக்குவது பற்றியும் கருத்தாய்வுக் கூட்டம் நடத் தியது. இதுவரை 55 நூல்கள். திருக்குறள் பை யடக்க அழகுப் பதிப்பு மெல்லியதாளில் துல்லிய அச்சில் வந்துளது. இயக்குநர் சிலம்பொலி செல்லப்பன் (4-1-82 — 30-6-83) இணை இயக்குநர் கோவை இளஞ்சேரன் (மெய்கண்டசிவம்).

**பரிசும் பயன்பாடும்:** 2 ஆவது ஆண்டு விழாவின்போது (15-9-83) ஆண்டுதோறும் 'ஒரு லட்சத்து ஒரு ரூபாய்' கவிதை, சிறுகதை, புதினம், அழகுறு உரைநடை முதலிய படைப்பிலக்கியத்திற்கு **மாமன்னன் இராசராசன் பரிசு** அளிக்கப்பெறும் என அறிவிக்கப்பெற்றது. ஆசிரியர், உலகில் எப்பகுதியில் வாழினும் அவர் நூல் பரிசு பெறும், ஓராண்டு முன் வரையான நூல்கள் தகுதியுடையன. ஓர் ஆசிரியருக்கு ஒருமுறைதான் பரிசு.

துணைவேந்தர் தலைமையிலானது 5/7 உறுப்பினர் தேர்வுக் குழு. ஒவ்வொரு நாட்டுக்கும் மூவர்கொண்ட தேசீயப் பரிந்துரைக் குழுக்களை ஆட்சிக்குழு நியமிக்கும். இவை பரிந்துரைக்கும் நூல்களைத் தேர்வுக்குழு சீர்தூக்கி நடுநின்று பரிசுக்குரிய நூலினைத் தேர்ந்தெடுக்கும். இலக்கியக் கழகங்கள், மொழித் துறைகள் திறனாய்வர் இலக்கிய ஆசிரியர்கள், பொது நிறுவனங்களையும் தரமான நூல்களைப் பரிந்துரைக்குமாறு உரிய படிவங்களில் பல்கலைக் கழகம் கேட்கும்; உயிர்வாழ் ஆசிரியர்கட்கு மட்டுமே பரிசு. தேர்ந்தெடுக்கப்பெற்ற பின் இறந்து விட்டால், வாரிசுக்கு வழங்கப் பெறும். தக்க நூல் இன்றெனில் அந்த ஆண்டு வழங்கப் பெற மாட்டாது. இரு நூல்கள் சமமுறின் பகிர்ந்தளிக்கப்பெறும், பன்னூலாசிரியர் எனின் அவற இலக்கியத் தொண்டும், எல்லா நூல்களின் ஏற்றமும் சேர்த்துக் கருதப்பெறும்.

ஆண்டுதோறும் அறிவியல், ஓவியம், இசை, நாட்டுப் படைப்பு, தமிழ் நூற்களின் பிறமொழி ஆக்கம், நல்ல செய்தி அறிக்கை போன்ற 10 பொருளிலான **தரமான நூற்களுக்கு ரூ. 5000** ஆண்டுதோறும் அளிக்கப்பெறும். (தமிழக அரசு இலக்கியப் படைப்புக்கு அளிப்பதால், அவை நீக்கிப் பிற துறைகளுக்கே அளிக்கும்)

பிற மாநிலங்கள், தென்கிழக்காசிய நாடுகளில் வதியும் தமிழ் பேசுவோர் நிலை அளவிட, வழிபாட்டு நிலையங்களை அளவீடு செய்ய, கர்நாடக உறவுக்குரிய வீரசைவம், ஆந்திரத் தொடர்பு ஏற்படுத்திய வைணவம் அளவிடக் குறுகிய **கால ஆய்வுத் திட்டம்** 1) தென்னாசிய நாடுகட்கு (3 மாதம்) சென்று கள ஆய்வு செய்தார் உ. சுப்பிரமணியம் இ. ஆ. ப. (ஓய்வு) தரப்பட்ட ஒரு லட்சத்தில் சிக்கனமாகச் செலவழித்து $\frac{1}{2}$ லட்சத்தைத் திருப்பி அளித்தார். 2. வடமாநிலங்களில் சோமலெ 6 திங்கள் பயணம் புரிந்து அரிய செய்தி திரட்டி வந்தார். 3) கர்நாடகம் சென்று கள ஆய்வு செய்தார் கு. அருணாசலக்

கவுண்டர். 4) ஆந்திரச் செலவு மேற்கொண்டார் மு. கு. ஜகந் நாதராஜா. இவர்கட்குத் திங்கள் ஊதியம் 1800; பயணப்படி 4000, நூற்கள் வாங்க தட்டச்சு செய்ய 1000 அளிக்கப்பட்டது.

**குறுகிய கால மானியம்** ஆண்டுதோறும் அளிக்கிறது. 1) தமிழக ஆசிரியர்கள்-தமிழ்-திராவிட மொழிகள் பற்றிய ஆய்வர்க்கு 3000 - 7000 உதவுகிறது. 9-12 மாத அளவில் முடித்தல் வேண்டும்; கல்லூரியில் இருந்தே இயற்றலாம். 2) ஆய்வாசிரியர்கள் நூல் நிலையத்தைப் பயன்படுத்த - ஆய்வு நெறிகள் அறிய, 2—6 வார காலம் தஞ்சையில் தங்க நாட்படி யும் பயணப்படியும் அளிக்கிறது. மாவட்டத்திற்கு ஒருவராக!

**தொல்காப்பியத் தகைமை**: 1-10-83. நோக்கம்: பாணினீயம், நுண்ணாய்வால் பெருமை பெற்றமை போன்றே, தமிழுக்குப் பெருமை தரும் தொல்காப்பிய ஆய்வும் பெருகின் உலகவர் போற்றுவர்; தமிழில் தரமான ஆய்வு வெளியாகி மதிப்புறு நிலை எய்த வேண்டும். 4 லட்சம் வைப்பு நிதியினின்று வரும் வட்டியில் திங்கள்தோறும் 2800 ம், பிற இனங்கட்காக ஆண் டொன்றுக்குப் 10000 மும் ஈராண்டுக்கு வழங்கப்பெறும். இதற்குக் காரணர் முத்தமிழ்க் காவலர். முதல் தகையர் வ. சுப மாணிக்கனார்.

பிற நாட்டவர் இவண் போந்து தமிழ் - திராவிட மொழி கள் பயிலவும், தமிழ் மாணவர்கள் பிற மாநிலங்கள் சென்று அம் மொழிகளைக் கற்று வரவும் துணை புரிகின்றது.

பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் சான்றோர் பற்றி வெவ்வேறு இடங்களில் விளம்பப்பட்டுளது. மேலும் சிலர் பற்றி :

**முதல் துணைவேந்தர் வ. அய். சுப்பிரமணியம்**: அண்ணாமலை யில் தமிழ் பயின்று கேரளத்தில் கன்னித் தமிழ் கண்ணியத் துடன் வளர்த்த புண்ணியர். இந்தியாவில் சிறப்பாகத் தமிழ் மொழியியல் முன்னவருள் முதன்மையர் (பக் 1312-13).

விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்டு, செயலும் சாதனை யும் மூச்சாகக் கொண்டு மளமளவெனப் பணியாற்றிய பெரியார். வேண்டுதல் வேண்டாமை இலாது, இன்பம் விழையாது இடும்பை இயல்பென்று கருமமே கண்ணாயினார், உயர் சிந்தையும் எளிய வாழ்வும் (simple living and high

thinking) கொண்டு ஆரவாரமின்றி அமைதியாகச் செயற்கரிய செய்து பல்கலைக் கழகத்தைப் படிப்படியே பாங்காக உயர்த்தி ஊன்றச் செய்தவர். வழிபடுவோரை வல்லறிந்து, துதி பாடுவோரை தூர நிறுத்தி, ஆற்றலுக்கும் தகுதிக்குமே முதன்மை தந்து, நெருப்பென நின்று-யாரையும் எதிர்பாராது-எதனையும் ஏரெடுத்தும் பாராது-எவரையும் சாராது, தாம் ஏற்ற அரும் பெரும்பணியின் பொறுப்புணர்ந்து, ஒப்படைக்கப் பெற்ற 1000 ஏக்கரையும் பல கோடிகளையும், கை தூய்மையும் என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற திண்ணிய எண்ண மும் கொண்டு, தூற்றுதலோ போற்றுதலோ கருதாது, கீதை கூறும் 'ஸ்தப் பிரக்ஞனாக'ச் செயலாற்றினார்.

காலத்தைப் பொன் போன்றும் கடமையைக் கண் போன்றும் கருதி மடமடவென அனைவரும் வேலை செய்து வெளியீடுகள் கொணருமாறு மூன்றாண்டுகளில் முப்பது ஆண்டைய பணியினைச் செய்து காட்டியவர். அனைவரை யும் இயக்கும் மைய விசைபோலே அமைந்து ஊக்கிப் பம்பரம் போல் சுழன்று பல்லோரையும் பணிபுரியச் செய்தவர். பெரியோரென வியத்தலும் செய்யாது சிறியோரென இகழ் தலும் இல்லாது, திறமை ஒன்றே முறைமையாகக் கொண்டு திறம் கண்டு ஊக்கி, திறமின்மை நீக்கி, ஒன்றிய உள்ளமும் ஓங்கிய உறுதியும் (undivided aim and unconquerable hope) கொண்டு, தம் நிலையும் பொறுப்பும் நன்குணர்ந்து ஒவ்வொரு வினாடியும்-அடியும் பயனுறப் பணியாற்றினார்.

தமிழ் பயின்றாரிடம் படியும் குறுகிய பார்வையும் கோணல் மாணல் போக்கும் குயுத்தியும் (crucked mind) கொள்ளாது, வழக்கமான தமிழறிஞரினும் வேறுபட்டு வித்தியாசமானவராகச் செயற்பட்டு, தூய்மையால் துணிவு மிக்கு( I am stronger than ten, because I am pure) இயந்திரம் போல இயங்கி, பம்பரம் போல் சுழன்று, கண்ணை இமை யிரண்டும் வண்ணமுறக் காப்பதுபோல் பல்கலைக் கழகத்தைப் பேணிக் காத்து வளர்த்து நெறியில் இயங்கச் செய்து விட்டு விலகியவர்.

'வேண்டாமை அன்ன விழுச்செல்வம்' என்ற வள்ளுவப் படி, முதற்காலம் முடியுமுன்பே விட்டுச் சென்றார். வேறு தக்கவர் 'இவர் போல் இன்மை எண்ணி மீண்டும் இவரையே அழைத்து அடுத்த மூன்றாண்டும் தரப் பெற்றவர். 'ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும்' ஒட்பம் மிக்கவர் ஆதலாலே, ஏற்று இன்னும் விரித்துப் பெருக்கி விலகினார்.

இனி இவர் இடத்தை நிரப்ப ஒத்த தக்கார் யாரோ என ஏங்கும் அளவிற்குத் தம் சுவடு பதித்த, இவர் கொண்டு செலுத்திய முறையிலேயே, பின்வருவோரும் தளராது பகடு போல் பீடுறச் செயற்படின் அது சாலும்! இவர் போற்றி வளர்த்த செடி வளர்ந்து மரமாகி பூத்துக் காய்த்துப் பொற் கனிகள் மல்கிக் காலமெல்லாம் பேர் சொல்லும். இதற்கெல் லாம் வித்திட்ட-வழிகோலிய **வி ஐ எஸ்.** என்ற மூன்றெழுத்து முழு மனிதரைப் பல்கலைக் கழகப் புல்லும் புகழும்! 'தாம் மறைந்தபின் தம் உடற்சாம்பலைப் பல்கலைக் கழகத்தின் ஒரு மரத்தடியிலும், காஞ்சி உதகை மையங்களில் வளரும் மரத்தடி யிலும் புதைத்திட வேண்டும்' எனக் கூறியுள்ளார் என்றால், பல்கலைக் கழகத்தோடு எப்படி ஒன்றி இரண்டறக் கலந்துளார் என்றுணரலாம்.

இவரையடுத்து வந்துள்ள துணைவேந்தர் மென்மையான வர்-வன்மையானவர். (calm at the same time firm) டாக்டர் ச. அகத்தியலிங்கனார் அவர்கள்.

**தா. வே. வீராசாமி:** *1-2-1931.* தாராபுரம். கேரளப் பல்கலைக் கழகத்தில் 66இல் Grammatical study of Periya-puranam with Index டாக்டர் பட்டம் பெற்று, 69 முதல் அங்கே விரிவுரையாளராக விளங்கி, 75இல் உலகத்தமிழாய்ச்சி நிறுவனத்தின் இணைப் பேராசிரியராக இலங்கி, 1-10-83 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகத் **தொகுப்பியல்** துறைத் தலைவ ராகச் சிறந்து, இதுபோது **பேரகராதித் துறை முதன்மைப் பதிப் பாசிரியராகப்** பிறங்குகிறார்.

தமிழ் உலகில் மிக மென்மையர். மிகு நல்லர். திறனாய்வு வல்லார். குறிப்பாகத் தற்காலப் படைப்பிலக்கியத் திறனிகளில் ஒருவர். வழங்கியன: வெற்றியின் இருமுகம், பட்டறையிலே பாரதிதாசன், தமிழ்ச் சுடர், பொன்குஞ்சு (தமிழ் எழுத்தாளர் சங்கப் பரிசு பெற்ற நாடகம்). தமிழ் நாவல் முன்னோட்டம், தமிழ் நாவல் வகைகள், தமிழில் சமூக நாவல்கள், கல்கி—அகிலன் படைப்புக் கலை. கல்லூரிப் பேராசிரியர்களிலிருந்து படைப்பிலக்கிய ஆய்வில் தோந்தவர் வரிசையில் வளஞ்சான்ற வர். கனிவு மிகுந்த கண்ணியர்.

**சோ. ந. கந்தசாமி:** *15-12-1936.* திருச்சி மாவட்ட உடையார்பாளைய வட்ட இலையூர்; எனவே இலையூர் கிழார் என்ற புனை பெயரினர். அண்ணாமலை தமிழ் எம். ஏ., அங்கேயே விரிவுரையாளர். பின் மலேயா பல்கலைக்

கழகத்தில் பேருரையாளராகப் பிறங்கி, 28-8-85 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகப் பேராசிரியர். **இலக்கியத் துறைத்தலைவர்.**

அண்ணாமலையில் 61இல் எம். லிட். Paripadal a Lingiustic Study 70இல் பிஎச்.டி. Buddism as expounded in Manimehalai. மொழியியலிலும் வடமொழியிலும் முதல் வகுப்பில் பட்டயம் பெற்றவர். தத்துவம் இலக்கணம் சங்க இலக்கியம் மூன்றிலும் முன்னவர். இதுபோது சைவ சித்தாந்தம் தமிழ் பக்தி இலக்கியங்களில் தோய்ந்து வருகிறார். ஆழக்கற்றவர், அகலப் படித்தவர். எனவே புலமைச் செருக்கும் இருக்கும். 51 முதல் எழுதிவருகிறார்.

தந்தவை: தமிழும் தத்துவமும் (வடமொழி பாலி பிராகிருத நூல்களின் தகவல்கள் கொண்டு உயர் தமிழ் இலக்கியங்களில் காணலாகும் இந்திய தத்துவத்தின் ஒத்த உறழ் முறைகளை ஆராய்வது) திருக்குறள் கூறும் உறுதிப்பொருள் (77இல் தமிழரசின் முதற் பரிசு). மணிமேகலையில் பௌத்தம், தமிழ் இலக்கியத்தில் பௌத்தம், பௌத்த சமய நூல்கள், மணி மேகலையின் காலம், பரிபாடலின் காலம், இலக்கியப் சோலை யிலே, புரட்சிக்காப்பியம், தொல்காப்பியத் தெளிவு, தெய்வச் சிலையார் உரைத்திறம், குறுந்தொகை திறனாய்வு, காப்பியக் குறிக்கோள், சுந்தரர் செந்தமிழ் The Age of Tolkappiyam, An Introduction to Saiva Siddhanta. ஆங்கிலத்தும் தமிழிலும் அரிய கட்டுரைகள் பல ஆக்கிவருகிறார். 73 முதல் 'இந்து' இதழில் மதிப்புரை செய்து வருகிறார். இற்றை நாள் விரல் விட்டு எண்ணத்தக்க தமிழ்ப் புலமையாளருள் ஒருவர். ஆசிரியப் பணியினின்று விலகியது, மாணவர்கட்குப் பேரிழப்பே. இத்துணை அறிவர், உணர்வராகவும் ஒளிர்ந்து 'அழகு முல்லை' கவிதை நூலும் யாத்துளார்.

**ஆறு இராமநாதன்** : *3-8-1950.* சிதம்பரம் வட்டம் மஞ்சக் கொல்லை. ஆறுமுக படையாட்சி: சீதாலெட்மி. 66இல் நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு. அண்ணாமலை இளங்கலை, முதுகலை தமிழ். 80இல் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் டாக்டர் பட்டம்; 'தெனனார்க் காடு மாவட்ட நாட்டுபுறப் பாடல்கள்'. 74-75 கிருட்டிணகிரி அரசு கலைக் கல்லூரி, 76-80 உலகத்தமிழராய்ச்சி நிறுவனத்தில் ஆய்வு, 80-82 சென்னைப் பல்கலைக் கழக முதனிலை ஆய்வர், 82 முதல் தமிழ்ப் பல்கலைக் கழக **சமூகவியல் துறை** முது முனைவர் பட்ட ஆய்வர்.

படைப்புகள்: குமுறல் (சிறுகதை), தமிழில் புதிர்கள் ஓர் ஆய்வு, நாட்டுப் புறவியல் ஆய்வுகள், நாட்டுப் புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், நாட்டுப்புறப் பாடல் வகைகள்; வரலாற்று நிலவியல் ஆய்வு அறிமுகமும் ஆய்வுகளும், பதிப்பு: காதலர் விடுகதைகள், தெ ஆ. மாவட்ட நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப்புற ஆய்வுமுறைகள்.

தமிழக முழுதும் மக்களிடமிருந்து நேரடியாக 2000க்கும் மேற்பட்ட நாட்டுப்புறப் பாடல்களை முறையாக சேகரித்துச் சாதனை புரிந்துள்ளார். பல சிறுகதைப் போட்டிகளில் முதற் பரிசு பெற்றுளார். பிற துறை ஈடுபாடு: புதிய நாடகங்கள், புத்திலக்கியங்கள். மணப் 78இல், மனைவி பவளக்கொடி; மக்கள் எழிலரசி, அருணன். அமைதி சான்றவர்.

**க. இரவீந்தரன் :** 5-4-1954. குமரிமாவட்ட அதங்கோடு. மதுரைப் பல்கலைக் கழக முதுகலை. டாக்டர் பட்ட ஆய்வு 'தி. க. சண்முகம் நாடகங்கள்.' குறுகிய கால ஆய்வு 'மதுரையில் தோற்றம் பெற்ற நாடகக்குழுக்கள்'. பணி: தமிழ் அரங்க (விரிவான) வரலாறு. பதிப்புப்பணி: களரி சிலம்பு மல்யுத்தம் ஈடுபாடு நாட்டுப்புறவியல். எழுதி இயக்கி உருவாக்கிய நாடகங்கள் 14. வீடியோ திரைப்படங்கள்: கண் திறந்தது கதை திரைக்கவிதை வசனம்; காத்தோடு போன கனவு, வளமான வாழ்வு-நடிப்பு உதவிப்பணி. நாடகத் தயாரிப்பாக அமைக்கப் பட்ட அமைப்பு: மூவிங் ஸ்டேஜ் கிரியேஷன்ஸ். நாடகம் பற்றி நுட்பமான கட்டுரைகள் 25 தீட்டியுள்ளார். 3-7-84 முதல் நாடகத்துறையில் உள்ள முதுநிலை ஆய்வர்.

## 95. மகளிர் பல்கலைக் கழகம்

'ஆசைக் கடலின் அமுதமடா! அற்புதத்தின் தேசமடா! பெண்மைதான் தெய்வீகமாங் காட்சியடா', மாதர் தம்மை இழிவு செய்யு மடமையைக் கொளுத்துவோம், பெண் வெல்க வெனக் கூத்திடுவோமடா' என்றார் பாரதியார். 'மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திடல் வேண்டுமம்மா' என்பார் கவிமணி. 'பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திரு நாட்டு மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே!' என்கிறார் பாரதிதாசன்.

பெண்மை மென்மையதேயாயினும் அது தெய்வீகம் சான்றது. பெண்மைக்குப் புன்மை செய்தான் பெருவேந்தன்

இராவணன், எனவே அழிந்து ஒழிந்தான். இளங்கோவடிகளும், கலையை ரசிக்காது கலை மாதை ரசித்த பாண்டியன் பட்டொழியக் காரணமானமை ஒப்புமையால் உணர்த்து கின்றார். அதனாற்றான் ராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றார் பெண்மையின் தெய்வீகம் போற்றினர்.

ஒவ்வோர் ஆடவனின் உயர்க்கும் சிறப்புக்கும் பின்னே ஒரு பெண் மகள் இருக்கின்றாள் என்றார் ஓர் அறிஞர். பெண்மையே ஆண்மையின் இயக்கு சக்தி. சக்தியில்லையேல் சிவன் இல்லை (சவம்) சிவனை இயக்குவதே சக்திதானே. எனவேதான் சிவசக்தி என்றனர். அதனாற்றான் 'காற்றினிலேறி அவ்விண்ணையும் சாடுவோம் காதலி கடைக்கண் பணியிலே' எனப் பாரதியும், 'கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டி விட்டால், மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர் கடுகாம்' என்று பாவேந்தரும் பகர்ந்துளர்.

இப்படிப்பட்ட பெண்மை, பெருமை பெறுவது கல்வியால் தான்! 'கல்வி இல்லாத பெண்கள் களர்நிலம்! அந்நிலத்தில் புல், விளைந்திடலாம், நல்ல புதல்வர்கள் விளைவது இல்லை!!—இது பாவேந்தரின் பகர்வு. 'குடும்ப விளக்கு' 'இருண்ட வீடு' கொண்டும் துலக்குகின்றார். போரையே மூச்சாகக் கொண்ட நெப்போலியன் கூட, பெண் கல்வியைப் பெரிதும் பேணி னன்றோ! குழந்தையின் முதல் ஆசான் தாயன்றோ! அதனாற் றானே முன்சீபு வேதநாயகம் பிள்ளை 'பெண் கல்வி பெண் மானம் பெண் மதிமாலை' பாடினார்.

காலந்தோறும் (தமிழ்க்) கன்னியரின் கதையை 'பெண்' (1955) எனப் பேரா. அ. மு. பரமசிவானந்தமும், 'தமிழகப் பெண்கள் வாழ்வும் வளர்ச்சியும்' என்று பேரா. சு. சிவகாம சுந்தரியும், 'மகளிர் பெருமை' என வாரியாரும், 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை' என்று திரு. வி. க வும், 'பெரியாரின் சிந்தனைகளில் பெண்கள்' எனப் பேரா. அரசு. மணிமேகலையும், 'வேதநாயகர் போற்றும் பெண்மை' என்று சரளா ராசகோபாலனும், மகளிர் வளர்த்த தமிழ் என அ. ச. ஞா.வும் நூற்கள் படைத்துளர்.

அனைத்தும் வெறுத்துத் துறவு பூண்ட ஆதிசங்கரரும், அன்னையின் இறுதிச் சடங்கிற்கு வந்துற்றதும், பட்டினத் தாரும் தாயைப் போற்றியமையும் கருத வேணும். இந்நாளில் நடிகர் திலகம் சிவாஜி கணேசன், மக்கள் திலகம் எம். ஜி. ஆரும் முறையே தங்கள் அன்னையர் ராசாமணி அம்மையார், சத்திய

பாமாவை தெய்வமாகப் போற்றிச் சிறந்தமை சிந்திக்கத் தக்கது. கலைஞர் கருணாநிதி அவர்களும் வி. ஜி. பி. சகோதரர் களும், அன்னை அஞ்சுகம், சந்தனத்தம்மாள் திருவடி பரவிப் பெருமையுற்றதும் நினைக்க வேண்டும். நபிகள் நாயகத்திடம் ஒருவன் சென்று 'எங்கே சொர்க்கம் இருக்கிறது?' எனக் கேட்டான்; அதற்கவர் 'உன் தாயின் திருவடியில்' (at the feet of your mother) என்றார். கவிஞர் மருதகாசியும் 'அன்னையைப் போல் ஒரு தெய்வமில்லை, அவள் அடிதொழ மறப்பவர் மனிதரில்லை' என மொழிகிறார். கலீல் ஜிப்ரான் என்ற கவிஞன் 'உலகிலேயே உயர்ந்த புனித உருக்கமான அருஞ்சொல் 'அம்மா' தான் என்கிறார்.

இன்னணம் பெண்மையும் தாய்மையும் போற்றுமாற்றான், மொழிக்கென தனிப் பல்கலைக் கழகம் தோற்றிய முதல்வர் எம். ஜி. ஆர், மகளிர்க்கெனத் தனியே ஒரு பல்கலைக் கழகம் கண்டார் திறந்து வைத்த அன்னை தெரசா பெயரில். முன்னமே பம்பாயிலும் திருப்பதியிலும் பெண்கள் பல்கலைக் கழகம் இருப்பினும், இந்தியாவிலேயே—ஏன் உலகிலேயே இம் முறையில் தனிவகையில் அமையும் முதல் பல்கலைக் கழகம் இது தான்! மகளிர் முன்னேற்றம் குறித்த அத்துணைச் செயல்களும் மேற்கொள்ளும் வகையில் பல்வேறு துறைத் தொடர்பான ஆய்வு, தீர்வு, திட்டம் பரிந்துரைகள்-இவையே தலையாய பணி. சமூகப் பொருளாதார மட்டங்களில் பெண்கள் எதிர்கொள்ளும் பல்வேறு பிரச்சினைகள் பல்பிரிவுகளாகப் பகுத்தாய்ந்து முடிவு களை அரசின்முன் வைக்கிறது. அரசு, பெண்ணினம் பெண் ணியக்கம் என்ற மும்மையின் மொத்த வடிவம், மூன்றையும் பிணைக்கும் பாலம்.

85இல் தொடங்கப் பெற்றாலும் பல்துறைகள் செயற்படத் தொடங்கியது 6 திங்களின் பின்பே. கோடைக்கானலைச் சுற்றி யுள்ள கிராமங்களில் மகளிர் நிலை=பிரச்சினைகள் பற்றி ஆய்வு செய்து தக்வல்கள் திரட்டப்பட்டுத் தீர்வுகளும் தரப்பட்டன— அரசுக்கு. இது தொடக்கப் பணி. அடுத்து சமூக பொருளியல் கல்வி சட்ட நல்வாழ்வு பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்த அத் துறை வல்லார்கள் சாரதா மேனன், பத்மினி ஜேசுதுரை போன்றாருடன் கலந்து கொள்கைகள்—திட்டங்கள் வகுக்கப் பெற்றன. பல்வேறு நகரங்களில் ஆய்வு செய்ய 'செல்கள்' பெண் பிரச்சினைகளை ஆய்ந்து அறிக்கை வழங்குகின்றன. கருத்தரங்குகள், பயிற்சி வகுப்புகள் நடத்தப்பட்டு நூல்கள் வெளியிட்டுளது. பெண்கள் பற்றிய உலகனைத்தும் வெளியான

25,000 நூல்கள் தொகுக்கப்பெற்றன. 'காலந்தோறும் படைப்பிலக்கியங்களில் பெண்மை' பேசப்பட்டுள்ளமை ஆய்ந்து, அவற்றின் இன்றைய பரிமாணம் யாதெனத் தெளியும் பெரும் பணி நடந்து வருகிறது. ஒரு சிறப்பு என்னவெனில், துணை வேந்தர் முதல் தொண்டு செய் துப்புரவுப் பெண் வரை அனைவரும் ஒரு குடும்பம் போலே இயங்குகின்றனர். நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம்!

**முதல்** துணை வேந்தர்: திருமதி வசந்தி தேவி. இதுபோது திருமதி பிள்ளை இரண்டாம் துணை வேந்தர். தமிழ்த் துறைப் தலைவி **டாக்டர் தேவதத்தா** (தை) 69இல் A study of choodamani ஆய்வு டாக்டர் மு.வ. தலைமையில் செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். பெண்ணுரிமை இயக்கத்துடன் நெருங்கிய தொடர்பினர். முற்கால இலக்கியம் போல தற்கால இலக்கியத்திலும் தோய்ந்தவர். சொலல்வல்லர்.

**கமலி:** குடந்தைக் கல்லூரி மாணவி, மதுரை மீனாட்சி அரசு கலைக் கல்லூரியில் பணியாற்றி இதுபோது இங்கு பணி ஏற்றுளார். நல்ல மாணவி, வல்ல ஆசிரியை. ஐ.ஏ.எஸ். தேர்வுக்கும் போட்டியிட்ட புதுமைப் பெண்ணாள். துணிவும் திறனும் சான்றவர்.

பெண்மை பற்றி பலர் எம்.பில்., பிஎச்.டி. ஆய்வு செய்து வருகின்றனர். தங்களுக்கெனத் தனியே பல்கலைக் கழகம் உள்ளமையால், இதன் வழி பெண்மை பெருமை பெறும். பெண்ணிற் பெருந்தக்கயாவுள? மண்ணுக்குப் பெருமை பெண்ணாலே! பெண்மை வெல்க, பெண் பல்கலைக் கழகம் வளர்க! வாழ்க!!

## 96. தமிழீழப் பிரச்சினை!

உலகில்-நாட்டில் எழும் பிரச்சனைகளுக்கு அப்போதைக்கப்போது சுடச்சுட கருத்துரைகள் எழுவது இயற்கை. நிகழ்வுகளின் விளைவாக எதிரொலிகளாக எழுத்தாளர்கள் தங்கள் இதய உணர்வுரை எழுத்தில் வடிப்பர். சீன ஊடுருவல். பாகித்தான் படையெடுப்பு, வங்கதேசக் கொடுமையின்போது, சீனத்துப் பரணி, வங்கப் பரணி என நூல்களும் கவிதைகளும், கதைகளும் எழுந்தன. அவை மண்ணை ஒட்டியன. ஆனால் ஈழத்துயர் மனிதரைப் பற்றியது. நம்மின் ஒரு பகுதியான இனமானம் கருதுவது. தமிழரின் படுகொலை ஒட்டியது.

எனவே நெருக்கமும் உருக்கமும் உடைய பாதிப்பிலக்கியங்கள் பல பிறக்கலாயின.

ஈழமும் தமிழகமும், 4300 ஆண்டின் முன்வரை ஒரே நாடாய் இருந்தது. கி.மு. 2300இல் நிகழ்ந்த கடல்கோளால் பிரிந்து போயிற்று. 7 பாடல்கள் இயற்றிய ஈழத்துப் பூதந் தேவனார் சங்கப் புலவர். 2130 ஆண்டின் முன்னம் தமிழ் வேந்தன் எல்லாளன் (கி.மு. 161-117) அனுநாதபுரத்தைத் தலைமையாகக் கொண்டு தமிழர் சிங்களவரைச் சமமாக ஆண்டான். சிங்களச் சிற்றரசன் துட்டகைமுனி, வஞ்சனையால் வென்று ஆண்டான். 993இல் இராசராச சோழன் படையனுப்பி வென்று வடபகுதியை மும்முடிச் சோழ மண்டிலம் என ஆண்டான். ராசேந்திர சோழன் 1017இல் சயங்கொண்ட சோழ மூவேந்த வேளார் தலைமையில் தென் பகுதியை ஐந்தாம் மகிந்தனிடமிருந்து பற்றி இலங்கை முழுதும் ஆண்டான். 1070இல் முதலாம் விஜயபாகு ஆட்சியைக் கைப் பற்றினான். பின் ஆரியச் சக்கரவர்த்திகள். 5-6-1619இல் (சங்கிலி மன்னனிடமிருந்து) போர்சுகீசியரிடம் போனது. 1656இல் ஒல்லாந்தினர் கைப்பற்றினர். 1795இல் பிரித் தானியர் பிடித்தனர். இதுவரை தமிழ்ப் பகுதியும் சிங்களப் பகுதியும் தனித்தனியே தான் இருந்தன. கோல்புரூக் ஆணைக் குழு பரிந்துரைப்படி, 1833இல் பிரிட்டிசாரால் வலுக்கட்டாய மாக இணைக்கப்பெற்றன 4-2-48இல் விடுதலை பெற்றது. வாக்குரிமைச் சட்டத்தால், 10 லட்சம் மலையக மக்கள் குடியுரிமை வாக்குரிமை இழந்தனர். அப்போதே, ஜின்னா பாகித் தானைப் பிரித்துக் கேட்டதுபோல் 45 சோல்பரி ஆணைக் குழு விடம் தமிழீழ அரசைப் பிரித்துக் கேட்டிருந்தால், இன்றைய அவலம் நேர்ந்திராது!; சிங்களவருடன் சேர்ந்து இரு இனமாக ஒரே நாட்டில் வாழ ஒப்பினர். அன்று செய்த இமலாயத் தவறு பேரிடி-பெரு வேதனையாயிற்று. 64 சாஸ்திரி-சிரிமாவோ ஒப்பந்தம் மலைமக்களை நசுக்கியது. 74 இந்திரா ஒப்பந்தம் நெறித்தது.

22-5-1972 குடியரசு மலர்ந்தது. உலகத் தமிழ் மாநாட்டு நிறை விழா 10-6-74 தனி நாடு விழைவுக்கு விடிவெள்ளி நாள்; 9 தமிழரின் உயிர்குடித்த நாள். 6-2-75. காங்கேசன் துறை இடைத் தேர்தல். தந்தை செல்வா வெற்றி திருப்புமுனை ஆயிற்று. 14-5-76 மே வட்டுக்கோட்டை மாநாட்டுத் தீர்மானம் திருப்பம் தந்தது.

1958 முதல் 61, 74, 77, 79, 81, 83, 85 இதுவரை தொடர் கதையாகச் சிங்களவர் புரிந்த இனப்படுகொலைகள் கற்பழிப்புகள், இனக்கலவரமாகி இன்று **போராளிகள்** போராட்டம், **விடுதலைப் புலிகளின்** 'செய், செத்துமடி' எனும் நிலை வரை கொண்டு வந்துவிட்டுளது. இனி சிங்களவருடன் சேர்ந்து வாழவே முடியாத நிலை உருவாகிவிட்டது. தனி நாடு தவிர வேறு வழியில்லை! இது காலத்தின் கட்டாயம்! நாளும் நூற்றுக்கணக்கானோர் படுகொலை, வீடெரிப்பு, விமானத் தாக்குதல், தமிழரைப் பூண்டோடு அழித்துவிடும் நிலை. நம் கண்முன்னேயே நம் இனம் படுகொலை, கொடுமைக்காளாதல்-கேட்க படிக்க நினைக்க நெஞ்சம் வெடிக்கிறது!

இந்தக் குமுறலால் கொப்பளித்தன-கிளைத்தன: கவிஞர்கள் தங்கள் துயரின் வெளிப்பாடாகக் கண்ணீர்க் கவிதை படைத்தனர்; இப்பிரச்சனையை விளக்கி எழுதினர் எழுத்தாளர் பலர்; காவியம் படைத்தனர் சிலர். ஈழப் பிரச்சனையால் எண்ணற்ற இலக்கியங்கள் எழுந்தன. 'தமிழீழத்திற்கான ஆதரவு தமிழ் நாட்டுப்பட்டி தொட்டிகள் மட்டுமல்லாது, இந்திய நாட்டளவில்-மக்கள் சரியாகப் புரிந்து கொள்கிற அளவில்-உலக நாட்டளவிலும் எடுத்துச் சென்ற பெருமை சிறப்பாகத் தமிழ் நாட்டு எழுத்தாளர்கள் கலைஞர்கள் செய்தித்தாள்கள் ஏனைய சாதனங்களையே சாரும்' (உமா மகேசுவரன்-தமிழீழ மக்கள் விடுதலைக் கழகம்).

தமிழ்க்குடி மகன் (செந்நீர்க் கடலில் ஈழத் தமிழன்), நன்னியூர் நாவரசன்-தமிழ் மணி (ஈழம் இரண்டாகிறது), இறையரசன் கன்னல் புகழேந்தி முகில் விடியல் விரும்பி (செந்நீரில் மலரும் செந்தமிழ் ஈழம்), அ. மறைமலையான் (குருதியில் பூக்கும் தமிழீழம்), தஞ்சைவாணன் துரை சீனிவாசன் (ஈழத் தமிழர் போராட்டம்), மருத்துவர் மறையரசன் (மீட்போம் தமிழீழம்), பேரா ராமநாதன் (ஈழப் பிரச்சனையும் ரத்த பாசமும்).

'எனது யாழ்ப்பாணமே' (க. சச்சிதானந்தன்) நான்காம் உலகத்தமிழ் மாநாடு-கலவரம் பற்றி விவரிக்கிறது. யாழ்ப்பாணம் எரிந்தது ஏன்? எப்படி? (சாமிஜி), மீண்டும் யாழ்ப்பாணம் எரிகிறது (நீலவண்ணன்), ஆவணி அமளி, 82இல் தமிழீழம், தமிழீழம் நாட்டு எல்லைகள (சே. ஆர். சின்னத்தம்பி), ஈழத் தமிழரின் இறைமை (திருச்செல்வம்), புதிய பாதையில்...இலங்கையின் தமிழினம் (க. தியாகராசன்),

விஞ்ஞானிகள் அறிவு ஜீவிகளுக்கு, நெஞ்சை உலுக்கிய இலங்கைப் படுகொலைகள், ஈழம் பற்றி எரிகிறது, இலங்கைத் தீவு சிங்களவர் நாடா? இனவெறிப் பிடியில் 37 லட்சம் ஈழத் தமிழினம் தொடுக்கும் உரிமைப் போர், எங்கெங்கும் அந்நிய மாக்கப்பட்டவர்கள், Genocide of Tamils in Sri Lanka, Reign of Terror in Jaffna, The Plight of Hindu society in Sri Lanka, Nonviolence and Tamil Liberation (K. Sathidanandam). **விடுதலைப் புலிகள்,** புதிய பாதை, நிர்மாணம், Spark என ஏடுகள் பல எழுந்தன-இதழியல் துறையில் சுவடு பதித்தன.

இன்று இலங்கை வாழ்நர் 1.5 கோடி; இதில் 75 விழுக் காட்டினர் சிங்களவர்; எஞ்சியோரே தமிழர், எனவே பெரும் பான்மையோர்க்கே நாடு உரியது பிழைக்கச் சென்ற தமிழர் தனி நாடு கேட்பது தவறு-இது வரலாறு தெரியாதோர் விளம்புவது. சிங்களவர் சோம்பேறிகள் என்பதால், ஆங்கில முதலாளிகள், தங்கள் காபி தேயிலை ரப்பர் தோட்டங்களில் உழைக்க, 1804-1930இல் தமிழ் நாட்டினின்று அழைத்துச் சென்றோரே (174000) மலையக மக்கள். பிறர் பழங்குடிகளே. இன்னும் சொல்லப் போனால், கி.மு. 480இல் வட இந்தியாவி லிருந்து (வங்கம்), சிங்கபாகு என்ற மன்னனால் நாடு கடத்தப் பட்ட அவன் மகன் விசயன் 700 தோழர்களுடன் இலங்கை வந்தனன். வரவேற்று வாழ்வளித்தாள் இளவரசி தமிழ் மகள் குயினி. இவள்வழி ஆட்சிக்கு வந்த விசயன் அவளை ஏமாற்றிக் கைவிட்டான். இவன் வழியினரே சிங்களர்!

விடுதலை இயக்கங்கள் 1 ஈழப் புரட்சி அமைப்பு EROS- (பாலகுமார்); 2) ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி EPRLF (பத்மநாபா); 3) தமிழீழ விடுதலைப் புலிகள் LTTE (பிரபாகரன்); 4) தமிழீழ விடுதலை இயக்கம் TELO (சிறீ. சபாரெத்தினம்; 5) தமிழீழ இராணுவம் TEA (தம்பிப்பிள்ளை மகேசுவரன்); 6) தமிழீழ விடுதலை இராணுவம் TELA (காஸ்ட்ரோ); 7) தமிழீழ மக்கள் விடுதலைக் கழகம் PLOT (முகுந்தன்); 8) தமிழீழத் தேசிய விடுதலை முன்னணி NLFT (புரட்சிக்குழு) இவை ஒருமித்து ஒரு முகமாகச் செயலாற்றின் உறுபயன் உண்டாம்!

## 97. தமிழரின் தாயகம்: மாந்தனின் பிறப்பகம்!

தென்னகமே தமிழரின் தாயகம். இது பண்டு தொட்டுவரும் பெருங்கொள்கை. இவ்வுலகு தோன்றிய கதை: ஐந்து

நூறாயிரம் ஆண்டின் முன் உண்டாயது. ஞாயிற்றினின்று சிதறி விழுந்தது ஒரு பெரும் அனற்பிழம்புத் திவலை; காலம் செல்லச் செல்ல அதன் சுழற்சி வேகத்தால் முதலிற் குளிரத் தொடங்கியது நடுவிடம். இரு நூறாயிரம் ஆண்டின் முனம் செடி கொடி விலங்கு எனப் படிப்படியே தோன்ற இறுதியில் மாந்தன் தோன்றினான். அந்த நெருப்புருண்டையின் குறுக்களவு 8, 000 மைல், சுற்றளவு 25, 000 மைல். இப்பவும் தரையைத் தோண்டின், 30 மைல் அளவில் இன்னமும் அழற் பிழம்பாக இருப்பதைக் காணலாம்.

முதன் முதல் குளிர்ந்தது உலகின் மேற்பரப்பே; அந்நிலம் தமிழ் நிலமே. அப்படி முதல் நிலமாக அமையக் காரணம் உலகின் நடுக்கோட்டிற்கு அணித்தாய் இருந்தமையே. அம் முதல் நிலமே குமரிக்கண்டம். குமரிமலை ஆறு கொண்டு, 'குமரி நாடு' எனப் பெயரிட்டனர். இதன் வடக்கே குமரியாறு, தெற்கே பஃறுளியாறு; இடையே கீழ் மேலாக 700 காவதம் பரப்பாக நீண்டு கிடந்தது இது ஏழ் மதுரை நாடு, ஏழ் தெங்க நாடு, ஏழ் குறும்பனை நாடு, ஏழ் முன்பாலை நாடு, ஏழ் பின் பாலை நாடு, ஏழ் குணவரை நாடு என 49 நாடுகளாகப் பிரிக்கப் பெற்றிருந்தது. ஏழ் மதுரை நாட்டுக்குத் தென்பால் இருந்த கரணியத்தால், மதுரை 'தென் மதுரை' எனபட்டது. இதனை அரசிருக்கையாகக் கொண்டு ஆண்டவன் ஆழிவடிவம் பலம் நின்ற பாண்டியன் என்ற முதலாம் நிலந்தருதிருவிற் பாண்டியன்.

கூர்தலற (Evolution) முறையில், ஓரறிவு ஈரறிவு முதல் ஐயறிவுயிர்களும் இறுதியாக ஆறறிவுயிராகிய மனிதப் பிறவும் ஏற்பட்டதென்பர். இப்பகுதியில் லெமூர்கள் நிறைந்திருந்தமை யால், அவர்களே முதல் மனிதர்கள் எனத் தவறாகக் கருதி அதனை ஒட்டி அப்பகுதிக்கு **லெமூரியா** எனப் பெயரிட்டு விட்ட னர். அறிஞர் **கார்வே** 'மூ'வின் தாய் நிலம் என வழங்கி வந்த தென்றார். இது கிழக்கே 20 பாகை முதல் மேற்கே 80 பாகை வரையிற் பரவி இருந்தது.

பண்டு இப்பகுதி தென்னாபிரிக்கா முதல் ஆஸ்திரேலியா தென்னமெரிக்கா வரை ஒரே நிலப்பகுதியாகப் பரந்து விரிந்து கிடந்தது. அடுத்தடுத்து ஏற்பட்ட கடல்கோள்களால் (Deluge) துண்டாகிப் பிரிந்தன. கடலின் அடியிலுள்ள கருங் கற்பாறை வெடித்தமையால், இக்கண்டங்கள் விடுபட்டு, பனிக்கட்டி மிதந்து செல்வதுபோல் அகன்றன என்கிறார் **வெக்னர்**. 'பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக் குமரிக் கோடுங்

கொடுங்கடல் கொள்ள' (சிலம்பு 11: 19-20). இறையனார் களவியலுரை, இளம்பூரணர் உரை போன்றன, கடல்கோளைக் குறிப்பிடுகின்றன; செங்கோன் தரைச் செலவும் செப்புகிறது.

கடல் கொண்ட இதே சமயத்தில்தான் கடலுள் அமிழ்ந்து கிடந்த இமயம் மேலெழுந்தது தெற்கே கடல் கொள்ள, வடக்கே நீர் வடிந்து இமயம் தோன்றியது! இதனால் உலகில் மாந்தன் முதன் முதல் தோற்றிய இடமும், தமிழரின் தாயகமும், முதன் மொழியாம் தமிழ் முகிழ்த்த இடமும் கடல் கொண்ட தென்னாடே எனத் தெளியலாம் இதனாற்றான் 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்தகுடி' எனக் **கல்லாடம்** கதைப்பதாயிற்று.

இவைபற்றி: P. T. Srinivasa Iyengar, Stone Age, History of the Tamils; M. S. Poornalingam Pillai Tamil India, ந. சி. கந்தையா பிள்ளை தமிழகம், தமிழர் சரித்திரம், தமிழ் இந்தியா, சரித்திர காலத்திற்கு முற்பட்ட பழந்தமிழர், தமிழர் வரலாற்று வாயில்கள்; பா. வே. மாணிக்க நாயகர் 'தமிழகம்', எம். இ. வீரபாகு பிள்ளை தமிழும் தமிழரும்; கா. அப்பாத்துரைப் பிள்ளை குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு; புலவர் செந்துறை முத்து குமரி நாட்டுத்தமிழ்; V. R. R. Dikshitar Pre- historic India; T. R. Sesha Iyangar Dravidian India. கு. பூங்காவனம் 'உலக முதன்மொழி தமிழே'; Scott Eliot Lost Lemuria; Rev. Heras Studies in Proto-Indo Mediterranean Culture, க. ப. அறவாணன் தமிழரின் தாயகம். பாவாணர் பொத்தகங்கள் விலாவாரியாக விவரம் தருகின்றன.

## 98. தாய்மொழித் தனிப்பற்றும் பெருமையும்!

மொழி விழி போன்றது; உயிர் அனையது. மொழியால் தமிழர்-தமிழ்நாடு என, இனமும் நாடும் பெயர் பெற்றன. 'இருந்தமிழே உன்னால் இருந்தேன், இமையோர் விருந்தமிழ் தம் எனினும் வேண்டேன்' என்கிறது **தமிழ்விடுதூது**. 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே, அதைத் தொழுது படித்திடடி பாப்பா; யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்; இவள் என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினளாம் எங்கள் தாய்' என்றேத்துகிறார் **பாரதியார்**. 'தமிழுக்கு அமுதென்று பேர்!—அந்தத் தமிழ் இன்பத் தமிழ்! எங்கள் உயிருக்கு நேர்'—இது **பாவேந்தர்** பராவல். இப்படிப் பாவலர்கள் போற்றிய பா வகைகளெல்லாம்

தொகுத்து **'மொழி அரசி'** என வெளியிட்டார் சாமி வேலாயுதம் பிள்ளை. இவ்வொரு தொகுப்பில் ஒண்டமிழின் உயர்வெலாம் ஒரு சேர உணரலாம். அரிய பெட்டகம்.

தமிழ்=தம்+இல், தம்மிடத்தில் 'ழ்' உடையது எனப் பொருளுரைப்பார் அரசு நாராயணசாமி நாயுடு 'தமிழ் தமிழ் எனச் சொல்லிக்கொண்டே போனால், 'அமிழ்து' என்பதில் கொண்டு போய்விடும். இதில் வல்லினம்(த), மெல்லினம்(மி) இடையினம்(ழ்) மூன்றினமும் முடைந்துள்ளமை காணலாம். இது மொழியை மட்டும் குறிக்காது; மொழி, இனிமை, அழகு, மானம், வீரம், நீர்மை, இலக்கியம் எனப் பொருள் நீண்டு கொண்டே போகும்:

இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும் - பிங்கலம் 3610.
தமிழ் தழிஇய சாயலவர் - சிந்தாமணி 2026
தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே-கம்ப. பம்பை 29.
பாலேய் தமிழ். -திருவாய்மொழி
தமிழ் வையைத் தண்ணம் புனல் -பரிபாடல் 6:60

'முத்தமிழ்' என்ற பகுப்பு, வேறெந்த மொழிக்கும் இல்லாத தனித் தகவாகும் 'உயர் தனிச் செம்மொழி' என உவந்தேத்தப்படும் Classical Language. தமிழ் எனும் சொல் சங்க இலக்கியத்தில் 15 இடங்களிலும், சிலம்பல் 25 இடங்களிலும் பயின்று வருகின்றது. அருந்தமிழ், இன்தமிழ், செந்தமிழ், தண்டமிழ் என அடையோடு ஆளப்படும் அழகே அழகு; அவை தமிழின் இயல்பினையும் காட்டும். இப்படித் தொகுப்பதே ஒரு பெரும் ஆராய்ச்சியாக முடியும்; அப்படி யாரேனும் ஆய்வு மேற்கொள்ளின் அரும் பணியாகும்!

Tamil is the most highly cultivated language and possesses the richest stores of indegenous litt. -MAX MULLER

It is not perhaps extravagant to say that Tamil, in its poetic form, is more polished and exact than the Greek; and in both dialects with its borrowed treasure, more copious than Latin, in its fullness and force, it resembles English and German more than any other. - Dr. WINSLOW

The Tamil language is extraordinary in its subtlety and sense of logic. The perfection with which it has been

developed into an organ for precise and subtle thought, combined with the fact that it represents a much earlier stage in the evolution of inflextional language than the Indo-Germanic tongue, suggests the priority of the Dravidians in attaining settled order and regular Govt...of all the Dravidian languages Tamil is the one best fitted to be the instrument of exact thought - Dr. GILBERT SLATER

Perhaps no language combines greater force with equal ,brevity than Tamil and it may be asserted that no human speech is more close and philosophic in its expression as an exporient of the mind than the same. The sequence of things, of thought, action and its results is always maintained inviolate in the structure and nature of the Tamil language.

-Rev PERCIVAL

The three classic languages of the world namely Sanskrit, Hebrew and Greek contain Tamil words in their Vocabulary.

- RHYS DAVIS

Tamil has a wealth of words which English lacks; thus in its first stage, new form is the blossom. The apple is a பிஞ்சு. developed but still immature is காய், when fully riped it is கனி. The great antiguity of Tamil, which is one worthy rival of Sanskrit, is abundantly plain. - Dr. G. U. POPE.

Tamil is the earliest cultivated of the Dravidian idioms, the most copious and contains the largest portion and the richest variety of indubitably ancient forms, It (the most highly cultivated ab intra) can dispense with its Sanskrit altogether, if need be, cannot only stand alone but flourish without its aid. The ancient or classical Tamil language called Centamil in which nearly all the Literature, has been written, contains exceedingly little Sanskrit - Dr. CALDWEL

The mode of Collecting its words, follows the logical or intellectual order more so than even Latin or Sanskrit.

- Dr. SEHMID

The Sumerian speech, old as it is appears comparatively young, when viewed in the light of earliest world terms which

Tamil displays and of which Sumerian forms are a later development -Rev. GNANAPRAHASAR

Tamil is perhaps the only example of an ancient classical tongue which has survived as a spoken language, for more than 2500 years with its basic structure almost unchanged
- ENCYLOPAEDIA BRITTANICA

Of all the Languages now spoken in India, Tamil reached a high stage of development in very early times, It grew uninfluenced by Sanskrit and its speakers reached a high level of culture long ago. P. T. SRINIVASA IYENGAR

Tamil or Dravida was not merely the language of South indian but, before the Aryans came, it was the language of the whole India and was spoken from Kashmir to Cape Comerin.
- Dr. B R. AMBEDKAR

ஆயிரம் ஆண்டுகட்கு முன்பு தெலுங்கு மொழியில் இலக்கியம் இல்லை; பழங் கன்னடத்தில் இலக்கிய நூல்கள் ஐந்நூறு ஆண்டுகட்குமுன்புதான் தோன்றின; ஆனால் தமிழ்மொழியில் தோன்றிய இலக்கிய நூல்களோ மகமிகப் பழமையானவைகளாகும். -J. BLOCK

ஆங்கிலம் வாணிகத்தின் மொழி என்றும், இலத்தீன் சட்டத்தின் மொழி என்றும், கிரேக்கம் இசையின் மொழி என்றும், ஜெர்மன் தத்துவத்தின் மொழி என்றும், பிரெஞ்சு தூதின் மொழி என்றும், இத்தாலியம் காதலின் மொழி என்றும் கூறுவது ஒருபுடை ஒக்குமெனின். தமிழ் இரக்கத்தின் மொழி எனக் கூறுவது இனிது பொருந்தும், பக்தியின் மொழி எனலுமாம். - தனிநாயக அடிகள்

If Latin in the Language of the law, Hebrew the languag of ethical religion, Sanskrit the language of philosophy, English, French and German are the languages of Science, Tamil is the language of poetry of devine experience.
- தெ. பொ. மீ.

உலக மொழிகள் ஏறத்தாழ 3000 எனக் கணக்கிடப் பட்டுள்ளன. அவற்றுள் தொன்மை முன்மை எண்மை ஒண்மை

இளமை வலிமை தாய்மை தூய்மை செம்மை மும்மை இனிமை தனிமை பெருமை திருமை இயன்மை வியன்மை என்னும் பல்வகைச் சிறப்புக்களை ஒருங்கே உடையது தமிழே!—மொழி ஞாயிறு **தேவநேயப் பாவாணர்.**

இத்தனைச் சிறப்புகளை எத்தனையோ அறிஞர்கள் இயம்பியுள்ளனர். தமிழின் தனிச் சிறப்பு பற்றிப் பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் சிறு நூல் படைத்துளார். முத்தமிழ்க்காவலர் 'தமிழின் சிறப்பு' என்ற நூல் தந்துளார். மது. ச. விமலானந்தம் 'தாய்த்தமிழின் தனிமாண்பு', தமிழண்ணல் 'இனிய தமிழ் மொழியின் இயல்புகள்' வரைந்துளர்.

இவ்வண்ணம் எண்ணறு அருமை பெருமைகட்குரிய மொழி படைத்த நாம், இன்று 'வாழ்க தமிழ், வெல்க தமிழ்' என வாய்கிழிய விளம்புவதும், மடல்களின் மேல் அச்சிட்டும் அமைதி பெறுவதோடு நின்று விடுகிறோம். வேகமாக-படு வேகமாக வளர்ந்துவரும் இன்றைய உலகின் தேவைகட்கேற்ப நந்தமிழைப் பேணி வளர்க்கும் பணிகளில் முனைகிறோமா என்றால், இல்லை. இனி, மு.வ. மொழிந்ததுபோலே 'இன்னும் 20 ஆண்டுகட்கு வெட்டியாகப் பேசுவது விடுத்து, செந்தமிழ் சிறக்கச் செயல் செயல் என்றிருப்போமாக. 'சொல் தோற்க, செயல் வெல்க' என்ற மூவவின் மந்திரமொழி போற்றுவோம். அப்போதுதான தமிழ் தற்காலத் தன்மை பெற்றுத் தவழும்-திகழும். அதுவே உண்மைப்பற்றும் ஒண்தமிழ் உயர் பணியு மாகும். இனிப் பழம் பெருமை பேசி மங்காது, புதுப்பணி செய்து ஓங்கி ஒளிர்வோமாக.

## 99. திராவிட நாகரிகத் தகைமை!

இன்றுவரை உலகில் மலர்ந்து மறைந்த நாகரிகங்கள் (Civilisations) 21 எனக் கணக்கிட்டுள்ளார் ஆர்னால்ட் தாயின்பி. இவற்றுள் பழம் பெருமை வாய்ந்தவை: எகிப்திய சீன பாபிலோனிய சிந்துவெளி நாகரிகங்களாகும். எகிப்து நாகரிகம் கி. மு. 5000 ஆண்டுகட்கும், சுமேரியா கி. மு. 3500, சிந்து 5610 ஆண்டுகட்கு முன்னையது என்றும் அறிகிறோம்.

சிந்து ஆறு பாயும் வெளி, பஞ்சாப் சிந்து என இரண்டு மண்டிலங்களாகப் பிரிக்கப்பட்டுளது. பஞ்சாப் மண்டில

மான்ட் கோமரிக் கோட்டத்தில் ரவி- சட்லெஜ் ஆறுகட்கிடையே, லாகூர்-முல்டான் ரயில் பாதையில் அமைவது **ஹாரப்பா.** சிந்து மண்டில லர்க்கானா கோட்டத்தில உள்ளது **மொஹெஞ்சொ-தரோ.** முன்னதே முற்பட்டது, கி. மு. 3500—கி. மு. 2750 காலத்தது; சுற்றளவு 2½ கல். ஹரப்பா ஆய்வு 1920இல் மாதோ சருப் வாட்ஸ், மொஹெஞ்சொ-தரோ ஆய்வு 1922இல் பானர்ஜி நடத்தினர். ஆரியர். கி. மு. 2500இல் இந்தியாவிற் புகுந்து முதன்முதல் தங்கிய இடம் சிந்துவெளி; இங்குதான் ரிக்வேதம் (கி. மு. 2500 கி. மு. 1500) செய்தனர் (N. K. Dutt). சிந்துவெளி மக்களின் பழக்கவழக்கங்கள் ஆரியரிடம் படிந்தன. பரவின (K. N. Dikshit). இந்தியாவின் 'வெண்கல கால நாகரிகத்தை' வெளியிடுவது.

இந்த நாகரிகத்துக்குச் சொந்தக்காரர் திராவிடரே, அவர்கள் பேசியது திராவிடமே என G. R. Hunter, H. Heras R. D. Banerji R K Mookerji, N. K. Dutt போன்றார் அறுதியிட்டுளர். இந்நாகரிகம் பற்றிய ஆராய்ச்சிக் குழுவின் தலைவர் சர் ஜான்மார்ஷல் முப்பெரும் நூல்கள் யாத்துளார். சிந்து நாகரிகத்தையும் எழுத்துக்களையும் விரிவாக ஆய்ந்தவர் ஈராஸ் பாதிரியார், ஐராவதம் மகாதேவன் கணிப்பொறி வழி ஆராய்ந்து திராவிடரது என உறுதிப் படுத்துகிறார்.

இந்நாகரிகங் கொண்டு, தமிழர் வட இந்தியாவிலிருந்தே தெற்கே போந்தனர் எனச் சொல்லப்பட்டது; மாறாக தென்னகத்தில் வாழ்ந்தோரே வடக்கே சென்றனர் என்பதே உண்மை. இக்காலக் கட்டத்தில், இந்தியா முழுதும் ஒரே வகையான மக்களே இந்தியா முழுதும் வாழ்ந்தனர் என அறிஞர்கள் அவதானிக்கின்றனர்.

இந்த நாகரிகம் பற்றி விரிவாக அறிய ந. சி. கந்தையா பிள்ளையின் மறைந்த நாகரிகங்கள், மொஹெஞ்சொ-தரோ அல்லது சிந்து-வெளி நாகரிகம் (1941) என்ற டாக்டர் மா. இராசமாணிக்கனார் நூலையும், டாக்டர் க. த. திருநாவுக்கரசு எழுதிய 'சிந்துவெளி தரும் ஒளி' என்ற நூலையும் நோக்குக.

இதில் ஒரு விந்தையாதெளில், 82 இடையில். தெ. ஆ. விழுப்புரம் அருகே திருக்கோயிலூர் வட்ட **கீழ்வாலை பாறை ஓவியங்கள்** கண்டுபிடிக்கப் பெற்றன. அனந்தபுரம் கோ. கிருட்டிணமூர்த்தி முதல் தகவல் தந்தார். பாகூர் குப்புசாமி, வில்லியனூர் வெங்கடேசன் கண்டு விளக்கம் தந்தனர். அறிஞர் பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ். 80 வரைபடங்களையும்

ஆய்ந்து அதன் குறியீடுகள் சிந்துவெளி எழுத்தோடு ஒத்திருப்பது பற்றித் 'தமிழ்நாட்டில் சிந்து வெளி எழுத்தோவியம்' என நூல் எழுதினார். வெளிக்கொணர்ந்தவர் வெள்ளையாம்பட்டு சுந்தரம். 'இந்த ஓவியம் பழைய கற்கால நாகரிகத்தைச் சேர்ந்ததாகலாம் (கே. வி. ராமன்); கி. மு. 500 ஆகலாம் (ஐ. மகாதேவன்); கி. மு. முதல் 1000 ஆண்டினதாகலாம் (என். எஸ். ராமசாமி); கி. மு. 1000-500 உட்பட்டதாகலாம் (பி. எல். சாமி) என்றனர். தென்னகம், உலகின் தொட்டில் என்றால்; வடக்கே சிந்து, நாகரிகக் கட்டில் எனலாம்.

## 100. கவிஞர்கள்

பல லட்சங்கள் போட்டுப் பல திங்கள் முனைந்து ஒரு திரைப்படம் எடுக்கவேணும் என்றிருந்த அச்சநிலை மாற்றி, பாரதிராஜா போன்றார் திரையுலகில் மாற்றம் விளைத்தது போல, கவிதையுலகில் 'காரிகை கற்றுக் கவி பாடுவதினும், பேரிகை கொட்டிப் பிழைத்தல் நன்று' என்றிருந்த வெருவும் நிலை விலக்கி, தமிழிலக்கியம் பயிலாதோரும் விருப்புடன் கவி பாட முடியும். புதுக்கவிதை புனையலாம்; உரை வீச்சேனும் எளிதே இனிதே எழுதி விடலாம் என்ற எளிமை நிலையினை இந்தப் புதுக் கவிதை உருவாக்கிவிட்டது. இதனால் எண்ணறு இளைஞர்கள் கவிஞர்கள் என எழுச்சி கொண்டனர். இஃதோர் நலமான நம்பிக்கைச் சூழல்! அப்படி செப்படி வித்தை செய்யும் சிலர்:

**பெரி. சிவனடியான்:** 7-9-1932 காரைக்குடியடுத்த புதுவயல். பெரியண்ணன்: விசாலாட்சி ஆச்சி. அண்ணாமலை பி. ஏ., சென்னைப் பல்கலைக் கழக எம். ஏ., பி. டி. சென்னை மு. சித முத்தையச் செட்டியார் மகளிர் உயர்நிலைப் பள்ளி போன்றவற்றில் தமிழாசிரியராகப் 12 ஆண்டுகள் பணியாற்றி, இதுபோது விழுப்புரம் அரசினர் கல்லூரியில் பேராசிரியர்.

தமிழகமெங்கும் கவியரங்கங்களிலும் பட்டி மன்றங்களிலும் கலந்து கவர்ந்து வருபவர். பொன்னி பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர். 'சிந்தனைக் கவிஞர்' எனச் சிறப்பிக்கப் படுவர். முருகாஞ்சலி, சக்தி சரணங்கள் (இசைப் பாக்கள்), கவியரங்கக் கவிதைகள், சக்தியும் பைந்தனும் (வழிபாட்டுப் பாடல்கள்) உலராத மலர்கள்.

அவளுக்காக (நாடகம்). வான்மதி (குறுங்காவியம்), அன்பு (கட்டுரைகள்). பாராட்டுப் பட்டங்களும் : சிந்தனைக் கவிஞர் (திருப்பனந்தாள் பாவலர் மன்றம்), திருக்குறள் நெறித் தோன்றல் (திருக்குறள் நெறிபரப்பு மையம்), கவிஞர் ஏறு (திருக்குறள் பீடம்) மணம் 8-6-1958 இல், மனைவி செல்வ மணி; மக்கள் பெரியண்ணன், பி. எசி., விசாலாட்சி, தெய்வானை. **முகவரி**: 49, மகாபாரதத் தெரு, விழுப்புரம் -605 602.

அரு. **சோமசுந்தரம்**: 14-8-1936. புதுவயல். எம். ஏ. பி. டி பயின்று உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியராகச் சிறந்தவர், மிகச் சிறந்த கவிஞர், பயண இலக்கியச் செல்வர், மொழி பெயர்ப்பாளர். கம்பன் கண்ட அறநெறி, பாண்டிமா தேவி (காவியம்). மீனாட்சியம்மன் கோவில் பொற்கிழி பெற்றவர். 'காசி ஸ்ரீ' என்றேத்தப்படுவர். **முகவரி** : 123, முத்துப்பட்டினம் 3 வது தெரு, காரைக்குடி - 623 001.

**மா. செங்குட்டுவன்**: 8-6-1928 தஞ்சை மாவட்ட திருக்கார வாசல் 'நம் நாடு' துணை ஆசிரியர். பம்பாய் சென்ற ஓர் இதழின் தமிழ்ப் பகுதிப் பொறுப்பு வகித்தார். 48 முதல் எழுதி வருகிறார். நூல்கள் : கழகக் கதிர் மணிகள், முதன் முதலில், தமிழ்ச்சொல் கேளீர், முக்கனி (தொ) கவிக் கொண்டல் இதழ் நடாத்தினார். 'செந்தமிழ்க் கொண்டல்' எனச் சிறப்பிக்கப் படுவர். டாக்டர் பட்டம் பெற்ற இவர் **முகவரி**: 14/3 பீட்டர்ஸ் குடியிருப்பு, சென்னை-14.

**பொன்மணி** : (ரா. தங்கசாமி) 17-10-1934. எழுத்தரான இவர் 70 முதல் இயற்றுகிறார். பதியங்கள். மக்கள் கவிஞர் என மேவப்படுகிறார். **முகவரி** : 35, 5-வது தெரு,மேலப் பொன்னகரம், மதுரை-10.

**நெல்லை ஆ. கணபதி** 2-12-1935. தமிழாசிரியர், துணைவியும் தமிழாசிரியர். நாட்டுப் பற்று, அன்றும் இன்றும் (நா) 47 முதல் எழுதுகிறார். **முகவரி** டி. 165, டாடுஹண்டர் நகர், சைதை, சென்னை-15.

**இடிமுரசு**: (கே. எஸ். அப்துல் ரகிமான்) 3-6-1935. இடி முரசின் கவிதைகள்; சின்னமாமி, தமிழாரம் **முகவரி** 3, மயிலாப் பூரான் தெரு, இராயப் பேட்டை, சென்னை-14.

**கரு. செல்லமுத்து**: 4-6-1935 தமிழாசிரியர். 55 முதல் படைக்கிறார். உதிரிப்பூக்கள் 'கவிச்சுடர்' எனப்படுவர். 1837. அம்பாள்புரம் முதல் வீதி, புதுக்கோட்டை-1

**சுப. இளங்கோவன்**: 18-1-1935. செட்டி நாட்டுக் கல்லுப் பட்டி. வ. சுப. மாணிக்கனார் மாணாக்கர். பாவேந்தருடன் நெருங்கிப் பழகியவர். பொன்னி அறிமுகப்படுத்திய அருங் கவி. கவியரங்கு பல கண்டவர். ஏ. வி. எம். நிறுவனக் கணக்கர். 51 முதல் புனைகிறார். மலரும் கவிதை. செட்டி நாட்டரசர் மெய்க்கீர்த்தி மாலை. **முகவரி**: ஏ. வி. எம். 58, சித்திரக் குளம் வடக்குத் தெரு, மயிலை, சென்னை-4.

**செவ்வியன்** (தி. குப்புசாமி) 14-1-1937. தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத் தொடர்பர். 60 முதல் யாக்கிறார். நெருப்புப் பூக்கள், சமுதாயச் சந்தையிலே. கோட்டக் கணக் காயரான இவர் **முகவரி**: 8, 4-வது தெரு, முதற் பகுதி, கருணா நிதி நகர், சென்னை-78.

**இரா. நக்கீரன்**: (கிஷ்ண மூர்த்தி). 26-6-1938. எழுத்தரான இவர் 54 முதல் பா புனைகிறார். இசையணங்கு, இசையருவி, உதிர்ந்த முத்துக்கள், கனவுப்பூக்கள், ஞானக்கடல், முத்துக் குவியல், மேடைப் பாடல்கள், தமிழிசைப் பாடல்கள், தென் னவர் மன்னன். **முகவரி** : 22, திருப்பூர் குமரன் 2-வது தெரு, சலவன் பேட்டை, வேலூர்-632 001.

**மணமேடு குருநாதன்** : 27-3-1939. தலையாசிரியராகத் திகழும் இவர் 55 முதல் எழுதுகிறார். கவிதையோடு நாடகங் களும் படைக்கிறார், திருச்சி பக்கல் புகழ் பூத்தவர். **முகவரி** : மணமேடு அஞ்சல் திருச்சி மாவட்டம்-621 209.

**புலவர் வேதா**: (வெ. வேதாசலம்) 20-8-1939 தமிழாசிரியர் 60 முதல் எழுத்தாளர். கலைஞர் பிள்ளைத் தமிழ், கலைஞர் கவிமணி மாலை, பிற : அறச் செல்வர், உரிமைக் குரல் சீர் திருத்தச் செல்வர்கள். மருத்துவ மேதைகள், மேல்நாட்டு இளைஞர்கள்; புதினம்: ஒரு கட்டில் கதை சொல்கிறது. கடலில் கலக்காத நதி **முகவரி** : 68, பிடாரியார் கோயில் தெரு சென்னை-1.

**முத்து வேங்கடேசன்** : 10-12-1939. தமிழாசிரியர் 54 முதல் எழுதுகிறார் இராசாசி பிள்ளைத் தமிழ், குறள்வழிக் கவிதை, வேள்பாரி வெண்பா மாலை, செந்தமிழ்ப் பாவலர் எனச்

சிறப்பிக்கப்படுபவர். **முகவரி**: 2/1C, பசுமடம் வீதி, திருமயம்' புதுக்கோட்டை-622 507.

**அயிலை தமிழ்ச் செழியன்**: (க. சௌந்தரராஜன்) 26-11-1941. திருச்சி மாவட்டக் கூட்டுறவு விநியோக விற்பனைச் சங்கக் கணக்கர். 56 முதல் பன்னூறு கவிதைகள் படைத்து வருபவர். வானொலி மெல்லிசையும் வரைகிறார்.

**தமிழ்ப்பரிதி**: (பா.சி. இராசமோகன்) 2-12-1941. வேளாண் அரசுத் துறையில் உதவியாளர். 58 முதல் எழுதுகிறார். தமிழ்ப் பரிதியின் கவிதைகள், ஓ புரட்சி நெஞ்சங்களே. பிற : ஊனம் (சி), முகிலோவியம் (நா), அமைதி எங்கே (நாட) **முகவரி**: தமிழ்நாடு அரசு வேளாண் துறை, 51, எல்டாம்ஸ் சாலை, சென்னை-18.

**இரா ஜோதிவாணன்**: (வாகை மறவன்) 2-10-1942. தமிழ்த் துணைப் பேராசிரியர். 60 முதல் கவி புனைகிறார். ஒற்றையடிப்பாதை, ஈரவிழிகள். 'கவிக் கொண்டல்' எனப் பட்டம் பெற்றவர். **முகவரி**: 22. குட்டைத் தெரு, சோளிங்கபுரம், வ.ஆ.

**செங்கை அழகன்**: (கெ. ஜெகந்நாதன்) 28-1-1942. நெஞ்சப் பூக்கள், தொகுப்புகள்: ஆயிரம் மலர்கள், பாசறைக் கவிதைகள். 57 முதல் புனையும் இவரைக் 'கவித் தும்பி' என்றேத்துகின்றனர். **முகவரி**: 5/1, பங்களா தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

**இரா. வேலுச்சாமி**: ஆனந்த விகடன் துணை ஆசிரியர். அன்புடன், குருக்ஷேத்திரம் இரண்டும் புதுக்கவிதையின் புதுமை வார்ப்புகள், சிறகுகள் முளைத்த போது. **முகவரி**: 45, புதுத் தெரு, மயிலை, சென்னை-4.

**அ. தமிழ்மாறன்**: கம்பனைத் தந்த தேரழுந்தூர். ஆங்கிலமும் அருந்தமிழும் நன்கறிந்தவர். கம்பராமாயணத்தில் தோய்ந்தவர். மரபு தெரிந்த சிறந்த கவிஞர். கேட்போர் பரவசமுறும் வண்ணம் பாடக்கூடியவர். நல்ல குரல் வளம் கொண்டவர். கவிஞர்க்கெல்லாம் உதவி செய்திடத் துடிக்கும் அமுதசுரபி. தந்தவை: கோவிந்த கீதம், தேவி துதியமுதம்—இசைப்பாக்கள். பதிப்பர்: நெடுமாலைப் பாடிய அடியார்கள் (பாரதிகலைக் கழகக் கவிஞர்கள் பாடியது). **முகவரி**: 27, ஐயம் பெருமாள் தெரு, சென்னை-14. (P P: 848 933).

**பகத் சிங்**; 27-8-1941. விருதுநகர். முருகேசன்: பழனியம்மாள். வேலை வங்கியில், வளமார் கவிதைகள் வடித்து வண்டமிழுக்குத் தொண்டு புரிந்து வருகிறார். சென்னைக் கடற்கரைக் கவியரங்குகளில் தவறாது இடம்பெற்று தகு கவிதைகள் தருகிறார். கவிதை கவிதா மண்டலம் முல்லைச் சரம் அமுத சுரபி போன்றவற்றில் கவிதை படைத்து வருகிறார். இவர் கவிதை பற்றி 'ஏழைகளை ஏற்றமுறச் செய்ய வேண்டும் என்ற ஆவேசம், அநியாயத்தைச் சாடுவாரில்லையே என்ற ஆதங்கம், தேசம் முன்னேற வேண்டும் என்ற ஆர்வம் - இவை விரவி வீறு கொண்டு நிற்கின்றன. எளிய ஆனால் வலிய சொற்களைப் பல இடங்களில் பெய்திருக்கிறார்' எனப் பாராட்டுகிறார் இலக்கியச் செல்வர் குமரி அனந்தன்.

**பாபநாசம் குறள்பித்தன்**: (த. வெ. கண்ணன்). 19-7-1946. தஞ்சை மாவட்ட பாபநாச திருப்பாலைத்துறை. வெங்கடாசலம்: தனலட்சுமி. 65 முதல் எழுதி வருகிறவர். துளிகள், இதய மலர்கள்; கோலங்கள், புலம்பல். சமுதாயப் பார்வையுடன் கூடிய சீர்திருத்தச் செழுங் கவிதை புனையும் சீரியர், 2000 கவிதைகள் பாடிய இவர், 200 சிறுகதைகளும், 10 நாடகங்களையும் படைத்துள்ளார். 'தாய்' ஏட்டின் துணையாசிரியராகத் தொழில் பார்க்கும் இவர் **முகவரி**: 25, அண்ணாசாமி நாயக்கன் தெரு, சூளைமேடு, சென்னை-94.

**இமய பாரதி**: (வேதா. எழுமலை). 7-8-4946. சென்னைத் துறைமுகப் பொறுப்புக் கழக முதுநிலை ஒப்பு நோக்கு எழுத்தர் 65 முதல் பா புனைகிறார். இமய பாரதி கவிதைகள், நட்சத்திரங்கள். **முகவரி**: 76, புனிய சேவியர் தெரு, சென்னை-1.

**அறிவு மதி** (நா. சி. கே. மதியழகன்). 2-2-1948. கடலூர் சோனங்குப்பம். முதுகலை தமிழ் இலக்கியம் பயின்று, கல்வெட்டுத் துறையில் பயிற்சி பெற்று, தற்போது திரைத் துறையில் பாலு மகேந்திராவின் துணை இயக்குநர். 1000 க்கும் மேற்பட்ட கவியரங்கு கண்டவர்.

எந்தக் கருப் பொருளையும் அதன் வேர் வரை நுணுகும் நுட்பமும் சுகமான மென்மையும் இவர் கவிதையின் அடையாளங்கள். அழுத்தமான சொல்லாட்சி, ஆழமான படிமங்கள்- இவரின் தனித்துவம் என் பிரிய வசந்தமே (காதல்); நிரந்தர மனிதர்கள், அன்பான ராட்சசிக்கு (புது); புல்லின் நுனியில் பனித்துளி (ஹைகூ வடிவம்).

**புகழேந்தி**: (ஆ. கோவிந்தராசன்). 11-8-1950. எழுத்தரான இவர் 67 முதல் எழுத்தாளர். விடியலை நோக்கி, ஒரு ராகத்தின் உதயம் (சி), **முகவரி**: 99, மாயத் தேவர் வீதி, கணேசபுரம், கோவை-18.

**கலாப்ரியா**: (தி. க. சோமசுந்தரம்). 30-7-1950. வங்கி எழுத்தர் 68 முதல் வரைந்து வருகிறார், வெள்ளம். தீர்த்த யாத்திரை. **முகவரி**: 29, சுடலை மாடன் கோவில் தெரு, நெல்லை-6.

**ஜீவ பாரதி**: (இரா. க. இராமமூர்த்தி), 15-6-1950. வ. உ. சி. மாவட்டம் கரிசல்காட்டு பூதலபுரம். கந்தசாமி: வைர முத்தம்மாள். இளந்தலைமுறைக் கவிஞர்களில் குறிப் பிடத்தக்கவர். சமூகக் கொதிப்பும் சமதர்மத் துடிப்பும் மிக்கவர்; சிவப்புக் கருத்துக்கள் சீற்ற முத்துககளாக சிதறி வரும் இவரிடம்; சந்தத்திலே சிந்து விளாயாடி வரும்.

ஒரு முடிவுக்கு வாருங்கள், களத்தில் பிறந்த கவிதைகள், புது யுகக் கவிஞனும் புதியவன் குரல்களும், கனல் மணக்கும் பூக்கள், சொல்லுறத சொல்லிப்புட்டேன் - ஐந்தும் படைப் புகள். களத்திலே...புரட்சிப் படைப்பு, பிற்போககுச் சக்தி களின் பிடரியில் சம்மட்டி அடி - கொடுக்கும் நெருப்பு வரிகள் ஆர். கே. கண்ணன் கூறுமாப்போலே 'ஜீவ பாரதி என்கிற நதி இயல்பாக அனாயாசமாகப் பெருக்கெடுத்தோடும் ஒரு ஜீவ நதி. அந்த நீரோட்டத்தில் முக்குளித்து எக்களிப்போம்! சொல்லுறத...' பட்டுக்கோட்டையின் பல்லவி; இந்த வீரியக் கவிதைகள் பட்டுக்கோட்டையாரின் வாரிசு எனத் தெளிவாகக் காட்டும்.

மூன்றாண்டுகளாகத் திரைத்துறை உதவி இயக்குநர், இயக்குநர் மணிவண்ணன் யூனிட்டில் 'இனி ஒரு சுதந்திரம்' 'படத்தில் இவர் பாட்டு 'வெட்டித்தன வார்த்தைகளால் வீணாகிப் போச்சு நாடு, அட'...இவர் படைப்புகளின் முதல் வாசகி - இவர் மனைவி காமாட்சி. **முகவரி**: 49, இராமலிங் கேஸ்வரர் கோவில் தெரு, எல்டாம்ஸ் சாலை, சென்னை-18.

**மானாமதுரை மாசி**: கண்முன்னே காணும் கண்ணீர்க் காட்சிகள், வாழ்க்கை அவலங்கள் ஓலங்கள் இத்தனையையும் கண்டு கேட்ட பிறகு இவரால் பாடாமல் இருக்க முடியவில்லை. வர்க்க பேதங்கள் வாலாட்டும் வரை இவர் பேனாவும் நர்த்தன மாடும். இதற்காகக் காதலைக் கூட ஒதுக்கிவிட்டு மனிதனை

மட்டுமே பாட முனைந்துளார். 'புழுதிப் பாக்கள்' - முதல் குழந்தை. 'எதார்த்தமான சமூக சித்திரங்களாவும் மனிதச் சிறுமை சுட்டும் சொற்கோலங்களாவும் அமைந்துள்ளன. உண்மைகளைச் சூடாகவும் சுவையாகவும் சிலசமயம் அங்கதத் தொனியோடும் சொல்கிறார் (வல்லிக் கண்ணன்). சில கன மான கருப் பொருட்களைக் கொண்ட கவிதைகளைத் தரிசிக்க முடிகிறது. சில மாதிரி கவிதைகளும் உண்டு. பல கவிதை மாதிரிகளும் உண்டு. பாட்டாளிகள் அனைவரைப் பற்றியும் பாடப்பட்டுள்ள சிறப்பு இந்நூலுக்கு உண்டு. சிறந்த சமுதாயப் பார்வையுள்ள நூல். இந்தப் புழுதியில் பூத் துள்ளவை வெறும் பூக்களல்ல, ஆம்! இவை நெருப்புப் பூக்கள் (எம். எஸ். தியாகராஜன்).

'கவனிக்கப்படாத கருணை மனுக்கள்' இரண்டாவது குழந்தை, சமூக மணத்தை வாரி இறைக்கின்றன. பிரச்சனை களைக் கூர்மையாகப் பார்ப்பது கவிஞருக்குக் கைவந்த கலை யாக இருக்கிறது. (நா. முகமது செரீப்) 'அவர்கள் நீதி மன் றத்தை விசாரணை செய்கிறார்கள்' - மூன்றாம் பிள்ளை. 'இவரது கவியோசை இவருக்குப் புகழ் வருவதற்கான பூபா ளத்தை இப்போது வாசித்துக் கொண்டிருக்கின்றது. இவரது கவிச் சுவாசம் புயலை விடவும் அடர்த்தி கொண்டதாய் அமைந்திருக்கின்றது' (வைரமுத்து). கிராமியம் பாடுவதில் நாட்டுப் பாடல் யாப்பதில் ஆற்றல் உடையவர். குழந்தைப் பாடலிலும் வல்லவராக விளங்குகிறார். பிற: நடைவண்டி (குழந்தை இ), சுதந்திர அடிமைகள் (குறுங் காவியம்). சிறந்து வரும் இவர் **முகவரி** : 7, வ. உ. சி. தெரு, வன்னிய தேனாம் பேட்டை, திருவள்ளுவர் சாலை, சென்னை-18.

**வண்ணை வளவன்** : 'ஒரு வார்த்தை வளவன்'. நெருப்பு நெருக்கம் இவரெழுத்துக்கு நிரம்பவே உண்டு. கமலச் சிவப்புக் கருத்தோ எப்போதும் குருத்து விட்டபடி இருக்கும். இவரின் பாதியுடல் பத்திரிகை என்றால், மீதியுடலோ மேடையாகும். எளியோர்க்குச் சார்பெழுத்தாய் வலியோர்க்கு வல்லெழுத்தாய் எழுந்து வரும் இவர் எழுத்துக்கள் (இளமுகிலன்).

பரந்துபட்ட இலக்கியப் பயிற்சி மிக்கவர்; படைப்பாற் றலும் செழுமையாகச் சிறந்துளது. 'கவிக்கனல்' என்ற கவிதை விருது பெற்றுளார். கவியரங்குகளில் இவரே முதன்மை. கணைகள் காயங்கள் போன்றன தொகுதிகள். இந்தக் கணைகள், சமூக அநீதியின் அடிவயிறு நோக்கித் தொடுக்கப்

பட்ட மனிதாபிமானங்கள்; இந்தக் காயங்கள். கவிஞன் நெஞ்சில் தைத்த நிகழ்கால சோக தாகங்கள் இந்தக் கவிதைகள் நெருப்பைத் தின்று ஜீரணித்த நிஜத்தின் தலைப் பிரசவங்கள். வண்ணத் தமிழ்ப் பெருங்கவிஞராக வரவிருக்கும் இவரின் **முகவரி**: 7, சோமு செட்டி 6-வது தெரு, இராயபுரம், சென்னை-13.

**தமிழ் மகன்**: (பா. வெங்கடேசன்) : 24-12-1964. சென்னை, தந்தை மின்வாரிய பிரிவு அலுவலர் கவிஞர் க. பாலகிருஷ்ணன். இராம கிருஷ்ணா மேனிலைப் பள்ளி, மாநிலக் கல்லூரி பி. எசி. இயற்பியல். 77 முதல் எழுத்தார்வம். 'பூமிக்குப் புரிய வைப்போம்' இவரது முதற் படைப்பு. சில வரிகள்: 'கவிதை ஒரு மென்மையான பூகம்பம். அது படிக்கும்போதே வெடிக்கும்; அகராதி வார்த்தைகள் எல்லாம் அதிகார வார்த்தையாமே.' கதைகளும் எழுதுகிறார்.

கவிஞர் என்று அழைப்பதற்குத் தகுதியான கனமுள்ள கவிதைகளை இவரது பேனா மேகம் பெய்திருக்கிறது. கவிதையை பூ மாலையாக்கவும் தெரிந்திருக்கிறது. போர் வாளாக்கவும் தெரிந்திருக்கிறது (பொன். செல்வ கணபதி). கவிதைகள் ஒவ்வொன்றும் இதய நதியின் ஈர நீரோட்டம்; இனிய தமிழின் தேரோட்டம், புதிய சமுதாயம் படைக்கப் புறப்படும் போராட்டம்: வளமான சொற்கள் வாகான வடிவம்—இவை இவருக்கு வாய்த்திருக்கும் வரப்பிரசாதம். இவருடைய உணர்ச்சிகள் தமிழுக்குக் கிடைத்த உற்சவ ஊர் வலம்-தீர்க்கமான பார்வை, பீரங்கிக் கருத்துக்கள் பின்னிக் கிடக்கின்றன. தணல் யாத்திரைக் கவிஞன் (மு. மேத்தா). புதுக் கவிதைப் புத்தகவாள் (அறிவுமணி) **முகவரி** : 7, செல்லப்பா தெரு, ஓட்டேரி, சென்னை-12.

**இளந்தென்றல்** (கே. டி. உமாபதி). 15-3-1931. ஆசிரியர். 64 முதல் கவி புனைபவர். நெஞ்சப் பயிர்கள். 'கவிக்குயில்', 'புரட்சிக் கனல்' என்றெல்லாம் பட்டம் பெற்றவர். **முகவரி** : 16, மேலண்டை ஒப்பணக்கார வீதி, சுவால்பேட்டை, அரக்கோணம், வ. ஆ.

**சீதையின் மைந்தன்** (பா. தட்சிணாமூர்த்தி). 13-7-1951. மானாமதுரை. தீவிரமான சமுதாய சிந்தனையும் கோபம் கொப்பளிக்கும் வார்த்தைகளும் கொண்டவை இவர் கவிதைகள். நூல்.: அக்கினிச் சாரல் **முகவரி** : பி. 14 ஏ, பம்மல் நல்ல தம்பி சாலை, அண்ணா நகர், பம்மல், சென்னை-75.

**கி. நரேந்திரன்** (கருமலைத் தமிழாழன்). 16-7-1951. காவியத் தலைவன், நெஞ்சின் நிழல்கள், மலர்விழி (கா). 67 முதல் எழுத்தாளர் **முகவரி:** நகர அச்சகம், 24, முகமதலி கிளப் சாலை. தருமபுரி-636 701.

**எஸ். அறிவுமணி:** 29-4-1954. திருச்சி எடமலைப்பட்டி புதூர். சுப்பிரமணியன்: அம்பிகா. எளிமை மொழியில் ஜன ரஞ்சகமான சிந்தைகள் சிலிர்க்க எழுதுகிறவர். 1000 க்கும் மேற்பட்ட கவியரங்குகளில் கலந்து கொண்டவர். மேத்தா விற்குப் பிறகு பெருவாரியான ரசிகர்களைத் தமது கவிதைக் காகப் பெற்ற பெருமையர்.

புதுக்கவிதைப் படைப்புகள். பிருந்தாவனத்துப் பிரமிடு கள், என் அபிமானத்துக்குரியவளே! கறுப்பு மை சிவப்பு எழுத்து, ஞாபகம் இல்லையோ?, அந்த ஜென்ம சினேகிதம், தெற்கில் உதித்த சூரியன் (கலைஞர் வரலாறு), கம்ப்யூட்டர் மனிதர்கள், மனங்கொத்தி பறவை. **முகவரி:** 10, ரத்தின சபாபதி தெரு; புரசைவாக்கம், சென்னை-7.

**ஆர். ஈ. சந்திரசேகர்:** 21-2-1955. சென்னை கொரட்டூர், ஏகாம்பரம்: கன்னியம்மாள். இதழியற் பணி. நாட்டுப்புறப் பாக்களின் நளினமும் நலமும் இவர் கவிதையில் நெளியும். நிலாக் காலத்து மயக்கங்கள் (புதுக் கவிதை) பிற: மௌனம் கலைகிறது. ஊமைக் குயில்கள், மழையில் நனைபவருக்காக (நாவல்கள்) **முகவரி:** 35, கண்டிகைத் தெரு, கொரட்டூர், சென்னை-76.

**இளைய பாரதி:** 20-10-1960. மயிலாடுதுறை. சாமிநாதன் -தையல் நாயகி. சிகரம் இதழில் பணி புரிந்திருக்கிறார். சூரியனைப் பார்க்காத சூரிய காந்திகள், ரத்தத்தால் ரத்து செய்வோம் (இந்தி எதிர்ப்புக் கவிதைகள்).

**எஸ். சண்முகம்:** 5-5-1963. சென்னை. சுப்பிரமணியம்: வரலட்சுமி பச்சையப்பன் கல்லூரி வணிகவியல் பட்டதாரி. புகைந்த மழைப் பொழுது (புது), கறுப்புக் கவிதைகள் (மொ. பெ). கவிதையைப் புதிய முயற்சிகளில் அழைத்துச் செல்லும் சோதனை முயற்சிகளில் மிகுந்த ஈடுபாடு உடையவர். மேலைக் கவிதை உத்திகளின் தாக்கம் இவர் படைப்புகளில் பிரதிபலிக் கின்றன.

**பழநி பாரதி :** 14-4-1964. காரைக்குடி. புகழ்க் கவிஞர் சாமி பழனியப்பன் : கமலா. எதையும் அழகாக வெளியிடு வதில் புதுமையான படிமங்களைக் கையாள்பவர். சமூகக் கோபம் பொங்கும் சிந்தனைகள் முந்திவரும்.

புற நானூற்றுக் கவிதையின் பாதையில் பீடு நடை போடும் புதுக்கவிதைகள். 'இவரிடம் கவிதை-காதலின் முத்தங் களாக நாணிச் சிவக்கவில்லை; மாறாக, கனலின் உயிர்த் துடிப்புகளாகச் சீறிச் சிவந்துள்ளது' (ஈரோடு தமிழன்பன்). நம்மூரில் முதியவர்களெல்லாம் குழந்தைகளைப் போல் எழுதிக் கொண்டிருக்கையில் ஒரு குழந்தை முதியவனைப் போல் எழுதிக் கொண்டிருக்கிறான்: அவன்தான் பழநிபாரதி, அழுத்த மான சமூக உணர்வுகளோடும் நெஞ்சை நெருடும் சொல் லாட்சிகளோடும் நெஞ்சில் ஆணிச் சொல்லடித்து இவரின் கவிதைகள் பவனி வருகின்றன. இந்தத் தம்பியின் எதிர்காலம் சூரியனைப்போல் நிஜமானது' (வைரமுத்து), இவருடைய கவிதைகள் நாளைய எழுச்சிக்கு இன்றைய சாட்சியங்கள். இவர் பேனா மை, நம் மெய்யைச் சிலிர்க்க வைக்கிறது. வருங் காலத்தில் மக்கள் கவிஞராகத் திகழ்வார் (சலாவுத்தீன்). புஷ்கின் இலக்கியப் பேரவையின் செயலராகவும் சிறக்கும் இவர் பணியாற்றுவது 'தாய்' ஏட்டில். **முகவரி :** 34, நெல்சன் மாணிக்கம் சாலை, சென்னை-29.

**இரங்கூன் இராஜா :** காதலைக்கூடக் கண்ணியமாகக் கையாண்டுள்ளார். சமூகச் சாடல் பாடல்கள் சிந்திக்க வைக் கின்றன. 'சினிமா என்கின்ற சாதனம், தேக ஆரோக்கியத்தை மட்டுமின்றி தேச ஆரோக்கியத்தையே சிதைத்து விட்டதை மிக நேர்த்தியாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்(சலாவுத்தீன்) என்னை எழுத்துக்கள் எழுதத் தூண்டவில்லை. என் சின்ன வயதின் அகோர சந்திப்புகள்தான் உணர்ச்சித் தீயை ஊட்டி விட்டது; அந்த அனுபவக் காயங்களின் இந்த வரிகளின் அணி வகுப்பு. என்று இவர் தருவன 'ஆனந்த ரசிகை, ராத்திரிப் பூக்கள். **முகவரி :** 30, 4-வது தெரு, பாரதி நகர். கொருக்குப் பேட்டை, சென்னை-21.

**கல்லாடன்:** கவிஞர் சுரதா- சுலோச்சனாவின் ஒரு திருமகன். 200க்கும் மேலான கவியரங்குகளில் பங்கு பெற்றவர். மரபும் புதுசும் மிடைபவர். திரைப்படங்கள் பலவற்றில் உதவி இயக்குநராகத் திகழ்ந்தவர். தந்தவை: இமைகள், மூச்சு ஊஞ்சல். தாய் ஏட்டில் பணியாற்றுகிறார்.

**எஸ். சுபா:** தந்தது 'மூன்றாவது கை'. இந்தக் கை பற்றி 'தந்த கவிதையில் தங்க மொழியினில் தக்க உண்மைகள் பலவே! பந்த பாசமே சொந்த சோகமாய் போன காதையும் உளவே (வைரா). நிஜமான வெற்றிகள் இவனுக்கு நிச்சயிக்கப் படுகின்றன (மேத்தா).

**பட்டுக்கோட்டை ரமேஷ்:** 1941. சென்னைப் புதுக் கல்லூரியில் வரலாறு இளநிலை தமிழ் முதுநிலை முடித்தவர். தந்தை வீராச் சாமி. பாட்டிலே சிறந்த பட்டுக்கோட்டையிலே பிறந்த இவரின் படைப்புகள்: கற்பனைப் பூக்கள், இருளின் உதயம். பூ வொன்று பார்வைக்கு: 'சாதாரண மனிதனாக வாழ்வது சவம் சமுதாய மனிதனாக வாழ்வது தவம். 'மற்றொன்று தீர்வைக்கு: 'அறத்தைப் புறத்தில் வைத்து ஆகாயத்தை மனத் தில் வைத்து, வாதங்களையே வாழ்க்கையாகக் கொண்டு வாழ் பவனே, இன்றைய அரசியல் வாதி' கண்ணழகும் கருத்தழகும் கவிதையழகும் கொண்ட இவரின் **முகவரி:** வீரா பதிப்பகம், சாதிஸ் மாளிகை- 152 எல் பெரிய தெரு. பட்டுக்கோட்டை -614 601.

## கும்பகோணம் கொழுந்துகள்

தமிழகத்திலேயே இங்குதான் இத்துணை இளைஞர்கள் படைப்பிலக்கியத் துடிப்பும், ஏடு நடாத்தும் துணிவும் கொண் டிலங்குகின்றனர். இவர்களைக் காணும்போது, தமிழ் வாழும் வளரும் என்ற நம்பிக்கை நிலைபெறுகிறது.

**வே. மு. பொதிய வெற்பன்:** (நேதாஜி 26-4-48. பாக்கியம் பிள்ளை: வேலம்மாள். குடந்தைக் கல்லூரி முதுகலை தமிழ். பிரம்மாண்டமான பெரு வடிவம் மட்டுமல்ல, இவர் கவிதை களும் கூட பிரம்மாண்டமானவை பொதுவுடைமைச் சிந்தனை யாளர். எளிய சந்தங்களும் வலிமையான கருத்துக் களும் சேர்ந்து இவரது எழுத்துக்குத் தனித்தன்மை தரு கின்றன. 'சூர்யமுகி' என்றழைக்கப் பெறும் இவர், புதுமைப் பித்தனை ஆராய்ந்தவர். 'சூரியக் குளியல்' தொகுதியின் சொந்தக்காரர். பாப்லோ நெருடாவின் கவிதைகளைத் தமிழில் பெயர்த்தவர். 'முனைவன்' இதழாசிரியர். 'இதுதாங்க எங்க பாரதம் - இங்கு மலிவாய் கிடைத்திடும் மானுடம்'. 20, கோதண்டபாணித் தெரு, குடந்தை.

**கீதாலயன்:** (சுகுமாரன்). குடந்தைக் கல்லூரி பி. எசி. வழக் குரைஞர். 'ஒரு மெழுகுவர்த்தி... சில கண்ணீர்த்துளிகள்'

என்பது இவரது புகழ் பூத்த காதல் தொடர். தமிழில் வளர்ந்த புதுமையான சொற்கோலம் இது. நூற்றுக் கணக்கான கவியரங்குகளில் ஊற்றமுடன் பாடியும் தலைமை யேற்றும் கவிதைக் கட்டளைக் கல்லாக இலங்குபவர். பட்டிமன்ற வழக்காடு மன்றங்களில் பொலிவார்; கவிதை நடை கலந்த கனல் தெறிக்கும் அனற் பேச்சாளர். 'இந்த இரவு ஒரு நாள் விடியும் என் ராஜ ரகசியம் அப்போது புரியும்'. பெரியார் பற்றாளர். **முகவரி:** 2-வது குறுக்குத் தெரு, காமராஜ் நகர், குடந்தை.

**வான தீபன்:** (சா. ஆறுமுகம்). பி. ஏ. தமிழ். பாவாடை பற்றியே பாடிவரும் கவிஞரிடையே, தீ வாடை வீசும் கவிஞர் இவர் 'இந்தியப் பெண்கள் பெற்ரோலில் குளித்து, தீக்குச்சி யால் தலை துவட்டிக் கொள்கிறார்கள்!'

**புவி உமாச் சந்திரன்:** 16-6-60 மணவாளன்: செண்பகவல்லி. பள்ளி இறுதி வகுப்பு பரபரப்பான பத்திரிகையாளரான இவர், கரகரத்த குரலினர். தஞ்சாவூரில் 'தமிழகக் கவிஞர் பேரவை, நடாத்துகிறார். 'புது விழிகள்' இதழாசிரியர். 'விசாரித்ததாகக் கூறவும்' இவரது தொகுதி. 'எங்களின் கண்ணீரைத் துடைக்க வந்த விரல்கள். விழிகளையே திருடி விட்டன!' **முகவரி:** 1248, சின்னபியால் தெரு, மேல வீதி, தஞ்சாவூர் - 9.

**இளைய மகன்:** (சம்பத் குமார்) 22-5-62. ஸ்ரீ காந்தராமா நுஜம்: சாரநாயகி. திருப்பனந்தாள் கல்லூரி பி. லிட். தினமலர் உதவி ஆசிரியர். தமிழின்மீது அமோக மோகம், கவிதையின் மீது அலாதி தாகம் கொண்டவர். வஞ்சனையற்ற சிந்தனைக் குச் சொந்தக்காரர். இவரது அமில நெடியேறும் கவிதை களுக்கு ஒரு சோற்றுப் பதம் இதோ. 'பிச்சைக்காரர்களுக் கோர் பெருமிதம்...பெற்ற நாடும் தன்போல் ஆகிப் போன தால்!' **முகவரி:** 33, 3-வது தெரு, அழகிரிநகர், வடபழநி, சென்னை-26.

**கதிரவன்:** (பாசுகரன்). 1-6-60. இராசாராமன்; நீலா. படிப்பு புகுமுக வகுப்பு. சாது சேசையர் நூலகர். பழந்தமிழ் இலக்கியத்தின்மீது பற்று மிகக் கொண்டவர். இவரது வலிமை அமைதி. வெண்பாவில் புதுமை பலவும் சாதனை சிலவும் நிகழ்த்தியவர். மரபை பிசிறில்லாமல் ஆளத் தெரிந்தவர். 'நாற்காலிப் போட்டியில் நாணயமும் கல்வியும், தோற்கும் பணத்தின் முன் சோர்ந்து, **முகவரி:** 59, ஜே. பி. கீழ்த் தெரு. குடந்தை.

**தென்னிலவன்:** (நா. தெட்சிணாமூர்த்தி). தந்தை நாகராசன், ஓவியர். குடந்தைக் கல்லூரி தமிழ் பி. ஏ. சிறந்த கவிஞர், கதைஞர், வாசனை வார்த்தைகளுக்குச் சொந்தக் காரர். அதிர வைக்கும் கற்பனை, ஆழமான உட்பொருள் - இவற்றை மிகவும் மிகவும் சாவதானமாக எழுதத் தெரிந்தவர். காற்றைக் கைது செய்கிறேன். 'நனைந்த சூரியன்' இவர் தொடர் கதைகள். சிறுகதை சிலவும் சமைத்துள்ளார். என்றாலும் கவிதையே இவரது அத்திவாரம்.

'போகிற போக்கைப் பார்த்தால், சட்ட சபைகளில் எழுதி வைப்பார்கள் இப்படி: இங்கே அரசியல் பேசக் கூடாது. குடந்தையில் 80 - 85 களில் வெளிவந்த உதயம், புதுவிடியல், புதுவிழிகள், முகவரி, தொடரும் போன்ற பல ஏடுகளின் மூலமாக இலங்கியவர். எனவே சுட்டி போன்றவற்றில் துணை யாசிரியராக விளங்குகிறார். **முகவரி:** G 3, சிவராமன் தெரு, மந்தைவெளி, சென்னை 28.

**வசந்தகுமார்** :(ஆர். சுந்தர் ராஜன்) 28 5.63. ராம மூர்த்தி: ராஜம். குடந்தைக் கல்லூரி பி. எசி. இயற்பியல். தன்னை பாதித்த அனுபவங்களை மட்டுமே கவிதையாக எழுதுவதாகக் கூறுகிறார்; அதனால் தானோ என்னவோ, காதலையும் வேலை யில்லாத் திண்டாத்தையும் அதிகமாகப் பாடுகிறார். நகைச் சுவைத் துணுக்குகள் நாளும் பல்வேறு இதழ்களில் படைத்தும் வருகிறார். 'யார் சொன்னது ஆடையில்லாதவன் அரைமனிதன் என்று? வேலையில்லாதவன் தான்...!

**ந. சுப்பிரமணியன்:** 8-10-63. நடராசன் : ரமணி. எம். ஏ. பொருளாதாரம் குடந்தைக் கல்லூரியில். எல்லோரிடமும் எளிதே பழகிவிடும் இயல்பும், ஒவ்வொன்றையும் நன்றாகத் தெரிந்துகொள்ள வேணும் என்ற வேட்கையும் கொண்டவர். நடிப்பு, இசை, பேரலச் செய்தல் போன்ற கலையும் வல்லவர். வானொலி தொலைக்காட்சிகளில் கலைஞர். பூவின் இதழ் களால் சிறகு தைத்துக்கொண்ட இளங் கவிஞர். மெல்லிய உணர்வுகளைத் துல்லிய சொல்லியங்களால் சொல்லிவிடும் ஆற்றலர். 'தங்கள் ஆடைகளை தாங்களே களைந்து கொள்ளும் நவீன பாஞ்சாலிகள்...இந்த நடிகைகள்!' **முகவரி:** (அ. பெ. 38) 21, நாகேஸ்வரன் கீழ வீதி. குடந்தை.

**ஜெகதீசன் :** 30-5-64. மருதாசலம் : கமலம். குடந்தைக் கல்லூரி பி. ஏ. பொருளியல். சவுளி வணிகம். அழகர், நளின மான பார்வையும் அமைதிப் பேச்சும் கொண்ட இவருக்குக்

கவிதையின்மீது காதல் வந்தது கல்லூரிக் கல்வியின்போது தான்! கோபம் வரும்போது நெருப்பின் நண்பனாகும் ஆற்றல் இவருக்கு உண்டு. சமூகச் சினம் சாற்றும் இவர் கவிதைகளுக்கு ஒரு சான்று: 'சிவகாசியில் மலிவாகிப் போனது தீப்பெட்டிகள் மட்டுமல்ல, உழைத்து உழைத்துக் கல்லறைக்குத் தயாராகும் சின்னஞ் சிறுசுகளும்தான்! **முகவரி:** 22, பிச்சை பிராமணத் தெரு, குடந்தை.

**இரா. மயில்சாமி:** 16-10-64. ரத்தினவேலு : ராதாபாய். குடந்தைக் கல்லூரித் தமிழ் முதுகலை. ஆடுதுறையில் இருந்து பாடுதுறைக்கு வந்த வானம்பாடி. 'தூரத்து ரசிகன்' இவரது கவித் தொகுதி. 'தாய்' வார இதழ் நடாத்திய பாரதி கவிதைப் போட்டியில் பரிசு பெற்றவர். வாலியின் 'அம்மா'வை ஆய்வு செய்தவர்.

நகைச்சுவையும் அற்புத உருவகமும் இவரின் சிறப்பியல்புகள். நிகழ்காலச் சூழ்நிலைகளை வெறுத்துச் சாடியும், நல்லதொரு எதிர்காலத்திற்கு ஏங்கிப் பாடியும் இவர் கவிதைகள் உருவெடுக்கின்றன. 'சுதந்திர தெய்வமே! நீ அருளற்றுப் போனதால், இங்கு நாட்டின்பால் அனைவரும் நாத்தீகர்கள் ஆயினர்; ஆத்திகர்களாய் இருப்போர் அரசியல்வாதிகள் மட்டுமே!' **முகவரி:** 6. நடராசபுரம், கீழ அக்ரஹாரம், ஆடுதுறை-612 101.

**பிருந்தா சாரதி:** (நா. சுப்பிரமணியன்). சுப. நாராயணன் : ருக்மணி. குடந்தைக் கல்லூரி பி. எசி. இயற்பியல். பழைய தம்புராக்களை நம்பிப் பாட வந்தவர் அல்லர், புதிய ராகங்களை மலர்த்துகிற மந்திரப் புல்லாங்குழல் இவருடையது. 'சிறந்த மனிதன் மட்டுமே சீரிய படைப்புகளை உருவாக்க முடியும்' என்பதற்கு இவர் வலிமையான சாட்சி. 'ஒரு அமீபா செத்துப் போனால்கூட நான் அழுதுவிடுகிறேன்' என்று கூறும் இவர், பாரதியின் எழுத்துக்களில் மனதைப் பறி கொடுத்தவர்.

வாழ்க்கை-கனவு இரண்டுமே உண்மையின் வெவ்வேறு முகங்கள் என அழுத்தமாக நம்பும் நல்லிளைஞர். தன் நெஞ்சில் பதியும் காட்சிகளை ஊடுருவிப் பார்த்து, அவற்றினடியில் இழையோடும் இயல்பான எள்ளல்களை சுண்டிவிடுவது இவரது சுருதியாகும். நினைத்து நினைத்து மகிழ வைக்கும் ஓவியத்தையும் கேட்டுக் கேட்டுக் கிறங்கவைக்கும் இசையையும் போல்வன இவரின் சுந்தரக் கவிதைகள். 84 கம்பன் கழக தமிழக மாணவர் கவிதைப் போட்டியில் முதற் பரிசு பெற்றவர். வளமான கற்பனையும் வற்றாத சிந்தனையும் வாகாகப்

பெற்றவர். 'நல்ல விலை கிடைத்தால், நீதி தேவதை விற்று விடுவாள்-தன் கையில் வைத்திருக்கும் தராசை!' **முகவரி:** 53 அ. செல்வா சாரங்கபாணி தெரு, குடந்தை.

இந்தக் கவிக் குழந்தைகள், 'முனைவன், உதயம், துடிப்பு, புது விழிகள், தோழமைப் புறாக்கள், புது விடியல், உரிமை, விடிவு, முகவரி, தொடரும், ஜன கண மன' எனப் 12 சிறு இதழ்களை, 82-85 காலக்கட்டங்களில் மளமளவெனத் தொடங்கினர். இவர்களிடையே ஒட்டு மொத்த கூட்டு மனப்பான்மை இன்றித் 'தான்' எனும் துடிப்பால் விலகியும் விலக்கியும் தமக்கென ஏடுகள் தொடங்கினர். எனவே ஒன்றேனும் ஊன்றி நின்று உலவவில்லை! குழு மனப்பான்மை கொண்டு ஒவ்வொரு திங்களும் ஒருவர் ஆசிரியர் என்று சுழல் முறையில் செயற்பட்டிருப்பின், ஒரே ஏடு தலையாய நிலையாய உலையாத நிலை பெற்றிருக்கும் தான்தான் ஆசிரியர், தன் பெயரே முன்னிற்றல் வேண்டும் என்பதால் பல ஏடுகள் பிறந்தன. சிலநாளில் இறந்தன. என்றாலும் இந்த இளங்கன்றுகளின் பயமறியா முயற்சி பாராட்டிப் போற்றத் தகுவன.

## 101. கதைஞர்கள்

நம் காலப் பிரபல இலக்கிய வடிவம் கதை. பிற வடிவங்களை விட அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்து உலகு முழுதும் பரந்து விரிந்து வியாபித்து வருவது கட்டுப்பாடு அதிகமில்லாத கலை. நெகிழ்வுமிக்க இவ்வகை வடிவங்களை எல்லோரும் அஞ்சாது இறங்கி எழுதத் துணியும் துறை. எனவே இந்த நூற்றாண்டில் (சிறுகதை-நாவல்) கதையுலகில் கணிசமானோர் கிளைத்து வருகின்றனர்.

**சி. ஏ. பாலன் :** 2-4-1921. இந்தி வடமொழி ஆங்கிலம் அறிந்தவர். படைப்பு: இன்று நான் நாளை நீ, நிலவும் நட்சத்திரங்களும், மொழி பெயர்த்த புதினங்கள் 30. பிற: சிறைப்பறவை, தூக்குமர நிழலில். பொதுவுடைமைச் சிந்தனையாளர்; எனவே படைப்புகளில் உடைப்பெடுக்கும். **முகவரி :** 2, கனகராவ் தெரு, ராஜாஜி நகர், பல்லாவரம், சென்னை-43.

**நகுலன்** (டி. கே. துரைசாமி). 21-8-1922. ஆங்கிலப் பேராசிரியர். 52 முதல் எழுதி வருகிறார். சிறுகதை: ஒரு பெண், நாவல்: நாய்கள், நிகழ்கள், நினைவுப் பாதை, ரோகிகள்;

இவர்கள். குருக்ஷேத்ரம் (தொகுப்பு) படைப்பாளியோடு விமர் சகராகவும் விளங்குகிறார். க. நா. சு. வழியில் முனைந்தார், ஆனால் சாதனை புரிந்தாரில்லை, **முகவரி** T. C. 2/98. Calf Wings Rd., Gairutiar East, Trivandrum-595 003.

**தி. ரா. ராஜு** : *15-8-1926*. திருவையாற்றை யடுத்த தில்லை ஸ்தானம். இராணுவத்தில் பணியாற்றியவர். பாரதியிலும் கதை இலக்கியத்திலும் கனிந்தவர். பாரதிவழி (60) இதுவே விரிவாகி 'பாரதி ஒரு வாழ்க்கை நெறி'யாக வந்தது; மகாகவி பாரதியார் கவிதையும் வாழ்க்கையும், பாரதி போற்றிய பன் னரும் உபநிடத நூல்; சிறுகதை: பட்டாளக்காரன், என் குழந்தை; நாவல்: மண்ணகத்து நல்லோசைகள், விண் மட்டும் தெய்வமன்று, காட்டாறு, எங்கிருந்தோ வந்தான். அட, மண்ணில் தெரியுது வானம், பிற : துப்பாக்கி உங்கள் தோழன், நம்பர்க்குரிய நம் வீரர். இதுபோது ஓமியோபதி மருத்துவத்தில் உன்றி வருகிறார். **முகவரி** : தில்லைத்தானம். திருவையாறு (வழி), தஞ்சை மாவட்டம்.

**மு. சேரன்** : *29-9-1926*. சென்னை, முருகப்ப செட்டியார்: தனம் அம்மாள். 42 இல் 'தமிழ்மணி' ஆசிரியர் ஆல்பின் பெர்னாண்டோவிடம் காசாளர். எழுத்தார்வத்தால் பொன்னி, பிரசண்ட விகடனில் சிறுகதை எழுதல். 40 ஆண்டுகளாக எழுத்துத் துறையில் ஏற்றம் பெற்றுள்ளார். முதல் நாவல் 'கட்டழகி காஞ்சனா' உலகமேதை நேரு, குழந்தைகள் கண்ட நேரு, அறிவுலக மேதை அண்ணா, ஹாத்திம் தாய், ராஜ தர்மம், பூங்குழலி, கன்னிப்பூ, ரங்கூன் ராஜா, இரகசிய மாளிகை, பகதூர் பவனம், மாஞ்சோலை மரகதம், பரந்தாம னாரின் பரம ரகசியம், பைபிள் கதைகள் என 200 பல்வகை நூல்கள் படைத்து முத்திரை பதித்தவர். 500 சிறுகதைகள், 10 தொடர் கதைகள், 160 துப்பறியும் புதினங்கள். இவருக்கு அன்பர்களும் நண்பர்களும் ஏராளம். 19-3-86 இல் மணிவிழா நிகழ்ந்தது; வி. ஜி. பி. பொற்கிழி அளித்தார், அவ்வை நடராசர் விருது வழங்கினார். பெருங்கவிக்கோ பொன்னாடை போர்த்தினார்.

இச் செந்தமிழ்க்கோ பற்றித் தமிழ்வாணன் 'இவர் எழுத்துத் தொழிலை விட்டுவிட்டு வேறு தொழிலுக்குப் போயிருந்தால், இந்த நேரத்தில் இருக்க ஒரு வீடும், இருப்பில் சில ஆயிரங்களும் வைத்துக்கொண்டு, வேப்ப மரத்து நிழலில் பேப்பர் படித்துக் கொண்டிருப்பார். எழுத்து, எண்ணத்தை நிரப்பியது; வயிற்றை நிரப்பவில்லை!' எழுத்துப் பணிக்கே

தம்மை அர்ப்பணித்து விளம்பரமின்றி வாழும் மர்மக்கதை வித்தகர். **முகவரி :** 7, கருதப்ப நாயக்கர் காலனி, சூளைமேடு, சென்னை-94,

**ஏ. எஸ். ராகவன் :** 19-6-1928. கரூர். மலர்ந்த மனம் (59), உயிர் நோன்பு (60) நாவல்கள். அன்பின் வழி (59), உணர்வின் விழிப்பு (60), செம்மண் சிறுகதைகள். **முகவரி :** 24, எஸ். ஆர். எக்ஸ்டென்ஷன், ஸ்ரீரங்கம், திருச்சி-6.

**சி. என். நாச்சியப்பன் :** (கார்த்திகேயன்) 3-3-1933. காரைக்குடி. அழைக்கிறது அன்னை பூமி, குடும்பமே கோவில், சாணக்கியனை வென்றவன், கூவாத குயில், நீதான் பெண், நீதிக்கு ஒரு பெண், நெஞ்சுக்கு நீதி. பிற: பெண்ணே ஒரு கவிதை(நாடகம்)- குழந்தை இலக்கியக் கொடைகள் : பக்தியை வளர்த்த பாவலர்கள், விவேகானந்தரின் வீர வரலாறு, கவியும் புனைகிறார், கவியரங்குகளிலும் கலந்து கொள்கிறார். **முகவரி :** 137 கண்டனூர் சாலை, காரைக்குடி.

**சுப்ர. பாலன்** (தி. சு. பாலசுப்பிரமணியன்). 11-5-1933. சிறுகதைகளும் கவிதையும் சமைப்பவர். நந்தியாவட்டையும் பவழ மல்லிகையும், ஊமை மனங்கள், கல்கியில் பேட்டிக் கட்டுரையும் படைக்கிறார். அரசுக் கல்லூரிகளில் எழுத்தர்- மேலாளராக இருந்து, இதுபோது தமிழ்நாடு கல்லூரிக் கல்வி இயக்ககத்தில் கண்காணிப்பாளர். **முகவரி :** D. 6. த. நா. அரசு அலுவலர் குடியிருப்பு. ஏ. பி. பத்ரோவ சாலை, சென்னை-78.

**எச் ஆர். சென்ன கிருஷ்ணன் :** 12-1-1935. சேலம். 52 முதல் எழுத்தாளர். இவர்கள், அந்த இனிய நாட்கள், கரைக்கு வராத அலைகள், கோடுகள் இல்லாத கோலம், செவ்வாழை, சந்தன மின்னல், வெள்ளி நிலா, வெளியே இருக்கிறார்கள் போன்றன புதினங்கள். தங்க ரதம் - குறுநாவல், உதிர்ந்த ரோஜா, கன்னியின் காதல் -நாடகங்கள். திரைப்படங்களுக்கும் கதை வசனம் எழுதியுள்ளார். **முகவரி :** 83 பி, மெயின் ரோடு, சாமிநாதபுரம், சேலம்-9.

**ஐ. சண்முகநாதன் :** 19-4-1935. தினத்தந்தி செய்தி ஆசிரியர் ஓவியப் பாவை (சிறுகதை); இதய தாகம், இரு பறவைகள், கண்ணே காஞ்சனா, நெஞ்சத்தில் நீ, பொற்கொடி, வானம் பாடி, வாழ்க்கை ஒரு வானவில். **முகவரி :** 87, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, கீழ்ப்பாக்கம், சென்னை-10; 79. சரவணப் பெருமாள் முதலி சந்து, பிளவர்ஸ் சாலை, சென்னை-84. (661264)

**மார தமிழ்ச்செல்வன் :** 13-7-1935. இலங்கை நுவரெலியா சிறுகதை: அவளொரு புத்தகம், ஒரு தாயின் இதயம், காலத்தின் கண்ணீர், பாரதம் வென்றது. புதினம்: அவளொரு தத்துவம், இறைவன் தந்த மலர்கள், உறவுகள், ஏன் படைத்தாய், ஒரு பாடல் கேட்கிறது, கோயில் இல்லாத தெய்வம், சிவந்த பூக்கள், தென்றலே தூங்கு, துளசி, நீ ஒரு குழந்தை, பெண் எனும் தத்துவம், புனிதக் கரை, மனிதன் தேடுகிறான், மணிப் புறா, மஞ்சள் கொத்து, ஞானம் சிரித்தது, வாழ்க்கையின் வடிவம். பிற: தாகூரின் தத்துவங்கள், காண்டேகரின் கருத்துரைகள், திரு. வி. க. வின் திருவாய் மொழிகள், சரத் சந்திரரின் சிந்தனைகள், அண்ணல் சொன்ன கதைகள், வீட்டுக்கொரு வீரன் (கு. இலக்.); அறிஞர் அண்ணா, தேசியக் கவியின் விடுதலை முழக்கம் (வர) திரைப்படத் துறையிலும் பங்காற்றியுள்ளார்; திரையும் வாழ்வும் - நூல். **முகவரி :** 70, பிருந்தாவன் சாலை (29, கவரைத் தெரு) சென்னை-33.

**அழகாபுரி அழகப்பன் :** 27-4-1937. அமராவதி புதூர் குருகுல உயர்நிலைப் பள்ளி ஆசிரியர். 58 முதல் எழுதுகிறார். சிறு கதைகள் 300, குறு நாவல்கள் 10, நாவல் 2, சிறு கதைகளில் குறிப்பிடத் தக்கன சச்களத்தி, கணங்களும் யுகங்களும். 'சிறு கதைச் செம்மல்' என்ற பட்டம் பெற்றவர். இவர் கதைகளில் செட்டி நாட்டு மண் மணம் வீசும். சில திரைப்படமாகியுள. திரைக்கதை வசனம் எழுதுவதோடு நடித்தும் இயக்கியும் உள்ளார். தெலுங்கு, மலையாளம், ஆங்கிலத்தில் பெயர்க்கப் பட்டும் உள. **முகவரி :** டி. பி. சி. சி, தெரு, காரைக்குடி-1.

**மூவேந்தர் முத்து :** (கோ. தையமுத்து) 11-4-1938. மூவேந்தர் அச்சக உரிமையர். 59 முதல் எழுதி வருகிறார். எழுத்தாளர்களை ஊக்கும் உயர் பண்பும், தமிழறிஞர்களைப் போற்றும் பெற்றியும் மிக்கவர். கதை இலக்கியத்தில் கவனம் கொண்டவர். எழுத்து முத்துக்கள்: மின்னல் பூ, உனக்சாகவே வாழ்கிறேன். தமிழ் விழாக்களில் தவறாமல் எழுந்தருளுவார். பூவழகி பதிப்பகம் நடத்துகிறார் **முகவரி :** 31, சீனிவாசப் பெருமாள் சன்னதித் தெரு, இராயப்பேட்டை, சென்னை-14. (847189)

**வையவன்** (எம். எஸ். பி. முருகேசன்). 24-12-1939. வ. ஆ. வாணியம்பாடி வட்ட வெள்ளக்குட்டை, முதுகலை தமிழ் பயின்று இதுபோது பள்ளிகொண்டா அரசினர் மேனிலைப் பள்ளி ஆசிரியர். இதுவரை 400 சிறுகதைகளும் 3 நாவல்கள் 7 குறுநாவல்கள் படைத்துளார். 'இன்று புதிதாய்ப் பிறந்

தோம்' (தமிழரசின் பரிசு பெற்றது), பாரதத்தின் பெருமைகள் எல்லாம் வெறுமைகள்தானா? இந்த யுகத்தின் நம்பிக்கை வெளிச்சம் பாரதத்தின்மேல் படுமா? என்ற வினாக்களின் உந்துதலால் எழுந்தது செண்பக மரங்கள். 59 முதல் எழுதிவரும் இவர் **முகவரி :** வெள்ளக்குட்டை. வ. ஆ. 635 752.

**பி. எல். ராஜேந்திரன் :** 7-1-1941. பட்டுக்கோட்டை. இலக்குமணன் : பட்டம்மாள். தமிழரசு செய்தி மக்கள் தொடர்புத்துறை மக்கள் தொடர்பு உதவியாளர், 'தமிழரசு' இதழில் உள்ளார். முதல்புதினம் மஞ்சள் புடவை. இதுவரை 32 புதினங்கள் படைத்துளார், நேசம் மறக்கவில்லை நெஞ்சம், நெஞ்சம் ஒன்று நினைவுகள் நான்கு, ஏன் அழுகிறாள் இந்துமதி, மேலே பூமி கீழே வானம். அறிவியல் சிறுவர் வரலாற்று நூல்களும் எழுதியுள்ளார்; பறந்து செல்வோம் வாரீர் (தமிழரசின் பரிசு). **முகவரி :** 31, சீனிவாச பெருமாள் சந்நிதி தெரு, இராயப்பேட்டை, சென்னை-14.

**மன்னார்குடி விசுவநாதன் :** 9-9-1941. தஞ்சை மாவட்ட மன்னை. சிறுகதை பழியும் பாவமும்; நாவல் ஊமைக்குயில். பூங்கதவே தாழ் திறவாய் போன்ற பன்னூல்கள் படைத்து வரும் பாங்கினர். **முகவரி :** 9ஏ. அக்கரை செங்குந்தர் கீழத் தெரு, மன்னார்குடி-614 001.

**பூதலூர் முத்து :** (க. முத்துசாமி) 5-7-1946. தஞ்சைமாவட்ட பூதலூர். தஞ்சை சரபோஜி கல்லூரி மாணவர். புதுவை மாநிலப் பகுதியில் ஆசிரியர். 63 முதல் கதை எழுதி வருகிறார். ஒரு கிளைப் பறவைகள், நல்லவன் (ஏ. வி. எம் தங்கப்பதக்கம் பெற்ற நாடகம்), இதோ ஒரு கற்பு. **முகவரி :** நெட்டப்பாக்கம் 605106.

**ஹம்சா தனகோபால் :** 5-10-1950. சென்னை சௌகார் பேட்டை. ஸ்ரீ கிருஷ்ணாஜி ராவ் ஷிந்தே : ருக்மணி பாய். 66இல் சேலம் நகராட்சி உயர்நிலைப்பள்ளி, 70இல் சாரதா கல்லூரி பி. எசி. இயற்பியல். பொதுநலத் துறையில் எழுத்தராகப் பணியாற்றி, மணத்தின் பின் பணியை விட்டு வீட்டில் வாளா இருந்தபோது, சமூக பலவீனங்களின் உக்கிரம் தாங்காமல் எழுதத்துவங்கினார் 77இல். வேற்று மொழியினராயினும், இயன்ற அளவு இலக்கியம் படைக்கவேணும் என்ற உந்துதல். அழுத்தப்பட்டுக் அடக்கப்பட்டுக் கிடக்கும் பெண்ணுக்கு விழிப்புணர்வு ஊட்ட வேண்டும் என்ற நோக்கமும் உண்டு.

முதற் சிறுகதை 'யாருடைய எவர்சில்வர் கிண்ணம்' 77, குமுதம் முதல் நாவல் 'மன அலை' 78. இதுவரை நூற்றுக்கும் மேலான சிறுகதைகள்; 16 புதினங்கள். ஆண்டவனையும் ஆன்மாவையும் வைத்து அருமையான புதுக்கவிதைகள் புனைந்துளார். நூல் 'உன்னோடு நான்...என்னோடு நீ'. சிறுவர்கட்காகக் கதையும் கவிதையும் கூட எழுதியுள்ளார்.

இவர் கதைகள் சேலத்து மண் வாசனை கொண்டவை, பெண்களின் பிரச்சனைகளை மையமாகக் கொண்டவை. அடிச்சுவடுகள், அன்றொரு நாள், எண்ணத் தேரில் அவள், தெவத்தா - பரபரப்பாய்ப் பேசப்படும் புதினங்கள். **தெவத்தா, பனிப்புயல்** இரண்டும், சேலத்துத் தமிழில் வெள்ளாளக் கவுண்டர்களின் வாழ்வு நடப்புகளை நவில்வது. **அடிச்சுவடிகள்** ஒரு மருத்துவமனையில் தொடங்கி அங்கு அடைபட்டிருக்கும் மனிதர்களின் சுக துக்கங்கள், வாழ்க்கை அவலங்கள், டாக்டர் நர்சுகளின் மன நிலை காட்டும். **அன்றொரு நாள்:** முறை தவறிய பிறப்பின் விளைவான ஒரு நல்முத்து-இளம்பெண், எப்படியெல்லாம் பணம் படைத்தோர்முன் பகடையாய் உருட்டப்படுகிறாள் என்பதும், வாழ்க்கை அவளுக்கு மறுக்கப்படும் கொடுமையும் கூறுவது **எண்ணத் தேரில் அவள்:** நல்ல குலத்தில் பிறந்தும் சந்தர்ப்ப சூழல் காரணமாய் சிகப்பு விளக்காய் மாறும் பெண்மை-ஒவ்வொரு கணமும் தீக்குளிக்கும் பெண்மையின் மென்மையும் சோகமும் சொல்வது.

'பெண் தனக்குத்தானே விலங்காகிப் போகும் கொடுமை. உலக வரலாற்றில் அரசியலில் பெரும் பதவி வகித்துத் தன் பொன்னுடல் இரத்தம் சிந்திய பெண்மணி ஆண்ட பாரத பூமியில், இன்னமும் பெண்மை, சிகப்பு விளக்குகளில் சிறைப்பட்டுத்தான் கிடக்கிறது! பெண்விடுதலை என்பது, அவள் வெளியே சென்று உழைத்து ஊதியம் பெற்று வருவதல்ல; அவளின் ஆன்ம விடுதலையே உண்மை விடுதலை. அரசியலிலும் பெண்களுக்குப் பிரதிநித்துவம் அளிக்கப்படல் வேண்டும்' என்ற எண்ணத்தர்.

இவர் ஒரு **மராத்திய மங்கை;** மராத்தியைத் தாய்மொழியாகக் கொண்டு தமிழில் எழுதும் **முதல்** எழுத்தாளர்! மணம் **30-6-1977**. கணவர் செங்குந்த முதலியார் மரபினைச் சேர்ந்த சேலம் தமிழர்! காதல் மணம் அல்ல, வாழ்க்கை ஒப்பந்தம்; சிறு வயது முதல் அறிந்த குடும்பம். மக்கள் பூர்ணிமா, ராஜ்கணேஷ். **முகவரி:** 'ஜனனி வில்லா' 6, பாரத வங்கி அலுவலர் குடியிருப்பு. திருவொற்றியூர். சென்னை-19 (553990)

**பட்டுக்கோட்டை பிரபாகர்**: 30-7-1951. ராதாகிருஷ்ணன்: சந்திரா. அரசினர் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி இறுதி 72, திருச்சி வளவர் கல்லூரி பி. ஏ. பொருளாதாரம் 74, மதுரைக் காமராஜ் எம். ஏ. பொருளியல் 79. எழுத்துலகிற்கு வந்த ஆண்டு 77. முதற் கதை விகடனில்.

ஆனந்த விகடன் சிறுகதைப் போட்டியில் பரிசு, பல சமுதாய அமைப்புகளின் பாரட்டுக்கள். தொலைக்காட்சியில் நாடகம் ஒளி பரப்பாகியுள்ளது. ஒரு நாவல் திரைப்பட மாகிறது.

பொழுது போக்காக எழுதத் தொடங்கி இன்று பகுதி நேரப் பணியாகிவிட்டது. இதுவரை 150 சிறுகதைகள், 60 நாவல்கள். பேரும் புகழும் தந்தவை: வா, தொடமுடியாத உயரங்கள் ஆகாயத்தில் ஆரம்பம், பிரியங்களுடன், நாளை, நீ மட்டும் நிழலோடு, தொட்டால் தொடரும், இரவு பத்து, (கவிதை-திகில் நடையது). 'எழுதுவதில் சுவாரசியம் உள்ளது, புகழ் என்பது எல்லா மனிதனுக்கும் பிடித்த விஷயம்; எனக்கும் பிடிக்கிறது, எனவே எழுதுகிறேன்' என்கிறார். 83இல் மணம், மனைவி சாந்தி பி. எசி; மகள் ஸ்வர்ண ரம்யா **முகவரி**: 30, தலையாரித் தெரு, பட்டுக்கோட்டை-614 691 (261).

**பொன்னீலன்** : (பி. எஸ். கே பக்தவத்சலன்). 15-12-1960. இவர் படைப்பில் கரிசல் (நாவல்), (76இல் தமிழரசின் முதற் பரிசு), அக்னி நட்சத்திரம் (நாடகம்) இரண்டும் இரு சுடர்கள்.

பிறநூல்கள்: ஊற்றில் மலர்ந்தது, கொள்ளைக்காரர்கள். தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் 5000 பரிசினை இவரது 'மார்க்சீய அழகியலின் அடிப்படை 7' 85இல் பெற்றது. ஆசிரிய ரான இவர் **முகவரி**; மணிக்கட்டிப் பொட்டல், குழித்துறை, ஈத்தாமொழி (வழி). குமரி மாவட்டம்.

## 102. திறனாய்வுத் தமிழ்

திறனாய்வு ஓர் அரிய கலை படைப்புக்கும் சுவைப்புக்கும் பாலமாக அமைவது; அறிவுக்கும் உணர்வுக்கும் பிறந்த பிள்ளை. இலக்கியக் கடலில் மூச்சடக்கி மூழ்கி முத்தெடுக்கும் அரு முயற்சி. 'பரந்து விரிந்து கிடக்கும் இலக்கிய உலகினைக் காண முற்படும் ஒரு நீண்ட நெடும் பயணம்.' (எஸ். எம். ஸ்கிரிபர்). ,முயற்சி உண்மை இருவருக்கும் பிறந்த முதல் மகள் தலை

மகள்; நடுவு நிலைச் செவிலியால், மெய்யறிவு எனும் மாளிகையில் வளர்க்கப்பெற்றவள், கற்பனை என்பவனுக்கு துணைவியாக ஆனவள்' (டாக்டர் ஜான்சன்). சென்ற நூற்றாண்டினைத் திறனாய்வுக்காலம் என்றால், இந்த நூற்றாண்டினைத் திறனாய்வுப் பொற்காலம் எனலாம்.

ஒரு காசின் பூவும் தலையும் போலே, இலக்கியத்தைத் துய்க்கவும் துணை செய்யும், படைக்கவும் துணைபுரியும் இக்கலை மேலை நாட்டினின்று போந்ததே யாயினும். அங்கு வளர்ந்த அளவுக்கு இங்கு (25 விழுக்காடு கூட, வளரவில்லை என்றே இயப்ப வேண்டியுளது. அங்குத் திறனாய்வுக்குத் திறனாய்வும் வந்துவிட்டது. இங்கோ அரிச்சுவடியில்தான் கிடக்கிறோம்!

மேலைநாடுகளில் மிக முன்னேறிப் போய்க்கொண்டே இருக்கும்போது, நாம் இன்னும் ஹட்சனையும், ஐ. ஏ. ரிச்சர்ஸையுமே கட்டிக்கொண்டு அழுதுகொண்டிருக்கிறோம் உடனுக்குடன் சுடச்சுட படிப்பதும் இல்லை, பெயர்த்தளிப்பதும் இலலை. ஹட்சன் கூட, ஓர் இலக்கிய வரலாற்று ஆசிரியரே தவிர திறனாய்வாளர் அல்லவே!

ஏ. சி பிராட்லி ஒரு biographical critic, ஐ. ஏ. ரிச்சர்ட்ஸ் ஒரு Architypal critic புரூக்ஸ் ஒரு New critic. சிக்மண்ட் பிராய்ட் ஒரு Psychological critic மார்க்ஸ் ஒரு Soicaloical critic. நாம் இங்கே இந்த அளவில் ஓரளவு தொட்டுக்கொண்டு நிற்கிறோம், அங்கே ஹெரால்ட்புளும் பால் டிமான் போல் வாரின் Structuralism. Post Structuralism எல்லாம் தாண்டி இப்போது Deconstriction Theory வரை போய்க் கொண்டிருக்கின்றனர்.

ஒன்று ஒருவரைப் பின்பற்றின், முழுமையாகப் பின்பற்ற வேணும். அரைகுறை -- அரைக்கிணறு தாண்டுதல், ஆபத்தாக வன்றோ முடியும்! ஒன்று தமிழ் மருத்துவத்தை மேற்கொள்ள வேண்டும்; அல்லது ஆங்கில மருந்தை முழுவதும் பின்பற்ற வேணும். ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் என இரண்டையும் ஏற்பின், உயிருக்கன்றோ இறுதி நேரும்!

தொடக்கத்தில் புதுத்துறை என்ற முறையில் அயல் நிலையினைப் பின்பற்றினும், நாளாவட்டத்தில் அதன் அடிப்படை போக்குகளைப் புரிந்து, நம் இலக்கண இலக்கியங்களை அந் நோக்கில் ஆய்ந்து நமக்கென அமைந்த திறனாய்வு நெறிகள் கண்டு தொகுத்து வகைப்படுத்த வேண்டமா?

நிலம் எல்லாம் ஒன்றாயினும், தட்பவெப்ப நிலைக்கேற்ப நம்மண்ணுக்கேற்ற மேலுரம் அடியுரம் இடாது, மேலை நாட்டு முறையிலான சல்பேட்டும் பாஸ்பேட்டும் பொட்டாசும் போட்டு மகசூலைப் பெருக்குகின்றோமே தவிர, அதில் ஒரு சத்துருசி ஏதும் இல்லை. அளவு (quantity) கூடுகிறதே தவிர, தரம் (quality) திறமில்லை. இப்படிக் கண்ட கண்ட உரங் களைப் போட்டு கண்டுமுதல் செய்து காசு வருகிறதே தவிர, கூடவே கண்ட நோய்களும் மண்டுகின்றன!

அதுபோன்றே நம் மரபு-பண்பு வேறு, மேலை மரபு-பண்பு வேறு. அதை வைத்துக்கொண்டு இதை அளப்பது, அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பதாகும். மேலை நாட்டவர் தொடர்பால் நம் வாழ்வும் சிந்தனையும் மாறி இருப்பினும், சிறுகதை நாவல் வடிவங்கள் அவர்கள் தந்தனவாயினும், உள்ளடக்கமும் ஊடகமும் வேறல்லவா? எனவே ஓரளவு அந்த அளவுகோல் பொருந்தினும் நமக்கே உரிய நம் திறனாய்வு நெறிகளை நாம் சமைத்திடல் வேண்டாவா?

ஆங்கிலம் அறவே அறியாமையால் விளைந்த நன்மை அறிந்தாலும் அந்நெறி பற்றாது நம் மரபு நெறி கொண்டு ஆயும் சிலர் நம்மிடையே உளர். முதலில் அமைபவர் ம.பொ.சி. இளங்கோ பாரதி வள்ளலார் போன்றாரை இவர் அணுகியுள்ள முறைமை அலசியுள்ள வகையை உவந்தேத்தவே வேண்டும். இவரின் திறனாய்வு கருதுகோள்களையும் கோட் பாடுகளையும், அணுகுமுறை ஆயும் போக்குகளைத் திரட்டி னாலே, தமிழ்த் திறனாய்வின் தனிநெறி தென்படுமே! நமக்கு வழிகாட்டியாக நன்கமையுமே! இவரின் நூல்களையெல்லாம் படித்துத் தொகுப்பின், பெருஞ் செயலாகும்; ஆய்வுமாணவர் கள் உடன் செய்வார்களாக!

புலவர் ந. இராமநாதன் (கவிஞரும் காதலும்), ம.ரா.போ. குருசாமி,ப. அருணாசலம், பா. உதயகுமார் (பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள்), கு கோதண்டபாணிப் பிள்ளை (கம்பரும் மெய்ப்பாட்டியலும்), த.வே. வீராசாமி (தமிழில் சமூக நாவல்கள்), போன்றாரை இங்கே போற்ற வேணும். டாக்டர் வ.சுப. மாணிக்கனார் இதில் உறுதியாக நிலைக் கிறார். இவர் ஆய்வு முறைகளையும்-விரிவாக ஆராய வேணும்; அப்படிச் செய்யின், தமிழ்த் திறனாய்வுத் தனிமுறை கள் தென்படும்-தெளிவு பெறும்.

இதுவரை வந்த நூல்கள் யாவும் மேலைத் திறனாய்வுக் கொள்கைகளை அப்படியே கூறி அவற்றைத் தமிழில் பொருத்திக் காட்டி, காட்டுகள் தரும் அளவிலேதான் அமைந்துள. டாக்டர் கா. மீனாட்சி சுந்தரனார் 5ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலரில் (பக். 323—27) 'பழந்தமிழரின் சில திறனாய்வு நெறிகள்' என்ற அருமையான கட்டுரையில், நம் நெறி காணும் கடமை சுட்டி சிலவழியும் காட்டுகிறார்.

நேற்றைய மொழிகட்கெல்லாம் திறனறி நெறிகள் இருக்கும் போழ்து, கல் தோன்றி...மூத்த மொழியில், அதற்கென ஆய்வு நெறிகள் இல்லாமலா இருக்கும். அவற்றைக் கண்டு வகுத்துத் தொகுத்து நூல்களாக வெளியிட வேணும். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இவ்வகையில் தந்தது 'இளங்கோவின் இலக்கிய உத்திகள்.'

நம் பாட்டன் தொல்காப்பியன் சுட்டும் 10 குற்றம் (சூ 663), உத்திகள் 32 (சூ. 665), உலகியல் வழக்கு, செய்யுள் வழக்கு; வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் (சூ. 649) போன்றனவெல்லாம் என்னவாம்? வள்ளுவர் விளம்பும் 'அறிதொறும் அறியாமை கண்டற்றால்', 'நவில் தொறும் நூல் நயம்'; சிலம்பின் அரங்கேற்றுக் காதை கருத்துக்கள்; கம்பனின் சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி; பாரதியின் 'உள்ளத்தில் ஒளியுண்டாயின்' என்பன திறனாய்வுக்கும் பொருந்தும் தூநெறிகள் தாமே!

நம் பண்டை உரையாசிரியர்கள் மட்டும் என்ன? அவர்களும் ஒரு வகையில் திறனிகள் தாமே. தற்போதையர் விளக்க முறைத் திறனிகள் என்றால், இவர்கள் விதிமுறை-நலங்காண் திறனிகள்! இவர்கள் திறனிகள் அல்லர் என் வையாபுரியாரும் சி. சு. செல்லப்பா போன்றாரும் புகலினும், இவர்களும் சில பல நல்ல நெறிகள் தந்து சென்றுள்ளமையும் சிந்திக்க வேண்டும். மூல நூலாசிரியர்களிடம் குற்றங்காணாமை அமைதி கூறுதல் போன்றதால், நாம் புரிந்து கொள்வது ஒன்றுண்டு; மூல நூலாசிரியன் தவறு செய்யமாட்டான் என்ற உறுதியுடன் இவர்கள் வரைகின்றனர்; அப்போதுதான் தமக்குத் தெரியாதன புரியாதனவற்றையும் நூலாசிரியன் குறையெனக் குறிக்கார்; ஆசிரியன் உள்ளத்தை உணர முனைவர்.

இதனாற்றான் 'பெரியோர் பாட்டில் பிழை சொன்னேனோ' என மனுமுறை கண்டவாசகத்தில் மொழிகிறார் வள்ளலார். அவர் காலம்வரை இத்திண்ணிய எண்ணம் இருந்துள்ளமை எண்ண வேணும்,

மேலை நாடுகளில் சேக்சுபியரைப் போற்றும் நூல்கள் பல என்றால், சாடும் நூல்களும் சில வந்துள. அப்படி அங்குத் திறனாய்வு திளைத்துளது; இங்கோ முன்பிருந்த ஒரு கருத்தையோ காலத்தையோ மறுதலித்து மொழியின், அவர்களை அறவே வெறுக்கும் நிலை விளைகிறது. வையாபுரியாரை வைரியாகவும், தெ.பொ.மீயை வடமொழி வருடியாகவும் பகைத்து ஒதுக்கியமை இங்கே நினைக்க வேண்டும். நாம் இன்னும் திறனாய்வுத் திறன்-உரன் பெறவில்லை!

பேராசிரியர்கள் அணியில், ஆ.முத்துசிவன் **முன்னோடியாக** அமைகிறார். கவிதையும் வாழ்க்கையும் (47). **வழிகோலியவர்** அ. ச. ஞானசம்பந்தன் 'இலக்கியக் கலை' வாயிலாக. **நெறிப்படுத்தியவர்** மு.வ. தம் இலக்கியத் திறன், மரபு, ஆராய்ச்சி மூன்றின் மூலம். **தொடர்ந்தவர்கள்** ப கோதண்டராமன் (இலக்கியமும் விமர்சனமும்), ஜே. முத்து வீராசாமி (இலக்கியச் செவ்வி), ந. சுப்பு ரெட்டியார் (கவிதையனுபவம்), தா.ஏ. ஞானமூர்த்தி (இலக்கியத் திறனாய்வியல்), இ. மறைமலை (இலக்கியத் திறனாய்வு ஓர் அறிமுகம்), சு. பாலச்சந்திரன் (இலக்கியத் திறனாய்வு), ஜான் சாமுவேல் (இலக்கியத் திறனாய்வு, திறனாய்வுச் சிந்தனைகள்). ந. சஞ்சீவி (இலக்கிய இயல் அ, ஆ), க. கைலாசபதி (இலக்கியமும் திறனாய்வும், கவிதை நயம்) இருவரும் தனித்துத் திகழ்கின்றனர்.

மற்றோர் அணியில். புதுமைப்பித்தன் (நமது இலக்கியம்), க.நா.சு. (விமர்சனக் கலை), சிதம்பர ரகுநாதன் (இலக்கிய விமர்சனம்), சி.சு. செல்லப்பா (தமிழ் இலக்கிய விமர்சனம்), வல்லிக்கண்ணன், தா.வே. வீரசாமி, சி. கனகசபாபதி, தி.க. சிவசங்கரன், சிட்டி-சிவபாத சுந்தரம், எழில் முதல்வன், செந்தில்நாதன், தமிழவன், எம். எஸ். தியாகராஜன், சு. வேங்கடராமன், மோகன்,வெங்கட்சாமி நாதன் போன்றார் பொலிகின்றனர்.

தமிழகத் திறனாய்வுத் திலகமாகத் திகழ்ந்தவர் வி.ஆர்.எம் செட்டியார். திறனாய்வர் பலரை ஊக்கி உருவாக்கிய சான்றோர் ரா. ஸ்ரீ. தேசிகன், இருவரும் இரு சுடர்கள்!

**கலாநிதி கைலாசபதி:** ஈழ இலக்கிய ஆய்வரில் தலைமை நிலையர். மார்க்சீய விமர்சகர். அறுபதுகளில் தமிழுலகில் புதிய பார்வையையும் பரபரப்பையும் ஏற்படுத்தியவர். தமிழ்த் துறையினரும் மாணாக்கரும் ஏத்தும் ஏற்றத்தர். முற்போக்கின் முதல்வர், படைப்பாளி படிப்பாளிகட்கும் ஆதர்ச

விமர்சகர். சமுதாய வரலாற்றுப் பார்வையுடன் படைப்பு களைப் பார்த்தவர். சிலர் ஈழத்தோடு இருந்து விட்டனர், வேறு சிலர் தமிழகத்தோடு நின்றுவிட்டனர்; இவர் ஒருவரே ஈழம் தமிழகம் இரண்டிலும் பேர் சொன்னவர், சுவடு பதித் தவர்.

இவரின் ஆய்வின் இரு கால்களாக அமைவன வரலாற்று (historical) ஒப்பியல் (Comparative) நெறிகள். வரலாற்றுப் பொருள் முதல்வாதப் போக்கில் அணுகுகிறார். இவரின் இன்னொரு சிறப்பு பிற விமர்சகர் யாவரும் சமகாலத்தை ஆராய்வதோடு நின்றுவிட, இவர் மட்டும் முற்கால-தற்கால இருமுனை இலக்கியம் இரண்டையும் ஆராய்கிறார். மற்றொரு பெருமை யாதெனில் ஆங்கிலக் கல்வி (பர்மிங்ஹாம் பல்கலைக் கழகத்தில் ஜார்ஜ் தாம்சனிடம் பயின்றவர்; டாக்டர் பட்டம் பெற்றவர்) பயின்று தமிழ்ப் பேராசிரியர் பகுதியினின்று இநதப் பணிக்கு வந்து, பண்டிதர் - பாமர இலக்கிய விமர்சகர் இருவரும் ஒப்புமாறு ஒளிர்கிறார். மேனாட்டுத் திறனாய்வின் தாக்கம் மேவுகிறது.

Tamil Heroic Poetry: முனைவர் பட்டத்துக்குரிய பொருள். சங்க காலத்தை வீர யுகம் என்கிறார்; சங்கப் பாக்களை, கிரேக்க வீரயுகப் பாடல்களுடன் ஒப்பிட்டு உயர்வு உணர்த்துகிறார்; நாட்டுப் பாடல்களின் நல்லியல்புகள் நற்றுணை புரிவதைப் புலப்படுத்துகிறார். சங்க இலக்கியச் சால்பும் சங்க காலச் சமுதாயமும் மீண்டும் நமக்கு நன்கு படம் பிடித்துக் காட்டப்படுகிறது. தமிழ் ஆய்வு நூல்களில் ஒரு பெரும் தலைமை பெறும் இந் நூலின் செல்வாக்கும் பரபரப்பும் இன்றைய நிலைபேற்றுக்குக் கரணியம்.

**ஒப்பியல் இலக்கியம்:** ஒரு முன்னோடி முதல் நூல். கவிஞர் களின் கனவுகளை ஒப்பிட்டு, சித்தர் சிந்தனைகளை சீனத்துத் தாவோயிகளுடன் இணைத்துக் காட்டி, பாரதியை கீட்ஸ் ஷெல்லியுடன் ஒருங்கு வைத்து ஆராய்கிறது. **இரு மகாகவிகள்** பாரதி தாகூர் ஒத்தமைவு (Parale ll study), ஒற்றுமை உறழ்வு ஆய்வு. **நாவல் இலக்கியம்** இவ்விலக்கியம் எழ சமுதாய நிலை களே கரணியம் என வரலாற்று நோக்கில் ஆராய்கிறது; தற் கால இலக்கியத்துள் நாவலையே மேவுகிறார்.

இவரின் தனித்துவத்துக்குக் கரணியம் தமிழ்த் துறை யினின்று இக் களத்திற்கு வந்தது, அதிலும் மார்க்சீயப் பார்வை யுடன் மிளிர்வது. அத்தோடு மரபு ஆராய்ச்சியாளராகவும்

புதுமை விமர்சனப் பாங்கினராகவும் ஒரு சேர அமைவது. ஈழ முற்போக்குச் சிந்தனை + மார்க்சீய உணர்வு = கைலாசபதி எனலாம். இதுவே இவரின் தனித்துவத்துவம் தனிப்புகழ் தனி வெற்றிக்கும் வழி. தமிழ்த் திறனாய்வுலகில் பெரிய கோவில் கோபுரமாகப் பிறங்குகிறார். தலையாய நிலையாய உலையா ஒண்புகழுக்கு உரியவராகி ஒளிர்கிறார்.

**நா. வானமாமலை :** அனைவரின் மதிப்பையும் துதிப்பையும் பெற்ற தமிழகத்தின் தலைசிறந்த தத்துவ ஆய்வர். மார்க்சீய அறிஞர், 'ஆராய்ச்சி' காலாண்டு இதழ், அறிஞர் உலகின் பாராட்டினைப் பெற்றது. அப்படி ஆய்வு நெறியில் புதுமைகள் புகுத்தியவர். அணுகுமுறை அலாதியானது. 35 ஆண்டுகள் தமிழின் பல் துறைகளில் பாட்டை போட்டவர்.

இவரது ஆய்வு முறை தொல்லியல் தொல் பொருள் வரலாறு, மானுடவியல், சமூகவியல், அறிவியல் அத்துணையும் கொண்டது. சிறிய ஒன்றாயினும் அதற்கு வேண்டிய அனைத்தும் கொண்டு முழுமையாக ஆராயும் அருமையது. பிற விமர்சகர்களிடமிருந்து இந்த வகையில் வேறுபட்டு விளங்குகிறார். 'நா. வா. வின் விமர்சனம் விஞ்ஞான சோஷலிசத் தத்துவம் மற்றும் முறையியலை நிலைபெறக் கொண்டது. இதுதான் இவரது வெற்றிக்குத் திறவு கோலாக விளங்குகிறது' என்ற தி.க. சிவசங்கரனின் கூற்று முக்காலும் உண்மை. தி.சு. நடராசனும் 'நா. வா. வின் ஆராய்ச்சியின் தெளிவுக்கும் வெற்றிக்கும் அடிப்படைக் காரணம், விஞ்ஞான பூர்வமான இயக்கவியல் வாதத்தைக் கொண்ட அவரது முறையியலேயாகும்' என அறுதியிடுகிறார்.

இவரது திறனாய்வு, வழிகாட்டியாகவும் முன்மாதிரியாகவும் அமையத் தக்கது. இவரது சாதனை: கலை இலக்கிய முற்போக்குக் கழக வழியே அருமையான படைப்பாளிகளையும் அற்புத ஆய்வாளர்களையும் உருவாக்கித் தோழமையுணர்வுடன் ஊக்கியமை. முற்போக்கு எழுத்தாளர்கள் தடுமாறிய போதெல்லாம் கைகொடுத்து வழி நடத்தியுள்ளார். தி.சு. நடராசன், எஸ். தோத்தாத்ரி, பக்தவச்சலன், ஆ. சிவசுப்பிரமணியன், வெ. கிருட்டிணமூர்த்தி போன்ற வாரிசுகளை வரிசைகளாக்கினார். முற்போக்குப் படைப்புகட்கு எதிராக விமர்சனத் தாக்குதல்கள் வந்த போதெல்லாம் முன்னின்று சமாளித்தார். புதுக்கவிதைப் புறப்பாட்டின்போது, புதுக் கவிதையின் உள்ளடக்கம் சமுதாயம் சார்ந்ததாக அமைய

வேணும் என 70லேயே எழுதி ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி, புதுக்கவிதையாளர் பலர் புறப்படக் காரணமாக நின்றார்.

தமிழ்த் திறனாய்வுலகில் மார்க்சீயப் பார்வையை முன் வைத்து எதார்த்தவியலை வற்புறுத்திச் சில மரபுகளை வகுத்துப் புதிய திருப்பங்களை உண்டாக்கி 'விஞ்ஞான சோஷலிச விமர்சகராக' விமர்சன மலையாக வீறார்ந்து நின்று நிலைபெற்றவர் நா. வா. என்றால் மிகையாகாது. ஆராய்ச்சி இதழ் மூலம் ஆராய்ச்சிப் பட்டாளத்தை ஆக்கியவர். நூற்றுக் கணக்கான ஆய்வுக் கட்டுரைகளும், நற்றூண்கள் போலே நல்ல விமர்சக நூற்களும் தந்து திறனாய்வுலகில் தன்னிகரற்று விளங்கித் தனியிடம் வகிப்பவர்.

**க. நா. சுப்பிரமணியம்**: இளமை முதலே திறனாய்வுத் திறனும் விமர்சனக் கூர்மையும் கொண்டவர். ஐம்பதுகளில் விமர்சன விடியல் செய்தவர். 'இலக்கிய வட்டம்', 'சூறாவளி'' 'சத்திரோதயம்', 'ராமபாணம்' என்ற நான்கு இதழ்களின் ஆசிரியராக இருந்தவர். இப்போதும் ஞானரதம் சிறப்பாசிரியர்.

நவீன இலக்கியத் தர நிர்ணயத்தை ஒட்டியது இவர் விமர்சனம். 'உன்னத இலக்கியம் பூரணத்துவத்தை நோக்கி நம்மை இட்டுச் செல்லும். ஆழமும் மனிதத்துவமும் தன்னகத்தே கொண்டதே உயர் இலக்கியம். படைப்பாளனின் தனித்துவம் படைப்பில் வெளிப்படும்' போன்றன இவரின் விமர்சன வரைவுகள் இவரது திறனாய்வு அழகியல் ரசனையை அடியொற்றியது; வடிவவியல் அணுகு முறையது. மனப்பதிவு மேவு கருத்துரை ரசனை கொண்டது.

நூல் பற்றிய தன் தனி அனுபவம் பாதிப்பு இவற்றிலிருந்து பிறப்பது இவரது திறனாய்வு. தன் துய்ப்பையே அளவு கோலாகக் கொண்டது. வாசகர் பற்றிக் கவலைப்படுவ தில்லை, ரசனைக்குச் சான்று காட்ட விழைவதும் இல்லை. பேரிலக்கியங்களைப் பயின்று இலக்கிய இயல்புகளை மனத் தளவே உணர்ந்து கொள்வதே சரியான முறையான வழி என்பது இவரின் திடமான கருத்து.

சிற்சிலபோது இலக்கியப் பரிந்துரையாளராக ஆகிவிடுகிறார் (காட்டு: படித்திருக்கிறீர்களா? உலகச் சிறந்த நாவலாசிரி யர்கள்). தற்காலப் புத்திலக்கியத்துக்குக் கணிசமான பணி ஆற்றியவர்—இன்றும் ஆற்றிவருபவர். என்றாலும் ஓர் உறுதி நிலை (Steadiness) இன்மையால், படைப்புகளைத் திறனாய்ந்து

அதற்கேற்பப் படைப்பாளிகளின் தரம் நிர்ணயிக்கும் போக்கு டையவர். அந்த நிர்ணயப் பட்டியல் அடிக்கடிமாறும்—விருப்பு வெறுப்பு மேவும்—மனநிலைக்கு (moods) ஏற்ப, இதனால் எதிர்ப்புகள் எப்போதும் ஏற்பட்டு, விமர்சன விளைவுகள் ஏற்படவில்லை!

இவரின் விமர்சன வாரிசு நகுலன். நாற்பதாண்டு நற்பணி கட்குப் பின்னர் சாகித்ய அகாதமி விருது பெற்றார். இற்றை நாள் 'விமர்சன துருவாசர்' என விளம்பலாம்.

**சி. சு. செல்லப்பா:** ரசனை முறைத் திறனாய்வர். ரசனை யும் முருகியலும் இவரின் இரு கண்கள். தம் அனுபவத்தை வாசகர்களையும் காண வைக்கிறார். இலக்கியத்திலிருந்தே சான்றுகளைக் காட்டுகின்றார். வெறும் கருத்துரையாகக் கூறாமல் சான்று காட்டுவது இவரின் தனிச் சிறப்பு. இவரது ஆய்வு பகுப்பு முறைத் திறனாய்வின் பாற்பட்டது; இதனை 'ஆய்வு முறை விமர்சனம்' என்கிறார். இது அமெரிக்காவி லிருந்து வந்த நவீன விமர்சனத்திற்பாற்பட்டது. இலக் கியத்தை இலக்கியமாக - இலக்கியத்துக்காகப் பார்க்கும் பான்மையது. இற்றை நாளில் செல்வாக்கு இழந்துவரும் ஒன்று.

இவரிடம் முதன்மை பெறுவன இலக்கிய அம்சங்களே! சமுதாயம் உளவியல் போன்ற இரண்டாம் தன்மையனவே. இலக்கியத் திறனாய்வு வெறும் தத்துவத் தகவல்களாகவோ அறிவுத்துறை ஆய்வாகவோ அல்லாமல், இலக்கியத் தகவல் களாக கலைத் துறை ஆய்வாக இருக்கவேண்டும் என்பது இவர் கருத்து.

உருவம் கட்டமைப்பு உத்திக்கே முக்கியத்துவம் தரு கிறார்; உள்ளடக்கம் பின்னிடுகிறது. இதனை இவருடைய புதுக்கவிதை பற்றிய கட்டுரைகள் புலப்படுத்துகின்றன. ஆனால் ஆன்மீக உள்ளடக்கத்தை மட்டும் ஏற்கிறார்; இதற்கு இவரது பழமை நாட்டம் காரணம்.

அடிப்படை மதிப்பு ஒன்றை உள்ளடக்கமாகக் கொண்ட இலக்கியமே உயர்ந்தது வாழும்; பிற எல்லாம் பொன்றியே போகும் என்பது இவரது அசைக்க முடியாத எண்ணம். இலக்கிய நயனே (Art for Art's sake) இவரது நாட்டம், பயன் தேட்டம் பின்னிடுகிறது.

இவருடைய சில கொள்கைகள்: ரசனையின் மூலவர் வ.வே.சு. ஐயரே; மேலை நாட்டிலிருந்துதான் தமிழில் திறனாய்வு வந்தேறியுள்ளது; வ.வே.சு. ஐயருக்கு முன் தமிழில் திறனாய்வே இல்லை; தொல்காப்பியரோ உரையாசிரியர்களோ திறனாய்வுக்கு வழிவகுக்கவில்லை. அவர்கள் வகுத்த முறையினின்று திறனாய்வு பிறக்கவுமில்லை!

இவரின் அணுகுமுறை வடிவவியல் (Formalistic approach) வகையது (டி. கே. சி, க. நா. சு. வுடன் இந்தவகையில் ஒத்துளார்). இவர் திறனாய்வைத் தொடர்ந்து செய்ய வில்லை; தொட்டு விட்டுவிடுகிறார். அங்கொன்றும் இங்கொன்றுமாகக் குறிப்பிடுவதோடு சரி அன்றியும் இவரது விமர்சனம் அலசல் (analytical) வகையது. பிராய்டிசப் பாங்கினது. நுணுக்கமானது. தம் அளவில் கனிந்தே நிற்கிறார். சி. கனகசபாபதி கழறுமாப் போலே 'இவருடைய பகுப்பாய்வுக் குள்ளே அசாதாரண வாசகர்களும் திணறி விடுகிறார்கள்; சாதாரண வாசகர்கள் மூச்சடைத்துப் போகிறார்கள்' என்பது முற்றிலும் உண்மை.

இவரது திறனாய்வுக் கொடைகள்: 'தமிழில் இலக்கிய விமர்சனம்' 'தமிழ்ச் சிறு கதை பிறக்கிறது' எழுத்து இதழ் மூலம் திறனாய்வு இயக்கம் புரிந்தார். 'அகநோக்கு' என்ற கருத்துக்களைக் கற்பித்தவர்.

**தொ. மு. சி. ரகுநாதன்;** குறிப்பிட்ட காலகட்டம் வரை விமர்சனம் புரிந்து பின் மௌனமாகி விட்டவர்! பெரும் இடை வெளிக்குப் பின் மீண்டும் திறனாய வந்த தீரர். 30 ஆண்டு இடைவெளி என்றாலும் தரமான திறமான இலக்கிய விமாசகர் என்ற சுவடு பதித்தவர் என்பதை யாரே மறுக்க இயலும், எவரே மறக்க முடியும்? இவரது 'இலக்கிய விமர்சனம் என்ற நூல் அந்த நாளில் வெளிப்படுத்திய சிந்தனை உந்துதல்களும் கருத்துத் தாக்கமும் பெரிது. முத்திரை பதித்தது. இந்நூல் வெ.ட்கட்சாமிநாதனையும் விமர்சனம் எழுதத் தூண்டிய ஆற்றலது.

எழுத்தில் சத்தியமும் நேர்மையும் வேண்டும்; யதார்த்த மான கதை அமைப்பு வேணும் இவை இவரது கொள்கைகள். சமூகச் சார்பில் இவரது சிந்தனை மையம் கொள்ளும், எழுத்தை ஜீவித்தின் மருங்கே வைத்துப் பார்ப்பவர். பாரதியும் ஷெல்லியும், பாரதியார் காலமும் கருத்தும், இளங்கோ வடிகள் யார் மூன்றும் இவரது திறனாய்வுக்குக் கட்டியங் கூறும்

பெட்டகங்கள். சோவியத் நாடு அலுவலகத்தில் தற்போது பணிபுரிகிறார்.

**சோ. சிவபாத சுந்தரம்:** 27-8-1912. யாழ்ப்பாணம் பக்கல் கரம்பன் சோமசுந்தரம் பிள்ளை: கதிராயித் தேவி. கொழும்புப் பல்கலைக் கல்லூரியில் Jr. Sr. Cambridge; 33இல் பி.ஏ. (யாழ்ப்பாணம்). 38-42 ஈழகேசரி ஆசிரியர். இங்கத்திய செய்திகளை இலங்கையில் தெரிய எழுதினார். 42இல் சிலோன் ரேடியோ; 47-52 லண்டன் பி.பி.சி; தமிழோசை தொடங்கியவர். 52இல் லிவர் பிரதர்ஸ் சிலோன் விளம்பர அலுவலர். இலக்கிய ஈடுபாட்டால் மீண்டும் இந்தியா வந்தார்.

முதல் நண்பர் கல்கி; கவிமணி, டி.கே.சி, ராஜாஜியுடன் நெருங்கிய பழக்கம். 41இல் மணிக்கொடி 'குழு' என இனங் கண்டு இயம்பியவர். புதுமைப்பித்தன், கு.ப.ரா. தொடர்பர். சிங்களம், வடமொழி, ஆங்கிலம், லத்தீன் அறிந்தவர்.

படைப்புகள்: குடி இயல் (44), மாணிக்கவாசகர் அடிச் சுவட்டில் (48) தமிழில் முதல் நூல்: ஒலிபரப்புக் கலை (55) சென்னை அரசின் பரிசு பெற்றது; கௌதம புத்தர் அடிச் சுவட்டில் (60) இலங்கை சாகித்ய மண்டல் பரிசினது. இதனைப் படித்த சி. சுப்பிரமணியம், பொள்ளாச்சி மகாலிங்கத்திடம் பெரியபுராணம் பற்றி எழுதச் செய்யுமாறு வேண்ட, 100 கோவில்கள் இருவரும் சுற்றி எழுதப் பெற்றது சேக்கிழார். அடிச்சுவட்டில் (78). (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு)

துணைவி ஞானதீபன் (தென்காசித் தமிழச்சி); மக்கள்: மஞ்சுபாஷிணி, பிரசன்னவதனி, ரவிலோசனன்.

சிட்டி (பக் 909), சிவபாத சுந்தரம் இருவரும் இலக்கிய இரட்டையர். இருவரும் 72 முதல் இணைந்து இற்றை நாள் இலக்கியத் திறனிகளாகத் திகழ்கின்றனர். தமிழ் நாவல் நூறாண்டு வரலாறும் வளர்ச்சியும் இவர்களது சாதனை நூல். தமிழ்ச் சிறுகதை வரலாறும் வளர்ச்சியும் வெளியிட உள்ளனர். **முகவரி:** 29, காமராஜ் அவென்யூ, சென்னை-20. (413387)

**வல்லிக் கண்ணன்:** எழுத்தாளர்களின் எழுத்தாளர். எழுத்தாளர்கள் என்பவர்கள் பெரும்பாலும் பிறர் எழுத்துக்களைப் படிப்பதே இல்லை! மற்றவர்கள் எழுத்தை மதித்துப் படிக்கும் மாண்பினர். எழுத்தாள தர்மத்துடன் படைப்புக்களை விருப்பு

வெறுப்பின்றி விமர்சிக்கும் வளமையர். எழுத்தாளர்களின் நம்பிக்கை நட்சத்திரம் என்றால் மிகையன்று. வணிக நோக்கின்றி எழுத்துப் பணியை ஒரு தெய்வத் தொண்டாகக் கொண்டாடுபவர். எழுத்துக்காக இல்லற இன்பத்தை ஏற்காத கட்டை பிரம்மச்சாரி. விமர்சன உலகில் மென்மை சான்ற முழு மனிதர் இவர். படைப்பாளியாகவும் இருப்பதால் படைப்பின் பெற்றி உணர்ந்து உரைக்கும் பண்பாளர். 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' சாகித்ய அகாதமிப் பரிசு பெற்றது.

பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை, காலத்தின் குரல், முத்துக் குளிப்பு, உவமை நயம் (பாரதிதாசன் பற்றியது), சரஸ்வதி காலம், தமிழில் சிறுபத்திரிகைகள், எழுத்தாளர்கள்-பத்திரிகைகள் போன்றன இவர் திறனாய்வு காட்டும்.

36இல் பாளையங்கோட்டை தூய சவேரியர் உ. ப. இறுதி வகுப்பு. 37-41 வேளாண் செய்கையாளர் அலுவலகத்தின் கணக்கர். 43 இல் புதுக்கோட்டை, 'திருமகள்,' 'சினிமா உலகம்', நவசக்தி இதழ்களில் பணி. 44 47 கிராம ஊழியன் உதவி ஆசிரியர். சென்னை வந்து Freelance writer. 51-52 அனுமான் வார இதழ் துணை ஆசிரியர். 10 நாவல்கள், 3 நாடகங்கள், 8 சிந்தனைக் கட்டுரைகள் படைத்துளார். பிறவற்றுக்கு 653, 912 பக்கம் பார்க்க. விமர்சனக் கலையில் வளம்சான்ற இவரின் கருத்தை மதிக்கிறது படைப்புலகம்.

**தி. க. சிவசங்கரன்** (துருவன்) 30-4-1924. திருநெல்வேலி. இனிய இலக்கிய விமர்சகர். திறனாய்வுலகில் கவனத்துக்கும் எதிர்பார்ப்புக்கும் உரியவர். படைப்பாளி, மொழிபெயர்ப்பாளர்; கவிதை, கட்டுரை சிறுகதை நாவல் வல்லவர். வசந்த காலத்திலே (50), போர்வீரன் காதல் (51), (நாவல்கள்) சீனத்துப் பாடகன் (51) (சிறுகதை); காரல் மார்க்சின் இல் வாழ்க்கை, எது நாகரிகம்? என்பன எச்சங்கள். சென்னை தியாகராய நகர் சோவியத் செய்தித்துறை ஆசிரியர். இலக்கியத்தில் யதார்த்தவியல் வேண்டும் என்பவர். நாட்டில் ஒரு சிக்கல் நிகழ்ச்சி என்றால், இவர் என்ன நினைக்கிறார், (என்ன அறிக்கை விட்டார் என அரசியலாளரை எதிர்பார்ப்பது போல), இலக்கிய உலகில் இவரின் விமர்சனம் எதிர்பார்க்கப் பெறுகிறது, கருதப்படுகிறது. அந்த அளவுக்கு விமர்சன வுலகில் வரலாறு படைத்தவர். மென்மையர் எனினும் வன்மையான விமர்சனம் புரிவதில் வல்லவர். இவர் மகனும் படைப்பாளி. **முகவரி :** 23, அயக்ரீவ நகர், ஆதம்பாக்கம். சென்னை-88.

**சி. கனகசபாபதி:** விருதுநகர் செந்திற்குமார நாடார் கல்லூரியில் பணியாற்றி, 68 முதல் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் திகழ்பவர். பாரதி பாரதிதாசனிடம் பற்றுள்ளவர்; எனவே இருவரையும் ஒப்பாய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுளார். பேராசிரியரே ஆயினும், தற்காலப் படைப்பிலக்கிய விமர்சகர்; தமிழிலக்கிய இலக்கணம் கற்ற ஊற்றத்தாலே தொல்காப்பியர், உரை யாசிரியர்களையும் திறனாய்வாளர்களாக மதித்திடும் மதியர். கதரே அணிவார், காந்தியச் சிந்தையர். தற்கால இலக்கியத் திறனாய்வரில் தகு இடம் பெற்றவர்.

**எழில் முதல்வன்:** இற்றை நாள் தற்கால இலக்கிய-புதின (சிறுகதை-நாவல்) இலக்கியத் தனித் திறனாய்வராகத் தலை நிற்கிறார். பிறரெல்லாம் ஓரிரு நூலே, ஒரு பகுதி பற்றி மட்டும் திறனாய்ந்திருக்க, இவர் அத்துறையில் துறை போய் நிற்கிறார்: இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், விடுதலைக்கு முன் புதிய தமழ்ச் சிறுகதைகள்; புனைகதை வளம், நாவல் இலக்கியம், அகிலனின் கலையும் கருத்தும்; புதிய உரைநடை, இலக்கியத் தகவு, திறனாய்வு நெறி, நோக்குநிலை எனப் பல. தற்கால இலக்கியக் கருத்தரங்கெனில் இவரில்லா மல் இரார் எனும் இன்றியமையா நிலை; அப்படி ஒரு சுவடு பதித்துள்ளார். படைப்பாளராகவும் இருக்கிறார். இக்கால இலக்கியத் தகவிற்கு இவர் அச்சாணி. மா. இராமலிங்கம் ஆய்வடங்கல், எழில்முதல்வன் கவிதைகள் ஒரு கண்ணோட்டம் (ஆடுதுறை கிரகன்ட மேனிலைப்பள்ளித் தமிழ்த் துறைத் தலைவர் செல்வசேகரன்) என இவர் பற்றிய ஆய்வும் வந்துள. **முகவரி:** 30, விவேகானந்த நகர், உறையூர், திருச்சி-3.

**ச. செந்தில்நாதன்:** 2-10-1943. தஞ்சை மாவட்ட திருத் துறைப்பூண்டி வட்ட வாய்மை மேடு. சென்னை மலைச்சாலை அரசினர் கலைக் கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கி சட்டம் பயின்று வழக்குரைஞராக விளங்குபவர். அது தொழில், இது தொண்டு: புத்திலக்கியத் திறனாய்வு. சிவப்புச் சிந்தனை யும் பொதுவுடைமை நாட்டமும் மிகக் கொண்டவர். துல்லிய மான சிந்தனையாளர். ஆய்வுச் சொற்பொழிவாளர். 'சிகரம்' ஏட்டின் ஆசிரியர். தமிழ்ச் சிறுகதைகள் ஒரு மதிப்பீடு சிறந்த படைப்பு. **முகவரி:** 'கலிங்கா காலனி' பொன்னம்பலம் சாலை சென்னை-78.

**தமிழவன்:** (ச. கார்லோஸ்) 17-10-1945. பெங்களூர் கிருத்துவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் இவரது 'இருபதில் கவிதை' கவிதையுலகில் ஒரு மைல் கல்.

**வெங்கட் சாமிநாதன் :** ஓர் எதிர்ப்புக் குரல். அன்றைய வறட்சியிலிருந்து இன்றைய முயற்சிவரை, கலை வாழ்க்கை அனுபவம் வெளிப்பாடு—இவரின் விமர்சன விழுதுகள்.

**தி. சு.நடராசன் :** மதுரைப் பல்கலைக் கழகம். சமூகப் பார்வையுடன் விமர்சிக்கும் வளமையர்.

**எம். எஸ். தியாகராஜன் :** 17 - 3 - 1948. அரக்கோணம். சுப்பராயன் : விட்டரபாய். 60 சிறுகதைகள், 'கரை ஏறிய மீன்கள்' (நாவல்), இலட்சுமணன் போட்ட கோடு (சிறுகதைத் தொகுப்பு). படைப்பாளியாக இருப்பதோடு பாங்கான இலக்கிய விமர்சகராகவும் பிறங்குகிறார். சிறுகதை, நாவல், புதுக்கவிதை பற்றித் திறனாய்கிறார். கண்ணதாசன், ஜெயகாந்தன், நா. காமராசன் பற்றிச் சீரிய கருத்துரைத்துள்ளார். 'நா. காமராசனின் கவிதைகள்-ஒரு திறனாய்வு' குறிப்பிடத் தக்கது. 'புதுமலர்கள்' இலக்கிய வட்டம் நடத்தி வருகிறார். பல்வேறு கவிஞர்களின் மினி கவிதைகளைத் தொகுத்து 'அலைகள்'என வெளியிட்டுள்ளார். வானொலியிலும் பல்வேறு இதழ்களிலும் விமர்சனம் புரிந்து வருகிறார். **முகவரி :** 4, குளக் கரைத் தெரு, பழவந்தாங்கல், சென்னை-61.

**ஆய்வுகள்;** திருமணம் செல்வ கேசவராய முதலியார் முன்னோடியாக முகிழ்க்கிறார்: திருவள்ளுவர். மறைமலையடிகள் முதல்வராக மிளிர்கிறார்: முல்லைப் பாட்டு, பட்டினப்பாலை ஆராய்ச்சிகள்.ரா. ராகவையங்கார் பெரும்பாணாற்றுப் படை, பட்டினப்பாலை ஆய்வுகள் கு. கோதண்டபாணிப் பிள்ளை நெடுநல்வாடை பாநலன்; டாக்டர் இரா. சாரங்கபாணி பரிபாடல் திறன்; மு. வ. ஓவச்செய்தி; கெ. வேங்கடராம செட்டியார் புனையா ஓவியம்; தமிழண்ணல் குறிஞ்சிப்பாட்டு ஆராய்ச்சி; நா. செயராமன் சங்க இலக்கியத்தில் பாடாண் திணை; வ. சுப. மா. வள்ளுவம்.

The Treatment of Nature in Sangam Litt. 1948- Dr. Mu. Va; Interpretation of Nature in ancient Tamil Poetry 1949-Xavier S. Thaninayagam; Love in Sangam Poetry 1958-Dr. V. Sp. Manickam. Similies in Sangam Litt.—Ra. Srinivasan போன்றன **சங்க இலக்கியம் பற்றிய** ஆய்வுகள். ஆராய்ச்சி மன்னராக அமைபவர் **எஸ். வையாபுரிப் பிள்ளை;** முடிவுகள் தவறாகப் படினும் முறைகள் நிறையுடையன; அசைக்க முடியாத ஆணித்தரமான கருத்துக்கள், மறுக்க முடியாத் தருக்கம்.

**சிலம்பு பற்றி:** சிலப்பதிகார விளக்கம் (ரா. பி. சேதுப் பிள்ளை), சிலம்புச் செல்வம் (சுத்தானந்த பாரதியார்), கண்ணகி வரலாறும் கற்பு மாண்பும் (ந மு. வே. நாட்டார்), சிலப்பதிகார ஆராய்ச்சி (ஔவை சு. துரைசாமிப் பிள்ளை), சிலப்பதிகார வாசகம் (ஒற்றுமை ஆபீஸ்), சிலப்பதிகார ஆராய்ச்சி (வெ. சு. சுப்பிரமணிய ஆச்சாரியார்), சிலப்பதி காரச் செய்தி (ம. ரா. போ. குருசாமி), சிலப்பதிகார விருந்து, சிலம்புத்தேன் (ந. சஞ்சீவி), கலையும் வாழ்வும் (மா.ரா. இளங் கோவன்), செந்தமிழ்ப் பாவை (கருமுத்து தி. மாணிகக வாசகம்), சிலம்பும் வாழ்வும் (புலியூர்க் கேசிகன்), குடிமக்கள் காப்பியம் (தெ பொ. மீ.), சிலம்புப் புதையல் (மது. ச. விமலா னந்தம்), சிலம்புச் செல்வன் (இரா. பெரியசாமி), சிலம்பில் சிறு பிழை (மு. கு. ஜகந்நாத ராஜா), இளங்கோவின் இன்கவி (அ. சிதம்பரநாதன்), இலக்கியச் சிலம்பு (தா. நடராச சர்மா), கவுந்தி (சாமுவேல் தாசன்), சிலப்பதிகாரத் திறன் (சி. சு. மணி), சிலம்பும் சிந்தனையும் (சாமி. தியாகராசன்), சிலம்பின் ஒலி, சிலம்பு மணி (துரை சிங்கார வேலனார்), சிலம்பின் சிறு பாத்திரங்கள் (க. மீனாட்சி சுந்தரம்), சிலப்பதிகாரச் சிந்தனை (ப. அருணாசலம்), சிலப்பதிகாரத்து இசைத்தமிழ் (எஸ். ராம நாதன்), செல்வச் சிலம்பு (க. சோமசுந்தரம்), சிலப்பதிகாரத் தமிழகம் (சாமி. சிதம்பரனார்), சிலம்பும் சித்தாமணியும் (ச. வே. சு).

சிலம்புச் செல்வர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற ம. பொ. சி. யின் தொண்டு மாணப் பெரிது: சிலப்பதிகாரமும் தமிழநம், கோவலன் குற்றவாளியா? சிலப்பதிகாரத் திறனாய்வு, சிலப் பதிகார ஆய்வுரை, சிலப்பதிகார யாத்திரை, வீரக் கண்ணகி எனப் பரக்க எழுதிச் சாதனை புரிந்துளார். செல்லப்பன் அவர்கள் சிலம்பு பற்றிச் சிறக்கப் பேசிச் 'சிலம்பொலி' செல்லப்பன் ஆனார். தொடக்கத்தில் சிலம்பினைப் பரப்பியவர் சேதுப்பிள்ளை. மார்க்கபந்து சர்மா சிலம்பின்-ரசனை, தனித் தன்மை, கற்பனை என எழுதிப் பரப்பியமையும் எண்ணத் தக்கது.

**கம்பனைக் கண்டோர்:** வ. வே. சு. ஐயர் Kamba Ramayana a Study; செல்வக்கேசவராய முதலியார் கம்பர்; வையாபுரிப் பிள்ளை கம்பன் காவியம், நாவலர் சோமசுந்தர பாரதியார் தசரதன் குறையும் கைகேயி நிறையும்; சி பி. வெங்கடராம ஐயர் Kamban and his Art; சுத்தானந்த பாரதி கம்பச் சுவை; ஆ. முத்துசிவன் அசலும் நகலும், அசோகவனம், காவிய ரசனை; அ. ச. ஞானசம்பந்தன் இராவணன் மாட்சியும்

வீழ்ச்சியும், கம்பன் கலை, நாடும் மன்னனும், அரசியர் மூவர், தம்பியர் இருவர், கம்பன்; எஸ். ராமகிருட்டிணன் கம்பன் கண்ட அரசியல், சிறியன சிந்தியாதான், கற்பின் கனலி, கம்பனும் மில்டனும்; கோ. சுப்பிரமணிய பிள்ளை கம்பர் விருந்து, வாலி வதை; வ. சுப. மாணிக்கம் கம்பர்; பி. எல். சாமி கம்பன் காவியத்தில் உயிரினங்கள்; கு கோதண்டபாணி பிள்ளை கம்பரும் மெய்ப் பாட்டியலும்; வெ. ப. சுப்பிரமணிய முதலியார் இராமாயண உள்ளுறைப் பொருளும்தென்னிந்தியச் சாதி வரலாறும்; நாமக்கல் கவிஞர் கம்பன் கவிதை, இன்பக் குவியல்; பி ஸ்ரீ கம்பசித்திரம்; அண்ணாதுரை கம்பரசம்; கு பாலசுந்தர முதலியார் கம்பரச ஆராய்ச்சி; அ. கு ஆதித்தர் கம்பர்-கவித்திறன், கவிவளம், நாடகக்கலை; நீதிபதி மு. மு. இஸ்மாயில் கம்பன் கண்ட ராமன், மும்மடங்கு பொலிந்தன, கவிச்சக்கரவர்த்தியும் கவியரசரும்; ந. சுப்பு ரெட்டியார் கம்பனில் மக்கள் குரல்; பழ. பழனியப்பன் கம்பன் விசுவரூபம்; எஸ். நல்லபெருமாள் கம்பன் காவியசாரம்; அரு. நாகப்பன் கம்பன் கண்ட சமுதாயம்;

சாண்டில்யன் கம்பன் கண்ட பெண்கள், பி ஸ்ரீ. சரசுவதி ராமநாதன் கம்பன் காவியம் அன்றும் இன்றும் என்றும், கம்பன் கலைக்கோயிலுக்கு ஒரு கைவிளக்கு; அவ்வை நடராசன் கம்பர் காட்சி, செந்துறைமுத்து கம்பன் ஒரு திறனாய்வு; மு. த. வேலாயுதனார் கம்ப ஓவியத்தில் ஆன்மிகமும் அறநெறியும்; முத்து எத்திராசன் கம்பர் காட்டும் கார்காலம்; மா. ரா. மாணிக்கம் இலக்கியச் சுவை-கம்பர்; மு. சதாசிவம் கம்பர் தரும் இராமன் அருட் செல்வம்; பெரியார் ஈ. வெ. ரா. இராமாயணப் பாத்திரங்கள்; எஸ். ஐயாதுரை ஐயர் Ramayana as an illustration of yoga Sastra, சுவாமி சித்பவானந்தா Kambaramayana. ஐஸ்டிஸ் மகாராஜன் தெய்வமாக்கவி; சென்னைக் கம்பர் கழகம் கம்பன் கவியமுதம்: மயிலைத் தமிழ்ச் சங்கம் உங்கள் கம்பன்.

ஜெகவீரபாண்டியனாரின் கம்பன் கலை நிலை புலவர் உலகம் ஒரு பாரிய பெருஞ்சாதனைப் படைப்பு. ஒவ்வொரு வரும் படித்துப் புலமை பெற வேண்டிய கம்பச் சுரங்கம்.

கி. லக்ஷ்மணன் கம்பனது கதாபாத்திரங்கள், அ. சீனிவாச ராகவன் காவிய அரங்கில், கருத்திருமன் காவியச் சோலையில்.

**கவிதை:** கவிதையும் வாழ்க்கையும் (ஆ. முத்துசிவன், அ.மு. பரமசிவானந்தம்), கவிதைக் கலை (நா. பார்த்தசாரதி), புதிய தமிழ்க் கவிதை (சாலை இளந்திரையன்),

தற்காலத் தமிழ்க் கவிதை (வி. ஆர். எம். செட்டியார்), ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை (அ. சீனிவாசராகவன்), கவிதை நயம் (கைலாசபதி முருகையன்), கவிதைக் கலை I, II (ரா. ஸ்ரீ. தேசிகன்), எது கவிதை (புலமைப் பித்தன்), இருபதில் கவிதை (தமிழவன்), தமிழ்க் கவிதை மரபும் புதுசும் (து. மூர்த்தி), கவிதை இயல் (அ. அ. மணவாளன்).

**பாரதி பற்றி:** கா. மீனாட்சி சுந்தரம் - பாரதி பா நிலை, மு. கோவிந்தசாமி-பாரதி கவித்திறன், ப. அருணாசலம் கவியரசர் பாரதி, மது.ச. விமலானந்தம்-குயிலின் குயில், பாரதி சபதம், கவிஞன் கண்ட கண்ணன்; கு. ராஜவேலு-வான் குயில், ஆ. கே. கண்ணன்-புது நெறி காட்டிய பாரதி, கு. சிவஞானம், கு. சிவமணி-குயில்பாட்டு ஆராய்ச்சி, சுத்தானந்த பாரதியார்-கவிக்குயில் பாரதியார்; கு. ப. ராஜகோபாலன், பெ. கோ. சுந்தரராஜன் கண்ணன் என் கவி; நெ. து. சுந்தர வடிவேலு-வாழ்விக்க வந்த பாரதி, சுகி. சுப்பிரமணியன்-புதுமைப் புலவன் பாரதி; ம. செல்வராசன் - பாரதியின் பரம் பொருட் பாதை, புதையல்; பொ. திருகூட சுந்தரம்பிள்ளை - பஞ்சாலி சபதம்; புலவர் நக்கீரன் - பல்கோண பாரதி; கே. எஸ். நாகராஜன் - பாரதி கண்ட பாரதம்; பி. இ. பாலகிருஷ்ணன் - பாரதி கண்ட தாய்க்குலம்; பெ. சு. மணி - பாரதியாரும் இராமகிருஷ்ணர் இயக்கமும் சமூக சீர்த்திருத்தமும், பாரதியாரின் வேதரிஷிகளின் கவிதை; மணிஜி - பாரதியார் இதயம்; ஆ. முத்துசிவன் - அமரகவி பாரதி; பி. யோகீஸ்வரன்-கண்ணன் பாட்டில் உலகியல்; வி. ச. வாசுதேவன் - பாரதி உள்ளம்; நா. வானமாமலை - பாரதியும் தொழிலாளரும்; தே. வீரராகவன் - பாஞ்சாலி சபதம் வில்லி பாரதி இரு பார்வைகள், ஜகன் - பாரதி கண்ட சமுதாயம், ஜான் சாமு வேல்- ஷெல்லியும் பாரதியும் ஒரு புதிய பார்வை; கே. எஸ். ராஜேந்திரன் - பாரதியின் இதயம் பேசுகிறது; இளங்கீரன் - பாரதி கண்ட சமுதாயம்; இளஞ்சேரன்-பாரதியின் இலக்கியப் பார்வை; சாமி பழனியப்பன் பாரதியார், எச். ஆர். கிருஷ்ணன் - பாரதியுகம்; த. கோவேந்தன் - அமரகவி பாரதி; சக்திதாசன் சுப்பிரமணியன் - பாரதிலீலை, மகாகவி பாரதியார் புதுமைக் கணணோட்டம்; மா. சண்முக சுப்பிர மணியம் - பாரதி ஒரு ஞானக்கவி, மின்னூர் சீனிவாசன் குயில் பாட்டு விளக்கம், கே. சி. கமலையா கண்ணன் பாட்டு காப்பிய நாடகம், கூவும் குயில்; வா. செ. குழந்தைசாமி பாரதியின் அறிவியல் பார்வை, ந. சுப்பு ரெட்டியார் பாஞ்சாலி சபதம் ஒரு நோக்கு, கண்ணன் பாட்டுத் திறன்; வலம்புரிஜான் பாரதி

ஒரு பார்வை க. த. திருநாவுக்கரசு தமிழ்க்கவிதையில் பாரதியின் தாக்கம்.

பெரியசாமி தூரன், ம. பொ. சி, ப. ஜீவானந்தம் மூவரும் பெருந்தொண்டாற்றியுளர். முன்னவர் பாரதி தமிழ், பாரதியும்-பாட்டும், தமிழகமும், பாரத தேசமும், உலகமும், பெண்மையும், சமூகமும், நகைச்சுவையும் நையாண்டியும், பாப்பாவும் என்றும்; பின்னவர் எங்கள் கவி பாரதி, பாரதியும் ஆங்கிலமும், பாரதி கண்ட ஒருமைப்பாடு, வள்ளலாரும் பாரதியும், உலக மகாகவி பாரதி, பாரதியாரின் பாதையிலே, பாரதியின் போர்க்குரல், தொல்காப்பியரிலிருந்து பாரதியார் வரை எனவும், பாரதி வழி பாரதி பற்றி ஜீவா, பாரதியின் தத்துவ ஞானம், கம்பனும் பாரதியும் என்றும், நிரம்ப எழுதியுள்ளனர்.

ஆங்கிலத்தில் கே. எஸ். ராமசாமி சாஸ்திரி-Subramania Bharati-His mind and art; பி. மகாதேவன் Subramania Bharati-Patriot and Poet; க. மீனாட்சி சுந்தரம் A Study on the Poetical works of Bharati; வை. சச்சிதானந்தம் The Impact of Western Thought on Bharati, Whitman and Bharati; விஜய பாரதி Bharati-Personality and Poetry; சி. விசுவநாதன்-Bharati and his works; ராஜாஜி Bharati-The Tamil Poet.

ஆங்கிலத்தில் பெயர்த்தோர்: ஹெப்சிபா ஜேசுதாசன் The song of the Cuckoo and other Poems; ஹா. கி. வாலம் The vow of Panchali; டி. என். ராமச்சந்திரன் Vinayakar Naanmani malai, Kuyil Pattu, Krishnanjali, the Oath of Drawbathi ஏ. துரைசாமி பிள்ளை Bharathi's Poems-Kannan & Kuyil Pattu. எஸ். பிரேமா Bharati in English Verse; பிரேமா நந்தகுமார் Poems of Bharati, கிருஷ்ணா ஸ்ரீநிவாஸ் Poetry Bharati; பி. மகாதேவன் Jnanaratham, கே சுவாமிநாதன், கா. செல்லப்பன், கே. ஜி. சேஷாதிரி Sakthi and other Poems, Prose Poems; கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம் Voice of a Poet. இராம சுப்பையா குயிற்பாட்டு.

வாழ்வு பற்றியன: செல்லம்மாள் பாரதி (மனைவி), சி. விசுவநாதன் (தம்பி) தங்கம்மாள் பாரதி, சகுந்தலா பாரதி (மகள்), விஜயபாரதி (பேத்தி), நாவலர் பாரதியார், வ. ரா. ஆக்கூர் அனந்தாசாரி, கல்கி, வ. உ. சி, ரா. கனகலிங்கம், யதுகிரி அம்மாள், எம். எஸ். சுப்பிரமணிய ஐயர், பி. ஸ்ரீ, மு. வேங்கடசாமி, எம். வி. வெங்கட்ராம், தி. சு. கலிய பெருமாள், பிரேமா நந்தகுமார், ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்,

மதுரம் பூதலிங்கம், ப. கோதண்டராமன், தி. இராமனுசன், புலவர் அரசு, மு சண்முகம் பிள்ளை, செந்துறைமுத்து, தி. ஜ. ர, மார. தமிழ்ச்செல்வன்.

**ரா. அ. பத்மநாபன்:** சித்திரபாரதி, பாரதி புதையல் 1-3. பாரதியார்-கவிநயம், கடிதங்கள், நண்பர்கள் போன்றன படைத்துப் பெருந் தொண்டாற்றியமை போற்றத் தக்கது. **சீனிவிசுவநாதன்** பாரதியார் கவிதைகள், நூற்பெயர்க் கோவை, தமிழகம் தந்த மகாகவி என முப்பணி செய்து சிறக்கிறார். **எதிரொலி விசுவநாதன்** பாரதிக்கு விடுதலை, பார் புகழும் பாரதி, பாரதியின் தம்பி என்றெல்லாம் எழுதி இதயம் கவர் கிறார்.

வங்கக்கவி **தாகூருடன் ஒப்பிட்டு** பி. ஸ்ரீ (பாரதியும் தாகூரும்), க. கைலாசபதி (இரு மகாகவிகள்), ரகுநாதன் (கங்கையும் காவிரியும்) போன்றாரும், **பாரதிதாசனுடன் இணைத்து,** முத்துலக்கையன், சி. கனகசபாபதி, சாமி பழனியப்பன், சா. ஜெகத்ரட்சகன் போல்வாரும், ஷெல்லி யுடன் ஒப்புமை செய்து ரகுநாதன், ஜான் சாமுவேல் முதலி யோரும், கீட்சுடன் சேர்த்து பாலாவும் எழுதியுள்ளனர்.

இந்தியில் ஹா. கி. வாலம்-பாஞ்சாலி கி சபத், கோயல்; வடமொழியில் ஸ்ரீராம தேசிகன், மலையாளத்தில் கோபால குருப் போன்றார் பெயர்த்துளர். உருசிய, செக், மலையாள, மலாய் மொழிகளிலும் பெயர்த்துள்ளனர். பாரதி நடையியல் பற்றி இ. சுந்தரமூர்த்தி.

**கவிமணி:** கவிமணியின் கவிதைத் தேர் (ஆண்டியப்பன்), கவிமணியின் வாழ்வும் கவிதை வளமும் (தே. ப. பெருமாள்), கவிமணியின் கவித்திறன் (சு. பாலச்சந்திரன்), கவிமணியும் அவர் கவிதைக் கனிகளும் (என். ஏ. வேலாயுதம்);

**பாரதிதாசன்:** கவித்திறன் (மு. கோவிந்தசாமி), கவிஞரும் காதலும் (ந. இராமநாதன்), புரட்சிக் கவிஞர் கவிதை வளம் (சாலை இளந்திரையன்), பாரதிதாசன் பாடல்களில் இயற்கை (நசீம்தீன்). பாரதிதாசன் கவிதைகளில் மரபும் புதுமையும் (நெல்லை. ந. சொக்கலிங்கம்), பட்டறையிலே பாரதிதாசன் (தா. வே. வீராசாமி), பாரதிதாசனில் புதிய பார்வை (அ. அறிவொளி), புரட்சிக்கவி உள்ளம் (இராம. சுப்பிரமணியன்), புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் (நஜீர்), பாவேந்தரின் பாநயம் (ம. வே. பசுபதி), பாவேந்தர் ஊட்டிய

தமிழ் உணர்வு (தமிழ மல்லன்), புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் (கோ. கண்ணன்), பாவேந்தரின் குடும்ப விளக்கு-ஒரு திறனாய்வு (கோ. கண்ணன்), புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் (முல்லை. முத்தையா-தொகுப்பு), கவிஞரின் கதை (டி.சி.எஸ். மணி), புரட்சி முழக்கம் (சாலை இளந்திரையன்).

டாக்டர் பட்டத்திற்கு ஆய்ந்தவர்கள்: மா. செல்வராசன், கு. கணேசன், இளங்கோ (இராமர்), வே. காத்தையன், கு.ப. கணேசன்.

திருமதி வெ. கனகசுந்தரம்-**தமிழ் ஒளி**யின் கவிதைகள் ஓர் ஆய்வு; மின்னூர் சீனிவாசன்-மறுமலர்ச்சிக் கவிதை ஆய்வு (பாரதிதாசன், கம்பதாசன், ச. து. சு. யோகி), கவிதைக் கனல் **கம்பதாசன்**. சிலோன் விஜயேந்திரன்-கம்பதாசன் வாழ்வும் பணியும், கம்பதாசன் திரை இசைப் பாடல்கள், மது. ச. விமலானந்தம்-கம்பதாசன்-ஒரு கண்ணோட்டம்.

**கண்ணதாசன்:** கவிதைகள் ஒரு திறனாய்வு, கண்ணதாசன் ஒரு கண்ணோட்டம் (ஆ. ஜகந்நாதன்), கண்ணதாசன் கவி நயம் (ப. குணசேகர்), கண்ணதாசன் திரைக் கவிதைகள் (தமிழ்ப்பித்தன், தே. ப. பெருமாள்), பாட்டுக் குயில் கண்ண தாசன் (தமிழ்ப்பித்தன்), கண்ணதாசன் கட்டளைகள் (மது. ச. விமலானந்தம்).

**பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம்** பாடல்கள் ஒரு திறனாய்வு (பா. உதயகுமார்), சாலமன் பாப்பையாவும், ஏ. வி. சி. கல்லூரி செம்பியனும் ஆய்ந்து நூல் வெளியிட்டுள்ள னர். சி பாலசுப்பிரமணியன் வாழையடி வாழையில் தற்காலக் கவிஞர்களைத் திறனிக்கிறார்.

**சிறுகதை:** ப. கோதண்டராமன் சிறுகதை ஒரு கலை (58), சிறுகதையின் கூறுகளை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்துப் பகுத்துப் பேசுசிறது. கனக செந்தில்நாதன் 'தமிழில் சிறுகதை யின் தோற்றமும் வளர்ச்சியும்', சாலை இளந்திரையன் 'சிறு கதைச் செல்வம், தமிழில் சிறுகதை'. கா. சிவத்தம்பி' தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்.' இரா. தண்டாயுதம் தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள். எழில்முதல்வன் விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள், மீ. ப. சோமு சிறுகதை; ச. செந்தில்நாதன் தமிழ்ச் சிறுகதைகள் ஒரு மதிப்பீடு; அ. சிதம்பரநாத செட்டியார் தமிழில் சிறுகதையின் தோற்ற மும் வளர்ச்சியும்;

புதுமைப்பித்தன் கதைகள்-பொதியவெற்பன், புதுமைப் பித்தன் சிறுகதைக் கலை-முருகரத்தினம், கல்கியின் சிறுகதைக் கலை-மீனாட்சி முருகரத்தினம். அழகிரிசாமியின் சிறுகதைகள் ஒரு திறனாய்வு-செ. சுதாகரன். அகிலனின் கதையும் கருத்தும்-எழில்முதல்வன்; அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு-சு. வேங்கடராமன் இருபதில் சிறுகதைகள் (1900-73) பியூலா மெர்சி.

**நாவல்:** க. கைலாசபதி தமிழ் நாவல் இலக்கியம் பயன் மிகுந்தது; திறனாய்வு வரலாறு இரண்டும் கொண்டது. கி வா ஜகந்நாதன் தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும், எழில்முதல்வன் புனைகதை வளம், நாவல் இலக்கியம். தா. வே. வீராசாமி தமிழ் நாவல் முன்னோட்டம், தமிழில் சமூக நாவல்கள்; சிட்டி சிவபாத சுந்தரம் தமிழ் நாவல் நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும், கருத்துச் சுரங்கமாக அமைவது, பன்னூல் தோன்றப் பயனான படைப்பு. இரா. தண்டாயுதம் நாவல் வளம், சமூக நாவல்கள். கா. சிவத்தம்பி நாவலும் வாழ்க்கையும், ஈழத்தில் தமிழ் இலக்கியம், நா. சுப்பிரமணியம் ஈழத்துத் தமிழ் நாவல்கள், நாவல் இலக்கியம், கோ. வே கீதா தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம், வே. சீதாலட்சுமி தமிழ் நாவல்கள், தி பாக்கியமுத்து விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள்

க. நா. சு. முதல் ஐந்து நாவல்கள், நண்பர் வட்டம் விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள், எழுத்தாளர் சங்கம் தமிழ் நாவல்கள், கீதா தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம், வே. சீதாலட்சுமி தமிழ் நாவல்கள் (அகர வரிசை) 6298 நாவல் கள் பற்றிய குறிப்பு, புதினங்கள் பற்றிய ஆராய்ச்சிகள் கட்டுரை பற்றிய அனைத்து விவரமும் தரும் அற்புத நூல். பூவை. எஸ். ஆறுமுகம் அகிலன் முதல் கல்கி வரை.

**நாடகம் பற்றி:** பம்மல் சம்பந்த முதலியார் (நாடகத் தமிழ்), சுத்தானந்த பாரதி (நாடகக் கலை), தி. க. சண்முகம் (நாடகக் கலை, எனது நாடக வாழ்க்கை), கு. சா. கிருட்டிண மூர்த்தி (தமிழ் நாடக வரலாறு); எஸ். வி. சகஸ்ரநாமம் (நாடகக் கலையின் வரலாறு), நாரண துரைக்கண்ணன் (தமிழில் நாடகம்), ஏ. என். பெருமாள் (தமிழ் நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும்), சக்தி பெருமாள் (தமிழ் நாடக வரலாறு), மதுரைப் பல்கலைக் கழகம் (நாடகக் கலையின் வரலாறு), இரா. குமாரவேலன் (தமிழ் நாடகத் தோற்றமும் வளர்ச்சியும்), மு. இராமசாமி (தோற்பாவை நிழற்கூத்து), புத்தனேரி சுப்பிரமணியம் பாட்டும் கூத்தும்.

**புதுக்கவிதை போற்றி:** ந. சுப்புரெட்டியார் புதுக்கவிதை போக்கும் நோக்கும்; இரா. மோகன் புதுக்கவிதை அணிவகுப்பு ஆ. ஜெகந்நாதன் புதிய கவிதைகளில் மார்க்ஸீயம், சாலை இளந்திரையன் உரை வீச்சு; புதிய இலக்கிய வடிவம்; பாலா புதுக்கவிதை ஒரு புதுப் பார்வை; சுப்ரபாரதி மணியன் வானம்பாடிகளுக்குப் பின் புதுக்கவிதை, நா. வானமாமலை புதுக்கவிதை-முற்போக்கும் பிற்போக்கும்; வல்லிக்கண்ணன் புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்.

விரைவில் வளர் தமிழில் திறனாய்வு வளர்ந்து வளங் கொழிக்க வேணும்-அப்போதுதான் படைப்பிலக்கியமும் பாங்குறும்; படைப்பால் திறனாய்வும் பெருமை பெறும். திறனாய்வு போதிய அளவில் போற்றத்தக்க வகையில் வளர்ந் துளது என்றே விளம்புவோம்!

## 103. கல்லூரிகளில்...

பள்ளிகளிலும் சரி கல்லூரிகளிலும் சரி பைந்தமிழ் பயிற்றும் ஆசான்கள் பலர் உளர். இவர்கள் இரு நிலையினர். பத்தோடு பதினொன்று அத்தோடு இதுவொன்று எனத் தமிழால் வாழ்ந்து கொன்னே கழிவோர் பலர்; தம்மை வாழ வைக்கும் மும்மைத் தமிழுக்குத் தம்மாலான எழுத்து-பேச்சுப் பணியாற்றி, தங்கத் தமிழுக்கு எங்கள் பங்கு-பணி-கொடை இவையெனப் பழையன போற்றியும் புதியன படைத்தும் தொண்டாற்றுவோர் மிகச் சிலரே!

மற்றையோர் ஆற்றுவது தொழில். ஆசிரியப் பணியோ அரும்பணி, பெருந் தொண்டு. எனவேதான் noblest profession என்றனர். பிறர் ஆற்றுவது அனைத்தும் உடல் வாழ்வினது. மருத்துவர் கூட இந்த ஊனுடலையே ஓம்புகின்றனர். எனவே அழியும் உடலுக்கு மருத்துவர் ஆவர். அறிவியல் அறிஞர் தம் அரிய கண்டுபிடிப்புக் கூட உண்மையில் உடல் உல்லாசத் திற்கான உஞற்றலே! ஆனால் ஆசிரியர்களோ அழியா அறிவு மருத்துவர், உயிர்-உயர் மருத்துவர்.

ஆசிரியர்களிலும், தமிழாசிரியர்கள் தாய்த் தமிழ்த் தொண் டர்கள், விழி போன்ற மொழிப் பணியாளர்கள். ஆகலின் அன்னை தமிழுக்கு அரும்பணி ஆற்ற வேண்டும், அணியென் அமைந்து அணிகலன்கள் அணிவித்தல் வேண்டும்,

வாழ்வினைக் கவனித்தல் வேண்டுவதுதான். வீடு கட்டுதலும் வாகனம் வாங்குவதுமே தமிழ் வாழ்வாகி விடாது. வீட்டைப் பேண வேண்டும்; அதே சமயம் நாடு என்ற ஒன்று உளது. உயிரினும் சிறந்த ஒண்டமிழ்த் தொண்டு என்ற கடமை ஒன்று உண்டென உணர்தல் வேண்டும். வெறும் உடல் ஒட்டிய வாழ்வு வாழ்ந்திடுதல் விலங்கு வாழ்வே! அதனினும் அரிய மானிடப் பிறவி எடுத்த நாம், வையத்துள் வாழ்வாங்கு வாழ வேண்டும். 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்பது புகட்டுதற்கு மட்டு மன்று; நம் கடனாற்றவும்தான்!

இப்படி ஒப்பறு தமிழ்ப் பணியாற்றும் - தமிழுக்காகவும் வாழும் தக்கார் சிலரைத் தவறாது போற்றுதல் - மறவாது மதித்தல் நன்றியின்பாற்பட்டதாகும்; இருக்கும்போதே ஏத்து வதும் ஊக்குவதுமாகும். எவ்விதப் போற்றுதலும் இன்றி மறைந்தபின் விழா எடுப்பதும் விளாவாரியாகப் புகழ்வதாலும் யாது பயன்? இருக்கும்போதே இவர்கள் தமிழ்ப்பணி அறி வதும், புரிந்து போற்றிப் பயன்பெறுவதும், ஏற்று ஊக்கி ஏத்து வதுமே ஈண்டு வேண்டப்படுவது; காலத்தாற் செய்த நன்றியு மாம். எனவே இவர்களை எண்ணுவோம், ஏத்துவோம்:

**வெ. தெ. மாணிக்கம்**: *14 - 10 - 1933.* புதுக்கோட்டை மாவட்ட வேந்தன்பட்டி. முதுகலையில் தங்கப் பதக்கம் பெற் றவர். காஞ்சிபுரம் பச்சையப்பனில் பல்லாண்டுகள் துறைத் தலைவராய்த் திகழ்ந்து இதுபோது சென்னைப் பச்சையப்ப னில் திகழ்பவர். 68 இல் A Study of Marutattinai in Tamil Litt. என்று ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். நூல்கள் ஊடல், வாழ்வும் வழிபாடும், Harlots in Ancient Tamil Litt. தமிழ் இலக்கியத்தில் மருதத் திணை. மகளுக்கு வழங்கிய திருமணச் சீரில் தமிழ் நூல்களையும் பேழையுடன் தந்த பெருமையர். கடமை யுணர்வு மிக்க சிறந்த பேராசிரியர். ஆய்வு வழி காட்டுதலில் அருந்திறலர், 20 க்கும் மேலானோரை நெறிப்படுத்தியுள்ளார். **முகவரி**: *ஏஜ 141 (5022) சாந்தி குடி யிருப்புச் சாலை, அண்ணா நகர், சென்னை-40. (614984).*

**மு. பீ. பாலசுப்பிரமணியன்** : *16-5-1939.* நெல்லை மாவட்ட அய்யாபுரம், காஞ்சிபுரம் பச்சையப்பனில் பணியாற்றி இது போது சென்னைப் பச்சையப்பனில் பேராசிரியர். கவிதைத் துறையில் கனிந்து விளங்குகிறார்; கவிதை மேகங்கள் (தமிழக அரசின் பரிசு), எத்தனைக் கோடி இன்பம், சீனத்துப் பரணி. மாணவர் மன்றக் கவிதைப் போட்டியில் முதற் பரிசு; 'பால பாரதிதாசன்' பட்டம் பிற: இலக்கிய நெஞ்சம், சிறு

பாணாற்றுப்படைச் செல்வம். செங்கற்பட்டு மாவட்டத் தமிழாசிரியர் கழகத் தலைவர், தமிழகத் தமிழாசிரியர் கழகத் துணைத் தலைவராக இலங்கியவர். **முகவரி :** 124/3,-அடுக்கு வீடுகள் (நடு வருவாய்ப் பிரிவு) அண்ணா நகர் மேற்கு, சென்னை-40.

**மன். இரா. செயராமன் :** 3-8-1940 தெ. ஆ. (காட்டு) மன்னார் குடி - ரங்கசாமி· ஆதிலட்சுமி அம்மையார். 56 இல் எஸ். எஸ். எல். சி., அரசினர் உயர்நிலைப் பள்ளி; 64இல் இளங் கலை தமிழ், அண்ணாமலை; 66 இல் பச்சையப்பன் கல்லூரி முதுகலை. 66 முதல் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறை-பேராசிரியர்.

படைப்பு : நலமுடன் வாழ (திருமுருகாற்றுப்படைக்கு அறிமுகம்), பாட்டும் பண்பாடும் (தமிழரின் வாழ்வியல் விளக்குவது); ஒரு கோட்டுப்பூ (சிறுகதைத் தொகுதி); அருளின் வாழ்வு, பூரணி (குறு நாவல்கள்). கவியரசு கண்ணதாசனின் புதிய சிந்தனைகள்.

எம். லிட்: சங்க இலக்கியங்களின் கண்ணோட்டத்தில் தமிழகத்தின் தலை நகரங்கள் (63); பிஎச். டி.: கவியரசு கண்ணதாசன் உரைநடை நூல்களில் அர்த்தமுள்ள இந்துமதம் - ஓர் ஆய்வு (87). மழலை மன்றம் மாதிகை சிறப்பாசிரியர். 'செந்தமிழ் மாமணி' (நல்வழி நிலையம்). 23-4-1969 இல் மணம், மனைவி ஸ்ரீ தேவி. கனிவும் இனிமையும் மிக்க பாசம் மிகுந்த பண்பாளர்; இல்லப் பெயரே இஃதுணர்த்தும். **முகவரி :** 'நட்பகம்', 140, சாமி நாயக்கன் தெரு, சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2. (566 215)

**இரா. மாணிக்கவாசகம் :** 14-10-1943. சேலம். தந்தையின் தந்தை புலவரேறு அ. வரத நஞ்சையப் பிள்ளை, தாயின் தந்தை திருவருட்பா திருந்திய பதிப்பு தந்த அற நிலையத் துறை ஆணையர் பாலகிருஷ்ண பிள்ளை. தந்தை வித்துவான் வரத இராமலிங்கம் பிள்ளை. 59 இல் சென்னை கலைக் கல்லூரி புகுமுக வகுப்பு, பச்சையப்பன் 62இல் இளங்கலை, 64இல் முதுகலை. 66 இல் எம். லிட், திருவருட்பா ஆராய்ச்சி; பிஎச். டி. திருமந்திர ஆராய்ச்சி. இவர் குடும்பத்தினர் திருமந்திர ஆய்வில் தோய்ந்தவர்கள். இவருக்குச் சித்தர் பாக்களில் சிறந்த ஈடுபாடும் பயிற்சியும், சித்தர் தொடர்பும் உண்டு. 'தமிழ்ச் சித்தர்கள் கலைக் களஞ்சியம்' தொகுத்துள்ளார். நூல்கள் : நம் நாட்டுச் சித்தர்கள், சித்தர்கள் கண்ட சிறுநீர் மருத்துவம்,

சித்தர்கள் பரிபாஷை அகராதி, திருமந்திர ஆய்வு. **முகவரி:** 9, செல்லம்மாள் தெரு, சென்னை-30.

**கி பாண்டுரங்கன்:** *12-6-1931.* நாவலாசிரியர் பேரா. கு. ராஜவேலு அவர்களின் மைத்துனர். தேசிய மாணவர் படையில் மேஜர். மழலைச் சிலம்பு (புதினம்), புலமைசால் புரவலர் (கட்டுரை). உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சி மேற்கொண்டு டாக்டர் பட்டம் பெற்றவர். கல்லூரி ஆசிரியர்களில் மிகவும் நல்லவர், மென்மையானவர், மேன்மையானவரும்கூட. கடலூர் போன்ற கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியாக இருந்து இதுபோது சென்னை மாநிலக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்.

**பீ. யோகீசுவரன்:** *20-9-1936.* மாநிலக்கல்லூரி மாணவர். வரலாற்றுப் பேரறிஞர் கே. கே. பிள்ளையின் மருகர். கல்லூரிப் பொதுக் கட்டுரைகள், கண்ணன் பாட்டில் உலகியல் போன்றன படைப்புகள். மாநிலக் கல்லூரியில் பேராசிரியர். **முகவரி:** 45, 28வது குறுக்குத் தெரு, பெசண்ட் நகர், சென்னை-90

**ஆர். கே. நாகு:** *15-6-1937.* முகவை மாவட்ட இராணி சேதுபுரம். குமாரசுவாமி ரெட்டியார்: தெய்வானை. 66இல் A Critical Study of Palaithinai என ஆராய்ந்து சென்னைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றுளார். கோவை, அரியலூர் அரசு கலைக் கல்லூரிகளில் பணியாற்றி இதுபோது சென்னை மாநிலக்கல்லூரியில் சிறக்கிறார். அமைதியும் இனிமையும் மிக்க இவர் எழுத்தில் இறங்கினால் மிக்க பயனாகும்.

**சு. பாலச்சந்திரன்:** *15-6-1938.* இராசபாளையம். பச்சையப்பன் கல்லூரி பயந்தவர். தஞ்சை சரபோஜி, குடந்தை, மாநிலக் கல்லூரி, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னைப் பல்கலைக்கழக இலக்கியத்துறை அஞ்சல்வழிக் கல்வித்துறைகளில் பணியாற்றி இதுபோது மாநிலக் கல்லூரியில் பேராசிரியர். வெளிநாடுகள் சென்று வாகை சூடி வந்தவர்; அமெரிக்காவில் ஸ்டோனி புருக் நியூயார்க் அரசினர் பல்கலைக் கழகம், சிகாகோ நார்த் வெஸ்ட்டர்ன் பல்கலைக் கழகத்திலும் இலக்கியத் துறையில் யுனெஸ்கோ ஆய்வறிஞராக ஐந்து திங்கள் ஆற்றியவர். 64இல் எம். லிட் A Critical Study of Manonmaniyam. பி. எச். டி கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஒரு திறனாய்வு. இசையோடு ஏற்றமுடன் பேசும்

ஆற்றலர். படைப்புகள்: இலக்கியத் திறனாய்வு, கவிமணி ஒரு திறனாய்வு, அயல் நாடுகளில் என் அனுபவங்கள், இலக்கிய இயக்கங்களும் திறனாய்வும் இவரின் இலக்கியப்பணிக்கு ஊற்ற மாக அமையும் இன்துணைவி கோமதி. **முகவரி :** கோமதி நூலகம், மனை எண் 474. முதல் முதன்மைச் சாலை. வீட்டு வசதித்திட்டம், திருவான்மியூர், சென்னை-41.

**ம. செ. இரபிசிங்:** 22-6-1939. இருளப்பபுரம். மாநிலக் கல்லூரி மாணவர். சென்னை அரசினர் கலைக் கல்லூரி பொன்னேரி, நந்தனம் போன்றவற்றில் பணியாற்றி, பூண்டி புஷ்பம் கல்லூரியில் முதுகலைப் பேராசிரியராக ஈராண்டுகள் பணிபுரிந்து இதுபோது மாநிலக் கல்லூரியில் உள்ளார். இந்தி, வடமொழி, மலையாளம், செர்மன் மொழிகளும் கற்ற இவர், அகிலனின் பொன் மலர்- ஓர் ஆய்வு, மாணிக்க வாசகரின் நீத்தல் விண்ணப்பம்-ஓர் ஆய்வு, தமிழ் இலக்கிய வரலாற்றுச் சுருக்கம், அண்ணாவின் மொழி நடை போன்றன தந்துள்ளார். செயல் திறம் சான்றவர். பூண்டியில் இருந்த போது பாரதியார் தொடர் கருத்தரங்குகள் போன்றன நடாத்திச் சாதனை புரிந்துளார். டாக்டர் பட்டம் பெற்ற இவரின் **முகவரி:** 8 ஏ. இரண்டாம் அவென்யூ. இந்திரா நகர், சென்னை-30.

**சி. இ. மறைமலை:** 14-12-1946. அறிஞர் சி. இலக்குவ னாரின் மகன். பயின்ற மாநிலக் கல்லூரியில் மாத்தமிழ் வளர்த்து வருகிறார். வல்ல சொற்பொழிவாளர், நல்ல எழுத்தாளர், சிறந்த சிந்தனையாளர், கூர்த்த மதியர். இலக்கியக் கொள்கை-திறனாய்வு இருதுறையிலும் ஏற்றம் பெற்றொளிர்கிறார். நூல்கள்: இலக்கியக் கொள்கைகள், இலக்கியத் திறனாய்வு - ஓர் அறிமுகம். **முகவரி** 14. ஆறுமுகம் செட்டி தெரு. திருவல்லிக்கேணி. சென்னை-5.

**ப. அன்பு:** திருவையாறு அரசர் கல்லூரியில் பயின்று படிப் படியே எம். ஏ. தேறி நந்தனம் கலைக் கல்லூரியில் பணியாற்றி இதுபோது மாநிலக் கல்லூரியில் பணிபுரிகிறார். ம பொ. சி. யின் இலக்கிய நூல்கள்-ஓர் மதிப்பீடு என ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுளார். கனிவும் நெளிவும் கொண்டவர். இன் துணைவி **அன்பு அரசி** கவிராச பண்டிதர் ஜெகவீர பாண்டிய னாரின் பெயர்த்தி; காதல் மணம். ராணி மேரிக் கல்லூரிப் பேராசிரியை. தாத்தா ஜெகவீர பாண்டியனாரின் 'கம்பன் கலை நிலை' என்ற அரிய நூலையே ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுளார். அமைதி சான்றவர். இனிய இலக்கிய இணையான இவர்கள் வாழ்வாங்கு வாழ்பவர்கள்.

**தி. வ. மெய்கண்டார்:** 15-10-1938. சிதம்பரம். தில்லை விடங்கன் மாரி முத்தாப்பிள்ளையின் 7ஆவதுதலைமுறையினர், வெண்பாப்புலி வேலுசாமிப் பிள்ளையின் பேரர், வரதராச பிள்ளை மகன். ஆறுமுக நாவலர் பள்ளி, சென்னை ராம கிருஷ்ண உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு. அண்ணாமலை பி. ஓ. எல். 62-64 மின்துறை இளநிலை எழுத்தர், 64-65 முத்தியால் பேட்டை உயர்நிலைப் பள்ளி, 65-67 வில்லிவாக்கம் சிங்காரம் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர், 67-68 வேலூர் ஊரிஸ் கல்லூரி, 68 முதல் மாநிலக் கல்லூரி விரிவுரையாளர்.

56 முதல் 25 சிறுகதை, 3 நாடகம், 250 விமர்சனக் கட்டுரைகள். கால் நூற்றாண்டாக 30 இதழ்களில் எழுதி வந்திருக்கிறார். அய்யாவும் அண்ணாவும் இரட்டைக் குழல் துப்பாக்கி, சிலம்புச் செல்வருக்கு டாக்டர் பட்டம், சாமி சிதம்பரனார், கவிஞர் கருணானந்தம் போல்வன நூல்கள். பொதுவாகத் தமிழ் எழுத்தாளர்கள், குறிப்பாகத் திராவிட இயக்க எழுத்தாளர்கள் பற்றிய ஆய்வுகளைத் தனிப்பட்ட முறையில் நிகழ்த்தி இருக்கிறார். 79 மே யாழ்ப்பாணத் திருக்குறள் மாநாட்டில் கலந்து கொண்டார்.

சிலம்புச் செல்வர் தொடர்ப் பொழிவுகள் நிகழ்த்துதற் கெனவே 76இல் 'மயிலை இலக்கிய வட்டம் தோற்றி, **சிலப்பதிகாரத்** தொடர்ச் சொற்பொழிவு 13 திங்கள் நடாத்தச் செய்தார்.இறுதியுரையின்போது இலக்கிய கிரீடம் சூட்டினார். அடுத்து, 81 செப் முதல் **பாரதி** தொடர்ப் பொழிவு 12 திங்கள் நடாத்தச் செய்தார் நீதிக்கட்சி பொன்விழா மலர்க் குழு, சர்.பி.டி.ராசன் மலர்க்குழு இப்படிப் பலவற்றில் பங்கு பற்றிப் பேருழைப்பு நல்கியவர். நாமக்கல் கவிஞர் நினைவுக் குழுச் செயலராக 74 முதல் ஆண்டுதோறும் பிறந்த நாட் பெருவிழா எடுத்து வருகிறார். உண்மைத் தொண்டர்கட்கு உதவுவதில் முன் நிற்பார். கவிஞர் கம்பதாசன் வறுமையில் வாடியபோது மாதந்தவறாது பணம் தந்தும் தம் அறையில் வைத்தும் பேணியுள்ளார்.

இவர் பெருமைக்கு இரண்டு காட்டலாம்: பாரதி சொற்பொழிவுக்குத் தலைமை தாங்கிய சௌந்தரா கைலாசம் அம்மையார், தம் கணவர் முன்னிலையிலேயே (ஆண்டவனே! என் ஆயுளையும் மெய்கண்டார்க்கே அருள் எனும் தத்துவம் ததும்ப) அருகம்புல் கட்டினை வழங்கினார்! ம.பொ சி. 'சிலப்பதிகார யாத்திரை' நூலினை மெய்கண்டார்க்கே காணிக்கையாக்கினார்!

அயராத உழைப்பும், ஆக்கபூர்வமான தமிழ்த் தொண்டும், செயல்திறன்மிக்க சிந்தனையும், உதவிடும் உயர்பண்பும் கொண்ட இவரின் **முகவரி:** எச்.ஐ.ஜி 42/9, மேற்கு அவென்யு, காமராஜ் நகர், சென்னை-41.

**ஜெ. ஸ்ரீசந்திரன்:** 1934 பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் முதுகலை பயின்று அ.மா. ஜெயின் கல்லூரியில் பணியாற்றி வருபவர். சமணத்தைச் சார்ந்தவர். மனோன்மணீய விளக்கப் பதிப்பு புகழ் வாய்ந்தது. ஆங்கில இலக்கணத்தை அருந்தமிழில் அழகுறப் பன்னூல்களாய் வடித்த பெருமையர். தமிழறிந்த மாணவர்கள் ஆங்கிலத்தில் தேர்ச்சி பெற்று எழுதவும் பேசவும் கூடிய முறையில் English grammar படைப்புகள் பாராட்டுதற்குரியன. மென்மை மிக்கவர், தன்மையானவர் **முகவரி:** வர்த்தமானன் பதிப்பகம், 171, சரசுவதி தெரு மகாலிங்கபுரம், சென்னை-34.

**நாகநந்தி:** (தி. வேணுகோபாலன்). 19-1-1935. தஞ்சாவூர் அய்யம்பேட்டை. சென்னை மாநிலக் கல்லூரி எம்.ஏ. தமிழ் இலக்கியம். சென்னை மீனம்பாக்கம் அ.மா. ஜெயின் கல்லூரித் தமிழ்த் துறைப் பேராசிரியர். ஆனந்த விகடனில் சிறுகதைகள் வரைந்துள்ளார். சீரிய சிந்தனையாளர், சிறந்த பேச்சாளர்.

படைத்த நாடகங்கள்: மனோகரின் 'துரியோதனன்' மேஜர் சுந்தரராஜனின் 'ஜஸ்டிஸ்'. வள்ளுவர்-கம்பர்-பாரதி மூவரிடத்திலும் தோய்ந்தவர். இவர்களோடு இணையாக இளங்கோவைச் சேர்க்க முடியாது என்று ம.பொ.சி. முன்னிலையிலேயே துணிந்து கூறிய நக்கீர நேர்மையர்-துணிவர். இலக்கண இலக்கியங்களை எழுத்தெண்ணிப் படித்தவர். வசதியின்மை கரணியமாக நூல்களை இரவல் வாங்கி எழுதிப் பயின்றவர்; நெட்டுருப் பண்ணும் நீர்மையர். நல்ல புலமையாளர், பழந்தமிழ் முதல் புதுத்தமிழ் வரை ஆய்ந்து தோய்ந்தவர்.

பாரதியின் ஒவ்வொரு சொல்லையும் ஆராய்ந்து இவர் பொழிவதைக் கேட்டவர்கள், 'ஆகா! இவரன்றோ பாரதி ஆய்வர்! இவரன்றோ பாரதி அறிஞர்! பாரதியில் இவரை மிஞ்ச எந்தக் கொம்பனாலும் முடியாது' என்று பாராட்டி வணங்குவர்! ஒவ்வொரு சொல்லிலும் எழுத்திலும் பாரதியைக் காண்பவர்: 'இப்போதைய பாரதியன்'பர்களில் இவரே தலையாயவர், இவரை விட்டால் தக்கவர் இல்லை எனத் தேர்ந்து ஓர்ந்து உரைக்கிறார் எஸ். ஆர். சுப்பிரமணியம். 'பாரதியும் திருவள்ளுவரும்' என்ற கட்டுரைத் தொடர் கவிதா

மண்டலத்தில் எழுதிப் பெரும் பரபரப்பூட்டியவர். கலைக் கழகத்திற்குப் பாஞ்சாலி சபதத்தை நாடகமாக வடித்துக் கொடுத்து அடலேறென நடித்தவரும் கூட. எம்.பில்: திருக் குறள் புறநானூறு இறைமாட்சி ஒப்பீட்டாய்வு. **முகவரி:** 22, மூன்றாம் நெடுஞ்சாலை, நங்கைநல்லூர், சென்னை-600 061.

**க. ப. அறவாணன்:** (அருணாசலம்). 9-8-1941. தஞ்சை மாவட்ட கடலங்குடி. விஷ்ணுபுரம் ஜார்ஜ் உயர்நிலைப் பள்ளி, அண்ணாமலை புலவர், பி. ஓ. எல்; கேரள பல்கலைக் கழக எம். ஏ. 67, M Litt. 73, நன்னூலும் அதன் உரைகளும் கி. பி, 10ஆம் நூற். வரை; Ph. D. 76, A Critical study of the differences in the commentaries of Tolkappiam with special reference to Akathinai and Purathinai. பாபநாசம் திருவள்ளுவர் கல்லூரி முதல்வர். பச்சையப்பன் கல்லூரித் துணைப் பேராசிரியர், ஆப்பிரிகாவில் டாக்கர் பல்கலைக் கழகத் துணைப் பேராசிரியர், 83 முதல் லயோலா கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர். இலக்கணம், மொழியியல், திறனாய்வு, மானுடவியல் நான்கும் வல்லவர்.

திட்டமிட்டு வரையறை செய்து கொண்டு வாழ்பவர். தமிழ்ப்பணி திறமாகச் செய்பவர். 30க்கும் மேற்பட்ட பயனான நூல்கள் : Research Papers on Tamilology, தொல் காப்பியக் களஞ்சியம், எழுநூறு ஆண்டுகளில் நன்னூல், அவி நயம், அமுதசாகரம், இந்திர காளியம் (இலக்கணம்); அற்றை நாட் காதலும் வீரமும், கவிதையின் உயிர் உள்ளம் உடல், கவிதை கிழக்கும் மேற்கும், கலிங்கத்துப் பரணி ஒரு மதிப்பீடு, சைனரின் தமிழிலக்கண நன்கொடை (திறனாய்வு); மர வழி பாடு, பாம்பு வழிபாடு, The Serpent cult in Africa and Dravidian India, An Anthropological study of Dravidian Africa, தமிழரின் தாயகம் (மானுடவியல்); பயண அனுபவங்களின் பாதை வெளிச்சங்கள்; அவள் அவன் அது, நீ ஒரு பண்புத் தொகை, புரட்சிப் பொறிகள். பல தமிழக அரசின் பரிசு பெற்றவை.

நற்றுணை: **தாயம்மாள் அறவாணன்:** 23-5-1944. திருவாவடுதுறை சமயப் பரப்புநர் சித்தாந்தப் புலவர் பகவதிப் பெருமாள் பிள்ளை மகள். செல்லம்மாள் கல்லூரித். தமிழ்ப் பேராசிரியை. டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். நூல்கள் : புதிய கோலங்கள், பெண் மொழி, பல்லாங்குழி-திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு. மணம் 69இல்; மக்கள் அறிவாளன் செந்தில், அருள் செங்கோர். **முகவரி :** தமிழ்க் கோட்டம், 15, முனிரத்தினம்

தெரு, அய்யாவு குடியிருப்பு, அமைந்தகரை, சென்னை-29. (421728).

**ப. இராமன் :** *15-7-1930.* தி. கொக்குளம். விவேகானந்தா கல்லூரித் துறைத் தலைவர். தமிழ் இலக்கிய வரலாறு புகழ் சான்றது. பாம்பன் சுவாமிகளின் படைப்புகளை ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். கனிவும் அமைதியும் இறைமை யுணர்வும் மிக்கவர். மதுரைத் தமிழ்ச் சங்கப் பாராட்டுப் பட்டம் பெற்றவர். **முகவரி :** 44, இராமகிருட்டிண மடம் சாலை, மயிலை, சென்னை-4.

**இரா. சேது :** *21-4-1937* சிங்கம்புணரி, சென்னை பச்சையப்பன் கல்லூரி (62) மாணவர். விவேகானந்தர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். 79இல் இருபதாம் நூற்றாண்டுச் சமுதாய மறுமலர்ச்சிக்கு அண்ணாவின் கதைகளின் கொடை. நூல் : அண்ணாவின் கதை இலக்கியம், குறள் மாண்பு, கம்பன் பாத்திரப் படைப்பு, பாரதிதாசன் கவிதைத்திறன்.

**த. புருஷோத்தமன் :** *6-7-1936.* சென்னை. சென்னை மாநிலக் கல்லூரி மாணவர். புதுக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். கல்லூரிப் பொதுக் கட்டுரை, கலையரசி கிளியோபாட்ரா (நாடகம்) போன்றன தந்துள்ளார். இவரும் யோகீசுவரரும் இரட்டையர், எப்போதும் எங்கும் ஒன்றாகவே இருப்பர்; நன்றாகவே இணைந்து இலக்கியப் பணி ஆற்றி வருகின்றனர். கருநிறத்து அழகர், 19, ஒற்றவாடைத் தெரு, ஆயிரம் விளக்கு, சென்னை-6.

**வே. கிருட்டிணசாமி:** *(கலைமணி) 24-11-1929.* தெ ஆ விழுப்புரம் வட்ட அரியலூர் வேலாயுதம் பிள்ளை: தாயாரம்மாள். 48 இல் சிதம்பரம் ராமசாமி செட்டியார் நகர உயர் நிலைப் பள்ளி இறுதி, 50 இல் அண்ணாமலை இன்டர், 54 இல் சென்னை மாநிலக் கல்லூரி பி. ஏ. ஆனர்சு. பல உயர்நிலைப் பள்ளிகளிலும் ஊட்டி அரசு கலைக் கல்லூரியிலும் பணியாற்றி 58 முதல் சென்னை கிருத்துவக் கல்லூரி; இதுபோது துறைத் தலைவர். 44 முதல் எழுதி வருகிறார். நாடகத்துறையில் நல்ல ஈடுபாடு. சிறுகதைகள் 150. 25 நாடகங்கள் புனைந்துளார். 'சான்றோர் பழிக்கும் வினை' (பரிசு பெற்றது). பெண்களை நம்பலாமா? வஞ்சகக் கூட்டம் வளர்கிறது. நடிகவேள் எம் ஆர். ராதா. காதற் கடிதங்கள், பனித்திரை, சி. ஐ. டி. சித்ரா, 52 இல் மணம். மனைவி கமலா; மக்கள் சுந்தர பாண்டியன். பொற்கொடி, குலோத்துங்கன், விஜயலட்சுமி, இளங்கண்

அரங்கன் **முகவரி :** 5ஏ, LIG Block. Ponnambalam Salai, K. K. Nagar, Madras-78.

**தி. இராசகோபாலன் :** *12-2-1941.* திருவாரூர். கழக உயர் நிலைப்பள்ளி, திருவையாறு அரசர் கல்லூரி, அண்ணாமலை பி. ஓ. எல்; எம், ஏ., ஆரூர் கழக உயர்நிலைப் பள்ளி, திருச்சி பிஷப் ஹீபர், அதிரை காதிர் முகைதீன் கல்லூரிகளில் பணி யாற்றி இதுபோது சென்னைக் கிருத்துவக் கல்லூரிப் பேராசிரியர். திருப்பனந்தாள் தேவாரப் பரிசு, காரைக்குடி திருக்குறட் கழகப் பரிசுகள் பெற்றவர் பயிலும்போதே!

20 ஆண்டுகளாகத் தமிழக மேடைகளில் கருத்தரங்கம் பட்டி-வழக்காடுமன்றங்களில் சக்கைப்போடுபோட்டு வருபவர். வடநாடுகளிலும் சென்று வாகை சூடி வருகிறார். வானொலி தொலைக்காட்சி வழக்காடு - பட்டிமன்றங்களிலும் இவர்தாம்!

நாடகங்கள் புனைவதும் நடிப்பதும் நாட்டம்; சென்னை வானொலி பகுதி நேர நடிகர். 'காதல் பரிசு' ஆரூரில் பாவேந்தர் தலைமையிலும், 'கருணாகரத் தொண்டைமான்' அய்யாற்று அரசர் கல்லூரியிலும், 'டாக்டர் எமன் அண்ணா மலையிலும், 'மாங்கனி' புலவர் மன்றிலும் அரங்கேறின. டாக்டர் பட்டத் தலைப்பு 'வரலாற்றுத் தமிழ் நாவல்களில் வரலாற்றுச் செய்திகள்'. **முகவரி :** 37, ஆசிரியர் குடியிருப்பு, கிறித்தவக் கல்லூரி வளாகம், கிழக்குத் தாம்பரம், சென்னை-59.

**மு. கோவிந்தரரசன்:** *7-3-1936.* தஞ்சை மாவட்டக் கூத்தங்குடி. அண்ணாமலையில் பயின்று சென்னை ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் பி.எட். பட்டம்பெற்று அதே கல்லூரியில் பல்லாண்டுகள் பணியாற்றி, அரியலூர் கலைக் கல்லூரியில் பணிபுரிந்து இதுபோது பள்ளிக் கல்வித் துணை இயக்குநராக (SCERT) இலங்குகிறார். புறநானூற்றுக் கட்டுரைகள், பயிற்றுப் பயிற்சியும் மொழியாசிரியர்களும் (தமிழரசின் பரிசு), நற்றமிழ் பயிற்றலின் நோக்கமும் முறையும், குழந்தை இலக்கியக் கொடைகள்: இருட்டறையிலே உலகம், மழலைச் செல்வம் (கவிதை) எம். பில், டாக்டர் பட்டங்களும் பெற்றுளார். **முகவரி:** பள்ளிக் கல்வி இயக்குநரகம், சென்னை-6.

**கு. விவேகானந்தம்:** *1941.* மிரானூர். அண்ணாமலையில் தமிழ் பயின்று தஞ்சை சரபோஜி கல்லூரியில் பணியாற்றி, இது போது சென்னை நந்தனம் கலைக் கல்லூரியில் பேராசிரியர். அண்ணாவின் 'தம்பிக்கு' - கடிதங்கள் பற்றி ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுளார். 'அண்ணாயியம்' என நூலாகவும் வந்துளது.

**வெ வரதராசன்:** 10-2-1931. பட்டாபிராம் இந்துக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், துறைத் தலைவர். வழங்கியன: தமிழும் தேனும், கட்டுரை எழுதும் கலை; கலைஞர் வெண்பா, தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும். **முகவரி:** பட்டாபிராம், சென்னை-72.

**செ. உலகநாதன்:** 15-7-1933. பச்சையப்பனில் 58இல் பி. ஏ ஆனர்சு முடித்துத் திருத்தணி கலைக்கல்லூரியில் பேராசிரியர். கள்ளமில் வெள்ளை உள்ளம் படைத்தவர். உலகம் பொல்லாதது, வேரில் பழுத்த பலா போன்ற புதினம் படைத்துளார். தமிழ்ப் பல்கலைக் கழகக் குறுகிய கால மான்யம் பெற்றவர். **முகவரி:** 26, சுப்பிரமணியபுரம், அரக்கோணம் சாலை, திருத்தணி.

**இரா. அரசுக் கண்ணன்:** (இராசகோபால்). 6-12-1939. பட்டுக்கோட்டையையடுத்த வேப்பங்குடி. இராமசாமி: சீதையம்மாள். 57இல் புதுக்கோட்டை டி.இ.எல்.சி. உயர்நிலைப் பள்ளி, 62இல் திருச்சி வளவர் கல்லூரி பி ஏ.(வரலாறு), 63இல் ஒரத்தநாடு கல்வியியல் கல்லூரி பி.டி தனித்து 68இல் தமிழ் எம்.ஏ., 80இல் பி ஜி. எல். 63-68 முத்துப்பேட்டை உ.ப. 68-72 பூவைமாநகர்-உ.ப; 72-86 தஞ்சை சரபோஜி கல்லூரி, 86 முதல் செங்கற்பட்டுக் கல்லூரி

85இல் தொல் வனப்புக் கோட்டு வகைமை விளக்கி 'இலக்கிய வனப்புகள்' என்றாய்ந்து டாக்டர் பட்டம். சங்க இலக்கியத்தில் பெயர்களைத் தேடும் பாடல்கள், பத்துப் பாட்டில் இரட்டைப் பாட்டுக்கள்; கவிதையாக முப்பெரும் பாட்டு,நிகரமை வழிப்பாடல்கள், மாலைக் காற்று போன்றன படைப்புகள். **முகவரி:** 11/516, பங்களாத் தெரு, மகர்நோன்புச் சாவடி, தஞ்சாவூர்-1.

**எஸ் பெருமாள்:** 17-3-1933. வேலூர் பச்சையப்பன் கல்லூரி மாணவர். சேலம், வேஹர் போன்ற அரசு கலைக் கல்லூரிகளில் பணியாற்றி இதுபோது சேயாறு கல்லூரியில் சிறக்கிறார். கலீல் ஜிப்ரானின் 'முறிந்த சிறகுகள்' பெயர்ப்பு மைய அரசின் ரூ. 1000 பரிசினைப் பெற்றது. அன்பின் வடிவம் டாக்டர் ஐடா. (வாழ்க்கை). **முகவரி:** 21, டாக்டர் ஐடாஸ்கடர் சாலை, வேலூர்-632 012.

**பகவத்சிங்:** (முருகுபாரதி). 2-2-1944. மதுரை. 65இல் மதுரைக் கல்லூரி இளம் அறிவியல் (வேதியியல்) தமிழில் பல்கலை முதன்மை. தியாகரர்சர் கல்லூரி முதுகலை (தமிழ்).

இளங்கோ மன்ற மாணவர் தலைவர். 69இல் மதுரை மாவட்ட அனைத்துக் கல்லூரி இந்தி வல்லாண்மை எதிர்ப்புக் குழு மாணவர் தலைவர். மதுரைத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம், தொல்காப்பியர் தமிழியக்கம், எழுத்தாளர் மன்றச் செயலர். உதகை அரசினர் கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரிய ராக இருந்தபோது, உதகைத் தமிழ் எழுச்சி மன்றம் (74) சிறக்கப் பணியாற்றினார்.

இதுபோது திருவண்ணாமலை அரசு கலைக் கல்லூரியில் பணியாற்றுகிறார். கவிஞர், பேச்சாளர், கட்டுரையாளராக அமையும் நல்ல மெய்த் தமிழ்ப் பற்றாளர், தொண்டுச் செல்வர். தமிழ்த் தொண்டு சமூக நலப்பணி இரண்டினையும் தன்னுயர்வு மறந்து குடும்பத்தையும் மறந்து கைப்பொருளை யும் இழந்து ஆற்றும் அன்பர். 'ஒருமையின் உலகெலாம் ஓங்குக (வள்ளலார்), துன்ப நினைவுகளும் சோர்வும் பயமு மெல்லாம் அன்பில் அழியும், அன்புக்கு அழிவில்லை (பாரதி) வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும் தோளெங்கள் வெற்றித் தோள்கள்......எங்கள் உள்ளம் (பாவேந்தர்) என்ற திண்ணிய எண்ணத்தர்.

**அர. இராமானுஜம் பிள்ளை:** *12-5-1933.* தெ.ஆ. குறிஞ்சிப் பாடி. கலிங்கத்துக் கைதி, தொண்டைமான் இளந்திரையன், வானுலகில் வள்ளுவர் போன்ற நாடகங்களையும்; இளமை வகுத்த வழி, மக்கட்பேறு நமது வழிகாட்டிகள் என்ற கட்டுரை நூல்களையும் படைத்தவர். சிறந்த பொறுப்பான கடலூர் அரசினர் கலைக் கல்லூரிப் பேராசிரியர். **முகவரி:** 5, தெற்குக் கல்லறைத் தெரு, கடலூர் துறைமுகம்-607003.

**சீ. சுந்தரேசன்:** *1926.* குடந்தையடுத்த வண்டுவாஞ்சேரி. அண்ணாமலையில் தெ.பொ.மீயின் அன்புமுதுகலை மாணவர். கவிதை வளம் சான்றவர். குடந்தை, தஞ்சை சரபோசி, மன்னை, இராமநாதபுரம் கல்லூரிகளில் பணியாற்றி இது போது குடந்தைக் கல்லூரிப் பேரா. மாணவர் மனங்கொள்ளப் பாடம் நடாத்துவதில் மன்னர். இலக்கணம், சங்க இலக்கியம் பாரதிதாசனில் திறன் சான்றவர். எதையும் ரசித்து ருசித்து வக்கணையோடு விளம்பும் வளமையர். நுட்பமதியும் நுண்ணிதின் ஆயும் திறனும் மிக்கவர். நந்தன் சரித்திரக் கீர்த்தனை பற்றி எம்.பில். எழுத்தில் தம் எண்ணங்களை வடிப் பின் வருங்காலத்துக்குப் பயனாகும்!

**பொ. அழகு கிருஷ்ணன்:** *13-5-1943.* நெல்லை விளாத்தி குளம் வட்டமேலக் கல்லூரணி. பொன்னழகு: மாரியம்மாள்,

60இல் மதுரைக் கல்லூரி உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு; புகுமுக வகுப்பு முதல் முதுகலை வரை (68) மதுரை தியாகரசர் கல்லூரி. மதுரைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் 77இல்; 'சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும்'. 75-80 திருவாரூர் கல்லூரி, 80 முதல் குடந்தைக் கல்லூரிப் பேராசிரியர். முதல் கதை 'ஆண்டவன் கட்டளை' 65இல்; மாணவர் மன்றத்தின் கல்லூரிகட்கான சிறுகதைப் போட்டியில் முதற் பரிசு. 66இல்; 'கங்கையும் காவிரியும்'. சிறுகதை நூல்கள்: நிறங்கள், மழைக் கஞ்சி. 75இல் மணம், மனைவி ராஜகுமாரி; மக்கள் குருநாதன், லட்சுமி. **முகவரி:** உப்புக்காரத் தெரு, குடந்தை.

**ஜி. ஆர். கிருட்டிணமூர்த்தி :** 2-6-1934. கோபிசெட்டிப் பாளையம், இராமசுப்பன் : அம்மணி அம்மாள். 51இல் வைர விழா உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு; 55 சென்னை லயோலாக் கல்லூரி இளங்கலை, 60 மாநிலக்கல்லூரி முதுகலை. பணி; 60-63. சென்னை விவேகானந்தா கல்லூரி, 6‍ முதல் பூண்டி புட்பம் கல்லூரிப் பேராசிரியர். 82இல் முனைவர் பட்டம், 'அருணகிரிநாதரின் திருப்புகழ்'. கம்பன் பாரதி இரு கண்கள்; கருத்தரங்கம் பட்டிமன்றம் இரு கால்கள்; இசை உயிர், 100க்கு மேலான இசைப்பாக்கள் யாத்துள்ளார்-தமிழில் நல்ல இசைப்பாக்கள் இல்லை என்ற குறை தீர! நல்ல கவிஞர், வல்ல பேச்சாளர்-வகுப்பை வாகாக நடத்துவதிலும் பாகாகப் பாடம் போதிப்பதிலும் மிகச் சீரியர். பாடிப் பாடம் நடத்துவதில் படு சூரர். அவையின் நெளிவு சுழிவறிந்து பேசி வசப்படுத்தும் பெற்றியர். பேசும்போதும் பாடம் போதிக்கும்போதும் நகைச்சுவை நிரம்பிவரும். **முகவரி :** 1869, மேல வீதி, தஞ்சாவூர்-9.

**ந. மெய்ப்பொருள் :** 13-12-1937: தஞ்சை மாவட்ட அம்மாப் பேட்டை. நடராசன்: பாப்பம்மாள். கழக உயர்நிலைப்பள்ளி இறுதி 52இல், குடந்தைக் கல்லூரி இடைநிலை வகுப்பு 54; ஒரத்தநாட்டில் ஆரம்ப ஆசிரியர் பயிற்சி 58; பி. ஏ., எம். ஏ. தனிப்படிப்பு; எம். பில், 79. தொடக்கப்பள்ளித் தலைமை ஆசிரியர் 59-68; பூண்டி புட்பம் கல்லூரி ஆங்கிலப் பயிற்றா சிரியர், தமிழ்த்துணைப் பேராசிரியர். 76 முதல் பட்டிமன்றம் வழக்காடு மன்றம் தொடர் சொற்பொழிவு மூன்றிலும் 20 ஆண்டுகளாக முனைவு. ஏடுகளில் சிறுகதைகள் கட்டுரைகள் தீட்டுகிறார். சமயத் தமிழ் இலக்கிய வளமை மிக்கவர். மாண வர் உவந்தேத்தும் நல்லாசிரியர். தவத்திரு காத்தையா

சுவாமிகள் 'ஞானத் தமிழ் வித்தகர்' பட்டம் வழங்கியுள்ளார். **முகவரி**: அம்மாம்பேட்டை.

**அ. தட்சிணாமூர்த்தி**: 10-4-1938. தஞ்சையடுத்த நெடுவாக் கோட்டை. அய்யாசாமி : இராசம்மாள், மன்னார்குடி பின்லே உயர்நிலைப்பள்ளி இறுதி 55இல்; குடந்தைக் கல்லூரி இடைநிலை 57இல்; அண்ணாமலை ஆனர்சு 61இல்; பி.எட். 62இல்; எம். பில். 'ஐங்குறுநூறு ஓர் ஆய்வு' 78; பி. எச். டி. 85இல்; 'சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்' 62-65 ஆசிரியர், வடபாதிமங்கலம் சோமசுந்தரம் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி, திருவாரூர்; 65-67 மன்னம்பந்தல் ஏ. வி. சி. கல்லூரி விரிவுரையாளர்; 67 முதல் பூண்டி கல்லூரிப் பேராசிரியர். சங்க இலக்கியம், தமிழர் பண்பாடு - இரண்டிலும் தனித்திறம் வாய்ந்தவர். பரந்துபட்ட பேரறிவும், பல்துறைப் பட்டறிவும் மிக்கவர். ஒரு நடமாடும் நூலகம், நிரம்பப் படித்து நிரல்பட நவிலும் நலத்தர். இசையுடன் பேசும், பாடம் நடாத்தும் பாங்கினர். ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் உத்தமர். அரிய படைப்பு: தமிழர் நாகரிகமும் பண்பாடும் (73). **முகவரி** 'மங்கை இல்லம்', 205, புட்பம் காலனி, அருளானந்த நகர், தஞ்சாவூர்-7.

**இரா. சண்முகவேலு** : 6-7-1939. தஞ்சை மாவட்ட வலங்கைமான் வட்ட சினனகரம். இராசகோபால் : கனகரெத்தினம். 56இல் குடந்தை சிறிய மலர் உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு; 61இல் குடந்தை அரசினர் கல்லூரி இளங்கலை தமிழ், 66இல் ஒரத்தநாடு ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி பி.டி; 80இல் எம் பில் (இந்திரா பார்த்தசாரதியின் சிறுகதைகள் ஒரு மதிப்பீடு); 87இல் பி.எச்.டி. (தற்காலத் தமிழ்ப் புனை கதைகளில் சோதனை முயற்சிகள்).

63இல் அரக்கோணம் மாசிலாமணிமுதலியார் உயர்நிலைப் பள்ளி, 64 கோவை நகராட்சி நடுநிலைப்பள்ளித் தமிழாசிரியர், 65 ஒரத்தநாடு உயர்நிலைப்பள்ளி பட்டதாரி ஆசிரியர், 67இல் திருப்பராய்த்துறை ராமகிருஷ்ண குடில் வித்தியாலயம், 68 முதல் பூண்டி புட்பம் கல்லூரிப் பயிற்றுநர், துணைப்பேராசிரியர், பேராசிரியர்.

கவிதை(600) குறுங்காவியம், கட்டுரை, மொழி பெயர்ப்பு, திறனாய்வு நான்கிலும் வல்லார், தற்காலத் தமிழிலக்கியத்தில் ஈடுபாடுடையவர். நூல்கள் : கதையாசிரியர்களும் உத்திகளும். தற்கால இலக்கியம் பற்றிய நல்ல நூலகம் வைத்து

ளார்; 3000 நூற்களுக்குமேலது. கள்ளமில் உள்ளத்தர். நண்பர் கட்கும் மாணாக்கர்க்கும் நூல்களும் கருத்துக்களும் தந்துதவும் தாளாளர். **முகவரி:** 96, தெற்கு வெட்டுக்காரத் தெரு, தஞ்சாவூர் - 1.

**மு. அப்துல் கறீம்:** அழகப்பா கல்லூரி மாணவர். அதிராமப் பட்டினம் காதிர் முகைதீன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்-முதல்வர். சிறந்த பேச்சாளர். சீரிய எழுத்தாளர். கட்டுரைத் திறன், திருவள்ளுவர் திருவுள்ளம், பாரதி உலககவி, பாரதிதாசன் பாட்டுத்திறம், சீறாப்புராணத் திறனாய்வு; நம்பிக்கையும் நற் செயலும், முகையித்தீன் புராணம் (இரு பகுதி), குத்பு நாயகம். முகைதீன் புராணம்பற்றி ஆராய்ந்து 87இல் டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். **முகவரி** : அதிராம்பட்டினம், தஞ்சை மாவட்டம்-614 701(36).

**கருவை பழனிச்சாமி** : கருவூர் நகராட்சி உ. ப., சென்னைப் பச்சையப்பன் பி.ஏ., ஆனர்சு. சேலம், மன்னை கல்லூரிகளில் பணியாற்றி இதுபோது முசிரி கல்லூரித் தமிழ்த் துறைத் தலை வர். கா. சுப்பிரமணிய பிள்ளையின் தமிழ்ப்பணிபற்றி ஆராய்ந்து எம்.பில்., பாரதி புதிர், சிலப்பதிகாரப் புதிர் போன்றன படைப்புகள். அறிவுஜீவி, துருவித் துருவிப் பார்த் திடும் கருதுகோளர். ஏதேனும் இன்றமிழுக்குச் செய்துகொண் டிருக்க வேணும் எனும் தும்பி. அச்சகமும் பதிப்பகமும் வைத் துப் பிறர் நூலையும் வெளியிட்டு வருகிறார், **முகவரி** : சுங்கங் கேட், திருச்சி சாலை, கருவூர்.

**ஆ. பிரான்சிஸ் அந்தோணி இராசு** : 5-3-1954. கடலூர் புது நகர். ஆசு கவி எஸ். ஆரோக்கியசாமி (1912-85) : தெரேசம் மாள், திண்டிவனம் புனித அன்னாள் உயர்நிலைப் பள்ளியில் தேறி, தனி முயற்சியாக 59இல் புலவர், 60இல் பி. ஏ., 64இல் எம்.ஏ. தமிழ்; ஓகியோ பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. (இத ழியல்) தேர்ந்தார். 87இல் டாக்டர் பட்டம் 'கிருத்துவ அம்மா னைகள் ஓர் ஆய்வு'. 13 ஆண்டுகள் பள்ளியிலும், 21 ஆண்டு கள் கல்லூரியிலுமாகப் பணியாற்றியுள்ளார். இதுபோது திருச்சி வளவர் தன்னாட்சிக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.

நூல்கள் : இதழியல் ஓர் அறிமுகம், தமிழர்க்கொரு நீதி நூல், மாபெரும் மறைத் தொண்டர். அமெரிக்கா கனடா ஐரோப்பிய நாடுகள் பயணம் செய்துள்ளார். அச்சுக் கலையில் தேர்ச்சி பெற்றவர். **முகவரி:** 'அந்தோணி குடில்', 35, வாத்துக் காரத் தெரு, உறையூர், திருச்சி - 3.

**கு. ப. கணேசன்:** 3-6-1944 திருச்சி குழுமணி பரமசிவம்: பெரியக்காள். 62 திருச்சி ஈ. ஆர். உ. ப; 63 காதர் முகைதீன் கல்லூரிப் புகுமுகம்; 66 திருச்சி வளவர் கல்லூரி பி. ஏ; 69 கோவை பி. எஸ். ஜி. எம். ஏ,. 70 பி. எஸ். ஜி, 70-79 பிஎச். டி; 78-84 தருமபுரி கலைக் கல்லூரி, 84- ஈ. வெ. ரா. கல்லூரிப் பேராசிரியர்களில் குறிப்பிடத்தக்கவர், கவனத்துக்குரியவர். கூறுபடு மதியும் மாறுபடு கதியும் திறனாய்வுத் தோய்வும் கொண்ட திறனி. திட்ப நுட்பமுடன் ஆய்ந்திடும் அறிஞர். பாரதிதாசனில் வல்லவர் 'கு.ப க. என்றால் பாவேந்தர் பாக்கள், பாவேந்தர் இலக்கியம் எனின் கு.ப க' என்னுமாறு துல்லியமாகக் கற்றவர். அதில்தான் டாக்டர் பட்டமும் பெற்றுவர். A Critical apprisal of Bharathidasan poems (76). கட்டுரைகள்: பார்தியின் சிந்தனைகள், பாவேந்தரின் சிந்தனை கள், நீடுதுயில் நீக்கப் பாடி வந்த நிலா; Dramatic monologues in Dasan's Poems, Question of climax in Puratcikkavi, Political & Social set up in Barathidasan.

கருத்தரங்குகளில் கு.ப. இருக்கிறார் என்றால், ஒரு கல கலப்பு அவையில், ஒரு விழிப்பு உரையாளரிடம் இருக்கும். கேள்விக் கணைகளைவாகாகத் தொடுப்பதில் வல்லவர், உரை யின் உயிர்நிலையில் கை வைத்திடுவார். எழுத்துரையாளர் தக்க பதில் தரும்வரை விடமாட்டார். அதுபோலவே தோதான தீர்வுகளையும் துணைக் கருத்துக்களையும் தந்திடு வார்.

பேச்சில் சதுரர். பளிங்குப் பேச்சு இவர் பேச்சு. தங்கப் பாளம்போல் கருத்துக்கள் வந்து விழும். பகுப்பும் வகுப்பும் தொகுப்பும் காணலாம். கிளர்ச்சியூட்டும் எழுச்சிப் பேச்சு கேட்டு பாரதிதாசனிலும் பிறவற்றிலும் பற்று ஆர்வம் பிறக்கும். துடிப்புமிக்கவர், துணிவானவர். சிறந்த போத காசிரியர். ஆய்வு வழிகாட்டுவதிலும் அலாதியானவர்; வித்தியாச மானவர். மனைவி பிரபா; மக்கள் 4+6 **முகவரி:** 24, பெரியார் சாலை, கே. கே. நகர். திருச்சி-21.

**மு. நிலாமணி:** (மு. இஸ்மாயில்). 1935. குமாரபுரம், பிஷப் ஹீபர் கல்லூரிப் பேராசிரியர். பொங்கும் பாங்கும் கொண் டவர். ஒப்பாய்வில் ஊற்றம் சான்றவர். மணிமேகலை முடியரசனின் பூங்கொடி ஒப்பிட்டு ஒரு நூலும் வெளியிட்டுள் ளார். கம்பராமாயணக் கிளைக் கதைகள்; டாக்டர் பட்டம் பெற்ற இவரின் **முகவரி:** 33, மூலக்கொல்லைத் தெரு, புத்தூர், திருச்சி-17,

**செ. ப. கணபதி:** *3-4-1937.* செண்பகராமபுரம். ஈபர் கண்காணியார் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். சொற் பொருளாய்வில் ஈடுபாடு. படைப்பு: ஒளிரும் உள்ளங்கள் (புதினம்), அறிவேந்தி, கோமதி (குறுங்காவியம்) நற்றமிழ் இலக்கணம்.

**ஆ. கோபிநாத்:** *1944.* கோவை. சரபோஜி கல்லூரியில் பணியாற்றி இதுபோது திருச்சி பிஷப் ஹீபர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். இசையோடு பாடும் இயல்பு வாய்ந்தவர்.

**சு. சிவகாமசுந்தரி:** *13-1-1936.* தஞ்சாவூர் ஆன்மநேய அருங்குணச் செல்வர் பழநிவேல் மழவராயர் தருமாம்பாள். 54இல் கிருத்துவப் பெண்கள் உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு; 55இல் திருச்சி தூய சிலுவைக்கல்லூரி இடைநிலை; 59இல் அண்ணாமலை தமிழ் ஆனர்சு. தெ.பொ. மீ. குருநாதர். 79இல் பிஎச். டி; இலக்கியத்தில் மனையியல்; 65 முதல் கோவை மனையியல் கல்லூரி விரிவுரையாளர். பேராசிரியர்.

படைப்புகள்: வள்ளலார் (மெட்ரிக் பாடநூல்), தமிழகப் பெண்கள் வாழ்வும் வளர்ச்சியும், அறம் வெல்லும்; உத்தமர் தம் உறவு, புதியன புகுதல், சிந்தனைக்கு (வானொலி உரைகள்); புகழ்க் கம்பன், பாரதிக்கு நிகர் பாரதியே, துள்ளி வருகுது வேல் (திறனாய்வு), நீயே என்னுயிர் (கவிதை), நேற்று, நடந்தது (நாடகம்), அன்னை அன்பு தெய்வம் (வரலாறு), தமிழில் முடியும் (அறிவியல்), அமுதச் சிதறல் (கட்டுரை), கட்டுரைக் கனல், சிறைக் குமுறல்கள்.

பேச்சு அரசி: 27 ஆண்டுகளாக மேடையில் முழங்கி வருகிறார். வானொலி உரைகள் 100க்கு மேல். பம்பாய் கல்கத்தா, தமிழகம் முழுதும் உரையாற்றி வருபவர். அண்ணாமலை, சென்னை, மதுரைப் பல்கலைக்கழக அறக்கட்டளை உரைகள். அகில உலகப் பெண்கள், அகில உலக இந்து சமய, சன்மார்க்க, தமிழ் மாநாடுகளில் கலந்து கொண்டுள்ளார். உள்ளம் அள்ளும் வகையில் குற்றால அருவிபோல் செந்தமிழ் கொட்டும். பயிலு நாளிலேயே நாவலர் நாட்டார் அய்யா நினைவு, டாக்டர் ராமநாதன் நினைவு, தமிழகக் கல்லூரிகட்கிடையே பேச்சுப் போட்டிகளில் முதற்பரிசுகள் பொற்பதக்கங்கள் பெற்ற பெருமாட்டி. கம்பன், நன்னெறிக் கழகம், அரிமா, சுழற்சங்கம் எங்கும் இவர் உரைதான்!

கவிஞர்: நல்ல கவிஞர்; தமிழக முதல்வர் டாக்டர் பட்டம் பெற்றபோது சென்னை விழாவில் பெண்கள் கவியரங்கத்

தலைமை. நீயே என்னுயிர் (கவிதைத் தொகுப்பு) கொக்கரக்கோ, கோழி கூவுது போன்ற திரைப்படங் கட்கும் பாடல் எழுதியுள்ளார்.

பெற்ற சிறப்புகள் : செந்தமிழ்ச் செல்வி (கல்கத்தா மாணவர் மன்றம். 65), அருட்பா மாமணி (கோவை சன்மார்க்க சங்கம், 79), தமிழறிஞர் (நன்னெறிக் கழகம், 83), செஞ்சொற் செல்வி (பம்பாய்த் தமிழ்ச் சங்கம் 84). பாரதியார் பல்கலைக் கழக ஆளவை, ஆட்சிக்குழு - தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் பெண் உறுப்பினர். 35 முதுநிலை மாணவிகட்கு ஆய்வு வழி காட்டியுள்ளார். தமிழ்நலம் காக்க 81இல் போராடி ஒரு திங்கள் சிறை சென்றவர்!

மணம் 28-8-1968இல். கணவர் டாக்டர் வ. சுப்பிரமணியன். வேளாண் பொறியியற் கல்லூரி முன்னவர். மக்கள் : அமுதவடிவு, அன்புமலர், அருள் செல்வி. **முகவரி:** B-6. Bungalow: Agricultural Varsity Campus, Coimbatore-641 003.

**ஈ. கோ. பாஸ்கரதாஸ்:** 18-6-1934. ஈரோடு. கோபால் சாமி: ஆண்டாளம்மாள். 59இல் ஈரோடு மகாஜன உயர் நிலைப் பள்ளி இறுதி வகுப்பு 57இல். சென்னை பச்சையப்பன் கல்லூரி (ஆனர்சு). 73இல் எம். லிட் The Heroine in Ettuttohai; 78இல் பிஎச். டி. 'சங்கப் பாடல்கள் உணர்த்தும் நிலை பேறுடைய மானிட மதிப்புகள்' கோவை. பூ. சா. கோ. கலைக் கல்லூரித் **தலைவராக உள்ளார்.** தமிழ்ப் பேராசிரியர்.

படைப்புகள் : அகப்பொருள் பாடல்களில் தோழி, தலைவி; கம்பரின் சுதந்திரச் சொல்லோவியம், என்றும் வாழும் புத்தகங்கள் (மொ) மணம் 23-4-61. மனைவி **தரணி பாஸ்கர்.** கிருஷ்ணம்மாள் கல்லூரிப் பேராசிரியர். மகள் சீதா. செம்மையும் சீர்மையும் கொண்ட இவரின் **முகவரி:** 39, ஐம்பது அடித் தெரு கிருஷ்ணசாமி நகர், கோவை-18.

**இர. குழந்தைவேலு:** 19-6-1936. திருச்சி லால்குடி. வளவர் கல்லூரி, அண்ணாமலையில் தமிழ் பயின்று, பூ. சா. கோ. கலைக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்பவர். எல்லா ஏடுகளிலும் இலக்கியக் கட்டுரைகள் தீட்டியவர். 56முதல் எழுதி வருபவர். கொடை : ஈழத்தின் சுவடு, உணர்வின் உயிர் மாற்றம், சங்கமனம் மதித்த பூத்தலை மகளிர்; பழந்தமிழ் காட்டும் கதைத்திறன், வழிகாட்டிய நடுநாள் - குறிப்பிடத்தக்க சில கட்டுரைகள். திரு. வி. க பற்றி ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார்.

**க. வெள்ளிமலை:** *1-7-1933*. கோவை இருகூர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி மாணவர். கோவை பூ. சா. கோ. கலைக் கல்லூரிப் பேராசிரியர். நாடகத்துறையில் நனிசிறந்து நிற்கிறார். மானவீரம், வண்ணமகள், குந்திமைந்தன், தீந்தமிழ் இலக்கணம், வில்லிபாரதம் ஒரு திறனாய்வு போன்றன. 53முதல் எழுதி வருகிறார். டாக்டர் பட்டம் பெற்றுளார் **முகவரி**: 5/49, ஆர். ஏ. சண்முகத் தேவர் வீதி, இராமநாதபுரம், கோவை-641 018.

**வ. தி. பாலசுப்பிரமணியன் :** 60இல் பச்சையப்பன் கல்லூரி பி.ஏ. ஆனர்சு. 63இல் எம் லிட். A study of Tirunavukkaracar's tevaram. 74இல் பிஎச்.டி Religious and literary developments of Tamilnad during the dark age. உள்ளத்தில் ஒன்றும் வைத்துக் கொள்ளத் தெரியாத கள்ளமில் உள்ளத்தர், கரவற்ற கருத்தினர். மாணவர் மனங்கொள்ள உழைத்துப் பாடம் சொல்வதில் சூரர்., பாரிய உருவினர். பெரிய தொண்டையர். மாநிலக் கல்லூரி குடந்தை, ராசிபுரம், திருப்பூர் கல்லூரிகளில் பணியாற்றி இதுபோது உடுமலைப்பேட்டை அரசு கலைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர்.

**கா. அரங்கசாமி :** உடுமலைப்பேட்டை அரசு கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். இதன்முனம் ஊட்டி கலைக் கல்லூரியில் இருந்தார். இரு சுடர்கள் போலே அரும் காவிய நாடகங்கள் இரண்டினைப் படைத்துளார். **கனகை :** செஞ் சோற்றுக் கடன் பூண்டு அண்ணனுக்காகவே உயிர்த்தியாகம் புரிந்தவன் கும்பகர்ணன். அவன் மனைவி கனகை அவள் பற்றிய துயர ஓவியம், அகம் உருக்கும் அமர காவியம். Problem play வகையது; தமிழில் படைக்கப்பட்டுள்ள நாடகங்களில் நலஞ் சான்றது. **அம்பாபலி :** வைசாலி நகரின் ஆடற்கணிகை; அவளின் ஆணவக் காரிருள், புத்த ஞானப் பொன்னொளியில புடமிடப்படும் காவியக் கதை. தோற்றத்தைப் போன்றே ஊற்றமும் உரமும் உடையவர். டாக்டர் பட்டமும் பெற்றுள்ளார். **முகவரி :** அ. 4. வீட்டு வசதி வாரியம், எஸ்.வி. மில் அஞ்சல், உடுமலைப்பேட்டை - 642 128.

**மு. வை. அரவிந்தன் :** *10-6-1934*. வ. ஆ. செங்கம் வட்டவளையாம்பட்டு. 50 முதல் எழுதி வருகிறார். கவிஞர்-வெள்ளை மலர்கள், அரவிந்தன் கவிதைகள்; சிறுகதையாசிரியர்-கூட்டுக்கு வெளியே; குழந்தை இலக்கியர்-சிறுவர் உலகம்; ஆராய்ச்சி-உரையாசிரியர் (தமிழரசின் பரிசு பெற்ற சாதனை நூல்), இலக்கிய வானில் சிந்தாமணி, திருக்குறளும் சங்க இலக்

கியமும், பரணிக்கோர் சயங்கொண்டார்; உரையாசிரியர்- திரு வள்ளுவமாலை, சிறுபாணாற்றுப்படை; நாடகாசிரியர்-சிலம் புச் செல்வி; இளங்கோ அடிகளின் நாடகத் திறன்; மொழி நூலார்-மொழியியல் சிந்தனைகள்; நாட்டுப் புறவியலார்-தமிழக நாட்டுப் பாடல்கள். இப்படிப் பல்திறப் பேராற்றல ராகப் பிறங்கும் இவர் வேலூர் போன்ற அரசுக் கல்லூரி களில் பணியாற்றி இதுபோது கிருஷ்ணகிரியில் தமிழோச்சி வருகிறார்.

**கோ. அரங்கசாமி :** 22-10-1937. ஈரோடு வட்ட வெள்ளி யம்பாளையம். காசிலிங்கம் : பழனியம்மாள். 55இல் நகரவை உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு, 58இல் சி.நா மா. கல்லூரி இடைநிலை வகுப்பு, 59இல் நாகர்கோவில் இந்து கல்லூரி பி.ஏ., 61இல் மதுரை தியாகராயர் கல்லூரி முதுகலை. பன்னி ரண்டிலும் இலக்குவனார் மாணவர்.

61-62 சி.நா.ம. கல்லூரி, 62-63 பூண்டி புட்பம் கல்லூரி, 63-67 சி.நா.ம. கல்லூரி 68 முதல் கோபிச் செட்டிப் பாளை யம் கலைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர். தென்னிந்திய வரலாற்றுப் பேரவைத் தலைவர். நூல் : மனோன்மணீயம் ஆய்வுக் கட்டுரைகள். **முகவரி :** கோபி.

**நா. ஆறுமுகம் :** 15-6-1934. காஞ்சிபுரத்தை அடுத்த அய்யன்பேட்டை. பச்சையப்பன் கல்லூரி மாணவர். காஞ்சி புரம் பச்சையப்பன் கல்லூரித் துணைப் பேராசிரியராக இருந்து இதுபோது ஈரோடு கலைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர். மொழிகாப்பீர், நாராயணகுரு. சிறந்த கட்டுரையாளர்.

**மு பெரி மு. இராமசாமி :** 16-5-1935. இராமச்சந்திரபுரம். சேலம் சௌடேசுவரி கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராக வும் துணை முதல்வராகவும் சிறப்பவர். நக்கீரர் பற்றி ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். நூல்கள் : தமிழ் இலக் கிய வரலாறு, திருமுருகாற்றுப்படை உரை : தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் முதுகலைப் பட்டம் பெற்ற இவர், இருமொழி ஒப்பாய்வு செய்து ஒண்டமிழுக்குத் தொண்டு செய்ய வேணும். **முகவரி :** 13, அண்ணாநகர், காரைக்குடி-2.

**கோ. கண்ணன் :** 15-9-1946. சேலம் மாவட்ட ஜலகண்ட புரம். அமரர் எஸ். டி. எஸ். சுந்தரம் அவர்களின் மருமகன். திட்ப நுட்பமுடன் ஆயும் ஆர்வத்தர். மாநிலக் கல்லூரியில் பணியாற்றி இதுபோது ராசிபுரம் திருவள்ளுவர் அரசு கலைக் கல்லூரியில் பணிபுரிகிறார். கொடுத்தன : கட்டுரைக் கனிகள்.

கடிதக் கனிகள், ஒரு சோறு; பாவேந்தரின் குடும்ப விளக்கு, ஒரு திறனாய்வு, 'கவிதைக் குயில்' என்ற பட்டம் பெற்றுள்ளார். டாக்டர் பட்டம் பெறவுள்ளார். **முகவரி:** இராசிபுரம் 637408.

**எம் வி பச்சையப்பன் :** குடந்தை விருதாசலம் பொன்னேரிக் கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து இது போது சேலம் ஆத்தூர் கல்லூரி முதல்வர். நல்ல கற்பனை வளஞ்சான்ற கவிஞர்; தம் பிள்ளை மறைந்தபோது புனைந்த 'வெறுந்தொட்டில்' கவிதை அரும்பாடல். தலைசிறந்த போதகாசிரியர்; நெஞ்சிற் றைத்து நிலைக்கும் வண்ணம் பாடம் நடாத்தும் பெற்றியர். நட்புக்குகந்த நல்லார். உயர்ந்த உள்ளம், ஒப்புரவு நேயம், பண்பு பக்குவம் மிக்கவர். சிந்தனைச் செல்வரான இவர் எழுத்தில் கவனம் செலுத்தின் தமிழுலகம் பேறுபெறும். தமிழுக்குப் பெருமை சேர்க்கும் தகவினார்.

**கதி. கணேசன் :** *14-7-1956* நெற்குப்பை. நடிப்பு, பேச்சு, கவிதை மூன்றிலும் முனைப்பானவர், வள்ளியப்பாவின் குழந்தைப் பாடல்கள் எம்.பில் ஆய்வு. தமிழகத்தில் நாதசுரக்கலை பிஎச்.டி, தலைப்பு. 'அறிவுக்கொடை வள்ளல் அழகப்பர்' குழந்தை எழுத்தாளர் சங்க வெள்ளிப்பதக்கம் பெற்றது. நடிப்புக்கென எம்.ஜி.ஆர். தங்கப் பதக்கம் பெற்றவர். **அழகப்பர் கல்லூரித்** தமிழ்த் துறையினை அணி செய்யும் இவர் **முகவரி:** 'தாயகம்', 1, வைரவன் அம்பலக்காரர் தெரு, ஐந்து விளக்கு, காரைக்குடி - 1.

**தெ. முருகசாமி :** *17-2-1942*, கடலூர். தெய்வநாயகம் : தனபாக்கியம். 60இல் தூய தாவீது. உ.ப., 64இல் மயிலம் தமிழ்க் கல்லூரி வித்துவான், 66இல் அண்ணாமலை பி.ஓ எல்., 77இல் எம்.ஏ. (மதுரை) 66-69 மயிலம் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர், 69-70 கல்லூரி விரிவுரையாளர்; 70 முதல் காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரி விரிவுரையாளர், 77 முதல் முதல்வர். பாரதிதாசன் பாடல்களை இசையோடு பாடிடும் பெற்றியர். ஆ. சிவலிங்கனாரின் மருமகன் என்பது குறிப்பிடத்தக்கது. மணம் 70இல். மனைவி பொன்மொழி, மக்கள்: அன்பு, தென்றல், தாமரை, சேரபாண்டியன்.

**சபா. அருணாசலம் :** *9-7-1947*. தேவகோட்டை. கவிதை, கதை, கட்டுரை வல்லார். **தேவகோட்டை** சேவுகன் அண்ணாமலை கல்லூரிப் பேராசிரியர். 82இல் டாக்டர் பட்டம் பெற்றுளார் (மதுரை). **நூல்கள் :** தமிழ் நாவல்களில் காந்தியத்

தாக்கம், வாழ்க்கையும் செய்தியும். **முகவரி :** *36*, தொண்டி யார் தெரு, தேவகோட்டை.

**வ. தேனப்பன் :** *28-10-1950.* புதுக்கோட்டை அழகாபுரி கீழச்சீவற்பட்டி. தேவகோட்டை சேவுகன் அண்ணாமலைக் கல்லூரிப் பேராசிரியர். கவிதை, சிறுகதை, நாவல், நாடகம், திறனாய்வு, ஒப்பாய்வு, பட்டிமன்றம் எனப் பல்துறைப் பேராற்றலர். தந்தவை : கனவு அன்னங்கள், வாழ்த்து மலர் கள்;(கவிதை): தவளைத் திருமணம், அயல் மகரந்தங்கள் என 400 சிறுகதைகள்; சிறகு உதிர்க்கும் பறவைகள் போன்ற 6 குறு நாவல்கள்; சந்தனமணங்கள், அமுத சுரபிகள் என 6 புதினங் கள்; துப்பறியும் சிங்காரம் (குழந்தை நாடகம்-ஏ.வி.எம். தங்கப்பதக்கம்), கிழக்கு வெளுக்கிறது (வானொலி நாடகம்). தமிழ் மலையாளச் சிறுகதைகளின் இயல்பினை உறழ்வா ராய்ச்சி; புதுமைப்பித்தன் ஜெயகாந்தன் சிறுகதை ஒப்பாய்வு செய்துள்ளார். டாக்டர் பட்டத் தலைப்பு : நகரக்கோயில்கள் ஒன்பது. நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை. தமிழ்ப் பல்கலைக் கழகக் குறுங்கால ஆய்வு. வலம்புரி ஜான் அவர்களால் 'தாய்' இல் விதந்தோதப் பெற்றவர். **முகவரி :** 30, வாடியார் தெரு, தேவகோட்டை-*623 302.*

**மு. அய்யாக்கண்ணு:**(அய்க்கண்). *1-9-1935.* கோட்டையூர். திருப்புத்தூர் ஆறுமுகம்பிள்ளை சீதை ஆச்சி கல்லூரிப் பேரா சிரியர். 56 முதல் எழுதி வருகிறார். கல்கி சிறுகதைப் போட் டியில் முதற்பரிசு, அமுதசுரபியில் பரிசு, வான்மதியில் முதற் பரிசு: தினமணிகதிரில் மூன்றாம் பரிசு. அமுதசுரபி குறு நாவல், தினமணிகதிர் சரித்திர நாவல் போட்டியில் பரிசு பெற்றவர். வேர் (சிறுகதை), உயிர், இளவெயினி போன்றன புதினங்கள். இவர் கதைகள் ஆங்கிலம் கன்னடத்தில் பெயர்க் கப் பெற்றுள. சிங்கப்பூர் மலேயா சென்று வந்தவர். **முகவரி :** பி7, ஆசிரியர் குடியிருப்பு. திருப்புத்தூர்.

**ச. சவகர்லால் :** *16-11-1936.* சேது ரகுநாத பட்டணம். திருப்புத்தூர் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரிப் பேராசிரியர். கவியரங்கு, பட்டிமன்றம், வழக்காடு மன்றம் மூன்றிலும் மன்னர். எண்ணச் சிறகுகள் (கவிதைத்தொகுப்பு) தென்சீமையில் இவரில்லாக் கூட்டங்கள் இரா. டாக்டர் பட்டத் தலைப்பு 'தேவாரத்தில் தொன்மைக் கூறுகள்' (82). பல பரிசுகள் பெற்றவர். கவிதை கட்டுரை கதை மூன்றிலும் முனைந்தவர்.

**சுப. கதிரேசன் :** 12.8-1948. பி. கல்லுப்பட்டி. பிள்ளையாக சென்ற ஊர் பனங்குடி. 67இல் அழகப்பர் கல்லூரி இளங்கலை தமிழ், 69இல் தியாகராசர் கல்லூரி முதுகலை. 69இல் அரசுப் பணியில் சேர்ந்து இதுபோது **புதுக்கோட்டை** மாமன்னர் கல்லூரிப் பேராசிரியர். பட்டிமன்றம் வழக்காடு மன்றம் கவியரங்கங்களில் சக்கைபோடு போடும் சமர்த்தர். டாக்டர் பட்டத் தலைப்பு. கண்ணதாசன் கவிதைகள்.

**நா. இலக்குமணப்பெருமாள் :** 5-1-1938. நமஸ்கரித்தான் பட்டி. சிவகங்கை மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். 62 முதல் எழுதுகிறார். சிந்திக்க விரும்பும் சிலருக்காக, கடவுள் முதல் கருணாநிதி வரை, மகாத்மா காந்தி **முகவரி :** 'கலைப்பண்ணை', 5, அழகிரி நிலையம், சிவகங்கை.

**லெ. இராமநாதன் :** 5-2-1937. செட்டிநாடு அரண்மனை சிறுவயல். பல்லாண்டுகள் சிவகங்கை அரசர் துரை சிங்கம் நினைவுக் கல்லூரியில் பணியாற்றி 83 முதல் இராமநாதபுரம் சேதுபதி அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர். 62 முதல் எழுதி வருகிறார். சற்குரு மணிமாலை(கவி). அறந்தரு சிந்தையோன், இலக்கிய வானம், மானாமதுரை, இசை மறையோன், தொண்டின் செல்வர், இளையான்குடி மாறனார், நந்தா ஒளி தந்த நமிநந்தியடிகள். 'செந்தமிழ்ச் சுடர்' என்ற பட்டம் பெற்றவர்.

**மு. மாணிக்கம் :** 59 இல் மாநிலக் கல்லூரியில் பயின்று ஆனர்சு முடித்தார். பூண்டி புட்பம் கல்லூரியில் பணியாற்றி பழநி பண்பாட்டுக் கல்லூரியில் பேராசிரியராகப் பிறங்குபவர். பண்பும் பாங்கும் செயல்திறனும் வல்லவர். கா.மீ.யின் ஆங்கில நூலினைப் 'பாரதி பாநிலை' எனப் பெயர்த்தவர். மனோன்மணீய ஆய்வு, தொல்காப்பியருக்கு முன் தமிழில் காவியங்கள், Tamils of the Sangam Age, பின்னவன் பெற்ற செல்வம், காவடிச் சிந்து ஓர் ஆய்வு போன்றன மாணிக்க மணிகள். அமைதியும் ஆர்வமும் மிக்க அன்பர். **முகவரி:** 29, கீழ்வடம்போக்கித் தெரு, பழனி-624 601.

**ந மாணிக்கம் :** 8-5-1942. வேந்தன்பட்டி. வள்ளல், வள்ளுவப் பற்றாளர் வேந்தன்பட்டி குப. அரு. நடராசன் செட்டியாரின் நன்மகனார். 69 இல் எம். லிட் (சென்னை) A critical study of Palaittinai in Cankam works. 76இல் பிஎச்.டி. (மதுரை). குமரகுருபர அடிகள் பாடல்கள் ஓர் ஆய்வு. 63இல் **மதுரை தியாகராசர் கல்லூரியில்** பணியேற்று

80 முதல் பேராசிரியர். சங்க இலக்கியம், இலக்கணம், சைவ சித்தாந்தம் மூன்றிலும் மிகுந்த ஈடுபாட்டினர். கட்டுரையில் 'முதற் பொருள் கருப்பொருள் உரிப்பொருள்' சிறந்தது. **முகவரி :** 16 அ, சாமி ஆச்சாரி சந்து, சின்னக்கடைத் தெரு, தெற்கு வாசல், மதுரை-1.

கு. **பரமசிவன் :** 15-8-1933. நெல்லை மாவட்ட வீரவ நல்லூர். மதுரை அமெரிக்கன் கல்லூரித் துறைத் தலைவர். ஆங்கில நாவல்கள் பலவற்றைத் தமிழ்ப் படுத்தியுள்ளார்; ஆலிவர் டுவிஸ்ட், ஐவன்கோ, டேவிட் காப்பர் பீல்ட், குவென் டின் டர்வர்டு, கெனில் வொர்த், கை மானரிங், ராப்ராய், எம்மா, யாம்பியின் கடைசி நாட்கள், டாம் பிரௌனின் பள்ளி வாழ்க்கை, சுவிஸ் குடும்ப ராபின்சன், இராபிசன் குருசோ, மாண்டி கிரிஸ்டோ பெருமகன், பவளத் தீவு, பகட்டுச் சந்தை, மூன்று வீரர்கள் என 20. நாள்வழி நற்சிந் தனைகள் (Book of Meditations), ஐந்து ஓரங்க நாடகங்கள், மொழி நூல். **முகவரி :** அமெரிக்கன் கல்லூரி, மதுரை-2.

**இரா. கோதண்டபாணி :** 1-8-1941, அகத்தாரிருப்பு. யாத வர் கல்லூரிப் பேராசிரியர். இதழியலில் ஈடுபாடு மிக்கவர்; 'இதழியல்' நூல் பல்கலைக் கழக அளவில் நன்கு அறிமுகமாகி யுளது மதுரைத் தமிழ்ச் சங்க 'செந்தமிழ்' இதழின் 1-60 ஆண்டு இதழ்களை 'செந்தமிழ் (இ)தழின் தோற்றமும் வளர்ச்சி யும்' என மதுரைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ந்து 87இல் டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். பதிப்புப் பணி, விவாதக் கட்டுரைப் பகுதிகள் சிறப்பானவை.

**ம வயித்திலிங்கன்:** 1935. கும்பகோணம் அண்ணாமலை யில் தமிழ் பயின்று, திண்டுக்கல் ஜி. டி. என். கல்லூரியில் பேராசிரியர். பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்த ரேசன் அவர்களின் சீடர். இலக்கண முறையில் இசை பயின்ற வர். வகுப்பிலும் சொற்பொழிவாற்றும்போதும் இசைமய மாகவே அவையோரை வயப்படுத்தும் வல்லாளர். தனியே இசைப்பொழிவும் கச்சேரிகளும் ஆற்றுபவர்.

**பெ ச. பாமணி:** 15-9-1936. பறம்புக்குடி. இளையான்குடி டாக்டர் சாகிர் உசேன் கல்லூரிப் பேராசிரியர். அழகு முல்லை (கவிதை), சாகாவரம், திலகம் (நாடகம்). 'ஆரிய வைசியன்' திங்களிதழின் சிறப்பாசிரியர். **முகவரி :** 3/840, பாரதி நகர், பரமக்குடி.

**அ. கேசவமூர்த்தி:** *12-6-1932.* பூண்டி புட்பம் கல்லூரியில் பணியாற்றி இதுபோது சிவகாசி அய்ய நாடார் சானகி அம்மாள் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்-தலைவர். டாக்டர் பட்டமும் பெற்றுளார். நாடகத்தில் நாட்டம் கொண்டவர். 'பாரதி பாடற் பகுப்பு' அகர வரிசையில் 107 தலைப்புகளில் பாரதியின் சீரிய சிந்தனைகள் பகுத்து வகுத்தளிக்கப் பெற்றுள்ளது. அமைதிமிக்க பேராசிரியரின் **முகவரி:** முக்கனிப் பதிப்பகம், 6 பி, வீடு கட்டும் சங்கக் குடியிருப்பு, சிவகாசி மேற்கு-626 124.

**அ. சங்கரவள்ளிநாயகம்:** *1-8-1935.* சங்கரன்கோவில். நூலகர். அ. திருமலைமுத்துசாமியின் இளவல். கோவில்பட்டி வெங்கடசாமி நாயுடு கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், கருத்தான பேச்சாளர்.

**சாமுவேல்தாசன்:** *23-11-1934.* அச்சங்குளம். குமரி மாவட்ட மார்த்தாண்டம் கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். பாரதி உள்ளம், காவுந்தி, இலக்கணப் பூங்கா, வள்ளத் தோலையும் பாரதியையும் ஒப்பிட்டாய்வு செய்து டாக்டர் பட்டம். **முகவரி:** அச்சங்குளம், கொட்டாரம் அஞ்சல், குமரி மாவட்டம்.

## 104. பல்கலைக் கழகங்களில்...

கல்லூரிகளின் தமிழ்த் துறைகட்கு முடிமணியாகப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைகள் திகழ்கின்றன. கல்லூரித் தமிழாசிரியர்கட்குக் கிட்டாத வாய்ப்புக்கள் பல்கலைக் கழகப் பேராசிரியர்கட்குக் கிட்டுகினறன. இந்த விரிந்த வாய்ப்புக்கொண்டு வண்டமிழ்த் தொண்டு புரிகின்றனர். அப்படித் தமிழக-இந்திய-வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களின் புகழ் பூத்த பேராசிரியர்கள், அவர்களின் தமிழ்ப் பணிகள் பற்றி அறிவதே தனி இன்பம், தனி வரலாறு; உலக ஒருமை உருவாக்க ஒண்டமிழ் இங்கே உறுதுணை புரிகிறது.

**சென்னைப் பல்கலைக் கழகம்:** 1857. அனவரதவிநாயகம் பிள்ளை, எஸ். வையாபுரிப்பிள்ளை, ரா.பி. சேதுப்பிள்ளை, மு. வ. போன்றார் தமிழ்த்துறையை அலங்கரித்தவர்கள். தமிழ்க் கட்டில் லாசரஸ் அடிகள் வழங்கிய கொடையால் அமைந்தது. முன்னவர்கள் எல்லாம் விரிவுரையாளர்களே! முதற் பேராசிரியர் ரா. பி. சே. அவர்களே! மு.வ. காலம் வரை தன்னளவில் திகழ்ந்தது. சிந்தனைச் செம்மல் அறிஞர்

ந. சஞ்சீவி தலைமை ஏற்றது முதலே செயல்பல செய்தது, வெளித் தொடர்பு விரிந்தது.

19—28-1-1972இல் முதல் பொது நிலைப் பத்து நாள் கருத்தரங்கு 'பல்கலைப் பழந்தமிழ்' எனும் பொதுப் பொருள் பற்றி நிகழ்ந்தது. 22—31-1-73இல்இரண்டாவது பொதுநிலைப் பத்துநாள் கருத்தரங்கு 'இடைக்காலத் தமிழின் இலக்கிய இலக்கண இயல்புகள்' (3-12 நூற்) என்று கூடி ஆய்ந்தது. மூன்றாவது இடைக்காலத் தமிழின் இலக்கிய இலக்கண இயல்புகள்II (9-18நூற்) என்பது பற்றிக் குழுமியது. அடுத்தது தற்கால இலக்கியம்பற்றி. 27—29-10-73இல் இந்திய விடுதலை வெள்ளி விழாக் கருத்தரங்கு 'இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும்' என விவாதித்தது. 23—27-2-87இல் 'வாழ்க்கை நோக்கில் இலக்கியக் கல்வி அறிவியல் அறம்' பணிமனை நிகழ்த்திற்று.

துணைவேந்தர் மால்கம் ஆதிசேசையா காலத்தில் மொழித் துறை, இலக்கியத் துறை எனப் பிரிக்கப்பட்டு முறையே சி. பா. வும், ந ச.வும் தலைமை ஏற்றனர். ந.ச. ஓய்வு பெறவே பொற்கோ தலைமை. கிழமைக் கருத்தரங்குகள் நடந்தன, பெருந்தமிழ், தமிழாய்வு எனக் கட்டுரைகள் நூல்களாயின. துறையினர் சிலர்.

**சி. பாலசுப்ரமணியன்** : 10-5-1935. தெ. ஆ. செஞ்சி. சின்ன சாமி : மங்கையர்க்கரசி. சென்னை பச்சையப்பன் கல்லூரி பி.ஏ. (ஆனர்சு) 57இல். பணி : 57-58 விவேகானந்தா 58-60 பச்சையப்பன் கல்லூரிகளில் பயிற்றாசிரியர். 60-66 விரிவுரையாளர். 66-72 சென்னைப் பல்கலைக் கழக விரிவுரையாளர், 72-80 துணைப் பேராசிரியர். 80 முதல் தமிழ்த்துறைத் தலைவர் (மொழித்துறை). 63இல் எம் லிட். A critical study of Kuruntokai; 70இல் பிஎச்.டி. A study of the Litt. of the Cera country (upto 11th. Cen. A.D.)

ஆளுநர் கே.கே ஷா.க்குத் தமிழ் பயிற்றுவித்த பெருமையர் 'தமிழ் இலக்கிய வரலாறு' குறிப்பிடத்தக்கது; இதன் வருமானம் 2 லட்சம் கொண்டு வீடு கட்டிய விரகர். உருவும் திருவும் காரும் தேரும், கட்டுரைவளம், வாழையடி வாழை, முருகன் காட்சி இலக்கிய அணிகள் (தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றப் பரிசு), பெருந்தகை மு.வ., மனோன்மணீயம் (பதி). The status of women in Tamilnadu during the Ṣangam Age போன்ற பன்னூலாசிரியர்,

புலவரேறு (குன்றக்குடி ஆதீனம்), செஞ்சொற்புலவர் (நல்வழி நிலையம்) போல்வன பட்டங்கள். கலகலப்பானவர், எல்லோரிடமும் இனிய தொடர்பும் பசுமை நினைவும் கொள் பவர். பிறர் பிறர் சீரெல்லாம் தூற்றிச் சிறுமைப் புறம் காப் பவர். கண்ணோட்டம் மிக்கவர். எல்லோர்க்கும் உதவிடும் இயல்பினார். 85இல் பொன்விழா கொண்டாடப்பெற்றது. **முகவரி :** 'தமிழகம்', 19, செயம்மாள் தெரு, அய்யாவு நாயுடு குடியிருப்பு, சென்னை-29 (420121).

**அ.அ. மணவாளன் :** 6-9-1935. தெ.ஆ. அரும்பராம்பட்டு அப்பாவு : ஆதிலட்சுமி. 55இல் வ.ஆ. பேர் நாமல்லூர் கழக உ.ப. 59இல் பேரூர்சாந்தலிங்க அடிகள், கல்லூரி வித்துவான். 6? இல் தனித்து பி.ஏ., ஆங்கிலம்; 69இல் திருச்சி ஜமால் எம்.ஏ, ஆங்கிலம், 81இல் திருப்பதி வெங்கடேசுவரா பல்கலைக் கழகத் தமிழ் எம் ஏ., 80இல் டாக்டர் பட்டம். 78இல் PGCTE, 82இல் DTE (Hyrabad). இந்தியில் விசாரத் 58இல்.

பணி : 59-67. யூனியர் உ.ப. தமிழாசிரியர்; 69-73 காஞ்சீ புரம் பச்சையப்பன் தமிழ்த் துணைப் பேராசிரியர், 73-78 உலகத் தமிழாராய்ச்சி நிறுவன முதுநிலை ஆய்வர், 78-80 சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை விரிவுரையாளர் 81-பேருரையாளர்.

**படைப்பு :** Tamil Research through journals, அரிஸ்டாட் டிலின் கவிதை இயல்; Mutual Flames, Epic Heroism in Milton and Kamban (ஒப்பிலக்கியம்), போதனார் (பெயர்ப்பு). ஆங்கிலப் பாமகள் (பதி), மொழி பெயர்ப்பு ஒப்பிலக்கியம் - இரண்டும் இரு கண்கள். திறனாய்வு, ஒப்புமை மொழியியல், அகராதியியல் மூன்றிலும் ஊன்றியவர். அமைதியும் ஆழ் புலமையும் மிக்கவர். இனிமையானவர், எல்லோராலும் மதிக்கப் பெறுவர்.

**இ. சுந்தரமூர்த்தி :** 5-2-1942. கோவை மாவட்ட வெள்ள லூர். இளைய பெருமாள் : பழநியம்மாள். 57இல் கோவை ராமநாதபுர நகராண்மைக் கழக உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு. 57-59 ஆசிரியப் பயிற்சி, 59-60 பள்ளித் தமிழாசிரியர். ஆசிரியராக இருந்துகொண்டே பி.ஏ. வித்துவான், எம்.ஏ. தேர்ந்தார். மானிடவியலில் பட்டமும்; கல்வெட்டு மொழி யியல் வடமொழி போன்றவற்றில் பயிற்சிச் சான்றிதழும் பெற் றார். 69இல் சென்னைப் பல்கலைக் கழக திருக்குறள் ஆராய்ச் சித்துறை விரிவுரையாளர், இதுபோது தமிழ் மொழித்துறை

இணைப் பேராசிரியர். 77இல் டாக்டர் பட்டம் 'பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன்'.

**தந்தவை :** திருக்குறள் அணிநலம், திருக்குறள் பரிமேலழகர் உரை நூற் பொருள் மாலை, பரிமேலழகர் திருக்குறள் உரைத் திறன், சொல் வலை வேட்டுவர் வள்ளுவர் திருக்குறள் பதிப்பு வரலாறு, கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள், இரு புராண விருத்தம், இலக்கியச்சுடர், உவமான சங்கிரகம் அணியிலக்கண ஆராய்ச்சி; நடையியல் அறிமுகம், பாரதி நடையியல், திருக்குறள் நடையியல் என 20 நூற்கள், 100க்கும் மேலான ஆராய்ச்சிக் கட்டுரைகள்.

83இல் திருக்குறள் ஆராய்ச்சி வெளியீட்டினைப் பாராட்டி முதல்வர் எம்.ஜி.ஆர். பொன்னாடை அணிவித்துப் போற்றல். 84 திருக்குறள் நெறி பரப்பு மையச் சார்பில் நாவலர் பொன்னாடை போர்த்தி 'திருக்குறள் நெறித் தோனறல்' பட்டம் அளித்தல், 86இல் கோவை பேரூர் ஆதீனம் 'குறள்நெறிச் செல்வர்' பட்டம் தந்து பாராட்டியது. அச்சில் வாராத பல சுவடிகளைப் பதிப்பித்துள்ளார், 'நுண்பொருள் மாலை' குறள், பரிமேலழகர், சுவடி, நடையியல் என்ற நால்வகையில் இவரது நற்றமிழ்த் தொண்டு ஊற்றம் பெறுகிறது. **முகவரி :** கே/1, பொறியியற் கல்லூரிக்குடியிருப்பு, கிண்டி, சென்னை-25.

**வீ. அரசு** :15-2-1954. தஞ்சை வட்ட வடக்கூர். வீராசாமி: சிவபாக்கியம். 71இல் ஈச்சங்கோட்டை உ.ப.; 75இல் பூண்டி புட்பம் கல்லூரி பி.எசி. தாவரவியல். 78இல் தமிழ் எம்.ஏ. 80இல் எம்.பில். 'விந்தன் சிறுகதைகள், ஆய்வு'; 84இல் பிஎச்.டி. ரகுநாதன் கதைகளில் காணப்படும் சமுதாய முரண்பாடுகள் 85இல் எம்.ஏ. வரலாறு. இராமகிருட்டிணா உ.ப, கலைக்களஞ்சியம், ஆசிய ஆய்வியல் கழகம், அய்யாறு அரசர் கல்லூரிகளில் பணியாற்றி 85முதல் சென்னைப் பல்கலைக்கழக விரிவுரையாளர்.

**நூல் :** வானம்பாடிகள். 25 ஆய்வுக் கட்டுரைகள். துணைவியார் பத்மா. (கலப்புத்திருமணம்). சென்னைப் பல்கலைக் கழக ஆங்கில இலக்கியத் துறையில் Teaching of Eng. Litt. in colleges-A study என டாக்டர் பட்டத்திற்கு ஆய்ந்து வருகிறார். கூரிய அறிவும் சீரிய சிந்தனையும் பொதுவுடைமைப் போக்கும், படிப்பில் நோக்கும் கொண்ட இளைஞர். **முகவரி :** 11, முத்தையா தோட்டத் தெரு, அவ்வை சண்முகம் சாலை, சென்னை - 14.

**சூ. இன்னாசி :** 1-7-1934. பாளையங்கோட்டை கல்லூரிப்பணியாற்றிவிட்டு இதுபோது சென்னைப் பல்கலைக்கழகக் கிருத்துவ தமிழ் இலக்கியத் துறையில் இலங்குகிறார். திருமொழியுள் ஒரு மொழி (கவிதை), பத்துக் கட்டுரை, கவியலங்கல் (நா); நன்கொடை, தேசத்தியாகி; எழுத்தியல், சொல்லியல் (மொழிஇயல்). **முகவரி :** 'பரிமகம்', மேற்கு காமகோடி நகர், வளசரவாக்கம், சென்னை - 87.

**அண்ணாமலைப் பல்கலைக் கழகம்:** 1929 (700 ஏக்கர், 40 துறைகள்) தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும் 'உலகறியச் செய்வதே இதன் தலையாய குறிக்கோள் (அண்ணாமலை அரசர்). தமிழுக்குத் தொண்டு செய்வதும் தமிழறிஞர்களைப் பாராட்டுவதும் என் வாழ்க்கை லட்சியம் (முத்தைய வேள்) புலவர் படைப்பர், புரவலர் காப்பர், கழகம் வளர்க்கும்; முச்செயல்களால் மும்மைத் தமிழ் செம்மாப்புடன் தனி வளர்ச்சி பெற்றது.

முதல் தமிழ்ப் பேராசிரியர் கா. சு. பிள்ளை (1929, 40-43) அடுத்து ரா. பி. சே. (30), விபுலானந்தர் (31-32), நாவலர் பாரதியார் (33-38) பண்டிதமணி (38-40), தெ. பொ. மீ. (44-46, 58-63) சு. சிதம்பரநாதன் (46-58). கோ. சுப்பிரமணிய பிள்ளை (63-70) வ. சுப. மா. (70-77), வெள்ளை வாரணர் (77-81), கு. சுந்தரமூர்த்தி (81), நா. பாலுசாமி (81-84), ஆறு அழகப்பன் 1-4-84.

முதலில் ஒரே துறையாக இருந்து, 53இல் கீழ்த் திசை, கலைத் துறை, ஆராய்ச்சி என மூன்றாகப் பிரித்து முறையே லெ. ப. கரு, அ. சி., கோ. சு. பிள்ளை தலைமை வகித்தனர். ஆராய்ச்சித் துறை - கம்பராமாயண செம் பதிப்பும்; கீழ்த் திசைத் துறை- சங்க இலக்கியத்தில் குறிக்கப் பெறும் மலர்கள் தொகுத்தமை, 'தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் சாதனைகள். பின் 70 இல் மூன்று ஒருங்கிணைந்தன. ஒத்த ஊதியம் அளித்தமை, டாக்டர் பட்டம் அளித்தமை (42 இல் அ. சி. செட்டியாருக்கு), எம்.ஓ. எல். பட்டப் படிப்பு, தமிழ் ஆனர்சு. புலவர், ஆசிரியப் பயிற்சி வகுப்புகள் ஏற்படுத்தியவற்றில் முதன்மை வைக்கிறது. தலை சிறந்த தமிழறிஞர்களையெல்லாம் தருவித்து அமர்த்திய தனிப் பெருமையது.

மாணவர்கள்: நெடுஞ்செழியன், அன்பழகன், வீரமணி, நெடுமாறன், குமரி ஆனந்தன், வ. அய். சுப்பிரமணியம், அகத்தியலிங்கம், ச. வே. சுப்பிரமணியம், அ. ச. ஞா. தனி

நாயக அடிகள், இந்திரா பார்த்தசாரதி, சிற்பி, சிவகாம சுந்தரி போன்றார் குறிப்பிடத்தக்கோர்.

மாணிக்கனார் துறைத் தலைவர் ஆனதும், கற்றல் கற்பித்தல் கேட்டலோடு அமையாது. ஆசிரிய மாணவரிடையே சிந்தித்தலாகிய ஆராய்ச்சியும் வளரவேணும் ஆண்டுக்கு இரண்டு எனப் 14 கருத்தரங்குகள் நிகழ்த்தினார். வெள்ளை வாரணார், பாலுசாமி காலத்தில் 4 நடந்தன. அவை இலக்கிய இலக்கண சிலம்பு மேகலை தொல் குறள்- சிந்தனைகள் என நூல்களாயின. 9-11-83 இல் படைப்பிலக்கியக் கருத்தரங்கு. ஆராய்ச்சி, முதுகலை மாணவர்கள் முறையே 'ஆய்வுச் சோலை' 'மாணவர் கருத்தரங்'கென வாரந்தோறும் நிகழ்த்தினர்.

ரா. பி. சே. 57 இல் அன்னை சொர்ணாம்பாள் அறக் கட்டளை 25,000 வைப்பு நிதி, காரைக்குடி அண்ணாமலைச் செட்டியார் 10,000 தில் அமைத்த ராய. சொ. 81 இல் ஆர். நடராசன் ஏற்படுத்திய 25,000 ஆடூர் இரத்தின சபாபதி பன்னிருதிருமுறை சைவ சித்தாந்த அறக்கட்டளை களின் சொற்பொழிவுகள் முறையே 59, 81, 82 தொடங்கி நடந்து வருகிறது.

ஆறு அழகப்பர் வந்தது முதல் விரிந்து வளர்ந்து வருகிறது. 84 சூலை 26-30இல் 'இந்திய மொழிகளில் பக்தி இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்; செப் 8, 9இல் இலக்கணக் கருத்தரங்கு, 9-11-84 புதிய பணிகள் தொடக்க விழா. 85 செப் 5இல் ந. மு. வே. நாட்டார் நூற்றாண்டு விழா. செப் 9, 10இல் பூம்புகாரில் சிலப்பதிகாரக் கருத்தரங்கு நிகழ்ந்தன.

நமக்குள் பழங்கதைகள் பேசுவதால் தமிழாய்வு குறுந் தொகைப்படுகிறது. எனவே நெடுந்தொகையாக்க ஆத்திச் சூடி, கொன்றை வேந்தன், நறுந் தொகை இந்தியில் அகமத் உசைன் அவர்களும், ஆங்கிலத்தில் சிவ. திருநாவுக்கரசும் பெயர்க்கின்றனர். வடமொழி நாடக இலக்கிய வரலாற்றை சீனிவாச சர்மாவும், தமிழ்ப் பண்பாட்டு வரலாற்றை செ. வைத்தியலிங்கமும், தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியத்தை வெ. பழனியப்பனும், இலக்கணக் குறியீட்டு விளக்க அகராதி சுவாமி ஐயாவும், இலக்கண ஆய்வடங்கல் சோம இளவரசும், சங்க இலக்கியம் திணை முறைப் பதிப்பு மெய்யப்பன் போல் வாரும், சித்தர் பாடல்கள் ஆய்வு மீ. ப. சோமுவும் செய்து வருகின்றனர். வினா வங்கி, இதழியியல் நாட்டுப் புறவியல் பகுதி நேரச் சான்றிதழ் வகுப்புகள் இயங்குகின்றன. அரசர்

முத்தைய, நக்கீரர் (முனைவர் ஆய்வர்க்கு), பாவாணர் (எம். பில். மாணவர்க்கு), தமிழ்ப் பேரவை (முதுகலை மாணவர்க்கு) ஆய்வரங்குகள் வாராந்தோறும் விளங்குகின்றன.

85 செப் 21, 22 இல் இரண்டாவது இலக்கணக் கருத்தரங்கம் 86 சனவரி 28இல் சிவஞான முனிவர் இருநூறாம் ஆண்டுவிழா, பிப். 19, உ. வே. சா. பிறந்தநாள் விழா, பிப். 9, 10இல் சிதம்பரம் கோயில் குட முழுக்கினை ஒட்டி, சைவ சித்தாந்தக் கருத்தரங்கு; 21, 22இல் மூன்றாவது இலக்கணக் கருத்தரங்கு; மார்ச் 23, 24இல் தமிழ் எழுத்தாளர் மாநாடு (54இல் அனைத்திந்திய எழுத்தாளர் மாநாடு, நேரு வருகை). இணை வேந்தர் எம். ஏ. எம். இராமசாமி எழுத்தாளர் அனைவர்க்கும் நடராசர் சிலை வழங்கினார். சமுதாயம் மொழி ஆகியவற்றின் மேம்பாடடிற்குப் படைப்பிலக்கியங்களின் பங்கு என்ன என்றாய்வதே நோக்கம். ஆண்டுதோறும் பண்பாட்டுக் கல்விச் சுற்றுலா துறையாசிரியர்களும் மாணவர்களும் செல்கின்றனர். அறிஞர் பெருமக்கள் சிறப்புப் பேருரை வரிசை போன்ற வழக்கமான பணிகள் வளமாக நடந்து வருகிறது. துறையாசிரியர்களின் ஆய்வுக்கட்டுரைகள் 'இந்திய மொழிப் பல ஆய்விதழ்' தொகுதியாக வருகின்றது. தமிழ்த் துறை 'வளர்பணி' என ஆண்டுதோறும் சிற்றேடு வெளியிடுகிறார் ஆறு. அழ. இதே போல் பிற பல்கலைக் கழகத் துறைகளும் வெளியிடின் நலம்.

அண்ணாமலையில் வளர்க்கப்பெறும் தமிழுக்கு என்றும் தனி வரலாறு உண்டு; பழந்தமிழையும் புதுமைத் தமிழையும் வளர்க்கும் அரங்கமாகவும், தமிழ்ப் பகைப் புலத்தை எதிர்க்கும் பாசறையாகவும் விளங்கி, திறம் சான்ற துறைத் தலைவர், உழைக்கும் ஆசிரியப் பெருமக்கள், உணர்ந்து உஞற்றும் ஆய்வாளர் மாணவர்கள் கூட்டுறவால் துறை வளர்மதியென நாளும் பொலிகிறது. 'துறையாளர்கள் உயிரெழுத்து, மாணவர்கள் மெய்யெழுத்து, நான் ஆய்த எழுத்து; நீங்கள் இயக்க இயங்குகிறேன்'. இதுவே அழகப்பனாரின் பணிவுரை, துறையின் பணியுரை, எனவே விழவுமலி மூதூர் போலே, ஆய்வு அமை-செயல் நிறை களமாக விளங்குகிறது துறை!

**சிவ. திருநாவுக்கரசு:** திருக்காட்டுப் பள்ளியடுத்த படுகை. நாட்டார் பெயரர். சிவப்பிரகாச சேதுராயர்: சிவ பார்வதி அம்மையார். அண்ணாமலையிலேயே தமிழ் பயின்று அங்கேயே இணைப் பேராசிரியர். பாடம் எடுப்பதில் மன்னர். தொல்காப்பியம், அக இலக்கியங்கள் நடாத்துவதில் நலம்

சான்றவர். ஆங்கிலம் வல்லவர்; ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், நறுந்தொகை, ஆங்கில ஆக்கம். பாரிய உருவினர் அதற்கேற்ப பெரிய உள்ளம். பாசம் நிறைந்தவர், மாணவர் களிடம் பரிவு மிகுந்தவர். கந்தபுராணத்தில் காப்பியக் கூறுகள் டாக்டர் பட்டம்; சைவ சித்தாந்தக் கலைச் சொற்கள் தொகுத் துள்ளார்.

**சு. சுவாமி ஐயா** : 20-9-33. நல்லாடை. வித்துவான், **எம்.** ஓ. எல். சிவஞான முனிவரின் காஞ்சிபுராணத்தை ஆராய்ந்து டாக்டர் பட்டம். எழுத்திலக்கணக் குறியீட்டு விளக்க அகராதி யாத்துளார். செய்யுளியலும் யாப்பருங்கலக் காரிகையும் ஒப்பீடு செய்துள்ளார். யாப்பு நடத்துவதில் வல்லவர். யாப் பருங் கலக்காரிகை- பாட நுண் பதிப்பர். எப்போதும் அருந்து மெல்ல வாயினார். **முகவரி** : 20, 2 வது குறுக்குச் சாலை, மாரியப்ப நகர், அண்ணாமலை நகர்.

**வெ. பழனியப்பன்** : 9-7-1932. மகிபாலன் பட்டி, வெங் கடாசலம் செட்டியார் : சிட்டாளாச்சி. 53இல் பொன்ன மராவதி வலம்புரிவடுகநாதன் உ. ப. இறுதி வகுப்பு; 55இல் புதுக்கோட்டை மன்னர் கல்லூரி இன்டர், 58இல் அண்ணா மலை ஆனர்சு. 74இல் எம். லிட். புகழேந்தியும் அவரது நள வெண்பாவும், 84இல் பிஎச். டி. தமிழ் இலக்கிய இலக்கண நூல்களில் பாட வேறுபாடுகள். 58-64 தமிழ்நாடு இதழில் துணை ஆசிரியராக இருந்து 64 முதல் அண்ணாமலை தமிழ்த் துறை. 85இல் பேருரையாளர். இதுபோது அஞ்சல் வழியில் தமிழ்த் துறைத் தலைவர். நூல்கள்: தமிழ்ப் புலவர் வரலாற் றுக் களஞ்சியம் (4 தொகுதிகள்); நம்பியகப் பொருள் உரை விளக்கம் (பதி), இரட்டைக் காப்பியங்களில் பாடவேறுபாடு கள். **முகவரி** : 10, சிவபுரி குடியிருப்பு, அண்ணாமலை நகர்-608 002.

**பழ முத்துவீரப்பன்** : 2-11-1953. மேலைச் சிவபுரி. தந்தை சிதம்பரம் ராமசாமி செட்டியார் உ. ப. தமிழாசிரியர். திரா விட இயக்கத்தில் சேர்ந்து சிறை சென்றவர்; குடியரசு இதழின் ஆசிரியர்; 38இல் தில்லை இளங்கோ மன்ற தோற் றுநர், தமிழ்நாடு பாடநூல் நிறுவனத்தில் பணியாற்றி 79இல் ஓய்வுற்ற புலவர். நா. மு. மாணிக்கம். தாய். அலர் மேலு ஆச்சி. தந்தைக் கேற்ற தனையன், 76இல் அண்ணா மலை எம். ஏ. முதல் வகுப்பில் முதல் மாணாக்கர்; தங்கப் பதக்கம் பெற்றவர். வ. சுப. மாணிக்கனாரின் மாணவர். 76 முதல் அங்கேயே விரிவுரையாளர். அஞ்சல் வழிக் கல்வி

தமிழ்த்துறைப் பேராசிரியர். 84இல் டாக்டர் பட்டம்; தலைப்பு தி. ஜானகிராமன் படைப்புகள்: 1-7-87 முதல் தமிழ்த்துறைப் பேருரையாளர்.

பழந்தமிழ் இலக்கியப் புலமையும் புத்திலக்கிய வளர்ச்சியில் பயிற்சியும் ஒரு சேரப் பெற்றவர். உருக்கமான பேச்சாளர். உயர்ந்த கவிஞர். 'மௌனச் சிறகுகள்'. திறனாய்வுத் திறனும் உடையவர். 'தொல் காப்பியரும் பாரதிதாசனும்'. பிற புதுக்கவிதைப் போக்குகள், திருக்குறளின் நடை. பிற்காலப் பெரும் பேராசிரியராகப் பிறங்கப் போகும் இக் கொழுந்தின் **முகவரி**: 84, 3வது தென் குறுக்குத் தெரு, மாரியப்ப நகர், அண்ணாமலை நகர்-608 002; சு. ராம வீதி, காரைக்குடி-1.

**கேரளப் பல்கலைக் கழகம்**: வள்ளல் அழகப்பர் வழங்கிய ஒரு லட்சத்து ஒரு ரூபாய் நன்கொடையால் 45இல் அப்போதைய திருவிதாங்கூர் பல்கலைக் கழகத்தில் தமிழாராய்ச்சித்துறை தொடங்கியது. முதற் பேராசிரியர் மு. இராகவையங்கார், 7 ஆண்டுகள்; சேரர் வரலாறு, தமிழ்—மலையாளம் தொடர்பு பற்றி ஆராய்ந்து 2 தொகுதிகள் வெளியிட்டார். 52-55இல் ஆராய்ச்சி மன்னர் வையாபுரிப் பிள்ளை வந்தார். இவர் காலத்தில் தனித்துறை ஆனது. 'சங்க இலக்கிய அட்டவணை' எனும் பாரிய பணி மேற்கொண்டார்.

54இல் வையாபுரிப் பிள்ளையின் மாணவர், அமெரிக்கா சென்று மொழியியல் பயின்று, ஜார்ஜ் டவுன் மிச்சிகன் பல்கலைக் கழகங்களில் 'நாஞ்சில் நாட்டு வடசேரி பேச்சு மொழி ஆய்வுக்காக இந்தியானா பல்கலைக் கழகத்தின் டாக்டர் பட்டம் பெற்றவருமான டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் பணியேற்றார். சங்க இலக்கியச் சொல்லடைவு (2,70,000 சொற்கள்), புலவர் பேசும் மலையாள 5000 சொற்களை அப்படியே பதிவு செய்தல் - இரண்டும் பணி. 62இல் ச. வே. சுப்பிரமணியம், கே. சுப்பிர்மணியம் விரிவுரையாளர்களாக வந்தனர். 'வி. ஐ. எஸ்.' மொழியியல் பேராசிரியரானதும். சு.வே.சு. அக். 66இல் பேருரையாளர் ஆனார். அக். 68இல் மா. இளையபெருமாள் விரிவுரையாளர். 69இல் தா.வே. வீராசாமி, எல். குலோரியா சுந்தரமதி விரிவுரையாளர்கள்.

61இல் முதுகலை தமிழ் தொடங்கப் பெற்றது. பிற மாநிலங்களில் தமிழ்க்கல்வி என்னும் முறையில் இப்பல்கலைக் கழகமே முதன்மை வைக்கிறது. இந்தியாவிலேயே தமிழில்

எம். ஃபில் படிப்பிற்கு வழி கோலியமை, மொழியியலில் பிஎச். டி. பட்டம் பெற வழியமைத்தமை இரண்டிலும் முதன்மை வைக்கிறது. 68 தொடங்கி 'இளவேனில்' ஆண்டு மலர் வெளியிடுகிறது. சங்க இலக்கியம் அனைத்திற்கும் இலக்கணம் கண்டுவிட்டது. தமிழ்-மலையாளம், மலை-தமிழ் பெயர்ப்புகள் செய்துளது.

தமிழ்த்துறைத் தலைவர் க. சுப்பிரமணியம், குலோரியா சுந்தரமதி, கி. நாச்சிமுத்து இணைப் பேராசிரியர்கள். டாக்டர்கள் சுப்பிரமணியம், நசுமுதீன் கிருஷ்ணாம்பாள் விரிவுரையாளர்கள்.

இதன் கீழ் 3 அரசுக் கல்லூரிகள் ஒரு தனியார் கல்லூரி உளது, 1. பல்கலைக்கழகக்கல்லூரியில் ராசகோபாலன், குற்றாலம் பிள்ளை, ஈஸ்பரதாஸ், ஏனோஸ், வேதசகாய குமார் உளர். (2) மகளிர் கல்லூரியில் மோகனகுமாரி, பிளாரன்சு கேதரின், விசயகுமாரி. (3) கலைக்கல்லூரியில் தாணம்மாள், மீரான்பிள்ளை, காஞ்சனா. தன்வச்சபுரம் தனியார் கல்லூரியில் சீனிவாசன், சாரதா. மாலைக் கல்லூரியில் சாரிகாதேவி, ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் ஆக்னஸ்-உளர்.

கோழிக்கோடு பல்கலைக் கழகத்தின் கீழ் சித்தூர் அரசினர் கல்லூரி, பாலக்காடு விக்டோரியா அரசினர் கல்லூரி உள. முன்னதில் முதுகலையும், ஆராய்ச்சித் துறையும் உள. பின்னதில் இளங்கலை சிறப்புப் பாடம் உளது. இங்குப் பணியாற்றுவோர் : த. நடராச சர்மா, சு. முருகன், கு.அ. ராசாராம், செ. கோவிந்தன், ஆர். கருப்பசாமி போன்றார் பணியாற்றுகின்றனர்.

**எல் குளோரியா சுந்தரமதி :** 1941. நெய்யூர். 64இல் கேரளப் பல்கலைக் கழக எம்.ஏ., Evaluation and Evolution of Sangam Polity என ஆய்ந்து டாக்டர் பட்டம். ரெனி வெல்ல இலக்கியக் கொள்கையை மொழி பெயர்த்துளார். சங்க இலக்கியம் திறனாய்வு இரண்டும் இரு கண்கள்.

**க. சுப்பிரமணியன் :** 1934. நாகர்கோவில். அண்ணாமலையில் தமிழ் எம்.ஏ., அ.சி. செட்டியார் அன்பு மாணவர். காப்பியங்களில் ஈடுபாடு.

**கி. நாச்சிமுத்து :** 24-8-47. கொங்கு நாட்டவர். கேரளப் பல்கலைக் கழக எம்.ஏ. 69இல், டாக்டர் பட்டம். 73இல். Place names of Coimbatore Dt. சோழன் பூர்வ பட்டயம் கூறும்

கொங்கு நாட்டு ஊர்கள். 79இல் மேற்கு ஜெர்மனி கொலோன் பல்கலைக்கழகம் போந்து, தமிழ்-ஆங்கில அகராதி உருவாக்கும் திட்டத்தில் பணியாற்றித் திரும்பினார்.

**தா. நடராச சர்மா :** 24-7-40. செங்கோட்டை. துறைத் தலைவர். இலக்கியச் சிலம்பு. The Smile in Tamil, செல்வக் களஞ்சியம், கவிமணியின் உமார்கயாம் ஓர் ஆய்வு. கேரளப் பல்கலைக் கழக எம் ஏ. 63இல்.

**சு. முருகன் :** 28-4-37. சித்தூர். பத்துப் பாட்டிலொன்று என்பது ஆராய்ச்சி நூல். ஒரு கை ஊனமுற்றவர்.

**கு. குற்றாலம் பிள்ளை :** 26-7-43. புத்தேரி. கேரளப் பல்கலைக் கழக எம் ஏ. 66இல். இலக்கணம் மொழியியல் வல்லார். Descriptive analysis of Villibaratham டாக்டர் பட்டம் ஆய்வு 74இல்.

இங்குப் பயின்று வெளிவந்து பேர் சொல்வோர். இராமசுந்தரம்-வசந்தகுமாரி, அறவாணன் - தாயம்மாள், அரங்க வடிவேலன்.

**மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் :** 1966. தெ.பொ.மீ, மு.வ., வ.சுப.மா. என மூன்று தமிழறிஞர்கள் துணை வேந்தர்களாய் இருந்த பெருமையது. தமிழ்த்துறை அஞ்சல்வழி தமிழ்த் துறை, மொழியியல் என முத்துறைகள் உள. முத்து சண்முகம் பிள்ளைக்குப்பின் தமிழ்த்துறை மொழியியல்துறை என இரண்டாகப் பிரிக்கப்பெற்று தமிழண்ணல் தமிழ்த்துறைக்கும், இசுரவேல் மொழியியல் துறைக்கும் தலைமை தாங்குகின்றனர். மூன்றிலுமாக முப்பதின்மர் பணியாற்றுகின்றனர்.

வியாழன் வட்டக்கருத்தரங்கம் வாரந்தோறும் நடைபெறுகிறது. கட்டுரைகள் 'வையை' மலர்களாக 74 தொடங்கி வெளியாகிறது. ஆண்டுதோறும் 'பேரவைச் செம்மல்' என இரு மூதறிஞர்கள் சிறப்பிக்கப் பெறுகின்றனர். தொல்காப்பிய உரைவளம் வெள்ளை வாரணனார் வடித்தளித்துளார். தண்டபாணி தேசிகர், முருகரத்தனம், காமாட்சி சீனிவாசன் குறள் நூல்கள் கொடுத்துளர்.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய ஆசிரியர்கள் கருத்தரங்க வரிசையில் அகிலன், மு.வ. பற்றிய பன்முக ஆய்வரங்கம் தமிழ்த்துறை நிகழ்த்தியது. பாரதியார் நூற்றாண்டின் போது கருத்தரங்கினை அஞ்சல் வழிக் கல்வித்துறை கொண்டாடியது. அதுபோன்றே திரு.வி.க. ஒரு பல்கலைக் 'கழகம்'.

கருத்தரங்கம் நிகழ்த்தி தொகுப்பு நூலும் வெளியிட்டது. நாட்டுப்புறவியல் நாடகவியல் கோடை வகுப்புகள் நடத்திற்று.

**ச. சாம்பசிவன் :** 29-9-1929. மதுரை மாவட்ட கண்டமநாயக்கனூர். தமிழ்ச்சங்கத்தில் பண்டிதம் தேர்ந்து பசுமலை உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி, செந்தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளராகச் சிறந்து, அஞ்சல்வழிக் கல்வித்துறை இணைப் பேராசிரியராக விளங்குகிறார். 47 முதல் எழுதி வருகிறார். மாநகர் மதுரை, நாவலர் பாரதியார், புகழின் காயம், கவிமன்னர் மூவர், நாவலர் நால்வர், தமிழவேள் உமாமகேசுவரனார், அரசஞ் சண்முகனார், மாமறை முனிவர், உடம்பும் உயிரும், கட்டுரைத் திறவுகோல், கல்வெட்டுக் கருவூலம், நற்றமிழ் நாவலர்; விடுபூக்கல் (கவிதை), விதி சிரித்தது (சிறு கதைகள்), சிவனார் உரை நூல்கள்- இலக்கணம் பலவற்றுக்கு உரை வகுத்துளார். தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை, 'நாவலர் சோமசுந்தர பாரதியாரின் தமிழ் இலக்கியப்பணி, ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றுளார். 'செந்தமிழ்ச் செல்வர்'-பட்டம். **முகவரி :** 38, மேலப் பொன்னகரம் 7-வது தெரு. மதுரை - 10.

**தி. முருகரத்னம்:** 2-10-1934. திருச்செங்கோடு. சென்னைப் பல்கலைக் கழக பி.ஏ. ஆனர்சு பயின்று 66இல் சென்னை மாநிலக் கல்லூரியில் துணைத் தமிழ்ப் பேராசிரியர். 68 திருக்குறள் இருக்கை மதுரைப் பல்கலைக் கழகம், 29-10-81—28-11-83 வரை தமிழ்ப் பல்கலைக் கழக வளர்தமிழ் இயக்கக இயக்குநர், இதுபோது மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழியியல் துறைப் பேருரையாளர், எம்.லிட். 63இல் A linguistic study of Antal's works; பிஎச்.டி. 66இல் A Morphological study of ancient Tamil special reference to Akananuru. தந்தவை : புதுமைப்பித்தன் சிறுகதைக் கலை, குறள் கண்ட பொருள் வாழ்வு, குறள் கூறும் இறைமாட்சி, தமிழ் எழுத்தியல் அன்றும் இன்றும், வள்ளுவர் வகுத்த அரசியல், பொருளியல்.

**துணைநலம் மீனாட்சி முருகரத்னம் :** 11-11-1945. எட்டையபுரம். ரா சோமசுந்தர பாரதி: மகாலட்சுமி. மதுரை தூயவளனார் மகளிர் உயர்நிலைப்பள்ளி 60, பாத்திமா கல்லூரி புகுமுக வகுப்பு 61, மனையியல் 65, டோக் பெருமாட்டி இளங்கலை தமிழ் 65, பாத்திமா முதுகலை 67. டாக்டர் பட்டம் 75. An analytical study of Kalki's short stories. பணி: 67-69 பாத்திமா கல்லூரி விரிவுரையாளர், 64-72 மதுரைப்

பல்கலைக் கழக ஆய்வு மாணவி, 72-76. அஞ்சல்வழி தொடர் கல்வித்துறை விரிவுரையாளர், 76-85 இணைப் பேராசிரியை. 85-பேராசிரியை. நூல்கள்: கல்கியின் சிறுகதைகள், அஹிம்சை. தமிழிலும் ஆங்கிலத்திலும் ஊற்றமுடன் பேசும் ஆற்றலர். மணம் 68இல்; மக்கள் மீ. மு. வஞ்சி, மி. மு. பாவை. **முகவரி** : அறவாழி நகர், மதுரை - 21.

**விஜய வேணுகோபால்** : 7-10-1935. திருச்சி. தி. வே. கோவிந்தராசன் (தலைமை ஆசிரியர், கலைஞர், நெடுஞ்செழியன், அன்பழகனுக்கு ஆசான்) : பங்காரு அம்மாள் மேலூர் அரசினர் உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 51; மதுரை தியாகராசர் இன்டர் 57; அண்ணாமலை பி.ஏ. ஆனர்சு 60இல். எம்.லிட். 63; A Modern evaluation of Nannul (Eluthu), பிஎச்.டி. 74; Nominal composition in Tamil 65-68 அண்ணாமலை மொழியல் துறையில் பணியாற்றி, 68 முதல் மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் பணியாற்றி வருகிறார். இடையில் அமெரிக்கா ஊஸ்சடர் கல்லூரியிலும் 77-79 விஸ்கான்சின் பல்கலைக் கழகப் பேராசிரியராகவும் சென்று மீண்டுளார்.

திராவிட மொழியியல், தமிழ் இலக்கணம், தமிழக வரலாறு சமயம், இந்திய இலக்கியக் கோட்பாடுகளில் திளைத்தவர். மொழியியல் கலை வரலாறுபற்றி 150க்கும் மேற்பட்ட தமிழ் ஆங்கிலக் கட்டுரைகள் தீட்டியுள்ளார் திண்டுக்கல் குகை ஓவியங்கள் கண்டுபிடித்தவர், 45 கல்வெட்டுக்களை வெளிப்படுத்தியவர்.

துணைவியார் : **சரசுவதி வேணுகோபால்**. 12-12-1940. தஞ்சை மாவட்ட திண்ணியம். வேணுகோபால் (தலைமை ஆசிரியர்) : லட்சுமி. மதுரை பாத்திமாவில் இடைநிலை 57, அண்ணாமலையில் ஆனர்சு 60. சாத்தூர் பெண்கள் பள்ளி, திருச்சி சீத்தாலட்சுமி ராமசாமி கல்லூரி (64இல்), மதுரை சத்குரு சங்கீத இசைக் கல்லூரி (71-74இல்) பணியாற்றி இதுபோது மதுரைப் பல்கலைக் கழகத்தில் நாட்டுப்புறவியல் பேருரையாளர். டாக்டர் பட்டம் : 'மதுரை மாவட்ட தாலாட்டு ஒப்பாரிப் பாடல்கள் - ஒரு சமூகவியல் ஒப்பாய்வு'. நூல்கள் : கள ஆய்வில் சில அனுபவங்கள்; தமிழக நாட்டுப்புறவியல். மணம் 65இல். மக்கள் : தாமரை, வாணி, பாவை. **முகவரி** : 12, 5/8, First Avenue, Viswanathapuram, Madras-14.

**கதிர் மகாதேவன் :** *15-9-1936.* கடலூர். சென்னைப் பச்சையப்பனில் பயின்று மதுரைத் தியாகராசர் கல்லூரி, மதுரைப் பல்கலைக் கழக அஞ்சல்வழிக் கல்வித்துறை விரிவுரையாளராக இருந்து இதுபோது தமிழ்த்துறைப் பேராசிரியராகத் திகழ்கிறார். ஒப்பிலக்கியத்தில் ஊறியவர். ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம், வளரும் அறிவியல், பழந்தமிழர் வீரப் பண்பாடு (தமிழக அரசின் பரிசு). Cultural heritage of Ancient Tamils. எம் லிட். பட்டத்தலைப்பு 68இல்.

**நெல்லை ந. சொக்கலிங்கம் :** *3-3-1942.* மீனாட்சிபுரம். நெல்லை. அழகப்பா கல்லூரியில் முதுகலை பயின்று, ஸ்ரீவைகுண்டம் குமரகுருபரர் கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கி இதுபோது மதுரைக் காமராசர் பல்கலைக் கழக அஞ்சல்வழிக் கல்வித்துறைத் துணைப் பேராசியர். பயந்தவை: பாரதிதாசன் பாடல்களில் மரபும் புதுமையும், உரை மரபுகள் போல்வன.

**இரா. காசிராஜன் :** *30-6-1942.* அஞ்சல் வழிக் கல்வித் துறைத் துணைப் பேராசிரியர். டாக்டர் பட்டம் 75இல் Evolution of Epic Litt. in Tamil with special reference to Cilappathikaram. நூல்கள் : சிலப்பதிகார ஆய்வடங்கல், காப்பியத் தமிழ், உலகக் காப்பியங்கள், உ.வே.சா. காப்பியப் பதிப்புகள்.

**தே. ஆண்டியப்பன் :** *13-4-1934*-நாகர்கோவில். தேசிக விநாயகம் பிள்ளை : வள்ளியம்மை. ஸ்காட் கிருத்தவக் கல்லூரி பி. எசி. வேதியியல் 56; இந்துக் கல்லூரி தமிழ் எம். ஏ 61. டாக்டர் பட்டம் Descriptive Grammar of Kalithokai 71. 57 முதல் குமரி மாவட்ட கணபதிபுரம் தக்கலை வட்டம் உயர் நிலைப்பள்ளிகளில் விஞ்ஞான ஆசிரியராக விளங்கி, 62-67 ஸ்ரீவைகுண்டம் குமரகுருபரர், 70-71 திருச்சி உருமு தன லெட்சுமி கல்லூரிகளில் தமிழ் விரிவுரையாளராகத் திகழ்ந்து, 72-76 மதுரைப் பல்கலைக் கழகம், 74-75 பென்சில்வேனியா பல்கலைக்கழகம், 76 முதல் மதுரைப் பல்கலைக்கழக அஞ்சல் வழிக் கல்வி தமிழ்ப் பேராசிரியர்.

இலக்கணத்தில் ஈடுபாடு. சித்தர் நூல்கள் மருத்துவம் போகத்தில் ஆர்வம் மிக்கவர். இலக்கிய சமயச் சொற்பொழி வாளர். அளித்தவை : கவிமணியின் கவிதைத்தேர், குறள்கண்ட நாடும் வீடும், காப்பியர் நெறி—எழுத்தியல், சொல்லியல், அக-புறத்திணை, கருத்தும் காட்சியும், கலைச் செல்வம்,

மேகலைத்துறவு (கவிதை), கங்கைக் கரையில், சரளாதாசர் (பெயர்ப்பு), மணம் 63ல், மனைவி பொன்னம்மாள்; மக்கள் சங்கர் (பொறியியல்), சத்யா (மருந்தியல்).

**அ. விநாயகமூர்த்தி :** மதுரைப் பல்கலைக் கழக அஞ்சல் வழி ஆசிரியர். பதிப்புக் கலை, பதிப்புப் பார்வைகள், மூலபாட ஆய்வியல், சித்தாந்தமும் பக்தி இலக்கியமும் போன்றன வழங்கியுள்ளார்.

**மா. நவனீத கிருட்டிணன் :** திருவையாறு அரசர் கல்லூரியில் புலவர் பயின்று படிப்படியே உயர்ந்து 76ல் 'தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை' என ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றார். நாட்டுப் புறவியலில் ஈடுபாடு மிகுந்து 'கரகாட்டம்' பற்றிய நூல் இயற்றினார். மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் பேராசிரியர். கனிவாகப் பழகுபவர், கல்வியில் கவிந்தவர். பெருமைக்குரிய துணைவி **விசயலக்குமி நவநீத கிருட்டிணன்** அதே பல்கலைக்கழக அஞ்சல்வழிக் கல்வி தமிழ்த் துறையில் விரிவுரையாளர். நாட்டுப் புறவியல் கிராமியக் கலையில் கரைகண்டவர். கேட்போரைக் கிறங்கச் செய்யும் கனிவுமிகு பாட்டிசைத்தலில் வல்லவர். அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்துகளைப் பாட இன்றெலாம் பசி மறந்து கேட்டிருக்கலாம். சொற்பொழிவுகள்கூட இசைப் பொழிவுதான். இத்துறையில் இவரை வெல்ல எவருமிலர்.

**மா. வண்ணமுத்து :** 22-2-1944. மதுரை மாவட்ட கம்பம். மாணிக்கம் : பொன்னம்மாள். ஏல விவசாயிகள் ஐக்கிய உயர் நிலைப்பள்ளி, உத்தமபாளையம் கருத்தராவுத்தர் (புகுமுகம்), மதுரை தியாகராசர் கல்லூரிகளில் பயின்று சிறந்தவர். சென்னை ஜமாலியா உயர்நிலைப் பள்ளி, மதுரை வெற்றித் தனிப்பயிற்சிக் கல்லூரி, சென்னை கௌரிவாக்கம் எஸ். ஐ. வி. இ. டி. 75-76; மதுரைப் பல்கலைக் கழக அஞ்சல்வழிக் கல்வி தமிழ்த்துறை 9-11-76-முதல்.

எம்.பில் 'கம்பம் வட்டாரத் தாலாட்டு ஒப்பாரி ஓர் ஒப்பாய்வு'; பிஎச். டி. 'கம்பம் பள்ளத்தாக்கில் வழங்கும் நாட்டுப்புறப் பாடல்கள். நூல் : அப்மூவனார் பாடல்களில் ஓர் ஆய்வு. நாடக நாட்டம் உடையவர், வானொலி நாடகங்களில் நடித்துள்ளார். பல நாட்டுப்புறப் பாடல்கள் தொகுத்துள்ளார், மேடையில் பாடுவதும் உண்டு. நாகமலையில் 'இலக்கியப் பேரவை' உருவாக்கி அதன் தலைவராக உள்ளார். செயலர் சொக்கலிங்கம், ஒருங்கிணைப்பாளர் மோகன். மணம் 29-10-73,

மனைவி தெய்வரத்தினம். மக்கள் மாணிக்க மீனாட்சி, திருமலை முருகன், சிவ சங்கரன். **முகவரி :** 95, ஆழ்வார் நகர். நாகமலை, மதுரை-19. (151/6, ஓடைக்கரைத் தெரு, கம்பம்-626 516).

**சு. வேங்கடராமன் :** 26-4-1948. மதுரை சுப்பிரமணியன் : பார்வதி. விருதுநகர் சத்திரிய வித்தியாசாலை ஆண்கள் உயர் நிலைப்பள்ளி 65, மதுரைக் கல்லூரி பி. எசி. வேதியியல் 69, மதுரைக் காமராசர் பல்கலைக் கழக முதுகலை தமிழ் 71, டாக்டர் பட்டம் 'அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு' 76, மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் இணைப் பேராசிரியராக இலங்குகிறார். வழங்கியன : மு. வ. ஆய்வடங்கல், அகிலன் ஆய்வடங்கல், அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, அரையர் சேவை (வைணவக் கோயிற் கலை குறித்துத் தமிழில் வந்த முதல் நூல்), சமூக நாவல்கள், உயிரியல் விந்தைகள் (பதிப்பு) போன்ற 13. **முகவரி :** 90-ஏ, பாரதியார்தெரு, கோ. புதூர், மதுரை-7.

**இரா. மோகன் :** 22-4-1950. மதுரை இராமமூர்த்தி : இராசலட்சுமி. காரைக்குடி மீனாட்சி சுந்தரேசுவரர் உயர் நிலைப்பள்ளி, 66, முடியரசன் மாணவர், மதுரை தியாகராசர் கல்லூரி பி. எசி. விலங்கியல் 70, தமிழ் முதுகலை 72. டாக்டர் பட்டம் 76, 'கு. ப. ராஜ கோபாலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு.' 76ல் தியாகராசர் கல்லூரிப் பயிற்றுநர்; மதுரைக் காமராசர் பல்கலைக் கழக அஞ்சல் வழிக் கல்வித்துறை 76-85 விரிவுரையாளர், 85-இணைப் பேராசிரியர். தந்தவை : டாக்டர் மு. வ.வின் நாவல்கள், அறிஞர் மு. வ. புனை கதைத் திறன், கு ப. ரா. சிறுகதைகள், பண்டிதமணியின் நடைநயம்; ஆய்வியல் வழிகாட்டி, உரை மரபுகள், சின்னச் சின்ன இழை (புதுக் கவிதை), தொகுப்பு : சங்க இலக்கியத் தொகை, செயகாந்தன் சிந்தனைகள், துணுக்கு இலக்கியம், துணுக்குத் திரட்டு. பதிப்பு: மு. வ. கலைக் களஞ்சியம், மணிமொழிகள், கடிதங்கள், பொதிகை மலர் 1, பாடல்கள் தொகுதி 2, பாரதி இயல், புதுக் கவிதை அணிவகுப்பு, புகழ்பெற்ற சங்க இலக்கியப் பொன்மொழிகள். தனிப்பொழிவும் பட்டிமன்றமும் வல்லார்.

**இன்துணை நிர்மலா மோகன் :** மதுரை செந்தமிழ்க் கல்லூரித் துணைப் பேராசிரியை. டாக்டர் பட்டம் பெற்றவர். நல்ல பேச்சாளர். மணம் 76ல். மகள் அரசி. **முகவரி :** 135, ஆழ்வார் நகர், ஓமந்தூரார் வீதி, நாகமலை, புதுக்கோட்டை, மதுரை-19.

**பாரதிதாசன் பல்கலைக் கழகம் :** 1985. இப் பல்கலைக் கழகத்தில் பின்னரே தமிழ்த்துறை பிறந்தது. அதுவும் பிற பல்கலைக் கழகங்களில் போலில்லாது-பல்கலைக் கழகத்துடன் உடனடி-நேரடிச் செயற்பாடின்றி மொழியியல் ஆராய்ச்சிப் பள்ளி அமைத்து அதன்கீழ் இயங்குமாறு அமைக்கப் பெற்றுளது. தமிழ்த்துறைத் தலைவர், தலைவர் மா. இராமலிங்கம் (எழில் முதல்வன்), பேருரையாளர் நா. இராசகோபாலன். பின்னவரே முதலில் பணி ஏற்றார்; முன்னவர் பின்னே பணியிற் சேர்ந்தார்!

பெயர்கொண்ட பாவேந்தர் பிறந்த நாட் கருத்தரங்கு 86, 87இல் கொண்டாடியது. அறிவியல் தமிழ் கருத்தரங்கும் நிகழ்த்தியது. தலைவர் பற்றிப் பிற இடங்களில் பேசப்பட்டுளது. **நா. இராசகோபாலன்.** பச்சையப்பன் கல்லூரி மாணவர் மு.வ. வின் அன்பு மாணவர். திருச்சி தேசியக் கல்லூரியில் பல்லாண்டுகள் பணியாற்றியவர். பரந்த நோக்கும், பரந்துபட்ட பன்முக அறிவும் விரிந்த மனப்பான்மையும், மாணாக்கர்களை மதித்து ஊக்கும் மாண்பும், செயற்றிறமும் ஆளுமையும் சான்றவர். கணீர்க் குரல், கம்பீரத் தோற்றம், நடுவகிடெடுத்து சுருள்முடி புரள நெடிய வடிவுடன் செம்மாந்து நடந்திடும் நல்லார். உள்ளம்போல் வெள்ளுடை உடுத்து விளங்குபவர். நல்ல ஆய்வு வளமை கொண்ட இவர் எழுத்தில் இறங்கி தம் கருத்துக்களை நூல்களாக வடித்து வழங்கிடுவது வருங்காலப் பயனாம்.

**பாரதியார் பல்கலைக்கழகம் :** 1985 முதலில் மொழியியல் துறை ஏற்பட்டது. பின்னே இலக்கியத் துறை எழுந்தது. 4-4-86இல் பாரதியார் ஆய்வரங்கம் நடத்தி, 10 கட்டுரைகள் கொண்ட 167 பக்க. 'பாரதி ஆய்வு' பல்கலைக் கழக முதல் வெளியீடாக வந்தது. 11-9-86இல் பாரதிவிழா அறிவியற்புல முதன்மையர் பி. சண்முகம் தலைமையில், பதிவாளர் பேரா. சிலம்பண்ணன் வாழ்த்துரைக்க, பேரா கு. துரைராசு சிறப்புரையாற்ற, டாக்டர் ஜி. பக்தவச்சலம் பேச்சு கவிதைப் போட்டியில் பரிசு பெற்றோர்க்குப் பரிசு வழங்கினர்.

25, 26-11-86இல் அறிவியல் தமிழ்க் கருத்தரங்கு நடத்திற்று. துணைவேந்தர் அர. சுப்பையன் தலைமை, வா.செ. குழந்தைசாமி 'அறிவியல் தமிழ்க் கோவை' நூலினை வெளியிட்டுச் சிறப்புரையாற்றினார். மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் எசு. கிருஷ்ணசாமி நிறைவுரையாற்றினார். 4 அமர்வுகளில் வா.செ.கு. அவர்களின் 'அறிவியல் தமிழ்' நூல் அலசப் பெற்றது.

16, 17-2-87இல் மைசூர் இந்திய மொழிகள் நடுவண் நிறுவனத்தோடு இணைந்து தமிழ்த்துறை தமிழ்ப் பாடத்திட்ட மேம்பாட்டுக் கருத்தரங்கு நடாத்தியது. இதன் முனம் மொழியியல்துறை மொழியியல் கோடை வகுப்பு ஒரு திங்கள் நடத்திற்று.

இரு துறைகளும் இரு சுடர்களாக இலங்குகின்றன; பின் வரும் முக்கனிகளும் மும்மணிகளாக முறுவலிக்கின்றனர். கருணாகரர்பற்றி அறிய (பக்கம் 1317).

**நா. செயராமன் :** 17-2-1943. பழனி வட்ட ஆயக்குடி. நாராயணசாமி. முத்துக்காடு அம்மாள். பள்ளி இறுதித் தேர்வு(58), மதுரை தியாகராசர் கல்லூரி பி.ஏ. தமிழ்(62), எம்.ஏ. 64; எம்.லிட் 'கபிலர் பாடல்கள்' 69இல், 'சங்க இலக்கியத்தில் பாடாண் திணை' 73இல். தியாகராசர் கல்லூரித் தமிழ்த் துணைப் பேராசிரியர் 64-76; மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் 76-86; பாரதியார் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறைத் தலைவர் சூலை 86 முதல். இவரிடம் பிஎச்.டி. ஆய்வு செய்தோர் 22, செய்வோர் 15.

சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, ஈன்ற தாய், திராவிட மொழி ஒப்பியல், முல்லைப் பாடல்கள், சங்கத் தமிழ்ச் செய்யுட் கோவை, களம் கண்ட கருத்துக்கள், நெய்தல் பாடல்கள், தமிழிலக்கிய நெறிகள், அரங்கேறிய ஆய்வுகள், Life and letters of Kapilar எனப் 10 நூல்கள். 55 கட்டுரைகள். இன்றைய இளைய தலைமுறைத் தமிழ்ப் பேராசிரியர்களில் சங்க இலக்கியத் தோய்வும் தெளிவும் கொண்ட திறனி.

**இரா. சந்திரசேகரன் :** (முல்லை ஆதவன்) 15-6-1946. கோவை சிங்கநல்லூர் உப்பிலி பாளையம் இராமசாமி: அரங்கநாயகி. பூ.சா.கோ. கலைக்கல்லூரி பி.யு.சி. 63இல். அரசு கலைக்கல்லூரி பி எசி. கணிதம். 67, எம்.ஏ. தமிழ், வரலாறு, சமூகவியல், காந்தியச் சிந்தனை என 4 எம் ஏ. டாக்டர் தா.ஏ. ஞானமூர்த்தியிடம் 'விடுதலைக்குப் பிறகு தமிழ் நாவல்கள்' என ஆய்ந்து டாக்டர் பட்டம் 75இல். 85 முதல் 'தென்னிந்திய வரலாற்றில் புத்தமதத்தின் பங்கு' என டி.லிட். செய்து வருகிறார். பல்கலைக் கழக மானியக்குழு ஆய்வாக அண்ணன்மார்சாமி கதை. தமிழகத்தில் புத்தமத செல்வாக்கு; அமராவதி நதிக்கரைக் கல்வெட்டுக்கள் ஆய்வுகள் செய்துளார். ஆய்வுரைகள் 30. நூல்கள் 4 (தொகுப்பு).

73இல் குடந்தை, 73-76 கோவை, 76-78 சேலம், 78இல் உடுமலைப்பேட்டை, 78-79 மன்னை, 79-80 கோவை, 80-85 உடுமலைப்பேட்டை அரசு கலைக்கல்லூரிகளில் பணியாற்றி 85 முதல் பாரதியார் பல்கலைக் கழகத் தமிழ் இணைப் பேராசிரியராகத் திகழ்கிறார்.

71இல் தே. வானம்பாடி இயக்கம் தோற்றி யோரில் ஒருவர்; வானம்பாடி இதழின் முதல் ஆசிரியர். கவிதை. சிறு கதை, நாடக ஈடுபாட்டினர் கோவை நாடகக் கழகச் செயலராக இருந்து நாடகங்களை அரங்கேற்றியவர். இவரிடம் எண்மர் பிஎச்.டி. ஆய்வு செய்து வருகின்றனர். நல்ல கவிஞர். நாட்டுப்புறவியல் நல்ல ஈடுபாட்டினர்; புதிய கண்ணோட்டத்தில் பிரெஞ்சு Motiff Theoryயில் நோக்கும் ஆர்வலர். வட்டார (நாவல்) இலக்கியத்தில் வல்லாளர். **முகவரி:** 27, கல்யாணி அம்மாள் நகர், காந்தி நகர், உடுமலைப்பேட்டை-642 154.

**அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி - 1985**

**திருமதி இராதா தியாகராசன்** கலைத் தந்தை கருமுத்து தியாகராச செட்டியாரின் துணைவியார். அவ்வை துரைசாமிப் பிள்ளையிடம் முறையாகத் தமிழ் கற்றவர். கணவருக்குகந்த திருவாசகம் பற்றி ஆராய்ந்து 72இல் A study of mysticism in Tiruvasagam மதுரைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். நூல் : திருவாசகத்தில் அருளியல்.

பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவராகத் திகழ்ந்து அரும்பணியாற்றினார். இதுபோது அழகப்பா பல்கலைக் கழகத்தின் **முதல்** துணை வேந்தர் தமிழகப் பல்கலைக் கழகங்களில் முதல் பெண்மணி தலைமையேற்றது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. தேனொழுகப் பேசும் திறமும் தமிழறிஞர்களைப் போற்றிப் புரக்கும் வெற்றியும் சான்ற கலை அன்னை. ஒரு திருமகன் கண்ணன்.

**கோ. சங்கரராஜுலு :** மாநிலக்கல்லூரி, கரூர், மதுரை வேளாண் கல்லூரிகளில் பேராசிரியராக இருந்து முதல்வராகச் சிறந்து கல்லூரிக் கல்வித் துணைஇயக்குநராக விளங்கி, அழகப்பா பல்கலைக் கழகப் பதிவாளராகப் பிறங்குகிறார். திருக்குறள் பாட்டும் கருத்தும் நூல். 64இல் எம் லிட். Development of religious thought in early Tamil Litt. அடக்கமும் ஆற்றலும்சான்ற ஆன்றோர்,

**கோ. சிவகுருநாதன் :** 5-7-1932-கும்பகோணம். அழகப்பா கலைக்கல்லூரியில் பணியாற்றி இதுபோது பல்கலைக் கழகப் பேராசிரியராக உயர்ந்துள்ளார். நூல் அறவிளக்கு. **முகவரி.** 11, ஆசிரியர் குடியிருப்பு, அழகப்பாபுரம், காரைக்குடி-623 003.

**தே. சொக்கலிங்கம் :** 1941-பி. அழகாபுரி, அண்ணாமலையில் பி. ஓ எல், பின் எம். ஏ., அழகப்பா கல்லூரியில் பல்லாண்டுகள் தமிழ் ஆற்றி இதுபோது பல்கலைக் கழகத்தில் பேருரையாளர். பாடுவார். முத்தப்பரிடம் தனிப்பற்று, அவர்பற்றி ஆய்வுக் கட்டுரை பல எழுதியுள்ளார்.

**இரெ பிச்சைக்கண்ணு :** 1934-தஞ்சைமாவட்ட இடையிருப்பு அண்ணாமலையில் எம். ஏ. பயின்று 61இல் எம். லிட் 'Kumarakuruparar's contribution to Tamil Litt., பட்டம் பெற்றவர். அழகப்பா கல்லூரியில் பல ஆண்டுகளாகப் பணியாற்றி, இப்போது பல்கலைக்கழக விரிவுரையாளர். தமிழ்ச் செய்யுள் வளர்ச்சியில் ஈடுபாடுடையவர்.

**அ. விசுவநாதன் :** 1937-இடையார் உடையார் பாளையம் அழகப்பர் கல்லூரியில் பணியாற்றி இதுபோது பல்கலைக் கழகப் பேருரையாளர்.

**இராம. இராமநாதன் :** 7-7-33-புதுக்கோட்டை அரிமழம். எம். பி. இராமநாதன் : நாச்சியம்மை ஆச்சி 54இல் சென்னை கிருத்துவக் கல்லூரி உ. ப. 56இல் லயோலா இன்டர், 58இல் அண்ணாமலை ஆனர்சு; 58-60 மதுரை தியாகராசர், 60-62இல் எம். லிட். Treatment of warfare in Sangam Litt. டாக்டர் பட்டம் Psychological aspects found in Tolkapiam. 62 முதல் அழகப்பர் கல்லூரி; இதுபோது அழகப்பா பல்கலைக் கழக விரிவுரையாளர்.

நூல் : 19ஆம் நூற். இலக்கிய வரலாறு, எது தமிழகம்? கட்டுரை எழுதும்முறை. தென்றலில் 52ல் தொல்காப்பியம் பற்றித் தொடர்ந்து எழுதினார். சிலம்பு பற்றிப் புதிய நோக்கில் 100 கட்டுரைகள் யாத்திருப்பார். 60ல் மணம், ருக்மணி; மக்கள் கதிரேசன் B. E. AMIE., மனோகரன் M.Sc. Bio-Chem. **முகவரி :** 'முருகனடி', 8, 9வது தெரு, சுப்பிரமணியபுரம், காரைக்குடி-3. (2876)

**வெ சு. அழகப்பன் :** 1934. காரைக்குடி. அண்ணாமலையில் பி.ஓ எல். பயின்று மேலைச் சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் 62-71இல் முதல்வராகத் திகழ்ந்து எம்.ஏ. ஆகி.

71 முதல் காரைக்குடி அழகப்பா கலைக் கல்லூரித் தமிழ்த் துறையில் திகழ்ந்து பல்கலைக் கழக விரிவுரையாளர். 73இல் அண்ணாமலை எம்.லிட். Social and Political life as revealed in Purananuru. மதுரைப் பல்கலைக் கழக பி.எச் டி. பதினோராந் திருமுறைத் திறன். நூல்கள் : சிலம்பின் முதல் ஒலி, சமயக்கட்டுரை மாலை. அண்ணாமலையிலும் பணியாற்றியுள்ளார். **முகவரி** : 8. ப.அ. லெ. தெரு, காரைக்குடி.

**உ பாலசுப்பிரமணியம்** : 1939. விழுப்புரம். பொருளியல் பி.ஏ., தமிழ் எம்.ஏ., அழகப்பர் கல்லூரியில் ஆசிரியராக இருந்து இப்போது பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளர். 13, ஆசிரியர் குடியிருப்பு, காரைக்குடி-3.

**பாண்டிச்சேரி மத்தியப் பல்கலைக்கழகம்** : 1986 பிற பல்கலைக் கழகங்கள் போலன்றிப் பாரிய நோக்கில் அமைவது. வட்டாரப் பல்கலைக் கழகமாகாது, 8வது மைய தேசீயப் பல்கலைக் கழகமாக அமைவது. இதன் துணைவேந்தர் இயக்கம் மிக்க Dynamic Personality டாக்டர் **கே. வேங்கட சுப்பிரமணியம்** மாவட்டக் கல்வி அலுவலராக இருந்து பள்ளிக்கல்வி இயக்குநராக உயர்ந்தவர். மாநிலச் சாரணர் ஆணையர், வெள்ளி யானை விருது பெற்றவர். காமராசர் காலத்தில் மதிய உணவுத் திட்டம், பள்ளிச் சீரமைப்பு மாநாடு, சத்துணவுத் திட்டம் சிறக்கச் செய்தவர்.

அதிகாரப் பகிர்வு முறை கொணர்ந்து கல்வி மாவட்டத் தலைமை அலுவலர்கள் (CEO) அமர்த்தல். யார்க் பல்கலைக் கழகத்தில் Global wastage in Education, கல்வி பொருளியல் துறையில் ஈடுபாடு. எழுத்துச் சிந்தனைகள், கல்விச் சிந்தனைகள் என்பன நூல்கள். ஆங்கிலத் தமிழ் அகராதி.

Human investment - Rates & Return Theory பற்றி ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றார். தேனீ போன்று துறுதுறுப்பான உழைப்பு. எதிர்காலப் பார்வையும் கொண்டவர். உலகு புகழ் கல்வியாளர், உயர்ந்த சிந்தனையாளர். செயற்படு சிந்தையர், சீரிய சொற்பொருட் பொழிவாளர். இவர் தலைமையில் புதுவைப் பல்கலைக் கழகம் புதுமை பலவும் புரட்சி சிலவும் செய்து உலகு புகழ் பெறும் என உரைக்கலாம். இனித் தமிழ்த்துறை : புதுவை தாகூர், மகளிர் கல்லூரி; காரைக்கால் அறிஞர் அண்ணா, பாரதிதாசன் மகளிர் கல்லூரிகள் உள.

**அ பாண்டுரங்கன் :** 11-3-1936. மதுரை மாவட்ட பெரிய குளம் அழகர்சாமி நாயுடு : தனுக்கோடி (என்ற) இராமக்கம் மாள். 54இல் தேனி நாடார் சரசுவதி உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு; 58இல் மதுரைக்கல்லூரி பி.ஏ. கணிதம், 60இல் மாநிலக்கல்லூரி தமிழ் முதுகலை. 79இல் டாக்டர் பட்டம்: 'கம்பராமாயணமும் காப்பியக் கொள்கையும்'. 61-69 புதுவை தாகூர் கலைக் கல்லூரி, 69-70 பாரதிதாசன் மகளிர் கல்லூரி, 79-83 காரைக்கால் அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரி, 83-86 தாகூர் கல்லூரிப் பணி. 86 திசம்பர் முதல் புதுவைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர்.

முதுகலையில் மாநில முதன்மை; லாசரஸ் பாதிரி, டாக்டர் கே.எஸ். கிருஷ்ணன் பொற்பதக்கங்கள் பெற்றவர். சிவபோக சாரம் முதற் பரிசு; தமிழ் மன்றச் செயலர். கொழும்பில் நடந்த 'முதல் உலக இந்து சமய மாநாட்டில்' புதுவையின் பேராள ராகப் பங்கேற்றவர். திராவிட மொழியியல் கழகச் செயற் குழு உறுப்பினர். ஆங்கிலம் தமிழில் பல கட்டுரைகள் படைத் துளார். மணம் 56இல், மனைவி திருவரங்கம்; மக்கள் அறுவர். **முகவரி :** 14, லெமேர் வீதி, காரைக்கால்-609 602.

**அ. அறிவு நம்பி :** (முல்லையண்ணன்) 10-11-1052. காரைக்குடி. பேரா. பூ. அமிர்தலிங்கம் அவர்களின் மகன். கவிஞர். கவியரங்கம் பல கண்டவர். தங்கப் பதக்கங்கள் வென் றவர். 'தமிழகத்தில் தெருக்கூத்து' பற்றி ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். நூல் கூத்தும் சிலம்பும். புதுவைப் பல் கலைக் கழகத் துணைப் பேராசிரியர். ஊர் **முகவரி:** 'அறிவகம்', 40, இந்திரா நகர், காரைக்குடி-1.

**உசுமானியாப் பல்கலைக் கழகம், ஐதராபாத் :** பல்கலைக் கழக மொழித்துறைகளிலேயே மிகு பழமையது. 1935. முதுகலை 61இல் தொடங்கியது. பிஎச் டி. ஆய்வுக்கும் வசதியுண்டு. 62 முதல் பேராசிரியர் கட்டிலுக்கும் 78 முதல் தமிழ்ச் சான் றிதழ் பட்டய வகுப்புக்கான செலவினையும் தமிழரசு ஏற்கிறது.

முதற் பேரா. **ப.மீ.**(னாட்சி) **சுந்தரனார்.** தஞ்சை இரட்டை வார்க்காரத் தெருவிற் பிறந்து தூய பேதரு உயர்நிலைப்பள்ளி, அண்ணாமலை முதுகலை முதல் அணியினர். பாரதியார் வாழ் வும் பணியும் (1954) படைத்தவர் 'ஆந்திர மாநிலத் தமிழ்க் காவலர்' எனக் கொண்டாடப் பெற்றார். இவரையடுத்து அ.மு. பரமசிவானந்தம்(65) சி. இலக்குவனார் (70) அணி செய்தனர், பின் தலைவரானவர் டாக்டர் துரை சிங்கார

வேலனார். சிலம்பின் முதலாவது, இரண்டாவது மணி நூலாசிரியர். அடுத்து அமைபவர் தா சா. மாணிக்கம் 16-3-1931. அண்ணாமலை மாணவர், 63இல் Loan words in Tamil என ஆராய்ந்து எம்.லிட். பெற்றவர். டாக்டர் பட்டம் பெற்றவர். மாநிலக் கல்லூரியில் பணியாற்றியவர். பாமழை(கவி), மாலை (ஆய்வு), Comparative Vacabulary of Ta nil and Telugu முகவரி: வெங்கட்ராவ் நகர் காலனி, 163, பிரெண்டர்கஸ்ட் சாலை, செகந்திராபாத்-500 003. இங்கு 40% தமிழர்.

**ஸ்ரீ வெங்கடேசசுவராப் பல்கலைக்கழகம், திருப்பதி :** 55 முதல் பட்ட வகுப்பிலும் 70 முதல் எம்,ஏ. தமிழும் நடக்கின்றன. 79 முதல் வைணவ இலக்கியம் சிறப்புப் பாடம் முதற் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் (பக்). சான்றிதழ் வகுப்புகளும் நடக்கின்றன. தமிழரசின் நிதியுதவி உண்டு. 60இல் பேராசிரியர் நியமிப்பு.

**பொன். சௌரிராசன் :** 6-4-1932. தஞ்சை மாவட்டம் சிக்கல். பொன்னையா : செகதாம்பாள். பச்சையப்பன் கல்லூரி தமிழ் முதுகலை; மு.வ. வின் பிரிய மாணவர். 60-70. சித்தூர் அரசினர் கல்லூரி, 71-77 திருவேங்கடவன் பல்கலைக் கழக விரிவுரையாளர், 78-80 இணைப் பேராசிரியர், மார்ச்சுத் திங்கள் முதல் தமிழ்த்துறைத் தலைவர். நூல்கள் : கட்டுரை மணிகள், கதை மலர்கள் (சிறுகதை); கள்ளி மலர், தாயகம் (புதினங்கள்), பண்டித பரமேசுவர சாத்திரி உயில் (தெலுங்குப் புதினம்); குழந்தைப் பாடல்கள், சித்திரச்சிலம்பு; தமிழ் தெலுங்கு இலக்கிய வரலாறு, தாயுமானவர் வாழ்வும் வழியும், A critical study of Saint Tayumanavar (Ph.D.) 200க்கும் மேற்பட்ட கவிதைகள் வடித்துள்ளார்; 'தங்கக் கோழிக்குஞ்சு' குறிப்பிடத்தக்கது.

அமைதியும் அடக்கமும் மிக்கவர். அளந்து பேசும் அன்பர். காந்திய நெறியர், கதரே அணிவார். எல்லோரும் இன்புற்றிருக்க வாழும் குறிக்கோளர்; அன்பு செய்யும் கொள்கையர். குழந்தை வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் பயன்படுமாறு எழுதும் நோக்கினர். 61இல் மணம், மனைவி சந்திரமணி, மக்கள் நால்வர். **முகவரி :** திருவேங்கடவன் பல்கலைக் கழகம்: திருப்பதி-517 502

**ஸ்ரீ கிருட்டிண தேவராயா பல்கலைக் கழகம், அனந்தப்பூர் :** இங்கு பகுதி நேர விரிவுரையாளர் உளார்; சான்றிதழ் வகுப்புகள் நடக்கின்றன. இம்மூன்று பல்கலைக் கழகங்களும் ஆந்திர மாநிலத்தில் அமைவன.

**மைசூர் பல்கலைக் கழகம், பங்களூர்:** இதன்முதல் பேராசிரியர், கன்னட நாட்டில் கன்னித்தமிழ் பரப்பியவர். **சி ருத்திரபதி** 24-10-1904—28-2-58 தஞ்சை பாபநாச வட்ட மேலச் செம்மங்குடி. சிவசாமித் தென்கொண்டார் : தங்கத்தம்மாள். பாபநாசம் உ.ப, குடந்தைக் கல்லூரி எப்.ஏ , திருச்சி தேசியக் கல்லூரி பி.ஏ, அண்ணாமலை எம்.ஏ. (34). வறுமையில் மிக வாடியவர், அரசு உதவியால் பயின்று சிறந்தவர். 35-39 பங்களூர் இடைநிலைக்கல்லூரி, 40-43 மைசூர், 44-57 பங்களூர்.

இசைப் பெரியார் மூவர், உதயணன் சரிதம், கௌசாம்பி மன்னனும் கவி மதுரைப் பெருமானும், தமிழ் இலக்கணம். சுதந்திரத் தமிழ் வாசகம் 1-5 வகுப்புகட்கு, பஞ்ச தந்திரக் கதைகள், குறள், கம்பராமாயணம், திருவாசகத்தைக் கன்னட மொழியில் அறிமுகம். 48-56இல் இலங்கை சென்று சொற் பெருக்காற்றிப் பொன்னாடை போர்த்தப் பெற்றவர். தருமையாதீனப் புலவர், திருவாவடுதுறை ஆதீனம் பொன்னாடை போர்த்தியது, மதுரை ஆதீனம் 'சைவத் தமிழ்மணி,' பெங்களூர் சமரச வேத சன்மார்க்க சங்கம் 'வாசகமணி' எனப் பட்டம் சூட்டல்.

23இல் மணம், மனைவி சரசுவதி; மக்கள் சிவகாமி, திருநாவுக்கரசு, மாணிக்க வாசகன். திருஞான சம்பந்தன், மங்கையர்க்கரசி, அபிராமசுந்தரி. உலக பூபதியரின் சம்பந்தி. உயரிய குணத்தர், ஒழுக்கத்தின் உறைவிடம்.

இம்மாநிலத்தில் 95 லட்சம் தமிழர்கள் உளர். ஏறத்தாழ 25 கல்லூரிகளில் தமிழ் கற்பிக்கப்படுகிறது. நிஜலிங்கப்பா, சூசையப்பர், கிருத்துவ, மகாராணி, ஊரிகம் முதனிலைக் கல்லூரிகள் குறிப்பிடத்தக்கன. இங்கு தண். கி. வெங்கடாசலம், டாக்டர் வ. பெருமாள் தமிழவன், ஆர் நடராசன்; சண்முக சுந்தரம், இளங்கோ (இராமர்), நாகம்மாள், செல்லப்பன் போன்றாரைக் குறிப்பிட வேண்டும்.

**கருநாடகப் பல்கலைக் கழகம், தார்வார் :** முதுகலை கன்னடம், மொழியியல், நாட்டுப்புறவியல் பயில்வோர் கற்கின்றனர். பேருரையாளர் : டாக்டர். ஆர். பன்னீர் செல்வம், கேரளப் பல்கலைக் கழக மாணவர். 64இல் Tamil Inscriptions of 7, 8, 9th Centuries என டாக்டர் பட்டம் பெற்றவர். மைசூர் இந்திய மொழிகளின் மைய நிறுவனத்தில் பணிபுரிந்தவர்.

**இந்திய மொழிகளின் மைய நிறுவனம், மைசூர்** : 17-7-1969. இயக்குநர் பட்நாயக். டாக்டர் இ. அண்ணாமலை, டாக்டர் எம். எஸ். திருமலை இருவரும் பேரா; துணை இயக்குநர்கள். டாக்டர் வ தெய்வசுந்தரம், பொன். சுப்பையா, ஆராய்ச்சி அலுவலர்கள். டாக்டர் என். நடராச பிள்ளை, கே. இராமசாமி, சாம்மோகன்லால், பாலகுமார் விரிவுரையாளர்கள். ஜெயபால், இலங்கையன், டாக்டர் ராதா கிருட்டிணன், கணேசன், தேவேந்திரன், தா. பரசுராமன் போன்றார் ஒவ்வொரு பிரிவின் பொறுப்பர்கள்.

மும்மொழித் திட்டத்தைச் செயற்படுத்தும் ஐந்து மண்டல மொழிமையங்கள், மைசூர், புவனேஸ்வர், புனே, பட்டியாலா, இமாசலப் பிரதேச சோலன் பணிகள் : 1. மொழியியல் ஆய்வடிப்படையில் இந்திய மொழிகளைக் கற்பித்தல். 2. உலகின் மொழி ஆய்வுபற்றிய விவரங்களை உடனுக்குடன் அளித்தல். 3. பல் துறை சார்ந்த ஒருமித்த ஆய்வுக்கு வழி வகுத்தல். 4. தேவையான தரவுகளைத் திரட்டித் தருதல். 5. பன்மொழி ஆய்வுகளை ஒரே அமைப்பின்கீழ் ஒருமுகப்படுத்தல். 6. இந்தியமொழிகட் கிடையே இணைப்பினை ஏற்படுத்தி அடிப்படை ஒற்றுமைகளை வெளிப்படுத்தல், 7. பழங்குடி மக்களின் பேச்சுமொழி ஆய்தல், 8. சமுதாய வியல்—மொழியியல் பரிமாற்றம். 9. தன்மொழிகற்கும் நேரம் குறைத்து பிற இந்திய மொழி பயில வழிசெய்தல். 10. குறுகிய கால, ஆழப்படிப்பு, முழுநேரப் படிப்பு என மூவகையில் பயிற்சியளித்தல். 11. தொழில் நுட்ப வளர்ச்சியினை மொழியியலில் பாய்ச்சுதல். 12. மொழிபெயர்ப்பின் பயனறிவித்துப் பயிற்சியளித்தல். 13. இந்தியமொழி ஆய்வு ஆர்வலர்க்கு உதவுதல். 14. கருத்தரங்கு பணிமனை, கோடை வகுப்புகள் நடத்தல். 15. அரசுக்கு மொழி தொடர்பான கருத்துரை அளித்தல்.

தமிழ்ப் பணிகள் : 1. பாட நூல்கள் தயாரித்தல். 2. பாட நூல், பயிற்றும் ஆசிரியர் பாடத்திட்ட இடைவெளி நீக்கல் 3. சமுதாய உளமொழியியல் ஆய்வு. 4. இரண்டாம் மொழியாகத் தமிழ் கற்பிப்போர்க்குப் பயிற்சி. 5. பழங்குடி மக்களின் கல்வி மேம்பாட்டுத் திட்டம். 6. தொடக்கப் பள்ளிகளில் மொழித்திறன் வளர்த்தல். 7. சிறுபான்மைக்குடியினர் பிள்ளைக்கட்குத் தமிழ் கற்பிக்கப் பயிற்சி அளித்தல்.

78 முதல் அஞ்சல்வழிச் சான்றிதழ் தமிழ்க் கல்வி, 76இல் அனைத்திந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு நடத்தியது. மொழியியல் கோடை வகுப்புகள் நடத்து

கின்றது. வெளியீடுகள் : தமிழ் ஒலியனியல் நூல், தமிழ் வரிவடிவ அறிமுகம் : படித்தலும் எழுதுதலும், ஆழ்தமிழ்ப் பாடநூல், முதுநிலைத் தமிழ்நூல், நமது மொழி—தாய்மொழி வரிசை, தமிழ் இணைப்புப் பயிற்சி (8 பகுதிகள்), இந்தி—தமிழ் பொதுச் சொற்கோவை, பிழை ஆய்வு, தமிழ் விளக்கு இரண்டாம் மொழிப் பாடநூல், தமிழ்ப் படச் சொற்சுவடி, முதுகலை மாணவர் கையேடு.

சென்னை, பாரதியார் பல்கலைக் கழகங்களில் பாடத்திட்ட மேம்பாட்டுக் கருத்தரங்குகள்85, 86இல் நடத்தியது.

**அலிகார் முஸ்லீம் பல்கலைக் கழகம்** : இந்தித் துறையுடன் இணைந்து 69முதல் தமிழ் கற்பிக்கப்படுகிறது. சான்றிதழ், பட்டயத் தேர்வுகள் உள. எம்.ஏ. இந்தி பயில்வோர் விருப்பப் பாடமாகத் தமிழ் கற்கின்றனர். ஆசான் டாக்டர் டி. சீனிவாச வரதன். 76 முதல் பல்கழைக்கழகத் தமிழ் மாணவர் கழகம் இயங்குகிறது. தமிழர் விழாக்கள் கொண்டாடுகிறது.

**ஆக்ரா பல்கலைக் கழகம்** : இந்தி நிறுவனத்தில் சான்றிதழ், பட்டய, இந்தி எம். ஏ யில் தமிழ் கற்பிக்கப்படுகிறது. டாக்டர் ஜே. பார்த்தசாரதி பணியாற்றுகிறார். **அலகபாத் பல்கலைக் கழகம்** சான்றிதழ், பட்டய, இந்தி எம். ஏயில் வாய்ப்பு. வி. ஸ்ரீ. அரங்கநாதன் கடமையாற்றுகிறார். **லக்னோ பல்கலைக் கழகம்**. இந்தித் துறையுடன் இணைந்துளது. சான்றிதழ், பெருஞ் சான்றிதழ், பட்ட வகுப்பில் கற்கலாம். டி. வி. பத்மாவதி பொறுப்பர். **காசி இந்துப் பல்கலைக் கழகம்** இந்திய மொழித் துறையில் தமிழ்த் துறை. பட்டவகுப்பில் பாடமாக உளது. முன்னம் டி. பி. சித்தலிங்கையா, இதுபோது ந. அருணபாரதி 15-6-47.பன்மொழி அறிந்தவர். கவிதை, கதை திறனாய்வு வல்லார். Glossory of Linguistics (Eng-Tamil) படைத்தவர். விரிவுரையாளர். **முகவரி:** 63, ஆசிரியர் மனை, வாரணாசி, 5, திருப்பனந்தாள் காசி மடத்தின் பொருளுதவியால் தமிழ் புகட்டப்படுகிறது. இந்த ஐந்தும் உத்தரப் பிரதேசத்தில் உள.

**பஞ்சாப் பல்கலைக் கழகம், சண்டிகர்** : தென்னிந்திய மொழிகட்கெனத் தனித்துறை உளது. சான்றிதழ், பெருஞ் சான்றிதழ், பி.ஏ. எழுதலாம். கு. இராமகிருட்டிணன் 10-5-38. பச்சையப்பன் மாணவர், சத்தியத்தாய் (பெயர்ப்பு). துறைத் தலைவர். **பஞ்சாபி பல்கலைக் கழகம். பாட்டியாலா.** மொழியியல் துறையோடு இணைந்துளது, மொழியியல் எம்.ஏ. பயலுநர் தமிழ் கற்கின்றனர். இரண்டும் பஞ்சாப் மாநிலத்தில் உள.

**தில்லிப் பல்கலைக் கழகம் :** 59இல் தமிழ்த்துறை ஏற்பட்டது 12 மொழிகள் கொண்ட இந்திய மொழித்துறையின் ஓர் உறுப்பு. 78இல் தமிழ் முதுகலை தொடங்கப்பெற்றது. இலங்கை, மலேசியத் தமிழ் இலக்கியம் ஒரு சிறப்புப் பாடம். 'ஆய்வேடு' அளித்தல் வேண்டும். முதல் வகுப்பு தொடங்கி டாக்டர் பட்டம் வரை பயில வாய்ப்புளது. **க. ஆறுமுகம்** 1920. ஒட்டம்பட்டு, துறைத்தலைவர். எம்,லிட். 59, Studies in Pattuppattu 64இல் பிஎச்.டி. A critical study of Naccinarkkiniyar. உலகம் வாழும், குற்றமா குணமா நூல்கள் **முகவரி :** 8ஏ/79, W. E. A. கரோல்பாக். புது தில்லி-5. **புகழ் பூத்த நாவலாசிரியர் இந்திரா பார்த்தசாரதி,** பாலசுப்பிரமணியம், இரவீந்திரன் உளர். **சாலை சாலினி, இளந்திரையன்** இங்கு தமிழ்க்கொடி நாட்டி, இதுபோது தாமே ஓய்வு எடுத்துக் கொண்டு தமிழகத்தில் வதிகின்றனர். **முகவரி :** பேரவை இல்லம், 11, திருவீதியான் தெரு, கோபாலபுரம். சென்னை-86. (47/820).

ஸ்ரீவெங்கடேசுவரா (சாலினி இளந்திரையன்), ஸ்ரீராம் மகளிர் (இந்திராணி மணியன்), மிராண்டா மகளிர் (மோசூர் வாசுகி) கல்லூரிகளில் தமிழ் உளது. அஞ்சல் வழிக்கல்வித் துறை வழி தமிழ் கற்க வாய்ப்புளது.

**கல்கத்தா பல்கலைக் கழகம் :** 76 முதல் தமிழ்த்துறை, எம். ஏ.யில் தமிழ் பயில வாய்ப்புண்டு. புகுமுக வகுப்பில் இரண்டாம் மொழி பொறுப்பு திருமதி ரங்கநாயகி. தமிழ்-வங்காளம் ஒப்பாய்வு நடக்கிறது.

இப்பல்கலைக் கழகத்தில் மொழிநூற் பேராசிரியராகப் பிறங்கியவர். **டாக்டர் சுநீதி குமார் சாட்டர்ஜி (1890-)** பன்மொழிப் பேரறிஞர். நாட்டுக் கோட்டை நகரத்தார் வீதிவழியே வேலவரை உலா எடுத்துச் சென்றஞான்று 'திருப்பெருந்துறை உறை சிவபெருமானே' எனப் பாடியது கேட்டுத் தமிழில் ஆர்வம் கொண்டு பயின்று சிறந்த தமிழறிஞரானார். தம் பெயரை 'நன்னெறி முருகன்' என நாட்டினார். 'பாரத மொழிகளின் இலக்கிய வரலாற்றில்' தமிழ் மொழியின் தனித்துவத்தை உலக மக்கட்கு நன்கு அறிமுகப்படுத்தியுள்ளார். திருவாசகம் கற்றுத் திளைத்தார்; ஆய்ந்து அரிய செய்திகள் வெளியிட்டார். இவரைத் தொடர்ந்து 25 வங்க இளைஞர்கள், எழுத்தாளர்கள் தமிழ் கற்றனர். இவர் மேற்கு வங்க மேலவைத் தலைவராய்த் திகழ்ந்தவர்.

**ஜாதவ்பூர் பல்கலைக் கழகம் :** தமிழக அரசின் நிதியுடன் தமிழ் விரிவுரையாளர் ஏற்படுத்தப்பட்டுள்ளார். தமிழ் ஒப்பிலக்கிய ஆராய்ச்சி நிகழ்கிறது. **விசுவபாரதி பல்கலைக் கழகம் (சாந்திநிகேதன்).** இந்தித் துறையுடன் தமிழ்ப் பகுதி திகழ்கிறது. சான்றிதழ், பட்டய வகுப்புகள் நிகழ்கின்றன. சொ. முத்தையா (தலைவர்), க. சுப்பையா தமிழ் அறிவுறுத்துகின்றனர். இரண்டும் மேற்கு வங்கத்தில் உள. இனி வெளி நாட்டை நோக்குவோம்.

**இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் :** *1884-96* வரை ஜி.யு. போப் தமிழாசிரியராகத் திகழ்ந்தார். அவருக்குப்பின் இங்கு தமிழ்க் கல்வி தழைக்கவில்லை. டாக்டர் பரோ இங்குளார். பிரிட்டானியப் பல்கலைக் கழகங்களில் **லண்டன் பல்கலைக் கழகத்**தில்தான் தமிழுக்குத் தனிச் சிறப்பு அளிக்கப்படுகிறது. கீழ்த்திசைப் படிப்புப் புலத்தில் உள்ள இந்திய வியல் துறை இன்டர், பி.ஏ. ஆனர்சு வகுப்புகளில் தமிழையும் ஒரு பாடமாக எடுத்துப் பயிலும் வாய்ப்புளது. மாணவர் எம்.எஸ்.எச். தாம்சன், காப்டன் சி. எஸ். கே. பதி, மொழியறிஞர் டாக்டர் ஆஷர், பொற்கோ போன்றார் பணியாற்றியுள்ளர்.

டாக்டர் **ஜான் மார்** கற்பிக்கிறார். தமிழோடு தமிழிசையும் அறிந்தவர், 54-55இல் தமிழகப் பல்கலைக் கழகங்களில் பயின்றவர். இந்தி வெறிஞர் ரகுவீரா தமிழாற்றலைப் பழித்த போது சவால் விடுத்தவர் இவரே! 'தமிழ் வினைச் சொல்லில் தன்வினை பிறவினை எனும் இரு கூறுகளும் இருப்பதால், புதிய சொல்லாக்கத்திற்குப் போற்றுதற்குரிய ஏற்ற மொழியாகத் தமிழ் திகழ்கிறது' என அறுதியிட்டுக் கூறியவர் இவரே. இங்கு தொடக்க நிலை முதல் உயர் ஆய்வுவரை படிப்படியே தமிழ் பயில வாய்ப்புளது; நூலகத்தில் 3000 நூல்களும் கையெழுத்துச் சுவடிகளும் உள.

**எடின்பரோ பல்கலைக் கழகம் :** மொழியியல் முதுகலை பயிலும்போது, 'தமிழின் கட்டமைப்பு' ஒரு விருப்பப் பாடம். டாக்டர் ஆர் ஈ. ஆஷர் உள்ளார்.

**அமெரிக்காவில் :** சிகாகோ, கார்னல். பென்சில்வேனியா, கலிபோர்னியா, வாஷிங்டன். ஹவாய், டெக்சாஸ் பல்கலைக் கழகங்களில் பல்வகையில் தமிழ்க் கல்வி ஆய்வுக்கு இடமுள. டாக்டர் எமனோ, டாக்டர் ஷிப்மன், டாக்டர் ஷோபாக், டாக்டர் இர்ஷிக், டாக்டர் ஏ.கே. இராமாநுஜம் போன்றார்

போற்றத் தக்க தமிழ்-திராவிட இயல் அறிஞர்கள் தமிழ்த் துறைகள் உள எமனோவும் பரோவும் இணைந்து 'திராவிட மொழிகளின் சொற் பிறப்பு அகராதி' உருவாக்கியுள்ளனர்.

**உருசியாவில் :** பன்னெடுங்காலமாகவே பைந்தமிழ் போற்றப்பட்டு வருகிறது. 87இல் வெளியான ஒப்பீட்டு அகராதி திராவிட மொழிச் சொற்றொகுதி விளக்கம் அளிக்கிறது. 1901இல் வெளியான சொற்களஞ்சிய அகராதியில் எஸ்.கே. புலிச் தமிழ்மொழிபற்றி எழுதியுள்ளார். 1905இல் டால்ஸ்டாய் 'இந்துக்களுக்கு ஒரு கடிதம்' என்பதில் குறிப்பாகச் சிலவற்றை எடுத்தாண்டுள்ளார்! திராவிட மொழி ஆய்வின் தந்தையாகத் திகழ்ந்தவர் ஏ. எம். மெர்வர்த் (-54). 26இல் தமிழ் (பேச்சு) மொழியின் இலக்கணம் எழுதியுள்ளார். பரமார்த்த குரு கதை, உயிர்மெய் எழுத்துக்கள், சில குறட்பாக்கள் ரஷ்ய மொழியில் தந்துளார். இவர், மனைவி எஸ். ரூதின், எ. பியதிகோர்ஸ்கி மூவரும் தமிழ்-ரஷ்ய அகராதி படைத்துளர்.

**லெனின்கிராடு பல்கலைக் கழகம் :** தமிழ்த்துறை உளது. 56-67 **ரூதின்செம்பியன்** தமிழ் கற்பித்தார். 38000 சொற்கள் கொண்டது, இவரின் தமிழ்-ருஷ்ய அகராதி. பெரிய புராணத்தை ஆராய்ந்தவர். தமிழ் மொழியின் சொல்வடிவமைப்பு சிறந்த நூல்.

**மைக்கேல் ஆந்திரோனவ் :** 80க்கும் மேற்பட்ட நூல்கள் திராவிடமொழிகள் பற்றி இயற்றியுள்ளார். இன்றைய தமிழ் வினைச் சொற்கள், தமிழ் மொழி, கொச்சைத் தமிழும் வட்டார வழக்குகளும், தமிழ் இலக்கணம், திராவிடமொழிகளின் ஒப்பியல் இலக்கணம், A Standard Grammar of Modern classical Tamil (தமிழரசின் பரிசு).

**மாஸ்கோ பல்கலைக் கழகம் :** விளதிமிர் மக்கா ரெங்கோ தமிழ்ச் சிறுகதைகளின் இன்றைய வளர்ச்சி. அலெக்சாண்டர் துபியான்ஸ்க் ஓலைச் சுவடிப் பாடல்கள் எனும் மகுடமிட்டுப் பழந்தமிழ்ப் பாக்களை ரஷ்யனில் தந்துளார். சர்வதேச உறவுக் கல்லூரியில் கற்பிக்கும் டாக்டர் ஸ்வெத்லானா துருப்னிக் கோவா இக்காலத் தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ்ப்பாடப் புத்தகம் எழுதியுள்ளார். மாஸ்கோ முன்னேற்றப் பதிப்பக விக்டர் புர்னிக்கா ஜெயகாந்தனின் கதைப் பாத்திரங்கள். வானொலியில் சென்னைப்பல்கலைக் கழகத்தில் பயின்ற விக்டர் மீனின் தமிழ் நிகழ்ச்சி அமைப்பர்.

உலக நாடுகளிலேயே தமிழிலக்கியப் பெயர்ப்பில் உருசியா முதலிடம் வகிக்கிறது மூன்று முறை குறள் வெளியிடப் பட்டுளது. 74இல் கவிதை வடிவிலான பெயர்ப்பு-இரண்டே வரிகளில் வந்தது. சங்கப்பாக்கள், சிலம்பு பெயர்க்கப்பட்டுள. 63இல் பாரதியின் பாடல்கள் சுரூனோவா பெயர்த்துளார். ஐங்குன்றன் என்பார் உளர். பாரதிதாசன், பட்டுக்கோட்டை யார், ஜீவானந்தம், வாணிதாசன், கண்ணதாசன் பாக்கள், பல சிறுகதை நாவல்களும் பெயர்க்கப்பட்டுள. நாலடியாரை எ. பியதி கோர்ஸ்கி, பாரதியாரை ஐ. ஸ்மிர்னோவா பெயர்த் துளர்.

பூர்ணம் சோமசுந்தரம், மேஜர் அ. கிருஷ்ணமூர்த்தி, பி.ஆர். மீனாட்சிசுந்தரம், சு. ந. சொக்கலிங்கம் போன்ற தமிழ றிஞர்கள் சோவியத் நாடு சென்று அவர்களுடன் இணைந்து பெயர்த்தமை எண்ணவேணும். பூர்ணம் சோமசுந்தரம் ஒய். கிராஜோவ் தமிழ் இலக்கண நூல் இயற்றினர்.

**மேற்கு ஜெர்மனியில்** : ஜெர்மனிக்கும் தமிழுக்குமிடையே உறவை 1706 ஆகஸ்டில் தரங்கையில் காலடி வைத்த அன்றே சீகன்பால்கு ஏற்படுத்தி விட்டார்.

1. **ஹைடல்பர்க் பல்கலைக் கழகம்** : இந்தியவியல் துறை, பண்டை இந்தியவியல் (Classical Indology), தற்கால மொழி களும் இலக்கியங்களும் சமய வரலாறும் தத்துவமும் என மூன்றை உள்ளடக்கியது. தலைவர் ஹெர்மன் பெர்கர். தமிழைத் தலைமைப் பாடமாக எடுத்து எம்.ஏ., பிஎச்.டி. வரை மேற்கொள்ளலாம். 64இல் மா. சேசையா தொடங்கி வைத்து 66இல் திரும்பினார். 68 சூலை முதல் டாக்டர் அ. தாமோதரன் துணைப் பேராசிரியர். கமில்சுவலபில் சிறப்புச் சொற்பெருக்காற்ற வருகிறார்.

சாதனை : திருக்குறள் இலக்கணம், திருக்குறள் மேற் கோள் விளக்கம், தமிழில் அகராதிகள்-நூலடங்கல், நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும், (கண்டுபிடித்த பெரு மையது), சிவஞான சித்தியார் செர்மன் பெயர்ப்பு, தமிழ்ச் சுவடிகள் விளக்கப்பட்டியல் வெளியிட்டுளது. இவற்றுக்கெல் லாம் உறுதுணை தெற்காசியக் கழகம் (62).

2. **கொலோன் பல்கலைக் கழகம்** : 68 முதல் இந்தியவியல் துறையில் தமிழுக்கு வாய்ப்பு. தலைவர் கே.எல். யானர்ட். 68-70 பெண்கள் கிறித்துவக் கல்லூரி மேரி மாசிலாமணி

அம்மையார் தமிழ் பயிற்றுவித்தார். 72 முதல் கேரளப் பல்கலை பா. ரா. சுப்பிரமணியன் பணிபுரிகிறார். 79 முதல் கேரள கி. நாச்சிமுத்து பணியாற்றினார். 'செந்தமிழ்' (மதுரைத் தமிழ்ச் சங்கம்) அடைவினை பா. ரா. சு. தொகுத்துளார்.

3. **ஹாம்பர்க் பல்கலைக்கழகம்:** முதலில் வடமொழி டாக்டர் சீனிவாசன் தமிழ் அறிமுகப்பணி ஆற்றினார். 70 முதல் **ஹெல்கா அன்டோன்** பாரதிபற்றி ஆய்ந்தவர் தமிழகத்தில் தங்கி பேச்சுத் தமிழையும், கி. வா. ஜ.விடம் இலக்கியத் தமிழும் கற்றவர். தொடக்கமுதல் இலக்கிய வகுப்புவரை எல்லா நிலையிலும் தமிழை அறிமுகப்படுத்திய பெருமையர். பத்திரிகைத் தமிழைக் கற்பித்தவர். தம் மாணவி டி. ஹெல்மனுடன் இணைந்து, Tamil usage in Mass Media நூல், செய்தித் துறைத் தமிழ் குறிப்பிடத்தக்கன. 78இல் விலகியதும் தமிழ்க் கல்வி தேய்ந்தது. இவர் இருந்திருந்தால் திராவிட மொழிக்கெனத் தனித்துறை தோன்றியிருக்கும்!

**பான் பல்கலைக் கழகம்:** 59 முதல் டாக்டர் சி. ஆர். சங்கரன் செங்கோலோச்சுகிறார். தொல்காப்பிய எழுத்தொலி சொல்லாக்க முறைபற்றிக் கால் நூற்றாண்டாக ஆராய்ந்தவர். 'தொல்-ஆய்த ஒலி வடிவத்தினின்று வளர்ச்சியடைந்த முறையே, தற்போது கணித அறிஞர்களால் பாராட்டப்பெறும் Alpha Phnoid Theory of Mathematics' என்பதை நிலை நாட்டியவர். இதனைப் பெரும் புதையல் என இவரைப் போற்றுகின்றனர், தொல்காப்பியத்தைப் பேணுகின்றனர் செர்மானியர்கள்!

**பெர்லின் பல்கலைக் கழகத்தில்:** ஹெர்மன் பெத்தன் பாதிரியார் படைத்த தமிழ் இலக்கணம் பிறநூல்கள் யாவும் செமினரியில் உள. **மார்பர்க் பல்லைக்கழக** வடமொழிப் பேராசிரியர் நோபெல் தமிழும் கற்பித்தார். எச். நாவ் பட்டினத்தார் பாடல்கள் பற்றி நூல் படைத்துளார். 42இல் W. கிரஃபே நன்னூலை ஜெர்மன் படுத்தியுள்ளார்.

தமிழியலுக்கு செர்மானியர் ஆற்றிய தொண்டுகளைத் தனிநாயக அடிகள் தொகுத்த Tamil studies Abroad : a symposium (68) நூலில் டாக்டர் ஆல்பிரெச்ட் வெட்ஸ்லர், டாக்டர் ஆர்னே லெஹ்மன் கட்டுரைகள் காட்டும் பின்னவர் 34இல் தாயுமானவர் பாடல்களை செர்மனியில் பெயர்த்துள்ளமை நினைவுகூரத் தக்கது.

**கனடாவில் :** பிரிட்டிஷ் கொலம்பியப் பல்கலைக் கழக பிரெண்டா இ எப் பெக் அம்மையார் 'தமிழகப் பண்பாடு' ஸ்டீபன் இன்கிலிஸ் மதுரை மாவட்டக் குயவர் இனம்; மக்மாஸ்டர் பல்கலைக்கழக டாக்டர் பால்யங்கர் திருச்சி கோயில்கள், கல்காரி பல்கலைக் கழக டாக்டர் ஆர். ராதாகிருட்டிணன் தமிழக பக்தி இயக்க மரபு ஆய்வுகள் குறிப்பிடத்தக்கன.

இப் பல்கலைக் கழக மாணவர்கள் தமிழ் பயிலத் தமிழகம் வருகின்றனர். சாஸ்திரி இந்திய-கனடா நிறுவனம், தமிழ் மொழி ஆய்வுக்காகத் தமிழறிஞர்களைத் தருவித்தும், தமிழியல் கற்க மாணவர்களை அனுப்பியும் வருகிறது.

**செக் நாட்டு சார்ல்ஸ் பல்கலைக் கழகத்தில்:** பணியாற்றியவர் கமில்சுவலபில். சங்க அகப்பாக்கள், சிலம்பு, சிறுகதைகள், பாரதி பாடல்களை செக் மொழியில் ஆக்கம் செய்தவர். தமிழ் இலக்கிய வரலாறு பற்றி 3 நூல்கள், திருமுருகன். ஐரோப்பிய நாடுகளில் தமிழின் தகவு உணரச் செய்தவர்.

இப்போதைய பேரா. டாக்டர் **வாசெக்** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து பழந்தமிழ்ப் பாடல்களை ஆங்கிலப்படுத்தி வருகிறார்.

**ஹாலந்தில் :** லெய்டன் பல்கலைக் கழக வடமொழிப் பேரா. P.B.J. குய்பர் தமிழ் ஒலி முறை பற்றி ஆராய்ந்துளார். உத்ரெட்சிட் பல்கலைக் கழகத்தில் தமிழை முதன்மை அல்லது இரண்டாம் பாடமாகவோ ஏதேனும் ஒரு திராவிட மொழி ஒப்பியல் பாடத்துடன் சேர்ததுப் படிக்கலாம். கமில்சுவலபில் இங்கு தமிழ் கற்பிக்கிறார்.

**போலந்தில் :** வார்சா ப. கழகத்தில் 72இல் எம். ஏ. தொடங்கப் பெற்றது. முதுகலைக் கட்டுரைகளாக மாணவர்கள் ஆக்கியன: பழந்தமிழ் நாட்டில் முருக வழிபாடு, மணிவாசகரின் பாவையும் பக்தி இயக்கமும், பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடல் அமைப்பும் பொருளும், நீலகிரி இருளர், பட்டினப்பாலை, முருகாற்றுப்படை, திருவெம்பாவை, பெருங்கடுங்கோ பாடல்கள், வாலிவதைப் படலம், கண்ணன் பாட்டு போன்றன போலிஷ் மொழியில் பெயர்த்துளர். இராமசுந்தரம் கற்பித்தார். இவர் துணையுடன் குறள் முழுவதையும் போஹ்நன் கெம்பார்கி போலிஷில் பெயர்த்தார். **பின்லாந்து** ஹெல்சின்கி கழக இந்திய வியல் துறையில் தமிழ் ஓரளவு கற்பிக்கப்படுகிறது.

**சுவீடனில் :** ஸ்டாக்ஹோம் ப. கழகத்தில் இந்திய வியல் கழகம் தமிழ்க்கல்வி ஆராய்ச்சிக்கு வாய்ப்பளிக்கிறது. உப்சலா கழகம் ஒப்பியல் நோக்கில் தமிழ் கற்பிக்கிறது. பேராசிரியர்கள் விக்கந்தர், குஸ்தாவ் டையேல், வியடெனார்டு, வால்டன் குறிப்பிடத்தக்கோர்.

**ஆஸ்திரேலியா:** தேசிய ப. கழகத்தில் தமிழ் இடம் பெறுகிறது. மலேயாவில் இருந்த ஈ.சா. விசுவநாதன் பணியாற்றுகிறார். சிட்னி, ஆஷ்பீல்ட் பள்ளிகளில் தமிழ் கற்பிக்கப்படுகின்றது.

**ஜப்பான் :** டோக்கியோ 'ஆசிய ஆபிரிக்க மொழிப் பண்பாட்டு நிறுவனம்' தமிழ்-ஜப்பானிய அகராதி உருவாக்கியுளது. கியோட்டோ. டோக்கியோ ப. கழகங்களில் தமிழ்நூல் பிரிவு உளது; விரிவாக்கச் சொற்பொழிவுகள் நிகழ்கின்றன. தமிழ் ஜப்பான் இரு மொழிக்கும் பொதுச் சொற்கள் 300, ஒரு பொருட் சொற்கள் 510-எனக் கண்டறிந்துள்ளார் ஜப்பானிய மொழியியல் அறிஞர் சுசுமு ஓனோ.

**சுவிட்சர்லாந்து :** லாசேன், பெர்ன் ப. கழகங்களில் பேருரையாற்றும் கார்ல் கெல்லர் திருவனந்தபுரத்தில் வதிந்த காரணத்தால் தமிழ் மலையாள மொழிகளை ஒப்பீட்டு முறையில் உரைத்து வருகிறார்.

**சீனப் ப. கழகங்களில் :** முன்னம் தமிழ் கற்பிக்கப்பட்டன. கால் நூற்றாண்டாக பீகிங் வானொலி தமிழ் ஒலிபரப்பி வருகிறது. அது 'தமிழிலக்கிய ஆய்வுக்குழு' அமைத்துளது. பொறுப்பாளர் சன் - குவா - சியாங். தமிழிலக்கியங்களை ஆராய்ந்து சீன மக்களுக்கு எடுத்துரைப்பதே தலையாய நோக்கம். இதனால் தமிழ் இலங்கை எழுத்தாளர் தம் படைப்போவியங்கள் சீனமாக்கப்படுகின்றன.

**இத்தாலி :** வெளிநாட்டு வானொலிகளில் தமிழுக்கு இடம் கொடுத்த முதல் நிலையம் வாட்டிகன் வானொலியே! ய்வனர் தொடர்பு நமக்கு மிகு பழமையது. ஆஞ்செலோ டி. குபேர்னாட்டிஸ் வள்ளுவர்பற்றி வரைந்துளார். உரோமாபுரி வேத போதகப் ப. கழகத்தில் உள்ள தமிழ்ச் சுவடிகள் பற்றிய விளக்கக் குறிப்பு வகுத்துளார். சிராசிபாட்டோ அசோலி வடமொழியில் திராவிட மொழிகளின் செல்வாக்கு பற்றி ஆராய்ந்துள்ளார். ஆல்பிரரோட்ரம், போட்டி மொழியின் தோற்றம் என்ற நூலில் திராவிட-இதர மொழி இனங்கட்குள்ள தொடர்பினை ஆராய்ந்துள்ளார். உரோமப் ப. கழக அலெக்சாண்ரோ

பசானி தமிழில் பாரசீகச் சொற்கள் என ஆய்வேடும், காபிரியேல் பெர்ரோ லூசி ஜெயகாந்தன் புதினங்கள் எனும் ஆய்வுக் கட்டுரையும் தந்துளர்.

**தென் ஆபிரிக்கா :** டர்பன் ப. கழகத்தில் இந்தியவியல் துறை உளது. **மேற்கு ஆபிரிக்க செனகால்**தான், ஆபிரிக்கா கண்ட 53 நாடுகளில் முதன் முதலாகப் பல்கலைக்கழக அளவில் தமிழை அறிமுகப்படுத்திய நாடு! 79இல் தாயம்மாள் அறவாணன் முதல் பேரா-தக்கார் ப. கழகத்திற்கு. இதன் இணைவான ஆபிரிக்க அடிப்படை ஆய்வகத்தில் க.ப. அறவாணன் திராவிட - ஆபிரிக்கரிடையேயான பண்பாட்டுப் பழக்க வழக்க ஒற்றுமைக் கூறுகளை ஆராய்ந்து Anthropological studies on the Dravidio Africans நூல் வெளியிட்டார். அதிபர் செங்கோரின் பெயரைத் தம் பிள்ளைக்கு இட்டனர்.

இப்படி வையகமெங்கும் வளர் தமிழ் வளம்பெற்று வருவது புதிய விடியலுக்குப் பூபாலம் பாடுவதாக அமைகிறது.

**வானம் அறிந்த தனைத்தும் அறிந்து**
**வளர் மொழி வாழிய வே !**

## 105. பிற துறைப் பெருமக்கள்

தமிழே பயின்று தமிழுக்கே பணி செய்பவர்கள் கடமைப் பட்டவர்கள்; அவர்கள் பணி புரியவில்லை யென்றால்தான் குறை! ஆனால் தமிழுக்கு எவ்வகையிலும் கடன்படாத பிற துறை சார்ந்த பெருமக்கள் பலர் பெரிதும் ஈடுபாடு கொண்டு தம் தாய்மொழிக்கு - தமிழன்னைக்குத் தொண்டு புரிந்து வருகின்றனர். தொழில் துறையில் 'பத்தோடு பதினொன்று அத்தோடு இதுவொன்று' எனக் கடலிற் கரைத்த பெருங்காயமாகும் நிலை; அதனால் அத்துறையில் எத்துணை உழைத்தாலும் எடுபடுவதில்லை, ஏற்றமுறுவதில்லை. ஆனால் தொண்டாற்றும் தமிழால் கொண்டாடப்பெறுகின்றனர்; பேரும் பொன்றாது வரலாற்றில் இடம் பெறுகிறது. அத்தகு பெருமக்கள் சிலரை நன்றியுடன் நினைப்பது நலம் : முறையே வடமொழி, இந்தி, ஆங்கிலம் எனும் மொழித்துறையினர், ஆட்சித்துறை, காவல்துறை, பிற துறையினரின் பணி பேசப் பெறுகிறது.

வடமொழி: **ஜி ஹரிஹர சாஸ்திரி**: *12-7-1886*. தென்காசி. பேரா. எஸ். வையாபுரிப் பிள்ளையுடன் இணைந்து பாணிநீயலகு தீபிகை பதிப்பித்தல். வடமொழியிலிருந்து பாஸ மகா

கவியின் பிரதிமா நாடகம், சுவப்ந வாஸவதத்தம், கௌடில்யரது அர்த்த சாஸ்திரம் பெயர்த்துளார். முன்னை **முகவரி** : அபிராமபுரம், 3வது தெரு, சென்னை-18.

**வி. கிருஷ்ணமாசாரியர்** : 17-12-1887. தெ.ஆ. வெங்கடாத்ரி யகரம் சந்திரகுப்த சரிதம், ஸ்ரீபாஷ்யம் (10 வியாக்யானங் களுடன்), காதம்பரீ நாடகம், வடமொழியினின்று வார்த்தது ராஜ தரங்கிணி. **தொடர்புக்கு** 37, ஜோஸ்யர் தெரு, நுங்கம் பாக்கம், சென்னை-34.

**வி. சுப்பிரமணிய அய்யர்** : 15-4-1890. எட்டயபுரம். பி. ஏ. எல்.டி. பயின்றவர். திரு. ஆலவாய் மான்மியம், பத்ய புஷ்பாஞ்சலி (ஆங்கிலப் பெயர்ப்புடன்). **தொடர்புக்கு**, 35, நாயக்கர் புதுத்தெரு, மதுரை.

ஸ்ரீ வத்ஸ. **வெ ஸோமதேவ சர்மா** : 28-7-1892. தெ. ஆ. வெங்கந்தூர். 'வைதிக தர்ம வர்த்தனி எனும் திங்கள் இத ழாசிரியர். வழங்கியன: 18 புராணச் சுருக்கம், தேவி பாகவதம் கல்கி புராணம், பகவத் கீதை, பத்ம புராணம், ஸந்தியா வந்தனம் முதலிய 70 நூல்கள் முன்னை **முகவரி** : 2, ஸ்டேஷன் சாலை, பழைய மாம்பலம், சென்னை-33.

**எம். ஆர் ஜம்புநாதன்** : 23-8-1896—18-12-1974. திருச்சி மணக்கால். தந்தை ராமசுவாமி. வடமொழி வேத உப நிடதங்கள் தமிழில் அறியும் வகையில்லாதிருந்த நெடுங்காலத் தேவையை நிறைவேற்றிய முதல் அறிஞர் தமிழ், வடமொழி, இந்தி, ஆங்கிலம் வல்லவர். வாழ்வு முழுதும் இந்தியப் பண் பாட்டைப் பரப்புதலில் கழித்தவர். 20 அரும்பெரும் நூல்கள் அளித்துளார். அரசு ஆற்ற வேண்டிய பெரும் பணியைத் தனி ஒருவராக ஆற்றியவர். 'ஒவ்வொரு இந்தியன் உள்ளத்தும் இல்லத்தும் வேதம் விளங்க வேண்டுமாயின், வேதமாம் சூரியன் இந்திய மொழிகள் அனைத்திலும் எழ வேண்டும்' என்ற நோக் கில், சாம யஜுர் அதர்வண வேதங்களைத் திருப்பனந்தாள் தருமை ஆதீன உதவியுடன் வெளியிட்டார். 30 ஆண்டுகள் முனைந்த உழைப்பால் ரிக் வேதத்தைப் பெயர்த்தார். வெளி வருமுன் 78 ஆம் வயதில் மறைந்தார். உலகு புகழ் பேரறிஞர்- தமிழகத்தில் பிறந்து இந்தியாவில் சிறந்தவர்.

வேத சந்திரிகை, கடோபநிடதம், திருமூர்த்தி உண்மை, சீன வேதம் (கன்பூஷியஸ்), மாஜினி வாழ்க்கை, சுவாமி தயா னந்தர், கதாரதம், உபநிடதக் கதைகள், யோகாசனம் என்பன பிற. வடமொழியின் செல்வங்களை வண்டமிழுக்குக்

கொணர்ந்த வள்ளல். இந்த வகையில் தமிழகம் இவருக்கு என்றும் கடப்பாடுடையது. ஒரு தமிழர் வடமொழி விற் பன்னராக விளங்கி வியத்தகு தொண்டாற்றியது நன்றியுடன் நினைக்கத் தக்கது. மனைவி சாந்தி, மக்கள் இரு மகளிரே. சவிதா, இந்திரா. **தொடர்புக்கு :** 'Radha Nivas' First Road, Khar, Bombay-52.

**வே. ராகவன் :** 22-10-1908. தஞ்சை திருவாரூர். சென்னைப் பல்கலைக் கழக வடமொழித் துறைத் தலைவர். தமிழ், தெலுங்கு, மலையாளம், இந்தி, ஆங்கிலம் வல்லவர். கலை வல்லார், இசைத் தும்பி. வரலக்ஷ்மி விரதம் போன்ற கதைகள், கதைக் கடல் (மொ.பெ), பரதநாட்டியம் (கலை ஆராய்ச்சி). Indian Heritage, Song of Saints, Concepts of Alankara Sastra. **தொடர்புக்கு :** 7, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை-14.

**பி எஸ் சுப்ரமண்ய சாஸ்திரி :** திருவையாறு. வடமொழி, தமிழ், ஆங்கில மும்மொழி வித்தகர். 1912-14, 15-16. திருவையாறு செண்டிரல் உயர்நிலைப் பள்ளியில் கணித ஆசிரியர். 14-15 திருச்சி தேசிய உயர்நிலைப்பள்ளி ஆசிரியர். 17-26 திருச்சி பிஷப் ஹீபர் கல்லூரிக் கீழ்த்திசைக் கலைப் பேராசிரியர். 26-32 சென்னைப் பல்கலைக் கழக லெக்சிகன் உதவி ஆசிரியர். 32-42 திருவையாறு வடமொழி—தமிழ்க் கல்லூரி முதல்வர். 42-47இல் அண்ணாமலைப் பல்கலைக் கழக வடமொழிப் பேராசிரியர்.

கொடைகள் : History of Sanskrit Language in Tamil, Litt. in Tamil, Comparative Grammar of the Tamil Language, Historical Tamil Reader, An Enquiry into the Relationship of Sanskrit & Tamil, தமிழ் மொழி நூல், சங்க நூல்களும் வைதிக மார்க்கமும், History of Grammatical Theories in Tamil and their relation to Grammatical Litt. in Sanskrit, திருக்குறள் பாலர் உரை, தொனி விளக்கு, தொல்காப்பியம் 3 அதிகாரங் கட்கும் ஆங்கில விளக்கம், பதஞ்சலி மகாபாஷ்யம், காளி தாசன் குமார சம்பவம், வாசுகி வள்ளுவம் (நாடகம்).

இவர் தொண்டு தலை சிறந்தது, நிலைத்து நிற்பது. இவர் மகன் பி.எஸ். கிருஷ்ணன் அரசுக் கல்லூரியில் கணிதப் பேரா சிரியர். வடமொழி-தமிழ் ஒப்பீடும், தொல்காப்பிய விளக்கு மும் போற்றத் தகுவன.

**அக்னிஹோத்ரம் ராமானுஜ தாதாசாரியார்** : *1908* மார்ச்சு. கும்பகோணம். மகாவித்துவான் தாத்ததேசிகன் தாதாசாரியார் : அலர்மேலு மங்கை 39 சென்னைப் பல்கலைக் கழக 'சிரோன்மணி' (வடமொழியில்). மற்றபடி வீட்டிலேயே தந்தை, பெரியப்பா பட்டு சுவாமிகள், சிற்றப்பா கோபால தேசிகாசாரியார் மூவரிடமும் வேதம் வைணவம் தமிழ் கற்றுப் புலமை பெறல்.

அக்னிஹோத்ரம் : சங்கரர் அங்கங்கு மடங்களை நிறுவிச் சமயம் வளர்த்தார். ராமானுஜரோ, 74 குடும்பங்களை-சிம்மாசானபதிகளை அமைத்தார். அதில் தலைப்பீடம் இவர்களது 600 ஆண்டுகளாக ஒவ்வொரு நாளும் இருவேளை வழிபாடு அத்யாயணம் பண்ணனும்; அதனை இன்று வரை செய்து வருவதால் இப் புனிதப் பெயர் வழிவழி வருகிறது. ஆசாரிய பீடம்.

நூல்கள்: வேதலட்சண சித்தரஞானம் (மணிப்பிரவாளம்). வரலாற்றில் பிறந்த வைணவம், வேதங்களும் ஆழ்வார்களும், Eternal relevance of Vedas, Long missing links, collected stories (original oldest stories from Vedas). Meditation on Gayathri; வேதகாலின ஜன தந்திர ஸ்தானாநி (democratic institutions in the vedas-sanskrit). சங்ககாலமுதல் பாரதிவரையான கடவுள் பற்றிய 700 பக்க ஆங்கில அரு நூல் உருவாகி வருகிறது.

விருதுகள் : வேதார்த்த ரத்னாகர (சங்கராச்சாரியார்), வேதபூஷண (ஈரோடு ஓஞ்சூர் சேஷாதிரி சுவாமிகள்), வேத வாஸஸ்பதி (மதுரை சத் சங்கம்), சுருதி ஸ்மிருதி இதிகாச புராண மீமாம் சா தோய கல்ப சூத்ர விசாரத (மைசூர் பரகால மடம்), மகா மகிமோபாத்யாய (அலகபாத் சமஸ்கிருத அகாதமி), 2-4-1977இல் ஜனாதிபதி விருது போல்வன பல.

சரளமாக ஆங்கிலம் எழுதவும் பேசவும் வல்லார். வைண வரேயாயினும் வைணவ வெறியற்றவர், சைவத்தையும் மதிக்கும் மாண்பினர். தமிழையும் வட மொழியையும் இரு கண்களாகக்கொண்டு பார்வை ஒன்றாகப் பாவிக்கும் பரந்த பண்பினர். வேதம் வைணவம் பரப்புவதே தம் வாழ்வுப் பணியாகக் கொண்டு, படிப்பதும் எழுதுவதும் பேசிப் பரப்புவதுமே முழுமூச்சாகக் கொண்டவர். தமிழும் ஆலயங்களும் நெருங்கி வரவேணும் என்ற உணர்வில் 'தமிழ் அர்ச்சனை' எழுதித் தந்தவர்.

ஆசாரியன் பற்றிக் கூறியவர் மாணிக்கவாசகரே; என்றாலும் அவர் ஒரு வேதாந்தியே. ஆனால் நாவுக்கரசரோ ஒரு deep mystic; எனவே அப்பரிடத்து ஒப்பரிய உயரிய ஈடுபாடு கொண்டுளார். மானிடவியல் இவர் தனித்துறை. ஒப்பியல் ஆய்வு இவரின் உயிர்மூச்சு. ஆன்ம ஈடுபாடு. வேதக் கருத்துக்களைப் பரப்பும் பெருநோக்கினர். பரந்த முற்போக்குக் கருத்துடையவர்; ஜாதகம் பார்க்கும் பழக்கம் இல்லை! வைணவத்தில் எவ்வளவு ஊற்றம் மிக்கவரோ, அவ்வளவு ஆழ்ந்த புலமை சைவத்திலும் கொண்டவர். நம்மாழ்வாரின் கடைசிப் பாட்டு இறுதியாக மொழிந்த சொற்களே எனக் கூறிமகிழ்பவர். சைவப்பனுவல்கள் முழுதும் கரைத்துக்குடித்துள்ளார், எழுத்தெண்ணிப் படித்துள்ளார்.

சில சிந்தனைகள் : 1) நம் நாட்டின் குறை—வேதாந்தம் காவிய நாடகம் நீதி நூல்கள் உள, சமயத்துக்குப் போதி நூல்கள் இல்லை. ஆங்கிலத்தில் சமயத்தின் ஒவ்வொரு நுண் பகுதி கட்கும் நூல்கள் படைத்துளர், பல்கலைக் கழகங்களில் சமயங்களுக்கென 'இருக்கைகள்' ஏற்படுத்தியுளர். நாமும் பல்கலைக் கழகங்களில் சைவம், வைணவம் எனப் 'பீடங்கள்' அமைத்திடல் வேண்டும். இது தமிழை வளர்க்க வழியாகும். சமய இலக்கியங்களைப் பயில்வதை விட mystic aspect of religion உணர்ந்தால்தான் சமயத்தை அனுபவிக்க முடியும். 2) Who does not know another language, does not know his own - Goethe. பன் மொழி கற்று அவ்வொளியினைத் தம் மொழியில் பாய்ச்சிப் பயில்வோன் சிறக்கிறான், அவன் மொழியும் சிறக்கும். 3) மானிடவியலும் ஒப்பியலும் அவசியம் வேண்டும்.

சென்னையில் 10 ஆண்டுகளாக அவ்வப்போது தங்கி 40 பிற நாட்டினருக்கு வேதமும் வைணவமும் பாடம் சொல்லி வருகிறார்; ஜிம்மி நார்ட்டன், ராபர்ட் லெஸ்டர், ஆர்னால்டு, பிரடரிக் சுமித் பாஸ்டன், ரைனா ஹைநி போன்றார் குறிப் பிடத்தக்கார். இவர்கள் இவரது வெளிநாட்டுச் சீடர்கள். தமிழகத்தில் இவரிடம் பயின்ற 1000 சீடக் குடும்பங்கள் உள. மணம் 1925இல், மனைவி ரெங்கநாயகி; மக்கள் கோபாலன் (இந்திய வங்கி, சென்னை); சரோஜா, பத்மா.

அரிய நூலகம் வைத்துள்ளார்; ஆங்கிலம், வேதம், ஆகமம், இதிகாச புராணங்கள், உலக வரலாறு, வைணவம், சம்பிர தாயம், தர்ம சாத்திரங்கள், வேதாந்தம், பல்வேறு இதழ்கள்

தம் கையெழுத்துப் படிகள் எனத் தனித்தனி அலமாரிகள். 5000க்கும் மேற்பட்ட அரிய பெரிய நூல்கள்.

எண்பதாண்டு இளைஞர்; தூய்மை வாய்மை, துணிவு கனிவு, புலமை எளிமை, திறந்தமனம் தீர்க்கமான கொள்கைகள், அறிவு தானம் செய்யும் அகம் மிகக் கொண்ட மேதை. உலகு புகழ் சான்றோர் **முகவரி:** 'வேத நிகேதனம்' 54, அய்யங்கார் தெரு, கும்பகோணம்-612 001; 29/1, வீர நாயக்கன் தெரு, மாம்பலம், சென்னை-33.

**என். எஸ். தேவநாதாச்சாரியர்** : 8-8-1910. வ ஆ வந்தவாசி வட்ட நாவல் பாக்கம். தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் பணி புரிந்தவர். நூல்கள் : திருவாய் மொழி வாசக மாலை, பாரிஜாத நாடகம், திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள், வேத விஞ்ஞானக் கட்டுரைகள். சிற்ப ரத்தினம் போன்ற பல பெயர்ப்புகள் வடமொழியினின்று.

**வி எச். சுப்ரமணிய சாஸ்திரி** : 15-4-1911. கேரளத் திருப்பணித் துறை. நூல்கள் : நவரசங்கள், ஹாஸ்யக் காக்ஷிகள், ஆயிரம் காலத்துக் கதைகள், History of Sanskrit Litt. **தொடர்புக்கு :** 12 அ, சிதம்பரசாமி 3வது தெரு, மயிலாப்பூர், சென்னை-4.

**தி. சேஷாத்திரி** : 14-6-1916. தஞ்சை மாவட்ட நாகை வட்டக்கீழையூர். தந்தவை: இராமன் கதையமுதம் (ஆராய்ச்சி); நீரோட்டம் (நாவல்) ; கடோபநிஷதம், கேனோபநிடதம், ஆத்மபோதம் பி.ஓ.எல்., எம்.ஏ. பயின்ற இவர்பற்றி **அறிய :** 99, பாரதி (நிலையம்) சாலை, சுப்பிரமணியபுரம், மதுரை-11.

**பெ. திருஞான சம்பந்தம்:** திருவையாறு வடமொழி (அரசர்) கல்லூரி முதல்வராகத் திகழ்ந்து, சென்னை மாநிலக் கல்லூரி வடமொழியில் பெரும் பேராசிரியராகப் பிறங்கி, கல்லூரிக் கல்வித் துணை இயக்குநராக இருந்து மீண்டும் மாநிலக் கல்லூரித் தலைமைப் பேராசிரியராக வதிந்து ஓய்வு பெற்றவர். வடமொழி பயின்ற தமிழர். அதில் வல்லாண்மையோடும் விளங்கியவர் எனும்போது பெருமிதமே பிறக்கிறது. வடமொழி, தென்மொழி, ஆங்கிலமொழி மூன்றிலும் வல்லவராக விளங்கியதால் வடமொழி-தென்மொழி ஒத்திசைய உணர்ந்தவர். ஆங்கிலத்தும் தமிழிலும் பல கட்டுரைகள் யாத்தவர். அதிகம் பேசாத அமைதிச் சிந்தையர். **முகவரி :** 4, சாம்பசிவம் தெரு, தியாகராய நகர், சென்னை-17.

**எஸ் என் ஸ்ரீராம தேசிகன்** : *21-6-1921*. வ.ஆ, செய்யாறு வட்ட சிறுங்காட்டூர் அப்பாளாச்சாரியார் : பெருந்தேவி அம்மாள். நாடாதூர் மரபின் பெயர். சென்னைப் பல்கலைக் கழக 'நியாய சிரோமணி' 42இல். தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, இந்தி மொழிகளில் நல்ல புலமையாளர்.

திருப்பதி வெங்கடேசுவரா கீழ்த்திசைக் கல்வி ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சியாளராக 2 ஆண்டுகள் பணிபுரிந்தார். தர்க்கம், சாங்கியம் போன்ற வடமொழிச் சாத்திரங்களில் புதைந்து கிடக்கும் விஞ்ஞானம், பொறியியல் நுட்பங்களைத் தேடி எடுத்து ஆராய்ச்சி செய்ய கிண்டி பொறியியற் கல்லூரியில் அடிப்படைப் பொறியியல் ஆராய்ச்சிப் பிரிவில் தமிழ்நாடு, இந்திய அரசின் பொருளுதவியுடன் 4 ஆண்டுகள் பகுதி நேர விரிவுரையாளராக விளங்கி ஆராய்ச்சியோடு கல்லூரி ஆசிரியர்கட்கு இவற்றைப் போதித்தார். நடுவண அரசால் ஆராய்ச்சிப் புலவராகத் தெரிந்தெடுக்கப்பெற்று இரண்டரை ஆண்டு அரும்பாடுபட்டு, வெளிவராத தருக்க சாத்திர நூலினைப் புதிய உரையுடன் ஆராய்ச்சி நோக்குடன் பதிப்பித்தார்.

தமிழ்ப்பணி : *(1)* தமிழ்-வடமொழி ஒப்பாய்வாகச் சங்க காலம்—*12*ஆம் நூற், வேதகாலம் தொடங்கி வடமொழி நூல்களையும் மையமாகக் கொண்டு 1000 பக்க ஆராய்ச்சிப் பெறு நூல் படைத்துளார். திருப்பதி மைய வடமொழி நிறுவன அலுவலராக. *(2)* திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, நாலடியார், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், பாரதியார் கதைகளை, அவ்வையார் நூல்களை வடமொழி ஆக்கம் செய்துள்ளார். *(3)* குறள் நாலடியார் இரண்டுக்கும் ஆங்கிலத் தமிழ்த் தெளிவுரை தந்துள்ளார். *(4)* எழும்பூர் தமிழ் வடமொழி ஆராய்ச்சி நிறுவனத்தில் *3* ஆண்டு ஒப்பந்த அடிப்படையில் வால்மீகி கம்பன் துளசி ராமாயண ஆராய்ச்சி செய்துளார். *(5)* புகழ் பெற்ற ஏழு வடமொழி நாடகங்களை 'ஏழு நாடகக் கதைகள்' என வெளியிட்டுள்ளார். *(6)* கிருஷ்ணலீலா. *(7)* ஆந்திரகவி வேமனாவின் பொன்மொழிகள், தமிழில். *(8)* 'இரு மொழி இலக்கிய இன்பம்' 100க்கும் மேலான கட்டுரைகள்.

பொறுப்புகள்: தஞ்சை சரசுவதிமகால் மதிப்பியல் ஆசிரியர்; சென்னை ராஜா அண்ணாமலைபுர சரசுவதி கிரி வேத சமத்திருத பாடசாலைத் தலைமையாசிரியர்; சித்தூர் சமத்கிருத

பாஷா பிரசாரிணிசபை சென்னைக் கிளையின் துணைத் தலைவர், தமிழ் சமஸ்கிருத மற்றும் பிறமொழி ஆராய்ச்சி நிறுவன மதிப்பியல் ஆராய்ச்சிச் செயலர்; தென்னிந்திய சமத்கிருத சங்கத் தோற்றுநர் செயலர் 30 ஆண்டுகளாகப் பல ஆராய்ச்சி மாநாடுகளில் ஆராய்ச்சிக் கட்டுரை படித்துளார், தலைமை தாங்கியுள்ளார்.

69இல் சென்னை பாரதி சங்கக்கேடயமும், காரைக்குடி கம்பன் விழாவில் பொன்னாடையும், தமிழ் எழுத்தாளர் சங்கப் பொற் பதக்கமும் பெற்றவர். 70இல் 'சமஸ்கிருத ரத்னா' பட்டம் அளிக்கப்பெற்றார். சிருங்கேரி சுவாமிகள் சால்வைகள் போர்த்திப் பெருமைப் படுத்தியுள்ளார். 71இல் ஒப்பாய்வுக்காக ஜனாதிபதியின் பாராட்டும், 81இல் உலகப் பல்கலைக்கழகம் டி. லிட். பட்டமும் வழங்கப் பெற்றார். 47இல் மணம். வேதவல்லி அம்மையார்; மக்கள் நாராயணன், வனஜா, மாலதி, விமலா. **முகவரி:** 32, மன்னார் ரெட்டி தெரு, தியாகராய நகர், சென்னை 17.

**ஸ்ரீ. உ. வே. ஸ்ரீ கிருஷ்ணசுவாமி அய்யங்கார்** 24-11 1924. ஸ்ரீரங்கம். சேஷய்யங்கார் நினைவு உ.ப, ஜோசப் கல்லூரி இன்டர் (42). பி. ஏ. ஆனர்சு கணிதம் (45), சட்டக்கல்லூரியில் பயின்று பி. எல் (51) வழக்குரைஞரானார். ராமாநுஜ ஜீயர் சுவாமியிடம் சமாச்ரயணம் பெற்றார். உ. வே. கோழியாலம் ரங்கநாதாசார்ய சுவாமியிடம் சாமான்ய சர்த்திரங்களை அதிகரித்து, வேதாந்த தேசிகரின் கிரந்தங்களைப் பயின்றார். ஈச்சம்பாடி ஸ்ரீநிவாச ராகவாசார்ய சுவாமியிடம் சம்பிரதாய கிரந்தங்களை அதிகரித்துக்கொண்டார். சாம்ப்ரதாயிகமான செய்திகளைத் தந்தை காரப்பங்காடு மகாவித்துவான் வேங்கடாசார்ய சுவாமி, வேளுக்குடி வரதாசார்ய சுவாமி, கோவில் சதாபிடேகம் கோவிந்த நரசிம்மாசாரிய சுவாமி களிடம் பெற்றார்.

47இல் மணம், அம்புஜவல்லி. மக்கள் 3+4 வக்கீல் வேலையைத் துறந்து சம்பிரதாயப் பணியிலேயே தம்மை அர்ப்பணித்துக்கொண்டு. 12-1-1948இல் தந்தை தொடங்கிய 'ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம்' ஆசிரியராக அரும்பணியாற்றுகிறார். பத்திரிகையின் பெயரே 'சுதர்சனர்' என இவர் பெயர் ஆகிவிட்டது.

கொடைகள்: சங்ககாலத் தமிழர் சமயம், சங்கரரும் வைணவமும், கம்பனின் சமயம், ஸ்ரீவைஷ்ணவ மத விஜயம்;

அக்நிஹோத்ரியும் வைணவமும் (மறுப்பு), சுதர்சனர் பதில்கள், சீரியர் படை, ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம். வடமொழி நூல்களுக்குத் தமிழ் விவரணம் வரைந்து வெளியிட்டுள்ளார்; ஸ்ரீ ராமாயணத் தனிச்லோக வ்யாக்யானம், நாலாயிர திவ்யப் பிரபந்தம், திருப்பல்லாண்டு, திருப்பாவை போன்றன பதிப்புகள். 2-11-1984இல் மணிவிழா. **முகவரி**: 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி 17.

**எஸ். குப்புசாமி சாஸ்திரி**: தஞ்சை மாவட்ட கணபதி அக்கிரகாரம். கையெழுத்துச் சுவடி நிலையக் காப்பாளர். பல்கலைக் கழகப் பேராசிரியராகப் பிறங்கியவர். ஒப்பியல் மொழி நூலிலும் இலக்கியத்திலும் வல்லுநர். மகாமகோபாத்யாய பட்டம் பெற்றவர். தத்துவம் இலக்கியம் பற்றிப் பன்னூல்கள், இந்தியத் தருக்க சாத்திரத்தை ஆங்கிலத்தில் அருளியவர். இவர் பெயரில் மயிலையில் வடமொழி ஆராய்ச்சி நிலையம் விளங்குகிறது. Highways and Byways of Literary Criticism in Sanskrit சிறந்த நூல்.

**கல்யாண சுந்தர சாஸ்திரிகள்**: தஞ்சை வரகூர். விவேகானந்தா கல்லூரியில் விளங்கியவர். இந்திய அறிஞர்களில் ஒருவர். அத்வைதத்தில் வல்லுநர். பல டாக்டர்களை உருவாக்கிய பேரறிஞர். பாஷ்ய பாவஞ்சய குடியரசுத் தலைவர் விருது பெற்றவர். பேரா பாலசுப்பிரமணியனின் குரு; உயர் தத்துவ நூல்கள் உருவாகக் காரணர். **முகவரி**: 65, பசுல்லா சாலை, தியாகராயநகர், சென்னை-17.

**குருசாமி சாஸ்திரிகள்**: முன்னவரின் மைத்துனர். வரகூர். வடமொழி இலக்கிய விற்பன்னர். வடமொழித் தத்துவம் யாப்பில் வித்தகர். திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கியவர். **முகவரி**: 4, யோகாம்பாள் தெரு, தியாகராயநகர், சென்னை-17.

**த. இராமலிங்க தீட்சிதர்**: 1938. சிதம்பரம். தங்கசாமி தீட்சிதர்: நாகலட்சுமி. 54இல் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு. 59இல் அண்ணாமலை வடமொழி ஆனர்சு. M. Litt Thesis on Chidambaram Temple: 'A study of Chidamdaram and its shrine as recorded in Sanskrit Litt. 77 முதல் பல்வேறு ராகங்களில் பல கீர்த்தனங்கள் (40) படைத்து வருகிறார். சங்கராபரணத்தில் 'ஸ்ரீ நடராஜ பாகிமாம்', ஷண்முகப் பிரியாவில் 'சரவணபவாய குமாராய', கல்யாணியில் 'சிந்தையேகும் சபாநடேசன்' குறிப்பிடத்தக்கன. தாய்

வழித் தாத்தா கான கலாநிதி ஏ.சி. ராஜகணேச தீட்சிதர்; கீர்த்தன முக்தாவனம், அஷ்டதிக் பால கீர்த்தனம் போன்ற வற்றின் கர்த்தா. சொந்த சுர-சாகித்ய லட்சண வித்துவான் என்பது குறிப்பிடத்தக்கது. **முகவரி:** 55, கிழக்குத் தேர் தெரு, சிதம்பரம்.

காளிதாசனின் ரகுவம்சத்தை வே.ஜீ வேங்கடாசாரியும், மிருச்ச கடிகத்தை எச். வைத்தியநாதனும், மண்ணியல் சிறுதேர் எனப் பண்டிதமணியும், முத்ரா ராக்ஷசத்தை இ. கே. நடேச சர்மாவும் பெயர்த்துள்ளர். பச்சையப்பன் கல்லூரியில் ஒரு பச்சைத் தமிழர் சண்முக சுந்தர முதலியார் வடமொழிப் பேராசிரியராக விளங்கியமையும் எண்ணி மகிழத் தக்கது.

இந்தி: **தி. வேங்கட கிருஷ்ணய்யங்கார்**: *12-1-1919.* அருள் மிகு இராகவ காவியம் (கவி); கபீர், துளசி ராமாயணம், கபீர் தாசரின் அருள் வாக்கு; உரைநடைச் சிலம்பு, உணவும் ஊட்ட மும், ஊட்ட உணவும் அதைப் பெறும் வழிகளும். டாக்டர் ஜாகீர் உசேன். இந்திப் பேராசிரியரான இவரின் **முகவரி**: *33,* கச்சேரிச் சாலை, விருதுநகர்-*625 001.*

**ரா. வீழிநாதன்**: *15-5-1920.* தஞ்சை மாவட்ட விஷ்ணு புரம். இந்தி, ஆங்கிலம், உருது, வடமொழி, வங்காளம், குஜராத்தி வல்லவர். 60 முதல் 'கல்கி' உதவியாசிரியராக உல வியவர். இரு நண்பர்கள் (சுதர்சன்), இன்ஸ்பெக்டர் (கே. எம். முன்ஷி), சித்ரலேகா (பகவதி சரண் வர்மா), மண் பொம்மை முதலியன இந்தியிலிருந்து. கல்கியின் சோலை மலை இளவரசி, பார்த்திபன் கனவு, ராஜாஜியின் பஜகோவிந் தம், ஜெயகாந்தனின் ஜயஜய சங்கர, இதயநாதம் போன்ற வற்றை இந்தியில் தந்துளார்.

இந்திமொழி கற்க 'வாணி இந்தி சுலப போதினி' வழங்கி யுள்ளார். மனோரமா, இன்பச் சுனை நாடகங்கள் தயாரித்துள் ளார். தமிழ் எழுத்தாளர் சங்கப் பொற்பதக்கம் பெற்றவர். இதுபோது 'அமுத பாரதி' திங்கள் ஏட்டினை நடாத்தி வரு கிறார். **முகவரி**: *131,* கிழக்குத் தெரு, மேற்கு சி.ஐ.டி. நகர், சென்னை-*35.*

**சு. சங்கரராசு நாயுடு**: *25-10-1920.* சங்கரன்கோவில். சென்னைப் பல்கலைக் கழக இந்தித் துறைத் தலைவராக 60 முதல் இலங்கி ஓய்வு பெற்றவர். தமிழ், தெலுங்கு, மலையாளம்,

இந்தி, ஆங்கிலம், பிரெஞ்சு மொழி வல்லவர். கம்பரும் துளசியும், கம்ப ராமாயணமும் துளசி ராமாயணமும் ஓர் ஒப்பாய்வு (65) திருக்குறள் இந்திமொழி பெயர்ப்பு (58) இரண்டும் இருபெருங் கொடைகள். பிற தமிழ் இலக்கியமும் அதன் தற்கால வளர்ச்சியும்; பாணபட்டன் தன்வரலாறு, கிதோ பஹார் (கவிதை). தமிழ், ஆங்கிலம், இந்தி மூன்றிலும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல வரைந்துளார். 1949 முதல் எழுதி வருபவர்.

தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் (64), அதன் பொற் பதக்கம் 57இல் பெற்றவர். உத்தரப் பிரதேச அரசின் ஆராய்ச்சிப் பரிசு பெற்றுளார். லண்டன் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி செய்தவர். இங்கிலாந்து, அயர்லாந்து, ஸ்காட்லாந்து, பிரான்சு, நெதர்லாந்து, சுவிட்சர்லாந்து, இத்தாலி, கிரீசு, எகிப்து, வேல்ஸ், இலங்கை போன்ற நாடுகட்குப் பயணம் புரிந்தவர். இனியவர். **முகவரி :** 15, தணிகாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5.

**ர. சௌரிராஜன் :** *11-12-1935.* தஞ்சை மாவட்ட காரப் பங்காடு, தட்சிண பாரத இதழ் பிரசார சாலை அலுவலராக இருந்து நூலகராக உதவியவர். ஆங்கிலம், வடமொழி, இந்தி, மலையாளம், குஜராத்தி, உருசிய மொழி வல்லார். அளித்தவை : சௌபாக்கியவதி, பாரத நாட்டுப் பழங்கதைகள், அறிவுக்கதை (மூன்றும் சிறுகதை). ராமாநுஜர் கதைகள் (சரிதம்), இந்தியாவின் கலையும் கலாசாரமும் (ஆராய்ச்சி), ஆன்றோர் கதைகள், பண்பாட்டுக் கதைகள், புத்தர் கதைகள், நாழிக்கிணறு. 51 முதல் எழுத்தாளர்.

பெயர்த்தவை : சுபதா, பொன் மலர் (சரத்சந்திரர்), ராஜஸ்தானத்து அந்தப்புரங்கள் (ராகுல் சாங்கிருத்யாயன்), ஏழாவது குதிரை (தர்மவீர் பாரதி). இந்தியில் தமிழ்மொழி பற்றிப் பல கட்டுரைகள் படைத்துள்ளார்; தமிழிலிருந்து பல சிறு கதைகளையும் 'காமராஜர் வரலாறு' நூலையும் இந்தியில் பெயர்த்துளார். உத்தரப் பிரதேச அரசின் இலக்கியப் பரிசினை இருமுறை பெற்றவர்.

பிற: சங்கமம் (பொற்றெக்காட்), கூட்டுப்பண்ணை (நாடகம்) இரண்டும் மலையாளத்திலிருந்து. மங்கல வளையல், ஜெயகாந்தன் கஹானியா. இதுபோது மணியனின் 'ஞான பூமி' இந்திப் பதிப்பாசிரியர். **முகவரி :** S. 7, திரு.வி.க. தொழிற் பேட்டை, கிண்டி, சென்னை-32.

**பி. எஸ் கிருஷ்ணசுவாமி :** 16-7-1922. பெரியகுளம். தமிழ், இந்தி, ஆங்கிலம், தெலுங்கு வல்லவர். திருச்சி வானொலி நிலைய இந்திமொழி பெயர்ப்பாளர். பலமொழி நாடகங்கள் இந்தியில் பெயர்க்கப்பட்டு, இந்தியிலிருந்து எண்ணற்ற நாடகங்களைப் பெயர்த்து வருகிறார். அப்படியே நிகழ்ச்சிகள். கவிதைகள் மட்டும் 600 இருக்கும் இவர் தொண்டு ஏத்துதற் குரியது. **முகவரி :** D 66, எட்டாவது குறுக்குச் சாலை, தில்லை நகர், திருச்சி-17.

**எஸ். வசந்தா :** 1929. வ. ஆ. திருப்பத்தூர். மூன்றாம் பாரம்வரை தமிழ் பாடமொழி. பின் வடமொழி, ஆங்கிலம் பயிலல். படிப்பை விட நேர்ந்தது. 13 ஆண்டு கழித்துக் காசி பல்கலைக் கழக மெட்ரிக் (இந்தி); மைசூர் P.U.C, பெங்களூர் B.A. இந்திக்காக உதவித் தொகை பெற்றதால், வெங்கடேசுவரா பல்கலைக் கழகத்தில் இந்தி M.A . Ph D. 'Obscurity in Modern Hindi Poetry' 69இல்.

68-70 சென்னை மகளிர் கிறித்துவக் கல்லூரி விரிவுரையாளர். 70 முதல் தட்சண பாரத இந்திப் பிரசார சபையின் மேற்படிப்புத் துறையில் விரிவுரையாளர். 87 நவம்பரில் ஓய்வு. இவர் மேற்பார்வையில் 4 பிஎச் டி, பல எம்.பில் ஆய்வுகள் நிகழ்ந்துள. எம்.ஏ. பாடத் திட்டப்படி பிறமொழி யினின்று ஒரு நூலை இந்தியில் பெயர்க்க வேண்டும்; அப்படிப் பல பெயர்ப்புக்களை மேற்பார்வையிட்டிருக்கிறார்.

எம்.ஏ.க்கு 73-80 வரை இந்தி மூலம் திராவிட மொழி இலக்கியம் கற்பிக்கும் பொறுப்பில் தமிழ் இலக்கிய வரலாறு கற்பிக்கும் பணி இவருக்கு வாய்த்தது. அதனால் இந்தியில் தமிழ் இலக்கிய வரலாறு யாத்துளார். 78இல் இவரது ஆய்வுக்காக 'பீகார் ராஷ்ட்ரபாஷா பரிஷத்' தாமிரப் பத்திரமும் ரூ. 2,500மும் பரிசளித்தது. இவரது கவிதைத் தொகுப்பு 'வலியின் கோடுகள்' (Dard Ki Lakiren)க்கு 83இல் ஹைதராபாத் ஹிந்தி பிரதிஷ்டான் ரூ. 1,116 பரிசு தந்தது. இவரது இந்தி தமிழ் இலக்கிய வரலாற்றை யாரேனும் வெளியிடின் மெத்த பயனாகும். இனிய இவரின் **முகவரி:** 51/5, தெற்கு உசுமான் சாலை, தியாகராயநகர், சென்னை-17.

**ந. ஸ்ரீதரன்:** 5-11-1942: வ.ஆ செய்யாறு. டாக்டர். என். ஆர். நரசிம்மன்: அமிர்தவல்லி. 58இல் தேவகோட்டை நகரத்தார் உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்வு; 62இல் சென்னை இலயோலாக் கல்லூரி பி.ஏ. ஆங்கிலம்; 64இல் ஆக்ரா

கன்ஹையலால் முன்ஷி இந்தி மொழியியல் கல்லூரி எம்.ஏ. இந்தி; 70இல் உதயபுர் சுகாதியா பல்கலைக் கழக மகாராணா பூபால் கல்லூரி டாக்டர் பட்டம், 'சுதந்திரத்திற்குப் பின் வெளியான இந்தி-தமிழ் சமூக நாவல்கள் ஒப்பாய்வு.

69-70 உதயபுர் மகாராணா பூபால் கல்லூரி, 75-79. புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரி, 79-80 மேலூர் அரசு கலைக் கல்லூரி, 80 முதல் புதுக்கோட்டை. படைப்புகள்: பாரதியின் பராசக்தி, பாரதியாரின் மணிமொழிகள், கீதைகாட்டும் லட்சிய மனிதன், பாரதி-சில யதார்த்தப் பார்வைகள் (கூட்டாசிரியர்), குழந்தைக் கதைகள் (இந்தி). பெற்ற சிறப்புகள்: 78இல் உடல் ஊனமுற்றோருக்கான தேசிய விருது குடியரசுத் தலைவரால் வழங்கப்பெற்றது. பாரதிதாசன் பல்கலைக் கழக இந்திப் பாடத் திட்டக் குழு உறுப்பினர் (82-83), தலைவர் (84-85), திருச்சி வானொலி நாடகச் சிறப்பு மொழி பெயர்ப்பாளர்; பாரதீய ஞானபீடக் கவிதை மொழி பெயர்ப்பாளர். சர்வோதய இயக்கத்திற்கான ஏராளமான பெயர்ப்புகள். சிறந்த ஆய்வாளர், சிந்தனையாளர். **முகவரி:** 3061, கிழக்கு 2ஆம் தெரு, புதுக்கோட்டை-622 001.

**ஆங்கிலம்-சி. ஆர் மயிலேறு:** 1-9-1908. கோவை. அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆங்கிலப் பேராசிரியர். நாடகம் நடாத்துவதிலும் இயற்றுவதிலும் மிக்க ஈடுபாட்டினர். என்ன வாழ்க்கை இது? ஒதெல்லோ (Othello), கருமி (Miser by Molier) போன்றன தந்தவர்.

**எஸ் தியாகராஜ சர்மா:** 15-7-1934. வேலூர். சுப்பிரமணியம்: **ராஜம்மாள்.** புதுக்கோட்டை சி.எஸ்.எம். உயர் நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 48. அரசர் கல்லூரி பி.ஏ. (கணிதம்) 53; சென்னைக் கிருத்துவக் கல்லூரி எம்.ஏ. 56. திருச்சி தேசியக் கல்லூரி 51, மதுரை அமெரிக்கன் கல்லூரி 56-58, பூண்டி புட்பம் கல்லூரி 58 முதல். நூல்கள்: Adventure stories, Ramananda Vijayam (Biography), Little Woman, Jave Eyre, Kipling and India, Narayana Theertha (Radio Plays) எம்.லிட். 80இல், Narrative Technique in Raja Rao's novels with special ref. to the Serpent and the Rope. டாக்டர் பட்டம் 87இல், Fusion of Technique of Vision in Indo Anglican Fiction.

மொழி பெயர்ப்பில் முனைப்பு மிக்கவர்: 87 சனவரி 16-22 மொழி பெயர்ப்புப் பட்டறை பாங்காக நடாத்திய பண்பு இயக்குநர். கர்நாடக, மேலை நாட்டு இசையில் வல்லவர்; நாடகாசிரியர் நடிகர் இயக்குநர். ஆங்கிலத்திலும் தமிழிலும் அழகொழுகப் பேசும் பெற்றியர். பண்பும் அன்பும் பவ்விய மும் மிக்கவர். மணம் 13-5-59, மனைவி கௌரி, பி.ஏ; மக்கள்: பட்டாபிராமன் (கனடா), ராஜாராமன் (அமெரிக்கா) இருவரும் B. Tech. M.S., Ph. D. வித்யாலட்சுமி, நித்ய கல்யாணி இருவரும் M.Sc. **முகவரி:** 1870, மேல வீதி, தஞ்சாவூர்-613 009.

**எஸ். ராமன்:** 23-6-1939. தஞ்சாவூர். சிவராமன்: ருக்மணி அம்மாள். 55இல் தூய பேதுரு உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு, பள்ளி முதன்மைக்காக Marsh Medal பெற்றவர். 57இல் திருச்சி தூயவளவர் கல்லூரி இன்டர் 1gr MPC; 61இல் சென்னைக் கிருத்துவக் கல்லூரி பி.ஏ. ஆனர்சு; Crawford Prize for Eng. Lang, பெற்றார். எம்.பில் 80 The Problem of Communication in E.M. Forster's A Passage to India.Ph.D.82. Stratagems of shaping : An Approach to Pinter's Theatre. 61-63 மதுரைத் தியாகராசர் கல்லூரி, 63 முதல் பூண்டி புட்பம் கல்லூரி.

கொடைகள்: Social History of England, A History of English Litt, Karna (A Verse Play), Deathless Sun and the dying Hours (Poem), தமிழுக்கு இவர் அளித்தவை: Translations of Bharathi's Poems (Tamil Varsity), Translation of a few poems of Bharathidasan (Bard-School of Languages), Translations of Nedunalvadai & Mullaippattu.

கல்விக்காகத் தம்மையே தத்தம் செய்தவர். ஓர் இலக்கியத் தும்பி-தேனீ. கூர்த்த மதியும் கூறுபடு சிந்தையும் கொண்டவர். பயின்று கொண்டே இருப்பவர். பகர்ந்து கொண்டே சிறப் பவர். அமைதியாக நோக்கி அரிய கருத்துக்களை வாரி வழங்குபவர். Scholars Library நடத்துபவர்: மாதம் மும்முறை அரிய உரைகளை வெளியிடுகிறது இவ்வமைப்பு. மணம் 12-5-61, மனைவி சாவித்ரி, மக்கள்: காயத்ரி, சுமதி, லதா, கீதா, லக்ஷ்மி; குருசங்கர். பெருமைக்குரிய அருமையர். 'இலக்கிய எரிமலை'யாம் இவரின் **இருப்பிடம்:** 391, Apijianna Vattaram, Thanjavur-613 009.

**பழநி. அரங்கசாமி** : 1936. தஞ்சை மாவட்ட விண்ண மங்கலம். பழநிவேல் காடவராயர் : ரங்கம்மாள். திருக்காட்டுப் பள்ளி சிவசாமி ஐயர் உயர்நிலைப்பள்ளி முடித்து, தருமபுரம் தமிழ்க்கல்லூரியில் பயின்று, அண்ணாமலையில் பி. ஓ. எல் தேறி அங்கேயே ஆங்கிலத்தில் முதுகலைப் பட்டம் பெற்று, சில கல்லூரிகளில் பணியாற்றி இதுபோது மதுரைப் பல்கலைக் கழக ஆங்கிலத்துறையில் பேருரையாளராகப் பிறங்குகிறார். இருமொழிப் புலமையாளர். ஆங்கிலத்தில் ஆற்றலுடன் பேசும், தமிழில் திறமுடன் உரையாற்றும் ஊற்றத்தார். வாட்ட சாட்ட மான எடுப்பான கம்பீரத் தோற்றத்தார். வகுப்பு எடுப்பதில் மன்னன். பிற வகுப்புகட்குச் செல்லும் மாணவர்கள் கூட இவர் வகுப்பினைத்தேடிவந்து நாடி இருப்பர். சொற்பொழிவு பட்டிமன்றம் இரண்டிலும் கேட்குநர் கிளர்ந்தெழும் வண்ணம் ஆற்றும் ஏற்றத்தர். தமிழினின்று ஆங்கிலத்திற்கும், ஆங்கில வளங்களை அருந்தமிழிலும் படைத்து வருகிறார். பி. ஓ. எல். தமிழும், எம். ஏ. ஆங்கிலமும் இதற்குக் கை கொடுக்கின்றன. தாம் அரிதின் பெற்ற இருமொழியமும் ஒல்லும் வகையான் பயன்படுத்தி வருகிறார். ஆங்கில இலக்கியத்தில் ஆய்வு நிகழ்த்தி 85இல் டாக்டர் பட்டம் பெற்ற இவர், அன்னை தெரசா, செய்தி உலகம், தமிழில் சேக்ஸ்பியர் போன்றன படைத்துள்ளார். தமிழ்ச் சங்கத்தில் 'செந்தமிழ்' பொறுப் பாசிரியர் கடந்த 9 ஆண்டுகளாக. மணம் 62இல், மனைவி இந்திரகுமாரி; மக்கள் ராஜா, சேகர், அப்பர், சிவா; லதா- ஐவர். **முகவரி:** 234, பெரியார் தெரு. நாகமலை புதுக் கோட்டை, மதுரை-19.

**ஆட்சித்துறை-எஸ். வெங்கட்ராமன்** : முதலில் சென்னை விவேகானந்தா கல்லூரி விரிவுரையாளர். பின் Indian Rev. Service தேர்வில் தேறி மைய அரசின் நிதித் துறையினைச் சேர்ந்த Customs Central Excise துறையின் Collector ஆகச் சிறந்தவர். சிறந்த இலக்கிய ஈடுபாடும் சீரிய கலாரசனையும் கொண்டவர். விகடனில் முத்திரைக் கதைகள் வரைந்தவர். பிரயாணம், புல்லுருவி போன்ற புதினங்கள் இவருக்குப் பொன்றாப் புகழ் புரிவன.

**டி. வி. வெங்கட்ராமன் ஐ. ஏ. எஸ்** : தமிழக அரசின் ஆணையர் மற்றும் உள்துறைச் செயலராக உள்ளார். ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கிய உத்தமர். ஐ. ஏ. எஸ். அலுவலர் களிலேயே தமிழறிவு மிக்கவர். வடமொழி ஆங்கிலம் வல்லவர். வேத உபநிடதங்களில் வல்ல இவர் அவைகளில் இல்லாத் தத்துவத் தெளிவு திருமந்திரத்தில் இருப்பதாக மனந்திறந்து

மொழிகிறார். திருமந்திரமே இவர் வாழ்வு நூலாகக் கொண்டு அதிலேயே ஊறித் திளைத்து வருகிறார். அருமையாகச் சொற் பெருக்காற்றுகிறார்; இன்னும் கொஞ்சம் பேசமாட்டாரா என்றேங்குமாறு எளிதே இனிதே இவர் பொழிவு அமைகிறது. பெருமைக்குரிய அரும் பெரும் அரசு அலுவலர்.

**எஸ். டி. காசிராஜன் ஐ. ஏ. எஸ்.** *13-8-1930.* நெல்லை மாவட்ட மஞ்சள் நீர்க்காயல். தங்கையா : பொன்னம்மாள். சாயர்புரம் போப் நினைவு உயர் நிலைப்பள்ளி இறுதி வகுப்பு 47இல், பாளை புனித சேவியர் கல்லூரி இன்டர் சென்னை லோயாலாக் கல்லூரி பட்டப் படிப்பு முடித்து, அரசியல் பொருளாதாரம் வரலாறு மூன்றிலும் முதுகலைப் பட்டம் பெற்றார். இளமை தொட்டே தமிழிலும் ஆங்கிலத்திலும் அழகொழுகப் பேசுவார், அருமையாக எழுதுவார். இலக்கியச் சொற்பொழிவு சமயப்பொழிவு செய்வதில் சமர்த்தர். கம்பனிலும் சைவ சமயப் பனுவல்களிலும் தோய்ந்த அறிவினார். சங்க இலக்கியங்களிலும் சக்கைப் போடு போடுவார்.

புதுக்கோட்டை மாவட்ட ஆட்சியர், தமிழரசு செய்தித் துறை இயக்குநராக வெல்லாம் இருந்து இதுபோது போக்கு வரத்துத் துறை ஆணையராக உள்ளார். பச்சையப்பன் அறக் கட்டளைத் தலைவர், உலகத் தமிழ்ச்சங்கத் தனி அலுவலர் போன்ற பல்வேறு பெரும் பொறுப்பு வகிக்கிறார். இனிதே உரையாடுவதில் கலகலப்பாக அளவளாவுவதில் கனிவானவர். கண்ணியர், ஐ. ஏ. எஸ். அலுவலர்களில் எல்லோர்க்கும் நல்லவர், வல்லவர்.

திரு. வி. க. ஓர் இலக்கியம் என்ற அரிய நூலைப் படைத்துள்ளார். வி. ஜி. பி. சந்தனம்பாள் அறக்கட்டளைப் பரிசு பெற்றது, கம்பராமாயண ஆராய்ச்சிப் பெருங்கடல் (பாளை கம்பன் கழகம்), கலைமாச்செல்வர் (குமாரபாளையம்) போன்ற பட்டங்கள் பெற்றவர். 'தமிழர்கள் எத்தகைய வேறுபாட்டால் பிளவுபட்டாலும், தமிழ் எனும் மொழி இணைப்பால் ஒன்றுபட்டுத் தமிழகம் முன்னேற உழைக்க வேண்டும்' எனும் திரு. வி. க. கொள்கையே இவரது குறிக்கோள்.

*14-9-1959* மணம். மனைவி மங்களம், மக்கள் : மகேசன்; தேசன்; டாக்டர் சாந்தி. இவரது இளவல் டாக்டர் எஸ். டி. ஜெயபாண்டியன் தூத்துக்குடி காமராஜ் கல்லூரி வரலாற்றுத் துறைத் தலைவர், **முகவரி:** எழிலகம், சென்னை-5.

**வி. ராமமூர்த்தி: ஐ. ஏ. எஸ்.** இலக்கியம் இசை கிரிக்கெட் போன்ற பல்துறைச் செல்வர். அழகொழுக இலக்கிய நடையில் உரையாற்றும் இனிய பேச்சாளர், சன்னக் குரலில் துல்லியமான உச்சரிப்புக்களுடன் பேசும் இவர் பொழிவில் கனிவும் கருத்தும் தெளிவும் இருக்கும். கிரிக்கெட் காலங்களில் எவரும் இவரின் செந்தமிழ் சிறக்கும் சீரிய கூரிய வர்ணனைகளைச் செவிமடுத்திருப்பர். தமிழில் வருணிக்கமுடியும் எனக்காட்டியவர்-நாட்டியவர் வண்ணனைகளை வாகான தமிழில் இலக்கிய மணம் கமழ அளிப்பதில் இவருக்கு இணை இவரேதான். அது போல் சொற்பொழிவுக்கு அழைப்பின் உரியனவற்றைப் படித்துச் சுவைத்து வந்து எல்லோர் மனங்கொள இன்புறப் பேசுவார். நெடிய தோற்றம், சிவந்த மேனி, ஒல்லி உருவம், கரிய குறுந்தாடி, மென்மைக் குரல் கண்டாரையும் கேட்போரையும் கவரும். மாவட்ட ஆட்சியராக இருந்து புள்ளியியல் துறை இயக்குநராக இலங்கி இதுபோது நில அளவை ஆவணத் துறை உயர் அலுவலராக விளங்கி வருகிறார். பெருமைபடத் தக்க பெருமகனாரின் **முகவரி:** மனை எண் 285, 82, முதல் அவென்யு, இந்திரா நகர், சென்னை-20. (411 570)

**தியானேசுவரன் ஐ. ஏ. எஸ். :** திருச்சி மாவட்டம். கரூர் நகராட்சி உ. ப. மாணவர். வளவர் கல்லூரி, அண்ணாமலையில் பயின்று நேர்முகத் தேர்வில் துணை மாவட்ட ஆட்சியராக வந்தவர். சிதம்பரம், தஞ்சாவூரில் பணியாற்றி, ஈரோட்டில் மாவட்ட ஆட்சியராகச் சிறந்து, தமிழக அரசின் சிறு தொழில் சிறப்புறு வாரியத்தின் மேலாண்மையராக மிளிர்கிறார். நல்ல இலக்கிய ஆர்வலர், புலமையர்; இலக்கியச் செழுந் தமிழில் சிறப்பாகச் சொற்பெருக்காற்றும் ஏற்றத்தர். பேச்சினூடே சிலம்பும் பிறவும் சிலிர்த்து வரும். கேட்போர்க்குக் கற்கண்டெனச் சுவைக்குமாறு வளமையுடன் பேசிடும் வன்மையர். இந்திய ஆட்சிப் பணியினருள் ஒரு சிலரே இலக்கியப் பற்றும் தனித்தமிழ் பேசும் திறமும் கொண்டவர்கள்; அவர்களில் தியானேசுவரர் திறமானவர். விளையாட்டு வீரர், பூப்பந்தாட்டம் போன்றவற்றில் படுசூரர். பண்பும் பணியாற்றும் பாங்கும் மிக்கவர்.

**காவல் துறை — சரவண பவானந்தம் பிள்ளை :** தஞ்சை. முத்துசாமிப் பிள்ளை : சந்திரமதி. சென்னையில் சட்டம் பயின்று வரும்போதே, காவல் துறை ஆணையர் கர்னல் வெல்டன் நடத்திய தேர்வில் முதல்வராய்த் தேர்ந்தார் 1889இல் குற்றவியல் துறையில் தம் நேர்முகச் செயலராய்

அமர்த்திக்கொண்டார். தென்னகத்தில் நிகழ்ந்த கொள்ளை குழப்பங்களை அடக்கி அமைதி காத்தார்; சிக்கலான வழக்குகளைச் சரிப்படுத்தினார். இதனால் ஐரோப்பிய மேல் அலுவலர்களும், உயர்நீதி மன்ற நடுவர்களும் வியந்து போற்றினர். 1904—12. நகர குற்றவியல் துறைத் தலைவர். 06 சனவரியில் வந்த வேல்ஸ் இளவரசர் இளவரசிக்கும், பின்வந்த மிண்டோ, ஹார்டிஞ்சு பிரபுக்களுக்கும் மெய்க் காப்பாளராக மெச்சும் வகையில் செயலாற்றினார்; இதுகண்டு பதக்கங்களும் சிறப்பும் பெற்றார். 08இல் உதவி ஆணையர், 18இல் துணை ஆணையர், 35 ஆண்டுடைய இவரின் பணிகளைப் பாராட்டித் திங்கள் தோறும் ரூ. 600/- தரத்தக்க ஜாகீர் 12-4-22 முதல் பெற்றார். கட்டை பிரம்மச்சாரி. ஈட்டிய அனைத்தையும் தமிழ்க் கல்விக்காக இறுதி முறி எழுதிச் சென்றார். இன்று இவர் பேர் சொல்வது பவானந்தர் கழகம். **முகவரி :** 68, செர்மையா சாலை, வேப்பேரி, சென்னை-7. (பார்க்க 812-)

**எஸ். எம். டயஸ் :** தலை சிறந்த காவல்துறை அலுவலர்களில் புகழ் சான்றவர். வளவர் கல்லூரி மாணவர்; கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கி, பின் காவல் துறையில் நுழைந்து துணை இன்ஸ்பெக்டர் - ஜெனரல் வரை உயர்ந்து ஓய்வு பெற்றவர். வரலாறு, இலக்கியம் இரண்டிலும் வளமை சான்றவர். வீறார்ந்த பேச்சாளர், சிறந்த எழுத்தாளர். கறுத்த திருமேனி, நீடுதோன்று நெடிய உருவம். தமிழிலும் ஆங்கிலத்தும் திறமுடன் பேசும் திண்ணியர்.

குறிப்பிடத் தக்க நூல் Aphorisms of Valluvar-Commentary and Comparative study. குறளின் அறத்துப்பால் 380 குறட்பாக்களுக்கும் ஆங்கில ஆக்கம், இணையான ஒத்த மேற்கோள்கள் கொண்ட சிறந்த கொடை. வள்ளுவர் ஈராயிரம் ஆண்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் வள்ளுவரும் உலகப் பெருஞ் சிந்தனையாளர்களும், மாமன்னன் ராசராசன் சதய விழாவில் ஆற்றிய வரலாற்று உரையும் பல்லோரின் பாராட்டினைப் பெற்றவை. காவல்துறையாளர்களில் கனிதமிழின் சுவை கனியப் பேசுவோரில் தலையாயவர். தொழிலாற்றியதோ கடுமை மிக்க காவல்துறை, தொண்டாற்றியதோ கனிவுமிகு கன்னித் தமிழுக்கு. எனவேதான் இவர் புகழ் இலக்கியத்தில் ஏறுகிறது!

**பொன் பரமகுரு :** 16-4-1926 நெல்லை மாவட்ட கரிவலம் வந்த நல்லூர். சித்த கல்ப கிரோன்மணி தவத்திரு பொன்னையா சுவாமிகள் ; (1890-1960) கோமதி அம்மாள்,

சித்தூர் மாவட்ட ரிஷிவேலி பள்ளி, பாளையங்கோட்டை கல்லூரி இன்டர், நெல்லை இந்துக் கல்லூரியில் பி.ஏ. பொருளாதாரம் பயின்று, சென்னையில் எம்.ஏ.பி.எல் பட்டம் பெற்றார். காவல் துறைத் தேர்வில் தேர்ச்சி பெற்று டி.எஸ்.பி. ஆக நுழைந்து, தென்னார்க்காடு மாவட்ட அதிகாரியாகி, சென்னையில் சி.ஐ.டி. கண்காணிப்பாளர், புதுவை காவல் துறைத் தலைவர், பின் சென்னையில் டி.ஐ.ஜி; ஐ.ஜி.யாக உயர்ந்து 84இல் ஓய்வு பெற்றார்.

பேச்சுத் திறமையும் எழுத்து வன்மையும் மிக்கவர்; நாடகக் கலையில் நிபுணர். காவல் துறையின் நூற்றாண்டு விழாவின்போது 'உங்கள் நண்பன்' என்ற திரைக்கதை எழுதி சிவாஜிகணேசன் போன்றாரை நடிக்கச்செய்து இயக்கியவர். நாடக நூல்: வினை விதைத்தவர்கள்; கதைகள் : துப்பறியும் துக்காராம்; காதல் கடிதம்; கட்டுரைகள்: கண்கண்ட தெய்வம், தாயுள்ளம், நீங்கா நினைவுகள், பொன்னடியான் கவிதை ஆய்வு. 40 முதல் எழுதி வருகிறார்.

தந்தை போன்றே தெய்வ சிந்தை மிக்கவர். ஞானிகளிடம் ஈடுபாடு மிகுந்தவர். தந்தை நாவினால் இவர் நாவில் எழுதி, செவியில் மந்திரம் ஓதியமையால் துறவி நாட்டம் கொண்டவர். இனிய துணைவியார் கமலா; தமையனார் பாளை. சித்த மருத்துவக் கல்லூரி முதல்வராய் இருந்த டாக்டர் குரு சிரோன்மணி என்பது குறிப்பிடத்தக்கது. **முகவரி** : பாலாஜி அவென்யூ, திருமலைப்பிள்ளை சாலை, சென்னை-17. 67, ஸ்பர்டாங்க் சாலை, சேத்துப்பட்டு. சென்னை-31 (665537)

**கிராக்கி**: (கி. ராதாகிருஷ்ணன்). 10-5-1929. தஞ்சை மெலட்டூர். கிருஷ்ணன்: ராஜம்மாள். 44இல் எஸ்.எஸ்.எல்.சி. 49இல் மாநிலக் கல்லூரி பி.எசி. ஆனர்சு. ஜியாலஜி. 52இல் இந்தியக் காவல் பணியில் நுழைந்தார். 52-58 தமிழக மாவட்டங்களில் ASP. 58இல் SP ஆகப் பதவி உயர்வு செங்கற்பட்டு மாவட்டத்தில் 60 துணை ஆணையர் (போக்குவரத்து, உரிமம்). 60-68 நிர்வாகம், சட்டம் ஒழுங்கு, 63இல் சிங்கப்பூர் சென்று திட்டம் போக்குவரத்து அறிந்து வரல். 66இல் டோக்கியோவில் நடந்த Traffic கருத்தரங்கில் இந்தியத் தெரிவாளராகக் கலந்து கொள்ளல். ஆசிய வர்த்தகக் காட்சியின்போது பாங்காக் சென்று கண்டு வருதல்.

69இல் வேலூர் காவல் பயிற்சிக் கல்லூரி முதல்வர். 70இல் DIG, கோவை சரகம், 74இல் சிஐடி பிரிவு சென்னை. 76இல்

காவல் கணிப்பொறிமையம்; Forensic Lab. இயக்குநர் 76-79 வேலூர். 79 மே I. G யாக உயர்ந்து பல்லவன் போக்கு வரத்துக் கழகத் தலைவர். 80 ஏப்-சூன் ஐரோப்பிய நாடுகள் அமெரிக்கா கனடா சென்று போக்குவரத்து முறைகளை அறிந்துவரல். 81 ஆகஸ்டில் வாஷிங்டன் சென்று உலக வங்கி யின் உதவி பெற்று வரல். 81 செப். குற்றம் சட்டம் ஒழுங்கு IG. 17-5-82இல் DGP. 24-1-82இல் லஞ்ச ஒழிப்பு இயக்குநர். 13-4-86 முதல் தமிழ்நாடு காவல்துறை வீட்டு வசதி வாரிய மேலாண்மை இயக்குநர் தலைவர்.

69 ஆகஸ்டு Police Medal for meritorious service; 75இல் President's medal for distinquished service. IPS ஆனது 52இல். 47இல் மணம்; மனைவி ராஜலட்சுமி. மக்கள் : ஒரு மகன், 3 மகள்.

தொழிலாற்றியது காவல்துறைக்கு; தொண்டாற்றியது கன்னித் தமிழுக்கு! சிறந்த எழுத்தாளராக ஒளிர்கிறார். 'கிராக்கி' என்ற புனைபெயரில் உயர்ந்த கட்டுரையாளராக ஒளிர்கிறார்; உறங்கும் இரவு, விண்வெளிக்கு, மதிமயக்கம், குறள் வீசும் இன்பத் தென்றல் போன்றன குறிப்பிடத்தக்கன. கல்கியில் விமர்சனக் கட்டுரை எழுத அழைத்தனர்; இதுவே எழுத்தாளரான கதை. குமுதம், விகடன், அமுதசுரபி, கலை மகள், குங்குமம், சாவி, ஜூனியர் விகடனில் வரைந்து வருகிறார்.

நூல்கள்: உலகம் சிரிக்க, சிரித்து வாழ, நிறம் மாறும் மனிதர்கள் (சமூக நாவல்), அயோத்தியிலிருந்து இலங்கை வரை (வால்மீகி கம்பன் காளிதாசன் ராமாயண ஒப்புநோக்கு) Ayothi to Ceylon. Cricket Scenes from Silly positions (கிரிக்கெட் விளையாட்டு பற்றிய நகைச்சுவைச் சித்திரம்), இயற்கை இயற்றும் இலக்கிய இன்பம்.

அன்பு, எளிமை, நட்பு, பேச்சாற்றல் மிக்க காக்கி உடையில் கன்னித் தமிழ் படைக்கும் இனிய இவரின் **முகவரி**: 39, 4வது முதன்மைச் சாலை, கொரட்டூர், சென்னை-85 (414310)

**சு. ஸ்ரீபால்** : தமிழ்பால் விடுதலறியா விருப்பு மிகக் கொண்டவர். இலக்கியத் தமிழில் இனிதே உரையாற்றும் ஏற்றத்தார். சமணத் தமிழ்க் காப்பியம் சிலப்பதிகாரத்திடம் தனி ஈடுபாட்டினர். எளிமை அமைதி இரண்டும் இயன்ற அரிய தமிழன்பர். 83இல் இவரது 'சிந்தனைப் பூங்கா' என்ற நூல் வெளியானது. சென்னை உயர்நீதி மன்றத் தலைமை

நீதிபதி பு.ரா. கோகுல கிருஷ்ணன் தலைமையில் அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தர் வெளியிடப் பள்ளிக்கல்வி இயக்குநர் முதற்படியினைப் பெற்றார். பொள்ளாச்சி வள்ளல் நா. மகாலிங்கம் பொன்னாடை போர்த்தினர். மன்றத்திலேயே அப்போதே 1000 படிகளும் விற்பனையாயின. அப்படி இவரிடத்தும் இவர் எழுத்திலும் இலக்கியத்தும்பிகட்கு ஈடுபாடு. சென்னை மாநகர் காவல்துறை ஆணையராகச் சிறந்து இதுபோது ஐ ஜி.யாக அரும்பணியாற்றி வருகிறார். **முகவரி:** 8, ஹென்ஸ்மென் சாலை, சென்னை-17. (443087)

**பிறபணி-ஏ. வி சுப்பிரமணிய ஐயர்:** நெல்லை. தமிழ் ஆராய்ச்சி யின் வளர்ச்சி' என்ற வரிசை மூலம் இலக்கிய வரலாற்றில் இடம் பெறும் பெரியார். சங்க இலக்கியம் முதல் தற்கால இலக்கியம் வரை பயின்று ஆய்ந்த அறிஞர். இவர் கொடைகள்: கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள், கல்வியில் பெரியவர் கம்பர், அறுவகைச் சமயம், Kabilarahavae, Tamil Studies series, Epic Poetry and the Modern World. தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி போன்றன. **முகவரி:** பாளையங் கோட்டை, நெல்லை-2.

**ஏ. வி. சுப்பிரமணியன்:** 27-11-1924. பி.எ.சி, பி.டி, பயின்று அனைத்திந்தியப் போட்டித் தேர்வில் வெற்றி பெற்று 48இல் இந்திய ரயில்வேயில் அலுவலராகச் சேர்ந்து தென்னக ரயில்வே கூடுதல் பொது மேலாளராகி 82இல் ஓய்வு பெற்றார். ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் பேச்சு எழுத்தில் வல்லவர். இந்தியாவில் பல பகுதிகளிலும் பல்கலைக் கழகங்கள் சமய நிலையங்கள் இலக்கிய மன்றங்களில் பன்முறை சொற்பெருக் காற்றியுள்ளார். இருமுறை மலேசியா சிங்கப்பூருக்கும், அமெரிக்கா கனடாவுக்கும் பேச்சுலா சென்று பொழிவாற்றி வந்துள்ளார்.

இதுவரை புதினம் 3, சமயம் தத்துவம் 3, அறிவியல் 1, குழந்தை இலக்கியம் 8, இலக்கியம் மதிப்பீடு அழகியல் 15, மொழிபெயர்ப்பு 3, கவிதை 2 என 32 நூல்கள் படைத் துள்ளார். இரு துறையில் இன்றமிழுக்கு நன்றான பணியாற்றி வருகிறார். ஒன்று தமிழிலக்கியங்களை ஆங்கிலத்தில் ஆக்கு வது; The Ten Decads (பதிற்றுப்பத்து), The Squirrel in Thn Courtyard (சங்கப்பாக்கள் சில), The Bangle and The Javelie (முத்தொள்ளாயிரம்), Waves from the chandogya. மற்றொன்று புதிய கோணங்களில் பொருந்தும் வகையில் தமிழிலக்கியங் களை அணுகி ஆராய்ந்து வருகிறார். அரைத்த மாவையே

அரைக்காது, புதுமையான முறையில் பழந்தமிழ்ப் பனுவல்களில் பொதுளியுள்ள பொருள்களை வெளிக் கொணர்கிறார். எவரும் செய்யாத தனிமுறை ஆய்வுகள், 'இவை' புதிய கொள்கைகளே, பொருந்தும் கொள்கைகளும்கூட' எனத் தமிழ்த் தலைமை அறிஞர்கள் ஏற்றுப் போற்றுயுள்ளனர். மணிவிழா 2-2-85இல் ஜஸ்டிஸ் சாமிக்கண்ணு தலைமையில் பாரதிய வித்யாபவனில் நிகழ்ந்தது. அ. ச. ஞா, பொன். பரமகுரு, அவ்வை நடராசன், சிதம்பரம் சுவாமிநாதன் வாழ்த்தினர். அரிய பணியை ஆற்றும் இவர் **முகவரி:** 11/6 அலமேலு மங்காபுரம், மைலாப்பூர், சென்னை-4. (77743)

**நல். முருகேச முதலியார் :** 22-4-1905 சென்னை, தமிழ்நாடு அரசின் வேளாண் துறைத் துணைச் செயலராக இருந்து ஒய்வு பெற்றவர். அறிஞர் அண்ணா தலைமை அமைச்சரானதும் தம் ஆலோசகராக அமர்த்திக் கொண்ட பெருமையர். சைவ சித்தாந்த மகா சமாஜம், Academy of Tamil culture 59-66 தலைவர். இவரது தொண்டினைப் போற்றி ஆங்கில அரசு 'ராவ் சாகிப்' விருது வழங்கியது.

நல்கியவை : மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை உரை, சைவ சித்தாந்தமும் அதன் சிறப்பும். The Relevance of Saiva Siddhanta போல்வன, **முகவரி:** 15, டாக்டர் சதாசிவம் சாலை, தியாகராய நகர். சென்னை-17.

**வி. என். சிதம்பரம் செட்டியார் :** 14-1-1935. ராங்கியம். மதுரை மீனாட்சியம்மன் கோவில் தக்கார். சென்னை கோடம்பாக்கம் கமலா திரையரங்க உரிமையர். கண்ணதாசன் பால் காண்தகு காதலும், சிவாஜி கணேசனிடம் சிறந்த அன்பும் கொண்டவர். 'நகரத்தார் குரல்' மதிப்பாசிரியர். 'நகரத்தார் குல திலகங்கள்' தொடர் எழுதிவருகிறார். எழுத்துப் போலே ஏற்ற மிகு எழிற் பேச்சாளர். நகைச்சுவை நெளியும். மதுரைத் திருவள்ளுவர் கழக உறுதுணையாளர்.

சபரிமலை ஐயப்பன், புண்ணிய பூமியில் புனித யாத்திரை (பயணப் பனுவல்), அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் கோவில் தல வரலாறு, அங்கயற்கண்ணியின் அற்புதங்கள் போன்றன கொடைகள்.

மீனாட்சி திருக்கோயிலில் தமிழ் அர்ச்சனையைச் செயற்படுத்தினார்; உயர்நீதிமன்றத்தில் எதிராக வழக்குத் தொடுத்

தனர் இவர்மேல். இறையனாரோடு சேர்த்து நாற்பத்தொன்பதின்மர் சங்கம் வீற்றிருந்தமை போற்றுமாற்றான் தங்கத்தேர் உருவாக்கி 49 புலவர்கள் கொண்டு இழுக்கச் செய்தார். சித்திரை, தை முதல் நாளில் நடைபெறுகிறது. **முகவரி:** நாகப்பா இல்லம். 27, கமலா தெரு, 2, சின்ன சொக்கிகுளம், மதுரை-2 (26663).

**முத்தையா உடையப்பன்:** (செந்தில்) 15-3-1937. தேவகோட்டை. பி. காம் பயின்று 58இல் பாரத ஸ்டேட் வங்கியில் சேர்ந்தார். இவரது மொழி பெயர்ப்புத் திறனைக் கண்ணுற்ற பொது மேலாளர், இவரைச் சென்னை மண்டல ஆட்சி மொழித்துறைத் தலையராக அமர்த்தினார். 'வங்கியியல் கலைச் சொற்களஞ்சியம்' வெளியீட்டில் இவர் பங்கு கணிசமானது (சொல்லாக்கம் செய்து மறைந்த இரா. நமசிவாயம் அவர்களையும் நினைக்க வேணும்.)

78முதல் கவிதை புனைந்து வருகிறார்; ஆங்கிலத்திலும் அப்படியே. 'கவிதை உறவு' அமைப்பர் மூவருள் ஒருவர். வங்கி அலுவல் வேளையில் பஞ்சாபியரைத் தமிழ் கற்கச் செய்த பெருமையர். வங்கிக் கலைப் பிரிவின் அமைப்பாளர், இலக்கியப் பிரிவின் பங்காளர், **முகவரி:** State Bank of India Regional office 1-B, 259, Rajaji Road, Madras-1.

**எம். ஆர். ரங்கராஜன்:** (ராஜரங்கன்) 8-7-1938 கும்பகோணம். ஆங்கிலம், வடமொழி, ஜெர்மன், ருஷ்ய மொழி அறிந்தவர். 55முதல் எழுதி வருகிறார். சென்னை லயோலா கல்லூரிப் பேராசிரியர். கணிதம் வல்லாராயினும் இலக்கிய வளமையும் இசைத்திறமும் மிக்கவர். மாக்ஸ் முல்லர் பவன் இலக்கிய நிகழ்வுகள், நேருக்கு நேர் போன்றவற்றின் அமைப்பாளர். சிறுகதைகள் அறிவியல் வேதாந்தக் கட்டுரைகள் வல்லார் சிறுவர்க்கு, ராஜாஜி, மிருகக் காட்சிச் சாலையில் யார் யார்? வல்லு ஓநாய் - சர்ஃப்டிக் கனவுகள். குழந்தை இலக்கியத்தில் குறிப்பிடத் தக்க சாதனையாளர். **முகவரி:** பி-2, லயோலா குடியிருப்பு. சூளைமேடு சாலை, சென்னை-94.

**சா. சகத்ரட்சகன்:** 1950 பெயருக்கேற்ப ஏழை எளிய மக்களின் காப்பாளர். அயரா உழைப்பினார். முயற்சியால் முன்னுக்கு வந்தவர். பேச்சாளர், எழுத்தாளர்; கவிதையுள்ளம் கொண்டவர், கலை நெஞ்சம் வாய்ந்தவர். பாராட்டுக்குரிய பண்பாளர். எதையும் எடுத்துநடத்தும் அறநெஞ்சம். 82இல் சட்டமன்ற உறுப்பினர்; 85முதல் பாராளுமன்ற உறுப்பினர்.

83இல் செக்-பிரேசில் உலக அமைதி மாநாட்டில் கலந்து கொண்டு சோவியத் நாடு கண்டு வந்தவர்: கிழக்காசியப் பயணம் மேற்கொண்டவர். தமிழ் ஆங்கிலப் புலமையர்.

நூல்கள்: பாரதியும் பாரதிதாசனும் (ஒப்பீட்டாய்வு); கறுத்த மக்களின் உரத்த குரல்கள் (நீக்ரோ பாடல்களின் தமிழாக்கம்); சாதனைப்பூவின் சரித்திர வசந்தம் (புரட்சித் தலைவர் புரிந்தன போற்றுவது); Dr M. G R.-A Phenomenon- அன்னை தெரசா வெளியிட்டது; சோவியத்து இலக்கியம் நோக்கும் போக்கும்; சோவியத்து நாட்டில் கலையும் பண் பாடும்; திருக்குறள் கருத்துரையும் ஆங்கிலத் தொகுப்புரையும். **முகவரி:** 21. 6வது குறுக்குத் தெரு, புதுக்காலனி, சென்னை-44.

**சை. வே. சிட்டிபாபு**: (நாராயணசாமி). பச்சையப்பன் கல்லூரியில் வரலாற்று விரிவுரையாளராக விளங்கியவர். பேராசிரியர்கள் அ. ச. ஞா, அன்பழகன் போன்றாரோடு நாடகம் நடித்து ஈட்டிய பொருள் கொண்டு திரு. வி. க. பரிசினைக் கல்லூரியில் நிறுவியவர். பின் மாவட்டக் கல்வி அலுவலர், பள்ளிக்கல்வி இயக்குநராகச் சிறந்தவர். மாநிலத் தலைமைச் சாரணர் ஆணையராக இலங்கிக் குடியரசுத் தலைவரிடம் வெள்ளியானை விருது பெற்றவர். கல்லூரிக் கல்வி இயக்குநராகச் சிறந்து, மதுரைப் பல்கலைத் துணைவேந்தர்; அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 80 திசம்பர் முதல் இரு முறை துணை வேந்தராகத் திகழ்ந்தார். இவர் காலத்தில்தான் 81 செப் பட்டப் படிப்பு எடுக்கப்பட்டு. முதுகலை, ஆய்வு நிலைப் பல்கலைக் கழகமாக ஆக்கப் பெற்றது. 86இல் அ. ப. கழகம் டி. லிட். பட்டம் தந்து பெருமைப்படுத்திற்று. துணை வேந்தர்கள் கழகத் தலைவராகத் திகழ்ந்தார். மேலை நாடு கட்குச் சென்று வந்தார்.

தனிச்சிறப்பு: தேனொழுகப் பேசும் திறத்தர். அழகு தமிழிலும் ஆற்றல் ஆங்கிலத்திலும் கனிவுடன் பேசும் காந்தப் பேச்சாளர். நயம்பட நவிலும் நாநலத்தர். சொற்கள் குழைந்து குற்றேவல் செய்யும். இருமொழிப் பெரும் பேச்சாளர்களில் இவர் ஒருவர். இன்புறப் பேசி ஈர்த்திடும் நாநலம் சான்றவர். **முகவரி:** மேத்தா நகர், சென்னை-29.

**ப. முருகன்**: 10-6-1922. வ ஆ. சேயாறு. பங்காரு குள்ளப்ப முதலியார்: சீதா அம்மையார். அண்ணாமலையில் கா. சு. பிள்ளை. தெ. பொ. மீ. அ. சி. செட்டியார், பண்டிதமணி போன்றாரிடம் பயின்று 47இல் எம்.ஏ. இலக்கிய

மன்ற செயலராகச் சிறந்தவர், 47-48 சிவகங்கை மன்னர் கல்லூரியிலும், சில திங்கள் அண்ணாமலையிலும் பணியாற்றி, 48-55 அரசு கலைக் கல்லூரிகளில் துணைப் பேராசிரியராகப் பாலக்காடு, கோவை, கிருஷ்ணகிரி, வேலூர், திருவாரூர், சென்னை மாநிலக் கல்லூரிகளில் பணிபுரிந்து 55-64 தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்து, 64-75இல் முதல்வராக வேலூர், கிருஷ்ணகிரி, திருவாரூர், மதுரை வேளாண்மைக் கல்லூரி, பூண்டி புஷ்பம் கல்லூரிகளில் சிறந்து, மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பதிவாளராக 75-81இல் திகழ்ந்து, தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சிறப்பு அலுவலராக 83-84இல் விளங்கியவர்.

5வது உலகத் தமிழ் மாநாட்டின் ஆராய்ச்சி, வரவேற்புக் குழு உறுப்பினராக ஒளிர்ந்தவர். பள்ளிப் பாடநூல்கள் 10, தமிழ்ப் பழமொழிகள் பற்றிய நூல், நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் வடித்தவர். ஓரங்க நாடகங்கள் 15 யாத்துளார்; கல்லூரிகளில் நடிக்கப் பெற்றன. பட்டினப்பாலை, முல்லைப் பாட்டு, சிறு-பொருநர் ஆற்றுப் படைகட்கு உரை வரைந்துளார். தென்னிந்திய வரலாறும், தமிழ் இலக்கிய வரலாறும் எழுதியுள்ளார். தோட்ட ஓவிய சோதிடக் கலைகளில் வல்லவர். இதுபோது தமிழகத்தின் பல பகுதிகட்கும் சென்று இதுவரை அச்சேறாத பழமொழிகளைத் திரட்டி வருகிறார். (துணைவியார் சகுந்தலா பி ஏ. பி.டி ) தமிழ்ப் பேராசிரியர்களுள் மிக இனியர்; ஒல்லும் வகையான் ஓவாது உதவும் ஒப்புரவாளர். **முகவரி:** 'குறிஞ்சி' 46, ஹால்ஸ் சாலை, கீழ்ப்பாக்கம் தோட்டம், சென்னை-10. (613960).

**வை. தட்சிணாமூர்த்தி:** 23-11-1931. கடலூர். தந்தை வைத்திலிங்கம். 57இல் அண்ணாமலை எம்.ஏ. தமிழ், 66இல் இளைஞர் நலப்பயிற்சி 58-59, 61-66 திருச்சி வளவர் கல்லூரி பயிற்றாசிரியர், 59-61 கல்லுப்பட்டி காந்தி நிகேதன் துணை முதல்வர், 66-71 மதுரை சரசுவதி நாராயணன் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர்-துணை முதல்வர். 71 முதல் மதுரைப் பல்கலைக் கழக இளைஞர் நல நெறியாளர்.

நூல்கள்: தமிழ் திருமணம், கவிஞர் ஷேக்ஸ்பியர், தமிழ்க் கவியுலகில் மறுமலர்ச்சி, விண்ணும் மண்ணும் பாரதி தமிழ், கவிதைகள் ஐம்பது, சிறுகதை: அருள் நம்பி, பரிசு, மர்ம அறை, வீரத் தமிழச்சி; நாடகம்: வீரபாண்டிய கட்டபொம்மன், சர்வோதய சமுதாயம், காந்தீயக் கவிதை. 200க்கும் மேலான அரிய கட்டுரைகள்.

மொழி பெயர்ப்பதில் முனைப்பானவர். 50 கருத்தரங்கு கள்; காந்தியம், தேசிய ஒருமைப்பாடு, முதியோர் கல்வி போன்றன பற்றியெல்லாம் 100க்கும் மேலான பயிற்சி வகுப்பு கள், கூட்டங்கள் நடத்தியவர். விடுதலைக்கு முன்னைய விடுதலை காந்திய பாடல்களையும், கிராமபோன் இசைத் தட்டுகளையும் தேடித் தொகுத்தவர். இவர் உறுப்பினராக இராத நிறுவனங்களே இல்லை; சமய, சமுதாய இலக்கிய நிலையங்களிலெல்லாம் தொடர்பினர். மாநாடுகள் நடத்து வதில் மன்னர்.

கதர்தான் அணிவது காந்தீயமே பணிவது; கிராமீயமே புரிவது தொண்டே துணிவது; மாணவர் நலமே மூச்சு, செயற்றிறமேகாட்சி. இத்தகு பணிச் செல்வரின் **முகவரி:** தமிழகம், வெள்ளைப் பிள்ளையார் கோவில் தெரு, சோம சுந்தரம் காலனி, மதுரை-16.

## 106. பண்பாட்டுத் தமிழ்

'பண்புடையார் பட்டுண்டுலகு' என்றார் வள்ளுவர். 'பண்பெனப் படுவது பாட்றிந்து ஒழுகுதல்' என்றது கலித் தொகை. 'தமிழன் என்றோர் இனமுண்டு, தனியே அவர்க் கொரு குணமுண்டு' என்றார் நாமக்கல்லார். தாம் இன்புறு வது உலகின்புறக் கண்டும், யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் எனக் கொண்டும், இன்னா செய்தாரை ஒறுத்தல், இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்...; 'உலகம்' என நக்கீரர் கம்பர் சேக்கிழார் எல்லாம் வையகப் பரிவு கொள் வதும், இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டே, ஓரறிவுயிர்க்கு இன்னா செய்யாது தேரின் மணி நா கட்டிய ஓட்பமும், வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடியதும், கைவீசி நடக்கவும் பயந்த பாங்கும், பகைவனுக்கருள்வாய் நன்னெஞ்சே, நட்டார் கொடுப்பின் நஞ்சும் உண்ணும் நனிநாகரிகம் எல்லாம் நம் தனிப்பண்பு பேசும்.

Culture = பண்பாடு எனக் காட்டியவர் திரு.வி.க. அண்டை அயலாரை அறிய, அவர் பண்பாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும். பண்பாடும் சமயமும் சார்புடையன; ஒன்று மற்றொன்றின் விளைவு. தனிமனிதன், கூட்டம் குழு, சமூகம் என்ற மும்மை நிலையது. கட்டுறுதி, பகுத்தற்குரியது, பன்மை ஒருமை சமன்பாடு மூன்றும் பண்பாடு செழித்தற்குரிய பாங்கு கள்; இத்தகையதே தமிழர் பண்பாடு.

உலகம் **புற** நாகரிகத்தில் பொன்றும் போது, தமிழகம் **அக** நாகரிகத்தில் ஒன்றும் ஒண்மை உணரவேணும். செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் வளமை தமிழரின் தலைப் பண்பாம். பண்புகளின் பெட்டகமாக தமிழிலக்கியங்கள் எல்லாம் திகழ்கின்றன. டாக்டர் ராசமாணிக்கனார், தேவநேயப்பாவாணர், கே. கே. பிள்ளை, வி. டி. செல்வம் அ. தட்சணாமூர்த்தி, ஆ. இராமகிருஷ்ணன், வித்தியானந்தன் (தமிழர் சால்பு), சாலினி (பண்பாட்டின் சிகரங்கள்), இராம கிருஷ்ணன் (இந்தியப் பண்பாடும் தமிழரும்), தமிழண்ணல் (பழந்தமிழர் வீரப் பண்பாடு), முத்துகிருட்டிண நாட்டார் (பழந்தமிழர் பண்பு), ஐயன் பெருமாள் கோனார் (பண்டைத் தமிழர் பண்பாடு) போன்றார் நம் பண்பாடு பற்றிப் பன்னூல் கள் படைத்தனர். டி. என். சேஷாசலம் 'கல்சர்-பண்பும் பயனும் அது' குறிப்பிடத்தக்கது.

தொல்காப்பியம், சங்க இலக்கியம், சிலம்பு காட்டும் தமிழர் வாழ்வியல் எனவும் வடித்துத் தந்தனர். நம் பண் பனைத்தும் இப்போது கிராமங்களில்தான்; அதுகூடப் போலிப்புற நாகரிகத் தொடர்பால் பொன்றிவருகின்றது.

எனவே தான் பண்பாடுகளைப் பேணிக் காக்கவும் மீட்கவும் **தமிழரசு** தனியே **பண்பாட்டுத் துறை** தொடங்கியது. உளுந்தூர் பேட்டை சண்முகம், மீ. ப சோமு, கு. ராஜவேலு புத்தனேரி போன்றாரை இயக்குநர்களாக அமைத்தது, அடுத்து இவற்றை யெல்லாம் ஒருங்கிணைக்க தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைக்கெனத் தமிழ் பயின்ற அவ்வை நடராசரைச் **செயலராக** நியமித்துளது. இத்துறை 85 திசம்பர் முதல் திங்கள்தோறும் **'பண்பாட்டுப் பலகணி'** என கலைஞர்களைக் கொண்டு விளக்கம் தந்து வருகிறது.

இந்திய அரசும் பண்பாட்டு மையங்களை ஏற்படுத்தி இந்திய வட்டார பண்பாடுகளைப் பேணத் தலைப்பட்டது. அந்த வகையில் தென்னகப் பண்பாட்டு மையம் 31-1-86இல் திருவையாற்றில் தலைமை அமைச்சர் ராஜீவ் காந்தியால் தொடங்கி வைக்கப்பெற்றது. தென்னகத் தனிக் கலைகளை - பண்பாட்டினைப் போற்றும் வகையில் விழாக்கள் எடுத்து வரு கின்றன. ஆளுநர் தலைவர்; இயக்குநர் ஷீலாபிரியா.

மயிலை சீனி வேங்கடசாமி 'தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்' செ. வைத்திலிங்கம் 'அழகுக் கலைகள்', வி. கந்தசாமி 'தமிழ் நாட்டின் வரலாறுகளும் பண்பாட்டுச் சின்னங்களும்;

ஆர். எஸ். ருக்மணி' 'இந்தியச் சிற்பங்கள்', அ. சிதம்பர நாதரின் மனைவி பெரியநாயகி 'கலை உள்ளம்', டி.கே. ராஜ லட்சுமி, டி. ஆர். அருணாசலம் பரதகலைச் சித்திரம்', பத்மா சுப்பிரமணியம்' பரத நிருத்யம், வ. பெருமாள் Glimpses of Tamil culture.

தமிழகக் கோயில்கள் 33630ம் நமது கலை-பண்பாட்டுக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேரா. செ. வைத்திலிங்கம் **'தமிழ்ப் பண்பாட்டு வரலாறு'** 7 தொகுதிகளாக எழுதி வருகிறார். பூம்புகாரிலும் பழனியி லும் பண்பாட்டுக் **கல்லூரிகள்** உள. பல்கலைக் கழகங்களும் பண்பாட்டுப் படிப்பு ஏற்படுத்தியுள. **உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்** Cultural Heritage of the Tamils, தமிழர் திருமணம், உணவு, உடை, அணிகலன் என்ற வரிசையில் வளமார் நூல்கள் வெளிக்கொணர்ந்துளது. இப்படித் தமிழ்ப் பண்பு தனிப் பண்பாகத் திகழ்கிறது.

## 107. அரசின் அருந்தமிழ்ப் பணி

கழக ஆட்சி கண்மலர்ந்த பின்னர்தான், 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' எனும் நிலை ஏற்பட்டது! தமிழ்நாடு, தமிழ் நாடு அரசு, தலைமைச் செயலகம், வாய்மையே வெல்லும், போக்குவரத்து என நற்றமிழ் நடமாடியது. 2. பேருந்துகளில் வள்ளுவர் படமும் அவரது வாய்மொழியும் இடம் பெற்றன; 3. வரலாற்றுச் சின்னங்களே அவ்வளவாக இல்லாத தமிழக மெங்கணும் பூம்புகாரில் சிலப்பதிகாரக் கலைக்கூடம், கொல்லி மலையில் வல்வில் ஓரி சிலை, பாஞ்சாலங்குறிச்சியில் கட்ட பொம்மன் கோட்டை, சென்னையில் வள்ளுவர் கோட்டம், கடற்கரையில் அண்ணா சதுக்கம், கிண்டியில் ராஜாஜி அறிவாலயம், காமராசர் நினைவாலயம், தில்லையாடியில் வள்ளியம்மை நினைவுச்சின்னம் எழும்பின. 4. தமிழ்ச் சான்றோர் இல்லங்கள் நினைவுச் சின்னமாக்கல் திட்டத்தில் பாரதியாரின் எட்டையபுர இல்லம், ஈரோட்டில் பெரியார் இருந்த இல்லம், விருதுநகரில் கருமவீரர் வதிந்த வீடு, காஞ்சியில் அண்ணா உறைந்த வீடும் வாங்கப்பெற்று நினைவு நிலையங்களாயின. 5. இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டினை காலம் வியக்க சென்னையில் மக்கள் விழாவாக நடாத்தியமை. 6. மெரினா கடற்கரை நெடுக புலவர்கட்குச் சிலை எடுத்தது. 7. தெ. பொ. மீ, மு. வ. போன்ற தமிழறிஞர்களைத் துணை வேந்தர்களாக்கியது. 8. தமிழறிந்த கா. கோவிந்தன், ம. பொ. சி. போல்வாரைச் சட்ட, மேலவைத் துணைத்

தலைவர்கள் ஆக்கியது. 9. பூம்புகாரில் ஆண்டுதோறும் சித்திரை நிலவு இந்திரவிழா, கொல்லிமலையில் வல்வில் ஓரி விழாக் கொண்டாடியது. 10. வயதான வசதியற்ற தமிழறிஞர் கலைஞர்கட்கு மாத ஊதியம் தந்தது.

1. தமிழாசிரியர்களும் தலைமை ஆசிரியர்களாகும் தகுதி அளித்தது. 2. எழுத்துச் சீர்திருத்தம் நடைமுறைக்குக் கொணரப்பட்டது. 3. முதுமையான தமிழ்ச்சான்றோர்க்கு திங்கள் தோறும் ரூ. 250 உதவித்தொகை நல்கியது, 4. தமிழ்ச் சுவைஞர் அறிஞர்க்குச் சிறப்பு விருது அளித்தல். 5. அறிஞர் கவிஞர்கட்கு அரசு சார்பில் விழா எடுத்தல் (பெரியார், அண்ணா, பாரதி, பாவேந்தர், வ. உ. சி, ராஜாஜி, பசும் பொன் முத்துராமலிங்கத் தேவர், காயிதேமில்லத்). 6. குமரி முனையில் விவேகாநந்தர் பாறையில் வள்ளுவர் சிலை எடுப்பது, கன்னியாகுமரியில் வள்ளுவர் நினைவாலயம் எழுப்பல். 7. தமிழ்க்கலை-நாகரிகம் காணும்வகையில் தமிழ்ப் பண்பாட்டு மையம் தோற்றியமை. 8. திருக்குறள் நெறி பரப்பு மையம் தோற்றியமை. 9. ஆண்டுதோறும் திருக்குறள் நெறி பரப்பு மாநாடு நடத்தித் திருக்குறள் ஆர்வலர்களைப் போற்றிப் பொன்னாடை பதக்கம் அணிவித்துச் சிறப்பித்தல். 10. 5ஆவது உலகத்தமிழ் மாநாட்டினைச் சங்கம் தோன்றிய மதுரையில் கோலாகலமாகக் கொண்டாடியமை. 11. ஐந்திறம் நூல் வெளிக் கொணர்ந்து முதுபெரும் அறிஞர் பதின்மர்க்குப் பொற்கிழி வழங்கிப் போற்றியமை. 12. தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகம் தோற்றியமை 13. அதற்கும் அடுத்தடுத்து இரு தமிழறிஞர்களையே துணைவேந்தர்களாக்கிய தமிழுணர்வு, 14. கோடைக்கானலில் மகளிர்க்கெனத் தனியே ஒரு பல்கலைக் கழகம் உருவாக்கியது. 15. உலகத் தமிழ்ச்சங்கம் மதுரையில் தோற்றி அறுபதாண்டுகள் அருந்தமிழ்ப் பணி ஆற்றிய வாரியாருக்குத் தங்கத்தாமரை சூடியமை. 16. இந்தி ஆதிக்கத்தை எதிர்த்து இன்றமிழ் நாட்டினை விடுவிக்க அரசே பொறுப்பேற்றது; போராடவும் முற்பட்டது. 17. அலுவலகங் கள் அனைத்திலும் அனைத்து நடவடிக்கைகளும் அருந்தமிழி லேயே நடக்க வேண்டும்; அலுவலர்கள் தமிழிலேயே கையொப்பமிடவேண்டும் எனச் சுற்றறிக்கை விட்டது. 18. மேலவையில் தமிழறிஞர் தலைமை ஏற்றது தமிழே தலைமை யேற்றது போன்றது (ம. பொ. சி, புலமைப்பித்தன்). 19. அரசவைக் கவிஞர்களாக கண்ணதாசனும், புலமைப்பித்தனும் அமர்ந்தமை. 20. அரசவைக் கலைஞர்களாக சீர்காழி

கோவிந்தராசன், மதுரை சோமு, வாரியார், சுவர்ணமுகி, நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன், நினைவுக்கலை ஏந்தல் இராமையாப் பிள்ளை போன்றாரை அமர்த்திய அருமை. 21. நாகர்கோவிலில் அதங் கோட்டாசான், அமரர் ஜீவா சிலைகள் திறப்பு, செய்கு தம்பிப் பாவலர்க்கு நினைவு மண்டபமிடுதல். 22.பெரியார், ராஜாஜி, நாவலர் பாரதியார், ரசிகமணி டி. கே. சி, திரு. வி. க., தமிழவேள் உமாமகேசுவர னார், நாவலர் நாட்டார், பண்டிதமணி, வ. வே. சு. அய்யர், சத்திய மூர்த்தி போன்றாரின் நூற்றாண்டு விழாக்களை அரசே கொண்டாடியது.

பாவேந்தர் பாரதிதாசன் விழாவில் ஒரு கவிஞர்க்கு ரூ. 10,000 விருது தருதல், நூலாசிரியர்கட்கு ரூ 1,000 அளித்தல்; திரு வி க. விழாவில் ரூ. 10,000 விருது தமிழறிஞர்கட்கு வழங்கல் ஆண்டுதோறும் நடத்துகிறது. அமைச்சர்களும் செயல் முறையில் செந்தமிழைப் போற்ற முனைந்துளர். வரவு செலவுத் திட்டம், நிதிநிலை அறிக்கை போல்வன வண்டமிழி லேயே வழங்குகின்றனர். தமிழுடை அணிந்தும் அழகு தமிழில் பேசியும் அமைகின்றனர். அரசு உயர் அலுவலர்கள் (IAS, IPS) அருந்தமிழ் ஆற்றுகின்றனர். சுருங்கக் கூறின் கோட்டையிலே தமிழ் கொலுவிருக்கின்றது, நாட்டிலும் நல்ல தமிழ் பொலி கிறது; பொற்காலம் பூக்கிறது!

## 108. வள்ளுவம் வெல்கிறது

பள்ளிகளில் திருக்குறளை ஒவ்வொரு படிவத்திலும் கட் டாயமாக வைத்துப் பரவச் செய்த பெருமைக்குரியோர் கல்வி அமைச்சர்கள் தி.சு. அவிநாசிலிங்கம் செட்டியாரும், சி. சுப்பிர மணியமும். '**திருவள்ளுவர்**' என வரதராசப் பிள்ளையும் **குறள் மலர்** எனத் திருக்குறளார் வி. முனுசாமியும், **குறள்நெறி**யென இலக்குவனாரும் இதழ் வழி குறள் பரப்பினர். வள்ளுவத்தைப் பாமரரும் கேட்டு ரசிக்குமாறு செய்த பெருமை திருக்குறளா ரையே சாரும். சிரிக்கச் சிரிக்கப் பேசி வாழைப்பழத்தில் ஊசியை நுழைப்பது போலே, கேட்போர் உள்ளத்தில் குறளை ஏற்றிய நளினத் தொண்டு இவருக்கே உரித்து. தெளிவுரை வரைந்து வள்ளுவர் அமைச்சு என்றெல்லாம் நூல்கள் தந்தவர் இலக்குவனார்.

கா. அப்பாதுரையார் '**முப்பால் ஒளி**', கள்ளக்குறிச்சி புலவர் செ. வரதராசன் '**குறள் மணம்**', சென்னை-12, தேசி காலனி, தே. கண்ணன் '**வள்ளுவர் வழி**' நடத்துகின்றனர். திருக்குறள்

wisdom ஒலியிழை ரூ. 150/ விலையில் ஜகத் ரட்சகன் ஆங்கிலத் தொகுப்புரையுடன் வீரமணி ராதா இசைக்க 28-7-86 வெளி வந்துளது.

மாம்பாக்கம் **திருக்குறள் பீடம் அழகரடிகள்** (இளவழகனார்) குறட்பணி கணிசமானது. 'பொது மறை' என்ற இதழுடன், திருக்குறள் நிலையமும் திகழ்கிறது. அதனையொட்டி திரு வீழிமிழலைக் கிளை சைவப்புலவர் மா. அமுதலிங்கனார் திருவள்ளுவரின் இலக்கியப் புரட்சி, ஆதிபகவன் யார்? குறள் உரைத் தெளிவு போன்ற சிறுநூல்கள் வெளியிட்டுள்ளார். அழகரடிகள் அதிகார விரிவுரையாக 'திருக்குறள் கடிதங்கள்' வெளியிட்டுள்ளார். முதன்முதல் 1841இல் பதிப்பித்தவர் இராமானுஜ கவிராயர்.

திருக்குறள் தாலாட்டு, கும்மி, காவடிச் சிந்து, இசை யமுதம் (தஞ்சை ராமையாதாஸ்), மதுர கீர்த்தனம் (டி.ஆர். விசுவநாத சாஸ்திரி), இசை மலர் (பு. அ. முத்துகிருஷ்ணன்), இசைப் பாடல்கள் (தொ. ப. வேலாயுதசாமி), நாடகம் (மயிலை சீனி கோவிந்தராசன்) வடிவம் பெற்றது. தமிழ்ச் செல்வம்-கி.ஆ.பெ.வி. குறிப்பிடத்தக்கது.

**குறள் வெண்பா :** வடமலை வெண்பா (ஏகசந்த கிராக்கி), சிவ் சிவ வெண்பா (சென்ன மல்லையர்), முருகேசர் முதுநெறி வெண்பா (ஈசானிய மடம் ராமலிங்க சுவாமிகள்), இரங்கேச வெண்பா (பிறைசை சாந்தக் கவிராயர்), சோமேசர் முது மொழி வெண்பா (கமலை வெள்ளியம்பலவாண முனிவர்), தினகர வெண்பா, திருத்தொடையல் வெண்பா (புழலை திருநாவுக்கரசு முதலியார்), திருக்குறட் குமரேச வெண்பா (ஜெகவீர பாண்டியனார்). ஒரு பாதியில் குறளையும் மறு பாதியில் அதனை விளக்கும் அருங்கதையும் கொண்டவை.

**குறட் கதைகள் :** க. இனியன், சு.அ. இராமசாமிப் புலவர், சேது சுப்பிரமணியன், சுந்தர சுப்பிரமணிய ஐயர், கே. பழநி-யாண்டி பிள்ளை, குறளேருழவர், இரா. இளங்குமரன், பூவண்ணன், தங்கமணி போன்றார் சிறுவர்கள் விளங்கிக் கொள்ள, குறளைக் கதையாகக் கூறிப் புரிய வைத்தனர்.

**குறள் அகராதி ;** ந.சி. கந்தையா பிள்ளை, மார்க்க சகாயம் செட்டியார்; சொல்லடைவு (சாமி வேலாயுதம்), பொரு ளடைவு (மு. கோவிந்தசாமி).

**பெயர்ப்பு :** உலகில் பைபிள், அடுத்தபடி கீதை, அதையடுத்து அதிகமாகப் பெயர்க்கப்பட்டது குறளே- 82 மொழி மொழிகளில். பைபிள் 500 மொழிகளிலும் குர்ஆன் 200 மொழிகளிலும் பெயர்க்கப் பட்டுள. அவை சமயம் சார்ந்தவை. குறளோ உலக இலக்கிய - நீதி இலக்கணம்.

**குறட் சட்டம் :** வள்ளுவர் வகுத்த நம் நாட்டுச் சட்டங்கள் (ராசிபுரம் அரங்கசாமி), வள்ளுவர் வகுத்த அரசியல் (தி. ப. சுப்பிரமணிய தாஸ்), திருக்குறளும் சமதர்மமும் (அ. சக்கரவர்த்தி நயினார்), வள்ளுவர் வகுத்த அரசியல், அமைச்சர் யார்? எல்லோரும் இந்நாட்டு அரசர் (சி. இலக்குவனார்), திருவள்ளுவர் அரசு (கு. மதுரை முதலியார்), வள்ளுவர் கண்ட அரசியல் (பாலூர் கண்ணப்ப முதலியார்,) திருவள்ளுவர் அரசியற் கோட்பாடு (கா. அப்பாதுரை), குறள் கூறும் சட்ட நெறி (மா. சண்முக சுப்பிரமணியம்).

**ஒப்பாய்வு :** 'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம்'— மு. தெய்வ நாயகம். ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களையும் கிறித்துவத்தையும் ஒப்பிட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. இந்நூல் எதிர்ப்புக்கும் கண்டனத்துக்கும் உரியதாயிற்று. தருமையாதீனம் இதுபற்றி ஆய்வரங்கம் நடாத்திற்று; ஆசிரியரையும் அழைத்து பதிலிறுக்க வைத்தது. இதுபோல் தம்மபதம், கீதை போன்றவற்றுடன் ஒப்பாய்ந்தும் நூல்கள் போந்துள. இதனால் குறளின் உயர்வும் ஒட்பமும் உலகறியப் படுகிறது.

**புத்துரைகள் :** பழைய பத்துரைகளோடு இப்போது புத்துரைகள் பல்கியுள. உரைவளம் (தண்டபாணி தேசிகர்- தருமை), உரைக் கொத்து (பட்டுசாமி ஓதுவார்-திருப்பனந்தாள்)-பல்லுரைகளின் ஒப்பீடு. கோ. வடிவேலு செட்டியார், திரு.வி.க., நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை, தேவநேயப் பாவாணர், புலவர் குழந்தை, பாவேந்தர், அப்பாதுரையார், கூகாடு சபாபதி முதலியார், சாமி சிதம்பரனார், வெ. கண்ணையன், தி.பொ.பழநியப்ப பிள்ளை, சேலை எஸ். சகாதேவ முதலியார், ரா. கந்தசாமி கவிராயர், கே. கிருஷ்ணமாச்சாரியார், வை.மு.கோ, ச. வெள்ளச்சாமி நாடார், ஜீ. வரதராஜன், மயிலை சிவமுத்து, நாகை தண்டபாணி பிள்ளை, காயாமொழி குமரகுருபரர், சு.அ. ராமசாமிப் புலவர்.

மு.வ, ந. சி. கந்தையா, கா. சு. பிள்ளை, கே. வீரராகவன் பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி (பாலர் உரை), எம். இ. வீரபாகு, பால்வண்ணர், சி. இலக்குவனார், மு. கோவிந்தசாமி,

அரசுமணி, சங்கரராசு, ஞா. மாணிக்க வாசகம், கோனார் போன்றார் எளிய நய சிறப்புரைகள் தீட்டியுளர்.

புத்துரைப் போட்டியாக 77இல் **கண்ணதாசன்** காமத்துப் பாலுக்குக் கவிதையிலேயே உரை வரைந்துள்ளார். சின்ன தாராபுரம் இறையரசன் முற்றிலும் பகுத்தறிவுக் கண்ணோட்டத்தில் பாடலுக்கு விளக்கத்தைப் பாடலிலேயே **'குறளும் பொருளும்'** என அற்புதமாகப் படைத்துள்ளார். -இரண்டடிக் குறளுக்கு நான்கடிக் கவிதையில்'உரைக்கவிதை' நூல்! குறள் வரலாற்றில் ஒரு தனியிடம் வகிக்கிறது.

சங்கராச்சாரியார், மறையாத தமிழ் மறையாம் நம்தலை நூலினை 'தீக்குறளைச் சென்றோதோம்' தீக்குறள் என ஒரு முறை இழிவுபடுத்திச் சொன்னார். இதனை எதிர்த்துச் சாடியது பகுத்தறிவு இயக்கம். சொல்லப் போனால் குறளை மக்கள் மன்றத்திற்குக் கொண்டுவந்த பெருமை தந்தை பெரியார் அவர்களையே சாரும்!

1935 சென்னையில் திருக்குறள் **மாநாடு,** 49இல் திருவள்ளுவர்-குறள் மாநாடு அ. சக்கரவர்த்தி நாயனார் கூட்டினார். இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டி சென்னை அண்ணாமலை மதுரைப் பல்கலைக் கழகங்களில் **திருக்குறள் துறை** தொடங்கப் பெற்று, அரிய நூல்கள் வெளியாயின.

**கலைஞரின் குறட் கொடை :** 1. பொதுப்பணி-போக்கு வரவுத்துறை அமைச்சராக இருந்தபோது பேருந்துகளிலெல்லாம் வள்ளுவர் படத்தைப் பார்க்கவும் குறளைப் படித்துப் பயனுறவும் செய்தமை. 2. குறளோவியம் தீட்டிக் கோடானுகோடிபேர் குறள் துய்த்து மகிழச் செய்தார். புலவர்களும் பேராசிரியர்களும் புகட்ட மாட்டாத வகையில் மக்கள் மனதில் குறளையே ஓவியமாகத் தீட்டிவிட்டார். 3. ஈராயிரம் ஆண்டுகளாக நாம் செய்யாது மறந்த நன்றிக்கடன் தீர்க்கு மாற்றான் வள்ளுவர் கோட்டம் எடுத்தார். திருவாரூர் தேர் வடிவில் முப்பால்போல 3 வாயில்கள், அதிகார நினைவாக 133 படிகள். தேரின் உள்ளே திருவள்ளுவர் சிலை; முன்னே தூண்களே இல்லாப் பெருமண்டபம், பழமொழிகளில் குறள் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுக்கள். இது உலக வரலாறு காணாத ஒரு பெருஞ்சாதனை! புலவர்க்கென அமைந்த கலைக் கோயில் உலகில் வேறெங்கும் காண இயலாது. காலா காலத்துக்குக் கட்டியங்கூறும் கோட்டம்!

**திருக்குறள் நெறிபரப்பு மையம்** : எம். ஜி. ஆர். அரசு குறள் நெறி பரப்ப மையம் ஒன்று தோற்றி, ஐம்பதாண்டுகளாக குறட் தொண்டு செய்த திருக்குறளார் வி. முனுசாமி அவர் களை அதன் இயக்குநராகவும் அமர்த்தியது. மாவட்டங்கள் தோறும் சிறப்பு மாநாடுகள் நடாத்தி குறட்தொண்டு செய் தோர்க்குப் பட்டம் தந்து போற்றுகிறது. அரசு திருக்குறளை **தேசிய நூலாக்க** முயன்றுவருகிறது; விவேகானந்தர் பாறையில் வள்ளுவருக்குச் சிலை நிறுவுகிறது; 45 அடி உயர செப்புமேனி, குறட் காட்சியும் கருத்தும். $4\frac{1}{2}$ கோடி செலவில்.

திருக்குறளிடம் தீராக்காதல் கொண்டு எழுதியும் பேசியும் வருவோர் ஊர் ஊருக்கு உளர். அவர்கள் பெயருடன் 'திருக்குறள்' என இணைத்தே மக்கள் அவர்களை அழைத்து வருகின்றனர். திருக்குறள் தண்டபாணி (பட்டுக்கோட்டை), திருக்குறள் தனுஷ்கோடி (ராசிபுரம்), திருக்குறள் அண்ணா மலை (திண்டுக்கல்) போன்றோர் சான்றாவர், பண்டித மீ. கந்தசாமிப்புலவர் 'குறள் வேந்தர்', க. த. திருநாவுக்கரசு 'திருக்குறள்மணி' என்றேத்தப் பெற்றனர்.

குறளை மேற்கோள் காட்டாதவர் எவரும் இல்லை. எல்லோரும் குறளை எடுத்தாளவே செய்கின்றனர். பேசினால் பெருமை, இன்றேல் சிறுமை எனும் அருமை எய்தி விட்டது குறள். பல்லோர் குறள் பற்றிப் பேசுகின்றனர்—எழுது கின்றனர். இராமநாதபுர மாவட்ட நவபாஷாணம் தேவி பட்டினத்தில் 1892 செப்டம்பரில் பிறந்த 93 வயது தொண்டுக் கிழவர் ஆர். கேசவ ஐயங்கார் (Advocate-General of India பராசரன் தந்தை) 'வள்ளுவர் உள்ளம்' என நூல் யாத்துளார்!

திருக்குறளில் பாடபேதங்கள் மலிந்துள; ஒவ்வொருவரும் வெவ்வேறு பாடங்களை மேற்கொள்கின்றனர். தமிழ் மறையென நாம் கொணடேத்தும் குறளுக்குச் சரியான பாட பேதம் வரையறுத்து ஒரே நிறையான பதிப்புக் கொணர்தல் வேண்டும். இது ஏற்ற தருணம்; குறள் வல்லார் பலர் கோலோச்சும் அமயம். இவ்வமையத்தை நழுவவிடாது குறள் திறனிகள் குழு அமைத்து உரிய சரியான பாடங்களை அறுதி யிட்டு விடவேண்டும். இனி இதற்குமேல் அட்டியின்றி அதனையே அனைவரும் கொண்டேத்துமாறு இலக்கியச் சட்டம் இயற்றல் வேண்டும்.

இசுலாமிய வேதம் குர்ஆன், வழிவழி வாய்மொழியாகவே வழங்கி வந்தமையின், பிழைகள் மலிந்து பாடபேதம்

மிகுந்தது. அபுபக்கர் காலத்தில் பாடபேதம் வேறுபட்டு விளங்கியது. 3ஆவது காலிப் உமர் ஹத்தாப் பல மார்க்கத்தவர்களை அழைத்து அறிந்து சிறந்ததை நிர்ணயம் செய்தார்; எழுத்துக்களை எண்ணி வரையறுத்துவிட்டார். மேற்கொண்டு மாற்றங்கள் யாராவது செய்தால் ‘சிரச் சேதம்’ எனச் சட்டமும் போட்டுவிட்டார்.

அதுபோல் வான்புகழ் கொண்ட வள்ளுவத்துக்கும் வளமான பாடபேதம் வரையறுத்து வகையான பதிப்பு வர ஏற்பாடு செய்ய வேண்டும். இச்சமயத்தை விட்டு விடின், இனி இயலாது.

மணக்குடவரே குறளுக்கு முதன்முதல் பிரித்துப் பகுப்பாய்வு செய்து தந்தார். அவரை அடியொற்றியே பின் வந்தோர் உரைவகுத்தனர். அவர் தோளில் இருந்தும் நின்றும் ஏற்றமும் தோற்றமும் பெற்றனர் எனலாம். கீ. வீரராகவன் வரைந்த சிற்றுரை செறிவும் சிறப்பும் வாய்ந்ததாகவுளது. அண்மை ஆராய்ச்சிகளுள் **சாமி தியாகராசன்** அவர்களின் டாக்டர் பட்ட ‘இருபதாம் நூற்றாண்டுத் திருக்குறள் உரைகள்—ஒரு திறனியல் பதிப்பீடு (அறத்துப்பால் மட்டும்)’ திட்பநுட்பம் வாய்ந்தது. இவரே பிற இரு அதிகாரங்கட்கும் திறன் செய்யின் தீர்க்கமாகும்.

**குறளியம்—குறளாயம்** : ஈரோடு சான்றோர் வேலா இராசமாணிக்கனார். குறள் நெறி பரப்ப முன்னம் குறளியம் திங்களிதழ் தொடங்கினார். 15-5-84இல் குறளாய குமுகாய மாம் குறளாயம் தொடங்கினார். வள்ளுவப் பெருமானே இதன் ஒரே தலைவர். அமைப்பாளர் வேலா அவர்கள். தலைமைக் குழுச் செயலர்கள் பேரா. உ. பாலசுப்பிரமணியம், பட்டுக்கோட்டை மீ. தங்கவேலனார். தலைமையகம் ஈரோட்டில்.

அந்தணர் (50 அகவைக்கு மேல்) சான்றோர் (30 அகவைக்கு மேல்), ஆர்வலர் (15 அகவைக்கு மேல்), குறளாயச் சான்றோர் 133வர். குறளாய இயக்குநர்கள இவர்களே. 10 தகுதிகள் கொண்டவராதல் வேண்டும். இவர்கள் தம்முள் அகவை அறிவு குறட் புலமை கொண்ட மூவரை அந்தணர்களாகத் தெரிவு செய்வர்; இவர்களே முறை செய்மன்றினர்—குறளாயத் தலைவர்கள். ஏனைய 130இல் பொதுச் செயலர், துணைச் செயலர், பொருளர் என தெரிவு செய்யப் பெறுவர்.

சான்றோரும் அந்தணர்களுமே தலைமைக் குழுவினர் அந்தணர் மஞ்சள் ஆடை வெண் துண்டு, சான்றோர் வெள்ளுடை மஞ்சள் துண்டு, ஆர்வலர் மஞ்சள் நிறக் கைத்துணி பூண்டிருத்தல் வேண்டும்.

குறிக்கோள் : 1. குறள் தரும் குறளியத்தைக் குறிக்கோளாகக் கொண்ட 'எல்லார்க்கும் எல்லாம்' எனும் ஆக்க நல அறநெறிப்பட்ட பொதுமைச் சமுதாயம் அமைத்தல். 2. உழைப்பை உயிர்ப்பாக ஆக்கிப் பொது நலனுக்கே வாழும் சான்றோரை உருவாக்குதல் 3. சமனியம் விடுதலை சமுதாய இன்பம்-எல்லோரும் பெறச் செய்தல். 4. வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் குறளிய வழி மாற்றம் முன்னேற்றம் விளைவித்துக் குமுகாய உயர்வு காணல். குறளியம்=குறள் கூறும் அனைத்துக் கருத்துக்களின் ஒட்டுமொத்தக் கூட்டு. குறளாயம்=குறளியத்தைக் கொண்டியங்கும் சமுதாயம். குறளியக் கொள்கைகளை முற்றும் ஒப்பி, அக-புற ஒழுகலாறுகளில் தலை நின்று வாழ்வாங்கு வாழ்வோரே குறளியல் அந்தணர் சான்றோர்; ஏனையோர் ஆர்வலர் **குறள் நம் மறை என ஒப்பி** சூளுரைத்துக் குறளை ஓதி முன்னிலைப் படுத்துவோரே குறளாயத்தில் இணையலாம். இதுவே முதல் அடிப்படைத் தகுதி. **முகவரி** 3, மண்டபத்தெரு, ஈரோடு-638 001. (7478)

இத்தனைக் காலமும் நம் உயிரனைய திருக்குறளை வெறும் மேற்கோள் நூலாக, பெருமை பேசும் பாராட்டு நூலாகவும் பாவித்திருக்கிறோமே தவிர, பின்பற்று நூலாக வாழ்வியல் நூலாக அதன்படி வாழ்கின்றோமில்லை. இனியேனும் வாழ் வாங்கு வாழ்தற்குரிய வழிகாட்டு நூலாகக் (Code of Conduct & Way of life) கொண்டு வையத்து வாழ்வாங்கு வாழ்வோமாக! 'வள்ளுவன் குறள் வையகமெல்லாம் வாரி இறையடா தமிழா! நீ வாரி இறையடா தமிழா!'

## 109. இளங்கோவடிகள் - சிலம்பு

இளங்கோவின் புகழ்பாடி, சிலம்பின் சிறப்பு பரப்பியோரில் இரு கண்களாகக் கருதப்பட வேண்டியவர்கள் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளையும் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. அவர்களும். இந்த நூற்றாண்டின் முதற்காற் கூறிலேயே சிலப்பதிகார விளக்கம் தந்து, நயம் நவின்று வகுப்புகள் நடாத்தியவர். அதனையே தன் மூச்சாகக் கொண்டவர். சிலப்பதிகார விளக்கம் 26இல் வெளியிட்டவர்.

'சிலம்புச் செல்வர்' என்றே பெயர் பெற்றவர்; பட்டி தொட்டியெங்கும் கண்ணகிக் காப்பியத்தைப் பரப்பியவர்; அறிமுகம் செய்து அறியச் செய்தவர். 52இல் பூம்புகாரில் சிலப்பதிகார விழா எடுத்தார். சென்னையில் சிலப்பதிகார மாநாடு நடத்தினார். 3-2-59இல் பூம்புகாரில் உட்கார்ந்த வாறு சிமெண்டில் கண்ணகி சிலை திறக்கப்பட்டது சட்ட மன்ற உறுப்பினர் முத்தையா தலைமையில் அமைச்சர் எம். பக்தவத்சலம் திறந்து வைத்தார். பூம்புகார் 8 காவத நீளக் கடற்கரைப் பாதை அமைக்க 8 லட்சம் ரூபாய் நடுவண் அரசிடம் நாடியவர். தம் தமிழரசுக் கட்சி (14-1-47) மாநாடு களிலெல்லாம் சிலம்பின் புகழ் பரவினார். முதலில் தொட்டு நூல் பல யாத்தவர். சிலம்பில் ஆரியக் கற்பனைகள் (51), சிலப்பதிகார ஆராய்ச்சி பச்சையப்பன் கல்லூரி வெ. சுப்பிர மணிய ஆசாரியார் எழுதியபோது, 'ஆசாரியார் அலறுகிறார்' எனச் செங்கோலில் சாடியவர். விடுதலையில் அவர் எழுதி னார். ஈ.வெ.ரா, பெரியாரும் 'சிலப்பதிகாரம் ஓர் ஆரியக் கலப்பதிகாரம்' என்றார். இதற்கெல்லாம் 52லேயே மறுப்பு எழுதியவர்.

சு. செல்லப்பன் அவர்கள் ஐம்பதுகளில் இளங்கோவின் காப்பியத் திறம்பேசி 'சிலம்பொலி' என்ற பெயரும் பெற்றார். தெ. பொ. மீ, அ. சிதம்பரநாதன் செட்டியார் இருவருக்கும் இதய நூல் சிலம்பே. மாணவர்கட்குப் பல்லாண்டுகள் பாடம் நடாத்தி-நூல்கள் படைத்து சிலம்பின் சீர்பரப்பினர். குடந்தை ப. சுந்தரேசனார் இசையோடு பாடிச் சிலம்புத் தொடர் பொழிவுகள் தமிழகமெங்கணும்-பள்ளி கல்லூரிகளில் ஆற்றி அருந்தொண்டு புரிந்தார்.

பூம்புகார் மேலையூர் தியாகராசன் தம் சொந்தப் பொறுப்பில் பத்தினி விழா எடுக்கிறார்; பத்தினிக்கோட்ட அறநிலையக் காப்பர் தாசில் பண்ணை ராசசேகரன் கண்ணகி திருநாள் நடாத்துகிறார். திருச்செங்கோட்டில் டி.எம். காளி யண்ணன், சிலம்பொலி செல்லப்பன் போல்வார் கண்ணகி விழா மூன்று நாள் ஆண்டுதோறும் எடுக்கின்றனர். பத்தினித் தெய்வ வழிபாடும் சிலம்பு பூசையும் செய்து கவியரங்கம், பட்டிமன்றம், வரலாற்றுக் கருத்தரங்கம் எனப் பெருவிழா.

கலைஞர் கருணாநிதியின் பங்கு கணிசமானது. சிலப்பதி காரத்தை ஆங்கிலத்தில் படைத்தார்; தமிழ் கொஞ்சும் பூம்புகார் படம் எடுத்தார். பூம்புகாரில் சிலப்பதிகாரக்

கலைக் கூடம் அமைத்து மீண்டும் கண்ணகி காலத்திற்கே நம்மைக் கொண்டு போனார். ஆண்டுதோறும் சித்திரைப் பௌர்ணமி திருவிழா-இந்திர விழா எடுத்தார்.

சிலம்புக் காவியத்தைச் சிலைவடிவில் வடித்து வழங்கிட, காலத்தால் அழிவுற்ற பழைய புகார் புத்துருப் பெறவேணும் எனக் கனவு கண்டார் கலைஞர். பொதுப்பணி அமைச்சராய் இருந்தபோது 25-5-68இல் கால்கோள் செய்தார். அக்டோபர் 70இல் தான் பணி தொடங்கியது. 17-4-73இல் நாவலர் தலைமையில் முதல்வர் கலைஞர் திறந்து வைத்தார்.

கலைக்கூடம்: தோரணவாயில் 22-5 அடி உயரம். சுருளி மலை மங்கல தேவி கோயில் வாயில் அமைப்புடையது. எழு நிலை மாடம்: முதன்நிலை 12 அடி உயரம், பிற ஆறும் 5அடி உயரம். கலசப்பகுதி 8அடி உயரம்; மொத்தம் 50 அடி. உள்ளே சிலப்பதிகார வரிகளுடன் கூடிய 49 சுவர்ச் சிற்பங்கள்; திறந்த வெளியில் சிலம்பு வடிவில் குளம். அதில் 9 அடி உயர 2½ டன் எடைய மாதவி சிலை ஒரே கல்லில்: அணிகலன்கள் எல்லாம் அந்த அழகுச் சிலையில். 11 ஆடல் வகை காட்டும் சிற்பங்கள் உள. கலைக்கூடம் காவியச் சிலம்பின் கருத்துக் களை அடியொற்றி அமைக்கப்பட்டுளது.

பேரியாற்றங்கரையில் கண்ணகி கோவிலைக் கண்டு பிடித்தார் கரந்தைப் புலவர் கல்லூரி சி. கோவிந்தராசனார். கேரளப் பகுதியில் இருப்பதால் தமிழ்மக்கள் சென்றுவர இடை யூறாக இருப்பதால், தேனிப் பகுதியில் அதுபோன்றே கண்ணகி கோயில் எழுப்ப அ.தி.மு.க. அரசு முற்பட்டுளது.

சிலம்பு பற்றி எழுந்த ஆய்வு நூல்கள் திறனாய்வுப் பகுதி 102இல் காண்க. 54 ஏப்ரலில் யாழ்ப்பாணம் புங்குடு தீவில் கண்ணகி ஆலயம், சிலப்பதிகார விழா வழக்கறிஞர் வி. ஏ. கந்தையா தலைமையில் மூன்று நாள் நடந்தது. ம.பொ.சி., ரா. பி. சே., அ. ச. ஞா, க. பொ. ரத்தினம் கலந்து கொண்டனர். சிங்களநாச்சிதான் தஞ்சையில் செங்கள நாச்சி அம்மனாக எழுந்துளது!

இப்படி இளங்கோவுக்கு ஏற்றமும், சிலம்புக்கு ஊற்றமும் ஏற்பட்டு வருகின்றன.

## 110. கம்பன் புகழ் பாடி...!

ஓராயிரம் ஆண்டின் முன் கவிச்சக்கரவர்த்தி கம்பன் உதயமாயினான்; ஆனால் இந்த நூற்றாண்டில்தான் ஓங்கு புகழ் பெற்றான். இடையில் பக்திப் பனுவலாக, அதிலும் வைணவர் குடங்கையில் மட்டும் சடங்காக முடங்கிக் கிடந்த கம்பராமாயணம், இப்போது பல்சமயத்தவரும் பேரிலக்கிய மாகப் பயிலும் நிலை உருவாகியுள்ளது. பண்டிதர் வீட்டளவில் இருந்த கம்பக் கவியமுதம், பட்டி தொட்டியெங்கும் பரவி விட்டது. இதற்கு மூலவர் ரசிகமணி டி.கே.சி; உற்சவர் கம்பன் அடிப்பொடி சா. கணேசன். 39இல் கம்பத் தாய்க் கழகம் காரைக்குடியில் தோன்றியது; 74இல் தலைநகர் சென்னையில் சேய்க்கழகம் தழைத்தது. இன்று தமிழக மெங்கணும் மூலை முடுக்கெலாம்-70க்கும் மேற்பட்ட கம்பன் கழகங்கள் கிளைத்துள.

கம்பன் அடிப்பொடி, கம்பன் அடிசூடி, கம்பரப்பர், கம்பராமன், கம்பதாசன், கோவைக் கம்பன், கம்பப்பித்தன் (எஸ். என். குப்புசாமி முதலியார்) எனப் பலர் சிறந்தனர். திராவிடர் கழகத்தினர் 39 அளவில் கம்பராமாயண எதிர்ப்பு-எரிப்பு இயக்கமே நடாத்தினர். அண்ணாவின் 'தீ பரவட்டும்', 'கம்பரசம்' கருதுக. நாவலர் சோமசுந்தர பாரதியார், சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை போன்றார் கம்பன் கட்சியில் வாதிட்டனர். கம்பரசம் கண்டு அண்ணாவை ம. பொ. சி. 'காமரசப் புலவர்' என்றே சாடினார்.

எப்போதுமே எதிர்ப்பு ஏற்பட்ட போதுதான் எதுவுமே எழுச்சி கொள்ளும் போலும்! நாத்திகம் பேசப் பேச ஆத்திகம் வளர்ந்தது போல, கம்பப் பற்றாளர்கள் பேரியக்கமாகக் கிளம்பினர். இதனால் தமிழிலக்கியங்களில் பிறவற்றைக் காட்டினும் கம்ப காதையே மக்கள் மா காதையாக வளர்ந்து விட்டது. கம்ப சித்திரம், கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும் என்ற வழக்காறுகளும், கம்பன் குளம், ஊருணி-செய்-செய்க்கழிவு, நடுகல் என்ற சொல்லாட்சிகளும் ஏற்பட்டு விட்டன!

கம்பன் **பிறந்த தேரழுந்தூரில்** *17, 18-3-84*இல் **கம்பர் கோட்டம்** கால்கோள் நிகழ்ந்தது. ரூ. 2.5 லட்சம் அரசு வைப்பு நிதி வைத்து, அதுகொண்டு ஆண்டுதோறும் பங்குனி உத்தர நாளன்று கம்பர் விழா நடத்தவும் ஏற்பாடாகியுளது.

கோட்டம் கட்ட 20 லட்சம், அரசுமானியம் 8 லட்சம். ஆலயங்களின் அளிப்பு 12 லட்சம். கம்பரத பவனிக்கும் ஏற்பாடாகியுள்ளது.

இக்கோட்டப் பராமரிப்பு திருவரங்ககம் கோயில் நிர்வாகத்தின் கீழ் மே 87 முதல் கொணரப்பட்டுளது. அரங்கேறிய அக்கோயிலில் கம்பருக்குச் சிலை அமைக்கவும் விழா எடுக்கவும் வகை செய்யப்படுகிறது.

கம்பர் **மறைந்த நாட்டரசன் கோட்டையில்**. ஆவி. அரு இராமநாதன் செட்டியார் தோட்டத்தில் 40,000 செலவில் 1925இல் கம்பன் சமாதி, சோலையும் கோவிலுமாக அமைக்கப் பெற்றுளது.

கம்பன் பற்றி நூல் யாத்தோர் பற்றித் திறனாய்வுப் பகுதியில் கண்டு கொள்க. அவர்களன்றி, க. கு. கோதண்டராமன், ஜி. கே. சுந்தரம், தெ. ஞானசுந்தரம், கி. வா.ஜ, பழ. பழனியப்பன், கி. மு. அழகர்சாமி, புதுவை அருணகிரி, மனம் சேர சந்திரசேகரன், சுப. அருணாசலம், தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், ராஜேஸ்வரி நடராசன், வி. கே. சி. நடராசன். சி. ந. குழந்தையம்மாள், தா. பாண்டியன், கோ. சாரங்கபாணி, சு. குழந்தைநாதன், கி. பக்ஷிராஜன், க. வே. ராமநாதன், அரு. நாகப்பன், சுதா சேஷய்யன், டி.எஸ். பிரேம், உமையாள் முத்து, கீரன், வாரியார், சரசுவதி ராமநாதன்.

நரசிம்மாசாரியார்-திருமதி வசந்தலட்சிமி, கம்பராமாயண நாட்டிய நாடகம், கலைமாமணி முத்துக் கூத்தனின் பொம்மலாட்டம், ஒலி ஒளிக் காட்சி, சுவர்ணமுகியின் இராமாவதாரம் ஆடலரங்கம் போன்றன கருதத்தக்கன. கம்பநாடன் கவிதை போல் கற்றார்க்கு இதயம் களியாதே! எனவே கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போமாக! சில கம்ப அன்பர்கள்:

**மோ. வே. கோவிந்தராஜ அய்யங்கார்** : சேலம் மாவட்ட மோகனூர். வட தென்மொழி வல்லார்; கம்பனையும் வால்மீகியையும் இணைத்துப் பயின்று கம்பனே பெரியன் எனக்கண்டு அவன் பெருமையுணர்த்த ‘கம்பநாடர்’ திங்கள் இதழ் நடாத்தினார். அவர் ஒருவரே கம்பப் பெருமைபற்றி எழுதினார். 12000 பாடல்களும் மனப்பாடம்; 10, 20 நாள் தொடர்ந்து கையில் நூலின்றி 3-4 மணி உரை நிகழ்த்துவார். இவர் அறிவாற்றல் கண்டு வியந்து காரைக்குடிச் செல்வர்கள் பொருளுதவி செய்தும், ராய. சொ. போன்றார் பாடம் கேட்டும் போற்றிப் பயனுற்றனர்,

**சொ. முருகப்பா** : *1893-1956.* 53இல் கம்பர் காவியம், பாலகாண்டப் பதிப்பு வெளியிட்டவர். டி. கே. சியின் கம்பப் பொழிவுகளைச் செட்டி நாட்டுப் பகுதியில் அமைத்தவர். 'குமரன்' இதழாசிரியர். இதில்தான் கவிமணியின் பாடல்கள் முதலில் வந்தன. தாம் கண்ட இந்து மதாபிமான சங்கத்திற்குப் பாரதியாரைத் தருவித்தார். கம்பன் கழகத்திற்குத் தொடக்க கால உறுதுணையாளர். விபுலானந்தர் கட்டுரைகளைக் குமரனில் வெளியிட்டு இந்தியப் புகழ் எய்த வைத்தார். திருச்சியிலிருந்து 32இல் சண்டமாருதம் நாளிதழை வெளியிட்டவர். தனவைசிய ஊழியன் வார இதழாசிரியராக இருந்தார். பாரதியார், ரா.பி. சே., டி.கே.சி. கட்டுரைகளை வெளியிட்டு அறிமுகப் படுத்தியவர். இவர் மனைவி மரகதவல்லி மாதர் மறுமண இதழாசிரியர். சமுதாயச் சீர்திருத்தத் தந்தை. தென்னாட்டு மோகனராய் என்றேத்தப் பெற்றவர். கம்பனில் மூழ்கிய இவரின் கம்பக் கொடைகள், கம்பர் காவியம், அதன் நிலை விளக்கம் கம்பராமாயணச் சீரழிவு சித்திரிப்பது; பாலகாண்டப் புத்துரை போற்றுதற்குரியது.

**பழ பழநியப்பன்** : *19-4-1943.* காரைக்குடி. முருகப்பா நிறுவனங்களின் மக்கள் தொடர்பு அலுவலர். 62-65 காரைக்குடி கம்பன் கழகச் செயலர், சென்னைக் கம்பன் கழக 75-பொருளர், 78-செயலர். கம்பப் பற்றுக் கரணியமாகக் 'கம்பன் அடி சூடி' என வைத்துக் கொண்டவர். நூல்கள் : கம்பனிடம் கற்போம், கம்பன் விசுவரூபம். அடிப்பொடி நினைவாகக் 'கம்பன் இசை மாலை' தொகுப்பு வெளியிட்டுள்ளார். **முகவரி** : 'கற்பகச் சோலை' 1, வெள்ளையன் செட்டியார் சாலை, கோட்டூர்புரம், சென்னை-85.

**குன்றக்குடி அ. பெரிய பெருமாள்** : *13-1-1933.* கலை பயில் கட்டுரை வல்லார். விகடன் கலைமகள் கட்டுரைப் போட்டிகளில் முதற்பரிசு பெற்றவர். தமிழ்ச் சமூக வரலாறுகளும் 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம்' எனும் மாவட்ட வாரியான தொடர் கட்டுரைகள் அமுத சுரபியில் படைத்து வருபவர். கம்பன் காவிய ஆய்வாக நான்கு நூல்கள் நல்கியுள்ளார். **முகவரி** : 'இலக்கிய பீடம்', 22, திருவள்ளுவர் நகர், இராசபாளையம்-626 111.

**எஸ். நல்ல பெருமாள்** : *1930.* 'கம்பன் கவிநயச் செல்வர்' என அன்போடு கொண்டாடப் பெறும் ஆன்றோர். கம்பனில் ஊறிய கம்பரப்பர் அ. கு. ஆதித்தராலேயே 'இப்போது கம்பனை அழகொழுகப் பேசுவோரில் ஒப்பற்று விளங்குபவர்'

எனப் பாராட்டப் பெற்றவர். மேலை நாட்டுக் காப்பியக் கவிஞர். ஓமரின், இலியட் ஓடிசியுடன் ஒப்பிட்டுக் கம்பன் உயர்வினை வரிக்குவரி விதந்தோதும் வளமையர். கம்பனை நுண்ணிதின் நுணுகி ஆய்ந்து தோய்ந்து பேசும் அற்புதர். பேசுவன எல்லாம் எழுதி வெளியிடின் என்றும் நின்று நிலவும் பயனாம். 'கம்பன் காவியசாரம்' (அயோத்யா, ஆரண்ய காண்டம்) இவர் நல்கியது.

பொறியியல் வல்லுநர். அப்பணி செய்யும் இவர் ஒப்பரிய கம்பப்பணியும் ஆற்றுவது தமிழன்னையின் தவமே, கம்பனின் பேறே: தமிழரசின் ஆட்சிமொழிக் குழுவில் இருந்தவர். கம்பன் கவித்திறம் காணும்-காட்டும் தலை சிறந்த கம்ப அன்பர் இவர். **முகவரி**: 4, சாரதாம்பாள் தெரு, கோகுலம் காலனி, திருமலைப்பிள்ளை சாலை, தியாகராய நகர், சென்னை-17. (442970, 447069).

## 111. அருணகிரிநாதர்: திருப்புகழ்

வ. சு. செங்கல்வராய பிள்ளை, கிருபானந்த வாரியார் இருவரும் திருப்புகழ் பரவுதற்குக் காரணர்கள். தில்லை, அரியலூர் போன்ற தலங்களில் 'திருப்புகழ் சபை'களும், விராலிமலை, நெல்லை, காரைக்குடி போன்ற ஊர்களில் அருணகிரி இசைக்கழகங்களும் அமைந்து அருணகிரியார் விழாக்களும் திருப்புகழ் இசை விழாக்களும் நடத்தி வருகின்றன. திருவையாற்றில் பிறந்து திருவிதாங்கூர் உயர்நீதி மன்றத் தலைமை நடுவராகத் திகழ்ந்த எம். கிருட்டிணசாமி ஐயர் அவர்கள் ஆண்டுதோறும் திருத்தணி படித்திரு விழாவிற்குப் பசனையுடன் எழுந்தருளினார். 'திருப்புகழ் மணி' என்றும் பேர் பெற்றார். இவரது அடியார் ஞாயிறு திருக்கூட்டப் பொழிவுகளை 'அருள் மணித்திரள்' மலர்களாக, தியாகராய நகர், 33, சரோஜினித் தெரு, அ. க. பாலாம்பிகை தொகுத்து வெளியிட்டார்கள், அறுபதுகளில்.

வாரியார் சுவாமிகள் 'திருப்புகழ் அமிர்தம்' என்றே திங்களிதழ் பல்லாண்டுகள் நடாத்தித் திருப்புகழ் அமுதத்தை மக்களிடம் வாரி வழங்கினார். தலவாரியாகத் திருப்புகழ் விரிவுரை வழங்கினார். கி. வா. ஜ. அவர்களும் அருணகிரியார் கொடைகளை ஆராய்ந்து எழுதியுள்ளார்.

தமிழிசையின் களஞ்சியமாகத் திகழும் இத்திருப்புகழ்பற்றி டாக்டர் பட்டத்துக்கு ஆய்வு மேற்கொண்டோர் மிகக் குறைவாகவே உளர்; தமிழும் இசையும் அறிந்தோர் இத்துறையில்

இறங்கி ஆராய்ந்து அருங் கருத்துக்களை வெளிக்கொணர்தல் வேண்டும்.

இசைவாணர்களும் நாதசுரக் கலைஞர்களும் தங்கள் கச்சேரிகளில் திருப்புகழை இசைக்காதவர்கள் இல்லை என்றே இயம்பலாம். இன்னும் மேல் தளத்திலேயே திருப்புகழ் திகழ்கிறதே தவிர, மக்களிடம் எளிதே இனிதே இன்னும் பரவவில்லை. இதன் அருமை பெருமைகளை விளக்கி மக்களிடம் கொண்டு செல்லும் தொண்டு நடைபெறின் நனி நலமாம்!

## 112. வள்ளலார் வழிபாடு

நிரம்ப படிக்கா மக்கள்—கிராமத்துத் தூயர்கள் தெருக்களில் அருட்பா பாடித் தைப்பூசத் திருநாள் கொண்டாடுகின்றனர். ஊருக்கொரு சன்மார்க்க சங்கம் அமைத்து அன்னதானம் செய்து வள்ளார் புகழ் பாடுகிறது. பத்து நாள் முன்பே அருட்பா குழுக்கள் நடைப் பயணமாக வடலூர் ஜோதி தரிசனத்துக்குச் செல்கிறது; வழிநெடுக உள்ள சன்மார்க்க அன்பர்கள் உண்டி உறையுள் அளித்து ஓம்புகின்றனர். பயின்றாரைவிட இந்தப் பாமரர்கள் அருட்பா அருமை தெரிந்து, அருட்பிரகாச வள்ளலார் பெருமை புரிந்து போற்றுகின்றனர். கேள்வி ஞானத்தாலேயே கூட அருட்பா 100, 200 என அறிந்து வைத்திருக்கிறார்கள். இப்படி வள்ளலார் பக்தி அருட்பாப் புலமை வளர்ந்தேறி வருகிறது நாட்டில்; இதனால் ஆன்மநேய ஒருமைப்பாடு உலவுகிறது ஊர்களில். சில சன்மார்க்கச் செம்மல்களையும் மன்றங்களையும் நினைக்க நேயம் பிறக்கும். மதுரை சன்மார்க்க வேள் பரதன் போன்றாரைப் போற்றுவோம்.

**தொழுவூர் வேலாயுத முதலியார்:** வள்ளலாரின் **முதல் மாணாக்கர்.** தமிழ் ஆங்கிலம் சமத்கிருதம் - மும்மொழிப் புலமையர். சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். 'இலக்கண இலக்கியப் பயிற்சியிலும், செய்யுள் செய்வதிலும், வசனம் எழுதுவதிலும், பிரசங்கம் செய்வதிலும் சமர்த்தர். பல செய்யுள் நூல்களை இயற்றியிருக்கிறார். பெரிய புராண வசனம், வேளாண் மரபியல், சங்கர விஜயம், பராசர ஸ்மிருதி முதலிய வசன நூல்கள் அவரால் எழுதப்பட்டன (உ. வே. சா.)

சற்குரு துதியாக 'திருவருட்பிரகாசர் துதி' பாடியுள்ளார். வள்ளலார் இவருக்கு 'உபய கலாநிதிப் புலவர்' எனப் பட்டம் சூட்டியுள்ளார். அடையாறு தியாசாபிகல் கழகத்தாரின் முன் அடிகளாரின் பெருமையை உள்ளபடி எடுத்துரைத்தவர்.

**காரணப்பட்டு ச.மு. கந்தசாமிப் பிள்ளை:** தெ.ஆ. மாவட்டம்; காரணப்பட்டு சமரச பஜனைக் குமரன் என்றும் அழைப்பர். பெற்றோர்: முத்துசாமிப் பிள்ளை: தைலம்மாள். கருணிகர் மரபு. தமிழ் இலக்கண இலக்கியங்களும் சைவசித்தாந்தமும் கற்றுத் தெளிந்தவர். இசை வல்லவர். எனவே கவிமாரி பொழியும் சிறப்பினர். வள்ளலாரின் **கடைசி மாணவர்.** அவரையே வழிபடு கடவுளாகக் கொண்டவர். அருட்பா பரப்பு வதே தம் கடனாகக் கருதியவர்; அதற்காகவே 'சமரச பஜனை' அமைத்தவர். அருட்பா பதிப்பு அரும்பணியே பெரும்பணியாக ஏற்றவர். இராமச்சந்திரபுரம் தீ. நா. முத்தையாச் செட்டி யாரின் பொருளுதவி பெற்று ஆறு திருமுறைகளையும் அச்சிட்டு இலவசமாக வழங்கினார்.

நாடறிந்தவர். ஆயிரம் பிறை கண்டவர். பாடிய பிரபந் தங்கள் 25: அருட்பாவிற்கு அரியதொரு விளக்கமாகவும் வழி காட்டியாகவும் அமைகின்றன. 14 வள்ளலார் பற்றியன. இராமலிங்க சுவாமிகள் திவ்விய சரித்திரக் கீர்த்தனை, சற்குரு வெண்பா அந்தாதி, திருவருட்பிரகாச வள்ளலார் வருகை மூன்றும் முக்கியமானவை. இரண்டாவது, 1108 பாக்கள் கொண்ட பெருகல். மூன்றாவது, பல்லியை நோக்கி வினவும் வகையில் நன்னிமித்தம் பராவல் துறையில் அமைந்தது; வருக்கச் செய்யுட்களால் இயன்றது. 14 நாமாவளிகள் அடங்கியது. வள்ளலார் வரலாறு, கொலை மறுத்தல், அருட்பிரசாகர் அற்புத அந்தாதி, பாதார்ச்சனைக் கீர்த்தனை போன்றன பிற.

**ஆ. பாலகிருஷ்ண பிள்ளை:** 19-10-1890—31-8-1960. தெ. ஆ. கல்லக்குறிச்சி வட்ட செல்லம்பட்டு. ஆறுமுகம் பிள்ளை-சின்னம்மாள். குழந்தையாய் இருந்தபோதே தந்தைமறைய, அண்ணன் துரைசாமியின் அரவணைப்பில் வாழ்ந்தார். கல்லக் குறிச்சி திண்டிவனத்தில் பள்ளிப்படிப்பு முடித்துச் சென்னைப் பச்சையப்பனில் பி. ஏ. (தத்துவம்) மாநில முதன்மை; அங்கேயே விரிவுரையாளர். சட்டக் கல்லூரியில் எம். எல் பயின்றார். ஆய்வேடு 'இந்து திருமணச் சீர்திருத்தம்' அங்கேயே துணைப் பேராசிரியர். இந்து அறநிலையக் கழகத்தில் 25 ஆண்டுகள் செயலராகவும், 3 ஆண்டுகள் ஆணையராகவும் சிறந்து ஓய்வு பெற்றபின் அருட்பா பதிப்புப் பணியில் இறங்கினார். பல்லாண்டுப் பேருழைப்பு பெருஞ் செலவுக்குப் பின் 12 படலங்களாகச் செம்பதிப்பு வெளியிட் டார், பிற நாட்டாரும் புரிந்து போற்றுமாறு அருட்பாவை

ஆங்கிலத்தில் பெயர்த்தார். 150 பாடல்கள் ஆக்கப்பெற்று வெளிவந்துளது. ஒரே மகள் ஆனந்ததேவி. மயிலை தியாகராச புரம் இல்லத்தின் பெயர் அருட்பா வளாகம்; வெளியீட்டகம் அருட்பா அற நிலையம். பிறநூல்கள்: பருந்தும் நிழலும், விஜய காருண்யம்.

**நா. சின்னையா செட்டியார்:** 1-9-1905—சேலம் பென்னா கரம். 'பத்ம ஜோதி' மாதமிருமுறை ஏட்டின் ஆசிரியர். உண்மை ஒளி அல்லது உலக ஒழுக்கம், இன்பந்தரும் இயற்கை வழி, அரிய செயல் அல்லது அழித்தல் அழகா? அறிவா? ஆன்ம ஞானம் அல்லது அவசிய அறிவு, சுய நலத்துடன் வாழுங்கள். நூல்கள்: ஞான மன்றம் அமைத்து ஒளி வழிபாடும் கடவுள் விளக்கமும், ஒளி வழிபாட்டின் உயர்வும் ஜீவகாருண்யச் சிறம்பும் போன்ற 8, 16 பக்கச் சிறு சீரிய நூல்கள் வெளியிட்ட ஆன்ம நேயர். **முகவரி:** வள்ளலார் இல்லம், 39, வீராசாமி பிள்ளைத் தெரு. ஏழு கிணறு, சென்னை-1. (வள்ளலார் வதிந்த இல்லம்).

**சுவாமி சச்சிதானந்தா:** கடந்த 20 ஆண்டுகளாக அமெரிக் காவில் சன்மார்க்கப் பணி செய்து வருகிறார். ஒளி வழிபாட் டினை அங்கு பரப்பி வருகிறார். வள்ளற் பெருமானின் ஜீவகாருண்ய ஒழுக்கத்தை 1½ லட்சம் அமெரிக்கர் உவந் தேற்றுப் புலால் உண்ணாமலும், மது அருந்தாமலும் புகை பிடிக்காமலும் ஒழுகுகின்றனர். அங்கே ஓர் ஆன்மீகப் புரட்சியையே உண்டு பண்ணிவிட்டார். அவர் ஆசிரமத்தில் நவீன குருகுல முறை நடைபெற்று வருகிறது. எதிரும் புதிரு மான பலவகைச் சமயத்தினரை ஜோதி வழிபாட்டின் மூலம் ஒருமுகப் படுத்திவிட்டார். நடுவிலே ஜோதி, அனைத்து மத குருமார்களும் சுற்றி அமர்ந்து தத்தம் வழியில் ஒளி வழி பாடு உஞற்றுகின்றனர். முடிவில் அருட் பிரசாதங்களைப் பரி மாறிக் கொள்கின்றனர். இப்படி ஒரு சர்வ சமய ஒருமையை உருவாக்கியுள்ளார். பொருள் கொழிக்கும் நாட்டில் அருள் கொழுக்கும் ஞானப் பணி ஆற்றி வருகிறார்.

**சுவாமி சரவணானந்தா:** 19-11-1910. திண்டுக்கல். 60 ஆண்டுகளாக அருட் பெருஞ்ஜோதி அருந்தொண்டாற்றுபவர். சத்திய ஞானக் கோட்டம் அமைத்து சன்மார்க்கப் பணி புரிந்து வருகிறார். சத்திய ஞான சபை, அன்பே கிறிஸ்து அருள் சிலுவை, விநாயக விளக்கம், பூசமும் நாமும், தயா

பெருஞ்ஜோதி திருப்பள்ளி எழுச்சி, அருட்பெருஞ் ஜோதி அகவல் பேருரை, திருவடிப் புகழ்ச்சி உரை, அருட்பெருஞ் ஜோதி அட்டகம், வள்ளலார் கண்ட ஒருமை வாழ்வு Omnigra -cious Infinite Light போன்றன கொடைகள். அனைத்தும் ஆராய்ச்சி. வள்ளற்பெருமான் விளக்கங்கள். அகவல், அட்டகம், திருவடிப் புகழ்ச்சி மூன்றும் அருட்பா அனுபவிக்க அமைந்த திறவு கோல்கள். அந்த மூன்றுக்கும் உரை தந்துள்ளார்.

நம் பழஞ் சமயங்களை விருப்பு வெறுப்பின்றி ஆராய்பவர். அருட்பா அமுதத்தைச் சன்மார்க்கக் கண்கொண்டு ஆய்பவர். பண்டை ஞானிகளினின்றும் வள்ளலார் வளர்ந் தோங்கியிருப்பதைத் தெள்ளிதின் விளக்குபவர். கல்லூரியில் இன்டர்மீடியட் பயிலும்போது பிழைப்புக்குரிய அக்கல்வியில் மனம் ஒன்றாது, அதனை விடுத்துச் சன்மார்க்கக் கல்வி நாடி னார்; சபாபதி அடிகளிடம் பெற்றார். வள்ளலார் வழியில் ஆன்மீக சாதகம் செய்து சன்மார்க்கம் மேற்கொண்டு சத்விகாரம் செய்து வருகிறார். சக்தி—சித்து பெற்று சன் மார்க்க நெறியில் மக்களை உய்த்து வருகிறார். **முகவரி:** சத்யஞானக் கோட்டம், 4, நாகசாமி அய்யர் சந்து, கீழ ரத வீதி, திண்டுக்கல்-624 001.

**தவத்திரு ஊரன் அடிகள் :** 22-5-1933. திருச்சி சமயபுரம். வேலூர், திருவரங்கம், திருச்சி நகராட்சிகளில் ஆய்வராகப் பணியாற்றியவர். பின் துறவு பூண்டவர். வள்ளலார் நிறுவிய நிலையங்களின் அறங்காவலர் குழுத் தலைவராகவும், முன்னாள் முதலமைச்சர் ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் நிறுவிய நிலையங்களின் சிறப்புச் செயலராகவும் சிறக்கப் பணியாற்று பவர்.

வடலூர் வரலாறு, இராமலிங்கரும் தமிழும், இராமலிங்க அடிகளாரின் வரலாறு (தமிழரசின் பரிசு), வள்ளலார் மறைந்தது எப்படி? போன்றன படைத்துளார். அருட்பா முழுவதையும் கால வரிசையில் அடைவு செய்து ஐந்து திரு முறைகள், ஆறாம் திருமுறை, உரைநடைப் பகுதி என 3 பகுதி களாகப் பாங்குடன் பதிப்பித்துள்ளார். இராமலிங்க அடிகளால் 1867இல் தொடங்கப்பெற்றது முதலே நடைபெறாது நின்று போயிருந்த 'சன்மார்க்க விவேக விருத்தி' திங்களிதழை 69 முதல் நடத்தி வருகிறார். அடிகளாரின் சித்தி நூற்றாண்டு மலராக, அரிய செய்திகள் அட்டவணைகள், புள்ளிவிவரங்கள், புதிய படங்கள், பொறுக்குமணிகளாக 100 திருப்பாக்கள்

கொண்ட 'இராமலிங்க அடிகள் ஒரு கையேடு' வெளியிட்டுள்ளார். வள்ளலார் பணிக்காகவே தம்மைத் தத்தம் செய்த இவரின் **முகவரி**: வடலூர். தெ. ஆ.-607 303 (86).

செட்டி நாட்டவருள் இராமச்சந்திரபுரம் திவான் பகதூர் தர்மபூஷணம் தீ.நா.மு. **முத்தையச் செட்டியார்** (1883—1936). 23இல் இராமலிங்க அடிகளின் பிரபந்தத் திரட்டும், 24இல் சன்மார்க்கத் திருநெறி வள்ளலார் வரலாற்றுடன் அருட்பா செம்பதிப்பு மோசூர் கந்தசாமி முதலியார் கொண்டு வெளியிட்டும் இலவசமாக வழங்கினார். (அப்போதே அதன் விலை ரூ 30). கோனூர் ஜமீன்தார் சித. சிதம்பரஞ் செட்டியார் (1906-52) வழியினரான நற்சாந்துபட்டி **எல். சோமு** (17-9-37) கோவை தொழிலதிபர். திருவருட் செம்மல். கோவை சன்மார்க்க சங்கத் தலைவர். அருட்பா ஈடுபாடு மிக்கவர். சுப. அண்ணாமலை ஆய்வு அருட்பாபற்றியதே!

மணிவாசகர் மெய்யப்பன் தந்தை **வடலூர் குங்கிலியம் பழ. சண்முகனார்** 25-5-1915. இராமச் சந்திரபுரம். பல்வகைச் செய்யுள் பாடவல்ல அருளாளர். பெயரிலேயே வடலூர் அமையும் அளவிற்கு வள்ளலாரிடம் விடுதலறியா விருப்பினர். அருட்பிரகாச வள்ளலார், திருவருட்பா (கல்வெட்டுப் பாடல்கள்), தியானம் (தத்துவச் சிந்தனையாளர் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் ஆங்கில நூல்), வணக்கத்துக்குரிய பெரியார் எழுதியும் பேசியும் சன்மார்க்கம் வளர்த்தவர்.

இனி, **செந்துறை முத்து**. வள்ளுவர் திருமூலர் சம்பந்தர் அப்பர் மணிவாசகருடன் இணைத்து எழுதியுள்ளமையும், **மா. பா. குருசாமி** வள்ளலார் ஓர் அறிமுகம், **கு. சீனிவாசன்** 'சாகாக் கலை.'

**இராமலிங்கர் பணி மன்றம்**: Aruljothi Sri Ramalinga Mission 1961 மே. தோற்றுநர் தலைவர் சன்மார்க்கச் செம்மல் பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்கள்; தோற்றுநர் செயலர் வி. எம். கடிகாசலம்; செயலர் அவ்வை நடராசர், இதுபோது பகீரதன், பிரச்சாரப் படைத் தளபதி நா. கிரிதாரி பிரசாத். ஓ பி. ராமசாமி ரெட்டியார், ஜஸ்டிஸ் என். சோமசுந்தரம், சி. லெட்சுமி சந்த மேதே, கடிகாசலம் போல்வாரின் இடையறா முயற்சியால் எழுந்தது.

**நோக்கம்**: 1. அருட்பா அடியொற்றி நூல்கள் இதழ்கள் வெளியிடுவது, கூட்டங்கள் சொற்பெருக்குகள் மூலம் வள்ளலார்

போதனைகளைப் பரப்புவது. 2. ஏழை அனாதை இல்லங்கள், பள்ளிகள், பயிற்சியகங்கள், குருகுலம், மருத்தகம் போன்றன நடத்தியுதவுதல். 3. பல் சமய மக்களையும் ஒரே கூறையின் கீழ்க் கொணர்ந்து கூடித் தியானித்து வழிபடச் செய்தல். 4. மக்களிடையே சாதி சமய வேறுபாடற்ற சூழலை உருவாக்கி, ஆன்மநேயக் கருணைக் கோட்பாட்டைப் பரப்புதல். 5. நூலகம் படிப்பகம் பஜனை பரப்பு மையங்கள் அமைத்தல். 6. அருட்பா இலக்கியம் பரப்புநர்கள் கொண்ட நிலையம் தோற்றல். 7. அருள்ஜோதி ராமலிங்கப் பணி மன்றக் கிளைகள் தோற்றி நடத்தல். 8. மேற்காணும் நோக்கம் நிறைவேற அனைத்தும் புரிதல்.

**செயற்பாடு** : 1. சன்மார்க்க பாத யாத்திரை 5 மேற்கொண்டது. 2. செங்கற்பட்டு மாவட்டத்தில் மட்டும் 90 சன்மார்க்க சங்கங்கள், தமிழக முழுவதும் 21 கிளைகள் தோற்றியுளது, 3. இணைப்பு நிலையமாக இயலா நோயுற்ற ஆதரவற்றோர் 400 பேர் கொண்ட 'தயாசதன்' நடத்துகிறது. 4. நூறு பெரு நோயாளிகளைப் பேணுகின்றது. 5. கோயம்பேடு அருகே பூவிருந்தவல்லி சாலையில் 200 சிறார் நகர் நிலவுகிறது. 6. எம்.ஏ. மாணிக்கவேலர் தலைமையில் திருவள்ளூர் வட்ட புதுச் சேரிக் கிராமத்தில் (65 ஜூன்) சன்மார்க் பூதான இயக்கம் தொடங்கியது. 40,000 பெறுமான நிலம் அப்பகுதி சன்மார்க்க சங்கத்திற்குப் பெறப்பட்டது. 7. கிரிதாரி பிரசாத் தலைமையிலான பிரச்சாரப் படை சென்னை மாநிலம் முழுதும் சன்மார்க்க-ஒருமைப்பாட்டு உரைகள் நிகழ்த்தியது. 8. பிரசாத் மலேசியா மற்றும் கிழக்காசிய நாடுகட்குச் சென்று கிளைகள் தோற்றிப் பேருரையாற்றி வந்தார். 9. உறுப்பினர்கள் மருத்துவ்மனை, பள்ளி, கல்லூரிகட்குச் சென்று வள்ளலார் செய்திகளை விளக்கி இலவச வெளியீடுகளை வழங்கினர்.

அருட்ஜோதி மாதர்கள் சங்கம் : தலைவி குப்பம்மாள் மாணிக்கவேலு, செயலர் ராஜேஸ்வரி நடராசன், தாரா நடராசன். பொருளர்-மணிமேகலை தமிழ்வாணன்.

சுவாமி சரவணானந்தா, ஆ பாலகிருஷ்ணபிள்ளை போன்றார் நூல்களை வெளியிட்டுளது. அருட்பா திருமுறைகள், வசனப்பகுதி வெளியிட்டுளது. ஆண்டுதோறும் வள்ளலார் காந்தி விழா, இசை விழாவும் எடுத்து வருகிறது. இவற்றுக்கெல்லாம் பல லட்சங்கள் செலவாற்றி, வடலூரிலும் ஞான சபைக் கட்டிடங்கள் எடுத்து வரும் சன்மார்க்கச் செம்மல் நா. மகாலிங்கம் அவர்களை வந்தித்தல் வேண்டும்.

## 113. பாரதி புகழ் பரவி...!

இந்த நூற்றாண்டில் மகாகவியை உணர்ந்து போற்றி வருகின்றனர். பன்மொழிகளில் பெயர்க்கப்பட்டு வருகிறார். அவரவரும் பாரதிக்குத் தங்கள் பங்காக ஓரிரு நூல்களையேனும் காணிக்கையாக்கி வருகின்றனர். கஞ்சாக் கவிஞன், விடுதலைப் பாடகன் என்ற நிலை மாறிப் பார் புகழும் பாரதியாகப் பட்டொளி வீசி வருகிறார்; இவரது அருமையும் பெருமையும் சிறந்து வருகின்றன. 'எங்கும் பாரதி எதிலும் பாரதி எனும் நிலை ஏற்பட்டுளது. இவர் பற்றி ஆராய்ச்சி கூடி வருகிறது. பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும் நிலை ஏற்பட்டுள்ளது. பதிப்புகள் பெருகியுள. பல்கலைக் கழகம் இவர் பெயர் சொல்கிறது. சங்கங்கள் பல செழித்துள.

சிவாஜி கணேசன் 58இல் எட்டையபுரத்திலும், 11-9-60 இல் சென்னை ஆபட்ஸ்பரியிலும் சொந்தச் செலவில் 'கவி பாரதி விழா' எடுத்தார். அடுத்த ஆண்டு ஜெமினிகணேசன் விழா நடாத்தினார் என்பது குறிப்பிடத்தக்கது. பாரதி படம் வரைந்த சேரன்குளம் ஆர்யா (பாஷ்யம்) பாராட்டுக்குரியவர். பாரதியைப் பாராமலே, வ.ரா. ஹரிஹர சர்மா கூறக்கூற மனதில் வாங்கி எழுதிக் கொடுத்தது இப்படம்!

**பாரதி வழியினர்** : பாரதியாருக்கு இரு பெண்களே. அ: தங்கம்மாள் பாரதி: ஸ்தாணு அய்யர் (மலேசியாவில் சர்வேயர்). இவர்கட்கு 3 மகளிர் 2 மகன். 1. பானுமதி: கிருஷ்ணசுவாமி (கல்கத்தா ஆக்டேவியஸ் ஸ்டீல் கம்பெனியில் (Cost & Management Accountant) இவர்கட்கு அம்ருதி, சூர்ய நாராயணன், பாரதி, மூவர். 2. லலிதா பாரதி: வெங்கட சுப்ரமண்யன். (பி. ஏ. பட்டதாரி, தென்னக ரயில்வேயில் பணியாற்றியவர்). அர்ஜுன் பாரதி, ராஜ்குமார் பாரதி இருவர். 3. செல்லப்பா. 82 மார்ச்சில் மறைவு. 4. விஜய பாரதி : சுந்தரராஜன். மகள் மீரா. 5. மோஹன் பாரதி எம். எசி., பி. எச்டி. (Nuclear Phys.) பம்பாய் IITயில் பேராசிரியர். மனைவி அமிர்தி, மகள் வித்யா.

ஆ. சகுந்தலா பாரதி: நடராஜன். 1. சரோஜினி: நாராயணசுவாமி. மக்கள்: சுபாஷ், நிருபமா, சந்திரிகா, நடராஜ். 2. சுப்ரமண்ய பாரதி: கஸ்தூரி, சித்தரஞ்சன், சகுந்தலா. 3. ரவிச்சந்திரன் : லக்ஷ்மி, பூர்ணிமா.

**தங்கம்மாள் பாரதி** : அமரன் கதை, பிள்ளைப் பிராயத்திலே, பாரதியும் கவிதையும், எந்தையும் தாயும் என்பன நூல்கள்

**சகுந்தாலா பாரதி** : 17-12-1909. நூல் : என் தந்தை. தொடர்புக்கு : ந. ரவிச்சந்திரன், பி. ஏ., பி. எல்., 'பாரதி' 13, பிரிபித் சாலை. தியாகராய நகர். சென்னை, 17.

**லலிதா பாரதி** : இரு மகன்கள் : அர்ஜுன் பாரதி, எம். எசி. (புள்ளி இயல்) சிண்டிகேட் வங்கியில் பணி. ராஜ்குமார் பாரதி பி. இ. (Eletronic & Tele-Communication). திருவான்மியூர் E. B. M. கம்பெனியில் பணி. இசையில் வல்லவர்; திரைப்படங்களில் பாடுகிறார். 'ஏழாவது மனிதன்' படத்தில் பாடியுள்ளார். இசைக் கச்சேரிகளும் புரிகிறார். வானொலியில் மெல்லிசைப் பாடல்களும் பாடியுள்ளார். பாட்டன் பாரதியார் பாடல்களைப் பாங்காகப் பாடிவருகிறார். **முகவரி**: 'லலிதாலயா', AB 72, அண்ணா நகர், சென்னை-40 (614657)

**விஜய பாரதி** :முதுகலை முடித்ததும் அண்ணாமலை பேரா. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரிடம் தம் தாத்தா பாரதியார் பற்றி ஆய்வு செய்து 67இல் டாக்டர் பட்டம் பெற்றார்; A Critical Study of Bharati's Works நூல்கள் : சக்தி வாழ்க, முன்னோர் வளர்த்த தமிழ், மகாகவி ஒரு திறனாய்வு, Subramania Bharathi Personality and Poetry. கணவர் சுந்தர ராஜன். அண்ணாமலையில் ஆங்கில இலக்கியம் எம்.ஏ. பயின்று தஞ்சை சரபோஜி கல்லூரியில் பணியாற்றியவர். இதுபோது இருவரும் கனடாவில் வதிகின்றனர்.

'பாரதி புகழ்பரப்பிய முன்னோடிகள்' (பெ. சு. மணி), கொண்டு பாரதி பக்தர்கள் அறியலாம். பாரதி நூற்றாண்டின் போது பாரதி புதிய காதலர்கள் பலர் மண்டினர்! அந்த ஆண்டில் மட்டும் 82 நூல்கள்!

4-2-87-தலைநகர் தில்லியில் எம். ஜி. ஆர் தலைமையில் குடிரசுத் துணைத்தலைவர் ஆர். வெங்கடராமன் முன்னிலையில் ராஜீவ்காந்தி பாரதியின் வெண்கலச் சிலையைத் திறந்து வைத்தார்!

**எஸ். ஆர். சுப்பிரமணியம்** : 5-7-1915. புதுவை. இரத்தின சபாபதி : குப்பம்மாள். மெட்ரிகுலேசன், பிரஞ்சு மொழியும் தெரியும். காந்தியடிகள், வினோபா, ஜயபிரகாஷ் நாராயணன், அரவிந்தர், பாவேந்தருடன் பழகியவர். தேசிய உரிமைப் போராட்டம், சர்வோதயம், தொழிற் சங்கம், இதழியல் போன்றவற்றில் ஈடுபட்டவர். புதுவைத் தொழிலாளர் இயக்கத்தில் 38இல் $1\frac{1}{2}$ ஆண்டு (புதுவை) சிறைவாசம்; 43இல் விடுதலைப் போராட்ட 3 மாதம் (தருமபுரி) சிறை; 44இல்

(கோவை) 3 மாதம் சிறை; 63இல் இந்திய சீன நட்பு யாத்திரை தில்லியிலிருந்து சீன எல்லை வரை (ஜே. பி. யுடன்); 72, 85இல் சென்னை—கன்னியாகுமரி மதுவிலக்கு சத்யாக்கிரக யாத்திரை; 78இல் ராஜாஜி நூற்றாண்டு விழாவின்போது அவர் கொள்கைகளை எடுத்துக் காட்டும் வகையில் சென்னை-துறைப்பள்ளி, 80ல் உப்புச் சத்தியாகிரகப் பொன்விழா-திருச்சி வேதாரண்யம்,-வினோபாவுடன் சர்வோதய யாத்திரை என 6 பாத யாத்திரைகள் நடாத்தினார். ஜே. பி.யின் பொழிவுகளைத் தூய தமிழில் பெயர்த்துளார்.

ஆண்டுதோறும், சனவரி 30 காந்தி மறைவு தினம்-சென்னைக் கடற்கரையில் பல்லாயிரவருக்கு அன்னதானம், பிப்ரவரி 19இல் ஆசார்ய நரேந்திரதேவ் மறைவு தினம்-ஈரோட்டில் விழா; செப். 11இல் பாரதி நினைவு நாள்-புதுவையில் என மூன்று விழாக்கள் கொண்டாடுகிறார். 46இல் ஜனதா(வாரம்), 47இல் சோசலிஸ்ட் (நாளிதழ்), 60இல் தாயகம், 64-68 காந்தி வழி (திங்கள்), கவிதை இதழ் கவிதாமண்டலம் பாரதிதாசனை ஆசிரியராகக் கொண்டு நடத்தி, மீண்டும் 80 முதல் நடத்துகிறார்.

56இல் பிரெஞ்சு இந்தியப் பகுதிகளான காரைக்கால் மாஹி ஏனம் புதுவை ஆகியவை சுதந்திர இந்தியாவுடன் இணையப் போராட்டம் நடாத்தி வெற்றி பெற்றவர். 1) பள்ளியில் பயிலும்போதே 'பாரதி சங்கம்' தோற்றியவர். 2) 35இல் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் கவிதை மாத இதழை, பாரதிதாசனை ஆசிரியராகக்கொண்டு நடாத்தினார்; 80 தொடங்கி நடைபெறுகிறது. 3) பாரதியாரின் வெளிவராத எழுத்துக்களை முதலில் தேடும் முயற்சி மேற்கொண்டவர்; குரு கோவிந்த சிங், சிவாஜி, காலனுக்கு உரைத்தல், கனவு போன்ற கவிதைகளைத் தேடி வெளியிட்டார். 4) தம்பதியர் சகிதம் தாடியோடு காட்சியளிக்கும் பாரதி படம் இவரால் கண்டுபிடிக்கப் பெற்றது. 5) சித்ரபாரதி ரா. அ. பத்மனாபன் இத்துறையில் ஈடுபட இவரே காரணர். 6) பாரதி நூற்றாண்டு விழாவின்போது புதுவையில் 1000க்கும் மேற்பட்ட கவிஞர்கள் பாரதிக்கு அஞ்சலி செலுத்திய கண்கொள்ளா நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர். 7) பாரிசு பாரதி விழாவில் புதுவை அரசின் சார்பில் கலந்துகொண்டு, பாரதியின் சூரியோதயம், பாரத ஜனசபை கொண்டுவந்தவர். 8) பாரதி எழுத்தாளர் பலரை ஊக்கி உருவாக்கியவர். இப்போது சர்வோதய மண்டலத் தலைவர் எஸ். ஆர். எஸ். மூன்றெழுத்து முழு

மனிதர், நைஷ்டிக பிரமச்சாரி .வணக்கத்துக்குரிய கவிதைத் தொண்டர், காந்தி பக்தர், உண்மை உயர் மனிதரான இவரின் **முகவரி:** 42, காளத்தீஸ்வரன் கோவில் தெரு, புதுவை-1; 277, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5.

**சீனி. விசுவநாதன் :** 14-11-1934. சேலம் சீனிவாச ஐயர்: செல்லம்மாள். படிப்பு எஸ். எஸ் எல். சி; 55இல் சின்ன அண்ணாமலை 'சங்கப் பலகை' வார இதழ் துணையாசிரியர். பாரதி பற்றிய 400 நூல்களும் அரிய படங்களும் இவரிடம் உள. 1) 'பாரதி கவிதைகள்' செம்பதிப்பு - சீரிய பதிப்பு. 2) தமிழகம் தந்த மகாகவி, மரணத்தை வென்ற மகாகவி - பாரதி பற்றி அறிஞர்களின் கருத்துக் கோவை. 3) நூற்பெயர்க் கோவை-பாரதி பற்றி வந்த நூல்களின் விவரம். இந்த மூன்றும் இவர் அருங்கொடை. இவரது பாரதி தொண்டு தலை வணங்கத் தகுந்தது. **முகவரி:** 2, மாடல் ஹவுஸ் சந்து, சி.ஐ.டி. நகர், சென்னை:35.

**பிரேமா நந்தகுமார் :** 23-2-1939. சென்னை. கே. ஆர். சீனிவாச அய்யங்காரின் திருமகள். ஆங்கிலத்தில் எம். ஏ., பிஎச். டி. பாரதி பற்றியும் பாரதி பாடல்களைப் பெயர்த்தும் இருவழியில் தொண்டாற்றியவர். சாகித்ய அகாதமி வெளி யிட்ட ஆங்கில ஆய்வு நூல், 77 யுனெஸ்கோ வெளியிட்ட பாரதி பாடல்கள் பெயர்ப்பும் இவரை உலகெங்கணும் உள்ள பாரதி அன்பர்கட்கு அறிமுகப்படுத்தியது. பாரதி சங்கம் இருமுறை கேடயம் வழங்கியது. ஆங்கிலத்தில் 14 நூல்கள் பாரதியின் வாழ்க்கை வரலாறு (நேஷனல் புக் டிரஸ்ட்), Bharathi in English Verse, Bharathi. புயல் நிலைப் தில்லை, அமுதத் துளி உதிர்ந்தது போன்றன இவர் படைப் புக்கள். விசாகப்பட்டினத்தில் ஆங்கிலப் பேராசிரியையாக இருந்து இதுபோது தமிழகத்தில் உறைகிறார். **முகவரி:** ஸ்ரீரங்கம், திருச்சி-6.

**பாவேந்தர் பெருமை பேசுவோம் :** தேசீயம் பேசிய பாரதி புகழ் பெருகி வரும் அதே சமயம் தமிழியம் பகர்ந்த பாரதி தாசனைத் தமிழ் உணர்வு தமிழின உணர்வு கரணியமாக ஏத்தும் எழுச்சியும் ஒரு வீறும் உருவாகி வருகிறது. பார்ப்ப னர்கள் தங்கள் பாரதியை ஒருமித்து ஓகோ என உவந்தேத்து தல் கண்டு உத்வேகம் கொண்டு தங்கள் கவிஞரைத் தலைமீது கொண்டு போற்றுகின்றனர். எந்த ஏதுவாயினும் பாவேந்தர் அருமை அறிந்து பெருமையுணர்ந்து போற்றினால் சரி,

பாவேந்தர் பாக்கள் பற்றிய ஆராய்ச்சி பெருகிவருகிறது. ஆங்கிலம் போன்ற பிற மொழிகளில் பெயர்ப்பின் உலகு புகழ் பெற வாய்ப்பாகும். வெறும் உணர்ச்சியோடு நின்றுவிடாது, அரும் செயற்பாடே அந்தப் புரட்சிக் கவிக்கு நாம் ஆற்றும் நன்றியாகும். பாரதிக்குப் பன்னூல்கள் பிறந்தமை போன்று பல நூல்கள் பல கோணங்களில் யாத்திடல் வேண்டும். புகழ்வ தோடு மட்டும் அமைந்திடாது புரிந்து போற்றின் பயனாம். அரைத்த மாவே அரைத்துக்கொண்டிராது, வார்த்த தோசையே வார்த்துக் கொண்டிருக்காமல், நுட்பமுடன் நோக்கி நுண்ணிய கருத்துக்களை வெளிப்படுத்துதல் வேண்டும். நமக்குள்ளே பழங்கதைகளே பேசுவதிலோர் மகிமை இல்லை. இன்னும் இயற்றவேண்டிய ஏராளம் உள. பொறுப்புணர்ந்து புரசிக்கவிக்குப் பணி செய்தல் வேண்டும். ஆய்வடங்கல் உருவாக்கவேணும்.

வா. மு. சேதுராமன் பத்து நாழ் விழா எடுக்கிறார். எதிரொலி விசுவநாதன் (பரம்பரை கண்ட பாவேந்தர்), மன்னர் மன்னன், முருகு சுந்தரம், கோவிந்தன் போன்றார் நூல்கள் வருகின்றன. பேச்சும் போற்றுதலும் காற் றோடு வந்து நேற்றோடு போகும் என நிலை பேறுடைய வகையில் நல்ல பதிப்புகளும் நல்லாய்வுகளும் வரப் புதுவை அரசும் தமிழக அரசும் பற்றாளர்களும் பெருஞ்சாதனை புரிந்திடவேணும். பல்கலைக் கழகம் இவர் பெயரில் அமைந்து விட்டது.

## 115. கண்ணதாசன் புகழ் பாடி...

வள்ளுவர், இளங்கோ, கம்பர், பாரதியார், பாரதிதாசன் அருங்கவிஞர் வரிசையிலே இடம் பெற்று விட்டவர்; மக்கள் கவிஞராக மலர்ந்தவர்; காலத்தை வென்று நின்ற கவிஞராக விளங்குபவர். திரை உலகில் ஒப்பாரும் மிக்காருமின்றி ஓகோவெனக் கொடிகட்டிப் பறந்தவர். இவர் நாளில் இவர் கோல நிலவாகக் கொலுவீற்றிருந்தார்.

இவர் பாக்களில் ஏதோ ஒரு செய்தி (message) இருக்கவே செய்தது. முன்னை இலக்கியங்களெல்லாம் வாயில் நுழையாதிருந்தபோது, இவர் அவற்றைப் பிள்ளை முதல் பெரியவர்வரைப் பிரியமுடன் முணுமுணுக்குமாறு வளமை யுடன் எளிமைப்படுத்தித் தந்தார்; அவை வாழ்வு பெற்றன. வெறும் சொல்லடுக்காக இல்லாமல் செறிவு மிக்கிருந்தன இவர் பாடல்கள்; கருத்தும் சொல்லும் கட்டிப் புரண்டு உருண்டோடி வந்தன.

வெற்றிசைக்குரிய வார்த்தைகளாக இல்லாமல், பருந்தும் நிழலும் போலே பாட்டும் பண்ணும் இணைந்து பிணைந்து வந்தன. இவர் பாட்டில் ஒரு இழும் (Rhythm) இயல்பாகவே இயன்று வந்தது. தலையோங்கி நின்றது தத்துவம் (Philosophy). முதலில் தத்துவவாதியாக இல்லாது எவரும் கவிஞராக முடியாது என்பதற்கேற்ப முத்து முத்தான கருத்துக்கள் முந்தி வந்து நிற்கின்றன. பாட்டுக்குப் பாட்டு பட்டறிவு, வரிக்கு வரி அனுபவ வார்ப்புகள்.

ஒரு சிறந்த கவிஞன் என்றால் அவன் கவிதை உள்ளத்தைக் கவர வேணும், கவ்வ வேண்டும். அப்படி உள்ளத்தை அள்ளுவன கண்ணதாசரின் கள்ளூறு கவிதைகள். அதிலும் இறையுணர்வு மேலிட்ட பின்றைப் பாடிய அனைத்தும் அமுத ஊற்றுக்கள். நல்ல தமிழன் உள்ளத்தில் எல்லாம் ஊன்றிய ஒப்பற்ற கவிஞர்க்குப் பிறந்த மண்ணில் சிலையும் நினைவு மண்டபமும் எழப் போகின்றன.

மாகவிஞன் மறைந்த பின் மன்றங்கள் அங்கங்கே (சென்னை கோவை பட்டுக்கோட்டை) தோன்றி நினைவு விழாக்கள் நிகழ்கின்றன. இவரது 'அர்த்தமுள்ள இந்து மதம்' வரிசை நூல்களைப் பச்சையப்பன் கல்லூரிப் பேரா. மன். இரா. செயராமன் ஆராய்ந்து 87ல் டாக்டர் பட்டம் பெற்றுளார். (புதுக்கோட்டை மன்னர் கல்லூரி சுப. கதிரேசன் ஆய்வு செய்கிறார்). 'மழலை மன்றம்' இதழில் கண்ணதாசன் புதிய சிந்தனைகள் தொடர்கின்றன. மணிவிழா நாள் 24-6-87இல் 'கவியரசு கண்ணதாசன் கழகம் சென்னையில் துவக்கியுள்ளார்.

1. No man was ever yet a great poet without being, at the same time, a profound philosopher-Biagraphica Literaria. S.T. Coleridge.

கவிஞரின் உதவியாளராகக் கால் நூற்றாண்டு பணிபுரிந்து அவர் நூல்களையெல்லாம் தொகுத்த **இராம. கண்ணப்பன்**, வெளியிட்ட **வானதி திருநாவுக்கரசு** இருவரையும் நன்றியுடன் நினைக்க வேணும். அதேபோல் அவரின் கவிதைகளை எழுத்தெண்ணிப் படித்து மூச்சுக்கு மூச்சு முழக்கிய **சோம இளவரசு**, அவர் புகழ் பரவும் **அரு. நாகப்பன்** இருவரும் இரு சிறகுகள். கவிஞரைப் போற்றிப் புரந்த **சாண்டோ சின்னப்பா தேவரும்** வந்திக்கத் தக்கவர், கல்கத்தா சூா. சு. மணியம் கருதத் தக்கவர்,

கவியரசரின் புகழ் பரப்புவதே குறிக்கோளாகக் கொண்ட கவிஞரின் மறு உரு ஆன நற்சாந்துபட்டி **எல். சோமு** ஆண்டு தோறும் அக். 17இல் கோவையில் கண்ணதாசன் விழா எடுத்து வருகிறார். அறக்கட்டளை, மணிமண்டபம் (அரசு) எடுக்கக் காரணர். கவிஞர் கவிதை இவருக்குக் கற்கண்டு. இவரை ஊக்கிய கலைஞர், சின்ன அண்ணாமலை, தமிழ் வாணன், வலம்புரி சோமநாதன் 'தென்றல்' நடத்திய ஆ. நடராசன் செட்டியார், 'கண்ணதாசன்' இதழ் நடாத்திக் கைப்பொருள் இழந்த கீழைச் சீவற்பட்டி ராசேந்திரன், அரசவைக் கவிஞராக்கி, தமிழக வரலாற்றைக் காவியமாகப் பாடப் பணித்த எம். ஜி. ஆர். போல்வாரையும் நினைக்க வேண்டும். கரூர் கல்லூரி ஆங்கிலப் பேரா. இலட்சுமி நரசிம்மன் கண்ணதாசன் காதலர்; கவிதைகளைக் கரைத்துக் குடித்தவர்!

இப்படி இலக்கிய வரலாற்றில் பெரிய இடம் பெற்ற பெருங்கவிஞரின் பா பரவி வருகிறது; புகழ் ஓங்கி வளர்கிறது. வள்ளுவர் பாரதி மேற்கோள் போல் கண்ணதாசன் கவிதை வரிகள் மேற்கோள்களாக மிடைந்து வரும் காலம். கண்ண தாசரைக் கழறாவிடில் கண்ணியப்படாது எனும் நிலை நேர்ந் துளது. கற்றோர்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும் கவி. இளைஞரும் முதியோரும் ஒருசேர ஒப்பும் ஏத்தும் ஒரு பெரும் கவியரசர். இனிக் கண்ணதாசன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போம் என்றாகி வருகிறது. இருக்கும்போதும் இறந்த பின்னும் பொன்றாப் புகழ்பெற்ற பெருங் கவிஞனன்றோ?

## 116. வள்ளல்கள்

முன்னம் தமிழ் வளர்த்தோர் மூவேந்தர். பின் புரந்தோர் கடையெழு வள்ளல்கள், பிற்காலச் சோழ மன்னர்கள். சடையப்ப வள்ளல், சீதக்காதி, பாண்டித்துரைத் தேவர். முடியாட்சி முடிந்து குடியாட்சி மலர்ந்ததும் எல்லோரும் இந் நாட்டு மன்னர். 'செல்வத்துப் பயனே ஈதல்' என்பதுணர்ந்த செட்டி நாட்டுச் செல்வர்கள் போன்றார் இந்நாளில் செந் தமிழ் புரந்து வருகின்றனர். இவர்களை நினையாவிடில் நன்றி கொன்றவர்களாவோம்.

**வள்ளல் ராம. அழகப்பச் செட்டியார்:** *1909—57.* கோட்டை யூர். க. வீ. அள. ராமநாதன் செட்டியார்: உமையாள் ஆச்சி. மாநிலக்கல்லூரி இலக்கிய ஆனர்ஸ் மாணவர். லண்டன் சென்று சட்டம் பயின்று பார்-அட்-லா ஆனார். தொழில்

அதிபரானார். கல்விக்கென 75 லட்சம் நன்கொடை நல்கி யுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு 5 லட்சம்; திருவிதாங்கூர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை துவங்க 43இல் ஒரு லட்சம் தந்தவர். கலைக் களஞ்சியம் கொணர வேண்டும் என்றதும் ரூ. 10,000 தந்தார். கம்பன் கழகத் தலைவர், 'குமுதம்' சிறப்பாசிரியர்: காரைக்குடியில் 4 பள்ளிகள், 4 கல்லூரிகள். ஒரு தொழில் நுட்பப் பள்ளி தொடங்கினார். இவரது உதவியாலேயே மத்திய மின் ரசாயன ஆராய்ச்சி நிலையம் காரைக்குடியில் அமைந்தது. மதிப்பியல் டாக்டர் பட்டங்கள், சர், பத்மபூஷன். வாழ்வு முழுதும் தொழு நோயுடன் போராடித் தொண்டு பல புரிந்தவர் செட்டி நாடு தந்த செந்தமிழ் வள்ளல். ஒரே மகள் உமையாள் திருமணத்தில் தமிழிசையே முழங்கச் செய்தார்.

**கருமுத்து தியாகராச செட்டியார்:** *16-6-1893—29-7-1974.* தெற்கூர். கொழும்பில் ஆங்கிலம் பயின்று ஆங்கிலேயரே வியக்கும் வண்ணம் எழுதவும் பேசவும் ஏற்றம் பெற்றார். யாழ்ப்பாண சிற்கைலாசம் பிள்ளையிடம் (1857-1916) தமிழ் கற்றார்; மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் வதிந்த அரசஞ் சண்முக னாரிடம் தொல்காப்பியம் பயின்றார். நாள்தோறும் 12 ஆண்டுகள் திருப்பரங்குன்றனை வழிபட்டு மீனாட்சி ஆலைக்குத் திரும்பும்போது இரவு 8-30க்கு நாவலர் பாரதியா ருடன் பசுமலை மாளிகையில் இலக்கியங் குறித்து ½ மணி யாவது உரையாடிச் செல்வாராம்! சங்க இலக்கியம் சில இவ ருக்கு மனப்பாடம். தியாகராசர் கல்லூரித் தமிழ்த் துறைக்குப் பணிக்கு வரும் நேர்முகத் தேர்வில் வினாவிற்குரிய பாடல் களைப் பகர முடியாது தடுமாறும்போது இவர் எடுத்துக் கூறி விளக்கம் தருவாராம்! திருவாசகம் முழுதும் மனப்பாடம்.

தம் ஒவ்வொரு மாளிகையிலும் நூலகம் அமைத்தார். உ. வே. சா., பண்டிதமணியிடம் பேரன்பு மிக்கவர். இந்தி எதிர்ப்புக்காகக் காங்கிரசிலிருந்து விலகிக் கொண்டார். 41இல் மதுரையில் தமிழ் விழா நடத்தினார்; 'ஶ்ரீ'க்கு பதில் 'திரு' பயன்படுத்த வேண்டுமெனப் போராடி ஏற்கச் செய்தார். சொல்லாராய்ச்சியில் சொக்கிப் போய்விடுவாராம்! அண்ணா மலையில் செட்டி நாட்டரசர் செய்ததுபோல, இவரும் தம் கல்லூரிக்குத் தமிழறிவர்களைத் தேடிக் கொணர்ந்தார். தமிழகத்தில் தலைநகர் விடுத்து வெளியே தமிழ் முதுகலை முதலில் (50 இல்) தொடங்கியது இங்கேதான்! 'கலைத் தந்தை', ஆலை அரசர் என்றேத்தப் பெற்றவர்.

நல்ல தமிழ் பரவ 'தமிழ்நாடு' நாளிதழ் தொடங்கினார். தமிழகப் புலவர் குழு, கமில் சுவலபில், ஈராஸ் பாதிரியார், இலக்குவனார், அவ்வை துரைசாமிப் பிள்ளை போன்றாரைப் பேணிப் போற்றியவர். ஈராஸ் பாதிரியாரின் ஆய்வுக்கு நிதி யுதவியவர். திரு. வி. க. அவர்கட்கு உதவ முனைந்தார், அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. இவரது வரலாற்றை பேரா. சு. குழந்தைநாதன் வரைந்துள்ளார்: மகன்கள் :

**தி. மாணிக்கவாசகம் செட்டியார்**: *1920-82.* தமிழ்நாடு ஆசிரியர். தமிழுக்குக் கதியாகிய கம்பனைப் புதிய பார்வையில் கண்டு 'நாரணன் விளையாட்டு' பரதன், மன்னர் மன்னன் (நாடகங்கள்), வள்ளுவர் பற்றி 'வான்புகழ் வள்ளுவர்' வரைந்தார். சிலம்பு பற்றிச் செந்தமிழ்ப் பாவை,; பஞ்சாலைத் தொழில் பற்றிப் பஞ்சாலைத் தொழில் I, II; பயண இலக்கிய மாக 'சப்பான்' படைத்தார். இவர் மகன் டாக்டர் **தியாக ராசன்.** அமெரிக்காவிலிருந்து வரும் 'தமிழ் உலகம்' ஆசிரியர் குழுவில் உள்ளார்.

**தி. சுந்தரம் செட்டியார்**: *மீனாட்சி* ஆலையை நிர்வகித் தார்; தியாகராசர் கல்லூரித் தாளாளர். இவர் மகன் **சொக்க லிங்கம்** *(29-4-1943),* சைவ சமய ஈடுபாடு; திருப்பணிச் செல்வர். திருமுறைகளைப் பதிப்பிப்பதும், பழந்தமிழ்ப் புலவர்களைப் போற்றுவதும் வல்லவர். 'கோயில்' (தொகுப்பு) கடம்பவன புராணம் பதிப்பித்துள்ளார். சமயப் பேச்சாளர். மிச்சிகன், கலிபோர்னியாவில் பயின்றவர்.

**ஏ. வி. மெய்யப்ப செட்டியார்**: *1907-79.* காரைக்குடி. திரை யுலக மேதை. 'ஏ வி எம்' ஸ்டுடியோ நிறுவியவர். இறுதி மூச்சு வரை தமிழ் நூல்கள் படித்துக் கொண்டிருந்தவர்; பலநூறு பாடல்கள் மனப்பாடம். 48 இல் பாரதி பாடல்களின் ஒலி பரப்பு உரிமை அனைத்தும் விலைக்கு வாங்கியிருந்தவர். 'நாம் இருவர்' படம் மூலம் முரசுப் பாடலை வெளியிட்டார்; பொதுச் சொத்தாக்க விரும்பியபோது உரிமையை வெறுமனே விட்டுக் கொடுத்தார். பாரதி பாடல் ஒலியிழை வெளியிட் டுள்ளார். இங்ஙனம் பாரதியைப் பட்டி தொட்டியெங்கும் பரப்பிய பெருமையர். பி. ஸ்ரீ., தி. ஜ. ர., நாமக்கல் கவிஞரின் நண்பர். அண்ணா பாவேந்தர்க்கு நிதி திரட்டியபோது முதல் நன்கொடை வழங்கியவர். மணிவிழா எழுத்தாளர்கட்குப் பண முடிப்பு தந்தவர்; வளரும் எழுத்தாளர்க்கு வாழ்வளித்தவர்; தம் வீட்டுத் திருமணங்களில் எழுத்தாளர்கட்குப் பரிசும் அன் பளிப்பும் அருளியவர். தமிழின் இனிமை திகழ சொற்களை

உச்சரிக்க வேண்டும் என விழிப்பாக இருந்தவர். குழந்தை இலக்கியம் கொழிக்கத் தங்க வெள்ளிப் பதக்கங்கள் வழங்கினர். உலகத்தமிழ் ஊர்வலத்திற்கு முதுகெலும்பாக அமைந்தவர். மக்கள் மூவர்-மும்மணிகள்.

**சரவணன்** : எழுத்தாளர்; எழுத்தாளர்க்கு இயன்றன ஏற்றன புரிபவர்; கவிஞர்களைப் போற்றுபவர். 2. ஏ.வி.எம் அவென்யூ. ராதாகிருட்டிணன் சாலை, சென்னை-4 (846070). **பாலசுப்ரமணியன்** : 2. செனடாப் சாலை, 2ஆவது சந்து, சென்னை-18 (421183). **குமரன்** : 6ஏ, ராதாகிருட்டிணன் சாலை, சென்னை-4 (86511).

**தமிழ் வள்ளல் உ. ராம., மெ. சுப. சேவு. எழு. மெய்யப்ப செட்டியார்** : 1910-67. தேவகோட்டை. வாழ்நாள் முழுதும் வாரி வழங்கியவர்; தமிழகப் புலவர்களுடன் எல்லாம் தொடர்பு கொண்டிருந்தவர். எந்த நூலை யார் வெளியிட வேண்டும் என வந்தாலும் வரையாது உதவியவர். புலவர் கல்லூரி மாணவர்கள் பல்லோர்க்கு பொருளுதவியவர். மன்றங்கள் மாநாடுகளுக்கெல்லாம் மனமுவந்து வழங்கினார். புலவர்கள் புடைசூழ இருப்பர். எப்போதும் இலக்கிய நயம் காணலும் சர்ச்சையும் தான், பழுமரமாக பிறங்கினார். நேரில் வந்தோர்க்கும் கடல்வழி நாடியோர்க்கும் உடனுக்குடன் உதவுவார். வெளியூர் செல்லும்போதும் புலவர் பெருமக்கள் கூடவே இருப்பர். தமிழை மதித்தார், தமிழ்ப் புலவர்களைத் துதித்தார். சரிநிகர் சமானமாக நடத்துவார்; உடனிருந்தே உண்பார். பொங்கல் விழாவின்போது அரிசி, வெல்லம், கரும்பு, தேங்காய், மஞ்சள் கொத்து எல்லாம் ஆண்டு தவறாமல் அனுப்பி விடுவார். தெ. பொ. மீ. யைப் போற்றியவர். இவரிடம் உதவிபெறாத புலவர்கள் இல்லையென்றே இயம்ப வேண்டும். கரந்தைத் தமிழ்ச் சங்கப் புரவலர்; நாட்டார் பேரவைத் தவைவர். தஞ்சை சக்திவேல் பிள்ளையிடம் தமிழ் முழுதுணர்ந்தார். தந்தவை : ஐயாறு அறம் வளர்த்த நாயகி பதிகம், ஐயாறப்பர் நவமணிமாலை, சிவபூசை முறை அனுட்டான விதி, சைவ சித்தாந்த விதி, சட் பிரபந்தம், சைவ தர்ப்பண விதி, துவைதப் பிரபந்தம் எனப்-15.

இவரின் இளவல் சேவு. அ. அண்ணாமலைச் செட்டியார் சரளமாகப் பேசவும் கவி புனையவும் வல்லார். தமிழ்நாடு நாளிதழில் 'மலேசியக் கடிதங்கள்', 'மலேயாவில் தமிழ்ப் பண்பாடு' எனத் தொடர்ந்து எழுதினார். பண்டிதமணியின் பக்தர்.

**பெத்தாச்சி வள்ளல்:** 1924. திருச்சி மாவட்ட ஆண்டிப் பட்டி குறுநில மன்னர், மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்குப் பல் லாயிரம் வழங்கியவர்; கரந்தைத் தமிழ்ச்சங்கக் கட்டிடத்திற்கு நிலம் வாங்கித் தந்தவர். நிறைய நூல்கள் வழங்கினார். 'பெத்தாச்சி புகழ் நிலையம்' எனப் பிறங்குகிறது. இவரிடம் பரிசில் பெற்றோர் எண்ணத் தொலையாதவர் (நாமக்கல் கவிஞர்). இவர் உதவியால் எண்ணரு நூல்கள் (மு. ராவின் சேரன் செங்குட்டுவன்) வெளிவந்தன. திங்கள்தோறும் நூற்றுக்கணக்கான மாணாக்கர்க்குப் பொருள் அருளினார். அவர்களே இவர் பிள்ளைகள் என்பார், தமக்கு வாரிசு இன்மையால் கரூர் நகராட்சி ப. உ. ப., பாளையங்கோட்டை சைவ சபை போன்றவற்றுக்குப் பெரும் பொருள் தந்தவர். அரண்மனைப் புலவர் திருஞான சம்பந்தக் கவிராயர்.

**முறையூர் வள்ளல் பழ. சி. சண்முகஞ் செட்டியார்:** (1875-1930) நூற்றுக்கும் மேலான புலவர்களைப் புரந்தவர்; அன் பளிப்பாக வழங்குதற்காக மதுரையில் ஜவுளிக்கடையொன்று வைத்திருந்தார். சீட்டு சென்றதும் பட்டாடையும் பொன் னாடையும் வழங்குவர். மாளிகைப் புலவர் கருப்பையாப் பாவலர். பலரின் பாடல்களை 'தனிச் செய்யுட் சிந்தாமணி' எனத் தொகுப்பித்தார்.

**கோனூர் சமீன்தார்:** பெ. ராம. ராம. சித. சிதம்பரம் செட்டியார் (1965-1952). நற்சாந்துப்பட்டி. தமிழன்பர்களை வரவேற்று அளவளாவிப் புரந்தனுப்புவதே தம் வாழ்வின் பெரும் பயனாகக் கொண்டிருந்தவர். திருக்கொள்ளம்புதூரில் வைசப் புலவர் மாநாடு கூட்டினார். பண்டித மணியின் நண்பர், அவர் நூல்களையும் மணிவிழா மலரும் வெளிவர உதவியவர். விபுலானந்தர், நாவலர் பாரதியார் போன் றாரைப் புரந்தவர். யாழ்நூல் வெளிவரக் காரணர். புதுக் கோட்டை இராம நிலையமும், இலங்கை உட்ஸ் டாக் எஸ்டேட்டிலும் தங்காத புலவர்களே இலர்.

செட்டி நாட்டரசர், முத்தையவேள், எம். ஏ. எம். இராம சாமி (தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்காகத் தலைநகர் சென்னை யில் மாளிகை கட்டித் தருவதாக உறுதி கூறியவர்).

**பினாங்கு வள்ளல் ஆறுமுகம் பிள்ளை:** திருப்புத்தூர் சீதையம்மாள் ஆறுமுகம் பிள்ளை கல்லூரி நிறுவனர். பிறந்த நாட்டுக்கும் புகுந்த நாட்டுக்கும் பெருமை சேர்ப்பவர். தமிழுக்கும் சைவத்துக்கும் தொண்டு புரிந்து, பினாங்கில்

சிதறுண்டு கிடந்த தமிழர்களை ஒருமையுறச் செய்து உறுதியுடன் வாழவைத்தவர். 'தமிழ் மலர்' தினமணி நாளிதழ் அதிபர். கொடிமலைக் குமரன் கோயில் மண்டபம் கட்டியவர்.

**வள்ளல் சிதம்பரம் பிள்ளை :** 5-7-1899-1970. திருச்சி ஓமந்தூர். 18 வயதில் மலை நாடு மேவியவர். உழைப்பால் உயர்ந்து உயர்புகழ் எய்தியவர். தெலுக்கான்சனில் ஒரு லட்சம் செலவில் சிதம்பரம்பிள்ளை தமிழ்ப் பாடசாலை 54இல் திறந்தவர். சசக்ஸ் தோட்டத்தில் 2 லட்சம் செலவில் சிதம்பரம் பிள்ளை அனாதை ஆசிரமம். இதற்கு உறுதுணையாக 10 லட்சம் மதிப்புள்ள 2ɔ3 ஏக்கர் ரப்பர் தோட்டம் நல்கியுள்ளார். மாணவர்கட்கு உதவித்தொகை தருகிறார். டத்தோ, ஜேபி. டிபி. எம்.பி. போன்ற விருதுகள் பெற்றவர். 10 லட்சம் தமிழ்க்காக ஈந்தவர். மக்கள் எஸ். நடராஜா, கே. ஆர். எஸ். பெரியசாமி இருவரும் தந்தையின் பணி தொடர்கின்றனர்.

**பினாங்கு வள்ளல் ரெங்கசாமி பிள்ளை :** திருப்புத்தூர். மலேயா பல்கலைக் கழகத்தில் தமிழ் அரியணை ஏற உதவிய துணைத் தலைவர். தமிழுக்காக அள்ளித் தந்தவர். தமிழர் திருநாள் குழுத் தலைவர். உழைப்பால் உயர்ந்தவர்.

பொள்ளாச்சி வள்ளல் மகாலிங்கம் தமிழுக்குப் பல்லாற்றான் பேருதவி புரிந்து பல்லோரைப் புரந்து வருகிறார் (பக் ), மணலி ராமகிருஷ்ணமுதலியார், வி. ஜி. பி. சகோதரர்கள், நல்லி சி. ரெங்கசாமி செட்டி, முத்தமிழ் வள்ளல் ஏ. ஒய். ஏ. அருளானந்தசாமி நாடார் (தஞ்சை), புலவர்கட்குப் பவுன் தந்து போற்றிய அரித்துவார மங்கலம் ரகுநாத ராஜாளியார், ஏ. கே. வேலன், கரூர் 'எல். ஜி. பி,' வரதராஜுலு, தருமை, திருவாவடுதுறை திருப்பனந்தாள் ஆதீனங்கள்,

பாரதியாரைப் புரந்த கானாடு காத்தான் வை. சு. சண்முகனார், உ. வே. சா. வுக்கு உதவிய திவான்பகதூர் தர்ம பூஷணம் இராமச்சந்திரபுரம் முத்தையச் செட்டியார், தோல் வணிகர் ஆ. நாகப்பச் செட்டியார், இராயவரம் குழந்தையன் செட்டியார், கோவை ஜி. கே. சுந்தரம், பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு, பி. எஸ். ஜி. ஜி. கோவிந்தசாமி நாயுடு, திருச்சி பனாமா டைமண்ட்ஸ சுப்பராயலு செட்டியார், வள்ளல் மு. வரதராசனார் (பம்பாய்), கொடைக் கோமான் த. பி. சொ. அரிராம் சேட், குடந்தை மைதீன் புகையிலை பக்கீர் முகைதீன், கூத்தா நல்லூர் அஜீஸ், திருச்சி துரைசாமிப் பிள்ளை, டாக்டர் மதுரம்; சிதம்பரம் கனகசபை பிள்ளை, வாகீசம் பிள்ளை,

டாக்டர் கு. அரங்கசாமி பிள்ளை; விருது நகர் வள்ளல். வி. வி. இராமசாமி நாடார்; ராஜபாளையம் ராஜுக்கள்; மதுரை லெ. நாராயணன் செட்டியார்.

இப்படித் தமக்கென வாழாது பிறர்க்கென முயலும் பேரருளாளர்கள் உண்மையானே, உண்டாலம்ம இவ்வுலகம்!

## 117. அறக்கட்டளைகள்

வாழ்வின் இன்றியமையாத் தேவைகள் மூன்று: உணவு உடை உறையுள். பலரின் வாழ்வு இம்மூன்றைத் திண்டாடித் தேடுவதிலும் கொண்டாடித் துய்யப்பதிலுமே கழிந்துவிடுகிறது. இது உடல் வாழ்வு, விலங்கு வாழ்வு. இதனைத் தாண்டி பேசும்மொழி, பேணும் நாடு, போற்றும் இனம் இவற்றுக்குத் தொண்டு செய்து மன்னாவுலகத்து மன்னுதலாம் தம் புகழ் நிரீஇத் தாம் மாய்தலே உயர்வாழ்வு.

அறவழி ஒழுகிப் பொருளீட்டி, அதுகொண்டு சுற்றம் தழீஇ இன்புற்றுப்பின் உடல் வாழ்வு நீத்துப் புகழ் வாழ்வு பெறுதலே, உறுதிப்பொருள் அறம் பொருள் இன்பம் வீடு நான்கும் அடைதலே வாழ்வின் நோக்கு. தான் தன் வீடு என வாழ்தல் தன்னல வாழ்வு; நாடு இனம் மொழி என்ற மும்மைக்காக வாழ்தலே செம்மை வாழ்வு. சிறந்த வாழ்க்கை!

அப்படிப்பட்ட நல்லோர் சிலர் இருப்பதாலேயே எல்லோர்க்கும் மழை பெய்கிறது. இல்லறக்கடன் இனிதாற்றிய பின் ஈட்டிபொருளை Conventional necessities, necessities of Life : Food, Clothing and shelter.

வழிவழி விளங்க அறக்கட்டளைகளாக (Trust) ஆக்கி அகமகிழ்கின்றனர். இந்தப் பேருள்ளம் எல்லோர்க்கும் வாய்க்காது; இந்தச் சிந்தை சிலருக்கே தோன்றும். இப்படி இன்றமிழுக்காக்கிய ஏந்தல் சிலரை எண்ணுவாம்; இன்பமும் இதமும் தரும்.

தமிழுக்காகவே வாழ்ந்த திவான்பகதூர் சரவணபவானந்தம் பிள்ளை 'பவானந்தர் கழகம்' (Bananandam Academy) அமைத்து அருந்தமிழ்ப் பணிபுரிந்தவர். ஈட்டிய பொருள் இல்லம் எல்லாவற்றையும் தமிழுக்கே உரிமையாக்கிச் சென்றார். தக்கார்களின் கருத்து மாறுபாட்டால் விருப்பா வணப்பணிகள் நடைபெறவில்லை. அக்காள் மகன் நைனா

துரை உயர்நீதிமன்றில் வழக்கிட, அறக்கட்டளையாக மாற்றப்பட்டு, தமிழ் நாட்டரசு பொறுப்புச் சொத்தாட்சியர் ஆளுகைக் கீழ் வந்தது. தமிழ் பி. ஏ; எம் ஏ; பி. லிட் தேர்வில் முதன்மை யுற்றோர்க்குப் புத்தகங்களும் தங்கப்பதக்கமும் அளித்து வருகிறது. பல்லாயிரம் நூல்கள் கொண்ட நூலகம் பாழ்பட்டது. எம். சந்தானம், சே. கண்ணன் முயற்சியால் 1-8-86 குழு அமைத்து நூலகத்தைத் தொடங்கி நடத்த ஆணை வழங்கியது. 25-4-87இல் சொத்தாட்சியர் சே. கண்ணன் வரவேற்க, ஜஸ்டிஸ் செங்கோட்டு வேலன் தலைமையில், அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் திறந்து வைக்க, டாக்டர் ரத்தினவேலு சுப்பிரமணியம், அவ்வை நடராசன் வாழ்த்துரைக்க நூலகம் பணி தொடங்கியது. பேரா. இராம. சுப்பிரமணியம் செயலர் டி. என். அனந்தநாயகி உறுப்பினர்.

சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை அன்னை சொர்ணாம்பாள் சொற்பொழிவுக்கென சென்னை, அண்ணாமலையில் ரூ, 25,000 அளித்தார். சென்னைப் ப. கழகத்தில் கல்வி நினைவுச் சொற்பொழிவுக்கு அறக்கட்டளை அவர் குடும்பத்தவர் ஏற்படுத்தினர். அவ்வை டி. கே. சண்முகம் சென்னையில் பம்மல் சம்பந்த முதலியார், மதுரையில் சங்கரதாஸ் சுவாமிகள் சொற்பொழிவுக்குக் கட்டளை அமைத்தார்.

காரைக்குடி சொ. அண்ணாமலைச் செட்டியார் அண்ணாமலையில் ரா. ய. சொ. சொற்பொழிவு நிகழவும், தேவகோட்டை சேவு அண்ணாமலைச் செட்டியார், மதுரையில் பண்டிதமணி நினைவுச் சொற்பொழிவு நிகழ்த்தவும் அறக்கட்டளை அருளினர்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் உ. வே. சா. சீதக்காதி, ஏவி. எம். ஜாபர்தீன், பாவாணர், ம. பொ. சி., வ. உ. சி, செய்குதம்பிப் பாவலர், கிருத்துவமும் தமிழும், மு. வ. பெயரில் சொற்பொழிவு அறக்கட்டளை நிறுவியுளது. அன்பர்கள் ஆர்வலர்களிடம் குறைந்தது ரூ. 100 எனப்பெற்று சன நாயக முறையில் அமைத்தது போற்றத்தக்கது.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் தொல்காப்பியர், நாவலர் பாரதியார், பாரதியார், ஜஸ்டிஸ் மகராசன், சரவண முதலியார், தமிழ்ப்பண்ணிசைப் பாதுகாப்பு, மெலட்டூர் ஞானாம்பாள் சுவாமிநாதன் நாடகப் பாதுகாப்பு, இந்து ஆலயங்களின் அறக்கட்டளைகள் அமைந்துள.

மணிவாசகர் நூலக மெய்யப்பன் வெற்றி அறக்கட்டளை நிறுவி அவ்வப்போது தமிழ்ப்பணிக்கு உதவிவருகிறார். 23-3-1987இல் அண்ணாமலையில் நடந்த எழுத்தாளர் மாநாட்டின்போது விருந்து புரிந்தார். டாக்டர் ந. சஞ்சீவி தாம் ஈட்டிய பொருள் கொண்டு 7 பல்கலைக் கழகங்களில் ரு 25 000 வீதம் அறக்கட்டளை நிறுவிச் செயற்கரிய செய்துளார். இன்னும் மது. ச. வி., பேரறிஞர் பவானந்தர் அறக்கட்டளை, நாவலர் நாட்டார் அறக்கட்டளை அமைத்துளார், ஆடூர் எம். ரத்தினசபாபதி பிள்ளை பன்னிரு திருமுறைச் சைவ சித்தாந்த அறக்கட்டளை அண்ணாமலையில் உளது.

திருபனந்தாள் காசிமடம் புலவர் தேர்வில் முதன்மை பெறுவார்க்கு ஐந்தாம் ஜார்ஜ் நினைவுப் பரிசு 1,000 வெண் பொற் காசுகள் அளிக்கிறது. காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள், காசி, அண்ணாமலை, போன்ற இடங்களில் சைவசித்தாந்தத் திருமுறை, சிவஞான சித்தியார் என எண்ணற்ற அறக்கட்டளைகளை நிறுவியுள்ளார். தருமை திருவாவடுதுறை ஆதீனங்களும் பல அமைத்துள. பூண்டி வாண்டையாரின் சேதுக்கண்ணு அம்மாள் அறக்கட்டளை மாணவர்கட்கு உதவித் தொகை அளிக்கிறது.

அண்ணாமலைச் செட்டியார், எம். ஏ. எம், ஏ, வி. எம், இலக்கியச் சிந்தனை அமரர் தேவன் அறக்கட்டளைகள் எனப் பல அமைந்து பைந்தமிழுக்குப் பல்லாற்றான் பணியாற்றுகின்றன. இவற்றைப் பயன்படுத்திப் பெருமை பெறுவது நந்தமிழர் கடன்.

## 118. தமிழ்த் தொண்டர்கள்

தமிழுக்காகவே வாழ்ந்து தேய்ந்த தமிழ்ப்பணியாளர் பலர் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் பணியாற்றி ஓய்வுற்றனர். பதவியில் இருக்கும் வரை பாராட்டி, ஓய்ந்தபின் பராமுகமாக இருப்பது உலகியல். பட்டம் பதவிவகிக்கும்போது முறுக்கேறிய வயதில் ஊக்க வேண்டா; உடல் தளர்ந்து ஒதுங்கி இருக்கும்போதுதான் உண்மையான அன்பு செலுத்துதல் வேண்டும். அதுவே நன்றியுமாகும். நம்முன் பணியாற்றி மறைந்தாரின் பணியையும் நாம் நினைத்தல் வேண்டும். 'தமிழுக்குத் தொண்டு செய்தோன் சாவதில்லை' என்றாரே பாவேந்தர்?

**அ. கிருஷ்ணசாமி நாயுடு :** *10-12-1888-* தமிழாசிரியர். கவிச் சக்கரவர்த்தி கம்பர் வரலாறு, கம்ம வாரும் தமிழ் நாடும்.

தொல்காப்பியர் கண்ட தமிழர் சமுதாயம், பகவன் கீதை உண்மைப் பொருள். **முகவரி:** 258, கிரியம்மன் கோவில் வீதி, பீளமேடு, கோவை-14.

**பு. ரா. புருஷோத்தம நாயுடு :** 15-11-1901. சிதம்பரத்தை யடுத்த புவனகிரி. அண்ணாமலையில் தமிழ் பயின்று திருவை யாறு தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளராக விளங்கி, சென்னைப் பல்கலைக்கழக விரிவுரையாளராக உயர்ந்து சிறந் தவர். இலக்கணம் வைணவம் இரு கண்கள். திருவாய் மொழி ஈட்டின் தமிழாக்கம் (பத்து படலங்கள்) இவரது அரும் பெருங்கொடை; அரசினர் பரிசு பெற்றது. இவரது மகன் இராசகோபால் பச்சையப்பனில் தமிழ் எம். ஏ. பயின்று, சென்னைப் பல்கலைக்கழக நூலகராக நிலவுகிறார். **தொடர்புக்கு:** 32, இராசகோபால நாயக்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

**ஆ. ஜெபரத்தினம் :** 10-6-1906. தென்காசி வட்ட குறும் பலாப்பேரி. அண்ணாமலையில் பி. ஓ. எல் பயின்று, பின் எம். ஏ. தேர்ந்து பாளையங்கோட்டை தூய யோவான் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்தார். 62இல் அண்ணாமலையில் தனி உரிமை பெற்றுப் பணியாற்றிக் கொண்டே A study of the Tamil Country and her people as depicted in Silappathiharam என ஆய்ந்து எம். லிட். பட்டம் பெற்றார். மனோதத்துவ சாஸ்திரம், இளங்கோ உள்ளம், இலக்கிய ஒளி, தமிழ் இலக்கிய வரலாறு போன்றன இவர் தந்தவை. **முகவரி :** C 90, பெருமாள்புரம், பாளையங் கோட்டை, நெல்லை-7.

**மொ. அ. துரையரங்கசாமி:** 1-7-1908. செங்கற்பட்டு மொறப் பாக்கம். வித்துவான் தேர்வில் ஆயிரம் ரூபாய்ப் பரிசு பெற்று உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராக இருந்து, 47இல் Surnames in the Cankam age—literary and tribal என ஆய்வு எழுதி எம். ஓ. எல். தேர்ந்தார் 55இல் Religion and Philosophy of Tevaram with special reference to Nambiarurar, Sundarar ஆய்வுரை வழங்கி டாக்டர் பட்டம் பெற்றார். பச்சையப்பனில் பணியாற்றி, சென்னைப் பல்கலைக் கழகப் பேருரையாளராகி 69இல் சென்னைப் பல்கலைக் கழக மதுரை வளாகத்தில் பேராசிரியராகப் பிறங்கியவர். 65இல் மதுரைப் பல்கலைக் கழகப் பேரா. வடமொழி வல்லவர். தெ. பொ. மீ. யின் சீடர்.

நூல்: தொல்காப்பிய நெறி, கருவிலே திருவுடையான், பண்டைத் தமிழ் நெறி, இலக்கியக் கட்டுரைகள், தென்றலிலே தேன்மொழி, அன்பு நெறியே தமிழர் நெறி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், இப்சன் நாடகங்கள், கதைப் புதையல் (டால்ஸ்டாய்). இலக்கணம் வல்லவர். சிந்தாதிரிப்பேட்டை வேதாந்த சங்கத்தில் தமிழ்ப் பயிற்றியவர். கடுமையானவர்.

**ரா கிருஷ்ணமூர்த்தி** : *16-9-1911*. வ. ஆ. வாணியம்பாடி. வித்துவான்; பி. ஓ. எல்; எம். ஏ; எல். டி. தேர்ந்து மதுரைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகத் திகழ்ந்து சிறந்தவர். கன்னடம், தெலுங்கு, இந்தி, வடமொழி, ஆங். வல்லவர். சென்னைக் காஞ்சி (கவிதை), இமய வெற்றி, பண்டை இந்தியப் பல்கலைக் கழகங்கள்; மாயப் பிரபஞ்சம், அறிவியல் பேரறிஞர் ஐன்ஸ்டைன், அணுவை ஆய்ந்த அறிஞர்கள் (50களிலேயே எழுதப்பட்ட அறிவியல் நூல்கள் 3), சென்னை மாநகரம், தமிழகச் செல்வங்கள், அறச் செல்வர்கள், மனிதன் வரலாறு, காந்திய நிறுவனங்கள், மாணவர் செந்தமிழ் வாசகம். பல பாடநூல்கள் எழுதியும் பதிப்பித்தும் வந்தார். இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி, போன்றவற்றில் மதிப்புரை எழுதி வருகிறார். **முகவரி**. டி 34, தங்கமணி தெரு, திருநகர், மதுரை-6.

**வடலூர் இராமலிங்கம்** : *11-1-1912*. இராமலிங்கர் பணி மன்ற ஆராய்ச்சிப் புலவர். எழுத்தாளர். நூல்கள் : பூம்பொழில், நான் கண்ட ஞானானந்த அடிகள், Gospel of Light, Wealth of Tholkappiyam. **முகவரி**: போயசுத்தோட்டம். சென்னை-86 (454784).

**ந. சேது ரகுநாதன்** : *1915*. தென்காசி வட்ட அச்சம்பட்டி. திருவையாறு அரசர் கல்லூரியில் வித்துவான் பயின்று சிறந்து விருதுநகர் செந்திற்குமார நாடார் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராக உயர்ந்து ஓய்வு பெற்று, மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் சித்தர் மருத்துவ நூலாராய்ச்சியாளராக விளங்கினார். இசையோடு பாடும் இயல்பினார். நயவுரை நவில்வதில் நிபுணர். கொடைகள் : முத்தொள்ளாயிர உரை, முக்கூடற்பள்ளு உரை, யூகி முனிவர் பிடிவாதம் ஆயிரம் போன்றன.

**பா. ரா. கந்தசாமி** : *15-1-1916*. சேலம் வேலூர் கண்டர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகத் திகழ்ந்தவர். தந்தவை : வள்ளலார் விடுத்த இலக்கணக் கடித விளக்கம்,

மாதர் விஷய உரை, இன்று வழங்கும் உலகப்பொது எண் தமிழ் எண்ணே, இங்கிதமாலையின் இனிய விளக்கம், சிலப்பதிகார காலமும் அடியார்க்கு நல்லார் உரைக் குறிப்பின் பொருத்தமும்; சாகுந்தலம் (கவிதை நாடகம்), தாகூர் கீதாஞ்சலி (பெயர்ப்பு). 'பல்கலைக் குரிசில்' என்ற பட்டம் பெற்றவர். 21-11-85. முதல் தமிழ்ப் பல்கலைக் கழகப் பெருஞ்சொல்லகராதித் துறை சொற்றொகுதிக் கண்காணிப்பாளராகப் பணிபுரிகிறார். இவர் மகள் இருவரும் தமிழ் முதுகலை, பாரதி கண்ணம்மா கவிஞர். **முகவரி** அகளகம், கல்லூரிச் சாலை, வேலூர். சேலம்.

**அன்பு கணபதி :** 21-8-1917. தஞ்சைமாவட்ட பசுபதி கோவில். வித்துவான் பயின்று சென்னைப் பச்சையப்பனில் பன்னாள் தமிழ் பயிற்றியவர். சென்னைத் தமிழாசிரியர் கழக—தமிழாசிரியர் சங்கத் தலைவர் (61). மாணவர் மன்றச் செயலர். 36 முதல் எழுதி வந்தவர்; பாவலரும் காவலரும், செந்தமிழ்ச் செல்வியர், வீணைவித்தகம் படைப்புகள். **முகவரி:** 'அன்புமனை', 27, அய்யாவு நாயுடு தெரு, செனாய் நகர், சென்னை 30.

**கா. மாயாண்டி பாரதி:** 1919. மதுரை. கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் பயின்று அண்ணாமலை பி.ஓ.எல். பாளையம் கோட்டை தூயயோவான் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகப் பல்லாண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றவர். படைப்பு: நாயக்கமாதேவி, சிந்தனைக் களஞ்சியம், இராமலிங்கர் கண்ட திருத்தணிகை, தமிழ் இலக்கிய வரலாறு, தமிழவேள், சிந்தனைக் களஞ்சியம், காவியப் பாவை, நினைத்தது நடக்கும் (நாவல்), நாவலர் பெருமான், துறவி சந்திப்பு, **முகவரி:** பாளையம்கோட்டை.

**மு. கோவிந்தசாமி:** 8-3-1920. தெ. ஆ. நெல்லிக்குப்பம். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகச் சிறந்து ஓய்வு பெற்றவர். நல்ல நாடு, இலக்கிய காலம், இலக்கியத் தோற்றம், பாரதியார் கவித்திறன், பாரதிதாசன் கவித்திறன், ஔவையும் நக்கீரரும், குறள் மணம், திருக்குறள் நயவுரை, வள்ளுவரும் காந்தியும். இவரது மகனும் இதுபோது அண்ணாமலையில் பேராசிரியராக உள்ளார். **முகவரி:** அண்ணாமலை நகர்.

**பூ. அமிர்தலிங்கன்:** 19-11-1920. முதுகளத்தூர். பல்லாண்டுகள் அழகப்பா கல்லூரியில் பணியாற்றிய பெருமகன், கவிதைத் துறையில் ஓங்கி நிற்பவர்; கவிஞர்கோ,

அளித்தவை: வள்ளுவர் கண்ட உயிரினங்கள், கருத்தும் கற்பனையும், கம்பன் கவியரங்குகளில் மலரமுதன் (புனை பெயர்). **முகவரி:** சர்ச் இரண்டாம் வீதி, புதுநகர், காரைக்குடி 623001. இவரது மகன் **அ. அறிவுநம்பி.** 19-8-53. கவியரங்கு களில் கதிரொளி வீசுகிறார். தங்கப்பதக்கங்கள் பல பெற்று ளார். 'தமிழகத்தில் தெருக்கூத்து' பற்றி ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுளார். நூல் கூத்தும் சிலம்பும். **முகவரி:** 'அறிவகம', 40 இந்திரா நகர், காரைக்குடி-1.

**ம. ரா. போ. குருசாமி :** 15-6-1922. இராமநாதபுரம் மாவட்ட மமுசாபுரம். சென்னைப் பச்சையப்பன் கல்லூரி முதுகலை; மு.வ. மாணவர். கோவை பூ. சா. கோ. கலைக் கல்லூரியில் விரிவுரையாளராகச் சேர்ந்து துறைத் தலைவராக உயர்ந்தவர். ஓய்வு பெற்றபின் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் சிறப்பு நிலைப் பேராசிரியராக விளங்கினார்.

40 முதல் எழுதி வருகிறார். வாழ்வும் வழியும், சிலப்பதி காரச் செய்தி, வித்தகர் வாழ்க்கை, சிலம்பு வழிச் சிந்தனை, சங்க காலம், மு. வ. முப்பால், சங்க காலத்திற்கு முன் பெயர்ப்பு கள்: டால்ஸ்டாய் கதைகள், மண்ணிலும் விண்ணிலும், பழந் தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மு.வ.), அஸ்ஸாமிய இலக்கிய வரலாறு, நேருவின் எழுத்துக்களும் கருத்துக்களும். மலேசியா சிங்கப்பூர் சென்று வந்தவர். 'நூலறி புலவர் என்ற பாராட்டுப் பெற்றவர். நேர்மையும் துணிவும் மிக்கவர். **முகவரி :** 'செந்தில்' தாமு நகர், புலியகுளம், கோவை-18.

**ப. அருணாசலம் :** 1-11-1923. மலேசியப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். 58 முதல் எழுதி வருகிறார். அளித்தவை: கவியரசர் பாரதி, வீடணன், குறளின் செய்தி, சிலப்பதிகாரச் சிந்தனை, தொல்காப்பியர், திருவெம்பாவை, சைவசமயம் ஓர் அறிமுகம், பக்தி இலக்கியம் (அருங்கொடை). அண்ணாமலையில் பயின்று ஆராய்ச்சி செய்து 60இல் 'மறைமலையடிகள்' பற்றி ஆய்ந்து எம். லிட்; 67இல் History of Tamil Syntax (The period of Tolkappiyam and Sangam) எனப் படைத்து டாக்டர் பட்டமும் பெற்றவர். மதிப்புக்குரியவர். **முகவரி:** 40 ஏ. வெள்ளாளர் காலனி மேற்கு, இராமவர்ம புரம், நாகர்கோவில்.

**இரா. பெரியசாமி :** 12-12-1923. சேலம் குகை. சேலம் கல்லூரி பாவாணர், உலக ஊழியனார் மாணவர். சென்னை அரசினர் கலைக்கல்லூரி, நந்தனம் கலைக் கல்லூரிகளில்

பணியாற்றி ஓய்வு பெற்றவர். கரவற்ற நெஞ்சமும் குழந்தை உள்ளமும் கொண்டவர். படைப்பு: சிலம்புச் செல்வன். **முகவரி:** 23 எ, ஸ்டேஷன் சாலை, மேற்கு மாம்பலம், சென்னை-33.

**மு. சி. கேசவன் :** 27-7-1924. தெ. ஆ. முடியனூர். வித்துவான், பி. ஓ. எல் (ஆனர்சு) பயின்று, பொள்ளாச்சி என். ஜி. எம். கல்லூரியில் பணியாற்றி, திருச்சி உருமு தனலட்சுமி கல்லூரித் துறைத் தலைவராகத் திகழ்ந்து ஓய்வு பெற்றவர். சிலம்பொலி (திறனாய்வு), பாரி மகளிர் போன்ற நூல்கள் படைத்துளார். நாடக ஆராய்ச்சியில் ஈடுபாடு உடையவர். திருச்சி சின்ன செட்டித் தெரு அம்மாக்கண்ணு மன்றில் அடிக்கடி குறள் உரையாற்றி வருகிறார். **முகவரி:** திருவரங்கம், திருச்சி-6.

**பொ. முத்தரசு :** 25-6-1926- புளியங்குடி. ஸ்ரீ வைகுண்டம் குமரகுருபர சுவாமிகள் கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், முதல்வராக இருந்து ஓய்வு பெற்றவர். வள்ளலாரிடம் விடுதலறியா விருப்புக் கொண்டவர். இராமலிங்கர் வரலாறு, இராமலிங்கர் கண்ட திருவொற்றியூர், திருவருட்பா (மொ), குமரகுருபரர் வரலாறும் நூல்களும். The Life of Ramalingar, Hymns from Tirivarutpa. **முகவரி:** அருள் நந்திநகர், ஸ்ரீ வைகுண்டம். நெல்லை மாவட்டம்.

**மு. வேங்கடசாமி :** 29-9-1926. தாயம்பாளையம். அதிராம்பட்டினம் காதிர் முகைதீன் கல்லூரியில் பணியாற்றி, பொள்ளாச்சி ந. க. ம. கல்லூரியில் துறைத் தலைவராகத் திகழ்ந்து ஓய்வு பெற்றவர். நூல் : பைந்தமிழ்ச் சாரதி பாரதியார். பெயர்ப்பு : பூக்காரி, பேராசிரியர். இனிய இவரின் **முகவரி:** 44, வெங்கடேச காலனி, பொள்ளாச்சி.

**ரா. சீனிவாசன் :** 1926. சென்னை. பச்சையப்பன் கல்லூரியில் பயின்று அங்கேயே விரிவுரையாளர், பேரா, தமிழ்த் துறைத் தலைவராக இருந்து ஓய்வு பெற்றவர். சிரிக்கச் சிரிக்கப் பேசும் சிந்தையர். மொழி நூல், நாவல், கட்டுரை, நாடகம் வல்லவர். 61இல் The Structure of the nouns in Kalitriyanai nirai of Ahananuru எழுதி எம். லிட், 72 சங்க இலக்கியத்தில் உவமைகள் ஆய்ந்து பிஎச். டி பட்டமும் பெற்றார்.

மொழியியல், மொழி ஒப்பியலும் வரலாறும், மூவிடப் பெயர்கள், தொல்காப்பியமும் நன்னூலும், தமிழ்ப் பாவியல்; அணியும் மணியும் (கட்), சொல்லின் செல்வன் (நாட), சிரித்து

மகிழுங்கள் (நகைச்சுவை). சில நாவல்கள், புதுக்கவிதை யிலேயே ஒரு புதினம் படைத்தவர். 'அணியகம்' நிறுவிப் பலர் நூல்களை வெளியிடுகிறார். **முகவரி:** 21. செல்லம்மாள் தெரு, சென்னை-30. (611 230)

**ந. பிச்சமுத்து :** 1927. அண்ணாமலை நகர். அண்ணாமலை ஆனர்சு. சேலம், வியாசர்பாடி, சென்னை மாநிலக் கல்லூரிகளில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். பொதுவுடைமைச் சிந்தனை மிக்கவர். சக்தி வெளியீடென வைத்து முதுகலை மாணவர்கட் குரிய இலக்கிய வரலாறு, திறனாய்வு போன்றன வெளியிட் டார். காவிரிக்காவலன், இலக்கிய இயக்கங்கள் போன்றன அளிப்பு **முகவரி** வெங்கட்ரங்கம் பிள்ளை தெரு, சென்னை-5.

**சு. ந. சொக்கலிங்கம் :** 4-4-1928. செங்கற்பட்டு மாவட்ட பிள்ளையார் குப்பம். பி. ஓ. எல். (ஆனர்சு) பயின்று அரசுக் கல்லூரிகள் பலவற்றில் பணியாற்றி இடைநிலைக் கல்வி இயக்குநரகத்தில் திகழ்ந்து, உருசியாவில் சில ஆண்டுகள் சிறந்து மீண்டு, தமிழ்ப் பாடநூல் நிறுவன அலுவலராக வதிந்து, வேலூர் முத்துரங்கம் அரசினர் கலைக் கல்லூரி போன்றவற்றில் முதல்வராகி, கல்லூரிக் கல்வித் துணை இயக்குநராக இலங்கியவர்.

நூல்கள் : புத்தர் சோவியத்து நாட்டில் நான் கண்டதும் கேட்டதும், ஜப்பானின் நான் கண்டதும் கேட்டதும், சோவியத்து நாட்டில் குழந்தைகள், சோவியத்து மக்களும் கல்வியும்; பெயர்ப்புகள் : அது என்ன பறவை, சக்கோல் நிகிபில் புத்தாண்டு, நீச்சல் பயிற்சி, வீரனின் தம்பி, நீலக் கிண்ணம், பள்ளிக்கூடம், பாராபானி, வெற்றியாளர்கள், நாட்டுப்புற ஏழைமக்களுக்கு, எங்கிருந்து தொடங்குவது?

இந்திய அரசின் பரிசு இருமுறையும், சோவியத்து நாடு விருதும் பெற்றவர். இங்கிலாந்து பிரான்சு, ஜெர்மனி, ஜப்பான், மலேயா போன்ற நாடுகட்குப் போய் வந்தவர்.

**இரா. தில்லைக் கோவிந்தன்:** 1928. கடலூர் வண்டிப் பாளையம். அண்ணாமலையில் தெ. பொ. மீ. மாணவர். கோவை, ஊட்டி, நந்தனம் கல்லூரிகளில் பேராசிரியராக இருந்தவர். திடுமென அன்பு மனைவியும் அருமை மகனும் மறைந்தமையால் வருந்தி முதல்வர் பணியையும் விடுத்துப் பேராசிரியராகவே இருந்து ஓய்வு பெற்றவர். முத்தான கையெழுத்தும் கடமை தவறாத கண்ணியமும் கட்டுப்பாடும்

கொண்டவர். இளையாரையும் 'அண்ணாச்சி' என அன்பொழுக அழைத்து நேயம் கொள்ளும் நலத்தர். பாசத்துடன் பழகும் பெற்றியர். விருந்தோம்பும், கூடி மகிழும் அருங் குணத்தர். வாழ்வில் ஏற்பட்ட இழப்பால் ஆராய்ச்சி போன்றன தொடராது போனார். **முகவரி:** 5, மதியழகன் தெரு, என். எஸ். கே. நகர், சாலி கிராமம், சென்னை-93.

**கு. திருமேனி :** 13-4-1928. சீர்காழி வட்ட தென்னிலக்குடி. தந்தை குமாரசாமி அண்ணாமலை பி. ஓ. எல், சென்னை எம். ஏ., கேரள பிஎச். டி. An Exploration of the origin of Kambaramayanam. திருச்சி தேசிய கல்லூரியில் தமிழேூச்சி 86இல் ஓய்வு பெற்றவர். சிலம்பும் கம்பராமாயணமும் இவரின் இரு கண்கள். இரண்டிலும் துறைபோகக் கற்றுத் தோய்ந்து ஆராய்ந்தவர்.

ஆழ்ந்து கற்ற ஊற்றத்தர். திடமான கருத்தும் தெளிவான துணிவான கொள்கையும் கொண்டவர். இற்றைநாள் புலமையாளருள் தலைமையர். புலமைச் செருக்கு மிக்கவர். சங்க இலக்கியச் செறிவு மிகுந்தவர்.

தந்தவை : நாடகச் சிலம்பு, கோவலன், பூம்புகார்ப் பொற்றொடி, தென்றமிழ்ப் பாவை, சிலம்பணி மகளிர், கம்பராமாயணத் தோற்றம், கூனி, தூய சிந்தையாளர், வாலி, கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா?, கோவூர் கிழார், வடக்கிருந்தான், மனோன்மணீயத் திறனாய்வு போல்வன. 'ஆராய்ச்சிச் செல்வர்', கம்பராமாயண வித்தகர்' போன்ற பட்டங்கள் பெற்றவர். இவர் துணைவியார் கமலா, திருச்சி சீதாலட்சுமி ராமசுவாமி கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர். **முகவரி:** 'கோவல நிலையம்', 14, வீரேஸ்வரம், திருவரங்கம், திருச்சி- 6.

**த. அ சுந்தரராசன்:** (அழகரசன்) 1928. தஞ்சைமாவட்ட திருமறைக்காடு. அண்ணாமலையில் தமிழ் ஆனர்சு பயின்று சென்னை லயோலாக் கல்லூரியில் பணியாற்றி ஓய்ந்தவர். நாடகத் துறையில்-கவிதை நாடகத்தில் மிகு நாட்டம் மேவியவர். மனோன்மணீயம் பதிப்பித்தார். காதல் விழி, கவிமகள், வேங்கை வேந்தன் (வரலாற்றுக் கவிதை நாடகம்) **முகவரி:** அழகாலயம். லயோலா காலனி, சென்னை-94.

**ப. உருத்திரமணி:** 25-7-1928. கோவை பழனிசாமி (செட்டியார்); சிக்கம்மாள். 44இல் யூனியன் உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு; 46இல் அரசு கலைக் கல்லூரி இன்டர்;

திருவையாறு அரசர் கல்லூரி வித்துவான். தனியாக 55இல் தமிழ் இளங்கலை; 58இல் முதுகலை. 86இல் டாக்டர்-இளம் பூரணர் உரைத்திறன் ஓர் ஆய்வு. பள்ளித் தமிழாசிரியராக இருந்து, கோவை, உதகை, கடலூர், அரியலூர், ராசிபுரம், திருப்பூர், திருவாரூர், குடந்தை, சேலம் கல்லூரியில் பணியாற்றி ஓய்வு.

நூல்கள்: குறள் நெறியும் காந்தி நெறியும்; சிவானந்தரின் குருத்துவம், அறுபத்து மூன்று நாயன்மார் வரலாறு, ஞானியர் வரலாறுகள், வேங்கடேசானந்தாவின் சிவானந்த யோகம் பெயர்ப்புகள், மணம் 11-12-53, மனைவி சுலோசனா மக்கள்: விவேகானந்தன், ஞானசம்பந்தன், கனகராஜ். கல்லூரிப் பேராசிரியர்களில் மிக இனிமையானவர், மென்மை யானவர். **முகவரி:** 1268, சுக்கிரவாரப் பேட்டை வீதி, கோவை-641 001.

**பு. பா. இராஜ இராஜேஸ்வரி:** 28-7-1929. சென்னை 'சண்டே அப்சர்வர்' ஆசிரியர் பாலசுப்பிரமணியம் அவர்களின் மகள். பச்சையப்பன் கல்லூரியில் பயின்று, ராணி மேரிக் கல்லூரியில் பேராசிரியையாகப் பிறங்கி, நாமக்கல் தஞ்சையில் முதல்வராகத் திகழ்ந்து, இதுபோது ராணிமேரிக் கல்லூரியில் உள்ளார். கண்டிப்பு மிக்கவர்.

எப்படிப் பிறந்தது (மொழி வரலாறு): பன்னிரண்டாம் நாளிரவு (Twelfth Night), அறிவுக் களஞ்சியம் (by Betrand Russell). 69இல் Women in Sangam Age என ஆய்ந்து எம். லிட் பட்டம் பெற்றார், டாக்டர் பட்டமும் ஏற்றுளார். **முகவரி:** 8பி, லார்ட் கோவிந்தாஸ் நகர் தெரு, சென்னை-2.

**த. மணிமாறன்:** (இராமமூர்த்தி) 13-9-1932—5-86. திருச்சி மாவட்ட சிறுகனூர். தம்புசாமி: செல்லம்மாள். அண்ணாமலை ஆனர்சு. 57-75. N.C.C. Major. பொது வுடைமைத் திட சிந்தனையாளர். நாடகத் துறையில் நாட்டம் மிகுந்தவர். தந்தவை. வெனிஸ் வணிகன் (பெயர்ப்பு), பூங்கோதை (4 நாடகங்கள்), சிதைந்த கனவு, கிரெம்ளின் மணி ஒலிக்கிறது (உருசிய நாடகம்), இலக்கியக்கலை (உருசியத் திறனாய்வு நூல்). புலிமலை வெற்றி (சீன இசைக்கூத்து), மாற்றங்கள் (சீனப்புதினம்), அமைதியை நோக்கி (ஒரு மணி நேர வானொலி நாடகம்), புத்தர் பற்றியது. மாணவர் போற்றும் சிறந்த பேராசிரியர். **முகவரி:** அன்பு இல்லம், 134, கிராப்பட்டி, திருச்சி-12.

**வி. அ. பரிமேலழகர்:** 25-12-1914. தஞ்சை மாவட்ட பூதலூரையடுத்த விண்ணமங்கலம். அரங்கசாமி காடவராயர்; காளியம்மாள். 28இல் திருக்காட்டுப் பள்ளி கழக உயர்நிலைப் பள்ளி எட்டாம் வகுப்பு. 29-33 திருவையாறு வடமொழிக் கல்லூரியில் சாகித்ய சிரோமணி, 33-38 வித்துவான். 38-39 கோனாப்பட்டு கற்பக விநாயகர் கலாசாலை, 39-40 வாலாஜா பாத் இந்துமத பாடசாலை, 40-41 அண்ணாமலையில் ஆசிரியப் பயிற்சி, 41-42 தூத்துக்குடி தூய சவேரியர் உ. பள்ளி 42-44 அருப்புக்கோட்டை சைவபானு சத்திரிய உ. பள்ளி, 44-77 திருச்சி தூய வளவர் உயர்நிலைப் பள்ளி, 77-99 மாலைக் கல்லூரி ஓய்வு.

நூல்: அருளாளர்கள், குறள் நுண்பொருட் கட்டுரைகள். 5 வயது முதலே இறையீடுபாடு. தந்தைவழிப் பாட்டன் திருப்புகழ் குழந்தை காடவராயர், தாய்வழித் தாத்தா திரிகால ஞானி ராமன் புண்ணாக்கர் வழி வந்ததாலோ என்னவே ஒரு பற்றற்ற ஞானநிலை. ஞானியாரடிகள், மறைமலையடிகள், சிதம்பரம் மௌனசாமி போன்றாரிடம் ஞானதாகம் நாடி இறுதியில் மெய்வழிச் சாலை ஆண்டவரிடம் மேவல். தமிழனு பூதி அடைந்தவர்.

இந்த தெய்வீக அனுபூதியால் தமிழின் மூலப்பொருள் கண்டுணர்ந்தவர். சொல்லாய்வில் நுட்பமதியினார். திருச்சி தமிழ்ச்சங்கம் தோன்றுமுன் நகர தமிழ்ச் சங்கம், தமிழன்பர்கள் உவப்பத் தலைக் கூடுதல். முத்தமிழ்க் காவலர் குறளுக்குப் புத்துரை கூறுமாறு தூண்டிக் கேட்டு மகிழ்வர். வடமொழி பயின்றதால் திட்பமுடனும் இலக்கண வளமையால் நுட்ப முடனும் ஆய்ந்து பேசும் ஆற்றல் பெற்றார். மனைவியர் மூவர். 3 பெண்கள், ஒரு மகன் மெய்கண்ட சிவம் துறையூரின் தமிழாசான். மருமகன் பேரா. சுப்பிரமணியம். ஈ.வெ.ரா. கல்லூரித் தமிழ்த் துறை. **முகவரி:** விண்ணமங்கலம். பூதலூர் (வழி), தஞ்சாவூர்.

**ல. சண்முகசுந்தரம்:** 18-7-1925. நெல்லை மாவட்ட நாச்சியார்புரம். தமிழாசிரியர். ரசிகமணி வட்டத்தொட்டி யைச் சேர்ந்தவர். ரசனையோடு பாடி விளக்கும் பாங்கினர். ஆனந்தக்கூத்து (சமயத் தத்துவம்), நந்திக் கலம்பகம் விளக்கம், தமிழ்க் கவி அமுதம், தமிழ்க் கவி இன்பம், தமிழும் தாவரமும், டி. கே. சி. வரலாறு. **முகவரி:** 163, அணைக்கரைத் தெரு, தென்காசி R. S,

**மு. அன்பரசன்:** 21-3-1933. சென்னை. தமிழாசிரியர், 48 முதல் எழுத்தாளர். தேன்மலர் (சிறுகதை), இளங்கோ மொழிப்பயிற்சி, இளங்கோ இலக்கணப் பயிற்சி, நக்கீரர் இலக்கணமும் கட்டுரையும். கலைஞர் பற்றாளர். கவிஞர் கண்ட கலைஞர் போன்ற தொகுப்பு நூல்கள். நிறைய உதவி ஊக்கிடும் உள்ளத்தர். பழகுதற்கினியர் **முகவரி:** 48, ஆதம் சாயபு தெரு, ராயபுரம், சென்னை-13.

**தி. நா. அறிவு ஒளி:** (பூங்குன்றன்) 9-2-1934. தமிழாசிரியர் 48 முதல் எழுதுகிறார். உணர்வுகள் அழிவதில்லை (புதினம்), ஔவை துரைசாமியார் வரலாறு. **முகவரி:** 23, மந்தைவெளி தெரு, நால்வர்பேட்டை, திருக்கழுக்குன்றம் 603109.

**இரா. இளங்குமரன்:** 30-1-1930. முகவை மாவட்ட வாழ வந்தாள்புரம். புலவர் பட்டம் பெற்று திருப்பரங்குன்றம் மு. மு. உ. பள்ளியில் தமிழாசிரியராகத் திகழ்ந்து செந்தமிழச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் பணியாற்றியவர். பாவாணர் பற்றாளர்; தனித் தமிழ் போற்றுபவர்.

அன்பும் அறிவும் (சிறுவர் பாடல்), இரத்தக் கறை (நாட), நாவலர் பாரதியார் (வரலாறு), தென்னாட்டு வாணிகம், முப்பெரும் புலவர்கள், அண்ணல் ஆபிரகாம், திருக்குறள் கதைகள் கட்டுரைகள், காப்பியக் கதைகள் (ஒவ்வொன்றும் பத்து தொகுதி), முல்லாவின் கதை முப்பது, இன்ப வாழ்வு, மேல் நாற்பது கீழ்நாற்பது (கவிதை), காக்கை பாடினியம், தகடூர் யாத்திரை, பெரும் பொருள் விளக்கம். 'புலவர் மணி' எனப் போற்றப் பெறுபவர். சைவ சித்தாந்தக் கழகப் புலவர். **முகவரி:** திருநகர், மதுரை-6.

## 119. உடலியற் கலை

கல்வி இருவகையில் இயல்வது; ஒன்று அறிவுக் கல்வி (Mental education), மற்றொன்று உடலியற்கல்வி (Physical Education). இரண்டும் இரு கால்கள்; இன்றியமையாதன. சுவரை வைத்துதானே சித்திரம்? அனைத்திற்கும் அடிப்படையாவது 'உடல்'. 'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்' 'உடம்பை வளர்த்தேன் உயிரை வளர்த்தேனே' என்றார் திருமூலர். எத்துணைதான் மூளை சிறந்து மேதையாக விளங்கினும், உடல் நலமின்றேல் ஒரு பயனுமில்லை. எல்லாம் பாழ் தான்!

உடல் உழைப்பினர்க்கு மூளை வளமில்லை; மூளை உழைப்பினர்க்கு உடல் வளமில்லை. அறிவால் வாழ்நர், அலுவலகப் பணியினர் தங்கள் உடம்பைப் பேணுவதில்லை. அதில் அக்கறை கொள்வதுமில்லை, நினைப்பதுமில்லை. உடல்நலம் கெட்டதுமே ஞானம் வருகிறது. இத்தனைககும் 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' எனப் படித்திருக் கிறோம். உணர்ந்தோமில்லை. அறியாமலா வள்ளலாரும் 'நோயற்ற வாழ்வில் நான் வாழவேண்டும்' என்றார். அபிராம பட்டரும்' 'கழுபிணியிலாத உடலும்' என்கிறார். திரு.வி.க.வும் 'உடலோம்பல்' என வற்புறுத்தினார். ஊனுடம்பே ஆலயம்! 'உடலினை உறுதி செய்' என்றார் பாரதி.

உடலோம்பும் முறை இரண்டு வகையது. ஒன்று உடற் பயிற்சி. காலை மாலை வியர்க்க முறையான உடற்பயிற்சி செய்வது. மற்றொன்று யோகாசனம். ஒருவகையில் வேக மாகச் செய்தால் உடற்பயிற்சி, அதையே மெதுவாகச் செய்யின் யோகாசனமாகும். இரண்டையும் முறையறிந்து குரு வழி கற்றுக் கொள்வதே நன்று. இன்றேல் நன்மைக்குப் பதில் தீமையே விளையும். நாளும் முதற் கடமையாக இவற்றைச் செய்யின் இறக்கும் வரை வளமுடன் வாழ்ந்து நலமுடன் சிறக்க முடியும். எந்தச் சூழலிலும் இதற்கென நேரம் ஒதுக்கிச் செய்தல் வேண்டும். இன்றேல் மருத்துவரிடம் ஒப்படைத்து அவர் தயவில் வாழ வேண்டியதுதான். முன்னது உடம்பையும் பின்னது உள்ளத்தையும் உறுதிப்படுத்தும்.

இதனாற்றான் பள்ளி கல்லூரிகளில் உடற்கல்வி ஆசிரியர் களும் இயக்குநர்களும் உளர். இவர்களைப் பயன்படுத்தாது பாழாய்ப் போகிறோம். இயற்கையோடு இயைந்து வாழும் முறையே சாலச் சிறந்தது. மதுரை காந்தி நிறுவன க. அருணாசலம் அவர்களின் பணி கருதத் தக்கது. சின்னஞ் சிறு உடல்நலம் பேணும் நூல்கள் வெளியிட்டுளார்.

**விளையாட்டு (Sports & Games)** உடல் உள்ளம் மூளை மூன்றையும் ஒருசேர பலப்படுததும் நலப்படுத்தும் ஆற்றலது. பாரதியும் 'காலை எழுந்தவுடன் படிப்பு, மாலை முழுதும் விளையாட்டு' எனப் பாப்பாவுக்குப் பகர்ந்தார்.

**V. N. குமாரசாமி** *6-9-1901—9-54.* மதுரை சௌராட்டிர மரபினர். வைத்தியம் நாகையர் : ருக்மணி. தந்தை மறையவே வறுமை வாட்டல். கால்நடையாகவே சென்னை சென்று, ஒருவரின் வளர்ப்பு மகனாகி, திருப்பதி குறிஞ்சிப்பாடி,

காரைக்கால், பண்ருட்டி ஊர்கட்குசெல்லல். வேலைக்கொடுமையால் மதுரை மீண்டு, ஏணி ஏற்றப் பாட்டு, சேவல் பாட்டு, அல்லியரசாணி மாலை போன்றவற்றில் தோயல். பருத்திக் கடை,பழக்கடை, சோதிடர். பின் 15 ரூ. சம்பளத்தில் அமர்ந்து தமிழறிவைப் பெருக்கிக் கொண்டார்.

24 வயதில் காந்தியடிகளின் விடுதலைப் போராட்டத்தில் முனைந்து கதராடை அணிந்து காந்திக் குல்லாய் சூடல். திருமணம். சீதாலட்சுமி. சென்னை வணிகர் இவரைச் சென்னைக்கு அழைத்துச் செல்லல். வண்ணாரப்பேட்டையில் வாழ்வு 18 ரூ. யில் தொடங்கல்.

நூலுக்குச் சாயமேற்றும் தொழிற்சாலை வைத்து முன்னேறல். மனைவி மறையவே, 32இல் நாகம்மாள் (சீதாலட்சுமி). 31-12-1918யை மணத்தல். இருவரும் தேசிய இயக்கத்தில் ஈடுபடல். யோகாசனத்தில் ஈடுபடல். சுற்பித்தல். கட்டுரை எழுதல். கல்கியில் யோகாசனக் கட்டுரைகள் படித்துப் பின்பற்றினார். எளிய அழகிய நடை ஈர்த்தது. மனைவியும் தேர்ச்சிபெறல், எழுதல், ஆரோக்கிய ரகசியம், யோகாசனம் செய்யும்முறை, ஆஸ்துமாவிற்கு யோகாசன சிகிச்சை, ஆசன நேயர்களின் சந்தேகங்கட்கு போன்றன படைத்தார். அறிவோடு ஆக்கை நலனும் வளர்க்கும் வகையன. மெய்யறிவாளர், இல்லற ஞானி. இவர்வாழ்க்கை வரலாற்றைத் துணைவியார் எழுதியுள்ளார். **முகவரி** 'குமார நிலையம்', 296, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, சென்னை, 21.

**இரா. ஆண்டியப்பன் :** ஆரோக்கிய வாழ்வு, யோகசன சார்ட், என்றும் இளமை, யோகா—செக்ஸ், பெண்கள் யோகாசனம், நீரிழிவு நோய் நீக்கும் யோகாசனங்கள், ரத்த அழுத்தம் இருதய நோய் நீக்கும் யோகாசனங்கள், ஆஸ்துமாவை நீக்கும் யோகாசனங்கள், ஆரோக்கிய வாழ்வு 100 ஆசனங்கள் என 20 நூல்கள். **முகவரி** : சுந்தர யோகாசனப் பயிற்சி சாலை, 43, கீழத்தெரு, சிக்க நரசைய்யன் கிராமம், நெல்லை-1.

**எஸ். நவராஜ் செல்லையா :** விளையாட்டுத்துறை இலக்கியத்தில் வல்லவர்.நடுவண் அரசின் பரிசு பெற்றவர். வழங்கியன விளையாட்டுக்களின் வரலாறு, பெயர் வந்தது எப்படி? விளையாட்டுக்களின் வரிசை, உடலழகுப் பயிற்சி நூல்கள், மாணவர்கட்குரிய மாணவியர்க்குரிய உடற்கல்விப் பாட நூல்கள், பயன்தரும் யோகாசனப் பியிற்சி முறைகள் என 60 நூல்கள் படைத்துளார். **முகவரி** : ராஜ்மோகன் பதிப்பகம். 10, ரெங்கநாதன் தெரு, த. பெ. 4955, சென்னை- 17. (442232)

பாவணர் 'தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்'; மறைமலையடிகள் மக்கள் நூறாண்டு உயிர்வாழ்க்கை, பொருந்தும் உணவும் பொருந்தா உணவும்; முல்லை முத்தையா உடல்நலம் கெடாமல் வாழ்வது எப்படி?, பி. எல். ராஜேந்திரன் உடலைக் காக்க உயர்வான வழிகள் போன்ற பலர் உடல்நல நூல்கள் படைத்துளர்.

## 120. 'கம்பியூட்டர்' தமிழ்

இன்றைய சமுதாய அறிவியல் மறுமலர்ச்சியின் அனைத்து நிலைகளிலும் ஓர் இன்றியமையா அடிப்படைத் தளமாய், தவிர்க்க முடியாத கருவியாய் அமைவது கம்பியூட்டர் எனும் கணிப்பான் ஆகும். இது பற்றியும் அது பயன்படுத்தப்படும் முறை பற்றியும் பயன்பாடுகள் பற்றியும் அறிய வேண்டியது இன்றைய கட்டாயத் தேவை ஆகிவிட்டது. 'எங்கும் கம்பியூட்டர், எதிலும் கம்பியூட்டர், எல்லாவற்றிலும் கம்பியூட்டர் என்னுமாறு அனைத்தும் கணிப்பான் மாயமாகி வருகிறது. அதற் கேற்ப அருந்தமிழையும் பொருத்தமுற ஆக்கிக் கொள்வதும் முற்றிலும் பயன்படுத்திக் கொள்வதும் அறிவுடைமையாகும்.

இதனைத் தமிழில் அறிமுகப் படுத்தும் பணியிலும், இதனைத் தமிழில் மொழி மற்றும் இலக்கிய ஆய்வில் பயன் படுத்திக் கொள்ளும் வழிகளிலும் ஓர் சிறப்பான நிலை எய்தி வருகிறோம். கணிப் பொறி பற்றிய கட்டுரைகள் 'கலைக் கதிர், 'விஞ்ஞானச் சுடர்' போன்ற அறிவியல் ஏடுகளில் இடம் பெற்றன. 50க்குப் பின் இதன் மின்னல் வேக வளர்ச்சியால், நாளிதழ்களும் நாட்டம் செலுத்தின.

இவ்வகையில் எளிதே இனிதே அனைவரும் புரிந்து போற்றும் அளவில் முதன்முதல் அமையும் நூல், சுஜாதா மற்றும் ராஜாராம் எழுதிய 'காசளவில் ஓர் உலகம்'; மின்னணு பற்றிப் பேரளவும் கணிப்பொறி பற்றி ஓரளவும் உணர்த்தியது. கணிப்பொறி அமைப்பு, செயற்பாடு, பயன், பேசிக் மொழிகள் பற்றித் தெளிவாக எளிதாக எழுதப்பட்ட நூல் கா. செ. செல்லமுத்து அவர்களின் 'கணிப்பொறி ஒழுங்கும் பேசிக் மொழியும்' கோ. கபாலி பாலசுப்பிரமணியன் கம்ப்யூட்டர் விஞ்ஞானம், ராம்குமாரின் கணிப்பொறி - ஓர் அறிமுகம், மற்றும் சில நூல்கள் வந்துள.

**தமிழ்ப் பல்கலைக் கழகக் கணிப்பு மையம்** : மிக விரைந்து வளர்ந்து வரும் மருத்துவம் பொறியியல் போன்ற அறிவியல் துறைகளில் மேனாட்டு மொழிகளில் வெளியாகும் செய்திகளை உடனுக்குடன் சுடச்சுடப் பெயர்த்தளிக்காவிடில், அறிவியல் தமிழ் பின்தங்கி விடும். இதற்கு மனித மொழி பெயர்ப்பினும் எந்திரப் பெயர்ப்பு எளிதில் விரைந்து ஆற்றும் எனும் நோக்கில் கணிப்பகம் ஏற்படுத்தப்பட்டது. (பக். 1653)

1. தலையாய ஆய்வுப்பணி 'உருசியன்-தமிழ் தானியங்கி மொழிபெயர்ப்பு. 2. 'கணிப்பொறி ஒழுங்கும் கோபால் மொழியும்' என முழுநேரச் சான்றிதழ் 6 வார வகுப்பு 3. கணிப்பொறிவழி நூலக ஆய்வுப்பணி. 4. தமிழ்ச் செய் தித்தாள் மொழியாய்வு. 5. பள்ளி கல்லூரி ஆசிரியர்கட்குக் கணிப்பொறி ஒழுங்கும் வழியமைப்பு மொழிகளும் என்ற பயிற்சி வகுப்பு. 6. தஞ்சை கோவை 3000 கிராமங்களில் கோயில், கிராம தேவதை, உறவுமுறை, பெயர்கள், பொரு ளியல் நிலை, மக்கட் தொகை தகவல் தொகுக்கப்பட்டது. 7. அறிவியல் துறைக் கலைச் சொற்கள் தொகுக்கப்பட்டது. 8. ஆய்வாளர்கட்குத் தேவைப்படும் தகவல் தொகுத்துத் தரப்படு கின்றன. 9. நூல்கள் இதழ்கள் ஆய்வறிக்கைகட்கு நூற் பட்டியல். 10. தமிழ்ச் சொல்லாய்வி (Processor). 11. இருப தாயிரம் ஓலைச் சுவடிகட்குப் பட்டியல் உருவாக்கப்பட்டது.

12. குறளாய்வு : ஒலி பெயர்ப்புச் செய்யப்பட்டு 1330 குறட்பாக்களும் ஊட்டப்பட்டுப் பகுப்பாய்வு செய்யப்பட்டது. வழக்கமான ஆய்வினின்று மாறுபட்டது. வள்ளுவர் எத்தனை முறை எந்தச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார், எந்த எழுத் தைப் பயன்படுத்தவில்லை, எத்தனை தடவை இயற்சீர் வெண் டளை, வெண்சீர் வெண்டளை கையாண்டுளார், சொல் லடைவு, எழுத்து சொல் நிகழ்வெண்ணிக்கை துல்லியமாக அறியப்படுகின்றன. 'திருக்குறள்-கணிப்பொறி ஆய்வு' நூலும் வெளிவந்துளது.

13. திராவிட மொழிகட்கிடையேயான வரிவடிவ மாற்று: இதன்படி மலையாள மொழியில் அமைந்த நூல் ஒன்றினை அதனைப் பேசமட்டும் தெரிந்து, படிக்க முடியாத ஒருவர், கணிப்பொறிவழித் தமிழெழுத்து வடிவில் பெற்றுப் புரிந்து கொள்ள முடியும். கீழ்க்காணுமாறு தரும்.

வள்ளம் களிக்கு சுண்டன் வள்ளங்களும்
கொதும்பு வள்ளங்ஙளுமாணு
சாதாரணயாமி உபயோகிக் கானுள்ளது
ஆற்றில் வெச்சோ............

14. உருசிய விண்வெளி அறிவியல் நூல்களை மொழிபெயர்க்கும் வழியினைக் கண்டுபிடித்துச் செயற்படுத்தியுளது. இயந்திர மொழி பெயர்ப்பு நூல் இதனை விளக்கும். 15. Bibliography on Computational Linguistics கணிப் பொறியில் தமிழ் எழுத்து வசதியின்மையால், தமிழ்ச் செய்திகளை நேரடியாக உள்ளீடு செய்யவோ பின்னர் தமிழில் விடையைப் பெறவோ இயலாதிருந்தது. எனவே செய்திகளை ஒலி பெயர்ப்புச் செய்து ஊட்டி, வழியமைப்புச் செய்து மீண்டும் ஒலி பெயர்ப்பு முறையிலேயே விடைகள் வாங்கப்பட்டு வந்தன. இக்குறை நீக்கவும், தமிழிலேயே விடை பெறவும், ரோமன் தமிழ் முறை, நேரடி உள்ளீடுமுறை எனும் இரு முறைகள் கையாளப்படுகின்றன.

பொதுமக்கட்குப் புகட்ட 8 பயிற்சி வகுப்புகளும், ஆசிரியர்கட்குக் கோடை வகுப்புகள் 2 தடவையும் நடத்தியுளது. இத்தனைக்கும் இயக்கு சக்தியாக இயங்குபவர்-இயக்குபவர் :

**கா. செ. செல்லமுத்து :** *12-1-1956.* திருச்சி மாவட்ட கரூர் வட்ட காட்டுப்பாளையம். B. E. (Hons.) in Electronics and Communication Engineering, M. E. Computer Science. பங்களூரில் இந்தியத் தொலைபேசித் தொழிலகத்திலும், கணிப்பொறி ஆக்ககத்திலும் பொறியாளராகப் பணியாற்றி 7-6-82 முதல் தமிழ்ப் பல்கலைக் கழகக் கணிப் பொறியியல் மொழி பெயர்ப்புத் தலைவராக உள்ளார். கணிப்பொறிவழி மொழி ஆய்வு ஆக்கம், நூலகச் செய்திமுறை போன்றவற்றில் பல்லாண்டு பட்டறிவு மிக்கவர்.

தந்தமுத்து : Tamil University Machine Translation system (TUMTS), catalogue of Tamil Palmleaf Manuscripts in the Tamil varsity, computer analysis of Tirukkural, Programming in COBOL. கணிப்பொறி ஒருங்கும் பேசிக் மொழியும் (தமிழரசின் பரிசு பெற்றது), கணிப்பொறி பயன்பாட்டு முறை.

கட்டுரைகள் சில : கணிப்பொறி, Tamil university Machine Translation system for Russian Tamil, A Bibliography

on computational Linguistics, Automatic script conversion system for Indian Laungages, அகராதிக் கலையில் கணிப் பொறி, தானியங்கி மொழிபெயர்ப்பு, Computer Translation, computers in Tamil language research.

இவரறிந்த கணிப்பொறி மொழிகள் : Basic, Cobol, Fortran, Pascal, 'C' and Lisp. ஈடுபாடுள்ள களம் : computer based Language Research, Automatic Translation, Natural Language Processing in a computer, Adaptation of formal Language techniques to Artificial Intelligence Research.

கணிப்பொறி தொடர்பாகப் பல மாநாடுகள், கருத்தரங்கு களில் பங்குபற்றியுள்ளார். ஆராய்ச்சியுரைகள் படைத்துள் ளார்.. தேர்வாளராகவும், பரிந்துரைக் குழுவினராகவும் சென் றுள்ளார். மொத்தத்தில் தமிழகக் கணிப்பொறி வல்லுநரில் தலையாயவர். இவர் அண்ணா பல்கலைக் கழகத் துணை வேந்தர் வா. செ. குழந்தைசாமி அவர்களின் ஒன்றுவிட்ட இளவல் முறையினர். **முகவரி** : கணிப்பொறி அறிவியல் கணிப்பு மையம், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை.

## 121. தமிழ் வாழ வாழுவோம்!

கடந்த நூற்றாண்டுகளைக் கணிப்பதும் எளிது, கட்டுரைப் பதும் இனிது. ஏனெனில் நடந்து முடிந்த கதை, வரையறுத்து விளம்பிட முடியும், கட்டுக்குள் அடங்குவதால். அத்தோடு இறந்தோரையும் மறைந்தோரையும் எழுதுவதில் இன்னல் இல்லை. எட்ட இருந்து திட்டவட்டமாக எழுதிட முடியும்.

ஆனால் இந்த நூற்றாண்டோ நடப்பு ஆண்டு; நடந்து கொண்டிருக்கும் உயிர் ஆண்டு. இன்னும் ஒரு பத்துப் பன்னி ரண்டுகள் உள. இடையில் நின்று எழுதுவது அவ்வளவு எளிதல்ல. இருப்போரை எழுதுவதில் இன்னல் மிகவுண்டு; இடையில் அவர்களைக் கணிக்க வேண்டும். எல்லோரையும் கண்டு கணித்திடவும் கூடுவதில்லை. எப்படியும் நம் பார்வை யினின்று பரந்துபட்ட பேருலகில் இன்றியமையாச் சிலர் தப் பிடக்கூடும். அவர்களை எழுதாததால் வருத்தம். ஒருவரைப் பற்றிச் சமனின்று உயர்த்தி உண்மையை எழுதின், மற்றவருக் குப் பிடிக்காது. வரலாற்றாசிரியன் மனந்திறந்து உள்ளதை உள்ளவாறு உரைப்பின் பகை, வசை. எழுதாதிருக்கவும் முடி யாது, எழுதினாலோ இடர்! கெட்ட பெயர்!

இருக்கும்போதே இன்றமிழ்த் தொண்டர்களைப் போற்றிப் பெருமைப் படுத்தின் புத்துணர்ச்சி பெறுவர்; பிறகும் அறிந்து போற்றிப் பயன் பெறுவர். எனவே மறைந்த பின் வரைந்து என்ன பயன்? உள்ளபோதே கொண்டாடி உலகறியச் செய்வோம் எனும் உயர் நோக்கில் இந்நாள்வரை இயன்றவரை எழுதியுள்ளோம். எல்லோரையும் திருப்திப் படுத்த இயலாது. பேரளவு முடியாவிடினும் ஓரளவு இந்த நூற்றாண்டின் வளர்ச்சி, தளர்ச்சி, நோக்கு போக்கு என 120 பிரிவுகளில் வரைந்தோம். 'விரிக்கின் விஞ்சும், சுருக்கின் எஞ்சும்.'

இதுவரை சிற்றாறு காட்டாறு பேராறுகளைக் கண்டு வந்தோம். ஆனால் நடப்பு நூற்றாண்டு நீலக்கடல்; தமிழ்க் கடல். கடலைக் கடக்கமுடியுமா? அலைகட்கிடையே மூச்சடக்கி மூழ்கிச் சில முத்துக்களையே எடுத்துக் கொடுக்க முடியும். அந்த வகையில் இந்த முயற்சியை எண்ணுக-மண்ணுக.

கடந்த நூற்றாண்டுகளைக் கவனித்த நாம் இந்த நூற்றாண்டைக் கண்ணோடும்போது உண்மையில் இஃதோர் மறுமலர்ச்சி நூற்றாண்டு என மனமார மொழியலாம்.

தமிழர் இல்லங்களில் தமிழ் தழைத்து வருகிறது. அழைப் பிதழ் நல்ல தமிழ் அமைகிறது. நீத்தார் நினைவுநாள், பிற் கடன் அறிவிப்பு, காதணி விழா, புதுமனை புகுவிழா. குர் ஆன் பைபிள் போன்று குறள் ஓதத் தலைப்பட்டுளர். கம்பனையும் பாரதியையும் கற்பதில் துடிப்பு, பாவேந்தரையும் கண்ண தாசனையும் பரவும் பேருணர்வு. பெண்டிரும் பிறரும் புதினம் படித்திடும் பேரார்வம், சிறுவர்கள் செந்தமிழ் பயிலும் செழுமை. இப்படி வீடுகள் தோறும் வண்டமிழ் கொண்டாடப் படுகிறது!

எதிர்காலம் இளைஞர் கையில். இது மாணவர் உலகம். மாணாக்கள் உள்ளங்களில் தமிழ்த்துடிப்பு, இலக்கியப்படிப்பு மிதூரக் காண்கிறோம். என்னமாய் எழுதுகின்றனா! எப்படி வீறுடன் விளாசுகின்றனர்! எத்துணை அழகாய் அற்புதமாய்க் கவிதை வடிக்கின்றனர்! இந்தி எதிர்ப்பும், தமிழ் காக்கும் திறமும் கண்டு வியக்கிறோம்! படிப்பில்தான் அவ்வளவாக ஆர்வம் காட்டுவதில்லையே தவிர, தமிழ்க்கூட்டங்களிலும் போட்டிகளிலும் தமிழ் விளையாடுகிறது போங்கள்! பேருந்தில் நடத்துநர் சிலர் தூயதமிழ் ஆளுகின்றனர்; காவலர் பலர் கனிதமிழ்ப் பற்றுக் காட்டுகின்றனர். மின் வாரியம், தலைமைச்

செயலகம் போன்றவற்றில் முத்தமிழ் வளர்க்கும் மேலவர்கள் மிளிர்கின்றனர். இவற்றையெல்லாம் எண்ணும்போது இனித் தமிழ் வாழும் வளரும் பொற்காலம் மீண்டும் கண்டிப்பாய் மேவியே தீரும் என்ற நம்பிக்கை ஒளி நம்மிடை நன்றே தோன்றுகின்றது. புதுமைத் தமிழ் பொலியும் பொதுமை நூற்றாண்டு இதுவென்று இறும்பூது எய்தலாம்.

என்றாலும் கழனியென்றால், களைகள் முளைத்தலும், காளான்கள் பூத்தலும் இயல்பன்றோ? அதுபோல் தமிழ்க் கழனியிலும் அவ்வப்போது இலக்கியப் பயிரினூடே களைகள் மண்டவே செய்யும். குளம் கிணறு என்றால் தூறு எடுக்கத் தான் வேண்டும்; அதுபோல் தமிழ்ப் பொய்கையில்—கேணியில் தூறு அள்ளவேண்டும்.

சான்றாக, புதிய கல்விக்கொள்கை-நவோதயா பள்ளிகள், நர்சரி பள்ளிகள் நச்சுக்காளான்களாக நற்றமிழுக்கு நேர்ந்துள. ஒருபால் இந்தித் திணிப்பு, மற்றொருபால் ஆங்கில ஆதிக்கம் —மோகம். இரண்டும் இருபுற மிருந்து இன்றமிழை அமுக்கப் பார்க்கின்றன; சிறுகச் சிறுக அமுக்கி வருகின்றன. இவை பற்றி அடிக்கடி இயம்பி இதயம் நோகுபவர் தமிழ் மாணிக்க மாம் வ. சுப. மாணிக்கம்.

தமிழுக்கு எங்கெங்கு எப்போதெல்லாம் இடுக்கண் நேர் கிறதோ அப்போதெல்லாம் அஞ்சாது ஆர்த்தெழுந்து அடலே றெனச் சாடுபவர் சாலை இளந்திரையன் அவர்கள். இவர் போன்ற துணிவும் தூயநற் செயற்பாடும் தமிழாசிரியர் கட்கெல்லாம் தழைப்பின் தமிழ் செழிக்கும், செம்மாந்தமையும் எனத் தயங்காமல் சாற்றலாம்.

14-2-87இல் சென்னையில் மாபெரும் மாநாடு எடுத்தார். 17-5-87இல் ஈரோட்டில் இந்தி ஆங்கில ஆதிக்க ஒழிப்பு மாநாடு கூட்டினார். 'எங்கும் தாய்மொழி—எங்கள் தமிழ்மொழி' 'தமிழகத்தில் தமிழே தலைமை பெறவேணும், கல்வி மொழி யாய், ஆட்சி மொழியாய், நீதி மொழியாய், வாழ்க்கை மொழி யாய் நம்மொழி தாய்மொழி தமிழ்மொழி அமையவேணும்,' 'தமிழை இந்தியாவின் ஆட்சி மொழியாக்கு' என்று முழங்கி வருகின்றனர் இந்தப் புரட்சி இணைகளாம் சாலை-சாலினி. இதற்கெனத் தமிழ்ப் பாதுகாப்புக்கூட்டணி அமைத்து அருஞ் செயல்-சாதனை புரிந்து வருகிறார். அறிவியக்கப் பேரவை அரும்பணி ஆற்றுகிறது.

தமிழ் நன்றாக இருக்கவேண்டுமெனில் தமிழன் நன்றாக இருந்திடவேண்டும். இனத்தை ஒட்டியே மொழி. இன வளமே மொழி நலம். இதனை நன்குணர்ந்து திராவிடத் தளபதி மானமிகு கி. வீரமணி அவர்கள் பாரிய அளவில் குடியரசுத் தலைவர் கியானி ஜெயில்சிங் கொண்டு தமிழினப் பாதுகாப்பு மாநாடு தஞ்சையில் 87 மே 25, 26ல் நடாத்தி வீறு கொள்ளச் செய்தார். அரசும் அங்கங்கு ஆட்சி மொழிக் கருத்தரங்கு நடாத்துகின்றது.

விளம்பரங்களில் தமிழ் கொலை செய்யப்படுகிறது. வல்லாரிடம் கேட்டு-ஒப்புதல் பெற்றுச் செய்வோம் என்ற சமுதாயப் பிரக்ஞைகூட இல்லாது தம் மனம் போன போக்கில் தாறுமாறாகக் கற்பழிக்கின்றனர்! பலர் கண்ணில் படும் இது மனதில் அப்படியே பதிந்துவிடுமே என்ற பதைப்பும் இல்லை. இங்கே பெருஞ்சித்திரனார் பகர்வு பாங்குடன் எண்ணிப் போற்றத்தக்கது.

'மொழி என்பது, அவரவர் விரும்புகிறபடியெல்லாம் கட்டமைத்துக் கொள்ளும் தனிநிலைக் கோட்பாடு அன்று; தனியான ஒருவனுக்கு மொழி தேவையில்லை. எனவே மொழி, எல்லாருக்கும் பொதுவான ஓர் இயற்கை விளைவு ஆகும். அதைத் தனியான ஒருவன் அவனின் மனக் கோணல் மாணல் களுக்குத் தக்கபடி சிதைத்துக் கையாளுதல் குமுகாயக் கொடுங் குற்றமாகும். அவன் அதைப் பிறர் பொருட்டே கையாளுதல் வேண்டுமாகலின், பிறரின் மரபு நிலைப்படி அவனும் அதைக் கட்டிக்காத்தல் அவனின் தவிர்க்க முடியாத கடமையாகின்றது. ஓர் ஆற்று நீரை எவனும் அள்ளிக் குடிக்கலாம்; அதை மாசு படுத்துதல் கூடாது. அவ்வாறு அவன் தன் தனிநிலை உரிமை யால், பொது நிலைக்குத் தகாத முறையில் ஊறு விளைவிப் பானானால், அவனைக் குற்றவாளியாகக் கருதித் தண்டனை யளிக்க வேண்டும். இக்கால் இவ்வுள்ளரிப்புகளைக் காத்தல் நிலை இல்லாமல் இருப்பதே மொழிநிலையில் நாம் வளர்ச்சி பெறமுடியாமற் போவதற்குக் கரணியமாகும்.'

முன்பு ஆங்கிலச் சொற்கள், இப்போது வடசொற்கள் (புதுக்கவிதை பெயரால்) தமிழைப் போர்த்திவிடும் புன்மை! உயிரனைய தமிழ்காக்க-போற்ற ஒவ்வொருவரும் உறுதி பூணவேணும். தமிழ் என்பது ஏதோ பூதியில் பூத்த பொதுச் சொத்து; எல்லோருக்கும் உரிய தென்றாலும் எவருக்கும் பொறுப்பில்லை எனும் அவல நிலை. இன்னொரு விந்தை

யாதெனில், தமிழ் என்றால் அதற்குத் தமிழாசிரியர்களே கங்காணிகள்-காவலர்கள்! அதற்கும் நமக்கும் இம்மியும் தொடர்பில்லை என்ற நினைப்பு. கழக இலக்கிய காலத்தில் தொழில், இடம் போன்றவற்றால் அங்கங்கிருப்பினும் தமிழ் எனும் போது ஒருமை உரிமை கொண்டொழுகினர். அனைவரும் தமிழ்ப் பற்று அத்துணைபேரும் தமிழ்ப்புலமை பெற்றிருந்தனர். அது Intellectual democracy பூத்த பொற் காலம். இந்நாளில் தமிழ் பற்று என்பதே பைத்தியக்காரத் தனமாகக் கருதப்படுகிறதே!

தமிழுக்குழைக்க வந்த தமிழாசியர்களிடம்கூட உண்மைத் தமிழ்ப் பற்றில்லை. பிழைப்பு மொழியாகி விட்டது; மொழி வாணிகமே மூண்டுளது. இது சுமுகமான-நலமான சூழல் ஆகாது. தாய்மொழி பற்றி யார் என்ன குறை கூறினும் எப்படிக் குறைத்து எழுதினும் நமக்கென்ன என வாளாவிருக்கும் வறட்சி! ‘தமிழைப் பழித்தவனைத் தாய் தடுத்தாலும் விடாதே’ என்ற பாவேந்தர் மொழி என்னவாயிற்று? ‘மறைமலையடிகள் தமிழும் ஒரு தமிழா?’ எனக் கேட்டவாய் மூடு முன்னே பதிலடி தந்த அ. சிதம்பதநாதர், நாவலர் பாரதியார், இலக்குவனார் போன்றாரைக் கைகூப்பி வணங்கலாம் போலிருக்கிறது.

நாம் நெல்லிக்காய் மூட்டைகள்; தமிழாசிரியரிடை ஒருமை இல்லை; பெரியாரும் ஜி.டி. நாயுடுவும் பகர்ந்தது போலே காவல் நிலையம் பக்கத்தில் இருக்க வேண்டி இருக்கிறது. கருத்து வேற்றுமைக்கு இடம் தந்து, அதை மன வேற்றுமை யாகக் கொள்ளா மாண்பு வேண்டும்.

ஒரு தமிழன் இசுலாமியரைக் கண்டதும் ‘சலாம்’, கிருத்துவரைக் கண்டதும் Good morning, வடநாட்டவரைக் கண்டதும் ‘நமஸ்தே’ போடுகிறான். பேசுவதும் படிப்பதும் ஆங்கிலமே! அதில் தனிப் பெருமை! ஆனால் இரு மலையாளிகள், கன்னடர், தெலுங்கர் சந்திக்கும்போது தாய்மொழியிலேயே பேசுகின்றனர். ஒவ்வொருவரும் தம்மொழி நாளிதழை வாங்கிப் படிக்கின்றனர். ஆனால் நாமோ உரையாடுவதும் படிப்பதும் ஆங்கிலம்! என்று தணியும் இந்த அடிமையின் மோகம்!

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற உலகு போற்றும் நேயம் பிறருக்கே. நமக்குள் குறுகல் கோணல் புத்தி (Crooked mentality) அழுக்காறு, புறம்பேசல்! முதலில் இவை போக வேணும்.

இத்தகு புரைகளை கறைகளைப் போக்கி, குறைகள் நீக்கித் தாய்த் தமிழ் போற்றி, 'ஒரு குடைக்கீழ் ஆண்ட இனம், கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்தகுடி' என்றெல்லாம் பழம்பெருமை பேசிப் பாழாய்ப் போகாது நம்மையுணர்ந்து நம் தமிழ் மொழி வளர்ப்போம்! அதுவே நம் தலைப்பணி!

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு!

# தொட்டதும் விட்டதும்

## அ. பதிப்பகங்கள்

(1230 ஆம் பக்கம்-தொடர்ச்சி)

**புத்தகப் பூங்கா:** புதிய எழுத்தாளர்களின் படைப்புக்களைப் போற்றி வெளியிடும் வித்தகப் பூங்கா. 50க்கும் மேற்பட்ட அழகு நூல்களை வெளியிட்டுள்ளது. **முகவரி** : 29, நல்லண்ண முதலித் தெரு, இராயப்பேட்டை, சென்னை-14.

உரிமையர் **மீ: பஞ்சநாதன்,** 9-5-1954. தேவகோட்டை. வெளியீட்டுப் பணியோடு அமைந்து விடாது பொதுப்பணி களிலும் இலக்கியத் தொண்டுகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளும் இனியர். '**இலக்கிய வீதி**யுடன் இணைந்து இயன்ற வாறு இன்றமிழ்ப் பணிகளும் ஆற்றிவரும் இன்ப அன்பினார்.

Pioneer Book Services (Ps) : 1985. நிறுவனர் ச. சிதம்பரம் பிள்ளை. (குமரி மாவட்ட பூதபாண்டி). வயது 33. மதுரைப் பல்கலைக் கழக நூலகர் தேர்வில் தேர்ச்சி பெற்றுப் பல நூலகங்களில் பணியாற்றியவர். அந்தப் பட்டறிவு கொண்டு தமிழ் மொழி நாகரிகம் பண்பாடு பற்றிய அரும் பெரும் நூல்கள், இன்று கிடைக்குமாறு, அந்நூற்களை மட்டுமே வெளியிடும் ஒரே உயரிய நோக்கில் தம் சகோதரர் நீலகண்டன் துணையுடன் இப்பணியினைத் தொடங்கியுள் ளார்.

கிடைத்தற்கரிய நூற்களைக் கண்டுபிடித்து வெளிக் கொணரும் சீரிய பணியினை மேற்கொண்டுள்ள **ஒரே தென்னிந் திய நிறுவனம்** இஃதொன்றே! வெளியீடுகள் : 1. சுன்னாகம் குமாரசாமி பிள்ளையின் இலக்கியச் சொல்லகராதி (1911), 2. ஜான் லாசரசின் A Tamil Grammar, (1878), 3. ஜி.யு. போப் ஐயரின் மணிமேகலை ஆங்கிலப் பெயர்ப்பு. 4. முதன் முதல் ஐந்திர இலக்கணம் பற்றி வெளியுலகிற்குணர்த்திய டாக்டர் A.C. Burnettன் ஐந்திரம் குறித்த நூல் (1875). 5. திராவிடக் கலாச்சாரம் குறித்த அடிப்படை ஆராய்ச்சிக்கு இன்றியமை யாத India 3000 years ago (1858), பேரா. சுந்தரம்பிள்ளை, பி.டி. சீனிவாச அய்யங்காரின் அரிய நூல்களும். **முகவரி** : 63, முதல் நெடுஞ்சாலை, மேற்கு சி.ஐ.டி. நகர், சென்னை-35 (440 168).

## ஆ. மாத்தமிழ் வளர்க்கும் மன்றங்கள்

(1462 ஆம் பக்கத் தொடர்ச்சி)

**நன்னெறிக் கழகம் கோவை :** 1956 சி.பி. சடகோபால் போன்றார் ஆர்வமுடன் வளத்த நல்ல கழகம். வெள்ளிவிழா வும் கொண்டாடிய செயற் கழகம். சொற்பொழிவுகள், ஆண்டு விழாக்கள் நிகழ்த்தும். நற்றமிழ் அறிஞர்க்குப் பட்டங் கள் தந்து போற்றி ஊக்கும் போக்கினது. மாலையில் தமிழ் வகுப்புகள் நடாத்தியது.

## இ. கல்லூரிகளில்...

(1742 ஆம் பக்கத் தொடர்ச்சி)

**இரா. குருநாதன் :** 7-6-1945. குடந்தை. இராமலிங்கம்; சேது அம்மாள். டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரின் மருமான். நகர உயர்நிலைப் பள்ளி 65; அரசினர் கல்லூரித் தமிழ் இளங்கலை 69; சென்னை பச்சையப்பன் கல்லூரி முது கலை 71. அங்கேயே தமிழ்த்துறை ஆசிரியர். 76இல் எம். லிட், 'சங்க இலக்கியத்தில் குறிஞ்சி'; 79இல் பி. எச். டி. அகிலன் நாவல்கள்.

நூல்கள் : குடந்தைப் பெருமக்கள், வெள்ளிவீதி (ஓரங்க நாடகம்) ஊமைக் காலங்கள் (நாவல்), சங்கப்பாட்டும் ஜப்பானியக் கவிதையும், நாட்டுப்புறப் பாடல்கள் (தஞ்சை மாவட்டம்). இதழியல், ஒப்பியல் பார்வைகள். திருமணம் 70இல், செயலட்சுமி, மகள் தேவி. இனியர், ஒல்லும்வகை உதவிடும் நல்லர். **முகவரி :** 28. பங்காரு குடியிருப்பு. விருகம் பாக்கம். சென்னை 92. (429570)

# பிற நாடுகளில் பைந்தமிழ்

தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட மக்கள் இன்று உலகெங்கணும் உறைகின்றனர். 150க்கும் மேலான நாடுகள் உள; இதில் மூன்றில் ஒரு பங்கு—50க்கும் மேலான நாடுகளில் தமிழர் குடியேறியுள்ளனர். பண்பாடு, மொழித் தொடர்பு போன்றவற்றானும் இணைந்துளோம். பிறநாடுகட்கான புலப்பெயர்ச்சி சென்ற நூற்றாண்டில்தான்; ஆனால் ஈழத் தொடர்போ கிறித்துவுக்கு முன்னையது. அடுத்து ஏராளமாக வாழுமிடம் மலேயா சிங்கப்பூர். இரண்டுக்கும் இலக்கியத் தொடர்புண்டு.

சென்ற இடங்களிலெல்லாம் செந்தமிழ் பேணுகின்றனர்; அதனால் கன்னித் தமிழ் கிளைக்கின்றது. இதனால் இனித் தமிழகத்தை மட்டும் வைத்துக்கொண்டு, இலக்கிய வரலாறு எழுதுவதும்—பயில்வதும் அரைக்கிணறு தாண்டுவதாகும். அரைகுறையாக அமையும். எனவே அந்நாடுகளில் அருந்தமிழ் பெருகி வருவதும் கண்டுணர்ந்து கருத்திற்கொண்டு பயின்றால் தான் அது முழுமையான வரலாறாக ஆகும். தாயக மக்களின் தமிழ் வரலாற்றோடு சேய்களின் செழுந்தமிழ் வளர்ச்சியும் சேர்த்தே கணக்கிட வேண்டும். அப்போதுதான் நிறை வெய்தும்.

பொற்கோ-உலகில் தமிழும் தமிழரும், தெ.பொ.மீ-தமிழும் பிற பண்பாடும், தனிநாயக அடிகள்-ஒன்றே உலகம், Tamil Studies abroad; தமிழண்ணலின் உலகத் தமிழ், உலகத் தமிழராய்ச்சி நிறுவன உலகில் தமிழும் தமிழரும், மது. ச.வி.-நாடும் தமிழும், அயல் நாடுகளில் அருந்தமிழ் போன்றன பார்த்தறிய வேணும்.

## அ. ஈழமும் தமிழும்

வரலாற்றுக் காலமுதலே வடக்கு கிழக்குப் பகுதிகளிலே பெருவாரியாக வதிந்து வருகின்றனர்; இவர்கள் **இலங்கைத்**

## ஆ. மாத்தமிழ் வளர்க்கும் மன்றங்கள்

(1462 ஆம் பக்கத் தொடர்ச்சி)

**நன்னெறிக் கழகம் கோவை :** 1956 சி.பி. சடகோபால் போன்றார் ஆர்வமுடன் வளத்த நல்ல கழகம். வெள்ளிவிழா வும் கொண்டாடிய செயற் கழகம். சொற்பொழிவுகள், ஆண்டு விழாக்கள் நிகழ்த்தும். நற்றமிழ் அறிஞர்க்குப் பட்டங் கள் தந்து போற்றி ஊக்கும் போக்கினது. மாலையில் தமிழ் வகுப்புகள் நடாத்தியது.

## இ. கல்லூரிகளில்...

(1742 ஆம் பக்கத் தொடர்ச்சி)

**இரா. குருநாதன் :** 7-6-1945. குடந்தை. இராமலிங்கம்; சேது அம்மாள். டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரின் மருமான். நகர உயர்நிலைப் பள்ளி 65; அரசினர் கல்லூரித் தமிழ் இளங்கலை 69; சென்னை பச்சையப்பன் கல்லூரி முது கலை 71. அங்கேயே தமிழ்த்துறை ஆசிரியர். 76இல் எம். லிட், 'சங்க இலக்கியத்தில் குறிஞ்சி'; 79இல் பி. எச். டி. அகிலன் நாவல்கள்.

நூல்கள் : குடந்தைப் பெருமக்கள், வெள்ளிவீதி (ஓரங்க நாடகம்) ஊமைக் காலங்கள் (நாவல்), சங்கப்பாட்டும் ஜப்பானியக் கவிதையும், நாட்டுப்புறப் பாடல்கள் (தஞ்சை மாவட்டம்). இதழியல், ஒப்பியல் பார்வைகள். திருமணம் 70இல், செயலட்சுமி, மகள் தேவி. இனியர், ஒல்லும்வகை உதவிடும் நல்லர். **முகவரி :** 28. பங்காரு குடியிருப்பு. விருகம் பாக்கம். சென்னை 92. (429570)

# பிற நாடுகளில் பைந்தமிழ்

தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட மக்கள் இன்று உலகெங்கணும் உறைகின்றனர். 150க்கும் மேலான நாடுகள் உள; இதில் மூன்றில் ஒரு பங்கு—50க்கும் மேலான நாடுகளில் தமிழர் குடியேறியுள்ளனர். பண்பாடு, மொழித் தொடர்பு போன்றவற்றானும் இணைந்துளோம். பிறநாடுகட்கான புலப்பெயர்ச்சி சென்ற நூற்றாண்டில்தான்; ஆனால் ஈழத் தொடர்போ கிறித்துவுக்கு முன்னையது. அடுத்து ஏராளமாக வாழுமிடம் மலேயா சிங்கப்பூர். இரண்டுக்கும் இலக்கியத் தொடர்புண்டு.

சென்ற இடங்களிலெல்லாம் செந்தமிழ் பேணுகின்றனர்; அதனால் கன்னித் தமிழ் கிளைக்கின்றது. இதனால் இனித் தமிழகத்தை மட்டும் வைத்துக்கொண்டு, இலக்கிய வரலாறு எழுதுவதும்—பயில்வதும் அரைக்கிணறு தாண்டுவதாகும், அரைகுறையாக அமையும். எனவே அந்நாடுகளில் அருந்தமிழ் பெருகி வருவதும் கண்டுணர்ந்து கருத்திற்கொண்டு பயின்றால் தான் அது முழுமையான வரலாறாக ஆகும். தாயக மக்களின் தமிழ் வரலாற்றோடு சேய்களின் செழுந்தமிழ் வளர்ச்சியும் சேர்த்தே கணக்கிட வேண்டும். அப்போதுதான் நிறை வெய்தும்.

பொற்கோ-உலகில் தமிழும் தமிழரும், தெ.பொ.மீ-தமிழும் பிற பண்பாடும், தனிநாயக அடிகள்-ஒன்றே உலகம், Tamil Studies abroad; தமிழண்ணலின் உலகத் தமிழ், உலகத் தமிழராய்ச்சி நிறுவன உலகில் தமிழும் தமிழரும், மது. ச.வி.-நாடும் தமிழும், அயல் நாடுகளில் அருந்தமிழ் போன்றன பார்த்தறிய வேணும்.

## அ. ஈழமும் தமிழும்

வரலாற்றுக் காலமுதலே வடக்கு கிழக்குப் பகுதிகளிலே பெருவாரியாக வதிந்து வருகின்றனர்; இவர்கள் **இலங்கைத்**

**தமிழர்** எனப்படுகின்றனர், 14·2 விழுக்காடு. இனி சென்ற நூற்றாண்டில் தேயிலை ரப்பர் தோட்டங்களில் பாடுபட ஆங்கில அரசினரால் இந்தியாவிலிருந்து கொண்டுவரப் பெற்றோர் 11-3%; ஆங்கில ஆட்சியின் முடிவில் இலங்கை யரல்லாதார் எனக் கருதப்பட்டோர், **இந்தியத் தமிழர்** ஆவர். முன்னவர் பின்னவர்களைத் தங்களவராகக் கருதவில்லை! மொத்த மக்கள் தொகையில் தமிழ் பேசுவோர் 30%; (40 லட்சம் தமிழர்கள், 4 ஆயிரம் விடுதலைப் புலிகள்).

இவர்களிடம் தமிழகத்துக்குரிய பொதுத் தன்மையும் உண்டு, ஈழத்துக்குரிய தனித் தன்மையும் உண்டு. இதனால் தமிழகத் தமிழர்கள் பேச்சுக்கும் இலங்கைத் தமிழர் பேச்சுக்கும் நிரம்ப வேறுபாடு நேர்ந்துளது; அதுபோல் இலக்கியத்திலும் மாறுபாடு மிகுந்துள. ஆங்கிலம் ஒன்றேயாயினும் இங்கிலாந்து இங்கிலீசும் அமெரிக்கன் இங்கிலீசும் வேறுபடுவது, English Litt. American Litt, மாறுபடுவது போன்று தமிழக ஈழத் தமிழும் இலக்கியமும் திகழ்கின்றன. கண்ணிரண்டாயினும் பார்வை ஒன்றே, காலிரண்டாயினும் நடை ஒன்றுதான் என்னுமாப்போலே, இரண்டும் சேர்ந்ததே இலக்கிய வரலாறு என்றாகிவிட்டது!

தமிழகத்தினும் பார்க்க 'சைவமும் செழுந்தமிழும்' இரு கண்களாக ஈழத்தமிழர் பாவிப்பது மறுக்கவோ-மறக்கவோ முடியாது. அவர்களது உண்மைப் பற்றும் ஆற்றும் தொண்டும் தலைவணங்கத் தக்கவை. ஈழத்து இலக்கிய மூலவராக எண்ணப்படுபவர் **ஈழத்துப் பூதன் தேவனார்**. (ஈழம் என்பது இலங்கையைத்தான் குறிக்கிறதா? இவர் பாட்டினுள் ஈழம் பற்றிய குறிப்பும் இல்லை!) ஈழத் தமிழ் வரலாறு இவரிலிருந்தே தொடங்குகிறது. (தலைச் சங்க முரஞ்சியூர் முடிநாகராயர் ஈழ நாட்டவர், நாகர் குடியினர்; தொல்காப்பியரின் பிறப்பகங் கூட ஈழத்தில் உளது என்றொரு ஆய்வும் உளது).

ஈழத்தமிழ் வளர்த்த ஏந்தல்கள் பலர். அவர்களில் தூண் களாகத் திகழ்பவர்கள்: ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரனார், விபுலானந்தர், ஆனந்த குமாரசாமி, தனி நாயக அடிகள், கைலாசபதி போன்றார். சிறந்த சிலரைச் சிந்திப்போம்:

**சைமன் காசிச்செட்டி:** 21-3-1807—5-11-60. புத்தளத்தை யடுத்த கற்பிட்டி. பன்மொழி பயின்றவர். நீதிமன்றப் பெயர்ப் பாளர். 28இல் புத்தள மணியக்காரர்; 33இல் மாவட்ட

முதலியார், 38-45 சட்ட நிருபண சபை உறுப்பினர், 45இல் சிவில் சர்வீசில் காவல்துறை நீதவான். கடமையாற்றிக் கொண்டே இலக்கிய வரலாற்றாராய்ச்சியில் ஈடுபட்டு நூல்கள் பல யாத்தார்.

27 வயதில் எழுதியது Ceylon Gazetteer: இதற்காக 100 கினி பணப் பரிசு பெற்றார். அரசே அச்சேற்ற உதவியது; தமிழர் சாதிப் பகுப்பு முறை, புத்தள முக்குவரின் உற்பத்தியும் வரலாறும், தமிழர் சடங்கு முறைகள், இலங்கைச் சோனகரின் பழக்க வழக்கங்கள், மலையகராதி, இலங்கையில் கத்தோலிக்க சமய அபிவிருத்தி, கிருஸ்துமதக் கண்டணம் வச்சிரதண்டம் நூலுக்கு மறுப்பு எனப் 12. தென்னிந்தியா இலங்கையில் வதிந்த புலவர்களின் வரலாற்றினைத் திரட்டி Tamil Plutarch (1859) என ஆங்கிலத்தில் வெளியிட்டு அருஞ்சாதனை புரிந்தார். தமிழுணர்ச்சி குன்றிய காலத்தில் தமிழுக்கு அரும் பணியாற்றி, இலங்கைப் பழம் பெருமை வெளிக்காட்டிய சிறப்பினர்.

**ஆறுமுக நாவலர்:** *18-12-1822—5-12-79.* யாழ்ப்பாண நல்லூர், ஞானப்பிரகாச சுவாமிகள் மரபு. கந்தப்பிள்ளை: சிவகாமி. ஆறாவது பிள்ளை. சுப்பிரமணிய உபாத்தியாயர், புலவர் சிங்கம் இருபாலைச் சேனாதிராய முதலியார், சரவண முத்துப் புலவரிடம் பயின்று தமிழும் சமக்கிருதமும் சிறந்தார். ஆங்கில அறிவு பெற பீற்றர் பெர்சிவல் பள்ளிக்குச் சென்றார். இவர் திறம் கண்ட பாதிரியார் ஆசிரியராக அமர்த்திக் கொண்டார். அவர் வேண்டவே பைபிளைத் தமிழ்ப்படுத்தித் தந்தார். மழவை மகாலிங்கையர் சிறந்ததெனப் பரித்துரைத்தார்; இதன் மூலம் கிருத்துவம் பற்றி முழுமையாக உணர்ந்தார்; நல்ல மொழிபெயர்ப்பாளர்.

'தமிழ்' சமயம் இரண்டும் என் இரு கண்கள். அவ்விரண்டும் ஒளி குன்றாமல் இறுதிவரை காத்துப் பயன் கொள்வதே என் கடன். அவை வாழப் பணிபுரிதலே என் வாழ்வின் குறிக்கோள்' எனத் தமிழ்-சைவம் இரண்டும் வளர்க்கக் கங்கணம் கட்டிக் கொண்டார். 1848இல் வண்ணார் பண்ணையில் 'சைவப் பிரகாச வித்தியா சாலை' நிறுவினார்; 64இல் சிதம்பரத்தில் நிறுவப்பட்டது. 75இல் புலோலியில் நிறுவினார். 49இல் 'வித்தியாநுபாலன யந்திரசாலை' அச்சகம் அமைத்தார். பாடசாலைகளை வீடுவீடாகச் சென்று பிச்சையாக அரிசி பெற்று நடாத்தியுள்ளார்!

49 சூலை தமிழகம் போந்தார். திருவாவடுதுறை ஆதீன முதல்வர் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் 'நாவலர்' பட்டம் சூட்டினார். பாதிரிமார்களின் ஒருபால் கோடிய உரைகள் கண்டு வெகுண்டெழுந்து கண்டனக் கட்டுரைகளும் துண்டு வெளியீடுகளும் வெளியிட்டார். குறிப்பிடத் தக்கன: 'சைவ தூஷண பரிகாரம்' (சைவப் பிரகாச சமாஜீயர் எனும் புனை பெயரில்), சுப்பிர போதம்.

நாவலர் புத்துரை யாத்தும், புதிதாய் எழுதியும், பதிப்பித்தும் வெளியிட்டவை 57. 1. பால பாடங்கள் 4, 2. சைவ வினாவிடை 2, இலக்கண வினா விடை; 3. வசனம் : பெரிய, கந்த, திருவிளையாடற் புராணங்கட்கு. 4. உரைகள் சூடாமணி நிகண்டு, சௌந்தரிய லகரி, திருச்சிற்றம்பலக் கோவை, கோயிற் புராணம், சிவஞானபோதம், நன்னூல் போன்றவற்றுக்கு, 5. அனுட்டான விதி 2, 6. இலக்கணக் கொத்து, சுருக்கம்; நன்னூல் விருத்தி, காண்டிகை; இலக்கண விளக்கச் சூறாவளி, தொல் - சூத்திர விருத்தி, சொல் - சேனாவரையம். 7. இலங்கை பூமி சாத்திரம், யாழ்ப்பாண சமய நிலை. எழுதி முடித்தவை 10, தொடங்கியவை 9. முதலிற் பதிப்பித்தது சிதம்பர சுவாமிகள் உரையே. வயதுக்கேற்ப வளமார் நூல்கள் தந்தவர்; பாலர் முதல் பண்டிதர் வரை படித்தனுபவிக்கப் பாங்கான நூல்கள் வழங்கியுள்ளார். இலக்கணத்தை எளிமைப் படுத்தித் தந்தார்.

சாதனை : 1. சான்றோரிடம் செய்யுள் நடை பயின்று வந்த செந்தமிழ்ப் பாவை யாட்கு வன்ன நடை, வழங்கு நடை, வசன நடைதான் எனப் பயிற்றி வைத்த ஆசான் (சோம சுந்தரப் புலவர்). 'வசன நடை கைவந்த வல்லாளர்' (வி. கோ. சூ) என்றேத்தப்படுகிறார்; 'தமிழ் உரை நடையின் தந்தை எனப் போற்றப் பெறுகிறார். கொடுந்தமிழ் கொச்சைத் தமிழ் என மேடு பள்ளமாக இருந்ததைச் சமனப்படுத்தியவர். 'சிறுசிறு வாக்கியங்களின் திட்பம், அவை கோவையாகப் பத்தி பத்தியாக ஒற்றுமை நயம்பட்டு விளக்கும் நுட்பம், கட்டுரை முழுதும் ஒரு பொருளாய் அமையும் இனிமை, கருத்தின் தெளிவு, சொற்களின் எளிமை அழகு, ஆரவாரமில்லாமை, பிறர் அறியாமல் உள்ளுக்குள்ளேயே அமைந்து விளங்கும் இலக்கண நயம் - இவையெல்லாம் இவர் உரை நடையில் காணலாம்' (தெ. பொ. மீ.)

2. மேல் நாட்டவர் கடைப்பிடித்த முற்று அரைப் புள்ளிகள், வினா வியப்புக் குறிகளை யெல்லாம் முதன்முதல்

கையாண்டவர். 3. பிழையற்ற செம்பதிப்புகள் கொணர்ந்ததில் இவருக்கு நிகர் எவருமிலர். 'நாவலர் பதிப்பு என்றாலே நல்ல பதிப்பு' என்ற நம்பிக்கை பிறந்தது. 4. தமிழிசைக்கும் விதை போட்டவர். உபாசனா மூர்த்தி முருகன் மேல் கீர்த்தனங்கள் பாடியுள்ளார். 5, உரைநடை வேந்தரான இவர் உயர் கவிஞருமாவார். பழைய பக்திப்பாடல்களே போதும் என்ற எண்ணத்தர். எனவே அதிகம் எழுதவில்லை. 6. பேச்சுத் தமிழை இளைஞர் மனத்தில் வேரூன்ற வைத்துள்ளார். 7, சொன்மாரி தொடங்கியது 31-12-47 இல். எங்கேயிருப்பினும் வெள்ளிக்கிழமை விரிவுரை தவறியதில்லை. 'நல்லை நகர் ஆறுமுக நாவலர் பிறந்திலரேல், சொல்லு தமிழ் எங்கே?' என்றார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

இவ்வளவு பெரியவர் 'நீருக்கும் நுரையுண்டு, நெல்லுக்கும் உமியுண்டு, புல்லிதழ் பூவிற்கும் உண்டு' என்னுமாப் போலே வள்ளலார்மீது வழக்குத் தொடுத்தார்; 'போலி அருட்பா மறுப்பு' விடுத்தார். 'தேவார திருவாசகமிருக்க நேற்றெழுந்த ஒருவர் பாடலைப் போற்றக்கூடாது; பழைய தமிழ் மறைக்குச் சேதம் வரும்படி ஏதும் செய்யலாகாது; 'நித்திய தேகம், செத்தாரை எழுப்பல் எல்லாம் வீண் மயக்கம்' என்பது இவர் வாதம். ஆயினும் நீதி மன்றினுக்கு வள்ளலார் வரும்போது எழுந்து நின்று மதிப்புத் தந்துள்ளார். தமிழிலக்கிய வரலாற்றில் அழியா இடம் - அசைக்க முடியாத் தலைமை பெற்றவர் நாவலர் என்றால் மிகையாகாது.

**சி. வை. தாமோதரம் பிள்ளை** : *1832 — 1-1-1900* யாழ்ப்பாண சிறுப்பிட்டி. வைரவநாத பிள்ளை : பெருந்தேவியம்மாள். முத்துக்குமாரக் கவிராயர் (சுன்னாகம் குமார சுவாமிப் புலவரின் பாட்டனார்) முதல் இலக்கண இலக்கிய ஆசான். தெல்லிப்பழை மிஷன் பாடசாலை, பின் வட்டுக் கோட்டை செமினரி 44-52ல் கல்வி; எல்லாப் பாடங்களிலும் முதன்மை.கோப்பாய் போதனா சக்தி வித்தியாசாலை ஆசிரியர் பெர்சிவல் பாதிரியார், 'தினவர்த்தமானி' ஆசிரியராக்கி சென்னைக்கு அழைத்து வந்தார், இங்கு ஆங்கிலப் பிரபுக்களுக்குத் தமிழ் கற்பித்தார். இவர் திறம் கண்டு இராசதானிக் கல்லூரிப் பண்டிதராக நியமித்தது அரசு. அப்போது தோன்றிய சென்னைப் பல்கலைக் கழகத்தின் பி. ஏ. முதல் மாணவராகச் சித்தி பெற்றார்.

கள்ளிக் கோட்டை அரசினர் கல்லூரியில் பணி ஏற்றார்; சென்னை அரசு வரவு செலவுத் திணைக்கள உயர் அலுவலரானார், 71இல் பி. எல். ஓய்வு பெற்றுக் குடந்தை யடுத்த

கருப்பூரில் வதிந்தார். உ.வே. சா. தொடர்பு ஏற்பட்டது. வக்கீல் தொழில் புரிந்தார். 84இல் புதுக்கோட்டை நீதிமன்ற நடுவர்; 90இல் இளைப்பாறினார். 95இல் 'ராவ் பகதூர்' பட்டம். ஆசானானது முதல் இவர் குறிக்கோள்: 'செல் துளைத்த துளையன்றி மெய்ப்புள்ளி விரவாத சென்னாளேடு' களைத் தேடிப் பதித்தல்'. வீரசோழியம், இறையனாரகப் பொருள்; தொல்-சொல், பொருள்; இலக்கண விளக்கம், சூளா மணி, கலித்தொகை, நீதிநெறி விளக்கம் எனப் 11. எழுதியவை கட்டளைக் கலித்துறை. சைவ மகத்துவம், சூளாமணி வசனம், நட்சத்திர மாலை என 6. இவர்தம் பதிப்புரை எல்லோரும் படித்துணர வேண்டிய கருவூலம்; ஆய்வுத் திட்பமும் மதி நுட்பமும் மிக்கது.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் தேர்வாளராக இருந்த ஞான்று, பரிதிமாற் கலைஞர் முதலிடம் பெற்றது கண்டு இல்லத்திற்'கழைத்து அளவளாவி அவர் திறம் கண்டு 'திராவிட சாஸ்திரி' எனப் போற்றினார். 'தாமோதரம் பிள்ளை சால்பெடுத்துச் சாற்ற எவர் தாமோ தரமுடையார்?' இது வி. கோ. சூ. வியப்புரை. மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வில் தேர்ந்தாரை வரவழைத்துப் பாட்டியற்றச் செய்தும், கட்டுரை வரையச் செய்தும் உரையாடி உவந்தும். தகுதியறிந்து தாமும் பரிசு நல்கி மகிழும் பான்மையர். தமிழே தெய்வம். தமிழ்ப் பணியே தவம் எனத் திகழ்ந்தவர்.

**கு. கதிரை வேற் பிள்ளை:** 1829—1904. யாழ்ப்பாண உடுப் பிட்டி, புகழ்பூத்த குமாரசாமி முதலியாரின் புதல்வர். காவல் துறை நீதிமன்ற நடுவர். ஆங்கிலமும் தமிழும் வல்லார். இவரது தமிழ்ச் சொல்லகராதி மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு; தகரம் வரையே உளது. இவரை உவைமன் கதிரைவேற் பிள்ளை எனவும் அழைப்பர். இவர் திருமகனாரே இலங்கைச் சட்ட நிருபண உறுப்பினர்-வழக்கறிஞர் கொரவ பால சிங்கம்.

**சபாபதி நாவலர்:** 1844—1903. யாழ்ப்பாண கோப்பாய். சைவசித்தாந்தம் செறிந்தவர்; தருக்கம் வல்லவர்; தேர்ந்த சொற்பொழிவாளர். சிவஞான மாபாடியத்தை எழுத் தெண்ணிக் கற்று சிவஞான முனிவரைச் சிந்தையில் பூண்டவர், குலதெய்வமாகக் கொண்டவர். திருவாவடுதுறை ஆதீன வித்துவான். செய்தவை: ஏசுமத சங்கற்ப நிராகரணம் (கண்டனம்), சிதம்பர சபாநாத புராணம், சிவகர்ணாமிர்த மொழிபெயர்ப்பு, பாரத-ராமாயண தாற்பரிய சங்கிரகங்கள்,

திராவிடப் பிரகாசிகை (இதுவொன்றே இவர் பேர் சொல்லப் போதுமான படைப்பாகும்), சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம் எனப் 15.

மாணாக்கர்: மாகறல் கார்த்திகேய முதலியார், திரு மயிலை சிங்காரவேலு முதலியார். இவரது புலமை, பண்பு அறிந்த ஆறுமுகநாவலர் தம் சைவப்பிரகாச வித்தியாசாலை யில் தலைமை ஆசிரியராக அமர்த்தினார்; இவரும் சிதம்பரத் தில் சில ஆண்டுகள் உறைந்தார். இவரை ஆறுமுக நாவலரின் மாணவர் என்பர். பாஸ்கர சேதுபதியுடன் தங்கிச் சமய விரிவுரைகள் ஆற்றினார். விடைபெறும்போது 3000ரூ அளித்து அனுப்பினார் மன்னர். அதுகொண்டு சென்னையில் சித்தாந்த வித்தியானுபாலன யந்திரசாலை அமைத்து, 'ஞானாமிர்தம்' ஏடு நடாத்தினார். இவரது நாவன்மை கருதி திருவாவடுதுறை ஆதீனம் 'நாவலர்' பட்டம் நல்கியது.

**நா. கதிரைவேற் பிள்ளை:** *1844—1907.* யாழ்ப்பாண புலோலி. தந்தை நாகப்பிள்ளை. தென்-வடமொழித் தீரர். சிறந்த சொற்பெருக்காளர். அவதானமும் செய்வார். அகராதி தொகுத்துள்ளார்: யாழ்ப்பாண அகராதி எனப்பெறும். நூல்கள்: சிவாலய மகோற்சவ விளக்கம், சுப்பிரமணிய பராக்கிரமம், சைவ சந்திரிகை, சைவ சித்தாந்தச் சுருக்கம், கருவூர்ப் புராணம் எனப் 10. நைடதவுரை-திரு.வி.கவின் குரு இவரே.

இந்தியா வந்து தி.த கனகசுந்தரம் பிள்ளையிடம் இலக்கண இலக்கியம் பயின்றார். பின் வடமொழியிலும் மிகு புலமை மேவினார். சமய விரிவுரைகள் ஆற்றினார், மாயா வாதத்தை மறுத்தொதுக்கியமையால் 'மாயாவாத துவம்ச கோளரி' பட்டம் வழங்கினர். ஆரணி சமத்தான வித்துவான்; சமத்தானத் தலைவர், 'அத்துவித சித்தாந்த மகோத்தாரணர்' எனப் பட்டம் அளித்தார்.

**சர். பொன். ராமநாதன்:** *16-4-1851—26-11-1930* மானிப் பாய். பொன்னம்பலம்: சொல்லாச்சி அம்மை. சிறந்த கல்வி மான், அரசியல் அறிஞர், தத்துவ ஞானி. ராயல் அகாதமியில் ஆரம்பக் கல்வி, சென்னைப் பல்கலைக் கழக பி.எல். பட்டம், வழக்குறைஞராக விளங்குதல், தஞ்சை இலக்கணம் இராம சாமிப் பிள்ளையிடம் தமிழ் இலக்கண இலக்கியம் வேதாந்த

சித்தாந்தம் கற்றவர். 79-92 இலங்கைச் சட்டசபை தமிழரின் பிரதிநிதி. 92-1905 சட்ட அறிஞர் நாயகம் (Solicitor General). 05-06 அமெரிக்கச் சுற்றுப்பயணம் சொற்பொழிவுகள். 11இல் முதலாவது சீர்திருத்தச் சட்டசபை உறுப்பினர். 15இல் சிங்களவர் சார்பில் கலகத்தின்போது அதிகாரிகளின் அடக்கு முறைக்கெதிராக வாதாடினார், பிரிட்டிஷ் பாராளுமன்றிலும் எடுத்துரைத்தார். 19இல் திருநெல்வேலி பரமேசுவராக் கல்லூரி, 13இல் சுன்னாகத்தில் ராமநாதன் மகளிர் கல்லூரி, கொழும்பில் பொன்னம்பலவாணேசர் கோயில் எழுப்பல்.

*நூல்கள்:* பகவத்கீதை விரிவுரை, திருக்குறள் பாயிரம்-ராமநாதீயம், செந்தமிழ் இலக்கணம், மந்திர விளக்கம். இவரது வெங்கலச் சிலை இலங்கைப் பாராளுமன்ற முன்றிலில் நிறுவப்பட்டது. இவரது இளவல்:

**சர். பொன். அருணாசலம்:** *14-9-1853—9-1-1924.* ராயல் அகாதமியிலும் பின் கேம்பிரிஜ் கிறித்துவக் கல்லூரியிலும் பயின்று எம்.ஏ. பட்டம் பெற்றார், பின் பாரிஸ்டர் ஆனார். மாமன் சர். முத்துக்குமாரசாமி வேண்டியாங்கு Civil Service தேர் வெழுதி வெற்றி பெற்றார்; இதில் முதல் இலங்கையர். 75இல் கொழும்பு மாகாண அதிபர், கண்டி காவல்துறை நீதி மன்ற நடுவர், 83இல் நமசிவாய முதலியார் மகள் சொர்ணத்தை மணந்தார். 87இல் பதிவாளர் நாயகம்; காணிப்பதிவு, பிறப்பு இறப்பு திருமணப் பிரிவு ஏற்படுத்தியவர் இவரே. 1901 குடிசன மதிப்பீட்டு வேலை ஏற்று குடிசன சூசிகை முதன் முதல் வகுத்தார். 03இல் குருநாகல் உயர்நீதி மன்ற நடுவர். 06இல் சட்ட நிருபணசபை உறுப்பினர், 12இல் சட்ட நிருவாக சபை உறுப்பினர். 13இல் ஓய்வு. 'சர்'பட்டம்.

19இல் தோன்றிய இலங்கைத் தேசியக் காங்கிரசின் முதல் தலைவர். 19இல் தொழிற் சங்கம் தோற்றினார். இவரே இலங்கையின் **தாய்மொழிக் கல்வியின் தந்தை.** இலங்கையில் பல்கலைக் கழகம் நிறுவ வேண்டுமென முதன் முதல் முயன்றார். இவர் முயற்சியாலேயே இலங்கைப் பல்கலைக் கழகச் சங்கம் 06இல் தொடங்கியது. ராயல் ஆசிய சங்கம், இலங்கைச் சைவ பரிபாலன சபைத் தலைவர். 23இல் இந்தியத் திருக்கோயில் யாத்திரை மேற்கொண்டார். இடையில் மதுரையில் மறைந்தார்.

ஓய்வுற்றபின் கலை கலையாராய்ச்சியில் தோய்ந்தார். நூல்கள் 12. இவரின் ஞானாசிரியர் தஞ்சை இலக்கணம்

இராமசாமிப் பிள்ளை. பேராதனை பல்கலைக் கழகத்தில் அருணாசல மண்டபம், பாராளுமன்ற முன்றிலில் வெண்கலச் சிலை உள.

**சு. நடேச பிள்ளை:** முன்னவரின் மருகர். 24-52 பரமேசு வராக் கல்லூரி முதல்வர், 52-56 தபால் தந்தி வானொலி அமைச்சர். இலங்கை வரலாறு (ஆங்)-சில பகுதிகள் இவர் கைவண்ணம். நூல் 'சகுந்தலை வெண்பா'

**சுன்னாகம் குமாரசாமிப் புலவர்:** *1854—1922..* உடுவில் முத்துக்குமார கவிராயர் மரபு. தந்தை அம்பலவாண பிள்ளை. முருகேச பண்டிதரிடம் தமிழும், நாகநாத பண்டிதரிடம் சமக் கிருதமும், அளவெட்டி கனகசபைப் புலவரிடம் தருக்கமும் பயின்று சிறந்தார். 78இல் தாமோதரம் பிள்ளையின் ஏழாலை தமிழ்ப் பாடசாலையிலும், 1902இல் ஆறுமுகநாவலரின் சைவப் பிரகாச வித்தியாசாலையிலும் தலைமையாசிரியர். சான்ட்லர், கு. கதிரைவேற் பிள்ளை அகராதிகட்கு உறு துணை புரிந்துளார். இவர் ஓர் நடமாடும் நூலகம்.

தந்தவை: தமிழ்ப் புலவர் சரிதம், இலக்கியச் சொல்லகராதி, கண்ணகி கதை, சிசுபால சரிதம், கம்ப பால காண்ட அரும் பதவுரை, நீதிநெறி விளக்கம், தண்டி, காரிகைகட்கும் புத்துரை எனப் 15. வடமொழியினின்று மேகதூத காரிகை, சாணக்கிய நீதிவெண்பா.

**ஆ. முத்துத் தம்பிப் பிள்ளை:** *18-4-1858—3-11-1917.* மானிப்பாய். ஆறுமுகம் பிள்ளை: சீதேவிப் பிள்ளை. வெஸ்லியன் மத்தியப் பாடசாலை வில்லியம் நெவின்சு சிதம் பரம் பிள்ளையிடம் தமிழும் ஆங்கிலமும் கற்றுத் தேர்ந்தார். 76இல் நாவலப்பிட்டி ஆசிரியர். 80இல் தமிழகம் போந்து திருத்துறைப் பூண்டி, நாகப்பட்டினம் ஆண்டர்சன் கம்பெனி கணக்கர். பொறையாறு தவசிமுத்து நாடார் நடாத்திய 'சத்தியாபிமானி' வார ஏட்டின் ஆசிரியர். 85இல் சென்னை ஆண்டர்சன் தெருவில் ஜூபிலி அச்சகம், 93இல் யாழ்ப்பாணம் போந்து வண்ணார் பண்ணை ஆறுமுக நாவலர் இல்லத்தை வாங்கி நாவலர் கோட்டம் என நூலகமும் அச்சகமும் அமைத் தல். 'வைத்திய விசாரணி' மாதிகை நடத்தல். சங்கம் நிறுவப் பாண்டித்துரைத் தேவர்க்கு உறுதுணை புரிதல்.

நூல்கள்: இலங்கைச் சரித்திர சூசனம், யாழ்ப்பாண சரித்திரம், தென்மொழி வரலாறு: சிவிலியன் தமிழ் இலக்கணம்,

நன்னூல் உதாரண விளக்கம்-இலகுபோதம் எனப் 11. முதல் தமிழ்க் கலைக் களஞ்சியமான '**அபிதான கோசம்**', 16 ஆண்டு உருவாக்கம்.

**ஆசுகவி க. வேலுப்பிள்ளை** : 1860—1944. யாழ்ப்பாண வயாவிளான். தமிழ்ப்பற்று, தாய் நாட்டன்பு, தெய்வ பக்தி மிக்கவர். காளமேகம் போலே பாடியமையால் 'ஆசுகவி' எனப் பட்டார். எந்த இடத்தில் எந்நேரத்தும் எவர் எது குறித்துப் பாடச் சொன்னாலும் உடன் பாடிடும் வளமையர். இங்கிலாந்து ஆங்கில நகைச்சுவை இதழ் Punch போல, 'சுதேச நாட்டியம்' என்ற ஏட்டினை எட்டாண்டுகள் சிறப்பாக நடாத்தினார்; குறிக்கோள் 'யதார்த்தவாதி வெகுசன விரோதி'!

இவரின் கவிதை கட்டுரை கண்டனங்கள் சுவை மிக்கவை. தம்மை எதிர்த்தோர் அஞ்ச நகை ததும்ப இடிமுழக்கம்போல் வீரமிகு சொற்களால் கண்டனங்கள் தீட்டுவதில் ஒப்பாரும் மிக்காருமின்றி ஒளிர்ந்தவர். குத்தலும் கிண்டலும் கொப்ப ளிக்கும். இதனால் 'கண்டனங்கள் கீறக் கல்லடியான், கண் டனப் புலி, கல்லடி வேலுப் பிள்ளை' என்றேத்தப் பெற்றார். முருகன்மீது பாடிய தோத்திரப் பாக்கள் பக்திச் சுவை பிலிற்றுவன.

இவரது 'யாழ்ப்பாண வைபவ கௌமதி' யாழ்ப்பாண வர லாற்று நிகழ்வுகள், குடியேற்றம், சாதி ஆய்வு போன்றன பொதுளிய பெருநூல். இவரது மகனும் பேரரும் :

**க. வே. சாரங்கபாணி** : ஈழத்தின் ஒளி விளக்காக இலங்க வேண்டிய இவர் இளமையிலேயே மரணமடைந்தார். நாடகம், விமர்சனம், அரசியல் துறைகளில் கைவண்ணம் காட்டினார். நமது நாயகம், சத்தியேஸ்வரி (நாடகம்) இரண்டும் இவர் பேர் சொல்லும். **சிலோன் விஜயேந்திரன்** : 3-1-1946 தமிழ்ப் பண் டிதர். 15 நூல்கள் படைத்தவர். சௌந்தர்ய பூசை (சிறு கதை), பாரதி வரலாற்று நாடகம், கம்பதாசன் வாழ்வும் பணியும், கம்பதாசன் திரை இசைப் பாடல்கள்; நேசக்குயில் (கவிதை). கம்பதாசன் பற்றி முதலில் ஆய்வு செய்த பெருமையர். 60 திரைப் படங்களில் நடித்துளார். **முகவரி** : 53, இருசப்பக் கிராமணித் தெரு, திருவல்லிக்கேணி (ஐஸ் ஹவுஸ்) சென்னை-5.

**தி. த. கனகசுந்தரம் பிள்ளை** : 1863 - 1922. இலங்கைத் திரிகோணமலை. தந்தை தம்பி முத்துப் பிள்ளை. கதிரைவேற்

பிள்ளை, கணேச பண்டிதர் இருவரிடமும் பயின்று 14 வயதிலேயே 'இளந்தமிழ்ப் புலவர்' எனப் பெற்றார். சென்னை வந்து ஆங்கிலம் கற்றுப் பச்சையப்பனில் F. A., மாநிலக் கல்லூரியில் பி. ஏ. பட்டம் பெற்றார். சைதை ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் ஆங்கில ஆசானாகச் சில காலமும். கிருத்துவ-பச்சையப்பன் கல்லூரிகளில் தமிழாசிரியராகவும் திகழ்ந்தார். இல்லத்திலும் தமிழ் கற்பித்து வந்தார். பழந் தமிழ் நூல்கள் வெளிவரத் துணை நின்றார்.

தமிழ் நாவலர் சரிதை, ஈழமண்டலத் தேவாரம் - திருப்புகழ் குறிப்புரையுடன் வெளியிட்டார். கம்பராமாயண பால காண்டத்திற்கு உரை எழுதினார். சுன்னாகம் குமாரசாமிப் பிள்ளையுடன் இணைந்து நம்பியகப் பொருளுக்கு உரை வகுத்தார். வடமொழி கற்று, வால்மீகியின் கிட்கிந்தா, சுந்தர காண்டங்களை (பண்டித நடேச சாஸ்திரியுடன் சேர்ந்து) தமிழ்ப் படுத்தினார் (1911). தமிழ் லெக்சிகனில் ஓராண்டு உதவியாசிரியராகவும் ஒளிர்ந்தார். கழகத்திற்காக தொல். எழுத்து நச்சர், சொல். சேனாவரையர் உரைகளையும், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரையையும் சரிபார்த்து உதவினார்.

மாணவர்கள் : பச்சையப்பன் கல்லூரி மோசூர் கந்தசாமி முதலியார், மணி திருநாவுக்கரசு முதலியார்; கிருத்தவக் கல்லூரி சுப்பிரமணிய சிவா; எதிராஜலு நாயுடு; நா. கதிரை வேற் பிள்ளை.

**சி. கணேசையர் :** *1-4-1878—8-11-1958.* யாழ்ப்பாணம் புன்னாலைக் கட்டுவன், சின்னையர் : சின்னம்மாள். பெரிய தந்தை சி. க. கதிர்காம ஐயரிடம் தொடக்கக் கல்வியும், ஆறுமுக நாவலரின் மருகர் பொன்னம்பல பிள்ளையிடம் பேரிலக்கியங்களையும் பாடம் கேட்டு, பின் சுன்னாகம் குமார சுவாமிப் புலவர் ம. க. வேற்பிள்ளையிடம் சமக்கிருதம், தருக்கம் தெளிந்தார். 1891முதல் பள்ளி ஆசிரியராகப் பல இடங்களில் பணியாற்றி, 1921இல் 'ஆரிய திராவிட பாஷாபி விருத்திச் சங்கம்' தோற்றுவித்த பாடசாலையில் பண்டித வகுப்புகட்கு ஆசானாக அமர்ந்தார்.

சாதனைகள் : அரச கேசரியின் இரகு வம்சத்திற்கு அரிய உரை வகுத்தார். செய்யுள் : மகுடி விநாயகர் அந்தாதி - கலி வெண்பா, இருபா இருபஃது. உரை நடை: ஈழநாட்டுத்

தமிழ்ப் புலவர் சரித்திரம், குமாரசாமிப் புலவர் சரித்திரம். நிலையான நற்புகழ் நல்கியது: தொல்காப்பிய உரைக் குறிப்புகளே. 8-10-38இல் மணிவிழா நிகழ்ந்தது. தமிழ் வளர்ச்சிக் கழகம் 1951ல் யாழ்ப்பாணத்தில் கூட்டிய தமிழ் விழாவில் பொன்னாடை போர்த்தியது 1952இல் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் 'வித்துவ சிரோமணி' பட்டம் வழங்கியது. 'மகாவித்துவான்' என மதிக்கப் பெற்றவர்.

**நவாலியூர் சோமசுந்தரப் புலவர்** : *12-6-1880 — 10-7-1953*. யாழ்ப்பாணம் அருகே நவாலி. அருமையினார் கதிர்காமனார்; இலக்குமி. தந்தை, பெரிய தந்தை இராமலிங்க உபாத்தியாயர், மானிப்பாய் அருணாசல உபாத்தியாயர் ஆகியோரிடம் தமிழ் ஆங்கிலம் வடமொழி கற்றுச் சிறந்தார். இளமை முதல் கவிபாடும் திறத்தர் - வரகவி. இவர் பாடல்களில் எளிமை, ஏற்றமிகு சிந்தனை, பக்திப் பெருக்கு, காந்தீயம் விளங்கும்.

படைப்புகள் : சிறுவர் செந்தமிழ், கதிரைச் சிலேடை வெண்பா, கந்தவன நாதன் நான்மணி மாலை, நாமகள் புகழ் மாலை, விநாயகர் பாமாலை; உயிரிளங்குமரன் (நாடகம்); இலங்கை வளம், மரதனஞ்சலோட்டம், 11000க்கும் மேலான பாடல்கள் பாடிய பெருங் கவிஞர், இவர் மகன் :

**சோ. நடராசன்** : மொழித்துறை அலுவலகத்தில் உயர் பதவி வகிக்கிறார். கவிதையை மூச்சாகவும் மொழி பெயர்ப்பினைப் பணியாகவும் கொண்டவர். பல்துறை எழுத்தாளர். தாகூர் நாடகங்கள், ராதா கிருட்டிணன் கட்டுரைகள், காளிதாசரின் மேகதூதம், தாகூரின் கீதாஞ்சலி தமிழில் தந்துளார். சிங்களத்திலிருந்து 'பூவை விடுதூது' தமிழாக்கியுள்ளார். இவரது 'இதோபதேசம்' 1000 ரூபாய்ப் பரிசு பெற்றது. இவரின் முற்காலக் கவிதையில் காம்பீரியமும், பிற்காலக் கவிதையில் அங்கதமும் மிகுதி. இப்போது விமர்சனக் கட்டுரைகள் வரைந்து வருகிறார். மருதக் கலம்பகம் அருமையானது. 'கற்சிலை' போன்ற சிறுகதைகளும் வரைந்துளார்.

**சுவாமி விபுலானந்தர்** : (பக்கம் 1057-59). எழுத்தறிவித்தவர் குஞ்சுத் தம்பி; தமிழும் வடமொழியும் கற்பித்தவர் புலோலியூர் பொ. வைத்திலிங்க தேசிகர். தாய்மாமன்மார் சிவகுருநாத பிள்ளை, வசந்தராச பிள்ளையிடம் கந்தபுராணம், பாரதம் போன்றன பயின்றார். 1902ல் கல்முனை மெதடிஸ்ட்

பாடசாலை, மட்டக்களப்பு மத்திய கல்லூரி, தூய மிக்கேல் கல்லூரியிலுமாகக் கற்று, 1908 இல் சீனியர் கேம்பிரிஜ் தேர்ந்தார். 11-12இல் ஆசிரியப் பயிற்சிக் கலாசாலையில் பயின்று வென்றார். 16 இல் அரசினர் நுண்டொழிற் கல்லூரியில் விஞ்ஞான டிப்ளமா பெற்றார்.

13—14 இல் தூய மிக்கேல் கல்லூரி ஆசிரியர். 17 இல் நுண்டொழிற் கல்லூரி, யாழ்ப்பாண சம்பத்திரிசியார் கல்லூரிகளில் வேதியியல் விரிவுரையாளர். லண்டன் பல்கலைக் கழகம் நடாத்திய பி. எசி. தேர்வில் சித்தியடைந்தார். 20-22 மானிப்பாய் இந்துக் கல்லூரி, 30 இல் திருகோணமலை இந்துக் கல்லூரி முதல்வர். 26 இல் தமிழ்ப் பல்கலைக் கழகக் குழுவின் முன் மதுரையில் முதல் சாட்சியம் முழங்கினார்.

30இல் 'பிரபுத்த பாரதம்' கலையாக்க ஆங்கில வெளியீட்டின் ஆசிரியர். 36இல் கலைச் சொல்லாக்க மாநாட்டுத் தலைமை. 37இல் சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சி மன்ற உறுப்பினர், தேர்வாளர்.

வெள்ளை நிற மல்லிகையோ! வேறெந்த மாமலரோ?
வள்ளல் அடியிணைக்கு வாய்த்த மலர் எதுவோ?

இது தோழியின் கேள்வி; இதற்குத் தலைவியின் தகுவுரை:

வெள்ளை நிறப் பூவுமல்ல! வேறெந்த மலருமல்ல!
உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது.
கூப்பியகைக் காந்தளடி கோமகனார் வேண்டுவது
நாட்டவிழி நெய்தலடி நாயகனார் வேண்டுவது

இது விபுலானந்தத் தேனில் வரும் பாடற்பகுதி. மறுமலர்ச்சி இலக்கியத்துக்கு வித்தூன்றி, எத்தனையோ புது - புதுமைச் செய்திகள் புலப்படுத்திய பெருந்தகை.

கண்ணகியும் அப்பெயர் கொண்ட அன்னையும் இவர் தெய்வங்கள். அறிவு ஒளியையும் ஆன்ம ஒளியையும் தம் சகோதரர்களிடம் கொணர்வதே இவர் சமயம். எண்ணற்ற இராம கிருஷ்ண இலக்கியங்களைப் பெயர்த்துள்ளார். தமிழிலக்கியம் பண்பாடு பற்றிய ஆங்கில, தமிழ், ஆய்வுக் கட்டுரைகள் பல. மு. திருநாவுக்கரசு, விபுலானந்த அடிகள்; அருள் செல்வநாயகத்தின் விபுலானந்தத் - தேன்,—ஆராய்வுகள் - வெள்ளம்; ச. அம்பிகை பாகனின் விபுலானந்தர் உள்ளம் குறிப்பிடத் தக்கன.

மட்டக்களப்புப் பகுதியில் பாடும் மீன் - பெண் (Singing Mermaids) பற்றி இவர் ஆய்ந்து எழுதிய பாட்டு அருமை சான்றது. 'நீலவானிலே நிலவு வீசவே'...எனும் பாடலும்' அதற்கமைந்த 'மாசகன்ற மணிவிசும்பில் வயங்குநிறை மதியம் ...எனும் பிற்புலமும் படித்தின்புறத் தக்கன. யாழ் நூல் காண்க.

**ஆனந்த குமாரசாமி :** 22-8-1877...1947 கொழும்பு. சர். முத்துக் குமாரசாமி; எலிசபெத் கிலேபீபி. எட்டுமாதக் குழந்தையின் போதே இங்கிலாந்து எடுத்துச் செல்லப்பட்டார். 79 இல் தந்தையை இழந்தார். 89-95 wycliff கல்லூரியில் இடைநிலையும், 95-97இல் லண்டன் பல்கலைக் கழகத்தில் பயின்று தாவர - புவியியலில். பி. எசி. பட்டமும் பெற்றார்.

1903 இல் இலங்கை திரும்பினார். 1903 - 1907 தாதுப் பொருளாராய்ச்சித் திணைக்களத் தலைவராய்த் திகழ்ந்து Thorianite எனும் புதிய தாதுப்பொருளைக் கண்டுபிடித்தார். லண்டன் பல்கலைக் கழகம் 1906இல் 'அறிவியற் கலாநிதி' பட்டம் வழங்கியது.

அலுவல் நிமித்தம் இலங்கை முழுதும் சுழன்றபோது, கோயில்கள் விகாரைகளின் சிற்பக் கலைத் திறனில் கவனம் கவிந்தது. மேலை நாட்டு நாகரிக மோகத்தை மாற்ற 1905இல் 'இலங்கைச் சீர்திருத்தக் கழகம்' நிறுவினார். அதன் இலங்கைத் தேசிய சஞ்சிகைக்கும் ஆசிரியரானார். சுதேசியப் பற்றும் கலை ஆர்வமும் ஊட்டும் வகையில் எழுதினார்.

இந்தியாவில் கலைப் பயணம் செய்து சேகரித்து 1910இல் அலகபாத்தில் கலைக்காட்சிக்கு ஏற்பாடு செய்தார். ஒரு கலா பவனம் நிறுவ முயன்றார்; இந்தியாவில் ஊக்குவாரில்லை. 1907-17 கிழக்கு மேற்கு நாடுகட்குச் சென்று, கீழை மேலைத் தேயப் பண்பாட்டுக் கலப்பும் அதன் பயனும் கண்டுணர்ந்தார். அமெரிக்கா சென்று 19இல் போஸ்டனில் கண்காட்சி சாலை அமைத்தார். மறையும் வரை அங்கேயே கீழைத் தேய நுண்பொருட் பகுதித் தலைவராய்க் கலைப்பணி புரிந்தார்.

வேதம் வல்லவர், தத்துவ வித்தகர், அமராவதியில் தாம் கண்டெடுத்த சிலைகளைக் கொண்டு, யாழின் வடிவம் இஃதென முதன் முதல் வரையறுத்துக் கூறிய பெருமையர். 47இல் இவரது எழுபதாம் ஆண்டு நிறைவினை உலகெங்கணும்

கொண்டாடினர்; இவர் இமயமலைச் சாரலில் இளைப்பாற எண்ணியிருந்தவர் இயற்கை எய்தினார்.

அருங் கொடைகள்: இலங்கையில் நிலவியல், Selected examples of Indian Art, Mirror of Gesture, History of Indian and Indonesian Art, Rajput Painting, Dance of Shiva. சிவ நடனம் என்ற நூலே இந்தியக் கலைகளின் உண்மைத் தத்துவத்தையும் தெய்வீகத்தையும் முதன்முதல் உலகிற்குணர்த்தியது, உலகப் புகழ் பெற்றார்.

வண்ணார் பண்ணை தமிழ்ச் சங்கம் 'வித்தியா விநோதன்' என்ற விருது வழங்கிற்று. இவர் மனைவி எதெல், சிறந்த ஓவியர். தமிழகத்தில் இக் கலைக குரிசிலின் புகழ் பரப்புவோர் கே. சி கமலையா, கி. சந்திரசேகரன் போன்றார். ச. அம்பிகை பாகன்: 'கலா யோகி ஆனந்த குமாரசாமி' நூல்.

**தனி நாயக அடிகள்:** (பக்கம் 461-62). தமிழ்த் தூதுவர்-ஒண்டமிழை உலகத் தமிழாக உயர்த்தியவர். இவரது வாழ்க்கை வரலாற்றினை முதன் முதலாக யாழ்ப்பாணப் பல்கலைக் கழகப் பேராசிரியர் தவத்திரு டாக்டர் வே. அந்தனி ஜான் அழகரசர் 'தனி நாயக அடிகளின் வாழ்வும் பணியும்' (கழக வெளியீடு) என வரைந்துளார்.

நவநீத கிருட்டிண பாரதியார் (பக்கம் 742), தமிழ் வரலாறு தந்த மட்டக் களப்பு ச. பூபால பிள்ளை (1856-1921), ஈழ மண்டல சதகம் ஈந்த உரையாசியர் ம. க. வேற் பிள்ளை (1847-1930), சனி வெண்பா செய்த மட்டக்களப்பு அ. சரவணமுத்துப்பிள்ளை (1882-1920), ஈழத்திலேயே மிகுதியான பிரபந்தம் பாடிய சிவசம்புப் புலவர் (1830-1910), நுட்ப நயவுரை நாயகர் நல்லூர் ந. ச. பொன்னம்பலப் பிள்ளை (1833-1902), வேற்பிள்ளை மகன்கள் கற்பனைக் களஞ்சியம் குருகவி மகாலிங்க சிவம், நாடகாசிரியர் திருஞான சம்பந்தர் முதுதமிழ்ப் புலவர் மு. நல்ல தம்பி (1896-1951), கலாநிலையம் நிறுவி, தென்னிந்திய சிற்ப வடிவங்கள், இலங்கையிற் கலை வளர்ச்சி படைத்தளித்த கலைப் புலவர் க. நவரத்தினம் போன்ற ஈழத்தமிழ் வளத்திற்கு நலம் செய்தோரை நினைவு கூரவேணும்.

இவர்கட்கு முன்னையர்: ஆறுமுக நாவலரின் ஆசான் நல்லை அந்தாதி குறவஞ்சி வெண்பா பாடிய இருபாலை சேனாதிராய முதலியார் (1750-1840), சுன்னாகம் குமார

சாமிப் புலவரின் தாத்தா, சி. வை. தாமோதரம் பிள்ளையின் ஆசான், ஞானக்கும்மி யாத்த முத்துக்குமார கவிராசர், யாழ்ப் பாண வைபவ மாலை யாத்த மயில் வாகனப் புலவர் (1779-1816), பறாளை விநாயகர் பள்ளு பாடிய வி. சின்னத்தம்பிப் புலவர் (1716-80), போல்வாரையும் நினைந்து வணங்குதல் நன்று.

**ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம், யாழ்ப்பாணம்:** (1921) தோற்றுநர் செயலர் பிரமஸ்ரீ தி. சதாசிவ ஐயர். சங்க வெளியீடு 'கலாநிதி'யும் இவர் தோற்றுவித்ததே. ஐங்குறு நூறு, கதிரைமலைப் பள்ளு, கரவை வேலன் கோவை போன்றன வெளியிட்டது. இதன் இயக்க சக்தியாக இலங்கிய வர் சு. நடேச பிள்ளை.

**கொழும்பு விவேகானந்த சபை:** கலா நிலையம், கலை மன்றம்; இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கம் (1948), இலங்கை எழுத்தாளர் சங்கம் (1952), அகில இலங்கை எழுத்தாளர் சங்கம், யாழ்ப்பாணத் தமிழ் எழுத்தாளர் சங்கம், யாழ் இளம் எழுத்தாளர் சங்கம், இலங்கை இளம் எழுத்தாளர் சங்கம், தீவுப் பகுதி எழுத்தாளர் சங்கம், மட்டக்களப்புத் தமிழ் எழுத்தாளர் சங்கம், கல்முனைத் தமிழ் எழுத்தாளர் சங்கம், திருகோணமலை, கிண்ணியா, கிழக்கிலங்கைத் தமிழ் எழுத்தாளர் சங்கங்கள் எனப் பல எழுந்து தமிழ் வளர்ச்சிக்கு உதவின. குழந்தை எழுத்தாளர் சங்கமும் உண்டு.

**கொழும்புத் தமிழ்ச் சங்கம்:** வித்துவான் வ.மு. கனகசுந்தரம் முயற்சியால் முகிழ்த்தது. ஆண்டுதோறும் தமிழக அறிஞர் கொண்டு விழாக்கள் நடத்தியது.

**கவிதை:** சரவணமுத்து (யோகசித்தி, சுவர்க்க பூமி-குறுங் காவியம்), யாழ்ப்பாணன்-சிவக்கொழுந்து (கவிதைக் கன்னி, மாலைக்கு மாலை, கண்ணன் பாட்டு, பாலர்கீதம்), சானா. சண்முகநாதன், ச. நமச்சிவாயம், பஞ்சாட்சர சர்மா. பரமஹம்சதாசன்-மு. சுப்பராமன் (தீங்கனிச் சோலை, ஸ்ரீ க்திரைமணி மாலை), முருகையன் (குற்றம் குற்றமே-கவிதை நாடகம்), அல்வாயூர் மு. செல்லையா (புதிய வண்டுவிடு தூது, வளர்பிறை, குமாரவேள் பதிகம்) இ. நாகராஜன் (புத்தொளி, கூத்தாடி-சிறு காவியம்), கே கணேஷ், இராஜபாரதி (தீயுண்ட வீரமுனை-பாவியம்), திமிலைத் துமிலன், சி. கிருஷ்ணபிள்ளை (கொய்யாக் கனிகள், நீரர மகளிர், நெஞ்சம் மலராதோ?),

மண்டூர் சோமசுந்தரம் பிள்ளை (திருமண்டூர் முருகமாலை), நீலாவணன் (பட்டமரம்—காவியம், மழைக்கை — கவிதை நாடகம்), தில்லைச் சிவன் (கனவுக் கன்னி), தான் தோன்றிக் கவிராயர், நயினை இராமுப் பிள்ளை (நயினை கந்தவேள் அருள்வேட்டல், நாகபூஷணி திருவோலக் காட்சியும் மாட்சியும்.)

இ. அம்பிகை பாகன் (அந்தப் பாவை சிறு காவியம்), வ. இளையநம்பி, சக்தி அ. பாலையா (சொந்த நாட்டிலே), ச.வே. பஞ்சாட்சரம் (எழிலி-காவியம்); மு.க. சூரியன் (கதிரேசன் பாமாலை), கோசுதா (கவிதைக் குவியல், பாலர் பாடல்கள்), பா. சத்தியசீலன், வன்னியூர்க் கவிராயர் எஸ்.எஸ். சௌந்தர நாயகம், இ. முருகையன் (நெடும் பகல், ஆதிபகவன்; வந்து சேர்ந்தன, தரிசனம், கோபுர தீபம்-கவிதை நாடகம்), சி. நாகலிங்கம் (காந்தியக் கிராமம்), சீ. கோபால சிங்கம் (கன்னிமலர், முல்லை, ஒரு கண்ணீர், காவியம்) க. பொன்னம்பலம் (சமுதாய வீதியிலே), கே.எம். பாரூக் (தேன் துளி), அன்பு. இறைதாசன் (முற்றத்து மல்லிகை), கவிஞர் திலகம் அப்துல்காதர் லப்பை (இக்பால் இதயம், ரூபையாத், இறசூல் சதகம், தஸ்தகீர் சதகம்), எ.எம். அபுபக்கர் (கவிதாஞ்சலி, மதுக்கலசம்), நாவற்குழியூர் நடராசன் (சிலம்பொலி), மகாகவி து. உருத்திரமூர்த்தி (வள்ளி; கல்லழகி, சடங்கு-குறுங்காவியம்), கவிஞர் திலகம் பெரியதம்பிப் பிள்ளை (பகவத் கீதை வெண்பா), மு. நல்லதம்பி (மரதனஞ்சலோட்டம்), க வேந்தனார் (அம்மா, தமிழன் குரல்), சோ. இளமுருகனார் (வேனில் விழா, வழிநடைச் சிந்து, அறப்போர்க்கு அறைகூவல்) சச்சிதானந்தன் (அமிழ்தம், ஆனந்தத்தேன்).

**சிறுகதை:** ஈழத்துச் சிறுகதைத் துறைக்கு வழிகாட்டியவர் சி. வைத்திலிங்கம் (மூன்றாம் பிறை, கங்காகீதம், பாற்கஞ்சி, நெடுவழி), செ. சந்திரபால கணேசன், (நற்பவளத் திரட்டு), இலங்கையர்கோன் (வஞ்சம், வெள்ளிப் பாதசரம், தந்தை மனம், கடற்கரைக் கிளிஞ்சல்), சோ. சிவபாத சுந்தரம் (தோட்டத்து மீனாட்சி, அழைப்பு, காஞ்சனை), சம்பந்தன் (விதி, புத்தரின் கண்கள், மனிதன்), குல. சபாநாதன், முருகானந்தன் (மனிதமாடு, வண்டிச் சவாரி,) அ. ந. கந்தசாமி (இரத்த உறவு), தி.ச. வரதராசன் (கயமை மயக்கம்), உருவகக் கதை மன்னன் சு. வேலுப்பிள்ளை (மணற்கோவில்-ராஜாஜி பாராட்டியது, வெறுங்கோவில், பாற்காவடி, மண்வாசனை), நனவோடை நாயகர் சு. இராஜநாயகன் (அவன்), தாழையடி சபாரத்தினம் (குருவின் சதி).

வ.அ. இராசரத்தினம் (தோணி, பாலன் பிறந்தான், பிரிவுப சாரம்), எஸ். பொன்னுத்துரை (துருவக் கதைகள், வீ, சூடிக் கழிக்காத மலர், நியமம், இத்தா), பித்தன் கே. எம். ஷா. (பாதிக் குழந்தை, தாம்பத்தியம்), அருள் செல்வநாயகம் (தாம்பூல ராணி, ஈழநாட்டு வரலாற்றுக் கதைகள்), செ. கணேசலிங்கன் (ஒரே இனம், நல்லவன், சங்கமம், மானம், விளம்பரம் காவிகள், பதவி துறந்தார்), ரகுநாதன் (இலட்சிய நெருப்பு, நிலவிலே பேசுவோம்).

கே. டேனியல் (அமரகாவியம், உப்பிட்டவரை, டானியல் கதைகள்), டொமினிக் ஜீவா (தண்ணீரும் கண்ணீரும், ஞானம், முற்றவெளி, பாதுகை, படு முடிச்சி), காவலூர் ராசதுரை (குழந்தை ஒரு தெய்வம், தொட்டாற் சுருங்கி), அ. முத்து லிங்கம் (பக்குவம், அனுலா), உதயணன் (தேடிவந்த கண்கள்), நவம் (நந்தாவதி), நீர்வைப் பொன்னையன் (மேடும் பள்ள மும்), நாவேந்தன் (வாழ்வு, தெய்வ மகன்), நா. முத்தையா (தத்துவக் கதைகள்), தங்கதேவன் (பார்வை, கடுகு, ஒரே ஒரு ஊரிலே), அகஸ்தியர், இறைதாசன் (எனக்கு வயது 13, பிறைப் பூக்கள்), அசோகாம்பிகை (கொன்றைப் பூக்கள்), ஆரையூர் அமரன் (அனுப்பாத கடிதம்), எஸ்.பி. கண்ணன் (ஒன்றே தெய்வம், பொழுதுபோக்கு), பூங்குன்றன், சச்சி, சி. சண்முக நாதன், தி. ஞானசேகரன் (காலதரிசனம்), கே.எம். பாரூக் (வாடாமலர்), பாலமனோகரன் (தீபதோரணம்), ஈழநாடு பெருமாள், யேசுராசா (தொலைவும் இருப்பும்), பி.எம். லிங்கன், செம்பியன் செல்வன் (அமைதியின் இறகுகள்) மு.மீ. சாகுல் அமீது (இரு உருவங்கள்), **இலங்கையில் முதன்முதல் சிறு கதைத் தொகுதி வெளியிட்டவர்**. கச்சாயில் ரத்தினம் (பாட்டாளி வாழ்க்கையிலே), க. பேரம்பலம் (ஒரு பட்டதாரி நெசவுக்குப் போகிறாள்), பொ. சண்முகநாதன் (வெள்ளரி வண்டி),

**நாவல்:** ஈழத்தின் முதல் நாவல் சித்தி லெவ்வை மரைக்காயர் 'அசன்பே சரித்திரம்' (1885), இன்னாசித் தம்பி 'ஊசோன் பாலந்தை கதை' (1891), தி. த. சரவணமுத்துப்பிள்ளை, மோகனாங்கி (சொக்கநாதன் 1896), சி.வை. சின்னப்ப பிள்ளை வீரசிங்கன் கதை, இரத்தினபவானி, உதிரபாசம், விஜயசீலம் (1916). முதலது ஈழத்திற்கு எவ்விதத் தொடர்பும் இல்லாதது; இரண்டாவது தழுவல்; மூன்றாவது ஈழத் தொடர்பு இம்மியும் இல்லாதது. ஈழத்தை நிலை பெறக் கொண்டு எழுதிய சின்னப்ப பிள்ளையே **ஈழத்து முதல் நாவலா சிரியர்** என்ற முறையான நிறைவான பெருமை பெறுகிறார்,

அடுத்த சிறப்பினது அ. நாகலிங்கம் புனைந்த சாம்பசிவ ஞானாமிர்தம் அல்லது நன்னெறிக் களஞ்சியம் (1927).

துப்பறியும் நவீனங்கள்: மா. சிவராமலிங்கம் (பூங்காவனம்); வரணியூர் இராசையா (பவளகாந்தன், அருணோதயம்); வே.க. நவரத்தினம் (செல்வரத்தினம்); வே. வ. சிவப்பிரகாசம் (மேகவர்ணன்); ம.க. சின்னையா (குலநாயகி திலகவதி); சி. வே. தாமோதரம் (காந்தமலர்); வீரகேசரி ப. நெல்லையா; செ. செல்லம்மாள் (இராசதுரை); ஜோ.ஏ.எம். தாஸ் (ஐயோ நானா, காமசுந்தரி, பெண்ணோ பேயோ).

முருகானந்தன் (புகையில் தெரிந்த முகம், யாத்திரை), சு. வேலுப்பிள்ளை (மத்தாப்பு), சொக்கன் (மலர்ப் பலி, செல்லும் வழி இருட்டு), சச்சிதானந்தன் (அன்னபூரணி), இளங்கீரன் (வண்ணக்குமரி, நீதிபதி, தென்றலும் புயலும், நீதியே நீ கேள்); சி.எஸ். பரமேசுவரன் (காதல் பைத்தியம்), க.நாகப்பு (ஒன்றரை ரூபாய், ஏழையின் காதல்), கச்சாயில் இரத்தினம் (வன்னியின் செல்வி), சி. சுதந்திரராஜா (மழைக்குறி, அடிவாரம், நியாயமும் நெருப்பும்), நவஜோதி (ஓடிப்போனவன்), கே.எஸ். மகேசன்(அந்தரத் தீவு),எஸ். அகஸ்தியர் (9 புதினங்கள்), க. பேரம்பலம் (வளைவுகளும் நேர்கோடுகளும்), அ. பாலமனோகரன் (நிலக்கிளி, குமாரபுரம், கனவுகள் கலைந்தபோது), தி. ஞானசேகரன் (புதிய சுவடுகள், குருதி மலை), த. சண்முகசுந்தரம் (மீனாட்சி), யாழ்ப்பாணம் தேவன் (மணிபல்லவம், வாடிய மலர்கள், கண்டதும் கேட்டதும்) த. சண்முகசுந்தரம் (ஆசை ஏணி).

**நாடகம்:** க. வே. சாரங்கபாணி (சத்தியேஸ்வரி). நவாலியூர் சோமசுந்தரப் புலவர் (உயிரிளங் குமரன் நாடகம்) இலங்கையர் கோன் (விதானையார் வீட்டில்- வானொலி நாடகங்கள், மிஸ்டர் குகதாசன், மாதவி மடந்தை, விஜய குமாரன், விடியாத இரவு), சொக்கன் (சிலம்பு பிறந்தது, சிங்கைகிரிக் காவலன்), கலையரசு சொர்ணலிங்கம் **ஈழத்து நாடகத் துறைத் தந்தை**; யாழ்ப்பாணம் தேவன் (பத்தினியா? பாவையா?, சகோதர பாசம், கற்புக் கனல், தென்னவன் பிரம்மராயன்), த. சண்முக சுந்தரம் (வாழ்வு பெற்ற வல்லி, பூதத்தம்பி), நடிகர் ஏ. ரி. பொன்னுத்துரை (வருஷம் பிறந்து முன்னம் முன்னம், ஆயிரத்துள் ஒருவர், பகையும் பாசமும், பாசக்குரல், நிறை குடம்), சி. சண்முகம் (ஸ்ரீமான் கைலாசம், பறந்தது பைங்கிளி), கே. மாணிக்கவாசகர் (நீ இல்லையேல்?

மஞ்சள் குங்குமம்), நடமாடி (சரிந்தது கொற்றம், சங்கிலியன்) ஆர். பாலகிருஷ்ணன் (கடுதாசிக் கூட்டம், கூண்டுக்கு வெளியே), அன்புமணி (கடல் தந்த தீபம்), சி. நாகலிங்கம் (மறக்குடி மாண்பு), பொ. சண்முகநாதன் (இதோ ஒரு நாடகம்), பி. எஸ். கிருஷ்ணன் (பொற்கிழி), செம்பியன் செல்வன் (மூன்று முழு நிலவுகள், விடிய இன்னும் நேரமிருக்கு) யாழ் ஜனார்த்தனன் (வாதவூர் வள்ளல்), இளமுருகனார் (தமயந்தி).

**கட்டுரை:** கி. லக்ஷ்மண ஐயர் (கம்பனது கதாப் பாத்திரங்கள், பாரதத் தூதுவர், இந்தியத் தத்துவ ஞானம்-சாகித்ய பண்டல பரிசு); ச. ஹண்டி பேரின்ப நாயகம் (அந்நிய மதம், ஆட்சி இயல், யப்பான் யாத்திரை), தெல்லியூர் நடராசா (தமிழன் மாட்சி, பிளவுங்கள் இலங்கையை), மு. கணபதிப் பிள்ளை (தமிழன் எங்கே), புதுமை லோலன் (தாயின் மணிக் கொடி), நாவற்காடு செல்லத்துரை (தமிழ் வளர்க்கும் செல்வர்கள்), நந்தி (அருமைத் தங்கைக்கு). ஈழத்துச் சோமு, குல ரத்தினம், பிரேம்ஜி, சபா ரத்தினம், மகேசன், மாயாவி வேலுப்பிள்ளை (கண்டதும் கேட்டதும்), பாக்கிய நாயகம் (நகைச்சுவைக் கட்டுரைகள்), ஆசிநாதன் (கற்காலக் கலையும் சுவையும்), தம்பித்துரை (சிறுவர் சித்திரம்), க. மாணிக்க வாசகர் (யான் கண்ட சொற் செல்வர்கள், கலைப்புலவர்), சிவபாத சுந்தரம் (சிந்தனைக் கட்டுரைகள்)

**விமர்சனம்:** ஈழநாட்டில் விமர்சகர்களுக்குப் பஞ்சமில்லை. பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை, பொ. கிருஷ்ணன், சோ. சிவபாத சுந்தரம். மா. பீதாம்பரம், வ. கந்தையா, க. கைலாச பதி, கா. சிவத்தம்பி, நாவேந்தன், மு. தளையசிங்கம், கே. எஸ். சிவகுமாரன்.

**இலங்கைப் பல்கலைக் கழகம்:** 1940. தொடக்கத்தில் ஆங்கில மொழி வழியேதான் தமிழ் கற்கும் நிலை. தமிழ்த் துறை நிறுவப்பட்டு முதற் பேராசிரியராக அமர்ந்தவர் சுவாமி விபுலானந்தர். பொது-சிறப்புக் கலைமாணி, முதுமாணி, கலாநிதிப் பட்டங்கள் வழங்கப் பெற்றன. கொழும்பு, யாழ்ப் பாணம், பேராதனை, நுககேதா, கெலானியாவில் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைகள் திகழ்கின்றன. யாழ்ப்பாண வளாகமே தனித் தமிழ் பல்கலைக் கழகமாகப் பிறங்குகிறது. மட்டக் களப்பிலும் பல்கலைக் கழகம் உருவாகிறது. 5 பேராசிரியர்கள் 15 விரிவுரையாளர்கள் விளங்குகின்றனர்.

இசுலாமிய எழுத்தாளர் பலர் கவிஞர், கட்டுரையாளர், கதைஞர்களாக உள்ளமை உன்னத் தக்கது. வித்துவ தீபம் அப்துல் காதிர் புலவர் முதல் எம். எம். உவைஸ் வரை, எண்ணற்றோர் வண்ணமுடன் படைத்து வருகின்றனர். தனியே தொகுத்தெழுதும் தகைமையர்.

**க. கணபதிப் பிள்ளை:** 'காதலியாற்றுப்படை' பண்டை நடையும் இப்போதைய எண்ணங்களும் பிணைந்த கவிதைப் பெட்டகம். நாடகம்: மாணிக்கமாலை, இலக்கிய நடையது; நானாடகம், உடையார் மிடுக்கு என்ற புதுப்போக்கு பொதுளியது; சங்கிலி நாடகம் கிராமத்துக் கொச்சை மொழி கொண்டது; துணிந்து புகுத்திய இவர் புதுமையினைப் பலரும் பின்பற்றினர். ஈழத்து வாழ்வும் வளமும் கட்டுரைத் தொகுதி.

**சு. வித்தியானந்தன்:** மட்டக்களப்புப் பகுதியில் பண்டை மரபு போற்றி தென்-வடமோடிப் பாணி நாட்டுக் கூத்துக்கள் நடத்தப்பட்டு வருகின்றன: வட்டக் களரியிலும் இத்தகு சிறப்புடனேயே ஆடப்பட்டு வருகிறது. இதனைத் தகர்த்து நொண்டி நாடகம், கர்ணன் போர் போன்ற பண்டைக் கூத்துக்களைத் தற்கால மேடைகளில் அரங்கேற்றிச் சாதனை புரிந்தவர். 4-வது உலகத் தமிழ் மாநாட்டினைப் பொறுப்பேற்று நடத்தியவர். நூல்கள்: தமிழர் சால்பு, தகுதி மிக்க படைப்பு. இலக்கியத் தென்றல், கலையும் பண்பும் கட்டுரைத் தொகுதிகள்; இசுலாமிய இலக்கியத்தை ஏத்துவன. கலாநிதி.

**வி. செல்வநாயகம்:** இரு சுடர்கள் போலே சாதனை நூல்களாகத் தமிழ் இலக்கிய வரலாறும் உரைநடை வரலாறும் தந்து சிறந்துளார்.

**ஆ. சதாசிவம்:** மரபில் நிற்பவர். கலாநிதிப் பட்டம் பெற்றவர். நூல்: கருத்துரைக் கோவை.

**நா. சுப்பிரமணியம்:** (திலீபன்) 25-12-42. திருநெல்வேலி யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர். படைப்பு: முள்ளிவளைக் காட்டு விநாயகர் ஊஞ்சற்பதிகம், ஈழத்துத் தமிழ் நாவல்கள் - நாவல் இலக்கியம். பல்கலைக்கழக மாணவர்கள் '**இளங்கதிர்**' என்ற மலரை ஆண்டுதோறும் கொணர்வதோடு, கதைப் பூங்கா, விண்ணும் மண்ணும் போன்ற தொகுதிகளை வெளிக்கொணர்கின்றனர்.

**நந்தி:** (டாக்டர். செ. சிவஞான சுந்தரம்) 30-3-1928. யாழ்ப்பாணப் பல்கலைக் கழகச் சமூக மருத்துவப் பேராசிரியர்,

'மலைக்கொழுந்து' எனும் இவர் புதினம் 65இல் இலங்கை சாகித்ய மண்டலப் பரிசு பெற்றது. 59இல் இவர் எழுதிய 'குறுக்கு வழி' சிறுகதையே 61இல் இப்பெருங்கதையாக வளர்ந்தது. தினகரனில் வெளிவந்தது. இவருக்கு நந்தி எனப் பெயர் சூட்டியவர் மூதறிஞர் ராஜாஜி. நாடகங்களும் எழுதியுள்ளார். இதுவரை 10 நூல்கள்.

**யாழ் ஜனார்த்தனன்:** (கே எஸ். ஆனந்தன்) 30-3-1940. எழுபதுக்கும் மேற்பட்ட சிறுகதைகளும், 15 புதினங்களும். வாதவூர் வள்ளல் (தங்கப் பரிசு) நாடகமும் புனைந்துள்ளார். புதினங்கள்: உறவும் பிரிவும், இதயமலர், கற்பக்கிருகம், காவலன் கண்ட கனவு, காகித ஓடம், கோடுகளும் கோணங்களும், சாத்தான் வேதம் ஓதுகின்றது, சொர்க்கமும் நரகமும், தீக்குள் விரலை வைத்தால், பனிமலர், மர்மப் பெண், மனோரஞ்சிதம், ராதையின் நெஞ்சம். **முகவரி:** 'அன்பகம், இணுவில் கிழக்கு, இணுவில்-இலங்கை.

**காவலூர் எஸ். ஜெகநாதன்:** 16-1-55. யாழ்ப்பாண காவற்றுறை கரம்பன் தெற்கு. வேளாண்மையில் பட்டயம் பெற்று விவசாய ஆராய்ச்சி உதவியராக ஒளிர்ந்தவர். ஏராளமான சிறுகதைகள் எழுதியவர். தொகுதிகள்: சொந்தங்கள் தொடர்கின்றன, காலநிதி, யுகப் பிரசவம், மனிதர்கள், எரிசரங்கள், மீறல்கள். நாவல்களும் படைத்துளார்: நாளை, விடியும், கண்ணீர்க் கங்கைகள், திசைகள், இனிவரும் நாட்கள், கலட்டுத் தரை. இலங்கை நிலையால் 84 முதல் சென்னையில் பதிப்பகம் வைத்துக் கொண்டு வதிகிறார். ஆழ்ந்த சமூகப் பார்வை, ஒடுக்கப்படும் வர்க்கச் சார்பு, மனிதநேயம் இவற்றை உள்ளீடாகக் கொண்டு கலைநயம் மிளிரப் படைப்பவர். இலங்கைப் பேச்சு வழக்கும், வட்டார வித்தரிப்பும் வளமுடன் விளங்குகின்றன. **முகவரி:** வளர்மதிப் பதிப்பகம், 38, கங்காநகர், சென்னை-24.

**சி. கணபதிப் பிள்ளை:** 27-6-1899. மட்டுவில். சைவசிற்சிந்தனைகள், இலக்கிய வழி, பாரத நவமணிகள். கந்தபுராணக் கலாசாரம், கதிர்காமவேலன் பவனி வருகிறான். 'பண்டித மணி' எனப் பரவப் பெற்றவர்.

**ச. அம்பிகைபாகன்:** 3-5-1908. சுன்னாகம். இலக்கணம் முத்துக்குமாரத் தம்பிரான், சுன்னாகம் செல்லாச்சி அம்மையார், கலாயோகி ஆனந்த குமாரசுவாமி, யோகசுவாமிகள், இலங்கையில் சுவாமி விவேகானந்தர், விபுலானந்தர் உள்ளம், Some Landmarks in the History of Tamil Litt in Ceylon. **முகவரி:** மணிமனை, மல்லாகம், யாழ்ப்பாணம்.

**ஆ. வேலுப்பிள்ளை :** *21-11-1936.* இலங்கைப் பல்கலைக் கழகப் பேராதனை வளாக இணைப் பேராசிரியர். *62* இல் பிஎச். டி. A Study of the Language of Tamil inscriptions of Catavarman Cuntara Pandyan and Maravarman Kulaseharan. *64*இல் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழக டி. ஃபில், Language of the Chola inscriptions. நூல்கள் : தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும், தமிழ் வரலாற்றிலக்கணம், சாசனமும் தமிழும் (இலங்கை சாகித்திய மண்டல் பரிசு). Ceylon Tamil Inscriptions I, II; Pandya Inscriptions - A language study, Study of the Dialects in Inscriptional Tamil. பன்னாடுகள் பயணம் செய்தவர்.

**கா. சிவத்தம்பி :** இலங்கைப் பல்கலைக் கழக வித்யோதயா வளாக இணைப் பேராசிரியர். நூல்கள் : தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், நாவலும் வாழ்க்கையும், ஈழத்தில் தமிழ் இலக்கியம், Tamil Film as a Medium of Political communication. பர்மிங்ஹாமில் பிஎச். டி. பட்டம் பெற்றவர். சிறந்த திறனி (இயக்கமும் இலக்கியமும்). நகைச்சுவை நடிகரும்கூட.

**அ. சண்முகதாஸ் :** *2-1-1940.* யாழ்ப்பாணப் பல்கலைக் கழக விரிவுரையாளர். தமிழ் மொழியின் தன்மைகள் பற்றி *60*க்கும் மேலான கட்டுரைகள் தீட்டியுள்ளார். **சித்திரலேகா மௌனகுரு** *8-2-1947* யாழ்ப்பாணப் பல்கலைக் கழக விரிவுரையாளர்.

**கே. வி. எஸ். வாஸ் :** *15-6-1911.* கும்பகோணம். குந்தள பிரேமா, நந்தினி, தாரிணி, சிவந்திமலைச் சாரலிலே, மலைக் கன்னி, ஏங்குதே என் நெஞ்சம்!, கைம்பெண்ணின் கண்ணீர் (செட்டி நாட்டு நாவல் போட்டி முதற்பரிசு), ஈழத்தின் கதை. பொருளாதாரக் கட்டுரைகளை மணிக்கொடியில் தீட்டியவர். சுதேசமித்திரனில் 'கத்திச் சங்கம்' சிறுகதை எழுதி எழுத்துலகில் நுழைந்தவர். *40* முதல் 'வீரகேசரி'யில் பணி. இயந்திர கதியில் எதுபற்றியும் சுவையுடன் எழுதிடும் ஆற்றலர்.

**கா. பொ. இரத்தினம்:** *10-3-1914.* வேலணை. இலங்கையில் இன்பத் தமிழ், இலக்கியங் கற்பித்தல், தாவாரமில்லை-சமய ஆராய்ச்சி, நூற்றாண்டுகளில் தமிழ். குறள் அறிவினை

இளைஞர் நடுவே வளர்ப்பதற்காகத் திருக்குறள் விழாக்களும், போட்டிகளும் நடத்தினார். பாராளுமன்ற உறுப்பினர். ஆறுமுக நாவலர், பேரம்பலப் புலவர்-நினைவு மலர்கள், எழுத்தாளர் கல்கி அருமையன. உலகத் தமிழ் மன்றம், கொழும்பு எழுத்தாளர் மன்றம், தமிழ்மறைக் கழகம்-தலைவர் **முகவரி**: 58, 34ஆம் ஒழுங்கை, கொழும்பு-6. (இதுபோது. சென்னையில்!)

**இராஜ. அரியரத்னம்:** 11-5-1918. சாவகச்சேரி. கல்கி பிறந்தார் (வாழ்க்கை), தங்கப்பூச்சி (நாவல்), வெள்ளம் (சிறு கதை), பாதையோரத்தில் பாட்டசாரி (ஈழகேசரி), இரத்தினக் கம்பளம் (ஈழநாடு). இளைஞர்களை ஊக்கி எழுத்தாளராக் கினார். 'சோணாசலக் கவிராயர்' எனும் புனைபெயரில் கவிதை பல புனைந்தவர். ஈழகேசரியிலும் ஈழநாட்டிலும் ஆசிரியராக இருந்து, ஈழத்திற்கும் தமிழகத்திற்கும் பாலம் அமைத்தவர். தமிழகத்திற்குப் பல இலக்கியப் பயணங்கள் புரிந்துளார். சிந்தாமணி (சித்திர வார ஏடு), தினபதி (நாளிதழ்) ஆசிரியர். **முகவரி**: 31, Wilson St, Hultsdrop, Colombo-12. Ceylon

**அருள் செல்வநாயகம்:** 4-7-1926. பாசக்குரல், மாலதியின் மனோரதம், வாழ முடியாதவன் (பு), பூசணியாள் (கவி), ஈழ நாட்டு வரலாற்றுக் கதைகள், தாம்பூல ராணி (சிறுகதை), விபுலாநந்த அடிகள், விபுலானநதத் தேன், விபுலானந்த வெள்ளம், விபுலானந்த ஆராய்வுகள் என விபுலானந்தர் இலக் கியங்களை வெளியிட்டவர். தமிழக இதழ்களில் எழுதி ஏற்றம் பெற்றவர். விகடன் பொன்விழாப் புதினப் பரிசு பெற்றவர். ஈழமும் தமிழரும் (ஆய்வு). **முகவரி:** குருமண்வெளி, கழுவாஞ்சிக்குடி.

**செ. கணேசலிங்கன்:** 9-3-1928. யாழ்ப்பாண உரும்பி ராய். நல்லவன், ஒரே இனம், சங்கமம் (சிறுகதை), நீண்ட பயணம் (சாகித்ய மண்டல் பரிசு நாவல்), அபலையின் கடிதம் (மொ. பெ. நாவல்). 'சாயம்' முதலிய கதைகள் ருசிய மொழி யில் பெயர்ப்பாகியுள.

**கனக செந்தில்நாதன்:** 1977. மரபிலே நின்று தமிழிலே ஊன்றி இலக்கிய விமர்சகராக இலங்கியவர். 40 ஆண்டுகள் ஈழத்து இலக்கிய உலகில் நிலவியவர். பல எழுத்தாளர்களை வாசகர்களின் கவனத்துக்குக் கொணர்ந்து புகழ் பூக்கச் செய் தவர். எப்போதும் எழுத்தாளர் ஏற்றம் ஒன்றே எண்ணி

மெழுதுவர்த்தியானவர். ஈழத்துப் பேனா மன்னர்கள், ஈழத்து ஒளி விளக்குகள், கவிதைக் கடலில் கதை முத்துக்கள், ஈழத்து இலக்கிய வளர்ச்சி என்றெல்லாம், வீரகேசரி, தினகரன் இதழ் களில் கைவண்ணம் காட்டியவர்.

ஒருபிடி சோறு (சிறுகதை), விதியின் கை, வெறும் பானை (நாவல்), தாகம், மன்னிப்பு, ஒளி பிறந்தது (நாடகம்), மூன் றாவது கண் (வாழ்க்கை வரலாறு), கவிதைவானில் ஒரு வளர் பிறை, ஈழத்துக் கவிதை மலர்கள் (தொ), ஈழத்து இலக்கிய வளர்ச்சி போல்வன கொடைகள்.

**இதழ்கள் :** ஈழத் தமிழ் வளர்த்த பெருமை இதழ்களையே சாரும். முதலில் சமய வளர்ச்சி கருதியே இதழ்கள் இயன்றன. உதயதாரகை (*1841*), உதயாதித்தன் (*1841*), சத்தியவேதப் பாதுகாவலன் (*1876*), இந்து சாதனம் போன்றன சான்று.

**ஈழகேசரி :** நிறுவனர் நா. பொன்னையா. குமார சுவாமிப் புலவரின் மகன் கு. அம்பலவாணர், இராஜ. அரியரத்தினம் போன்றார் ஆசிரியர்கள். வெள்ளிவிழாக் கொண்டாடியதும் நின்றது.

**வீரகேசரி :** முதல் ஆசிரியர் பெரி. சுப்பிரமணியன் செட்டி யார். எச். செல்லையா, வ. ரா., கே. பி. ஹரன், கே. வி. எஸ். வாஸ். ஞாயிறு வீரகேசரி பொறுப்பாசிரியர் வி. லோகநாதன், ஊதியவிளக்கு (சிறு. தொகுதி) பாரிஸ்டர் சிற்றம்பலம், பிரேமாஞ்சலி (நாவல்), நடனாஞ்சலி (நாட்டிய நாடகம்), தான்றோன்றிக் கவிராயர் புனை பெயரில் சீட்டுக் கவிதைகள் தீட்டியவர்.

தமிழக எழுத்தாளர்கட்கே முதன்மை தந்து வந்தது. 56 தொடங்கி ஈழத்து எழுத்தாளர்கட்கு வாய்ப்புத் தருகிறது. மலையக எழுத்தாளர்களை ஊக்க, 'தோட்ட மஞ்சரி' பகுதி தொடங்கியது.

**தினகரன் :** முதல் ஆசிரியர் வை. இராமநாத பிள்ளை. இராமநாத ஐயர், ரி. எஸ். தங்கையா (செய்தி ஏடாக உயர்த் திய சிறந்த பத்திரிகையாளர்), வி. கே. பி. நாதன், க. கைலாச பதி (ஞாயிறு தினகரனை இலக்கியத் தரம் மிக்கதாக்கினார்), ஆர். சிவகுருநாதன்.

**சுதந்திரன் :** *47-52* நாளிதழ். பின் வார இதழ். முதல் ஆசிரியர் கோ. நடேச ஐயர், பின் எஸ். டி. சிவநாயகம், கே. இராமசாமி 56 வரை இலக்கியப் பணியாற்றினார்.

**ஈழநாடு:** இராஜ அரியரத்தினம் ஆசிரியர். முதலில் வார, இதுபோது தினசரி. கே. பி. ஹரன். தேசாபிமானி 46 முதல் ஆசிரியர் கே. இராமநாதன், கலாநிதி (சதாசிவ ஐயர்), ஆனந்த சாகரம் சரஸ்வதி (சி. பத்மநாபஐயர்), வித்தகம் (ச. கந்தையா பிள்ளை), கலைச் செல்வி (சி. சரவணபவன்), தேனருவி, விவேகி (ஆசீர் வாதம்), தீபம்; தேசத் தொண்டன் (ஜே. எஸ். ஆழ்வாப் பிள்ளை) போன்றன குறிப்பிடத் தக்கன. ஈழத்தில் வெளியான **முதல் முஸ்லீம் தமிழ் ஏடு** 'முஸ்லீம் நேசன்' *(1883)*. இஸ்லாமிய தாரகை *(1946)* இசுலாமிய எழுத்தாளரிடையே மறுமலர்ச்சி ஏற்படுத்தியது.

குமாரசாமிப் புலவர்க்கு முன்னைய வரலாறு அறிய: சைமன் காசிச் செட்டியின் Tamil Plutarch *(1859)*, ஆனால் சதாசிவம் பிள்ளையின் பாவலர் சரித்திர தீபகம் *(1886)*, சுன்னாகம் குமாரசாமிப் புலவரின் தமிழ்ப் புலவர் சரித்திரம் *(1916)*, அபிதானகோசம் அருளிய ஆ. முத்துத் தம்பிப் பிள்ளையின் ஈழ மண்டலப் புலவர் சரித்திரம் *(1922)*, சி. கணேசையரின் ஈழ நாட்டுப் புலவர் சரிதம் *(1933)*, மு. கணபதிப் பிள்ளையின் ஈழநாட்டின் தமிழ்ச் சுடர் மணிகள் *(1967)*, கனக செந்தில் நாதனின் ஈழத்து இலக்கிய வளர்ச்சி *(1964)* போன்றன பயில வேண்டும்.

தற்காலம் பற்றித் தெரிய: ஈழத்து இலக்கிய வளர்ச்சி, கா. சிவத்தம்பியின் ஈழத்தில் தமிழ் இலக்கியம் *(78)*, க. கைலாசபதியின் ஈழத்தில் சிறுகதை வளர்ச்சி (இளங் கதிர் 62), சில்லையூர் செல்வராசனின் ஈழத்தில் நாவல் வளர்ச்சி (புதுமை இலக்கியம் 62), கா. பொ. இரத்தினம் இலங்கையில் இன்பத் தமிழ். பொ. பூலோகசிங்கம் ஈழத்திலக்கிய அறிஞர்களின் பெருமுயற்சிகள்; கரவைக்கவி கந்தப்பனாரின் ஈழத்துப் பேனா மன்னர்கள், ஈழத்து ஒளிவிளக்குகள், அம்பிகை பாகன் Some Landmarks in the History of Tamil Lit. in Ceylon, எப். எக்ஸ். ஸி. நடராசா ஈழமும் தமிழும் போல்வன பார்க்க வேணும்.

கடந்த சில ஆண்டுகளாக வாழ்வா, சாவா? என நித்தம் நித்தம் செத்துப் பிழைக்கும் நிலையில் இலக்கிய வளர்ச்சி தம்பித்துள்ளது!

## ஆ. மலேயாவும் தமிழும்

மலேயாவில் தமிழ் மொழி கலை பண்பாடு காலூன்றி இரண்டாயிரம் யாண்டுகட்கு மேலாகிறது; என்றாலும் இலக்கியம் வரலாறானது இந்த நூற்றாண்டில்தான்! இதற்கு வித்தூன்றியவர்களையும், நந்தமிழ் வேரூன்றி வளர்ந்த வகையினையும் ஆய்வது வண்டமிழ்த் தொண்டாகும்.

11ஆம் நூற்றாண்டு கடாரம் கொண்ட சோழனின் சின்னங்கள் இன்னமும் கெடா (கடாரம்) மாநிலம் முழுதும் மண்ணுள் மிளிர்கின்றன. துலோக் சிங்காட் பகுதியில் கிடைத்த செப்புத் தகடு, பாசிமணி, மட்பாண்டங்கள், சோழர் காலத்தை நினைவூட்டுகின்றன. சோழப் பேரரசு காலக் கோட்டை மண்ணுள் புதைந்திருப்பதும் சோழ ஆட்சிக்குக் கட்டியம் கூறுகின்றது. அன்றைய தமிழர் குடியேற்றம், இன்றைய மலாய் மொழியில் ஆயிரக் கணக்கான அருந்தமிழ்ச் சொற்கள் மூலம் அறியக் கிடக்கிறது. 17 ஆம் நூற்றாண்டு மலாக்காவில் குடியேறி, பேசும் மொழியும் மறந்த மலாக்கா செட்டித் தமிழர்கள்! இப்படித் துண்டாடி வரும் இடையீடு ஏன்? தமிழின் வளர்ச்சி குறுகிய எல்லையுட்பட்டது எவ்வாறு?

1887லேயே வண்ணை அந்தாதி - ஊஞ்சல் போன்றன இங்கு வெளியாகியிருப்பினும், தமிழின் வளர்ச்சி இரண்டாம் உலகப் போரின் பின்னரே, 1946க்குப் பின்பே ஏற்பட்டுளது!

கிழக்கிந்தியக் கம்பெனி, சீன வணிகத்திற்கு இடையே தங்குதுறை அமைக்க, வங்கக் கடலில் போர் நிகழ்த்த, கிழக்காசிய வணிகத்தின் மைய கேந்திரம் அமைக்க ஏற்ற இடமாகப் பினாங்கை 1786இல் சுல்தான் அப்துல்லாவிடமிருந்து பிரான்சிஸ் லைட் பெற்றார். டச்சுக்காரரிடமிருந்து மலாக்காவை 1795லும், சிங்கப்பூரை 1819லும் வசப்படுத்தியது ஆங்கில அரசு.

காடு கொன்று நாடாக்கிச் செம் பனை, ரப்பர் நட, தென்னகத்திலிருந்து தமிழர்களைக் 'சஞ்சிக் கூலிகளாகக்' கொணர்ந்தனர்; வளமிக்க இந்நாட்டில் பொன்னும் பொருளும் திரட்டிப் பிழைக்க வந்தோர் பலர். இவர்கள் வழியினரே மலேயத் தமிழர். மலேய மண் மணமும் மரபும் நிலைபெற இவர்கள் படைத்தனவே மலைநாட்டுத் தமிழ் வரலாறாக மலர்கிறது.

இதற்கு உரமிட்டவை : **தமிழ் நேசனின்** கதை வகுப்பு ; **தமிழ் முரசின்** ரசனை வகுப்பு, மணிமன்றம், எழுத்தாளர் பேரவை, தமிழர் திருநாள் ; கோலாலம்பூர் கலைமன்றின் எழுத்தாளர் மாநாடு ; தமிழ்ப்பண்ணையின் பணிகள் ; இலக்கிய ஏடுகளின் பரிசோதனைகள் ; தமிழ் எழுத்தாளர் சங்கச் சிறுகதை ஆய்வரங்கம் போன்றன.

இங்கு எழுத்தாளர் எனப்படுவோர் பெரிதும் ஆசிரியர்களே —சிறப்பாகத் தமிழாசிரியர்களே என்பது குறிப்பிடத் தக்கது. (தமிழகத்தில் தமிழாசிரியர் தவிரப் பிறரே எழுத்தாளராகப் பெரும்பாலும் பிறங்குவது ஒப்பிட்டு உன்னத் தக்கது). ஒரு கண்ணோட்டத்தில் (at a glance)எழுத்தாளர்களில் பெரும் பாலோர் முகவை—தஞ்சை மாவட்டத்தவராகத் திகழ்வதும் தெரியவருகிறது.

அடிமை மலேயா தன்னாட்சி பெற்றது 31-8-57இல். (மெர்தேக்க நாள்). மூலவர் துங்கு அப்துல் ரஹ்மான் 'சுதந்திரத் தந்தை'. 65இல் 617 சதுரக் கிலோமீட்டர் பரப்புடைய சிங்கப்பூர் தனி நாடானது; தேசியப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை இல்லை. ஆட்சி மொழியில் தமிழும் ஒன்று.

இங்கு கவிதையும் சிறுகதையும் செழித்த அளவுக்கு வேறு இலக்கியங்கள் வேர்கொள்ள வில்லை என்றே இயம்ப வேண்டியுளது; நாவலும் நாடகமும் நசிவு நிலையில்தான் உள. கட்டுரைகள் குறைவு. விமர்சனம் இன்னும் வளர வேணும். இதழ்களுக்குக் குறைவே இல்லை, ஏராளம்; 100 இருக்கும்.

'மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்' தமிழ் வளர்ச்சியில் மூலமும் முதுகெலும்புமாக அமைகிறது. என்றாலும் சிறந்த பதிப்பகங்கள் இன்மை பெருங்குறையாக வுளது.

**தமிழவேள் கோ சாரங்கபாணி** : 16-3-74. திருவாரூர். இளமை யிலேயே சிங்கப்பூர் சேர்ந்தார். 1930இல் 'முன்னேற்றம்' கிழமை இதழின் பொறுப்பாசிரியரானார். அதில் தந்தை பெரியாரின் பகுத்தறிவுக்கருத்துக்களைப் பரப்பினார். நெல்லிக்காய்களாகச் சிதறிக்கிடந்த தமிழர்களை ஒன்றுபடுத்த 'தமிழர் சீர்திருத்தச் சங்கம், தோற்றினார். 35ல் ஒரு காசு விலையில் 'தமிழ்முரசு' சிறு நாளிதழ் துவக்கினார்.

சாதனை: 1. சிங்கையில் ஆட்சி மொழி நான்கில் அருந் தமிழும் ஒன்றாக அமையக் காரணர். 2. மலேசியாப் பல்கலைச்

கழகத்தில் இந்திய மொழிப் பிரிவு தொடங்கியது. அது எந்த மொழியில் இருக்கலாம் என இந்திய அரசைக் கேட்க, அது தமிழக அரசோடு தொடர்பு கொண்டு கே. ஏ. நீலகண்ட சாத்திரியை அனுப்பியது. அவர் வடமொழியே என்றார். இதற்கு எதிர்ப்புக் குரல் எழுப்பி 85% தமிழரே யாதலின் தமிழே இடம் பெற வேணும் என்று பெரும் இயக்கம் நடாத்தி சாத்திரி யாரின் முயற்சியை முறியடித்தார். 3. அரசுக்குப் பரிந்துரைத்து பேரா. முத்து ராசாக்கண்ணனாரைத் தருவித்துத் தமிழ்ப் பகுதித் தலைவராக அமர்த்தச் செய்தார். 4. இந்துத் திருமணங் கள் கோயில்களிலேயே பெரிதும் நடந்ததால், பெண்களுக்குப் பெருந்தீங்கு நேர்ந்து வந்தது; எனவே பதிவுத் திருமணமாகச் செய்து பாதுகாப்பளித்தார். 5. இனவுணர்வு எழுச்சி கொள்ள அகில மலாயா தமிழர் சங்கம் தோற்றி, மாநாடு நடாத்தி ஒருமையுறச் செய்தார். 6. சிங்கையில் இருந்த 42 தமிழர் சங்கத் தெரிவாளர்களையும் அழைத்து 51இல் 'சிங்கப்பூர் பிரதி நிதித்துவ சபை' தொடங்கினார். இது தமிழ் வளம் தமிழர் நலம் பேணுகிறது; ஆண்டுதோறும் தை முதல் நாளில் 'தமிழர் திருநாள்' தேசிய ஒருமைப்பாட்டு விழாவாகக் கொண்டாடுகிறது. 7. வங்கச் சிங்கம் சுபாஷ் சந்திர போசின் 'இந்திய சுதந்திரச் சங்கத்தின்' பொருளர். 8. 'கில்லங்கி' என இழிவாக அழைக்கப்பெற்ற தமிழினம், இன்று எல்லா நிலை யிலும் பல்வகையிலும் சமவாய்ப்புப் பெற்றிருத்தற்கு இவரே மூல காரணர். 9. மலேயா தமிழ் மக்களின் வணக்கத்துக்குரிய பெருந்தலைவர், இதய தெய்வம், தமிழ்ப் பெரியார். 10. பிடோங்கில் 30, 000 வெள்ளி செலவில் சொந்தமாகக் காந்தி நினைவுமண்டபம் கட்டித் தந்துளார் மலேயப் பெரியார்.

**முருகு சுப்பிரமணியம்** : 5-10-19-24-10-4-82 (பார்க்க பக் 1273). படிப்பு பள்ளி இறுதி வகுப்பே. 'இளந்தமிழன்'. கையெழுத்து ஏடு நடாத்தினார்; பலரை இலட்சிய எழுத்தாள ராக்கியது. தனித் தமிழ் நடை, தன்மானக் கொள்கை, தூய தமிழ்ச் சொல்லாட்சி முருகின் மும்மைகள். சேர்ந்து தொடங்கிய முத்தமிழ் நிலையமே பாவேந்தர் நூல்களை வெளியிட்டது. பாவேந்தரிடம் அத்தகு பற்று, பிடிப்பு.

இதழாசிரியர் மட்டுமல்லாது சமூகத் தலைவராகவும் திகழ்ந்தவர். இவரில்லாத கலை இலக்கியச் சமூக நிகழ்ச்சிகள் ஏதும் இரா! தமிழர் பிரச்சினை எல்லாவற்றிலும் முருகின் முத்திரை இருக்கும். தமிழ், தமிழர், சமூகம், தேசியம் இவரின் இரு கண்கள். மொத்தத்தில் இவர் ஒரு முத்தமிழ் வித்தகர், இவரின் சம்பந்தி;

**எஸ். பி. ராமநாதன் :** ஆத்தன்குடி. பத்திரிகையாளர். பன்னாடு சென்றவர். சிறந்த கட்டுரையாளர். நல்ல தமிழ் ஆர்வலர். **முகவரி:** தஞ்சோங்பகார் சாலை, சிங்கை

**சுவாமி இராமதாசர்:** (இராமலிங்கன்). 1916. முகவை மாவட்ட திருவரங்கம் அருகே திருக்கொளுந்துறை. அரை நூற்றாண்டளவு மலைநாட்டில் உறைபவர். பினாங்கு வாழ் பெருமக்கள் இவர் அரும்பணிகளால் பெரும்பயன் பெறுகின்றனர். நான்மறை கற்றவர்; அனைத்துச் சமயமும் அறிந்தவர்; எல்லாச் சமயத்தவர்களையும் சமமாகப் பாவிக்கும் சால்பர். அறப்பணிகட்காகவே தம்மை அர்ப்பணித்தவர். ஆலயம் பல எழுப்பி, பள்ளிகள் பல உருவாக்கியவர். ஆற்றல் மிக்க எழுத்தாளர் பலரைத் தோற்றுவித்தவர். மாணவர்கள்: வி.கே. சுப்பிரமணியம், கன்னல் கவி கரீம், நாச்சிகுளத்தார், வே. மகேந்திரன், கா. கலியபெருமாள், வா.மு. சேதுராமன். தமிழ்க் கலை சித்தாந்தம் கற்பிக்கிறார்.

ஊடுருவும் பார்வை, ஒளிமிக்க கண்கள், கம்பீரத் தோற்றம், கணீர்க் குரல், எவரையும் ஈர்த்திடும் வெள்ளுடை, வெள்ளைத் தலைப்பாகை எல்லோரையும் கவர்ந்திடும். உறுதி கொண்ட நெஞ்சினார். நாற்கவியும் பாடும் நற்கவி. மலை நாட்டின் மாகவி. 7-5-37இல் **செந்தமிழ்க் கலா நிலையம்** தோற்றி அதன் தலைவராகத் திகழ்பவர். அதன் வழி இனிய பல நூல்கள் வெளியிடுவதோடு, அறிஞர்கட்குப் பல்வகைப் பட்டங்கள் தந்து போற்றவும் செய்கிறார். தமிழ்ப்பாவலர், தமிழ் உலகில் காவலர், நாவலர்.

கொடை: உரிமை முழக்கம், தொல்காப்பியமும் தமிழரும், பழந்தமிழர் வழிபாட்டு முறை, பத்து காஜா திருமுருகன் பாமாலை, திருநீறு போன்றன. மொழி சமய சமூகம் என மும்மைத் தொண்டாற்றும் செம்மல், அருள் ஞானச்சுடர், முதுபெரும் புலவர், சைவமணி, தொண்டர் நாயகம், முத்தமிழ்க் கடல்.

**சுப. நாராயணன்:** 1915—83. கல்லுப்பட்டி வை. கோ-வின் 'சக்தி' ஆசிரியராக இருந்து 50ல் மலேசியா வந்தவர். 30 ஆண்டுகள் வதிந்த இவர் 'குவாலலும்பூர் பூர்ச்சு' என்றழைக்கப் பெற்றார். தமிழ்நேசன் ஞாயிறு பதிப்பில் கந்தசாமி வாத்தியார் என்ற பெயரில் 'தமிழ் வகுப்பு' நடத்தினார். 'நன்று, வெல்க, பளாபளா, முயல்க, வெல்க' என்ற இவரின் ஊக்குச் சொற்கள் தாரக மந்திரமாக ஆயின. ஞாயிறு

பதிப்புக்கு நல்ல கிராக்கி ஏற்பட்டது. இவ்வகுப்புகள் எழுத்துலகின் எதிர்கால அளவு கோலாகவும் புடம் போடும் பயிற்சிக்களமாகவும் மிகு பயன் விளைத்தன. பின் தேர்வு வைத்துத் தரம் பிரித்தார். மேதை, சிறந்த, தேர்ந்த, நல்ல, ஆர்வ எழுத்தாளர்கள் என வகைப்படுத்தப் பெற்றனர். எழுத்தாளர்களின்றி இருந்த மலேயாவில் ஒரு எழுத்தாளர் பட்டாளமே—பரம்பரையே உருவாயிற்று.

தமிழ் முரசு நாளிதழில் ரசனை வகுப்புத் தொடங்கினார். ரசனைக்குரிய பொருள்களாக மலைநாட்டு வானொலி, தமிழ் நாட்டு இலக்கியச் சூழல், அண்ணா அறிஞரா? எடுத்துக் கொள்ளப்பட்டன. பயன் வானொலி நிகழ்ச்சிகள் வளம் பெற்றன.

பண்டிதர் நடையில் பாவாணர் நடையில் தூய தமிழ் தந்தார். பாமரருக்கும் புரியுமாறு 'எண்ணமும் எழுத்தும்' என்ற பெயரில் நன்னூல் இலக்கணத்தை நுண்ணிதின் விளக்கினார். இவரின் இளவல் **சுப. சிதம்பரம்:** *18-12-1919.* தமிழ் நேசனில் துணையாசிரியர். 53இல் மலேசியா வந்தவர். இந்து தமிழர் சங்கம் நிறுவியவர். கட்டுரையாளர். **முகவரி**: *38* ஜாலான் 8-18, பெட்டாலிங் ஜெயா, சிலாங்கூர் சுப. நா.வுடன் ஒருங்கு வைத்து எண்ணத் தக்கவர்.

**பைரோஜி நாராயணன்:** *1931.* கருவூரையடுத்த வாங்கல். தமிழ் நேசன் அச்சுக்கோப்பர், மெய்ப்புத் திருத்துநர். ஞாயிறு இதழின் 'ஆசிரியராக உயர்ந்தவர். சிங்கை திங்களிதழ் 'கலை மலர்' துணை ஆசிரியர், 'சங்கமணி' ஆசிரியர். இதுபோது மலேசிய வானொலி நிகழ்ச்சி அமைப்பர்.

முதற் படைப்பு தமிழ் நேசனில் கவிதை 'தரிசன தாகம்'- விமர்சனக் கட்டுரை வல்லாளர். வானொலி நாடகங்கள் நிறைய எழுதியுள்ளார். 'வானொலி நாடகம் எழுதும் முறை' (உதயம் இதழில்) சிறந்த வழிகாட்டி. பல்துறை அறிஞர், தெளிந்த சிந்தனையாளர், கலைஞர்.

**கவிமணி கிருஷ்ணதாசன்:** (ப. ஆறுமுகம்) *25-12-1918.* நிபோங்திபால் ஜாவி கிராமம். சுப்பிரதீபக் கவிராயர் மரபு. 9 வயதில் கலைமகள் அருள் பெற்றவர். 1000க்கும் மேற் பாடிய கவிக்கோ. இவர் கைவண்ணம் பெறா ஏடு இல்லை. உதயசூரியன், நாகரிகம், திருமுகம் இதழ்களில் பணியாற்றியவர். எல்லாத் துறையிலும் முத்திரை பதித்தவர். நூல்கள்;

நவரச ஆனந்த சீர்திருத்த கீதமலர், நவரசானந்த கீதம், பஜனாமிர்த கீதம், ஹரிஹர முருகானந்த கீதாமலர் சர் ஜகதீஸ சந்திர போஸ்(வ).

மலேசியக் கவிஞர்களை நாடறியச் செய்யக் கூட்டுறவுக் கவியரங்குகள் கூட்டி 'கூட்டுறவுக் கவிதைகள்' தொகுப்பு வெளியிட்டவர். ரதபந்தம், நாகபந்தம், தமிழ் ஊஞ்சல் (வீ.தி. சம்பந்தன் மேல்) படைத்தவர். 67இல் தைப்பிங் முன்னேற்ற சங்கம் 'மலேசியக் கவிமணி' என்றும், பிறர் பண்டிட், மேதை எழுத்தாளர், கவிஞர் பெருமான், தமிழடி யார் எனவும் பட்டமளித்த பெருமையர். **முகவரி:** இரசாத் தோட்டம், பொண்டோக்தஞ்சோங், தைப்பிங்.

**ஆர். அப்துல் கறீம்:** 1914. தஞ்சை மாவட்ட நக்கம்பாடி. 35 முதல் கவிதை, கட்டுரை, நாடகம் புனைபவர். அத்துணை யும் புதுமையும் புரட்சியும் பொதுளியவை. புனை பெயர்: சித்தன், சிறுகதைப் பித்தன். நூல்: ஒளி பிறந்தது, இஸ்லாமி யப் பாடல்கள் 2 தொகுதி. 64இல் திருவாசகமணி, 'கன்னல்கவி' என்றும், 73இல் கவியரசு 'கவிதாமணி' எனவும் அழைத்தனர். **முகவரி:** 117F, ஜாலான் துங்கு, ஜெலுத்தோஸ், பினாங்கு.

**வி. ச. முத்தையா:** 17-6-1920. முகவை மாவட்ட ஆத்தங் குடி. 17 வயது முதல் படைப்பவர். 68 முதல் தமிழ்நேசன் துணை ஆசிரியர். கதை கவிதை கட்டுரை நாடகம் எழுது பவர். நாட்டுப்பற்று நல்லறம் மலர்ந்து மக்கள் மாண்புற வேணும் என்ற குறிக்கோளுடன் எழுதுபவர். ஈப்போவில் கலை இலக்கியத் திங்கள் 'மலைமகள்', 4 ஆண்டுகள் நலமுடன் நடாத்தியவர். மலேசிய மன்னரின் உயர் விருது AMN பெற்ற வர். புனை பெயர்: வில்லன், பூரட்டாதி. நூல்: வெற்றி அழைக்கிறது (கட்டுரை), ஆகஸ்ட் 26 (சிறுகதை), தேடிவந்த லெட்சுமி, எண்கள் என்ன செய்யும்? செவ்வாய் தோஷம். **முகவரி:** 32, லெபோ அப்பாங், கோலாலம்பூர்.

**ரெ. இராமசாமி:** 10-8-1920 கானாடு காத்தான். பு.பெ. தாசரதி, அரங்கச் செல்வன். 38இல் முதற் கவிதை 'தொண்டு செய் தமிழா' (இந்திராவில்); கட்டுரை 'பெண்ணுலகம்' (பள்ளி மலர்). பள்ளத்தூர் அருணாசலம் செட்டியார் உ. பள்ளியில் பயின்றவர். 54இல் மலேயா போந்தவர், தந்தை யின் தொழிலைக் கவனிக்க! மலை நாட்டில் இவர் கைவண்ணம் பெறாத ஏடு எதுவுமில்லை,

படைப்பு: எம்பாவை எழில், பாரதியின் காதலி, திரு விளக்கு வழிபாடு, சுவாமி சிவானந்த சரஸ்வதி மலர் வழி பாடு, சிவச்செல்வர் பாமாலை, இலக்கிய நாயகி சீதை, கம்பரின் காவிய ஓவியம், க.தி. தரும் காதற் சுவை, பதினாறு பேறும் பாவிப்பாய், தண்டபாணி இருபா இருபது அந்தாதி.

நாடகத்தில் நற்புலமையும் வளமையும் பெற்றவர். அமர கவி, இரணியச் செல்வன், மேகநாதன் போன்றன ½மணி நாடகங்கள்; குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற்பள்ளு போல்வன 1 மணி நேர நாடகங்கள். கம்பராமாயணம் முழுவதையும் 'கருத்தும் கவியும்' என 51 தொடர் நாடகங்களாக வானொலி யில் பரப்பியவர். 'சாத்தனார் சாதனை' சிறந்த மேடை நாடகம். இவரது தொண்டு போற்றி அலோர் ஸ்டார் மக்கள் கண்ணதாசன் மூலம் 'முத்தமிழ்ச் செல்வர்' என்ற பட்டம் வழங்கினர். தமிழ் இனிமை சமயச் சிந்தனை கொண்ட கலை மாமணி. **முகவரி**: 12, பிக்கான் சீனா, அலோர் ஸ்டார். கெடா.

**சோமசன்மா** : (ம. கா. அண்ணாமலை). 5-4-1925. தலைமை ஆசிரியர். முதல் கவிதை 'இலக்கியப் பசி' தமிழ் முரசில். 1000க்கும் மேலான கவிகள், எல்லா ஏடுகளிலும். மகிழம்பூ (தொகுதி). 'இளமை எரிந்தது முதுமை சிரித்தது' புகழ் பூத்த பாட்டு. சீர்காழி கோவிந்தராசன் இவர் பாடல் களைப் பாடியுள்ளார். மாணவர்கள். மா. இராமையா, அ. கு. அறிவானந்தன்.

69இல் கவிமணி கிருஷ்ணதாசர் 'கவிச்சுடர்' என்றும், 71இல் கண்ணதாசன் 'மலேசியக் கவியரசு' எனவும் பாராட் டினர். கட்டுரைகள் விமர்சனங்களும் படைத்துளார். சிறந்த பேச்சாளர். மக்கள்: ஆண் 9, பெண் 6. துணைவி **அமிர்தம் சோமசன்மா** (அமிர்தவல்லி). 21-11-34இல் சிங்கையில் பிறந்தவர். தஞ்சையிலும் சிங்கையிலும் பயின்றவர். சிறந்த சிறுகதையர்-முதற்கதை 'மாற்றாந்தாய்' தமிழ் நேசனில். எல்லா ஏடுகளிலும் ஏராளமான கதைகள்; குடும்பப் பாங்கு குலவும், தமிழ்ப் பண்பு நிலவும். மகள் **தேவிநாதன் சோமசன்மா** (சற்குண தேவி) சிறுகதையாள். முதற் கதை தமிழ் நேசனில் **'எழுத்தாளன் காதலி'**. இவரின் வாசகர் நேசநாதனே துணைவருமானார். குவந்தானில் குடியுள்ளார்.

மைத்துனர்கள்: **வேலு சோமசன்மா** (எம். எஸ். வேலு) 7-10-1940 தஞ்சை. 'அன்புத் தம்பிக்கு' என்னும் மாமாவின்

மடல்கள் தமிழறிவூட்ட, பெயர் மாற்றி, இலக்கியப் பணியில் இறங்கினார். கவிதை கட்டுரை கதை படைக்கிறார். 'தங்கட்குப் பின்னரும் சோமசன்மா வழியினர் தமிழ்ப்பணி ஆற்ற வேணும்' என்ற அவாவினர். கொதிகலன் இயக்குநரான இவர் **முகவரி:** 6சி, பிளாக் 335 கினிமென் தீ அவென்யு 2.சிங்கப்பூர்-5. எம். எஸ். **சண்முகம்** 28-4-1936 கவிதை படைக்கிறார், பாடு கிறார். மனோகரன் இதழ் துணை ஆசிரியர். எழுத்தாளர் குடும்பத்தார் அனைவருமே தமிழ்ப் பற்றாளராதல் வேண்டு மெனும் வேணவாவினர். **முகவரி:** பிளாக் 172, 1176எல், லோரோங் 1, தோபாயோ, சிங்கப்பூர்-12. **தேவன் சோமசன்மா** (அ. சந்தனத்தேவன்) 21-12-52, நிருபர். கதை கட்டுரை தீட்டு கிறார். **முகவரி:** 1014. அப்பர் சிராங்கூன் சாலை,சிங்கப்பூர்-19. இப்படி இவர் குடும்பத்தவர் அறுவரும் ஒருமுகமாகத் தமிழ்ப் பணி ஆற்றுவது அருமை பெருமை!

**தை. சே. பெ. பொன்னம்பலம்:** 1929. பேரா மாநில நியு கொலம்பிய தோட்டம் பெருமாள் (சேலம் பாரூர்) : தையல் நாயகி (தெ. ஆ. பெரும்பாக்கம்). ஆசிரியர். 'திருமுகம்' இதழில் 'கம்பனைக் குறை கூறும் இந்தக் கொம்பன் யார்?' எனும் கட்டுரையுடன் வந்தவர். 'சிலம்பு வெண்பா நூற்றெட்டு' (சிலப்பதிகாரத்தின் வெண்பா வடிவம்), வறிஞராற்றுப்படை (வீ. தி. சம்பந்தன் அவர்களிடம் பாட்டாளிகளை வழிப்படுத்து வது). மலாய் நாட்டின் வரலாற்றை 9000 பாடல், 3 காண்டங் களாக வடித்துள்ளார்; மலையக முதற் பெருங்காப்பியம் தந்த முதல்வர். 'டொரியான் பழம் தருகிறேன், சங்கத் தமிழ் மூன்றும் தா' எனக் கணபதியைக் கேட்டவர். கோலாலம்பூர் மகாமாரியம்மன் ராஜகோபுரக் கவிதைப் போட்டியில் தங்கப் பதக்கம் பெற்ற 'வெண்பா வேள்'. பிற : முத்தொள்ளாயிரக் காட்சிகள், கம்பனெங்கே ரஹீமெங்கே?, மனப்பிராந்தி (சி). **முகவரி·** 92, கம்போங் செந்தோசா. சுங்கை சிப்புட். பேராக்.

**இர. ந. வீரப்பன் :** 8-6-1930: பள்ளி ஆசிரியர். நல்ல சிறு கதையாளர். வல்ல திறனாய்வர். மொழியியல் வழியில் தமிழைக் கற்கவேணும் என்ற கொள்கையர். 67-70 வரை சென்னை மாணவர் மன்ற வழிப் புலவர் தேர்வை நடாத்தி 'தமிழ் மணி' பட்டமும் பரிசும் வழங்கியவர். கதைகளில் எனக்குப் பிடிக்காத கதை (அன்பு இதயம்), ஆறடி மண் (சிதைந்த ஓவியம்), முத்தரசி மருதாயி (அமுதகலசம்) குறிப் பிடத்தக்கன. உருவக சங்க இலக்கியக் கதைகளும் புனைந் துளார். கிள்ளான் தமிழ் இலக்கியக் கழகச் செயலர்; உலகத்

தமிழ்ப் பண்பாட்டு இயக்கத் தலைவர். துணிவுமிக்க தமிழ்த் தொண்டர். **முகவரி:** 110, கொக்குத் தெரு, பெருக்கிளித் தோட்டம், கிள்ளான்.

**மா. இராமையா** : 30-7-1930. ஜோகூர் மாநில தங்காக். கதை, கவிதை, கட்டுரை, நாடகம், வரலாறு என எல்லாத் துறையிலும் எழுதுபவர்; ஏற்றம் பெற்றது சிறுகதைத் துறை. முதற்கதை 'காதல் பரிசு' தமிழ் நேசனில். 'ஆறு மாதங்கள்' பவுன் பரிசு பெற்றது. பல முதற்பரிசுகள். தொகுப்பு : பரிவும் பாசமும், இரத்ததானம் (மலேசியாவில் முதன்முதல் வந்த தொகுதி, (மாயத்தேவனுடன் இணைந்து படைத்த புதுமையது). 300 கதைகள் தீட்டிவிட்டார். மலேசியச் சிறு கதைகள் தொகுத்துளார். தமிழ் எழுத்தாளர் சங்கம் இவர் சிறுகதை பற்றிய திறனாய்வரங்கம் நடத்தியது.

தொடர் கதைகள் : எதிர் வீடு (பொன்னி), கதவு திறந்தது (மலைமகள்), புழுதிமேடு (குமரி), மலரும் மங்கையும் (மலேயா நண்பன்), நாவல்கள்: நீர்ச்சுழல், மூங்கிற் பாலம், சங்கமம். மேடை நாடகம் 'புது வாழ்வு', மன்னிப்பு, வழிகாட்டி, கண் திறந்தது. மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு. புனைபெயர் : மலைநாடன், மூவேந்தன், எம்மார்வி. சிறுகதை ஜாம்பவான் - மன்னன் - சிற்பி என்றேத்தப்படுவர். மக்கள் அருண்மொழி, செந்தில் இளங்கோவன், கனிமொழி; கமலாதேவி. **முகவரி: 666,** ஜாலான் ரெஸ்ட் ஹவுஸ், தங்காக் ஜோகூர்.

**சித. இராமசாமி** : 1930. கோனாபட்டு. பு. பெ. மலாயா மணி. பண்பட்ட நாடகக் கலைஞர். மேடை வானொலி நாடகங்கள் படைத்தும் நடித்தும் வருகிறார். குமண வள்ளல், புலவர் புகழேந்தி, சந்திரனும் தாமரையும் குறிப்பிடத் தக்கன. 'தமிழ் எங்கள் உயிர்', தமிழகப் புயல் நிவாரணம், காங்கிரஸ் கல்வி நிதிகளுக்காக எழுசசி நாடகங்கள் பல புனைந்தும் நடித்தும் உள்ளார். 'மக்கள் தொண்டன்' கையெழுத்தேடு, வள்ளுவர் சொற்பயிற்சி மன்றம், இளைஞர் பணி மன்றம் நடத்தியவர். மலேயா ஏடுகளில் கலைமணம் பரப்பிவரும் இவர் **முகவரி: 260,** பர்மா சாலை, பினாங்கு.

**ஜி. சூசை** : 1-4-1931. மலாய் மொழி அறிஞர். அன்பானந்தனின் ஆறுமுகன் அந்தாதி, அறப் பளீச்சுர சதகம், குமரேச சதகம், திருக்குறள், தேவாரம், அபிராமி அந்தாதி, சிலம்பு, சங்கப் பாக்களை மலாய் மொழியில் பெயர்த்துப்

பெருந்தொண்டு புரிந்து வருகிறார். ஆங்கிலத்தும் மலாயிலு மாக 14 புதினங்கள் படைத்துளார். கிறித்துவராக இருந்தும் இந்து சமய நூல்களைப் போற்றுவது பாராட்டுக்குரியது. மொழி விரிவுரையாளராக விளங்கும் இவரின் **முகவரி:** 73, ஜாலான் பட்டாணி, பினாங்கு.

**இரா. இராமநாதன்** : 1933. தஞ்சோங்மாலிம். முதற் படைப்பு 'மரணத்தறுவாயில்' சிறுகதை 52 தமிழ்முரசில். பல போட்டிகளில் முதற் பரிசு, 300 கவிதை, பல சிறுகதைகள் கட்டுரைகள் படைத்துளார். உயர் கருத்தும் சீர்திருத்தச் சிந்தனையும் படைப்பில் பிலிற்றும். சிறந்த சமூக சேவைக்காக பி. ஜே. கே. விருதும், தமிழ்ப் பணிக்காக 'தமிழ்க் களஞ்சியம்' பட்டமும் பெற்றவர்.

**சி. அன்பானந்தம்** : 28-3-1932. தமிழக சிங்கம்புணரி. மதுரையில் பயின்று வணிகம் செய்யப் பினாங்கு போந்தவர். கதை கவிதை கட்டுரைக்காகப் பல முதற் பரிசுகளும் தங்கப் பதக்கங்களும் பெற்றவர். ஆறுமுகன் அந்தாதி (மலாயில் புண்ணியக் கிண்ணம் Cepu Pahala என சூசை பெயர்த்துளார்) ஆனைமுகன் அந்தாதி, முருகன் திருப்பெயர் புகழ்மாலை, அழகோவியம், கிணற்றுத் தவளை, நந்தாவிளக்கு (காவியங்கள்).

உடைந்த வளையல், பாசத்தின் பரிசு (தமிழ்நேசன் பவுன் பரிசு) போன்றன சிறுகதைகள். எழுத்தாளர் பணி, கண்ணதாசன் காவியக் கனிகள் கட்டுரைகள். வானொலிக்குக் கவிதை இலக்கிய சமூக நாடகங்கள் வடித்துளார். மலை நாட்டின் முன்னணிக் கவிஞரான இவர் **முகவரி** : 31, பிஷப் தெரு, த. பெ. 322, பினாங்கு.

**ஆர். சண்முகம்:** 6-7-1935. தைப்பிங் ஆசிரியர். சிறுகதை (இரவில் நடந்தது, கருமுகில், ஈப்போவிலிருந்து கடைசி வண்டி, ஒன்றில் மூன்று, அவளைப் பற்றி), நாடகம் (நவயுவன் கலைக்கோயில், அவனே என் மகன், காற்றோடு போன வாழ்வு) படைக்கும் நட்சத்திர எழுத்தாளர். உன் கண்ணில் நீர் வழிந்தால் - தொடர்கதை, இரைதேடும் பறவைகள் சிறு கதைத் தொகுதி, மூங்கில் திரை புதினம் சிறு கதைகள் பவுன், பரிசும். தங்கப் பதக்கம் மூன்றும் பெற்றன.

துணைவி இந்திராதேவி, வானொலி நாடகம் வல்லார். 'மனைவியின் கொலை வழக்கு' ரசிகர்களின் மனம் கவர்ந்தது.

**முகவரி :** மகாத்மா காந்தி கலா சாலை, சுங்கை சிட்புட், பேரா மாநிலம்.

**மா. செ. மாயதேவன்:** 1933. தைப்பிங் அருகே போண்டோர் தஞ்சம். 43இல் 'தமிழ் நேசன்' கதை வகுப்பில் கலந்து கொண்டவர். முதல் கட்டுரை தமிழ் முரசில். எல்லா ஏடுகளிலும் இடைவிடாது எழுதுபவர். 'திருமுகம்' இலக்கிய இதழில் 3 ஆண்டுகள் ஆசிரியர்; பல புதிய எழுத்தாளர்களை உருவாக்கியவர்; புதுமைப்பித்தன் பற்றித் தொடர் ஆய்வுக் கட்டுரை படைத்தவர்.

இராமையர்வுடன் இணைந்து படைத்த 'இரத்த தானம்' மலை நாட்டுக் கதை இலக்கியத்திற்குக் களம் அமைத்த நாட்டுக் கதை இலக்கியத்திற்குக் களம் அமைத்த அருமையது. பிற எழுத்தாளர்களின் படைப்புக்களையெல்லாம் தனி-கூட்டு நூல்களாகத் தந்த பெருமையர்.

அளித்தன: இரத்த தானம், சபலம் (சிறு), நீர்ச் சுழல் (பு) இலக்கியத்தில் புதுமைப் பித்தன், மனவுணர்வுகள், மலேசியா வில் தமிழர்கள், மலேசியாவில் தமிழர் நாகரிகமும் கலையும் (கட்டுரை), அருமையான நாடகங்களும் அரங்கேற்றியுள்ளார். திருநாள் பரிசு, நிற்கட்டுமா போகட்டுமா?—பரிசு பெற்றவை,

இவரது அருந்தமிழ்ப் பணி பெருஞ் சிந்தனை போற்றி எழுத்தாளர் சங்கம் கேடயமும், திறனாய்வரங்கம் தங்கப் பதக்கமும் வழங்கின. இர. ந. வீரப்பன் 'மாயத்தேவனின் இலக்கியப் பணி' என்ற திறனாய்வுத் தொகுப்பு வெளியிட்டுள்ளார். 'தமிழ்ச் சீலர்' என்ற விருது பெற்றவர் **முகவரி :** 204, ஜாலான் குரோஸ்—81. தைப்பிங்

**நாச்சி குளத்தார் :** (மு. முகமது யூசுப்) 1934. தஞ்சை மாவட்ட நாச்சிகுளம். தமிழ் நேசனில் 'அன்பு' முதல் கவிதைக்குப் பரிசு பெற்றவர். ஆசான்கள்: கவியோகி சுத்தானந்த பாரதியார், பெருமழைப் புலவர் சதாசிவ அடிகள், புலவர் உஸ்மான் கனி, சுவாமி ராமதாசர். அறநெறி, சமுதாய மேம்பாடு போன்றவற்றுக்காகவே பா புனைகிறார். அதிலும் வெண்பாவில்தான் விடுதலறியா விருப்பு, கைவந்தவர். 20000 வெண்பாக்கள் பாடியிருப்பார். 'வெண்பா வேந்தர்' எனலாம்.

அறநெறி எழுநூறு, நன்னிலை நானூறு; ஏசுவின் இனிய கீதம், புத்தரின் புனித கீதம், திருமுருகன் வெண்பா, இராஜ

யோகம், சீறாப்புராணம் (சிறந்த பதிப்புகள்) என 40 பனுவல்கள்.

**பரிதா மணாளன் :** (சு. அப்துல் முத்தலிப்) 10-8-1935. தமிழக மாயவரம் நீடூர். தமிழ் முரசில் அச்சுக் கோப்பர், மெய்ப்புத் திருத்துநராக இருந்து இதுபோது தமிழ்நேசன் துணை ஆசிரியர். சிங்கை தேசியமொழி பண்பாட்டுக் கழகம் நடத்திய சிறுகதைப் போட்டியில் 62ல் 250 வெள்ளி பரிசு பெற்றவர். 40 கவிஞர்களின் படைப்புகளைத் திரட்டி 'மலேயாவில் தமிழ்க் கவிதைகள்' தொகுப்பு வெளியிட்டு ஊக்கியவர். அறநெறி, நற்பண்புகளைப் புதுமையுடன் படைக்கும் புகழ்மிகு எழுத்தாளர். **முகவரி :** (62-6டி ஜாலான் பொக்கிவிங் பிளாட்ஸ். ஜி. பிளாக், கோலாலம்பூர்.

**சா. ஆ. அன்பானந்தன்:** (சுப்பிரமணியம்). 1939—1980. புகழ் பூத்த பெருமகன். 58இல் தமிழ் முரசு மாணவர் மன்ற இதழில் கவிதை எழுதி எழுத்துலகில் ஏற்றம் பெற்றவர். தமிழ் எழுத்தாளர் சங்கச் சிறுகதைப் போட்டியில் 'ஏணிக்கோடு' தங்கப்பதக்கமும், தமிழ் நேசனில் 'ஓடும் பிள்ளை' பவுன் பரிசும் பெற்றன. தொகுதிகள்: சிதைந்த ஓவியம், திருமகள், பவுன் பரிசுக் கதைகள், பாவையின் பசி, பெண் மனம், போர் வீரன், மணிக்கதைகள்.

நூற்றுக்கணக்கான வானொலி, தொலைக்காட்சி மேடை நாடகங்களில் நடித்தவர். புலிக்குகை, மணி ஓசை பரிசு பெற்றவை: இவர் படைப்புகள் தமிழ்ப் பண்பு கலை கலாச்சாரம் தழைக்க வேணும் எனும் துடிப்பின; கதைகள் மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் மறுவார்ப்புகள்.

13000 உறுப்பினர் கொண்ட மலேசியத் தமிழ் இளைஞர் மணிமன்றின் தேசியத் தலைவராகத் திகழ்ந்தவர். 8 ஆண்டுகள் அரும்பணி ஆற்றிய அன்பர். 'சமூகக் கலைமணி' என்ற விருது பெற்றவர். இளமையிலேயே மறைந்தது இன்றமிழுக்குப் பேரிழப்பு.

**ரெ. கார்த்திகேசு:** 1940. கெடா பீடோங். மலேயா பல்கலைக் கழக பி.ஏ. ஆனர்சு. வானொலி, தொலைக்காட்சி பொதுசேவை அமைப்பர். நல்ல சிந்தனையாளர். பு. பெ. வானம். 'வஞ்சிக் காண்டம்' சிறந்த ஆய்வுக் கட்டுரை. சிறுகதைத் தொகுதி 'புதிய தொடக்கங்கள்'. மலேயா பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவை வெளியீடான 'தமிழ் ஒளி' ஆசிரியராக

இருந்துளார். இவரது முதற்படைப்பு 54இல் தமிழ் முரசு மாணவர் மணிமன்ற இதழில் 'ஏமாற்றம்'. கவிதை, சிறுகதை, வானொலி நாடகம், திறனாய்வு போன்ற பல்துறைப் பண்பர்.

**வி. பூபாலன்:** *1946*. கோலாலம்பூர். முதற்படைப்பு 'ஏன் சிரித்தாள்?' கவிதை. மலேசிய வானொலியில் இலக்கியக் கட்டுரை, தமிழறிஞர் பேட்டி வழிகாட்டும் வையாபுரி தலைப்பில் கிராமியம் பகுதிப் பொறுப்பர். 30 சிறுகதைகள். 60 நாடகங்கள். 'அன்பே உனக்காக' தொடர் நாடகம் 15 கிழமை ஒலிபரப்பானது.

**ஐ. உலகநாதன்:** ஐயாசாமி: சாலம்மாள். சிங்கையில் 'மாதவி' இலக்கிய இதழ், மாதவி இலக்கிய மன்றம் நடாத்தினார்-இளங்கவிஞர்களின் இனிய வழிகாட்டி. 19 வயது முதல் சிறுகதை, மேடை வானொலி நாடகங்கள் படைத்து வருகிறார். மலேசியக் கவிஞர் (பார்க்க பக். 608). இவரின் இளவல்: **ஐ. இளவழகு:** (ஆறுமுகம்) *20-11-41*. முதற்படைப்பு மாதவி இதழில் 'மங்காத் தமிழ்' கட்டுரை. முரசு சிறுகதைப் போட்டியில் தங்கப்பதக்கம் பெற்றது 'ஐந்தடி'. 'மாயை' திறனாய்வுப் போட்டியில் தங்கப்பதக்கம். எழுத்தாளர் சங்க நாவல் போட்டியில் முதற்பரிசு பெற்றது, 'இலட்சியப் பயணம்'. உணர்வுகள் ஒன்பது, மனிதன் கதை-கட்டுரை நூல்கள். ஈப்போ குறள் விழாவில் 'பாவலர்' விருது பெற்றார், ஊக்கம் மிக்கவர். **முகவரி:** 135. ஜலான்பால், செரம்பான்.

**சோ. பரஞ்சோதி:** தொலைக் காட்சியில் முதன் முதல் நடித்த பெருமையர். நடிப்பதோடு நாடகங்களும் படைத்துளார். நூற்றுக்கும் மேலான நகைச்சுவை நாடகங்கள்; என்னடி ராக்கம்மா, எங்கள் குடும்பம், பாலப் பிறவி. சிறுகதைகளும் செய்துள்ளார்; மீனா, பெரியசாமி. சிரிக்கவைத்துச் சிந்திக்கச் செய்யும் துடிப்புள்ள இளைஞர். 'கலாட்டா கந்தன்' ஏழு திங்கள் தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்பட்டது

**காரைக்கிழார்:** (மு. கருப்பையா). *13-10-1947*. பினாங். முதற்படைப்பு 'தலைப்பில்லாக் கதை' 58 'மலை நாடு'. எல்லா ஏடுகளிலும் ஏராளமான கதை கட்டுரை நாடகம் கவிதை தீட்டி வருகிறார். மலேசியா முழுதும் மணப்பவர், தமிழிலக்கியப் படையின் தளபதி. மலேசிய திராவிடக் கழகம், சிங்கை கலாசார அமைச்சு நடாத்திய பாரிய சிறுகதைப்

போட்டிகளில் முதற் பரிசு. 'மாதவி' விருத்தப் போட்டியில் முதற் பரிசு.

எளிய நடை, இனிய உவமை; கருத்தாழம் கொண்ட கவிகள். அலை ஓசை, புரியாப்புதிர் - குறுங்காவியங்கள். 100 பாடல்கள் இசைத்தட்டாக வந்துள; சில பாடல்கட்கு இவரே இசை அமைத்துளார். வண்ணத்துப்பூச்சி (நாவல்), மெயில் வண்டி போய்விட்டது (குறுநாவல்). 10 மேடை நாடகங்கள், 5 தொடர் நாடகங்கள், 35 குறு நாடகங்கள். 600 இசைப்பாக்கள், வானொலி இசைச் சித்திரங்கள் இப்படி எண்ணற்றன. வியத்தகு சாதனை புரிந்து வரும் இவர் தொழில் அச்சுத் தொழில், தமிழ் நேசன் இதழில். கலை மனம் கருத்து வளம் கொண்ட சிந்தனையாளர் **முகவரி:** 37, ஜாலான் அம்பாங், கோலாலம்பூர்.

**கவிதை:** கிருஷ்ணதாசன், சி. அன்பரசன், ஈப்போ இராவணேசப் புலவர், கா. கலியபெருமாள், சோமசன்மா, கவி மதிதாசன், சா. ஆ. சுப்பிரமணியன், முரசு நெடுமாறன், தி. ப. செழியன், க. பொன்னுதுரை, வி. கே. சுப்பிரமணியன், அ. மாசிலாமணி, காரைக்கிழார், கரு. வேலுசாமி, ஏ. எம். எம். ஜப்பார், சா. சி. சுப்பையா, பெ. மு இளம் வழுதி, க. இராமசாமி, க. பெருமாள், மறைதூதன், சி. வேலு சுவாமி, கா. பெருமாள், ந. க. சாரதாதாசன், வி. ச. முத்தையா, சி. கமலநாதன், பரிதி, ந. பழநிவேலு, அ. முருகையன். ஞானதாசன், அ. முத்தையன், அதிரைதாசன், சு. நாகராசன், உலகுதாசன், சா. ஆ. அன்பானந்தன், கே. யெம். மலை மகன், முரளி, முதியவன், ஐ. இளவழகு, தம்பாய் முனியாண்டி, முத்தமிழன், மு. வே. தில்லை, பரிதாமணாளன். பானுதாசன், இரா. பெருமாள். இரா. தமிழ்ச்செல்வன், இரா. சு. வெங்கடாசலம், இக்குவனம், தி. ப. செழியன், ப. மு. அன்வர், டி. எஸ். பொன்னுசாமி, சி. மா. இளங்கோ, ரெ. சண்முகம், டி. வி. ராகவன், எல்லோன், கன்னல் கவி கரீம், வே. மகேந்திரன், சங்கு சண்முகம், மாரி மணாளன், க. அருண்மொழி, மூவார் இளந்தேவன், இளஞ்செல்வன், கரு. திருவரசு, நாச்சிகுளத்தார், காதிர் சுல்தான், ஐ. உலகநாதன், சிங்கை முகிலன், பரணன், இளமாறன், சிங்கை சமுகன், அமிர் ஹம்சா, புதுமைதாசன் போன்றார் புனைகின்றனர்.

**சிறுகதை:** சி. மாரியப்பன், ரெ. வீராசாமி, அ. சந்திரசேகரன், மெ. அறிவானந்தன், அ.ந.பெ. சாமி, வி. சண்முகம், பெ. மு. இளம்வழுதி, லாபு. சி. வடிவேல், மா. இராமையா, அ. கி. அறிவானந்தன், மு. பரமசிவம், சி. கமலநாதன், பரிதி

தாசன், சி. அன்பரசன், சி. வடிவேலு, செ. குணசேகர், சி. வேலு சுவாமி, இளவழகு, வி.ச. முத்தையா, எஸ். வி. சுப்பிரமணியன் மா.செ. மாயதேவன், பெரி. முத்தையா. மு. அப்துல் லத்தீப், இர. ந. வீரப்பன், சிங்கை முகிலன், பூ. அருணாசலம், எம். துரைராஜ், ஜி.சி. இளங்கோ, முரு. சொ. நாச்சியப்பன், ஜி. பி. லாசர், அ. கதிர்செல்வன், வாணிநேசன், பூ. அருணா சலம், துறவி, கெ. குணசேகர், மணிவண்ணன், மு. சு. குருசாமி, சை. பீர்முகமது, சி. அன்பானந்தன் இராம கண்ணபிரான், சா. ஆ. அன்பானந்தன், அன்புச் செல்வன், அரு. சு. ஜீவானந்தம், எம். ஏ. இளஞ்செல்வன், இராம. வீரசிங்கம், ரெ. கார்த்திகேசு, ஐ. இளவழகு, இரா. ச. இளமுருகு, நாடோடி, இளங்கண்ணன், கரு. வேலுசாமி, ந, பழநிவேலு, சிங்கை முகிலன், சே. வெ. சண்முகம், ஏ. பி. சண்முகம், செர்டாங் எல். முத்து, மெர்சிங் நாணல் போன் றார் சிறுகதைச் செல்வர்கள்.

**நாவல் :** முரு. சொ, நாச்சியப்பன் (மலராத மலர்), மு. பக்ருதீன் (கானல் நீர்), மாயத்தேவன் (நீர்ச்சுழல்). வாசி. பாண்டியன் (தாய்க் குலமே அழிந்து போ), ந. இராசகோபால் (மாலாவின் துறவு), ப. சந்திர காந்தம் (ஆயிரத்தில் ஒருத்தி, அழுதாலும் உன்னைப் பெறலாமே), செங்குட்டுவன் (துன் பங்கள் உறங்குவதில்லை, நெருப்பில் ரோஜா, பழமுதிர்ச் சோலை), இராமையா (எதிர்வீடு, மூங்கிற் பாலம், சங்கமம்), சா. ஆ. அன்பானந்தன் (மரவள்ளிக் கிழங்கு), சந்திரா சண் முகம் (என்ன விலை, வானத்தின் விலை, வாழ்வெனும் சுடலிலே), வீ. தீனரட்சகி (என்னுயிரே எனை மறந்தால், கானல் நீர், மகர வீணை, உனக்காக), எஸ். வில்வமலர் (நீர் வீழ்ச்சி, நான் வணங்கும் தெய்வம், நான்கு இதயங்கள்) கமலாட்சி ஆறுமுகம் (ஊமை மனம்), மு. சு. குருசாமி (நெப்போலியன் காதலி, சுமைதாங்கி, காகிதப் பூ), இரா. பெருமாள் (இதய வாசல், மாயை, அல்லி மலர், வாலிபக் கிழவன்), சந்திர சேகர் (அந்த நதியில் இரண்டு மீன்கள்), த. மு. அன்மேரி (சந்தனத் திலகம்), எம். குமாரன் (செம்மண் ணும் நீல மலர்களும்), வி. கு. சந்திரசேகர் (பயணம்), காரைக் கிழார் (வண்ணத்துப் பூச்சி), மலைமாறன் (மணமாலை), ஏ. பி. சண்முகம் (நல்ல கதி) படைத்துளர்.

**நாடகம் :** ஜி. சி. இளங்கோ (சேரன் செங்குட்டுவன்), டி. என். வைத்தியநாதன், சி. வி. ஆறுமுகம், மணிராஜன், அ. தினகரன், சி. கோன், மெ. அறிவானந்தன், எஸ். எஸ். சர்மா, சே. வெ. சண்முகம், மு. பக்ருதீன் (இரத்தப் பேய்),

திருகிம் (உழைப்பின் பரிசு, மறுமணம், நல்ல முடிவு), தா. ஆ. செங்குட்டுவன் (ஆலமரம், காவியக் கண்கள், துன்பங்கள் உறங்குவதில்லை), இராமையா (கண்திறந்தது, பெண் உள்ளம், புதுவாழ்வு, மன்னிப்பு, வழிகாட்டி), ஆழி. அருள்தாசன் (உயிரோவியம், இணைந்த கரங்கள், கடாரம்), ப. சந்திர காந்தம், வைரக்கண்ணு, எலிசபெத், சந்திரா சண்முகம், பைரோஜி நாராயணன், மு. சேதுராமன் சுப. முத்தையா, ரெ. சண்முகம். கரு. திருவரசு, அன்வர், பழனியப்பன், நரசிம்மன், பரஞ்சோதி, ரெ. கார்த்திகேசு, கமலநாதன், இளமுருகு. அமரர் **ஆழி. அருள்தாசன் 'நாடகத் தந்தை'யாகத் திகழ்கிறார்.** கோலாலம்பூரில் கலைமன்றம் அமைத்துப் பல நாடகங்களை அரங்கேற்றியவர்.

**கட்டுரை :** அ. இராமநாதன், சி. ஆர். நரசிம்மராஜ், மா. செ. மாயதேவன், சுப. நாராயணன், ந. வரதராசன், சோம சன்மா, அ. சிதம்பரம், தில்லை, சே. வெ. சண்முகம், பெ. திரு நாவுக்கரசு, மு. தெ. மூர்த்தி, வி. ச. முத்தையா, சி. கமல நாதன், தமிழ்ச் செல்வன், தி. சு. சண்முகம், மருத இலக்கு மணன், கா. பொ. இரத்தினம், அ. சந்திரசேகரன், இராம இராமநாதன், கா. கலியபெருமாள். கட்டுரைத் துறை வளர வில்லை. ஒருவேளை சிறுகதை கவிதைகட்குப் பவுன் பரிசு போல இதற்கும் வைத்திருந்தால் வளர்ந்திருக்கலாமோ? உருவகக் கட்டுரைகளும் வந்தன.

**விமர்சனம் :** இர. ந. வீரப்பன், கார்த்திகேசு, வை. திரு நாவுக்கரசு, சா. ஆ. அன்பானந்தன், மா. செ. மாயத்தேவன், வி. கே. சுப்பிரமணியம், வி. பூபாலன் எனச் சிலரே.

**பெண் எழுத்தாளர்கள் :** ந. மகேசுவரி, சந்திரா சண்முகம், வ. தீனரட்சகி, எஸ். வில்வமலர், தெய்வயானை சந்திர காந்தம், ந. மு. தேவி, ருக்மணி முத்துக்கிருஷ்ணன், கமலாட்சி ஆறுமுகம், பூங்காவனம் ஜெகந்நாதன், அமிர்தம் சோம சன்மா, தேவிநாதன் சோமசன்மா, இந்திராணி முத்தையா, குமாரி கமல மீனா, நிர்மலா ராகவன், அன்னக்கிளி ராசையா, வளர்மதி.

**பிள்ளை எழுத்தாளர்கள் :** சோமசன்மா, முரசு நெடுமாறன், கவிமதிதாசன், சி. வேலுச்சுவாமி, வளர்மதி, பரிதி, (மு. கந்தன்).

**இதழ்கள் :** மலேசியத் தமிழ் இலக்கியம் என்றதும் அதன் வளர்ச்சிக்கு வித்திட்டு வாழ்வளிக்கும் இதழ்களே நினைவுக்கு

வரும். அப்படி அதன் வாழ்வில் இரண்டறக் கலந்தவை. தமிழ் நாட்டினும் இலக்கிய மலர்ச்சிக்குக் கரணியமாய் அமைகின்றன எனலாம். மூன்று நாளேடுகள் 'தமிழ்' எனத் தொடங்கிப் பற்றுப் போற்றுவன.

**தமிழ் நேசன்** : *1923.* ஆசிரியர் முருகு சுப்பிரமணியம். சிங்கப்பூர் மலேசியாவுக்கும் ஒரே பதிப்பு. 50 கதை வகுப்பு, 55இல் இலக்கிய வட்டம் (கு அழகிரிசாமி), நேசன் சிறுவர் அரங்கம், 62இல் சிறுகதைக்குப் 10, கவிதைக்கு 5 வெள்ளி சன்மானம், 72இல் பவுன் பரிசு, சிறுகதை கருத்தரங்கு போன்றன சாதனைகள்.

**தமிழ் முரசு** : 35ல் தமிழவேள் கோ. சாரங்கபாணி ஒரு காசு விலையில் துவங்கியது, மலேசியா சிங்கப்பூரில் தனித்தனிப் பதிப்பு. மலேசியா பொறுப்பர் எசு. தங்கையா, சிங்கையில் மெ. சிதம்பரம். 6-7-83 முதல் மாணவர் மணி மன்ற மலர், சிறுகதை கவிதைப் போட்டிகள், எழுத்தாளர் பேரவை, ரசனை வகுப்பு, தமிழர் திருநாள் போல்வன சாதனைகள். 57, 58 ஆண்டு மலர்கள் சிறந்தவை.

**தமிழ் மலர்** : *1963.* மலேசியா பதிப்பர் பி. எல். கே. ராஜன்; சிங்கை பதிப்பர், டி. செல்வ கணபதி. 'மலேசியாவில் தமிழ்க் கவிதையின் வளர்ச்சியும் புதுக் கவிதையின் தோற்றமும்' என்ற கட்டுரை பயனானது.

**சோலை** : இலக்கிய ஏடு. 52 சனவரியில் தொடங்கி 8 திங்களே இயன்றது. ஆசிரியர் கா. இராமநாதன் (65) தமிழக எழுத்தாளர்களே இடம் பெற்றனர். தி. ச. சண்முகம் பொறுப்பேற்றதும், மலையக எழுத்தாளர்கட்கு முதன்மை தந்தார். 'மலாய் படியுங்கள்' என்று முதன்முதல் நூல் வெளியிட்டவர். 'மலாயாவில் தமிழ் இலக்கியம்' என ஓர் அருமையான தலையங்கம் எழுதியிருந்தது. சிறுவர்கட்குத் தமிழிலக்கிய வாசனையை நுகர வழி வகுத்துத் தருவது, பெரியோர்கட்குப் பிரசார முறையில் வளர்ப்பது என இரு வகை ஆர்வத்திற்கு வித்திட்டது. இதன் விளைவே தமிழ் முரசில் மாணவர் மணி மலர்.

**திருமுகம்** : 55 அக்டோபர் கையெழுத்து ஏடாக மலர்ந்தது. திங்கள் இதழ். ஆசிரியர் மா. செ. மாயதேவன். 'ஒவ்வொரு திங்களும் ஓர் ஊர்' என்ற முறையில் 'எங்கள் ஊர்' என்ற தலைப்பில் அச்சு முதற் படி முதல் வந்தது.

**மலைமகள்:** பொறுப்பு கரு. இராமலிங்கம்; நடாத்தியவர் வி. ச. முத்தையா. 56 ஓராண்டே ஓடியது. அ. சிதம்பரம் தில்லை, பூ. முனியாண்டி தொடர்ந்து எழுதினர். 58 அக்டோபர் மீண்டும் ஜி. சி. இளங்கோ பொறுப்பில் வந்தது.

**மாணவர் பூங்கா:** மாணவர்கட்கென அமைந்தது. 56 மே யில் கையெழுத்து ஏடு, பின் அச்சுப்படி ஆனது. ஆசிரியர் மு. அப்துல் லத்தீப். 'இளமைப் பிராயத்திலே' குறிப்பிடத் தக்கது. **சங்கமணி** தொடர்ந்து வரும் வார ஏடு. ஒரு சிறு கதையைப் பலர் தொடர்ந்து எழுதும் புது வழியை முதலில் அறிமுகப்படுத்திய - உள்நாட்டவர் தொடர்கதைகளையே வெளியிட்ட இதழ்.

**மாதவி:** 59 ஏப். ஆசிரியர் ஐ. உலகநாதன். கவிதைக்கே முதலிடம். அறுசீர் விருத்தப் போட்டி வைத்தது. புதிய கவிஞர்களைப் போற்றியது. **பொன்னி** 29-4-65 முதல் வந்த மாதிகை. ஆசிரியர் பொன்னித் துறைவன், (ந. தியாகராசன்). பாவேந்தர் பரம்பரைக் கவிஞர்களையும், நல்ல திறனாய்வர் களையும் ஊக்கியது. 'எழுத்துலகம் ஏன் தேங்கிக் கிடந்தது' என்ற சர்ச்சை நடத்தியது. இலக்கிய ஏடுகளில் இதுவே நீண்ட பயணம் செய்தது. கடைசி இதழ் 69 நவம்பர் 76 செப். முதல் 'பருவம்' நடத்துகிறார். **முத்தமிழ்** 69 நவ-73 ஏப் ஆசிரியர் டி.வி. ராகவன். தமிழ்ச் சிறுகதைக்கு இலக்கணம் தேவையா? நூலாசிரியர்.

மலேய இதழ் வரலாறு ஒரு நூற்றாண்டையது. பினாங்கி லிருந்து மாதமிருமுறை ஏடாக 'தங்கைநேசன்' 1878இல் வந்தது. சிங்கை வர்த்தமானி 1876லேயே வெளிவந்ததாகத் தெரிகிறது.

**மலேயா தமிழ்ப் பண்ணை:** 1-2-1948. தோற்றுநர் இராமச் சந்திரபுரம் உ. அரு. அருணாசலம் செட்டியார் (1901—19-11-51). நோக்கம்: மலைநாட்டுத் தமிழர் தங்கள் தாய் மொழி பயில-பேண வசதி செய்தல், தமிழ்க் கலை பண்பாடு பேணல்; பல ஊர்களில் தமிழ் வகுப்புகளும் சொற்பொழிவு களும் நிகழ்த்தின. சிரம்பானில் தமிழ்க் கலை மாநாடுகள் நடத்தின. திருக்குறளை மலாய் மொழியில் பெயர்க்கச் செய்தது. மலாக்காவிலிருந்து 'தமிழ்க் கொடி' திங்களிருமுறை ஏடு வெளியிட்டது; திருவள்ளுவர் நூலகம் நிறுவியது.

அ.மு. பரமசிவானந்தம், அ.ச. ஞானசம்பந்தம் போன்றாரைத் தமிழகத்தினின்றும் தருவித்து இலக்கியச் சொற்பொழிவுப் பயணம் புரியச் செய்தது. 49 முதல் கலைவிழா கொண்டாடியது, வள்ளுவர் விழா நடாத்தியது. 59இல் மறைந்தது.

**மலேயாப் பல்கலைக் கழகத்தில் தமிழ்:** *1957.* பல்கலைக் கழகத்தில் இந்திய இயல் தொடங்க முடிவெடுக்கப்பட்டது. இந்திய அரசு அனுப்பிய கே.ஏ. நீலகண்ட சாத்திரி வடமொழியே அமையவேண்டும் என்றதை எதிர்த்துத் 'தமிழ் எங்கள் உயிர் இயக்கம் 6 திங்கள் ஒரு போராட்டம் நடாத்தித் தமிழே அரியணை ஏறச் செய்தது. இங்கு தமிழிலக்கியம் மொழியியல் தமிழிலும், தமிழ்மொழி பண்பாடு வரலாறு சமூகவியல் போன்றன மலாய் ஆங்கில வழியும் கற்பிக்கப்படுகின்றன. பல்லின மக்களும் தமிழ் தொடர்பானவற்றை அறிந்திட அருந்தொண்டாற்றி வருகிறது. இதனை ஒட்டிய தமிழ்ப் பேரவை ஆண்டுதோறும் '**தமிழ் ஒளி**' வெளியிடுகிறது.

**இராம சுப்பையா:** *1932—25-11-69.* வேகுப்பட்டி. கோலக் கஞ்சாரில் பள்ளி ஆசிரியராக அமர்ந்து பி.ஏ., எம்.ஏ. தேர்ந்தார். லண்டன் பல்கலைக் கழகத்தில் பேச்சுத் தமிழ் பற்றி ஆய்வு செய்து டாக்டர் பட்டம். 1. மலேயாவில் வெளியான இதழ்கள் நூல்கள் பற்றிய தொகுப்பு Tamil Malaysiana 2. 'கீழ்ப் பேராவில் தமிழ் மொழி வழக்கு' ஆய்வு திசை மொழி வரலாற்றில் ஒரு மைல் கல். 3. தொல்காப்பிய ஆங்கிலப் பெயர்ப்பு. 4. குயிற்பாட்டு ஆங்கில ஆக்கம் (67 தமிழ் ஒளி பக் 158-84). 5. நூறு குறுந்தொகைப்பாக்கள் ஆங்கிலத்தில். 6. பத்துப்பாட்டு ஆங்கிலத்தில். 7. மலாயிலிருந்து 'இக்காயட் ஸ்ரீராமா' ஆங்கிலத்தில். 8. மலாக்கா மன்னர்களின் வரலாறு மலாயிலிருந்து தமிழில். 9. மலேசியக் கவிஞர்களின் பாடல்களை ஆங்கிலப் படுத்தினார் Poetry Singapore ஏட்டில். 10. மலாய் மொழி இலக்கணம் ஓர் அறிமுகம். 11. முதல் உலகத் தமிழ் மாநாட்டு மொழி பெயர்ப்புச் செயலர், கண்காட்சித் தலைவர். தனிநாயகருக்குப் பின் துறைத் தலைவர்.

இவரின் இளவல் **எஸ். ஆர். எம். பழநியப்பன்:** *31-3-35.* 'விதியின் கரங்கள்' வானொலியிலும், 'உடன் பிறப்பு' தொலைக்காட்சியிலும் நாடகங்கள். மலைநாட்டுத் திருத்தலங்கள். பு.பெ. அப்பர் அடிப்பொடி, ஐங்கரனடிமை. **முகவரி:** Programme Executive Radio, TV, Malaysia.

**ஈ. ச. விசுவநாதன்:** *18-7-1933*. சென்னை. சென்னைப் பச்சையப்பன் கல்லூரி தமிழ் முதுகலை. மு வ வின் மாணவர். 65இல் A Critical analysis of Thiru. Vi. Kalyanasundaram's Works. மலேயா பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். வழங்கியன: ஆய்வுநெறி முறைகள் (முதலிய வந்த செறிவான பயன்மிகு நூல்). சீன மலாய்ப் பழமொழிகள், கட்டுரை மலர், இலக்கியச் சுவைகள், வான் கலந்த வாசகம் மலேயா பல்கலைக் கழகத்தில் தொடக்க முதல் பணியாற்றிய இவர் இது போது ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ்ப் பணி ஆற்றுகிறார்.

**இரா. தண்டாயுதம்:** *15-6-1939*. தர்மபுரி மாவட்ட பென்னாகரம். சென்னை பச்சையப்பன் கல்லூரி தமிழ் முதுகலை. மு.வ வின் அன்பு மாணவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் Study of Sociological novels in Tamil என ஆராய்ந்து 69இல் டாக்டர் பட்டம். 60 முதல் எழுதி வருகிறார்.

தற்கால இலக்கியத்தில் திளைத்தவர்-தேர்ந்தவர், தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள், தற்காலத் தமிழ் இலக்கியம் (75இல் சாகித்ய அகாதமி விருது); நாவல் வளம், தமிழ் நாவல்கள், மு வ.வின் இலக்கியங்கள், டாக்டர் மு.வ, ஆலய வழிபாட்டில் தமிழ், கோலங்கள் (புதுக்கவிதை), சுழிப்பு (சிறுகதை).

**வி தி(ருஞான)சம்பந்தம்:** *1919*. பேரா சுங்கை சிப்புட். அண்ணாமலையில் பட்டம் பெற்றவர். வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் ஈடுபட்டவர். முதல் உலகத் தமிழ் மாநாடு நடத்தியவர். 80000 உறுப்பினர். தேசிய நில நிதிக் கூட்டுறவு சங்கத் தலைவர். மலேசிய விடுதலைக்காக பிரிட்டனுடன் பேச்சு வார்த்தை நடத்தத் துங்குவுடன் சென்ற தலைவர். தொடர்புத் துறை அமைச்சராக இருந்தவர். 'கூட்டுறவுத் தந்தை' எனக் கொண்டாடப் படுபவர். காந்திய நெறியர். மலேசிய அரசின் உயரிய விருதான 'துன்' (தலைமகன்) பெற்றவர். அன்பு வழியினர். தமிழ், தமிழர் வாழ்வுக்காக ஓயாது உழைப்பவர். மலேசிய இந்தியர் காங்கிரஸ் தலைவர்.

**வீ (மீனாட்சி) சுந்தரம்:** *1916*. தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கப் பொருளர். காந்தீயர்; கதரே அணிவார். 'கள்ளை ஒழிப்போம் கல்வியை வளர்ப்போம்' எனக் குரல் கொடுத்து மது ஒழிப்பு இயக்கம் நடத்தியவர். 'மலை நாடு இதழ் 5 ஆண்டு நடத்தியவர். கட்டுரையாளர், சொற்பொழிவாளர். 63இல் மதுரை மீனாட்சியம்மன் கோவில் மகா கும்பாபிஷேகம்

கண்டு வந்து பயண நூல் படைத்தவர். மக்கள்-தமிழ்ப் பணி பாராட்டி குன்றக்குடி அடிகளார் 'அறம் வளர்க்கும் நம்பி' என்ற பட்டம் வழங்கினார். பேரா மாநில சமாதான நீதிபதி, மன்னர் விருது ஜே.எம்.என். பெற்றவர். தமிழ்ச் சீலர், பொன் மனச் செம்மல்.

**ஆர். எஸ். சிவம்:** சுப்பிட் தோட்ட நிர்வாகி. திருக்கோயில் பல (சுப்பிட் ஜோகூர்பாகு மகா மாரியம்மன், பெத்தோங் மண்டபம் போன்றன எழுப்பியவர். 'மலேசியத் தமிழ்' எழுத்தாளர்கள்' தொகுப்பினை வெளியிட்டுத் தந்தவர். தமிழ் எழுத்தாளர் சங்கப் புரவலர், அருட்செல்வர்.

**டத்தோ ஆதி. நாகப்பன்:** 192?—9-5-76. செட்டி நாடு சொக்க நாதபுரம். தந்தை ஆதினமளாகி செட்டியார். 45இல் பினாங்கு 'கேரிகா' நாளேட்டின் கூட்டாசிரியர். 'ஜெய்ஹிந்த்' வார ஏடு நடாத்தினார். 47-52 தமிழ்நேசன் ஆசிரியர்-53-57 இங்கிலாந்தில் சட்டம் பயின்று பாரிஸ்டர். 58இல் ம. இ. க. சிலாங்கூர் மாநிலத் தலைவர். பின் துணைத் தலைவர். லண்டன் தமிழ்ச் சங்கத் தலைவர் (55).

42 மலேசிய இந்திய சுதந்திரக் கழக முதற் செயலர். 48இல் முதல் பத்திரிகையாளர் தூதுக்குழுவில் ஒருவராக இங்கிலாந்து, 49இல் தாய்லாந்து சென்றார். சட்ட அமைச்சர். சிறந்த எழுத்தாளர். சிறுகதை, கட்டுரை, பயணம், மொழி பெயர்ப்புத் துறையில் வல்லார். ஏற்றமிகு சொற்பொழிவாளர் தேவர் சமூக ஜானகியை மணந்தார். இரு குழந்தைகள், அமைச்சரானதை ஒட்டிய பாராட்டுக் கூட்டத்தில் நன்றி நவிலும்போது மாரடைப்பால் மறைந்தார்.

**டான்ஸ்ரீ டத்தோ வெ. மாணிக்கவாசகம்:** மதுரை இந்திய காங்கிரஸ் தலைவர் வெங்கடாசலத்தின் மூத்த மகன். பிறந்தது மலேயா. நேதாஜி ராணுவத் தொடர்பு கொண்டவர். ம. இ. கா. உருவாகக் காரணர். 47 முதலாவது ஆசிய தலைவர்கள் மாநாட்டுப் பிரதிநிதி. முதல் பொதுத் தேர்தலில் சிலாங்கூர் சட்டமன்ற உறுப்பினர். 57இல் துணைப் பிரதமர் துன்ரசாக்குடன் நல்லெண்ணப் பயணம் புரிந்தவர். 58இல் ம. இ. கா. துணைத் தலைவர். 59இல் தொழிலாளர் ஆள் பல துணை அமைச்சர். ஐ. நா. பிரதிநிதி. 64ல் தொழிலாளர் அமைச்சர், 70இல் உலகத் தொழிலாளர் மன்றின் 54-வது பேரவைத் தலைவர். 3 மகன், 2 மகள். அமைச்சரவையில் இடைவிடாத தொண்டால் தமிழர் பெற்ற தகவு மிகுதி.

**வயி. சண்முகம் செட்டியார் :** 1913 நாச்சியாபுரம். சிங்கைத் தமிழரின் நலமும் மொழி வளமும் சிறக்கப் பணியாற்றிய பெரு மகன். சப்பான் அரசின்போது ஏற்பட்ட பஞ்சம் போக்க உண்டி உடை கொடுத்து உயிர் காத்த உத்தமர். நேதாஜிக்கு கார் சாரதியாய் இருந்தவர். இந்திய சுதந்திர சங்கத்தின் வழி செயற்கரிய ஆற்றியவர். அறப்பணி ஆற்றிய 'அருள் நெறிச் செல்வர்'. சிங்கைசெல் செந்தமிழ்ச் செல்வர் எவரும் இவ்ரின் விருந்தோம்பலில் விடுபட்டதில்லை. தமிழுக்கு இன்னல் நேர்ந்த போதெல்லாம் தமிழவேள் 'கோசா'வுடன் தோள் நின்று பணி புரிந்தவர். பல்கலைக் கழகக் தமிழ்த்துறை நிறுவப் பெருந்தொகை திரட்டித் தந்தவர். ஈத்துவக்கும் இன்பம் அறிந்தவர். தூய நற்றொண்டர். 50 ஆண்டுகள் அரும் பணி யாற்றித் தமிழகம் திரும்பியவர். நாச்சியாபுரத்தில் உயர் நிலைப் பள்ளி உருவாக்கியவர். இவருடன் இரட்டையராக இலங்கியவர் : **இராம. பெரியகருப்பன்** 7-9-1930 காரைக்குடி. சேந்தாணியார் வீடு. தந்தை இராமசாமி செட்டியார் பேரால் காரைக்குடியில் தமிழ்க் கல்லூரி கண்டவர். சிங்கைத் தமிழரின் சிந்தை நிறைந்தவர். தமிழறிஞர்களில் தக்கார்.

**மெ. திருநாவுக்கரசு :** 14-7-1923. புதுக்கோட்டை வேந்தன் பட்டி. மெய்யப்பன்க-ல்யாணி, பேராசிரியர் மெ சுந்தரத்தின் அண்ணன். சிதம்பரம் பச்சையப்பன் உ. ப, அண்ணாமலை தமிழ் எம். ஏ. 'திருக்குறள் பரப்பும் திருநாவுக்கரசு' என் றேத்தப்படுவர். சிங்கை வானொலி தொலைக்காட்சியில் பல் லாண்டு பணியாற்றி ஓய்வு. 81-84 சட்டமன்ற மொழி பெயர்ப் பாளர். பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையே தொடங்கப் பெற வேணும் என முதற் குரல் எழுப்பியவர்.

வானொலி நாடகங்கள், இலக்கிய உரைகள், குறள் விளக்கம், அறிவியல் கட்டுரைகள், வாழ்க்கை வரலாறுகள், இலக்கிய மடல்கள் இப்படி ஏராளம் எழுதியவர் துணைவி அரசு நர்ச்சம்மை ஆச்சி. மக்கள் : அரசு கலைச்செல்வி, நா. மெய்யப்பன், அரசு நாச்சியம்மை. தமிழகப் புலவர்குழு வெள்ளி விழாவில் பாராட்டிய தமிழ்ச் சான்றோருள் இவரும் ஒருவர்.

**வை. திருநாவுக்கரசு :** 1926. சேலம். சேலம் கல்லூரி மாணவர், மாவட்ட திராவிட மாணவர் கழகத் துணைத் தலைவர். 'பூந்தோட்டம்' இதழ் நடாத்தியவர். சேலம் தினத் தாள், திருச்சி தினத்தூது, சென்னை விடுதலையில் துணை ஆசிரியர்,

50இல் சிங்கை சென்றார். 51-58 தமிழ் முரசு துணை ஆசிரியர். 58 முதல் சிங்கையரசின் துணைத் தகவல் அலுவலர், மொழி பெயர்ப்பு மேற்பார்வையர். தமிழ்ப் பதிப்பர். கண்ணோட்டம் வார ஏடு, Mirror வார இதழ், சிங்கப்பூர் புலட்டின் திங்களிதழ் ஆசிரியர்.

பாவாணர் பற்றாளர். சேலங் கல்லூரியில் அவரிடம் பயின்றவர். தமிழரின் பொதுப்பணியில் ஈடுபட்டவர். அளப்பரிய தமிழ் உணர்வும், ஆழ்ந்த அன்புணர்வும் கொண்டவர். உலகத் தமிழ் மாநாட்டின் உறுதுணையர். சிங்கைத் தமிழைச் செழிக்கச் செய்தவர். அரசு விளம்பரங்கள் நல்ல தமிழில் அமையக் காரணர். பெரியாரிடம் பக்தி மிகக் கொண்டவர். சிங்கையில் இவரைத் தெரியாதோர் இரார். துணைவி கஸ்தூரி. மகன் மாணிக்கவாசகன்.

**ந. பழநிவேலு** : 20-8-1908. தஞ்சை மாவட்ட சிக்கல். 32இல் நவனீதம் இதழில் 'வலிமை' கவிதை மூலம் கவிதை உலகில் கால் வைத்தவர். பாவேந்தரின் பண்புத் தோழர். கவிதை: கவிதை மலர்கள், மலேசியத் தோற்றம், சாகுந்தலம் (கவிதை நாடகம்). சிறுகதை: காதற் கிளியும் தியாகக் குயிலும். நூற்றுக்கும் மேலான நாடகங்கள். துணைவி: சம்பூர்ணம்; மக்கள் 4+3. முதலில் பாகான் பாசிர் தோட்டக் கணக்கர், பின் தமிழாசிரியர், சிங்கை வானொலி இந்தியப் பகுதியில் பணியாற்றி ஓய்வு. **முகவரி**: 11 வது மாடி, பல அடுக்கு மாளிகை, தோபாயா.

**கா. பெருமாள்** : மூத்த கவிஞர். ஆயிரம் கவிதைகளும், காவியம், பாவிய நாடகங்கள் படைத்துளார். கருத்து வளமும் சொன்னலமும் கொண்ட கவிதைகள் கொட்டுபவர். சிங்கை வானொலியில் பணி. பு. பெ. கலாதாசன். **முகவரி** : கேமரன் மலை.

**சிங்கை முகிலன்** : (நா.அ. ரஹ்மான்) 1922. கும்பகோணம் பக்கல் சோழபுரம். 38இல் குடியரசு இதழில் கவிதை எழுதி எழுத்துலகப் பயணம் தொடங்கியவர். 16ஆம் வயதில் மலேயா வந்தவர். கவிதையும் கதையும் இவர் கண்கள். 'தகுதி' எனும் 'உருவகக்' கதையினை அண்ணா காஞ்சி இதழில் தம்பிக்கு பகுதியில் வெளியிட்டுள்ளார். மனித வாழ்வின் மேடு பள்ளங்களை விமர்சிப்பது 'மனிதச் சுவடு' கவித் தொகுதி. கருத்தைக் கதை போலச் சொல்லி அறநெறி கூறுவது. பிற: இதய மலர், இதய ஓசை, இந்திய தேசிய ராணுவ நினைவுச்

கீதம், தமிழ் ஒலிக் கீதம், திராவிட மணிக் கீதம், துடிக்கும் உள்ளம், உருவகக் கதைகள். சிறுவர் இலக்கியச் செம்மல் இவர்.

**சிங்கை சித்தன்** : (நைனாம் சாப்கி) 1927. நாகூர். தமிழ் முரசு பிழை களையும் பகுதியில் பணி. பாடல் புனைகிறார். தமிழ் நேசன் பவுன் பரிசு பெற்றவர். நாடகங்களும் படைக்கிறார்.

**ஏ. பி. சண்முகம்** : 1929. தமிழகம் குடந்தையடுத்த நாச்சியார்கோவில் ஆத்திக்குளம். தன்மான இயக்கத்தர். நாடகம், கட்டுரை, சிறுகதை வல்லார். தர்மகர்த்தா, பயணம், எழுத வந்தார் நாடகங்கள். செல்வி, நல்லகதி நாவல்கள். எது நாகரிகம் கட்டுரை. இவர் எழுத்தோவியங்கள் பரிசு பல பெற்றவை. கருத்து வளமும், நடை நளினமும், நகைச் சுவையும் மிக்க எழுத்தாளர். அடக்கமானவர் **முகவரி** : சிங்கப்பூர்.

**சே. வெ. சண்முகம்** : 1933. திருச்சி நெய்வாசல். வெள்ளச் சாமித் தேவர் : மீனாட்சி. 49இல் மதுரை நேதாஜி கிழமை இதழில் சிறுகதை எழுதி எழுத்துப் பணி தொடங்கியவர். 51ல் சிங்கை வந்தார். மனோகரன் இலக்கிய இதழில் துணையாசிரியராக இருந்தார். துறைமுகப் பணியாற்றி வருகிறார். நிறைய மேடை வானொலி நாடகங்கள் படைக்கிறார். கல்யாணமாம் கல்யாணம், அதுதான் ரகசியம். முழுநேர நகைச்சுவை நாடகங்கள் இவருக்குத் தண்ணீர் பட்ட பாடு. 'மீன் வாங்கலையோ' சிரிப்புக் கதைத் தொகுதி. கேலியும் கிண்டலும் கைவரப் பெற்றவர். வயிற்றெரிச்சல் கட்டுரைத் தொடர். துணைவி ருக்மணி, மக்கள் அறுவர். 'சிங்கை பெர்னாட்ஷா' என்போம். **முகவரி** : 316, எம். டி. பிளாக், பிளேயர் பிளையின், சிங்கப்பூர்-2.

**பெரி. நீல. பழனிவேலன்**: 1939. கோசிலாங்கூர் மாவட்ட சுமலை. வணிகர். 'கலைச் செல்வன்' என்ற பெயரே நாட்டறிந்த நற்பெயர். 300 சிறுகதைகள் 100 கட்டுரைகள் 70 வானொலி நாடகங்கள், 400 கவிதைகள்! வள்ளலாரிடம் விடுதலறியா விருப்பினர். நடிகர், பேச்சாளர்.

**புதுமைப்பித்தன்**: (நாராயணன்) 1939. ஜோகூர். 'மூன்று பிணங்கள்' 57 தமிழர் திருநாள் போட்டியில் எழுதி எழுத்துலகில் புகுந்தார். கீய்கீய்? குர்குர்! தமிழ் மலர் பரிசுக் கதை. நல்ல நாடகாசிரியர். அறிஞர் அண்ணா தலைமை யேற்ற சூடாமலர் நாடகத்தில் நடித்தும் பாடல் புனைந்தும் பாராட்டு

பெற்றவர் தி.மு க. பற்றாளர். 67இல் தமிழாசிரியை புஷ்ப வல்லியைச் சீர்திருத்தத் திருமணம் செய்து கொண்டவர். நாடகங்கள்: மறுமணம். விதவை, அருமை அண்ணா, சந்தேகம், அன்னையின் ஆணை, 60இல் நடந்த 'குறள் விழா' கூட்டுச் செயலராக அரும்பணியாற்றியவர்.

**இராம, கண்ணபிரான்:** தஞ்சை மாவட்ட அம்மாப்பேட்டை. சிங்கை ராபின்ஸ் பள்ளியில் பயின்று ரோசைத் பள்ளி ஆங்கில ஆசிரியர். பெற்றோர் ராமசாமி முதலியார்: மாரிமுத்தம்மாள். மனைவி ஜானகி; மக்கள் பூங்கொடி, பால்வண்ணன். முதற் கதை 'விசித்திர மாமனார்'. மூத்த பிள்ளை, இருண்ட வீடு முரசு பரிசும், இருபத்தைந்து ஆண்டுகள் நேசன் பவுன் பரிசும் பெற்றவை. சிறந்த கதைகள்: மனக்குகை, கனவினிலே, தீர்வு, அத்தான் என்னத்தான். துணைவியா? 'சிங்கப்பூரில் சிறு கதைகள்'. ஆய்வுக் கட்டுரை. சில கதைகள் மலாயில் வந்துள.

**சிங்கை சாந்தி:** (அமீர் அம்சா). வேளாங்கண்ணியிற் பிறந்து இங்கு பாதுகாப்புக் காவலர். கவிஞர், நாடகாசிரியர். துப்பறியும் நாடகங்கள் வல்லார், 800 கவிதைகள்,

**மா. இளங்கண்ணன்:** (பாலகிருஷ்ணன்). ஆனந்த விகடன் சிங்கப்பூர் சிறப்பு மலரில் (73) இவரது 1,000ரூ. பரிசு பெற்ற கதை இடம் பெற்றது. 150 கதைகள் படைத்துளார்-வழி பிறந்தது (தொகுதி). தூய தமிழில் ஆற்றி வருகிறார். உயரிய நோக்குடன் படைப்பவர். சிங்கை எழுத்தாளர் சங்கச் செயலர்.

இப்படி இலங்கைத் தமிழ், மலேசியத் தமிழ் என இரு தமிழ் கள் இன்றமிழ் அன்னையின் இரு கண்கள் போலே அமை கின்றன. தாயகமாம் தமிழகத்தின் இரு சிறகுகள் போலே ஈழ-மலை நாட்டுத் தமிழ் இலக்கியம் சீர்த்தி பெற்று வருவது சிந்திக்கத் தக்கது-வந்திக்கத் தகுவது.

ஆனால் இவ்விரு உடன் பிறப்புக்களும் நம் தமிழகத்திடம் கொண்ட பேரன்பும் தாய்த் தமிழிடம் காட்டும் பெருமதிப்பும் நாம் உணரவில்லை என்றே உரைக்க வேணும். இரு சுடர் களாம் இவர்களின் தமிழ் வளர்ச்சியை நாம் எண்ணுவதும் இல்லை, ஏறெடுத்துப் பார்ப்பதும் இல்லை! ஆனால் அவர்களே நம்மை வரவழைத்து வரவேற்றுத் தலைமேல் வைத்துக் கொண் டாடுகின்றனர். நாமே வரவழைக்காவிடினும் வரும்போதா வது வரவேற்றுப் போற்றுகின்றோமா என்றால் இல்லை யென்றே இயம்ப வேண்டியுளது!

ஏற்றுப் போற்றுவாரின்மையால் எழுத்தாளர் பலர் மங்குகின்றனர்; ஏற்ற பதிப்பகங்கள் இலாமையால் இவர்கள் எழுத்துக்கள் மடிகின்றன. மறைந்து வருகின்றன. இனியேனும் ஒப்புரவு செய்து இவர்களை இரு கரங்களாகக் கருதி இயன்றன புரிந்து ஏற்றம் புரியச் செய்வோமாக! ஏனெனில் இவர்களின்றி நம் இலக்கிய வரலாறு முழுமை பெறாது, நிறைவு எய்தாது.

**தமிழ் சமஸ்கிருதம் பிற இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனம்:** இதன் தோற்றத்திற்கு மூலகாரணர் சென்னை ஆளுநர் கே. கே. ஷா ஆவார். இந்திய மொழிகளின் தோற்றம் வளர்ச்சி நிலைகளை ஆராய வேண்டிய தேவை அதற்கென ஒரு நிலையத்தின் இன்றியமையாமையை அவர் செட்டிநாட்டரசர் முத்தைய வேளிடம் வற்புறுத்தினார். இதனை மதித்து ஏற்று ராஜா சர் அவர்கள் 2 லட்சம் வழங்கி அதனின்று வரும் 20000 வருமானம் கொண்டு நடத்தவகை செய்தார். அவரின் வெல்லிங்டன் அறக்கட்டளை சென்னை நகரின் நடுவே 6 கிரவுண்டு நிலம் வழங்கியது. அதில் டாக்டர் முத்தையா செட்டியார் 2 லட்சம் செலவில் ஓர் மாளிகை கட்டித் தந்தார். தொடங்கி வைத்தவர் இந்தியக் குடியரசுத் தலைவர் மேதகு பக்ருதின் அலி அகமது.

நோக்குகள்: 'மொழிகட்கிடையேயான உறவுகள் செல்வாக்குகள், திராவிட ஆரியக் குழு மொழிகளின் சொற்பிறப்பியல் ஆராய்வது. 2. இந்தியாவில் விளங்கும் பல்வேறு எழுத்து முறைகளைக் கல்வெட்டுச் சுவடிகள் மூலம் ஆராய்வது. 3. இரு மொழிகளின் கலைகளின் பொதுக் கருத்துக்களை வகுப்பதும் தொகுப்பதும், 4. பல்வேறு மொழிகளின் இலக்கிய சமய தத்துவ கலை மரபு முறைகளைக் கொண்டு இந்தியக் கலாசாரப் பண்பாட்டினைக் காண்பது. 5. பல்வேறு பல்கலைக் கழகங்கள் ஆய்வு நிறுவனங்கள் கூட்டுடன், பல்வேறு இந்திய மொழிகளினிடையே அமையும் செல்வாக்கினைச் சீரமைப்பது. 6. மேற்கண்ட குறிக்கோள்களை எட்ட, கருத்தரங்குகள், மாநாடுகள், வெளியீடுகள் நிகழ்த்துதல்.

இதன் தலைவர் மாநில ஆளுநர். ஆட்சிக் குழுவின் தலைவர் டாக்டர் எம்.ஏ., எம். இராமசாமி அவர்கள். தமிழகப் பல்கலைக் கழகங்களின் துணைவேந்தர்கள், கல்வியாளர்கள் உறுப்பினர்கள்.

எழுத்துரைகள் கருத்தரங்குகள் குறிப்பிடத்தக்கவை. அகராதி ஆய்வு, இந்திய முருகியல், தேசிய ஒருமைப்பாடு

உருவாக்குதல்; மொழியியல் கல்வெட்டியல், நாணயம், தொல் பொருள், மானிடவியல், தொன்மை வரலாறு போன்றவற்றின் ஒருங்கிணைப்பு மேற்கொள்ளப்படுகிறது. தேசிய உருவாக்கம் மொழிகளிடையேயான ஒற்றுமை புரிந்து போற்றுதல் மூலம் ஒப்பியல் ஆய்வியல் நிகழ்த்துகிறது. அரிய நூலகம் உளது.

அறிஞர் மு. அருணாசலம் இயக்குநராக இருந்தார். அடுத்து டாக்டர் ஆறு. அழகப்பன் ஆராய்ச்சி முனைவர் அரங்க சீனிவாசன் வடமொழி ஆய்வர் திருமதி. கே. கோமதி. 'தமிழ் சமக்கிருத மொழிகளில் நாட்டுப்புற இயல் கருத்தரங்கம் சொல்லாய்வுக் கூட்டங்கள், எழுத்துச் சீர்திருத்தம் போன்ற செயல்கள் குறிக்கத்தக்கன. நாட்டுப்பாடல்கள், குழந்தை இலக்கியம், பக்தி இயக்கம் போன்றன திட்டங்கள். **முகவரி:** 19, மார்சல் சாலை, எழும்பூர், சென்னை-8.

# செட்டிநாடும் தமிழும்

முகவை மாவட்ட தேவகோட்டை, சிவகங்கை; புதுக்கோட்டை மாவட்ட திருமெய்யம் கோட்டங்களில் உள்ள 96 ஊர்கள் கொண்டது செட்டி நாடு. ஒல்லையூர் நாடு, கானாடு, பூங்குன்ற நாடு, பறம்பு நாடு, மிழலைக் கூற்றம் என்ற பிரிவுகள் உள. செட்டு=சிக்கனம், செட்டு+ஆர்=செட்டியார். வணிகரில் சிறந்தோர்க்கு எட்டிப் பட்டமும் மோதிரமும் வழங்கப்பெற்றது; எட்டிதான் பின் செட்டி ஆனது என்பர். செட்டியார்கள் வாழும் நாடு செட்டி நாடு. சுந்தர பாண்டியன் விரும்பியாங்கு பூம்புகார் நகரினின்று வந்து நகரங்கள் அமைத்தவர்கள். எனவே நகரத்தார்!

தமிழோடு இரண்டறக் கலந்தவர்கள், இணையற்ற தொண்டாற்றியவர்கள். எங்கும் எதிலும் தங்கள் பங்கைத் தங்கத் தமிழுக்கு அளித்தவர்கள்; தமிழும் சைவமும் இரு கண்களாகக் கருதுகிறவர்கள்.

தமிழனின் தலைமணியாம் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற மணிவாசகத்தை அருளிய நாடு, கணியன் பூங்குன்றனாரைத் தந்த நாடு. அண்ணாமலையரசர், அழகப்பச் செட்டியார், கருமுத்து தியாகராச செட்டியார் போன்ற வள்ளல்களையும்; மு. ராகவையங்கார், பண்டிதமணி, வ. சுப. மாணிக்கம், தமிழண்ணல், லெ. ப. கரு. ராமநாதன் செட்டியார், சுப. அண்ணாமலை, மெ. சுந்தரம், ஆறு. அழகப்பன் போன்ற சான்றோர்களையும்; கண்ணதாசன், அழ. வள்ளியப்பா, மு. அண்ணாமலை போன்ற கவிஞர்களையும்; வை. கோவிந்தன், சின்ன அண்ணாமலை, முல்லை முத்தையா போன்ற பதிப்பர்களையும்; பாரி செல்லப்பன், வானதி திருநாவுக்கரசு, பழனியப்பா சகோதரர்கள், வி. ஆர். எம். செட்டியார், இன்பநிலைய சோமசுவாமிநாதன், பாரதி பழ. சிதம்பரம், செல்வி வீர. சிவராமன், அருணோதயம், அருணாசலம், மீனாட்சி செல்லப்பன்

மணிவாசகர் மெய்யப்பன், திருமகள் இராமநாதன், வானதி திருநாவுக்கரசு, புத்தகப் பூங்கா பஞ்சநாதன் போன்ற வெளி யீட்டாளர்களும், எஸ். ஏ. பி அண்ணாமலை, தமிழ்வாணன் போன்ற புதினப்படைப்பாளர்களும்; பயண இலக்கியப் பெருவேந்தர்கள் ஏ. கே. செட்டியார், சோமலெ; தமிழ்நாடு, ஊழியன், குமரன், பொன்னி, காதல், குமுதம், கல்கண்டு போன்ற இதழ்களும் எனத் தமிழுக்குப் பெருமை சேர்த் தோரைப் பட்டியலிடலாம்.

குழந்தை இலக்கியமா, பயண இலக்கியமா, நாட்டுப்புற இலக்கியமா (தாலாட்டு, ஒப்பாரி), இதழியலா, பதிப்புத் துறையா, நூல் வெளியீடா, கல்வியா, கோவில்களா, சத்திரம் சாவடியா, அறமா, அருட்செயலா - எத்துறையிலும் செட்டி நாடே முதன்மை வகிக்கிறது.

கம்பன் சமாதி நாட்டரசன் கோட்டையிலே; கம்பன் கழகம் காரைக்குடியிலே. செட்டிநாட்டு விருந்தோம்பலுக்கு ஈடு இணை இல்லை. நகரத்தார் எங்கெங்கு செல்லினும் தொழிலுக்குரிய வணிகத்தோடு, தொண்டுக்குரிய தமிழையும் தவறாது மறவாது பேணிப்புரந்து போற்றி வளர்த்து வருவது கண்கூடு-கடல் கடந்த நாடுகளிலும்!

இப்படிச் 'செட்டி நாடின்றிச் செந்தமிழ் இல்லை' எனச் செப்பும் அளவிற்குத் தமிழின் துறை தோறும் தங்கள் கைவண்ணம் காட்டியுள்ளனர். மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, ரா. ராகவையங்கார், ஐயன் பெருமாள் கோனார் போன்ற புலவர்களையும்; பாரதிதாசன் முடியரசன், நாமக்கல்லார், கவிமணி, பாரதி போன்ற கவிஞர் களையும் கண்போல் காத்துப் பொன்போல் போற்றியுள்ளனர். மறைந்து வந்த தமிழிசையைக் காத்து மலரச் செய்த வர்களன்றோ?

இவ்வண்ணம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் கடவுளே போலே, கன்னித்தமிழின் காவலர்களாக-பாவலர்களாக-புலவர் களாக - புரவலர்களாகப் பொலிந்து, கண்ணை இமையிரண்டும் காப்பதுபோல, சைவத்தையும் செந்தமிழையும் வண்ணமுற வளர்த்து வாழ்வித்துள்ளனர். இதற்கு நாம் எழுமையும் நன்றி பாராட்டுதல் வேண்டும். 'செட்டிநாடும் செந்தமிழும்' என்ற சோமலெயின் சொற்கோயிலில் நுழைந்துவரின் குழைந்து

போவோம். தமிழ் வரலாறாயினும் தமிழர் வரலாறாயினும் தமிழக வரலாறாயினும் அனைத்தும் செட்டிநாட்டு வாழ்வின் வண்ணமாக அமைகிறது எனத் தயங்காது கூறலாம். செந்தமிழ் வளர்த்த செட்டிநாடு வாழ்க, வளர்க என வாழ்த்தி வணங்குவாம்.

**சே. கிருட்டிணமாச்சாரியார் :** *1863—1926.* திருக்கழுக் குன்றத்தையடுத்த ஒரகடம். தந்தை இராமஐயங்கார். மாடபூசி கோவீந்தாச்சாரியார், புன்னை மாடபூசி சீநிவாசாச்சாரியர் களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களும் தந்தையிடம் வைணவ நூல்களையும் கற்றுத்தேர்ந்தார். வை. மு. சடகோபராமானுசா சாரியருடன் இணைந்து 1890முதல் பாடப் புத்தகங்கட்கு 30 ஆண்டுகட்கு மேல் உரை எழுதினார். 93-1916வரை ராயப் பேட்டை வெஸ்லி கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர். 10இல் வை. மு. ச. திருநாட்டுக்கு எழுந்தருளவே, வை. மு. கோ. துணைகொண்டு 23 வரை உரையெழுதும் பணிபுரிந்தார். 1896இல் நன்னூல் புதிய காண்டிகை உரையும், அட்டப் பிரபந்தம், குறள், நாலடி, கம்பராமாயணம், வில்லி பாரதங் கட்கு உரை வரைந்தார். 63ம் அகவையில் மறைந்தார்.

**வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் :** 22-10-1882—26-8-1956. ஆழ்வார் திருநகரியினின்று போந்த 'வைத்தமாநிதி முடும்பையர்' மரபினில் வந்த உத்தமக்குரிசில். பேயாழ்வார் அவதரித்த திருவல்லிக்கேணியில் அவரது அவதார நாளில் பிறந்தவர். வேதமும் வடமொழியும் கற்பித்தவர்கள்: காவ்ய பூஷணம் அத்தங்கி குமார தாதாசாரியார், அரசானி பாலை சேஷாசாரியார், தெய்வசிகாமணி ராமானுஜாசாரியார், சேட்லூர் கிருஷ்ணமாசாரியார், இவரைத் தமிழ்ப் பணிக்கே உரித்தாக்கிய பெருமையர். தமையன் முறையான உ. வே. சடகோப ராமானுஜாச்சாரியார். தந்தை வை. மு. பார்த்த சாரதி ஐயங்கார்.

1902 முதல் தமிழாசிரியப் பணி மேற்கொண்டார். திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில். 1916—36 வரை சென்னை அரசும் - பல்கலைக் கழகமும் இணைந்து உருவாக்கிய 'தமிழ் லெக்சிகன்' குழுவில் இருமொழிப் புலமை யாளராக இலங்கி ஓய்வு பெற்றார்.

தம் ஆசிரியர்கள் (பெரியதந்தையின் மகன்) வை. மு. சடகோப ராமானுஜாச்சாரியார், சே. கிருஷ்ணமாச்சாரியர் இருவரும் பலகாலமாக ஆற்றிவந்த உரையெழுதும் பணியை

முழுதும் ஏற்கும் பொறுப்பு 1920இல் வாய்த்தது. அன்று தொட்டுத் திருநாட்டுக்கு எழுந்தருளும் வரை அரும்பெரும் நூல்கட்கெல்லாம் அரிய பெரிய உரைகளைத் தமிழ் கூறு நல்லுலகிற்கு நல்கிக் கொண்டே இருந்தார். வேத வியாகரண விற்பன்னர்.

இன்றமிழின் இரு பெரும் இதிகாசங்களான கம்ப ராமாயணம், வில்லிபாரதம் இரண்டிற்கும் முழுவதும் உரை வரைந்துள்ளார். பத்துப் பாட்டுக்கு ஆராய்ச்சியுரை அளித்தார். இரட்டைக் காப்பியங்கள் சில பகுதிகட்கு உரைதந்துளார் பரிமேலழகர் உரைக்குக் குறிப்புரையுடன் திருக்குறளைப் பதிப்பித்துள்ளார். அட்டப் பிரபந்த நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பகுதிகள், பகவத் விஷயம் போன்றன பிற.

ஒருவர் தம் வாழ்நாளில் இவ்வளவு எழுத முடியுமா என வியக்கும் வண்ணம் உளது இவரது சாதனை. வைணவரே யாயினும் சைவ, சமண, கிருத்துவ, இசுலாமிய நூல்களின் உரைகளைக் காணும்போது வைணவம் மறந்து அவ்வச்சமய மரபில் ஊன்றி நின்று உரை செய்துள்ளமை உவக்குமாறுளது. 'வியாசாவதாரங்களில் ஒருவர்' (ராஜாஜி). 50 ஆண்டுக்காலம் உரை எழுதி வழிகாட்டிய 'உரையாசிரியச் சக்கரவர்த்தி'. மனைவி பெயர் ஸ்ரீரங்கம்மாள். மகன் வை. மு. நரசிம்மன்; நவீன சிற்பக்கலை நிபுணர்; தென்னகத் தொல் சிற்ப கலைக்குச் சீரிய தொண்டாற்றி வருகிறார். **தொடர்புக்கு:** 17, தெளி சிங்கப் பெருமாள் கோயில் தெரு, சென்னை-5.

**த. சரவணத் தமிழன் :** தஞ்சை மாவட்ட சாலியமங்கலத்தை யடுத்த காந்தாவனம்: தந்தை தங்கையன். கரந்தைப் புலவர் கல்லூரி மாணவர். திருவாரூரையடுத்த உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர். ஆரூரில் இயற்றமிழ்ப் பயிற்றகம் வைத்து வண்டமிழ்த் தொண்டாற்றுகிறார். பகுத்தறிவார்ந்த பைந்தமிழாசான். தூய் தமிழ் துலக்கும் தொண்டர். இலக்கண வளமையும் ஊக்கி உருவாக்கும் நோக்கும் உடையவர். பாவாணர் பாசறையினர்.

பைந்தமிழின் ஐந்திலக்கணத்தை இந்நூற்றாண்டிற்கேற்ப நன்மாற்றஞ் செய்யும் நாட்டத்தோடு, எழுத்து, சொல் இரண்டின் இயல்பினைத் **தமிழ் நூல்** வழி விளக்கி, பாட்டிலக்கணத்தைப் புதுக்கும் நோக்கில் **யாப்பு நூல்** இயற்றியுள்ளார்.

முதுமையானோரின் இளமை வளமை காட்ட 'பிள்ளைத் தமிழ்' படைத்தது போல், இளமையில் மறைந்தோர் இருந் திருப்பின் எப்படி வாழ்ந்திருப்பர் எனக் காட்ட 'முதுமைத் தமிழ்' எனும் புதுமைத் தமிழ் அறிமுகம் செய்துளார்; இதற் கிலக்கியம் மருத்துவர் மறையரசரின் 'பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் முதுமைத் தமிழ்'. புதுக்கவிதைக்கும் திரைக் கவிதைக்கும், 'புதுப் பா', 'திரைப்பா' என இலக்கணம் வகுத் துள்ளார். இப்படி காலத்திற்குரிய இலக்கணம் யாக்கப் பெறாக்குறை போக்க இவர் இலக்கணம் வகுத்துள்ளமை, துணிந்து போற்றத் தகும். உரையும் தாமே வரைந்துளார். புலமையின் தலைமையும், சிந்தனைச் செறிவும் கொண்டு சீர்பெற அறிவியல் பார்வையில் அமைத்துளார்.

பிற பனுவல்கள் : ஓரிலக்கணப் புலவனின் பாவிலக்கியப் பலகணி, அணிநூல், அருந்தமிழ் அகர வரிசை, அகப்பாட்டு வாய்பாடு, திருக்குறள் திறனாய்வு, சிலம்பிற் சிலபரல் **முகவரி:** இயற்றமிழ்ப் பயிற்றகம். 19, பெருமாள் கோயில் கீழவீதி, மடப்புரம், திருவாரூர்-610 002.

# புதுவையும் தமிழும்

புதுச்சேரி, காரைக்கால், ஏனம் (ஆந்திரா), மாஹே (கேரளம்) நான்கையும் நிலைபெறக் கொண்டது புதுவை. முன்னவை இரண்டுமே முத்தமிழ் வழங்கும் பகுதி. 1673இல் பிரெஞ்சு வணிகக் குழுவின்கீழ் வந்தது; 93இல் டச்சுக்காரர்கள் கைப்பற்றி, 98இல் பிரெஞ்சு ஆட்சியின் கீழ் வந்தது. 1739இல் தஞ்சை மன்னரிடமிருந்து காரைக்காலைப் பெற்றனர். சூன் 48இல் விடுதலை பெற்றது, 1-11-54இல் இந்தியாவுடன் இணைந்தது.

காரைக்கால் அம்மையார் (6ஆம் நூற்.), ஆனந்த ரங்கம் பிள்ளை (1709-61) நாட்குறிப்பு (6-9-1736—12-1-61) இரு பெருஞ் சுடர்கள். அரவிந்தரின் ஆன்மீகம், வ. வே. சு. ஐயரின் புரட்சி புடம் போடப்பட்ட இடம். புரட்சியாளரின் புகலிடம். பாரதியாரின் பெருங் கவிதைகள் பிறந்த பூமி. பாரதிதாசன், வாணிதாசன் பிறந்த மண். தமிழ் வளர்க்கும் தாலாட்டுப் பண்ணை. செந்தமிழ்த் தென் புதுவை.

திருமலைராயனின் அவைப் புலவர் அதிமதுர கவி, விலக்ஷண கவி ஏ. வே. இராமானுஜ நாவலர், (26 புராணங்கள், சவரிராயலு நாயகர், பு. அ. பெரியசாமிப் பிள்ளை (புதுவைக் கலம்பகம்), சி. பங்காரு பத்தர், சிவராயலு நாயகர், மதுரகவி நடராச ஆசாரியார் (தோத்திரப் பனுவல்கள் 20), குஹா இராஜமாணிக்கம் பிள்ளை (அன்பு விடுதூது) போன்றார் நினைவுகூரத் தக்கோர். இவர்கள் பெரிதும் இறைமை நூல்களை - சிற்றிலக்கிய வகைகளை வடித்துள்ளர். இவர்களின் தனிக்கொடையாக வாசகப்பாவை சுட்டலாம்;

செய்யுள் நாடக அமைப்பினது; நடித்தற்குரியது. பாரதி, பாவேந்தர், வாணிதாசன் பற்றிக் கவிஞர் தலைப்பில் காண்க.

**பாரதியார்**: *1908* செப்.—18 திசம்பர் பத்தாண்டுகள் புதுவையில் வதிந்தார். அரசியல் துறையினின்று ஓரளவு விலகிப் பேரளவு இலக்கியம் படைத்த காலக் கட்டம். தேசிய தெய்வீகப் பாடல்கள் தவிர, பிற படைப்புகள் யாவும் இங்கே தான் நிகழ்ந்தன. 'பாரதியாருடைய கவிதையும் உரைநடையும் புதுச்சேரியில் மெருகேறிப் பூரண முதிர்ச்சியடைந்தன என்று பொதுவாகக் கூறலாம்' (பெ. தூரன். பாரதி தமிழ் ப. 36). அரசியலுக்கு வ. வே. சு. அய்யர், ஆன்மீகத்துக்கு அரவிந்தர் இவரின் இரு கண்களாக அமைந்து ஊக்கினர்.

பாரதி-பாவேந்தர்-வாணிதாசன் மூவரால் முறுவலிக்கப்பட்டு மறுமலர்ச்சிக் கவிஞர்களாக மலர்ந்தோர்:

**தமிழவேள்**: (கிருட்டிண ராசு) சிறந்த கவிஞர். கவியரங்கிலும் வானொலியிலும் கவிதைகள் ஒலிக்கும். சித்திரைச் செல்வி புத்தாண்டுப் புகழ் பாடுவன. 'கம்பன் கவியரங்கில், கம்பன் விழாவில் கதைத்தவை, கவிதையும் காவியமும், குழந்தை விருந்து, சின்ன பாப்பா, வீழ்ச்சி, வாழும் கதைகள். வள்ளலார் வாழ்க்கை இவர் படைத்தவை.

**வெங்கடேசன்**; கவிதைப் பொழில், காதற்சுவை, குருதிக் கொடை, சிதையாச் சிலைகள், தமிழ்க் கனிகள் (இயற்கை சமுதாயம்), மழலைத் தேன், முத்துப்பாவை, யார் குற்றவாளி, வறுமைப் புயல் போன்றன வழங்கியுள்ளார்.

**சு.குமாரசாமி செட்டியார்**: வீ. துரைசாமி முதலியாரின் மாணவர். நால்வகைப் பா - பாவினத்தில் பாபுனையும் ஆற்றலர். புதுவை மாநிலத்திலேயே முதன் முதல் வித்துவான் பட்டம் பெற்றவர்! நூல்கள்: மயிலம் முருகக் கடவுள் தோத்திரப் பாக்கள், பதிகம், இலக்கியப் பரிசு, சுந்தரகுமரன் (புனை பெயர்) செந்தமிழ்.

**ச. சிவப்பிரகாசம்**; பாராளுமன்ற உறுப்பினராக இருந்தவர். தமிழாசிரியர், ஈ.வெ. ராவின் சீர்திருத்தக் கருத்துக்

களை விளக்கும் 'பெரியார் பெருந்தொண்டு', பூதப் பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு - புறப்பாடலின் விளக்கமாகக் 'கைம்மை வெறுத்த காரிகை', 'மறுமலர்ச்சிக் கவிதைகள்' இவர் படைத்தன. உருக்கமாகப் பேசும் பேச்சாளர்.

**முத வேலாயுதனார்**: 27-4-1905. பாவேந்தரிடம் பயின்றவர். வழங்கியன, வள்ளுவர் கண்ட நாடு, ரூஸ்ஸோ, பிரெஞ்சு தேச சரித்திரம், பண்டைய வரலாறு, புதுமைமிகு புதுவை, வையம் புகழ் புதுவை, புதுவையும் மணக்குள விநாயகரும், ஈசுப் நீதிக் கதைகள், ஆன்மீகக் கட்டுரைகள், மகான் அரவிந்தர், டாக்டர் அன்னி பெசன்ட், இலக்கணக் கொத்து, செய்யுட் கொத்து. திருமூலர் மணிவாசகருடன் அரவிந்தரை ஒப்பிட்டு எழுதிய கட்டுரை அற்புதம்.

**ப. சுந்தரவேலனார்** : பன்மொழிப் புலவர். கல்லூரி ஆசிரியர். 5-3-1945 முதல் '**வெண்ணிலா**' இலக்கியத் திங்கள் இதழ் நடாத்தினார். நாவலர் பாரதியார் 'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி' ஆய்வுரை வழங்கி வந்தார். **தமிழ்ச் செல்வி** திங்களிதழ் ஆசிரியராக இருந்தார்; உரிமையர் திவ்வி. சந்தன சாமி. முகப்பில் தமிழறிஞர் படமும் உள்ளே அவர்தம் வாழ்வு பணிபற்றிய கட்டுரையும் வரும். **முகவரி** : வாய்க்கால் தெரு, புதுவை.

**திருமேனி நாகராசன்** : 3-9-1941. காரைக்கால். திருமேனி : வேதவல்லி. புதினக் கல்லூரியிற் பயின்றவர். பண்டிதர், புலவர் பட்டம் பெற்றவர். தமிழாசிரியர் பி. லிட்,. எம். ஏ. முதற் கட்டுரை 65இல். சேனாவரையர் செய்த தவறு, தென்மொழியில். நூல்கள் : அம்பகரத்தூர்த் தலபுராணம், கந்தன் குடித் தல வரலாறு, தென்குடி மாரியம்மன் பதிகம், சித்திவிநாயகர் செங்கம்மா, காளியம்மன் புராண வரலாறு, ஆய்வுத் துளிகள், இலக்கியக் கனிகள். காரைக்கால் கடற்கரைப் பாடல்கள் (நாட்டுப் பாடல் தொகுப்பு), அருள்மிகு ஆயிரங் காளியம்மன் வரலாறு. மொழிப் பற்றும் நாட்டுப் பற்றும் உயிரும் உடம்புமாகக் கொண்டவர். பிழைப்புக்காக எழுதாமல் இலட்சியத்துக்காக எழுதுபவர். மதுரைப் பாண்டித்துரைத் தேவர் பைந்தமிழ்ப் பேரவை 'இலக்கியத் தென்றல்' என்ற பட்டம் 80இல் தந்து பெருமைப் படுத்திற்று. **முகவரி** : 6, வரவு குட்டை வீதி, காரைக்கால்-609 602.

**ரா. தேசிகம் பிள்ளை:** *23-3-1898.* புதுச்சேரி. ஆனந்த ரங்கம் பிள்ளை, ஸ்ரீ வேதாந்த தேசிகர் (இரண்டும் வாழ்க்கை) பிரெஞ்சில் பெயர்த்தவை: ஆண்டாள் திருப்பாவை, சரஸ்வதி அந்தாதி, சகலகலாவல்லி மாலை, திருவிளையாடற் புராணம், காஞ்சிப் புராணம், கந்த புராணம். பிரெஞ்சிலிருந்து நீதி வர்மன், வரலாற்றில் புதுவை (ழுவோ தூப்ரேய் எழுதிய அரிக்கமேடு அகழ்வாராய்ச்சி பற்றியது). வரலாற்று நூல் 'தமிழகமும் பிரெஞ்சுக்காரரும், புதுவை எல்லையம்மன் கோயில், வைணவர், யாதவர். 'கல்விக் கழகம்' தோற்றித் தமிழ் வளர்த்தவர், வெள்ளி விழாவும் கொண்டாடியவர். **மேலும் அறிய:** 'கோவிந்த நிலையம்' 25 சான்றோர் (வ. உ. சி. வீதி), புதுச்சேரி.

புதுவை வரதப்பன் (அசோகன் இழந்த அருந்தனம், மேனாட்டார் கண்ட தமிழகம்); ஜெய நாராயணக் கண்ணன் (ஞானபூமி-32 சுவாமிகள் பற்றியது); ஜீவி (புதுச்சேரியின் தல வரலாறு); சிவம் (தமிழிசைப் பாடல்கள் இந்தி மறுப்புப் பாடல்கள், சீர்திருத்தக் கவிதைகள்); சொ. சிதம்பரம் (பிரெஞ்சு இந்தியாவை எதிர்த்த முதற் கவிஞர், புதுமைப் பாடல்கள், புரட்சிப் பாடல்கள், விடுதலைப் பாடல்கள் பாடியவர்), இரா. அரங்கநாதன் (அழகு, கனவுகள், பூமாலை; சுப்பிர மணியன் (காதல் நெஞ்சம்); பா. முத்து (இயற்கை இன்பம்); பரிதி ஆர். வெங்கடேசன் (சிறுவர் சோலை, நேருவின் மறைவு குறித்துப் பத்துப் பாடல்கள்; வில்லுப்பாட்டில் வல்லவர்); அன்பு நிலவன் (கலைநிலவு); ஆரிப்மியான் (நாயகத் தமிழ்), சீனு. அரிகிருட்டிணன் (வெண்தாடி வேந்தர், பாடற் பறவைகள்), கல்லாடன் (தேன்மொழி-குறுங்காவியம் 3); பழநி (புதுக் கவிதை-பசி எங்கள் உணவு). சு. தில்லைவனம் (புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி) போன்றார் குறிக்கத் தக்கோர்.

சுந்தரசண்முகனார், பாகூர் குப்புசாமி, வேங்கடேசன், மன்னர் மன்னன், பி.எல். சாமி போன்றார் பற்றி முறையே 792, 1407, 1408, 1451, 1334 பக்கங்களில் கண்டுகொள்க. இசுலாமியப் பகுதியில் இறையடியான், சாயபு மரைக்காயர் பற்றி அறியலாம்.

**அரிமதி தென்னகன்:** (அ. நாமதேவன்) *12-3-34* திண்டிவனம். மயிலம் கல்லூரி மாணவர். பாகூர், அரியாங்குப்பம்,

இலாசுப் பேட்டைப் பள்ளிகளில் பணியாற்றி இதுபோது வயது வந்தோர் கல்வித் துறைத் திட்ட அலுவலராக அமைந்துள்ளார். சமுதாயத் தீமைகள் சாதி மற்றும் மடமைகள் களையும் கருத்தினர். 'அன்புக்குப் பாடி' எனும் அடைமொழி பெற்ற கவிஞர். 'புலவரேறு, உணர்ச்சிக் கவிஞர், தமிழ்க் கனல்' எனும் பட்டங்கள் பெற்றவர்.

அளித்தவை; கலைஞர் கோவை, ஐந்திணை வெண்பா ஐம்பது. ஆனந்தரங்கன் பிள்ளைத் தமிழ், கள்ளிப்பூ (காவியம்), மறத்தி, முகில் விடு தூது, தாமரை, தமிழ்க் கனல், அமுதன் தாலாட்டு, புரட்சி மழலைப் பூக்கள், அரிமதி அந்தாதி, அழகோவியம், தென்னன் என் தோழன், ஈழப் புலி ஆற்றுப் படை, ஊதுகிறேன் சங்கு, அக்கினிக் குஞ்சு. புதுவைப் புகழ்ப் பாக்கள், கண்ணீர், தரையில் உறைந்த முத்துக்கள். பாரதீயம்.
**முகவரி:** 22அ, வெள்ளாளத் தெரு, புதுவை-1.

**ம. லெனின் தங்கப்பா:** 8-3-34. நெல்லை மாவட்ட குறும்பலாப்பேரி தாகூர் கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். கொள்கை: வாழ்வைப் புரிந்துகொள்ள முயலுதல், நல்லவனாக வாழ்தல், வாழ்வை அழகுடையதாக ஆக்குதல். உண்மை தேடல், இயன்றவரை பிறர் தம் வாழ்வு மலர்ச்சிக்குத் துணை புரிதல். உண்மையும் தூய்மையும் இரு கால்களாகக் கொண்ட சால்பினார். எனவே உலகியல் அளவு கோல்களால் இவரை அளப்பின், வேறுபட்டே நிற்பார். தமிழ் ஆங்கிலம் வல்லார்; எனவே இலக்கியப் பரிமாற்றம் எளிதே கைவந்தவர். தமக்கென வாழாத் தகையாளர். பண்பாட்டுத் தோழர். தனித்தமிழ்த் தாளாளர். ஒப்புரவாளர் மரபுக்கவிஞர்.

Hues & Harmonies from An ancient Land (கழக இலக்கியப் பாக்களின் ஆங்கில ஆக்கம்). எங்கள் வீட்டுச் செய்கள் (குழந்தைக்கானது), பாடுகின்றேன் (மனவுணர்வுப் பாட்டு), பாடல்கள் அல்ல, மலைநாட்டு மலர்கள் (சோவியத்துப் பாவலர் இரசூல் கம்சதாவின் பாடல்களின் தமிழாக்கம்), தேடுகிறேன். ஆந்தைப் பாட்டு (கதைபொதி நீள்பாட்டு) The songs of Grace (திருவருட்பா ஆங்கில உரையாக்கம்). குறுந்தொகையினை ஆங்கிலத்தில் ஆக்கியுள்ளார்.

தூய நற்றமிழ்ப் பணியாளர். இனிய சிந்தனையாளர். இவர் உணர்ந்து தெளிந்த எண்ணச் சிதறல் ஒரு சில: 'நாம் அனைவரும் புடவிப் படைப்பின் சிறுசிறு கூறுகளே; புடவிப் படைப்பு ஒழுங்கில் நிலைபெறுவது; ஆதலின் நம் வாழ்க்கையும் அவ்வொழுங்கின் கூறாக நிற்றல் வேண்டும். நம்முள் அன்பும் நட்பும் நிலவும் பொழுதுதான், வாழ்க்கை அவ்வொழுங்கின் கூறாகி, அழகும் உயர்வும் உடையதாகின்றது'; 'அன்பென்பது, உள்நோக்கமோ பயனோ கருதித் தொடங்கப் படுவதன்று; அது வாழ்வின் அழகுகளுள் ஒன்று'; 'வினை, வாழ்வுக்கு இன்றியமையாதது; அன்பினின்றுதான் அது பிறத்தல் வேண்டும். பயன் கருதி மேற்கொள்ளப்படின் அது போலியேயாகும்; அன்பினின்றும் பிறவா வினைகள் யாவும் போலி வினைகளே.' **முகவரி:** 35, அவ்வை நகர், புதுவை-8.

**தேவமைந்தன்:** (அ. பசுபதி) 11-3-48. கோவை. பெ.க. அண்ணன்: தெய்வயானை, பு.சா.சோ. கலைக் கல்லூரி மாணவர். தனித் தமிழ் போற்ற-தமிழை எல்லா நிலையிலும் வளர்க்கப் பாடுபடும் துடிப்பினர். தாகூர் கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். உளவியல் ஊற்றம் சான்றவர். தந்தவை: உங்கள் தெருவில் ஒரு பாடகன், புல்வெளி, காதல் வாழ்க்கை, கற்பனைச் சிறகு, சிந்தனை வெளிச்சங்கள். மரபும் புதிதும் படைக்கும் இரு நெறிப்பாவலர். **முகவரி:** எச் 3, அரசுக் குடியிருப்பு, இலாசுப் பேட்டை, புதுவை-8.

**பிரஞ்சிந்தியக் கலைக்கழகம்:** (Institute of French Indology) பழம்பெரும் சுவடிகள் பேணப்படுகின்றன. 'பழந்தமிழ்ச் சொல்லடைவு' (3 பகுதிகள்) சங்க இலக்கிய ஆய்வுக்குப் பேருதவி புரிவது. 'காங்கேயர் உரிச்சொல் நிகண்டு' உளது. கந்த காஞ்சி திருவிளையாடற் புராணங்கள் பிரெஞ்சில் பெயர்த்துளது. கல்வெட்டாய்வும் நிகழ்கிறது. தமிழ், வடமொழி ஆய்வேயன்றி அறிவியல் தமிழும் பேணப்படுகிறது. ழான் பிலியோசா இங்கு இயக்குநராக இருந்துளார். நடமாடும் தமிழ்க் களஞ்சியமாம் டி.வி. கோபால அய்யர் இங்கு ஆராய்ச்சி அறிஞராக உள்ளார்.

**ஜோதிதாசன்:** (தமிழ்க்கோவன்) 4-8-1932. புதுவை. பாரதிதாசனோடு நெருங்கிய பழகியவர். இவர் ஒரு பாரதி பக்தர்-பித்தர்; நம்மைத் திக்குமுக்காடச் செய்யும், அந்த

மாகவிஞனோடு ஒன்றிக் கலந்துவிட்ட இந்தப் புதுவைக் கவிஞர்க்குப் பாட்டு இயல்பாகவே பாய்ந்து வருகிறது. பாரதி புகழ் பரவும் பெற்றியர். இவர் கவிதைகளைக் குயில் இதழில் வெளியிட்டுப் போற்றியுள்ளார் பாரதிதாசன். எளிய சொற்கள் கொண்டு சரள நடையில் பாபுனையும் பாங்கினர். பாரதி பற்றிய நூல்களையெல்லாம் நாடித் தேடி வாங்கிக் குவித்துள்ளார். பாரதியையே குருவாகக் கொண்டு ஏகலைவ வெற்றி பெற்றவர். சங்கீத வித்துவான் பரம்பரையில் வந்தவர்.

படைப்புகள்: பாட்டுடைத் தலைவன் பாரதி: பாரதி பற்றிய பாடல் ஓவியம். அகவல் காவியம்: 'அருட்பிரகாச வள்ளலாரின் 'அருட்பெருஞ்ஜோதி அகவலுக்குப்பின், காலத்தால் முகிழ்த்த கவிப்பெருஞ்ஜோதி அகவல்' (எதிரொலி விசுவநாதன்). பாரதிக் கடலில் மூழ்கி பாரதி வார்த்தைகளாம் முத்துக்கள் கொண்டே மிடையப் பெற்ற பனுவல். 'தாய் வாழைக்குச் சேய் வாழை பாடும் தாலாட்டு'!-தந்தைக்கு மகன் செய்யும் பாராட்டு! வித்தகக் கவிக்கலையும் விமர்சனக் கலையும் சத்தமின்றி ஒன்றாகச் சங்கமிக்கும் நூல்' (மதிவண்ணன்). பெரியவாச்சான் பிள்ளை, திவ்யப்பிரபந்தத்திலிருந்து திரட்டித் தந்துள்ள பாசுரப்படி ராமாயணம் போன்று, இஃதோர் 'பாரதிப்படி' (தமிழ்மாறன்). பாரதி என்ற தமிழ்க் கவிதைக் கடலை முழுதும் குடித்துத் தான் பெற்ற அனுபவங்களைக் கவிதையாக்கியுள்ளார். இது பாரதிக்கு ஓர் ஆயிர நாம 'அர்ச்சனை (சுராஜ்), பாரதிக்கு யக்ஞம் செய்யும் கவிஞர், பாரதிக்கு ஹாரதி செய்கிறார்' (மஹி); பிற: நிலா நிலா ஓடிவா தமிழே வாழி, பாரதியைப் பாடுவோம்.

விலை கொடுத்துப் பல்லாயிரக் கணக்கான நூல்களை வாங்கிப் பாதுகாத்து வருகிறார். புதுவைக்கு வருகைதரும் தமிழறிஞர்கள், தலைவர்கள் போன்றாரை இல்லத்துக்கு அழைத்து விருந்து போற்றிடும் பண்புடைய செழுந்தமிழ்ச் செல்வர். சில வரிகள்:

மதுவை மறக்கடித்தே-நம்மை
மயக்கும் தமிழ் படித்தேன்.
வீழ்ச்சியில்லை தமிழனுக்கே நம்பு - என்றும்
வீறுதமிழ் வாழ்வினுக்கே தெம்பு.

**முகவரி :** 'அன்னபூரணி பதிப்பகம், 40, நேருவீதி, பாண்டிச்சேரி.

புதுவையும் தமிழும் எனத் தனிப்பெரும் நூலே எழுதலாம்-எழுத வேண்டும். அத்துணைச் செய்திகள் உள. புதுவைத் தமிழ் பொலிக!

# முத்தமிழ் போல் இனிக்கும் முத்தமிழ் நூல்

1. ஒளிவழங்கும் கதிரவனின் உதயம் போல
உலகு புகழ் பெற்றமகான் - **விவேகா னந்தம்!**
களிவழங்கும் கனித்தமிழில் கானம் கொஞ்சக்
கவிதைகளைப் பாடியவர் - **சுத்தா னந்தம்!**
புலி வழங்கும் போர்நடையில் மேடை தோறும்
புதுமைச் சொல் லாடியவர் - **ஜீவா னந்தம்**
வளிவழங்கும் வையத்தில் தமிழ்மொ ழிக்கு
வரலாற்றை வடித்தஇவர் - **விமலா னந்தம்!**

2. அமைதியிலா இவ்வுலகில் ஏன்பி றந்தேன்,
ஆண்டவனே! எனக்கேட்டுக் கண்ணீர் சிந்தி
இமை நனையப் பாடியவர் - **இராம லிங்கர்**
இன்தமிழில் அவர்பாட்டோ, 'தென்றல் காற்று!'

கமழ்கின்ற **பாரதியோ** 'புதிய மாற்று!'
**கனகசுப்பு ரத்தினமோ**, 'புரட்சி ஊற்று!'
தமிழ்மொழியின் வரலாற்றில் **விமலா னந்தம்!**
தாலாட்டும் எழுத்துலகின் 'இளைய கீற்று!'

3. சென்னையிலே செந்தமிழ்நூற் பதிப்புத் தொண்டால்
சிறப்புற்ற **பவானந்தர்** பெயர ராக-
மன்னைக்கு அடுத்துள்ள **மதுக்கூர்** வாழ்-**அம்**
**மணி சச்சி தானந்தம்** மகவாய்த் தோன்றிக்
கன்னிச்செந் தமிழ்மொழியை விரும்பிக் கற்றார்;
கல்லூரிப் பேராசான் தொழிலை ஏற்றார்!
வண்ணமுறும் தமிழினிலே பலவாய் நூற்கள்
வடித்தஇவர், வரலாற்றை வழங்கு கின்றார்!

4. இன்தமிழின் நந்தவன மலர்கள் தோறும்
இசைபாடித் தேனீயைப்போல் செய்தி சேர்த்துப்
பைந்தமிழின் வெற்றியினைக் கூறும் இந்தப்
பரணியினை, உரைநடையில் நமக்குத் தந்தார்!
**ஐந்திணை நல் பதிப்பகத்தார்** அச்சில் ஏற்றி
அழகுமிகும் முறையில் இதைப் பதிப்பித் துள்ளார்!
இந்தவொரு நூலொன்றே, **விமலா னந்தம்**
ஏற்றத்தை எடுத்தியம்பும் ஆதி அந்தம்!

5. மூவேந்தர் ஆண்ட சங்க நாள் தொடங்கி
நாம்வேந்த ரானஇந்த நாள் வரைக்கும்,
சாவேந்தாத் தமிழ்மொழியின் வாழ்வில் கண்ட
தனிப்பெரிய வளர்ச்சிகளை, வாசம் வீசும்

பூவேந்தும் மதுநடையில் புனைந்தே உள்ளார்!
புதையல் எனப் பலசெய்தி தந்தே உள்ளார்!
காவேந்தும் முக்கனிபோல் இலக்கி யத்தின்
கவிவரிகள் இடையிடையே இணைத்தும் உள்ளார்!

6. எத்தனையோ மனிதர்கள் தமிழர் நாட்டில்
இருந்தார்கள்! இறந்தார்கள்! ஆனால் நந்தம்
முத்தனைய முத்தமிழைப் போற்றி வாழ்ந்த
மூத்தவர்கள், எப்போதும் இறப்ப துண்டோ?
புத்தகத்தால் உயிர்பெற்று வாழும் அந்தப்
புவிபோற்றும் பேரறிஞர் நினைவு கட்கு,
முத்தமிட்டே இந்நூலை எழுதி யுள்ளார்!
முழுவிவரம் இந்நூலில் கொடுத்தே உள்ளார்!

7. பெரியாரின் பகுத்தறிவால் தமிழ் வளர்ந்த
பெற்றியினைக் கூறுகின்றார்! கண்ணில் மின்னும்
திரைத்துறையின் வளர்ச்சியினைத் தீட்டு கின்றார்!
திருக்கோயில் தமிழ் பற்றி விவரிக் கின்றார்!
பரிசுதரும் மன்றங்கள்; பரிசு பெற்றோர்;
பாவைஎழுத் தாளர்கள்; பதிப்ப கங்கள்;
வரிசைமிகும் பத்திரிகை - எனஇவ் வாறு
வளர்தமிழின் வரலாற்றை வகுத்தே உள்ளார்!

8. மற்றவரைப் பற்றியுள்ள மாண்பு கூற,
மை மட்டும் போதாது! மனமும் வேண்டும்!
பெற்றமனம் உற்றதிரு விமலா னந்தம்
பேரன்பாய் எழுதியுள்ள இந்த நூலில்-

பொற்காலத் தமிழ்வழங்கும் புதுமை யெல்லாம்
**பூரணமாய்ப் பொலிந்திருக்கக்** காணு கின்றேன்!
கற்கண்டுத் தமிழ்மொழியின் வரலா றான
கருத்தமுதப் புதுநூலைப் போற்று கின்றேன்!

9. காவியத்தால் கம்ப நாடர் புகழைப் பெற்றார்!
கவிதையினால் பாரதியார் புகழைப் பெற்றார்!
ஓவியத்தால் ரவிவர்மா புகழைப் பெற்றார்!
உரைநடையால் திரு. வி. க புகழைப் பெற்றார்!
சாவின்றி வள்ளலார் புகழைப் பெற்றார்!
சத்தியத்தால் காந்திமகான் புகழைப் பெற்றார்!
ஆவியொத்த இந்நூலால் **விமலா னந்தம்**
அழியாத புகழ் பெற்றார் என்று சொல்வேன்!

'காவியம்', 2, நேதாஜி தெரு
சீனிவாச நகர், சென்னை-63

இவண்,
எதிரொலி **விசுவநாதன்**

———

# தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்

## பொருள் அகர நிரல்

# பொருள் அகர நிரல்

## பிற்சேர்க்கை

# குறிப்பு

'தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்' நூல் வடிவிலும், பொருளிலும் மிகப் பெரு நிலையில் அமைந்து விட்டதால் ஒன்றிற்கும் மேற்பட்ட அச்சகத்தில் அச்சடிக்க நேர்ந்தது. பிழையின்றிப் பதிப்பிக்க வேண்டும் என்ற எங்களின் பெருமுயற்சிக்குப் பின்னரும் தவிர்க்க விய லாதவாறு சில பிழைகள் நேர்ந்து விட்டன. பிழை பொறுத்தருள வேண்டுகிறோம்.

கீழ்வரும் குறிப்புகளை மனத்துள் கொள்ள வேண்டு கிறோம்.

- பக்கம் 1916-ல் அமைந்துள்ள சே. கிருஷ்ணமாச்சாரியார் பகுதியையும் வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் பகுதியையும் 'புத்துரைகளின் புறப்பாடு' பகுதியில் (பக்கம் 1621) இறுதியில் சேர்த்துப் படித்துக் கொள்க.
- பக் 1917-ல் அமைந்துள்ள த. சரவணத் தமிழன் குறிப்பினை (பக். 1605-ல்) இலக்கணத் தமிழ் பகுதியில் இணைத்துப் படித்துக் கொள்க.
- பக். 1912-ல் அமைந்துள்ள தமிழ் சமஸ்கிருதம் பிற இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனம்' குறிப்பினை மாத்தமிழ் வளர்க்கும் மன்றங்கள் (பக். 1462) பகுதியில் இணைத்துப் படிக்கவும்.
- பிழை திருத்தம் தனியே தரப்பட்டுள்ளது. திருத்திக் கொள்ள வேண்டுகிறோம்.

நன்றி.

